

# கருணை மிகு வள்ளல்

## அருள் நிறை சரிதம்





ஆக்கியோன்

பாலகவி:மி.கே.வேங்கடராமன்



மதுரை
மதுரை
சிவகங்கை
திருமங்கலம்
தொண்டி
மானாமதுரை
காரியப்பட்டி
இளயாங்குடி
விருதுநகர்
ராமநாதபுரம்
சிவகாசி
அருப்புகோட்டை
கேரளம்
ராஜபாளயம்
சாத்தூர்
கமுதி
பந்தல்குடி
ராமநாதபுரம்
ராமேஸ்வரம்
நாகலாபுரம்
ரெட்டியப்பட்டி
மண்டபம்
கோவில்பட்டி
கீழக்கரை
எட்டயாபுரம்
விளாத்திகுளம்
திருநெல்வேலி
வாம்பூர்
குற்றாலம்
திருநெல்வேலி
பாளயங்கோட்டை
தூத்துக்குடி
Usha BSc BGL II



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# கருணை மிகு வள்ளல்

## அருள் நிறை சரிதம்

(ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் வரலாறு)



ஆக்கியோன்:

பாலகவி மி. கே. வேங்கடராமன்



சுவாமிகளின் ஜயந்தி விழாவில் வெளியிடுவோர்

வித்துவான். சு. மங்கையர்க்கரசி

11-B, நிமந்தகார ஒற்றைவாடை வீதி, பெரிய காஞ்சிபுரம்-631 502.

விலை ரூ. 60—00

முதற் பதிப்பு - 1981
பிரதிகள் - 500

இந்நூல் கிடைக்குமிடங்கள் :

பாலகவி. வேங்கடராமன், இரெட்டியப்பட்டி.
நாகலாபுரம் அஞ்சல்-627904.
(நெல்லை மாவட்டம்)



வித்துவான். கு. மங்கையர்க்கரசி,
11-B, நிமந்தகார ஒற்றைவாடை வீதி,
பெரிய காஞ்சிபுரம்-631502.



A. வெங்கடாசலம்,
உரிமையாளர், ஸ்மார்ட் பிரிண்டர்ஸ்,
161, கோவிந்தப்ப நாயக்கன் தெரு,
சென்னை-600001



துரை அச்சகம், காஞ்சிபுரம்-2,
தொலைபேசி: 2631.




கருணை மிகு வள்ளலாகிய
ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்

முதற் பதிப்பு - 1981
பிரதிகள் - 500

இந்நூல் கிடைக்குமிடங்கள் :

பாலகவி. வேங்கடராமன், இரெட்டியாப்பட்டி,
நாகலாபுரம் அஞ்சல்-627904.
(நெல்லை மாவட்டம்)

※

வித்துவான். 4. மங்கையர்க்கரசி,
11-B, நிமந்தகார ஒற்றைவாடை விதி,
பெரிய காஞ்சிபுரம்-631502.

※

A. வெங்கடாசலம்,
உரிமையாளர், ஸ்மார்ட் பிரிண்டர்ஸ்,
161, கோவிந்தப்ப நாயக்கன் தெரு,
சென்னை-600001



றை அச்சகம், காஞ்சிபுரம்-2,
லைபேசி. 2631.




கருணை மிகு வள்ளலாகிய
ஸ்ரீ இரெட்டியபட்டி சுவாமிகள்



# முன்னுரை



'செந்தமிழ் விளக்க வள்ளலார்', 'ஆட்சிச் சொற் காவலர்'
'செந்தமிழ் வித்தகர்', 'நற்றமிழ் நம்பி', 'தமிழ்ச்சுடர்',
'சாந்த சீலர்'

உயர்தவத்திரு. கீ. இராமலிங்கனார், எம்.ஏ., அவர்கள்

உலகம் உய்யும் பொருட்டு உடையவன் அவ்வப்போது மனிதவடிவில் குருபரனாராகத் தோன்றுகிறார் என்பது சமய உண்மை. அங்ஙனம் தோன்றியருளிய இறை திருவுருவமே இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருமேனியாகும். அப்பெருமானாரின் வரலாற்றைத் தேனொழுகும் பாவடிவிலே இயம்பியுள்ளார் திரு எம். கே. வேங்கடராமன் அவர்கள். இளமை முதலே, இனிய கவிதைகள் புனையும் இணையில்லாத ஆற்றல் படைத்தவராதலின் இவரைப் 'பாலகவி' என்று போற்றுவர் அறிஞர் பெருமக்கள். அருள்கொண்டு கவிபுனைவதால் அருட் கவி என்றும் சிறப்பிப்பர்.

4672-இனிமை ததும்பும் பாடல்களிலே, குருபெருந் தகையின் அருள்நிறை செய்திகளை எழுதியுள்ளார். கவிதைக் கதைகள் (Story poems) என்று ஆங்கிலத்திலே சொல்வார்கள். கதைகளைப் பாக்களிலே நவிலுகிற முறைஅது. அதே முறையில் அமைந்துள்ளன இக்கவிதைகள். இலக்கிய நயங்கள் பல செறிந்தனவாயினும் எவரும் எளிதில் படித்துப் புரிந்து கொள்கிற வகையில் வரையப் பெற்றுள்ளன.

"பக்திச்சுவை நனி சொட்டச் சொட்ட" சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தை எழுதியுள்ளார் என்பர். திரு. வேங்கடராமன் வரைந்துள்ள இப்பாடல்களில் பக்திச்சுவை தேனென ஒழுகிக் கொண்டிருக்கிறது. பொருள் வளத்தோடு, அருள்வளமும் ஒவ்வொரு பாட்டிலும் பொதிந்து இலங்குவது காணலாம். செவிக்கு இன்பம் பெருக்கும் ஓசை நயம் உடையனவாகப் பாடல்கள் மிளிர்கின்றன.

'தொண்டர் புராணம்' என்னும் தலைப்பில் சுந்தர மூர்த்தி நாயனாரின் வரலாற்றைக் கூறுகின்ற முகத்தால், பல

அடியார்களின் வளம் மிக்க வரலாற்றையும் சேக்கிழார் பெருமான் பாடியுள்ளது போல், இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருள் வரலாற்றைக் 'கருணை மிகுவள்ளல் அருள் நிறை சரிதம்' என்னும் தலைப்பில் ஓதுகின்ற இந்நூலாசிரியர், குருபரனின் பலதிறத்துப் பல அடியார்களின் வரலாற்றுக் குறிப்புகளையும் எடுத்துக் கூறியுள்ளார். அக்குறிப்புகள், குருதேவர் அருளிய அருட்சட்ட நெறியில் அவர்கள் தோய்ந்து ஒழுகிய பெருமைகளை விளம்பி, குருபெருந்தகையார், அவர்களை அவ்வருட்சட்ட நெறியில் உடலிருந்து நிலைநிற்கச் செய்தருளிய சிறப்பை எடுத்தியம்பிக் கொண்டிருக்கின்றன.

பாலகவி வேங்கடராமன் அவர்கள் ஏற்கனவே ஏராளமாகப் பாடி வைத்துள்ள நூல்கள், குருபிரானார் வழிபாட்டிற்கு அடியவர்களுக்குக் கிடைத்துள்ள ஆகமங்கள் போல் விளங்குகின்றன. எங்கெங்குமுள்ள அடியவர்கள், அவற்றில் கண்ட முறைகளிலேயே, குருபரர் வழிபாட்டிற்குப் பயன்படுத்தி வருகின்றனர். இவ்வரலாற்று நூலில் "குருபரர் துதி" என்னும் தலைப்பில் இடையிடையே வரும் பாடல்களும், குருநாதரைப் போற்றித் தொழுவதற்கு எடுத்துப் பயன்படுத்திக் கொள்ள, வாய்ப்பாகக் கிடைப்பனவாகும்.

பாலகவி அவர்கள் குருபெருமானின் அருட்சட்ட நெறியை உலகமெங்கணும் பரவச்செய்வதற்கு ஈடுஎடுப்பில்லாத அருட்பணியைப் புரிந்திருக்கின்றார்கள். ஆண்டவரின் திருநெறியில் அவர்கள் அசைக்கலாகாத பற்றும் ஈடுபாடும் உடையவர்கள். இவ்வாறான பற்றும் ஈடுபாடும் பூண்ட புலவர் திருமதி சு. மங்கையார்க்கரசியார் அவர்கள் இவ் அருட்பெரும் பணியில் அரும்பெருந்துணையாக இருந்திருக்கின்றார்கள். இருவரும் ஆற்றியுள்ள இத்திருப்பணி அருட்சட்ட அடியவர்களுக்கேயன்றி, தமிழறிந்த பலருக்கும், இலக்கியநயம் போற்றும் புலவர்களுக்கும், பெருவிருந்தாக அமையும் என்பது திண்ணம்.

அடியவர்களும் அன்பர்களும் தமிழ்மக்கள் அனைவருமே, இவ்வரிய அருள் நூலைப் போற்றி யேற்றுப் பயன்படுத்திக் கொண்டு, இம்மை, மறுமை நலங்களை இனிது பூணவேண்டும் என்பது எனது வேண்டுகோள்.

'தமிழ்மணம்'
சென்னை-30

கீ. இராமலிங்கம்,
27—9—1981



# முகவுரை



'அருட்செல்வர்', 'இறைபணித் தொண்டர்', 'அருள்மாமணி',
'இந்து தர்ம பரிபாலகர்'

அருள்திரு. என். கிருஷ்ணஸ்வாமி ரெட்டியார், பி.ஏ., பி.எல்.,
அவர்கள்,
(சென்னை, உயர்நீதி மன்ற முன்னாள் நடுவர்)

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் என்கின்ற கருணைமிகு வள்ளல் அருள் நிறை சரிதம் - பால காண்டம், மதுரைக் காண்டம், அருள் செய் காண்டம் என்னும் மூன்று காண்டங்கள் அடங்கிய ஒரு அரிய காவியம் ஆகும். என் மதிப்பிற்குரிய நண்பர் - பாலகவி - திரு வேங்கடராமன் அவர்கள் இந்நூலை 4672 பாக்களாக இயற்றியிருக்கின்றார்கள்.

இந்தக் காவியத்தை படித்துப் பார்க்கும்படியான வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பாமரர்களும் புரிந்து கொள்ளும்படியான எளிய நடையிலே பெரும்பாலும் விருத்தப் பாக்களால் அமைந்துள்ளது. சரளமாகவும், படிக்கக் கேட்கும் பொழுது இனிமையாகவும், சுவாமிகளுடைய அருளும் அனுக்ரஹமும் நிரம்பப் பெற்றிருப்பதால் அருட் கவிகளாகவே இக்காவியம் அமைந்திருக்கிறது என்று சொல்லலாம்.

நம்முடைய பாரத நாட்டிலே வாழையடி வாழையாக வந்து கொண்டுள்ள மஹான்களிலே உன்னத ஸ்தானம் வகித்துள்ளவர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் ஆவர். இவர்களைச் சுற்றிலும் அற்புதச் சித்துகள் திருவருளால் நிகழ்ந்தவண்ணம் இருக்கும். அவர்கள் அதற்காக எந்த முயற்சியும் செய்ததே இல்லை, தானாக நடைபெறும்.

மனிதன் மனிதனாக வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து, உயர்பெரு நிலையை அடைவதற்குரிய வழிமுறைகளை, உலகில்

அரசியல் சட்டம் வகுத்துள்ளது போல, அருளியல் சட்டம் எவ்வுயிர்க்கும் பொதுவாக வகுத்து வழங்கி, அரும்பெருந் துணையாயிருந்து, அருளாட்சி புரிந்து வரும் மாபெருஞ் சிறப்பு ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் ஒருவருக்கே உரியது. அருளாளர்கள் அனைவரும் கண்ட கனவை நனவாக்கிய பெருஞ் செயல் சுவாமிகளின் அருட் செயலாகும்.

இவர்களைச் சுற்றிலும் திருவருளால் நடைபெற்ற அற்புதங்கள் அநேக ஆயிரமாகும். அவற்றுள் என் இதயத்தைக் கவர்ந்த அருள் நிகழ்ச்சி ஒன்று:

கடலூருக்கருகில் உள்ள செல்லங்குப்பம் என்னும் கிராமத்தில் சுவாமிகள் தங்கியிருக்கும்போது ஒரு நாள் அதிகாலையில் வெளியில் உலாவச் செல்கையில், ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த ஒருவன் விரைந்து வந்து விழுந்து வணங்கி, சுவாமிகளின் திருவடிகளைப் பற்றிக் கொண்டு அழுதான். வெகு நாளாக இருந்து வரும் வயிற்று வலி எந்த வைத்தியத்திலும் தீரவில்லையென்றும், அந்நோய் தீர அருள் புரிய வேண்டும் என்றும் வருந்தி வேண்டிக் கொண்டான். அவனது உள்ள நிலையை உணர்ந்த சுவாமிகள் இரக்கங் கொண்டு 'நோய் தீர்ந்து விட்டது, எழுந்திரு' என்று அருளினர். உடனே அந்நோய் தீர்ந்து எழுந்த அவன் சுவாமிகளின் பெருங் கருணையை வியந்து போற்றித் துதித்தான். சுவாமிகள் அவனுக்கு வேண்டிய அருளுரைகளை வழங்கி நல்வழிப் படுத்தினர். அடியவரும் அன்பர்களும் கண்டு வியப்புற்றனர். சுவாமிகள் திரும்பி வந்ததும், திரு. சிங்கார வேலு முதலியார் 'சுவாமி இப்படியே திண்ணையில் அமர்ந்தால், நீராடத் தண்ணீர் இங்கேயே கொண்டு வருகிறோம்' என்றனர்.

உடனே சுவாமிகள், ''ஓகோ! பறையன் தொட்டு விட்டானல்லவா? சாமி, வீட்டுக்குள்ளே போகக்கூடாது; திண்ணையிலேயே அமர்கிறது'' என்று கூறிய வண்ணம் அமர்கிறார். அருகிலிருந்த அடியவர்கள், 'சாமி அனைத்தையும் கடந்தவர்; அவர்களுக்கு எந்த விதமான தோஷமும் கிடையாது' என்றனர். எந்தவித பேதமுமின்றி, தீண்டாமை என்ற எண்ணமும் இன்றி, ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்று யாவரும் சமரச நினைவோடு வாழும் காலம்

வரப் போகிறது; அந்தச் செய்தியைப் பின்னர் அறிவீர்; இப்போது புரியாது என்றனர் சுவாமிகள், (பக்கம் 565, 566;

தீண்டாமை என்பது அறவே நீங்கி, அனைத்துயிரும் இறைவன் செய்களே என்று பேதமற்ற நிலையில் பழகக் கூடிய ஒரு சமரச நிலை எதிர்காலத்தில் வரப்போகிறது என்பதைத் தம் தீர்க்க தரிசனத்தால் அன்றே உணர்ந்து கூறிய சுவாமிகளின் அருள் வாக்கை, அவர்களுடைய அருள் திருவுள்ளத்தை நாம் உணர்ந்து போற்ற வேண்டியவர்களா யுள்ளோம்-

இந்த நூலைத் தமிழன்பர்கள் வாங்கிப் படித்துப் பயன் பெற வேண்டும் என்பது என்னுடைய விருப்பம். இந்த அரும் பெருங் காவியத்தை இயற்றிய திரு. பாலகவி அவர்களை நான் மனமார வாழ்த்துகின்றேன்.

இதற்கு முன்பே பல நூல்களைச் செய்யுள் வடிவிலும், உரைநடை வடிவிலும் இந்நூலாசிரியர் இயற்றியுள்ளனர் என்பது உலகறிந்த செய்தி. சுவாமிகளின் ஜயந்தி விழாவில் இந்நூல் வெளிவருவது சாலச் சிறந்தது.

இந்நூல் உருவாகவும், அச்சாகி வெளிவரவும், ஆசிரியர்க்கு உறுதுணையாயிருந்து, எல்லா வகையிலும் உதவி புரிந்து ஊக்குவித்த தனிச்சிறப்பு, சுவாமிகளின் சிறந்த அடியாராக விளங்கும் காஞ்சிபுரம் - வித்வான். சு. மங்கையர்க்கரசி அவர்களைச் சாரும். அவர்களையும் நான் மனமார வாழ்த்துகின்றேன்.

சுவாமிகளைப் பற்றியும், அவர்களுடைய அருட்கொள்கைகளைப் பற்றியும் இதுவரை அறியாதிருந்த அன்பர்களும் இந்நூலை நன்கு ஊன்றிப் படித்து, அருட்சட்டக் கொள்கைகளைப் பின்பற்றி, இன்னல் அனைத்தும் களைந்து, இகபர சௌபாக்கியங்களை யெய்திப் பேரின்பப் பெரும் பயன் பெற்றுய்ய வேண்டும் என்பது என்னுடைய இதயபூர்வமான விருப்பம். சுவாமிகளின் மாபெருங் கருணை துணை புரிய வேண்டும் எனப் பிரார்த்திக்கின்றேன்.

பிளாட்-2352 A.D. 47
அண்ணா நகர்
சென்னை-40,

என். கிருஷ்ணஸ்வாமி ரெட்டி
28—9—81

# அணிந்துரை

❁

அகில இந்திய வானொலி நிலையத்தில் நிகழ்ச்சி அமைப்பாளராகப்
பணியாற்றி ஓய்வு பெற்றவரும், தமிழ் நாடு அரசு
தலைமைச் செயலகத்தில் பழந்தமிழ்க்கலை இயக்குனராகப்
பணியாற்றுபவருமான
'பல்கலை வித்தகர்', 'முத்தமிழ்ச்செல்வர்' 'இசைப் பேரறிஞர்',
'அருங்கலை அறிஞர்'

**அருள்திரு. மீ. ப. சோமசுந்தரம் அவர்கள்**

இந்த நூல் புனிதம் நிரம்பிய ஒரு மகானின் வாழ்க்கையை ஆற்றொழுக்காக ஓடுகிற விருத்தப் பாக்களிலே, மிகுந்த பக்தியோடு எடுத்தியம்புகிறது. இதன் ஆசிரியர் பாலகவி மி. கே. வேங்கடராமன் அவர்கள், தமிழ் மொழியில் வல்லமை மிக்க ஒரு நற்புலவர்! நூல் கூறும் அரிய பொருளிலே இதயம் தோய்ந்தவர். நிகழ்ச்சிகளைப் பாடல்களாக வடிக்கும் திறமை நிரம்பியவர். அதோடு இந்த ஆசியரிருக்கு எல்லா வகையிலும் நற்றுணையாகத் திகழும் அம்மையார் வித்துவான் சு. மங்கையர்க்கரசி அவர்கள், ஆசிரியரைப் போலவே இந்த நூலின் பொருளில் இதயம் தோய்ந்தவர்! குருவழிபாடு என்ற புனிதம் நிரம்பிய பணியிலே, இருவரும் இணைந்து செயலாற்றுவதன் வெளியீடே, இந்த மாபெரும் நூலாகும்.

தமிழ் மொழிக்கு ஏற்றம் தருகிற விருத்தச் சந்தத்திலே, 4672 பாடல்கள் இந்த நூலை அணி செய்கின்றன. இவற்றைப் படித்து, உவகையும் மன நிறைவும் அடையக் கூடிய விதத்தில், இந்த நூல் பக்தர்களின் கையிலே வழங்கப் படுகிறது.

இரெட்டியப்பட்டி சுவாமிகள் என்ற சித்தர் பெருமான், தமிழகத்தில் வழிவழியாகத் தோன்றிப் பல அற்புதங்களை நிகழ்த்தி, அடியார்களை ஆட்கொள்ளுகிற மகான்களின் மரபிலே உதித்த ஒரு புண்ணியத் திருமேனி. சமுதாய உறவிலே சொல்லும் போது, எனக்குப் பாட்டனார் முறை. அதை ஒரு பெரிய பாக்கியமாகக் கருதி மதித்துப் போற்றுகிறேன்.

சித்தர்கள் நம் எல்லோருக்குமே சொந்தமானவர்கள். மனிதகுலம் முழுமைக்குமே உறவினர்கள். அத்தகைய ஒரு பெரிய மகானின் மகிமைகளைக் கூறுகிற இந்த அழகிய நூல், தமிழகத்து அடியார்களின் கையிலே இன்றிலிருந்து பவனி வருகிறது.

இந்த அரிய நூலை ஆக்கிய பாராட்டுக்குரிய புலவர்மணிக்கும், இதை அச்சிட்டு வெளியிடுகிற வித்துவான் சு. மங்கையர்க்கரசி அவர்களுக்கும், அடியார் உலகம் மிகவும் கடமைப் பட்டிருக்கிறது. சிறப்பு மிகுந்த இந்தப் பாடல்களை வரவேற்பதில் மிக்க மகிழ்ச்சி யடைகிறேன்.

குருவருள் இந்த நூலின் வழியாக நம் அனைவருக்கும் எல்லா நலன்களையும் நல்கி நம்மைக் காக்கவேண்டும் என்று வேண்டி, இரெட்டியப்பட்டி சுவாமிகளின் திருப்பாத கமலங் களுக்குப் பணிவும் பேரன்பும் கலந்த அஞ்சலியைச் செலுத்தி வழிபடுகிறேன்.

A 1/122, எட்டாவது தெரு
அண்ணா நகர்,
சென்னை-600 040
26—9—1981

மீ. ப. சோமசுந்தரம்,

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சிறப்புரை

❊

ஸ்ரீ வைஷ்ணவ ப்ரபந்த வித்வான்

அருள்திரு. கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள்

இந்நாளில் எங்கு பார்த்தாலும் மருத்துவ மனைகளும் மருந்துக் கடைகளும் கண்முன்னே தோன்றுகின்றன. நாள் தோறும் புதிது புதிதாக மேலும்மேலும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. இதனால் நோயால் துன்புறுவோர் அதிகமாக இருக்கின்றனர் என அறிகின்றோம்.

ஒருமுறை மருத்துவ மனை சென்று விட்டால் திரும்பத் திரும்பத் தம் ஆயுள் உள்ளவரை மருத்துவ மனை சென்று கொண்டே இருக்க வேண்டும். மருந்தும் சாப்பிட்டுக் கொண்டே இருக்கவேண்டியதுதான். இதுதான் இன்றுள்ள நிலை. நோயாளிகள் செல்வர்களாக இருப்பின் பணத்தைப் பற்றியகவலை இல்லை; என்றாலும் நோயைப்பற்றிய கவலை அதிகமாகின்றது. ஏழைகளாக இருப்பின் பணத்தைப்பற்றிய கவலையும் மிகுதியாகின்றது. உயிரைக் கொண்டு போகும் வரை நோயும் உயிர் உள்ளதாக இருக்கின்றது.

எங்கோ ஓர் இரு இடங்களில் இயற்கை மருத்துவச் சாலைகள் உள்ளன. அங்கும் செல்வர்கள்தான் செல்லலாம். சென்றாலும் நோய் தீர்ந்ததாக இல்லை. மக்கள் வாழும் வகை அறியாமல், தெய்வ நம்பிக்கையும் இல்லாமல் துன்பத்திற்குக் கொள்கலமாக இருந்ததை நல்லோர்கள் கண்டு நடுங்கினர். நாடு நலமுற இறைவனை வேண்டினர். இறைவனுடைய திருவருளும் இயைந்தது.

இந்நிலையில் தான் செந்தமிழ் நாட்டின் தென்கோடியில் ரெட்டியப்பட்டி எனும் நல்லூரில் குருநாதர் தோன்றினார். தோன்றும்போதே வாசனையோடு தோன்றும் திருத்துழாய் போலே, இளமையிலேயே குருநாதர் தெய்வீகத் தன்மை யோடு விளங்கினார். அரிய தவம் ஆற்றி இறைவன் அருள் பெற்றார். மக்களுக்காக இரங்கினார். வாழும் வகை இப்படிப் பட்டது; இதனை எல்லோரும் கைக்கொள்ள வேண்டும்; இதனை ஏற்றுக் கொள்ளாவிடில் துன்பத்திலேயே உழல

வேண்டியதுதான் என்று அருளி, அருட்சட்டம் ஒன்று வகுத்தருளினார்.

பல்லாயிரக்கணக்கான அடியவர்கள் அச்சட்டத்தைப் பின்பற்றி நலம் பல பெற்றனர்; அமைதியும் உற்றனர். இறைவன் திருவருள் துணை கொண்டு மக்களும் அன்பர்களும் வியக்கும் வண்ணம் அதிசயச் செயல்கள் பல செய்து காட்டினர். ஒருசிறிதும் ஐயம் இன்றி மேலும் மேலும் அடியவர்கள் மிகுந்தனர். இவ்விவரம் அடியார்களே அன்றி ஏனையோரும் அறிந்து உய்யும் வண்ணம் '**வழிகாட்டும் வான் பொருள்**, என்று தலைப்பிட்டு, அந்நூல் வாயிலாக-குருநாதரின் தெய்வத் தன்மையினையும் அருட்சட்டத்தின் மேன்மையினையும் நல்ல முறையில் வெளியிட்டனர். இப்போது குருநாதரின் அடியவர்களுள் ஒருவராகிய பாலகவி வேங்கடராமன் என்பவர், இயல்பாகவே தமக்கமைந்துள்ள கவிதைத்திறன் கொண்டு, குருநாதரின் வரலாற்றை முழுதும் தொகுத்து 4672 கவிமணிகளில் வெளியிட்டுள்ளார்.

மரபு பிறழாமல் கவிபாடும் தன்மையினரைக் காண்டல் இக்காலத்தரிது. எங்கோ ஒருசிலர் இருப்பர். அவ்வொரு சிலரில் நம் பாலகவி வேங்கடராமன் அவர்களும் ஒருவர்.

**கருணைமிகு வள்ளல்** என்ற தலைப்பில் குருநாதரின் தெய்விக வரலாற்றைக் கவிதை வடிவில் வெளியிட்ட பெருமை நம் பாலகவி அவர்களையே சாரும்.

இவ்வொரு நூலைப் படித்தால், தமிழில் உள்ள பல காப்பியங்களையும் படித்ததற்கு ஈடாகும். இதனால் ஆசிரியருடைய பரந்த உள்ளமும் பலநூற் பயிற்சியும் காணலாம்.

இக்கவிதை வடிவான நூலில் உள்ள சில நயங்களைக் காண்போம்.

**கவிச்சக்கரவர்த்தி கம்ப நாடரை அடியொட்டிய பாடல்கள்.**

பாலகாண்டம் ஆற்றுப்படலம் 11ம்பாடல் 'நீறணி சிவனே போன்று. என்பது, இது கம்பராமாயணம் ஆற்றுப் படலம் 2-ம் பாடல் 'நீறணிந்த கடவுள் நிறத்த' என்ற பாடலையும், பாலகாண்டம் திருநகரப்படலம் 23-ம் பாடல் 'நிலமகளின் திருமுகமோ' என்பது, இது கம்ப ராமாயணம்

நகரப் படலம் 2ம் பாடல் 'நிலமகள் முகமோ திலகமோ' என்ற பாடலையும் ஒட்டியதாகும்.

### பெரிய புராணத்தை ஒட்டிய பாடல்

மதுரைக் காண்டம் காட்சிப் படலம் 17-ம் பாடல் 'பொறி புலன் கரணம் யாவும் புனிதமே யாகி ஒன்ற' என்பது பெரியபுராணம் தடுத்தாட் கொண்ட புராணத்துள்ள

'ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள' என்ற பாடலை ஒட்டியதாகும்.

### பட்டினப் பாலையை ஒட்டிய பாடல்

பால காண்டம்-திரு நகரப் படலம் 83-ம் பாடல்.

'சமன் செய்து சீர் தூக்கும் கோல் போலச்
சமையுளத்தார்
தம போலப் பிறர் பொருளும் சமநோக்கிற்
கருதிடுவார்'

என்பது பட்டினப் பாலையிலுள்ள 206-212 எண்கள்

நெடு நுகத்துப் பகல் போல நடுவு நின்ற நன்னெஞ்சினோர்
வடு வஞ்சி வாய் மொழிந்து தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறை
கொடாது
பல் பண்டம் பகர்ந்து வீசும் தொல்கொண்டித்
துவன்றிருக்கை

என்பதை ஒட்டியதாகும்.

### குற்றாலக் குறவஞ்சியை ஒட்டியது

மதுரைக் காண்டம் - குகைத் தவப் படலம்- 10, 11 பாடல்கள்

'அளவில் பெரு வேகமுடன் அருவி நன்னீர் குதிக்கும்'
'தேமாவின் கனிகள் களாக் கனிகளுடன் உதிரும்'

என்பன ஷெ குறவஞ்சியில் வரும்

'வானரங்கள் கனி கொடுத்து மந்தியொடு கொஞ்சும்' என்ற பாடலை ஒட்டிய தாகும்.

ஈற்றடிகளிலும் எதுகை வருதல் இங்கு சிறப்பு.

**திருக்குறளை ஒட்டியன**

அருள் செய் காண்டம் — அடியரைத் தேடும் படலம் 746ம் பாடல் 'புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிஒன்றே' எனும் பாடல் — 'புணர்ச்சி பழகுதல் வேண்டா' என்ற 785ம் திருக்குறளையும்

அருள்செய் காண்டம் — அருளாட்சி செய் படலம், 233ம் பாடல் 'எண்ணிய எண்ணியாங் கெய்துப' என்ற 666ம் திருக்குறளையும் எடுத்துக் காட்டுவதாம்

**திருவாசகம்**

பால காண்டம் — ஆற்றுப் படலம் 7ம் பாடல்.

'இடையினை மின்னல் காட்ட எழிற்சிலம்பிடியே காட்ட' என்பது திருவெம்பாவை 16ம்பாடலான 'முன்னிக்கடலைச் சுருக்கி' என்ற பாடலையும், அருள்செய் காண்டம் அடியரைத் தேடும படலம் 574ம் பாடல்

'பள்ளந் தாழ்வுறு புனலிற் கீழ் மேலாய்ப் பதைத் துருகும் உண்மையன்பு, என்பது திருவாசகம்' திருச்சதகம் 21ம்பாடல் 'வெள்ளம் தாழ் விரி சடையாய் விடையாய் விண்ணேர் பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப் பள்ளந் தாழுறு புனலிற் கீழ் மேலாகப் பதைத் துருகும் அவர்' என்பதையும், ஷை காண்டம் அருள்ஆட்சி செய் படலம் 281ம் பாடல்.

'ஊனினை நன்றேயுருக்கி உள்ளொளியை மிகப் பெருக்கும்' என்பது திருவாசகம் பிடித்த பத்தில் உள்ள

'பால் நினைந்தூட்டும் தாய்—ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி' என்பதையும். ஷை காண்டம் ஷை படலம் 358ம் பாடல் 'கல்லையும்மென் கனியாக்கும் விச்சை கொடு-என்பது திருவாசகம்-திருச்சதகம்-94ஆம் பாடலான இல்லை நின் கழற்கன்பு — 'கல்லைமென்கனி யாக்கும் விச்சைகொண். டென்னைநின்கழற் கன்பனுக்கினுய், என்பதனையும் நினைவூட்டு கின்றன.

**தேவாரம்**

அருள்செய்காண்டம் — அருட்சட்டப்படலம் - 254-ம் பாடல் — 'மண்பாதலம்புக்கு மால்கடலும் மூடி மற்றை

உலகமேழும்' என்பது - நான்காம் திருமுறை - மண்பாதலம் புக்கு' என்ற 9-ம திருவிருத்தத்தையும்.

செ-செ-255-ஆம் பாடல் நாமார்க்கும் குடியல்லோம் நமனையும் அஞ்சோம். நரகில் துன்பம் எய்தோம' என்பது. ஆறும்திருமுறை மறுமாற்றத் தாண்டகமான -'நாமார்க்கும் குடியல்லோம், என்ற தாண்டகத்தையும்.

செ-செ-257-ஆம்பாடல் 'இடருறினும் தளர்வுறினும் எனதுறுநோய் இவ்வுலகில் எனைவிடாமல்-தொடர்வுறினும் 'என்பது, மூன்றும் திருமுறை-திருவாடுதுறை- நாலடிமேல் வைப்பு-'இடரினும் தளரினும் எனதுறுநோய்'-தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்,-என்ற சம்பந்த சுவாமிகள் பாடலையும் நினைவூட்டுகின்றன.

**திவ்யப்ரபந்தம்**

அருள்செய் காண்டம் — அடியரைத் தேடும் படலம் - 284 முதல் 288 வரை உள்ள பாடல்களின் ஈற்றடியாகிய 'பாததூளி படுதலால் இவ்வுலகம் பாக்கியம் செய்ததே' என்பது — பெரியாழ்வார் திருமொழி 4. 4 6 'பூதமைந் தொடு' என்ற பாடலின் ஈற்றடியான 'பாததூளி படுதலால் இவ்வுலகம் பாக்கியம் செய்ததே' என்பதனை நினைவூட்டு கின்றது.

அருள்செய் காண்டம்—அருள் அமைவுப் படலம்-192 ஆம் பாடல்' மாரி நன்று பொழியினும் கவிழ்ந்துள பாத்திரம் நிரம்பாது' என்பது-இயற்பா இரண்டாம் திருவந்தாதி-16-ஆம் பாடல்

'தனக்கடிமைப் பட்டது தான்அறியா னேலும்
மனத்தடைய வைப்பதாம் மாலை—வனத்திடரை
ஏரியாம் வண்ணம் இயற்றும் இதுவல்லால்
மாரியார் பெய்கிற்பார் மற்று' என்பதனை

ஒருபுடை ஒத்து விளங்குகின்றது.

மேலும் பலப்பல நூல்களின் கருத்துகள் ஆங்காங்கே மிளிர்கின்றன. விரிப்பில் பெருகும்.

**இயற்கை வருணனை**

முன்னைய நூல்களில் இல்லாது, இக்காலத்தில் உள்ளன வான சில இயற்கைக் காட்சிகள் ஆங்காங்கே உள்ளன.

சுவாமிகள் அவதரித்த அந்நாட்டில் எங்கும் ஆங்காங்கு மிளகாய்வற்றல்-பரப்பிக் காய வைப்பதை இன்றும் காண லாம். அவை செந்நிறமாக அமைந்து கண்ணுக்கு விருந்தாய் இருப்பதை, பாலகாண்டம் திரு அவதாரப்படலம் -10-ம் பாடல் இறுதி வரி-செம்பு மணித் திரள்பரப்பி யிருப்பது போல்- கிளர் மிளகாய் வற்றல் காயும்' என்பது மகிழ்வூட்டு கின்றது.

வீதிகளைக் குறிக்கும்போது-இஸ்லாமியர்கள் தெருவை யும் ஷ்டி ஷ்டி 15-ஆம் பாடலில் 2-ஆம் வரி 'திறம் விளக்கித் திருக்குரான் ஒலிமுழக்கு இஸ்லாமியர்கள் தெருவும் ஓர் பால்'-என உள்ளதை உள்ளவாறே குறிப்பிடுதல் மகிழ்ச்சி யளிக்கின்றது.

கற்பனைக்கு ஒன்று

அருள்செய் காண்டம்-அருள் ஆட்சி செய் படலம்-பாடல்-1072-

கதிரவன் மேல்பால் சேர்ந்தான் என்பதற்குக் காரணம் காட்டுதல்-

இன்று நடந்த நிகழ்ச்சிகளை நாம் கண்டோம்-பின்னல் வருபவர்களும் காணட்டும் என்று விலகிச் சென்ருன் என்பது நினைவுக்கு விருந்தாகின்றது.

அப்பாடல்:

காலைமுதல் அண்ணல்அருள் திருமஞ்ச
னச்சிறப்பைக் கண்டோம் அன்பர்
சீலமிகும் அடியவர்கள் திருவமுது
செயும்சிறப்பைக் கண்டின் புற்ருேம்
மாலைமுகம் மதியரிடம் வள்ளல்நிகழ்த்
தியநலுரை மகிழ்வாய்க் கேட்டோம்
கோலஉலா மதிகாண விட்டிடுவோம்
எனக்கதி ரோன் குடபால் சேர்ந்தான்.

என்பதாம்.

அருட்சட்டத்தின் இயல்புகளையும். அதன் விளைவு களையும் நன்கு விளக்கிக் காட்டுகின்ருர்.

மதுரைக் காண்டம் அன்னையை அடக்கம் செய் படலம் 47 முதல், 52 வரை உள்ள பாடல்கள் காண்க.

அருட்சட்டப் படலத்தில், 'அருட்சட்ட மணிமண்டபம் என்ற தலைப்பில், பக்கம்-326-ல், பாடல்-24-முதல்-26வரை. சட்டத்தின் தூண்களைப் பதினாறுகுணங்களாக குறிக்கிறார் அவை:-1 பச்சைநீர்ப்பழக்கம், 2 வெந்நீர் எப்போதும்நீக்கல், 3.வந்தனைசெய்வழிபாடு 4. மரக்கறி யூண், 5 ஐந்தெனும் பாதகம்செய்யாமை, 6.பிறரை நாடாமை, 7 நாள் கோளை நம்பிடாமை, 8.மணிமந்த்ரம் மருவாமை, 9-பிரார்த்தனை செய்து கொள்ளாமை, 10-உணவுகுறைத்து வெள்ளிதோறும் விரதம் இருத்தல், 12-உடையோன் நாமம் இடை விடாது மனனம் செய்தல், 12.இறந்தவர்க்கு இரங்காமை 13-உடம்பை அடக்கம் செய்தல், 14.அறமன்றம் அணுகிடாமை 15 உடல் பொருள் ஆவியை இறைவற்கு ஒப்படைத்து வாழ்தல், 16.சட்டம் பேணுங்கால் உண்டாகும் அனுபவம் செப்பா திருத்தல்—என்பனவாம்.

இவற்றைப் பாடல்களாக்கித் தந்திருத்தல் மனனம் செய்தற்கேதுவாக உள்ளது

திருநீறு, துளசிதீர்த்தம் இவற்றின் பெருமை பாடல்களில் காணும்போது பதின்மடங்கு இன்பம் தருகின்றது.

மதுரைக் காண்டம்-குகைத்தவப் படலம் -128-முதல் உள்ள பாடல்கள் சிந்தனையைத் தூண்டுவன ஆகும். பரிபூர்ணர்-குருநாதர் முன்தோன்றி,

'உனக்குவேண் டியதென்ன என்றுபரி
பூரணனுர் ஒப்பி லன்பால்
வினவிடவும், அண்ணலார் பூதலத்தில்
மேவியுறை உயிர்க ளெல்லாம்
ஜனனமர ணம்கடந்த முத்திபெறற்
கெளியநெறி சாற்று கென்ருர்;
உனக்குமுத்தி தருகின்ருேம்; உலகுதிருந்
திடஉழைப்ப தேன்நீ என்ருர்.
தனக(கு) இணையில் பரிபூர்ணர் இவ்வாறு
சாற்றிடலும் சாந்த சீலர்
எனக்குமட்டும் முத்தியெனில் யான்விரும்பேன்;
எல்லோர்க்கும் தருவீர்; என்ருர்

என்ற பகுதிகள் - ஸ்ரீராமாநுஜர் தான் நரகம் செல்லினும் எல்லோரும் முத்தி பெறுதல் மேன்மையன்ருே?

எனத் தம் ஆசாரியரிடம் சொன்னதாக உள்ள பகுதியை ஒத்து-குரு நாதரின் திருவுள்ளத்தைத் தெள்ளெனப் புலப் படுத்துகின்றது.

தெளிவு, எளிமை, ஆற்றல், அமைதி-யாவும்-அமைந்து, அழகுபெற விளங்குகின்ற இந்நூல், அன்பர்கள் அனைவர்க்கும் இன்பம் தருவதாகும்.

ஆங்காங்குத் துதிகளாக வருகின்ற பாடல்கள் இடத்துக் கேற்றவாறு சந்தம் பெற அமைந்துள்ளன அப்பாடல்களைத் தொகுத்து, 'குருநாதர் துதி' என்ற பெயரில் வெளியிடலாம். அன்பர்கள் ஓதி ஓதிப் பயன்பெறுதற் கேற்ற தாகும்.

நூலாசிரியரின் குருபக்தியும், ஒழுக்கமும், ஆற்றலும் எளிமையும் ஆங்காங்கு இந்நூலில் காணலாம். இதற்குமுன். குருநாதரைப் பற்றி.பிள்ளைத்தமிழ் முதலிய தோத்திர நூல் களை இவர் எழுதி யுள்ளார்.

அவற்றுக்கெல்லாம் இந்நூல் சிகரம் வைத்தாற் போன்று விளங்குகின்றது.

குருநாதரின் விரிவான வரலாற்றை மிக விளக்கமாக, மிகத் தெளிவாக இந்நூல் விளக்குகின்றது. இந்நூல் என்றும் நின்று நிலவுக.

இந்நூலாசிரியர் பாலகவி வேங்கடராமன் அவர்களும், இவரைப் போன்றே அருட்சட்டத்தில் தோய்ந்து, அதன்படி ஒழுகி, இந்நூல் வெளிவருதற்குப் பெருந்துணை புரிந்த- வித்துவான்- சு. மங்கையர்க்கரசியாரும் குருநாதரின் அருளால் எண்ணிய எண்ணியாங்கெய்தி இன்புற குருநாதர் அருள் புரிவாராக.

வி. பூதூர்,
வளவனூர் வழி,
விழுப்புரம் வட்டம்.

இங்ஙன்,
அன்பு,
**கி. வேங்கடசாமி**



ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் துணை

## சாற்றுக்கவி



காஞ்சீபுரம் ஸ்ரீலஸ்ரீ அருள்ஞானச் செல்வத்தாய்
அவர்களின் திருத்தந்தையார் சிவபக்தியிற் சிறந்த
அருள்திரு நா. சுந்தரராஜ முதலியார் அவர்கள்

சீர்பெற்றிவ் வுலகமக்கள் திருந்திவாழ
ஏர்பெற்ற அருட்சட்டம் அளிக்கப்போந்த
பார்புகழும் பரமகுரு வாகி யெங்கும்
பேர்பெற்ற இரெட்டியப் பட்டி சுவாமி
பாதகமலம் இரண்டும் பணிந்து போற்றும்
ஓதருஞ்சீர் பாலகவி பண்பாய்த் தந்த
கருணைமிகு வள்ளள் அருள் சரித நன்னூல்
காசினியில் என்றென்றும் நின்று வாழ
கச்சியம் பதியிலிறை கழல்கள் போற்றும்
மெய்ச்சிவ பக்தனும் சுந்தர ராசன்
ஏகம்பன் இணையடிகள் வழுத்தி ஏத்தி
போகமிகப் பெறுகஎன வாழ்த்து கின்றேன்.

காஞ்சீபுரம்,
10—9—81.

நா. சுந்தரராசன்.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

## பதிப்புரை

உலகம் உய்ய ஒப்பற்ற நெறி வகுத்து உதவி, அருட்பெருங் கருணையினால் தனிச்செங்கோலோச்சிவரும் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் அடிமையின் வாழ்வில் ஒவ்வோர் அணுவிலும், அரும்பெருந் துணைவியாயிருந்து வழிகாட்டி வருகிறார்.

என் அருள் திருத் தந்தையார் உயர்திரு நா. சுந்தரராஜ முதலியார் அவர்களின் ஊக்குவிப்பு காரணமாக, அடிமை கந்தபுராணம், பெரியபுராணம் போன்ற நூல்களில் தோயும் பாக்கியம் பெற்றேன். என் குருநாதருக்கு உடல் பொருள் ஆவி அனைத்தையும் ஒப்புவித்தபின், அவர் உள்ளிருந்து ஊக்கிய வண்ணம் அவர் தம் பெருமையை ஒரு சிறந்த காவியமாக ஆக்க வேண்டும் என்ற பேரவா உந்திக் கொண்டேயிருந்தது

அக் காவியத்தை இயற்றும் தகுதி இவ்வடிமைக்கு இல்லையாதலால், அத்தகுதியை முழுமையாகப் பெற்ற உயர் தவத்திரு பாலகவி M. K. வேங்கடராமன் அவர்களிடம் வேண்டிக் கொண்டேன். அவர்களும் முதலில் மறுத்து பின்னர் ஒருவாறு இசைந்தனர்.

இப்பெருங் காவியத்துக்கு முதல் நூலாகச் 'செந்தமிழ் விளக்க வள்ளலார்' உயர்திரு கி. இராமலிங்கனார் அவர்களால் 1937-ஆம் வருடத்தில் இயற்றப்பட்ட **'வழிகாட்டும் வான் பொருள்'** என்னும் அருள் நூல் பெருந்துணையாய் அமைந்தது.

அருட்சட்ட நெறியை அடிமை மேற்கொண்ட நாள் முதல் என் முன்னை நல்வினைப் பயனால் குருநாதர் திருவருளே கண்ணாகக் காண்கின்ற காட்சி உடையவளாயினேன். அவ்வண்ணம் இக்காவியத்துக்கு வேண்டிய பல அருட் செய்திகளைக் குருநாதர் தம் பேரருளால் உணர்த்தி வருவது அருள் வழக்கமாயிற்று. இவ்வரலாற்று அருள் நூலைப் பாக்களாகப் புனைவது என்னும் உறுதி ஏற்பட்டபின், விளங்காத சில பகுதி

களைக் குருபரரே அவ்வப்போது தெள்ளத் தெளிய விளக்கி உணர்த்தி வந்தனர். அச் செய்திகள் யாவும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. என் வாழ்க்கையில் எனக்குப் பற்றுக் கோடாக விளங்குகின்ற குருபெருந்தகையாரின் அருள் வரலாற்றையும் அருட்சட்ட நெறியையும், அந்நெறியில் நிலை நின்று பெரும்பயன் பெற்றுள்ள அடியார்களின் செய்தி களையும் கொண்டுள்ள இந்த அரும்பெருங் காவியத்தைப் பதிப்பிக்கின்ற ஒரு தனிப்பெரும் பேறு எனக்குக் கிட்டியதை எண்ணியெண்ணி இறும்பூதெய்துகின்றேன்.

முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போல, இப் பெருநூலைப் பல்லாண்டுகளாக முயன்று இயற்றி, வெளி யிடும் செயலை இந்நூலின் ஆசிரியரும் யானும் மேற் கொண்டோம்.

இதற்கு வேண்டிய பெரும் பொருளை நாம் எவ்வாறு சமாளிக்கப் போகின்றோம் என்று கலங்கியபோது, 'யாமிருக்க பயமேன்' என்று அபயம் கொடுத்து, ஒவ்வொரு துறையிலும் அக் குரு பரம்பொருளே வழிகாட்டி அருளுகின்றார். இனி மேலும் பொருள் முறைச் சிக்கலைச் சமாளித்துவர அப்பெரும் பொருளே வழிகாட்டி வகைசெய்வார் என்னும் பெரு நம்பிக்கை உடையேன்.

தெய்வத் திருவருளால் இளமைமுதல் கவிபாடும் ஆற்றல் பெற்றவரும், குருநாதரிடத்துத் தன் உடல் பொருள் ஆவியை ஒப்புவித்து அருள் வாழ்வு ஆற்றுபவரும், குருநாதர் திருவருளையே பெருஞ் செல்வமாகப் போற்றுபவரும், 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று, தான் நுகர்ந்த அருட்சட்டப் பெரு நெறியின் பயனைப் பலருக்கும் எடுத்துக் கூறி, அருட்சட்டம் ஏற்கச் செய்தவரும், குருபர வணக்கம், குருநாதர் பிள்ளைத் தமிழ், வழிபாட்டு நூல் போன்ற பல நூல்களை ஆக்கி அடியார்கள் உலகத்திற்குத் தந்தவரும், அடியார் இல்லங்கட்கு அவ்வப்போது சென்று, அவர்கட்கு நேரும் பிணி முதலியன நீக்கி, அருந் துணையா யிருப்பவரு மான இந் நூலாசிரியர் உயர்தவத்திரு. மி. கே. வேங்கட ராமன் அவர்கள் அடிமையின் வேண்டுகோளுக் கிணங்கிப் பல ஆண்டுகளாக அரிதின் உழைத்து இந்நூலை உருவாக்கி, அச்சிடும்போது அரும் பெரும் பணியாற்றி வந்தமைக்கு அடியார்கள் உலகமும் அன்பர்களும் பெரிதும் கடப்பாடு

உடையவர்கள். அடியேன் இந்நூலாசிரியரின் திருவடிகளைச் சிரமேற்கொண்டு அவருக்கு நன்றி பல கூறுகின்றேன்.

இந்நூலில் வெளியாகியுள்ள அடியார்கள் சரித்திரங்கள் சிலவற்றிற்குத் தேவையானகுறிப்புகள் தந்துஉதவிய அடியார் பெருமக்களுக்கும், இந்நூல் வெளிவரப் பொருளாகவும் பணமாகவும் உதவி செய்த அடியவர் அன்பர்கள் பலர்க்கும், எங்கள் வேண்டுகோளுக் கிணங்கி இந்நூலுக்கு முன்னுரை, முகவுரை, அணிந்துரை, சிறப்புரை, சாற்றுக்கவி முதலியன வழங்கி உதவிய பெருந்தகையாளர்களுக்கும் இந்நூல் அச்சாவதற்கு எங்களுடனிருந்து அரும்பெருந் தொண்டாற்றிய அருட்சட்ட அடியார் மன்னார் பாளையம் உயர்திரு R. விஜயரங்கம் சுவாமிகட்கும், இந்நூலில் வெளியாகியுள்ள புகைப்படங்களும், ஓவியங்களும் கொடுத்து உதவிய மெய்யன்பர்கட்கும், எங்களுடன் பரிபூர்ணமாக ஒத்துழைத்து உரிமையுடன் இக்காவியத்தை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த காஞ்சிபுரம் துரை அச்சகத்தினர்க்கும், சென்னையிலிருந்து தம் பல அலுவல்களுக் கிடையே, இங்கு வந்துதங்கி இந்நூலைச் சிறந்த முறையில் கட்டுக்கோப்பு (Binding) செய்து தந்த உயர்திரு N. K. சரவணன் அவர்களுக்கும், இந்நூல் இனிது வெளிவர எண்ணம், சொல், செயல் ஆகியஎல்லா வகையிலும் உதவி புரிந்துள்ள மற்றும் பலர்க்கும் அடியேனுடைய இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலில் உள்ளனவே சுவாமிகளின் வரலாறு என்று சொல்வதற்கில்லை. இன்னும் தெரிந்தும் தெரியாமலும் உள்ள எத்தனையோ செய்திகள் இதில் இடம்பெறாதிருக்கலாம். அவற்றை அடியவர் மூலம் உணர்ந்து இன்புற வேண்டுகின்றோம்.

அடியவர் உலகமும், அன்பர்கள் திரளும் இந்நூலை மகிழ்ச்சியோடு ஏற்று, எங்களுக்கு உவகையூட்டி, ஆண்டவர் அருளுக்கு அருகராகி, அனைத்து நலங்களும் பெற்று, வாழ்வாங்கு வாழவேண்டுமென்று குருநாதரின் பொன்னார் திருவடி மலர்களைப் போற்றுகின்றேன்.

ஆண்டவர் அருள்

சு. மங்கையர்க்கரசி



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

## ஆக்கியோன் குறிப்பு



எல்லாவுலகையும் உண்டாக்கிக் காத்தருளும் ஒப்புயர்வற்ற பரம்பொருள் அவ்வப்போது குருவுருவம் தாங்கிவந்து ஆன்மவர்க்கங்களுக்கு அருள்பாலித்து வருகிறார் என்பது அருள் நூல்கள் கூறும் முடிபு ஆகும்.

அவ்வாறு அவதரித்து அருள்நெறி வகுத்து அருளாட்சி புரிந்து வரும் குருபெருமானாகிய ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் அடியேனையும் கடைக்கணித்து ஆட்கொள்ளத் திருவுள்ளம் கொண்டமையால், அடியேன் 1944ல் அருள் சட்ட நெறியை மேறகொண்டு இயன்றவரை கடைப்பிடித்து ஒழுகி வருகிறேன்.

திருவருள் துணையால் இளமை முதல் கவிதை இயற்றும் திறம் வாய்க்கப் பெற்றிருந்ததால், எக்கோயிலுக்குச் சென்றாலும் கவிதை இயற்றி வழிபாடு செய்வதுண்டு.

குருநாதர் அடிமையின் வாழ்வில் நிகழ்த்திய அருள் நிகழ்ச்சிகளால் மனமுருகிப் பற்பல சமயங்களில் துதிப் பாடல்கள் பல இயற்ற நேர்ந்தது. அவை அடியார் பெரு மக்களால் வழிபாட்டுக்குப் பயன் படுத்தப் பெறுகின்றன.

பல புராணங்களைப் படிக்கும்போது, உலகம் உய்ய அரும்பெருந் தொண்டாற்றிவரும் நம் குருநாதருக்கு ஒரு புராணம் இயற்ற வேண்டும் என்ற அவா பல நாட்களாகத் திருவருளால் அடியேனது உள்ளத்தில் உந்திக் கொண்டே இருந்தது.

சுடர் விளக்காயினும் தூண்டுகோல் ஒன்று வேண்டும் என்றவாறு, காஞ்சிபுரம் ஸ்ரீலஸ்ரீ அருள்ஞானச் செல்வத்தாய் அவர்கள் ஊக்கம் மிக ஊட்டி கட்டாயமாகப் புராணத்தை

எழுத வேண்டும் என்று தூண்டினர். குருநாதரின் உத்தரவும் கிடைத்தது

தனக்கு நன்ருகச் சுவை மிகுந்த உணவு சமைக்கத் தெரியாதெனினும், தன் கணவனுக்குத் தான் சமைத்து அருத்த வேண்டும் என விரும்பும் மனைவியைப்போல.

இலக்கண இலக்கிய வளங்கள் சிறந்து விளங்கும் முறையில் அடிமைக்கு எழுதத் தெரியாது எனினும், தெரிந்த அளவில், திருவருள் துணைகொண்டு எழுதுவது என்ற முடிவுக்கு வந்தேன்.

ஏதும் தெரியாது நாங்கள் இருவரும் திகைத்துக் கொண்டிருந்தபோது குருநாதர் காஞ்சிபுரம் தாய் அவர்கள் மூலம் நிட்டையில், காண்டம், படலம் முதலிய தலைப்புகளையும், அவ்வத் தலைப்பில் அமைய வேண்டிய செய்திகளையும் உணர்த்தி யருளினர். அப்போது அடியேன் மௌன விரதத்தில் இருந்தேன்.

இவ்வாறு திருவருள் துணையால் தொடங்கப் பெற்ற இந்நூல், எங்கள் இருவருக்கும் உள்ள பலவேலைகளுக்கிடையே பல ஆண்டுகளாக எழுதப்பெற்றது. தேவையான சமயங்களிலெல்லாம் ஆண்டவர் அருட் குறிப்புத் தந்த வண்ணம் இதன்கண் செய்திகள் அமைந்துள்ளன.

செந்தமிழ் விளக்க வள்ளலார். உயர்தவத்திரு. சி. இராமலிங்கனுர், எம் ஏ. அவர்களால் எழுதப்பெற்று, உயர்திரு ஆ நரசிம்மலு நாயுடு சுவாமிகளால் வெளியிடப் பெற்றுள்ள 'வழிகாட்டும் வான்பொருள்' என்னும் நூல் இப்புராணத்தை எழுதுவதற்குப் பெருந்துணையாய் அமைந்தது. அவ்விரு பெருந்தகையார்க்கும் அடிமையின் உளம்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளக் கடமைப் பட்டுள்ளேன்.

இந்நூலை விரைவில் அச்சிட வேண்டும் என்ற சீரிய எண்ணம், உயர்தவத்திரு. அருள்ஞானச் செல்வத்தாய் அவர்களின் திருவுள்ளத்தில் ஆண்டவர் அருளால் தோன்றியது. ஒன்றே செய்; அதுவும் நன்றே செய்; நன்றும் இன்றே செய்; என்றபழமொழிப்படி அந்த நல்லெண்ணத்தை உடனே செயல்படுத்தலாயினர்.

மிக்க அன்போடு அடிமையையும், உயர்திரு R. விஜயரங்கம் சுவாமிகளையும் தங்கள் இல்லத்திலேயே ஆறு மாத காலமாகத் தங்கவைத்து, இப்புராணம் அச்சிடும் பணியை உடனிருந்து புரிந்தார்கள். வேண்டிய பொருள்களைத் திரட்டியும், செய்திகளைச் சேகரித்தும் உதவி புரிந்தார்கள். அவர்தம் குடும்பத்தில் உள்ள அனைவரும் மிக்க அன்போடு உபசாரம் புரிந்தனர். அவர்தம் குடும்பம் வாழையடி வாழையாக மேன்மேலும் சிறந்து ஓங்க வேண்டும் என்று குருநாதரை வேண்டுகின்றேன்

உடனிருந்து அருந்தொண்டாற்றி உதவி புரிந்த அருள் திரு. விஜயரங்கம் சுவாமிகட்கு என் மனமார்ந்த நன்றி என்றும் உரியது.

எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி, அடியவர்களின் வரலாறுகள் எழுதக் குறிப்புகள் அனுப்பிய அன்பர்களுக்கும், முன்னுரை, முகவுரை, அணிந்துரை, சிறப்புரை சாற்றுக்கவி முதலியன வழங்கி உதவிய பெருந்தகையாளர்களுக்கும், எங்களுக்குப் பூரண ஒத்துழைப்புத்தந்து இந்நூலைச்சிறந்த முறையில் அச்சிட்டுத்தந்த காஞ்சிபுரம் துரை அச்சகத்தினர்க்கும், நல்லமுறையில் கட்டுக்கோப்பு செய்துதந்த சென்னை அன்பர் திரு N. K. சரவணன் அவர்கட்கும் என் உளம்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலுள், அடிமையின் அறியாமை காரணமாகச்சில குறைபாடுகள் இருக்கலாம். அடியார் பெருமக்களும், அன்பர்கள் திரளும் அவற்றை உளம் கொள்ளாது மன்னித்தருளுமாறு மனப்பூர்வமாக வேண்டிக் கொள்ளுகிறேன்.

சிறந்த முறையில் இம்மாபெருங் காவியத்தை உருவாக்கிய ஆண்டவர் அருளுக்கும், அவ்வருளை மடுத்துத் தந்து, எல்லாவகையிலும் உதவி புரிந்துவரும் உயர்தவத்திரு அருள்ஞானச் செல்வத்தாய் அவர்களுக்கும் அடிமையின் இதய பூர்வமான நன்றி என்றும் உரியது.

இந்நூலைத்தமிழ் கூறும் நல்லுலகம் ஏற்று, படித்து, அருட்சட்டம் பேணி, இம்மை மறுமை நலங்களைப் பெற்றுப் பேரின்பமெய்தின், ஆண்டவர் திருவுளக்கருத்து நிறைவேறும் என்பது அடிமையின் பிரார்த்தனையாகும்.

ஆண்டவர் அருள்,
பாலகவி. மி. தே வேங்கடராமன்.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

குருபரனார் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின்
வரலாற்றில் உள்ள

## தனிப்பெருஞ் சிறப்புகள்:

1. சுவாமிகட்கு அருட்காட்சி யளித்த ஸ்ரீ பரிபூர்ணப் பெருமான் நிரந்தரமாக நிலைத்து நின்று, எல்லா உயிர்க்கும் அருள் பாலித்து வருகிறார்.

2. இம்மையில் தூய அருள் வாழ்வாற்றி, பரகதி யாகிய முத்திப் பேற்றையும் அடையத்தக்க அருள் நெறியை இனம், மொழி, மதம், நாடு, வயது, அறிவு, செல்வம் என்ற எவ்வகையான பேதமுமின்றி, அனைத்துயிர்க்கும் சுவாமிகள் வகுத்துத் தந்துள்ளனர். சட்டம் மீறினால் பொதுவாக தண்டனை தந்து, திருத்தியருளுகின்றனர்.

3. அடியவர்க்கும், அன்பர்கட்கும் அரும்பெருந்துணை யாயிருந்து, ஊக்கி, இன்னல்நீக்கி, இன்பம் ஊட்டிப் பேணு கின்றனர்.

4. அவதாரமான அதே இடத்தில் அடக்கமாகித் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ளனர்.

5. அடக்கமான பின்பும், முன்னிலும் பன்மடங்கு பெருங்கருணையோடு என்றும் வழிகாட்டும் இன்னருட் பெருமானாக இலங்குகின்றனர்.

இவையனைத்தும் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் அருள் வரலாற்றில் காணும் தனிப்பெருஞ் சிறப்புகளாகும்.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# கருணை மிகு வள்ளல்

## அருள் நிறை சரிதம்

## உள்ளுறை



பொருள் பக்கம்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# கருணை மிகு வள்ளல்

## அருள் நிறை சரிதம்

### (ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் வரலாறு)

**பாயிரம்**

பரிபூர்ண விநாயகர் துதி

பூரணமாய்ப் புனிதமுமாய்ப் பூவுலகாய்
வானுலகாய்ப் பொருள்கட் கெல்லாம்
காரணமாய் ஐந்தொழிலும் கவினுறவே
நடத்துகர்த்தர் தலைவன் தானாய்
ஆரணமாய் ஆகமமாய் அளவில்கலை
களின்பொருளாய் அருளாய் ஓங்கும்
வாரணமா முகன்பதங்கள் மனத்தமைத்து
வாழ்த்தியன்பால் வணங்கி வாழ்வாம். 1

சித்தி விநாயகர் துதி

பத்திநெறி யோகநெறி ஞான நெறி
அனைத்தினையும் பாங்காய்ச் சேர்த்து
முத்திநலம் எளிதருள வல்லதிரு
அருட்சட்ட முறையாய் ஞான
சித்திமிகும் இருடிநகர்த் திருமுனிவர்
புவிக்கருளச் செய்து பேணும்
சித்திவிநா யகன்மலர்த்தாள் சென்னியில்வைத்
தினிதுதுதி செய்து வாழ்வாம். 2

சக்தி விநாயகர் துதி

அருள்நலமும் அளவில்பொருள் நலமும்அருள்
சட்டநெறி ஆருயிர்க ளுக்கருளிநல்
தெருள்மிகு பெருந்துணை யெனத்திகழ்ந்
தொப்பில்பர முத்தியருள் தேசிகனெனும்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# கருணை மிகு வள்ளல்

## அருள் நிறை சரிதம்

### (ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் வரலாறு)

### பாயிரம்

பரிபூர்ண விநாயகர் துதி

பூரணமாய்ப் புனிதமுமாய்ப் பூவுலகாய்
வானுலகாய்ப் பொருள்கட் கெல்லாம்
காரணமாய் ஐந்தொழிலும் கவினுறவே
நடத்துகர்த்தர் தலைவன் தானாய்
ஆரணமாய் ஆகமமாய் அளவில்கலை
களின்பொருளாய் அருளாய் ஓங்கும்
வாரணமா முகன்பதங்கள் மனத்தமைத்து
வாழ்த்தியன்பால் வணங்கி வாழ்வாம். 1

சித்தி விநாயகர் துதி

பத்திநெறி யோகநெறி ஞான நெறி
அனைத்தினையும் பாங்காய்ச் சேர்த்து
முத்திநலம் எளிதருள வல்லதிரு
அருட்சட்ட முறையாய் ஞான
சித்திமிகும் இருடிநகர்த் திருமுனிவர்
புவிக்கருளச் செய்து பேணும்
சித்திவிநா யகன்மலர்த்தாள் சென்னியில்வைத்
தினிதுதுதி செய்து வாழ்வாம். 2

சக்தி விநாயகர் துதி

அருள்நலமும் அளவில்பொருள் நலமும்அருள்
சட்டநெறி ஆருயிர்க ளுக்கருளிநல்
தெருள்மிகு பெருந்துணை யெனத்திகழ்ந்
தொப்பில்பர முத்தியருள் தேசிகனெனும்

கருணைமிகு வள்ளல்அருள் நிறைசரிதம்
அன்பொடிக் காசினியில் நன்றெழுதிட
அருணதள மலரடிகள் துணையெனச்
சக்தியைங் கரமூர்த்தி யைப்பரவுவாம். 3

வல்லபை துதி

நல்லவர்கள் உள்ளமெனும் பீடமிசை
நன்றமர்ந்து ஞான மூட்டி
இல்லறநல் வளமுதவித் தவநெறியில்
ஈர்த்துமுத்தி யின்ப மீய
வல்லகண பதிமடியில் வனப்பொடமர்ந்
தருள்வளங்கள் வழங்கி யாளும்
வல்லபைஎம் அன்னைதிரு மலர்ப்பதங்கள்
மனத்திருத்தி வழுத்தி வாழ்வாம். 4

சித்தி புத்தி துதி

சத்தியெலாம் எவ்வுயிர்க்கும் தந்தெணிலா
உலகினிலும் தனிக்கோ லோச்சும்
அத்திமுகப் பெருமான்றன் இருபாலும்
அருள்வடிவாய் அமர்ந்தன் பர்க்கே
புத்திபுகழ் பொறைபுனிதம் பொருளுயர்ந்த
போகமுடன் போத மூட்டும்
சித்திபுத்தி யெனுமிருவர் செம்பதும
மலர்ப்பதங்கள் சிந்தித் துய்வாம். 5

செந்தூர் முருகப் பெருமான் துதி

அந்திநிறச் சிவபெருமான் அறுநுதற்கண்
பொறிவடிவாய் அருளாற் போந்து
சந்திரனைத் தடுக்குமுயர் மலைபொடித்துத்
தாருகனை வதைத்துப் போரில்
முந்திடுசூ ரனைமடித்து மயிலிவர்ந்து
முழுஞானச் செவ்வே லேந்தி
செந்திலமர் திருக்குமரன் திருவடிகள்
அன்பினெடும் சேவித் துய்வாம். 6

## குருநாதர் துதி

பூவுலகில் எவ்வுயிரும் பூரணம் பெற்
றுய்யும்நெறி புகன்ரு ளற்கே
தேவரெலாம் வாழ்த்தஉயர் முனிவரெலாம்
போற்றஅருட் செம்மை பூண்ட
ஆவுடைநல் லனேவீர பத்திரர்சே
யாய்இருடி நகரிற் போந்த
தேவெனும்சுப் பிரமணிய தேசிகர்தாள்
தினம்பணிந்தின் னருள்பெற் றுய்வாம். 7

காலையெழு கதிரவன்போல் கவினுறவே
வளர்போதில் கணநா தர்மேல்
சோலைமலர் தூவுவதும் தொழுதழுது
நகைப்பதுமாய்த் தூய்மை நாடி
மூலையினி லமர்ந்துவிழி மூடிநிட்டை
புரிந்துபர மோனத் தாழும்
பாலகுரு நாதர்இரு பதமலர்கள்
உளத்தமைத்துப் பரவி வாழ்வாம். 8

சீரியசெந் தமிழ்எழுத்தைப் பயின்றும்வயல்
சென்றுபயிர் செய்தும் அந்த
ஊரிலுள ஏழைமக்கட் குதவஉண
வுப்பொருட்கள் வாங்கி வந்தே
நேரியகொள் விலைக்களித்தும் செந்தில்சென்றும்
நீள்மதுரை சேர்ந்தும் வந்த
காரியத்தைத் தொடங்குகுரு கழற்கமலம்
கருத்திருத்தி வழுத்தி வாழ்வாம். 9

நீதியுடன் வாணிபம்செய் முகமதியர்
கடைக்கணக்கை நிதமும் பார்த்தும்
ஆதியரு ளெனப்பெருகும் வைகைநதிக்
கதிகாலை சென்று மூழ்கிப்
பூதியணிந் தொருமுன்னேன் கோயில்சுற்றிப்
பூசைசெய்தும் ஒருநாள் நீண்ட
ஜோதியுருக் கண்டணைந்து மகிழ்ந்தகுரு
தூமலர்த்தாள் துதித்து வாழ்வாம். 10

ஒப்பரிய ஜோதி முன்னோன் உருவாகக்
கண்டுமன முவந்து போற்றி
இப்படியுள் ளோர்க்கவன்றன் அருள் மடுத்தீந்
தின்னலெலாம் தவிர்த்தின் பூட்டிச்
செப்பரிய அருள்வளங்கள் செழித்திடச்செய்
தன்பர்குழாம் திரட்டி யாளும்
மெய்ப்பொருளாம் குருநாதர் மலர்ப்பதங்கள்
தொழுதுபழ வினைகள் தீர்ப்பாம். 11

வடநாடு சென்று கப்பல் வாணிபமும்
மிகப்புரிந்து மதுரைச் சொக்கர்
இடமேவும் அங்கயற்கண் ணம்மையமைத்
திடமதுரைக் கினிதே வந்து
திடமேவும் உளத்தினொடும் தவமாற்றச்
செழும்பொதிகைக் குகைக்கே யேகி
நடமாடும் கடவுளெனத் திகழ்குருவின்
நாண்மலர்த்தாள் நாடி வாழ்வாம். 12

அன்னையுடல் நிலையருளா லறிந்தூர் சென்
றவரடிக்குப் பூசை யாற்றி
முன்னையரு ளொளியீர்க்கப் பொதிகைசென்று
பெரியதவம் முயன்று பின்னும்
அன்னைஇறை யடியடைபோ தருகிலிருந்
தடக்கம்புரிந் தருந்த வத்தாழ்ந்(து)
என்னை நிகர் வோர்பலர்க்கும் இன்பருளும்
குருபதங்கள் ஏத்தி வாழ்வாம். 13

மண்டலமெள னம்பேணி ஊரவர்தம்
மனநிலையைக் கண்டு மீண்டும்
கொண்டலிவர் பொதிகைவரைக் கேகிஉயர்
தவம்பயின்று குறைவே யின்றி
எண்டிசையும் நனிதிருந்தி உய்யும்நெறி
இனிதேகண் டிறும்பூ தெய்தி
அண்டர்தொழப் புவிக்களித்தாள் அருட்குருவின்
அடிமலர்கட் கன்பு செய்வாம். 14

வேதமெலாம் பலநாளாய்ப் பலவாறுய்
விரித்துரைத்த பொருள்கள் யாவும்
பூதலத்தில் வாழுயிர்கள் அத்தனையும்
பேதமின்றிப் போற்றி உய்யத்
தீதகன்ற திருவருட்சட் டப்பெயரில்
திருவருளால் அளித்தாள் இன்ற
போதகுரு நாதன்மலர்ப் புண்டரிகத்
தாள்தினமும் போற்றி வாழ்வாம். 15

அதிகாலை தண்ணீரில் ஆடிஅந்தத்
தண்ணீரே அருந்தி நாளும்
துதிசெய்தொரு கோயில்வலம் புரிந்துதணீர்
நீறுதுழாய் இட்டுட் கொண்டு
பதியினிடம் உடல்பொருளா வியைநன்றாப்
பணித்துகொலை புலைபொய் நீக்கி
மதிகெடுக்கும் குடிசூது தவிர்த்துய்கெனும்
வள்ளல்பொற்றுள் வழுத்தி வாழ்வாம். 16

மருந்தெதற்கும் பயன்படுத்தேல் மணிமந்த்ரம்
மருவேல்ப்ரார்த் தனைகள் செய்யேல்
வரும்பலவும் இறைவனருட் செயல்என்ன
மனத்தெணுக நிட்டை செய்க
திருந்திஉயும் வழியிதுவென் றெவ்வுயிர்க்கும்
திருநெறிதந் தருளால் ஆளும்
அருந்தவசி இருடிநகர் அண்ணல் குரு
அருட்பதங்கள் அகத்துட் கொள்வாம். 17

பெற்றோர் துதி

காரகத்து மழைத்துளிபோல் கருணையொடும்
காசினியில் அறவாழ் வாற்றி
ஏரகத்தி லமர்முருகன் போலுயிர்கட்
கருள் நெறியை இனிதே நல்கிப்
பாரகத்தைத் திருத்துகுரு நாதரையீன்
றிடத்தவம்முன் பண்ணிப் போந்த
வீரபத்தி ரக்குரிசில் விரைமலர்த்தாள்
பணிந்திறைஞ்சி வினைதீர்ந் துய்வாம். 18

திருவருட் செந் நெறியுலகுக் கினிதருளத்
 திருவருளே வடிவ மாகி
வருகுருவை அருட்கருவாய்த் தனதுதிரு
 வயிற்றினிடை தாங்கற் கென்றே
பெருகுதவம் முன்புரிந்த பெருந்தாய்
 ஆவுடையம்மை மலர்த்தாள் பேணிக்
கருவிலினி புகுதாநற் பேறடைந்து
 கருணைநெறி போற்றி வாழ்வாம். 19

மதுரைப் பரிபூர்ண விநாயகர் துதி

நன்மைபுரி அருள்நெறியைப் புவிக்கருளும்
 ஞானகுரு நாதர் முன்னே
தென்மதுரா புரிவடக்கில் வைகைநதித்
 தென்கரையில் தோன்றி யார்க்கும்
கன்மவினைக் கட்டறுத்துக் கருணைபுரி
 பரிபூர்ணர் கழல்கள் போற்றி
ஜென்மவிடாய் தீர்ந்து முத்திப் பேறெய்தி
 உண்மையின்பம் திளைத்து வாழ்வாம். 20

அடியவர் துதி

உடல்பொருள் ஆவி மூன்றும் உயர்குரு நாதர்க் காக்கி
அடர்புலப் பகைவென் றுள்ளம் அடக்கிநன் னிட்டை பேணிக்
கடல்மடை திறந்தாற் போலப் பெருகருட் கருணை மாந்தி
அடலுடன் விளங்கு சட்ட அடியர்தாள் பணிந்து
 வாழ்வாம். 21

அவை யடக்கம்

சொல்லறியாச் சிறுகுழவி சொல்லு மொழி யினை மழலைச்
சொல்லெனவே குறைகாணார் தூயோர்கள் அஃதேபோல்
சொல்லறியா இச்சிறியேன் சொல்லுமொழி யினைத்தூயோர்
நல்லனவாக் கொண்டாசி நவில்வரென நவிலலுற்றேன். 22

மலையைஅநு மாருமிரா மனதருளால் பெயர்த்தெடுத்தார்
அலைகடலைச் சிவனருளால் அகத்தியனார் குடித்தாரென் (று)
உலை விலதாம் மொழிகேட்டிங் கொப்பில்குரு திருவருளால்
நிலைபெறு மிந் நூலெழுத நேமியில்யான் முயலலுற்றேன். 23

இடையாயர் தலையாயர் என்றிலங்கு மன்பரையும்
கடையாய உயிர்களையும் கடைத்தேற்ற வந்தகுரு
கடையாய என்சொலையும் கருணையுடன் ஏற்றருளி
அடையாத பேரின்பம் அடையஉய்ப்பர் எனநவில்வேன் 24

அவனன்றி ஓரணுவும் அசையாதென் றனர்ஆன்றோர்
அவனன்றி என்மனமும் என்நாவும் அசையாவால்
அவனருளால் அசைவதனுல் அவனருளால் இந்நூலும்
புவனிமிசை நிலவுமெனக் கருதியிவண் புகலலுற்றேன். 25

குரு அருள் திறம்

எத்தனையோ பேரறிஞர் இவ்வுலகில் இனிதிருக்க
இத்தமியேற் கிப்பணியை யீந்தகுரு திருவருளுக்(கு)
எத்துறையான் இவ்வேழை நன்றி சொல்வதென அறியேன்
எத்துணையு மாய் விளங்கும் குருவருளே யிஃதறியும், 26

வேதமுடன் ஆகமமும் விரித்துரைத்தும் உலவாத
போதகுரு பரன்சீரைப் புகழவென்நா வினுக்காமோ
நாதனவன் அருட்சீரை நானிலமேற் சிறிதுரைக்கத்
தீதிலவன் திருவருளே துணையென்று செப்பலுற்றேன். 27

உலகினுக்குப் பொதுநெறியொன் றுவந்தளித்த குருபரனுர்
அலகிலருள் வரலாற்றை அணிதமிழ்ச்செய் யுளிற்புரிந்தால்
இலகடியர் பலர்சுவைத்தின்பெய்துவர்இம் மாநிலமும்
நிலவுகுரு பரனருளால் உய்யுமென நினைந்துரைத்தேன். 28

குருவருளால் குவலயத்தில் குறைதீர்ந்து நலம்பெருகும்
குருவருளால் வளம்பலவும் கொழிக்க அருள் வாழ்வமையும்
குருவருளால் தவமோங்கும் குருவருளால் மனம் கனியும்
குருவருளால் உண்டாகும் நலம்அனைத்தும் கூறுேணுமோ? 29

## குருநாதர் துதி

ஐயம் நீக்கி அருட்பெருஞ் ஜோதியைக்
கையில் ஆமல கக்கனி யாய்த்தரும்
துய்ய ரெட்டியப் பட்டி சுவாமியின்
செய்ய பங்கயச் சேவடி ஏத்துவாம். 1

அல்லல் நீக்கி அருட்பெருஞ் ஜோதியை
நல்ல வாறு நமக்குள் விளக்கிடும்
எல்லை யில்புகழ் ரெட்டியப் பட்டிவாழ்
வல்லவன் பதம் வாழ்த்தி வணங்குவாம். 2

ஒதி டாமல் அனைத்தையும் உள்ளுணர்ந்
தாதி வேதத் தரும்பொருள் சட்டமாய்
நீதி யோடு நிறுவிரெட் டிப்பட்டி
ஜோதி பாதம் துதித்து வணங்குவாம். 3

ஊனம் தீர்த்தரு ளூட்டும் நெறிசொலி
மோன வானில் முழுமதி காட்டிடும்
ஞான ரெட்டியப் பட்டி நகர்திகழ்
வான நாயகன் பாதம் வழுத்துவாம். 4

என்றும் எங்கும் இலங்கருட் ஜோதியை
மன்றுளே நடம் காட்டிடும் வள்ளலை
ஒன்று சீரிரு டிப்பட்டி பூரனை
நன்று போற்றித் துதிகள் நவிலுவாம். 5

ஓமெ முத்தை யுணர்த்தும் ஒருவனை
காமம் கோபம் களையும் கலைஞனை
சோம மண்டலத் தானைரெட் டிப்பட்டி
நாம நற்பதி யானையுள் நாடுவாம். 6

ஓங்கு செல்வமும் உத்தமர் நேயமும்
நீங்கரும் பக்தி நேமமும் நிட்டையும்
ஈங்கருள் ரெட்டிப் பட்டி இறைவன்தாள்
பாங்கு டன்துதி பாடிப் பரவுவாம். 7

அன்பர் கூட்டம் பெருக்கி யருள்நெறி
இன்ப மோடும் எவர்க்கும் வழங்கியாள்
பொன்புரை ரெட்டிப் பட்டிப் புனிதன்தாள்
அன்பி னுற்றெழு தேத்தி யடைவமால். 8

# 1. பாலகாண்டம்

## 1. ஆற்றுப் படலம்

### விநாயகர் துதி

திருவும் தூய செழிப்பும் வளர்த்துநல்
தெருளும் செம்மையும் தெய்விக மும்தரும்
பொருநை யாற்றின் பெருமை புகன்றிடக்
கருணை சான்ற கணேசரைப் போற்றுவாம். 1

### குரு நாதர் துதி

பொருளைநனி விளக்கியருட் போதபரி
பூரணமும் புவிமேல் நல்கி
இருளைநனி விலக்கியுயர் ஏகாந்தப்
பெருநிலையில் இனித மர்த்தித்
தெருளைநனி புகட்டியருட் சேவடியில்
உயிர்த்தொகையைச் சேர்த்தின் பூட்டப்
பொருநைநதி பொலிபாண்டி நாட்டில்வரு
புனிதகுரு பொற்றாள் போற்றி. 2

### வேறு

அருவ மாகி உருவமு மாகியே
பருவ பக்குவம் நல்கருட் பண்புசால்
குருப தம்சிரம் சூடிக் குலாவுசீர்
அருள்பொரு நைநதல் லாற்றணி கூறுவாம். 3

### வேறு

பூவுல கினிலே யுள்ளோர்
புரிதவப் பேறுய்ப் போந்து
காவல்செய் தெனையும் பேணும்
கருணைசால் குரவோன் நாடாய்
மூவுல கினிலும் மேலாய்
மொழிதரும் பாண்டி நாட்டில்
மேவுநற் பொருநை யாற்றின்
மேன்மையை விளம்ப லுற்றும். 4

எண்ணிலா நூல்கள் கூறும்
இனியநற் பொருளை யெல்லாம்
நண்ணுபே ரருளால் நோக்கி
நல்லசா ரத்தை ஆசான்
புண்ணியச் சீடர்க் கோதும்
பொற்புபோல் புணரி சார்ந்தங்(கு)
உண்ணிலா வுவர்நீத் துண்ணீர்
கொடுமுகில் உலவிற் றன்றே. 5

மின்னலே ஆழி யாக இடியொலி வெண்சங் காக
மன்னெடுஞ் சிலைவில் லாகக் கூர்ங்கணை மழையே யாகத்
தண்ணிறக் கருமை மாலோன் தடநெடு மேனி யாகத்
துன்னியிவ் வுலகைக் காப்போன் சூழ்வதொத் தெழுந்த
கொண்மூ. 6

இடையினை மின்னல் காட்ட எழிற்சிலம் பிடியே காட்ட
அடைபவர்க் கருள்கண் மீதார் புருவம்வில் லழகு காட்டத்
தடையிலா தருளைப் பெய்தல் தண்மழை காட்ட லாலே
உடையவள் போல எங்கும் உலவின மேகக் கூட்டம் 7

வேறு

உயிர்வ கைகளும் உலகினிற் பசுமையாய் ஒளிரும்
பயிர்வ கைகளும் வாடுதல் கண்டுபா லித்தற் (கு)
அயர்வி லாதுமெய் யன்புடன் அருளுடன் முகில்கள்
உயரும் வான்மிசை யெழுந்தன தாபம்தீர்த் தோம்ப. 8

வேறு

மலையினை யிடமாக் கொண்டு வாழ்வுறும் உயிர்க ளெல்லாம்
அலைவுறு வகைநற் போர்வை அழகுறப் போர்த்த தேபோல்
அலைகடல் நின்றும் போந்த அழகிய மேகக் கூட்டம்
மலையினைச் சூழ்ந்து கொண்ட எழில்சொல வல்லார் யாரே? 9

வேறு

தென்றல் சந்தனம் செந்தமி ழாதிய பிறக்கும்
குன்ற மாகிய பொதிகைமால் வரைமிசை கூடிப்
பொன்ற லின்றியெவ் வுயிர்களும் பொலிவுடன் விளங்க
நன்று தண்மழை பொழிவன நாற்றிசை முகிலும். 10

வேறு

நீறணி சிவனே போன்று நெடுமுகில் கடலிற் சென்று
மாறுகொள் நிறத்த வாகி மாலெனக் கருமை பூண்டு
வீறுடு திரும்பி யீசன் மாமனும் வெற்பின் வெம்மை
ஆறவே நன்னீர் கொண்டங் காட்டல்போல் *ஆலி
பெய்யும். 11

அங்கயற் கண்ணி யம்மை யருள்நிகர் கடலில் மூழ்கி
அங்கவள் நிறமே தாங்கி அழகொடும் திரும்பிப் போந்து
பொங்கருட் பொலிவார் கும்ப முனிதவம் புரியும் சீர்சால்
மங்கலப் பொதிகை யின்கண் மழையினைப் பொழிவ
மேகம். 12

வேறு

நன்றுயர் பொதிகை மாமலை யுச்சி
நாடியே மேகங்கள் அனைத்தும்
சென்றுநீர் பொழிதல் சீதையின் நாதன்
சிவலிங்க மொன்றுதா பித்தே
நன்றுநீ ராட்டல் நிகர்க்கும்இந் திரனார்
நன்மது ராபுரிச் சொக்கர்க் (கு)
அன்றுநீ ராட்டல் மானும்;நன் மணிகள்
சொரிதல்பல் மலரிடல் மானும். 13

வேறு

தடம்புயம் மார்பு நெற்றி
தனில்திரு நீறு பூசும்
உடையவன் அடியர் போற்சென்(று)
ஒண்கடல் படிந்து பின்னர்
கடல்நிறம் பெற்று மேலாம்
கருணையாய்ப் பரந்து பாரின்
மடமையை நீக்க ஞான
மழையினைப் பொழிவ கொண்டல் 14

*ஆலி - மழை

வேறு

தெண்கடல் குடித் தருந்தவத் திண்மையால்ஓங்கிப்
பண்க லந்தசெந் தமிழ்தரும் அகத்தியர் பாற்சென்
றெண்க லந்தசீர் சொல்லிநீ ராட்டல்போல் எழிலி
மண்க வின்பெற வளமுற மழைநனி பெயுமால். 15

வேறு

பொருந்தெழிற் பொதிகை யென்னும்
புனிதமால் வரையின் கண்ணே
அருந்தவம் புரிவோர்க் கெய்தும்
அடுபசி தணிப்பான் வேண்டித்
திருந்துசெங் கனியும் மண்கிழ்த்
திகழ்கிழங் குகளும் நல்க
வருந்திரு வருளே போல
மழைமுகில் பொழிந்த தன்றே. 16

புல்லர்கைப் பொருளும் தூய புனிதர்பா லுறின்மா சின்றி
நல்லவாற் றினுக்கா தல்போல் உவரிநீர் நண்ணி வானின்
செல்லலாய் மாறிப் பாரிற் செறியுயிர் தேவர்க் கெல்லாம்
அல்லல்தீர் அமுத மாகி அருள்வளம் கொழித்த தன்றே. 17

ஒருவரும் முன்ன ரோதா ஒப்பில்செந் நெறியைக் கூறித்
திருவரு ளாட்சி செய்யப் போந்தருள் *செம்ம லிங்கே
வருவரென் றறிந்த மேகம் பொதிகைமால் வரையி லெங்கும்
மருவுமா சகற்றித் தூய்மை செய்தல்போல் மழைபெய் தன்றே. 18

பொறையினிற் சிறந்த மேலோர்
புகழினாற் பொலிவ ரென்னும்
மறைமொழி யுணர்த்தல் போலப்
பொறைநிகர் வரையின்மீது
நிறைபுன லாட்டிப் பூசை
நிகழ்த்திடு முகிலைக் கண்டால்
பொறையினைப் புவியோ ரெல்லாம்
பூண்டுய விழைவ ரன்றே. 19

---

*செம்மல் - குருநாதர்

அலகிலாச் செல்வ மீசன் அருளினுற் கிடைத்த போதில்
உலகினுக் குதவல் நன்றென் றுத்தமர் அளிக்கு மாபோல்
இலகுபல் லருவி யாக்கி எழில்மலை நீரை யெல்லாம்
உலகினுக் குதவி எல்லா உயிர்க்கும்நன் றுணர்த்து
மாலோ. 20

மழைசில காற்பெய் தாலும் மால்வரை பொய்த்தி டாமல்
உழைவரும் உலகி னோர்கட் கருவி நீர் உதவல் கண்டால்
விழைபவர்க் கென்று மீய வேண்டுமென் றறிஞர் கூறும்
பிழையில்நன் மொழியை நம்முன் பேசுதல் நிகர்க்கு
மாலோ. 21

திருவருட் சட்டமொன்றைச் சேகத்தினுக் குதவி யாளும்
பொருவரு கருணை சான்ற புண்ணிய முனிவ ரிங்கே
வருவரென் றியற்கைத் தாயே வரையினை யெழில்செய் தாற்போல்
அருவிகள் அலங்க லாக்கொண் டணிமலை பொலிந்த தன்றே. 22

சிகரமாம் கொங்கை தன்னிற்
செறியும்மே கக்கச் சார்த்துத்
தகவுசால் சுனையாம் கொப்பூழ்
தடநெடு வேய்த்தோள் கொண்ட
மிகுமெழிற் பொதிகை மங்கை
வியனரு விப்பால் சோரச்
சகமிசை பொருநை யென்னும்
தண்ணெழில் மகவை யீன்றாள். 23

மலையிடைப் பொழிந்த நீத்தம் அருவியாய் மண்மேற் போந்து
நிலைபெறும் உயிரை யெல்லாம் ஓம்பிட நீளா றாகி
அலைபுனற் பொருநை என்னும் அழகுசால் நாமம் தாங்கி
உலைவறப் பெருகும் பான்மை ஓதிடற் கெளிய தாமோ? 24

வேறு

மருவிய மலைபயில் வளம் சிறத்தலால்
திருவொடு கலையறம் செழிக்கச் செய்தலால்
பொருவரும் உயிர்களைப் புரக்கும் பான்மையால்
பொருநையும் மலைமகள் போல்வி ளங்குமால். 25

மதிதவழ் முடியினின் றிழிவ னப்பினல்
குதிகொள்வெண் தலைநுரை குளிர்ச்சி மிக்கதால்
பதிசிவன் முடியினின் றிழியும் பான்மைசால்
நதியெனும் கங்கையாம் பொருநை ஞாலமேல். 26

வேறு

ஏலம் ஜாதிக்காய் கோட்டம்*
இலவங்கம் நரந்தம் நாகம்
ஞாலமீ துள்ளோர் போற்றும்
சந்தனம் அகில் நறுந்தேன்
கோலமார் வேங்கை கோங்கு
கொடிச்சியர் இடிக்கும் சுண்ணம்
ஏலவே கொண்டு சூழ்நீர்
இயல்மணத் துடனே செல்லும். 27

தயிரினைப் பாலை வெண்ணெய் நெய்யினைத் தாங்கி யுண்டும்
வயினுறு மருத மாதி மரங்களை முறித்துக் கொண்டும்
இயலெழில் ஆயர் மாதர் துகில்களை எடுத்துக் கொண்டும்
நயனுற வருநீர் வேணு நாதனை நிகர்த்த தன்றே. 28

வேறு

புதுமலர் சூடிப் பூந்துகி லணிந்து
பொலிவுறு தனத்தொடும் சாந்தப்
புதுமணம் பொங்க மணிமருங் கசையப்
புன்னகை முத்தமே காட்ட
மதுமலர் களிற்சூழ் வண்டினம் சிலம்பின்
வளரொலி காட்டிட வனப்பார்
புதுமணப் பெண்போல் பொருநையாம் நதியும்
போந்தது பேரெழி லுடனே. 29

அரவுமிழ் மணியும் வேய்நல் கணிமுத்தும் ஆனைக் கோடும்
விரவுசெம் பொன்னும் வாசம் வீசுசந் தகிலும் தாங்கி
வருபுனல் வணிகர் மானும்; வயங்கிடும் ஆனை சேனை
வருதல்போல் வருநீர் ஆழி மேற்பொர வருதல் மானும். 30

---

*குராமரம்

மதகின்நற் கதவை முட்டி மள்ளர்ஆர்ப் போடும் சூழ்ந்து
நுதலணி யோடை பொங்க நுகர்சுரும் பீட்டம் சூழத்
துதைமணி யோசை யோடு துன்னிய மருதந் தன்னில்
மதமழை யானை போல மாநதி நுழைந்த தன்றே. 31

பொருநையாம் நங்கை செல்லும் போதிரு புடையும் மேவும்
நிருமலன் கோயில் தோறும் நீள்புன லாட்டித் தூய
மருமலர் தூவித் தீபம் மணியொளி காட்டிச் செந்தேன்
விரவிய கனிக ளூட்டி விழைந்துபூ சனைசெய் தேகும். 32

மலையினிற் பிறந்து போந்து மாகடல் கலக்கும் நன்னீர்
கலைகளால் மறைகள் தம்மால் காணொணு இறைவன் ஒன்ருய்
நிலைபெறு பொருளாய் நின்று நிறைகரு ணையினுற் பின்னர்
எலையில்பல் சமயந் தோறும் இலங்கல்போல்
பரந்ததன்றே. 33

எண்ணிலாக் கலைகள் போல எங்கும்கால் கொண்ட வெள்ளம்
நண்ணிநல் லேரி கண்மாய் குளம்பல நாடி யோடித்
தண்ணியல் சோலை நன்செய் பழனம்நந் தவனம் பாய்ந்து
புண்ணியர் உள்ளத் தன்பு போல்நனி நிரம்பிற் ருமால். 34

கடற்புன லாவி யாகிக் கருமுகி லாகி யிந்தப்
புடவியில் மழைநீ ராகிப் புகல்பல பேரு மெய்தல்
கடவுளைச் சமயத் தோர்கள் கணக்கிலா நாமரூபம்
கொடுகுறிப் பதையே யொக்கும் குவலயந் தன்னில்
மாதோ. 35

அருள்நிறை பெரியோர் சொன்ன அருமறை யனைத்தும் கூறும்
பொருள்நனி யுணர்ந்து தேருப் புல்லர்தம் உளத்தில் மேவும்
மருளெனக் கலங்கி, ஆசான் வழிநடந் துய்ந்தோர் உள்ளத்
தெருளெனப் பொருநை நீத்தம் தெளிந்துதண் வயலிற்
பாயும். 36

அரவுமிழ் மணியும் முத்தும் வைரமும் அழகாய்ப் பூட்டி
மருவுநன் மலர்கள் சூட்டி மருதமாம் கன்னிப் பெண்ணைப்
பொருவரும் அமுத மூட்டிப் புதுப்பைங்கூ ழுடைகள் சாத்திப்
பொருநையாம் செவிலி நன்று பொலிவுற வளர்க்கும்
மாதோ. 37

கமலம்நன் முகமா மாவின்
கவின்தளிர் நிறமா வாழை
நிமிரெழிற் குறங்காத் தெங்கின்
நீள்கனி முலையாச் சூழும்
ஞிமிறினம் குழலா வஞ்சி
நெகிழுஞ்சிற் றிடையாக் கொண்டங்(கு)
*அமையெனும் வேலிக் குள்ளே
அமைந்தெழில் வளர்த்த தாமால். 38

பலமலர் மாலை சூடிப் பால்நுரைப் போர்வை போர்த்தே
இலகுநற் பொதிகை தோன்றி மான்மதம் இனிய பூசிப்
பொலன்மணி யாரந் தாங்கிப் பொருநையாம் பாவை போந்து
நலமிகு மாழி யென்னும் நாயக னுடும் கூடிற்றே. 39

கூறுபல் பெருமை சான்ற குளிர்புனற் பொருநை யன்றித்
தேறுசெந் தமிழின் மேன்மை தெரிந்தெதிர் செல்ல உய்க்கும்
ஆறிறை யருளால் தோன்றி அருட்புனல் பெருக்கு வைகை
பேறெலாம் நிறைந்த பாண்டி நாட்டினிற் பிறங்கு மன்றே. 40

பூவுல கெனும்தாய் ஈன்ற புகழ்மிகும் பாண்டி நாடாம்
பாவையின் கழுத்தில் மின்னும் பருமணி மாலை போல
மேவிய பொருநை யாறும் வைகையும் மிளிரல் கண்டு
தேவர்நன் முனிவர் மாந்தர் யாவரும் போற்றி செய்வார். 41

இவ்விரு நதியும் பாயும் எழில்மிகு பாண்டி நாடே
இவ்வுல கினிலே முன்னர்த் தோன்றிய தென்பர் ஆன்றோர்
திவ்விய மொழியு ளெல்லாம் சிறந்ததிந் தமிழை யீந்தும்
செவ்விய தென்றல் தன்னை யீந்தும்பேர் சிறந்த தன்றே. 42

ஆக செய்யுள்-79

---

*அமை-மூங்கில்

## 2. திருநாட்டுப் படலம்

### விநாயகர் துதி

அருள்வளமும் பொருள்வளமும் கலைவளமும்
தொழில்வளமும் அமைந்து மேவி
இருளகற்றி ஒளிவிளக்கி எஞ்ஞான்றும்
இன்பவளம் உடைய தாகித்
தெருள்விளக்கும் தொல்பாண்டி நன்னாட்டின்
சிறப்பினிது செப்பற் கொண்கூர்
ஒருமருப்பும் இருசெவியும் முக்கணும்கொண்
டொளிர் முன்னோன் கழல் துதிப்பாம். 1

### குருநாதர் துதி

பாண்டிய நாடிப் பாரினுக் கருளும்
பண்புசால் பரிசெனத் தோன்றிப்
பாண்டிய நாட்டில் விளைந்திடும் தூய
பாங்குசால் தரளம்போற் பொலிந்து
பாண்டிய நாட்டில் பொற்புடன் விளங்கும்
பொதிகையில் தவத்தினிற் பழுத்துப்
பாண்டிய நாட்டிற் கோயில்கொண் டனந்த
உலகையாள் குருபதம் பணிவாம். 2

---

வேறு

அருட்பெரு நெறியை இந்த
அவனிக்கே யருளிப் பேணும்
தெருட்பெரு குருநா தன்தாள்
சிந்தையால் வணங்கிப் போற்றி
மருட்பகை கடிந்து மேலாம்
வளம்தர அவர் உதித்த
பொருட்பெறு பாண்டி நாட்டின்
சிறப்பினைப் புகல லுற்றும். 3

வேறு

முக்கணுடைச் சிவபெருமான் முத்தமிழை வளர்த்ததுவும்
மக்கள்தொழும் ஐஞ்சபையுள் மூன்றுசபை வாய்ந்ததுவும்
தக்கதென்றல் சந்தனமொண் தரளமிவை விளைவதுவும்
ஆய்க்க உய்க்க வாய்ப்புளதும் தொல்பாண்டி நாடாமால். 4

குன்றாநல் விளைபொருளும் கோடாநற் சான்றோரும்
பொன்றாநற் றிருவினரும் பொறைநிறையிற் சிறந்தோரும்
வென்றஐம் புலன்களையும் விழுத்தவம்செய் மேலோரும்
நன்றோங்கப் பாண்டியநன் னாடுசிறந் தோங்கிடுமால். 5

பலநாட்டுக் கும்துணைசெய்
பான்மையதாய் எஞ்ஞான்றும்
நலம்பலவும் பயப்பதுவாய்
ஞானவுணர் வளிப்பதுவாய்
வெலல்விழையும் பகையிலதாய்
விளைவுடைத்தாய்ப் பிணியிலதாய்
அலகில்பல வகைவளமும்
அமைந்தது பாண் டியநாடே. 6

மலைவளமும் நதிவளமும் வயல்வளமும் வனவளமும்
கலைவளமும் தொழில்வளமும் கடல்வளமும் உடல்வளமும்
நிலைவளமாய் விளங்குதலால் நீணிலத்தி லிந்நாடே
தலைவளம்சான் றதுவென்னச் சான்றோர்கள் நவிலுவரால். 7

உறுபசியில் லாதவரும் உடல்நலமிக் குடையவரும்
செறுபகையாம் ஆசையினைச் சினத்தைவென்ற சீரியரும்
அறுதியிதென் றறிந்தவரும் ஆண்மையரு ளுடையவரும்
உறுதிமிகப் பூண்டவரும் உறைவதுபாண் டியநாடே. 8

குறிஞ்சி

அந்நாட்டின் உயர்வெண்ணி ஆண்டவனே அவனியின்கண்
இந்நாடே சிறந்ததென எவர்க்குமறி விப்பதுபோல்
செந்நாவி னாற்பலரும் புகழஉயர் செழுமலைகள்
இந்நானி லத்தாயின் மகுடமென இருத்தினனால். 9

வேறு

இங்குள உயிர்கள் யாவும்
இனிதற நெறியே பேணிப்
பொங்குபல் பொருளு மீட்டிப்
போகங்கள் முறையாய்த் துய்த்துக்
கங்குல்நேர் மயலை வென்று
கடவுளின் கழல்கள் நாடி
மங்குலைக் கடந்து செல்லும்
ஏணியோ மலைகள் யாவும்! 10

ஆனையின் திரள்கள் ஓங்கும் அணிவரை மீது கூடிச்
சோனைநல் லருவி போல மதமழை சொரிந்(து)'ஓம்' என்றே
ஏனைபல் லுலகும் கேட்க இரைந்திடல் எண்ணில் வேதக்
கோனைநன் மறையா லேத்திக் கும்பிட உணர்த்தல் மானும்11

புலியரி கரடி யாதி விலங்குகள் புவியின் கண்ணே
பொலிவுறு வயல்கள் நீடு மருதத்தில் புகுந்து யார்க்கும்
நலிசெயல் தவறென் றெண்ணி நன்றுயர் வரையின் மாடே
வலியொடும் திரிந்து தங்கள் வாழ்வினை நடத்து மாலோ. 12

வேறு

மலைநெல்விளை நிலத்தினுக்கும் வண்கதலி வனத்தினுக்கும்
விலையில்பெரு மதகயத்தின் வெண்கோட்டு வேலியிட்டும்
குலைபடுபல் கனிகுவித்தும் குன்றமிசை யுறைகுறவர்
அலைகடலைப் போலார்த்தும் அகமகிழ்வி னொடுவாழ்வார். 13

வேறு

ஐவனம் விளைந்த போதில் அறுத்துநல் வீடு சேர்க்கக்
கைவளம் கொண்டு மாதர் சமைக்கத்தேன் கலந்து நன்றே
செய்வன யாவும் செய்து தினையிடி கனிகள் செந்தேன்
மொய்வளத் தோடும் வைத்தே முருகனை வணங்கு வாரால்.14

பண்கெழு குறிஞ்சி பாடித் தொண்டகப் பறைமுழக்கிப்
பெண்களும் ஆண்க ளோடு பிறங்குநற் சுனைநீ ராடி
மண்களி கொள்ள வீழும் அருவிநீர் மகிழ்வொ டாடி
விண்களி வெறியாட் டென்னும் விழாஎடுத் திடுவ ரன்றே. 15

சந்தனம் தேக்கு மூங்கில் கொடுநனி சமைத்த வீட்டில்
அந்தமில் மகிழ்வினோடும் அவணுறை குறவர் கானோர்
கந்தமார் குறிஞ்சி வேங்கை காந்தட்பூத்தொடுத்துச் சூட்டிக்
கந்தனைத் தினைமாச் செந்தேன் கனிபடைத் தேத்தி
வாழ்வார். 16

வேறு

ஆர்த்திகொள் வேடப் பெண்களி னோடும்
ஆண்களும் அழகுறக் கூடி
நேர்த்திகொள் குரவைக் கூத்திடும் போதில்
நிகரில்மெய்ஞ் ஞானமே உருக்கொள்

மூர்த்தியாம் முருகன் அவரொடும் கலந்தே
கூத்திடல் முனிவர்கள் காண்பார்
சீர்த்திகொள் அந்தச் சிலம்புமாண் பிணையாம்
செப்புதல் எளிதுகொல் ஜெகத்தே? 17

மலைப்பசுக் கூட்டம் கூடி
மடுவெனப் பாலைச் சிந்தக்
கொலைத்தொழில் வேடர் தங்கள்
குழந்தைகள் அருந்தி யாடும்
புலிக்குரு ளையின்பேழ் வாயுட்
புன்கையிட் டார்ப்பச் செய்யும்
கலிக்கும்பன் மணிச்ச தங்கை
கட்டிக்கூத் தாடு மாலோ. 18

விண்ணினைக் காக்கும் வேலோன்
விழைந்தபோ தெங்கள் தாயாம்
வண்ணப்பைங் கிளியே போன்ற
வள்ளியை யீந்தோ மென்பார்
கண்ணினை இறைவர்க் கீந்த
கண்ணப்பர் குலம்யா மென்பார்
உண்ணும்வூ னுணவிற் செந்தேன்
உவப்பொடு கலந்துட் கொள்வார். 19

வேறு

தேனடையிற் கணைபாய்ச்சித்
தேனருந்தும் வேடர்கள்கைக்
கூனல்விலைக் கூர்ங்கணையைக்
கண்டச்சம் கொண்டு கொண்மூ
ஏனல்விளை குன்றின்மிசை
இனிதுமழை பெயும்; நாகம்
ஞானநிகர் மணியுதிர்க்கும்;
மூங்கில்முத்தம் நனியுதிர்க்கும். 20

குறக்குல மகளிர் கூடிக்
கொய்தபன் னிறப்பூக் கொட்டிச்
சிறப்புறத் தொடுத்துச் சூடிச்
செல்வர்அக் குன்றின் மாடே

நிறப்பொலி வுடைய தாது
நிறைந்துசெங் கதிர்தோன் றுங்கால்
சிறப்புடைப் பலவண் ணங்கள்
தீட்டிய கோலம் மானும். 21

வேறு

சித்தமதை நன்றடக்கிச் சிவயோகம் புரியும்
மெய்த்தவரும் யோகியரும் முனிவரரும் மிகும்பல்
சித்திவல சித்தர்களும் செறிந்துகுகை களின்கண்
நித்தனடி யுளத்தமைத்து நீள்தவம் செய்திடுவார். 22

பழுத்தஉளத் தொடும்தவம்செய் பான்மைய ரெப்போது
விழிப்பர் கொலோ நல்லுணவு விழைவர்கொலோ என்று
செழித்தகனி தினைமாவும் செந்தேனும் கொண்டே
பழிப்பில்குற மகளிரெதிர் பார்த்திருப்பர் தினமும். 23

பாலை

சந்தனமரங்கள் சூழும் தடவரை யகத்தே வாழும்
கந்தனைப்பிரிந்து செல்லும் கருத்திலாக் கருணைத் தாயாம்
அந்தரி துர்க்கை யம்மை அருகுள பாலை தன்னில்
வந்தமர் செயலா ளானுள் வையமும் வானும் வாழ்த்த. 24

சுரமெனும் பாலை தன்னில் சூழ்வெயி லினைத்தாங் காமல்
தரமிகு கிணறும் தண்ணீர் வற்றிக்கீழ்த் தரையைக் காட்டும்
உரமிகு தோளார் தம்மோ டுடியே பிரிந்த பெண்கள்
கரமிசை புறவைக் கொண்டு கடுகிவா எனச்சொல்
கென்பார். 25

பகலவன் வெயிலின் சூட்டைப் பாருளோர் தாங்கி னுலும்
பகல்வெயிற் சூடு பட்ட பாலையாம் நிலத்தில் யாரும்
அகலடி வைத்தற் கொல்லா தஃதுபோல் குருவின் ஆற்றல்
பகவனின் ஆற்றல் தன்னில் மிக்கதாம் பகருங் காலே. 26

மணியுடை நாக மொன்று மாநிலக் கமரின்கண்ணே
மணியினை யுதிர்க்க அந்த மணியொளி வானை நோக்க
அணிதிகழ் காம்புபோலும் அகல்விசும் பாம்கு டைக்கே
திணிவெயில் தாங்காப் பாம்பின் செயல்நமை வியக்கச்
செய்யும். 27

நடைதளர் பிடியொ டானை நண்ணிநீ ரருந்துங் காலை
பிடியருந் தட்டு மென்னக் குடித்தல்போல் பிறங்க அந்தப்
பிடிகளி றருந்தற் காகப் பெரிதும்காத் திருக்கும் அன்பால்
குடிதணீர் சிறிதே யுள்ள தாதலாற் கூற லென்னே. 28

நாயின்நீள் நாவி னின்று வடிபுனல் நன்னீ ரென்று
பாய்முயற் குருளை நக்கும் பகல்வெயில் தாங்காப் பெண்டிர்
வாயினீர் உலரும் போதில் வார்விழி நீரைக் கொட்டும்
ஆயஅப் பாலை வெம்மை ஆர்பொறுத் திடவல் லாரே. 29

கானலை நீரென் றெண்ணிக் கடுகியே நடந்த மாக்கள்
கானலைக் கண்டு சோர்ந்து கவலைமிக் கெய்தி மீளும்
பானுவின் வெயிலுக் காற்றுப் பறவைகள் எருமை செந்நாய்
ஊனுடல் வற்றிச் சோர்வுற் றுணவினைத் தேடிச் செல்லும். 30

போர்செயும் திறமை மிக்க மறவர்கள் பொருந்தி வாழ்வர்
கார்புரை மேனி துர்க்கை களிகொளக் குராப்பூச் சாத்திப்
பேர்பல கொளும்பண் டங்கள் பிரியமாய்ப் படைப்பர் ஓசை
சேர்துடி முழக்கிப் பாடிச் சிந்தையில் மகிழ்வு கூர்வார். 31

முல்லை

மலைமிசை யுறைவே லோற்கு மாமனாய் மற்றைப் பாலை
நிலமிசை வாழ்துர்க் கைக்குத் தம்முனும் நெடுமால் வாழும்
நலமிகு முல்லை யென்னும் நன்னில வளமும் இந்தத்
தலமிசை பாண்டி நாட்டில் தழைந்துள தாகு மன்றே. 32

மயிலினம் நடனமாட மன்னிசை புறவம் பாட
வியன்முல்லை கோபமாதி வெண்ணகைச் செவ்வாய் காட்டப்
புயலினம் கொங்கை காட்டப் புல்லிடை மின்னல் காட்டப்
பயனமு தாட்டக் காராம் பருவநன் னங்கை வந்தாள். 33

அமுதமிவ் வவனி யோர்கட் கன்புட னளித்துப் பேணும்
சுமுகமார் பசுக்கூட்டத்தை மேய்த்துவாழ் தொழில்செய் ஆயர்
சமுகம்நன் றுறையும் முல்லை தழைவள முடைய தாகும்
அமுதநேர் மழையு மாங்கே அழகுறப் பொழியுமாலோ. 34

சோளம்செந் துவரை சாமை தூவியே விளைவு செய்வார்
கோளுறு வரகும் ஏனைக் கூலமும் அறுவை செய்வார்
நாளும்நல் விருந்தை யோம்பி நனிமகிழ் வோடும் வாழ்வார்
நீளுமா மரங்கள் சூழ்ந்த முல்லைநன் னிலத்து மாந்தர். 35

வேறு

அமரர் முனிவர் தீர்த்தங்கள்
அங்கந்தோறும் உடைமையினால்
விமல னாரும் அடியவரும்
விழைவுற் றணியும் நீறளித்துச்
சமயங் காக்கும் தகைமையினால்
தரைமேல் வாழ்வோர் அனைவருக்கும்
அமுத மூட்டும் பான்மையினால்
அளவில் பெருமைத் தானினங்கள். 36

வேறு

பசுக்குலம் கழுத்திற் பூண்ட பருமணி அசைய வாயை
அசைத்துப்பைம் புல்லும் நீரும் அருந்துதல் கண்டால் உள்ளே
வசிக்கும்நற் றேவர்பூசை கொள்கையில் மணியொன்றன்போ
டசைத்திடல் உண்டென் றுயர் அணிவித்த தொக்கும்
மாதோ. 37

புல்லொடு நீருட் கொண்டு பொலிவுறு பசுக்கள் நாளும்
நல்லபா லமுதம் நல்கல் நம்பன்பச் சிலைநீ ரேற்றங்(கு)
ஒல்லையிற் பேர ருள்செய் தொப்பிலாப் போக மூட்டும்
எல்லையில் உண்மை பூமிக் கினிதுணர்த் திடுதல் மானும். 38

தம்மொழி போன்று பாலும் தண்ணமு தப்பேர் தாங்கல்
சம்மதி யாத பெண்டிர் தணலிடை வைத்துக் காய்ச்சிச்
செம்மைசால் பெயரை மாற்றித் தீந்தயி ராக்கிப் பின்னும்
கொம்மைகொள் நீண்ட மத்தைக் கொடுகடைந் திடுவர்
மாதோ. 39

தூய்மைசால் பாலே போன்ற உளமுடைத் தூய மாந்தர்
வாய்மைநற் சீலம் ஞானம் மாண்தவ மென்னும் தீயால்
தூய்மைமீ தூர்ந்தீ சன்தாள் தோய்ந்துபக் குவமிக் கெய்தி
ஓமென ஒலித்தல் போலக் கடைபடு தயிர் ஒலிக்கும். 40

பன்னிற மலர்ச்சும் மாட்டில் பயில்தயிர்ப் பானை மீது
நன்னெய்கொண் டினிதுசெல்லும் நங்கையர் மருதம் சார்ந்து
பொன்னினை நெய்க்குக் கொண்டும் பழுக்கிய அரிசி யாதி
நன்னயத் தயிர்க்குக் கொண்டும் நகைமுகத் தோடும்
மீள்வார். 41

கொன்றைநற் பிடவம் காயா குருந்தொடு மணமார் முல்லை
என்றிவை தொடுத்துச் சூடும் எழில்மிகு பெண்கள் ஆண்கள்
ஒன்றிநின் றுடல் கண்டே உயரு ளோடும் கண்ணன்
நன்றவ ரோடும் கூடி நடனமாற் றிடுவன் மன்னே. 42

மருதம்

முல்லையில் மாலோன் தங்கல் முனிவர் வலாரி நோக்கி
எல்லையில் அசுரர் தம்மை வீட்டியின் னரசு நல்க
ஒல்லையில் உபேந்த்ர னய்மால் உதவிய தெண்ணி மாடே
இல்லையென் றுமல் ஈயும் எழில்மரு தத்துட் சூழும். 43

சூழுமிந் திரன்த னார்தி யாம்முகில் களைக்கூஉய்ச் சொல்லும்
ஏழுலகினுமிந் நாடே இனிதென எவரும் போற்றக்
கூழுடன் செல்வ மெல்லாம் கூடிடப் பொழிமின் என்ன
ஏழெனும் முகிலும் மாரி இனிதுபெய் திடுவ மாலோ. 44

அளவில்நல் லெழில்சால் வெண்ணெ லரிசியைப் பாலிற்
பெய்து
*குளமொடே லம்ஜா திக்காய் ஆதிய மணமும் கூட்டித்
தளதள வெனநெய் பெய்து தாழ்விலா வளங்கள் எல்லாம்
உளமகிழ் வோடு நல்கும் சுரேசனுக் கூட்டி வாழ்வார். 45

கடிகமழ் குவளை யோடும் கவின்மிகும் அறுகு கொண்டு
கொடியினில் தொடுத்துச் சூடிக் கூடிமங் கலப்பண் பாடிப்
பொடியெனும் நீறு நெற்றி புனைந்தெரு துங்கும் பூசி
விடியலிற் †போகி சீரை விளம்பியோர் பூட்டு வார்கள். 46

கற்புரை மனத்தை ஞானக் கலப்பையால் ஆர்வ நீரால்
பொற்புறச் செய்க வென்றே புவியினுக் குணர்த்தல் போல
நெற்பயிர் விளைத்தற் குள்ள நிலத்தைநன் றுழுது மள்ளர்
அற்புதத் தண்ணீர் பாய்ச்சி அகன்நிலம் சமன்செய்
கிற்பார். 47

*குளம்-வெல்லம். †போகி-இந்திரன்

பக்குவம் செய்யப் பெற்ற பாங்குசால் உளத்தின் கண்ணே
மிக்குறும் அன்பாம் தூய விதையினை விதைத்தல் போலப்
பக்குவம் செய்யப் பெற்ற பாங்குசால் நிலத்தின் கண்ணே
மிக்குறும் தூய செந்நெல் விதைப்பர்நல் வேளாண் மக்கள். 48

தக்கவர் சூழல் என்னும் தரமிகும் உரமும் இட்டு
மிக்கநன் றோம்பல் போல மேவு நல் லூரத்தைத் தூவித்
தக்கவா றோம்பும்போதில் தருக்குறு பக்தி போலத்
தொக்கசெந் நெலும்த ருக்கி முளைத்தவன் துலங்கும்
மாதோ- 49

அமயநன் கறிந்தந் நாற்றை அடியொடு பிடுங்கிப் பாங்கர்
சமநிலை யாக உள்ள தன்மைசால் சேற்றி லூன்றல்
மமதையே றிய நெஞ் சுக்கு மற்றொரு சூழல் தந்தே
அமைவுறச் செய்து பேணல் அவனியோர்க் குணர்த்தல்
மானும். 50

தூயதோர் சூழல் புக்குச் சோர்வுதீர்ந் தமையுங் காலை
மேயமெய் யார்வ நீரை மேலும் நன் றுகப் பாய்ச்சி
ஆயநல் வேலி கோலி ஆடுமா டாதி தீமை
தாயநற் பயிரைச் சாடா வணம்நனி தடுத்துக் காப்பார். 51

காமமோ கம்கோ பம்பொய் களைகளங் கெழுதல் போலத்
தாமரை குவளை யாதி தோன்றிடத் தகாதீங் கென்று
சேமமார் அருளாம் செந்நெல் செம்மையாய் விளைப்போர்
போலத்
தாமரை குவளை யாதி களைகளைத் தகைதல் செய்வார். 52

கட்பகை குவளை யென்பார் கமலம்எம் முகத்துக் கென்றும்
உட்பகை என்பார் வேரோ டெனகழ்ந் தெறிதல் செய்வார்
பெட்புடைச் செந்நெல் நம்மைப் பேணியே வளர்க்கும்
என்பார்
நட்புற வோதி யாங்கே களைபறி நங்கை நல்லார். 53

வனசம்நற் குவளை யாதி வரப்பினில் வாடி யேங்க
இனவரி வண்டங் குள்ளே மலர்களில் இருக்கு மென்றும்
நனையுட லோடு மூரும் நத்தைக ளோடு நண்டின்
இனமிருந் திறக்கு மென்றும் ஏகஅஞ் சுவராம் மேலோர். 54

மேன்மைசால் எருவும் நீரும் மேலும்மே லும்சேர்த் தொப்பில்
பான்மையாற் காவல் செய்து பண்புறப் பேணும் காலை
வான்மகிழ் கொள்ள மண்ணும் மகிழ்வுற அருள்போற்
செந்நெல்
கோன்மகிழ் கொளவி ளைந்து குனிந்துமண் நோக்கு மாலோ 55

பண்புசால் உளத்தி னோர்கள் பக்தரைக் கண்ட காலை
நண்புசான் றவர்சி ரந்னி ஞாலமேற் பணிதல் போல
வண்புலம் விளைந்த செந்நெற் கதிர்நிறை மண்மேற்சாயக்
கண்புலம் கொண்டு கண்ட உழவர்கள் களிப்புக்
கொள்வார். 56

பத்தியிற் சிறந்த மேலோர் பார்மிசை வாடா வண்ணம்
மெய்த்திரு வடியிற் சேர்க்க விமானத்தி லிறையுய்த்
தாற்போல்
மெத்திய செந்நெல் கொய்து வண்டியின் மீதே யேற்றி
வித்திய உழவர் நன்றே வீட்டினிற் சேர்ப்பர் மாதோ. 57

ஆநிரை யிருக்கும் பாங்கர் அமிதமாம் வைக்கோல் சேர்ப்பர்
தூநலம்புரியும் நெல்லைத் தோமிலா வீட்டுட் சேர்ப்பர்
பாநலம் தெரித்துப் பாடும் பாவலர் முதியோர் அன்பர்
மீநிலத் தேவர் யார்க்கும் ஊட்டிநல் விருந்தோ டுண்பார் 58

வேறு

ஏருழுதும் உழவோருக் கினிதுதவி பலபுரிந்தும்
சீருறவே உழைத்திடும்ஆ னெருதுசெந்நெல் நமக்கீந்து
போரிலுறு வைக்கோலும் புல்லுமுண்டு வாழ்ந்திடுதல்
தாரணிக்குப் பெரிதுதவும்சான்றோரை நிகர்த்திடுமால். 59

காலையினிற் கண் விழித்துக் கருத்தனைப்பா டிடு மொலியும்
வேலைதொடங் குங்காலை விழைந்து செயும் துதியொலியும்
ஆலயத்தின் மணி யொலியும் அருமறைக ளோதொலியும்
சோலைகளிற் பறவையினம் செயுமொலியும் சூழ்வுறு மால் 60

நாளும்விருந் தோம்புமன்பர் நவிலொலியும் நெய்சொரிந்து
மூளும்அன லோம்பிமறை முதுமறையோர் முழக்கொலியும்
நீளும்அடி யவர்கள்மனை நிகழ்பூசை களின்ஒலியும்
ஆளுமர சாணைவழி யறைபறையி னொலியுமங்கண். 61

மேழிச் செல்வமும் மெய்யன்பர் பாடிடும்
ஏழி சையமு தென்னும்நற் செல்வமும்
வாழி ஆன்றவர் வாழ்த்தும் ஒழுக்கமும்
யூழி யர்தமிழ் நாட்டிற் பொலியுமால். 62

வேறு

தேவர்குழு வாழ்த்தவமை திருக்கோயில் பலஉளவால்
பாவலர்கள் போற்றவமை படிப்பகங்கள் பலஉளவால்
நாவலர்கள் நயக்கஇசை நலம்பயிற்று மிடம்பலவால்
பூவுலகில் விளைவுறுபல் பொருளும்விற்கு மிடம்பலவால். 63

அவம்நீக்கித் தவம்புரியும் அருஞ்செயலோர்க் குதவிடுவார்
சிவநேயச் செல்வர்கட்குத் தினம்பூசைக் குதவிடுவார்
பவம்நீக்கும் பண்புடையார் பதம்போற்றி யுதவிடுவார்
யுவரோடு முதியர்சிறுர் உவந்துறையும் பதிபலவால். 64

திருத்தலங்கள்

தொன்மை சான்றநற் பாண்டிய நாட்டினில் தூய்மை
நன்மை செய்சிவத் தலங்களும் நாரணன் தலமும்
வன்மை சான்றவிக் னேச்சுரன் வடிநெடு வேலோன்
நன்ம கிழ்வொடும் நண்ணிவாழ் தலங்களும் பலவால். 65

சைவத் திருத்தலங்கள்

அம்புவிச்சுனே அறுபத்து நால்விளை யாடல்
நம்ப னுடவும் நாயகி அங்கயற் கண்ணி
உம்பர் போற்றிட வந்துகோ லோச்சவும் முருகோன்
இம்பர் உக்கிர பாண்டிய னென்னமே விடவும். 66

வாத வூர்முனி சம்பந்தர் வாக்கின்நல் லீசர்
தீதி லாத்திருப் புகழ்முனி யாதிய சீலர்
கோதி லாமணி வார்த்தைதே வாரம் சந் தங்கொண்(டு)
ஓதி யேத்தவும் உடைய நல் ஆலவாய் உளதால். 67

வேறு

உயிரனைத்தும் உண்மையின்ப வாழ்வாற்றிக்
கரையேற உயர்ந்த ஞானப்
பயிர்வளர்க்க அவதரித்த இருடிகள்க்
குருநாதர் படர்ந்த போதில்

உயர்முறையில் வரவேற்றுத் தளிகாட்டி
ஒப்பில்கதி ஊற்று காட்டிப்
பயனருளும் பரிபூர்ணர் உருக்காட்டித்
தவம்காட்டும் பதியிஃ தாமால். 68

வேறு

அடர்ந்த நம்பிக்கை யுள்ளசோ மாந்தகர்க் காக
இடந்த னில்திகழ் ஆப்பினில் இடபபு ரீசர்
திடம்ப டத்தரி சனந்தரு திருவாப்ப னூரின்
நடந்த நற்செயல் யாவர்க்கும் அதிசயம் நல்கும். 69

சைவ வேதிய ராகிய அர்ச்சகர் சமைக்கப்
பெய்வ தாகிய வைகையின் மணலையப் பெரியோர்
உய்வ ரென்றன்ன மாக்கிய ஒப்பிலாப் பரமன்
மெய்வி ளக்கிடும் அன்னவி நோதனுய்த் திகழ்வான். 70

முருகவேள் தெய்வ யானையை முதல்மணந் ததுவும்
முருக வேள்படை வீடிரு மூன்றினுள் முதலும்
பரசி வன்பரங் கிரியிறை யாவுடைப் பரையோ(டு)
உருகு பக்தர்கள் தொழுஒளிர் வதும்பரங் குன்றம். 71

ஞான சம்பந்தர் பாவுடை நற்றமிழ் ஏட்டை
ஊன மின்றியே எதிர்செல வைகைநன் றுய்த்த
தேன லம்பொலி சீர்த்திரு வேடகம் சேர்ந்து
வான கம்பயில் தேவரும் வாழ்த்தியின் புறுவார். 72

நாக ராஜன்ம கோதர முனியிவர் வழுத்தும்
ஏக நாயகர் குயிலமிர் தம்மையோ டிலக
மாக நீள்கொடுங் குன்றின்மேல் மயிலவன் இலகப்
போகம் போதமீந் தருள்பிரான் மலையவண் பொலியும். 73

கொன்றை மாமர மாகிநற் குடிலைபூ சிக்க
நன்று கௌரிதான் டவத்தினை நாயகி காண
என்றும் செல்வம்நல் கிடுந்திரு ஏத்தியே வழுத்த
மன்று ளாரமர் திருப்புத்தூர் வளமொடங் கொளிரும். 74

வேறு

பாண்டியநன் னாட்டிலுயர் பதினான்கு சிவத்தலமும்
ஈண்டிருப்ப தெனப்புகழும் ஏற்றமிக வுடையதுவாய்
ஈண்டுமறை யீரிரண்டும் இனிதேத்தும் பழம்பதியாய்
நீண்டசர்ப்ப நதியுடைத்தாய் நிலவிடுமாம் புனவாயில். 75

வேறு

இலங்கையர் கோனை வென்ற இராமர்பூ சித்தற் காக
நலங்கெழு சீதை யம்மை நன்றுதா பித்த மூர்த்தி
இலங்கிரா மேச்சு ரப்பேர் எழில்திகழ் கோயில் கொண்ட
தலம்பல தீர்த்தத்தோடும் தழைந்தருள் பொழியும்
அங்கண். 76

ஆதவன் பூசை செய்த ஆதிரத் னேச ரோடும்
கோதில்அன் பாயி யம்மை குலவிடும் பெரிய கோயில்
நீதகன் றன்பி னோடு வாருணி பூசை செய்த (து)
ஈதெனும் திருவா டானை எழிலுற விளங்கு மாலோ. 77

நம்பியா ரூரர் தம்மை நலங்கெழு சேர மானை
எம்பினர் வருக வென்றே அழைத்துச்சென் றினிய காட்சி
நம்பனார் அருள்கா னப்போ நன்றுவெள் ளானை போற்றி
இம்பரிற் சாபந் தீர்ந்த இனியநற் றலமாய் வைகும். 78

வேறு

பொன்னனையாள் எனும்நடனப் பூவைக்காகப்
புனிதசித்த ரெனுமுருவிற் சிவனேபோந்து
நன்னயஞ்சால் ரசவாதம் செய்துபொன்னால்
நம்பனுரு வமைத்திடச்செய் திட்டபாங்கும்
அன்னமிவர் அயன்பூசை புரிந்தபாங்கும்
அடற்சேரர் சோழரொடு தென்னரென்னும்
மன்னர்வணங் கிடுபாங்கு முடையபுட்ப
வனகாசிப் பூவனமும் மன்னும்மாதோ. 79

பரமசிவன் தன்னைமணம் புரியவேண்டிப்
பார்வதியெம் அனைபூசை புரிந்ததாயும்
உரமிகுஞ் சதானந்த முனிவராதி
உயர்முனிவர் பலர் பூசை புரிந்ததாயும்

திருமேனி நாதர் துணை மாலையம்மை
திகழ்தலமா யுங்கவ்வைக் கடலாம்தீர்த்தத்
தரமிகுநீ ருளதாயும் நாவலூரர்
தமிழுடைய தாயும்திருச் சுழியல்வைகும். 80

வேறு

புவனியுண்ட திருமாலோன் குறுமுனிக்கா
இலிங்கவுருப் பூண்ட தாயும்
சிவன்நடன மாடுசபை யைந்திலொன்றும்
சித்ரசபை யுடைய தாயும்
பவம்தவிர்த்து நலனருள்சித் ராநதியாம்
அருவிகுறும் பலாவி ருட்சம்
தவவிளைவு தருமுயர்வா நியதிகழ் குற்
றாலம்அவண் தழைந்து மன்னும். 81

இருடிநகர்த் திருமுனிவர் இத்தலத்திற்
கெய்துகையில் இயற்கை காட்டி
வருதிரேன அருகழைத்துத் தளிகாட்டி
மாதவம்செய் குகையும் காட்டிப்
பருதியெழு முனரெழுந்து நீராடப்
பருகநன்னீ ரருவி காட்டிக்
கருதிவந்த தவமுடியக் கருணைநெறி
காட்டிவைத்த தலமிஃ தாமால். 82

இலஞ்சியெனத் திருப்புகழ்பெற் றெழில்வேலோன்
இலகுதிருக் கோயி லோடும்
நலஞ்செய்திருத் தலமும்உயர் மலைச்சுனையின்
நற்கரையில் கன்னி மார்கள்
இலங்குதிருக் கோயில்உச்சிப் பிள்ளையார்
கோயிலொடும் இனிது செவ்வேள்
தலம்திகழும் திருமலையும் தமிழ்வளமும்
அருள்வளமும் தழைய ஓங்கும். 83

வேறு

அந்தணர் வேத சர்மா அன்பொடே உலர்த்தும் நெல்லை
வந்துநல் வெள்ளம் கொண்டு போகொணு வண்ணம் காக்க
முந்துநல் வேலி கட்டும் முதல்வர்நான் மறையாம் மூங்கில்
தந்தவேய் முத்த நாதர் தழைதலம் திருநெல் வேலி. 84

தாருகா வனவி சேடம் நடந்தநித் தலமா மென்பர்
கோரிய வரங்கள் நல்கும் குழகனூர் சபையோ ரைந்துள்
நேரிய தாம்ப்ரம் மேய சபையிவண் நிலவும் தேவி
சீர்கொள்பொற் ருமை ரைத்தண் தீர்த்தத்துக் கருகில்
வாழ்வாள். 85

இறப்பிலி யினைமால் வேதன் குறுமுனி ஏத்தி மூழ்கும்
சிறப்புடைப் பொருநை யென்னும் திருநதி திகழு மிங்ஙன்
மறப்பெருஞ் செயலாற் கைலை மலையினை இலங்கை வேந்தன்
திறத்தொடும் எடுத்தல் போன்று திகழ்விமா னமுமொன்
றுண்டாம். 86

வைணவத் திருப்பதிகள்

சந்தன விருட்சம் குன்றில் தவழ்சிலம் பாறு தீர்த்தம்
சுந்தர வல்லி நங்கை சோமசுந் தரவி மானம்
சந்தனத் துவஜ வேந்தன் தருமதே வதைகண் டேத்தும்
அந்தமார் நின்ற கோலத் தழகர் வாழ் தலமுண் டங்கண். 87

தேவர்கோ மான்க தம்பத் திருப்பெயர் முனிவன் ஏத்தத்
தேவபுஷ் கரிணிப் பாங்கர் திருமகள் நங்கை யோடும்
யாவரும் போற்று ஸௌம்ய நாரணன்* ஐங்கோ லத்தில்
மேவுநற்றலமாம் அங்கண் மிளிர்திருக் கோட்டியூரே. 88

சத்திய கிரியின் பாங்கர் சத்திய தீர்த்தத் தாடி
சத்திய கிரிவி மானம் தழைபலாத் தருக்கண் டேத்தும்
சத்தியத் தேவ தைகள் தமுனுய வந்தா ளோடும்
நித்தியன் நின்ற கோலம் நிலவுமாம் திருமெய் யத்துள். 89

தசரத ராமன் முன்னர் சமுத்திர ராஜ னுக்கே
இசைவரம் தந்த தான எழில்மிகு திருப்புல் லாணி
விசைகெழு தெய்வ வில்லர் விளங்குவில் நங்கை யோடும்
அசுவத்த விருட்சம் ஹேம தீர்த்தத்தோ டமையு மங்கண். 90

அன்னநாயகியி னேடும் அநந்தநா யகியினேடும்
மன்னெழில் தேவ சந்த்ர மாநத்தில் தண்கா லப்பன்
மின்னென நின்ற கோலம் விளங்கிடச் சல்ய மாறன்
நன்னயப் பலிஸ்ரீ வல்ல பனுக்கருள் நயந்தா னங்கண். 91

---

*ஐங்கோலம்-நின்ற, இருந்த, நடந்த, கிடந்த, கூத்தாடிய திருக்கோலம்.

அழகிய காள மேகன் அஜருத்ரேந் ராதி யோர்கட்(கு)
அழகிய மேகவல்லி அணிதிகழ் மோகூர் வல்லி
எழில்கொள்கே தகிவி மானம் இனியக்ஷீ ராப்தி யோடும்
விழுமிய நின்ற கோலம் விளக்கினன் திருமோகூரில். 92

பிருகுநற் சௌன காதி முனிபெரி யாழ்வார் போற்ற
மரகத வல்லி நங்கை வகுளவல் லிப்பேர் நங்கை
வரகுண வல்லி நங்கை மதுரைவல் லிப்பேர் நங்கை
விரவிட விளங்கும் கூட லழகரே விடுவா ரங்கன். 93

பாவின்நன் மாலை பாடிப் பூவின்நன் மாலை சூடித்
தேவனுக் கீந்து தன்னைத் திருமணம் செய்து கொள்ளத்
தேவனை யழைத்த கோதை திருவவ தாரம் செய்த
ஸ்ரீவில்லி புத்தூர் விஷ்ணு சித்தர்சீர் விளக்கி யோங்கும். 94

வேறு

நம்மாழ்வார் அவதரித்த நற்றலமும் நான்முகவோன்
எம்மான்வண் சடகோபன் எனும்மதுர கவிகாண
அம்மால்நல் திருக்காட்சி அருள்தலமு மாய்அடைந்தோர்க்
கெம்மாலும் தவிர் குருகூர் எனும்பதியும் இலங்கிடுமால் 95

வேறு

இந்திரன் வருணன் வாயு ஏத்தர விந்த நேத்ரன்
அந்தமார் கருந்த டங்கண் ணம்மையோ டமர்ந்தும் நின்றும்
சந்தமார் வருண தீர்த்தம் தாமிர பரணி மாடே
சுந்தர மாயி லங்கும் தொலைவில்லி மங்க லத்துள். 96

தேவியர் ஸ்ரீபூ நீளை சேனைகோ கருடாழ் வாரோ
டேவிய கவரிப் பெண்கள் இனன்மதி இவர்கள் சூழ
தேவநா யகனும் பெம்மான் சிரீவர மங்கை தன்னில்
தேவர்கோ ப்ருகுமார்க் கண்டன் திசைமுகற் கருள்செய்
தோங்கும். 97

வருணநீர் நிருதி தீர்த்தம் மறைகளின் ஸார மாநம்
வருணன்நற் றரும ராஜன் நிருதிமுன் வந்து தோன்றும்
திருமகள் நாதன் மேவு திருப்புளிங் குடியென் றோதும்
ஒருதிருப் பதியும் அங்கே ஒளியொடு நிலாவு மாலோ. 98

மகரநீள் குழைகொள் காதன் வார்குழைக் காத வல்லி
நிகரிலா முகிலின் வண்ணன் நிமலமாம் சுக்ர தீர்த்தம்
புகர்அயன் ஈசா னன்முன் போந்தருட் காட்சி நல்கும்
புகழுடைப் பதியாய் நாளும் பொலிதிருப் பேரை யோங்கும். 99

இந்திரன் ப்ருதுமுன் தோன்றி இனிதருள் செய்த ஸ்ரீவை
குந்தவல் லித்தாய் ஸ்ரீவை குந்தநா தன்வாழ் ஸ்ரீவை
குந்தம் சந் திரவி மானம் குளிர்நதி பொருநை யோடும்
இந்தமா நாட்டி னூடே எழிலுறத் திகழு மாதோ. 100

விஜயவா ஸனமா லோடு மிளிர்வர குணவல் லித்தாய்
விஜயகோ டிப்பேர் மானம் விபுதநீர் அக்னி தீர்த்தம்
நிஜவுரு அக்னி காண நிமலன்வீற் றிருந்த கோலம்
பஜவெனும் சடகோ பன்சொல் வரகுண மங்கை மேவும். 101

குளந்தைவல் லித்தாயோடு கூடிய மாயக் கூத்தன்
குளம்பெறு தீர்த்தம் மாலோன் குழகுற நின்ற கோலம்
அளந்திடற் கரிய காட்சி ப்ருஹஸ்பதிக் கருளும் மாண்பும்
குளந்தையென் றெவரும் போற்றிக் கும்பிடும் பதிக்கண்
மேவும். 102

வேறு

நின்றிடும் நம்பி கிடந்திடும் நம்பி
இருந்திடும் நம்பி வைஷ்ணவ நம்பி
குன்றின் மேல் நம்பி பாற்கடல் நம்பி
குறுங்குடி வல்லி பாற்கட லாறு
நின்றநற் கோலம் சிவன்முனே தோற்றம்
நீள்பு கழ்த் திருக்குறுங்குடி தன்னில்
நன்றுமங் கையர் கோன்மழி சையர்கோன்
நம்மாழ் வார்விட்ணு சித்தர்பா டியுளார் 103

வேறு

வைத்தமா நிதியும் கோளூர் வல்லித்தா யாரும் தூய
சத்துடை தாம்ப்ர பர்ணி தகவுசால் குபேர தீர்த்தம்
வித்தகர் நம்மாழ் வார்ம துரகவி விநோத ரோடு
பத்திசெய் குபேரன் போற்றும் பதிதிருக் கோளூர் மேவும். 104

## நெய்தல்

ஓமெனும்நற் றிருமறையை ஓயாமல் ஓதுவதாய்
நாமமிகு பலபொருள்கள் நல்லுயிர்கட் கிருப்பிடமாய்
சேமமருள் வாணிபத்தைச் செயவுதவு கலமொடொளிர்
நேமியதை யடுத்திலகு நெய்தல்நில வளம்பகர்வாம். 105

எந்தஇடத் தினும்நிலவும் எவ்வுயிரும் இறையடியில்
சந்தமுறக் கலந்துபெயர் தனியுருநீத் தொன்றுதல்போல்
எந்தஇடத் தினுமுலவும் எந்நதியும் இக்கடலில்
வந்துகலந் துருநாமம் நீத்தொன்றி வயங்குமன்றே. 106

கலங்கள்பல செறிகடலின் கரையருகில் ஒதுங்குகின்ற
வலம்புரிச்சங் கின்தெய்விக மாண்புணர்ந்து புன்னைமரம்
நலம்சிறந்த தேனொழுகுபூ நனி சொரிந்தவ் வலம்புரிக்குத்
தலந்திகழும் வழிபாடு தான்செயல்போல்
தோன்றுமவண். 107

## வேறு

ஆயிரம் இப்பிகட் கரசி டம்புரி
ஆயிரம் இடம்புரிக் கிறைவ லம்புரி
ஆயிரம் வலம்புரிக் கிறைச லஞ்சலம்
ஆயிரம் சலஞ்சலம் பாஞ்ச சந்யமாம். 108

திரைசெய் முந்நீரிடை திகழும் சங்குகட் (கு)
அரைசெனப் பாஞ்சசந் நியம்அ மைந்திடும்
உரைசெயும் பெருஞ்சிற ப புடைத்திஃ தென்னவே
குரைகடல் நிறத்தரி கொளும்க ரத்தினே 109

## வேறு

ந.ரைதான் கொ.ண்டு வந்த நல்லதோரிரைபெ டைக்கே
சிருட ஹூட்டல் செய்யும் திகழ்பசும் புன்னை நீழல்
ஏருறும் அன்னக் கூட்டம் இளம்பெண்கள் நட,ந்தல் நோக்கின்
ஆரிவண் நடைகற் பிப்போர் எனச்சொலற் கரிதுமாதோ. 10[illegible]

வேறு

பழையவினை களையொழித்துப் புதியவினை பலப்பலவுள்
நுழையவிடும் உயிர்களைப்போல் நுவலரிய பலசரக்கும்
தழைபுவியில் இறக்கிவிட்டுச் சார்புதிய சரக்கேற்றிப்
பழையபடி செல்கலங்கள் பலதிகழும் அக்கடற்கண். 111

உப்பளங்கள் பலஅமைத்தங் குப்புவினை விப்போர்கள்
செப்பரிய பலதலங்கட் கேற்றுமதி செய்திடுவார்
துப்புமர கதம்தரளம் ஆதிமணி தொடுத்தணிவார்
எப்புவனங் களும்திரியும் எழில்மதிபோல் விளங்கிடுவார். 112

வேறு

மதிதவழ் மாட மீது மாமுகிற் குலங்கள் சூழும்
பொதிகளில் தரளம் சூழும் புரிசங்கின் இனங்கள் சூழும்
வதிநுளைச் சியர்தம் கூந்தல் மணமிகு தாழை சூழும்
அதிவிலை மணிகள் சூழும் அழகிய தெருவின் மாடே. 113

மதிதவழ் சடையோன் எங்கள் மாபெருங் குலத்த னாகி
அதிபல முடைய மீனை அகன்வலைப் படுத்தி மீட்டு
மதிமுக வமுதாம் எங்கள் மங்கையை மணந்தான் என்பார்
அதிபத்த நாய னார்எம் குலத்தர்என் பார்அம் மக்கள். 114

புண்ணிய காலந் தோறும் பூசுர ராதி மேலோர்
நண்ணியங் கடலுள் மூழ்கி நான்மறை முழக்கம் செய்வார்
எண்ணிய எண்ணி யாங்கே ஈந்தருள் இறைவன் தாளை
எண்ணிநன் றமர்ந்து நிட்டை யியற்றிமெய் யின்பத்
தாழ்வார். 115

உலகில்வா ழுயிர்கள் யாவும் உண்ணும்நல் லுணவுக்
கெல்லாம்
நலமிகு சுவையூட் டுப்பை நல்குநற் கடலீ தென்பார்
அலகில்பல் லுயிரும்வாழற் கருமழை பொழியு மேகம்
இலகுமிக் கடலிற் றேன்றும் என்றின்பமுறுவார்பல்லோர் 116

மாயவன் மணந்த செல்வ மகள்கடற் பிறந்தா ளென்பார்
மாயவன் பள்ளி கொண்டு மகிழ்வதிக் கடற்கண் என்பார்
ஆயநல் லமுதை வானோர் அடைந்ததும் கடலால் என்பார்
தூயஆ சமன மாகும் தொல்குறு முனிக்கென் பாரால். 117

துன்னுபல் கோடி யண்டத் தொகைகளை உயிர்கள் தம்மை
மன்னுபே ரருளா லின்று வளர்த்தரு ளமுத மூட்டும்
அன்னையைக் கன்னி யென்ன அருமறை போற்றல் செய்யும்
கன்னியாய் அவள்நோற் பாள்இக் கடற்கரைக்
கன்னே என்பார். 118

திணை மயக்கம்

மலையினின் றிழிந்து வந்திடு பொருநை
வையையென் றிடுமிரு நதியும்
மலைபடு பொருளாம் ஐவனம் மூங்கி
லரிசிசெந் தினைசுனைக் குவளை
இலகுசெங் காந்தள் கறிக்கொடி வனமார்
எழில்முல்லை சாமைநன் முதிரை
நிலவிடுமருத வயல்தொறும் திகழ
நிறைபுனல் பாய்ச்சிவாழ்த் திடுமால். 119

வேறு

பலநிலத்திற் பல இனத்திற் றோன்று பல பக்தர்களும்
இலகும்அருட் சட்டநெறி யினில்ஒன்றி நடப்பரென
நிலமிசை நன் றுணர்த்திடல் போல் நிலந்தொறும்வாழ் மரம்
செடியின்
நலமிகுத்த மலர்கனிகள் நதியிற்கலந் தேகிடுமால். 120

வேறு

வெள்ளைத்தாமரை யாத்திசெந் தாமரை வில்வம்
கள்ளுலாம் கொன்றை கோங்கு குரா புன்னை கடம்பு
விள்ளுநன்மண மல்லிகை குவளையும் விரவி
வள்ளலார்க்குநன் மருதத்தில் மாலைகள் தொடுப்பார். 121

மோனை முத்தமிழ் முழங்கிடும் மருதத்தில் மூரி
யானை செங்கரும் பருந்திநீள் தெங்கினை யதிர்க்க
வானை நோக்குதெங் கொண்கனி வண்பலாக் கனிமேல்
தேனைச் சிந்திடச் சிதறவும் செறிமது பெருகும். 122

வேறு

ஆடிடப் படுசெங் கன்னல் ஆலையின் புகையால் நெய்தல்
வாடிடும்; எருமைக் கூட்டம் வாடிய கொடியை மேய்ந்து
நீடிய கரம்நீட் டாமுன் நிறையப்பால் சொரிதல் செய்யும்
ஊடிய மகளிர் சிந்தும் குங்குமத் தொளிக்கும் ஆமை. 123

இனைவிட்டுச் சோளம் நாடி மலைக்கிளி பறந்து செல்லும்
தினையினை விரும்பிக் கோழி சோளத்தைத் தின்று தோடும்
தனையடுத் துளது சால நல்லதா லுலும் வேறு
நினைவொடும் உயிர்கள் நாடும் தாழ்ந்தவற் றையும்
நிலத்தே. 124

வேறு

மருதநன் னிலத்தில் வாழ்ந்திடும் கிளிகள்
வயங்குவண் முல்லையிற் சார்ந்து
மருவிளஞ் சாமைக் கதிர்களை வாயால்
கொணர்ந்தவண் வாழ்சிறுர்க் கிய
மருதநன் னிலத்துச் சிறுமிய ரோடும்
அயின்றுள மகிழ்வொடா டிடுவார்
பொருவில்நன் மருதக் கிளிகளும் மழலை
புகன்றவ ரொடுவிளை யாடும். 125

வேறு

செய்ய காலுடை யன்னமும் சிவலும்செம் போத்தும்
துய்ய இன்னிசைக் குயில்புறா சுகமும்தா ராவும்
வைய மீதுண வுண்டுவாய் கொண்டொலி யெழுப்பல்
ஐய னெண்புக ழெனநினைந் தணிமயி லாடும். 126

சொன்ன சொற்களைச் சொல்லிடப் பயின்றபைங் கிளிகள்
இன்னி சைமரு தச்சுரும் பினத்திடம் பயிலும்
மன்னு மாநட மாடிடும் மயில்நடை பயில
அன்னப் புள்ளினை நாடிநன் னெய்தலை யடையும். 127

குறவர் ஆனையின் கொம்புகள் நல்விலைக்:கீந்து
செறியு மின்சுவைக் கரும்புமீன் செந்நெல்வாங் கிடுவார்
கறவை நல்குபால் தயிருண்டு களிப்பொடு மினிதே
குறவர் தம்சிறுர் சிறுமியர் கூடியா டுவரால். 128

உப்பைப் பாண்டிலில் ஏற்றிச்செல் வணிகரும் உடன்செல்
செப்பு மென்மழ லைச்சிறுர் களும் கிளி செப்பும்
நற்பொ ருள்நிறை மொழிகளை நன்றுகேட் டுவந்தே
ஒப்புடன்பல உரைபுதி தாய்ப்பயிற் றிடுவார். 129

சந்த மாரகில் தேக்குநல் லானையின் தந்தம்
அந்த மில்லொளி முத்துகள் நவமணி யாதி
எந்த நாட்டுக்கும் கலத்தினில் ஏற்றுவா ணிகர்தம்
சந்த மாரொலி தன்கடல் ஒலிநிகர்த் திடுமால். 130

வேறு

மஞ்சுவிரட் டிடுவிர விளையாட்டைக் கண்டிடவும்
விஞ்சிடுபால் தயிர்வெண்ணெய் விலைக்கினிது வாங்கிடவும்
மஞ்சுநிகர் மாலோனை வணங்கியரு ளெய்திடவும்
எஞ்சலில்முந் நிலத்தவரும் முல்லைநிலத் தேகுவரால் 131

வேறு

நால்நிலத் துறையும் ஆடவர் மகளிர்
நற்சிறுர் சிறுமியர் பலரும்
நால்நிலத் துள்ள பொருள்களும் கொண்டு
நவிலரு மன்புடன் சென்று
வானுறத் தெய்வக் களினுடன் வளர்ந்த
மலைமிசை மாண்புடன் வயங்தும்
ஞானவேற் குமரற் குயர்வழி பாடு
நடத்தியின் னருள்பெற்று றுவப்பார். 132

மருதமா தியநால் நிலங்களில் நன்கு
மாணிசை பயிற்றிடந் தோறும்
மருதமா தியநால் நிலத்துக்கு முரிய
வகையவாம் பண்முறை யனைத்தும்
சுருதியும் தாள வகைகளும் பிறவும்
தோமறப் பயிற்றியின் புறுவார்
கருதருமிசைஞா னத்தினிற் சிறந்த
கலைமகள் களிமகிழ் வுறவே. 133

வேறு

வழிந்த தேனுவர்க் கேணிபாய்ந் துவளை மாற்றும்
இழிந்த செய்கையர் மேலவர் இனத்தொடும் கூடின்
ஒழிந்த பற்றின ராகிநல் லுளத் தெளி வெய்தித்
தழைந்த பேரருள் தன்மைபெற் றுய்ந்திடல் சரதம். 134

வேறு

குறிஞ்சியோண் முல்லே மருதம்நன் னெய்தல்
குலவிடு புட்களும் சுரும்பும்
புறம்தரு நெறியை மாற்றிமெய் யன்பின்
பொலிவுசால் திருவருட் சட்டம்
அறஞ்சிறக் திடத்தண் ணருள்மிகுந் திடநன்
றருள்குரு நாதரிப் புவிமேல்
சிறந்தொளிர் மருதத் துறுவரென் றங்கண்
செறிந்திறை யருளேயேத் தினவால். 135

ஆக செய்யுள் 214

---

## 3. திருநகரப் படலம்

### சித்தி விநாயகர் துதி

பத்தியொடு மெய்ஞ்ஞானம் பாலிக்கும்
தொன்மதுரைப் பதி சிறப்பை
இத்தரையில் இனிதியம்பத் திருவருள்செய்
கெனஉருகி வேண்டு கின்றேன்
சத்தியங்க யற்கண்ணி திருத்தளியில்
தனிச்சிறப்போ டமர்ந்தின் பூட்டும்
சித்திவிநா யகனிரண்டு செம்பதுமத்
தாள்பணிந்து சிரமேற் கொண்டே. 1

### குருநாதர் துதி

மதுரையினில் அங்கயற்கண் மங்கையருள்
மிகப்பெற்று மாண்பாய் மன்னி
மதுரையினில் நீதிநெறி பிறழாது
வாணிபத்தைப் பேணிச் செய்து
மதுரையினில் மணம்புரிந்து மயலுளமி
ழாதருளார் வாழ்வு போற்றி
மதுரையினிற் பரிபூர்ணர் காட்சிகண்ட
வள்ளல்பதம் வணங்கி வாழ்வாம். 2

வேறு

வான்புகழ் வையைசூழும் வண்மைசால் பாண்டிநாட்டில்
தேன்திகழ் அலங்கல்சொக்கர் திருவர சாட்சிசெய்யும்
வான்புகழ் கொண்டதூய வளநகர் மதுரைதன்னை
நான்புகழ் கின்றதென்றால் நானிலம் நகைத்திடாதோ. 3

## மதுரையின் சிறப்பு

வேறு

தோற்றமதில் முதன்மையுடைத் தூயதமிழ் நாட்டினிடை
ஏற்றமிக வுளபாண்டி நன்னாட்டிற் கெழில்முகமாய்ப்
போற்றவொளிர் தென்மதுரா புரிப்பொலிவைப் புலவர்தம
தாற்றலெலாம் கொடுபலநாள் உரைத்தாலும்
அளப்பரிதால். 4

வேறு

சிவநகரம், கடம்பவனம், ஜீவன்முத்தி
புரம், கன்னி புரம், தென்கூடல்
சிவவடிவாய் விளங்குதலம் சமட்டிவிச்சா
புரம், மதுரை, சீர்சால் தூய
சிவலோகம், திருவால வாய், என்னச்
சிறந்தநல்லோர் பலரும் போற்றப்
புவனிமிசை முத்திதரும் தலமேழில்
ஒன்றாகிப் பொலியும் கூடல். 5

பாண்டியநாட் டுச்சைவத் தலங்கள்பதி
னான்கின்முத லாவ தாகிப்
பாண்டியநாட் டினில்வைண வத்தலங்கள்
பதினெட்டில் சிறந்த தாகி
ஈண்டருள்செய் வைகை,எழு கடல்,பொற்றா
மரை,கிருத மாலை யன்பர்
வேண்டும்வரம் அருள [illegible] தீர்த்தமிவை
விளங்குதலம் மதுரையாகும், 6

மூர்த்திதலம் தீர்த்தமெனும் மூவகை
விசேடமும்மிக் குடைய தாகி
சீர்த்திமிகு பாண்டியர்கள் சோழமன்னர்
சேரமன்னர் சிறப்பாய் போற்றித்
தீர்த்தனருட் பேறுபெற்ற திருத்தலமாய்
அடியார்கள் தேவை யாவும்
பூர்த்திசெயும் திருத்தலமாய்ப் புவியின்மிசை
பொலிவது தென் மதுரை யாகும். 7

முளைத்தானை யெல்லார்க்கும் முன்தோன்றி
யெனநாவுக் கரசர் முன்னாள்
விளைத்ததமிழ் தேவாரத் திருமுறையுள்
திருவருளால் விளம்பு மாபோல்
திளைக்குமின்பச் சீருலகில் திருவருளால்
முன்தோன்றித் திகழ்நல் லூராய்
இளைப்பறியா எழிலுடைத்தாய் அருளுடைத்தாய்
இலங்குதலம் மதுரையாகும். 8

திருக்குறள்தொல் காப்பியமா தியசிறந்த
நூல்கள்புவிக் கருளு மூராய்
பெருக்கும்அறம் பொருளின்பம் வீடெனும்நாற்
பேறருள்நூல் வகையை நல்கி
உருக்குமிய லிசைநாட கத்தமிழிவ்
வுலகுக்கருள் உயர்வார் ஊராய்
இருக்குமுத லாம்நான்கு மறையொலியும்
முழக்கூராய் இலகும் கூடல். 9

சங்கமமர் புலவர்அருள் நூல்கள்அரு
ளாளர்திரு முறைக ளோடு
பொங்குதமிழ்ப்ர பந்தங்கள் வடமொழியா
லாஸ்யமகாத் மியமும் போற்றத்
துங்கமிகு பரஞ்சோதி யார்செய்திரு
விளையாடற் புராணம் போற்ற
நன்குநம்பி யருள்நூல்நற் சுந்தரபாண்
டியமாதி நவிலூர் கூடல். 10

உலகுசெழித் திடஉயிர்கள் இன்பமுறச்
சிவாகமத்தில் உள்ள வாறு
நிலவுநற்சாம் பவிதீட்சை எனச்சொலும்
விழாக்கள்திருக் கோயி லின்கண்
பலவகைச் சிறப்பொடும்மெய்ப் பக்தியொடும்
பாங்குடனும் நடத்தும் ஊராய்
இலகுதலம் மதுரையெனில் இத்தலத்தின்
பெருமை நம்மால் இயம்பற் பாற்றோ? 11

வேறு

அண்டமெலாம் தனதருளால் ஆக்கியளித் தருளன்னை
ஒண்டளிர்நற் றிருமேனி யொடுபோந்தின் னரசுசெய
விண்டலமும் தொழச்சோம சுந்தரனுய் விமலன்மணம்
கொண்டரசு செயத்தவம்செய் கூடலெழில் கூறரிதால். 12

அங்கயற்கண் ணம்மையருள் அருட்சேயென் றவதரித்துத்
துங்கவெற்றி நிலைநாட்டித் தொல்புவியும் விணும்போற்றப்
பொங்குபுக ழோடுமுக்ரப் பெருவழுதி புவியாண்ட
மங்கலநன் மதுரைநகர் மா ண்பெவர்க்கும் வகுப்பரிதால். 13

வேறு

அறுபத்து நான்குதிரு விளையாட்டின்
பெருமையுணர் அடியார் யாரும்
செறிபக்கு வம்சிறிதும் இல்லாரும்
உய்யத்திரு நெறியை நல்கி
அறுபத்தைந் தாம்விளையாட் டியற்றஅருட்
பரிபூர்ணர் தோன்றிச் சட்ட
நெறிபற்றச் செய்தினருள் புரிமதுரை
நிறைசிறப்பை யுரைத்தற் காமோ? 14

இருடியர்பட் டிச்சாமி கண்காண இணையிலருட் ஜோதி யாகிப்
பருதிமதி யங்கியெனும் மூவிழிகோள் பரிபூர்ணக் களிறு தோன்றி
இருநிலத்துக் கருட்சட்ட நெறியருளிப் பயனருளும் இனிமை சான்ற
திருமதுரை நகர்ச்சிறப்பைச் சிறுநாவாற் செப்பிடஇச் சிறியேற்
காமோ? 15

வேறு

முச்சங் கத்தை வளர்த்த முடிமன்னர்
மெச்சு நாநலம் மேவிய நாவலர்
அச்சந் தீர்த்தர சாண்ட மதுரைசேர்
இச்ச கத்தில் இயம்பற் கரிதரோ. 16

வேறு

பாண்டியநா டெனும்நங்கை பரிந்தமரும் பங்கயத்தில்
ஈண்டியபல் லிதழ்போல இனியதலம் பலநிலவ
வேண்டியதெல் லாமொருங்கு விரைந்தருளும் மதுரைநகர்
காண்டகுநன் னடுப்பொகுட்டாய்க் கருணையொளி
யுடன்கவினும் 17

செல்வமிக உடையரவண் திகழ்வதனாற் செம்பதுமச்
செல்வியுறை பீடமெனச் செப்பிடவும், சீரியநற்
கல்விமிக உடையரவண் கலந்துறலால் வெண்பதுமச்
செல்வியுறை பீடமெனச் செப்பவும்உள் ளதுமதுரை. 18

ஞானவொளி யுடையர்பலர் நண்ணியவண் உறைவதனல்
ஞானமகள் பீடமென நவின்றிடவும், நன்றறிஞர்
வானளவப் புகழ்ந்துரைக்க வனப்புமிகு புகழ்மாதுக்
கானவொரு பீடமென அமைவதுவும் அணிமதுரை. 19

வேறு

மண்ணுலகர் வாழ்வாங்கு வாழ்ந்திடவும்
மாண்பார்மெய்ஞ் ஞான மென்னும்
கண்ணொளிபெற் றிலங்கிடவும் கடவுளொடு
கலந்திடவும் கருணை யோடு
விண்ணுலகர் போந்துபல விளையாடல்
புரிந்திடவும் விளங்கா நின்ற
புண்ணியநற் பதியாகி மதுரைநகர்
பூவுலகிற் பொலியு மாலோ. 20

வேறு

ஆரியர்தம் படைகடந்த நெடுஞ்செழியன் அவனிபுகழ்
சீரியநற் செயல்புரிந்தும், திகழ்பொற்கை மாறன்முதல்
தாருடைய வேந்தர்பலர் தரணிமிசை நீதியினை
நேரியநன் முறையில்நிலை நாட்டியதும் நீள்மதுரை. 21

நின்றசீர் நெடுமாறன் நிறைமிகுமங் கையர்க்கரசி
வென்றிபுனை குலச்சிறையார் வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான்
நன்றுமும்மை யாலுலகாள் மூர்த்திமுதல் நல்லோர்கள்
தொன்றுதொட்டின் னருட்பயிரை வளர்த்தநல்லூர்
தொன்மதுரை. 22

நிலமகளின் திருமுகமோ
நிலவுதில கத்தொளியோ
இலகுதிரு மங்கலநா
ணொளிகால் எழிலணியோ
நலமனைத்தும் விளக்கவென்று
நான்முகன்செய் தனிப்படைப்போ
குலமகளிர் கற்புருவோ
எனக்குலவும் கூடல்நகர். 23

வேறு

நல்ல பாண்டிய நாடெனும் நங்கைக்கே
எல்லை யில்லழ கேய்முகம் கூடலாம்;
அல்லல் தீர்அங் கயற்கண்ணி ஆலயம்
துல்லிதாம்தில கம்மெனச் சொல்வரால். 24

புடைநகர்

தண்ணியல்பைஞ் சோலைகளின்
தனியெழிலைக் காண்பவர்கள்
எண்ணியவெல் லாம்மனத்தில்
எண்ணியவா றினிதருள
விண்ணியல்நற் கற்பகக்கா
விழைந்திவண்வந் தமைந்ததெனப்
புண்ணியக்கூ டலிற்சோலை
பொலிவளத்தொ டிலங்கிடுமால். 25

நெற்பயிர்கள் புடைசூழ நடுவமைந்த நீள்கமுகு
விற்பனராம் மறையோர்கள் விளங்குதிரு மறையோதிப்
பொற்புடைய தருப்பையினைப் புனிதமிகு கொடிமரத்தில்
நற்பொலிவொ டமைத்துளது போலுமந்த நகர்வளமே. 26

நீண்டுயர்ந்த நெடுமரங்கள்
நிறைமலரைச் செந்தேனை
ஆண்டடியில் தடத்தில்மலர்
தாமரையில் அழகுறவே
ஈண்டுமகிழ் வொடும்பொழிதல்
இனியோர்க்குப் பொனும் நீரும்
வேண்டும்வரை வழங்கியறம்
விளைத்திடல்போல் விளங்கிடுமால். 27

வேறு

பன்னி றங்கள் படைத்த பலமலர்
துன்னு சோலைகள் அந்நகர் சூழ்தலால்
மன்னு தாதுக மண்பொன் னிறம்பெறப்
பொன்ன கர்நிக ராகிப் பொலியுமால். 28

மகிழ்வி னோடு கடுவனும் மந்தியும்
திகழும் செங்கனி யுண்டவ னாடிடும்
குகன்பு கழ்நற் குயிலினம் பாடிட
அகவும் நன்மயில் ஆடிடும் அங்கணே. 29

வேறு

தவசிகள்நீர் அருந்துகையில்
தம்கரத்தில் ஏந்திடும்நீர்
அவிர்விசும்பில் இறைத்திடல்போல்
ஆனைகள்தும் பிக்கையினால்
உவகையொடும் நீரெடுத்தங்
குயர்வானத் தேஇறைக்கும்
புவனியுள வளம்பலவும்
பொருந்தியந்த நகர்பொலியும். 30

அந்நகரில் மழைபொழிதல் அமரர்மலர் மாரிபொழிந்
திந்நகரென் றும்பொலிக எனவாழ்த்தல் போலிலகும்
அந்நகருக் குறுவோர்கள் அங்குளபல் வளங்களும்பார்த்
திந்நகருக் கெவ்வுலகும் ஈடிலையென் றினிதுரைப்பார். 31

புடைநகரிற் கொல்லர் தச்சர்
    பொன்வினைஞர் குயவரெலாம்
மிடைவதனுல் படைத்தல்செயும்
    பிரமனைப்போல் விளம்புவரால்;
புடையிலுறு துயர்நீக்கிப்
    போகமுறக் காவல்புரி
இடைநகரைத் திருமாலுக்
    கிணையாக இயம்புவரால். 32

இடைநகர்

காவினையடுத் தேயக் கடிநகர்
காவல் செய்பவர் வாழிடம் காணலாம்
தேவ தேவன் திருக்கரச் சூலத்தால்
மேவும் நல்ல அகழி விளங்குமால். 33

நங்கையர் தம் முகத்திற்கு நாமிணை
இங்கிலோமென் றெழில் நகரை விட்டுத்
துங்க மார்அக ழிக்கண் துலங் கல்போல்
அங்கண் மேவும் அழகுசெந் தாமரை. 34

வேறு

செருக்குற்றுயர் திருமதில்கள்
    தேவரடிக் கீழுறுதல்
தருக்குற்றவர் தாழ்வடைய
    நேருமெனச் சாற்றிநிற்கும்
தருக்ககன்று பொறுமையுடன்
    தாழ்ந்துசெல்வோர் பயன்பெறல்போல்
பெருக்கவும்ஆழ் நீளகழி
    பிலத்துறுவோர் முடியிலுறும். 35

பகைவர்வரின் எச்சரித்துப் படர்ந்தவர்மேற் பொரவமைத்த
தொகைமிகுநல் யந்திரங்கள் சூழ்ந்திருக்கும் திருமதிலில்
வகைவகையாம் மீனின்இனம் வால்நீளும் முதலையினம்
முகைவிரிபூ ஆமையினம் முந்திடும்நீ ளகழியின்கண். 36

உயர்நீதி நிலைநாட்ட ஒளிர்நான்கு மாமறையும்
உயர்வான திருமதிலில் ஒளிர்நான்கு வாயில்களாய்
அயனேவந் தமைத்தானோ அரியேநன் றமைத்தானோ
பயனீயும் பரனமைத்தா னோவென்னப் பகருவரால். 37

வேறு

ஏக நாயகன் இன்னெழிற் கைதிகழ்
நாக கங்கணம் நன்மதி லாகுமால்
மாக நீள்மணி மாடநி றைநகர்
ஏக நாயகி இன்னருள் மானுமால். 38

வேறு

பருதியிவர் தேரின்எழு
பரிகளுக்கும் களைப்பாற்றக்
கருதியமைத் ததுபோலக்
கவின்மாடக் கொடியசையும்
சுருதிபல பயின்றெழுகும்
தூயர்வர வினைநோக்கி
வருதிரென அழைத்திடல்போல்
வண்கொடிகள் அசைந்திடுமால். 39

அலகில்பல வளமும்நிறை ஆவணவீ திகள்பலவும்
அலைகடலைப் போல்விளங்கும் அணிமாடத் தசைகொடிகள்
இலகுறுமங் கயற்கணம்மை எழில்மிகுந்து திகழ்மும்மை
உலகையும்வென் றுள்எமக்கிங் கொப்பார்என்
றேபறக்கும். 40

அகநகர்

எவ்வுலகத் தரசர்களும் இனமணியும் எழிலணியும்
செவ்வியநற் புரவிகளும் திண்தேரும் பலபடையும்
எவ்வியலும் எத்தொழிலும் எக்கலையும் அவண்உறலால்
எவ்வுலகும் தென்மதுரைக் கிணையாமோ இயம்பிடவே. 41

வேறு

ஆறு சூடும் ஆன்அர சாள்நகர்
ஆறு வைகை யணிசெய் திருநகர்
ஆறு நேர்நெடு வீதிக ளோடறத்
தாறு நின்றன் பருளை வளர்க்குமால். 42

வனம் விளக்கும் பொருளும் வளர்மலை
யினம் விளக்கும் பொருளும் எழில்வயற்
புனம் விளக்கும் பொருளும் புணரியாய்
தினம் விளக்கும் பொருளும் செறியுமால். 43

பற்பல் தேயத்தர் சூழ்வுறும் பான்மையால்
பற்பல் நாட்டின் பொருளும் படர்தலால்
பற்பல் பாடை பகர்வுறும் பாங்கினுல்
சொற்புகழ்கொண்டத் தொன்னகர் மேவுமால். 44

எத்தி சைக்க ணிருந்தும்வந் தோரவண்
சத்தி ரங்களிற் சார்ந்துறும் ஓதையும்
பத்தி செய்பவர் பாடிடும் ஓதையும்
எத்தி னத்தும் ஓ யாமல் இலங்குமால். 45

அரும றைகள் நவிலும் அழகொலி
திருமு றைகள் இசைக்கும் சிறப்பொலி
குருநெ றிநிற்கும் கொள்கையர் ஏத்தொலி
பெருமு ரசொலி எங்கும் பிறங்குமால். 46

பொருள் வளர்த்திடும் ஆவணம் போதமோ
டருள் வளர்த்திடும் அன்பர் செழுமனை
மருள்வ ளர்த்திடும் மாந்தரும் உய்ந்திடத்
தெருள்வ ளர்த்திடும் தெய்வ மடங்களே. 47

மறம் விளைப்பன மன்னர் படைவயற்
புறம் விளைப்பன பொன்னை நிகர்செநெல்
அறம் விளைப்பன அன்பர் மனைகலைத்
திறம் விளைப்பன சீர்க்கலைச் சாலைகள். 48

தேடு வாணிபர் தம்பொருட் செல்வமும்
ஈடி லன்பர்க ளின்பக்திச் செல்வமும்
நாடு மெய்த்தவர் நற்றவச் செல்வமும்
நீடு பேரருட் செல்வமும் நீளுமால். 49

பொருள் வளர்ப்பன போகம னைகள்பூஞ்
சுருள் வளர்ப்பன தோகையர் தம்குழல்
அருள் வளர்ப்பன மெய்யடி யாரகம்
தெருள் வளர்ப்பன சீரியர் செய்கையே. 50

சிறைப டாதென்றும் சீரியர் அன்பென்றும்
கறைப டாது கருணைமிக் கோருளம்
குறைப டாது கொடுத்திடு வோர்திரு
மறைப டாதென்றும் வள்ளல்கள் வண்மையே. 51

தூய நன்மலர் சோலைகள் எங்கணும்
மேய மங்கலம் வீதிக ளெங்கணும்
ஆய பன்மறை ஆலய மெங்கணும்
நேய நல்லுளம் நீள்மனை யெங்கணும். 52

புலம்வ ளர்த்திடும் புண்ணியம் சால்நதி
நலம்வ ளர்த்திடும் நல்லற வோர்செயல்
குலம்வ ளர்த்திடும் கோதில்நற் பூசனை
இலம்வ ளர்த்திடும் ஈடில் ஒழுக்கமே. 53

அன்பு மேம்படும் ஆசையற் றோரிடம்
தென்பு மேம்படும் செம்மைமிக் கோரிடம்
இன்பு மேம்படும் ஈசன் கழல்நினைந்
தென்பு ருக்குநர் இன்னித யத்தினே. 54

பத்தி கூடிடும் பத்தரு ளத்தினில்
சத்தி கூடிடும் தக்கவ ருள்ளத்தில்
சித்தி கூடிடும் செய்தவச் செல்வர்பால்
முத்தி கூடிடும் மோனியர் தங்கணே. 55

தினைய றுத்திடும் சீருழ வோர்செங்கை
வினைய றுத்திடும் வித்தகர் மெய்த்தவம்
நினைவ றுத்திடும் நிட்டை யனுபவம்
தனைய றுத்திடும் தக்கவர் செய்கையே. 56

வேறு

ஊடினபெண் களின்அணியும், ஒளிர்பந்தும் அம்மனையும்
ஆடுமவர் பரித் தெறிந்த ஆரமும், சிற் றிலைக்கலைத்துக்
கூடுசிறுர் மீதிளம்பெண் குழந்தைகள்கோ பித்தெறிய
ஓடுமுத்துக் களும் அந்த உயர்நகரிற் குவிகுப்பை. 57

நூல்பயிலும் இடங்களிலும் நுகத்தடியொ டேர்நடத்திச்
சால்பயிலும் வயல்களிலும் சங்கமிக முன்னேறும்;
வேல்பயிலும் களங்களிலும் விளையாட்டுத் திடல்களிலும்
கோல்பயில்மன் னவரிடத்தும் கூறும்வெற்றி குலவிடுமால். 58

தகவுமிகு நூல்பயின்று பொறையொழுக்கம் சான்றுண்மை
மிகவுடைய ராய்த்தம்பால் மேவுநர்தம் துயர்நீக்கிச்
சுகமருளும் மேலவர்கள் துலங்குதலால் அகநகரை
இகல்வினைகள் நீக்கியருள் ஈசனெக்கும் எனப்பகர்வார். 59

இராவியியற் றப்படுவ
தெழில்வளையல் மட்டுமன்று
விராவும் அமர்க் களத்தில்வெற்றி
விளைத்திடுமா யுதங்களுமால்;
தராதலத்தில் விழ்ந்துமுயர்
தகவுறல்பூ மட்டுமன்று
பராவுதெருக் களிலெறிந்த
பணிகளுமாம் பகர்காலே. 60

வேறு

உயிரைவிடப் புகழ்சிறந்த தெனக்கருதும்
ஒப்பில்மதி மரபில் போந்த
உயர்அரசர் குலம்வாழ்ந்த வரலாற்றை
உடையதுவாய், உலகர் யார்க்கும்
துயர்நீக்கிச் சுகம்வழங்கி எண்திசையும்
தூயபுகழ் நிறுவி ஞானப்
பயிர்காத்தின் னருள்விளைவாம் பயன்நல்கும்
மதுரையின்சீர் பகர்தற் காமோ. 61

வேறு

திருமறையும் தேவர்களும் தேடியும்காண் பரிதான
நிருமலன்றன் சேவடிகள் நீள்விறகும் வளையல்களும்
பருமணியும் விலைபகர வழக்குரைக்கப் பரிந்துவந்த
பெருமையுடைத் திருவீதிப் பெருஞ்சீர்மை பேசரிதால். 62

பிறையோரா யிரங் கண்ட பெருமையுடைப் பெருமாட்டி
கறையறுசெம் மனச்செல்வி கைதருபிட் டினிதருந்தி
இறைவன்மகிழ் வொடுநடந்த எழில்வீதி களின் சிறப்பைக்
குறைகள்மிக வுடைநாவாற் கூறுவது மிகவரிதால். 63

இருள்மிகுத்த மதப்பூசல் இனப்பூசல் இரிந்தொழிய
மருள்மிகுத்த மாந்தர்களும் மனம்திருந்தி உய்வுபெற
அருள்மிகுத்த நெறியளித்தாள் அருட்குரவர் உலவிடற்குத்
தெருள்மிகுத்த தவம்புரிந்த தெருக்களின்சீர்
செப்பரிதால். 64

வேறு

கயிலையில் வதியுமுக்கட் கடவுளிந்நகர்க்குப் போந்தே
இயல்மணம் புரிந்திப் பார்மேல் இனிதர சாளு மாறு
செயல்புரி எம்பி ராட்டி திருவவ தாரம் செய்ய
உயர்தவம் புரிந்த வோஅங் கோங்கெழில் மாட
மெல்லாம். 65

வேறு

சகமிசையுள் எவரெதனை
விழைந்தாலும் தந்தருளும்
தகவுடைகற் பகத்தருப்போல்
தழையுமக நகர் விளங்கும்;
ககனம்வரை நீண்டுயர்பொற்
கதிருமிழ்மா ளிகைகள்நற்பொன்
னகரெமக்கொவ் வாதெனப்புன்
னகைபுரிதல் போல்விளங்கும். 66

வேறு

வருவிருந் தெதிர்கொண் டோம்பி
வண்மைசால் வார்த்தை கூறி
அருகிருந் தடிசி லூட்டி
அருங்கனி அடைக்காய் நல்கிப்
பெருகுறு தமிழ்பா ராட்டிப்
பேசிடும் ஓசை யோடும்
இருநிதி யளிக்கும் ஓசை
இலந்தொறும் ஒலிக்கு மாலோ. 67

வேறு

இல்லமதிற் பூசையறை தனியாக இனிதமைத்து
நல்லமண மலர்தூய நைவேத்யப் பொருள்களொடு
தொல்லைமறை யாகமங்கள் சொலும் வழியிற் பூசைபுரிந்
தெல்லையில்நற் றிருவருளை யெய்துபவர் பலருளரால். 68

வேறு

அறவினை புரிவோர்க் குற்ற அருந்துணை யாகி நிற்பார்
உறைவிடம் உணவொ டாடை உதவியே வறிஞர்க் காப்பார்
கறையறு மனத்தினோடு கடமைகள் பலவும் செய்வார்
நிறைகுடம் போல உள்ள நிறைவொடு நிலவு வாரால். 69

வேறு

கற்றவற்றைச் சீடர்கட்குக் கரவின்றி நன்றுரைத்துக்
குற்றமறத் திருத்தியருள் குருமாரும், குருவடிக்கே
உற்றதிருத் தொண்டுபுரிந் துண்மையுடன் அன்பினுடன்
நற்றவச்செந் நெறிபயிலும் நற்சீடர் களுமுளரால். 70

உள்ளமிது பெருங்கோயில் ஊனுடம்பா லயமென்ன
உள்ளியன்பு நீராட்டி உயிர்ப்புமதி தூபம்விளக்
குள்ளிருக்கு மாவிநைவேத் தியமாக்கி உட்பூசை
உள்ளுறையாண் டவர்க்காற்றி உயரருளெய் துநருளரால். 71

சத்தியெலாம் மிகப்படைத்தும் தாரணிமீ தெண்ணிலவாம்
சித்தியெலாம் செய்யவல்ல திறல்படைத்தும் அடக்கமுடன்
பத்திபுரி யடியார்க்குப் பயன்கருதா தினிதுதவும்
முத்தர்களும் மனங்கடந்த மோனியரும் பலருளரால். 72

அவனருளால் அண்டநிரை அனைத்துமியங் கிடுமெனவும்
அவனருளால் ஒவ்வொருசிற் றணுவுமசைந் திடுமெனவும்
எவரிடத்தும் எதுமுரையார் எவ்வுயிர்க்கும் துன்புறுத்தார்
தவநெறிக்கண் அடக்கமுடன் சார்ந்தமைவோர்
களுமுளரால். 73

அவனருளே திருவனைத்தும் ஆகுமெனத் தினம்தேடி
அவனருளே நல்லதுணை யாகுமெனத் தினம்நாடி
அவனருளே மெய்த்தவப்பே றாகுமெனத் தினம்பேணி
அவனருளின் மயமாகி அவ்வுறைவோர் பலருளரால். 74

செய்யபுகழ்ச் சேவடிக்கே செயலனைத்தும் அர்ப்பணித்தும்
பொய்யறுமெய் யுரையனைத்தும் பொன்னடிக்கே யர்ப்பணித்தும்
ஐயமின்றி அருள்நாடும் எண்ணமெலாம் அர்ப்பணித்தும்
துய்யஅருள் வாழ்வாற்றும் தூயர்பலர் அவணுளரால். 75

குருநாதர் அருளுருவே குறைகளெலாம் தவிர்க்குமென்றும்
குருநாதர் அருள்மொழியே குவலயவாழ் வளிக்குமென்றும்
குருநாதர் அருள்நாமம் குற்றமெலாம் நீக்குமென்றும்
குருநாதர் அருள்நெறிபேண் கொள்கையினர் பலருளரால். 76

வேறு

பெருங்கு டிக்கண் பிறந்துள பெண்டிர்தாம்.
ஒருங்கு தங்களை ஒப்பனை செய்துகொண்
டிரும்பு னல்மதி சூடும் இறைவனை
விரும்பி மாடியில் மேவி இறைஞ்சுவார். 77

வேளாளர் வீதி

பாரெலாம் ஓங்கிப் பொங்கிப்
பரந்திடும் செல்வ மெல்லாம்
ஏருடை வேளாண் மக்கள்
உழைப்பினால் இனிதே யெய்தும்
தாருடை மன்னர் வாழ்வும்
தழைவதிவ் வுழவா லன்றோ!
பாரிடை யிதன்றி யுண்டோ
பல்லுயிர் புரக்கும் செய்கை. 78

நல்லன எல்லாம் செய்யும்
நலம்பல ஓங்கச் செய்யும்
பொல்லன போகச் செய்யும்
போதமும் இன்பும் நல்கும்
மல்லல்நீர் வளம்கொ ழிக்கும்
மள்ளர்கைத் தொழிலெந் நாளும்
நல்லன இதன்மே லுண்டோ
ஞாலத்தின் மிசைகூ றற்கே. 79

ஏரினைச் செலுத்தும் நல்ல எருதுகள் பூட்டி நன்றே
பார்தனைக் கீண்டு நல்ல பல்வளம் செழிக்கச் செய்யும்
சீருடை யுழவே யன்றிச் சிறப்பினைச் செய்வ துண்டோ
ஊரினை உவந்து காக்கும் உயிர்ப்பும்அங் கதுவே யாமால். 80

வேறு

புகழ்தானம் அன்பொழுக்கம் அறிவூக்கம் பொறைபுனிதம்
திகழ்மானம் கலைஞானம் உயர்ஞானம் செயலாற்றல்
சகமேவு முயிர்களின்பால் தண்ணளிசெய் தனிப்பெருமை
அகமேவு மெய்ப்பத்தி அருள்நிறைந்தக் குலம்மிளிரும். 81

வேறு

தொண்டர் பூக்கள் எடுத்துத் தொடுத்துநன்
றண்டர் நாயக னுக்கணி விப்பரால்
பண்டம் யாவும் விளைப்போர் பரனையுட்
கொண்டு தங்கள் வயலிற் குறுகுவார். 82

வணிகர் வீதி

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போலச் சமையுளத்தார்
தமபோலப் பிறர்பொருளும் சமநோக்கிற் கருதிடுவார்
இமைப்போதும் வீணுக்கற் கிசையாமல் தொழில்புரிவார்
உமைகோனை உளத்தெண்ணி உயர்வணிகம் புரிவணிகர். 83

வேறு

கொள்ளுதற்கும் கொடுப்பதற்கும் அளவையொன்றே
கொண்டொழுகும் குணத்தின் மிக்கார்
விள்ளரிதாம் அறநெறியில் அணுவளவும்
பிறழாநல் வியன்சீ ராளர்
உள்ளம்உடை யோன்பால்வைத் தொளிர்செல்வம்
திரட்டியினி தொழுகும் நீரார்
வள்ளல்என விளங்கிப் பலர்க் குதவிடுவார்
வணிகர்குல மரபி னோரே. 84

வேறு

எங்குவிளை பொருள்களையும் இனிதுகொணர்ந் தேகுவிப்பார்
தங்கம்வெள்ளி நவமணிகள் தரம்பார்த்து வாங்கிடுவார்
துங்கமுற அவைபேணித் தொல்லுலகர்க் கினிதளிப்பார்
மங்கலநல் வினைபுரிவார் மன்னறங்கள் பல புரிவார். 85

நால்நிலத்தி னின்றும்வரும் நற்பொருள்கள் வாங்கிடுவார்
வானவரும் போற்றநல்ல வகையிலவை பேணிவிற்பார்
தானதரு மம்போற்றித் தரணியில்வாழ் வாற்றிடுவார்
கோனுவக்கக் குடிமக்கள் மனமுவக்கக் குலவிடுவார். 86

கலைகள்பல பயின்றிடுவார் கணக்குகல்நன் றெழுதிடுவார்
உலைவில்வளம் மிகுத்திடுவார் உயர்வனைத்தும் படைத்திடுவார்
சிலைகள்திகழ் பலதளிகள் செய்தமைத்துப் பரவிடுவார்
நிலைகொள்புகழ் படைத்தொளிர்வார் நிமலனருள்
நிறைவணிகர். 87

அறத்தாற்றிற் பொருளீட்டி அருள்நெறியிற் செலவிடுவார்
புறத்தாற்றிற் போகாமல் புனிதர்களாய் வாழ்ந்திடுவார்
திறத்தால்மிக் குயர்ந்தவராய்த் தேசுமிக உடையவராய்ச்
சிறப்பான செயல்பலவும் செய்பவராய் அவர்திகழ்வார். 88

ஆலயத்திற் குறும்அடியார் அருள்தலயாத் திரைபுரிவோர்
சீலமிகும் துறவியர்கள் திருவமுது செய்வதற்குச்
சாலவிருப் புடன்தரும சத்திரங்கள் அமைத்திடுவார்
கோலநல் விழாஇறைவர்க் கினிதாற்றி உளம்குளிர்வார். 98

திரைகடலைக் கடந்துசென்று செல்வமிகத் திரட்டிடுவார்
உரைதமிழைத் தாம்செலும் பன்னாட்டினிலும் பரப்பிடுவார்
கரைகடந்த பேரன்பாற் காசினியைத் திருத்திடுவார்
பரையிடங்கொள் பரமனருட் பாங்குமிகு வணிகர்களே. 90

மக்கள்பலர் செலும் வழியில் மலிதாகம் தவிர்ப்பதற்குத்
தக்கபடி நீர்மோர்தண் ணீர்வழங்கி யாதரிக்க
மிக்கபரி வோடுபல தண்ணீர்ப்பந் தரையமைப்பார்
எக்கணத்தும் மக்கள்நலத் தினைநாடும் இயல் வணிகர். 91

வேறு

இறைவி அங்கயற் கண்ணி யெழிற்பதத்(து)
உறவு பூண்ட உயர்வணி கர்தினம்
திறவுகோலைத் திருவடி யில்வைத்தே
உறவொ டங்கெடுத் தொண்தொழிற் கேகுவார். 92

வேறு

சத்தியத்தைப் பேணிடுவார் தருமநெறி யினிற் பிறழார்
பத்தியுடன் பரன்பூசை பாங்காகப் புரிந்திடுவார்
எத்திசையும் புகழ்பரவ இனியவுரை கூறிடுவார்
முத்திபெறும் நாட்டமுடன் மூதுலகில் இனிதொளிர்வார். 93

### மன்னவர் வீதி

மூவேந்தர் தம்முள் தமிழ் மொழிவளர்த்த
மாறன்மர போர்வாழ் வீதி
பூவேந்தர் திறைசெலுத்தற் காகவந்து
காத்திருக்கும் பொன்னர் வீதி
பாவேந்தர் புகழ்பாடிப் பரிசில்பெறக்
குழுமியுள்ள பண்பார் வீதி
மாவேந்தர்க் குரியஉயர் அமைச்சர்ஒற்றர்
குழுநிறையும் மாண்பார் வீதி. 94

திறைசெலுத்தும் சிற்றரசர் இவர்ந்துவந்த
கரிபரிகள் நிரலும் வீதி
நிறையெழில்கொள் மாளிகைகள் காண்பவர்கண்
இமைக்காமல் நிலவும் வீதி
துறைபலவும் உணர்ந்திகை வீரமுடன்
இளங்குமரர் துலங்கும் வீதி
உறைநாட்டில் உயிர்களின்வாழ் வேஉயிராக்
கொளும்மன்னர் உறையும் வீதி. 95

வேறு

ஆனையின்திரள் அணிமலைத் திரளினை மானும்
சேனையிற்றிகழ் பரிகடல் திரையெனப் பொலியும்
வானையும்தொடும் முடியுடைத் தேர்நிரை வயங்கும்
தானையாட்படை தன்னிக ரற்றவண் துலங்கும். 96

வேறு

விண்ணினைத்தா விடவோங்கு மாடமா
ளிகைகள்வியன் கோபு ரங்கள்
நுண்ணியநற் சிற்பவேலைப்பாடும்
நுவலரிதாம் எழிலும் சீரார்
வண்ணமிகு சித்திரவேலைப்பாடும்
மாண்கலையின் திறனும் செல்வம்
நண்ணு பல வளநிறைவும் பேரொளியும்
கொண்டுபொலிசீர் நவிலற் பாற்றோ? 97

வேறு

விரிவான கலையாவும் வெகுவிரைவில் பயின்றிடுவார்
கரியேற்றம் பரியேற்றம் ஆதியெலாம் கற்றறிவார்
புரிபோரில் வில்லேந்திக் கணைதூவப் புரிந்து கொள்வார்
அரியேறு போலொளிர்வார் அரசர்குலக் காளைகளே. 98

விற்போரில் மிகச்சிறந்து வீரவொலி முழக்குநராய்
மற்போரில் சிறந்தவராய் வாட்போரில் வல்லவராய்
சொற்போர்செய் கவிஞர்பலர் தூயபுகழ் பாடும் வணம்
நற்போர்செய் மன்னர்குல மரபினர்கள் அவண்உறைவார். 99

வேறு

தன்மானம் காத்தவண்ணம் தாய்நாட்டிற்
கெனத்தம்வாழ் வினைஅர்ப் பிக்கும்
நன்மான முடைமன்னர் நான்மறையா
கமஞான நூல்கள் யாவும்
சொன்மாச றப்பயின்று தூய்மைபக்தி
வாய்மையுடன் துலங்கு வார்கள்
கன்மீதில் அமைந்தஎழுத் தினைப்போலக்
காசினிமீ தவர்சீ ரோங்கும். 100

ஆடவரும் அரிவையரும் நீராடி
அகம்புறமும் தூய ராகி
நீடியநற் களபமுதல் நறுமணச்சாந்
தினைப்பூசி நீற ணிந்து
பீடுறுசந் தனமணிந்து பெட்புறுகுங்
குமம்அணிந்து பெரியோர் வாழ்த்த
ஆடையணி அலங்காரம் மிக்கஅழ
குறச்செய்து கொள்வார் நாளும். 101

வானுலகத் தினில்வதியும் அமரர்களும்
மானனைய மாதர் யாரும்
ஏனிப்படி நாமும்எழில் அலங்காரம்
செய்துகொள லாகாதோ நம்
கோனும்சசி யும்போல நாம்திகழ
லாமேஎன் றெண்ணிக் கொள்வார்
ஆனபல மலர்சூடி இவர்களைப்போல்
ஆடியினில் அழகு காண்பார். 102

மிக்கபக்தி யோடிறைவன் பூசையினில்
மனமுருகி மேலும் மேலும்
தக்கபடி யீடுபட்டு வழிபடும்காட்
சியைவானிற் சார்வோர் நோக்கி
எக்கணத்தும் இத்தகைய உயர்ந்தபக்தி
நிலையடைதற் கியலாமல் நாம்
திக்குபுகழ் அமரரென இருந்துபய
னென்னவென்று சிந்தை செய்வார். 103

கட்டழகில் ஆண்கள்மத னைப்போல்வர்
காரிகையர் இரதி போல்வர்
இட்டமுடன் கொடுக்கும்கொடை யினிற்கர்ண
னையும்வெல்லும் குணத்தோ ராவர்
திட்டமுடன் எச்செயலும் புரிதிறமும்
திரம் அன்பு கல்வி கேள்வி
நுட்பஅறி வும்பிரம ஞானமும்நோன்
மையுமுடையர் திகழ்வார் அங்கண். 104

எந்தளந்த நிலையான அறச்செயல்கள்
செயலாமென் றெண்ணு வார்கள்
எந்தளந்தத் திருக்கோயில் களில்என்ன
திருப்பணிகள் புதிதாய்ச் செய்தால்
அந்தமில்சீர் அடியவர்க்கும் அன்பர்கட்கும்
நலம்பயக்கும் என்ரு ராய்வர்
சந்தமுற எண்ணியெண்ணிச் செயல்முறையில்
தக்கனஎல் லாம்செய் வார்கள். 105

மதுரையிலும் பாண்டியநாட் டிலுமுள்ள
மாண்கோயில் களில்நாள் தோறும்
அதிசிறப்பொ டாகமத்தின் படிநடக்கும்
பூசைமுறை களில்மேன் மேலும்
இதமொடென்ன சீர்திருத்தம் செயலாமென்
றெண்ணிச்செயல் புரிவர்; மேலும்
புதியவிழா யாதுநடத் திடலாம்என்
ருய்ந்துநடத் திடுவர் நன்றே. 106

நல்லவரை ஆதரிக்கும் நற்பண்பு
நல்லொழுக்கம் கொடைமிக் கோராய்
அல்லும்பக லிலும்நாட்டின் நலம்கருதி
நற்செயல்கள் புரிகின் ேறாராய்
அல்லல்அணு வேனும்உயிர் கட்கணுகா
வணம்காக்கும் திறமுள் ளோராய்
ஒல்லுந்தனை யும்தருமம் பேணுநராய்
அங்குறைவோர் ஒளிரு வார்கள். 107

வேறு

பலமொழியில் வல்லவராய்ப் பலநூல்கள் பயின்றவராய்ப்
பலசுவையும் நிறைகவிதை பாடவல்ல திறமையராய்
இலகுகவி தையின்தரத்திற் கேற்ற உயர் பரிசில்தரும்
புலமை உடைய வராக மன்னர்மர பினர்பொலிவார். 108

உலகம்செழித் திடவேண்டி உறுதுயரில்
லாதுயிர்கள் வாழ வேண்டி
நலமிகுநோன் புகள்நோற்கும் பண்புடைநங்
கையர் அங்கண் விளங்குவார்கள்
குலம்விளக்கும் குணமணிக ளாய்அழகும்
கற்பும்அன்பும் கொண்டு தம்மீ(து)
இலகும்அணி களைப்போல இனியஉயர்
பாங்கொடவர் இலகு வார்கள். 109

புகழ்ஒழுக்கம் மானம்இவை புவியினில்மிக்
குயர்ந்தனவென் றெண்ணு வார்கள்
அகமுறையும் உயிரினைக்காட் டிலும்சிறந்த
வாம் இவையென் றேம்புவார்கள்
திகழும் ஒண்பே ராண்மையுடை ஆடவரும்
செம்மைமிகு மாத ராரும்
சகம்பிறங்க வான்பிறங்க வாழ்வாற்று
வார்மன்னர் வீதி யின்கண். 110

## மறையவர் வீதி

நகரின்நடு நாயகமாய் ஞானசக்தி
அங்கயற்கண் நங்கை யோடும்
இகபரநன் னலங்களருள் சொக்கரமர்ந்
திலகுதிருத் தளியை யொட்டித்

திகழும்திரு மறையவர்வாழ் தெருக்களெனில்
அவர்பெருமை செப்பற் காமோ
சகமும்விணும் சிறந்திலங்கல் இவர்களெலாம்
புரிமேலாம் தவத்தா லன்றோ? 111

வேதவொலி யாகமத்தி னொலிசாத்தி
ரத்தினொலி வியன் புராண
கீதவொலி கிளர்பரத நடனவொலி
இசையினொலி கேழில் வீணை
நாதவொலி குழலினொலி ஞானமணி
வாசகத்தி னொலியெல் லாமும்
போதநிறை மறையவர்தம் புண்ணியநல்
வீதிகளிற் பொலியும் என்றும். 112

வேறு

அருமறைகள் ஒதொலியும் அணிவேள்விச் சாலைகளில்
பெருகுறும்ஓ மப்புகையும் நறுநெய்யின் பெருமணமும்
புரியுமறைச் சடங்குகளில் புகன்றிடுமந் திரவொலியும்
மருவிடுவா னவர் வாழ்த்தும் மறையவர் வீதியில்மலியும். 113

சாகைகளை நனிபயின்று சதுர்மறைக ளோதுநரும்
ஆகமநன் னெறிமுறையில் ஆலயங்கள் பேணுநரும்
போகமனைத் தும்புவியோர்க் கமைகவெனப் போற்றுநரும்
மோகமொழித் திறையருளில் மூழ்குநரும்
அவணுறைவார். 114

வேறு

இறைவனுக்குச் செயும் தொண்டே பெருஞ்செல்வம்
எனும்மனத்தோ டிலங்கு வார்கள்
மறையைமுறை யுடன்ஓதி எரியோம்பி
மகிக்குநலம் மிகச்செய் வார்கள்
நிறைதவத்தால் ஒளிர்மேனி அருள்நோக்கம்
உடையவராய் நிலவு வார்கள்
பொறையுடையர் நிறையுடையர் புனிதமிக
வுடையவராய்ப் பொலிவார் அங்கண். 115

எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும்
சிந்தையராய் இன்சொல் கூறிச்
செவ்வியநல் லறமேதம் குறிக்கோளாக்
கொண்டவர்கள் திகழ்வார் அங்கண்
எவ்வமெலாம் தீர்த்துயிர்கட் கிதம்புரியும்
இயல்பினராய் அருளை நாடும்
எவ்வெவரும் கண்டவுடன் வணங்கவுயர்
தகுதியுடன் இலகு வார்கள். 116

வேறு

இறைவனை யெங்கும் காணும் இயல்புடை யவராம் சிலர்
இறையடி யவரைப் பூசித் தின்னமு தருத்து வோராய்
இறைவனின் ஆக மங்கள் ஓதியும் செவிம டுத்தும்
கறையெனும் மலங்கள் நீக்கிக் கருணையின் மயமாய்
வாழ்வார். 117

வேறு

வெள்ளி யம்பல நடம்புரி விமலனுர்க்கன்பர்
வள்ளல் சொக்கர்தம் நாமமே வழுத்துநா வுடையர்
கள்ளம் காமம்பொய் காய்ந்தநல் லுளமுடைச் சிலர்
தெள்ளி யார்புகழ் ஒழுக்கத்தர் சிறப்புடன் திகழ்வார். 118

வேறு

மறைகளை முறையி னெடும்நனி பயின்று
மாணனு பவம்பழுத் தவர்கள்
மறைகளை ஓத முறையுடன் தொடங்கும்
மணிநிகர் சிறுர்களை நோக்கி
இறைவனே குருவாய்த் தோன்றியிம் மறையின்
உட்பொரு ளினையெலாம் இனிதே
நிறைதவ முனிவர்க் குணர்த்திய திறத்தை
நினைந்திட வுணர்த்துவர் அங்கண். 119

ஒருவனே இறைவன் உயிரெலாம் பாசம்
ஒருவியே இறையடி யெய்திப்
பொருவில்பே ரின்ப முத்தியைப் பெறலே
புவியினிற் பிறந்ததன் பயனும்

அருமறை யனைத்தின் உட்பொருள் இதுவே
யாகுமென் றனுபவம் மிகுந்தோர்
திருவருள் விழையும் அனைவர்க்கும் உரைத்துச்
செம்மனப் பக்குவம் அருள்வார். 120

வேறு

வேதமேசிவன் கழல்களில் அணிசிலம் பாகும்
வேத மேசிவன் திருவடிப் பாதுகை யாகும்
வேத மேசிவன் இவர்ந்திடும் குதிரையு மாகும்
வேத மாமுடிக் கறிவரி யான்சிவன் என்பார். 121

வேறு

மறையவர் சிறுர்கள்பயில்
மறையொலியைச் செவிமடுத்து
நிறையெழில்கொள் பசுங்கிளிகள்
நெடுங்கிளைகள் தொறும்பாடும்
பிறைமுடித்த நெடுவேணிப்
பெருமான்றன் விளையாடல்
சிறையெழில்கொள் பூவைகளும்
செப்பிமன முருக்கிடுமால். 122

வேறு

அருமறை யவர்தம் பண்பிற் கேற்றவா றமைந்த தூய
திருவுடை மனைவி மார்கள் திருவருட் பணிகள் செய்வார்
மருவுபால் நறுநெய் தூபம் மலர்மணம் கமழும் அங்கண்
விரவுவிண் ணுலகம் போன்று விளங்குமவ் வீதி நன்றே. 123

மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்

எவ்வுயிர்க்கும் எப்பொருட்கும் எவ்வுலகுக்
கும்பதியாம் அம்மை யப்பன்
செவ்வியமீ னாட்சிசுந்த ரேசனெனும்
திருவுருக்கொண் டினித மர்ந்தே
திவ்வியசெங் கோலேந்தி எண்ணிலுல
கையும் இனிதாள் சிறப்பை இங்ஙன்
இவ்வொருநாக் கொண்டெளியேன் இயம்புதற்கா
மோ? சிறிதிங் கியம்ப லுற்றேன். 124

அருள்மதுரை மாநகரின் நல்லிதயத்
தானத்தில் அழகாய் மேவும்
அருள்திருக்கோ யிலைச்சுற்றி யேயெழிலார்
அந்நகரம் அமைந்தி லங்கும்
தெருள்அருளும் சித்தாந்தத் தத்துவங்கள்
விளங்கத்திகழ் கோபுரங்கள்
இருள்தவிர்ந்தெண் திசைபோற்ற மிகவோங்கி
நாற்புறத்தும் இலகு மம்மா! 125

வேறு

சிற்பவே லைப்பா டமைந்தினி திலங்கும்
சிறந்தகோ புரங்கள்கண் டிறைஞ்சி
பொற்பருள் அம்மை கோயில்சென் றுலெண்
சக்திமண் டபம்முதற் பொலியும்
விற்புரை நுதலாள் வல்லபை யோடும்
வேழநன் முகத்திறை யுள்ளார்
வெற்படு குகவேள் வாயிலின் வடபால்
விளங்கிநல் லருள்புரி கின்றார். 126

வேறு

இருவரையும் மனமுருகி வழிபட்டுத்
திருவருள்பெற் றினிதுட் சென்றால்
மருவுமண மலர்மாலை தொடுத்துவிற்போர்
வயங்கெழிற்பண் டங்கள் விற்போர்
விரவுமங்கா டிகள்காண்போம் அவைகடந்து
மெய்யன்பொ டுள்ளே சென்றால்
பரவுபொற்று மரைத்தடங்காண் போம்சங்கப்
பலகைநினை வெய்தும் அங்கண். 127

கடைச்சங்கப் புலவர்தமிழ் ஆய்ந்ததிறன்
கருத்திலுறக் களிப்புட் கொள்வோம்
கடைக்கண்ணேக் கருளியன்பர் வினைநீக்கி
யிடர்நீக்கிக் கலக்கம் நீக்கித்
தொடர்பவநோய் தவிர்த்தருள்செய் மீனாட்சி
நிற்கும்திருக் கோலம் கண்டுட்
படரும்அன் பினொடும் பரவிப் பக்தியுடன்
துதிபாடிப் பணிவோம் நன்றே 128

அருள்பொழியும் திருவிழிகள், அஞ்சேல்என்
றருள்புரியும் திருக்க ரங்கள்,
அருள்பெறஇங் குறுகவென அனைவரையும்
அழைக்கும்பெருங் கருணை யுள்ளம்,
அருள்ஞான னந்தமுத்தி யடைவிக்கும்
திருவடிகள் அனைத்தும் கண்டால்
தெருள்மிகும்,மெய் யன்போங்கும், அருள்பெருகும்;
செறிந்திடும்பே ரின்பம் என்றும் 129

அதிகாலை முதல்இரவு முதற்சாமம்
வரையடியார் அன்பர் கூட்டம்
துதிபாடிப் போற்றியருள் பெறும்காட்சி
சொல்லரிதாம் காட்சி யாகும்
இதயமலர் மீதமர்ந்தெந் நலங்களையும்
இனிதருளும் எம்பி ராட்டி.
பதமலரில் தோய்ந்த சிந்தை யுடையவராய்
உருகிப்பல பக்தர் நிற்பார். 130

வேண்டுவார் வேண்டுவன வழங்கியாள்
விமலையருள் பெற்ற பின்னர்
தூண்டருசெஞ் ஜோதியெனத் திகழ்சொக்க
நாதர்திருக் கோயில் செல்வோம்
சேண்திகழ்வா னவர்போற்றத் திகழ்ந்தொளிர்முக்
குறுணிகண பதியைக் கண்டு
யாண்டுமென்றும் பொலியுமவர் இன்னருள்பெற்
றீசன்திரு முன்னர்ச் சேர்வோம். 131

அறுபத்து நான்குதிரு விளையாடல்
புரிந்தஅருள் திறத்தை யுன்னிச்
செறிபக்தி யோடுருகித் தேவார
இசைபாடிப் போற்று வோரும்
மறுவற்ற பலதூய மந்திரங்க
ளோதிவழி பட்டுய் வோரும்
நிறைவுற்ற மனத்தோடு நிட்டையமர்ந்
திருப்பவரும் திகழ்வார் அங்கண், 132

மந்திரமா வதுநீறென் றருள்ஞான
சம்பந்தர் மாண்பாய்ப் போற்றும்
சுந்தரமாம் திருநீற்றின் திறமெண்ணித்
தூமனத்தொ டணியும் தொண்டர்
சந்தமுற உண்மாசு கழுவிடும்நீ
றென்றினிது சாற்று கின்ற
அந்தமில்சீ ருபநிடதக் கருத்துன்னி
அணிந்துபவப் பிணிதீர்ந் துய்வார். 133

அழகுமிகப் பொலியவமை அற்புதமாம்
சிற்பங்கள் அக்கோ யிற்கண்
விழிகளையீர்த் திடும்திறத்த வாய்த்திகழும்
வெளிப்ராகா ரத்தில் வந்தால்
மொழிப்புலமை பக்திநிறை பலர்தூய
அருளுரைகள் மொழிய மேலாம்
வழிநாடும் பக்தர்திரள் செவிமடுத்து
மகிழ்வுறுமாட் சியையும் காண்போம். 134

ஆடிவீ தியினிலமை திருப்புகழ்மண்
டபமும்அரு ளுரைக ளாற்றும்
ஈடில்மது ரைத்திருவள் ளுவர்கழக
மும்பலநற் சபைக ளும்மன்
றுடுமிறை யருட்சிறப்பை அன்பர்களுக்
கனவரதம் விளக்கி யோங்கும்
தேடருநா னிலப்பொருளும் விற்குமங்கா
டிகளுமவண் திகழும் நன்றே. 135

ஓயாது பெருகும்மக்கள் கூட்டம்அம்மை
யப்பனின்சீர் உணர்த்து மென்றும்
தேயாமெய்ப் பக்திஉயர் சிவயோகம்
பரஞானம் செழிக்கச் செய்யும்
தோயாத உளத்தினையும் தோய்வித்துத்
தூய்மையின்பம் தருமக் கோயில்
வாயாலும் மனத்தாலும் சொல்லவுன்ன
அரிதாம்மாண் புடைய தம்மா. 136

வேறு

அந்நகரைக் காண்பவர்கள் அங்குறைவோர்க் கண்டிவர்கள்
இந்நகரில் வாழ்வதனுக் கென்னதவம் செய்தனரோ
இந்நகரைக் காண்பதனுக் கெத்தவம்நாம் செய்தனமோ
எந்நகரி னரும்வந்திங் கிதுகாண வேண்டுமென்பார். 137

ஆக செய்யுள் 351

---

## 4. திருஅவதாரப் படலம்

### விநாயகர் துதி

ஏய மேதினி யின்கண் அருளொடு
தூய சற்குரு தோன்று திறம்சொல
மேய ஐங்கர மோடு மிளிர்கண
நாய கன்பதம் நாடி வணங்குவாம். 1

### குருநாதர் துதி

ஆதியாய் உலகம் அனைத்தையும் புரக்கும்
அற்புதத் திருவருட் ஜோதி
மாதரில் சிறந்த மங்கை ஆவுடைநன்
மனத்திலும் கருவிலும் தோன்றிப்
போதமும் பொலிவும் புவனிமீ தோங்கப்
புண்ணிய ராகவந் தமர்ந்தே
ஓதநீர் உலகில் உதித்துயிர்த் தொகையை
உயர்த்தருள் திறம்துதித் துய்வாம். 2

---

பூவுலகம் புரிந்ததவப் பயன்போலப்
பொலிவுறுசெந் தமிழ்நாட் டின்கண்
நாவலர்கள் போற்றுதிரு நான்மறையும்
வேய் வடிவாய் நாதன் முத்தாய்
மேவுதிரு நெல்வேலி தலைநகராய்
மிளிருமொரு மாவட் டந்தான்
ஓவரிய சிறப்புடைய தென்ன நனி
உத்தமர்கள் உரைப்பார் என்றும். 3

அழகுமிகு பொதிகையின்கண் அருள்வடிவாய்
அவதரித்த தமிழெ னும்சேய்
மழலைமொழி எழில்விளக்கி வயங்குமந்தத்
திருநாட்டில் தவழ்தல் காணின்
குழலினிது யாழினிதென் றெனஎவரும்
கூறுர்;அம் மொழிகள் கேட்டுப்
பழகியங்குள் ளவர்போலப் பேசிமகிழ்
வெய்துவர்இப் பாரோர் பல்லோர். 4

செண்பகவல் லியும் சிறந்த பூவணரும்
திகழ்கோயில் பட்டி கிழ்பால்
எண்பகர்முக் காதஎல்லை யினில் நாக
லாபுரத்திற் கிலகும் கிழ்பால்
பண்புடையர் சுரர்முனிவர் பரவிருடிப்
பட்டிநகர் பாங்காய்த் தோன்ற
மண்பரவும் உயர்சைவ வேளாளர்
மரபினிது வயங்கும் அங்கண். 5

ஊர்ச் சிறப்பு

எந்நாடும் எவ்வினமும் எம்மதமும்
எப்பொழுதும் ஏத்தும் சட்டம்
செந்நாவி னுலுரைத்துத் திருவருள்செய்
தினிதழைத்துச் செல்லும் அண்ணல்
அந்நாக லாபுரத்திற் கருகிருடி
நகரிலவ தரித்தார் என்றுல்
இந்நாவி னுலத்திருத் தலப்பெருமை
எளியேனுல் இயம்பற் காமோ? 6

இருடியர்கள் பலர் அங்கண் இருந்துதவம்
இயற்றியரு ளெய்தக் கண்டே
இருடியர்பட்டிப் பெயரால் அவ்வூரை
எல்லோரும் இயம்ப லானர்
கருதியதெல் லாம்உதவும் கடிநகராய்த்
திருவருளாம் கவின்பெற் றேங்கும்
பருதியெனப் பலதிசையும் ஒளிபரப்பும்
பண்பொடவ்வூர் பொலியும் அம்மா. 7

இறைவியுமை திருமணத்தின் போதுசிவன்
இயம்பிடத் தென்திசையிற் போந்த
குறுமுனியைக் கண்டுகளி கொண்டளவ
ளாவிடற்குக் குறித்துத் தூய
நறுமலரும் செழுங்கனியின் வகைகளும்கொண்
டிருடியர்கள் நாடிக் கூடி
நிறைமகிழ்வுற் றூர் அதனால் இருடிநகர்
எனும்நாமம் நிலவிற் றுமால். 8

வேறு

நாடிவரும் அன்பினர்க்கு நல்லஉண வினிதூட்டும்
பாடியிறைஞ் சடியவர்க்குப் பரையருளாம் அமுதளிக்கும்
ஈடில்தவப் பொலிவுமிகும் இருடியர்கட் கிடம்கொடுக்கும்
கோடியெழில் மாநகரும் குவலயத்திவ் வூர்க்கிணையோ? 9

வேறு

கம்புதினை கேழ்வரகு சோளமிவை
கதிர்நீட்டிக் கவின்செய்காலை
உம்பர்தொழும் உடையவனுக் கர்ப்பணமா
கெனப்பூமி உயர்த்தல் மானும்
அம்புவியாம் அன்னைநமக்கீந் தாளெனப்பல்
குருவியினம் அருந்திச் செல்லும்
செம்புமணித் திரள்பரப்பி யிருப்பதுபோல்
கிளர்மிளகாய் வற்றல் காயும். 10

விண்ணுலகத் தொளிர்காம தேனுவைப்போல்
பசுவினங்கள் விளங்கும் அங்கண்
அண்ணல்சிவன் இவர்விடைபோல் எருதினங்கள்
அழகாக விளங்கும் அங்கண்
விண்ணவரும் மண்ணவரும் சத்தியருள்
விழைந்தினிது செறிவார் அங்கண்
நண்ணரிய பலவளமும் மிகப்பெருகி
நனிசிறந்து விளங்கும் அங்கண். 11

அறம்பலவும் அவண்விளங்கும் பொருள்பலவும்
அவண்விளங்கும் அழியா இன்பத்
திறம்பலவும் அவண்விளங்கும் செயல்திறங்கள்
அவண்விளங்கும் செம்மை யன்றிப்

புறம்பறியா மாந்தர்கள்வாழ் இல்லங்கள்
புனிதமுடன் அவண்வி ளங்கும்
நிறம்பலகொள் மலர்களும்செங் கனிகளுமார்
நிழற்சோலை விளங்கும் அங்கண். 12

சிவனும்ஐங்க ரனும்உகக்கும் தும்பைமல
ரோடறுகு திகழும் அங்கண்
சிவனும்முகுந் தனும் உகக்கும் திருத்துளசி
எழிலோடு செறியும் அங்கண்
சிவனிடப்பா கத்தமரும் தேவியருள்
செறிவேம்பு திகழும் அங்கண்
அவமறுத்துத் தவம்நிறைத்துச் சிவம்விளைக்கும்
அருட்பொலிவும் நிறையும் அங்கண். 13

உழவுசெயும் உழவோர்கள் எருதுகளை
ஓட்டிடுநல் லோதை யோர்பால்
பழையபொரு ளினிற்புதுமைக் கவின்செய்தொழிற்
பண்புடையோர் குரல்கள் ஓர்பால்.
பழுகுதமிழ் மொழிபயிற்றிப் பாலர்களைப்
பண்படுத்தும் ஓதை யோர்பால்
குழையுமுளம் கொடுஞானக் குரவனடி
தொழுதேத்தும் குரல்க ளோர்பால். 14

அறம்விளைக்கும் உயர்சைவ வேளாளர்
பழங்குடிகள் அமையும் ஓர்பால்
திறம்விளக்கித் திருக்குரான் ஒலிமுழக்கிஸ்
லாமியர்கள் தெருவும் ஓர்பால்
மறம்விளைக்கும் வண்தேவர் குலம்நெருங்கி
வாழ்தெருக்கள் அமையும் ஓர்பால்
புறம் விலக்கிப் புகழ்விளக்கும் குடும்பன்மார்
பொலிந்திலங்கும் தெருக்கள் ஓர்பால். 15

எத்தகைய சிறுகுறைகள் எவரிடத்தில்
நிகழ்ந்தாலும் இகவாழ் வின்கண்
எத்தகைய சிக்கல்சமு தாயத்தில்
ஏற்படினும் இனிது கூட்டி
ஒத்தகருத் துடையவராய் உரையாடிச்
சீர்திருத்தம் செய்தவ் வூரை
மெத்தமகிழ் வொடுபேணும் மூதறிஞர்
பேரவையும் மேவும் அங்கண். 16

வேறு

மணமிகுந்த மலர் எடுத்து மாலைபல தொடுப்பவரும்
கணபதிக்கு மெய்யன்பாற் கடிமலர்கள் சூட்டுநரும்
உணவெடுத்து நிவேதனம்செய் துத்தமருக் களிப்பவரும்
கணவனையே கடவுளெனக் கருதுநரும் அவணுளரால். 17

நாணுளும் வருவிருந்தை நன்றினிது வரவேற்றுக்
கோணுமெய் யன்பினொடும் உபசரித்தின் னமுதூட்டி
வாழ்நாளை வீணுக்கா தருள்நாடி வாழுநருக்(கு)
ஊணுதி யாவும்அளித் தோம்பிடுவோர் அவணுளரால். 18

வேளாளர்

கலைபலவும் தொழில்பலவும் வளர்ச்சியுற்று
வருமந்தக் கவினூர் ஊரில்
தலைசிறந்த தொழில்உழவுத் தொழிலெனக்கொண்
டதுபேணும் தகவு சான்ற
நிலையுடைய வேளாளர் திருமரபு
நேமமுடன் நிகழ்தல் நோக்கி
அலைகடலை உடையெனக்கொள் அவனியுளோர்
அனைவருமே புகழ லானார். 19

பொய்மொழியார் புலைவிழையார் பொல்லாங்கொர்
அணுவளவும் புரிதற் கொவ்வார்
மெய்வழியே எந்நாளும் நலம்புரியும்
எனக்கைக்கொளும் மேன்மை மிக்கார்
உய்வழிமெய் யன்பறம்நல் லொழுக்கமுயர்
பத்தியென உட்கொண் டோம்பிச்
செய்வதையெல் லாம் இறைவர்க் கர்ப்பணமாய்ச்
செய்துதிகழ் செம்மை மிக்கார். 20

இல்லறமே நல்லறமாம் எனப்போற்றி
எப்பொழுதும் இறைவற் பேணிப்
பல்லறமும் பாங்கோடிப் பாரில்வளர்த்
தன்பொடருட் பண்பு போற்றி
சொல்லிலறம் நினைவிலறம் செயலிலறம்
தவறாத தூய ராகி
நல்லறமிக் குடையரென நல்லவர்கள்
நவிலஅருள் நாடி வாழ்வார். 21

வைகறையில் துயில்நீத்து, வையமிசை
வாழுமுயிர் வகைக ளெல்லாம்
உய்களெனப் போற்றிஉயிர் கட்கனைத்தும்
அமுதமென உதவும் மாரி
பெய்களென வாழ்த்திஅருட் பெருமான்றன்
பதம்உளத்திற் பேணி ஏத்திக்
கைகுவித்து வணங்கியெழிற் கலப்பையுடன்
காடுகழ னிக்குச் செல்வார். 22

பூத்தமலர்ப் பொகுட்டிலுறை புங்கவன்போல்
பலவினைவும் பொலியச் செய்வார்
காத்தருளும் கண்ணனைப்போல் காசினியிற்
பயிரையெலாம் காவல் செய்வார்
ஆத்திமலர் அணியரன்போல் அறுவடைசெய்
தருட்செயலுக் காக்க மீவார்
சீர்த்திநிறை வேளாளர் திறத்தையெளி
யேன்போல்வார் கிளத்தற் காமோ? 23

கள்ளமிலா உளம்படைத்தார் கபடமிலா
உழைப்புடையார் கழனி காட்டில்
எள்ளளவும் சோம்பலின்றி எப்பொழுதும்
உழைத்திடல்கண் டியற்கை யன்னை
வள்ளலெனப் பருவமறிந் தருள்மாரி
பெய்துதவ மகிழ்வு நெஞ்சில்
துள்ளவிளை பொருள்களைநற் பாண்டிலின்கண்
தூர்த்திலத்திற் சேர்த்து வாழ்வார். 24

அன்பர்நண்பர் களுக்குதவி ஆலயத்துக்
கறவோர்கட் களித்துற் றூர்க்கும்
தென்புலத்தர் கட்கும் விருந் தினர்க்கும்மகிழ்
வொடும்பகிர்ந்து சீர்சால் கல்வி
இன்பநலம் விளைக்குமெனக் கல்விநிலை
யங்களுக்கும் ஈந்து பேணித்
துன்பம்அணு வும்தொடரா வகையிலருள்
வாழ்வாற்றி இன்பம் துய்ப்பார் 25

சத்தியமே தம்துணையாய்த் தார்மிகமே
தம்நெறியாய்ச் சாந்தி யெய்த
நித்தியமும் உழைப்பவராய் நேர்மைமிக
உடையவராய் நீதி நாடிப்
பத்தியமாய் அன்பறம்கொல் லாமைபொறை
பரநாட்ட மாதி பேணி
முத்திபெறு வேட்கையுடன் மூதுலகில்
வேளாளர் முயல்வா ரன்றே. 26

செம்மையெலாம் செறிந்துநலம் சிறந்தவர்கள்
அனைவோர்க்கும் சிறப்புச் செய்வார்
வெம்மையெலாம் தவிர்த்துநல்லோர் விழைவதெலாம்
அறிந்தளிக்கும் விருப்பம் மிக்கார்
மும்மைமலம் கடந்தஅரு ளாளருக்குத்
தமையளித்து மோன மேற்பார்
அம்மையப்பன் போலுயிர்கட் கருந்துணையாய்
அமைந்தவர்வே ளாளர் அம்மா. 27

பண்பாளர்

புகழ்மகளும் புவிமகளும் பொறைமகளும்
பூமகளும் பொலிவார் அங்கண்
இகழ்வறியா தெத்தொழிலும் இனிதியற்றும்
இயல்புடையோர் பலராம் அங்கண்
அகழ்பவரைத் தாங்குநிலம் போன்றருளிரும்
அருளாளர் பலராம் அங்கண்
திகழ்இறையை எங்கணும்காண் செம்மைமிகும்
சீரியர்கள் பலராம் அங்கண். 28

எண்ணான்கு வகையறமும் இயல்பாகப்
பேணும்நலோர் இருப்பார் அங்கண்
பண்ணாகப் பைந்தமிழைப் பாடுநரும்
பகர்பவரும் இருப்பார் அங்கண்
உண்ணாடி நோக்குநரும் உயர்தவத்தில்
ஓங்குநரும் இருப்பார் அங்கண்
எண்ணாமல் பேசாமல் அசையாமல்
அருள்பெறுவோர் இருப்பார் அங்கண். 29

வினைப்பற்று தவிர்த்தருளின் வினைவொன்றை
மிகநாடும் வேட்கை மிஞ்சி
நினைப்பற்று மொழியற்றுச் செயலற்று
நிறைதவம்செய் திடச்சார் மேலோர்
தனைப்பற்றிப் பிறர்யாரும் அறியாத
வணம்அங்குத் தனிமை நாடி
முனைப்பற்றவ் வூர்தேடி வந்தடைந்து
முதிர்தவத்தில் முயல்வார் அங்கண். 30

சந்ததமும் மனக்குரங்கின் குதிப்படக்கும்
தகவுடையோர் இருப்பார் அங்கண்
இந்து மண்ட லத்தினமு தினிதருந்தி
இளைப்பின்றி இருப்போர் அங்கண்
சந்தமறை பலஉணர்ந்தா கமமுணர்ந்து
சாந்திபெற்றுத் திகழ்வோர் அங்கண்
பந்தமெலாம் பறக்கவிட்டுப் பரன்பதத்திற்
பதித்தமன முடையோர் அங்கண். 31

மாயமெலாம் கடந்தருளின் வழிகண்ட
மாண்பினர்கள் வதிவார் அங்கண்
காயமிதே கோயிலெனக் கண்டுமனம்
கனிந்தவர்கள் அமைவார் அங்கண்
தேயமெலாம் தொழுதேத்தும் சிறப்புடைய
சீரியர்கள் திகழ்வார் அங்கண்
நேயமெலாம் பரர்க்காக்கி நிறைமொழியால்
மறையருள்மெய்ந் நிலையோர் அங்கண். 32

சக்தி ஆலயம்

அத்தலத்திற் கீசான நற்றிசையில்
ஆரணம்ஆ கமங்க ளெல்லாம்
மெத்தமகிழ் வோடுமிக மிகப்போற்றும்
மெய்ப்புகழே மேனியாக்கொள்
சக்திஅருள் திருவுருவோ டமர்ந்தருளித்
தாரணிக்கின் னருள்செய் தோம்பும்
உத்தமநல் லருளெழிலார் திருக்கோயில்
ஒன்றினிதே ஒளிரும் அங்கண். 33

சித்தமிசை யுறுகுறைகள் தீரவெண்ணிச்
செல்பவரும் செல்வம் கல்வி
மெத்தநிறை வுறவேண்டிச் செல்பவரும்
மேனிநலம் மிக்க கீர்த்தி
இத்தரையில் பெறவேண்டிச் செல்பவரும்
இகமோடு பரமும் எய்தச்
சுத்தமனத் தோடுசெலும் தூயருமாய்
நாளும்அவண் சூழ்வார் பல்லோர். 34

திருமரபு

அனைத்துலகும் திருவருளால் ஆக்கியளித்
தழித்துமறைத் தருள்செய் யம்மை
வினைத்தொகையை நீக்கிஉயிர் வகைக்கருளி
விளங்குமந்தத் திருக்கோ யிற்கே
அனைத்துயிரும் நலமடையத் தினந்தோறும்
உயர்பூசை யாற்றி வாழும்
வினைக்குரியர் அருட்குரியர் விழுச்செயல்கட்
குரியர்அவண் விளங்க லுற்றார். 35

பெற்றோர்

நலஞ்சிறந்த வீரபத்ரப் பிள்ளையுடன்
ஆவுடை நன் னங்கை இந்தத்
தலஞ்சிறந்த பல்லறமும் வளரஉயர்
தகவுடை இல்லறம் நடாத்திக்
குலம்சிறக்க இருமூன்று குழந்தைகளை
யீன்றுகளி குலவப் பேணி
இலம்சிறக்க அம்மரபு சிறக்கஅரு
ளெழிலோடும் இலங்கி னாரே. 36

அருட்குருவாய்ப் பரம்பொருளே அவர்வயிற்றிற்
புகுதஅரு ளுளம்கொள் வாரேல்,
இருட்களங்கம் இரிந்திடவும் எழிற்பானு
உதிப்பதுபோல் இறைவர் தோன்றிப்
பொருட்குலவும் புனிதநெறி பூவுலகிற்
களித்திடவும் போதம் சான்ற
தெருட்குலமோங் கிடவும்அவர் செய்தவத்தின்
திறத்தையிவண் செப்பற் காமோ? 37

வேறு

ஒழுக்கத் தில்மிக் குயர்ந்த அவர்களின்
பழக்கம் யாவும் பரன்பதம் நாடுமாம்
இழுக்க மொன்று மிலாஅவர் இல்லத்தில்
குழுக்க ளாய்அடி யார்நிதம் கூடுவார். 38

இறைவி பூசை முறையொ டியற்றியே
குறையு டையர் குறைகளைப்போக்கியும்
நிறைந லம்தந்தும் நீள்பிணி நீக்கியும்
கறையில் தூய கவின்பெற் றுளிர்வரால். 39

அன்பு பொங்கும் அவர்களில் வாழ்வினில்
இன்ப மென்றும் இலங்கி நிறைந்திடும்
பொன்பு கழ்பொறை யாவும் பொலிவுறும்
மன்பதை நிதம் வாழ்த்தி மகிழுமால். 40

அறம்அ னைத்தும் அவண்சிறந் தோங்கிடும்
திறம்அ னைத்தும் செறிந்தவண் மேவிடும்
புறம்அ கம்புனி தம்பெற் றவர்செய்இல்
லறம்நன் றென்ன அவனி புகழுமால். 41

யாவ ருக்கும் உதவும் இயல்பினர்
தேவர் கட்குச் சிறப்புச்செய் செம்மையார்
மூவ ரும்அறி யாத முழுமுதல்
தேவ னைப்பெறச் செய்தவம் மிக்குளார். 42

செப்பு தற்கரி தான திருவருள்
ஒப்பு யாவில் ஒளியிவர்க் கூட்டவும்
எப்பொ ழுதுமில் லாஎழி லார்அருள்
இப்பொ ழுதிவர்க் கெய்திய துண்மையே. 43

அருட் கனவு

ஆங்கொர் நாளில்நல் லாவுடை யம்மையார்
தூங்கும் போதினில் ஜோதி யொளியொன்று
தீங்கி லாத்தன் திருவயிற் றுட்புகல்
ஓங்கின் போடுகண் டுள்மகிழ் வெய்தினர், 44

வாழ்வின் நற்றுணை யான மகிழ்நரும்
தாழ்வில் இந்தத் தனிப்பெருஞ் செய்திகேட்(டு)
ஏழ்பி றப்பில் இயற்று தவப்பயன்
கேழ்கி ளர்ந்திவண் கிட்டிய தாமென்பார். 45

இருவ ரும்மகிழ் வெய்தித் தினந்தொறும்
திருவ ருளின் திறத்தினைப் போற்றியே
கருவி லுள்ள கடவுட் குழந்தையால்
திருவ ருள்இச் செகத்தில் வளர்கென்பார். 46

முன்னம் அவ்வன்னை மூவிரு சேய்களைத்
தன்ன கட்டினுள் தாங்கின ராயினும்
பன்ன ரும்சிறப் பொன்றிப் பருவத்தில்
தன்ன கத்துள் தழைவ துணர்ந்தனர். 47

அருட் கரு வளர்தல்

மணமிகுநன் மலர்களொரு வத்திரத்துள்
இருந்தாலும் மணம்வீ சல்போல்
குணமிகுநல் லாவுடைய நங்கைதிரு
வயிற்றின் அருட் குழந்தை யின்தூ
மணம்அவ்வனை முகத்தினிலும் மேனியிலும்
அருளொளியாய் வயங்கல் கண்டு
வணமிகுமிப் பூவுலகில் வதியறிஞர்
வாயார வாழ்த்த லானார். 48

வேறு

அன்னை யின்முகத் தார்ந்த ஒளியையும்
பொன்னு டம்பிற் பொலிபுத் தொளியையும்
நன்ன லம்செறி நானிலத் தோர்கண்டுள்
மன்னும் சேய்அருள் மாண்புடைத் தாம்என்பார். 49

உள்ளத் தின்பும் உடலினிற் பூரிப்பும்
மெள்ள மெள்ள வளர்ந்திடும் மெய்ம்மையைக்
கள்ள மின்றிக் கருத்தில் உணர்ந்தருள்
வள்ளல் தன்திறம் வாழ்த்தி வழுத்துவார். 50

தன்னுட் பொங்கும் தனிப்பே ருவகையும்
மன்னு மாநிலத் தார்சொல் வசனமும்
தன்னுள் தோன்றும் தனிப்பெருங் காட்சியும்
அன்னைக் கின்னும் அருளொளி கூட்டிற்றே. 51

இச்சி றப் பினைக் கண்ட இல் லாளரும்
உச்சி மேற்கரம் ஓங்கநன் றேத்தியே
சச்சி தானந்த வத்துவின் தண்ணருள்
நச்சி நற்றுணை யாகென நாடுவார். 52

ஊரு ளோரும் உறவினர் யாவரும்
பாரு ளோரும் பரவிப் புகழ்ந்திடச்
சீரி ளங்கதிர் போலத் திருவருள்
ஏரி லங்கு கருவுரு வெய்திற்றால். 53

திரு அவதாரம்

அமரர்களும் முனிவர்களும் அலர்மாரி
சொரிந்துமிகும் அன்போ டேத்த
இமயமயி லொடும்அரனும் இலக்குமியும்
திருமாலும் இபமான் வள்ளி
குமரன்அயன் கலைவாணி கணபதிவல்
லபைமுதலோர் குழுமி வாழ்த்தச்
சமயசம ரசம்விளக்கிச் சட்டம்அருள்
குருவரவைத் தக்கோர் போற்ற. 54

வானம்முகில் மறைப்பின்றி வாள்நீல
வொளியோடு வயங்கி யங்கண்
தானமிழ்த மாகவொளிர் தண்மழையின்
துளிதூவத் தண்கால் வீச
மோனமிகு முத்தர்அரு ளாசிசொலச்
சித்தர்துதி மொழிந்து வாழ்த்த
ஊனமில்நற் சட்டநெறி தருகுருவே
வருகவென உயர்ந்தோர் போற்ற. 55

மயற்கைகொளும் மக்களெலாம் திருந்திடவும்
தூய்மைஅருள் வாய்மை சாந்தம்
நயத்தகுநன் முறையில்நனி வளர்ந்திடவும்
ஞானம்அன்பு நோன்மை யாவும்

வியத்தகுமிப் புவியில்மிகுந் திடவும்அருட்
சட்டநெறி விளம்பும் மேலோன்
சயத்தொடிவண் வருகவென இயற்கையனை
வரவேற்பு தந்து போற்ற. 56

மறைகளெலாம் போற்றஎண்ணில் ஆகமமும்
சாத்திரமும் வாழ்த்திப் போற்றக்
கறைகளெலாம் தவிர்த்தினருட் கருணைநெறி
காட்டிநன்ருள் இறையே! ஞானத்
துறைகளெலாம் போற்றஅரு ளாளரெலாம்
போற்றநினைச் சூழும் அன்பர்
குறைகளெலாம் போக்கிஇன்பம் கொடுத்தருள்சற்
குருவே!என் றறிந்தோர் போற்ற. 57

வேறு

கற்றநான் மறையோர் கழகமும் வாழ்த்தக்
காசினி மீதுவாழ் வாற்றற்
குற்றவெண் ணில்லாச் சரவசரங்க
ளாமேனும் உயிர்த்தோகை வாழ்த்தப்
பற்றெலாம் விடுத்து முற்றிலும் துறந்த
பரமயோ கியரேலாம் வாழ்த்தக்
குற்றம்நீத் தருளைக் கொழிக்கும்மெய்ஞ் ஞானக்
குழந்தையாய்க் குருஅவ தரித்தார். 58

வேறு

கலைவிளங்கக் காசினியிற் கற்றவரும்
கல்லாரும் விளங்க ஞான
நிலைவிளங்க உண்மையன்பு நெறிவிளங்க
நேமநிட்டை விளங்கத் தீய
புலைவிளங்கு நெறிதவிர்ந்து புனிதநெறி
பேணியிந்தப் புவிவி ளங்க
அலைவிளங்கு கடலனைய மனமடங்க
அருள்விளங்க அவத ரித்தார். 59

தனம்வளரத் தொழில்வளர அறம்வளரப்
புகழ்வளரச் சாந்தி நாடும்
மனம்வளர மனத்துளமை யன்பொடின்சொல்
மாண்புபொறை வளரச் சான்ருேர்

இனம்வளர நற்கருணை இயல்வளர
இசைவளர என்றும் எங்கும்
அனம்வளர அருள்வளர அகம்வளர்க்கும்
அண்ணல்அவ தாரம் செய்தார், 60

திரு அவதார தினம்

கலியுகம் நாலாயிரத்தோ ராயிரத்தைம்
பத்தேழில் கருணைச் சேயாய்
நலிவில்நள நல்லாண்டில் புரட்டாசி
இரண்டாம் நாள் நண்ணு சேவ்வாய்
பொலியும்வளர் பிறைதுதியை ரேவதியில்
மகரமேனும் புனித ஓரை
மலிவுறுநல் லருள்கொழிக்க மாநிலத்தில்
வள்ளலவ தாரம் செய்தார்; 61

மலர்முகமும் மலர்விழியும் மதிக்கொழுந்து
நிகர்நுதலும் மலர்நேர் வாயும்
மலர்க்கரங்க ளிரண்டும்மல ருந்தியும்செம்
மலர்ப்பாத மிரண்டும் தூய
மலர்த்தாது மணம்கமழும் மேனியும்மா
ணருளெழிலும் கண்டு வந்தே
மலர்க்கரத்தால் எடுத்தன்னை மகிழ்நன்கரத்
தினிதளிக்க மகிழ்ந்தார் தந்தை. 62

மங்களமாய் வையகத்தை வாழ்விக்க
வந்தஅருள் மணியே ஞானச்
செங்கதிரே அருட்கருணைத் திருவமுது
பொழிமதியே திவ்யா னந்தம்
பொங்குதனிப் பெருங்கடலே பொன்னேஎம்
நவமணியே போகம் யாவும்
எங்கும்எவ ரும்பெறச்செய் இணையிலருட்
பெருந்திருவே வாழ்க என்றார். 63

சீரார்செந் தமிழ்நாடு செய்தவத்தால்
அவதாரம் செய்த தேவே
ஏரார்அன் னையின்கனவில் எழிற்சோதி
எனக்காட்சி யீந்த தேவே

பாராள எம்குழவி எனப்போந்தெம்
பவம்தீர்த்த பண்பார் தேவே
காராளர் குலவிளக்கே கருணைநிறை
வேவாழ்க களிப்போ டென்றார். 64

கதிரவனே இச்சேயின் கணிப்பிலருட்
கதிர்க்குறைளி நிகரோ என்பார்
மதிநிலவே இச்சேயின் வதனவொளிக்
கிணையாவா யோநீ என்பார்
பொதிகைதரு தென்கால்நீ இம்மகவு
புரிகருணைக் கிணையோ என்பார்
அதிமதுரத் தமிழேநீ இவ்விளஞ்சேய்
அருள்மழலைக் கிணையோ என்பார். 65

வாழ்த்தல்

உருவொடிவ் வுலகம் தோன்றிய நாள்தொட்
டுண்மையன் போடிவண் உதித்த
திருவரு ளாளர் அனைவரும் உலகில்
செய்திடற் கெண்ணிய செயலைத்
திருவரு ளாற்றல் கொண்டிவண் செய்யத்
திருவவ தாரம்செய் துள்ள
உருவளர்சேயை அவ்வரு ளாளர்
குழுவெலாம் வாழ்த்தியுள் ளுவந்தார். 66

முன்னம் இவர் மாதாவின் திருவயிற்றிற்
கருவாக முளைத்த ஞான்றே
அன்னையிடம் ஒப்புயர்வில் அருளொளிகண்
டகம்களித்த அறிஞ ரெல்லாம்
தன்னிகரில் அருளழகு தழையும்இந்தத்
தனிச்சேயைக் கண்டு போற்றி
முன்னையினும் பன்மடங்கு மகிழ்ந்தவராய்
அருளாசி மொழிய லானார். 67

உலகில்எந்தக் குழந்தையிடத் தினும்காண
வொண்ணாத உயர்ந்த தோற்றம்
இலகுமிந்தக் குழந்தையொளி முகத்தினிலும்
மேனியிலும் இருத்தல் நோக்கிப்

பலகுழந்தை களைப்போல உழல வந்த
தன்றிது பார்மீ தன்பு
நிலவவைத்து நிட்டையின்பம் கூட்டுவிப்ப
தென்றறிஞர் நினைந்தார் சொன்னர். 68

உழலவந்த குழந்தையல உயிரையெலாம்
உய்விக்க வந்த ஞான
அழலுருவம் அன்புருவம் அருளுருவம்
அழகுருவம் அமைந்த தென்ன
நிழலெனஇப் புவிக்கமைந்து நிகரில்நெறி
யருளவந்த நிமல ஜோதி
மழலைமொழிக் குழவியுருக் கொண்டுதித்த
மாண்பறிந்தோர் வணங்கிச் சென்றார். 69

தேவருக்கும் மூவருக்கும் சிறந்ததவ
முனிவருக்கும் சீலம் சான்றோர்
யாவருக்கும் உணர்வரிதாய் இலகும்அருட்
பெருஞ்ஜோதி இவ்வை யத்தில்
மேவுமுயி ரனைத்தினுக்கும் அருள்நெறிதந்
தின்பூட்டி விளங்கச் செய்ய
ஆவுடைநல் லனைசேயாய் வரும்எளிமைத்
திறம்உரைக்க அடியேற் காமோ? 70

இருளுலகில் அடிமைசெயா தெவரையும்ஆட்
கொளும்அரசாம் இச்சே யென்பார்
மருளுறுமன் பதைக்குயர்ந்த வாழ்வருளி
அருளரசாள் மன்னன் என்பார்
தெருளுறுநன் னெறியுணர்த்தி நமையழைத்துச்
செல்லவந்த தெய்வம் என்பார்
அருளுருக்கொண் டிவண்போந்த ஆரியன்என்
பார்குழந்தை யழகைக் காண்போர். 71

நிலவுலகு செய்தவமோ நிகரில்தமி
ழகத்தவமோ நேமி மீதில்
இலகுசைவ வேளாளர் திருமரபோர்
இயற்றுதவப் பயனோ முன்னாள்

அலகிலரு ளாளரெலாம் கண்டகனை
வின்பயனே அடிய ராவோர்
பலபிறவி களிற்புரிந்த தவப்பயனே
எனப்பலரும் பரவ லானார். 72

உண்மையன்பின் திருவுருவோ உயரறத்தின்
திருவுருவோ ஒப்பில் சக்தி
பெண்மையுரு நீத்தானாய்ப் பெருநிலத்திற்
பிறந்தனளோ பெரியோ ரெல்லாம்
திண்மையுறச் செய்ததவத் திருவுருவோ
திருவருளின் உருவோ என்ன
மண்மிசையும் விண்மிசையும் மல்குபல
ரும்புகழ்ந்து வழுத்த லானார். 73

இன்னவகைப் பலவாறாய் இளஞ்சேயைக்
கண்டவர்கள் இயம்பக் கேட்டும்
மன்னுமிளங் குழவிமுக மாணொளியும்
வண்மேனி யெழிலும் கண்டும்
அன்னையுளம் மகிழ்ததும்ப அத்தனுளம்
களிசிறக்க அவ்வூர் மாந்தர்
பன்னரிய உவகைகொள அருளிளஞ்சேய்
பாரின்மிசை திகழ்ந்தா ரன்றே. 74

உற்றடுத்துப் பார்ப்பவர்கள் எல்லோரும்
உவந்திவ்வா றுரைப்பக் கேட்டுப்
பெற்றெடுத்த அன்னையுளம் தந்தையுளம்
பெருமகிழ்வாற் பிறங்க லுற்ற (து)
எற்றெனச்செப் பிடற்காமோ அக்குடும்பத்
தவர்மகிழ்வும் இயம்பற் காமோ
நற்றவம்செய் அம்மரபோர், ஊரார்எல்
லாம்மகிழ்வு நயந்தார் அன்றே. 75

நன்னீ ராட்டல்

உயிர்களெலாம் வைகறையில் தண்ணீரில்
ஆடிஉயர் வுறுக என்றே
பயிர்களெலாம் வளரநன்னீர் பாய்ச்சும்உழ
வனைப்போலப் பக்தர் தம்மை

அயர்வறநல் லருளாற்பா லிக்கவந்த
அருட்குருவை அன்பாற் போற்றி
உயர்புனலும் நனிவணங்கி உவகைகொள
ஒருசேய்நீ ராட லானார். 76

காப்பு

அருநீரில் திருநீறும் மலர்மணமும்
அணிதுளப மணமும் சேர்த்துக்
கருநீர்மை தீர்த்தருளிக் கருணைசேயக்
காசினிக்குப் போந்த சேயை
அருள்நீரி லாட்டியருள் திருநீற்றுக்
காப்பணியும் அணிவி ழாவைப்
பெருநீர்மை யோடுபெற்றார் உற்றார்ஊ
ரார்நடத்திப் பெரும்பே றுற்றார். 77

அருட்குழந்தை பிறந்ததுன்னி அகமகிழ்ந்து
பன்னருமெய் யன்பி னேடும்
பொருள்பலவும் பலர்க்கும்நனி பகிர்ந்தளித்தும்
ஊர்முழுதும் புனிதம் செய்தும்
இருள்விலக்கும் மணித்தீபம் ஏற்றுவித்தும்
பலமலர்கொண் டெழில்செய் வித்தும்
தெருள்விளங்கு சேய்க்குநன்னீ ராட்டுவித்தும்
திருநீற்றுக் காப்புச் செய்தார். 78

அருளுருவம் எனத்திகழும் அம்பிகையின்
அருட்கருணை அழகார் ஞான
குருவெனஇக் குவலயத்திற் போந்தஇந்தக்
குழந்தையினைக் காக்க என்றும்
விரவு முண்மைப் பக்தியுடன் வீட்டில்நிதம்
போற்றிடும்விக் னேசன் இந்தத்
திருமகவைக் காக்கவென்றும் செப்பியருள்
திருநீற்றுக் காப்புச் செய்தார். 79

அனைத்துநலங் களும் உதவும் திருநீற்றை
ஆருயிர்கட் கள்ளித் தந்து
நினைக்குமுனர் வரமளிக்கும் நிமலர்பரி
பூரணரை நினைந்து பூசி

அனைத்துநலங் களும்பெறுகென் றருளவந்த
ஆரியனார் மேனி மீதில்
அனைத்தெழிலும் உடைத்தாகி அருள்திரு நீ
றமைந்தருளாற் பொலிந்த தன்றே. 80

வேறு

எழுதொ ணாத எழில்மிகு சேயைக்கண்(டு)
உழுதி டும்செய லுள்ளவர் யாவரும்
பழுதி லாநற் பரன்வடி விதெனாத்
தொழுது வாழ்த்தித் துதித்து மகிழுவார். 81

நூறெ னும்வய துற்றநன் றோன்னமயர்
சாறெ டுக்குமில் சார்ந்தருட் சேய்க்கருள்
நீறெ டுத்துநன் னெற்றியி லிட்டருள்
வீறெ டிச்சேய் விளங்குமென் றோதினார். 82

மண்க ளிக்க வரும் அருட்சேயினைக்
கண்க ளிக்கக்கண் டுரார் மகிழ்ந்தனர்
பண்க ளிக்கப்பல் பாடல்கள் பாடினார்
விண்க ளிக்க வியன்நட மாடினார். 83

தமிழ கம்செய் தவப்பய னாலிவண்
அமிழ்த மொத்த அருட்சேய் உதித்துளார்
சமயச் சண்டை இனச்சண்டை தீர்ந்துநற்
சமர சத்துறை யோங்கும் இனியென்பார். 84

கருணை மேவிரு கண்களின் நோக்கமும்
அரண மாயமை ஆனந்த மேனியும்
சரண பங்கயத் தாமரைத் தாள்களும்
அருள்ந நலம்பெருக் கக்கண்டா னந்தித்தார். 85

ஜோதி காட்டும் சுடரொளி மேனியும்
நீதி காட்டிடும் நெற்றியின் நேர்மையும்
பூதி காட்டும் புனிதக் கரங்களும்
ஏதம் தீர்த்தருள் செய்யுமென் றின்புற்றார். 86

தார ணியைத்தி ருத்திடப் போந்தஇப்
பூர ணச்சேயைக் காணநம் புண்ணியம்
கார ணம்மென எண்ணிக் களித்தனர்
ஆர ணப்பொரு ளோர்ந்த அறிஞரே. 87

வான வர்மலர் மாரி பொழிந்தனர்
ஞானி யர்சொல் மலர்கொடு வாழ்த்தினர்
ஊனு டல்கொள் உயிர்களுக் கொப்பில்மெய்ஞ்
ஞான மூட்டவந் தாரிவ ரென்னவே. 88

காவல் செய்துயிர் கட்கருள் பெய்திட
மேவு மிந்த வியனருட் சேயினை
நாவ லோர்கண்டு நன்று துதித்தனர்
பாவ லோர்கண்டு பாடிப் பராவினர் 89

ஓமு ருக்கொண்ட உத்தமன் தண்ணருள்
பூமி மீதிலிச் சேயெனப் போந்ததோ
நேமம் யாவும் நிலத்தில் துலங்கிடும்
ஆம ருள்பொருள் யாவும்நமக் கென்பார். 90

மலரெ டுத்து மகிழ்வொடு தூவுவார்
இலகு நல்லிசை பாடியின் பெய்துவார்
உலகெ லாம்இவ் வுயர்மக வின்புகழ்
நிலவு மென்ன நிறைமகிழ் வெய்துவார் 91

சட்ட மென்றுளிர் தக்க நெறிதரத்
திட்டம் தீட்டி இவண்வரும் சேயினை
அட்ட திக்கும் தொழுதரு ளையனே
இட்ட மோடெமைப் பேணுகென் றேத்திற்றே. 92

அரஹ ராவென ஆர்த்தனர் அன்பர்கள்
பரவு வாரொடும் பாடினர் பக்தர்கள்
கரம லர்கள் குவித்துக் களித்தனர்
வரம ருள்சிசு வாழ்கபல் லாண்டென்றார். 93

## திருப்பெயர் சூட்டல்

தூயஅரு ளழகுகண்டோர் சுப்ரமண்யம்
எனும்நாமம் சூட்டிப் போற்ற
ஏயநவக் கோள்நிலைகள் உணர்ந்தோர்ஜா
தகக்குறிப்பை எழுதிப் போற்ற
மேயஉளப் பண்புடையோர் மெய்க்குருவந்
துளரென்ன விளம்பிப் போற்ற
நாயகனெ ரிளஞ்சேயாய் வடிவெடுத்து
ஞாலமிசை வளர்ந்தா ரன்றே. 94

வளங்குலவு பயிர்வளர விளைவுமிக
வாணிபமும் வளர வேந்தர்
களங்குலவு போரகற்றிக் கருணையினல்
உலகாளக் களங்கம் காணு
இளங்குதலை மொழிபயில்சே யினம்வளர
அருள்வளர எண்ணி நோற்போர்
குளங்குலவு ஞானவிழி யொளிவளரக்
குழந்தையென வளர்ந்தார் அண்ணல். 95

## செங்கீரை

ஆவெனவும் ஊவெனவும் அம்மெனவும்
உம்மெனவும் அச்சேய் கூறின்
மேவுமகிழ் வெய்தியரு ளுபதேசம்
பெற்றவர்போல் மெய்ம் மறந்தே
தேவர்தொழும் தேவனிந்தச் சேயைநனி
காத்தருள்க! என்று வாழ்த்தி
ஓவறுநல் லுவகையுடன் எடுத்தன்போ
டுச்சியைமோந் துவப்பார் பெற்றோர். 96

கைம்மாவின் முகமுடைக் கணேசர் அருள்
காசினிக்கு வழங்கிச் சூழும்
வெம்மாயை நீக்கிஉயர் வீட்டுநெறி
காட்டவந்த விமலன் வாயால்
அம்மா அப் பாஎனும்சொல் கூறிடவும்
அன்னைதந்தை உற்றார்,எல்லாம்
செம்மாந்(து)அச் சேயையெடுத் தணைத்துமுத்தம்
கொடுத்தாசி செப்ப லுற்றார். 97

உலகிலுற்ற ஏனைமக வினைப்போல
உழல வந்தோ மல்லோ மென்ன
இலகுபெருங் கருணையினால் இனிதுணர்த்தல்
போல்நிலத்தி லிருகை யூன்றி
நிலவுமொரு கால்மடக்கி யொருகாலை
நீட்டியெழில் முகம சைத்தே
அலகிலருட் புன்னகைபூத் தண்ணலார்
செங்கீரை யாட லானார். 98

தேவர்களும் தெரிவரிய திருவருள்திட்
டப்படியிச் செகத்தில் வந்தோம்
ஜீவர்களின் நிலைபோல எண்ணுதற்கும்
செப்புதற்கும் இடமே யில்லை
யாவருமீ துணர்மினென எச்சரித்தல்
போல்முகத்தை யினித சைத்தே
காவல்செய வந்தஅருட் கவினிளஞ்சேய்
செங்கீரை யாட லானார். 99

அழகியநற் றமிழ்மொழியில் ஓரிருசொல்
அருளிளஞ்சேய் அமுத வாயால்
மழலைமொழி யினிற்கூறக் கேட்டவர்கள்
யாவருமே மகிழ்வு கூர்ந்து
குழலிசையும் யாழிசையும் கோகிலத்தின்
குரலுமிதற் கிணையன் றென்ன
அழலிலுறு மெழுகெனநன் றகமுருகி
யானந்த மடைந்து நின்றார். 100

தால்

ஊணுறக்கம் ஏதுமின்றி உலகையெலாம்
ஒருகுறையு மின்றி நன்றே
பேணுமொரு பெரிய பொருள்
ஒருகுழந்தை வடிவிலிவண் பிறந்ததாலே
மாணுறுநன் மகிழ்வி னொடும் மாதாவும்
ஏனையரும் வளமார் தொட்டில்
ஏணுறநன் றமைத்திளஞ்சே யினைவளர்த்தித்
திருத்தாலாட் டியம்ப லுற்றார். 101

அருட்சோதி வடிவாக எனுட்போந்திங்
கவதரித்த அருட்சீ ராளன்
இருட்கூட்டம் விலக்கவந்த இறைவனிளஞ்
சேயாகித் துயில்கொள் கின்றான்
தெருட்கூட்டும் இசையோடு கிளியினங்காள்
குயிலினங்காள் செய்விர் கீதம்
மருட்போக்கும் மணம்தருக மலர்காள் என்
பாள்அன்னை மகிழ்வி னோடும். 102

தூங்காதெப் போதும்அருள் சுரந்துயிரின்
தொகைபுரக்கும் தூயா தாலோ
தூங்காமல் தூங்கியருள் திருவளர்ப்போர்க்
கருள்சுரக்கும் ஜோதி தாலோ
நீங்காமல் எம்மனத்துள் நிறைந்திலங்கி
யருள்வழங்கும் நிமலா தாலோ
ஓங்கார னேதாலோ எனப்பாடி
ஏனையரும் உவகை பூப்பார். 103

அருளமுதம் அருத்தவந்த அருளுருவே
தாலேலோ, அருமை சான்ற
பொருளனைத்தும் புவியினருக் குணர்த்தவந்தோய்
தாலேலோ, புனிதம் மிக்கோர்
தெருள்மிகுந்து சிறக்கஅருள் செய்குருவே
தாலேலோ, செற்றம் மோகம்
மருளனைத்தும் தவிர்க்கவந்தோய் தாலேலோ
எனப்பாடி மகிழ்வு கொள்வார். 104

சப்பாணி

இவ்வாறு பலகூறி இன்னிசையால்
தாலாட்டி இனியோர் போற்ற
ஒவ்வாத பழக்கமெலாம் ஒழித்துலகம்
உயர்வெய்த உண்மை காணச்
செவ்வாறு தெரிந்துதவத் திருமகவாய்ச்
செகத்துதித்து வளரும் செல்வர்
எவ்வாட்ட மும்தவிர்க்க இருகைகொடு
சப்பாணி கொட்ட லானார். 105

அவந்திகழ்தீ நெறியனைத்தும் விலகிடவும்
அல்லல்பிணி அகந்தை ஆசை
தவிர்ந்துயிர்கள் நலம்பெறவும் தண்ணருட்செந்
நெறி பயின்று தகவால் ஓங்கித்
தவம்பெருக்கி அருள்ஞானத் திருவளர்த்துச்
சால்புறவும் சட்டம் தந்து
சிவம்பெருக்கும் திருவாளர் திருக்கைகொடு
சப்பாணி கொட்ட லானார். 106

அகப்பகையாய்ப் புறப்பகையாய் அனைத்துயிர்க்கும்
வருதிமை அகல்க என்றும்
சகத்திலுயர் அன்பறிவு தருமநெறி
தவமனைத்தும் வருக என்றும்
மிகப்பெருகி விரியுமன மொடுங்கவென்றும்
மெய்ம்மையொளி பெருக என்றும்
உகப்பொடிரு கைகூட்டி ஒப்பிலண்ணல்
சப்பாணி கொட்டி னாரே. 107

திருவமுதூட்டல்

அனைத்துயிர்க்கும் வேண்டியஇன் னமுதூட்டி
அற்புதமாய்ப் புரக்கும் அண்ணல்
அனைத்துயிர்க்கும் மிகச்சிறந்த அருள்நெறியாம்
அமுதூட்ட வந்த அண்ணல்
அனைத்துயிர்க்கும் அன்பூட்டி அருளூட்டும்
அண்ணலருள் வாயில் தேனல்
நனைத்ததிரு வமுதூட்டி நற்றாயும்
மற்றாரும் ஞாலத் துய்ந்தார். 108

அன்பமுதும் அறிவமுதும் அருளமுதும்
அனைத்துயிரும் அருந்தி வாழப்
பொன்பொறைமெய்ப் புகழ்ஒ ழுக்கம்
போகமெனும் அமுதருந்திப் புனிதர்வாழ
என்புருக உருகடியர் இணையிலரு
ளமுதருந்தி என்றும் வாழ
இன்பவமு தெவ்வுயிரும் இனிதருந்த
நீயருந்தென் றியம்ப லானார். 109

முத்தம்

அருமறையின் அணிமுத்தைத் திருமுறையில்
திகழ்முத்தை அளத்தற் கொண்ணுப்
பெருமைமிக உடைமுத்தைப் பெரியர்விழை
அருள்முத்தைப் பேதம் நீக்கி
இருமைநலன் யாவருக்கும் எளிதருளும்
எழில்முத்தை யாரும் சார்ந்தெம்
குருமணியே ஒருமுத்தம் தருகவென
உருகியுளம் குழைந்து நிற்பார். 110

வேறு

இவ்வுலகில் ஐந்நான் கிடத்திற் பிறக்குமுத்
தெத்தகைய தாஞ லும்நின்
செவ்விய நறுங்கமல மலர்வாயின் முத்தம்நிக
ராகுமோ தேவர் முனிவோர்
எவ்வுலகு ளோரும்நின தருள்வாயின் முத்தமே
இனிதென இயம்பி டுவர்நீ
இவ்வொரு கணத்தருகில் வந்துமுத் தம்தருக
என்றெவரும் வேண்டி நிற்பார். 111

வேறு

திருவுருவே முத்தம்தா கலையுருவே
முத்தம்தா தெளிவை நல்கிக்
கருவறையில் இனிபுகுதா வணம்காக்கும்
கற்பகமே ஒருமுத் தம்தா
உருவமுடன் அருவமுமாய் உயரருள்செய்
குருமணியே ஒருமுத் தம்தா
இருவினைகள் தவிர்பரனே முத்தம்தா
எனநாடிப் பலரும் சூழ்வார். 112

வேதமுதல் நடுமுடிவில் விழைந்துதவழ்
அருட்குழவி விளங்கு மேலாம்
போதவொளி யொடுமோனப் புனிதருளம்
தவழ்குழவி புவிமீ துற்ற
தீதகற்றி அருட்சட்டத் திருநெறிநல்
கிடப்போந்த செல்வச் சேயாய்ப்
பூதபரம் பரைபொலியத் தவழ்ந்துவந்து
புண்ணியர்க்கு முத்த மீவார். 113

புருவநடு வினிற்றூய அருள்ஞான
ஜோதியெனப் பொலியு மண்ணல்
திருவருளின் மணம்கமழ அருகில்வந்து
திருவாயின் முத்தம் நல்கக்
குருவருளைப் பெற்றுமகிழ் சீடனைப்போல்
கூறருபே ருவகை யெய்திப்
பொருவருமன் புருவினராய்ப் புவிவாழ்வோர்
புளகமுற்றுப் புனித ரானார். 114

தளர்நடை

ஜாதியினால் வருபூசல் சமயத்தால்
வருபூசல் தளர, மக்கள்
ஓதுமொழி யாற்பூசல் உயர்செல்வர்
வறிஞரென உள்ள பூசல்
யாதுமகன் றேதளர, அருட்சட்டம்
இனிதருளும் அண்ணல் பார்மேல்
கோதகல்நற் குழவியுருக் கொண்டுதளர்
நடைப்பருவம் குறுக லானார். 115

வேறு

தளர்நடைப் பருவம் சார்ந்த
தனியிளஞ் சேயைக் கண்டோர்
உளமகிழ் பெருகி நோற்ற
உயர்தவப் பயன்பெற் றாற்போல்
துளவமும் நீறும் சேர்ந்த
தூயநீர் அருளி,நோயும்
அளவில்தொல் வினையும் தீர்ப்போர்
தமையரு கழைக்க லுற்றார். 116

வருகை

அருளேவருக ஆனந்தஅமுதேவருக ஆருயிரின்
அகமேவருக அமைதிதரும் அறிவேவருக அருட்பொலிவார்
பொருளேவருக ஈடிணையில் புகழேவருக புனிதமிகும்
பொற்பேவருக புண்ணியத்தின் பொலிவே வருக புவனிமிசை

மருளே தவிர்த்து மாணருளை வழங்கும் தூய வழிவகுத்தாள்
மன்னே வருக மாற்றறியாப் பொன்னே வருக மதிவிளக்கும்
தெருளே வருக சிவஞானத் திருவே வருக உயர்மோனத்
தேசே வருக சித்தாந்தச் செழிப்பே வருக என அழைப்பார். 117

அன்பா லுருகி அகம்குழைந்திங்
கருகில் வருக என அழைக்கும்
பொன்போற் பொலியும் இதயமுடைப்
புனிதர் தம்பாற் போந்தருளித்
துன்போ ரணுவும் அணுகாத
வண்ணம் கருணை சுரந்தருளி
இன்பச் சிறுபுன் னகைகாட்டி
இளஞ்சேய் எவர்க்கும் மகிழ்வளிப்பார். 118

எழிலார் விரற்கு மோதிரமும்
அரைஞாண் இடைக்கும் அணிவிப்பேன்
குழையும் மகர குண்டலம்நற்
குழகார் செவிக்குப் பூட்டிடுவேன்
விழியொண் மலர்க்கு மையிடுவேன்
மென்காற் சிலம்பு திருத்திடுவேன்
பொழிலார் நறும்பூச் சூட்டிடுவேன்
புதல்வா வருகென் றனையழைப்பாள். 119

மதிநேர் முகத்திற் சிறுதிலகம்
வனப்பாய்த் தீட்டு வேன் வருக
புதிதாய் விளையா டுதற்குரிய
பொருள்கள் பெற்றுக் கொளவருக
அதிதீஞ் சுவைசால் கனியளிப்பேன்
கற்கண் டளிப்பேன் அருட்கருணை
நிதியே வருகென் பாள்அன்னை;
இளஞ்சேய் வருவார் நிறைமகிழ்வால். 120

புன்செய்க் காட்டில் நன்றுழைத்துப்
போந்த தந்தை எம்குலத்தார்
முன்செய் தவத்தின் பயன் முழுதாய்
முளைத்த மெய்ஞ்ஞா னக்கொழுந்தே

மின்செய் யொளியாய் வருகவென
மெல்ல நடந்து சேய்வரலும்
பிஞ்சுக் கரம்தொட் டீர்த்தணைத்துச்
சுவர்க்கம் காண்பார் பெரும்புவிமேல். 121

அம்புலி

சந்திரமண் டலத்தமுதைத் தானருந்தித்
தாரணியோர் அருந்தச் செய்ய
வந்தஇளஞ் சுப்ரமண்யம் வானிலெழு
முழுமதியின் வனப்பை நோக்கி
இந்தமுழு மதியம்இவண் இறங்கிவரின்
இனிதுவிளை யாட லாமென்
றுந்துமகிழ் வொடுகையசைத் துறுகஇவண்
எனமதியை அழைக்க லுற்றார். 122

திங்கள்வரா ததுகண்டு திகைத்தழுவார்
சிறுதுளிகள் விழிகள் சிந்த
அங்கணுறும் அன்னை தந்தை அன்பரிது
கண்டருகுற் றழகார் சேயைத்
தங்கள்மடி யினிலமர்த்திச் சாந்தமொழி
பலபகர்ந்தும் தனிவெண் திங்கள்
இங்குறுதல் வேண்டுமெனக் கைகாட்டி
யழுதிடுவார் இளஞ்சேய் பின்னும். 123

சாமம்

இத்தகைய செயலினைக்கண் டருகுறுவோர்
எழில்மதியை இனிது நோக்கி
இத்தரையின் இருளகற்றி இரவிலொளி
நீதரல்போல் இங்கஞ் ஞான
மொய்த்தஇருள் நீக்கியரு ளொளிவிளக்கும்
முழுஞான முனியாம் இச்சேய்
சித்தமகிழ் வுறஅருகிற் சேர்ந்துவிளை
யாடுகெனச் செப்பலானார். 124

பேதம்

ஒளிகுறையும் நிலையுடையைநீ! அந்தக்
குறையிவருக் கொன்று மில்லை;

மிளிருமுனை மேகம்அடிக் கடிமறைக்கும்:
மாயையெனும் மேகம் ஞான
ஒளியுடைய இவரையென்றும் அணுகாது:
நீஇதனை உணர்ந்து மேலாம்
அளியுடனும் விளையாட வருகஎன
அம்புலியை அழைத்துச் சொல்வார். 125

தானம்

பலகுறையும் பலபிணியும் இவரருளால்
பாற்றியிந்தப் பாரோர் வாழ்வர்
இலகுமுரு வினிற்குறையும் மாசுமறும்
இவரருள்நீ எய்து வாயேல்
நிலவுலகுக் கருளவந்த இவரோடு
விளையாட நீவா என்றே
குலவுமித மொழிகூறி அம்புலியைக்
குழந்தையிடம் வரச்சொல் வாரால். 126

தண்டம்

சித்தியெலாம் பெற்றொளிர்வோன் தீராநோய்
தீர்த்தருள்வோன் சீலம் பேணும்
பத்திநெறி உறுதியுடன் பற்றவழி
காட்டிடுவோன் பத்தர் மீறின்
சத்தியொரு சிறிதுணர்த்தித் தண்டனைசெய்
தும்திருத்தும் தக்கோன் என்ப(து)
எத்திசையும் நன்கறியும் இவன்முனியா
முன்மதிநீ இவண்வா என்பார். 127

---

இவ்வாறு பலபுகன்றும் இனியபண்டம்
பலகொடுத்தும் எழிலி ளஞ்சேய்
அவ்வானின் முழுமதியே அருகில்வர
வேண்டுமென அழுதல் நோக்கி
எவ்வாறிச் சேயழுகை மாற்றுவதென்
றெண்ணியன்னை ஆடி யொன்றைச்
செவ்வாய்ச்சேய் அருகுவைத்துச் செழுமதியை
அதிற்காட்டச் சிரிப்பார் ஒண்சேய். 128

கண்ணாடி போல்மனத்தைக் களங்கமின்றிச்
செயின்எணிரு கலைகள் கொண்ட
தண்ணார்வெண் மதியனைய இனியவொளி
சாந்தியமு தெய்த லாகும்
விண்ணாடும் மண்ணுலகுக் குறும்என்ப
திச்செயலால் விளங்கக் காட்டி
உண்ணாடும் ஒளிக்குழந்தை எனைப்பலநல்
லருள்விளையாட் டுலகிற் செய்வார். 129

## அதிசய ஆடல்கள்

கலைவளர் மதிபோல் வளர்ந்திடும் சுப்ர
மண்ணியம் பிறமக வுகள்போல்
அலைவுற லின்றித் தனிமுறை யான
ஆடலும் வார்த்தையும் உடைத்தாய்
நிலவுமவ் வூர்வாழ் பிள்ளைக ளோடு
கலத்தலும் நிறைமகிழ் வோடே
உலவலும் உரைகள் ஆடலு மின்றி
ஓரிடத் தினில்தனி அமரும். 130

விண்ணினை நோக்கி இருகையும் கூப்பி
விருப்புட னேதொழு தாடும்
நண்ணி நன்மூலை நோக்கியே முழந்தா
ளிட்டுநன் முறையினிற் பணியும்
கண்ணினீர் மல்க மனத்தினில் ஏதோ
கருதியே தேம்பிநின் றழும், பின்
உண்ணிறை மகிழ்வாற் சிரித்திடும் குதிக்கும்
உவப்புடன் நன்றுகூத் தாடும். 131

பிள்ளையார் பூசை நிகழ்த்திடும் அறையில்
பெருவிருப் பொடுபுகும்; மலரை
அள்ளியே பிள்ளை யார்திரு வுருமீ
தடிக்கடி போடும் நின் றுடும்;
உள்ளொளிர் மகிழ்வால் மூலையிற் சார்ந்துட்
கார்ந்திரு கண்களும் மூடும்;
விள்ளுறு மணியின் ஓசையைக் கேட்பின்
விரைந்துகை கூப்பிடும்; குதிக்கும். 132

விட்டினர் ஊரார் எழில்மிகும் இச்சேய்
விளைத்திடும் செயல்களைக் கண்டு
கூட்டிடும் மகிழ்ச்சி கொள்வரோர் சமயம்;
குணங்கெட்ட பிள்ளையோ என்று
வாட்டமிக் கெய்தி மூளையிற் கெடுதி
வாய்த்ததோ என்பரோர் சமயம்:
மேட்டிமை சான்ற கடவுளே சேயாய்
மேவினர் என்பரோர் சமயம். 133

கண்டவர் பலரும் பலப்பல வாறுய்க்
காசினி மீதினில் வியந்து
விண்டுரைத் திடவும் விருப்புடன் போற்றி
உவக்கவும் மேன்மைசால் தெய்வத்
திண்டிறற் குழந்தை சீருடன் வளர்ந்து
வையம்வாழ் தெய்வமே போல
எண்டிகழ் விளையாட் டியற்றிடக் கண்டோர்
ஈன்றவர் உளமகிழ் வுறுவார். 134

சிற்றில்

அண்டமெலாம் விளையாட்டால் அருளன்னை
மீனாட்சி அமைத்தல் போல
வண்டல்பயில் சிறுமியர்கள் சிறுவீடு
வனப்போடும் அமைத்தங் குள்ளே
சுண்டல்வடை எள்ளுருண்டை துதிக்கைமுனோன்
முன்படைத்துத் துதிக்கும் போதில்
மண்டுசிறு ரொடும்கூடி மிகவிரைந்தம்
மணல்வீட்டை யடைவார் அண்ணல். 135

அண்ணலிளஞ் சிறுவர்களோ டருகிலுறக்
கண்டபெண்க ளஞ்சி யோடி
வண்ணவண்ண மலர்தருவோம் வண்கனிகள்
சுண்டல்வடை யப்ப மீவோம்
கண்ணெருமூன் றுடையகண பதியுளரிவ்
வீட்டிலிதைக் கலையேல் என்பார்
விண்ணவரும் இச்செயல்கண் டதிசயிப்பார்
வியனுலககோர் முறுவல் பூப்பார். 136

வேறு

தக்கன் மகளாய் இமவான்முன்
 தருபார் வதியாய்த் தகுமலையம்
சமைந்த கொடியோன் கூடலின்கண்
 தருமீ ளுட்சி யாய்ப்போந்து
மிக்க மகிழ்வார் பெண்களுடன்
 வியன்சீர் சிற்றில் பலஅமைத்து
விளையாட் டியற்றித் தன்னருளார்
 விளையாட் டினையே நினைப்பிக்கும்
முக்கட் பரையின் திருவருளால்
 முளைத்த கதிரோன் எனப்பொலியும்
முழுஞா :னச்செல் வா!யாங்கள்
 முனைந்து படைத்த சிற்றிலிதைத்
திக்கெட் டேத்துன் திருவடியாற்
 சிதைத்தல் செய்யேல்; காத்தருளச்
சேயாய்வந்த நீயழித்தல் தகுமோ?
 என்பார் சிறுமி யர்கள். 137

அருமா மறையில் அருள்நூலில் அடியார் இதயத் தாமரையில்
பெருமா தவத்தோர் திருவுளத்திற் பிறங்கும் கமலச் சேவடியால்
குருமார் போற்றும் சேய்நீஇச் சிற்றில் சிதைத்தால் கூடுதுகள்
திருவார் பதம்சார் இடங்களெலாம் சிந்தும்; சிதையேல் எனப்
 புகல்வார். 138

நற்று மறைநேர் முகத்தாய்நின்
 நளினத் தாளெம் முடிபொருத்திப்
போற்று மறையோன் எழுத்தழிக்கப்
 போந்துள் ளாய்என் றுவந்துள்ளோம்
கற்றார் கல்லார் களிப்புறயாம்
 கவினோடிழைத்த சிற்றிலிதைப்
போற்றுமரைத்தா ளால்அழியேல்
 புனிதா என்றே இறைஞ்சுவரால். 139

முன்னோன் அருள்பெற் றருட்சட்ட
 முறையைப் புவிக்குத் தரப்போந்தாய்
அன்னோன் ஆற்றும் தொழிலைந்துண்
 டவற்றுள் எழிக்கும் தொழில்நடுவாம்

என்னே அதைநீ கொளலழகோ
எல்லா உயிர்க்கும் இனிதருளும்
அன்னேன் தொழிலைந் தாவதுகாண்
அதுகொண் டெமையாண் டருள்என்பார். 140

வேறு

உடம்பிதொரு சிறுமணல்வீ டுடையவனிங்
குள்ளுறைவன் ஆதலாலே
திடம்பெறஇவ் வுடம்பினைப்பே ணுதல்வேண்டும்
சிதைத்தல்செயக் கூடாதென்று
மடம்படுமிவ் வுலகுயிர்கள் உணர்ந்துகுரு
மலர்த்தாள்சார்ந் துயல்நன் றென்னத்
திடம்பெறநன் றுணர்த்துதல்போல் அண்ணலிந்த
விளையாடல் செய்வார் போலும்! 141

அழகிளம்பெண் சேய்களிவ்வா றண்ணலரு
கடைந்திறைஞ்சி அமுதம் போன்ற
மொழிகளுரைத் தெம்சிற்றில் சிதையேலென்
றிடக்கேட்டு முறுவல் பூப்பார்
வழியெவர்க்கும் இனிதுணர்த்த வந்தஅண்ணல்
எவர்மனமும் வருந்தச் செய்யார்
எழிலுடன்வந் தெவர்பாலும் மழலைமொழி
இனிதுரைப்பார் இன்ப மீவார். 142

சிறுபறை

அஞ்ஞான மாம்இருள் அகன்றதினி அனைவோரும்
அதிவிரைவில் வருகஎன்றும்
மெய்ஞ்ஞான வொளிநன்று மேவியுள தஃதெய்த
வருகமிக விரைவில்என்றும்
செஞ்ஞாயி றொளியோடு வருகுழவி கருணையொடு
செப்பல்போல் பறையொன்றினை
இஞ்ஞால மிசைகரத் தேந்தியினி தொலிசெய
இறும்பூது கொள்வ ராரும். 143

வேதங்களெல்லாம் விளம்புசா ரத்தினை
விளக்கஇவண் யாம்வந்துளோம்
ஏதங்கள் நீங்கியெல் லோருமே கையாண்
டிகம்பரம் அடைந்துய்யலாம்

சூதொன்று மில்லையிஃ துண்மைகாண் என்றுபறை
சாற்றிநனி சொல்வதேபோல்
சூதொன் றிலாமொழி சிலச்சொலிச் சிறுபறை
முழக்கினர் சுப்ரமண்யம். 144

சிறுதேர்

பண்டமெல் லாமுமொரு பண்டிமிசை யேற்றிப்
பரந்துநிறை கருணையுடனே
கொண்டுவந் தருளோடும் ஏழைமக் கட்கெலாம்
கொள்விலைக் கேவழங்கும்
வண்திரு வருட்செம்மல் ஓரெழிற் சிறுதேரை
வையமிசை யினிதுருட்டி
அண்டர்களும் முனிவர்களும் அருளாள ரும்வாழ்த்த
அருளாடல் புரிய லானர். 145

வேறு

சத்வகுணங் களைப்பூட்டி உயிர்சித்ர
ரதமொன்று சதுராய்க் கூட்டி
அத்துவிதக் கொடிநாட்டித் தவரத்ன
மணிமுடியை அழகாய்ச் சூட்டி
எத்திசையும் புகழ்சட்ட பரிபாஷை
இனிதமைந்த சூத்ரத் தோடும்
முத்திநகர் சேர்க்கவந்த மோனரதம்
போலொருதேர் உருட்டி னரால். 146

வேறு

உடலாவி பொருளர்ப் பணம்செய் தருட்சட்டம்
ஓம்புமெய் யடியவர்களைத்
திடமாக நன்னெறியிலி லேநடப் பித்துச்
சிறந்தகரை சேர்க்கவந்தோம்
கடல்ஞால மிசையாரும் அறிகென உணர்த்தல்போல்
கவின்மிக்க சிறுதேரினை
அடல்மேவும் அருளண்ணல் அவனிமிசை அழகா
யுருட்டிவிளை யாடலுற்றார். 147

அற்புதப் பரஞான வொளிமிக்க முகமசைய
அலர்சூடு குழலசையநற்
பொற்புற விளங்குமிரு கரமசைய அரையிற்
புனைந்திடு சதங்கையசையச்

சிற்பரவி யோமமாம் தில்லைவெளி யினில்நடம்
புரிபாத மலர்களசையக்
கற்பனை கடந்திலகு கருணைவடி வாம்சேய்
கவின்தே ருருட்டியருள்வார். 148

அல்லிங்கு விடியாமுன் நீராடி நீறணிந்
தருளொளித் தீபமேற்றி
இல்லங்கள் யாவும்மங் கலமோ டிலங்குமா
றினிதூக்கு சட்டநெறியை
நல்லன்பர் வாழூர் தொறும்சென்று நல்கவரு
ஞானகுரு வொருசேயென
மெல்லென்ற திருவடிக ளினிதசைய வீதியிற்
சிறுதே ருருட்டலானார். 149

பள்ளிப் படிப்பு

வறுமையிலும் செம்மைமிகும் உள்ளமுடை
மாண்பினர்கள் வதிவார் அங்கண்
சிறுதினைசோ ளம்கேப்பை சாமைகம்பு
தெருக்களிலே உலரும் அங்கண்
அறிவருளும் பள்ளியொன்று வடமேற்கு
மூலையினில் அமைந்த தங்கண்
சிறுவர்இரு பதின்மர்நன்று கல்விபயில்
பவராகத் திகழ்ந்தார் அங்கண். 150

சண்முகம்பிள்ளைப்பெயர்கொள் ஆசிரியர்
இலிற்பள்ளி சமைந்த தங்கண்
உண்மகிழ்வொ டேவாத்தி யாரையா
என்றவரை உரைப்பார் யாரும்
மண்மகள்அங் கவர்க்களிக்கும் கம்புசிறி (து)
ஆண்டுதொறும் வழங்கு வார்கள்
திண்மை பெறும் கல்வியந்த ஆசிரியர்
சிறுவர்கட்குப் பயிற்று விப்பார். 151

இற்கோயில் கலைமகளுக் கெனவமையவ்
வாசிரியர் எழிற்சி றூர்க்குச்
சொற்கூட்டு கல்விபயில் விப்பதொடு
ஜோதிடமும் பலர்க்குச் சொல்வார்

பிற்காலத் தினில் தெய்வத் தன்மையொடு
பிறங்குமிச்சேய் என உவந்த
நற்கூட்டத் தவரில்அவர் ஒருவர் அந்த
அருட் சேயை நாளும் காண்பார் 152

வேறு

திருவஃருட் கல்வி உலகினுக் களிக்கத்
திகழ்சட்ட நெறியருள் ஞான
குருவென விளங்கப் புவியினிற் போந்த
குழந்தைநல் வெழிலுடன் வளர்ந்து
மருவுநற் பள்ளிக் கேகிடும் பருவம்
வாய்த்திட மாண்புசால் பெற்றோர்
பொருவில்நற் சேயைப் பள்ளியில் சேர்க்கப்
புந்தியில் நினைந்தனர் உவந்தார். 153

பள்ளியில் சேர்க்க நல்லநா ளொன்று
பார்த்தனர் பட்டுடை யுடுத்திப்
பிள்ளையின் குழலைப் பின்னிப்பூச் சூட்டிப்
பிறைநுதற் பொட்டிட்டுத் தூய
வெள்ளிய அரிசி வெல்லப்பா கூட்டிக்
கலந்துதேங் காய்வியன் கனிகள்
உள்ளரு மகிழ்வொ டுடன்கொடு சென்றே
ஒப்பில்சே யினைப்பள்ளி சேர்த்தார். 154

பள்ளியிற் சேர வந்திடும் சுப்ர
மணியத்தைப் பள்ளியிற் பயிலும்
பிள்ளைகள் கண்டு பெருமகிழ் வுற்றுப்
பேசிக்கொள் வார்தமக் குள்ளே
கள்ளமில் உள்ளச் சுப்பிர மணியம்
கற்றிடு வான்விரைந் தென்பார்
தெள்ளிய தேசார் இவனொடும் சேர்ந்தே
இருக்கலாம் தினமுமென் றுவப்பார். 155

அருளிளஞ் சேய்பள் ளிக்குற்ற ரென்றே
அகமகிழ்ந் தனரவ்வா சிரியர்
தெருள்மிகு சிறந்த கல்வியிச் சேய்க்குச்
செழிப்புற நிறைவுறல் வேண்டி

அருட்கண பதியை மஞ்சளால் அமைத்து
வழிபட்டு வணங்கி அக்ஷரமார்
திருப்பனை யேட்டைச் சேய்திருக் கரத்தில்
சேர்த்தெழுத் துகள்செப்பித் தந்தார். 156

நன்மணல் எதிரிற் பரப்பியன் போடும்
ஞானச்செங் குழந்தையின் வலது
பொன்மலர்க் கரத்தின் திருவிரல் தன்னைப்
பொற்புறப் பற்றி யாசிரியர்
மின்மினி ரிடையாள் கலைமகள் மகிழ
அகரத்தை வரைவித்தார் விளங்கும்
இன்மலி பெரியோர் உறவினர் மகிழ்ந்தார்
இனியநல் விருந்துசேய்க் களித்தார். 157

ஊனமார் நெறிகள் ஒழிந்திட யார்க்கும்
உற்றசந் தேகங்கள் நீங்க
ஞானநல் லுபதே சம்புரிந் தடியார்
நற்கரம் பற்றிமேல் நிலைக்கு
த்யானநன் முறையால் உய்த்திடப் போந்த
திருவரு ளாளரிவ் வுலகில்
ஏனைய சிறுவர் போலவே பள்ளிக்
கேகினர் எனல்வியப் பன்றோ? 158

பாடமெல் லாமும் பாங்குற இனிது
பயில்வித்துப் பக்குவம் புரிந்து
வீடகத் தினிலே உயிர்களை உய்க்க
வியன்புவிக் குற்றஇவ் விமலர்
ஏடுகைக் கொண்டும் எழுத்தினை மணலில்
எழுதியும் எழிலுறக் கற்றல்
ஈடிணை யில்லா அதிசய மன்றோ
எவரிதை உணர்ந்திட வல்லார்? 159

காலையிரண் டரைநாழி கைக்கினிது
தொடங்கிடும்அக் கல்விக் கூடம்
ஏ லும்பத்து நாழிகையி னளவுநடந்
திடும்உண்வு புசித்தபின்னர்

மாலையிரு பத்திரண்டு நாழிகைக்குத்
தொடங்கியினன் மறையும் சாயங்
காலம்வரை யப்பள்ளி நடந்திடும்நற்
கல்வியவண் பயில்வார் செல்வர் 160

சதகங்கள் அந்தாதி பிள்ளைத்தமிழ்
முதலான தமிழ்ப்பா நூல்கள்
அதிகவிருப் போடுமனப் பாடம்பண்ணி
ஆசிரியர் பாலொப் பிப்பார்
அதற்குரிய பொருளினையும் ஆசிரியர்
விளக்கிடநன் றகத்துட் கொள்வார்
துதிநூலாம் தேவாரம் திருவாச
கம்பாரா யணம்செய் வாரால். 161

திருவா சகத்தினில்;*வேண்டத்தக்க
தெனத்தொடங்கும் செய்யு ளுக்கங்(கு)
ஒருநாள்ஆசிரியர் பொருள் உரைக்கஇனும்
உயர்பொருள்நம் அண்ண லாருக்(கு)
அருளால்தோன் றிடஉவந்தந் நூல்முழுதும்
அருளுணர்ச்சி ததும்ப நாளும்
பெருகார்வத் தொடும்ஓதி உளமுருகிப்
பேரின்பம் அடைவா ரானர். 162

அம்பிகை அருள் பெறல்

கல்வியிவ் வாறு பயில்கையில் ஒருநாள்
கருணைசால் சக்தியா லயத்தில்
நல்வித மாயாண் டுக்கொரு நாளில்
இயற்றிடும் திருவிழா நடக்க
செல்வநல் வளங்கள் செழிக்குமா றவ்வூ
ரவரெலாம் சேர்ந்திட்டார் பொங்கல்;
வல்விரைந் தவர்க ளிடுகையிற் பொங்கல்
வளமுறக் கொதித்திடும் போதில், 163

*வேண்டத்தக்க தறிவோய் நீ வேண்ட முழுதும் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி யென்னைப் பணிகொண்டாய்
வேண்டிநீயா தருள் செய்தாய் யானும் அதுவே வேண்டின் அவ்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில் அதுவும் உன்றன் விருப்பன்றே..
ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

மழையவன் வரலும் சக்தியை எல்லா
மக்களும் துதித்திறைஞ் சிட்டார்
தழையுமம் மக்கள் தவிப்பினை யுணர்ந்த
அண்ணலார் தமதரு ளுள்ளம்
இழுதென உருகி,இறைவியே!இவர்கள்
இறைஞ்சிடு செயல்பழு தின்றி
முழுமையும் நடக்கக் கருணைசெய் யென்ன
முறையிட்டு நின்றனர் உளத்துள். 164

முறையிட்டுள் ளுருகி இறைவியைப் போற்றி
முன்வந்து விண்ணினை நோக்கி
நிறையுளத் தோடும்'நில்' லென ஆஞ்ஞை
யிட்டனர்; நின்றது மழையும்;
குறைதவிர்த் தருள்செய் சக்தியின் கருணை
குறித்தனை வரும்மகிழ் வெய்தி
நிறைவுறப் பொங்க லிட்டனர் விழாவை
நிகழ்த்தினர் பெருமகிழ் வோடே. 165

அன்னையின் பூசைக் குறுமுடை யூறாய்
அவண்வந்த மழையினை நிறுத்தி
நன்னயக் கருணை புரிந்தந்தப் பொங்கல்
நல்விழா நனிநிறை வேற
என்னுளத் தினிலும் நிறைமகிழ் வெய்த
உதவிய திறைவியின் அருளென்
றுன்னிமேன் மேலும் உருகிநின் றிறைவி
திருவருள் போற்றினு ரண்ணல். 166

பள்ளியிற் சென்று பயின்றிடும் நேரம்
தவிரமற் றுளபகற் பொழுதில்
தெள்ளிய சக்தி ஆலயத் தினிலே
சென்றமர்ந் திருகணும் மூடி
உள்ளுறை யொளியை நோக்கிநன் னிட்டை
யமர்வர்அங் குயர்நிட்டை கூடும்;
விள்ளுற எவர்க்கும் விழைந்திலர் இதனை;
உளமகிழ் வொடுவிளங் கிடுவார். 167

பள்ளியிற் பயின்று நின்றபின் ஒருநாள்
இரவினில் புசித்திட லின்றித்
தெள்ளிய உணர்வு மிக்கநம் அண்ணல்
நித்திரை செய்திடச் சக்தி
நள்ளிர விலிலே ஞானநற் செல்வி
யாகவந் தருகினி லமர்ந்து
கொள்ளுக என்னத் தயிர்விட்டுப் பிசைந்த
கம்பஞ்சோ றருளொடுங் கொடுத்தார். 168

அம்மனை நினைந்து பட்டினி யோடே
படுத்திட்ட அண்ணலை யெழுப்பி
அம்மனே கரத்திற் பாத்திரமொன்றில்
அவ்வுண வைக்கொணர்ந் தளித்தாள்
நன்மகிழ் வோடும் அருந்தினர் அண்ணல்
ஞானத்தின் முதற்படி இவர்க்குச்
செம்மையாய் அமைந்த தன்றுதொட்டினையில்
திருவருள் நிலைவளர்ந் ததுவே. 169

ஓதாது உணர் திறன்

அண்ணலார் பள்ளி யினிற்சில காலம்
பயின்றனர் ஆயினும் மேலாம்
திண்ணிய ஞானம் பெற்றதெல் லாமும்
திருவரு ளாற்பெற்ற தாகும்
உண்ணிறை இறைவன் அருளினால் ஓதா
தனைத்தையும் உணர்ந்தனர் அவரே
நண்ணிக்கல் லூரி யடைந்தவ ரல்லர்
நாவலர் பாலுற்று ரல்லர். 170

வேறு

*கலைபலவும் உற்றுணர்ந்தார் வாசல்வழி
யொருக்காலும் கருதிச் செல்லா
நிலையினன்என் றண்ணல்அருள் திருவாக்கால்
நிலத்தினுக்கீ துணர்த்தி யுள்ளார்
உலைவிலருட் பரம்பொருளை இனியசொலால்
எவர்நெஞ்சும் உருகப்பாடி
மலைவதின்றி எந்நூற்கும் பொருள்விளக்கும்
மாண்பருளால் படைத்திருந்தார். 171

வேறு

நன்னய மாக நின்னைவந் தடுத்தேன்
நன்றுனைப் பாடிடச் செய்தாய்
பன்னருந் தமிழுக் கரசனே ஞான
மூர்த்தியே பலகலைப் பயனும்
இந்நிலத் தினில்நீ நல்கியுன் மகிமை
இனிதுணர்த் திங்கிதந் தன்னை
என்னென உரைப்பேன் எம்பிரா னேஎன்
றவரருள் மொழியிதை புணர்த்தும். 172

---

ஆக செய்யுள் 523

## 5. வேளாண்மைப் படலம்

### விநாயகர் துதி

அன்பை யூன்றி அருள்வினை வேசெயும்
பொன்பு ரைகுரு நாதர் புவிமிசை
நன்ப யிர்செய் திறத்தை நவிலப்பே
ரின்பம் நல்கிய மாமுகற் போற்றுவாம். 1

### குருநாதர் துதி

ஓதாமல் அனைத்தையுமே திருவருளால்
உணர்ந்தினிதே உடம்பைப் பேணத்
தீதான தணுவளவும் பிறர்க்கியாச்
சிலம்பவித்தை சிறக்கக் கற்று
மூதாதை யரைப்போல வயற்காட்டுக்
கேகிநல்லேர் முனையைப் பற்றிப்
பூதேவி யருள்வளங்கள் மிகப்பெருக்கும்
புண்ணியர்தாள் போற்றி வாழ்வாம். 2

---

ஆசிரிய ரிடம்சென்று படித்தகல்வி
மிகக்கொஞ்ச மானு லும்நற்
றேசுமிகு சுப்ரமண்யத் திற்கெண்ணம்
எல்லையின்றிச் செல்லும் அவ்வா

றுசறநன் றவர்சிந்தித் தரியபல
உயர்முடிவை அகத்துட் கொண்டார்
மாசறும்அம் முடிவுகளில் ஒன்றிங்கு
மன்னுடலைப் பொறுத்த தாகும். 3

உடல் உரம் பேணல்

எஞ்ஞானம் உணர்ந்தவரும் இயற்றஇய லாதசெயல்
மெய்ஞ்ஞானத் தாலுணர்ந்து மேதினியிற் புரியவந்தோர்
விஞ்ஞானத் தாலமைந்த மெய்கொடியல் பாகவுள்ள
அஞ்ஞானம் அகற்றியுய வேண்டுமென அறிந்துகொண்டார்.
4

வேறு

இயற்கையாய் நமக்குற் றுளஅறி யாமை
யிணையுடல் துணைகொடே நீக்க
இயலுமென் றுணர்ந்தார் உடலினைத் தூய்மை
யோடினி தோம்பல்நன் றென்றும்
உயலரு ளிதனைச் சிதைத்தல்சீர் கெடுத்தல்
தகாதென்று முறுதிபூண் டிருந்தார்
வியனுடல் திடமாய்ச் செம்மையாய்த் தூய்தாய்
விளங்கிட விதிபல அறிந்தார். 5

சிலம்பப் பயிற்சி

உடலுறுப்பு களுக்குறுதி செய்வதுவாய்
தற்காப்புக் குதவு மொன்றாய்
அடலுடைத்துப் பாக்கிகத்தி போற்கெடுதி
அக்ரமமாய் விளைப்ப தின்றாய்
திடமிகுநம் நாட்டுப்பழம் பயிற்சிகளில்
சிறந்தஒன்றும் சிலம்ப வித்தை
இடரகற்ற வந்தஅண்ணல் இனிதுகற்க
முடிவுசெய்தார் இதயத் தின்கண். 6

உலகப்போக் காகஇந்த வித்தையினைப்
பயிலாமல் உயர்நோக் கோடும்
நலமுறக்கை யினிற்கம்பு கொண்டண்ணல்
நன்றிதனைப் பயின்று தேர்ந்தார்

பலர்போல விரியங்கள் பேசார்சண்
　　டைக்கென்னப் பரிந்து செல்லார்
இலகுமிந்த வித்தைகற்ற ஏனையரி
　　னும்தேர்ச்சி மிகப்பெற் றிட்டார். 7

வினைகளினால் வரும்தாக்கை உயிர்கள்தடுத்
　　துக்கொள்ள மிகவு யர்ந்த
புனிதவித்தை யினைக்கற்பித் தினிதுகரை
　　யேற்றவந்த போத மூர்த்தி
இனிதிவ்வுடல் பேணுதற்கும் தாக்குதலை
　　எதிர்த்து நின்று வெல்வ தற்கும்
நனிசிலம்ப வித்தையினில் சிறந்துநின்று
　　ரெனல்பெரிதாய் நவிலற் காமோ? 8

பயிர்த்தொழிற் பாங்கு

எண்ணிரண்டாண் டெய்தியதும் குலத்தினியல் பினுக்கேற்ப
அண்ணலார் வேளாண்மைத் தொழில்புரிய அகத்தெண்ணி
உண்ணிலா வருளொளியோ டொருகரத்தா லேர்பிடித்து
மண்ணிலார் வளம்பெருக வலக்கரத்திற் கோல்பிடித்தார் 9

உயிர்த்தொகையின் உளநிலத்தில்
　　உயரன்பாம் கலப்பையினால்
துயரறநன் றுழுதருளாம்
　　தூநீரை நனிபாய்ச்சிப்
பயிரெனும்சட் டம்வளர்த்துப்
　　பரம்பொருளாம் பயன்வழங்கும்
உயர்முனிவர் ஏர்பிடிக்க
　　ஒன்றுபத்தாய் விளைந்தனவால். 10

சீருறும்நல் விளைவுமிகும் சிறப்பினைக்கண் டூன்றவரும்
ஊரவரும் உறவினரும் ஒப்பில்சுப்ர மண்யம்மிகச்
சீரியகை ராசிமிக்க செல்வனெனச் செப்பலுற்றார்
சீரியர்கள்தொடிற் பொன்னாய்ச் செம்மணியாய்
　　விளையாவோ? 11

நனிசிறந்த செயல்புரிந்தான்
　　நன்றுநிலம் விளைந்ததென்பார்
இனியிவன்போல் வேறொருவர்க்
　　கெய்தாதிவ் வினைவென்பார்
தனியெழில்கொ ளிவன்வயலிற்
　　சார்ந்ததெங்கள் தவமென்பார்
பனிமதியொத் தொளிர்முகத்தைப்
　　பார்க்கின்அருள் பெருகுமென்பார். 12

மங்கலில் சீர் வேளாள
　　மரபினரிச் செயலறிந்திங்
கெங்கள் குலம் செய்தவத்தால்
　　இவனுதித்தான் எனப்புகன்றார்
பொங்கிடுநல் வினைவேறப்
　　புரியுமிவன் அவதாரம்
இங்கித்தலம் செய்தவந்தான்
　　என்றுரைத்தார் ஊரவர்கள். 13

ஏழைகட் கிரங்கல்

கண்டவரும் காணாரும் கவினுறவே புகழுமுரை
மண்டலத்திற் பரவிடவும் வள்ளலிதைச் செவிமடுக்கார்
உண்டுபசி தீர்ந்துலவற் குரியபொருள் கிடைக்காமல்
மண்டுதுயர் கொண்டுமக்கள் வருந்துதல்கண் டயர்வுற்றார். 14

உணவுக்காம் பொருள்கள்வெளி யூர்களினின் றும்கொணர்ந்து
பணவிருப்பி னால்வணிகர் பலவாக விலைகூட்டித்
துணிவோடு மேழைமக்கள் துயர்பெருக்கி விற்பதனைக்
கணினாற்கண் டண்ணல்மனம் கலங்கிநைந்து வருந்தலுற்றார். 15

எவ்வுயிரும் வாட்டமுறல் காணவொணா இதயமுடைச்
செவ்வியபே ரருளாளர் திருமரபில் போந்தசெம்மல்
எவ்வகையில் இவர்துன்பம் துடைத்திடுதற் கியலும்என்த்
திவ்வியமாம் திருவுளத்திற் சிந்தித்து முடிவுகண்டார். 16

மக்கள்பலர் அரைவயிற்றுக் குணவுமின்றி வாடுகையில்
தக்கபடி நிலம்விளைத்துத் தான்உணச்சம் மதியாராய்
மக்கள்துயர் நீக்கிநல்ல வகையிலுணச் செய்வதுவே
இக்கணத்தில் நாம்புரியத் தக்கசெயல் எனநினைந்தார். 17

மக்களுக்குப் புரிபணி மகேசன்பணி யெனக்கொண்டே
ஒக்கலினும் மிகச்சிறந்த உறவாகி நாள்தோறும்
எக்கணமும் ஏழைகளுக் குதவிசெயு மாறெதுவென்(று)
உட்கபட மேதுமின்றி உன்னிடுவார் நம்பெருமான், 18

வள்ளல் வாணிபம்

கருணையுளம் கொண்டஅண்ணல்
திருத்தமுறக் கருத்திலுன்னித்
தருணமிதில் வண்டிகட்டித்
தாமேசென் றுணவினுக்காம்
பொருள்நனியேற் றிக்கொணர்ந்திங்
கினிதுதவி புரிவதெனை
அருள்நிறைவோ டொருவண்டி
யமைத்தினிது புறப்பட்டார். 19

பயிர்த்தொழிலின் கண்ணிருந்த
பற்றுகுறைந் தவண்வாழும்
உயிர்கள்படும் துயர்தீர்க்க
உன்னிவண்டி கட்டியண்ணல்
அயர்வறநன் றேதூத்துக்
குடிக்கேகி,அவணிருந்து
துயர்தீர்க்கும் தானியங்கள்
கொணர்ந்தருளாற் சொரிந்தனரால். 20

வணிகர்கள்போல் ஊதியத்தைக்
கருதாமல் வள்ளலிவர்
துணிவுடன்தான் கொண்டவிலைக்
கேவழங்கும் தூய்மைகண்டு
பணிவுநன்றி யொடுபோந்து
பலர்வாங்கி யுவகைகொளல்
கணிஞற்கண் டுள்ளுவந்தார்
கருணைநெறி காட்டவந்தார். 21

பெரியதுறை முகமாகப் பிறங்கிடுதூத் துக்குடியில்
அரிசிமுத லியபொருள்கள் அன்புடனும் வாங்கிவந்து
குரிசில்குது கலத்தினெடும் கொள்விலைக்குக் கொடுத்துமக்கள்
பெரிதுமகிழ் வுறக்கண்டு பெருமகிழ்வுற் றினிதொளிர்
வார். 22

பேறற்கரிய அருள்என்னும் பெருஞ்சரக்கைப் பிரமமேனும்
துறைமுகத்தி லிருந்துசட்டத் தூயவண்டி யினிற்கொணர்ந்து
நிறையருளுக் காத்தவிக்கும் நீளுலகர் இன்பமுற
முறையோடருள் புரியவந்தோர் முதலிலிவ்வா ணிபம்புரிந்தரர். 23

சுப்பிரமண் ணியப்பிள்ளை தூத்துக்குடிக் கேகிவந்திங்
கிப்படிச்செய் திடல்கண்ட ஏழைமக்கள் எல்லோரும்
ஒப்பரிய இவர்திறனை உவந்தேத்தி ஊர்க்குரிய(து)
இப்பிள்ளையென் றெடுத்தோதி இனிதுபுகழ்ந் தியம்ப லுற்றூர். 24

வாழ்கஇந்த வள்ளல்நெடு நாளுமிந்த மண்ணிலென்பார்
வாழ்கஇவர் ஏழைகளுக் குதவிசெயும் வழக்கமென்பார்
வாழ்கஇவர் பொருளொடருள் வளர்ந்தென்றும் வாழ்கஎன்பார்
வாழ்கஇவர் தூயபுகழ் வாழ்கவையத் தென்றுமென்பார். 25

வாழிஇவர் அருளோடும் மனத்திலெணும் நினைவென்பார்
வாழிஇவர் அருளோடும் வழங்கினிய வார்த்தையென்பார்
வாழிஇவர் அருளோடும் புரிசெயலின் வண்மையென்பார்
ஏழைகளுக் கிரங்குமிவர் என்றென்றும் வாழி என்பார். 26

சொன்னலமும் மனநலமும் செயல்நலமும் தூய்மைபெறப்
பன்னலமும் செறிந்ததிரு வருட்சட்டம் பார்நிலவ
நன்னலமொ டிவண்போந்த ஞானகுரு பரர்செயலைப்
பன்னலரி தெனமுனிவர் பண்ணவரும் பகரலுற்றூர். 27

உடலுரமும் உளநலமும்
உடையசுப்ர மணியவள்ளல்
அடலுடன்வண் டியிலமர்ந்தே
அருளொளியோ டேகுதல் கண்
டுடன்வரும்வண் டிக்காரர்
உள்ளமதிற் கள்ளர்பயத்
துடன்செல்லல் தவிர்த்துளத்தி
லுவகையுடன் செலலானூர். 28

அடல்மிகுநல் லுடலுரத்தால்
அணிசிலம்பப் பயிற்சியினுல்
திடமிகுதண் ணருட்டிறத்தால்
திகழ்வுறுதெய்விகப் பொலிவால்

உடன் வருவோர் அனைவருக்கும்
உறுதுயர்நீர்ந் திடல்வியப்போ?
புடவியில்வாழ் உயிர்கள்துயர்
போமிவரைக் காணின்என்றால். 29

நாட்டிலுறை அறிஞர்கட்கும் ஞானியர்க்கும் அரிதான
வீட்டுநெறி யெளிதுணர்த்தி மேன்மைமிகும் வாழ்வருளி
ஊட்டுவதெல் லாமூட்டி உயர்த்தியருள் குருபரர்க்குக்
காட்டுவழி யினிற்கள்ளர் பயம்நீர்த்தல் அரிதாமோ? 30

## வீட்டில் வெறுப்பு

உயிர்த்தொகை உய்ந் திடப்புரிய உலகில்வந்த உத்தமர்க்குப்
பயிர்த்தொழிலில் உளஊக்கம் படிப்படியாய்க் குறைதலையும்
நயத்தகுமூ ணின்றிமக்கள் நலிவதுகண் டிரங்கலையும்
வியப்புடன்உற் றார்நோக்கி மிகுவருத்த முறலானார். 31

அருள்திரட்டிப் புவிக்களிக்க அண்ணலுற்ற தறியாதார்
பொருள்திரட்டி நமைப்பேணும் புவியிலென நினைத்திருந்து
தெருள்மிகுத்த அண்ணல்செயும் செயல்கண்டு மனம்வருந்தி
மருள்மிகுந்து நலம்மறந்து மாற்றங்கள் சிலமொழிந்தார். 32

வண்மைமிகும் பயிர்செய்து வளர்செல்வம் குவித்ததுபோல்
நுண்மைமிகு மறிவோடும் நுவலரிய வாணிபத்தால்
உண்மையில்நற் பொருளீட்டி உயர்த்துவனிக் குடியையென
அண்மையிலெண் ணினரெல்லாம் அயர்வுமிக உறலானார். 33

துறைமுகத்துக் கினிதேகத்
துரிதமுடன் வண்டிகட்டும்
இறைசெயலைக் கண்டோர்கள்
இப்பிள்ளை வாணிபத்தால்
நிறைபொருளைச் சேர்க்குமென
நினைந்தார்கள்; பொருளனைத்தும்
குறைவிலைக்குக் கொடுத்தல்கண்டு
முனரிப்படிக் கொடுக்குமென்றார். 34

வாணிபத்தைப் பிடிப்பதற்கிவ்
வாறுகொடுப் பாரென்றுர்
கோணிகளிற் பொருள்நிறைத்துக்
குவிப்பர்பின ரெனமொழிந்தார்;
நீணிலத்தி லவர்மொழிக்கும்
நினைவினுக்கும் மாறுக
மாணிறைந்த செயல்நடக்க
மனம்வருந்தி ருருறவோர். 35

பலமுறையும் வண்டிகட்டிப் பரிந்துதுறை முகம்சார்ந்திவ்
வுலகினருக் குரியஉண வுப்பொருள்க ளேற்றிவந்து
தலமிசைதான் கொள்விலைக்கே தந்துமகிழ் அண்ணலைக்கண்
டிலகுகுடிக் கெப்பயனும் இல்லையிவ ளெனமொழிந்தார். 36

உயர் நாட்டம்

குலவுயர்வும் குடியுயர்வும் குவலயத்தி லெஞ்ஞான்றும்
நிலைநிறுத்தற் கவதரித்த நிமலர்திரு வருளுள்ள
நிலையுணரா ரிவ்வாறு நினைந்துசில கூறிடவும்
அலகில்மனத் தருளாளர் அஃதுணர்ந்தார் அதிவிரைவில். 37

புலம்மிகுந்த விளைவளித்த போதுபுகழ்ந் துரைத்தவர்கள்
இலகுபொருள் திரட்டாத இந்நிலையில் இயம்புமுரை
நிலவுசெவி களிற்கேட்டு நீளுலகர் நிலையுணர்ந்தே
உலைவில்செயல் புரியவந்த உண்மையுளங் கொளலானுர். 38

ஏழைமக்கள் பசியின்றி
இனிதுண்டு வாழ்வதனுக்
காழவுன்னிச் செயல்புரிந்தோம்
அந்நலத்தைக் கருதாமல்
பாழடையும் பொருள்விழைந்தார்
பயனில்மக வெனப்பகர்ந்தார்
ஏழுலகும் உயச்செய்செயல்
இனிச்செயல்நன் றெனநினைந்தார். 39

வேறு

உயிரனைத்தும் நலிதிருந்தி உய்யவொரு
திருநெறியை அருளிப்பக்திப்
பயிர்வளர்த்தற் கண்ணலைப்பக் குவம்செய்ய
இறைவன்திரு வுள்ளம் கொண்டார்
மயர்வறதன் மதிநலங்கள் வழங்கவந்த
மாஞான வள்ள லாரும்
உயர்வற உயர்ந்தசெயல் செயத்தகுந்த
இடம்சேரற் குளத்தெண் ணிட்டார். 40

இரெட்டியப்பட் டியைவிட்டுப் புறப்படுகென்
றினிதுபல முறையும் காதில்
அருட்டிருவாக் கொன்றொலிக்க அதுகேட்டிங்
கினியிருத்த லாகா தென்று
தெருட்பெறுநற் றிருவுளத்தி லெண்ணினர்செய்
தற்குரிய செயல்மெய்ஞ் ஞானப்
பொருட்பொலிவை உயிரனைத்தும் உணர்ந்துய்யப்
புரிதலென உணர்ந்தார் அண்ணல். 41

ஆக செய்யுள் 564

# 2. மதுரைக் காண்டம்

## 1. செந்தூர்ப் படலம்

### விநாயகர் துதி

பந்தம் நீக்கிப் பரகதி நல்கருட்
சிந்தை யாளர்செந் தூர்சென்று கூடலில்
சந்த மார்செயல் செய்சரி தம்சொல
ஐந்து செங்கரத் தந்தியைப் போற்றுவாம். 1

### குருநாதர் துதி

சந்தூடு நல்லழகார் தமிழ்மணமும்
சார்தென்றல் சுகமும் கூட
நந்தூர்ந்து முத்தினும் நற்பாண்டி
நாட்டினில்மெய்ஞ் ஞானச் சேயாய்
வந்தூர்மக் கட்குதவி மாணருளை
நாடித்தனி வழிந டந்து
செந்தூரில் மயில்நடங்கண் டறுமுகனைக்
கண்டகுரு திருத்தாள் போற்றி. 2

---

### வேறு

தேவர்முனி வரர்போற்றத் திருவவதா ரம்செய்து
பூவுலகில் அருள்விளையாட் டுகள்புரிந்த பொலிவுகண்டோம்
மேவரிய மெய்ஞ்ஞானத் திருவடைய மிகமுயன்று
பூவுலகர்க் கருட்கருணை புரிந்தபரி சினிபுகல்வோம். 3

கருதிவந்த செயல்புரியக் காசினியி லுளதலங்கள்
சுருதிபுகழ் திருச்செந்தில் தொன்மதுரை பொதிகைவரை
வருதியென அழைத்திடலும் மற்றுநினை வேதுமின்றித்
தருதியென அவனருள்பெற் றிடற்குரிய தடம்நடந்தார். 4

### வேறு

இவ்வுடம்பொ டிவண்தோன்றி வாழவைத்த
இருடிநக ரென்னு மூர்க்கும்
திவ்வியமாய் இலத்தமர்ந்தின் பூட்டியருள்
செய்தவிக்கி னேச்சு ரர்க்கும்

எவ்வமறப் பேணியதாய் தந்தையர்க்கும்
இறைவிதிருக் கோயி லுக்கும்
செவ்வியநல் லுளமார்ந்த நன்றியெனத்
திருவாளர் நடக்க லானார். 5

ஒருவருக்கும் சொல்லாமல் ஒருவருக்கும்
தெரியாமல் ஒப்பில் அண்ணல்
திருவருள்என் னும்திருவைத் திரட்டுவதே
சிறந்ததெனக் கொண்ட செம்மல்
அருமறையும் ஆகமமும் அருள்நூல்கள்
அனைத்தும்புகழ் அளவி லாத
பெருமைநிறை அருட்டிருவைப் பேணிப்பெரும்
புவிக்களிக்க விழைந்து சென்றார். 6

செந்தூர்ச் சிறப்பு

ஆறுதா ரப்பொருளாய் அமைமுருகன்
அருளுருவோ டமரும் ஊராய்
நீறுகச் சூரர்குழு வினைமடித்துத்
தருளாட்சி நிகழ்த்தும் ஊராய்
ஆறுநி யமைபடைவீட் டினிலிரண்டாம்
படைவீடா யமையும் ஊராய்
பேறுக அங்குறுவோர் திருவருளைப்
பெறஅருளூர் திருச்செந் தூராம். 7

ஓராறு முகமுடைய திருமுருகன்
அருள்நாடும் உளமார் அன்பர்
ஈராறு தோள்வலியும் இணையடியின்
சிறப்புமுன்னி இனிது போற்றி
ஓராறு பகையினைவென் றைந்துபொறி
புலனையும்வென் றுயர்வை யெய்திச்
சீராரும் இவ்வுலகில் திருவருள்வாழ்
வாற்றச்செயூர் திருச்செந் தூராம் 8

வேறு

இம்மை அம்மை இருநல மும்தரும்
மும்மை வெம்மலம் மாய முறித்திடும்
செம்மை சான்ற சிறப்பனைத் தும்தரும்
நம்மெழில் ஞானக் கந்தன் திருச்செந்தூர் 9

செங்கை பற்றிய மைத்துச்செல் றேகிடும்
சங்கை யாவும் தவிர்த்தருள் செய்திடும்
அங்கை பன்னிரண் டாறுமு கம்கொளும்
கங்கை சேய்வாழ் கவின்கொள் திருச்செந்தூர். 10

சகல லோகமும் தாங்கிப் புரந்திடும்
இகலை னைத்தும் இரியத் துரத்திடும்
பகல வன்பல கோடி யெனப்பொலி
குகன மர்ந்து குலாவும் திருச்செந்தூர். 11

புகைய ளித்திடும் புண்ணியர் ஆகுதி
பகைய ழித்திடும் பக்தர்செய் தோத்திரம்
முகைய ளித்திடும் முல்லைக் கொடிவினைத்
தொகைய ழித்திடும் சூர்ப்பகை வாழ்செந்தூர். 12

விதிபு ரந்தரன் மேவித் துதிக்குமூர்
பதிகம் பாடிமெய்ப் பக்தர் பராவுமூர்
யதிகள் யோகியர் யாருமி றைஞ்சுமூர்
அதிகச் சீர்கொள் எழகார்தி ருச்செந்தூர். 13

பொதிய மாமுனி போந்தடி போற்றிட
மதியும் ஞாயிறும் வன்னியு மேத்திட
நிதிப திவரு ணன்நிதம் வாழ்த்திட
வதியும் மாமயில் வாகனன் நற்செந்தூர். 14

அதிரும் நீள்முர சாழ்கட லோதைபோல்
முதிர்மெய் யன்பர் மொழிவர்வேல் வேலென
விதிர்வி திர்த்துக் கடலினுள் மூழ்கிவேள்
எதிர்சென் றேத்த இலங்கும் திருச்செந்தூர். 15

ஏதம் யாவும் தவிர்த்தரு ளீந்திடும்
நாதம் கூட்டிடும் நல்லிசை நல்கிடும்
பாதம் காட்டிப் பரவுணர் வும்தரும்
வேதம் போற்றுசெவ் வேலன் திருச்செந்தூர். 16

ஆக்கம் யாவும் அளித்துத் திகழ்ந்திடும்
ஊக்க மூட்டி உணர்வைப் பெருக்கிடும்
மோக்கம் எய்த முழுதும் துணைசெயும்
தீக்கி ளர்வடி வேலன் திருச்செந்தூர். 17

வேறு

சோலை யிற்றிகழ் தூமலர் மீதுக ரும்பேற
காலை யொண்கதிர் காட்டுப வாவில் எறும்பேற
வாலை யொத்தொளிர் வாழையின் மீதுக ரும்பேற
வேலெ டுத்தகை வேளமர் செந்தில் விளங்கிடுமால். 18

தாம ரைமலர் மேலுறு நெற்கதிர் தண்பூர்ண
மாம திக்கிணை யாமுக மிதொளிர் வஞ்சகட்டி.
யாமெ னத்திக முந்தர ளங்கள் எழிற்சங்கின்
கோம ளத்தொடு குளிர்மதி சூழ்மீன் குழுவொக்கும். 19

வேறு

ஞானமுடன் கலைபலவும் நயந்துகற்ற
நல்லோராய் ஞாலம் போற்றத்
தானமுடன் மெய்ந்தவமும் நன்கியற்றும்
தக்கோராய்த் தரணி மீதில்
மேனடக்கும் அனைத்துமுணர் மேலோராய்
மிளிரும்திரி சுதந்த்ர ரென்ன
வானவரும் புகழ்செந்தி லந்தணர்தம்
திருமரபு வயங்கு மங்கண். 20

மயில் நடன தரிசனம்

முருகனுறை தலமான மூதூராம் திருச்செந்தூர்
வருகவென முனரழைக்க வாழ்வுநெறி யிணையுணர்த்த
வருகுரவர் வழிநடந்து வருபோதில் மகிழ்விஞெடும்
முருகனிவர் மயில்தோன்றி இனிதாடல் முன்கண்டார். 21

கண்டிருகண் களும்களிப்பக் கைகள்சிரத் தினிற்குவியப்
பண்டுபுரி தவப்பயனெல் லாமொருங்கு பலித்ததென
ஒண்துளிகண் களிலரும்ப உயர்வாணி நாவிலுற
அண்டர்பிரான் திருவருளால் அருட்பாடல்
வாய்மலர்ந்தார். 22

கரணமெலாம் கரைந்துருகிக் கரைகாணுக் காதல்மிக
அரணமெலா மாயமைந்த அருட்ஜோதி யானபரம்
பிரணவமாம் பெருமறையிற் பிறங்குநிலை நினைந்துருகிக்
கிரணகலா பத்தொடெழில் கிளர்மயில்முன் பாடலுற்ருர். 23

அருமறையின் அடிமுடியாய்
அனைத்தினுக்கும் வித்தான
பிரணவத்தில் முதலெழுத்தாய்ப்
பதியெழுத்தாய்ப் பிறங்ககரம்
மருவுமுல குயிரனைத்தி
னையுமியக்கும் மாநடனம்
விரவிமுத லினிலமைய
விளங்கருளால் தொடங்கினரால். 24

"ஆடிவரு வாய்மயிலே" எனவிளித்துக் கந்தனைநீ
தேடிவரு வாய்மயிலே எனச்சிந்தை கசிந்துருகி
நாடிவரு வினையோட நற்பிரணவ மறையொடிசை
கூடியொன்ற உயரருளாற் கோதிலிசை பாடலுற்றார். 25

வேறு

அண்ணலார் ஞான அருளிசை பாட
அற்புத மாய்எழில் மஞ்ஞை
பண்ணினுக் கேற்ற வாறினி தாடப்
பக்தியாம் பரவையுட் படிந்து
கண்ணிலா னந்த அருவிநீர் சொரியக்
கரணமெல் லாமினி தொன்ற
எண்ணிலா மறையின் அடிநடு முடிவாய்
இலங்குமோங் காரத்திற் கலந்தார். 26

ஒருசிறு பொழுதவ் வோமெனு மறையொ
டொன்றிய உயரருட் செல்வர்
திருவுள முவகை நோக்கியே திரும்பச்
செறிமுகில் முழவொலி காட்டி
அருமையாய்ப் புட்ப மாரிபோ லமுத
மார்சிறு நுண்துளி தூவப்
பெருமறை ஞானத் திருமுறையோடு
பெருங்கட லோமென ஒலிக்க, 27

வருணதே வனும்நற் றிரைக்கரம் கூப்பி
வருகென நனிவர வேற்ப
அருணனும் குணபால் அழகுடன் தோன்றி
அன்புட னேவரவேற்பப்

பொருள்நவி யுணர்ந்த புனிதர்க ளிவர்தம்
பொலிவுகண் டிருகரம் கூப்பத்
தெருள்நலம் சிறந்த திருவரு ளாளர்
செந்திலாண் டவன்தளி யடைந்தார். 28

வானுற வோங்கி வளமுற வளர்ந்த
மாண்நெடுங் கோபுரம் வணங்கி
ஞானவொண் சேய்தன் னிருகையுஞ் சிரமேல்
நன்றுகூப் பியவணம் சென்றே
ஊனமை தறுக்கும் முன்திரு வாயில்
ஒளிவிழி யாற்கண்டு போற்றித்
தேனெனு மொழியால் அரஹர வென்னச்
செப்பியொண் கடலரு கடைந்தார். 29

திருவரு ளுருவாய்ப் போந்துள ஞானர்
செம்மலார் சேவடி மலரை
வருணனும் திரைக்கை யால்தொட்டு வணங்கி
மாதவம் பலித்ததென் றேத்தப்
பெருமகிழ் வோடும் மூழ்கிப்பின் நாழிக்
கிணற்றுநீ ராடினர் ப்ரபஞ்சக்
கருவழி நீக்கிக் கருணைசால் நெறியைக்
காட்டியாண் டருள்செய வந்தோர். 30

வேறு

புனிதமிந்தப் புவிக்கருள வந்தஅண்ணல்
புனிதமனத் தோடும் ஞானக்
கனியனைய திருமுருகன் தளிநோக்கி
நடந்தனர்உட் கனியும் அன்பால்
மனிதரும்வா னவர்குழுவும் முனிவரரும்
பணிந்திறைஞ்சும் வாயில் முன்னே
இனிதுபணிந் தெழுந்திருகைம் மலர்கூப்பி
யரஹரவென் றேத்தி நின்றார். 31

அன்பினுரு வேயாகி அருள்முருகன்
ஆலயத்தை வலம்செய் தேத்திப்
பொன்பொலியும் மெஞ்ஞான வேற்கரங்கொள்
போதனருள் புகழ்ந்து போற்றி

துன்பமெலாம் தீர்த்தருளிச் சுரருலகைக்
காத்தருள்தூ மணியே! வையத்
தின்பமெலாம் எய்தஇவண் எழுந்தருளும்
எழிற்குகனே! எனப்போற் றிட்டார். 32

முருகன் தரிசனம்

சஞ்சலமேல் லாம்அகலத் தாரணியோர்
தாழ்விலருள் நெறிகைக் கொண்டு
செஞ்சரண மலர்துணைகொண் டருள்வாழ்வு
செய்துமுத்திக் கரையிற் சேர
விஞ்சொளிகால் வேலவனே அருள்புரிவாய்
என்றண்ணல் விண்ணப் பிக்கத்
தஞ்சமென்போர்க் கருள்முருகன் தழல்நிகர்தன்
திருமேனி காட்டி நின்றான். 33

வேறு

கதிர்பல கோடி யெனத்திகழ் ஞானக்
கந்தனைக் கண்ணெதிர் கண்டு
புதியதொ ருவகை பூத்திட ஞானப்
பொலிவுநன் மேனியிற் பொருந்த
மதிமனம் சித்த மாதிய அனைத்தும்
மாணரு ளொளிப்பெருங் கடலுட்
பதிந்திடத் தம்மை மறந்தருள் மயமாய்
மாறினர் பண்புசா லண்ணல். 34

வேறு

ஆக்கமெலாம் அருள்முருகன் கருணையினால்
சிறிதுநினை வண்ணற் கெய்த
ஆர்க்கும்அருட் கிருபைசெயும் அப்பனைநற்
குன்றுதொறும் அமர்ந்த தேவை
காக்கவந்த கற்பகத்தை வினைதீர்க்கும்
அற்புதனைக் கனிந்த பாவால்
**காக்கக்கட னுனக்**கென்று கந்தன்வடி
வேலவனைப் பாட லானார். 35

*"காக்கக் கடன் உனக்கு":— ஆண்டவர் அருட்பாடல்.

அருள்ஞான வேற்குமரன் அஞ்சலென
அருள்புரிய அகமகிழ்ந்தார்
அருள்ஞான அன்னையார் விழியிரண்டும்
ஆனந்த அருவி பொங்க
உருள்ஞால மினியுய்யும் எனவுன்னும்
போதுவகை யுள்ளே பாய
அருள்ஞான நிறைவெய்தி ஆனந்த
பரவசமாய் அமைதி கொண்டார். 36

ஆடுமயில் வாகனம்முன் தோன்றியரு
ளானந்தம் அளித்த வாறும்
நீடொளிவேல் திருக்குமரன் நிகரிலரு
ளெழிலோடு நேரில் தோன்றிப்
பாடியநற் கீதம்கேட் டஞ்சலென
அருளாசி பகர்ந்த வாறும்
கூடுமனத் தினில்நினைந்து குவலயமுய்ந்
திடுமெனவுட் கொண்டா ரன்னை. 37

ஆக செய்யுள் 601

---

## 2. உத்திபோகப் படலம்

### முக்குறுணி விநாயகர் துதி

அக்கரமாய் அருமறையாய் அகமாகிப்
புறமாகி ஆரு தாரச்
சக்கரமாய்ச் சக்கரங்கள் கடந்ததனிப்
பொருளாகிச் சாந்தி நல்கி
எக்கணத்தும் உறுதுணையாய் எழில்மதுரை
மீனாட்சி கோயில் மேவும்
முக்குறுணி முன்னவனார் பதம் போற்றி
முத்தியின்ப மெய்தி வாழ்வாம். 1

வேறு

ஆல வாயில் அருட்செம்மல் ஏகியே
சீல மார்அருள் வாழ்வுசெய் சீர்சொல
கோல மார்ஞான குஞ்சரத் தின்கழல்
ஏலு மன்புடன் ஏத்தி இறைஞ்சுவாம். 2

குருநாதர் துதி

ஆடுமயில் வாகனன்றன் னருளெய்தி
ஆலவாய் சார்ந்து வைகை
நீடுபுனல் மூழ்கியம்மை மீனாட்சி
கடைக்கணருள் நிறையப் பெற்றுக்
கூடும்அன்பி னற்பாடிக் கும்பிட்டுக்
குழைந்துருகிப் போற்றி செய்து
நீடுமுயர் வாணிபம்செய் தருள்வாழ்வு
நிகழ்த்துகுரு அருள்பெற் றுய்வாம். 3

---

திருமுருகன் உருக்கண்டு திருவருள்பெற்
றுளம் குளிர்ந்த செம்மல் பின்னர்
பெருநிலத்திற் செயவந்த பெருஞ்செயலை
மேற்கொள்ளப் பிறங்கு நல்ல
திருத்தலமெங் குளதென்னச் சிந்தித்த
வாறுவழி நடக்கும் போதில்
கருத்தனரு ளால்சிறந்த கருத்தொன்றங்(கு)
அவருளத்தில் தோன்றிற் றன்றே. 4

பாண்டியநன் னாட்டினுக்குத் தலைநகராய்ப்
பராபரைமீ னாட்சி தோன்றி
ஆண்டரசு புரிநகராய் அருட்சோம
சுந்தரரை அருள்ம ணங்கொண்
டாண்டஅர சினையளிக்கச் சொக்கர்அரு
ளாட்சிபுரி சிறப்பு டைத்தாய்
ஈண்டெழில்கொள் முருகனுக்ர பாண்டியனாய்
இருந்தாட்சி புரிபே ரூராய், 5

இறைவன்அறு பான்நான்கு திருவிளையாட்
டினிதியற்றி இலங்கு மூராய்
துறைசிறந்த தூயதமிழ்ச் சங்கமமைத்
தினிதறிவு துலக்கு மூராய்
முறையொடடி யார்கள்பலர் தவமாற்றி
முத்தியின்பம் துய்த்த வூராய்க்
குறைவிலரு ளெழிலார்ந்த கூடல்நகர்
குலவுவதைக் குறிப்பா லோர்ந்தார். 6

## மதுரை நகர் மாண்பு

புலவர்களின் தெளிந்தஅறி வெனும்கடலிற்
புகுந்துகடைந் தெடுக்கப் பெற்று
நிலவுநன்னு லின்வழியாய்ச் சொட்டுகின்ற
நிறைசொல்லாம் அமுதந் தன்னைக்
குலவுமுயர் செவிவாயாற் புதிதுபுதி
தாகவுண்ணும் குழுக்கள் கொண்டே
இலகுசிறப் புடையதுநன் மதுரையெனின்
இதன்பெருமை இயம்பற் காமோ? 7

செந்திருவின் நெற்றியிலார் திலகமிந்த
மதுரையெனத் தேவர் சொல்வார்
நந்தலில்நா மகளுறையும் வெண்கமலம்
மதுரை யென்பார் நன்னூல் வல்லார்
சந்தமிகும் பூதேவி திருமுகமாம்
மதுரையென்பார் சான்றோர் நல்ல
பைந்தமிழர் பண்பாட்டைப் பார்க்குணர்த்தும்
மதுரையென்பார் பண்பா டுள்ளோர். 8

வேறு

கங்கு லொத்துச் செறியும்பைங் காவினில்
மங்குல் மேவி மயங்கி யுறங்கிடும்
பொங்கு நல்வளம் பூக்கும் மனைதொறும்
எங்கும் தங்கி இலங்கும் செழுமையே. 9

சங்கு மேவும் தடவய லெங்கணும்
தெங்கு மேவும் திகழும்பைஞ் சோலையில்
கொங்கு மேவும் குலாவும் மலர்தொறும்
எங்கும் மேவும் இறையருள் என்றுமே. 10

அன்பு பொங்கும் அடியர் அகந்தொறும்
இன்பம் பொங்கிடும் இச்சையற் றோரிடம்
துன்பம் நீங்கிடும் தூய்மைமிக் கோரிடம்
பொன்பொ லிந்திடும் புண்ணியர் தங்கணே. 11

வேதி யர்களின் வேதம் முழங்கிடும்
நீதி யங்கு நிலைத்து நிலாவிடும்
ஜோதி காண்பர் துலங்கும் தவத்தினர்
பூதி சாதனம் நன்று பொலியுமால். 12

பழவ கைகள் பலவும் அவணுறும்
கழகம் யாவும் கவின்பெற் றிலங்கிடும்
விழவ னைத்தும் விளங்கும் எழிலுடன்
முழவ ருது மதுரைமூ தூரிலே 13

வேறு

கோயில்களும் குளங்களும்பைஞ் சோலைகளும்
பூங்காவும் குலவும் அங்கண்
வாயில்தொறும் குங்குமமும் மஞ்சளும்மா
விலைகளுமாய் வயங்கும் அங்கண்
ஞாயிறெனத் திங்களென நற்பணிகள்
புனைநல்லார் நடப்பார் அங்கண்
தூயமண முரசுபடை முரசுகொடை
முரசொலிகள் சூழும் அங்கண். 14

அங்காடி விதிகளில் அமைந்துளபல்
பொருள்மணமும் கலக்கும் அங்கண்
பொங்கார்வத் தோடுவிழாப் பலசெயலால்
மாலைமணம் பொலியும் அங்கண்
மங்காப்பே ரெழிலோடு வளர்ந்திடுபூஞ்
சோலைமணம் வயங்கும் அங்கண்
வெங்காயத் தினையடக்கித் தவம்புரிவோர்
மேனிமணம் விரவும் அங்கண். 15

தேவர்தொழும் சொக்கேசர் திருக்கோயில்
திருமதிற்குள் ஆடி வீதி
யாவரும்போற் றிடஇறைவன் சித்திரையிற்
பவனிவரும் எழிலார் வீதி
ஆவணிமூ லத்திருவி ழாநடக்கும்
சிறப்புடைய அழகார் வீதி
மூவர்புகழ் பரன்மாசி மாதவிழா
நிகழ்வீதி முறையாய் மேவும். 16

இவ்வீதி களைச்சூழ்ந்து வெளிவீதி
யெனும்நான்கும் இலங்கும் அங்கண்
எவ்வேளை யும்பரமன் அருள்போற்றி
இனிதுய்ய வாய்ப்புண் டங்கண்
எவ்வேளை யிலும்பூசை மணியோசை
இயவோசை இழையும் அங்கண்
எவ்வேளை யிலும்தூய நான்மறையும்
தமிழ்மறையும் இசைப்பார் அங்கண். 17

மாணறத்தின் வழிநடந்து வாழ்வாங்கு
வாழ்ந்தின்பம் காண்போர் அங்கண்
பேணுபொருள் போற்றிவளர்த் தருட்செயல்க
ளாற்றியின்பம் பெறுவோர் அங்கண்
ஊனுடைநல் லடியவர்க்கீந் திறைபணிசெய்
தொப்பிலின்பம் துய்ப்போர் அங்கண்
சேணுறையும் அமரரிவை கண்டுதென்கூ
டலில்வாழ விழைவா ரம்மா. 18

திருஞான சம்பந்தர் திருநாவுக்
கரசர்திரு நாவ லூரர்
அருள்வாத வூரடிகள் மங்கையர்கட்
கரசிநின்ற சீர்கொள் மாறர்
பொருள்நாடி யுணர்ந்தகுலச் சிறைமூர்த்தி
நாயனார் போன்றோர் அங்கண்
அருள்ஞான நிறைவெய்தி விளங்கியநற்
காட்சிஅண்ணல் அருளாற் கண்டார். 19

அண்ணலார் சேர, மதுரை நகர் வரவேற்றல்

ஒவ்வொன்றும் அப்போது நடப்பதுபோல்
திருவருளால் உணர்ந்(து)உவந்தார்
செவ்வியநற் றாய்ப்பசுவைக் காணவிரை
கன்றினைப்போல் செம்மல் சென்று
திவ்வியமாய்த் தேவர்புகழ் பெருமைமிகு
தென்மதுரை நகரம் சேர்ந்தார்;
எவ்வுயிரும் இன்பமுற விழைஇவரை
வரவேற்ற தினிதம் மூதூர். 20

கூடல்நக ரெனும் அணங்கு பசுமைநிறம்
குலவுவய லுடைபு னைந்து
மாடநெடு மாளிகையாம் கொங்கைமிசை
வண்கொடியாம் துகில் வயங்க
நீடெழிலொ டேயிலங்கும் கோபுரமாம்
தலைதூக்கி நிமிர்ந்து பார்க்க
ஈடிணையில் திருவால வாயிதுவோ
எனச்சிரமேற் கரம்கு வித்தார். 21

மதிபுகுந்து செல்லவுயர் நிலையுடைப்பல்
கோபுரத்தில் மாட மீதில்
அதிவனப்பொ டமைகொடிகள் இனிதசைந்தன்
போடுவர வேற்புக் கூற
புதியபல பண்பாடிக் குயிலினமும்
வண்டினமும் போற்றி செய்ய
புதியமலர் சொரிந்துதருக் குலங்கள் நன்று
வரவேற்கப் புனிதர் சென்றார். 22

வாழைபலா தெங்கொடுமா வாதிபல
மரமடர்ந்து வயங்கு சோலை
ஊழைவெலும் உயர்நெறிநல் கப்போந்த
உத்தமரே வருகென் றோத,
வாழ்வருளும் கடவுளுக்கர்ப் பணமாக
மணமலரை வழங்கும் தூய
கேழ்கிளர்நந் தனவனங்கள் நல்வரவு
கிளத்த அண்ணல் நடந்து சென்றார். 23

திருவீதி சேரல்

வயல்வளமும் வண்சோலை யெழில்வளமும்
மணமலர்ப்பூங் காவில் மேவும்
இயல்வளமும் எழில்வண்டின் இசைவளமும்
இனியதென்றல் வளமும் கண்டு
புயல்தவழும் மணிமாட நிரைபொலிந்து
புனிதமிகு போக மூட்டும்
செயல்மிகுந்து திருவருட்பே ரெழில்மிகுந்த
திருவீதி யின்கண் சேர்ந்தார். 24

மாமுடியில் விறகெடுத்தும் வளையல்விற்றும்
மாணிக்க வகைகள் விற்றும்
மாமனென வழக்குரைத்தும் வாதவூ
ரடிகளுக்காக் குதிரை விற்றும்
தூமனவந் திக்காளாய் வந்தும்மை
யன்பொடுபிட் டைச்சு வைத்தும்
சோமசுந்த ரக்கடவுள் நடைகொள்திரு
விதியெனத் துதித்துச் செல்வார். 25

அருளாளர் அறிவாளர் அன்பாளர்
அடியார்கள் அறவோர் உண்மைப்
பொருள்நாடு புலவோர்கள் புண்ணியர்கள்
புனிதமிகு மேலோ ரோடு
தெருள்நாடு சீரியர்கள் கின்னரர்கள்
கிம்புருடர் சித்தர் தேவர்
குருமார்கள் நற்சீடர் நடமாடும்
வீதியெனக் கைகுவிப்பார். 26

சிவனும் அங்கயற்கண் ணம்மையுநற்
றிருவீதிப் பவனி போந்தும்
அவம்நீக்கி யருள்வாழ்வும் தவவாழ்வும்
வழங்கியும்நன் ருட்சி செய்யும்
உவமானம் சொலற்கரிய உயரெழிலார்
மாமதுரைக் குற்ற அண்ணல்
பவம்மாளப் பாரிலருட் பயிர்வாழ
உன்னினராய்ப் பரிந்து செல்வார். 27

## வைகையை அடைதல்

புல்லும்அழுக் கினைப்போக்கிப் புனிதமிகச்
செய்துவெப்பம் போக்கிக் காத்தும்
புல்லு நெல்லும் பிறபயிரும் புவியில்வள
ரப்புரிந்தும் போகம் போதம்
பல்லுயிர்க்கு மீந்தும்இறை பூசனைக்குப்
பலவகையால் உதவி செய்தும்
நல்லவருள் ளம்போலப் பரந்தகன்று
பாய்வைகை நதிக்கண் சேர்ந்தார். 28



மதுரை அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர்
திருக்கோயில் நுழைவாயில்

மாமுடியில் விறகெடுத்தும் வளையல்விற்றும்
மாணிக்க வகைகள் விற்றும்
மாமனென வழக்குரைத்தும் வாதவூ
ரடிகளுக்காக் குதிரை விற்றும்
தூமனவந் திக்காளாய் வந்துண்மை
யண்பொடுபிட் டைச்சு வைத்தும்
சோமசுந்த ரக்கடவுள் நடைகொள்திரு
வீதியெனத் துதித்துச் செல்வார். 25

அருளாளர் அறிவாளர் அன்பாளர்
அடியார்கள் அறவோர் உண்மைப்
பொருள்நாடு புலவோர்கள் புண்ணியர்கள்
புனிதமிகு மேலோ ரோடு
தெருள்நாடு சீரியர்கள் கின்னரர்கள்
கிம்புருடர் சித்தர் தேவர்
குருமார்கள் நற்சீடர் நடமாடும்
வீதியெனக் கைகு விப்பார். 26

சிவனும் அங்கயற்கண் ணம்மையும்நற்
றிருவீதிப் பவனி போந்தும்
அவம்நீக்கி யருள்வாழ்வும் தவவாழ்வும்
வழங்கியும்நன் ருட்சி செய்யும்
உவமானம் சொலற்கரிய உயரெழிலார்
மாமதுரைக் குற்ற அண்ணல்
பவம்மாளப் பாரிலருட் பயிர்வாழ
உன்னினராய்ப் பரிந்து செல்வார். 27

## வைகையை அடைதல்

புல்லும்அழுக் கினைப்போக்கிப் புனிதமிகச்
செய்துவெப்பம் போக்கிக் காத்தும்
புல்லு நெல்லும் பிறபயிரும் புவியில்வள
ரப்புரிந்தும் போகம் போதம்
பல்லுயிர்க்கு மீந்தும்இறை பூசனைக்குப்
பலவகையால் உதவி செய்தும்
நல்லவருள் ளம்போலப் பரந்தகன்று
பாய்வைகை நதிக்கண் சேர்ந்தார். 28



மதுரை அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர்
திருக்கோயில் நுழைவாயில்



மதுரை அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர் திருக்கோயில் கோபுரங்களும்
பொற்றாமரை தீர்த்தமும்.

பல்லுயிரைப் படைத்திடலால் பங்கயத்தில்
வாழயனும் பண்பார் வைகை
பல்லுயிரைப் புரந்திடலால் பங்கயநா
பனைமானும் பாங்கார் வைகை
நல்லகரை யழித்திடலால் உருத்திரனை
யேநிகர்க்கும் நன்னீர் வைகை
பல்பொருளை மறைத்திடலால் மகேச்சுரனை
யொத்திலங்கும் பயனுர் வைகை. 29

அனைத்துயிர்க்கும் அருள்செயலால் சதாசிவனைப்
போல்திகழும் அருளார் வைகை
அனைத்துநலங் களும்அருள்வ தால்விண்தரு
வெனவிளங்கும் அழகார் வைகை
அனைத்துமுணர் புலவரைப்போல் றருள்நூலின்
தரமுணர்த்தும் அவியார் வைகை
அனைத்துமகி மையுமுடைத் தாய்ப் பரன்போலப்
பொலியும்அரு ளழகார் வைகை. 30

அந்தமில்சீர் அற்புதப்பே ராற்றலுடன்
அவனிமிசை தவழும் வைகை
ஐந்தொழில்செய் தலைவர்களை நிகர்க்குமியர்
தன்மையுடன் அமைதல் நோக்கி
இந்தஅருள் நதிக்கரையே அருள்திரட்டத்
தகுந்தஇடம் எனவுட் கொண்டார்
பந்தமெலாம் தவிர்த்திலையில் பரஞான
நெறியருளப் படைத்த அன்னல். 31

திருஞான சம்பந்தர் தேவாரத்
திருமுறையின் [illegible]
பெருஞாலத் திருள்நீக்கி [illegible]
பெருவாழ்வை [illegible]
ஒருஞானத் திருநதியாம் [illegible]
கரையினிற் [illegible]
அருள்ஞானச் [illegible]
அம்மண்ணைச் [illegible] 32



மதுரை அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர் திருக்கோயில் கோபுரங்களும்,
பொற்றாமரை தீர்த்தமும்.

பல்லுயிரைப் படைத்திடலால் பங்கயத்தில்
வாழயனும் பண்பார் வைகை
பல்லுயிரைப் புரந்திடலால் பங்கயநா
பனைமானும் பாங்கார் வைகை
நல்லகரை யழித்திடலால் உருத்திரனை
யேநிகர்க்கும் நன்னீர் வைகை
பல்பொருளை மறைத்திடலால் மகேச்சுரனை
யொத்திலங்கும் பயனார் வைகை. 29

அனைத்துயிர்க்கும் அருள்செயலால் சதாசிவனைப்
போல்திகழும் அருளார்வைகை
அனைத்துநலங் களும்அருள்வ தால்விண்தரு
வெனவிளங்கும் அழகார் வைகை
அனைத்துமுணர் புலவரைப்போன் றருள்நூலின்
தரமுணர்த்தும் அணியார் வைகை
அனைத்துமகி மையுமுடைத்தாய்ப் பரன்போலப்
பொலியும்அரு ளழகார் வைகை. 30

அந்தமில்சீர் அற்புதப்பே ராற்றலுடன்
அவனிமிசை தவழும் வைகை
ஐந்தொழில்செய் தலைவர்களை நிகர்க்குமுயர்
தன்மையுடன் அமைதல் நோக்கி
இந்தஅருள் நதிக்கரையே அருள்திரட்டத்
தகுந்தஇடம் எனவுட் கொண்டார்
பந்தமெலாம் தவிர்த்திணையில் பரஞான
நெறியருளப் படர்ந்த அண்ணல். 31

திருஞான சம்பந்தர் தேவாரத்
திருமுறையின் சிறப்பைக் காட்டிப்
பெருஞாலத் திருள்நீக்கி அருள்ஞானப்
பெருவாழ்வை யீந்து காத்த
ஒருஞானத் திருநதியாய் ஒளிர்வைகைக்
கரையினிற்சேர்ந் துவந்து போற்றி
அருள்ஞானச் சொக்கர்திரு வடிதோய்ந்த
அம்மண்ணைச் சிரமேற் சூடி, 32

திங்களணி யும்சோம சுந்தரனுர்
திருவருளாற் போந்த தாயே
அங்கயற்கண் ணம்மைதிரு வருள்போலப்
பரந்துலகர்க் கருளும் தாயே
கங்கையென மிளிர்தாயே கனிந்து குண்டோ
தரன்தாகம் தணித்த தாயே
இங்கெணிலார் பவம்நீக்கி இணையிலருள்
வாழ்வுதவும் இனிய தாயே! 33

இவ்வுலகில் வாழுயிர்கள் எல்லாமும்
எவ்விதத்தும் இடரு ழுமல்
செவ்வியநல் லருள்வாழ்க்கை எளிதாற்றித்
திருவருளாம் செல்வம் பேணித்
திவ்வியமாய்ப் பேரின்ப முத்திபெற
வழியொன்று செய்வாய் என்று
செவ்வியகைம் மலர்கூப்பித் தொழுதுநதி
நீராடிச் செம்மை பூண்டார். 34

திருக்கோயில் வழிபாடு

நீராடி முடித்தவுடன் அண்ணலார்
நீள்மதுரை நகருட் சென்று
சீராரும் கோபுரத்தைக் கண்டிருகைம்
மலர்களையும் சிரமேற் கூப்பி
நாராரும் உளத்தோடும் மீனுட்சி
யாலயத்துள் நண்ணும் போதில்
ஏரார்தன் திருக்கோலத் தினைஇறைவி
காட்டிடக்கண் டேத்தி நின்ருர். 35

ஐயறிவும் உள்ளொடுங்க விழிகளிலே
ஆனந்த அருவி பொங்க
மெய்யறிவு மயமாகி அருட்கருணைப்
பெருங்கடலுள் மேவி மூழ்கிச்
செய்தொழில்பே சும்வார்த்தை எணுமெண்ண
மேதுமின்றித் திவ்யா னந்தத்
துய்யவமு துளும்புறமும் பாயஒன்றும்
தோன்ருதுட் டோய்ந்தார் அண்ணல். 36

புதியகதிர் பலகோடி கண்டவிழி
மலரினைப்போல், புலருங்காலே
மதுவுண்ட வண்டினைப்போல்,மன்னுலகில்
அன்னையரு ளடைந்த சேய்போல்
மதிநிகர்த்த எழில்வதன மீனாட்சி
யருளமுதம் மாந்தி யண்ணல்
மதியொன்று நலமிகுந்து மதுரமிகு
வண்தமிழால் பாட லுற்றார். 37

மீனாட்சியம்மை துதி

*பாராயுன் திருக்கண்ணால் எனைப்பார்த்துச்
சஞ்சலங்கள் பலவு மின்றே
திராய்நற் பாரோர்கள் புகழ்மதுரா
புரிமேவும் சிவையே தூய
†சீரார்மா மணிமகுடம் புனைந்தவல்லி
மதனையெரி விழிகொள் செல்வீ
ஏரார்கற் பகத்தருவே இன்கனியாம்
திருவேயென் றேத்த லானார். 38

பல்லாயி ரங்கோடி அண்டநிரை
படைத்தினிது புரக்கும் தாயே
பல்லாயி ரங்கோடி உயிர்த் திரளுக்
கின்னருள்பா லிக்கும் தாயே
பல்லாயி ரங்கோடி சமயங்க
ளிலும்பரவிப் பொலியும் தாயே
பல்லாயி ரங்கோடி நலம் வழங்கிப்
பக்தரையாண் டருளும் தாயே! 39

நாற்பத்து முக்கோண சக்கரத்தின்
நடுவமர்ந்து திகழும் தாயே
மாற்பெற்ற உளம்திருத்தி மாஞான
வாழ்வருளிப் பேணும் தாயே

---

*பாராய் உன் திருக்கண்ணால்—ஆண்டவர் அருட்பாடல்

†சென்ற நூற்றாண்டில் ஆண்டவர் அருட்பாடலில் பாடியருளியவண்ணம். தற்போது மீனாட்சியம்மை புதிய வைரக் கிரீடம் புனைந்து பொலிகின்ற உண்மை குறிப்பிடத்தக்கது.

மேற்பற்றுன் றேனுமணு காதவனம்
மெய்யுணர்த்தி மேன்மை நல்கி
சூற்பெற்ற கருமுகில்போல் தோன்றிஉயர்
கருணைமழை சொரியும் தாயே! 40

பாண்டியநன் னாட்டில்மலை யத்துவஜன்
பரிவொடுசெய் வேள்வி யின்கண்
மூண்டெழுசெந் தீநடுவில் முழுஞானச்
சேய்வடிவில் தோன்றும் தாயே
ஈண்டுபல கலைபயின்று முடிபுனைந்து
செங்கோலோச் சிடுநற் றாயே
தூண்டிடுநால் வகைச்சேனை யோடேகித்
திக்விஜயம் புரிந்த தாயே! 41

திக்கனைத்தும் வென்றுகயி லைக்கேகி
நந்தியையும் வென்ற தாயே
முக்கணருட் பரமனைமுன் கண்டுதிரு
மணங்கொள்ளற் கிசைந்த தாயே
சொக்கருக்கு மணமாலை சூட்டிமுடி
சூட்டிநின் செங்கோலை யீந்து
தக்கவர சாட்சியருள் தனித்தாயே
தண்ணருள்மிக் குடைய தாயே! 42

உலகுயிர்கள் நோயின்றி ஊறின்றி
மிடியின்றி உவந்து வாழ்ந்திவ்
வுலகசுக மும்பரம பதச்சுகமும்
எளிதெய்தி உய்யும் வண்ணம்
இலகுதிரு நெறிகாண வேண்டுமென
இங்குற்றேன் அறிவாய் நீயே
அலகிலுயிர் களையளித்தாள் அருளனையே
அருள்வாயென் றுருகி நின்றார். 43

சேயினருட் பாடலினைக் கேட்டருளித்
திருவுள்ளம் மகிழ்ந்தெல் லோர்க்கும்
தாயெனும்அங் கயற்கண்ணி தன்னிகரில்
கடைக்கணருள் தந்து நிற்க

மேயமகிழ் மிகுந்தவராய் ஆனந்த
அருவியிரு விழியும் பெய்யத்
தாயஅரு ளன்னைதிரு மலர்ப்பாதம்
தொழுதண்ணல் துய்த்தா ரின்பம். 44

எழிலார்ந்த கயல்மீன்தான் ஈன்றசினை
கனையொருகால் விழியால் நோக்கி
எழிலார்மீன் குஞ்சுகளாய்த்தன்மயமாய்
ஆக்குதல்போல் எழில்மீ னாட்சி
விழியார்நற் கருணையொடு நோக்கிடலும்
மிகுசோர்வு நீங்கி யண்ணல்
அழியாப்பே ரருட்சக்தி நிறைந்தவராய்
ஆனந்த மெய்தி நின்றார். 45

அறிவுசெய லிச்சையெனும் சக்திகளுக்
காதார மாகி மேவும்
இறைவியிவ்வா றருள்புரிந்து மறைந்திடலும்
இனிதண்ணல் இன்பத் தாழ்ந்து
சிறிதுபொழு திருந்துபினர் தேவிதிருக்
கோயிலினை வலஞ்செய் தேத்தி
மறிமழுக்கொள் கரச்சோம சுந்தரர்தம்
தளிக்கேகும் வழியிற் சென்றார். 46

முக்குறுணிப் பிள்ளையார்

எக்கணமும் எவர்க்குமுறு விக்கினங்கள்
நீக்கியரு ளின்ப மூட்டத்
தெற்குமுகம் நோக்கியருள் திருக்கோலத்
தோடமர்ந்து திகழும் தூய
முக்குறுணிப் பிள்ளையா ரைக்கண்டு
பேரன்பில் மூழ்கி யேத்தி
இக்கணந்தொட் டெனக்கருள்வாய் என்னிதயத்
தெண்ணம்நிறை வேற என்றார். 47

தவக்கனலாய் மூலாதா ரத்திருந்து
செழுந்த்வாத சாந்த மேறித்
தவசிகளுக் கருள்புரிவாய் சதுர்மறைக்கும்
ஆதிநடு அந்த மாவாய்

சிவபெருமான் திரிபுரத்தை எரிப்பதற்குச்
சிறந்தஉப தேசம் செய்தாய்.
புவனிமுத லண்டமனைத் திலும்பிரணவ
மயமாகிப் பொலிந்து நின்றாய். 48

எவ்வமிகப் புரிகயமு காசுரனை
யழித்திமையோர் குழுவைக் காத்தாய்
செவ்வியவேள் வேண்டவொரு செழுங்களிறாய்ச்
சென்றுவள்ளி மணஞ்செய் வித்தாய்
திவ்வியமாய் வ்யாசமுனி வேண்டமலை
மீதுமறை தீட்டி வைத்தாய்
அவ்வையின்பூ சைக்குவந்தே யரைநொடியில்
அற்புதமாய்க் கயிலை சேர்த்தாய். 49

இந்திரன்நந் தனவனத்தைக் காக்கநதி
காவிரியை இனிது தந்தாய்
சந்தமுறக் குண்டிகையை நிரப்பியகத்
தியர்பொதிகை சாரச் செய்தாய்
அந்தமில்சீர் நம்பிதொழத் திருமுறைகள்
அவனிமிசை திகழச் செய்தாய்
இந்தஉல கம்திருந்தி இன்பமுற
வழிசெய்வாய் இறைவா என்றார். 50

முன்னவனார் அவர்எண்ணி வந்தசெயல்
முடியுமென மொழிவார் போலத்
தன்னருளார் திருவிழியால் சிறுசைகை
காட்டிடவும் தகவார் அண்ணல்
முன்னிலும்நன் மகிழ்வெய்தி முன்னவனார்
திருப்பாத முளரி போற்றிப்
பொன்னவிர்மே னிச்சொக்கர் திருக்கோயி
லுட்புகுந்து போற்ற லானார். 51

சொக்கநாதர் துதி

ஆலம்அமு தாயருந்தி அகிலஉல
கினையும்அம ரரையும் காத்தாய்
ஆலநிழல் அமர்ந்தொருசின் முத்திரையால்
நால்வர்களுக் கருள்செய் திட்டாய்

மூலமல மாம்மூன்று புரமெரித்தாய்
மூவர்களைக் காத்தாட் கொண்டாய்
காலனையும் விட்டியொரு மார்க்கண்டே
யர்க்கினையில் கருணை செய்தாய் 52

ஏமனைநற் பூதேவி கோரிக்கைக்
காயிரங்கி யெழுப்பித் தந்தாய்
சோமனுறு சாபத்தைத் தீர்த்துமுடி
யினிலேற்றுத் தூய்மை செய்தாய்
மாமனென வருதக்கன் புரிபிழைகள்
மன்னித்து மாண்போ டாண்டாய்
காமனையி ரதிவேண்டு கோளுக்காக்
கருணையுட னெழுப்பித் தந்தாய். 53

அறுபத்து நான்குதிரு விளையாடல்
இவண்புரிந்தாய் அடியேன் அன்போ(டு)
உறுபற்றாய் உன்பாத மலர்பற்றி
இங்குற்றேன் உவந்தாட் கொள்வாய்
மறுவற்ற மாமணியே அருள்ஞான
மாமலையே வாழ்வில் தூய்மை
நிறைவுற்றிந் நிலவுலக உயிர்களுய்யும்
நெறியருளிக் காப்பாய் என்றார். 54

*அவனிதனில் அதிகதவ மகிமைபெறும்
அன்பர்மனம் குடியி ருக்கும்
சிவபெருமா னுக்குப்பணி செய்யாத
ஜென்மம்பய னற்ற தாகும்
அவனேழை பங்காள னுயிருப்பான்
அன்பர்பிழை களைப்பொ றுப்பான்
இவர்காளை மீதுநடிப் பான்கைலை
யினிலிருந்தின் னருள்கொ டுப்பான். 55

அற்பர்களை மறந்திடுவான் அறிஞர்களைத்
துறந்திடுவான் அருளா னந்த
சிற்பரமாய்ச் சின்மயமாய் நிதமும்சிவ
லோகமிருந் தருள்கொ டுப்பான்

---

*"சிவபெருமானுக்கு":— ஆண்டவர் அருட்பாடல்

பொற்புமிகு சரியைகிரி யாயோகம்
சாற்றிநிலை புரிந்து காப்பான்
எப்பொழுதும் மிளிர்அருவ உருவநிலை
காட்டியின்ப மீவான் என்றார். 56

இப்படியின் னருள்வாக்கால் இதயம்இழு
தாயுருகி ஏந்தல் போற்ற
இப்புவியுய்ந் திடஎன்னும் எண்ணம்நிறை
வேறுமென இறைசொல் லல்போல்
அப்பொழுது பெரியமணி அற்புதமா
யோசைதர ஆல வாயாற்
கொப்பிலருள் திருவாரா தனைநடக்கக்
கண்டண்ணல் உவகை பூத்தார். 57

நால்வருக்கும் அறுபத்து மூவருக்கும்
கருணைபுரி நாதன் தாளை
மேல்வருமா னந்தவெள்ளம் விழிசுரக்க
மெய்யன்பாற் போற்றி செய்து
சூல்வளைமுத் தீனும்வயல் மாமதுரைச்
சொக்கேசர் கயற்கண் ணம்மை
பால்விளைமெய்ப் பத்தியெனும் பரவையினுட்
படிந்தண்ணல் வெளியில் வந்தார். 58

இத்தலமே நாம்நினைக்கும் இயற்பணிசெய்
தற்கிடமென் றினிதுட் கொண்டார்
சத்தருள்வை கைநதியும் அங்கயற்கண்
ணம்மையமர் தளியும் சால
உத்தமமாய் அண்ணல்திரு வுளத்தொளிர
உலகுக்குத் தான்யா ரென்ன
மெத்தவும்காட் டிக்கொள்ளா தடக்கமுடன்
மேவிடவே விழைவா ரானார். 59

நகரெழில் காணல்

அங்கயற்க ணனைசொக்கர் அருளாட்சி
புரிநகரின் அழகை யெல்லாம்
அங்கணிஞற் கண்டுமகிழ் கொண்டிடவும்
பிறவிப்பய னுமென்றெண்ணித்

துங்கமிகு மதிதவழும் மணிமாட
நிரைமிகுந்து துலங்கு கூட
லின்கணமை யெழில்காண விழைந்தண்ணல்
இனிதங்கு நடக்க லானார். 60

செம்பொன்னால் நவமணியாற் செய்பணிகள்
விற்குமிடம் திகழக் கண்டார்
வெண்பொன்னின் அணிவகைகள் பாத்திரங்கள்
விற்குமிடம் விளங்கக் கண்டார்
செம்பியம் வெண்கலம்பித் தளைப்பாத்தி
ரங்கள்பல திகழக் கண்டார்
கம்பளங்கள் விரிப்புகள்நற் போர்வைகள்விற்
றிடுமிடங்கள் கண்டார் அங்கண். 61

அங்கயற்க ணம்மைதிரு மணம்முடிக்க
அருட்சொக்கர் போந்த நாளில்
துங்கமிகு காஞ்சனமா லைவரிசை
சோடித்து னவத்தாற் போன்று
மங்களமார் அங்காடி வீதிமிகு
வளமோடு வயங்கக் கண்டு
பொங்குதிரு மகளுறையும் பீடமுமாய்ப்
பொலிகிறதிம் மதுரை யென்பார். 62

ஏதமறத் தமிழ்மறையை இசையோடு
பயிற்றுமிடம் இலங்கக் கண்டார்
வேதம் அனைத் தும்பயிற்றி விளக்கம்உணர்த்
திடும்பள்ளி விளங்கக் கண்டார்
பேதமின்றி எம்மொழியும் இனிதுபயிற்
றிடும்பள்ளி பிறங்கக் கண்டார்
நாதசுர மாதிபல இசைக்கருவி
பயிற்றுமிடம் கண்டார் நம்பி. 63

எங்கெங்கும் ஈடிணையில் கலைகள்பல
மலிந்தோங்கி யிலகக் கண்டார்
அங்கயற்கண் ணம்மைக்குத் துணையாக
அலர்மகள்வந் தமைந்தா ளென்றேம்

மங்கலில்மெய்ச் சிறப்புடைய கலைமகளும்
வந்தினிதிங் கமர்ந்தா ளென்பார்
மங்கலமாம் புவிமகளும் பொறைமகளும்
புகழ்மகளும் வயங்கக் கண்டார். 64

சைவசம யத்தவர்கள் வழிபடுநற்
றளிகள்பல பொலிதல் கண்டார்
வைணவர்கள் திருமாலை வழிபடுநற்
கோயில்பல வயங்கல் கண்டார்
உய்வழியை நாடுமுகம் மதியர்பள்ளி
வாசல்பல ஒளிரல் கண்டார்
தெய்வமென ஏசுவினை வணங்குகிறித்
தவர்தளிகள் திகழ்தல் கண்டார். 65

வீதிதொறும் அருள்மிகு விநாயகர்நற்
கோயில்பல விளங்கல் கண்டார்
நாதமிகு மணியினொலி சங்கினொலி
நன்குமுழங் கிடுதல் கண்டார்
போதமருள் திருமுறைகள் ஓதியருட்
பூசைபுரிந் திடுதல் கண்டார்
ஏதமறுத் தின்னருள்பெற் றுய்யவிழை
மக்கள்திரண் டிறைஞ்சல் கண்டார். 66

திருமலைநா யக்கர்மஹால் எழிலோடும்
அமைந்திருக்கும் சிறப்பைக் கண்டார்
அருமையுடன் நீதியும்நல் லறமும்நிலைத்
துளநகரென் றகத்துட் கொண்டார்
இருமைநலங் களும்அருளும் மீனாட்சி
சொக்கேசர் எழில்தெப் பத்தில்
பெருமையுடன் காட்சிதர அவரருள்போற்
றிறங்குதெப்பக் குளமும் கண்டார். 67

தொழில் துறை நாடல்

உள்ளம்உய ரற்காறும் கோயிலுமே
உதவுமெனக் கொண்ட அண்ணல்
உள்ளொளிரும் ஆன்மாவைப் போற்றுவது
தூயஉடம் பெனறி னைந்தார்

தெள்ளியமெய்ஞ் ஞானமிந்த உடம்பின்றி
யெய்தவொண்ணு தென்ன உள்கி
எள்ளலிலா திவ்வுடம்பைப் பேணுமிடம்
யாதென்ன எண்ண லானுர். 68

வேறு

மனம்தூய்மை செய்வினையின்
தூய்மையெனும் இவையிரண்டும்
இனம்தூய்மை யானெய்தும்
இனியபண்போ டெனலாலும்
இனநலம்நல் லறிவோடெல்
லாப்புகழும் தரலாலும்
இனமறிந்து நல்லினத்தோ
டிருப்பதுநன் றெனநினைந்தார். 69

வேறு

வெளியூரி லிருந்தந்த நகரிலுற்றுப்
பிழைப்பதற்கு விழைவோர் போல
வெளியார்க்குத் தோன்றும்வணம் நடந்துகொண்டார்
வியனுலகில் வாழ்வாற் றற்குக்
களியார்ந்தஅந்நகரில் உளதுறைகள்
இடங்களையும் கருதி யாய்ந்தார்
துளியேனும் மாசின்றி வாணிபம்செய்
அங்காடி சொல்லக் கேட்டார். 70

திருநெல்வே லிப்பேட்டை யினிலிருந்துற்
றுச்சிமைச் சாமான் விற்கும்
திருவாளர் உருண்டைமீ ராமுகைதீன்
ராவுத்தர் வாணி பத்தைப்
பெருநீர்மை நாணயமு டைத்தென்னப்
பலரும்நனி பேசல் கண்டார்
ஒருநாளவ் வங்காடிக் கேகியதற்
குரியாரை நேரிற் கண்டார். 71

அங்கயற்க ணம்மைதிருக் கோயிலுக்கு
முன்புறத்தில் அமைந்த அந்த
அங்காடிக் குரியவர்கள் முகத்திலொளிர்
முறுவலும்மெய் யன்பும் கண்டார்;

அங்கவர்கள் மொழிசெயல்கள் உளநோக்கம்
அனைத்துமொன்றி விளங்கக் கண்டார்
இங்கிவர்களைப்பற்றி ஊரார்கள்
உரைப்பதுண்மை யென்று தேர்ந்தார். 72

அகத்திஞெளி முகத்தில்விளங் கிடுமென்ன
ஆன்றோர்கள் உரைத்த வண்ணம்
அகத்திலணு வளவேனும் களங்கமிலா
அண்ணலருள் முகத்தைக் கண்டும்
நகவுமிகு திருவிழியில் நிறைகருணை
சாந்தமிவை பொலிதல் கண்டும்
அகமகிழ்வுற் றங்காடி யரில்இனையோர்
அன்புமிக உடைய ராஞர். 73

அங்காடிக் குரியவராம் இருவரும்முன்
ஆற்றுதவப் பேறும் பூமேல்
நம்கோஇஸ் லாமியத்தின் தத்துவத்தை
நன்குணர வேண்டும் என்று
முன்கூட்டு பரம்பொருளின் திருவுளமும்
முன்னின்றாக் கியதால் அண்ணல்
பொன்கூட்டி யவர்க்கிந்து பொறைகூட்டி
நிறைகூட்டும் பொற்போ டேற்ருர். 74

வருகஎன அழைத்தஅன்னை திருக்கோயில்
கோபுரநீள் வாயில் முன்னே
மருவியிருந் தெணியிறைஞ்சும் நல்வாய்ப்பும்
மாண்புமிகும் அடியார் கூட்டம்
பெருகுதொறும் தரிசிக்கும் பெருவாய்ப்பும்
கிட்டும்எனப் பெரிதும் உன்னி
அருள்நாடி வந்தஅண்ணல் அங்காடி
யிதில்அமர இசைந்தார் போலும்! 75

இந்தஅங்கா டியிற்கணக்கை எழுதிடும்வே
லையைப்புரிவோம் என்றுட் கொண்டார்
நந்தலிலா முகப்பொலிவு நல்லினிய
மொழிகண்டு நன்கு ணர்ந்த

அந்தஅங்கா டிக்குரிய முகம்மதியர்
வேலையினில் அமர்த்திக் கொண்டார்
பந்தமிலா இவரிடத்திற் சிலபகுதி
கணக்கிந்து பார்க்கச் செய்தார். 76

கள்ளமிலா இவர்அந்தக் கணக்கைத்திறம்
பெறஒழுங்காய்ப் பார்த்தல் கண்டார்
உள்ளநிலை தெய்விக ஒளிவீசும்
தூயமுகம் உரையில் உண்மை
எள்ளலின்றி எவரிடமும் அன்போடு
பழகுமியல் யாவும் கண்டார்
மெள்ளஅங்கா டியின்கணக்கு முழுவதுமே
இவரிடத்தில் மேவச் செய்தார். 77

அங்காடி யின்தலைவர் பேருக்குத்
தலைவரென அமர்ந் திருந்தார்
அங்காடி யின்முழுதாம் பொறுப்பினையும்
அண்ணலே பார்த்துவந்தார்.
அங்காடி யினிலண்ணல் வந்துகணக்
கினையேற்ற அந்நாள் தொட்டவ்
வங்காடி யினில்வாணி பம்பெருகி
அளவில்திரு வளர்ந்த தாமால். 78

கள்ளமிலா உள்ளமுளோர் ஈட்டுசெல்வம்
கணக்கின்றிப் பெருகும் என்பார்
உள்ளமிசை பற்றில்லாச் சான்றோர்கை
பட்டசெல்வம் ஓங்கும் என்பார்
வள்ளல்பயிர்த் தொழில்செய்யச் சென்ற அந்நாள்
வளங்கள் மிகப்பெருகக் கண்டோம்
எள்ளலில்நல் வாணிபம்செய் இப்போதும்
இனிதுதிரு வளர்ந்த தன்றே. 79

## தினசரி ஒழுக்கம்

முகமதியர் அங்காடி யினிற்கணக்கு
முழுதெழுதும் வேலை பார்த்துத்
திகழுமண்ணல் மக்கள்பலர் காணுத
சமயத்தில் செகத்தி னிற்றும்

அகநிலையில் ஆற்றவுள அரும்பணியை
இடையில்விடா தாற்ற லானுர்
பகலவனு திக்கவொரு யாமமுனர்
பரிந்தெழுந்து நதிக்குச் செல்வார். 80

நீரோட்ட மில்லாத காலத்தும்
நீள்கரத்தால் ஊற்றுண் டாக்கிச்
சீரார்சூ ரியனுதித்தற் கைந்துநா
ழிகைமுன்பே திவ்ய மாக
நீராடி முடித்தாற்றுக் கரையிலுள
நின்மலக ணேசன் கோயிற் (கு)
ஆராத காதலுட னேகியமர்ந்
தன்போடும் போற்றி செய்வார். 81

உள்ளமொரு வழிப்படுத்தி உடையவன்றன்
பரஞான அபர ஞான
வெள்ளநிகர் தாண்மலரில் யானெனதென்
றற்றிடம் மேவ வைத்துக்
கள்ளமிலாப் பசுபோதக் கவளநிவே
தனம்செய்து கருணை பெற்று
மெள்ளஎழு வார்கதிரோன் எழும்போதில்
மீனாட்சி கோயில் சேர்வார். 82

அங்கயற்கண் ணரசியையும் சொக்கேச
ரையுமு ண்மை யன்பாற் போற்றி
அங்குதிரு வாயில்முனெ ரணைவிற்கும்
சிற்றுண்டி சிறித ருந்திப்
பொங்குதிரு வருளுளத்திற் பொலிவூட்டப்
புனிதரங்கா டிக்குச் செல்வார்
துங்கமுறு செயலாற்றிக் கோயிலின்வா
யிலில்இரவு துயில்கொள் வாரால். 83

துயிலுமுனும் துயின்றபின்நள் ளிரவினிலும்
தூய்மைபெற நினைத்த போதும்
பயிலுநிட்டை யினிலமர்வார் பரமனடி
யினிலுளத்தைப் பதித்த மைவார்

வெயிற்காலம் மழைகாலம் பனிக்காலம்
எதுவரினும் விடியல் நேரத்
தியல்பாக எழுந்துநதிக் கேகித்தணீ
ராடிமுன்னேன் கோயில் சேர்வார். 84

அதிகாலை யைப்பிரம முகூர்த்தமென
அருமறைகள் அனைத்தும் போற்றும்
அதிகாலை யினிற்ப்ராணன் ஆயிர
இதழ்க்கமலத் தமைந்து மேவும்
அதிகாலை யினில்தண்ணீ ரினில்மூழ்கின்
அமரர்மகிழ்ந் தாசி யீவர்
அதிகாலை நீராடின் நினைத்தசெயல்
கைகூடும் அவனி மீதே. 85

விடியலிலே துயிலெழுதல் வேண்டுமென
மேலோர்கள் மிகவும் சொன்னார்
விடியலில்தண் ணீராடல் வேண்டுமென
வேதங்கள் யாவும் கூறும்
விடியலில்தண்ணீராடி நோன்பியற்றல்
வேண்டுமென வாத வூரர்
நெடியகுழல் ஆண்டாள்சொல் பாவைப்பாட்
டிதனைநினை வுறுத்தும் நன்றே. 86

நீரிலதி காலையினில் தெய்வீக
சக்திமிக நிறைந்து நிற்கும்
நீரிலதி காலையினில் மூழ்கிடுவோர்
நோயனைத்தும் நீங்கி வாழ்வர்
நீரிலதி காலையினில் மூழ்கிடுவோர்
வையமிசை நெடுநாள் வாழ்வர்
நீரிலதி காலையினில் மூழ்கிடுவோர்க்
கருட்செல்வம் நிறையு மன்றே. 87

உததியுடை சூழ்புவியை இறைவன்அருள்
நீர்உருவாய் ஓம்பல் கண்டார்
அதிகாலை புறவுடல்நீ ரினில்நனைய
அகம்அருளில் தோய்தல் கண்டார்

எதையும்உல குக்குணர்த்த எண்ணிடுவோர்
தாம்முதலில் இயற்று தல்போல்
இதம்அருள்சட் டக்கருவாம் நீராட்டத்
தினைஅண்ணல் ஏற்றுச் செய்தார். 88

எல்லோர்க்கும் இனியவழி காட்டஇவண்
போந்துள்ள ஏந்த லாரை
எல்லோரு நித்திடுமுன் நதிக்கேகி
நீராடும் இயல்பு வாய்ந்த
நல்லோர்கள் பலர்கண்டு நட்புடைய
ரானாரிஞ் ஞான வள்ளல்
சொல்லோடு மனம்தூய்மை செயல்தூய்மை
கண்டுகளி துதைந்து நின்றார். 89

திருமுகத்தின் பொலிவாலும் சொல்லிலுறு
தெளிவாலும் அன்பினாலும்
அருளுடையர் இவரென்னக் கண்டுணர்ந்த
நல்லோர்கள் அன்போ டுற்றுத்
தெருளுடைய இவர்க்குரிய பணிவிடைகள்
தினந்தோறும் செய்ய லானார்
மருவுமிவர் களினாடே மணப்பாறை
சேர்வையென்பார் ஒருவ ராவார். 90

சீரேடும் அவர்முன்பு செய்தவத்தால்
இச்சேவை செயமுன் வந்தார்
நீரோட்டம் குறைந்திருக்கும் காலத்தும்
நீள்வைகை ஊற்று நீரால்
பாரோர்க்கு மிகஉதவும் ஆதலினால்
வைகையெனப் பகர்ந்தார் முன்னோர்
பாரோர்க்கு மிகஉதவ வந்தஅண்ணல்
பாங்கொடந் நீராட லுற்றார். 91

ஆற்றினிலே ஊற்றுக்குழி போடுவதில்
சேர்வைவல்லா ராத லாலே
ஆற்றினில்நீ ராடஅண்ணல் வருமுன்னர்
ஆர்வமுட னிந்த நல்லார்

ஊற்றுக்குழி ஒன்றெடுத்து நாள்தோறும்
துப்புரவு செய்து வைப்பார்
ஊற்றெடுக்கும் அன்புடையர் பலர்அண்ணல்
பணிபுரிதற் குவந்து நிற்பார். 92

அவர்களுண்மை யன்பினைக்கண் டண்ணல்மனம்
கனிந்திடுவார் ஆண்ட வன்பால்
இவர்களுக்கு மெய்யன்பு மிகவேண்டும்
ஞானமிவர் எய்த வேண்டும்
பவமான கடல்கடந்து பரஞான
முத்தியிவ ரடைய வேண்டும்
உவமான மற்றஇறை வா!இவர்கட்
கருள்வாய்என் றுருகி நிற்பார். 93

அதிகாலை யவ்வூற்று நீரினிலே
நாள்தோறும் ஆடி யண்ணல்
அதியற்பு தச்சுகத்தில் திளைத்திடுவார்
அஃதிறைவன் அடிச்சு கம்போல்
மதிகூட்டித் தூயஅருள் நிதிகூட்டிப்
பதியொடுசேர் மாண்பு கூட்டிக்
கதிகூட்டத் தக்கதுவாய் விளங்குவது
கண்டுகளி கொண்டு நின்றார். 94

அண்ணலுடன் நீராடி ஆலயத்துக்
கேகுதலும் ஆர்வ மோடும்
அண்ணல்பணி விடைசெயலும் அண்ணலுடன்
பழகுதலும் அவரை நாளும்
எண்ணியவா றிருப்பதுமே இனியமகிழ்
வூட்டுவதா யிருந்த தால்நம்
அண்ணலொடு தினந்தோறும் அதிகாலை
யினிற்சேர்வார் அன்பர் பல்லோர். 95

தூயதிரு வெண்ணீறு துதைந்திலங்கு
மேனியிலார் தூவெள் ளாடை
மேயஅரு ளண்ணல்உளத் தூய்மையினை
மேதினிக்கு விளக்கிக் காட்ட

பாயுநதி நீராடி முடிந்திடுநீள்
குழல்கருணைப் பண்பு காட்ட
தூயதிரு வருட்பொலிவொ டாற்றிவின்று
வருவதுகண் டன்பர் சூழ்வார் 96

இரெட்டியப்பட்டி சுவாமி திருநாமம்

அவர்பால்நற் பெருமதிப்பும் அச்சமும்கொண்
டவ்வூரார் வணங்கிச் சூழ்வார்
அவர்பெயரைச் சொல்லாமல்'சாமி'என்றுள்
ளன்போடும் அழைக்க லானார்
புவனிமிசை பிரசாமிகளி னின்றும்
தெளிவாகப் புரிந்து கொள்ள
அவர்பெயர்முன் ஊர்சேர்த்தி ரெட்டிபட்டிச்
சாமியென அழைக்க லுற்றார். 97

கூடல்நக ரினிலினிது குலவிநல்வா
ணிபம்புரியும் காலை யன்பால்
நாடொறும்நல் விடியல்நதி நீராடி
முன்னவனை நன்று போற்றி
நாடுபுகழ் மதுரையினுள் ஏகுகையில்
காட்சிபல நாளும் காண்பார்
விடுபுகு நெறியெளிதில் வியன்புவிக்கு
விளக்கவந்த விமலச் செம்மல். 98

சலசலக்கும் நதியினில்நீ ராடிவெண்ணீ
றணிந்துசந்த னப்பொட் டிட்டு
நலமிகுத்த அஞ்செழுத்தை நாவார
ஓதிஇறை நற்றாள் நெஞ்சில்
இலகிடப்ப தித்தவணம் இல்லத்திற்
கேகிடுவர் பழுத்த சைவர்
மலர்விற்போர் புதுமலர்கள் கூடையிற்கொண்
டிலந்தோறும் வழங்கிச் செல்வார். 99

மங்கலப்பெண் மணிகள்திரு வீதிகளில்
நீர்தெளித்து வணப்பார் கோலம்
பொங்குமகிழ் வொடும்தீட்டி விளக்கேற்றி
அம்பிகையைப் போற்றும் காட்சி

கண்கள்குளி ரக்கண்டு களிப்புற்றுக்
கருணையண்ணல் தெய்வ பக்தி
பெண்களிடம் மல்கியுள திவர்கள்மிகு
பெருமையுடன் வாழ்க என்பார். 100

திருக்கோயி லருகிலண்ணல் செலும்போது
திருப்பள்ளி யெழுச்சிப் பாட்டும்
திருக்கோயில் மணியோசை யும்கேட்டுள்
ளேஇனிது செல்வார் தூய
திருமேனி வெள்ளாடை திருநீறு
தூய்மைமிகு சிந்தை கண்டு
பெருநீர்மை யோடுமக்கள் விலகிநிற்கப்
பெரிதுருகி உள்ளே செல்வார். 101

மீனைநிகர் விழியம்மை யருள்போற்றி
மேதினியெல் லாம்வி ளங்க
தேனையும்விண் ணமுதினையும் வெல்லும்அருட்
டிருப்பாடல் பாடிப் போற்றி
ஊனையும்நல் லுளத்தினையும் இனிதுருக்கும்
உண்மையன்பு வழிபா டாற்றி
யானெனதென் பதைநீக்கி யருள்புரிக
என்றேத்தி யமைதி கொள்வார். 102

ஆக செய்யுள் 703

---

## 3. திருமணப் படலம்

### விநாயகர் துதி

சொல்லனைத்தும் தானாகித் தூயமறைப்
பொருளாகிச் சோகம் தீர்க்க
வல்ல அருட் குருவாகி வாக்கிறந்த
பூரணமாய் வைய மீதில்
நல்லவரைப் பேணருளாய் அல்லவரைத்
திருத்தறமாய் அமுதாய் மேவி
வல்லபங்கள் அனைத்தும்அருள் வல்லபை
விநாயகர்தாள் வணங்கி வாழ்வாம். 1

வேறு

குரும ணியெனப் போந்த குழகனார்
திரும ணம்செய் சிறப்பினைச் செப்பிட
அருள்ம ணம்கமழ் ஐங்கர மூர்த்திதாள்
பெருவி ருப்பொடும் போற்றிப்பே றெய்துவாம். 2

## குருநாதர் துதி

பொன்னொடு வாணி போற்றுமங் கயற்கண்
புனிதையின் திருவருள் பெற்றுப்
பன்னரும் வளஞ்சால் கூடல்மா நகரிற்
பக்தியும் ஞானமும் வளர்த்து
நன்னலத் தோடும் திகழ்சுப்ர மண்ய
நாமவேள் திருவடி போற்றி
முன்னுள வினையும் பின்வரு வினையும்
போக்கிநன் முத்திபெற் றுய்வாம். 3

பல்லறம் திகழும் பாண்டிய நாட்டில்
பண்புடன் தோன்றிய அண்ணல்
இல்லறத் தவரும் உய்ம்வழி உணர்த்த
இனிதவ தாரம்செய் ததனால்
சொல்லற நெறியைத் தாம்முத லேற்றுச்
சொல்லுதல் நன்றெனத் துணிந்தே
இல்லற மேற்ற இனியநல் வரலா
றினியறிந் தின்னருள் பெறுவாம். 4

---

## இருடியர்பட்டியில் அண்ணலைத் தேடல்

அருள்திகழும் மதுரையினில் அண்ணல்இவ்வா
றருள்வாழ்க்கை யாற்றும் காலை
இருடியர்பட் டியிலிவரைக் காணாராய்
இதயமிக வாட்ட முற்று
மருள்திகழும் உளத்தோடு கடுஞ்சொ லுரைத்
தோமென்ன வருந்தி யின்றோர்
தெருள்மிகுத்த சீரியரெங் குற்றாரோ
என்றெண்ணித் தேட லானார். 5

## அன்னையார் கலங்கல்

என்பிள்ளை எவ்வழியிற் சென்ருனே
எவ்வூரில் இருக்கின் ருனே
அன்புடன்பெற் றெடுத்தஅன்னை யாலிருந்தும்
எப்பக்கம் அவன்சென் ருனே
இன்பமிகு முறுவலுடன் அவன்அமரும்
நாற்காலி கட்டில் எல்லாம்
முன்பிருந்தென் துன்பத்தைப் பெருக்கிடும்;தே
டிடமுயல்வீர் அத்தான் என்பார். 6

தெருவில்விளை யாடுகிற சிறுவர்களைச்
சிறுமியரைப் பார்த்து நீர்என்
அருமைமகன் சுப்ரமண்யம் சென்றவழி
அறிவீரோ சொல்வீர் என்பார்
பெருமைமிகும் அவன்கையால் தொட்டதெலாம்
பொன்ஞகப் பெருகிற் றென்பார்
ஒருவரிட மேனும்அவன் துடுக்காகப்
பேசான்என் றுருகிச் சோர்வார். 7

கருவினிலே அருட்ஜோதி வடிவாகப்
புகுந்ததிறம் கண்ட வாறும்
உருவொடும்உள் வளர்காலை தானின்னரு
ளொளியோடு திகழ்ந்த வாறும்
திருவவதா ரம்செய்த திருநாளில்
தேவர்மலர் சொரிந்த வாறும்
மருவுபெரி யோர்பலரும் அருட்குழந்தை
யெனவாழ்த்தி மகிழ்ந்த வாறும், 8

பொங்கார்வ மோடுதிரு நீற்றுக்காப்
பிடும்போது பொலிந்த வாறும்
செங்கீரை யினிதாடி அனைவரையும்
மகிழ்வித்துத் திகழ்ந்த வாறும்
சிங்காரத் தொட்டிலிற்கண் வளர்ந்தெழுந்து
சிரித்துமகிழ்ந் திட்ட வாறும்
அங்கைகொடு சப்பாணி கொட்டியவா
றும்முத்தம் அளித்த வாறும், 9

நனிபிசைந்து தேன்கலந்த திருவமுதூட்
டுகையில்நகர்ந் திட்ட வாறும்
தனியெழிலொ டேகவரைப் பிடித்தெழுந்து
தளர்நடைபோட் டிட்ட வாறும்
பனிமதியைப் பார்த்தருகில் வருகவெனப்
பரிவொடழைத் தழுத வாறும்
இனிதுகண்ணா டியில்மதிகண் டுளங்களித்த
வாறும்எண்ணி ஏக்கம் கொள்வார். 10

பெறலரிய பெருஞ்செல்வ மாம்மகவைப்
பெறும்பேறு பெற்றும் பேணும்
திறமையின்றி யேமாந்து போனோமே
யென்றன்னை சிந்தை நோவார்
முறுவல்நிகழ் முகத்தோடும் முழுப்பொலிவி
னோடும்கனி மொழிக ளோடும்
நிறையருளின் உருவான நிகரில்மக
வினைநினைந்து கண்ணீர் சோர்வார். 11

யாரிடமும் எப்பொருளும் கேட்காத
இயல்புடைய இப்பிள் ளைக்கே
யாருணவு பசிவேளைக் கிவார்என்
றெண்ணியெண்ணி ஏக்கம் கொள்வார்
யாருடைகள் கொடுத்திடுவார் யார்படுக்க
இடம்கொடுப்பார் என்று நைவார்
சீருடைய என்மகனைத் திருவருள்காப்
பாற்றுமெனச் சிந்தை தேர்வார். 12

அவனிருக்கும் போதிவ்வீ டருட்பொலிவு
மிகுந்துவிளங் கியதே யென்பார்
அவனில்லா தித்தனைபேர் இருந்தாலும்
அருட்பொலிவிங் கிலையே என்பார்
அவனில்லா வீடுமதி யில்லாத
வான்போன்ற தன்றோ என்பார்
அவன்பூசை யறைக்குள்ளும் அம்மன்கோ
யிலிலும்இருப் பானே என்பார். 13

பூசையறைக் குட்சென்று பிள்ளையா
    ரைப்பார்த்துப் பொற்போ டுன்பால்
நேசமிகப் பூண்டிருந்த பிள்ளையுனைப்
    பிரிந்திருத்தல் நீதி யாமோ
தேசமிகு நீயவனைத் தேடும்வழி
    செப்பிடமாட் டாயோ என்பார்
காசுபணம் கையிலின்றிச் சென்றுள்ளான்
    நீயவனைக் காப்பாய் என்பார். 14

ஒன்றும்புரி யாதம்மன் கோயிலுக்குச்
    சென்றழுவார்; ஒருகால் வந்து
நன்றவனுக் குணவூட்டிக் காத்தனையே
    நாளுமுன்னே டிருந்திட் டானே
இன்றவனை இங்கிருந்து பிரித்தனையே
    இதுநீதி யாமோ சொல்வாய்
என்றவனை யிங்கழைத்து யான்காணக்
    காட்டிடுவாய் இயம்பாய் என்பார். 15

யான்புரிந்த பிழையெனினும் எங்கள்மர
    போர்புரிந்த பிழையென் றாலும்
ஊன்பொலிய உயிர்பொலிய என்வயிற்றிற்
    பிறந்தஅந்த ஒருசேய் தன்னை
யான்பிரியப் புரிந்தனையே இதுதகுமோ
    எமதுபிழை பொறுப்பாய் என்பார்
வான்பொலிய மண்பொலிய வந்தவனை
    இங்குவர வழைப்பாய் என்பார். 16

இப்படிப்பல் விதமாகத் தேவியிடம்
    சொல்லியழு தில்லம் சேர்வார்
எப்படியெவ் விதத்தெங்குப் போய்த்தேடின்
    அவன்கிடைப்பான் என்று நைவார்
மைப்படியும் முகிலினமே வெயில்வருத்தா
    தவனுடம்பை மறைப்பீர் என்பார்
ஒப்புயர்வில் சூரியனே அவனிருக்கும்
    இடம்அறிவாய் உரைப்பாய் என்பார். 17

எப்பொழுதென் னருள்மகவை யான்காண்பேன்
    விண்ணவர்காள் இயம்பீர் என்பார்
முப்பொழுதும் அவனிரண்டு கண்களையும்
    மூடியமர் வானே என்பார்

தப்பெதுவும் அவன்புரியான் உணவின்றி
அவன்வாடத் தகுமோ என்பார்
செப்பமிகும் அம்மகவைத் தேவர்களே
காத்தென்பால் சேர்ப்பீர் என்பார். 18

உற்றாரும் ஊராரும் வருந்தல்

பெற்றாரும் உற்றாரும் ஊராரும்
பலவிதமாய்ப் பேசி நொந்தார்
மற்றாரும் சொலும்வண்ணம் அங்குமிங்குந்
தேடியும்நம் வள்ள லாரைச்
சற்றேனும் காணாராய்த் திரும்பிடுவார்
தம்குற்றம் கருதி நோவார்
எற்றோநன் றவரிருக்கும் இடம்தேடிக்
காணும்வழி யென்று நைவார். 19

வேறு

பலபிற விகளிற் செய்தவப் பயனாய்ப்
பார்மிசை யிவரையீன் றோரும்
இலகரு ளண்ணல் தரிசனம் பெறவும்
இனிதிவ ரொடுபழ கிடவும்
பலபிற விகளிற் றவம்செய்தவ் விருடிப்
பதியினில் வாழும்மற் றோரும்
குலம்விளக் கிவரைக் கூடல்மா நகரிற்
கண்டவர் கூறிடக் கேட்டார். 20

வேறு

இத்தனைநா ளாயெங்கும் தேடியும்கா
ணாற்கியலா திருந்த அந்த
உத்தமச்சேய் மதுரையிலுள் ளாரென்னச்
சொலக்கேட்டுள் ளுவந்த பெற்றோர்
புத்தமுதுண் டோர்போலப் பூரித்துப்
புனிதமது ரைக்குச் சென்றவ்
வித்தகச்சே யினையழைத்து வரல்வேண்டு
மென்றுநன்று விருப்பம் கொண்டார். 21

மதுரை சென்று தேடிக் காணுதல்

மாமதுரை நகர்சென்று கண்டழைத்துக்
கொண்டுவரு வோமென் றெண்ணி
நேமமிகு தந்தையும்ஊற் ருர்சிலரும்
ஐங்காத நெறிநடந்தார்
ஆமதுரை நகர்சேர்ந்தார் வீதிதோறும்
தேடிமனம் சோர்ந்து நின்ருர்
நாமினியெவ் விடத்தவரைக் காண்பதெனக்
கூறியுளம் நைந்து நொந்தார். 22

அங்கயற்க ணம்மைதிருக் கோயிலின்கோ
புரம்ஓங்கி யமைதல் கண்டார்
அங்குசென் றன்னையைப்பணிந்து துதிக்கின்வழி
பிறக்குமென அகத்துட் கொண்டார்
செங்கைசிர மேற்கூப்பிக் கோபுரத்தை
வணங்கியங்குச் செல்ல லானுர்
மங்களம்நல் கன்னைதிருத் தளிசேர்ந்து
மனம்கசிந்து வணங்கி நின்ருர். 23

எங்கள்குல விளக்காக இவ்வுலகில்
இனிதுதித்த ஏந்த லாரின்
துங்கமுண ராமல்அறி யாமையினுல்
புன்மொழிகள் சொல்லி விட்டோம்
எங்கவரைக் காண்பதெனத் தெரியாமல்
தேடியிளைத் தேங்கு கின்ருேம்
எங்கள்பிழை பொறுத்தருளி அவரிருக்கும்
இடம்காட்டாய் அம்மா என்ருர். 24

விழிகளின் றும்புனலா ருய்ப்பெருக
விம்மிவிம்மி யழுது நின்ருர்
மொழிகுழற மீனுட்சி யம்மேஎங்
களைவருத்தல் முறையோ என்பார்
வழியருள்வாய் இங்கெம்மை வாழ்விப்பாய்
என்றுருகி வழுத்தி நின்ருர்
வழிபிறக்கு மென்பதுபோல் மலர்இறைவி
முடியினின்று விழுந்த தங்கண். 25

மலரிறைவி முடியினின்று மாணடியில்
விழக்கண்டு மகிழ்வு கொண்டார்
உலகமுய்ய வந்தவரை இறைவியருள்
காட்டுமென உறுதி பூண்டார்
பலமுறையும் பணிந்தேத்திப் பாவம்பொறுத்
தருள்கவெனப் பரவி நின்றார்
இலகுகணே சரைச்சொக்க நாதனைக்கும்
பிட்டுவெளி யினிலே வந்தார். 26

சொக்கேசர் திருத்தளியின் தூமணிக்கோ
புரவாயி லுள்ளுட் கார்ந்து
தக்கோராய் அவன்சூழ்வோர் தம்மொடிவர்
வருவாரோ என்று பார்த்தார்
பொற்கோயில் விட்டுவெளிச் சென்றுகடை
களிற்காண்போம் என்று போந்தார்
நற்கால மாகமுகம் மதியர்கடை
யினிலிவரை நன்று கண்டார். 27

கண்டதுமே அங்கயற்கண் ணம்மையருட்
கருணையுன்னி உளம கிழ்ச்சி
கொண்டவராய் அங்காடி யருகேகி
அண்ணல்தமைக் கூப்பிட் டார்கள்
கண்துளிகள் சிந்த அருள் தந்தைஅணைத்
துக்கொண்டு, கண்ணே நாங்கள்
விண்டமொழிக் காமுனிந்திவ் வாறுவந்தாய்
எமதுதுயர் விளம்பற் காமோ? 28

அங்கயற்கண் ணனையருளால் உனைக்கண்டோம்
அகமகிழ்ந்தோம் இனியும் சேய்நீ
இங்கிருக்க வேண்டாம், எம் மோடுறுவாய்
அன்னைஅவண் ஏங்கி யுள்ளாள்
கங்குல்பகல் அழுதழுது கண்ணீராற்
கலங்குகின்றாள், கண்ணே நீவந்(து)
அங்கிருந்தாற் போதும், உனை யாரும்எது
வும்சொல்லா ரப்பா என்றார். 29

உடன்வந்த மற்றாரும் மனமுருகிச்
சிலவார்த்தை உரைக்க லானார்
அடல்மிகுத்த நீவந்தால் உவரேமிக்
கழகுற்றுத் தோன்றும்; இந்தப்
புடவியில்யாம் புரிந்தபெருந் தவப்பயனாற்
போந்தநின்றன் மனம்வருந்த
மடமையினால் உரைத்தமொழி மறந்(து)இருடி
நகர்க்கினிது வருக என்றார். 30

கூட்டிக்கொண்டு சென்றுமணம் செய்வித்தல்
வேண்டுமெனும் குறிப்பினோடும்
நாட்டமிறை மீதுகொண்ட நம்பியிடம்
எவ்வளவோ நவின்றும், சற்றும்
வாட்டமின்றி வேறெங்கும் வரமுடியா
தென்றுரைக்கும் வார்த்தை கேட்டு
விட்டினுக்க ழைத்தேக இயலாராய்
வேறுவழி எண்ண லானார். 31

நம்முடனும் இருடிநகர்க் கவர்வந்தி
ராவிடினும் நம்பி யோடு
நம்மில்ஒரு வரைமதுரை நகரிலிருக்
கச்செய்தல் நலமாம் என்றே
செம்மலுக்குத் தமுன்முத்துக் கருப்பபிள்ளை
சுதன்பிச்சாண் டிப்பே ரோடும்
தம்மொடுற்றோ ரைக்கூடல் நகரில்விட்டு
வைத்து(இ)ருடிப் பதிக்குச் சார்ந்தார். 32

மணம் செய்விக்க முயலல்

அவர்கள்மனம் மதுரையில்வாழ் அண்ணலையெண்
ணியவாறே யமைந்திருக்க
இவரையுல கினிலீன்ற தந்தையார்க்
கியல்மூப்பும் நலியும் தோன்ற
அவருடம்புமெலிந்திடவும் அண்ணல்மனத்
தினைமாற்றி மணம்செய் விக்க
அவர்மிகவும் விரும்பிடவும் அதற்காக
முயன்றுசெயல் புரிந்தார்உற்றோர். 33

வேறு

தந்தைவி ருப்பினை யன்னவி டம்நவி
சாற்றிடவும்
தந்தைசொல் மிக்கநன் மந்திர மிலையெனும்
சான்றோர்சொல்
சிந்தையில் மேவவும் முன்வினை யின்பயன்
சேர்ந்திடவும்
எந்தைவி நாயகர் அருளிது என்றெண்
ணினர்அண்ணல். 34

வேறு

மாராஜராஜபூ ஜிதவெங்க டேச்கரமான்
புப்பேர் கொண்ட
சீராரும் எட்டையப்ப ஐயனெனும்
திருவாளர் ஆண்டுவந்த
ஏராரும் எட்டையா புரசமஸ்தா
னத்தில்நடு விற்பட் டிச்சீர்
ஊர்வீர திரகம்பீ ரர்முருகப்
பிள்ளையென்பார் உள்ளா ரானர். 35

அவர்தேவி யார்திருப்பேர் ஆவுடையம்
மாள்அவர்தம் மகளாய்ப் போந்த
தவச்செல்வி யாம்மாரி யம்மையெனும்
நங்கையினைத் தக்கோர்கூடி
இவர்க்குமணம் செய்விப்ப தெனநிச்ச
யித்தார்கள் இம்ம ணத்தை
இவரிருக்கும் மதுரையிலே யேவைத்து
நடத்துதல்நன் றெனக்கொண் டார்கள். 36

மணமகளார் பிறந்தஎட்டை யாபுரத்தில்
மணம்வைத்துக் கொளலா மேனும்
மணமகனார் ஊர்இருடிப் பட்டியினில்
மணம்நடத்திக் கொளலா மேனும்
மணமகனார் இருக்கும்மது ரையிலேயே
மணம்நடத்த முடிவு செய்தார்
மணமகனார் இறுதியினில் இசையாரோ
எனமனத்தச் சமும்உட் கொண்டார். 37

இம்மகனுக் கினிதுமணம் செய்துவைத்து
விடவேண்டும் என்ற தந்தை
செம்மனத்தின் திருக்கருத்தும் அவருடை
வயோதிகமும் உடம்பின் சோர்வும்
நம்மைப்பெற் றோரிடத்தில் அண்ணலார்
கொண்டிருந்த மெய்ம்மை யன்பும்
உம்மைவினை யின்பயனும் ஒன்றஅண்ணல்
மணமகனாய் ஒளிர லானார். 38

உள்ளமதில் துறவுமனப் பான்மைமிக
உடையவராய் இருந்திட் டாலும்
வள்ளலார் இல்லறத்தார்க் குணர்வூட்டி
உய்விக்க வந்த தாலே
எள்ளலிலா இல்லறத்தை இவர்க்கருள
இறைவர்திரு வுளத்திற் கொண்டார்
கள்ளமிலா இவருளத்திற் கேற்றநல்ல
கற்பரசி மணப்பெண் ணானார். 39

தாரணநல் லாண்டானி மாதத்தில்
மணம்பேசிச் சம்ம தித்துக்
காரணமாம் சக்திதிரு வருளுன்னிக்
கடிமணநிச் சயம்செய் தார்கள்
தாரணியி னிற்சைவ வேளாளர்
மரபினுக்குத் தக்க வண்ணம்
சீரணவு திருமணத்தை நடத்துவதற்
கேற்றதெலாம் செய்ய லுற்றார். 40

மணஓலை அனுப்பல்

இந்தமணம் இனிதுநடந் திடவேண்டும்
என்றிறைவி அருளைப் போற்றிச்
சந்தமுற மணவோலை யினையெழுதிச்
சக்திதிரு முன்னர் வைத்து
நந்தலில்சீர் இம்மரபின் பேர்மேலும்
நனிசிறக்க இம்ம ணத்தை
முந்தியிருந் தினிதுநடத் தித்தருவாய்
முதல்வியெனத் துதித்து நின்றார். 41

மணம்நன்று நடக்குமென மறைமுதல்வி
இயம்பிடல்போல் மணிவிளக்கின்
வணமிக்க ஒளிமிகவும் வளர்ந்தன்னை
திருவருளின் மாண்பைக் காட்ட
எணமிக்க மகிழ்ந்தவராய் மணவோலை
யினிதெவர்க்கும் அனுப்பி வைத்தார்
மணவோலை கண்டவர்கள் மணத்தோடு
மதுரையும்கண் டிடவுட் கொண்டார். 42

## திருமணச் செயல்கள்

அறுபகையா கியவெப்பம் அடியாரைத்
தாக்காமல் அருளாற் காக்கும்
மறுவறு சீர் அண்ணலா ரின்குளிர்ந்த
உளம்போல மணம்செய் இல்முன்
மருகில்அழ குறப்பந்தர் அமைத்தார்கள்
அவர்சத்வ மனம்போல் வெள்ளைச்
சிறுமணல்கீழ் பரப்பிவெள்ளை விதானம்நவி
உட்புறத்தில் திகழ்வித் தார்கள். 43

பாலைவனம் போன்றமனங் களில்அருளாம்
பசுமைநிறை வித்தல் என்னும்
வேலைசெயப் போந்தவர்க்கு மணம்நடக்க
உள்ளஇடம் பசுமை மிக்க
சோலையெனத் திகழும்வணம் கதலிதென்னை
கமுகுநட்டுத் தூந றும்பூ
மாலைகளும் மாவிலையின் தோரணமும்
தூக்கிமிகு வனப்புச் செய்தார். 44

உள்ளேயும் மணப்பந்தர் அழகாக
அலங்கரித்தார் ஒப்பி லன்பர்க்
குள்ளேநல் லருள்முளைதோன் றச்செயவந்
துளரென்ன உணர்த்தல் போலத்
தள்ளாமல் எவர்க்குமருள் அண்ணல்திருக்
கரத்தில்நவ தான்யம் தந்து
வள்ளால்நீ ரிடுகவென வள்ளல்முளைப்
பாலிகைகள் வளர இட்டார். 45

அடியாரை அருள்நீரில் ஆட்டிஇன்பம்
ஊட்டவந்த அண்ண லார்க்குத்
தொடியார்மங் கலமாதர் கூடிஇசை
பாடிநறுந் தூநீர் கூட்டிக்
கடியார்சந் தனத்தாலும் கலவைநறுந்
துகளாலும் நலங்கு வைத்துப்
பொடியார்மே னியனருளைப் போற்றியருள்
மங்கலநீ ராட்டு வித்தார். 46

மணமகட்கும் அவ்வாறு நலங்கிட்டு
மங்கலநீ ராட்டு வித்தார்
மணமகள்செய் தவமென்னே இந்தஅருள்
வள்ளலைம ணத்தற் கென்பார்
கணவர்அரு ளாளர்,அவர் கருத்தறிந்து
நடந்துகொள்வாய் கண்ணே என்பார்
உணவவர்க்குச் சமைத்தளிக்க ஒப்பில்தவம்
நீயாற்றி யுள்ளாய் என்பார். 47

இல்லறத்தை இனிதேற்றுக் கொண்டாலும்
இவர்மயலிற் சிக்கார் என்பார்
நல்லருளை மனைவியும்பெற் றுயுமாறு
நம்பிதிருத் திடுவார் என்பார்.
பல்லறமும் இவர்கள்புரி நல்வாழ்வில்
பாங்கோடு வளரும் என்பார்
தொல்லுலகுக்.கிவர்களருள் வாழ்வுமிகு
துணையாகி விளங்கும் என்பார். 48

மணமகனும் மணமகளும் மங்கலநீ
ராடிமணப் பந்தர் சேர்ந்தார்
கணபதிக்கு வழிபாடு கருத்தோடும்
கனிவோடும் செய்து போற்றி
வணங்கிஇரு கைகூப்பி மாதேவே
மயலினில்யா னமிழா வண்ணம்
துணைபுரிவாய் என்றண்ணல் உளமாரத்
துதித்தன்பால் உருகி நின்றார், 49

முன்னவனார் அதற்கிசைந்து முழுதருள்செய்
திட்டநுட்பம் அண்ணல் ஓர்ந்தார்
நன்னலமார் புத்தாடை நனிபடைத்துத்
தரவாங்கி யணிந்த மர்ந்தார்
கன்னல்மொழி யணங்குமினி தணிந்துமிகு
கவினுறநன் றருக மர்ந்தார்
மன்னுதிரு வருள்நாடி மலர்க்கரத்தில்
மஞ்சட்காப் பணிவித் தார்கள் 50

உயிர்களெலாம் உத்தமமாம் அருள்வாழ்வை
உலகின்மிசை இனிதே யாற்றி
உயத்தகுந்த ஒப்பில்நெறி பொதுவாக
எளிதாக உணர்ந்து நல்கி
அயர்வறநன் றேபுரத்தல் வேண்டுமெனக்
கங்கணமொன் றணிவித் தல்போல்
மயர்வறுநன் மதிநலங்கொள் அண்ணலுணர்ந்
தருள்நாடி மகிழ்ந்த மைந்தார். 51

எழிலார்ந்த புத்தாடை இனிதுடுத்தி
இனியதிரு நீறு சாத்தி
எழிலார்ந்த சந்தனகுங் குமதிலகம்
இனிதுநெற்றி யினில்இ லங்க
எழிலார்ந்த ஆபரணம் பலசூடி
இனியநறு மாலை சூடி
எழிலார்சொக் கரைப்போல்மீ னாட்சியைப்போல்
மணமணிகள் இலங்கி னாரே. 52

கண்டவர்கள் எல்லோரும் கடவுளைக்காண்
பதுபோலக் களிப்ப டைந்து
விண்டிறைவன் திருவருளைப் போற்றிமகிழ்
வெய்திட்டார் விண்ணோர் ஆர்த்தார்
புண்டரிக மலர்களெலாம் அடியருளம்
போல்மலர்ந்து பொலிய நாமும்
கண்டுகளிப் போமென்னக் கதிரவனும்
கடிமணம்கண் டுவக்கப் போந்தான். 53

மணமகனை யீன்றோர்க்கும் மணமகளை
யீன்றோர்க்கும் மலர்த்தாட் பூசை
மணமலரும் சந்தனமும் குங்குமமும்
பனிநீரும் வண்கை யேந்திப்
பணிவோடும் அன்போடும் நன்றுற்றிப்
பணிந்தேத்தி ஆசி பெற்றார்
மணமகளை யீன்றோர்கள் மனமாரப்
பெண்ணையொப்புக் கொடுத் துவந்தார். 54

மங்கலநாண் அணிவித்தல்

மங்கலமாம் வடிவுடைய சிவபெருமான்
கனல்வடிவாய் வயங்க லாலே
மங்கலமாம் தீவளர்த்து மணமக்கள்
துதிபாடி வழிபட் டார்கள்
மங்கலநா ணினைஆன்றோர் அனைவரும்தொட்
டருளாசி வழங்கி னார்கள்
மங்கலமார் அருள்வாழ்வின் துணையாகென்
றுன்னியணி வித்தார் வள்ளல். 55

உள்ளமதிற் கள்ளமின்றித் தன்னைமுழு
தொப்புவிக்கும் இப்பெண் வாழ்வில்
எள்ளளவும் வறுமைபிணி யாதிகுறை
ஏதொன்றும் நேரா வண்ணம்
தெள்ளுமுணர் வினில்உலக மயலென்னும்
மாசணுவும் தீண்டா வண்ணம்
பிள்ளையார் அருள்புரிய வேண்டுமென
மங்கலநாண் பிணைப்புச் செய்தார். 56

ஜீவனென இவ்வுலகில் தோன்றியுள
சிறியேனைத் தேவ தேவன்
பூவுலகில் மணவாள னுய்த்தோன்றி
யினிதுமணம் புரிநா ளென்றே
ஒவில்வினை யொழித்துயிர்கள் ஒப்பில்பரப்
பிரமத்தொ டொன்ற லென்றே
மேவுமென்றன் விருப்பம்அரு ளால்விரைவில்
நிறைவேறு கெனவேண் டிட்டார். 57

### கடவுளரின் அருளாசி

துங்கமிகும் அருள்வாழ்வாற் றிப்புவிக்குத்
தூநெறிதந் தருள்க வென்ன
ஐங்கரனும் செந்திலமர் வேலவனும்
அங்கயற்கண் ணம்மை யோடு
திங்கள்முடிக் கணிசோம சுந்தரனும்
சேர்ந்தாசி வழங்கி னார்கள்
பொங்கமரர் புட்பமழை பொழியமுனி
வரர்ஆசி மொழிந்திட் டாரால். 58

உளத்துறவு மிகுந்தஅண்ணல் ஒப்பிலிறை
திருவுள்ளப் பாங்கின் வண்ணம்
வளமிகுநல் இல்லறத்தா ரானாரென்
றெல்லோரும் வாழ்த்தி னார்கள்
அளவில்பல உறவினரும் அன்பர்களும்
உணவருந்தி அகம கிழ்ந்தார்
களவில்அண்ணல் இறைவனருட் கருணையினை
நினைந்துருகிக் கனிந்த மைந்தார். 59

அடியனேன் விரும்பாம லிருந்தாலும்
இல்லறத்தா னாக்கி விட்டாய்
அடியனேன் மயலில்அமி ழாவண்ணம்
அருட்செல்வம் திரட்டி யுய்ய
நெடிதுதுணை யாயிருந்து காத்தருளும்
பொறுப்புனதாம் நிமலா என்று
பொடியணிமார் பினிற்கண்ணீர் பொழியவிநா
யகர்முன்பணிந் தெழுந்து போந்தார். 60

### அருள் வாழ்க்கை

மணச்செயல்கள் முடிந்தபின்னர் மணமகளை
மதுரையினிற் குடியேற் றிட்டார்
கணப்பொழுதும் வீணாகக் கழியாத
அண்ணல்அங்கா டிக்குச் சென்றார்
குணமிகுத்த அங்காடித் தலைவர்இவர்
இலிற்குரிய கொடுத்தார், அம்மை
உணவுசமைத் தங்காடிக் கனுப்பிடுவார்
அண்ணலதை உண்பார் நாளும். 61

அதிகாலை தினந்தோறும் வழக்கம்போல்
வைகைநதிக் கன்போ டேகிப்
பதிதானை உளத்தெண்ணி நீராடிப்
பாங்கோடும் கோயில் சுற்றித்
துதிபாடிப் பணிந்தேத்தி யினிதமர்ந்து
தூநிட்டை பேணிப் போற்றிக்
கதிநாடும் அன்பர்களுக் கருள்வாய்
கணேசாஎன் றுருகி நிற்பார்; 62

வேறு

எவ்வுயி ரும்சுக வாழ்வு நடத்தவும் இப்புவிமேல்
செவ்விய பேரின் பெய்தவும் நாடித் திருவருளை
ஒவ்வொரு நாளிலும் வேண்டுவர் அழுவர் வியன்நிட்டை
திவ்விய மாய்ப்புரிந் தங்கா டிக்குத் திரும்பிடுவார். 63

வைய முயும்வழி காண முயன்றிடும் வள்ளல்தினம்
செய்ய அமைந்துள கடமை திருத்த முடன்புரிவார்
ஐயமொ ரணுவுமு ருதுமெய் அன்புடன் அங்காடிச்
செய்கைகள் யாவையும் அண்ணல் செயப்புரி
வார்உரியோர். 64

திருஅள விலதாய் அங்கா டியினிற் சேர்ந்தாலும்
உரிமையொ ரணுவும் நமக்கிலை யென்ன உளங்கொள் வார்
ஒருசிறி தேயங் காடிய ரீவர், உவப்போடும்
திருவருள் தந்ததிஃ தாமென எண்ணுவர் சீரண்ணல். 65

ஆசைம னத்தினில் அணுவள வேனுமி லாதன்பும்
நேசமும் நிமலன் அடித்தா மரையில் நிறைவித்து
மாசறு வாழ்வு நடத்தினர் மூவிரு மாதங்கள்
தேசுறு தையெனும் திங்கள் பிறந்தது திருவருளால். 66

தந்தையார் சிவபதம்

கடைசிமக னுக்கும்திருக் கல்யாணம்
முடிந்ததெனும் கருத்தி னோடே
உடையவன்றன் திருவடியில் தந்தையார்
எய்தினர்என் றுரைப்பக் கேட்டே

அடைந்தனர்நல் விருடிநகர்க் கண்ணன்மார்
இருவரொடும் ஆற்றற் குள்ள
நடைமுறையின் வணம்சமக் கடன்முடித்து
நன்மதுரைக் கண்ணல் சேர்ந்தார். 67

மாணருள் பேணல்

மதுரைநகர் அடைந்த அண்ணல்
முன்னிலும்தி விரமாக வைகைக்கேகி
அதிகாலை நதிநீரி லினிதாடி
ஐங்கரனு லயமுற் றன்பால்
துதிபாடி வலம்வந்து நிட்டையினைத்
தூயமனத் தோடும் பேணிப்
பதியேஇவ் வுலகுயிர்கள் பக்குவம்பெற்
றுயச்செய்எனப் பரவி நிற்பார். 68

எங்கும்நிறை பரம்பொருளின் பெருந்திறலும்
அடியார்கட் கிரங்கும் மாண்பும்
சங்கையணு வேனுமின்றி மெய்ஞ்ஞானம்
தக்கவர்க்கு விளக்கும் வீறும்
துங்கமுறு மாறுயிர்க ளின்தொகையைத்
தூண்டியருட் குய்க்கும் பாங்கும்
பொங்குமின்பப் பொலிவெங்கும் நிறைவிக்கும்
சால்புமுன்னிப் புளகம் கொள்வார். 69

பத்திமிகு நல்லோரைப் பரனருளுக்
குருகுநரைப் பாங்கார் தெய்வ
சத்திமிகு தக்காரைத் தவம்பேணும்
தூயவரைச் சான்றோர்க் கேவல்
எத்துறையி லும்புரியும் தொண்டர்களைக்
கண்டதுமே இருகை கூப்பிச்
சித்தமகிழ் வொடும்பணிந்து போற்றுமுயர்
திறம்மிகுந்து திகழ லானார். 70

ஞாலமிசை தாமினிது செய்யவந்த
அரும்பணியை நன்று செய்யக்
காலம்வரும் வரையினிலங் காடியில்நற்
கணக்கெழுதும் தொழில்மேற் கொண்டு

சீலமிகும் தமைக்காட்டிக் கொள்ளாமல்
அடக்கமுடன் திகழ்ந்தார் அண்ணல்
ஏலஅவர் உள்ளிருந்தாக் கருள்அவர்கண்
முகப்பொலிவால் இலங்கிற் றன்றே. 71

இரெட்டியப்பட்டி சுவாமி திருநாமம்

நண்ணுபொரு ளினைக்காட்டும் பளிங்கேன்ன
நம்பியுளம் வதனம் காட்டும்
நுண்ணியர்கண் டுணர்ந்திடுமா றண்ணலருட்
பேர்லிவையருள் நோக்கம் காட்டும்
எண்ணியதெல் லாம்செய்து முடிக்கவல்லார்
என்பதரு ளியல்பு காட்டும்
திண்ணியரா யினும்அடக்க முடையரெனல்
திருவாய்இன் மொழிகள் காட்டும். 72

திருமுகத்தின் ஒளியாலும் திருநயனப்
பொலிவாலும் தெரிந்து கொண்ட
திருவாளர் அவரிடத்தில் பெருமதிப்பும்
சிறந்தஅன்பும் உடையோ ரானார்
மருவுறுமந் நல்லவர்மூ லம்பிறரும்
வள்ளலிடம் வரலா னார்கள்
திருவருளின் சிறப்புணர்ந்து 'சாமி' யெனச்
செப்பிக்கை கூப்ப லானார். 73

'இருடியர்பட் டிச்சாமி என்றெவரும்
வந்துகண் டிறைஞ்சிச் செல்வார்
மருவுறுநன் மணமலரை நாடிவரும்
வண்டினம்போல் மக்கள் கூட்டம்
பருதிநிகர் அண்ணலின்பால் நாள்தோறும்
வந்துவந்து பார்த்துச் செல்வார்
கருதியதெல் லாம்அருளும் கர்த்தரிவர்
எனவுளத்திற் கருதிச் செல்வார். 74

## மானாமதுரைச் சுவாமிகள் கூட்டுறவு

ஞானானு பவமெய்தித் துறவேற்று
நற்றூய வாழ்வு பேணி
மானாம துரைச்சாமி யெனமதுரை
மாநகரில் வதிந்து வந்த
ஆனாநற் சீருடையோர் அண்ணலின்பால்
வந்தருளின் நிலையை நோக்கி
வானாடர் போற்றவந்த வள்ளலென
மனத்தெண்ணிச் செல்ல லானார். 75

அங்காடி யினிற்கணக்கை யெழுதுமில்ல
றத்தாராம் அண்ண லாரை
மங்காச்சீர் துறவியெனும் மானாம
துரைச்சாமி வந்து பார்த்த(து)
அங்கூரார் கண்டுமிக வியந்தார்கள்
அப்போதும் அண்ணல் தம்மை
அங்காரும் அறியாவண் ணம்மறைந்து
வாழ்ந்திடவே அகத்துட் கொண்டார். 76

தம்மோடு கூட்டுறவு கொளவந்த
துறவியார் தகவு நோக்கி
இம்மேதி னியர்காண வந்தனைசெய்
துபசரிக்க எண்ணிச் செல்ல
அம்மாசில் துறவியரும் அவனியரும்
அண்ணல்நிலை வறிந்தா ராகி
வெம்மாயை நீக்கவந்தும் அடக்கமுடன்
விளங்குகின்றா ரெனஉ ணர்ந்தார். 77

அண்ணல்புரி முயற்சிகண்ட அனைவோரும்
உண்மையினை அறிந்து கொண்டார்
திண்ணியநற் றவமுடைய அண்ணலின்சீர்
மேன்மேலும் திகழ்ந்த தங்கண்
தண்ணளிசால் அத்துறவி யாருமண்ணல்
தகவறிந்து போற்ற லானார்
எண்ணியவா றவர்வணங்க அண்ணல்சற்றும்
இடங்கொடுக்கா திருப்பா ரானார். 78

பிற்காலத் தினில் அண்ணல் பெருநிலைபெற்
றுலாப்போந்த காலை பீடார்
நற்கோல மானும துரைச்சாமி
வணங்குதற்கு நண்ணும் போதும்
முற்காட்டு மதிப்பேகாட் டினர்முறையாய்
வணங்காவன் னம்த டுத்தார்
அக்காலத் தந்தறிந்த அடியார்கள்
அண்ணல்திறம் அறிந்(து)உவந்தார். 79

ஆக செய்யுள் 782

---

## 4. காட்சிப் படலம்

[அறுபத்தைந்தாம் திருவிளையாடல்]

### பரிபூர்ண விநாயகர் துதி

ஆரணங்கள் அனைத்தினுளும் திகழ்சாரம்
சட்டமென அருளற் கிந்தத்
தாரணியிற் போந்தஅண்ணல் தண்ணருளில்
மிகச்சிறந்து தவத்தைப் பேணிப்
பூரணம்பெற் றருள்ஞான குருமணியாய்ப்
பொலியஅருள் புரிமெய்ஞ் ஞான
பூரணவி நாயகன்றன் பொற்பாத
மலர்பணிந்து போற்றி வாழ்வாம். 1

### குருநாதர் துதி

ஆதியும் நடுவும் அந்தமும் அறிதற்
கரியதாம் அருட்பெருங் கருணைச்
சோதியைக் கண்டு விழிகள்நீர் பொழியச்
சூழ்ந்திரு கைகளால் தழுவிப்
பூதலத் தினில்வாழ் உயிரெலாம் போற்றிப்
புனிதமுற் றுயும்வழி காட்டவ்
வாதிமூர்த் தியைக்கற் சிலைவடி வினிற்போற்
றருட்குரு பதமலர் பணிவாம். 2

---

திருவருளின் உருவாகிச் செந்தமிழ்நற்
றிருநாட்டில் தேவர் போற்றக்
கருவிலருட் டிருவுடைய ராய் இருடி
நகர்போந்த கருணை யண்ணல்
பொருவில்மது ராபுரியில் 'சாமி'யெனப்
பலராலும் போற்றப் பெற்றுத்
திருவருளின் பொலிவோடு திகழ்ந்தமைகண்
டோம்;மேலும் திகழ்தல் காண்போம். 3

பரிபூர்ண மாய்எங்கும் நீக்கமற
நிறைந்திலங்கும் பரத்தைக் கண்முன்
பரிபூர்ணப் பெருமானைக் கண்டிருகை
யாலணைத்துப் பாரின் மேலாம்
பரிபூர்ண நெறிஉயிர்க்கெல் லாம்விளக்கிப்
பயனளித்த பரிசை ஞான
பரிபூர்ணம் பெற்றறியா இத்தமியேன்
ஒருநாவாற் பகரற் காமோ? 4

உய்வழியை உயிர்களெலாம் எளிதிலுணர்ந்
துயப்புரிதல் வேண்டும் என்று
மெய்வழியில் ஒழுகிவரும் இருடிநகர்
வித்தகனார் தினமும் காலை
வைகைநதி நீராடி முடித்தன்பால்
வழிபடுமுன் னவனை இந்த
வையமிசை கண்ணெதிரே கண்டுதொழ
விழைந்துருகி வழுத்தி வந்தார். 5

நிருமலன்றன் திருவடியை நினைந்தொருநாள்
அதிகாலை துயில்நீத் தண்ணல்
இருமைநலன் எவர்க்குமருள் வைகைநதிக்
கினிதேகி நன்னீ ராடி
ஒருமைமனம் உடையவராய் உயர்த்யானத்
தினிலமர உன்னிச் செல்வார்
அருமையென அமைந்தஇயற் கையின்சூழல்
அகத்துன்னி அருளே யானார். 6

பரம்பொருட்குச் சாமரை இரட்டிடல்போல்
பயில்தென்றல் அசையு மாறும்
கரம்குவித்துப் பக்தரெலாம் காலையினிற்
கடவுள்துதி செய்யு மாறும்
சிரம்திகழ்ஆ யிரஇதழ்ச்செந் தாமரையில்
இறைவன்ஒளி திகழு மாறும்
வரம்தாஇப் போதிறைவன் இவணுதிப்பன்
எனச்சொலல்போல் மனத்தெண் ணிட்டார். 7

வானமது நின்மலமாய் இருந்தவணம்
நுண்துளிகள் மலர்போல் தூவ
வானமரும் அமரர்குழாம் வனப்புறநின்
றைங்கரனை அருளை வாழ்த்த
ஞானமுனி வரர்முன்னேன் அண்ணலின்முன்
நண்ணுவனென் றெண்ணி வாழ்த்தத்
தேனமரும் மலர்பொழிந்து தருக்களெலாம்
தெய்வமணம் வீசிற் றம்மா, 8

அருட்சட்டத் திருநெறியை அருளியென்றும்
அனைத்துயிர்க ளையும்நன் றோம்ப
அருட்பரிபூர் ணப்பெருமான் வருகையறிந்(து)
அடியர்உளம் மலர்தல் போல
அருட்கதிரோன் வரவறிந்து கமலமெலாம்
அழகாக மலர்ந்து பாரில்
அருள்மணம்எங் கும்பரவும் எனச்சொலல்போல்
நறுமணத்தை அளித்த வன்றே. 9

தன்சிறப்பைச் சட்டநெறி யின்மூலம்
தரணிமிசை உணர்த்தற் காக
நன்செயென மக்கள்மனத் தைத்திருத்தி
நல்லருளை விளைத்தற் காகப்
பொன்செயொளிப் பிழம்புருவில் பூர்ணன்வரப்
போகின்றான் எனஉ ணர்ந்து
மின்செய்குலக் கொடிவையை மென்மலரா
டையினோடும் மெல்லச் சென்றாள். 10

வைகறையின் தனிஅமைதி உயர்மோனப்
பெருநிலையின் மாண்பு காட்ட
பொய்கலவாப் பறவையொலி நதியினெலி
ஓங்காரப் பொலிவு காட்ட
உய்வழியை உலகமுணர் காலம்நெருங்
கியதென்ன ஒப்பில் முன்னோன்
மெய்விளக்க வரும்அண்ணல் திருவுளத்தில்
அருள்வேட்கை மிகச்செய் திட்டான். 11

தனியாகக் குளக்கரையில் விடப்பட்ட
சிரபுரச்சேய் தாயார் காணத்
தனிமன்றில் நடமாடும் தந்தைநினை
வால்வாடி விண்ணை நோக்கி
நனியமுத தேபோன்று நதிக்கரையில்
தனியாக நடந்த அண்ணல்
அன்னையைநினைந் தழும்சேய்போல் ஆனைமுகன்
அருள்நாடி வழுத்த லானார். 12

எவ்வுயிரும் உயும்வழியை எளிதுணர்ந்தல்
வேண்டுமென ஏங்கு கின்றேன்
திவ்வியநின் திருக்காட்சி கண்டின்பம்
திளைக்கவுன்னி உருகு கின்றேன்
ஒவ்வொரணு வுளும்நிறைந்த ஒருவாளன்
விழைவினைநீ உணர்ந்தி லாயோ
செவ்வையுற நின்னுருவைக் காட்டிவழி
செப்புகெனத் தேம்பி நின்றார். 13

தேவாதி தேவர்களும் தெரிசித்தற்
கரிதாம்நின் சேவை கண்டு
பாவால்என் நாவாரப் பாடியருள்
தேடிப்பெறப் பரிந்து நின்றேன்
ஆவாஇவ் வேழையின்பால் அருட்கருணை
அணுவளவு புரிவாய் என்று
* வாவாக ணேசாஇவ் வரம்தருவாய்
என்றுருகி வழுத்த லானார். 14

*'வா வா கணேசா'—ஆண்டவர் அருட்பாடல்

வேறு

அன்பினால் உருகி அழுதழு தாற்றி
ஐயனே அவனிவாழ் உயிர்கள்
துன்பெலாம் தீரத் தூநெறி யுணர்ந்து
போற்றிநற் றூய்மைபெற் றொப்பில்
இன்பெலாம் எய்த எளியநன் னெறியொன்
றீந்தருள் செயஇவண் வருகென்(று)
என்பெலாம் உருக இதயம்உள் ளிளக
இருகணீர் பெருகிடத் தொழுதார். 15

வேறு

நீலவிணிற் புதைவைர மணிகளென
நிலவிடும்விண் மீன்களெல்லாம்
ஞாலமிசை அண்ணலுக்குக் கிடைக்கவுள்ள
நற்பேற்றை நவின்ற வண்ணம்
கோலமிகு கண்சிமிட்டல் போல்தோன்றக்
கோதில்எழு முனிவர் வாழ்த்தி
ஏலஎங்கள் கருத்தை 'சட்டம்' எனஅருளும்
காலம்இனி கலங்கேல் என்றார். 16

வேறு

பொறிபுலன் கரணம் யாவும் புனிதமே யாகி யொன்ற
செறிவுறு சித்தம் நன்று தெளிவுற வசம்அ ழிந்தார்
இறைவனின் வசமே யாகி இனிதவண் நடந்தார் அண்ணல்
கறையறும் உள்ளம் பொங்கிக் கருணையின் வடிவ மானார். 17

திருவரு ளாளர் உள்ளத் தினிலெலாம் திகழ்ந்த தெய்வம்
உருவொடும் அவர்கள் காண உலகினில் தோன்றி னாற்போல்
இருடியர் பட்டி யண்ணல் இதயமீ தினிதொ ளிர்ந்த
அருளொளிப் பொருள்பு றத்தும் அழகுறத் தோன்றிற்
றன்றே. 18

ஜோதி தரிசனம்

இந்தவா றுருகி ஏத்திடும் அண்ணல்
இருவிழி மலர்களும் காண
அந்தமோ டாதி அறிவதற் கரிய
அருட்பெருஞ் ஜோதியோன் றங்கே

இந்தமா நிலந்தோட் டிருவிசும் பளவும்
இலகிட எந்தல்கண் டுவந்தா
னந்தபாஷ் பம்கண் பொழிந்திட அன்பால்
தழுவிட நாடியோ டினரால். 19

வேறு

சிந்தை யொன்றிச் செயலொன்றி
த்யானமொன்றித் தீர்வரிய தானதிய
பந்தவினை தீர்த்தருளும் பரமன்திரு
வடிகளிலே பதித்த நெஞ்சால்
எந்தைகுரு நாதரவண் எய்திடுமவ்
வேளையில்எ ரம்பன் தானோர்
சுந்தரச்செஞ் சுடருருவாய்த் தோன்றினன்தன்
தூயதிரு மேனி காட்டி. 20

வேறு

கள்ளமில் புலன்கள் ஐந்தும் களிப்புற நுகரும் வண்ணம்
உள்ளுமாய்ப் புறமு மாகி ஒளிர்பரம் பொருள்யா ராலும்
விள்ளரும் ஜோதி யாகி மண்முதல் விண்ணீ றாக
ஒள்ளிய உருவ மோடங் குற்றதை யுரைத்தற் காமோ? 21

வேறு

தாய்ப்பசுவைக் கண்டுமகிழ் தனியிளங்கன் றெனவறுமை
மேயவன்கண் டிட்டபெரு நிதியமென விழிகளிலான்
தூயவிழி பெற்றதெனக் கண்டதுமே துள்ளலுற்றார்
ஏயமகிழ் வோடிறையைத் தழுவஎண்ணி ஓடினரால். 22

## ஜோதியில் விநாயகர் காட்சி

அண்ணலார் ஓட அருட்பெருஞ் ஜோதி
அண்ணலை நாடியே வரவும்
வண்ணமார் ஜோதி யின்கணே முன்னோன்
வடிவமும் தோன்றிடக் கண்டார்
நண்ணிய முகமும் நாற்புயம் தோந்தி
வயிறும்நற் றுதிக்கையும் கண்டார்
கண்ணொரு மூன்றும் மும்மதச் சிறப்பும்
கருணையும்கண் டுளம் கரைந்தார். 23

வேறு

துயன்திரு வுருக்கண்டார் அவனியுய்ய வந்தஅண்ணல்
மெய்யெல்லாம் புளகித்து மேற்செயல்க ளொன்றியங்குச்
செய்யதிரு மேனிதனைச் சேர்த்தணைய நாடிஅருள்
மையல்மிகக் கொண்டணைந்தார் மலர்சொரிந்தார்
வானோர்கள். 24

வேறு

விரைந்துசென் றண்ணல் விழுப்பெருஞ் சுடரில்
விநாயகன் ஒளியுருக் கண்டு
கரைந்துள முருகித் தன்வச மழிந்து
கரங்களால் தழுவலும் முன்னோன்
நிரந்தரத் துணைவ னெனத்தனை யுணர்த்தி
நெகிழ்மன மலர்த்தியுள் ளமர்ந்தான்
அரந்தைதீ ரண்ணல் அருள்மய மாகி
ஆனந்தக் கடலினுள் ளமிழ்ந்தார். 25

வேறு

மின்விசையைத் தொட்டவனுள் மின்சக்தி பாய்வதுபோல்
தன்னிகர்ஜோ தியையணைந்த தகவாளர் உடலெங்கும்
பன்னரிய ஒருசக்தி பாய்ந்தினிது பரவிடலும்
அந்நிலையில் அவரடைந்த அருள்தன்மை ஆரறிவார்? 26

செவ்வியஅப் பெரும்பேறு செப்புதற்காம் தன்மையதோ
எவ்வொருநல் லான்மாவும் இறைவனிடத் தணுகுங்கால்
செவ்வியஅவ் வின்பத்தைத் தெரிந்துகொள்ள லாமன்றி
இவ்வுலகில் எவராலும் எடுத்தியம்பற் கியலாதால். 27

மதுவுண்டோன் மயங்கிப்பின் தெளிவதுபோல் மாண்பாளர்
இதயம்மிக உயர்ந்தநிலை யினில்இறையொ டொன்றிநின்றிவ்
வுதுநியணி புவியில்உயிர் வகையுய்ய வொருசிறிது
முதல்வனரு ளால்இறங்க முற்றுணர்ந்தோர்
தனையுணர்ந்தார். 28

எனையணைத்திங் கின்பளித்த என்னையன் எங்குற்றார்
தனையுணர்த்தி நிலையளித்த தனித்தலைவர் எங்குற்றார்
நினைப்பரிய காட்சிதந்த நின்மலனார் எங்குற்றார்
நினைப்பொழுதும் யான்சகியேன் திருவாளற்
பிரிந்தென்றார். 29

நானினையா முன்னம் வந்த நாயகனே, நாயேற்குத்
தானினையாச் சுகமளித்த தற்பரமே, தமியேனில்
ஊனினையும் வைத்திங்கண் உலவுவதேன் என்னஉயிர்க்
கோனினைப்பி ரிந்தகுலக் கொழுந்தை யொத்துள் நைந்து
நின்றார். 30

புலனைந்தும் நிலைதிரும்பிப் புவனியுணர் வற்றதுமே
அலமந்தேன் ஐயனெங்கே என்றுவின வியபோது
கலகலவெனும் ஒலியுடனே கனற்சோதி யுருமாறி
நிலவிடும்நற் சிலையானார் நீளுலகர் ஏத்திடவே. 31

தனையுணர்ந்தார் தலைவன்தாள் தலைப்பட்டார் தன்னேதிரே
புனைவரிய சிலைவடிவில் பூரணனார் இருத்தலும்தான்
நினைவழிந்த காலைமலர் மாலையொன்று நின்மலனார்
புனைவித்து மணந்தினருள் புரிந்ததுவும் இனிதுணர்ந்தார். 32

தன்பதியே தன்கழுத்தில் தண்தெரியல் சூட்டிமணந்
தன்புருவாய் அருளுருவாய் அழகுமிகும் ஐங்கரனாய்
துன்பமெலாம் தீர்த்துலகைத் தூய்மைமிகு மேன்மைபுரிந்
தின்பமெலாம் வழங்கவுன்னிச் சிலையாகி இனிதமர்ந்த 33

சிறப்பினைநன் றகத்துன்னிச்
செப்பவொணா மகிழ்வடைந்தார்
அறப்பெருமை அருட்பெருமை
அறிந்துய்வார் உயிர்களெலாம்
பிறப்பிறப்பைக் கடந்துய்வார்
பெரும்புவிவாழ் அடியரெலாம்
மறப்பரிய மேலான
வழிதுலங்கும் எனமகிழ்ந்தார். 34

வேறு

அருட்பெருஞ் ஜோதி வடிவினை அண்ணல்
அருள்விழி கண்டஅப் போதே
பொருட்பெரு மறையாய்ப் பொலியுமோங் காரப்
புனிதநன் மந்திரம் உள்ளே
அருட்பரி பூர்ண ஞானவிக் னேசன்
அருளிசை யோடுணர்த் தியதும்
அருட்பரி பூர்ண அமுதமு றியதும்
அண்ணலார் இனிதுன்னித் துதித்தார். 35

அண்ணலார் துதித்தல்

ஆனந்த பரவசமுற் றடியனையும் அருள்மணங்கொள்
ஆனந்த பரிபூர்ணப் பெருமான்! நின் னருளென்னே!
மோனந்த னிற்சிறந்த முனிவர்கட்கும் சித்தர்கட்கும்
வானந்த னிற்பொலியும் அமரர்கட்கும் வாய்ப்பரிதால். 36

துரும்பினிலும் கடையாய
எனக்கருளத் துணிந்தனையே
கரும்பைவெலும் கனியைவெலும்
கனிவொடிவண் போந்தனையே
சுரும்புமுரல் மலர்த்தொடையல்
சூட்டிமணம் கொண்டனையே
இரும்புவியில் பிறந்தபயன்
இன்றடைந்தேன் எனத்துதித்தார். 37

வேறு

சந்தமார் மறையும் அமரரும் எண்ணில்
தவம்புரி வோருங்கண் டறியாச்
சுந்தரச் சோதி வடிவையும் ப்ரணவத்
தாமறைப் பொருளையும் காட்டி
இந்தமா நிலத்தோர் என்றும்கண் டேத்த
எழிலுருக் கொண்டிவ ணமர்ந்தாய்
இந்தஏ ழையின்பால் நின்னருட் கருணை
இருந்தவா றென்னெனக் கரைந்தார். 38

ஏழைகண் காண இவண்வரு கெனவே
இரந்தனன் இனிதுவந் துதித்தாய்
ஊழையும் வெல்லும் உயர்மறை யுரைத்தாய்
ஒப்பில்பே ரருளமு தளித்தாய்
வாழியிவ் வையத் துயிரெலாம் உய்ய
வழியருளுகஎன இரந்தேன்
பேழைநல் வயிற்றுப் பிரணவப் பொருளாய்ப்
பிறங்குரு வோடிவ ணமர்ந்தாய். 39

செம்மனச் செல்வி திருவிழி காணத்
திருமுடி மீதுமண் கூடை
கைம்மலர் களில்மண் வெட்டிகொண் டருளார்
கவினுறும் கூலியா ளாக
இம்மணில் நடந்தும் அவள்தரும் பிட்டோ
டிணையில்மெய் யன்பினைச் சுவைத்தும்
வெம்மைசெய் பிரம்பி னடிகொளு மாடல்
விமலன்செய் யிடத்தினி தமர்ந்தாய். 40

அங்கயற் கண்ணி அருள்மக வாயுற்
றருளர சாட்சிசெய் தமர்ந்தாள்
அங்கணன் செழிய னுகிநன் மணங்கொண்
டருளர சாட்சிசெய் தமர்ந்தான்
பொங்கொளி வேளுக் கிரவமு தியெனப்
போந்தரு ளாட்சிசெய் தமர்ந்தான்
ஐங்கர நீஇந் நாள்பரி பூர்ண
னுய்அர சாளவந் தமர்ந்தாய். 41

உனைத்தினம் தொழுதால் ஒப்பில்செந் நெறியை
உணரலாம் எனஅமர்ந் தனையோ
அனைத்துயிர் களுமுற் றெளிதிறைஞ் சிப்பே
ரருள்பெற இவணமர்ந் தனையோ
நினைத்தவை யனைத்தும் அடியர்பெற் றுய்ய
நிறையருள் செயஅமர்ந் தனையோ
எனைக்கணந் தொறும்காத் திடஅமர்ந் தனையோ
என்றுள முருகியேத் தினரால். 42



கலியுகத்தில் நீதிக்கொடி நாட்ட, கைலையினின்று,
சொக்கநாதர் பிட்டுக்கு மண்சுமந்த எல்லையில்,
ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்கு அருட்காட்சி அளித்து
ஆலிங்கனம் புரிந்து, அருள்நிறைவு தந்த
மதுரை ஸ்ரீ பரிபூர்ண விநாயகர்

ஏழைகள் காண இவண்வரு கெனவே
இரந்தனன் இனிதுவந் துதித்தாய்
ஊழையும் வெல்லும் உயர்மறை யுரைத்தாய்
ஒப்பில்பே ரருளமு தளித்தாய்
வாழியிவ் வையத் துயிரெலாம் உய்ய
வழியரு ளுகஎன இரந்தேன்
பேழைநல் வயிற்றுப் பிரணவப் பொருளாய்ப்
பிறங்குரு வோடிவ ணமர்ந்தாய். 39

செம்மனச் செல்வி திருவிழி காணத்
திருமுடி மீதுமண் கூடை
கைம்மலர் களிமண் வெட்டிகொண் டருளார்
களிறுறும் கூலியா ளாக
இம்மணில் நடந்தும் அவள்தரும் பிட்டோ
டிணையில்மெய் யன்பினைச் சுவைத்தும்
வெம்மைசெய் பிரம்பி னடிகொளு மாடல்
விமலன்செய் யிடத்தினி தமர்ந்தாய். 40

அங்கயற் கண்ணி அருள்மக வாயுற்
றருளர சாட்சிசெய் தமர்ந்தாள்
அங்கணன் செழிய னாகிநன் மணங்கொண்
டருளர சாட்சிசெய் தமர்ந்தான்
பொங்கொளி வேளுக் கிரவமு தியெனப்
போந்தரு ளாட்சிசெய் தமர்ந்தான்
ஐங்கர நீஇந் நாள்பரி பூர்ண
னாய்அர சாளவந் தமர்ந்தாய். 41

உனைத்தினம் தொழுதால் ஒப்பில்செந் நெறியை
உணரலாம் எனஅமர்ந் தனையோ
அனைத்துயிர் களுமுற் றெளிதிறைஞ் சிப்பே
ரருள்பெற இவணமர்ந் தனையோ
நினைத்தவை யனைத்தும் அடியர்பெற் றுய்ய
நிறையருள் செயஅமர்ந் தனையோ
எனைக்கணந் தொறுங்காத் திடஅமர்ந் தனையோ
என்றுள முருகியேத் தினரால். 42



கலியுகத்தில் நீதிக்கொடி நாட்ட, கைலையினின்று,
சொக்கநாதர் பிட்டுக்கு மண்சுமந்த எல்லையில்,
ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்கு அருட்காட்சி அளித்து
ஆலிங்கனம் புரிந்து, அருள்நிறைவு தந்த
மதுரை ஸ்ரீ பரிபூர்ண விநாயகர்

வேறு

ஒப்புயர்வி லாத்வாத சாந்தமேன
ஒளிர்மதுரை நகரின் கண்ணே
செப்பரிய திருவிளையாட் டறுபத்து
நான்கிறைவன் செய்தான் என்பார்
ஒப்பிலறு பத்தைந்தாம் திருவிளையாட்
டியற்றஅரு ளுருவம் கொண்டே
இப்படியுற் றமர்ந்தனைநின் னருட்கருணை
என்னேயேன் றிறைஞ்சி நின்றார். 43

அவ்விடத்தில் இன்வேம்போ டமைந்திருந்த
அரசவிருட் சத்தின் கீழே
செவ்வையுற மூர்த்தியினை எடுத்தமைத்துப்
பரிபூர்ணத் திருப்பேர் சாத்தித்
திவ்வியமாய் வைகையின்நன் னீராட்டி
மலர்சூட்டிச் சென்னி மீதே
குவ்வியுமொண் கையாரத் தலையாரக்
கும்பிட்டுக் கூத்தா டிட்டார். 44

பாசபந்தச் சிக்கறுத்த தூயவனைச்
சித்திபுத்தி பதியை நல்ல
மூஷிகவா கனமூர்ந்து முத்திக்கனு
கூலம்புரி முக்கண் தேவை
நேசமுடன் அன்பருள்ளம் நிறைந்தபரி
பூரணனை நீள்வேற் கந்தற்
காசிலருள் முன்னவனைக் கலிதீர்த்த
கணபதியைப் போற்ற லானார். 45

நான்மறையா கமமாதி நன்னூலின்
சாரமெலாம் நாவி லூற
ஆன்மபரி பூரணம்பெற் றைங்கரன்றன்
வசமாகி யமைந்த அண்ணல்
மேன்மையெலாம் எவ்வுயிரும் மேவியுய்ய
மெய்க்கருணை வடிவே யாகி
நோன்மையெலாம் அருளவல்ல அருள்மறையை
நுண்ணுணர்வோ டிசைக்க லானார். 46

*ஐந்துகரத் திறையவனே அறுமுகற்கு
முத்தவனே அருளால் எங்கும்
முந்தஉதித் தருள்புரியும் முழுமுதலே
முவிழிகொள் மூர்த்தி யேஎன்
சிந்தைமிசை குடியிருந்தே காத்தருளும்
கோமானே திருத்தாள் போற்றும்
இந்தஅடி யனையாள்வாய் இபமுகனே
என்றுதுதித் தேத்த லானார். 47

†நீயேநற் றுணையாகுய் நின்மலனே
நிர்க்குணனே நிகரில் லோனே
தாயானய் தந்தையென ஆனய்என்
சற்குருவும் நீயே ஆனய்
சேயாக எனைக்கருதி ஆண்டருள்செய்
கணபதியே தேவ தேவே
நீயேயல் லால்என்முன் வருபவரார்
‡நேமியுயும் வழிசொல் வாயே. 48

**ஜென்மமெடுத் ததுவுமொரு தீவினைபோ
யானறியேன் சிறியேன் செய்த
கன்மம்யா தோவென்னக் கலங்கிடுவேன்
காசினிவாழ் உயிர்க ளெல்லாம்
நன்மைபெற யார்சொல்வார் நன்னெறிகள்
என்னப்பா ஞால மீதில்
புன்மைதவிர் நின்னடியார் சார்புணரச்
சாற்றிடுவாய் போதத் தேவே. 49

††உலகமிதிற் பெரியோராம் உத்தமரை
உள்ளன்பால் கண்டு போற்ற
நலமணுவும் உள்தெரியா நாயடியேன்
ஞாலமிசை உழலு கின்றேன்
கலையுணர்ந்தார் வாசல்ஒருக் காலுமுருச்
சிற்றறிவேன் கருணை யென்னும்
நலமுணர வையமெலாம் நன்மைபெற
நாதஎன்னுள் நீசேர் வாயே. 50

---

*ஐந்து கரத்தாய், †நீயே துணையாகி **ஜென்மம்
††உலகமிதில்—ஆண்டவர் அருட்பாடல்கள். ‡நேமி—உலகம்

*சிவம்அரசுத் தருவாயும் இன்வேம்பு
சக்தியுமாய்ச் செழிக்கும் அன்பால்
உவமையில்பே ரெழிலோடும் உற்றமைந்து
வெகுநேய முடனே யார்க்கும்
பவம்நீக்கும் பரிபூர்ண கணபதியைப்
பெற்றுரிப் பார்மேல் யாரும்
அவம்நீக்கி யருள்பேணி முத்திப்பே
றெய்தியுய அருளி னுலே. 51

†மதுரைநக ரின்வடக்காய் வண்தமிழின்
சுவையறியும் வைகை தென்பால்
சதுரார்ந்த ரயில்பாலம் தன்மேற்காய்
தவமுடையோர் நாளும் போற்றக்
கதித்தோங்கும் செந்நெல்சூழ் கட்டிடத்தின்
கீழ்பால்மெய்க் கருணை யோடும்
உதித்தாய்என் னுள்ளத்தில் உறைவாய்என்
றுள்ளுருகிப் போற்ற லானுர். 52

வேறு

மீளாத பிறப்பொழிக்கும் மேன்மையுடை யோய்போற்றி
ஆளாக என்றனையும் ஆண்டருளுவோய்போற்றி
வாளாகும் என்வினையை வலிந்தழிப்ப வாபோற்றி
தாளாண்மை தந்தெனையும் தாங்கியருள் வோய்போற்றி. 53

பேதபா வனைதவிர்க்கும் பெற்றியுடை யோய்போற்றி
சாதனைகள் தந்தருளும் சற்குருசா மீபோற்றி
ஆதரவாய் எனைக்காக்கும் அற்புதஅண் ணுல்போற்றி
காதலுடை யடியாரைக் காத்தருள்கண் மணிபோற்றி. 54

சமயங்கள் அனைத்தினுளும் சார்ந்தருளு வாய்போற்றி
சமயம்அனைத் தினும்உள்ள நற்சார மேபோற்றி
சமயநிலை என்றனக்குச் சாற்றி யருள்வோய்போற்றி
சமயமெலாம் கடந்துநின்ற தத்துவமே போற்றி என்றுர். 55

---

*ராஜவிருட்சம் சிவமாய், †மதுராபுரி வடக்காய்
—ஆண்டவர் அருட்பாடல்கள்.

நீநாளும் நினைநெஞ்சே நின்மலன்றன் தாளேத்தி
பூநாளும் தலைசுமந்து புதுப்பண்கள் பலபாடி
நாநாளும் நவின்றேத்த நற்பணிகள் பலபுரிந்து
வானுடர் போற்றிறையை வாழ்த்துதிநெஞ் சேயென்றார். 56

அற்புதப்பொற் சோதிவடி வாய்த்தோன்றி ஐங்கரனார்
பொற்புறுகற் சிலையாகிப் புவியின்மிசை அமர்ந்ததையும்
சிற்பரன்றன் திருவருளிற் றிளைத்தண்ணல் திகழ்வதையும்
நற்பகலோன் கண்டுதொழ நயந்தெழுந்தான்
குணதிசையில். 57

வானவர் முனிவரர் வாழ்த்தல்

அருளொளிக் கதிரும் அன்பொளிக் கதிரும்
அறிவொளிக் கதிருமொன் றாகி
இருகளற் றிடலும் அன்பர்கள் குழுமி
ஏத்தினர் இறைஞ்சியுள் மகிழ்ந்தார்
பொருளுணர்ந் துலகம் புனிதமெய் திடுமென்
றமரர்கள் பூமழை பொழிந்தார்
தெருளுறு முயர்ந்த திருநெறி செழிக்கு
மெனமுனி வரர்மகிழ் சிறந்தார். 58

வேறு

தேவகணம் பதினெட்டும் வானில்நின்று
திகழ்துந்துமி முழக்க லானார்
மூவர்களும் வானிலுற்று முத்தொழிலும்
நல்குமுன்னேன் அருள்போற் றிட்டார்
பாவமொழித் துயிர்களுக்குப் பரபோதம்
புகட்டுகெனப் பக்தர் ஆர்த்தார்
யாவருக்கும் கருணைசெய இவணமர்ந்தாய்
எனத்துதித்த தகன்ற ஞாலம். 59

பரிபூர்ண கணபதிக் கரோஹரஎன்
றேயண்ணல் பரவ லோடும்
அருகிருந்த பக்தர் குழாம்
ஆரவா ரம்செய்தா னந்தமுற்றார்

மருவுமந்நாள் முதலண்ணல் விடியலில்நீ
 ராடிவழி பாடு செய்ய
உருகுமனத் தோடங்க ணுற்றேத்து
 வோர்மூலம் உணர்ந்தார் மக்கள். 60

அண்ணலின் நிலையும், அடியர்தம் பெருக்கும்

மேயவிடி யலில்நாளும் நீராடிப்
 பரிபூர்ண விநாய கர்க்கே
தூயதிரு மஞ்சனம்ஆ ராதனைகள்
 தூயமனத் தோடும் செய்து
தூயஅடி யவர்அன்பர் சூழ்ந்திருக்கத்
 துதிபாடித் தொழுது போற்றி
மேயதிரு வருள்வாழ்வை அண்ணலார்
 மேற்கொண்டு விளங்க லானார். 61

பரிபூர்ணப் பெருமானார் அருட்காட்சி
 பாரின்மிசை பெற்ற பின்னர்
ஒருமூன்று நாள்வரையில் அண்ணலின்நல்
 லுளம்அதிலே தோய்ந்து நிற்க
விரிஞாலத் தினிற்செய்ய வேண்டியுள
 செயல்களைத்தன் நினைவே யின்றி
ஒருதூய யந்திரம்போல் அவர்இறைவன்
 திருவருளால் உஞற்றி னரால். 62

தூயபரி பூரணனார் அருட்கருணைப்
 பேரொளிநம் தோன்ற லாரின்
தூயதிரு முகத்தினிலும் மொழிகளிலும்
 செயல்களிலும் தோன்றக் கண்ட
தூயவர்கள் யாருமிது பரிபூர்ண
 ஜோதியரு ளொளியே என்னத்
தூயவுளத் தினிலுணர்ந்து தோன்றலார்
 திருவடியே துணையென் றுற்றார். 63

அண்ணலார் தலைசிறந்த அன்போடும்
 அருந்தவமாம் பூசை தன்னைக்
கண்ணுறுமொண் மணியான பரிபூர்ண
 கணபதிக்குக் கருத்தி னோடும்

பண்ணிவர அன்பரிடத் திறைவனது
பரங்கருணை இனிதே பாய
அண்ணலுணர்ந் தகமகிழ அடியவரும்
மிகமகிழ்வுற் றமைவா ரானார். 64

வேறு

கற்றையாய்க் குழல்கோதிக்
கையினில்வெண் ணீறுகொண்டு
பற்றற்ற உளத்தைநிகர்
பால்வெள்ளைத் துகிலோடும்
ஒற்றைக்கொம் பன்கழல்கள்
உளம்கொண்டு போற்றண்ணல்
மற்றென்றும் வேண்டாத
மாண்புடனே விளங்கினரால். 65

வேறு

கடையினில்நற் கணக்கெழுதிக் கருதிடும்வா
ணிபம்செய்த தூய ரிங்கே
அடையவரும் அடியார்வினை அனைத்தையுமே
ஐயன்திருத் தாளில் வைத்து
மடைதிறந்த வெள்ளம்போல் வரும்அருளை
மடுத்தடியார் கட்கே நல்கி
அடைவுடன்நல் லருள்வாணி பம்புரிந்தார்
அவனிமிசை அமரர் வாழ்த்த. 66

அண்ணல்தினந் தோறும்அதி காலையினில்
வைகைநன்னீ ராடித்தூய
புண்ணியவெண் ணீறுதிரி புண்டரமாய்
நுதலணிந்து பூர ணன்தாள்
எண்ணியவா றினிதுநடந் தேரம்பன்
அருகிலடைந் தினிய பாலும்
நன்னுவைகை நதிநீரும் கொண்டுண்மை
யன்பொடபி டேகம் செய்வார். 67

நறுமலர்கள் பலசூட்டித் தூபதீ
பமும்முறையால் நன்றே காட்டிப்
பொறுமையுடன் உணவூட்டிப் புனிதஉப
சாரமெலாம் செய்து போற்றி

வறுமையற மல்குபல பிணியகல
வளங்களெலாம் பெருக வையத்
துறுமுயிர்க ளத்தனையு மின்பமுற
உன்னிவழி பாடு செய்வார். 68

வேறு

கைலைமலை யினிலமர்ந்து கங்கையினை யினிதனுப்பி
வையகத்தில் வாழுயிர்கள் மூழ்கியருள் வாழ்வுபெறச்
செய்தருள்வோன் இவ்விடத்திற் சேர்ந்தனன்என்
றெண்ணியண்ணல்
வையைநதி நீராட்டி வழிபாடு செயலானர். 69

வேறு

தைலம்மஞ்ச னப்பொடிபால் தயிர்இளநீர்
எலுமிச்சைச்சாறு நீறு
சைலம்அருள் சந்தனமா தியபொருளால்
வெள்ளிதொறும் தகவோ டாட்டிக்
கைலையினின் றிவண்போந்த கணபதிக்குக்
கனிந்துவழி பாடு செய்வார்
மையலற மாணருள்நா டன்பரெலாம்
திரளாக வந்து சூழ்வார். 70

முன்னமே அதிகாலை நீராடி
மோனநிட்டை புரிந்த வாறும்
முன்னவனார் அருட்ஜோதி வடிவோடும்
முன்தோன்றி நின்ற வாறும்
பின்னரவர் கற்சிலையாய் உருமாறிக்
கருணையொடு பிறங்கு மாறும்
நன்னெறியில் நமதண்ணல் வழிபடலும்
அறிந்தாரிஞ் ஞாலத் தோரே. 71

திரள்திரளாய் மக்களினம் திரண்டுதினந்
தோறுமங்கு சேர லானர்
**'இருடியர்பட் டிச்சாமி துணை'யென்னக்**
கண்விழித்தே இருநீர் வைகைத்
திருநதிக்கண் அதிகாலை சென்றுதண்ணீ
ரினிலாடித் திருநீ றிட்டுப்
பெருநலங்கள் பெறப்பரிபூ ரணர்தாளைப்
பேணிவழி படலா னரே. 72

அந்தகர்கண் ணொளியடைந்தார்; செவிடர்செவித்
திறனடைந்தார்; அழகார் தூய
செந்தமிழிற் பேசுதிறன் ஊமையர்கள்
அடைந்தார்;சே யில்லா தோர்கள்
நந்தலிலா நன்மகப்பேற் றினையடைந்தார்;
நடலையுளோர் நடலை தீர்ந்தார்;
இந்தவகை யாலுயிர்கட் கிடர்தீர்த்தின்
பூட்டினரிங் கினிதே யண்ணல். 73

சிந்தைமொழி செயலனைத்தும் முன்னவன்பா
லொப்புவித்த சீர்சால் செம்மல்
எந்தவொரு செயலுமிறை திருவருளால்
இனிதுநடந் திடுவ தோர்ந்தார்
பந்தமறுத் தருள்புரிநற் பரிபூர்ணன்
திருமுன்நின்று பக்தி பொங்கச்
சந்தமிகும் தமிழ்பாடித் தழுதழுத்த
குரலொடடி தாழ்ந்தா ரண்ணல். 74

*அன்னையுமை யருள்பாலா அனைவோர்க்கும்
முதற்பொருளே அன்பர் சீலா
நன்னயமாய் நினையடுத்தேன் நாவால்நின்
றனைப்பாட அருளிச் செய்தாய்
பன்னுதமிழ்க் கரசேஞா னகரனே
பலகலையின் பயன்கள் நல்கி
இந்நிலத்தி லுன்மகிமை யறிவித்த
இங்கிதமென் சொல்வேன்'' என்றார். 75

இவ்வாறு போற்றியருள் அளவின்றி
மடுத்துலகுக் கீயும் அண்ணல்
அவ்வாறங் கொருவாணி பத்தலத்தில்
அமர்ந்துகணக் கெழுதிட் டாரேல்
அவ்வாணி பத்தலத்தில் வாணிபமும்
பொருள்வளமும் அளவே யின்றி
எவ்வாறு பெருகியதென் றிங்ஙனெடுத்
தியம்பிடவும் வேண்டுங் கொல்லோ? 76

*''அன்னையுமை''—ஆண்டவர் அருட்பாடல்.

முன்னைவினை யின்பயனுய் முகமதியர்
அங்காடி யின்கண் உள்ளோம்
இன்னும்இவண் சிலகாலம் இருக்கஇறை
வனின்கணக்கும் இருப்ப தாலே
நன்னிலையி லினும்சிலநா ளிருந்திடுவோம்
எனஉணர்ந்த ஞான வள்ளல்
அந்நிலையில் வெளியேரு தங்கிருந்தே
செயல்பலவும் ஆற்ற லானுர். 77

முகமதிய ரொடுநாளும் பழகிஇந்துஸ்
தானியெனும் மொழியைக் கற்கும்
தகவுடைய ராகிஇஸ்லாம் சமயநுணுக்
கங்களும்நற் சான்ருே ரான
முகமத்நபி திருவுளங்கு ரான்என்ன
மொழியுமறை முழுது மோர்ந்தார்
சகமிதனில் எம்மதமும் சாற்றுமுண்மை
யொன்றெனும்மெய்த் தன்மை கண்டார். 78

வேறு

இப்படி நிகழ்ந்த நிகழ்ச்சியும் அண்ணல்
இந்துஸ்தான் மொழியுணர்ந் ததுவும்
செப்பருங் கருணைச் சீர்பரி பூர்ணச்
செம்மலின் திருவரு ளதனுல்
இப்படி மிசைபின் நிகழ்வதற் கிருந்த
செயலினுக் கேற்றவா றமைந்த(து)
எப்பொழு தெவருக் கெதுதரல் வேண்டும்
எனஇறை யருள்செயல் பெரிதே. 79

வேறு

சித்திவல்ல பங்களெலாம் அண்ணல்படைத்
திருந்தாலும் சீர்சால் முன்னேன்
சத்தியினுல் அற்புதங்கள் யாவும்நிகழ்
வனவாகத் தம்முட் கொண்டார்
சித்தியினுல் நிகழ்வனவென் றெண்ணுமல்
அடக்கமுடன் திகழ்ந்தா ரண்ணல்
பத்தர்சித்தர் முத்தர்திறம் இத்தகைத்தென்
றெளியேனுற் பகரற் பாற்ருே? 80

பக்குவமுற் றுயவிழைந்த பக்தர்பலர்
பூர்வபுண்யப் பயனு லுற்றுத்
தக்கவொரு ஞானகுரு வெனப்போற்றி
அவருணர்த்தும் சன்மார்க் கத்தை
மிக்கமன வுறுதியுடன் கடைப்பிடித்து
மேதக்க வாழ்வாற் றிட்டார்
மக்களைப்பே ணிடும்தாய்போல் வள்ளலுமாங்
கவர்க்கினருள் வழங்கி யாண்டார். 81

அடியவர்க்கும் அன்பர்கட்கும் பரிபூர்ணன்
அருள்மடுத்து வழங்கும் அண்ணல்
படியின்மிசை பேரளவில் கருணைநெறி
பரப்பியருள் பாலித் தோம்ப
நெடியதவம் இனுமினிது நிகழ்த்திடுதல்
வேண்டுமெனும் நினைவி னோடும்
விடியல்தணி ராட்டம்முதல் நிட்டைவரை
அடியவர்க்கு விளக்கி வந்தார். 82

பம்பாய்ப் பயணம்

அங்காடி சீர்சிறப்புற் றுளிர்வதும்நற்
பொருள்வளமும் அளவொன் றின்றி
இங்கோங்கி வளர்வதும்கண் டிவ்வண்ணல்
இறையருளில் இனும்ஓங் கிட்டால்
மங்காநற் சீரடியர் குழுபெருகும்
அங்காடி மங்கும் என்றே
அங்காடிக் குரியரிவ ரைப்பம்பாய்க்
கனுப்பஎண்ணம் கொள்ள லானர். 83

மதுரையிலும் நெல்லைப்பா ளயங்கோட்டை
யிலும்நடக்கும் வாணி பத்தை
அதிகம்வளர்த் திடல்வேண்டும் அயல்நாட்டி
னின் றுவரும் பொருள்க ளின்னும்
அதிகஅள வினில்இறக்கு மதிசெய்திங்
குளபொருள்கள் அந்நாட் டிற்கும்
புதிதுபுதி தாயனுப்பிப் பொருளீட்டல்
வேண்டுமெனப் புகல லானர். 84

கப்பலின்கண் வரும்சிறந்த கவின்பொருள்கள்
இறக்குமதி செய்வ தற்கும்
கப்பலில்இங் குளபொருள்கள் கருத்தோடும்
ஏற்றுமதி செய்வ தற்கும்
ஒப்பருவா ணிபச்சாலை யொன்றுபம்பா
யினில்நிறுவ உன்னி யாங்கே
ஒப்பெரிய வாணிபத்தை அண்ணலவன்
இருந்தியற்றல் வேண்டும் என்றார். 85

தவியேஅண் ணலையழைத் துச் சாற்றிடுவார்
பம்பாய்க்குத் தனித்துச் சென்றங்
கெவிதேநற் கப்பல்வா ணிபம்புரிதல்
வேண்டுமென்றார்;இவற்றைக் கேட்டு
முனியாது முறுவல்முகிழ் முகத்துடனும்
அண்ணல்விடை மொழிவ தானார்
நனியாது நடைபெறினும் நாதனருட்
செயலென்ன நவில லுற்றார். 86

எப்பொருளைத் தரும்சொற்கள் எங்கிருந்து
யார்எப்போ தியம்பி னாலும்
அப்பொருளுள் மெய்ப்பொருளைக் காண்பதுவே
அறிவுடைமை என்ன ஆன்றோர்
செப்பமுற உரைத்துளதால் செகத்தின்மிசை
யாவரெச்சொல் இயம்பி னாலும்
மெய்ப்பொருளின் திருவருளால் விளம்பினதாய்க்
கொளல்வேண்டும் என்றுட் கொண்டார். 87

மதுரைநக ரமும்வைகை நதிக்கரையும்
பரிபூர்ணர் வடிவும் சால
இதம்புரிதல் போலெங்கும் எவ்விடத்தும்
இறைவனருள் இதமே செய்யும்
இதிலிம்மி யளவுமைய மிலையென்ன
உறுதியுடன் எண்ணி யண்ணல்
மதுரையினின் றும்பம்பாய் செலத்துணிந்து
மகிழ்வொடங்கா டியர்பாற் சொன்னார். 88

எங்கும்நிறைந் துறைஇறைவன் திருவருளால்
எவ்விடத்தும் செல்ல லாகும்
எங்குமெந்த உயிர்க்கும்அருள் இறையருளால்
எத்தொழிலும் இயற்ற லாகும்
தங்கள்கருத் தின்படிபம் பாய்க்கேகித்
தொழில்செயச்சம் மதமே யென்னப்
பொங்குமகிழ் வொடும்அண்ணல் புகலவங்கா
டியர்களித்தா வனபு ரிந்தார். 89

எந்தவொரு செயலும்இறை திருவருளால்
நடப்பதென இனிதே எண்ணி
வந்ததெலாம் இறைவனருள் தந்ததெனும்
உண்மையினை வள்ளல் கண்டு
சிந்தைமகிழ்ந் தேதேறித் தெளிவடைந்தச்
சம்நீங்கிச் சிறப்பாய் என்றும்
*வந்ததையொப் புக்கொள்வாய்.என்றும் மனத்
தினுக்குபதே சிக்க லானார். 90

பலதிறமக் களைக்காணும் வாய்ப்பும்அவ
ரவர்நாளும் பழகி உய்யும்
பலசமயக் கொள்கைகளும் உண்மைகளும்
நன்றுணரப் பரமன் செய்த
நலமிதென நன்றெண்ணி நாயகன்தண்
ணருள்போற்றி ஞாலத் தன்பர்
குலம்வளரத் தவம்வளர்க்கும் கொள்கையராய்
அவர்பம்பாய் குறுக லானார். 91

அங்காடித் தலைவர்களின் இச்சையறிந்
ததன்படிஇன் னருளை நாடிப்
பொங்கார்வ மொடுசென்னை நகர்வழியாய்ப்
போய்ப்பம்பாய் சேர்ந்த அண்ணல்
மங்காத பொருள்வளமும் புகழ்வளமும்
மல்குகப்பல் வாணி பத்தால்
இங்காரும் எய்தரிய புகழ்பெற்றார்
அவர்சிறப்பை இயம்பற் காமோ? 92

*வந்ததை ஒப்புக் கொள்வாய்: ஆண்டவர் அருட்பாடல்.

வேறு

உண்மைசால் உரையும் ஒப்புயர் வறியா
ஒழுக்கமும் உலகிடைப் பழகும்
தண்மைசால் குணமும் சாந்தமும் தயையும்
தக்கநல் லாருட னுறவும்
உண்மையாய் உடைய அண்ணலார் செயல்கள்
ஒவ்வொன் றும் கண்ட நல் லோர்கள்
அண்மையி லடைந்தன் போடுரை யாடி
ஆவன யாவையும் புரிந்தார். 93

பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்
எனப்பகர் பழமொழி போலும்
நிண்ணியர் எண்ணின் எண்ணியாங் கெய்தும்
எனநவில் திருமறை போலும்
புண்ணிய வடிவாம் அண்ணலார் புதிதாய்ப்
புரிகப்பல் வாணிபத் தினிலும்
நண்ணிய பொருளின் அளவினை இங்கு
நவிலுதல் அரிதரி தாமால். 94

அழிவிலருட் டிருவளர்த்திவ் வவனிமிசை
அருளவந்த அண்ணலார் இத்
தொழிலில்திரு வளர்த்திதல் வியப்பாமோ
தூயஅவர் நாமம் சொன்னோர்
ஒழிவில்திரு வுடையவராய் ஆவரெனின்
அவர்நேரில் உஞற்றும் அந்தத்
தொழிலில்திரு வளர்ந்ததெனச் சொலல்வேண்டு
மோ,யார்க்கும் துலங்கு மன்றே? 95

வடநாட்டி னிற்பம்பாய் வாசமும்நல்
வாணிபமாம் தொழிலும் அண்ணல்
தொடர்பாகக் கொண்டிருந்த தூயஒழுக்
கத்தினுக்கோ ரிடையூ றின்றித்
தொடர்பாக நடந்துவரத் துணைபுரிந்த
தெனில்யாரும் எங்கும் என்றும்
தொடர்பாக அருளொழுக்கம் பூண்டொழுக
லாகுமெனச் சொலல்நன் றாமே. 96

பொங்கிவளர் வாணிபத்திற் பொருள்மிகவும்
குவிந்திடவும் புனிதச் செம்மல்
எங்குநம துளத்தில்இச் சை யுற்றிடுமோ
என்றஞ்சி மனத்தை நோக்கி
*அங்கவன்செய் நன்றியினை அறிந்துநடப்
பாய்எனவும் †ஆடும் கூத்தை
எங்களிறை கூத்தெனநீ எண்ணிடுவாய்
என்றுமினி தியம்ப லுற்றார். 97

‡கெட்டிக்கா ரத்தனத்தால் பொருள்நனியீட்
டுவதாகக் கிளத்தல் வேண்டாம்
இட்டமுறும் போதையன் தட்டிக்கொடா
திருந்துவிடில் இட்டம் என்னும்
அட்டவடி வாயிறைவன் அணுக்கள்தொறும்
உயிர்கள்தொறும் அமைந்து யாவும்
இட்டப்படி நடத்துகிறான் என்பதுன்னி
அடக்கமுடன் இருப்பாய் என்றார். 98

வேறு

அண்ணலார் புரிந்த கப்பல்வா ணிபத்தால்
அளவிலாப் பொருள்குவிந் திடவும்
எண்ணரும் மகிழ்வை எய்தினர் அங்கா
டியர்களும் இனிதுபம் பாயில்
பண்ணும்வா ணிபத்தின் வளர்ச்சியை யொட்டிப்
பாளையங் கோட்டையில் நாளும்
விண்ணவர் பரவும் மதுரையில் வேலை
மிகுந்தது பன்மடங் கெனவே. 99

வேலையன் மடங்காய் வளரவும் கணக்கும்
விரிவுற்றுப் பலமடங் காகி
ஏனுமிங் கெவரும் முடித்திடற் கியலா
தெனும்படி மிகவளர்ந் திடவும்

---

*''அங்கவன் செய்த நன்றி; †'ஆடுகின்ற கூத்தெல்லாம்'
‡,கெட்டிக்காரத் தனங்களேது: ஆண்டவர் அருட்பாடல்கள்

சாலவும் உன்னி யுன்னியங் காடித்
தலைவர்கள் சாமிவந் தால்நான்
மேலுறக் குவியும் கணக்குகள் முடியும்
என்னவே விளம்பிட லானார். 100

கப்பல்வா ணிபமும் மிகவளர்ந் தோங்கி
நடப்பினும் அருள்நிறை வள்ளல்
ஒப்பில்பூ ரணன்றன் ஒண்மலர்ப் பாதம்
உளத்தமைத் திறைஞ்சியாங் கிருந்தார்;
நுப்பெனும் இதழாள் அங்கயற் கண்ணி
தோன்றியே அங்கொரு நாளில்
இப்படி மிசை'நீ எனைமறந் தனையோ'
என்றுகேட் டிறையினில் மறைந்தாள். 101

அம்மைமீ னாட்சி அருளொளி காட்டி
அவ்வயின் தோன்றிய வாறும்
இம்மெனு முன்னே மறைந்ததும் என்னை
மறந்தனை யோஎனு மாறும்
தம்மனம் கரைப்ப இருவிழி களில்நீர்
ததும்பிடத் தனிப்பெருந் தாயே
உம்மையான் மறக்க முடியுமோ என்ன
உருகியுள் நெகிழ்ந்தனர் அண்ணல். 102

கண்கள்நீர் பெருக்கக் களியுளத் தொளிரக்
கைகளும் சென்னிமேற் குவியப்
பண்கள் நாவியம்பக் குரல்தழு தழுக்கப்
பக்திமே லீட்டினால் அண்ணல்
எண்கொளா வகையில் திருவருள் மயமாய்
இருந்தனர் பினரெழுந் (து)அனையே
கண்களால் கூடலினில்உனைக் காணக்
கடிதினில் வருகிறேன் என்றார். 103

ஆலவாய்நகரின் அருட்பெரும் பொலிவும்
அங்கயற் கண்ணியா லயமும்
ஏலவேபெருகும் எழில்நதி வைகை
இனியநீ ரோட்டமும் தென்பால்

சீலமார் முனிவர் தேவர்கள் பரவச்
சீர்பரி பூரணர் அமர்ந்த
கோலமும் அண்ணல் உளமிசை குலவி
அழைத்தன கூடற்கு விரைவில். 104

இன்னதன் மையில்நம் அண்ணலார் இருக்க
ஆலவாய் நகரிலங் காடி
தன்னையேநடத்தும் தலைவர்கள் மதுரை
சார்கெனச் செய்தியங் கனுப்ப
என்னையா ளுடைய இறைவியின் கருணை
யிருந்தவா றென்னென இறைஞ்சிச்
சென்னைமா நகர வழியினிற் சென்று
மதுரைசேர்ந் திடஅவர் நினைத்தார். 105

நினைத்தனர் விரைவில் எழில்மிகுசென்னை
நீள்நக ரடைந்தன ரங்கண்
எனைப்பல சிறந்த காட்சிகள் கண்டார்
இதமுறக் கிறித்தவ மதத்தை
முனைப்பொடு பரப்பும் பாதிரி களைக்கண்
டவர்மொழி பேருரை கேட்டார்
அனைத்துநற் சமயக் கருத்துகள் யாவும்
ஒன்றென உணர்ந்தனர் அண்ணல். 106

வழியெலாம் ஒரூர் சென்றுசேர் வதுபோல்
வகைபடப் பலப்பல ரியம்பும்
மொழியெலாம் பொருளொன் றினைக்குறிப் பதுபோல்
முதுல கினிலுறு சமய
வழியெலாம் அழிவில் ஒருபரம் பொருளை
மாண்புற அடைந்திடற் குரிய
வழியையே புகலு மென்றபே ருண்மை
யறிந்தனர் மகிழ்ந்தனர் அண்ணல். 107

ஆக செய்யுள் 889

---

## 5. சட்டக் கருவமை படலம்

### விநாயகர் துதி

ஊனம் நீக்கி உயர்செந் நெறிதர
ஞான சற்குரு நாதர்க் குணர்த்திய
ஆனை மாமுகற் போற்றி யருளெனும்
தேன ருந்தித் தெளிவுபெற் றுய்வமால். 1

### குருநாதர் துதி

எட்டுருவாய் இலகுசொக்க நாதன்செய்ய
மனச்செல்வி இனிது தந்த
பிட்டருந்தி மண்சுமந்து பிரம்படிகொண்
டுலகுதொறும் பிறங் குயிர்க
ளொட்டிகழும் பரன்தானே எனவுணர்த்து
மிடத்தில் முனோன் ஒளிரக்கண்டு
சட்டமுல குக்கருளத் திட்டமிட்ட
சற்குருதாள் தலைமேற் கொள்வாம். 2

---

உலகிலுள சமயமெலாம் ஒருதெய்வம்
உண்டெனவே ஒப்புக் கொள்ளும்
உலகமெலாம் உண்டாக்கி அத்தெய்வம்
ஓம்புவதாய் ஒப்புக் கொள்ளும்
இலகுமுயிர் களின்தொகையை அத்தெய்வம்
இயக்குவதாய் ஒப்புக் கொள்ளும்
நலமிகுசெந் நெறிநடந் (து) ஒன் றிடல்ஞான
நற்பயனென் றொப்புக் கொள்ளும். 3

நிலையுடைய ஒருபொருளாம் இறையுணர்வால்
நிலையில்பொருள் ஆசை நீக்கல்,
கொலைபுலைபொய் கள்சூது கோபம்கா
மாதிஇன்று நீக்கி வாழ்தல்,
அலையுமனத் தினைஇறைபால் அமர்த்திநிட்டை
புரிதல், உப வாசம் பேணல்
எலையிலிறை யினைநம்பல், எதுவுமருட்
செயல்எனவே எண்ணி வாழ்தல். 4

எண்ணம்மொழி செய்கைகளில் தீயவைநீத்
தினியனவே என்றும் பேணல்,
பண்ணுசெயல் அனைத்தினையும் கைம்மாறு
கருதாமற் பண்ணல், யாவும்
எண்ணரிய பரம்பொருளுக் கர்ப்பணமாய்
எப்போதும் இயற்றி வாழ்தல்,
நண்ணுவன யாவும்இறை திருவருளால்
நண்ணுவதாய் அமைதி கொள்ளல், 5

இவையனைத்தும் ஒருமுகமாய் எச்சமயங்
களுமொப்புக் கொள்ளல் கண்டார்
அவைநடத்தும் அறமன்றங் களுக்கணுகி
அங்குசட்டங் களைக்கை யாண்டு
புவனியைநன் னீதிநெறிப் படியாட்சி
புரிசிறந்த திறனும் கண்டார்
மவுனமுடன் இயற்கைபுரி செயலனைத்துள்
மன்னுசட்ட நுணுக்கமோர்ந்தார். 6

வேறு

கதிரவன் தினம்கா லம்தவ றாமல்
உதித்தலும் மறைதலும் கண்டார்
வதியுயிர் வகைக்குப் புத்துணர் வூட்டி
வாழ்விக்கும் வளமையும்கண்டார்
புதியநல் லுணவுண் டாக்கியுண் ணுவித்துப்
போற்றிநன் றியக்குதல் கண்டார்
அதிசய மாய்க்கைம் மாறெதிர் பாரா
தவன்புரி கடமைகள் கண்டார். 7

மழையுயிர் வகையுண் உணவினைத் தருதல்
வயங்குண வாகவும் அமைதல்
தழையுயிர்த் தொகையைக் காத்திடல் தானம்
தவம்வழி பாடெலாம் வளர்த்தல்
பழையன கழித்துப் புதியன புகுத்தல்
பாங்குடன் தூய்மைசெய் வித்தல்
விழைவுறு கைம்மா றொன்றுமே யின்றி
வெகுசெயல் புரிவதும் கண்டார். 8

காற்றுயிர் வாழக் காரண மாகிப்
பருவ்கா லங்களுக் கேற்ப
ஆற்றுநற் கடமை நன்றிது தீதீ
தாமெனும் பாகுபா டின்றி
நாற்றிசை களிலும் உலவிடும் செய்கை
ஞாலமீ தெவ்வெவர் பாலும்
வேற்றுமை யின்றி வீசிக்கைம் மாறு
விழைந்திடா திலகுதல் கண்டார். 9

மலைகள்தம் மிடத்தே உளபொரு ளனைத்தும்
மக்களுக் கீந்துநன் றுதவல்
நிலையினிற்சிறிதும் சலனமில் லாமல்
நின்றிடல் உயர்நினை வுடனே
நிலவுக எனநன் றுணர்த்திய வண்ணம்
நிமிர்ந்துவா னுறநனி யுயர்வுற்
றிலகுதல் உடைப்போர் களுக்கும் நன்றுதவல்
இனையன எண்ணினர் வியந்தார். 10

நதிகள்தம் மிடத்துற் றோர்அழுக் ககற்றல்
ஊர்கட்கு நல்லழ கீதல்
பதிதொறும் சென்று பரமனைப் பரவல்
பயிர்களை நனிவளர்த் தோம்பல்
வதியுயிர் களுக்கு வாழ்வினை யளிக்கும்
நீர்நிலை களிற்சென்று வயங்கல்
புதியநல் லுணர்ச்சி யூட்டுதல் அனைத்தும்
புந்தியி லுணர்ந்துபோற் றினரால். 11

வேறு

உடையவன்றன் அருளாட்சி உலகின்மிசை
ஒருபடித்தாய் என்றும் நன்று
நடைபெறுநற் சிறப்பினையும் அதற்கிணைந்து
நடப்போர்கள் நலங்க ளெல்லாம்
அடைவதையும் அதைமீறி நடப்பவர்கள்
அவதியுறு வதையு மோர்ந்தார்
உடையவன்றன் அருட்கணக்கின் உயர்சிறப்பை
உன்னிவியந் துவகை பூத்தார். 12

எப்பொருளால் எச்சமயம் எம்மொழியில்
எவ்வகையில் இயம்பி னாலும்
அப்பொருளாய் அச்சமயத் தவ்வகையில்
அமைந்துயிரை ஆட்டு விக்கும்
மெய்ப் பொருள்ஒன் றேயென்ன நன்றுணர்ந்தார்;
விகற்பமிலா உண்மை கண்டார்;
அப்பொருளை உலகர்எளி தடையும்வழி
யாதெனஆ ராய லுற்றார். 13

ஆங்கிலமன் னரின்கட்டுப் பாடமைந்த
அரசியலும் அதைந டாத்தும்
ஓங்குயர்கம் பிரமுறை களும்நீதி
மன்றங்க ளுள்ள மாண்பும்
ஆங்கவர்தம் சட்டங்கள் நன்றுசெலா
வணியாகு மாறும் கண்டார்
யாங்கும்உடை யவராட்சி முறைசட்டப்
பெருமையும்நன் றெணிவி யந்தார். 14

சென்னைநகர் கச்சிகுடந் தைநாகை
காரைக்கால் தஞ்சை சென்று
மன்னுசிராப் பள்ளிகரூர் சேலமீ
ரோடுமுதல் வயங்கு மூர்கள்
நன்னயமாய் நண்ணியவ ணவண்வாணி
பச்செயல்கள் நாடிப் பார்த்தார்
பன்னுபல சமயஉணர்ச் சிகள்மாந்தர்
மனப்பான்மை களையும் கண்டார். 15

வேறு

ஆலவாய், நகரை விரைவினி லடைதல்
வேண்டுமென் றகத்தரு ளுக்க
ஞாலம்வா ழுயிர்கள் நடைமுறை யனைத்தும்
நன்றுணர்ந் திட்டநம் மண்ணல்
ரிலமார் அன்னை அங்கயற் கண்ணி
திகழும்நன் மதுரையை நோக்கிச்
சாலநல் லுவகை யொடுபுறப் பட்டுச்
சார்ந்தனர் கூடலி னருகில். 16

கூடல்மா நகர்நல் அங்கயற் கண்ணி
கோயிலின் கோபுரம் அனைத்தும்
ஈடிலா துயர்ந்து வானினைத் தழுவும்
எழிலினைத் தூரத்தே கண்டு
நாடியே கைகள் சிரமிசை குவித்து
நன்றுமீ னாட்சியை நினைத்துப்
பாடியே உருகிக் கண்கள்நீர் சொரியப்
பக்தியுட் படிந்தனர் அண்ணல். 17

ஒன்றுமே புரியா தோடிவந் துற்ற
போதுநல் லுவகையோ டேற்று
நன்றுண வூட்டித் தொழிலையும் உணர்த்தி
ஞானமும் பக்தியும் வளர்த்து
'சென்றுவா பம்பாய்க்' கெனஇனி தனுப்பித்
'திரும்பிவா' என்றநல் வெள்ளி
மன்றுலாம் மதுரை நகரினைக் கண்டு
மலர்க்கையால் தொழுதுளம் மகிழ்ந்தார், 18

வேறு

தாயினைவிட்டுப் பிரிந்த சேய்மீண்டும்
தாயினிடம் வரல்போல் ஞானத்
தாயினைவிட்டுப் பிரிந்த சேயான
அண்ணல்வரத் தயவார் ஞானத்
தாய்கருணை யோடுவர வேற்றிடல்போல்
தண்கூடல் மாடந் தோறும்
ஏய்கொடிகள் வருகவரு கெனஅழைத்தல்
கண்டண்ணல் இறும்பூ துற்றார். 19

வேறு

மதுரைமா நகரை அடைந்ததும் வைகை
மாநதி நீரினி லாடி
சதுர்மறை முதலும் முடிவுமாய் விளங்கும்
தனிப்பரி பூர்ணர்முன் சார்ந்து
பதுமைபோல் நின்றார் விழிகளா னந்த
பாஷ்பங்கள் சொரிந்தன பின்னர்
இதுவும்நின் னருளோ எனப்புவி மிசைவீழ்ந்
திறைஞ்சினர் எழுந்தனர் அண்ணல். 20

வேறு

ஜோதிமணி மகுடமுடன் துலங்கு மதி
வதனமுடன் துதிக்கும் தன்பால்
காதலுடன் ஒளிர் முந்நூல் கலகலெனும்
காற்சதங்கை கரத்தில் மாலை
போதம்அருள் பொலிவுடன்முன் போந்தொருநாள்
நிகரிலருள் புரிந்த வாறும்
பூதலத்தர் போற்றஅருள் புரிதிறமும்
உன்னியண்ணல் போற்ற லானார். 21

*நாலுமுறை கணேசா என்றழகாக
இனிதழைத்து நயம்சால் பண்ணால்
சாலஅழ கியமுறையில் கீர்த்தனையொன்
றிணையன்பால் சாற்றி னரங்
கேலுமன்பர் குழுநிதமும் ஏத்திவரம்
பெறுதிறமும் இயம்பித் தூய
சீலர்களுள் திகழ்ந்தாடல் செயும்திறமும்
அருள்திறமும் செப்பி நின்றார்; 22

வேறு

எழிற்பரி பூர்ண வள்ளலே பம்பாய்க்
கெனையிவ ணிருந்தனுப் பித்தீர்
தொழிற்றுறை பார்க்க வைத்துப்பின் மதுரைத்
தொன்னகர் திரும்பிடச் செய்தீர்
வழித்துறை தெரியா மாந்தர்க்குத் தூய
வழித்துறை காட்டியுய் விக்க
எழிற்பொலி வுடனிங் குற்றினி தமர்ந்த
இறைவ! நும் கருணைகூ றரிதால்; 23

அருளொளி விளக்கும் அமலனே ஆதி
நடுமுடி வாய்விளங் கெழிலே
மருள்தவிர்த் துலகை வாழ்விக்க வந்த
மன்னரே மன்னுயிர்த் திரட்குத்
தெருளளித் தினிது பேணிடும் இணையில்
தெய்வமே சிறியனேன் றனக்கும்
அருளமு தருத்தி யாள்பரி பூர்ண
அழகனே எனநனி தொழுதார். 24

*கணேசா கணேசா கணேசா: ஆண்டவர் அருட்பாடல்.

வந்தெதிர் வணங்கும் அண்ணலை நோக்கி
வாழ்கவாழ் கெனநனி வாழ்த்தி
சுந்தரப் பூர்ணர் திருவருள் சுரந்தார்;
ஜோதியாய் வந்தநா யகனை
அந்தமில் அன்போ டணைத்தவர் அழகார்
அடிகளில் முடியினைத் தாழ்த்திச்
சொந்தமாய் முத்த மாடிப்பி னெழுந்து
தொழுதவா றண்ணல்மீண் டனரால். 25

இருடியர் பட்டிச் சாமிவந் தடைந்தார்
இருளகற் றினியர்வந் தடைந்தார்
கருதிய அனைத்தும் அருள்பவர் அடைந்தார்
கருணையங் கடலிவண் அடைந்தார்
சுருதியை விளக்கும் தூயவர் அடைந்தார்
சுயஞ்சுடர்க் குருமணி அடைந்தார்
வருதுயர் தவிர்க்கும் வள்ளல்வந் தடைந்தார்
எனமக்கள் அண்ணல்பால் அணைந்தார் 26

எங்களுக் கெல்லாம் நல்வழி காட்டி
இடரெலாம் அகற்றிவாழ் வளித்தீர்
எங்களை விடுத்திவ் வாறுநீர் சென்றால்
யாங்களெவ் வாறெது புரிவோம்
எங்களுக் குரிய துணையெனப் பிரியா
திவணிருந் தெம்மையாண் டருள்வீர்
எங்களைப் புரக்க வந்ததூ மணியே
எமைவிடுத் தேகிடேல் என்றார். 27

விழிகள்நீர் சொரிய அடியவ ரெல்லாம்
விரைமலர்ச் சேவடி வணங்கி
இழிவெலாம் தவிர்த்திங் கெம்மையாண் டருள
இனிதுறும் இணையிலாத் துணையே
ஒழிவிலா ஞான ஒளிக்கதி ரவனே
ஒய்விலா துழைக்கும்ஆண் டகையே
அழிவில்பே ரருளை யாம்பெறப் புரிவீர்
அண்ணலே எனப்பரா வினரால். 28

அன்பினு லுருகி அடிபணிந் தேத்தும்
அடியவர் குழுவினை நோக்கிப்
பொன்புரை யண்ணல் அருட்பரி பூர்ணர்
திருவருட் குரியவ ரானீர்
அன்பினல் உயர்ந்தீர் அருள்நிட்டை பேணி
ஆனந்த மெய்துவீர் என்றார்
என்பும் உள்ளுருகக் குருபார் வாழ்கென்
றிறைஞ்சினர் அடியவர் பலரும். 29

வேறு

தேவர்தொழும் சொக்கேசர் திருமுடிமேல்
மண்சுமந்த திருநா ளான
ஆவணிமு லத்திலருட் பரிபூர்ணர்
இவணுதித்தா ராத லாலே
தேவர்கண பதியான இவர்க்குத்தினந்
தோறும்பூசை யாற்றி யுய்வீர்
ஆவணிமு லத்திலதி சிறப்புவழி
பாடிணிதாற் றிடுவீர் என்றார். 30

வேறு

அடியவர் குழுவுக் காறுதல் கூறி
அண்ணலார் திருவருள் கரந்தார்
பொடியணி நுதலும் பொருவிலாக் கருணை
பொழியுந்நீள் விழிகளும் எழிலார்
நெடியசெங் கரமும் திருவருட் பொலிவு
நிறைதிரு மேனியும் உளங்கொண்
டடியவர் பலரும் ஆனந்த மெய்தி
அவரவர் இருப்பிடம் அடைந்தார். 31

அங்கயற் கண்ணி ஆலயம் நோக்கி
அண்ணலார் விரைந்துசென் றடைந்தார்
செங்கரம் சிரமேற் குவிந்திடப் புளகம்
திருவுரு முழுவதும் முகிழ்க்கப்

பங்கயம் நிகர்த்த விழிகள்நீர் சொரியப்
பக்தியிற் செம்மனம் படியப்
பொங்குபே ரருளின் உருவமாய்ப் பொலிந்தார்
பொருவில்சீர்த் திருநகர் *அண்ணல். 32

சிறிதுபோ திவ்வா றிருந்துபின் நினைவு
வந்திடத் தேம்பிநின் றழுது
வறியவர்க் குற்ற நிதியினும் சிறந்து
வயங்கிடும் பேரரு ளணையே
நெறியறி யாமல் திகைத்தவென் றனக்கு
நிழல்செய அமைந்தகற் பகமே
சிறியவ னெனையும் தேடிவந் தழைத்த
தெய்வமே திருவரு ளமுதே. 33

எண்ணிலா உலக உயிர்களை யின்றும்
இளமைகுன் றாதொளிர் தாயே
பண்ணினா லடியர் பரவிடக் கருணை
பாலிக்கும் பண்புசால் தாயே
விண்ணிலா வமரர் முனிவரர் வழுத்த
விளங்கிடும் வியனருட் டாயே
கண்ணினா லுனையான் கண்டுய அழைத்த
கருணையே என உரு கினரால். 34

அண்ணலா ரிவ்வா றுருகிநின் றேத்த
அருள்மிகும் அம்மைமீ னாட்சி
கண்ணினாற் கருணை காட்டியே அபயக்
கரமசைத் தருளொடும் வாழ்த்தி
'எண்ணிலா அமரர் முனிவர்கள் போற்ற
இலங்குதி, எனஅருள் சுரக்க
உண்ணிலா வியபே ரன்புடன் போற்றி
உடல்புள கித்தனர் அண்ணல். 35

வேறு

அண்ணலார் பலஊர்கள் கண்டுபினர்
அழகுமிகும் அருளார் கூடல்
நண்ணியதால் அங்காடித் தலைவர்களும்
மகிழ்ந்தனர் [illegible]

* திருநகர்—இருடியர்பட்டி.

எண்ணரிய மகிழ்வடைந்தார், கிடைத்தநிதி
மறைந்ததென எண்ணி னோர்கள்
அண்ணலார் வரவினைக்கண் டந்நிதிகை
கிடைத்ததென்று னந்தம் கொண்டார். 36

வேறு

கணக்குகள் குவிந்து கிடப்பினும் அண்ணல்
காலையில் கண்விழித் துடையோன்
கணக்கினைக் கருதி வைகைநீ ராடிக்
கவின்பரி பூரண முதலைப்
பிணக்கில்நன் மனத்தாற் போற்றியே இன்பப்
பெருங்கட லாழ்ந்துபின் கடையின்
கணக்குகள் பார்த்தற் கேகுவர் இறைவன்
கருணையை உளம்கொண்ட வாறே. 37

மிகக்குவிந் திருந்த கணக்குகள் பார்க்க
வேண்டிய பொறுப்பிருந் தமையால்
அகத்தினில் உடையோன் அடிமலர் இருத்தி
அச்செயல் புரிந்தனர் அண்ணல்;
சகத்துறும் உயிர்கள் அனைத்துக்கும் முத்தி
தரஇந்தத் தரணியில் உதித்த
சுகப்பரி பூர்ணர் ஆலயத் தடியார்
சூழ்ந்திட அருளுடன் திகழ்ந்தார். 38

அண்ணலார் பம்பாய்க் கேகிய பின்னர்
அடியவர் அன்பர்கள் எல்லாம்
எண்ணொணாத் துயரம் எய்தினர் நம்மை
இனிவழிப் படுத்திட வல்லார்
தண்ணருள் மடுத்துத் தந்திட வல்லார்
தக்கபக் குவம்செய வல்லார்
திண்ணமாய் நலங்கள்செயவலார் யாரே
எனஅவண் திகைத்துக்கொண் டிருந்தார். 39

அவர்வகுத் தளித்த விடியல்நீ ராட்டும்
அருட்பரி பூர்ணர்க்கு நிதமும்
உவகையொ டாற்றும் பூசையும் தூய
ஒழுக்கமும் தியானமும் பிறவும்

அவர்நமோ டிருந்து நடத்தி மேன்மேலும்
அருள்நிலை யினிலுயர்த் திடற்குத்
தவம்செய்தோ மிலையென் றெணிமனம் தளர்ந்து
தவித்தனர் அடியவர் பலரும். 40

இத்தகு நிலையி லிருந்தவர், பம்பாய்க்
கேகிய அண்ணலார் மீண்டும்
வித்தக மதுரைக் குற்றநற் செய்தி
கேட்டதும் விரைந்துவந் திரண்டு
கைத்தலம் கூப்பித் தொழுதனர் நிலத்தில்
தாழ்ந்தனர் கண்மழை பொழிந்தார்
இத்தலத் தடியேம் புரிதவம் பலித்த
தெம்குறை தவிர்ந்ததென் றுவந்தார். 41

முக்கண்நால் வாயைங் கரப்பரி பூர்ண
மூர்த்தியை இவண்வர வழைத்த
சற்குரு பரனுர் வந்தன ரெனலும்
சார்திரள் மிகமிகப் பெருக
மக்கள்யா வருக்கும் உய்யும்நன் னெறியை
மகிழ்வுடன் விளக்கிநம் அண்ணல்
தக்கநல் வழிபா டியற்றிடப் புரிந்து
தருவர்நன் னீறுடன் தீர்த்தம். 42

வேறு

நல்வினைமுற் பிறவிகளிற் புரிந்தோர்கள்
நம்பனருள் வடிவாம் ஞானச்
செல்வர்அருட் டிருக்கரத்தால் திருநீறு
பெற்றுய்யும் செம்மை பெற்றுர்
செல்வமிக வும்படைத்தோன் வறிஞர்கட்கு
வழங்குதல்போல் தெய்வச் செம்மல்
தொல்புவியோர்க் கருள்புரிந்தார்; துயர்தீர்ந்து
சுகமடைந்தார் அன்பர்யாரும். 43

வேறு

எத்தொழிலைச் செய்தாலும் எவ்வார்த்தை மொழிந்தாலும்
முத்தரெனும் அண்ணலின்நன் மனமிருக்கும் மோனத்தில்
நித்தனருள் நாடிவரும் அன்பருக்கு நிதமும் அவர்
மெத்தகனி வோடருள் விபூதிமிகு பயனளிக்கும். 44

வேறு

கற்பகத்தைச் சார்ந்தோர்கள் கருதியதெல்
லாம்பெறல்போற் கருணை யெய்தி
அற்புதங்கள் புரிஇவர்பால் அடைந்தோர்கள்
அல்லலற்று நலங்கள் பெற்றார்;
விற்பனரும் முனிவரரும் விண்ணவரும்
வியந்தாசி விளம்ப லுற்றார்
பொற்புமிகும் இருடியர்கள் ஆச்சிரமம்
போலத்தலம் பொலிந்த தன்றே. 45

கடவுளரு ளினைநேரிற் பெறற்கியலா
மக்களுக்குக் கருணை வள்ளல்
கடல்நீரை முகில்முகந்து பெயல்போலப்
பரனருளை மடுத்துத் தந்தார்
சுடுபாலை வனத்தில்மழை பெய்ததுபோ
லேஉலகத் துன்பச் சூழல்
சுடவாடும் மக்களிடை தூயஅருள்
பொழிந்துதுயர் துடைத்தார் அங்கண். 46

ஊடகத்தில் ஊற்றெடுக்கும் உயர்ந்ததமிழ்ப்
பாடல் பல உருகிப் பாடிக்
கூடல்நகர்ப் பூர்ணன்அருள் கொண்டுபுவிக்
கேற்றசட்டம் கொடுக்க வந்தோர்
நாடித்தக்க காலம்வரும் வரையிலிவண்
பொறுத்திருத்தல் நலமாம் என்றே
நீடுமிகு முகமதியர் கடையி லின்னும்
சிலகாலம் பிறங்க லுற்றார். 47

அந்தஅங்கா டியைநடத்திஸ் லாமியர்கள்
நல்வினையும் அதற்கேற் றாற்போல்
இந்தஅரு ளாளரின்னும் சிலகாலம்
தங்கும்வணம் இருந்த தாலே
பந்தமற்றுப் பரனருளின் படிவமெனப்
பாரின்மிசை திகழ்ந்த அண்ணல்
அந்தஇஸ்லா மியரங்கா டியிற்சிலநாள்
அமைதியுட னிருக்க லானார். 48

வேறு

ஆன்மமுன் னேற்றம் விழைபவர் பலரும்
அரும்பொருள் விழைபவர் பலரும்
வன்மலி யுடலில் உற்றபல் பிணிகள்
ஒழிந்துய விழைந்திடு பவரும்
மேன்மைகள் அடையவிழைபவர் பலரும்
மேவிட அவர்க்கெலாம் அண்ணல்
நான்மறை முதலின் நல்லருள் வழங்கி
நடலைதீர்த் தின்பமூட் டிடுவார். 49

மூலமந் திரமா யொளிர்பரிபூர்ண
மூர்த்திக்குப் பக்தர்கள் கூடி
ஆலயம் அமைக்கக் கருதினர் கருத்தை
அண்ணலார்க் கியம்பினர் அவரும்
ஏலநன் றமைக்க இசைந்தனர் அடியார்
இருநிதி திரட்டினர் கோயில்
சாலநல் லெழிலோ டமைத்தனர் அண்ணல்
தம்குறிப் பின்வழி யினிதே. 50

திருக்குட முழுக்கு செய்வித்தல் வேண்டும்
என்றனர் சிரடி யார்கள்
அருட்குரு மூர்த்தி யாகிய அண்ணல்
அடியவர் விரும்பிய வாறே
திருக்குட முழுக்கை உடனிருந் தினிது
செய்வித்தார் தேவர்கள் சேவித்
தருட்டிரு மலர்கள் சொரிந்தனர் வானம்
அரும்பெனத் தூவிற்றுத் துளிகள். 51

வேறு

இருடியர்பட் டிச்சாமிக் கரோஹரவென்
றிடுமொலியும் எழிலார் தூய
பரிபூர்ண விநாயகர்க் கரோஹரவென்
றிடுமொலியும் பரப்பி யன்பர்
அருளாளர் அடியவர்எல் லாம்போற்றி
ஆனந்த மெய்த லானார்;
பொருளாளர் புகழாளர் பொறையாளர்
புனிதர்களும் போற்ற லானார். 52

கருடாழ்வார் வானமிசை வட்டமிட்டுக்
களிப்போடும் குரலெழுப்ப
புருடார்த்தம் விழைபவர்போற் பூங்கிளியின்
குழுவுமரோ ஹரவென் றார்ப்ப
தருதூய மலர்சொரியப் பறவையினம்
ஒலியெழுப்பத் தவத்தோர் வாழ்த்த
உருகாக்கல் மனமும்உரு கிடும்நிலையில்
அந்நல்விழா ஒளிர்ந்த தாமால். 53

எண்டிசையும் தொழுதேத்த எழிலாரும்
குடமுழுக்கை இனிதே செய்து
தொண்டர்குழாம் புடைசூழத் தூயஅண்ணல்
தொல்பரிபூ ரணர்முன் நின்று
தெண்டனிட்டுச் செங்கைகளைச் சிரமிசைகூப்
பியவண்ணம் செழிக்கும் அன்பால்
*கண்டுதெளி வாய்மனமே கணேசனை நன்
றெனப்பாடிக் கசிந்தார் உள்ளம். 54

பெருகுறுமன் புருவாகிப் பிரணவமாம்
பெருமறையின் பொருளிற் றோய்ந்துள்
ளுருகிநிற்கும் அண்ணலின்முன் ஒப்பில்பரி
பூரணன்தன் னுருவம் காட்டப்
பருகியவன் அருளொழிலைப் பக்திவடி
வாகி†உனை நம்பி னேனே
திருவடிநீ தருவையென உனைநம்பி
னேன்செ கத்தை மதியாதென்றார். 55

வையமிது மதிக்கும்வணம் வந்தருளைப்
புரிந்ததுவும் வண்மை காட்டி
மைந்தனென உகந்ததுவும் சொந்தமுடன்
அடிமைகொண்ட வகையும் கூறி
இந்தஉல கினுக்குன்னை யானென்று
காட்டிடுதல் இதமோ என்று
நைந்துருகி ஐயேஉன் அடைக்கலம்யான்
எனத்தொழுதார் ஞானச் செம்மல். 56

*கண்டு தெளிவாய் மனமே †உனை நம்பினேனே
—ஆண்டவர் அருட்பாடல்கள்

இனிதுபரி பூரணன்தண் ணருள்பெற்று
விடைபெற்றங் காடிக் சேகிக்
கனிவுறுமெய் யன்பாகிக் கருணையெனும்
கடல்மூழ்கித் திகழ்ந்தார் அண்ணல்
முனிவும்விர கோடன்பர் முன்னவனுர்
அருள்போற்றி நதிநீர் மூழ்கித்
தனியிலமா ந் தருள்நிட்டை பேணியுயர்
தகவோடும் திகழ லானுர். 57

தென்மதுரை மாநகரில் அண்ணலார்
தமைப்பற்றித் தெரியா ரில்லை
நன்மையுறப் பேணுதின சரிஒழுக்கம்
பரிபூர்ண நாதர் கோயில்
செம்மையுற இனிதமைக்கும் செய்கை, வழி
பாடு,நிட்டை தினமும் பேணல்
மும்மைமலம் நீக்கி முத்திநாடல்உண்மை
யாய்முயன்ருர் அடியார் பல்லோர். 58

ஏழைமக்கள் பால்மிகவும் இரக்கமுற்ற
மனத்தோடும் இனிதே யண்ணல்
வேழமுகன் திருவருளை மிகஉறுத்து
நினைத்தவணம் விளம்பும் சொற்கள்
ஊழைவெலும் திறத்தனவாய் உறுபிணிகள்
தவிர்ப்பனவாய் ஒளிசால் நீறே
வாழவைக்கும் வான்பொருளாய் மாமதுரை
மக்களுக்கு வாய்த்த வன்றே. 59

திருஞான சம்பந்தர் நெடுமாறன்
உடலைநனி வாட்டும் நோயைத்
திருநீறு கொடு தீர்த்தின் னருள் செய்தார்
எனப்பலரும் செப்பக் கேட்டோம்
பெருஞாலத் தெந்நோயும் திருநீற்ருல்
தீர்ந்திடும்இப் பெருமை தன்னைக்
குருநாதர் இருடிநகர்க் குரிசிலுணர்த்
திடக் கண்டோம் எனக்கூ றிட்டார். 60

மதுரைநக ரினர்க்கும் சுற்றுப் புறத்துள்ள
ஊரினர்க்கும் மாண்பார் நீறே
புதியஉணர் வூட்டுவதாய்ப் பொல்லாங்கு
தவிர்ப்பதுவாய்ப் புனிதம் கூட்டி
அதிகாலை விழிப்பூட்டி அருள்நீரில்
முழுக்காட்டி அடியா ராக்கித்
துதிபாடும் படியூக்கித் தொழில்வருவாய்
களைக்கூட்டித் துயர்தீர்த் தாலும். 61

இவ்வாறு ஜாதிமதம் பால்வயது
மொழியென்ன இயம்பு கின்ற
எவ்வேற்று மையுமின்றி எல்லோரும்
இனியபயன் எய்தல்கண்டே
ஒவ்வாத நெறியுடையோர் மதுவுண்போர்
புலையுண்போர் ஒழித்தே உய்ந்தார்
நுவ்வாநல் லுபவாசம் பலபேணிப்
பலர்சிறந்த தூயோ ராஞர். 62

மக்களெலாம் குறைதீர்ந்து வயங்குதல்கண்
டண்ணலார் மகிழ்ந்திட் டாலும்
மிக்கபுகழ் விரும்பாமல் பொருள்சிறிதும்
விரும்பாமல் வேறே ஏதும்
மக்களிடம் கேளாமல் நாடாமல்
பற்றணுவும் மனத்தே யின்றித்
தக்கவகை யால்உயிர்கட் கிரங்கியருள்
திருநீறு தருவார் அன்பால். 63

நனிஉயர்ந்த பக்குவம்சால் அடியார்கட்
கினியஅரு ளுரைகள் சொல்வார்
தனதுளத்தை நோக்கியுரைப் பவர்போலத்
தாரணிக்கும் உபதே சிப்பார்
மனதுசெம்மை யுறுவதற்கும் மலம்நீங்கி
நலம்பெறற்கும் வாய்ப்பா யுள்ள
இனியமொழி பலகூறி இணையில்திரு
நீறருளி இதம்செய் வாரால். 64



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளால் அமைக்கப் பெற்ற
மதுரை அருள்மிகு பரிபூர்ண விநாயகர் திருக்கோயில்

"மதுரா புரிவடக்காய் வைகைநதித் தென்பால்
சதுரார் ரயில்பாலந் தன்மேற்காய் எங்கும்
கதித்தோங்கும் செந்நெல்சூழ் கட்டிடத்தின கீழ்பால்
உதித்தாய்என் உள்ளத் துறை"

மதுரைநக ரினர்க்கும் சுற்றுப் புறத்துள்ள
ஊரினர்க்கும் மாண்பார் நீறே
புதியஉணர் வூட்டுவதாய்ப் பொல்லாங்கு
தவிர்ப்பதுவாய்ப் புனிதம் கூட்டி
அதிகாலை விழிப்பூட்டி அருள்நீரில்
முழுக்காட்டி அடியா ராக்கித்
துதிபாடும் படியூக்கித் தொழில்வருவாய்
களைக்கூட்டித் துயர்தீர்த் தாரும். 61

இவ்வாறு ஜாதியதம் பால்வயது
மொழியென்ன இயம்பு கின்ற
எவ்வேற்று மையுமின்றி எல்லோரும்
இனியபயன் எய்தல்கண்டே
ஒவ்வாத நெறியுடையோர் மதுவுண்போர்
புலையுண்போர் ஒழித்தே உய்ந்தார்
துவ்வாநல் உபவாசம் பலபேணிப்
பலர்சிறந்த தூயோ ரானார். 62

மக்களெலாம் குறைதீர்ந்து வயங்குதல்கண்
டண்ணலார் மகிழ்ந்திட் டாலும்
மிக்கபுகழ் விரும்பாமல் பொருள்சிறிதும்
விரும்பாமல் வேறே ஏதும்
மக்களிடம் கேளாமல் நாடாமல்
பற்றணுவும் மனத்தே யின்றித்
தக்கவகை யால்உயிர்கட் கிரங்கியருள்
திருநீறு தருவார் அன்பால். 63

நனிஉயர்ந்த பக்குவம்சால் அடியார்கட்
கினியஅரு ளுரைகள் சொல்வார்
தனைநினைக்கத் தொடங்கியுரைப் பவர்போலத்
தா[illegible]க்கும் உபதேசிப்பார்
மன[illegible]மை யுறுநற்கும் மலம்நீங்கி
[illegible]பெறற்கும் வாய்ப்பா யுள்ள
இனியமொழி பலகூறி இணையில்திரு
நீறருளி இதம்செய் வாரால். 64



ஸ்ரீ இரொட்டியப்பட்டி சுவாமிகளால் அமைக்கப் பெற்ற
மதுரை அருள்மிகு பரிபூர்ண விநாயகர் திருக்கோயில்

"மதுரா புரிவடக்காய் வைகைநதித் தென்பால்
சதுரார் ரயில்பாலங் தன்மேற்காய் எங்கும்
கதித்தோங்கும் செந்நெல்சூழ் கட்டிடத்தின் கீழ்பால்
உதித்தாய்என் உள்ளத் துறை"

பரிபூர்ண விநாயகரின் திருக்கோயில்
தென்புறத்தில் பரந்து மேவி
விரிவாகக் கிடந்தஇடம் வெறுநிலமாய்ச்
சிலகடம்ப விருட்சத் தோடும்
பரிவார்நல் லடியார்கள் வரும்வழியாய்
இருந்ததனைப் பார்த்தப் பூமி
பரிபூர்ணர் ஆலயத்துக் குரிதாக்கி
அடியார்கள் பயன்பெற் றுய்ந்தார். 65

பரிபூர்ணன் அருள்நாடிக் கொடுத்துவந்த
திருநீறு பலமக் கட்கும்
பெரிதான நலம்செயலும் பிணியாவும்
தீர்த்திடலும் பிழைதீர்ந் துய்தற்
குரிதான துணைசெயலும் கண்டாலும்
அண்ணலார் உலகத் தினிதே
பெரிதாக எண்ணுமல் உலகுயிர்கள்
பிறவிதவிர் வழிநா டிட்டார். 66

உலகினுக்குச் செய்யஎண்ணி வந்தபெரும்
பணியை இனி துஞற்றற் கின்றிப்
பலவழியாய் மக்களுக்குத் தொண்டுபுரி
பணியையிவண் புரிவ தாலே
நலமுறத்தாம் நாடுபணி ஞாலமிசை
யாற்றமுடி யாதோ என்றுள்
இலகுபரி பூரணன்தாள் எண்ணிஎண்ணி
இதயமிக உருக லானுர். 67

பரிபூர்ணர் கோயிலுக்குத் தென்புறத்தில்
வெற்றிடமாய்ப் பரந்து மேவும்
தரையினிற் கடம்பவிருட் சத்தடியில்
சத்திமிகு மிலிங்க மொன்றை
அருளடியர் கண்டதற்கொ ரம்மைசிலை
செய்வித்துக் கோயி லொன்றைத்
தெருள்மிகும் சுவாமிதிருக் கரங்களினுல்
அமைத்துக்கொளச் சிந்தை செய்தார். 68

தங்கள்மனத் துளகருத்தைத் தக்கபடி
அண்ணலிடம் தெரிவித் தார்கள்
கங்கையணி சிவனார்ஒண் கடம்பவன
நாதரென்றும் கயற்கண் கொண்ட
நங்கையருட் கடம்பவன வல்லியென்றும்
நன்னாமம் சூட்டி யண்ணல்
அங்கத்திருக் கோயில்திருப் பணியைஅடி
யார்பொறுப்பில் நிகழச் செய்தார். 69

புறவழிபாட் டினிலெல்லாம் மனம்நாடா
தகநாட்டம் போற்றும் தூய
திறமருவி யிருந்தமையால் அண்ணலிந்தச்
செயலினிலாழ் கருத்தில் லாமல்
இறைவியொடும் கடம்பவன நாதரமர்
திருக்கோயி லியற்றும் செய்கை
திறமுடைய அடியர்செயு மாறுபணித்
தகநோக்கிற் சிறந்து நின்றார். 70

உடையவன்றன் திருவருளுக் கடியரெலாம்
உரியவரா யாதல் வேண்டும்
நடையிலுயர்ந் தருள்நிட்டை, யினிலுயர்ந்து
ஞானியராய்த் திகழ்தல் வேண்டும்
புடவிமிசை திருவருட்செந் நெறிவளர்தல்
வேண்டுமெனப் போற்றி நாளும்
உடையவனை வேண்டிவந்த அண்ணலார்
உள்நாட்டம் உடைய ராகி, 71

திகழ்ந்துவந்த நாள்களிலும் சீரடியார்
திருவருளிற் சிறக்கும் வண்ணம்
உகந்தவகை யினிலியன்ற அளவினில்நற்
றுணையாகி உதவி வந்தார்
தகுந்தவகை யினிலின்னும் மிகச்சிறந்த
தவம்பேணி யருளில் முற்றிச்
சகந்தனையெல் லாம்உடையோன் தண்ணருளில்
தோய்விக்கத் தவித்து நின்றார். 72

ஒருதினம்நம் அண்ணலார் வைகைநதி
 நீராடி ஒப்பில் சீரார்
பரிபூர்ணர் திருமுனுற்றுப் பக்திவடி
 வாய்நின்று பரமா நின்றன்
திருவடிக்காட் சியையருளிச் சிறியேனைச்
 செழுந்தவத்தி லினிதே யாழ்த்திக்
கருவறைக்குள் மீண்டுமுறு வகையினிது
 கருணைபுரி கெனத்து தித்தார். 73

பேணுநர்க்குப் பிறவியெனும் பிணிநீக்கும்
 பெருமானே பிரிய மோடும்
காணவிழை யடியார்க்குக் காட்சிதரும்
 கயமுகனே ஞான மன்றில்
மாணஅருள் நடனமிடும் பொற்பாதா
 மறைமூலப் பொருளே நாயேன்
*காணக்கிடைத் திடுமோநின் கவின்பாத
 சேவையெனக் கசிந்து நின்றார். 74

பாதகங்கள் தவிர்த்தருளிப் பேதமையை
 நீக்கியருள் பரிபூர் ணன்நற்
ஜோதியொளி மணிமகுடம் துலங்கிடநீள்
 துதிக்கையிசைந் தருள் சித்திக்க
வேதமெனும் சிலம்பொலிக்க விழுமியதன்
 னுருக்காட்டி விழைந்த வாறு
பாதமல ரொளிகாட்டித் தித்திக்கும்
 மந்திரத்தைப் பகர்ந்தான் நன்றே. 75

பரிபாஷை யறியும்வணம் திரிகாலம்
 உணரும்வணம் பகர்ந்த மந்த்ரம்
பரிபூர்ணன் அருள்வடிவாய்ச் செவிவழியாய்
 உளம்புகவும் பார்வை யூடு
பரிபூர்ணன் அருள்வடிவப் பேரொளியுட்
 படர்ந்திடவும் பண்பார் அண்ணல்
பரிபூர்ணன் திருவருளிற் பரிபூர்ண
 மாய்த் தோய்ந்து பரவ லானார். 76

*"காணக்கிடைக்குமோ"—ஆண்டவர் அருட்பாடல்.

தொண்டரிடம் கருணைபுரி தூயகனை
சன்பதத்தைத் தூய கண்ணால்
*கண்டுகொண்டா யோமனமே என்றெடுத்த
கீர்த்தனையின் கானம் கேட்ட
வண்டுகளும் மலர்களிற்றே னருந்தாமல்
வள்ளலரு ளிசையில் தோய
எண்டிசையும் அண்டர்களும் ஐம்பூதங்
களும்இசையுள் இசைந்த வம்மா. 77

இவ்வண்ணம் தமிழ்பாடி இறைவனரு
ளிற்றோய்ந்தங் கிருத்தல் கண்டு
செவ்வண்ணப் பரிபூர்ணன் துதிக்கையவர்
சிரமிசைவைத் துலக மெல்லாம்
உய்வண்ணம் அருள்நெறிதந் தோம்பிடுதற்
குனையிங்ஙன் உதிக்கச் செய்தோம்
அவ்வண்ணம் அருள்கனிந்திவ் வவனியுயிர்த்
தொகைக்கருள்செய் திடுவாய் என்றான். 78

துதிக்கைசிர மிசைவைத்துத் தூயதிரு
வருள்புரிந்து ஜோதி யுள்ளே
பதித்தருளித் திரிகாலம் பரிபாஷை
யுணரும்வணம் பகர்ந்த மந்த்ரம்
திதிக்கவருள் மிகப்புரிந்த செய்யபரி
பூரணன்தாள் சிந்தை தன்னில்
பதித்தவணம் அங்காடிக் கேகியண்ணல்
பண்புருவாய் அமர்ந்தா ரன்றே. 79

அமர்அண்ணல் மனம்இறைவன் அருளார்சே
வடிமலரில் ஆழ்ந்து தோய்ந்து
சமைந்திருந்த தன்றியங்கா டியில்வாணி
பத்துறையில் சாரா தாகி
அமைந்திருக்க ஆகாரந் தனிலிச்சை
செல்லாத தாகத் தேகம்
சுமையென்னத் தோன்றமிகு சோகமுற
உளம்நோக்கிச் சொல்வா ரானார். 80

*கண்டுகொண்டாயோ—ஆண்டவர் அருட்பாடல்.

முன்னாளில் உனைப்போல மூடமதி
யுடையோர்கள் முன்னும் பின்னும்
பின்னாபின் னப்பட்டுப் பிழையாலே
யடைந்தகதி பெரிதும் உன்னிச்
*சொன்னாலும் கேட்பதிலை துறவாதி
குணம்என்னத் தூய வாக்கால்
பன்னாளும் மறவாமற் போற்றும்வண்ணம்
மனத்தினுக்குப் பகர்வா ராஞர். 81

ஆசையெனும் பெரும்பேயைத் துரத்திடுவாய்
அனுதினமும் ஐயன் பாதம்
நேசமுற நினைந்திடுவாய் பாசமெனும்
பகையறுப்பாய் நெஞ்சி னுள்ளே
மாசறுஶ்ரீ ஓமென்ற ஐந்தெழுத்தாம்
மந்திரத்தை நிறுத்தி வாழ்வாய்
கோசமைந்தின் உள்விளங்கும் கோமானைக்
கண்டமைதி கொள்வாய் என்றார். 82

வேலைகளெல் லாம்சுருக்கிக் கொண்டனர்உள்
முகமான விழிப்புக் கொண்டார்
காலைநதி நீராடி முன்னவனைக்
கண்டிறைஞ்சிக் கருணை போற்றிச்
சாலவிரைந் தங்காடி சேர்ந்துதிண்ணை
தனிலமர்வார் வாய்ப்பேச் சின்றி
ஏலுமவு னம்பூண்பார் கேட்பவர்கட்
கினிதெழுதிக் காட்டு வாரால். 83

உடையவன்றன் திருவருளை நினைந்துநினைந்
துள்ளுருகி உவகை கொள்வார்
மடைதிறந்த பேரருளை நினைந்துகண்ணீர்
வடித்திடுவார் வாய்விட் டன்பால்
உடையவனே என்றரற்றி யழுதிடுவார்
உணவுகொள்ள விரும்ப மாட்டார்
கடையவனென் றனக்கருளும் கணக்குண்டோ
எனக்கதறி விடுவார் கண்ணீர். 84

*சொன்னாலும் கேட்பதில்லையே—ஆண்டவர் அருட்பாடல்.

அழுதழுது கண்ணீரை ஆறுகப்
பெருக்கிடுவார் அன்பே மிஞ்சித்
தழுதழுத்த மென்குரலில் தற்பரனே
அருளெனக்கும் தருவாய் என்பார்
புழுதணலு ளகப்பட்டாற் போல்தவிப்பார்
புவனிநினை வணுவும் கொள்ளார்
எழுதரிதிங் கவர்நிலைமை நினைப்பதற்கும்
எவராலும் இயலா தம்மா. 85

மவுனம் தொடக்கம்

எப்போதும் இருவிழியும் மூடிமௌனத்
தினிதிருப்பார் எதையும் பாரார்
எப்போதோ கண்விழிப்பார் இறைவாபே
ரருளாளா அரசே என்பார்
இப்போதே யருள்புரிவாய் நாதாஎன்
றேயழுவார் எளியேன் என்றும்
தப்பேதும் செய்தறியேன் நினதுதிரு
வுளமறியும் சாமீ என்பார். 86

உணவருகில் வைத்திருந்தால் எப்போதோ
ஒருகவளம் எடுத்தே யுண்பார்
கணமும்இறை கழலடியைப் பிரியாத
கருத்துடையா ராஞர் வேறோர்
எணமூட்டப் பிறிதெவரும் நினைத்தாலும்
எதுவும்செவி யேற்க மாட்டார்
குணமூன்றும் கடந்திலகும் கோமான்றன்
குரைகழலே குறியாக் கொண்டார். 87

திருவருளை யேவிழைந்து தேம்பிமிக
அழுதிடுவார் தேவா எற்கும்
திருவருள்நீ செயலாகும் என்றழுவார்
அடியாரின் திரளூற் றூலும்
ஒருவரையும் கண்பாரார் ஒருவருக்கும்
ஒரு வார்த்தை யேனும் சொல்லார்
அருவுருவே அருளமுதே பரிபூர்ண
எனஉருகி அழுவார் பின்னும். 88

வள்ளலார் வெளிவ்யாப கங்களெலாம்
ஒடுக்கிவந்த வகையைக் கண்டே
உள்ளமிக உவந்தார்கள் அங்காடி
யின்தலைவர் ஓகோ இந்த
வள்ளலினி அங்காடிச் செயல்களையே
கவனிப்பார் வளமாய் என்ன
உள்ளமிசை நினைந்தார்கள் வள்ளல்நிலை
அவர்நினைப்பை யோட்டிற் றன்றே. 89

உள்ளுணர்வு மிகுந்துவர மிகுந்துவர
வெளிஇயக்கம் ஒவ்வொன் றாக
மெள்ளமெள்ள ஒடுக்கிவந்த அண்ணலார்
பேச்சொன்றும் விளம்பா மௌனம்
கொள்ளலுற்றார் அங்காடி சம்பந்த
மாம்உரையும் கூறார் பக்கல்
உள்ளவர்க ளிடம்எழுதிக் காட்டிடுவார்
உணவினையும் ஒடுக்க லானார். 90

அங்காடித் தலைவர்களுக் கச்சமிக
உண்டாயிற் றடியார் நண்பர்
அங்கேவந் துரையாடி னாலுமொன்றும்
பேசாமல் அமர்ந்தி ருப்பார்
அங்கேமிக் கவசியமா னாலிரண்டோர்
சொல்லெழுதி அமைதி கொள்வார்
எங்கேயும் எதற்கேயும் எழுந்திருந்து
செல்லாமல் இனித மர்ந்தார். 91

ஐந்துநா ளானதுமே அதுவரையிற்
சிறிதுசிறி தாயொ டுக்கி
வந்தஉண வினையாரும் நாளிலணு
வளவும்கொள மறுத்து விட்டார்;
இந்தநிலை ஊராருக் கெட்டியதும்
இருடிபட்டிச் சாமி இப்போ(து)
எந்தஉண வும்புசிப்ப தின்றிமவு
னம்பூண்டுள் ளனராம் என்றார். 92

உலகவியா பாரமதில் அங்காடித்
தலைவர்முயன் றாக்கி ஞலும்
இலகும்அரு ளண்ண லுளம் தாமரையின்
இலையிலுறு நீர்போல் யாண்டும்
நிலவுபற்ருென் றில்லாமற் எதிலுமொட்டா
நிலையிலிருப் பதையும் ஊனும்
சலமுமருந் தாதமைந்துள் ளதையும்கண்
டச்சம்மிகக் கொண்டா ரன்றே. 93

ஏதும்செயா தங்காடி யினிலுட்கார்ந்
திருக்கின்ரு ரென்ற செய்தி
தீதில்மது ராபுரியில் எங்கெங்கும்
விளம்பரமாய்த் தெரித லோடும்
ஆதுரமுற் றடியரன்பர் ஊர்மக்கள்
அனைவருமே திரள லுற்ருர்
கோதிலங்கா டியிற்கொள்ளல் கொடுத்தல்நிறுத்
திடும்வகையிற் கூட லானுர். 94

அளவில்பெருங் கூட்டம்கண் டங்காடித்
தலைவர் அஞ்சி அடியா ரோடு
மௌவினவி ஞர்களென்ன செய்வதெனப்
புரியாமல் மேலும் மேலும்
களவிலுண்மை யோடுநெடு நாளுழைத்துக்
கனப்பொருள்கள் திரட்டித் தந்திங்
குளஇவரை வெளிப்படுத்தல் எளிதலவே
எனக்கலக்க முறுவா ரானுர். 95

அண்ணலிடம் சென்றுநிற்பார் என்னஉடம்
பெனக்கேட்பார் ஆற்று நீரில்
நண்ணிமுழு கிடற்கெழுந்து செல்லவில்லை
யோஎன்பார் நல்லா காரம்
உண்ணவிலை யோஎன்பார் ஊர்மக்கள்
திருநீறுக் குற்ருர் என்பார்
எண்ணிவந்த செயல்முடிய அவர்க்குவிடை
கூறிடுதல் இலையோ என்பார். 96

இலகுகடைத் தலைவர்களும் இன்னடியார்
களும்இவ்வா றெதுகேட் டாலும்
தலையசையார் வாய்பேசார் சைகையெது
வும்காட்டார் சாமீ என்றால்
சிலசமயம் சிரித்திடுவார் சிலசமயம்
தலையசைப்பார் சினம்கொண் டாற்போல்
சிலசமயம் ப்ரமிக்கப்பார்ப் பார்கண்கள்
சிலசமயம் மூடிக் கொள்வார் 97

சிரிப்பதையும் அழுவதையும் சினந்தாற்போற்
பார்ப்பதையும் கண்டு செங்கை
விரித்துவிட்டுப் பைத்தியமீ தினித்திரும்பா
தெனச்சிலபேர் விளம்பிச் சென்றார்;
தரித்திலராய் அருட்குருவைத் தனிவிடுத்துச்
செல்லமன மில்லா ராகி
வருத்தமிக்குச் சீரடியார் அன்பர்சிலர்
வழியாதென் றுன்ன லானார். 98

எந்தமருந் தினைத்தரலாம் எந்தமந்தி
ரம்செயலாம் என்பார் பின்னர்
எந்தமருத் துவமும்எந்த மந்திரமும்
ஏந்தலிடம் செலுமோ என்பார்
எந்தவித முயற்சிசெய்தால் இவர்க்குநலம்
உண்டாமோ என்று நைவார்
எந்தவகை யும்புரியா தேதேதோ
எண்ணிஎண்ணி வருந்த லானார். 99

அடியவர்க ளிவ்வாறு வருத்தமுற
அங்காடி வளர்தற் காக
நெடிதுழைத்த ஒருண்மை யாளர்க்கிங்
கிவ்வாறு நேர்ந்த தேயென்
றொடியுமனத் தினராயங் காடியினை
இனிபுரப்போ ரொருவ ருண்டோ
படியின்மிசை யென்றுகடைத் தலைவர்களும்
பரிதவித்தார் பக்த ரோடும். 100

காணவரு வோர்கூட்டம் அளவின்றிப்
பெருகிடுதல் கடையில் நாளும்
வாணிபத்திற் கிடையூறு யிருந்திடலால்
கடைத்தலைவர் வள்ளல் தம்மை
மாணுறுமற் றோரிடத்தில் அமர்த்திடலாம்
எனநினைத்தார் மல்கு மன்பு
பூணும்அடி யவரிடத்திற் புகன்றார்கள்
யாதொன்றும் புரியா ரானார். 101

இப்படியெல் லாமிவர்கள் எண்ணியெண்ணிப்
பலவாறாய் இயம்பும் சொற்கள்
ஒப்பிலண்ண லார்நிட்டை கலைகையிலே
ஒரொருகால் புகுத லோடும்
இப்படியும் உண்டோஎன் றிதயமிசை
சினம்சிறிதே எழலும், *'கோபம்
எப்பொழுதும் செய்யாதே' எனமனத்துக்
குபதேசம் இயம்ப லானார். 102

பாசக்கட லினையகற்றிப் பாழ்வினையெல்
லாம்துரத்திப் பக்தி யோடு
நேசித்திறை வனைமனதில் தினம்நினைந்து
நினைந்துதிருந் திடுவாய்; கர்ப்ப
வாசமுற்றுத் தாய்வயிற்றி னின்றுதித்தாய்
நலமிகுசன் மார்க்கம் கண்டாய்
ஆசையுறல் மாயையென அறிந்திருந்தும்
மதியிழத்தல் ஆமோ என்றார். 103

†ஈசனையே நம்பியிவண் ஏகமன
தோடிதயத் தினைத்தி ருத்திப்
பூசனைகள் செய்துபரி பூரணனைப்
பூமிமிசை கண்ட பின்னர்
ஆசைப்படு வதுமேனோ அலைந்தோடி
அகிலமிதில் திரிவ தேனோ
பாசக்கட லைக்கடந்தும் பலவேஷத்
தொழிலேனோ எனப் பகர்ந்தார். 104

*கோபம் செய்யாதே—ஆண்டவர் அருட்பாடல்
†ஈசனை நம்பினேனே—ஆண்டவர் அருட்பாடல்

*அன்பினைநீ பெறுவாயேல் அதர்மங்கள்
அனைத்தும்உனை யகன்று நீங்கும்
துன்பமெலாம் தவிர்ந்தேகும் அதன்பின்னர்
அணுவளவும் துயருண் டாமோ
வன்பனென இவ்வுலகில் வந்துதித்து
வாழ்ந்திடுநாள் முழுதும் செய்த
கன்மவினை சூழ்ந்துதவம் கலைத்திடும்கா
ரணம்அறிவாய் நெஞ்சே என்றார். 105

மனம்நோக்கி இத்தகைய வார்த்தைசொலி
உபதேசம் செய்த பின்னர்
சினம்நீக்கி அமைதியுற்று வேறெங்குச்
செல்வதெனச் சிந்தை செய்து
தனம்நாடு செயல்வேண்டேன் தவம்நாடு
செயல்புரிவேன் தக்கோ ரெல்லாம்
தினம்நாடு செம்பொருளே சிறந்தவழி
யினைவிரைவிற் செப்பாய் என்றார். 106

†ஈசாநீ எனக்குவரம் தாராய்நற்
சமயமிது என்றெ டுத்துப்
பாசமெனும் கடலில்விழுந் தாசைப்படும்
பலப்பலவாம் வினைக ளாலே
மோசப்படா வகையிலெனைக் காத்தருளி
முத்திநெறி மொழிந்த முத்தே
நேசித்தரு ளுகந்தளித்தாய் நிலஉலகர்
உய்யும்வணம் வரம்தா என்றார். 107

ஆதியினிற் செனனமெடுத் ததிலிருந்திக்
காலம்வரை அகில மீதில்
ஓதிப்படித் திட்டகல்வி யேதுக்கும்
உதவாதென் றுணர்ந்து கொண்டேன்
ஜோதிவடி வாகிவந்து துணைபுரிந்த
கருணாளா துகளில் தூய
நீதியிவ னுளதோவென் றெண்ணுமெற்கிப்
போதுவரம் நீதா என்றார். 108

---

*அன்பினை பெறுவாயாகில்—ஆண்டவர் அருட்பாடல்
†ஈசா எனக்கு வரம் தாராய்—ஆண்டவர் அருட்பாடல்

கும்பிக்கிரை யேதேடிக் கூவித்திரிந்
தேனிந்நாள் குவல யத்தில்
நம்பிக்கை போங்காலம் நானினியிங்
கிருப்பதிலே நாதா உன்றன்
தும்பிக்கை யால்காட்டாய் நற்றவத்துக்
குரியதொரு தூய சூழல்
நம்பிக்கை யோ ள்ளேன் நாயகனே
நல்லவரம் தாராய் என்றார். 109

ஆக செய்யுள் 998

## 6. பொதிகைப் படலம்

### சண்பக விநாயகர் துதி

விண்பிறங்கும் அமரர்களும் வியன்தவம்செய்
முனிவர்களும் சித்தர் யாரும்
பண்பிறங்கு துதிபாடிப் பக்திசெயும்
அடியவரும் பரவிப் போற்ற
மண்பிறங்கு திருத்தலங்கள் அனைத்தினிலும்
மாண்புடைத்தாம் குற்றா லம்வாழ்
சண்பக விநாயகர்செந் தாமரைத்தாள்
பணிந்திறைஞ்சி யருள்பெற் றுய்வாம். 1

வேறு

அஞ்ச லென்றின் னருள்புரி சற்குரு
நெஞ்சில் நின்றுமெங் கெங்கும் நிறைந்தும்தண்
மஞ்செ னக்கரு ணைபொழி மாமுகன்
செஞ்ச ரண்சிரம் சூடி வழுத்துவாம். 2

அவனி யுய்ய அருட்செந் நெறிதரும்
தவச்செம் மல்திண் தவம்நிறை வெய்திட
உவகை யோடழைத் தொண்திறல் நல்கியாள்
தவள யானை பதங்கள் தலைக்கொள்வாம். 3

## குருநாதர் துதி

மதிதவழும் மணிமாட மதுரையினில்
வைகையின்தென் கரையில் ஞான
நிதியெனவொண் பரிபூர்ண நிமலனேக்கண்
டினிதேத்தி நேமி யுய்ய
அதிமதுரத் தமிழ்பாடி அருட்சட்ட
நெறிகாண அருளார் தூய
பொதிகைவரை யினிற்றவம்செய் தினிதுபுவி
பேணுகுரு பொற்றுள் போற்றி. 4

---

## மதுரைவிட் டேகல்

அங்காடித் தலைவர்அடி யவரோடும்
உரையாடும் அரவம் கேட்ட
எம்கோவும் தம்மனத்துக் குபதேசம்
இனிதோதி மதுரை நீங்கி
எங்கேனும் யாருமறி யாததொரு
நேரத்திற் புறப்பட் டேகத்
தம்கோதில் உள்ளமிசை தக்கதொரு
நன்முடிவு செய்து கொண்டார். 5

அவ்வாறு நம்கோஎண் ணியதும்இறை
யருளாலே அமைந்த தாகும்
அவ்வாறங் கவர்எண்ண மில்லையெனின்,
அண்ணல்தவம் நிறைவ தெங்கே
செவ்வாய்மை மிகுசட்டத் திருநெறியிவ்
அவனிமிசை செழிப்ப தெங்கே
இவ்வாறு நாமெல்லாம் இனிதவர்செந்
நெறிபோற்றி உய்வ தெங்கே? 6

உலகமெலாம் இனிதுய்ய ஒப்பிலருள்
மறைவாழ உண்மை நீதி
இலகஉயிர்த் தொகையனைத்தும் இடர்தீர்ந்து
மெய்யின்ப மெய்தி வாழப்

பலகலையின் உயர்சாரம் பண்பருளும்
சட்டமெனப் பார்மே லோங்க
அலகிலருள் அவருளத்தில் இவ்வாறோர்
எண்ணமதை யமைத்த தம்மா. 7

இருடியர்பட் டியிலிருந்து முன்னொருகால்
மதுரைநகர்க் கீர்த்த வாறும்,
சுருதிமுத லந்தமெனும் பூரணன்தோன்
றியவாறும்.சூழும் மக்கள்
கருதியதெல் லாம்முடித்துக் கணக்கிலருட்
சித்திசெயக் கணித்த வாறும்,
பருதியெழு முனர்வெளியேற் றிடுமாறும்
பரமனருட் செயலே யன்றோ? 8

முன்னவனார் திருவருளுள் ளிருந்தாக்க
மோனம்விழை ஞான அண்ணல்
முன்னமொரு நாள்தம்மை முழுமகிழ்வால்
வரவேற்று முற்றும் காத்துப்
பன்னிரண்டாண் டாய்த்தம்மை வளர்த்தினிது
பக்குவம்செய் வித்த தூய
நன்னயம்சால் மதுரைக்கும் வைகைக்கும்
ஞானத்தாய் கோயி லுக்கும் 9

போய்வருகி றேனென்று பூரணனார்
கோயிலுக்கும் நன்றி கூறி
நாயகன்றன் சேவடியே நல்லவழித்
துணையென்ன உளம்கொண் டோராய்
ஏயஉயர் நிலைநாடி ஈடிணையில்
தவம் நாடித் தனியே அண்ணல்
தூயவுளத் தொடுநல்ல தூய்மைமிகும்
இடம்தேடிச் செல்ல லானார். 10

விழுமியநற் பேரருளை விழைந்துயிர்கள்
எய்துவதற் குரிய மேலாம்
செழும்பொழுதில் கதிரெழற்கா றேகால்நா
ழிகைக்குமுனாய்த் திகழும் போதில்

இழுதெனவுள் ளுருகியருட் டிருப்பாடல்
இசையொடிறை திருப்பா தங்கள்
தொழுதுவரு டியசிந்தை யோடுதவத்
துறைநாடிச் செல்ல லானார். 11

அஞ்ஞான இருள்நீங்க அருட்சட்டம்
தோன்றவுள தெனஅ றிந்து
மெய்ஞ்ஞான ஒளிஇனிது விளங்குமினி
எனஉணர்த்திக் கதிரோன் தோன்ற
பைஞ்ஞாலத் தருள்மணத்தைப் பரப்பண்ணல்
தமைக்கண்ட மலர்க ளெல்லாம்
மெய்ஞ்ஞேய மோடுநறு மணம்பரப்பி
விளங்கெழிலை விரித்த வம்மா. 12

அடியவர் கலக்கம்

எங்குநம்சு வாமிசென்றார் எப்படிச்சென்
றார்என்ன எழும்வி னக்கட்(கு)
அங்குவிடை சொல்வோர்கள் யாவரும்கா
ணோம்;மாய மாக அண்ணல்
அங்கணிருந் தகன்றுவிட்ட தறிந்தஅங்கா
டித்தலைவர் அடியா ரெல்லாம்
இங்குமங்கு மாய்த்தேடிக் காணுமல்
இயம்பவொணு வருத்த முற்றார். 13

அண்ணலார் எந்தஎந்த இடத்தினுக்குச்
சென்றிருக்க லாமென் றன்பர்
எண்ணியெண்ணி எங்கெங்கும் தேடிமிக
ஏமாற்ற மெய்தி னார்கள்
உண்ணலின்றிப் பேசலின்றி உட்காரு
முன்னரெந்த ஊருக் கேனும்
நண்ணஎண்ணி யுரைத்தனரோ என்னவொரு
வரையொருவர் நாடிக் கேட்பார். 14

ஏதொன்றும் புரியாமல் அடியர்களும்
அன்பர்களும் இனியஞான
சாதகரும் தண்மதுரை நகரினரும்
சாற்றவொணு வருத்த மெய்திச்

சூதறியாத் தூயவராய் ஆசையிலா
ஆண்டகையாய்த் துணையா யுற்ற
நாதரையா மினிக்காணும் வணமெங்ஙன்
எனநவின்று நைய லானார். 15

ஆருடன்போய் இனிவைகை யாற்றுநன்னீ
ராடிடுவோம் ஆல யத்துக்
காருடன்போய்த் தொழுதிடுவோம் துதித்திடுவோம்
அருள்நீறு தீர்த்த மெல்லாம்
ஆரிடம்போய்க் கேட்டிடுவோம் ஐயமெலாம்
ஆரிடம்போய்த் தீர்த்துக் கொள்வோம்
ஆரிடம்போய்க் குறைகளெலாம் கூறிடுவோம்
அருள்பெறுவோம் என்று நொந்தார். 16

அன்புநிறை மொழியோடும் அருள்நிறைந்த
உளத்தோடும் அன்பர்க் குற்ற
துன்பமெலாம் கேட்டருளித் தூயதிரு
நீறருளித் துயர்தீர்த் தாட்கொண்(டு)
இன்பமெலாம் ஈந்தருளும் இணையிலருட்
சற்குருவை எக்கா லத்தும்
அன்புமிகு புன்முறுவல் அருட்பொலிவொ
டமைதுணையை அடியா ரெல்லாம் 17

உன்னிஉன்னி அழுதிடுவார் உமைப்போல
உறுதுணையா ரெனவு ரைப்பார்
தன்னிகரில் வழிகாட்டித் தரணிமிசை
பேணிடுவோர் யாரே என்பார்
மன்னுதுய ரத்தனையும் மாற்றியருள்
வளம்தருவோர் யாரே என்பார்
பொன்னுமெந்தப் பொருளும்விழை யாதருளைப்
பொழிந்திடுவோர் இனியா ரென்பார். 18

சாமியைப்போ லிறைவனையித் தரணிமிசை
வரவழைப்போர் யாரே என்பார்
சாமியைப்போ லெத்தகைய பிணிகளையும்
தவிர்க்கவலார் யாரே என்பார்

சாமியைப்போ லன்பர்களைத் தண்ணளியால்
நோக்கவலார் யாரே என்பார்
சாமியைப்போல் அடியவர்பால் அருள்நலங்கள்
தழைவிப்போர் யாரே என்பார். 91

தேவியார் துயரம்

அடியவரும் அன்பர்களும் அங்காடிக்
குரியவரும் அலக்க ணெய்திப்
படியின்மிசை பலவாறுய் நாடிமிகத்
தேடியெங்கும் பார்த்துப் பார்த்து
நெடிதுமனம் வருந்திநிற்க அண்ணலார்
நிறைவாழ்வின் துணைவி யாரும்
உடனிருக்கும் பிச்சாண்டிப் பிள்ளையுமங்
குற்றதுயர் உரைத்தற் காமோ? 20

முன்னமே குருபரனுர் குடும்பப்பற்
றின்றிஅருள் முறையிற் சென்று
முன்னவனுர் காட்சிபெற வேண்டுமென
அழுதழுது முயன்ற வாறும்
பின்னரவர் பம்பாயில் வாணிபம்செய்
யப்பிரிந்து சென்ற வாறும்
நன்னயமார் கூடலுற்றும் புவிப்பற்று
சிறிதுமின்றி நடந்த வாறும் 21

உண்ணவில்லை பேசவில்லை யசையவில்லை
என்றுபலர் உரைத்த வாறும்
கண்ணிரண்டும் மூடியவர் திறக்கவில்லை
என்றுகண்டோர் புகன்ற வாறும்
நண்ணுசித்த சுவாதீன மில்லைபைத்யம்
பிடித்ததென நவின்ற வாறும்
எண்ணில்துய ரீந்திடலும் காணேமென்
றிடும்சொற்கேட் டிடிந்தா ரன்றே. 22

அண்ணலார் அருள்வாழ்வுத் துணைவியார்
அடியற்ற மரம்போ லானுர்
தண்ணியற்க தாதரருக் குற்றதுபைத்
தியமென்னச் சாற்றல் கேட்ட

பெண்ணமுதாம் சாரதா மணியன்னை
பெற்றதுயர் பெற்ற அம்மை
அண்ணலார் எங்கேயோ சென்றுவிட்டா
ரெனக்கேட்டுள் ளமைதி யற்ருர். 23

வாழ்வினுக்கே உறுதுணையாய் அமைந்தவர்க்கிவ்
வகைநேர்ந்த செய்தி கேட்டுச்
சூழ்வுறுநற் கொழுகொம்பைப் பிரிந்துதனி
வாடுகின்ற கொடியே போலக்
கேழ்கிளர்பே ரருளாளர்க்கினிச்சேவை
செய்வதெங்ங னென்ன உள்ளம்
ஆழ்வுறுநற் றுயர்க்கடலில் அமிழ்ந்திடவும்
அலமந்து தவிக்க லானுர் 24

முற்பிறவி களிற்செய்த புண்ணியத்தால்
அண்ணலார் செங்கை பற்றும்
பொற்புமிகு மனைவியராய்ப் போந்ததையும்
பற்றின்றிப் பொலிந்தா ரேனும்
அற்பொடுநன் றவர்க்கினிது சேவைசெயும்
பேறுகிடைத் ததையும் எண்ணிக்
கற்பரசி யார்அமைதி கொண்டிருந்தார்;
இச்செய்தி கலக்கிற் றம்மா. 25

ஊணுறக்கம் கொள்ளாமல் யாரிடத்தும்
தன் துயரை உரைக்கா தூமை
காணுகன வினையுரைக்க இயலாமற்
கலங்குதல்போல் உளம்க லங்கிப்
பூணுகற்பின் மிகுந்தண்ணல் புரிதவத்துக்
குறுதுணையாய்ப் பொலிந்தார் பொற்பின்
மாணுறுமவ் வனையிப்போ துற்றமன
நிலைமைஎழு தரிதா மன்றே. 26

அண்ணல்தமை யன்மகனும் பிச்சாண்டிப்
பிள்ளையுமங் கங்கும் தேடி
அண்ணலார் சென்றதெங்கே யென்றறிதற்
கியலாராய் உளம் கலங்கிப்

பண்ணுசெய லறியாமற் பரிதவித்து
மாமதுரைப் பதியை நீங்கித்
திண்ணியகற் பரஞ்யராம் சிற்றன்னை
யோடிருடிப் பட்டி சேர்ந்தார். 27

## தவத்தின் பெருமை

உலகின்மிசை தோன்றியஒவ் வோருயிரும் உறுதுயர்தீர்ந்(து)
அலகிலருட் பரம்பொருளின் அடிசேர்ந்து மும்மையெனும்
மலம்நீக்கிப் பிறவியெனும் கடல்கடந்து மறைபோற்ற
நிலவுபர மானந்த நிறைவுபெறல் குறிக்கோளாம். 28

அந்த உயர்குறிக்கோளை அடைவதற்கிவ் வகிலமிசை
சிந்தையினை நன்றடக்கிச் சிறந்ததவம் செயல்வேண்டும்
அந்தமில்சீர் அருந்தவத்தால் ஆகாத தொன்றில்லை
பந்தமறும் சக்திமிகும் பரஞானம் ஓங்கிடுமே. 29

வேறு

வேண்டுவன வேண்டும்வணம் எய்துதற்கு
வேண்டுவது தவமே யாகும்
வேண்டுதல்வேண் டாமையிலான் அடிசேர
வேண்டுவதும் தவமே யாகும்
வேண்டுதல்வேண் டாமையிலா நிலைபெறற்கும்
வேண்டுவது தவமே யாகும்
யாண்டுமென்றும் எந்நலமும் எய்தவிழை
வோர்செயலும் தவமே யாகும். 30

ஆற்றலெலாம் பெற்றுயர வேண்டிடுவோர்
ஆற்றுவது தவமே யாகும்;
கூற்றைவெல விழைவோர்கள் கோருவதும்
குறைவறுமெய்த் தவமே யாகும்;
மாற்றுயர்பொன் ஞெளிபெருகும் துயர்பொறுத்து
மாண்தவத்தை யாற்று வோர்க்கு;
நோற்றவர்எல் லாம்பெறுவர்; நோலாதார்
இலராவர் நுவலுங் காலே. 31

துருவன்சன காதியர்மார்க் கண்டேயர்
அகஸ்தியர் நற் சுகர்வி யாசர்
அருமறைக ளருள்முனிவர் அருந்தமிழொண்
திருமுறைகள் அருள் மேலோர்கள்
பெருமிழலைக் குறும்பர்திருக் கண்ணப்பர்
பிருங்கிமுனி ப்ருகுத தீசி
குருகையரி ராமலிங்கம் பட்டினத்தார்
தவத்தாற்றல் கூறற் காமோ? 32

சரியைகிரி யாயோகம் ஞானமிவை
தவத்தினில்நால் நிலைக ளாகும்
தரணியின்கண் இவைபுரிந்தோர் சாலோக
சாமீப சாரூ பம்பெற்(று)
அரியதொரு சாயுஜ்ய மும்பெறுவர்;
முற்றவத்தால் அதுவும் எய்தும்;
பெரிதுமுழைப் பின்றிசிலர்க் கெய்தும்:சிலர்
உழைத்துப்பயன் எய்து வார்கள். 33

ஐயனை யடைவதற்கு நன்றுமுயன்
றதில்வெற்றி காண வேண்டும்;
துய்யகல்வி தான்பயின்று பின்னர்பிறர்க்
குக்கல்வி புகட்டா சான்போல்
செய்யதவம் தான்புரிந்து மிகச்சிறந்த
பரிபூர்ண நிலைதா னெய்தி
வையமுயும் வண்ணம்வழங் கிடல்நன்றென்
றெண்ணிநடந் திட்டார் அண்ணல். 34

அமரர் முனிவர் ஆசியும், உலகவர் உரையும்.

இந்த வாறின் தவத்தின் சிறப்பெலாம்
முந்த நாடி முழுமை பெறவுன்னி
பந்தம் யாவையும் பற்றறுத் தோர்செல
மந்த மாருதம் வந்தெதிர் கொண்டதால். 35

கருதி வந்த கருணைச் செயல்செயப்
பருதி போன்றவர் பாரில் நடக்கையில்
சுருதி யாவையும் தூயப்ர ணவமும்
அருள்தி கழ்நல்ல ஆசி யளித்தவே. 36

மோன மெய்தித் தவத்தை முடித்துமெய்ஞ்
ஞான நன்னெறி ஞாலத்திற் கிசெனு
மோன மார்முனி வோர்களும் தேவரும்
வான வீதியி லேநின்று வாழ்த்தினர். 37

தாவ ரங்கட்கும் தண்பயிர் கட்கும்நன்
ருேவில் பேரரு ளூட்ட உதித்துளோன்
சேர்வ துன்னித் திகழும் தருக்குலம்
மேவு தாதுகுத் தேவர வேற்றதால். 38

ஏய யாங்கள் இதுவரை எண்ணிய
தூய நற்செயல் தொல்புவி யிற்செய
நீயி வண்துணிந் தாய்நிற்கு வெற்றியென்
ருய பேரரு ளாளர்கள் வாழ்த்தினர். 39

மாயை நீங்கும் மனத்தவ ராகியே
தூய மெய்த்தவம் நாடிடும் தோன்றலார்
நாய கன்றன் அருளுந்த ஞாலமேல்
ஏய தன்செய லின்றி நடந்தனர். 40

உணவும் நீரும் அருந்தலில் லாதொரு
கணமும் ஈசன் கழல்பிரி யாதுநன்
றணவும் சிந்தைய ராகநம் அண்ணலார்
இணையி லாதொளிர் ஓமுன்னி ஏகினர். 41

வேறு

தேட்டமிக வுடையவரும் எய்தரிய
திருவருளாம் செல்வந் தன்னில்
நாட்டமிக உடையவராய் மெய்ஞ்ஞான
நம்பிதிரு வுளத்திற் சற்றே
வாட்டமுற் றவணம்செல்லத் தன்னடியார்
வருத்தமெலாம் மாற்றும் முன்னேன்
கோட்டமில்தன் பேரருளால் உள்ளிருந்து
குறிப்புணர்த்த உணர்ந்தார் அண்ணல். 42

அணுவளவும் வாட்டமுரு தெழுமனமே
அருள்ஞான நாட்டம் கொள்வாய்;
எணுமுனருள் இறைவனடி மலர்நாடி
இணையில்தவம் இனிது செய்வாய்;

கணமெனினும் அவப்பொழுதாய்க் கழிக்காமல்
தவப்பொழுதாய் ஆக்கிக் காண்பாய்;
அணுவுளணு வாய்விளங்கும் இறையருள்பெற்
றனைத்துயிர்க்கின் பருள்வாய் என்றார். 43

என்றிறைவன் திருவருளைத் துணையாக்கொண்
டினியவுப தேசம் செய்து
துன்றுமன வாட்டமதைத் தவிர்த்தூக்க
மிகவூட்டித் துரிய ஞான
மன்றில்நட மிடுபாத மலர்கண்டு
ளொன்றுமுறை வாகா யோர்ந்து
நன்றுயிர்கட் கருளவுன்னி நாளும்நடந்
தார்உண்மை ஞான வள்ளல். 44

## அருளொளி உட்புகல்

இரவொன் றின்கணோ ரில்ல மடைந்தவண்
மருவு திண்ணையில் வண்துயில் கொள்கையில்
விரவி டும்பசி மேவிட வானின்றும்
பொருவில் பேரொளி யொன்றுட் புகுந்ததால். 45

விண்ணி னின்றுட் புகுந்த வியனொளி
அண்ண லார்திரு மேனி படர்ந்தருள்
தண்ண முதம் அணுத்தொறும் பாய்ச்சிட
உண்ணி கழ்பசி யோடி மறைந்ததால். 46

அடுத்த நாள்புத் துணர்ச்சியொ டண்ணலும்
மடுத்தி டும்புதி தான மகிழ்வுடன்
தொடுத்த யாத்திரை யைத்தொடர்ந் திட்டனர்
நடுத்தி கழ்கண நாதன் அருளினால். 47

மேய சிற்சி லிடங்களில் மிக்கநற்
றூயு ளம்கொண்ட மாதர் தயையுடன்
ஏய நல்லுண வேற்கச்சொன் னார்அண்ணல்
தூய மோருண்டு செல்லத் தொடங்கினார். 48

## ஆண்டவர் திருச்செந்தூர் அடைதல்

எழில்மதுரை மாநகரி னின்றுபய
ணந்தொடங்கி ஏழாம் நாளில்
பொழில்கள்மலர் மணம்பரப்பும் புனிதமிகும்
திருச்செந்தூ ரருகிற் போந்த
விழுமியர்கோ யிலைநோக்கி மலர்க்கைசிர
மேல்தூக்கி இறைஞ்சி யாங்கே
வழுவில்மன மொழிமேனி யால்வணங்கி
மகிழ்வோடும் நடக்க லானார். 49

வேறு

சந்த னம்மலர் செங்கனி தாங்கியும்
சுந்த ரத்திரு நீறுபன் னீர்கொண்டும்
வந்த னைசெய வந்தன்பர் கூட்டம்சூழ்
செந்தி லம்பதி சேர்ந்தனு டோங்குமே. 50

பொறிபு லன்களை வெல்லப் புரிந்திடும்
நெறியில் நின்று நிலைக்க உதவிடும்
குறியை யெய்திக்கொற் றம்பெற உய்த்திடும்
அறிவ ருள்கதிர் வேலன் அமர்செந்தூர். 51

ஆசி நல்கி யடியரை யோம்பிடும்
வாசி நல்கி வளம்பெற வாழ்த்திடும்
தேசி னோடு திகழ அருள் செயும்
மாசில் மாமணி வேலன் வதி செந்தூர். 52

கந்தர் சஷ்டி கவசம்சொ லின்னொலி
சந்த மார்நற் றிருப்புகழ் சாற்றொலி
சுந்த ரத்தமிழ்ச் சொன்மலர் சூட்டொலி
செந்தி லம்பதி யெங்கும் திகழுமால். 53

வேதம் அந்தணர் வீடுதொ றும்சுர
நாதம் மங்கல நன்மனை கள்தொறும்
சூதம் வாழை வருக்கைசோ லைதொறும்
போதம் தக்கோர் புனிதம னம்தொறும். 54

அரஹ ராவென ஆர்த்துக்கூத் தாடுவார்
சுரர்ச காய எனமலர் தூவுவார்
இரணி யகர்ப்ப னைச்சிறை வைத்துப்பின்
பிரண வப்பொருள் பேசுபி ரான்என்பார். 55

ஞானம் ஆல்நிழல் நால்வருக் கோதிய
ஞான மூர்த்திநன் னஞ்சுண்ட கண்டர்க்கே
ஞான தேசிக னாகிப் பொருளருள்
ஞான வேலனென் றெங்கும் நவிலுவார். 56

வேறு

அலைநாடும் அவனியுளோர்க் கருள்ஞான
நெறிநல்கி அருளாற் பேண
அலையாத மனமோடு தவம்நாடி
அருள்நாடி ஏகும் அண்ணல்
அலைமாதும் கலைமாதும் மலைமாதும்
அளவில்மகிழ் வெய்திப் போற்ற
அலையாழி யோமென்ன அறுமுகனைப்
பணிதிருச்சீ ரலைவாய் சேர்ந்தார். 57

முன்னொருகா லிவண்போந்த முழுஞானச்
செல்வருற்று ரென்ன வானில்
மன்னுயர்கோ புரத்திலுறை புட்களொலி
காட்டிவர வேற்புக் கூறப்
பொன்னெடுங்கோ யிலைநோக்கிப் போற்றலைக்கை
நீட்டியருட் போத மூர்த்தி
நன்னயத்தாண் மலர்தொட்டுக் கடல்போற்ற
நற்கடல்நீ ராடி னரால். 58

நாழிக்கிணற் றினைநாடி யேகிநன்னீ
ரினிலாடி ஞான வேந்தர்
கோழியமர் கொடியுயர்த்த குமரன்திருக்
கோயிலின்மேல் திசையிற் சென்றே
ஆழியென நிறைகருணை யறுமுகன்கோ
யிலைநோக்கி யமர்ந்தார்; வானிற்
சூழ்முகில்கள் சிறுதுளிகள் தூவினநன்
னிட்டையினில் தூயோ ராழ்ந்தார். 59

இருமூன்று நாளங்கண் இருந்திடலும்
எழில்வேலோன் இவர்முன் போந்தே
இருமூன்று கனற்பொறியாய் ஈசன்நுதல்
விழிகளினின் றினிது தோன்றிப்
பெருமூன்று சூரர்களை வென்றுசுரர்
பிடிவள்ளி மணம்கொண் டுள்ள
அருள்ஞான வரலாற்றுக் காட்சிகள்காட்
டிடஅண்ணல் அருளே யானார். 60

வேலவன்றன் வரலாற்றுக் காட்சியரு
ளாற்கண்டு விழிநீர் பாய்ச்சிச்
சாலமகிழ் வெய்தினராய்த் தண்ணருளின்
திறம்போற்றித் தவமே நாடி
மேலும்நடந் திடக்கருதி வேலவன்பால்
விடைகொண்டு பயணம் கொண்டார்
நீலநெடுந் திரைக்கையைக் கூப்பிவழி
யனுப்பியது நெடிய ஆழி. 61

செந்தில் விட்டுச் செல்லல்

தவம்நாடிச் செலும்அண்ணல் வழியிலுள்ள
சிலஊரில் தங்கிச் செல்வார்
பவம்நீங்கப் பரனருளால் உபதேசம்
பலஇவர்க்கு நனிகி டைக்கும்
அவம்நீக்கி அருள்எய்தற் கானஉப
தேசங்கள் ஆங்காங் குள்ள
சிவனடியர் மாலடியர் முருகனடி
யவர்க்கோதிச் செல்வார் மேலும். 62

நன்றினிய அருட்பாடல் களைப்பாடி
அருள்ஞான உரைகள் கூறிக்
குன்றைநிகர் குணமணியாய்க் கோதிலருள்
திருமணியாய்ச் செல்வார் ஞான
மன்றுள்நட மிடுபூர்ண கணபதியின்
மலர்த்தாளை உளம்கொண் டோராய்க்
குன்றலிலாப் பெருந்தவத்தில் நாட்டமுடன்
குவலயத்தில் நடந்தார் அண்ணல். 63

ஒரூரில் ஓரிரவில் படுத்திருக்கை
    யினில்ஒருவர் வந்தெழுப்பி
ஏரூர்செஞ் சொற்களினால் 'தூக்கம்வரு
    கிறதோ?"என்(று) அருளாற் கேட்டார்:
சீரூர்அச் சொல்லண்ணல் செவிபுகவும்
    திடுக்கிட்டங் கெழுந்தமர்ந்தார்
பாரூர்மாந் தரைப்போலப் படுக்கவிழைந்
    திடல்தவறென் றுளத்துட் கொண்டார். 64

ஒடுக்கமிகு புலனோடும் ஒருமைமிகு
    மனமோடும் உயர்வனைத்தும்
கொடுக்குமொப்பில் பெருந்தவத்தில் கருவிகர
    ணங்கள்நனி கூடி எல்லா
இடுக்கணையும் அகற்றுமிறை யிணையடியில்
    ஒன்றஎண்ணி யிருக்கும் போதில்
*படுக்கையெதற் கெனமனத்தை விளித்தினிதொ
    ரருட்பாடல் பாட லானார். 65

†நித்திரைசெய் தால்சத்ரு வந்துன்னை
    நிமிஷமதிற் குடிகெ டுக்கும்
அத்தன்திரு வடியையனு தினம்நினைந்தல்
    லும்பகலும் அன்பாய்ப் போற்றி
பத்திபுரிந் தேபாவத் தைக்களைந்து
    பரமபதம் அடைதற் குள்ள
உத்தமநல் வழிநுழைவாய் நித்திரைசெய்
    யேலென்ன உணர்த்தி நின்றார். 66

இத்தகுநல் லுபதேசம் புரிந்திருளார்
    நித்திரையை இகந்து நீக்கிச்
சுத்தசத்வ நிலையெய்திச் சூக்குமத்துட்
    சூக்குமமாய்த் துலங்கும் மேலாம்
அத்தனிவ ணுருகுவந்தும் பார்த்திலமே
    யென்றகத்தில் அலக்க ணுற்றுச்
சித்தமுத லாம்கரணங் கட்கெட்டாத்
    திருமணியைத் துதிக்க லானார் 67

---

*படுக்கை யேதுக்கு—ஆண்டவர் அருட்பாடல்.
†நித்திரை செய்யாதே—ஆண்டவர் அருட்பாடல்.

*திருவுருவே மறைக்கனியே உளக்கனியே
தெள்ளமுதே தேனே பாகே
மருவிமறை காட்டஉயர் நெறிபூட்ட
மணிநாதம் விந்து கூட
குருவாய்வந் தாள்கோல மேமூல
மேகுறைநீர்த் தொண்தா ளீவாய்
இருவினைப்பற் றறுத்தேக மாயின்ப
வீடடைவ தெந்த நாளோ? 68

எப்பொழுதும் எனைப்பிரியா தகம்புறமும்
கலந்தொன்றி இனிதே பேணும்
ஒப்பரிய பரம்பொருளே உயர்வருளும்
பெரும்பொருளே உணர்வே யாகி
நற்பெரிய அருளாளர் உளத்தொன்றி
நலம்பலவும் நல்கும் கோவே
இப்பொழுதிங் கெனையெழுப்பி நிட்டையரு
ளுன்கருணை யென்னே என்றார். 69

பலவாறுத் துதித்தண்ணல் நிட்டைபுரிந்(து)
அங்கிருந்து பயண மானார்
செலும் வழியில் ஓரூரில் அரசமரத்
தடியினிற்கை சிதைந் திருந்த
வலம்புரி விநாயகரைக் கண்டண்ணல்
வண்கரத்தால் தொடலும் எல்லாப்
பலனும் அருள் கணபதிகை முளைத்தெழிலார்
பாங்கோடு தோன்றிற் றன்றே. 70

அருகிலுள குளத்தினிலே குளித்தபெண்கள்
அண்ணல் புரிஅதிச யம்கண்
டுருகிவியப் போடருகி லுறக்கண்டிஃ
தொப்பில்தவ நாட்டத் திற்குப்
பெருகுமிடை யூறுகும் என்றண்ணல்
பேரிதயத் தெண்ணி யங்கே
ஒருவருக்கும் சொல்லாமல் வழிநாடி
ஒருநொடியிற் பயண மானார். 71

*என்னைத் தழுவி வந்து எனையாண்டாய்—ஆண்டவர் அருட்பாடல்.

பிறிதொருநாள் ஒரூரில் ஒருவீட்டுப்
பெருந்திண்ணை யினிலுட் கார்ந்தே
அறநெறியும் நல்லுளமும் உடையவ்வீட்
டாச்சியிடம் தண்ணீர் கேட்டார்
சிறிதுசா தம்கரைத்துத் திகழ்மோர்சேர்த்
தாச்சியம்மை செம்மற் கீய
நெறிபிறழாச் செம்மலதை நிறைமகிழ்வோ
டருந்திமிச்சம் சிறிதே வைத்தார். 72

ஆச்சியப்பாத் திரமுயுள்வைத் தவசரவே
லைக்காக வெளியே சென்றார்
ஆச்சியம்மை யின்கணவர் வெளிச்சென்றோர்
உள்வந்தங் கதனை யுண்டார்
மேற்செறிந்த பாண்டுநோய் அவரைவிட்டு
மிகவிரைவில் நீங்கி யோட
ஆச்சியம்மை யிலம்சேர்ந்து கணவர்திரு
மேனிகண்டாச் சரிய முற்றார். 73

நோயகன்று மேனியெழி லோடிலங்கல்
கண்டாச்சி நுவல லுற்றார்
நோயகன்ற தறிந்துகண வருமகிழ்ந்து
நடந்ததனை நுவன்றார்; அண்ணல்
ஏயஇச்சொற் கேட்டினியிங் கிருப்பின்தவத்
திற்கிடையூ றென்றே எண்ணித்
தூயதவ நாட்டமுடன் எழுந்துவிரை
வினில்நடந்தார் சுரர்வி யப்ப. 74

புகழணுவும் விரும்பாமல் பொருளிச்சை
யில்லாமல் போத மூர்த்தி
திகழ்மேனி யின்சுகத்தைச் சிறிதேனும்
நினையாமல் தவத்தை நாடி
மிகவிரைந்து நடந்திடுவார் பசிதாகங்
களைக்கருதார் விமலன் பாதம்
அகமருவி வழிகாட்ட அருளுந்த
அன்புருவாய்ச் செல்ல லானார். 75

வேறு

செல்லும்நல் வழியில் நெல்லை
செல்கையிற் சிலர்கண் டண்ணல்
நல்லரு ளொளியார் மேனி
நோக்கிமெய்ஞ் ஞானி யென்றே
சொல்லரு மகிழ்வி னோடு
வணங்கவும் தூய சொல்லால்
தொல்லைவெம் பிறவி தீர்க்கும்
வழியினைச் சொல்லிச் சென்றார். 76

கல்லிடைக் குறிச்சி யம்பா
சமுத்திரம் கடந்து யாரும்
வெல்லரும் புலனோ ரைந்தும்
வென்றொளிர் ஞான வீரர்
பல்லுயிர் களும்நன் றுய்யப்
பண்புசால் நெறியை நல்கச்
சொல்லரும் தவமேற் கொள்ளும்
துணிவொடு நடந்து செல்வார். 77

வழியினி லிந்த ஞான
வள்ளலின் மாசில் தூய
எழில்முகம் தவத்தில் நாட்டம்
இவைகண்டோர் வணங்கி நின்றால்
மொழிசில கூறித் தெய்வ
நெறிபயில் முறையைச் சாற்றிச்
செழுமைகொள் தவத்தை நாடிச்
சென்றுதென் காசி சேர்ந்தார். 78

வேறு

கனிவு சாலன்பி னோடும்தென் காசியில்
புனிதர் அங்காடிப் புண்ணியர் கிண்ணத்தில்
இனிய பால்கொடுத் தேத்தி யுபசரித்
தினிய சொற்க ளியம்பி யனுப்பினார். 79

மாத வத்தினை நாடும் மனத்தினர்க்
கேத மில்தவம் ஏற்கத் தகும்தலம்
ஓது சீர்பல ஓங்குகுற் றாலமென்
றுதி நாதன் அகத்துள் ளுணர்த்தினன். 80

சான்றவர்கள் புரிந்த தவக்கனல்
ஆன்ற சீர்ப்பொதி கைக்கண் திகழ்வதால்
தான்றனதறத் தங்கி யவண்தவத்
தூன்று சிந்தையர்க் கேயஃதுதவுமால். 81

ஒப்பு யர்வற் ருெளிருங்குற் ருலத்திற்
கெப்ப டிச்செல்வ தென்று வினவியே
செப்ப ருந்தவ வேட்கை திருநெறிக்
குய்ப்ப அண்ணல் உவந்து நடந்தனர். 82

திருக்குற்ருல வளம்

வான ரங்கனி மந்திக்குத் தந்திட
கான வர்களை வான்முகில் தொட்டிட
தேன ருவிவா னின்றுவ ழிந்திடக்
கூனி ளம்பிறை சூடுங்குற் ருலமே. 83

சங்கை யேந்தரி சங்கர னென்று சொல்
சங்கை கொண்டலை யேலெனச் சாற்றிடும்
கங்கை சூடும் கடவுளைக் காட்டிடும்
கங்கை சூடும் மலைகொள் குற்ருலமே. 84

வான ரம்பயில் கோட்டின் அருவியில்
வான ரம்பையர் வந்துநீ ராடுவார்
வான ரம்பையின் வண்கனி யைக்கொடே
வான ரம்பயி லும்குற்ரு லத்தினே. 85

கோடு தோறும் குலாவும் முகிலினம்
கோடு தோறும் குலாவும் கனிவகை
கோடு டைக்குஞ்ச ரங்கள் குலாவிடும்
கோடு பூமணி கொண்டு நதிசெலும். 86

குறவர் ஆனைக்கொம் பால்தினை குத்திட
நறவுண் வண்டுகள் நன்றிசை கூட்டிட
கறவைப் பாலுண்டு கன்றுகள் துள்ளிட
இறைவன் வாழும்குற் ருலம் இலங்குமே. 87

*கோட ரங்குல வும்குரு விச்குழாம்
†கோட ரங்குல வும்குயில் கூவிடும்
ஆட ரங்கில் அழகியர் ஆடுவார்
ஆட ரங்கில் அரன்நட மாடுவான். 88

வேறு

ஒலில் மெல்லிசை யொடுகுயில் பாடும்
ஒடுங்கி யோகியர் உளம்அருள் நாடும்
பாவில் சூழ்ந்திடும் பக்தர்கள் புந்தி
பலவைச் சூழ்ந்திடும் பல்பெரு மந்தி
காவில் நாள்தோறும் கடிமண மோங்கும்
கவின்ம னைதொறும் கடிமண மோங்கும்
கோவில் நன்மணி கூட்டிடும் நாதம்
குறும்ப லாநிதம் கூட்டிடும் போதம். 89

அந்த ணர்பலர் ஓதுவர் வேதம்
அவர்கட் கன்பரீ வார்நவ நீதம்
சந்த மாய்ப்பலர் பாடுவர் பாடல்
சலங்கை யார்த்திட ஆடுவர் ஆடல்
சந்த னம்மலர் நன்மணம் வீசும்
தக்க வர்கள்நா சாத்திரம் பேசும்
மந்த மாருதம் மேவுமெங் கெங்கும்
வண்க லைஞர் மனத்தருள் தங்கும். 90

திருக்குற்ருலச் சிறப்பு

திருஞான சம்பந்தர் திருநாவுக்
கரசர்திரு வாத வூரர்
அருஞானத் தமிழ்பாடி அருள்வளர்த்த
திருத்தலமாய் அயன்மால் ஈசன்
உருவாகி இறைவனெழுந் தருள்தலமாய்ச்
சித்ரசபை உடைய தாகித்
தருவான குறும்பலா குற்ருலம்
சண்பகா டவியோ டோங்கும். 91

*கோடரம்—மரப்பொந்து. †கோடரம்—மரக்கொம்பு.

மலைவளமும் நீர்வளமும் நிலவளமும்
பலவளமும் வயங்கத் தோன்றி
இலகுதனைக் கண்டவர்தம் கண்ணிணையும்
கருத்தினையும் ஈர்க்கும் வண்ணம்
நிலவுமெழி லுடைத்தாகிப் பிணிகளெலாம்
நீக்கியருள் சிறப்பு டைத்தாய்ப்
பலபுலவர் பாடல்பெற்றுப் பாங்கொடுகுற்
றாலமெனும் பதிவி ளங்கும். 92

செண்பகத்த டாகம்சிவ மதுகங்கை
வட வருவி சித்ரா தீர்த்தம்
பண்பருளப் பொங்கிடுமா கடலென்னப்
பஞ்சவிதத் தீர்த்தத் தாலே
எண்பெருகி வருமக்கள் பாவமெலாம்
கழுநீராய் ஏகப் பண்ணி
வண்பெருந்த வப்பெரியோ ரோடெழிலி
னுேடுபொலி வதுகுற் றாலம் 93

நதிமூன்றில் மாநகரம் செண்பகா
ரண்யபுரம் ஞானப் பாக்கம்
முதுகங்கை வந்தபுரம் வேடன்வலம்
செய்தபுரம் முத்தி வேலி
மதுவுண்டான் உயிர்மீட்ட புரம்யானை
போற்றுபுரம் வசந்தப் பேரூர்
பிதுர்கண்டம் தீர்த்தபுரம் வேதசக்தி
பீடபுரம் குறும்ப லாவூர். 94

சிவத்ரோகம் தீர்த்தபுரம் முனிக்குருகும்
பேரூர்நற் றேவ கூடம்
பவர்க்கமீட் டருளுபுரம் திருநகரம்
நன்னகரம் பக்தர் போற்றும்
சிவமுகுந்த பிரமபுரம் திரிகூட
புரம்புடார்ச் சுனம்குற் றாலம்
இவைமுதலாம் பலசிறந்த திருப்பெயர்கள்
புனைந்தினிதே இலகு மவ்வூர். 95



சுவாமிகள் திருக்குற்றாலத்தில் சண்பகாதேவி அருகில் பன்னிரண்டு அருந்தவம் ஆற்றிய
திருக்குகைகளுள் முதற்குகை

மறைவடிவ மாயொளிர் குறும்பலா
மரத்தடியில் வானோர் போற்ற
இறைவிகுழல் வாய்மொழியொ டிறைவனினி
தெழுந்தருளி உயிர்கட் கெல்லாம்
குறைதவிர்த்து நிறைவருள்வன்; இவனமரும்
கோயிலருட் சங்கக் கோயில்;
குறுமுனியும் வாசுகியும் சித்ரசபை
யினில்நடனக் கோலம் காண்பார். 96

பிறந்தார்க்குத் திருவாரூர் நினைந்தாருக்
கருணகிரி பெருகு மன்போ
டிறந்தார்க்குக் காசிதரி சித்தோர்க்குத்
தில்லைமுத்தி யீயு மென்பார்;
பிறந்தார்க்கும் கண்டார்க்கும் நினைந்தார்க்கும்
புகழினிது பேசி னோர்க்கும்
இறந்தார்க்கும் இனிபிறப்பில் இனியகதி
யீந்தருளும் திருக்குற் றாலம். 97

ஆண்டவர் குற்றாலம் அடைதல்

உயிர்களெல் லாமும் உண்மை
உணர்ந்திகம் பரமும் நல்கும்
செயிரறு நெறியைப் பேணிச்
சிறந்திடத் திருவ ருட்செம்
பயிர்வளர் வுறநற் காலம்
படர்ந்ததென் றருள்முன் னிர்க்க
அயர்விலா உள்ளத் தண்ணல்
அடைந்தனர் திருக்குற் றாலம். 98

வேறு

திருக்குற் றாலத் திருத்தலத்தே யண்ணல்
உருக்கும் நல்லுளத் தோடும் அடைந்தனர்
பெருக்கும் நல்விழி நீரொடும் பின்னரும்
கருக்கொ ளாநற் கருத்தொடும் மேவினர். 99



சுவாமிகள் திருக்குற்ருலத்தில் சணபகாதேவி அருகில் பன்னீராண்டு அருந்தவம் ஆற்றிய திருக்குகைகளுள் முதற்குகை

மறைவடிவ மாயொளிர் குறும்பலா
மரத்தடியில் வானோர் போற்ற
இறைவிகுழல் வாய்மொழியொ டிறைவனினி
தெழுந்தருளி உயிர்கட் கெல்லாம்
குறைதவிர்த்து நிறைவருள்வன்; இவனமரும்
கோயிலருட் சங்கக் கோயில்;
குறுமுனியும் வாசுகியும் சித்ரசபை
யினில்நடனக் கோலம் காண்பார். 96

பிறந்தார்க்குத் திருவாரூர் நினைந்தாருக்
கருணகிரி பெருகு மன்போ
டிறந்தார்க்குக் காசிதரி சித்தோர்க்குத்
தில்லைமுத்தி யீயு மென்பார்;
பிறந்தார்க்கும் கண்டார்க்கும் நினைந்தார்க்கும்
புகழினிது பேசி னோர்க்கும்
இறந்தார்க்கும் இனிபிறப்பில் இனியகதி
யீந்தருளும் திருக்குற் றாலம். 97

ஆண்டவர் குற்றாலம் அடைதல்

உயிர்களெல் லாமும் உண்மை
உணர்ந்திகம் பரமும் நல்கும்
செயிரறு நெறியைப் பேணிச்
சிறந்திடத் திருவ ருட்செம்
பயிர்வளர் வுறநற் காலம்
படர்ந்ததென் றருள்முன் னீர்க்க
அயர்விலா உள்ளத் தண்ணல்
அடைந்தனர் திருக்குற் றாலம். 98

வேறு

திருக்குற் றாலத் திருத்தலத்தே யண்ணல்
உருக்கும் நல்லுளத் தோடும் அடைந்தனர்
பெருக்கும் நல்விழி நீரொடும் பின்னரும்
கருக்கொ ளாநற் கருத்தொடும் மேவினார். 99

வேறு

எழில்மிகுமம் மலையினையும் இயற்கையனை
எழிலினையும் ஓமென் றோதி
இழியுமெழி லருவியையும் இறைவனருட்
கோயிலையும் இனிதே கண்டு
விழிகளுமவ் வருவியைப்போல் மழைபொழிய
விம்மி விம்மி யழுவா ராகி
ஒழிவறுபே ருண்மையன்பின் உருவமென
நின்றண்ணல் உருக லானார். 100

மலையின்மிசை படர்ந்தபசுங் கொடிகளெலாம்
அண்ணலார் வரவு கண்டு
தலையசைத்துக் கைகாட்டி வரவேற்றல்
போலநுனித் தலைய சைப்ப
நிலைதிரியா உளமுடையோய் வருகவென
நேயமுடன் குயில்கள் கூவ
உலைவிலெழில் காட்டிமயில் நடனமிட
உயர்வானம் துளிகள் தூவ 101

உருகுமுளம் உடையவராய் உயர்மலையின்
அருளெழில்கண் டுளம்பூ ரித்துப்
பெருகுதிரு வருள்பெறுதற் குரியதவம்
பேணுமிடம் இதுவே யென்றுள்
ஒருமைமிகு நிட்டையிலங் கோரிடத்தில்
அமர, அவர்க் கருள நாடி
அருளுருவத் தோடுசண்ப காதேவி
அவர்முனர்வந் தருள லானார். 102

"சேயேநீ சிறிதளவும் கவலையின்றி
யென்னருகிற் சேர்க" என்றார்;
மாயாநற் புகழ்மதுரை மாநகரில்
மீனாட்சி வடிவில் வந்த
தாயாரே இங்குநமை யழைக்கின்றார்
தயவொடெனக் கண்ணீர் சிந்த
வாயால்என் னருட்தாயே வருகின்றேன்
என்றுவிழி திறந்தார் அண்ணல். 103

செண்பகா தேவிதிருக் கோயிலுக்குச்
செல்லலாம் வருக என்ன
நண்பனைப்போல் ஒருசாது நன்றழைக்க
அண்ணலார் நற்காந் தத்தால்
பண்புடனீர்க் கப்பெற்ற இரும்பினைப்போல்
பரிந்தவர்பின் மகிழ்ந்து சென்றார்
ஒண்பொலிவி னோடொருபாம் பிவர்களின்மு
னூர்ந்தினிது சென்ற தம்மா. 104

அருள்நாட்டம் மிகுந்தவராய் அண்ணலுயர்
அன்பின்வடி வாகச் சென்றார்
தெருள்நாடு யோகியர்கள் சித்தர்பலர்
செய்தவத்தில் திகழ்தல் கண்டார்
அருள்ஞான வடிவான அனைசெண்ப
காதேவி ஆல யத்தைத்
தெருள்நாடு மிவரடைய உடன்வந்த
திருவாளர் உருக்க ரந்தார். 105

திருவாளர் திருவுருவம் மறைந்திடலும்
திகைத்துவியப் புற்ற அண்ணல்
வருவார்போல் அடிமையுடன் நடந்துவந்திவ்
விடம்சேர்த்த வள்ள லார்நம்
பரிபூர்ணப் பெருமானே எனஅருளால்
இனிதுணர்ந்து பரவி ஞான
குருநாதா இவ்வேழை குறைதீர்த்த
கோமானே எனக்க சிந்தார். 106

அடிநாயேன் தவம்பேண அருளெய்தி
அற்புதமாம் தூய மார்க்கம்
படிமீதில் நனிபரப்பச் சிறுகல்லில்
பருங்கல்லில் பாதம் வைத்திங்
குடன்போந்த பெருங்கருணை உரைப்பரிதாம்
எனஉள்ள முருகி யண்ணல்
நெடுஞ்சூலம் ஏந்துசண்ப காதேவி
கோயிலின்முன் நின்றா ரன்றே. 107

ஆலயத்தை அடைந்தபொழு தண்ணலுளம்
புளகிக்க அமரர் யாரும்
சாலமகிழ் வொடுமலர்கள் தூவுதல்போல்
தண்துளிகள் வானம் தூவ
ஏலவெண்ணெய் கலந்தஅன்னம் சிறிதுறு
காய்கிண்ணத் தெதிரிருப்பச்
"சீல!இதை அருந்து"கென அருளார்ந்த
குரலொன்றங் கொலித்த தன்றே. 108

கருணைமிகும் அத்தூய குரல்கேட்டு
சண்பகத்தாய் கருணை யென்றே
அருள்நாடி வந்தஅண்ணல் அருளன்னை
யடிபோற்றி அனம ருந்தித்
தெருள்நாடித் தவம்பேணத் தக்கஇட
மெதுவெனநிட் டையில மர்ந்தே
அருள்நாடும் அவர்உளத்தில் ஆனைவந்து
குகைஅருவி யருகே காட்ட, 109

அண்ணல்பரி பூரணனார் அருளுன்னி
ஆனந்த மிகுந்தா ராகிக்
கண்ணருவி பொழியஉடல் புளகிப்பக்
கரம்சிரமேற் கூப்பி ஞானப்
பண்ணவசிற் பரிபூர்ணப் பரம்பொருளே
பரமபத மெவர்க்கு மீய
உண்ணினைந்த நின்கருணை உரைத்திடற்கா
மோஎன்று ளுவந்து நின்றார். 110

பூரணன்தன் ணருள்மயமாய்ப் பொழியருவி
கண்டுவந்து புனிதர் மூழ்கிக்
காரணங்கள் கடந்தமுனோன் கழலடியிற்
கருத்தூன்றி த்யானத் தாழ்ந்தார்;
சீரணவும் அவரருகு புலியொன்று
வந்துவலம் செய்து செல்லப்
பூரணன்றன் ணருள்பூரித் தண்ணல்மகிழ்
பொங்கிடக்கண் விழித்தா ரன்றே. 111

ஆருமறி யாதவண்ணம் தனியிடத்தில்
அமர்ந்துதவம் ஆற்ற எண்ணும்
சீருடைநம் அண்ணலார் திண்ணியநல்
லாணையருள் செய்தவா றிங்(கு)
ஏருடைய குகையுளதோ எனநோக்க
எதிருளமண் டபத்தின் பக்கல்
சேருமொரு குகைதோன்ற அதுதானே
எனஅருகில் சென்று கண்டார். 112

திருக்குகை காணல்

அருட்குகையை அடியரைக்காத் தானந்த
வாழ்வருளி அழிவி லாநற்
பொருட்குகையை ஒளிமயமாய் அருள்மயமாய்
உட்காணும் புனிதம் நல்கி
மருட்குகையுட் கிடந்தேங்கும் மகிதலத்தின்
உயிர்த்தொகைக்கு வாழ்வை நல்கும்
தெருட்குகையாம் திருக்குகையை அண்ணலவண்
கண்டுமகிழ் சிறந்தா ரன்றே. 113

மகிழ்வுமிக உற்றவராய் உள்நுழைந்து
பார்த்திடற்கு வள்ளல் செல்லக்
குகையினுளே இருள்மண்டிக் கிடத்தல்கண்டு
குருவேஎன் றலற லானார்
தகவுடன்ஐங் கரக்கடவுள் தனதுவலத்
தந்தத்தரு ளொளியை வீசக்
குகைமுழுதும் பூர்ணவொளி மயமாக
அண்ணலுளம் குளிர்ந்து நின்றார். 114

ஒளிவந்த திசைநோக்கி உயரன்பி
னால்வணங்கி உளம்பூ ரித்தெற்
கெளிவந்திங் கருள்புரிந்த திறமென்னே
எனப்பலவாய்ப் போற்றி செய்து
மிளிர்கின்ற அவ்வொளியின் துணைகொண்டு
குகைதூய்மை மேவப் பண்ணி
அளிமிஞ்சு முளத்தோடும் அண்ணலருந்
தவம்நாடி அமர்ந்தா ரங்கண். 115

## அருந்தவத் தாழ்தல்

எவ்வுயிரும் இன்னலின்றி இன்பமெலாம்
எய்தியுய்யப் பிறவி யென்னும்
பவ்வமதில் மூழ்காமற் பரமபத
முத்தியெய்தப் பார்மேல் யாரும்
செவ்வையுற எளிதினிற்கைப் பிடித்தொழுகும்
திருநெறியிங் குணர்த்தல் வேண்டும்
அவ்வொருநற் றிருநெறியை அவனிமிசை
பரப்பவுயர் ஆற்றல் வேண்டும்; 116

எம்மதத்தை எவ்வினத்தை எந்நாட்டை
எம்மொழியைச் சார்ந்தோ ரேனும்
செம்மையுறப் பேணியுய்யும் வகையிலவர்க்
கினிதெடுத்துச் செப்பல் வேண்டும்
இம்மைநலம் மறுமைநலம் எல்லாமும்
எவருமெய்திச் சுகித்தல் வேண்டும்
மும்மைமலம் முறித்தீறி லாதபர
முத்திநலம் எய்தல் வேண்டும்; 117

இவ்வண்ணம் இவ்வுலகுக் கினிதுதவி
இன்துணையாய் இருக்கும் வண்ணம்
மெய்வண்ணத் தவம்முடித்து மேன்மையளித்
தாண்டருள்வாய் என்று வேண்டி
செவ்வண்ண மலர்க்கரங்கள் சிரமிசையஞ்
சலிகூப்பித் தேவ தேவா!
மைவண்ணத் தங்கயற்கண் ணம்மையருள்
பரிபூர்ண வள்ளால்! என்றார். 118

முன்னவன்றன் அருள்போற்றி அண்ணலார்
விழியிரண்டும் மூட லானார்;
முன்னமே எட்டாவ தாண்டுமுதல்
நிட்டையினில் மூழ்கி மூழ்கி
நன்னயமாய்ப் பழகியவ ராதலினால்
மனம்குவிய, நன்று நிட்டை
உன்னதமாய்க் கூடியதங் கொருபத்து
நாளிலுயர் நிலையெய் திட்டார். 119

இந்தவகை முறையாக நிட்டையினைப்
    போற்றியண்ணல் இனிதி ருக்க
ஐந்துவகைப் பொறிபுலனும் உள்ளொடுங்கி
    அகக்கரணங் களுமொ டுங்கி
முந்துறுமூ லாதாரக் கனலெழும்பி
    மூவிரண்டா தார மேறிச்
சந்திரமண் டலம்கடந்து தாள்திறந்து
    மேனிலையிற் சார்ந்த தம்மா. 120

உடலிலியங் கிடும்சக்தி உள்ளத்துள்
    உள்ளபர ப்ரம்ம வத்து
வுடன்கூடும் பொழுதினிலா ருதார
    மூலத்தில் உயிரும் தன்னை
அடக்கிக்கொண் டங்கிருந்து மேல்நோக்கிச்
    செலத்தொடங்க ஆப்த ளுகி
உடையவனும் பரிபூர்ண விக்னேசன்
    ஓங்காரன் உதவு கின்ருன். 121

ஆயிரநல் லிதழ்மலரில் அமர்ந்தொளிரும்
    பரம்பொருளின் அருளே யாகித்
தூயதிரு வமுதினிது பெருகியருள்
    தோன்றலார் மேனி தன்னில்
மேயஎணில் அணுக்களுளும் மேவிடவும்
    பசிதாகம் மேவா தாக
நாயகன்றன் சேவடியில் நன்றிணைந்து
    ஞானசுகம் துய்க்க லானுர். 122

நானென்னும் அகந்தையினை அடியோடு
    நீக்கியருள் ஞானம் மேவி
மோனவடி வேயாகி யண்ணலார்
    முழுத்தவத்தில் மூழ்கி நின்ருர்
வானம்வளி யனல்தண்ணீர் மண்கதிரோன்
    மதிவிண்மீ னினங்கள் வாழ்த்த
வானவரும் முனிவரரும் ஏனையுல
    குயிர்த்தொகையும் வாழ்த்த நன்றே. 123

சித்தமகிழ் வொடுதேவர் திரள்திரளாய்
வந்துதுதி செய்து செல்வார்
பத்தியுட னேதேவப் பெண்கள்வந்து
பார்த்துத்துதி பாடிச் செல்வார்
சித்தர்கள்பற் பலர்வந்து சிறந்ததவம்
கண்டாசி செப்பிச் செல்வார்
ஒத்தஉளத் தொடுமானும் புலியும்சிறு
பகையுமின்றி உலவி நிற்கும். 124

ஓங்கார ஒலியினொடு மலையினின்றும்
இழியருவி ஒழுக்கம் காட்ட
நீங்காது முகிலினங்கள் துளிதூவி
ஓங்கார நிலையே காட்ட
பாங்காக வருதென்றல் ஓமென்றே
எங்கெங்கும் படர்ந்து வீச
ரீங்காரம் செயும்வண்டும் ஓங்கார
நல்லிசையே இசைக்கும் அம்மா. 125

கதிர்வெப்பம் தாக்கிடுமோ எனமுகில்கள்
கவின்குடைபோல் கவிந்து நிற்கும்
மதியருளும் அமுதவொளி வள்ளல்தவ
மேனியினை வணங்கி நிற்கும்
அதிதீவி ரத்தொடண்ணல் ஆற்றுதவம்
கண்டுவிண்மீன் கூட்டம் அஞ்சும்
கதிகாட்ட வந்தசெம்மல் களைப்பெய்தா
வணம்தென்றல் காற்று வீசும். 126

தன்பெருமை புவிக்குணர்த்தும் சாமியுளார்
எனஅருவி சாற்றி நிற்கும்
பொன்பொலிதா துகுத்துமலர்த் தருக்களண்ணல்
பொலிவுமிகு கென்று வாழ்த்தும்
இன்பமெல்லா உயிர்க்குமுற நோற்கின்ரு
ரெனப்பறவை யினங்கள் போற்றும்
அன்பொளியும் அறவொளியும் அருளொளியும்
கலந்தண்ணற் கமைதி நல்கும், 127

நம்செல்வத் திருமகன்மெய்ஞ் ஞானநிலை
    யெய்தவந்தா னென்று நல்ல
செஞ்சொல்லின் சாரமெலாம் சேர்கஇவற்
    கெனத் தமிழ்த்தாய் செப்ப லுற்றாள்;
அஞ்சற்க அருள்நிறைவு பெறுவாயென்
    றகத்தியனார் ஆசி தந்தார்;
விஞ்சியெழு சந்தனநன் மணம்அண்ணல்
    மேனியின்கண் மேவிற் றுமால். 128

தூயஒலி யாம்ப்ரணவம் அண்ணலகம்
    புறம்மேவிச் சூழ்ந்து பேணும்
தூயஒளி யாம்ஞானம் அண்ணலகம்
    புறம்மேவித் தூய்மை கூட்டும்
தூயதவ மாம்செல்வம் அண்ணலகம்
    புறம்மேவிச் சோதி யாக்கும்
தூயஅரு ளாம்அமுதம் அண்ணலகம்
    புறம்மேவிச் சோர்வு நீக்கும். 129

கல்லார்க்கும் கற்றவர்க்கும் கருணையமு
    தருளஅண்ணல் தவம்செய் கின்றார்
நல்லார்க்கும் பொல்லார்க்கும் ஞானநெறி
    யருளஅண்ணல் தவம்செய் கின்றார்
சொல்லாரும் அருள்ஞான மறைநல்கித்
    தூய்மைசெயத் தவம்செய் கின்றார்
எல்லாரும் உவந்தாசி யருள்மினென
    எவ்வுலகும் இனிது சாற்றும். 130

இருமூன்று திங்களவண் இவ்வாறு
    சென்றிடவும் இனிதோ ரம்மை
ஒருநாளில் அவண்தோன்றி ஒப்பிலண்ணல்
    உருவினைக்கண் டுருகி நின்று
பெருகுதவம் பேணியென்பும் தோலுமுடன்
    பிறங்கினையென் றிரக்கம் கொண்டாள்
அருவிநன்னீர் கொணர்ந்தண்ணல் பருகிடுதற்
    கினிதூட்டி யருள்செய் திட்டாள். 131

ஆக செய்யுள் 1137

## 7. அன்னையை அடக்கஞ்செய் படலம்

### விநாயகர் துதி

**வே**த மெண்ணில போற்றும் விமலனை
பூதமாகிப் பொறிபுலன் யாவுமாய்
போதம்நாடடி யார்க்கருள் பூர்ணனை
ஏதம் தீர்இப மாமுகற் போற்றுவாம். 1

### குருநாதர் துதி

மனவடக்கம் நாவடக்கம் புலனடக்கம்
மிகப்பேணி மன்னும் ஆன்ம
இனமனைத்தும் எங்கும்நிறை இறையுளடக்
கம்பெறுதற் கினிது ழைத்துத்
தனையடக்க மாய்க்காத்து நெறிவிளக்கி
நிலமகளாம் தாய்வ யிற்றில்
அன்னையடக் கம்செய்தவ் வாறுசெயப்
பணித்தகுரு அருள்பெற் றுய்வாம். 2

---

உலகநினைப் புடலநினைப் பேதுமின்றி
உயர்தவத்தில் அவரி ருக்க
இலகுமிரு மூன்றுமதி மேலும்செல
இறைவர்திரு வருளா லோர்நாள்
உலவுமன்னை யுடம்புநலம் குறைந்திருப்ப
தோர்ந்துவிழி திறக்க லுற்றார்
நிலவுலகில் சேய்தாய்க்குச் செய்யவுள்ள
கடமையினை நினைக்க லுற்றார். 3

வயதுமிகுந் தவரென்றும் நிரம்பமக்கள்
பெற்றெடுத்த வண்தாய் என்றும்
பயந்தபிற மக்கள்உட னிருந்தவரை
நனிபாது காப்பா ரேனும்
நயந்துதம துடற்கூட்டைப் பத்துமதி
சுமந்தீன்று நன்றெ டுத்து
வியந்தணைத்துப் பாலூட்டிப் பாராட்டி
விருப்பமுடன் வளர்த்த தாய்க்கே 4

தமதுகையால் தொண்டுசெய வேண்டுமென்றும்
எண்ணினர்; தாயார் உள்ளம்
நமைநினைந்தங் கேங்கிடுமே அதைத்தவிர்த்தல்
நம்கடமை யன்றோ என்றும்
தமுள்நினைந்தார்; பட்டினத்துச் சாமிகள்தம்
தாயார்க்குச் செய்த தொண்டும்
தமுள்நினைந்தார்; அதுதவறி னோர்க்கருளும்
தவமுமுற்ற என்றுட் கொண்டார் 5

உடையவன்றன் கணக்கிருந்த படியிவ்வா
றண்ணலுளத் துதித்த லோடும்
'உடனேநீ புறப்படுக' எனும்குறிப்பும்
உண்டாகி ஊக்கி நிற்க,
இடம்நேடி முழுப்பயன்பெற் றிடல்வேண்டும்
எனத்துணிந்து வந்த தூய
திடஞானத் தவச்செயலைச் சிறிதுகா
லம்தாழ்த்துச் செய்வோ மென்றே 6

ஒருமுடிவு செய்திட்டார்; மலையைவிடுத்
தூர்செல்ல உளத்துட் கொண்டார்;
பெருமலைக்கு வருமுனவர் உளமிருந்த
பெற்றியும்நல் உடல மைப்பும்
பெருமலைவிட் டூர்செல்லத் தொடங்குகையில்
உளநிலையும் பெரிது நோக்கித்
திருவருளின் மயமாகித் திகழ்ந்திடக்கண்
டுவப்பினெடும் செல்ல லானர். 7

கன்றினுக்குப் பாலூட்டும் பசுவினை, குட்
டிக்கூட்டும் கலைமான் றன்னை,
நன்றுகுஞ்சுக் குணவூட்டும் பறவைகளைக்
கண்டுநம்தாய் நம்மை யிவ்வா
றன்றுபுரந் தினிதுவளர்த் தனரேயென்
றெண்ணிடுவார்;அங்கோர் குட்டி
சென்றுதன்தாய்க் குரங்கையிறு கப்பற்றும்
செயலினையும் இனிது கண்டார். 8

நாமுமன்னைக் குரியபணி இனிதுசெயல்
வேண்டுமென நன்றே உன்னி
ஏமமுற நாமவரொ டடனிருந்தா
றுதலளிப்போம் என்றுட் கொள்வார்;
தாமதமுற் றதுநாடி வந்தபணி
எனநினைப்பார்; தாய்க்குச் சேவை
தாமியற்ற வேண்டியது தம்கடமை
யாகுமென நினைப்பார் மீண்டும். 9

### இருடிநகர் அடைதல்

இவ்வகையி லிறைபணியும் தாய்பணியும்
இதயமிசை மாறி மாறி
ஒவ்வொன்றுய்த் தோன்றிடலும்,உடையவன்றன்
உளத்தின்வணம் உலகில் யாவும்
செவ்வையுற வேநடக்கும் ஆதலினுல்
திருவுளத்தின் குறிப்பை நோக்கி
அவ்வகையில் நடந்திடலே அமைதிதரும்
எனஇருடி நகர்அ டைந்தார். 10

மதுரையிலே பைத்தியமென் னப்பட்டம்
பெற்றுப்பின் மறைந்த அண்ணல்
பொதிகையிலே அருந்தவமோ ராண்டியற்றிப்
புனிதமுடன் பொலிவு மிக்குக்
கதுமெனவந் தெதிர்தோன்றக் கண்ட வர்கள்
அடையாளம் காணு ஞராய்
அதிசயித்துப் பினரறிந்தார்;அகமகிழ்ந்தார்;
அன்னையிடம் அண்ண லுற்றூர். 11

அன்னையருட் சேவடிகள் அன்புடனே
தொழுதிறைஞ்சி 'அம்மா, என்றூர்;
தன்னிகரில் அருட்சேயைத் தாயார்கண்
டுளமகிழ்வு தழைக்கக் கண்ணில்
மன்னியருும் பிடும்துளிகள் இருவரிட
மும்பனிப்ப, மாற்ற மொன்றும்
பன்னமுடி யாதவராய்ப் பத்தினியார்
மாரியம்மை பணிந்து நின்றூர். 12

உற்றாரும் ஊராரும் அண்ணலிரு
தாள்பணிந்தங் குருகி நிற்க
மற்றேதும் பற்றிலராய் எல்லோரும்
வாழ்கஇனி தென்று வாழ்த்திப்
பொற்றாமரைக் கயமார் தென்மதுரைப்
பூரணர்தாள் போற்றி யங்கண்
உற்றோர்க ளனைவருக்கும் திருநீற்றை
ஒண்கரத்தால் அளித்தார் அண்ணல். 13

இருடியர்பட் டிச்சாமி துணையென்ன
எல்லோரும் ஏற்ற ணிந்தார்
பருதியென ஒளிருமண்ணல் அருட்பொலிவைப்
பார்த்துவியப் புறுவா ரானார்
சுருதிமுடி வினில்விளங்கும் சுடர்க்கமல
பதத்திலுளம் தோய்ந்த வாறே
கருதிவந்த செயல்நிகழ்த்தத் தாயருகில்
களிப்பொடண்ணல் அமர்ந்தி ருந்தார். 14

அருமைமக னுக்குப்பித்து பிடித்துவிட்ட
தாம்காணற் கியலா வண்ணம்
ஒருவருக்கும் தெரியாமல் மறைந்துவிட்டா
னும்என்ன உரைக்கக் கேட்டுப்
பெருநிலத்தில் எக்காலம் நம்செல்வப்
பிள்ளையைக்கா ணப்போ கின்றோம்
வருவானோ பார்ப்போமோ என்றெண்ணி
வருத்தமொடே இருந்த தாயார், 15

'வந்துவிட்டார் சாமி'என்ற றிந்தபினர்
எய்தியநன் மகிழ்வை யிங்ஙன்
எந்தமொழி கொண்டெழுத லாகும்?அவர்
பத்தினியார் இன்னும் மற்றோர்
எந்தமுறை யினில்மகிழ்ந்தார் என்பதெலாம்
எடுத்தியம்பற் கெவரா லாகும்?
தொந்தமெலாம் அறுத்தஅண்ணல் அன்னையரு
கமர்ந்துநல்ல உரைகள் சொல்வார். 16

அன்னையார் கொண்ட அவா வேஇப்போ
திங்கிவரை அழைத்த தென்பார்
பன்னியார் தினமுமுற்ற பருவரலே
இவரைவரப் பண்ணிற் றென்பார்
மன்னிடுநம் நல்வினையின் பயனாலே
இவரிங்கு வந்தார் என்பார்
உன்னரிய பெருந்தவத்தால் உடம்பிளைத்த
தொளிபெருகிற் றென்பார் ஊரார். 17

இளைத்ததுமிக் குடம்பென்பார் இவ்வாறே
னிளைத்ததுவோ என்பார் உற்றார்;
விளைத்ததவத் தின்சிறப்பை எவர்க்குமண்ணல்
ஒருசிறிதும் விளம்பா ராஞர்;
திளைத்தஅருட் பெருஞ்சுகத்தை அகத்துன்னித்
திருவருளில் தோய்ந்து நிற்பார்;
வெளிக்கொருமா னிடர்போலத் தோன்றிடினும்
அண்ணல்ஒளி விளக்காய் நின்றார். 18

உறவினரும் ஊரவரும் பலவாறாய்ப்
பலவார்த்தை உரைத்திட் டாலும்
புறஉலகிற் பற்றிலராய் அகநாட்டம்
மிகுந்தவராய்ப் பூர்ணன் பாத
நறுமலரில் ஞானமது வுண்டவண்டு
போலொன்றும் நவிலா ராகி
உறுவதுகண் டுறவினரும் ஊரவரும்
திகைத்திட்டார் வியப்பே யுற்றார். 19

அதிகாலை நீராடி அண்ணலார்
திருவெண்ணீ றணிந்து ளத்தைப்
பதிதாளில் இனிதமைத்து நிட்டைபுரிந்
தருட்பாடல் பாடிப் போற்றிப்
புதிதான மலர்கொணர்ந்து தாயாரின்
பொற்றாளில் நன்னீ ராட்டி
மதுவார்நன் மலர்சூட்டி நற்றீபம்
காட்டிவழி பாடு செய்வார். 20

அன்னையார் வழிபாடு செய்துமுடித்
தவரருகில் அமர்ந்த வண்ணம்
நன்னயமார் வார்த்தைசொலத் தாயாரும்
நனிமகிழ்ந்த வண்ணம் கேட்பார்
பன்னரிய மகிழ்வினுடன் உறவினரும்
ஊரவரும் பழகி னாலும்
மன்னுபற்றில் லாதண்ணல் நடந்துகொண்ட
வகையறிந்து வியக்க லானார். 21

உருக்குமுளத் தோடண்ணல் உடையவனை
நினைந்தொருபால் அமர்ந்தி ருப்பார்
இருக்குமிடம் தேடிவந்து வீட்டார்கள்
அவர்க்குணவை யீவா ரானார்
பெருக்கும்அள வினிற்குடும்பப் பற்றின்றிக்
கவலையின்றிப் பிறங்கும் அன்பால்
கருக்கடிந்துய்ந் திடவிரும்பி வருவார்க்கு
நீறுதந்து கருணை செய்வார். 22

பயற்றம்பருப் பிட்டமைத்த கஞ்சியையே
உணவாகப் பருகி வந்தார்
நயத்தகுநம் அண்ணல்இரு டியர்பட்டிக்
குற்றசெய்தி நன்க றிந்து
வியத்தகுநன் மதுரையிலும் வேறிடத்தும்
உளஅடியார் விரும்பி வந்தே
உயத்தகுநன் முறையில்வணங் கிப்போற்றி
ஒண்திருநீ றேற்றுச் செல்வார். 23

ஒருசிலர்அங் குடன்தங்கி உறுமையம்
தீர்த்துக்கொண் டுளம்க ளிப்பார்
திருமதுரை நகரில்முனர் குறைகளெலாம்
தீர்ந்துய்ந்த வாறு போலப்
பெருகுதுய ருடையவரும் பிணிகள்பல
உடையவரும் பெருமான் பாதம்
உருகுமுளத் தொடும்வணங்கி நீறுபெற்றங்
குவகையுடன் செல்ல லானார். 24

வெளியூரார் வந்துநம்சா மியைவணங்கி
வியன்திருநீ றேற்ற ணிந்து
களிகூர்ந்து குறைதீர்ந்து நலமெய்திச்
செல்வதுகண் டுள்ளூ ராரும்
அளிகூர்ந்து சாமியின்பால் ஓரிருவ
ராய்நாடச் சுற்றுப் பக்கத்
துளமக்கள் பற்றுக்கொண் டுற்றிறைஞ்சி
உறுகுறைதீர்ந் தேக லானார். 25

மதுரைநக ரினில்நடந்த அற்புதங்கள்
போற்பலவாம் மடங்கிற் றாகப்
புதியபல வகையாயும் பெரியவைக
ளாயுமவை பொலிதல் கண்டே
அதிசயமுற் றனர்இருடி நகர்மக்கள்
பெருகியதங் கடியார் கூட்டம்
கதிகூட்ட வந்தஅண்ணல் அனைவருக்கும்
நீறளித்துக் கருணை செய்தார். 26

கூட்டம்மிகப் பெருகிடவும் இடம்காணா
மற்போகக் குடியி ருக்கும்
வீட்டருகில் பிணியுடையார் குறையுடையார்
வரல்போதல் மேவல் தங்கல்
வீட்டின்தின சரிவேலை விவசாயத்
திற்குரிய வேலை யாவும்
வீட்டிலுள்ளார் நன்குசெய இயலாராய்
மிகத்திகைக்கக் கண்டார் அண்ணல். 27

வரும்அடியார் பெருந்திரளைத் தடுக்கஇய
லாதவராய் வருவோ ரெல்லாம்
திருமனையி னருகிலிருக் கச்செய்ய
இயலாராய்ச் சிந்தை செய்தார்
இருடியர்நன் னகரினுக்கு மேற்புறத்தில்
இருக்குமொரு கண்மா ஓரம்
அருள்நினைவொ டேகுகையில் அங்குள்ள
கருங்கலொன்றில் நாட்டம் செல்ல 28

அக்கல்லை உற்றுநோக் கியவண்ணம்
உடையவன்றன் அருட் கணக்கைத்
தக்கபடி உன்னியநம் அண்ணலுக்குச்
சடுதியில்அங் கேதோ தோன்ற
அக்கணத்தி லுடன்வந்த அன்பரைக்கொண்
டதனைநனி புரட்டச் சொன்னார்;
மக்கள்வியப் புறுமாறங் கக்கல்விநா
யகர்உருவாய் வயங்கிற் றம்மா. 29

அப்பொழுதே ஆட்களைக்கொண் டந்தவிநா
யகர்உருவை எடுத்துச் சென்று
செப்பமிகும் அவ்வூரின் கீழ்ப்புறத்தில்
திகழுமொரு புளியந் தோப்பில்
ஒப்பில்கதி ரவனுதிக்கும் திசைநோக்கி
மேற்பாலில் உவந்த மைத்தார்;
செப்பருஞ்சீர்ச் சித்திவிநா யகரெனஅத்
திருமூர்த்திக் கொருபே ரிட்டார். 30

சுற்றிலும்மண் சுவர்அமைத்துப் பருத்திமிலா
ருல்தூய கூரை வேய்ந்து
நற்றளியொன் றினையன்பர் மிகவிரைவில்
அமைத்திடலும் ஞான வள்ளல்
உற்றவண்நன் றமர்ந்தவண்ணம் உறுமக்கள்
பிணிதீர்த்துக் குறைத விர்த்துக்
குற்றமற்ற செந்நெறியில் ஒழுகும்வணம்
நல்லஉரை கூற லானார். 31

ஒவ்வொருநா ளிலும்அந்த மூர்த்திக்குப்
பூசைஒழுங் காய்ந டக்கும்
ஒவ்வொருவெள் ளியிலும்சிறப் பார்பூசை
மிகநன்றாய் அவண்ந டக்கும்
ஒவ்வொருமா தக்கடைசி வெள்ளியிலும்
ஒப்பில்சிறப் பொடுந டக்கும்
அவ்வொருநா ளினிலங்கு வரும்கூட்டம்
அளவிறந்த தாகி ஓங்கும். 32

அத்தினத்தில் வீதிவலம் வரற்காகத்
தூத்துக்குடி ஆச்சா ரிப்பேர்
பெற்றவிஸ்வப் பிரமகுலத் தவரன்பி
ேைடுசெய்து கொண்டு வந்த
வெற்றிநெடு வேலெழில் விமானம்முத
லானவையும் விளங்க லாலே
அத்தினத்தில் அவண்கூடும் பெருங்கூட்டத்
தளவுரைத்தற் காகா தோங்கும். 33

அன்னையார் திருவடிகள் ஒருதட்டில்
இனிதேந்தி நன்னீ ராட்டிப்
பன்னருமன் போடுநறு மலர்தூவி
வழிபாடு செய்து போற்றிப்
பின்னர்விநா யகர்கோயிற் கருகிலினி
தமர்ந்தண்ணல் பிறங்க லானார்
உன்னரிய வகையிற்பெரு கிடும்மக்கள்
உறுகுறைதீர்ந் தருள்பெற் றுய்வார். 34

விடக்கடிகள் நீங்குவதும் பிணிகளெலாம்
விலகுவதும் வியன்ம னத்தில்
அடிக்கடியெண் ணும்செயல்கள் அனைத்தும்நிறை
வேறுவது மாகப் பேய்கள்
பிடித்தவரும் அங்குவந்து கோயிலின்முன்
அமர்ந்தாடப் பெரிதி ரங்கித்
துடிக்குமிவர் வருந்தாம விருக்கஇறை
வனை நாடித் துதித்த வண்ணம் 35

இனிதருளி னல்நோக்கி 'இனிவிலகிப்
போங்கள்' என ஏந்தல் கூற
நனியவர்கள் பேய்த்துன்பம் நீங்கினராய்
எழுந்திருந்து நலங்கள் நல்கும்
புனிதமிகு சித்திவிநா யகர்கோயில்
வலம்வந்து போற்றி நின்று
கனிவொடண்ணல் கழல்வணங்கி அருட்டிருநீ
றேற்றணிந்து கடிது செல்வார். 36

இருடிநக ரினிலுள்ள ஐயம்பெரு
மாள்பிள்ளை இலத்து ணைவி
பொருவிலிறை யன்புடைய ஆச்சியம்மை
புன்செய்க்குச் சென்ற காலை
பெருகுவிடப் பாம்பொன்று கடித்துவிட்ட
தவ்வம்மை பிணமாய் விட்டார்
உருகிமிக வருந்தினராய் உற்றுரும்
உறவினரும் உரைக்க லானூர். 37

காட்டினிலே இறந்துவிட்ட அப்பிணத்தைக்
காட்டிலிருந் தினியெடுத்து
வீட்டினுக்குக் கொண்டுவர லாகாதென்
றெல்லோரும் விளம்ப லோடும்
காட்டினிலேயேஈமக் கடன்முடிக்க
முடிவுசெய்தார்; சாமி கண்ணிற்
காட்டிடுவோம் எனவொரன்பர் அண்ணலிடம்
கடிதெடுத்துச் செல்லச் சொன்னூர். 38

செலலாகா தென்றுபலர் தடுத்திடவும்
கேளாமற் செல்வ தென்னச்
சிலர்துணிந்தங் கருளண்ண லிடம்கொணர்ந்து
சேர்த்தார்கள்; செம்மல் நோக்கி
இலகுமுன்னேன் ஆலயத்திற் கெதிரினிலே
கிடத்தியிறை யருளை யுன்னி
நிலவுதிரு நீறெடுத்துத் தடவுதலும்
இறந்தவம்மை நிமிர்ந்த மர்ந்தார். 39

உறங்கியெழுந் தவர்போல அவ்வம்மை
எழுந்தெதிரில் ஒளிரும் அண்ணல்
பிறங்குமல ரடிவணங்க எல்லோரும்
பெரிதும்வியப் படைந்து நின்றூர்;
இறந்தவரை எழுப்பவல்ல பேராற்றல்
இவர்க்குளதென் றம்மை யண்ணல்
திறந்தனைத்தன் உறவினர்பால் செப்பப்பலர்
ஏளனமே செய்ய லானூர். 40

இப்படியும் நடைபெறுமோ இதில்ஏதோ
சூதுள்ள(து) இறந்தார் தம்மை
இப்படியில் மீண்டும்எழுப் பிடவல்லார்
யாவருளர் என்று சொல்ல
ஒப்பிலன்பொ டுறுதியுள்ள ஆச்சியந்த
உரைபொறுக்க லாற்ற ராகி
அப்பொழுதே அக்கினிச்சட் டியைஏந்தி
ஆலயத்திற் கேக லானார். 41

சித்திவிநா யகர்கோயில் சென்றுவலம்
வந்திறைஞ்சித் தேவா உன்றன்
சத்தியினால் இறந்தவளை அண்ணல்எழுப்
பியதுண்மை தானே யாயின்
சத்தியமாய் இக்கனல் சுடாதிருக்க
வேண்டுமெனச் சாரும் கூரை
மெத்தியசோ ளத்தட்டுப் படப்பிலெலாம்
காட்டியங்கு விளம்பி நின்றார். 42

கனல்மிகவும் கொழுந்துவிட்டு நன்றெரிந்த
தாலும் கையி லேனும்
இனிதாச்சி அவ்வனலைக் காட்டியகூ
ரையிலேனும் படப்பி லேனும்
அனல்சிறிதும் பற்றாமல் அணுவளவும்
எரிக்காமல் அமைதல் கண்ட
பினர்யாரும் அண்ணல்திறம் பெரிதென்ன
மிகவியந்து பேச லானார். 43

ஆச்சியம்மை யுடையமன உறுதிக்கும்
அன்புக்கும் உவந்தா ரேனும்
காட்சியருள் கணநாதன் கருணைபுரி
பெருமையெணிக் களித்தா ரேனும்
மாட்சிமிகும் உடையவன்றன் அருள்நடத்தும்
மகிமைகளை மற்றோர் யார்க்கும்
நீட்சிபெறச் சொலல்ஆகா தென்றண்ணல்
அடியரிடம் நிதமும் சொல்வார். 44

சொன்னாலும் ஆச்சியம்மாள் போலார்வ
மிகுதியினால் துகளில் முன்னோன்
தன்னேரில் திருவருளில் மிகமுரட்டுத்
தனமாக்கொண் டுள்ள பற்றால்
பன்னாளும் பலரும்விளம் பரம்செய்யச்
செய்தியெங்கும் பரவ மக்கள்
முன்னாளி னும்மிகுந்து திரண்டுவந்து
முனைந்தருள்பெற் றுய்ய லானார். 45

மக்கள்வரும் வண்டிகளும் வண்டிக்குள
மாடுகளும் பழம்நற் றேங்காய்
மக்களுண்ணும் பொரிகடலை விற்பனைசெய்
கடைகள்பல வளரக் கண்டார்
மக்களுய்யற் கானபல நல்லஉப
தேசங்கள் வள்ளல் சொல்வார்
தக்கவர்கள் சிலரையினி தருகழைத்துத்
தண்ணளியொ டருள்செய் வாரால். 46

அருட்சட்டக் கடைக்கால்

அளவின்றிப் பெருகிவரும் அன்பர்களின்
அல்லலகற் றண்ண லார்தம்
உளமலரில் திருவருளால் உதித்திலகும்
உண்மைகளை உலகோர் உள்ளம்
கொளஉரைத்தல் வேண்டுமென்றும் எல்லோரும்
கோதிலருள் வாழ்க்கை வாழ்ந்து
மௌமௌநற் பக்குவமுற் றுயவேண்டும்
என்றுமுன்னி விளம்ப லானார். 47

பலதிறப்பக் குவமுடைய பெருங்கூட்டத்
தினிற்சிலர்தம் பாங்கு நோக்கி
நலமொடரு கழைத்தவர்கள் இகசுகமும்
பரசுகமும் நன்றே எய்தக்
கலியுகத்தில் நடந்துகொளத் தக்கவழி
முறைகளெலாம் கருணை கூர்ந்து
சொலியவர்கள் தெளிவெய்தத் தூயநெறி
கடைப்பிடிக்கத் தூண்ட லானார். 48

விடியுமுனர் விழிப்படைதல் அப்போதே
தண்ணீரில் விரும்பி மூழ்கல்
குடிநீர்க்கும் வெந்நீரைக் கொள்ளாது
தண்ணீரே குடித்தல் என்றும்
உடையவன்தண் ணருளில்முழு நம்பிக்கை
யோடுசெயல் களைநடாத்தல்
அடையவரும் பிணிகளையும் துயர்களையும்
உடையவனின் னருளால் நீக்கல், 49

தெய்வமொன்றே எனக்கொள்ளல் செப்புமினம்
மதமாதி பேதம் நீக்கல்
சைவஉண வேஅருந்தல் பொய்நீக்கல்
தக்கவர்தம் பாலே சேர்தல்
உய்வருளும் உடையவனை ஒருமைமனத்
தொடுமுன்னி த்யானம் செய்தல்
ஐவகையாம் பொறிபுலனை யடக்கிவிர
தம்காத்தல் அன்பே பேணல், 50

மருந்தெதற்கும் பயன்படுத்தா திருந்திடுதல்
முதலியன மனத்திற் கொள்வீர்
திருந்தியநல் வாழ்வாற்றிச் செம்மையுடன்
புவியின்மிசை திகழ்வீர் என்று
பொருந்தும்வகை யினிலினிது மெய்யன்பி
னோடுமண்ணல் புகலக் கேட்டுத்
திருந்தியும் வினைப்பயனுள் ளவர்போற்றிக்
கடைப்பிடித்துத் திகழ லானார். 51

சட்டமொன்றை அரசாங்கம் செயநினைப்பின்
பொதுமக்க ளிடையே அந்தத்
திட்டமசோ தாவொன்றைத் தந்தெவர்க்கும்
தெரிவித்துக் கருத்தைக் கேட்டுச்
சட்டசபை யினில்வைத்தா லோசித்துச்
சட்டமியற் றிடல்போல் தெய்வச்
சட்டமொன்றைப் புவிக்கருள வந்தவள்ளல்
தண்ணளியால் இதுசெய் திட்டார். 52

உலகமக்கள் பலர்க்கும்பயன் படுமென்ன
உளத்துன்னி முடிவு செய்த
நலமிகுந்த உண்மைகளை ஞாலமிசை
இருடிநகர் நயந்து சீரோ
டிலகுசித்திக் கணபதிமுன் நல்லடியார்க்
கினிதுணர்த்திச் சட்டத் திற்கு
நிலவும்அடிப் படைபோட்டு வைத்தனரிந்
நிலவுலகம் உய்யு மாறே 53

## இடையிடை பொதிகைத் தவம்

அன்னையார் பொருட்டாக அண்ணலார்
இருடிநகர் அமர்ந்தா ரேனும்
முன்னவனூர் அருட்கழலில், எழிலுறுநன்
முகில்கூட்டம் முகடு தோறும்
மன்னுதிருக் குற்றால மலைக்குகையில்,
மாதவத்திற் றிளைத்து மூழ்கிப்
பன்னலமும் செறிநெறியைப் பாரினுக்கீ
தலில்நாட்டம் பதிய லுற்றூர். 54

தாயார்க்குச் செயத்தகுநற் கடமையினை
ஆற்றவந்த தவவேந் தற்கிங் (கு)
ஓயாது வருமன்பர் பிணிநீக்கல்
குறைதீர்த்தல் உறுபே யோட்டல்
வாயார நல்லன்பர்க் கருள்நெறியை
எடுத்துரைத்து வயங்கச் செய்தல்
காயான மனங்களைநற் கனியாக்க
லெனும்கடமை சார்ந்த தாமால். 55

செய்வதுமக் கட்பணியே யானாலும்
அப்பணியைச் சிறப்பி னேடும்
வையகத்தில் வாழுயிர்கள் அனைத்தினுக்கும்
வண்மையுடன் செய்தற் கின்னும்
துய்யபரி பூரணன்றண் ணருளொளியில்
தோய்ந்துதவம் புரிதல் வேண்டும்
உய்யும்வழி யுணர்த்தியுய்த்தல் வேண்டுமென
உயர்தவத்தில் நாட்டம் கொண்டார். 56

இருப்பதுபோல் இருந்தண்ணல் இருடியர்பட்
டிப்பதிவிட் டேகு வார்பின்
விருப்பொடவண் உறுவோர்கள் அண்ணலெங்கே
யென்னின்விடை விளம்பற் கேதும்
ஒருத்தருக்கும் புரியாமல் விழித்திடுவர்;
உயரண்ணல் செலவைப் பற்றித்
திருத்தகுதாய் அறிவாரோ எனின்அவர்கள்
யாரிடமும் எதுவும் செப்பார். 57

வேறு

பாவ நாசம்அம் பாசமுத் ரம்கவின்
மேவு தூயகுற் றால வியன்தலம்
ஓவி லன்புடன் அண்ண லுற் றெண்தவம்
பூவி லாற்ற அடிக்கடிப் போவரால். 58

சென்று தக்க இடமொன்று தேடியே
நன்று பூரண நாயகன் பாதத்தில்
ஒன்றி யுள்ளடங் கித்தவ மோம்புவார்
என்றும் யாரும் இனிது விளங்கவே. 59

இருடி யர்பட்டி அண்ணல் இயற்றவம்
கருதிச் சென்றவண் கைக்கொண் டமருவார்
பருதி கோடிநேர் பர்க்கன் அருளொளி
சுருதி போற்றிடத் தோய்ந்தங் கொளிர்வரால். 60

அன்னை யாரின் நினைவை அருளிறை
பின்னு மீயப் பெருந்தவம் நீத்தருள்
துன்னு சீரிரு டிப்பதி சூழ்ந்தினி(து)
அன்னை யார்முன் அடைந்து வணங்குவார். 61

அண்ண லார்வர வைக்கண்ட நல்லனை
உண்ணி லாவும் உவகை மிகுந்திட
நண்ணு மன்பரும் நன்மகிழ் வெய்துவார்
எண்ணி லார்நல மெய்தி மகிழுவார். 62

ஏய நல்ல கடமை இயற்றியே
தாயு ளத்தில் தகும்களிப் பூட்டுவார்
மேய மக்கள் பிணிகள் விலக்குவார்
தூய நீற்றின் பெருமை துலக்குவார். 63

ஊரி லுள்ளவர் உற்றவர் மற்றவர்
கோரி வந்து குறைதவிர்ந் துய்பவர்
யாரு மேத்த இருப்பர்சின் னுளவண்
சிருடைத்தவம் நாடிப்பின் செல்வரால். 64

மேய நீருறு மீனென்று மேல்வந்தங்
கேய காற்றுகொண் டேயுள் ளூறுதல்போல்
தூய மெய்த்தவம் தோய்ந்திடச் செல்வதும்
தாயை எண்ணிப்பின் சார்வது மாயினர். 65

அன்னையார் அடக்கம்

மன்ம தப்பெய ராண்டு வருதலும்
நன்ம னந்திகழ் அன்னையிஞ் ஞாலமேல்
தன்மக் கள்தகு திக்கியை பாகவே
சின்ம யன்கழற் சேவடி சேர்ந்தனர். 66

தாம்ப யந்தசுப் ரம்மண்யம் தம்மிடம்
மேம்ப டும்பக்தி மேவியி ருந்ததும்
ஓம்பி வந்த உயர்தவ மும்பணி
தாம்பு ரிந்து விளங்கிய தன்மையும், 67

திருவ ருள்துணை கொண்டு திரள்மக்கட்
குரிய நற்றொண் டுஞற்றி உயிர்கள்பால்
மருவு நோய்தவிர் மாண்பும் நினைந்(து)உவந்
தருளன் னைஉடை யானடி சேர்ந்தனர். 68

ஆனந் தக்கட லாழ்ந்துயிர் கட்கெலாம்
ஆனந் தம்தரும் அற்புதச் சேயைக்கண்(டு)
ஆனந் தக்கட லாழன்னை ஆண்டவன்
ஆனந் தப்பதம் சார்ந்தரு ளாயினர். 69

அண்ணன் மார்கள் இருவரொ டேயவண்
நண்ணு சுற்றத்த ரோடும்நற் றுயினைப்
புண்ணி யப்புவித் தாயின் திருவயிற்
றுண்ணி லாவ உவந்தடக் கம்செய்தார். 70

தம்மு ஞரோ டிருந்துநம் சாமியும்
அம்மை யாவுடை யன்னையைப் பூமியில்
செம்மை யாக அடக்கம்செய் திட்டபின்
நன்மை யீதென யார்க்கும் நவின்றனர். 71

அன்று தோட்டக் குடும்பத்தி றைவனோ(டு)
ஒன்றி ஞர்க்குத்தீக் காப்பின்றிப் பூமியில்
நன்று காப்பிடும் நல்ல வழக்கமே
தோன்று தோட்டுத் தொடர்ந்திட லானதே. 72

மண்டல மௌனம்

அன்னை யார்க்குத்தாம் ஆற்றிட வேண்டிய
பின்னை நற்பணி பேணிச்செய் திட்டபின்
முன்னர் தியானத்து மூழ்கும் இடத்தமை
நன்ன லச்சாய்வு நாற்காலி மீதினில். 73

சென்ற மர்ந்து திகழ்ந்தநம் அண்ணலார்
ஒன்று மேயசை வின்றியோ கத்தினில்
நன்று மூழ்கிமெய்ஞ் ஞான நிலையினில்
ஒன்றி ஞரஃ துணர்ந்திலர் யாருமே. 74

இலகு கண்களை மூடினர் அண்ணலார்
சலனம் சற்று மிலாமற் சமைந்தனர்
நிலவு நல்லூண் சிறிதும் அருந்திலர்
நிலமி சைநீரா டற்கும் நினைந்திலர். 75

ஐம்பொ றியும்பு லனும்அ டங்கிடச்
செம்பொ ருளினிற் சிந்தை திளைத்திட
இம்பர் பேச்சுமூச் சின்றி யொடுங்கினர்
உம்ப ரும்அறி யாரிந்த உண்மையே. 76

மனம டங்கமற் றெல்லாம் அடங்கியே
நனவு றக்கம் கடந்தநம் நாதனார்
அனம றந்தனைத் தும்மறந் தைங்கரன்
நனைம லர்ப்பத நற்றே னருந்தினர். 77

அவர டைந்த அனுபவ மாண்பினை
எவர றிந்திட வல்லவர் பூமிமேல்
இவர மர்ந்ததிங் கேனென்பர் ஊரவர்
இவரெப் போதெழு வாரெனக் கேட்பரால். 78

உண்ண லின்றி உரைசொல லின்றியே
அண்ணல் மௌனத் தமர்ந்ததைக் கண்டவர்
கண்ண யர்ந்தன ரென்னக் கழறுவார்
நண்ணும் நித்திரை நாதர்க்கிங் கேதென்பார். 79

ஊரு ளார்கள் அனைவரும் உற்றவண்
சீரொ டேயழைப் பார்சிலர் சாமியின்
வார்க ரந்தொட் டசைப்பர்நும் வாய்திறந்
தோரு ரைமொழி வீரென் றுரைப்பரால். 80

உணர்ச்சி யேதுமி லாமல் உடையவன்
புணர்ச்சி கொண்டு பொலிந்திடும் அண்ணலார்
எணச்சி தைவுடை யோரென் னியற்றினும்
வணச்சி லம்பொலி வார்கழல் நீங்கிலார். 81

அண்ண லார்உயிர்க் கூறென் றிலையென
நண்ணிப் பார்த்த சிலர்நவின் றேகினர்;
பண்ணும் செய்கையே தென்னப் பகருவார்
உண்ணி லாவுதுன் புந்த வருந்துவார். 82

அன்னை யைத்தொடர்ந் தண்ணலும் செல்வரோ
பின்னை நாம்செய்வ தேதெனப் பேசுவார்
முன்னை நாளண்ணல் மோனத் திருந்ததைப்
பன்னு மூரவர் பார்த்தில ராதலால். 83

சீரு றும்குகை யிற்றவம் செய்ததை
யாரும் காணார் இரெட்டியப் பட்டியில்
பாரிறைஞ்சிட நிர்விகற் பத்தமர்
சீரு ணர்ந்திலர் இங்ஙனம் செப்பினர். 84

பார்த்தி ருப்பின் பயம்சற்றும் கொண்டிடார்
வார்த்தை யேதும் வழங்கி வருந்திடார்
நேர்த்தி யாய்வலம் வந்து நிதம்மலர்
ஆர்த்தி யோடிட்டன் பாற்றுதிப் பாரன்றே; 85

பொதிகை யில்தவம் செய்து பொலிந்ததைப்
பதியி னர்சென்று பார்த்தில ராயினும்
முதிரும் மோனநல் நிர்விகற் பத்தமர்ந்
ததனைக் காணும்நற் பேறவர்க் குற்றதே. 86

அன்னை யாரை அருள்முத்தி சேர்த்திடற்
கின்ன நிட்டை யிவர்மேற்கொண் டார்கொலோ
நன்னெ றிதந்திஞ் ஞாலத்தைக் காக்கவோ
என்ன காரண மோயா மறிகிலோம். 87

இப்ப டியொரு மண்டலம் ஏகிட
அப்பொ ழுதங்க டைந்த சிலருளே
செப்பு மன்பர்வெள் ளையப்பத் தேவரும்
ஒப்பி லன்பொ டுரக்கச் சிலசொன்னர். 88

ஏலும் அண்ணல் எழிற்குடும் பத்துக்குச்
சால நாளன்ப ராம்அவர் சார்ந்தவண்
மேலும் மேலும் உரக்க விளம்பும்சொல்
ஞால மீதெங்கும் நண்ணி யொலித்ததே. 89

வெள்ளை யப்பர் விளம்பும் பொழுதினில்
வள்ளல் கண்கள் திறந்தன மாதவத்
துள்ள தூய மனம்மீண்டி டாததால்
உள்ளொ டுங்கிட ஊக்கிய துள்ளமே. 90

விழிதி றந்தது கண்டுவெள் ளையப்பர்
மொழிகள் நன்கு முழங்கி முயன்றிடின்
வழிபி றக்குமென் றெண்ணிவா லாயமாய்
மொழியு மாறு மொழிந்திட லாயினர். 91

என்னத் தைக்கண்டு விட்டதிந் தச்சாமி
மன்னு விண்ணின்று வந்ததைப் போலிவ்வா
றென்னத் துக்கமர்ந் திட்டதி துக்குத்தான்
என்ன வும்தெரி யும்மென எண்ணியோ? 92

மக்கள் கொள்ளும் வருத்தம் தெரிந்திடா
துட்கார்ந் துக்கொண்டிங் குள்ளதென் னச்சாமி
தக்க வாறெழு வீரெனச் சாமியும்
மெய்க்கண் கள்தமை மீளவும் மூடினர். 93

இப்பொ ழுதினில் எட்டிப் பிடித்திட்டால்
எப்ப டியும்சா மிவழிக் கெய்துமென்
றப்பொ ழுதுரைத் தண்ணலின் மேனி தொட்
டப்ப டியசைத் தார்தேவ ரங்கனே. 94

தேவர் தொந்தரை செய்திடும் போதினில்
யாவ ரும்மிது தான்சம யம்மென
மேவித் தொட்டு மிகவும் உலுக்கினர்
தூவி ழிகள்தி றந்தனர் தோன்றலார். 95

விழிதி றப்பினும் வித்தக னாருட்
கழலி னின்றும் கழலா மனத்தராய்ச்
சுழலு லகநி னைவற்ற தூயராய்
ஒழிவில் மெய்த்தவத் தொன்றும் நிலையராய் 96

உடுத்த விழ்ந்து கிடந்த ஒருதுணி
எடுத்த னர்கிழித் திட்டனர் ஏதெதோ
அடுத்த நல்லியல் புக்குமா றுகவே
தொடுத்துச் செய்திடக் கண்டங்கு சூழ்ந்துளோர்· 97

பைத்தி யம்இவர்க் குற்றதெ னப்பலர்
மெய்த்தி றம்உண ராமல் விளம்பினர்
வித்த கத்தென் மதுரையில் மேவிய
அத்தி றம்உணர்ந் தோர்பைத்ய மன்றென்றார். 98

திண்ண மாய்அவர் செப்பிய வாறுநம்
அண்ண லாரும் எழுந்தகத் தின்புறம்
நண்ணிச் செல்பவர் போல நடந்தனர்
உண்ணி லாவும் உயர்தவ வேட்கையால். 99

செல்வர் கண்மாய் வரைசென்று மீளவும்
வல்வி ரைந்துறு வார்என் றனர்சிலர்
செல்லும் தூரம் வரைக்கும்செல் லட்டும்பின்
ஒல்லை யில்வரு வார்என்பர் ஓர்சிலர். 100

திரும்பிப் பார்த்திட லின்றிச்சித் தத்தினில்
விரும்பி டல்இன்றி வித்தகர் யாரையும்
பெரும்பு வியினில் பேணற் கரியதாம்
அருந்த வத்தை அகத்துன்னி யேகினர். 101

அவ்வ ணம்செல் வதைக்கண் டடியவர்
செவ்வ ணம்பின் தொடர்ந்தவண் சென்றிட
இவ்வ ணம்தொடர் வாரையும் எண்ணிடா
தெவ்வ ணமோம றைந்தனர் ஏந்தலார். 102

சென்ற தெங்கெனச் செப்ப எவர்க்குமங்(கு)
ஒன்று மேதெரி யாமல் உளைந்தனர்
இன்று நாமேனிவ் வாறு கடுமையாய்
நன்றின் றிநடந் தோமென நைவரால். 103

வெள்ளை யப்பத்தே வர்செய்த வீண்செயல்
வள்ள லார்க்கு வருத்தம் விளைத்ததென்
றுள்ள யாவரும் கோபித் துரைத்தனர்
வள்ள லாரடி யார்கள் வருந்தினர். 104

ஊரி னர்மட மைக்குளம் நொந்தனர்
ஊரி னுக்கேதோ உற்பா தத் திற்குத்தான்
சீர்கொள் சாமிக்கிவ் வாறுசெய் தீரென்றூர்
ஊர வர்களும் உள்ளம் கலங்கினர். 105

அய்ய னிவ்வா றகன்றுசென் றிட்டபின்
மொய்ந ரம்புச் சிலந்தி முளைத்திடப்
பையப் பாயும் படுக்கையு மாயினர்
உய்ய லின்றியங் கொவ்வொரு வீட்டிலும். 106

சாமி யைஎங்குச் சார்ந்துநாம் காண்பமோ
சாமி யும்இங்குத் தங்க வருவரோ
சாமி யேதயை வைத்துச்சார்ந் தாலன்றி
யாமிக் கர்மம் தொலைப்பதெவ் வாறென்பார். 107

ஊரு ளோர்களும் உற்ற அடியரும்
சீர்கொள் சாமியைத் தேடும் முயற்சியால்
ஏர்கொள் நல்லடி யார்கள் இருப்பிடம்
தேர்வர் செல்வர் காணமல் திரும்புவார், 108

எங்கு சென்றன ரோஎன எண்ணுவார்
அங்கு மிங்கும் அலைந்து திரும்புவார்
இங்கு நாமியற் றிட்ட பிழையினை
எங்கு சென்றுரைப் போமென ஏங்குவார். 109

அண்ணல் மீண்டும் அருளுளம் கொண்டிவண்
நண்ணு வாரெனில் நாமுய்ய லாமென்பார்
அண்ண லார்நம் பிழைகள் அனைத்தையும்
திண்ண மாய்மன்னிப் பாரெனச் செப்புவார். 110

ஆக செய்யுள் 1247

---

## 8. குகைத் தவப் படலம்

சண்பக விநாயகர் துதி

உயிர்த்திரளைத் திருத்தியரு ளமுதூட்ட
உதித்தஅரு ளண்ண லாரை
வியத்தகுபே ரருளோடும் இனிதீர்த்து
மெய்த்தவத்தின் விளைவு நல்கிச்
செயத்தகுமின் னருட்செயல்கள் செயப்புரிந்து
செந்நெறியைப் பரப்பச் செய்தாள்
சயத்தலம்குற் றாலத்துறை சண்பக
விநாயகர்தாள் போற்றி வாழ்வாம். 1

குருநாதர் துதி

முகையெனும்நன் மனமரும்ப அன்பரும்ப
அறம்மலர மோன ஞானத்
தகைவிளக்கும் தவப்பிஞ்சு நன்குமுற்றித்
தண்ணருளாம் கனியை நல்கும்
வகையிலமை அருட்சட்டச் செந்நெறியை
வையமிசை வழங்கி யாளக்
குகையிலருந் தவம்புரிந்த இருடிநகர்க்
குருபரர்தாள் கும்பிட் டுய்வாம். 2

வேறு

பூவு லகிற்பொ லியும்உ யிரெலாம்
ஓவ ரும்உண்மை யின்பம்துய்த் துய்ந்திட
மேவ ரும்தவம் மேற்கொண் டொளிர்குரு
சேவ டிகள்தி னம்துதித் தேத்துவாம். 3

---

அடியர் அன்பரிவ் வாறவண் கூறிடப்
படியின் மீதுபண் பார்தவம் பேணிட
உடைய வன்கழ லுன்னிய வாறண்ணல்
கொடுமு டிகொள்குற் றாலம் குறுகினார். 4

திருக்குற்றால எழில்

ஈத ருள்மழை யென்ன இலங்கிடும்
வேத வோசை விளக்கி யிழிந்திடும்
போதும் பொன்னும் மணியும் பொழிந்திடும்
கோதில் சீர்கொள்குற் றாலத் தருவியே. 5

அரவின் நன்மணி யங்கொளி காட்டிட
விரவகில் குங்கு மம்மணம் வீசிடக்
கரவி லாஉளக் கானவர் கூத்திடத்
திருவ ருள்பெறத் தேவரும் கூடுவார். 6

சாகை யிற்குயில் தங்கி யிசைசெய
மேகம் கோட்டினில் மேவி யுலாவிட
தாகம் தீர்க்கும் அருவி தவழ்ந்திட
யோகம் நாடும் முனிவ ருலாவுவார். 7

கலைய னைத்தும் கடந்து கடுந்தவ
நிலைய னைத்தும் கடந்து நெடுமனத்(து)
அலைய னைத்தும் கடந்தவர் அவ்வருள்
மலையி னிற்பர மானந்தம் மாந்துவார். 8

வேயின் முத்தும் வியன்கொள் மணிகளும்
தூய பொன்னும்நல் வேதத் தொனியும்கொண்
டேய பாரில் அருவி யிழிந்திடும்
மாயை நீப்பவர் வந்துநீ ராடுவார். 9

வேறு

அளவில்பெரு வேகமுடன் அருவிநன்னீர் குதிக்கும்
அடியவர்கள் உளமிறைவன் அடிமலரைத் துதிக்கும்
இளம்புலவர் இதயமதில் இனியகவி உதிக்கும்
இனிதுபயில் பவருளத்தில் இறையருளைப் பதிக்கும்

வளமொடவன் வளர்தருக்கள் வண்கனிகள் கொடுக்கும்
வார்சினையால் வானிலிவர் தண்மதியைத் தடுக்கும்
மிளகுகளாக் கனிலவங்கம் ஏலம்மலை வழங்கும்
வேடுவர்தம் பறையொலியும் முகிலொலியும்
முழங்கும். 10

தேமாவின் கனிகள்களாக் கனிகளுடன் உதிரும்
திகழும்உயர் தருக்களினின் றெழில்மலர்கள் உதிரும்
ஓமோதி யிழியருவி உயர்மணிகள் உதிர்க்கும்
உயர்சுவைமா துளங்கனிகள் விதைமணிகள் உதிர்க்கும்
காமாதி பகைகளெலாம் கடிந்தவர்கள் நோற்பார்
கட்டழகார் நங்கையரிற் பலர்விரதம் காப்பார்
சாமாதி மறையோதி அந்தணர்கள் வேட்பார்
தண்ணருள்நா டடியரவண் சார்ந்துமகிழ் பூப்பார். 11

அண்ணலார் சேரல்

ஆலும் பல்வித மான சிறப்புடன்
ஞால மேவும்குற் றாலத்தை நல்லவர்
மேலும் மேலும் விரும்பிப் புகழ்ந்திடச்
சீல மார்அண்ணல் சென்றனர் அங்ஙனே. 12

அண்ணலாரை வரவேற்றல்

பூவு லகிற்பொ லியும்உ யிர்க்கெலாம்
தேவ ரும்மகிழ் வெய்தத் திருவருள்
மேவு நன்னெறி நல்க விழைந்திடும்
தேவ ரைவர வேற்றதச் சீர்த்தலம். 13

செவ்வை யாகச் செழுந்தவத் தைமுடித்
திவ்வு லகினுக் கின்ப நெறிதர
இவ்வி டத்தினுக் கேந்தல்வந் தாரென
* மௌவல் தூமலர் தூய்வர வேற்றவே. 14

மறையொ லித்தன அந்தணர் வாய்,தமிழ்
மறையொ லித்தது மங்கைபங் கன்தளி
மறையொ லித்தன மாதங்கத் தின்திரள்
மறையொ லித்தது மாண்பார் அருவியே 15

*மௌவல்—காட்டு மல்லிகைச்செடி.

செம்மை சான்றஇச் செம்மல் வருகையில்
வம்மின் வம்மின் எனவர வேற்றல்போல்
பைம்மு கில்கள் பலநுண் துளிகள்தூஉய்
நன்ம கிழ்வுட னும்வர வேற்றவே. 16

கொடியெ னும்கை யசைத்துக் குறும்பலா
அடிய வர்க்கரு ளண்ணலை யன்பினால்
படிமி சைவர வேற்கப் பரமனார்
துடிமு ழக்கினர் தொன்மறை யார்த்தவே. 17

### அண்ணல் சண்பகாதேவி ஆலயம் சேரல்

நேர்த்தி யோடு நிலவுங்குற் றாலத்தில்
சீர்த்தி யோடு திகழும் இறையருள்
வாழ்த்தி யண்ணல் மலைமிசை யேறியே
ஆர்த்தி சால்சண்ப காலயம் சார்ந்தனர். 18

சண்ப காதேவி தாண்மலர் தாழ்ந்தெழீஇப்
பண்பொ டேத்திப் பராவி யடைந்தனர்
விண்பொ ழிந்திடும் கங்கைபோல் மேவுநல்
சண்ப கப்பெயர் தாங்கும் அருவிக்கே. 19

### அருவி நீராடல்

திருவ ருள்உந்தச் சென்றநம் அண்ணலார்
பெருகு நன்மை பிறங்கும் மலைக்கணே
உருகு முள்ளத்தொ டொப்பில் அழகுசால்
அருவி நீரில்மெய் யன்புட னாடினார். 20

### வேறு

நம்மகிமை யினையுலகுக் குணர்த்தவந்த
நல்லாராம் இவரை ஞால
வெம்மைதணித் துயிர்களுளம் குளிரவைக்க
வந்துள்ள விமல னாரைச்
செம்மையுறக் குளிர்விக்க உன்னியுயர்
கங்கையெனும் சிறந்த தாய்தன்
செம்மலர்க்கை யால்தடவிக் கொடுத்தாசி
செப்பிடல்போல் திகழ்ந்த தம்மா. 21

## குகைத்தவம்

இருடியர்பட் டித்தலம்சென் றினிதுவந்த
ஏந்தலார் எழிற்குற் றாலத்
திருமலையில் திகழ்தூய அருவிநன்னீ
ராடிமுன்பு சிறந்த நிட்டை
மருவியிருந திட்டகுகை யினிலமர்ந்தார்
மனம்மதுவுண் மந்தி போல
ஒருநிலையில் நில்லாமல் ஊசலா
டிடல்கண்டார் உன்ன லுற்றார். 22

அருவியினில் நீராட வரும்மக்கள்
குரலின்ஒலி அவர்செய் தூய
பெருந்தவத்திற் கிடையூறும் எனக்கருதிப்
பிறங்குகுகை வேறொன் றுண்டோ
அருந்தவத்துக் கேற்றதுவாய் அஃதமையின்
நன்றாகும் என்றே யண்ணல்
அருவியரு கிருந்தகுகை விட்டகன்று
மலையேறிச் செல்ல லானார். 23

மக்களுய்யும் வழியினைக்கண் டாலன்றி
யமைதியுறா மனத்த ரானார்;
மக்கள்பலர் திரள்திரளாய் மதுரையிலும்
இருடிநகர் தனிலும் வந்து
மிக்கபிணி தீர்ந்துகுறை பலதீர்ந்து
மிகமகிழ்ந்து சென்ற காட்சி
அக்கணத்தில் அவருளத்தில் நிழலாட
அண்ணலகம் கசிய லுற்றார். 24

*நாடுபவர்க் கெல்லாமும் நாடும்வணம்
நல்வரங்கள் நல்கு மீசா
பாடுபவர் பாடுவதற் கிசைந்தபயன்
பரிந்தருள்நற் பாத மூலா
ஆடுபவர் கூத்தையறிந் தருள்சீலா
அன்பர்களின் சிந்தை மேவிக்
கூடியுற வாய்வழிகாட் டும்குருவே
இதற்கொர் வழி கூறாய் என்றார். 25

---

*நாடுவோர்க்கெல்லாம்—ஆண்டவர் அருட்பாடல்.

முன்னவனைத் துதித்தவண்ணம் செல்லுமிவர்
திருவருளால் முன்பு நிட்டை
நன்னயமாய்க் கூடியஅக் குகைக்குநேர்
மேலொர்குகை நாடிக் கண்டார்
பன்னுமக்கள் நடமாட்டம் சற்றுமிலா
அக்குகையின் பாங்கை நோக்கி
மன்னுமுயர் தவமாற்றத் தக்ககுகை
யீதென்ன மகிழ்வு கொண்டார். 26

கண்டஅந்தக் குகையைவிரை வினிற்றூய்மை
செய்துநற்க ணேசன் தாளுட்
கொண்டமனத் தினராகி அண்ணலந்தக்
குகையின்கண் சென்ற மர்ந்தார்
மண்டுபுற உறுப்புக்கள் அசைவின்றி
மாண்புறநன் றொடுங்கி னாலும்
உண்டெனும்உட் கரணங்கள் ஒடுங்கிடுமா
றொப்பிலுப தேசம் செய்தார். 27

இச்சையெலாம் அறத்துறந்தும் இவ்வுலகுக்
கிதம்புரிதல் வேண்டு மென்னும்
இச்சையினை மேற்கொண்டும் இனியதவ
நாட்டமுடன் ஏகு மண்ணல்
அச்சமின்றி ஐயமின்றி அருள்நல்கு
தவம்நாடி அடைவாய் என்று
*"பச்சைக்கிளி யே"என்ன மனத்தைவிளித்
தருட்கும்மி பாட லானார். 28

கள்ளமனக் கசடறுத்தக் கள்வனையுட்
கண்டுபிடித் துய்ந்தி டாயேல்,
வெள்ளம்வரும் போதிலணை யிடவொணுமோ?
மெல்லியலே உணர்வாய்;சற்றே
உள்ளமிகத் தெளிவுற்றுப் பார்த்தாயேல்
தெரிசனங்கள் உடனே தோன்றும்;
எள்ளளவும் சந்தேகம் வேறுமுண்டோ
சாயுஜ்யம் எய்தற் கென்றார். 29

*பச்சைக்கிளியே—ஆண்டவர் அருட்பாடல்.

மனதினுக் கிவ்வாறுபல வகையான
உபதேசம் மாண்பாய்ச் செய்து
மனதையொடுக் கியபோதொர் அசரீரி
'கிட'என்ன வானில் தோன்ற
இனிதுதெரு ளுற்றஅவர் உடலையுமுள்
ளத்தினையும் இறைவன் தாளில்
புனிதமுறக் கிடத்திடலும் பூரணன்பே
ரருட்பொலிவுட் புக்க தன்றே. 30

வேறு

பாம்பினை யுதர பந்தன மாக்கொண்
டொளிர்பரி பூரணன் அருளால்
ஓம்பெரு மறையொவ் வோரணு வினுளும்
ஒப்பிலாப் பொலிவொடும் நிறைய,
ஓம்பரி தான உயர்தவக் கனலும்
ஒண்பொனின் ஒளியென வளர,
வாம்பரி யெனநல் வாசியின் விளைவு
வளமுறச் செழித்ததங் கவருள். 31

கரணமெல் லாமும் ஒன்றிடத் தூய
கருணையா ருருக்கொள்முன் னவனூர்
சரணபங் கயத்திற் சார்ந்தறி வொடுங்கத்
தானெனும் போதமும் ஒடுங்கி
அரணமொன் றில்லா அருட்பெரு வெளியில்
ஆனந்த மாம்அமு தருந்தி
கிரணம்பல் கோடி யுடையமெய்ஞ் ஞானக்
கிளரொளிக் கதிரெனத் திகழ்ந்தார். 32

ஒவ்வொரு நாளாய்ச் சென்றிட ஓராண்
டாதலும் உயர்பரி பூர்ணன்
செவ்விய பாத மலரினிற் செழுந்தேன்
அருந்திய வாறவண் திகழும்
திவ்விய ஞானச் செம்மலி னுள்ளம்
சிறிதிறங் கிடவிழி திறந்தார்;
எவ்வொரு பொருளி னுளும்அருள் விளக்கம்
இலங்கிடல் இனிதுகண் டுவந்தார். 33

துல்லிய தேக நினைவுமிவ் வுலக
நினைவும்பின் தோன்றவும் அண்ணல்
மெல்லென எழுந்து குகையினை விட்டு
வெளிவந்து விரைவொடு மிறங்கும்
நல்லரு வியின்நீர் பருகியங் குள்ள
நறுங்கனி சிலஎடுத்தருந்தி
வல்லவ னருளின் மகிமையை நினைந்த
வாறவண் உலவினர் மலைமேல். 34

ஒருசில நாளிப் படிச்செல அண்ணல்
உயர்தவ வேட்கைமிக் கவராய்
திருவரு ளுருவம் கொளும்பரி பூர்ணன்
திருவடி மலருளம் கொண்டு
கருவழி நீக்கும் தவத்தினில் முயலப்
பாசத்தின் காரண மாக
நிருமல னிடத்தொன் றிடலின்றி யுலக
நினைவில்நெஞ் சுழலுதல் கண்டார். 35

உலகினில் வாழும் உயிர்களெல் லாமும்
உய்வுறு நெறியொன்று காணப்
பலதின மாக விழைந்தும்மெய்த் தவத்திற்
பலதின மாய்மிக முயன்றும்
இலகருட் பூர்ண நிலையடைந் தில்லோம்,
எளியநன் னெறியறிந் தில்லோம்,
நலமருள் முன்னோன் அருளினு மெய்த
நனிமுயல் வோமென நினைந்தார். 36

ஒடுங்கிடா துலக நினைவினி லுழலும்
மனத்தினை ஓங்குநற் றவத்துக்
குடன்படச் செய்ய நல்லுப தேசம்
உரைத்தனர் மனத்தினுக் கண்ணல்;
திடம்பெறு ஞானம் பெருகிடற் கின்னும்
செய்தவம் மிகுந்திடல் வேண்டும்;
நுடங்குதல் இன்றி ஒத்துழைப் பாயென்
றியம்பினர் நோற்றலின் சிறப்பை. 37

வேறு

*ரேசகபூ ரககும்ப கந்தனிலே
எழுவாசி இலங்கு நேர்மை
காசினியில் யாரறிவார் மனமேகேள்
நீள்சடைமேல் கங்கை திங்கள்
வாசமலர்க் குழலுமையா.ளொடுதிகழ்
மகேச்சுரன்றன் மலர்ப்பா தத்தின்
நேசமதே துணையென்று நம்பிடுவாய்
வெளியாகும் நிலைக ளெல்லாம். 38

†புருவத்தின் நடுபார்பார் எனுமறைகற்
றுணர்வாரார் புவனி மீதில்
பொருவில்பொறை யினைப்பற்றி மேலுலவல்
புனிதமிகு நிலையே யாகும்,
மருவுபொறி யசையாமல் புலனோடும்
மாயையொடும் ஒன்றி டாமல்,
பெருநீதி யோடுமுற வாடிகுரு
பதம்பணிந்து பேணி யேத்து. 39

இத்தரையில் இதுநெறியென் றுணரஇய
லாதபடி இடரு றுமல்
மெத்தமகிழ் வோடெவரும் எப்பொழுதும்
கைக்கொண்டு மேன்மை யெய்த
வித்தகநல் லருட்சட்ட நெறிவிளக்க
வியன்தவமாற் றிடுதல் வேண்டும்;
‡சித்தந்தெளிந் திடுதேனே எனமனத்துக்
குபதேசம் நன்கு செய்தார். 40

இயேசுநாதரும் முகம்மதுநபியும் ஆசியருளல்

புறவுலகின் தொடர்பறுத்து நித்தியா
னந்தபரி பூர்ணம் நாடி
முறையொடருள் ஞானநிட்டை மேற்கொண்டு
முழுத்தவத்தில் மூழ்க லுற்றார்

---

*ரேசகபூரக †புருவத்தினிடைமத்தி
‡சிந்தந் தெளிந்திடுதேனே—ஆண்டவர் அருட்பாடல்கள்.

நிறையுமகிழ் வுடன்ஏசு நாதரும்மு
கம்மதுந பியும்நேர் தோன்றி
குறைவின்றித் தவம்முடிப்பீர். பொதுக்கருத்து
களைப்புவிக்குக் கொடுப்பீர் என்றார். 41

நிலவுலகில் வாழுயிர்கள் எளிதாகத்
தூயபொது நெறியைப் பேணி
நிலவுபர மானந்தப் பெருவாழ்வில்
நிலைத்துய்யச் செய்வீர், என்றும்
அலகிலருட் பெருங்கருணை அகம்புறமும்
நிறைந்துதுணை யாகி யோங்கும்
இலகுதிரு வருளாளர் குழுநும்மை
வாழ்த்துமென இயம்பிச் சென்றார். 42

அருந்தவம் பேணல்

மூவிரண்டா தாரத்தின் மேலேகுண்
டலிஏற, மூலஅங்கி
மேவுதிரு மேனிமுழு தனல்மயமாய்
மாறியதவ் வெந்தீ யின்கண்
ஒவில்பல நினைவுபந்த பாசமொடைம்
புலன்களெலாம் ஒன்றி வெந்து
பாவுதுக ளாய்ப்பொசுக்கப் பட்டன;மூ
லக்கனல்மேல் பரவிற் றன்றே. 43

அக்கனலின் சுடர்நீல நிறமாக,
அதுபின்னர் வெண்மை யாக,
நற்குடமா யிரங்கொளுந்தண் ணீர்விடினும்
தணிப்பரிதாம் ஞான வெப்பம்
மிக்குற்று வெளிப்படஅந் நெருப்புக்கு
விறகாக அமைப மெய்யில்
உட்குற்ற மெனமேவி யுளபந்த
பாசங்கள் உணருங் காலே. 44

இந்நிலையில் தன்னைமறந் திவர்தவத்தில்
ஆழ்ந்திருக்க, இவர்க்கு முன்னே
வன்னமயில் நடனமிடும், பாம்புகள்மண்
டலமிட்டு வணங்கி நிற்கும்

மன்னுபுலி கரடிசிங்கம் போன்றவன
விலங்குகளும் மாண்பார் ஞான
மன்னரருட் தவவொளியால் புனிதமுற்றுப்
பகைமறந்து பரவி நிற்கும். 45

எவ்வுயிர்க ளும்பரவ, எவ்வமரர்
களும்வாழ்த்த, இணையொன் றில்லா
அவ்வுமுவ்வும் மவ்வுமொன்றி அகம்புகுந்தும்
புறம்நிறைந்தும் அமைதி நல்க,
இவ்வுலக உயிர்களெலாம் இனிதுய்ய,
எங்கணும்பே ரின்பம் பொங்கச்
செவ்வையுற அருள்ஞானச் செல்வம்நிறை
வெய்த அண்ணல் தவம்செய் திட்டார். 46

தவநிலை கலைதல்

இடையில்தவ நிலைகலைந்து சற்றுணர்வு
தோன்றுகையில்,இன்னும் பூர்ணம்
அடையவில்லை,ஞானநிறை வமையவில்லை
யேஎன்ன அகம்வ ருந்தி
உடையவனை நினைந்துள்ளம் உலையிலிடு
மெழுகென்ன உருக என்பும்
இடையுருக மிகவும்நெகிழ்ந் தேயழுகை
யாயழுவார் ஏக்கம் கொள்வார். 47

அன்றொருநாள் மாமதுரை அணிநகரில்
அருள்வைகை நதியின் தென்பால்
துன்றுமொரு தூயஅருட் ஜோதிவடி
வாய்த்தோன்றிக் காட்சி நல்கி
நன்றுமண மலர்மாலை யிணைச்சூட்டி
மணங்கொண்ட நாதா என்னை
இன்றிங்ங னிவ்வணம்சோ தனைபுரிந்தால்
என்செய்வேன் இறைவா என்பார். 48

நாயகனைப் பிரிந்தேங்கும் நங்கையென
ஞானபரி பூர்ண னை
நாயகனைக் கண்டுண்மை ஞானநிறை
வெய்துநன்னாள் எந்நா ளென்று

மேயமனத் தளர்வுறுவார், மெய்வாட்டம்
மிக்குறுவார், விழிநீர் சோர்வார்,
வாய்திறந்து கதறிடுவார், வையகம் உய்
யும்காலம் வருமோ என்பார். 49

வேறு

பெண்பாவம் வீண்போகாப் பிழைகள்வந்து சேருமுன்னே
கண்பார்வை யிட்டுயிரைக் காத்தருள்வீர் பூரணரே
பண்பார்ந்த செந்நெறியில் பாரோரெல் லாம்போற்றித்
தண்பாதம் சேரஅருள் தந்திடுவீர் என்பதியே. 50

எனவோதி இறைஞ்சிடுவார் அழுதிடுவார் ஏங்கிடுவார்
பினர்தூய தவநிலையில் மூழ்கிநனி பிறங்கிடுவார்
மனதுபுறத் திறங்குகையில் எழுந்துசென்று மலைமீதில்
கனிகாய்கள் அருந்திப்பின் கடுந்தவத்தில் மூழ்கிடுவார். 51

வெளியுணர்வு வரும்போதும் வேறெந்தத் தவசியொடும்
வளமிகுநல் வார்த்தைசொல விழையாமல் வயங்கிடுவார்
உளமகிழ்ந்து தனிமையிலே உயரின்பம் கண்டிடுவார்
உளஒவ்வொரு கணப்பொழுதும் வீணுக்கா
துழைத்தமைவார். 52

விரிபுவன போகத்தி லிருந்துவிடு பட்டுநின்றும்
பரிபூர்ணன் அருளில்முழு தும்தோய்ந்து படியாமல்
திரிபுறுமிந் நிலையவர்க்குச் செப்பவொணு வேதனையைத்
தரஅவரும் அழுதிரங்கி அருட்பாடல் சொலித்துதித்தார். 53

மீண்டும் தவம் பேணல்

நன்றண்ணல் இனிதுருகி இறைவன்மல
ரடிஇதயத் திருத்தி யேத்தித்
துன்றிருகண் களைமூட நாதனருள்
துணைபுரிய ஞான நோக்கம்
என்றநுதல் விழியோங்க இணையில்தவக்
கனல்வளர்ந்தெங் கெங்கும் மேவப்
பொன்றலிலாப் பரஞானப் பொலிவுமிகுந்
தருட்புனிதம் புகட்டிற் றன்றே. 54

மகவுறுநோய் நீங்கிடத்தாய் கடும்பத்யம்
மேற்கொளல்போல் மாஞா லத்தில்
தகவுறவா முயிர்களின்நோய் தவிர்த்திடற்குக்
கடுந்தவம்மேற் கொண்டா ரண்ணல்
குகையினுள்ளி ருந்துவந்த தவக்கனலின்
கொழுந்தம்மலைச் சூழல் தன்னை
மிகுதூய்மை செயப்பறவை விலங்கினமும்
பகைநீங்கி விளையா டிற்றால். 55

ஐம்பூதங் களும்பலவாம் ஆருயிரும்
அண்ணலருள் மேனி மீதார்
ஒண்போத ஒளிசான்ற திருவழகு
கண்டொப்பில் மகிழ்வே யெய்த
விண்பூத்த தேவர்களும் தேவநங்கை
யருமங்கு மேவித் தூய
பண்பூட்டும் அருவிநன்னீர் ஆடியண்ணல்
தவம்கண்டு பரவிச் செல்வார். 56

பதினேராண் டுகள்அண்ணல் பகரரிய
அருந்தவத்திற் பதிந்து நின்றார்
பதிபாத மலர்களினின் றுணர்வுசிறி
திறங்குகையில் பக்கத் தங்கே
வதிமரங்கள் தந்திடுகாய் கனியுண்பார்
வாலருவி நீருட் கொள்வார்
எதுவோவொ ரோர்சமயம் *ஊர்க்கேகி
மீண்டும்மலை ஏறிச் செல்வார். 57

அருந்தவத்தில் மூழ்கியிருந் திடுநாளில்
அருவிநன்னீ ராடச் செல்லார்;
பெருந்தவத்திற் பெருகமுதம் மேனியெங்கும்
பெரும்புனிதம் பிறங்கச்செய்யும்;
பொருந்திவிணில் வாழமரர் இவர்தவத்தின்
மாண்புகண்டு போற்றி செய்வார்;
அருந்தவமிவ் வாறியற்றல் அரிதரிதென்
றேமுனிவர் ஆரும் சொல்வார், 58

---

*ஊர்—குற்றால நகர்.

குற்றாலப் பெருமலையில் கோதில்தவம்
புரிமுனிவர் தம்கு ழாமும்
மற்றாரும் அறியாத வகையில் அரு
வாய்த்திகழும் சித்தர் யாரும்
பற்றான தணுவுமின்றிப் பார்வாழ
நோற்றிடுபண் பினர்சீர் நோக்கி
முற்றாத ரத்தினொடும் போற்றிடுவார்
முத்தர்புகழ் மோனி யென்பார். 59

செயற்கரிய செயல்புரிவோர் பெரியரெனத்
திருக்குறளார் செப்பி யாங்கு
மயற்குளமிழ் உயிரனைத்தும் வையமிசை
வாழ்வாங்கு வாழ்ந்தின் பெய்தி
உயப்பெறுதல் வேண்டுமெனப் பெரியரெலாம்
உன்னியதை முடிக்க நோற்கும்
செயற்கரிய செயல்புரியிச் செம்மல்சிறப்
பினையாரே செப்ப வல்லார்? 60

சிறந்த நற்றவமும், சித்தி நிலைகளும்.

சித்தமுத லாம்கருவி யத்தனையும்
இறைகழலிற் சென்றொ டுங்க
முத்தர்களெல் லாம்வாழ்த்த அண்ணலார்
முழுத்தவத்தில் மூழ்கி நின்றார்;
சித்திகளெல் லாம்ஒருங்கு திருவருளால்
கைவந்து திகழ லானார்;
சித்திவிநா யகன்மேலும் மேலும்அவர்க்
கொப்பிலருள் செய்து வந்தான். 61

உருவமே யில்லாமல் அப்படியே
விண்ணிலண்ணல் உலவல் செய்வார்;
ஒருகுகையி லேமறைந்து மற்றுமொரு
குகையினிலே தோன்றி நிற்பார்;
புருவநடுப் பொலிஜோதி மேனியெங்கும்
நிறைவுற்றுப் பொலிதலாலே,
அருவமென உருவமென அருவுருவ
மெனத்திகழும் ஆற்றல் பெற்றார். 62

காற்றேடும் கனலோடும் புனலோடும்
புவியோடும் கலந்து நிற்பார்;
காற்றேயும் கண்டறியா விண்ணவார்;
விணும்காணு வண்ணம் கொள்வார்;
தோற்ருத உருவமுடன் சூரியனிற்
சந்திரனிற் சூழ்ந்து நிற்பார்;
மேற்ருேன்று விண்மீன்கள் பலகோடி
யுட்கலந்து விளக்கம் செய்வார் 63

எவ்வுலகத் திலும்சென்ருங் காங்கும்இறை
யருளோங்கி யிலங்கச் செய்வார்;
எவ்வுலகத் தினும்உள்ள தீதகல
இனியநலம் பெருகச் செய்வார்;
எவ்வுலகத் தினும்மேவும் இடரகல
இன்பவொளி கூடச் செய்வார்;
எவ்வுலகத் தினும்நிறைந்த இறையருளின்
திறம்உணர்ந்தே ஏததி நிற்பார். 64

எவ்வுயிரின் இயல்பினேயும் இம்மெனுமுன்
அறிந்துள்ளத் திரக்கம் கொள்வார்;
எவ்வுயிரும் மயல்நீங்கி இறையருளில்
இனிதொன்ற வேண்டும் என்பார்;
எவ்வுயிரும் துன்பமின்றி இன்பமுடன்
இலங்கவிழைந் திறைஞ்சி நிற்பார்;
எவ்வுயிரும் இறைமயமாய் இலங்கிடல்கண்
டிறையருளின் மயமே யாவார். 65

செவ்வையுறத் தவத்தின்கண் ஆழ்ந்தினிது
திருவருளில் தோய்ந்து நின்ருர்;
எவ்வமெலாம் தீர்த்துலவா இன்பநலம்
எவர்க்கும்அருள் ஆற்றல் பெற்ருர்;
எவ்வுலகும் எவ்வுயிரும் எவ்வணுவும்
போற்றுமுய ரிரக்கம் கொண்டார்;
எவ்விடத்தும் நீக்கமின்றி நிறைந்தொளிரும்
இறையருளின் மயமே யாஞர். 66

ஆங்காங்கும் அற்புதமாய்ப் பரவிநிறை
அருளியக்கத் தன்மை கண்டார்;
ஆங்காங்கும் அணுவினிற்சிற் றணுவினுளும்
அதுபுரியற் புதங்கள் கண்டார்;
ஆங்காங்கும் அமையிருளை அழுக்கையகற்
றித்தூய்மை யாக்கல் கண்டார்;
ஆங்காங்கும் இடர்நீக்கி அன்பூட்டி
இன்பவொளி யாக்கல் கண்டார். 67

எவ்வொருசிற் றுயிரினுளும் இறைவனருள்
இனிதுநிறைந் திலங்கல் கண்டார்;
எவ்வொருசிற் றுயிர்புரியும் பிழைக்குமிறை
தண்டனைநல் கியல்பும் கண்டார்;
எவ்வொருசிற் றுயிர்க்குமுறு நோய்க்கும்மருந்
தாய்அருளே இலங்கல் கண்டார்;
எவ்வொருசிற் றுயிர்க்குமுயி ராய்த்துணையாய்
இறைவனரு ளிலங்கல் கண்டார். 68

பல்லாயி ரங்கோடி உலகமென
விரியும்அருட் பான்மை கண்டார்;
பல்லாயி ரங்கோடி உயிர்வகையாய்
உலவும்அருட் பண்பு கண்டார்;
பல்லாயி ரங்கோடி அணுக்கள்தொறும்
பூரணமாம் பாங்கும் கண்டார்;
பல்லாயி ரங்கோடி நினைவுமொழி
செயல்களின்கா ரணமும் கண்டார். 69

ஜோதியெந்தப் பொருளினுளும் உலகினுளும்
உயிரினுளும் துலங்கல் கண்டார்;
நீதியெந்த உயிரினுளும் அணுவினுளும்
நிறைந்திலங்கும் நீர்மை கண்டார்
ஓதியெவ ராலுமுணர் தற்கரிதிவ்
வுண்மையெலாம் எனவுட் கொண்டார்;
ஆதிநடு அந்தமிலா அருளிறைவன்
கருணையினுள் ளாழ்ந்து நின்றார். 70

சத்தாகிச் சித்தாகி ஆனந்த
மயமான தன்மை கண்டார்;
சித்தாந்தம் வேதாந்தம் முதலான
ஆறந்தத் தெளிவு கண்டார்;
சுத்தாசுத் தம்கடந்து துரியநிலை
கடந்துநிற்கும் தோற்றம் கண்டார்;
சொத்தாகிச் சொத்தனைத்திற் குரியனவன்
எனத்திகழும் சூக்மம் கண்டார். 71

வித்தாகி முளையாகி விளைவனைத்தும்
அவனேயாம் விளக்கம் கண்டார்;
பத்தாகி யொன்றாகிப் பலநூறாய்
அனந்தமுமாம் பான்மை கண்டார்;
பர்த்தாவாய்ப் பன்னியுமாய்ப் பலவுறவும்
அவனேயாம் பரிசும் கண்டார்;
கர்த்தாவாய்க் கர்மமுமாய்க் கர்மபலன்
களும்அவனும் தன்மை கண்டார். 72

காலமொரு மூன்றாகிக் காலநிலை
கடந்தொளிர்கா ரணமும் கண்டார்;
ஆலநிழ லமர்திறமும் ஆலிலையிற்
றுயில்திறமும் அனைத்தும் கண்டார்;
ஏலஅனைத் தும்படைக்கும் திறமுமைந்து
தொழில்புரியும் இயல்பும் கண்டார்;
மூலநடு முடிவறியா முழுமுதலின்
விழுநிலையில் மோன மானார். 73

தூலமொடு சூக்குமமும் காரணமும்
கடந்திலகு தொன்மை கண்டார்;
நீலமுடன் பலநிறமாய் நிலவுதிரை
கடந்தொளிரும் நிலையும் கண்டார்;
மாலனைத்தும் தவிர்த்துயர்ந்த மாஞான
மயமாகும் மார்க்கம் கண்டார்;
வாலறிவன் அனைத்துயிர்க்கும் வழிகாட்டும்
வான்பொருளாய் வயங்கல் கண்டார். 74

யாண்டும்நிறைந் திலகுமுயர் இறையருளின்
ஒண்சிறப்பை யினிது கண்டே
தூண்டுசுடர் விளக்காகிச் சுயஞ்ஜோதி
மயமாகித் துலங்கும் அண்ணல்
மீண்டும்உயர் பெருந்தவத்தில் மெய்ம்மறந்து
மூழ்கிடலும் விண்ணும் மண்ணும்
வேண்டும்வரம் யாவும்இனி எளிதுபெற
லாகுமென்றார் விண்ணோ ரெல்லாம். 75

அங்கயற்கண்ணம்மை அருட்காட்சி

அடல்மிகுத்த தவம்புரியும் அண்ணலின்முன்
அங்கயற்கண் அம்மை தோன்றி
உடலைவருத் திடுமுயர்ந்த தவமுனக்கேன்
உரையாய்என் றன்பாற் கேட்க,
கடகரிநன் முகப்பரிபூர் ணன்றனருட்
கருணையினை நிரம்பப் பெற்றுப்
புடவியில்வா ழுயிர்களிடை யூறின்றி
இன்பமுற்றுப் பொலிய என்றார். 76

வையமிசை வாழுயிர்கள் பேரின்ப
வாழ்வாற்ற வழிசெய் யற்கே
செய்தவமீ தென்றண்ணல் திருவிழியி
லானந்த பாஷ்பம் பொங்க
மைதிகழங் கயற்கண்ணி யம்மைதிரு
மலரடியை வணங்கிக் கூற,
செய்தியைக்கேட் டருளன்னை நினதுசெயல்
வெல்கவென அருள்செய் திட்டாள். 77

வாழ்த்தியன்னை மறைந்திடவும் அருளண்ணல்
வண்தவத்தில் மூழ்க லானார்;
நேர்த்திமிகு பேருக்கம் தோன்றிடலும்
நீக்கமிலாத் தூய மோனம்
வாய்த்திடநற் பெரியநிலை கைகூட
வள்ளலிவர் காற்றுப் பட்டால்
நீத்தஉயிர் பிழைத்தெழுதல் கண்டுசற்றும்
மயங்காத நிலையில் நின்றார். 78

சித்திகளில் மயங்காமை

எண்ணில்பல சித்திகளும் இபமுகவன்
திருவருளால் இனிதே யெய்த,
அண்ணல்மகிழ் வடையாமல் அவைகளினுல்
மயங்காமல், அவனி மீதில்
திண்ணியநற் றவம்புரிதல் திருவருளை
யெய்துதற்கே யாகும்; சித்தால்
நண்ணுபிற விகள்பெருக்கற் கன்றென்ன
நாதனடி போற்ற லானுர். 79

* போதுமையே போதும்அருட் பூரணனே
எடுத்தஜென்மம் போதும் போதும்,
ஏதுமறி யாப்பாலன் என்றேநீ
எத்தனையோ ஜென்ம மாக
நாதஉயர் பரமுத்தி யருளாமல்
நயமாக ஏமாற் றிட்டாய்;
போதுமையே போதுமினி எடுத்தஜென்மம்
எனவுரைத்தேன் போதும் போதும். 80

வேறு

என்றெல்லாம் பலவாருய் எடுத்தியம்பி
எந்தைபரி பூர ணன்தாள்
நன்றுதுதித் தருள்நாடி நற்றவத்தில்
நம்பிநனி மூழ்க லானுர்;
என்றுமெங்கும் தானுகி இணையிலரு
ளாட்சிசெயும் எந்தை முன்னேன்
பொன்றலில்சீ ரண்ணல் திறம் புலப்படுத்தற்
கொருசெயலைப் புரிய லுற்றுன். 81

அகந்தையை வெல்லல்

ராசததா மதசத்வ குணமூன்றும்,
நானென்ன எழுந்தி ருக்கும்
பேசரிய ஆங்காரமும்கூடிப்
பேயுருவில் அடிக்கத் தோன்ற,

*போதும் போதும் ஐயே—ஆண்டவர் அருட்பாடல்.

தேசுமிகும் அண்ணல் இவண் நெருங்காதே,
செல்களனச் செப்ப ஞானத்
தேசின்எதிர் நிற்கவொணு தகங்காரம்
பொடியாகிச் சிதைந்த தம்மா. 82

மாயையை வெல்லல்

மாயையொரு பெண்ணுருக்கொண் டெதிர்தோன்றி
இனியபல மாற்றம் கூறத்
தூயஇவர் ஒளிபடலும் அம்மாயை
யின்சக்தி துகளாய்ப் போக,
மேயஒற்றைக் கொம்பனரு ளொளிதோன்றக்
கழலடிமுன் விளங்கக் கண்டார்
ஏயபற்றெல் லாமுமறப் பரத்தைவிழைந்
திருகநனி பற்றிக் கொண்டார். 83

எவ்விடமும் எப்பொருளும் எவ்வுயிரும்
ஓமென்ன இலங்கு கின்ற
செவ்வியநன் மறையொலியாய்த் தெய்விகம்
திகழொளியாய்ச் செறிந்து தோன்ற,
திவ்வியமாய்ப் பரிபூர்ணர் அவதாரத்
திருக்காட்சி கண்டார் அண்ணல்;
இவ்வுலகர் உணரும்வணம் இனியசந்தப்
பாவடிவில் இயம்ப லுற்றார். 84

‡ கதிரொளிகொள் மாமணிகள் கனகமிழைத்
துக்கோத்துக் கழுத்திற் பூண்டு
கதிகொள்கரு முகில்போல்நீள் குழல்சோரக்
கலவிவிளைத் தணைத்து நாவில்
முதிர்கனியி னமிர்தமதைப் பெருக்கியெழில்
மொட்டலர்த்தும் மணமே கூடும்
பதிசயனத் தினில்லீலை தவருமல்
பகவனிடம் சுகித்த கௌரி, 85

பரவசமுற் றுத்தனித்த உரைபகர்ந்தே
உயர்புத்ரப் பலனை வேண்டப்
பரமனுமொப் புக்கொடுக்க இனிதுகண
பதியுமுற்ப விக்க நாட

‡ "கதிரொளிபெற்று"—ஆண்டவர் அருட்பாடல்

ஒருசிறிதும் சலனமின்றி உமையொடரன்
உயர்ந்ததவம் முடிக்கத் தூய
பெருவயிறு துதிக்கையொடு தளதளெனக்
களிற்றுமுகன் பிறங்க லுற்றான். 86

மதிவதனத் தைக்குறித்த பார்வையொடு
மகவையுமை முத்த மாடி
உதிபரம போதமெனும் பாலருத்திப்
பருவயிற்றி லுறநி ரப்பிப்
பதியினொடும் இனிதமர்த்திப் பரிந்துமகிழ்
கோலமுடன் பரமா னந்த
கதிக்குரிய நேர்வழியைக் காட்டுமல
ரடியெழிலும் கண்டின் புற்றார். 87

என்றுமுளத் தினில்நிலைத்து நிற்குமல
ரடியெழிலை இனிது பாடி
நன்றருளாற் கண்டஅந்த நற்காட்சி
யினைநினைந்து நினைந்து போற்றித்
துன்றுமகிழ் வெய்தியிரு விழிகளுமே
யானந்த நீர்து ளிப்ப
ஒன்றியபே ருணர்வோடும் உள்ளம்உயர்
நிலையிலுற உவந்தார் அண்ணல். 88

சிவனொடுமை செய்தவத்தால் திருவவதா
ரம்செய்விநா யகனே, என்றும்
தவம்புரிவோர் உறுதியுடன் பற்றவேண்
டியதெய்வம், மூலா தாரத்
தவக்கனலாய் விளங்குதெய்வம், ஓங்காரத்
தனிமூல மறையாம் தெய்வம்,
உவமைசொலற் கரியதெய்வம், உயர்வருளி
அமுதூட்டும் தெய்வம் என்றார். 89

பலசமய வேதமுமாய்ப் பலசமய
மந்திரமாய்ப் பாரில் மேவும்
பலசமய உண்மைகளாய்ப் பலசமய
மூர்த்திகளாய்ப் பரந்து நின்று

பலசமய மக்களையும் பல்லாயி
ரங்கோடி யண்டத் துள்ள
பலவுயிரை யும்புரக்கும் பரமனவன்
எனஉணர்ந்து பரவி நின்றார். 90

செப்பரிய உயர் நிலையில் அண்ணலுளம்
திளைத்துநிற்கத் திகழ்முன் னேனின்
ஒப்புயர்வில் திருவடிகள் ஒளிர்வீரக்
கழலொடும் ஒண் காட்சி நல்க
மைப்படிந்த கண்ணியுமை யம்மையுடன்
மகிழ்ந்தாடு கின்ற கூத்தும்
அப்படியங் கவர்திகழும் கோபுரவா
யிலும்சதங்கை ஆர்ப்பும் கண்டார். 91

*ஆத்தாளு டன்கூடி அன்புடனே
வாதாடி அருளார் முன்னோன்
கூத்தாடி நின்றான்நற் கோபுரவா
யிலிலென்னக் குறித்த பாவால்
காத்தாளும் பரிபூர்ணன் அருளினையும்
கழல்நாடும் அடியார் தங்கள்
பூத்தாளின் சிறப்பினையும் அத்தாள்தொண்
டருள்நலமும் போற்ற லானார். 92

அக்கணத்திற் பரிபூர்ணன் திருவருளால்
அண்ணலார் அகத்திற் குள்ளே
முக்குணமும் ஆணவமா யாகன்ம
மும்மலமு மாகி யெங்கும்
தொக்கதிரி புரங்களையும் துகளின்றி
அடியோடு தகனம் செய்தான்;
தக்கஅந்தப் பரிசுணர்ந்த அண்ணல்அருட்
பாடல்இசைத் தேத்தி நின்றார்.† 93

காரணமாம் ஆருதா ரங்களிலும்
பரிபூர்ணன் கருணை யாலே
பூரணமாம் நிலையடைந்து தவத்திலுயர்
பொலிவெய்திப் புனித மோங்கி

* ஆத்தாளுடன் கூடி †திரிபுரதகனம் —ஆண்டவர் அருட்பாடல்கள்.

ஆரணங்கள் போற்றுமுயர் நிலையடையச்
சக்தியவண் ஒடுங்க மேலாம்
சீரணவு நிலையடைந்து செப்பரிதாம்
பிரமமெனத் திகழ லானர். 94

ஆழியினி லிருந்துசென்ற நீர்பலபேர்,
உருவங்க ளடைந்து மீண்டும்.
ஆழியினுட் புகுவதுபோல் அருந்தவத்தால்
புறப்பட்ட இடத்துக் கான்மா
ஊழின்வலி யினையெரித்தொப் புயர்விலருட்
பரம்பொருள்பாற் சென்றே யொன்றும்
கேழ்கிளரிப் பெருநெறியை மறையனைத்தும்
நூலனைத்தும் கிளத்தும் நன்றே. 95

குருவின்துணை தவத்தினுக்கு மிகத்தேவை;
ஒருவன்பரி பூர்ண மாகக்
குருவினுக்குத் தொண்டுசெயின் குறைவில்தவ
நிலையையவன் எய்த லாகும்;
பரிபூர்ண கணபதியே அண்ணலுக்குப்
பரிவுமிகும் குருவாய் வந்தார்;
மருவுபல உருவொடவர் வந்துமண்ணல்
கள்ளமின்றித் தொண்டு செய்தார்; 96

மலைக்குகையி லமர்போதில் தூலகுரு
வாய்ப்பூர்ணர் மாண்பாய்த் தோன்றி,
இலகுமுப தேசமண்ணற் கியம்பினர்நல்
இறுதிநிலை வரைஅ வர்க்கே
உலைவில்உயர் காரணசற் குருவாகிக்
கருணைபுரிந் தினிதொ ளிர்ந்தார்
மலைவிலுயர் மாஞான நிலையெய்தி
அருளண்ணல் வயங்க லானர். 97

மனம்என்ப தொருகுகையாம், அக்குகையில்
மல்கியுள இருளைப் போக்கத்
தினம்தூய பரிபூர்ணர் திருவடித்தா
மரைதிகழப் பதிய வைத்துப்

பினர்ஆன்மா குகையினுளே யினிதமர்ந்து
தூயதவம் பேணி நின்றால்,
உனற்கரிய அருள்ஞான முத்தியுறும்;
பேரின்பம் ஓங்கு மாலோ. 98

திரிமூர்த்தி களும்அண்ணல் செய்தவத்தின்
திறல்கண்டு மகிழ்ந்தோ ராகிப்
பெருகுமுயர் கருணையோடும் போந்தருளிப்
பேறேதுநீ விழைந்தாய் என்ன,
விரிபுவிவா ழுயிர்களெலாம் பேரின்பம்
பெறுநெறியே விழைந்தே னென்றார்;
பரிபூர்ண ரேயருள்வார்; எமக்கியலா
தெனமுவர் பகர்ந்து சென்றார். 99

மதுரைநக ரினில்வைகைத் தென்கரையில்
காட்சிதந்து மாலை சூட்டிப்
புதுமணங்கொண் டருட்கருணை புரிந்தாண்ட
ஞானபரி பூர்ண மூர்த்தி
முதிர்தவத்திற் குவந்தருள்பா லிக்கவுன்னி
அமரர்கள்பால் மொழிய, விண்ணில்
வதியமரர் முன்னவன்றன் ஆணையினால்
குகையருகில் வந்து சூழ்ந்தார். 100

கருணைமுகில் போல்கறுத்த நீள்முடியும்
மெய்ஞ்ஞானக் கனலே வீசும்
திருமுகமும் தவத்தின்உயர் வினைக்காட்டும்
திருமேனிப் பொலிவும் கண்டே
அருளேனும்பாற் கடலுருவம் அன்பெனும்விண்
ணமுதுருவம் அலகில் ஞானத்
தெருளுருவம் இவ்வண்ணல் திருவுருவம்
எனத்தேவர் போற்றி செய்தார். 101

### பரிபூர்ணர் தரிசனம்

அப்போதும் இறையருளில் நீங்காப்பே
ரன்பினோடும் அண்ணல் நோற்கப்
பொற்பார்ந்த வைகாசிப் பௌர்ணமியில்
பரிபூர்ணர் போந்து நின்றார்

உட்பூத்த உயரன்பால் அத்தனடி
பற்றியினி துருகி ஒப்பில்
நட்போடு மிகஅழுது கதறினர்
ஞானஅண்ணல் ஞாலம் உய்ய. 102

பரிபூர்ணப் பெருமான் விஸ்வரூப தரிசனம்

தவமமர்ந்து தரணியில்வாழ் உயிர்களுக்குச்
சட்டநெறி தரற்குப் போந்தோர்
உவமையிலாப் பரிபூர்ண கணபதியின்
விஸ்வஉரு வத்தைக் கண்டார்
அவனிமுதல் அனைத்துலகங் களும்அவர்க்குள்
அடங்கியுள அமைப்பும் கண்டார்
அவமறுக்க உயிரனைத்தும் அவர்க்குளமை
வதும்விளக்கம் அனைத்தும் கண்டார். 103

பல்லாயி ரங்கோடி யண்டங்கள்
பரிபூர்ணர் உருவிற் கண்டார்
எல்லாமும் உண்டாக்கும் மலரவன்மால்
உருத்திரன் மகேசனோடு
வில்லார்ச தாசிவன்நல் விந்துநா
தாதிகள்வி ளங்கக் கண்டார்
சொல்லீயும் வாணிதிரு கவுரிமகேச்
சுவரிமனோன் மணியும் கண்டார். 104

கந்தருவர் கிம்புருடர் வித்தியா
தரர்சித்தர் கருடர் பூதர்
அந்தரர்கின் னரர்இயக்கர் முனிவரர்பன்
னகர்அசுரர் அரக்கர் போகர்
இந்திரன்அக் கினிநிருதி யமன்வருணன்
ஈசானன் தனதன் வாயு
சந்திரர்ஆகாயத்தர் தைத்தியர்பை
சாசர்பிற தரையும் கண்டார். 105

பலகடல்கள்பலமலைகள் பலநதிகள்
பலநிறங்கள் பலமே கங்கள்
பலமனிதர் பலவிலங்கு பலபறவை
பலதருக்கள் கனிகள் பூக்கள்

பலகடல்வா ழுயிரினங்கள் காற்றினில்வாழ்
உயிரினங்கள் பலவும் கண்டார்;
பலஒலிகள் பலஒளிகள் பலபொருட்கள்
பலநிலைகள் செயல்கள் கண்டார். 106

பலகோடி நாமஉரு வத்தோடும்
பலப்பலவாம் வண்ணத் தோடும்
பலப்பலவா கித்தூய ஒளிவீசிப்
பகைதவிர்ஆ யுதங்க ளோடும்
பலகோடி வகையான கணபதியின்
படிவங்கள் அருளாற் கண்டார்;
பலகோடி வகையான சக்தியர்கள்
பக்கலமைந் திலகல் கண்டார். 107

பல்லாயி ரங்கோடி யண்டங்க
ளிலும்மேலாம் பரிபூர் ணன்றன்
பல்லாயி ரங்கோடி யருட்செயல்கள்
பாங்காக நிகழ்தல் கண்டார்;
பல்லாயி ரம்கோடிப் பூதகணங்
களும்தேவர் குழுவும் ஏனை
எல்லாரும் பரிபூர்ணன் அருளாணைப்
படிஇயங்கும் பாங்கும் கண்டார். 108

திக்கனைத்தும் செறியனந்தம் திருமுகங்கள்,
திருக்கரங்கள் செவிகள், கண்கள்,
மிக்கவொளி வீசுதிவ்யா பரணங்கள்,
மிகுதிறலார் ஆயு தங்கள்,
மிக்கமண முடையபல விதமலரின்
மாலைகள்,தெய் விகஉ டைகள்,
தொக்கபல கோடிகதி ரொளி,கோடி
தூமதியின் குளிர்ந்த தன்மை 109

யாவுமொருங் கமைதோற்றம், பெருவியப்பார்
பேரொளியோ டிலகு சீர்மை,
மேவுமுதல் நடுமுடிவை எவராலும்
அறிவரிதாம் மேலாம் பான்மை

ஒவறுபே ராற்றலெலாம் உடையபரி
பூரணர்பே ரருளைக் கண்டு
பூவிலுறை பிரமன்முத லைந்தொழில்செய்
புங்கவரும் போற்றல் கண்டார். 110

உருத்திரர்பத் தொருகோடி தினகரர்பன்
னிருகோடி உயர்வ சுக்கள்
உருத்திகழ்எண் கோடிமருத் துவரிரண்டு
கோடியென ஒளிரல் கண்டார்;
பொருத்தமுறு காலமந்த்ரம் கலைதத்வம்
புவனம்பதம் வன்னம் கண்டார்;
பருத்தபல பொருள்கள்மிக நுண்பொருள்கள்
பார்க்கரிதாம் பொருள்கள் கண்டார். 111

தோன்றியும்தோன் றாதிருந்தும் சொல்லுமிவை
யிரண்டினுக்கும் அப்பாற் பட்டும்
சான்றெனஎப் பொருளினுளும் அணுவினுளும்
உயிரினுளும் சார்ந்த வொன்றாய்,
வான்றிகழ்பற் பலகோடி தேவர்சித்தர்
முனிவரெலாம் வழுத்து மொன்றாய்,
ஈன்றவர்சற் குருதெய்வம் எவ்வுயிர்க்கு
மெனுமொன்றாய் இலகல் கண்டார், 112

தும்புருநா ரதராதி இசைவல்லோர்
யாழ்மிழற்றத் துடித டாரி
பம்பைமுர சம்சங்கம் சச்சரிமத்
தளம் தாளம் பலமுழங்க
அம்பரம்வாழ் அரமகளிர் அட்டமங்க
லமுமேந்தி அருட்சீர் பாட
எம்பெருமா னேயென்று ஞானியரெல்
லாம்வழுத்தி யேத்தல் கண்டார். 113

பூதகணம் வெண்கொற்றக் குடைதாங்கப்
புனிதவெண்சா மரைகள் வீச
வேதமெலாம் இனிதிசைத்துப் பற்பலரு
ளாளர்குழாம் விரும்பி யேத்த

நாதமெலாம் நன்றொலிக்க நற்ப்ரணவ
மறையோதி முனிவர் வாழ்த்தப்
போதமிகு மேலோர்கள் போற்றவொளிர்
பூர்ணர்அரு ளுருவைக் கண்டார். 114

பரிபூர்ணப் பெருமான் தண் ணருள்நாடிப்
பாரில்தவம் புரிந்த அண்ணல்
அருள்ஞானத் திருவிழியால் அருட்பரிபூர்
ணன்திருப்பே ருருவந் தன்னில்
அருள்ஞானக் காட்சிபல கண்டுபுளா
காங்கிதமுற் றருளே யானார்
அருள்ஞான ஆனந்த நிறைவடைந்த
அவர்தன்மை அறைதற் காமோ? 115

அனைத்துலகும் அனைத்துயிரும் அவன்தானென்
பதையறிந்தன் புருவ மானார்;
அனைதந்தை அவனேமற் றனைத்துமவ
னேயென்றோர்ந் தருளே யானார்;
நினைப்பரிய அண்டசரா சரமேக
மாய்நின்ற நிமல ஜோதி
தனைச்சுருதி யத்தனையும் சொன்னமொழி
சத்யமென உணர்ந்தேத் திட்டார். 116

பரிபூர்ண விநாயகர் துதி

திருவருள் வடிவா யெங்கும்
செறியும்சிற் பரனே போற்றி
உருவம்பல் கோடி யாகி
அருவமு மானாய் போற்றி
குருவென வந்து வந்தென்
குறையெலாம் தவிர்த்தாய் போற்றி
பருவபக் குவமெல் லாமும்
வழங்கியாள் பரனே போற்றி. 117

வேதம்பல் கோடி போற்றும்
விமலமா மணியே போற்றி
போதமிக் கூட்டி நன்று
புரக்கும் பூரணனே போற்றி

ஏதமெல் லாமும் நீக்கும்
இனியவொண் சுடரே போற்றி
நாதமா முடியில் தூய
நடனம்செய் நம்பா போற்றி. 118

பருவரல் பலவும் நீக்கும்
பர்க்கனு யொளிர்வாய் போற்றி
வருவினை யனைத்தும் நீக்க
வல்லநற் றிறலோய் போற்றி
புருவநன் னடுவிற் றேன்றும்
பொலிவுசால் ஜோதீ போற்றி
அருவிபோ லருளைப் பெய்யும்
ஆனந்த உருவா போற்றி. 119

அனைத்துல கினையும் நின்னுள்
அமைத்துக்காத் தருள்வாய் போற்றி
அனைத்துயிர் களையும் நின்னுள்
அடக்கியாண் டருள்வாய் போற்றி
அனைத்துரு வமுமாய் மேவும்
அனைத்தொளி யானுய் போற்றி
அனைத்தொலி களுமாய்ச் சூழும்
அனைத்தின்ப மானுய் போற்றி. 120

அனந்தமாம் முகமும் காதும்
கண்களும் உடையாய் போற்றி
அனந்தமாம் வாயும் கையும்
உடையஆண் டகையே போற்றி
அனந்தமாம் செயலும் செய்யும்
ஆற்றல்மிக் கவனே போற்றி
அனந்தமாம் மறையாய்த் தோன்றும்
அனந்தமாம் வடிவோய் போற்றி. 121

வேறு

பலகோடிப் பகலவர்க ளொருங்குதித்தாற்
போலவொளிர் பரமா போற்றி
பலகோடி முழுமதியின் நிலவனைய
கருணையொளிப் பகவா போற்றி

பலகோடி ஞானியர்மெய்ஞ் ஞானவொளி
படர்ந்தனைய பண்பா போற்றி
பலகோடி பிறவிகளிற் செய்ததவம்
பலித்ததுபோல் போந்தாய் போற்றி. 122

நித்தியமாய் நின்மலமாய் நிர்க்குணமாய்
நிராமயமாய் நிறைந்தாய் போற்றி
பத்தியெனக் கன்மமென யோகமென
ஞானமெனப் படர்ந்தாய் போற்றி
சித்திவகை எண்ணிலவும் எனக்களித்துச்
சிறப்பளித்த செல்வா போற்றி
முத்திநலம் விளைவித்து முத்தனென
எனைப்புரிந்த முதல்வா போற்றி. 123

அம்மையென அப்பனென ஆசிரியன்
தெய்வமென அமைந்தாய் போற்றி
இம்மைநலம் மறுமைநலம் எல்லாமும்
கூட்டுவிக்கும் இறைவா போற்றி
செம்மையெலாம் எனக்களித்துச் சிவஞான
அமுதருத்தும் தேவா போற்றி
மும்மைமல தகனம்எனக் குள்நடத்தும்
மோனகுரு மணியே போற்றி. 124

தேவர்களும் முனிவர்களும் வழுத்தியினி
தேத்திடுசெம் பொருளே போற்றி
மூவர்களை யுண்டாக்கி முத்தொழிலும்
வழங்குமுழு முதலே போற்றி
நாவினிலும் உளத்தினிலும் நற்பிரணவ
மறைபதித்த நாதா போற்றி
பாவகையெல் லாமேற்றுப் பரிந்துமணம்
புரிந்தமண வாளா போற்றி. 125

காற்றுகனல் நீர்நிலம்சிற் ககனமெனக்
கவின்செய்கண பதியே போற்றி
மாற்றுயர்ந்த செம்பொனென எளியனைமாற்
றிட்டஅருள் மணியே போற்றி

ஆற்றலெலாம் இனிதருளி அனைத்துயிர்க்கும்
அருள்வழங்கப் புரிந்தாய் போற்றி
நோற்றிடவைத் தந்நோன்பின் பயனருளும்
நோக்கமுடன் போந்தாய் போற்றி. 126

என்றெல்லாம் பலவாறும் இனிதேத்தி
இருகரமும் சிரமேற் கூப்பி
நன்றிருகண் களுமின்பப் புனல்சொரிய
நாவின்மொழி தழுத முக்க
என்றுமிலாப் பொலிவோடு மிலகுதிரு
மேனியினிற் புளகம் போர்ப்ப
ஒன்றுதிரு வருளுருவாய் ஒப்பிலண்ணல்
உளமுருகிப் போற்றி செய்தார். 127

குருநாதர் பரிபூர்ணர் உரையாடல்

அக்கணத்தில் பரிபூர்ண மூர்த்தியளப்
பரும்பலவாம் கோடி யண்டம்
தொக்கதிருப் பேருருவத் தினைமாற்றித்
தொன்மையுரு வோடும் தோன்றி
மிக்கபரி வோடுமுய ரருட்கருணை
விழிநோக்கை யருளி யங்ஙன்
தக்கபக்கு வத்தொடொளிர் அண்ணலிடம்
இவ்வாறு சாற்ற லுற்றார். 128

உனக்குவேண் டியதென்ன என்றுபரி
பூரணனார் ஒப்பி லன்பால்
வினவிடவும், அண்ணலார் பூதலத்தில்
மேவியுறை உயிர்க ளேல்லாம்
சனனமர ணங்கடந்த முத்திபெறற்
கேளியநெறி சாற்று கென்றார்;
உனக்குமுத்தி தருகின்றோம், உலகுதிருந்
திடஉழைப்ப தேன்நீ என்றார். 129

தனக்கிணையில் பரிபூர்ணர் இவ்வாறு
சாற்றிடலும், சாந்த சீலர்
எனக்குமட்டும் முத்தியெனில் யான்விரும்பேன்,
எல்லோர்க்கும் தருவீர், என்றார்;

உனக்குயர்ந்த சொர்க்காதி போகமெலாம்
தருகின்றோம் உவப்போ டேற்பாய்
நினைக்கும்வணம் உலகுய்ய நீபாடு
படலேனோ என்றார் பூர்ணர். 130

எந்தசொர்க்க போகமும்யான் மட்டுமினி
தனுபவிக்க விரும்ப வில்லை,
உந்தம்மலர்த் திவடியை நாடிவரும்
அனைத்தடியார் களும்உய் வெய்தப்
பந்தமற்ற விடுதலையை அருளுவதாய்
வாக்களிப்பீர்; பரம னேநீர்
இந்தவிதம் ஏமாற்று செய்வதினிப்
பலிக்காதிங் கென்றார் அண்ணல். 131

இக்காட்சி அடிமைக்குத் தந்ததுபோ
தா(து)இதன் நற் பயனாய் வையத்
தெக்காலத் திலும்நுமது திருவடிப்பே
றெவ்வுயிரும் எய்தல் வேண்டும்
சொர்க்காதி போகங்கள் துய்த்திடற்கு
விழையாமல், தொன்மா யைக்குள்
சிக்காமல், பரமபதப் பேரின்பம்
தெவிட்டாமல் நுகர்தல் வேண்டும். 132

அதற்கேற்ற அருள்நெறியை அனைத்துயிரும்
கைக்கொளுமா றருளல் வேண்டும்;
எதற்கேனும் எவரேனும் எவருதவி
யும்கோரா திலகல் வேண்டும்;
எதற்கெனினும் எவர்க்கெனினும் எப்பொழுதும்
நீர்துணையாய் இருத்தல் வேண்டும்;
இதைத்தருவீர், வேறெதுவும் யான்விழையேன்
என்பதியே என்றார் பின்னும். 133

அண்ணலிவ்வா றருள்ஞானப் பரிபூர்ணர்
பால்அவனி உயிர்கட் காக
எண்ணரிய பெருங்கருணை பூண்டினிதே
இறைஞ்சிடப் பூரணர் உரைப்பார்

மண்ணுலகும் விண்ணுலகும் செய்ததவப்
பயனால்நீ வந்து தித்தாய்
திண்ணியநற் றவம்எவரும் செய்யாத
வணம்செய்து சிறந்து நின்றாய். 134

அவனிமிசை பற்றறுதல் தவத்தின்முதற்
படியாகும்; அமரர் காட்சி
தவத்தினிரண் டாம்படி;குண் டலியேறல்
தகுமூன்றாம் படிய தாகும்;
உவமையில்கா ரணகுருவின் தரிசனம்உள்
ளேகாணல் நான்காம்; ஒப்பில்
தவஅமுதம் அருந்தலைந்தாம்; ஸஹஸ்ராரத்
தருளுருவொ டமர்தல் ஆறும்; 135

அங்குள்ள பரமாத்மா வுடன்ஆத்மா
கலந்திரண்டும் ஒன்றே யாகும்
துங்கமிகு துரியவெளி யினில்உலகைக்
கடந்துநிற்றல், சூழ்பே ரின்பம்
எங்குமென்றும் அனுபவித்தல், யாண்டுமெந்தப்
பொருள்களுளும் இறையைக் காணல்
மங்களம்எங் கணும்பொலிய அருள்வாழ்வாற்
றிடல்ஏழாம் படியாய் மன்னும். 136

மிகஉயர்ந்த இவ்வேழாம் படியினில்நீ
விளங்குகிறாய்; முற்சென் மத்தில்
தகவுறுநம் 'சாரூப' நிலையெய்தித்
தண்கயிலை யினிற்றி கழ்ந்தாய்;
சகமிசைநல் லருளாளர் கனவனைத்தும்
நனவாகும் சமய மீதென்(று)
இகநலமும் பரநலமும் தருநெறியை
இவண்நல்க அனுப்பி வைத்தோம். 137

தன்னிகரில் சாயுஜ்ய நிலையெய்தத்
தகுதிமிகப் பெற்றி ருந்தும்,
மன்னுமந்த நிலையெய்த விழையாமல்
வையமுய்ய விழைந்து நின்றாய்;

நின்னுயர்ந்த திருவுளம்கண் டகமகிழ்ந்தோம்:
நீகேட்ட வரம்அளித்தோம்;
பன்னரிய அருட்சட்ட நெறிநன்று
பரவிஇன்பம் வழங்கும் என்றார். 138

இதுவரையில் நின்னுளத்தில் எண்ணியிருந்
திட்டதிட்டம் இனிய தாகும்:
மதமனைத்தின் சாரம்அது வேயாகும்;
வாழும்வழி அதுவே யாகும்;
இதமுறநன் றதையுலகுக் கியம்பிடுவாய்;
எவ்வுயிரும் பேணச் செய்வாய்;
உதவுபெருந் துணையாகி உயிர்கள்தொறும்
உளும்புறமும் மேவிக் காப்பாய். 139

தூயஅரு ளரசாட்சி யுனக்களித்தோம்;
புவியிலுறு துன்பம் தீர்த்து
மேயபர மானந்தம் எவ்வுயிரும்
பெறப்புரிவாய் எனவிளம்ப
நாயகனே உறுதிகொடுத் தருள்வாய்என்(று)
அண்ணலார் நன்று போற்றத்
தூயஅண்ணல் கரத்திற்கரம் வைத்துடையோன்
உறுதிமொழி சொலிம றைந்தான். 140

அண்ணலார் விழைந்தபடி அருள்ஞானப்
பரிபூர்ணர் அருள்செய் திட்ட
தெண்ணியெண்ணி இயம்பவொணுப் பெருமகிழ்வுற்
றானந்த பாஷ்பம் பொங்க
எண்ணிலுயிர் களின்பாலும் நினக்குள்ள
அருட்கருணை யென்னே யென்று
நண்ணுமுய ரன்போடும் பலவாறாய்
நன்றேத்திப் பொலிந்தார் அண்ணல். 141

பைந்நாகப் பூணூல்கொள் பரிபூர்ணர்
அண்ணலுக்குள் பரிந்து புக்கார்
அந்நாள்தொட் டண்ணல்செயல் அனைத்துமிறை
யின்செயலாய் அமையத் தூய



திருக்குற்றாலத் திருக்குகையில்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் பன்னீராண்டு அருந்தவம் ஆற்றியபோது

விஸ்வரூப தரிசனம் தந்த

பஞ்சமுக விநாயகர்

நின்றுயர்ந்த திருவுளம்கண் டகமகிழ்ந்தோம்;
நீகேட்ட வரம்அளித்தோம்;
பன்னரிய அருட்சட்ட நெறிநன்று
பாரிஇன்பம் வழங்கும் என்றார். 138

இதுவரையில் நின்றுளத்தில் எண்ணியிருந்
திட்டதிட்டம் இனியதாகும்;
மதமனைத்தின் சாரம்அதுவேயாகும்;
வாழும்வழி அதுவேயாகும்;
இதமுறநன் றதையுலகுக் கியம்பிடுவாய்;
எவ்வுயிரும் பேணச் செய்வாய்;
உதவுபெருந் துணையாகி உயிர்கள்தொறும்
உளும்புறமும் மேவிக் காப்பாய். 139

தூயஅரு ளரசாட்சி யுனக்களித்தோம்;
புவியிலுறு துன்பம் தீர்த்து
மேயபர மானந்தம் எவ்வுயிரும்
பெறப்புரிவாய் எனவிளம்ப
நாயகனே உறுதிகொடுத் தருள்வாய்என்(று)
அண்ணலார் நன்று போற்றத்
தூயஅண்ணல் கரத்திற்கரம் வைத்துடையோன்
உறுதிமொழி சொலிமறைந்தான். 140

அண்ணலார் விழைந்தபடி அருள்ஞானப்
பரிபூர்ணர் அருள்செய் திட்ட
தெண்ணியெண்ணி இயம்பவொணாப் பெருமகிழ்வுற்
றானந்த பாஷ்பம் பொங்க
எண்ணிலுயிர் களின்பாலும் நினக்குள்ள
அருட்கருணை யென்னே யென்று
நண்ணுமுய ரன்போடும் பலவாறாய்
நன்றேத்திப் பொலிந்தார் அண்ணல். 141

பைந்நாகப் பூணூல்கொள் பரிபூர்ணர்
அண்ணலுக்குள் பரிந்து புக்கார்
அந்நாள்தொட் டண்ணல்செயல் அனைத்துமிறை
யின்செயலாய் அமையத் தூய



திருக்குற்றாலத் திருக்குகையில்
ஸ்ரீ இரெட்டியபட்டி சுவாமிகள் பன்னீராண்டு அருந்தவம் ஆற்றியபோது
விஸ்வரூப தரிசனம் தந்த
பஞ்சமுக விநாயகர்

செந்நாவால் அருட்பாடல் பலபாடித்
திருவருளின் திறத்தைப் போற்றி
எந்நாடும் எவ்வுயிரும் இனியுய்யும்
என்னமகிழ்ந் தெழுந்தார் அண்ணல். 142

அகத்தியனூர் அருளாசி

அருட்சட்டம் வெளியிடற்குப் பரிபூர்ணர்
அனுமதியைப் பெற்ற பின்னர்
திருக்குகைவா யிலின்முன்னர் அகத்தியனூர்
வந்தாசி செப்ப லுற்றூர்
அருட்சட்டம் கலியுகத்தில் ஐயாயி
ரம்வருடம் கடந்த பின்னர்
இருட்படலம் நீக்கும்ஒளிச் சுடராக
உலகெங்கும் இலகும் என்றூர். 143

ஆக செய்யுள் 1382

---

## 9. பொதிகை நீத்த படலம்

விநாயகர் துதி

பொதுநெறியாம் அருட்சட்டம் பூவுலகிற்
கருளவந்த புனித மூர்த்தி
பொதிகையினிற் பல்லாண்டு தவம்புரிந்து
போதபரி பூர்ண மெய்திப்
பொதிகைவரை யினைநீத்துப் பொலிகனல்போல்
புவியின்மிசை நடந்து சென்றே
இதமொடருள் செயல்இயம்பற் கருள்செயுமா
றிபமுகனை இறைஞ்சு வோமே. 1

குருநாதர் துதி

கதிபெறற்கும் அறியாமல் மகிழ்வோடிக்
காசினியில் வாழ்வாற் றற்கும்
மதிநலம்பெற் றறியாமல் மயங்கும்உயிர்
வகைக்கின்ப நெறியு ணர்த்திப்

புதியஉணர்ச் சியையூட்டிப் புவிவாழ்வும்
உயர்ந்ததவப் பொலிவும் நல்கப்
பொதிகையில்நற் றவமாற்றி வெளிப்போந்த
புங்கவன்தாள் போற்றி வாழ்வாம். 2

ஒப்புயர்வில் மெய்த்தவத்தை இவ்வாறு
போற்றியரு ளூற்ற அண்ணல்
இப்படியில் எவ்வுயிர்க்கும் பயன்படுமா
றினிதுணர்த்தி யருள உன்னிப்
பொற்புமிகு பக்குவம்சால் புண்ணியரைத்
தேர்ந்தெடுத்தப் பொருள் வழங்க
நற்பொலிவொ டேயருளு லாசெய்த
காட்சியினி நன்று காண்போம். 3

தவம் முடித்துப் புறப்படல்

தவம்முடித்துப் பரிபூர்ணர் தண்ணருளின்
தனித்திறத்திற் றேய்ந்த வண்ணம்
புவனியுயிர் வகையுய்யப் புனிதஅருட்
சட்டநெறி புகன்று பேண
உவகையுட னெழுந்தஅண்ணல் உடல்தவத்தாற்
பொலிவுமிகுந் தொளிர்ந்திட் டாலும்
குவலயத்தில் நடப்பதற்கும் இயலாராய்க்
குகையினின்று மெல்லப் போந்தார். 4

மெல்லமெல்ல நடந்துசண்ப காதேவி
வியன்தளிக்கண் சேர்ந்த அண்ணல்
மெல்லமெல்ல அடியெடுத்து வைப்பதற்கும்
நடப்பதற்கும் இயலா ராகி
வில்லனைய நுதற்சண்ப காதேவி
வியன்தளியிற் சிலநாள் தங்கி
மெல்லமெல்லப் பினர்எழுந்து செல்வதற்கு
விழைந்தவண்ணம் அமர்ந்தார் அங்கண். 5

நடப்பதற்கும் இயலாத நிலையிலமர்ந்
துளஅவர்க்கு நல்ல புண்யம்
உடைச்சிலர்உள் ளன்பாற்பக் குவத்தோடும்
ஊட்டிவந்த உணவி னாலும்

உடையவனும் பரிபூர்ணன் ஒப்புயர்வில்
அருட்கருணைத் திறத்தி னாலும்
நடைசிறிது நடப்பதற்குச் சக்திபெற்றார்
ஞானவொளி மிகுந்த அண்ணல். 6

அவனியுய்ய வேண்டியநற் காலம்நெருங்
கியதாலும், அடியார் முன்செய்
தவமுழுதும் பயனளிக்கும் காலம்நெருங்
கியதாலும், அருளார் ஆன்றோர்
புவனியில்எண் ணியஅனைத்தும் செயலாகும்
நற்காலம் போந்த தாலும்
உவமைசொலற் கரியஅண்ணல் உலகில்நடந்
திடச்சக்தி அருளாற் பெற்றார். 7

உயர்ந்தநல்ல உள்ளமுள்ள செங்கமலம்
எனும்நாமம் உடைய அம்மை
உயர்ந்தஅந்த மலையிலுள்ள மணிற்கொத்து
மல்லித்தழை உண்டு பண்ணி
உயர்ந்ததவ முடையண்ணற் குணவுமிகப்
பக்குவமாய்ச் சமையல் செய்தே
உயர்ந்தஉண்மைப் பரிவோடும் ஊட்டிவந்தார்;
அவர்முற்றவம் உரைத்தற் காமோ? 8

தான்பெற்ற அரும்பொருளை மக்களுக்குத்
தந்தவர்தம் மகிழ்வைக் காண
மேம்பட்ட உள்ளன்பால் துடிக்குநற்றா
யெனக்குற்றா லத்தை விட்டு
தாம்பெற்ற அரும்பொருளைத் தகுதியுடை
யவர்க்கருள வேண்டும் என்றே
மேம்பட்ட ஆர்வமுடன் நல்லடியார்
களைத்தேட விரைந்து போந்தார். 9

என்னவகை யினில்உலக மக்கள்துயர்
துடைப்பதென்ற ஏக்கத் தோடும்
தன்னிடத்திற் போந்ததும், பின் தன்னிகரில்
பரிபூர்ணன் அருளைப் பெற்று

மன்னுசட்ட நெறிவகுத்துத் தெளிவொடுநல்
லமைதியொடு மாண்பார் அண்ணல்
பொன்னைநிகர் தவப்பிழம்பாய் வெளிச்செல்நிலை
யுங்கண்ட புனித அன்னை 10

சண்பகத்தாய் தன்னிடம்வந் தண்ணலப்பே
றடைந்ததுன்னி யகம்ம கிழ்ந்தாள்;
பண்பமைபூ மியின்திலகம் எனப்புலவர்
பலர்போற்றும் தமிழ கத்தின்
கண்பொலியும் பொதிகைதரும் தமிழ்தென்றல்
சந்தனம்போல் கருணைச் சட்டம்
மண்பயில்விண் பயில்பலர்க்கும் பயனருளி
வயங்குகென வாழ்த்தி நின்றாள். 11

சகலஉயிர் களுக்கும்இத மும்மகிழ்வும்
புனர்வாழ்வும் சமுதா யத்தில்
மிகப்புதிய திருப்பமும்தண் ணருள்நெறியும்
ஆன்மவிளக் கமும்நற் றாய
சுகம்அருளும் இறையிணைப்பும் நல்குவதாய்த்
தொல்லுலகால் விரும்பப் பெற்றுத்
தகவுறச்செ ழிக்கஇந்தச் சட்டமெனக்
களிப்பினொடும் சாற்றி நின்றாள். 12

தன்னிலையற் றெல்லாமும் உடையவன்றன்
செயலென்னச் சாரும் அண்ணல்
என்னபொரு ளும்விரும்பா தெவரையுநோக்
காதுடற்குத் தேவை யேதும்
உன்னிப்பொருட் படுத்தாராய் ஒளிசெல்லும்
இடமெங்கும் இருள்நீங் கல்போல்
தன்னிகரில் மெய்ஞ்ஞான ஒளியால்அஞ்
ஞானஇருள் தவிர்த்துச் சென்றார். 13

### சேர நாடடைதல்

குற்றாலத் தினில்இயற்கைச் சூழ்நிலையில்
குலவிநன்கு திளைத்த அண்ணல்
நற்றாலத் தினிற்பரத நாட்டியற்கை
ஓவியமாய் நவிலப் பெற்று

மற்றும் புகழ்மேலைக் கடற்கரைநா
டாம்சேர வளநா டுற்றார்
கற்றார்க்கும் கல்லார்க்கும் அருள்புரி
கணேசர்கழல் கருத்துட் கொண்டே. 14

கொம்புத்தேன் அருந்தியவன் அச்சுவையை
உள்ளத்துட் கொண்டு பன்னாள்
இன்பமுடன் உன்னியுன்னி மகிழ்வதுபோல்
இறைவனருட் கருணை யென்னும்
இன்பவமு தினைப்பூர்ண மாய்ச்சுவைத்த
இணையில்அருள் ஞானச் செம்மல்
உம்பருக்கும் எய்தரிதா கியஅந்தப்
பேரின்ப உணர்வோ டுற்றார். 15

கூடல்விட்டுக் குற்றாலம் சென்றதையும்
குகையுள்அமர்ந் திருகண் மூடி
ஈடில்தவம் செய்ததையும் இறைவன்அருள்
பெற்றதையும் எண்ணி லாப்பல்
கோடியுயிர் உய்யும்அருட் சட்டநெறி
குவலயத்திற் கருள் வதற்கே
நாடிப்புறப் பட்டதையும் எண்ணியவா(று)
அண்ணல்அருள் நடைந டந்தார். 16

எண்ணிடும்நல் லெண்ணம்உடற் குத்திண்மை
யீயுமென இயம்பல் போலத்
திண்ணியநற் றவத்தாலும் நடையாலும்
தளர்ச்சிமிகத் தோன்றி னாலும்
நண்ணிஉரி யவரிடத்தில் அருட்செல்வத்
தினைச்சேர்த்தல் வேண்டு மென்னும்
எண்ணம்உளத் தினில்ததும்பி நிறைந்திருந்த
தால்பயணம் இனிதா யிற்றால். 17

மலைவளம்செறிந்திடும் ஆலப்புழைகோட்
டயம்கடந்து வந்த அண்ணல்
நிலவளம்மிக் குடைஎர்ணா குளத்துற்றார்.
நீள்சோலை நடுவில் அங்கண்

பலவொடுநல் வாழைமிடை ஓலைவீட்
டினிற்பரந்த திண்ணை யொன்றில்
நலமுறச்சற் குருநாதா என்றவண்ணம்
ஞானஅண்ணல் உற்ற மர்ந்தார். 18

கார்காலத் தினில்தோன்றும் மின்னலொன்று
கவினுறத்தன் வீட்டில் வந்து
சீரார்திண் ணையில்வீற்றி ருப்பதுபோல்
திகழ்ஞான வள்ள லாரை
ஏராரவ் வீட்டினுள்ளே யிருந்துவந்த
அன்னம்மாள் என்ற நங்கை
பாராரப் பணிந்திறைஞ்சி யான்செய்தவப்
பயனோஇஃ தெனம கிழ்ந்தாள். 19

நம்முன்னோர் செய்ததவப் பயனோஇவ்
விலம்செய்தவப் பயனோ ஞானச்
செம்மல்இவண் சேர்ந்ததென்றும் இவர்வசிட்ட
ரோவென்றும் விசுவா மித்ரர்
இம்முனிவ ரோவென்றும் ப்ருகுமுனிவ
ரோவென்றும் எண்ணு வாள்பின்
செம்மல்தளர் வினைநோக்கிப் பசிதவிர்த்தற்
கெண்ணிவிரைந் துள்ளே சென்றாள். 20

மலையாள நாட்டுவழக் கம்போல
வண்தேங்கா யரிசி சேர்த்த
உலையார்நற் சுவைக்கஞ்சி ஒருகுவளை
நிரம்பஇளஞ் சூட்டி னோடும்
நலமார்உள் ளத்தோடும் கொண்டுவந்து
ஞானஅண்ண லார்பால் சார்ந்து
பலனியும் திருவடிகள் முன்வைத்துப்
பக்தியுடன் பணிந்து போற்றி, 21

அடிகேள்நீர் மிகவும்களைத் திருக்கின்றீர்
இதையருந்திப் பசியா றுங்கள்
அடிமையென தில்லிலிப்போ திக்கஞ்சி
யன்றிவே றொன்று மில்லை

அடிசிலறு சுவையோடும் இனிதூட்டும்
அருட்பேறு பெற்றேனல்லேன்
அடியேன்பால் அருள்சுரந்திக் கஞ்சியினை
யருந்திப்பசி தீர்வீர் என்ருள். 22

நங்கையனம் மான்நவின்ற இன்சொல்லும்
நற்றூவெள் ளுடையும் அன்புட்
பொங்குள்ளப் பாங்குமறிந் தம்பிகையே
போந்தமுத மீகின் ருளோ
இங்கென்னத் தாயன்பின் தனிச்சிறப்பை
இதயமிசை எண்ணி யண்ணல்
அங்கக்கஞ் சியைப்பருகி அந்நங்கைக்
கருளாசி வழங்க லானர். 23

இனியஉங்கள் பரம்பரைஎன் றென்றும்உண
வுக்கெவ்விதக் குறையு மின்றி
நனிமகிழ்வொ டிவ்வுலகில் நல்வாழ்வாற்
றிடுகவென நவின்ருர் ஆசி;
துனியனைத்தும் தவிர்த்தருளித் தூய்மையருள்
வாய்மைவளம் யாவும் நல்கும்
இனியவள்ளல் அருட்கருணைக் கிவ்வுலகில்
எஞ்ஞான்றும் இணையொன் றுண்டோ? 24

பற்றணுவும் அற்றஅண்ணல் பரிபூர்ணன்
தாண்மலரை நினைந்த வண்ணம்
சுற்றுமுப்பங் கழிநிறைந்து பசுமைநிறை
தென்னைமரச் சோலை சூழப்
பெற்றபல ஊர்களிலும் மிளகுக்கொடி
பிறங்குபல வீட்டு முற்றத்
துற்றபெண்கள் மிளகேலம் முதலியன
உணக்குதெருக் களில்ந டந்தார். 25

சிறுவர்சிறு மியர்பலரும் செறிந்தினிது
விளையாடும் செயல்கள் பாரார்
சிறுதொழில்கள் புரிந்திடுவோர் செய்யபயிர்த்
தொழில்புரிவோர் தமையும் பாரார்

நிறைகருணை நேத்திரங்கள் நீள்தாடி
தூவெள்ளை நிறநல் லாடை
குறைவில்தவத் தாலிளைத்த நெடியதிரு
மேனியுடைக் கருணை மூர்த்தி. 26

காசியை அடைதல்

பரநினைவி னோடுகள்ளிக் கோட்டைதிருச்
சூர்மைசூர் மங்க ளூர்நல்
திருநிறை மகாராட்டி ரம்மத்யப்
பிரதேசம் வழியாய்ச் சென்று
பெருநகர்க்கா சியையடைந்தார் பீடுநிறை
பெரியரெலாம் பேணிப் போற்றும்
அருமைநிறை அந்நகரார் வெண்கொடிகள்
அவரைவர வேற்ற வம்மா. 27

மரங்கள்தொறும் பைங்கிளிகள் பண்பாட
அதைக்கேட்ட மணமார் பூக்கள்
தரங்கெழுதீந் தேன்நல்க நாகணவாய்ப்
பறவைகளும் தகவாய்ப் பாட
மரங்கள்அவை களைக்கேட்டு வண்கனிக
ளைப்பரிசி லாய்வ ழங்கப்
பரம்பொருளை நாடியுயர் தவம்புரிவோர்
பற்றைவிடுத் தருளில் தோய்வார். 28

அங்காடி வீதியினிற் பலபொருளும்
அளவின்றிக் குவிந்தி லங்கும்
அங்கேயுற் றிடுமக்கள் தேன்கூண்டை
அணுகிடுதே னீக்கள் போலப்
பொங்கார்வ மொடும்போந்து பண்டங்கள்
பலவாங்கிக் கொண்டு போவார்
மங்காப்பே ருருளோடும் பொருள்களும்அம்
மாநகரம் வழங்கு மாலோ. 29

காசித்தலத் தினில்இறக்கும் உயிர்களுக்குக்
கருணையொடு முத்தி நல்கும்
ஈசன்விசு வேசன்வலச் செவியினிற்பஞ்
சாக்கரத்தை இனிதே யோதி

நேசமுட னேயழைத்துச் செல்வனென
நீள்மறைகள் யாவும் கூறும்
பாசபந்தம் நீக்கிமுத்தி யருளுமந்தப்
பதிகண்டு மகிழ்ந்தார் அண்ணல். 30

தெய்வமணம் மிகக்கமழும் திருக்கோயில்
பலநிறைந்து திகழும் மூதூர்
கைலையினி லிருந்துபுறப் படும்கங்கை
நதிதிகழும் கவினுர் சீரூர்
எய்தும்வினை தீர்க்கவரு வோர்மூழ்கும்
இனியதுறை பலவி ளங்கூர்
பொய்தவிர்மெய் யரிச்சந்த்ர மன்னன்சுட
லையைக்காத்த புகழ்சால் காசி. 31

வருணைஅசி யிரண்டுநதி களும்கங்கை
யினிற்கலக்கும் மகிமை சாலூர்
அருள்நிறைநற் குமரகுரு பரஅடிகள்
முகலாய அரசன் காணப்
பெரியசிங்க மீதிவர்ந்தும் பிறங்குபல
மொழிகளிற்பே சியும் மடத்தைப்
பெரியநிலை யினிலமைத்துப் பேரருளின்
திறம்விளக்கும் பேரூர் காசி. 32

அறம்தழுவும் நெறிநடக்கும் அந்தணர்கள்
உறைவீதி அரசர் வீதி
சிறந்தபல வணிகர்உறை வீதிஉழ
வோர்வீதி செறிந்தி லங்கும்
மறந்திகழ்போர் வீரர்களும் மற்றவரும்
உறைவீதி மலிந்தி லங்கும்
புறம்திகழ்பல் லூரவரும் அங்குற்று
நலம்பெற்றுப் போற்றி செய்வார். 33

கங்கையின் சிறப்பு

ஞாலமிசை சிறந்தகங்கை நதிக்கரையில்
அண்ணலார் நடக்கும் போதில்
ஆலவாய் வைகைநதித் தென்கரையில்
அருட்பரிபூர் ணரைமுன் கண்ட

சிலமார் திருக்காட்சி நினைவுவரச்
சிவன்உமையை இடப்பா கத்தில்
ஏலவமைத் துக்கங்கைக் கெழில்முடியில்
இடம்கொடுத்த உயர்வு ணர்ந்தார். 34

உயிர்களைஉள் ளும்புறமும் தூய்மைசெயும்
செயல்புரியும் ஒப்பி லீசன்
உயிர்களைஉள் ளும்புறமும் தூய்மைபுரி
கங்கையினை முடியிற் கொண்டான்
உயிர்களுக் கிகம்பரம்நல் கருட்சட்டத்
தடிப்படையும் உயர் தண் ணீராம்
உயர்சட்டம் போற்றடியர் முதல்வணங்கற்
குரியதெய்வம் கங்கை யாமே. 35

அவள்உடம்பி லுளமாசைப் போக்கிஉளத்
துக்கூட்டம் அருளு கின்றாள்
தவநிலையில் ஞானசக்க ரம்தோன்றித்
தீமையெலாம் தகித்த பின்னர்
அவமறுக்கும் ஆவிமே லேறிஐந்தாம்
ஆதார மேற்கு ளிர்ந்து
சிவனருளாம் ஆகாய கங்கையெனத்
திகழ்ந்துளத்தைக் குளிரச் செய்யும். 36

உள்ளத்தைக் குளிர்விப்ப தன்மூலம்
பலஉயிரைக் குளிரச் செய்யும்
வள்ளல்களாம் அருளாளர் கருணைநிறை
அருட்பார்வை வைய மீதில்
உள்ளகொடும் பாவியையும் மாறிடச்செய்
சூக்மமிதென் றுணர்தல் வேண்டும்
வள்ளல்அருள் நெறியில்தணி ராட்டம்நுழை
வாயிலெனல் கருதல் வேண்டும். 37

அரனுக்கும் அருட்சக்திக் கும்மேல்நின்
றனைத்துயிரைக் குளிர்விக் கின்ற
பெருஞ்சக்தி கங்கையெனப் பிரான்முடியில்
உயர்த்தி வைத்துப் பெருமை நல்கும்

அருமைநினைந் தகம் குளிர்ந்தார் அருளண்ணல்
குளிர்ந்தநல்ல காற்று வீசும்
வரநதியின்கரை அவர்தம் மனதிற்பல
நினைவுகளுண் டாக்கிற் றன்றே. 38

இருடிகளும் முனிவர்களும் தவசிகளும்
யோகிகளும் எண்ணில் பல்லாண்
டருந்தவம்செய் தப்பதியில் அருள்பெற்ற
செயலுன்னி அகம்ம கிழ்ந்தார்
பொருந்தும்அகம் புறம்செறிந்த மாசகற்றிப்
புனிதம்மிகப் புரியும் மேலாம்
பெருமைநிறை கங்கைநதி யினைநோக்கி
யிவ்வாறு பேச லுற்றார். 39

தாயேநும் அற்புதச்சக் தியைத்தரணிக்
குணர்த்திடுதல் வேண்டு மென்ற
தூயநினை வுடன்சட்டச் செந்நெறிதோன்
றிய(து)உம்பால் தோய்ந்து மூழ்கின்
தூயநிலை பெறச்செயல்போல் பிரமமுகூர்த்
தத்தினில்எந் நீரி லேனும்
தோய்உயிர்கள் தூய்மையுற்றுத் திருவருளில்
தோயவரம் அருள்வீர் என்றார். 40

கங்காதேவி அருள்செயல்

உலகுயிர்கள் உய்வுபெறற் கருள்புரிய
உதித்தஅருள் ஞான வள்ளல்
இலகுமந்த அமைதிமிகு சூழலில்இவ்
வாறினிது வேண்டி நிற்க
அலைகளினூ டேகங்கா தேவியெழுந்
தவனியுளோர் உய்தற் கென்ன
அலகில்பெரும் பாடுபட்டிவ் வருட்சட்டத்
திருநெறியை அருளாற் பெற்றாய். 41

இந்தநெறி உலகில்நனி தழைத்தோங்கும்;
வைகறையில் இனிது நீரில்
சந்தமுற மூழ்கிடுவோர் சார்பிணிகள்
தவிர்ந்திம்மை நலங்க ளெய்தி

அந்தமில்சீர் மறுமைக்கும் உகந்தஅருட்
பேரின்ப வாழ்வாற் றற்கே
எந்தவகை யிலும்நன்று துணைபுரிவோம்
அஞ்சேல்என் றியம்பி நின்றாள். 42

திண்ணமுற இவ்வாறு செப்பிஅரு
ளண்ணல்திரு மேனி மீதில்
எண்ணில்சிறு திவலைகளை மலர்மழைபோல்
இனிதுபொழிந் திட்டாள் கங்கை
அண்ணலந்தக் கணத்தினிற்பே ரானந்த
மடைந்தினிது போற்றி யந்தப்
புண்ணியநீ ரினில்மூழ்கிப் புனிதமுறு
வோர்களைக்கண் டின்ப முற்றார். 43

*விடியுமுனர் தண்ணீரில் மூழ்கிவிநா
யகன்பதங்கள் பணிந்து போற்றி
நெடியவெந்நீர் ஸ்நானபா னம்விடுத்துத்
திருநீறே அவிழ்த மென்று
படியின்மிசை கொண்டிட்டால் உய்ந்திடலாம்
பவமகன்று போகு மென்ன
மடிமிடிதீர் அண்ணல்அருட் பாட்டிசைத்த
வண்ணமொரு பால்அ மர்ந்தார். 44

அண்ணல்உடம் பினில்ஒளிசெய் தவக்கனலும்
அவனிமிசை எதுவும் வேண்டாத்
திண்ணியநல் உள்ளமும்கண் டங்குள்ளோர்
திகழ்நீண்ட தாடி யோடும்
ஒண்ணுதல்நல் அருள்விழிமெய்த் தவப்பொலிவு
வெண்ணிறமார் உடைகொள்இந்தப்
புண்ணியர்தென் னாட்டினின்று போந்தவொரு
நற்றவசி போலும் என்பார். 45

இவரிடம்சென் றினிதுபணிந் தருள்பெறுவோம்
என்றுசிலர் இயம்பி னார்கள்;
புவனிமிசை பொருளாசை யால்வேடம்
புனைந்தவரோ பார்ப்போ மென்னக்

---

ஆதியிலே ''திருநான்மறை'' *ஆண்டவர் அருட்பாடல்:—

குவிபொருளை எதிரில்வைத்துக் கும்பிட்டுக்
கைகட்டிச் சிலர்நின் றூர்கள்;
இவர்அதைத் தொடாதவராய்த் திருக்கையசைத்
தவர்களுக்கின் னருள் புரிந்தார். 46

புவியின்மிசை வாழுமுயிர்த் தொகையனைத்தும்
புனிதமுறற் கருளப் போந்த
இவர்அடுத்த நாள்காலை கங்கைநனீ
ராடுகையில் எதிரே விண்ணில்
அவமறுக்கும் விசுவேசர் விசாலாட்சி
அன்னபூ ரணியும் தோன்ற
அவர்களுக்கு மேல்துண்டி ராஜகண
பதிதோன்றி அருள்செய்தாரால். 47

கணநாதர் கருணையுரை

அருளாள, நீகொண்ட எண்ணம்இனி
தேபலிக்கும்;அருளார் சட்டத்
திருநெறியிப் புவியிற்சிறந் தோங்கிக்கலி
தருதுயரைத் தீர்க்கும் என்ன
அருளாசி வழங்கிடலும் அண்ணலுள்ளம்
பூரித்து மெய்சி லிர்ப்ப
அருள்மிகுத்த ஆனந்த பரவசநன்
னிலையடைந்து கூற லானூர். 48

அண்ணலார் உரை

அய்யனே, அருட்சட்டம் பேணுயிர்கள்
அருளான்ம விளக்கம் பெற்றுத்
துய்யஅருள் வாழ்வாற்ற வேண்டுமென்ப
தேயடியேன் நோக்க மாகும்
வையகத்தில் எவ்வுயிரும் மங்களமாய்
வாழவருள் செய்வாய் என்றன்
மெய்வாக்கு மனமுன்னிடம் வைத்தநாள்
முதல்பொறுப்பு நினதே என்றூர். 49

உலகமக்கள் உய்யும்வணம் தாம்பூர்ணத்
தவமாற்றி அல்லும் எல்லும்
இலகும்அதே நினைவாக இருக்குமண்ணல்
சிறப்பெம்மால் இயம்பப் போமோ
அலகில்புகழ் கங்கைநதிக் கரையிலருந்
தவமாற்றி யருள டைந்த
பலமுனிவர் யோகியர்கண் டண்ணலருங்
குணமுன்னிப் பகர லானார். 50

வையமிசை துயர்தீர்க, வாழ்வில்அருள்
பொலிக,இன்பம் வளர்க, என்றே
துய்யஉளத் தால்நன்று மங்கலவாழ்த்
துகள்சொற்றார்; துகள்தீர் கங்கை
மொய்யொலிதந் துளமகிழ்ந்தாள்; பறவையினம்
முழுமகிழ்வொ டொலிக்கச் சீரார்
செய்யகரம் நீட்டிக்கதி ரோன்போந்தான்;
தேவர்மலர் மாரிபெய்தார். 51

## அண்ணலார் அருள்திறம்

பாரதநாட் டினிற்புனித கங்கைநதி
பாயும்வட திசையிற் காசி
பேரருள்நல் கும்பொதிகை மலைபிறங்கு
தென்திசையில் திகழ்குற் றாலம்
சீருறவாழ்த் திடல்கண்டால் ஜாதிமதம்
மொழிகடந்த செம்மை சான்ற
சீரியநற் றிருவுளம்கொள் அண்ணல்அருள்
திறம்யாரே செப்ப வல்லார்? 52

## அண்ணலார் பயணம்

காசிமுதற் கன்னியா குமரிவரை
கடிதுசென்று தேடி யேனும்
ஆசில்அருட் செந்நெறியைக் தக்கஅடி
யார்க்கருள வேண்டு மென்றே

தேசுதிகழ் அண்ணலார்'திருவுள்ளத்
　　தினிற்கொண்டு பயண மானார்
காசிவிட்டுக் கயா ஔரா கரக்பூர்
　　பலாசூர் கட்டாக் கடந்தார். 53

ஆந்திர நாடடைதல்

ஆந்திரமா நிலத்தடைந்தார் அணிகோதா
　　வரிகிருஷ்ணா நதிகள் நன்று
பாய்ந்துவளம் பெருக்குமிடங் களிலமைந்த
　　பலதலங்கள் கண்டார்,அன்பு
தோய்ந்தவர்சூழ் பஞ்சவடி யாதியிடங்
　　களையும்வளங் களையும் கண்டார்
ஆந்திரத்தில் அருளாளர் கவிகளைப்பா
　　டன்பர்குழாங் களையும் கண்டார். 54

இந்தியத்தாய்க் கிடையாகத் திகழ்செழிப்பு
　　மிக்கஇந்த ஆந்த்ர நாட்டில்
சந்தமுற முதன்முதலிற் சட்டநெறி
　　ஏற்றிடுவோர் உள்ளார் என்ன
அந்தமில்சீர் அண்ணலார் திருவுளத்தில்
　　உடையவன்தண் ணருளால் தோன்ற
அந்தஅருட் சட்டநெறி முறைகளெலாம்
　　அகத்தினிதே அமைத்துக் கொண்டார். 55

ஆக செய்யுள் 1437

---



## அடியவர் துதி

அந்தா ரணியில் அனைத்துயிர்க் கும்சீர் அருள்நெறியைத்
தந்தார்வ மோடு புரந்தருள் ஞான தயாபரனைக்
கொந்தார் மலரிட்டுக் கும்பிட்டு வாழ்நல் லடியவர்தம்
செந்தா மரைமலர்ச் சீர்பாத தூளியென் சென்னியதே. 1

பாரத நாட்டின் தவப்பய னுப்போந்து பக்தரகச்
சாரதி யாகித் தனிச்சட்ட நன்னெறி தந்தினிதாள்
வீரசி காமணி வித்தகஞான குருமணிதாள்
சேரடி யார்களின் சீர்பாத தூளியென் சென்னியதே. 2

அருவொ டுருவா யனைத்துயி ரும்பேணும் ஆரியனார்
கருவு ளினிபுகா வண்ணம் தடுத்தாள் கருணையுளார்
புருவ நடுவிற் பொலிந்து புரஞ்சுடும் புண்ணியனார்
திருவடி சேரன்பர் சீர்பாத தூளியென் சென்னியதே. 3

மந்த தரர்களும் மாநில மீதுய்ய வந்தபெம்மான்
பந்த மனைத்தும் பொடிபடப் பக்குவம் நல்குமெம்மான்
சந்த மலர்ப்பதம் சார்ந்து துதிநிதம் சாற்றடியார்
செந்தளிர் போன்றுளிர் சீர்பாத தூளியென் சென்னியதே. 4

புகழை விரும்பாத புண்ணிய னுப்போந்து பூவுலகில்
இகழ்தவிர் சட்ட நெறியை இனிதருள் சற்குருவின்
முகிழ்மல ரொண்பதம் போற்றிநன் முத்தியை யெய்தடியார்
திகழ்எழி லேமிக்க சீர்பாத தூளியென் சென்னியதே. 5

துள்ளிக் குதிக்கும் மனத்தை யடக்கிச் சுகம்தருவோன்
அள்ளி யருள்தரும் ஆரியன் பாதம் அனுதினமும்
உள்ளி யுணர்ந்து நெகிழ்ந்தன்பி லூறி யொளிமிகுந்து
தெள்ளிய ராம்அன்பர் சீர்பாத தூளியென் சென்னியதே. 6



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின்
அருட் சின்னம்



## அடியவர் துதி

அந்தா ரணியில் அனைத்துயிர்க் கும்சீர் அருள்நெறியைத்
தந்தார்வ மோடு புரந்தருள் ஞான தயாபரனைக்
கொந்தார் மலரிட்டுக் கும்பிட்டு வாழ்நல் லடியவர்தம்
செந்தா மரைமலர்ச் சீர்பாத தூளியென் சென்னியதே. 1

பாரத நாட்டின் தவப்பய னுப்போந்து பக்தரகச்
சாரதி யாகித் தனிச்சட்ட நன்னெறி தந்நினிதாள்
வீரசி காமணி வித்தகஞான குருமணிதாள்
சேரடி யார்களின் சீர்பாத தூளியென் சென்னியதே. 2

அருவொ டுருவா யனைத்துயி ரும்பேணும் ஆரியனார்
கருவு ளினிபுகா வண்ணம் தடுத்தாள் கருணையுளார்
புருவ நடுவிற் பொலிந்து புரஞ்சுடும் புண்ணியனார்
திருவடி சேரன்பர் சீர்பாத தூளியென் சென்னியதே. 3

மந்த தரர்களும் மாநில மீதுய்ய வந்தபெம்மான்
பந்த மனைத்தும் பொடிபடப் பக்குவம் நல்குமெம்மான்
சந்த மலர்ப்பதம் சார்ந்து துதிநிதம் சாற்றடியார்
செந்தளிர் போன்றொளிர் சீர்பாத தூளியென் சென்னியதே. 4

புகழை விரும்பாத புண்ணிய னுப்போந்து பூவுலகில்
இகழ்தவிர் சட்ட நெறியை இனிதருள் சற்குருவின்
முகிழ்மல ரொண்பதம் போற்றிநன் முத்தியை யெய்தடியார்
திகழ்எழி லேயிக்க சீர்பாத தூளியென் சென்னியதே. 5

துள்ளிக் குதிக்கும் மனத்தை யடக்கிச் சுகந்தருவோன்
அள்ளி யருள்தரும் ஆரியன் பாதம் அனுதினமும்
உள்ளி யுணர்ந்து நெகிழ்ந்தன்பி லூறி யொளிமிகுந்து
தெள்ளிய ராம்அன்பர் சீர்பாத தூளியென் சென்னியதே. 6



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின்
அருட் சின்னம்

# 3. அருள்செய் காண்டம்

## 1. அருட் சட்டப் படலம்

### மதுரைப் பரிபூர்ண விநாயகர் துதி

திருவிளையாட் டறுபத்து நான்கருளால்
நடைபெற்ற சிறந்த கூடற்
பெருநகரில் வைகைநதித் தென்கரையில்
இருடிநகர்ப் பெருமான் காண
ஒருசுடராய்ப் போந்துசட்ட நெறியருளி
அறுபத்தைந் தென்ன ஓங்கும்
திருவிளையாட் டியற்றுபரி பூரண
விநாயகர்தாள் சிரமேற் கொள்வாம். 1

### குருநாதர் துதி

மருட்பெற்ற மனத்தோடிம் மாநிலத்தில்
வதியுயிர்கள் மாண்பாய் வாழ
அருட்பெற்ற திருவுளத்தில் உன்னியுன்னி
அளவில்பெருந் தவம்பு ரிந்து
தெருட்பெற்ற திருவருட்சட் டம்வகுத்து
வழங்கித்துணை யாய்த்தி கழ்ந்து
பொருட்பெற்ற இகபரநன் னலங்களருள்
புனிதகுரு பொற்றாள் போற்றி. 2

வேறு

வேதம் யாவும் விளக்கிடு சாரமே
தீதில் சட்டம் எனத்தரு தேசிகன்
பாத மாமலர் போற்றிப் படர்பசு
போத மூட்டிப் புனிதமிக் கெய்துவாம். 3

### அருட்சட்ட அடியவர் துதி

அன்பும் பண்பும் அறிவும் அழகும்நல்(கு)
இன்ப நன்னெறி யீந்தருள் அண்ணலார்
பொன்பு ரைபதம் போற்றிநற் சட்டம்பேண்
அன்பர் பாதம் அரண்நமக் காகுமே. 4

கருவ றைக்கு ளுருமற் கருணைசெய்
திருவ ருட்சட்டச் செந்நெறி தந்தருள்
குருவ ருள்பெற்று வாழும் அடியவர்
திருவ டித்துகள் சென்னியிற் சூடுவாம். 5

---

வேறு

இவ்வுலகை ஏனிறைவன் படைத்துள்ளான்
எண்ணிலுயிர் களைப்ப டைத்திங்
கிவ்விளையாட் டியற்றுவதேன் அசைவில் பிர
மத்திற்கேன் இந்தச் செய்கை
செவ்வையுற இதையுணர்தல் வேண்டுமென
அறிஞர்பலர் சிந்தித் திட்டார்
இவ்வகைக்கேள் விக்குவிடை காண்பதற்கு
வெகுகால மாய்மு யன்றார். 6

ஞானமிகும் அருட்பெரியார் இந்தவினா
விற்குவிடை நன்று கண்டார்
ஊனமிகு வினைக்கட்டி லிருந்தும்உயிர்த்
தொகையினைமீட் டொளியார் தூய
ஞானமல ரடிகளிற்சேர்த் தொப்பில்பர
ஞானானந் தம்த ரற்கே
ஈனமிலிவ் வருள்விளையாட் டியற்றுகிறான்
இறைவன்எனும் உண்மை கண்டார். 7

பாரிலருந் தவமியற்றிப் பரனடியை
யெய்தமுழுப் பக்கு வம்பெற்
றோருலக மக்களைப்பார்த் திவர்கள்மயற்
குள்ளகப்பட் டுழல்கின் றாரே
சீரியநன் னெறிபோற்றி இவர்கள்கரை
சேர்ந்திடின்நன் றாமே யென்னக்
காருணிய மிகுந்தெண்ணிக் கணக்கில்உப
தேசங்கள் செய்து சென்றார். 8

மறைகள்உப நிடதங்கள் ஆகமங்கள்
சாத்திரங்கள் மற்றும் ஞானத்
துறைவிளக்கும் பலநூல்களோடுபுரா
ணங்களெலாம் சொல்லிச் சென்றார்
நிறைநல்வினை யுடைய வர்கள் அவைபயின்று
நிலவுலகிற் பயன்பெற் றுய்ந்தார்
கறையகற்றிக் காசினியில் அனைவரும்அக்
கருணைபெறற் கியலா துள்ளார். 9

திருமூலர் போன்றபல சித்தர்களும்
சனகர்முதற் சீர்சி றந்த
பெருமுனிவர் களும்மார்க்கண் டேயர்முதல்
இருடிகளும் பிறங்கு தொண்டால்
பெருமைமிகு நாயன்மார் களும்ஆழ்வார்
களும்இந்தப் பெருநி லத்தோர்
கருமுறையைத் தவிர்த்தின்ப முறல்வேண்டு
மெனக்கருணை யால்மு யன்றார். 10

சிறந்தவுளத் தோடவர்கள் விதைத்தவிதை
முளைத்துச்செடி யாய்வ ளர்ந்து
நிறைந்ததய வுடைத்தாயு மானவர்
இராமலிங்கம் ராம க்ருட்ணர்
புறந்திகழும் ஜாதிமத பேதமறப்
போதவுணர் வருளச் செய்தே
அறந்திகழ்நல் லருட்சட்ட நெறிஅண்ணல்
அருளச்செய் திட்டதா மால். 11

எவ்வுயிரும் துன்பமற்றுப் பேரின்ப
மெய்தியுய்ய வேண்டு மென்றே
செவ்வையுறத் திருமூல ராதிபலர்
எண்ணிவந்த சிறந்த எண்ணம்
இவ்வகையில் வளர்ந்திருடிப் பட்டியண்ணல்
இதயமிசை நனிக னிந்தே
எவ்வமறுத் தின்பமருள் அருட்சட்ட
மெனப்பயனீ கின்ற தம்மா. 12

உலகமிது தோன்றியநாள் முதலாக
அருளாளர் உள்ளத் தின்கண்
நிலவிவந்த கனவனைத்தும் நனவாகி
நிலவுலக உயிர்க ளெல்லாம்
இலகும்இக சுகமெய்திப் பரசுகமாம்
முத்தியையும் இனிதே யெய்தக்
குலவுபல மதசமய சாரமெலாம்
கூட்டியருட் சட்ட மாக்கி, 13

மக்களெலாம் நாளும்எளி தனுசரிக்கும்
நித்தியகர் மங்க ளாக்கித்
தக்கவகை யினில்வழங்கி அருளாட்சி
புரிகருணை சான்ற அண்ணல்
ஒக்கஇனி தமர்ந்திருக்கும் அருள்மணிமண்
டபத்தின்உயர் இயல்பை யெல்லாம்
தொக்கநல்லா யிரம்நாக்கொள் ஆதிசே
டனும்சொல்லற் கியலா தென்னின், 14

இச்சிறியேன் ஒருநாவால் எங்ஙனம்கூ
றிடவல்லேன் எனின்,என் னுள்ளும்
மெய்ச்சிறப்பார் அருளண்ணல் உறைகின்ற
தால்அவர்தம் வியன்தாள் போற்றி
நச்சியவர் அருளுணர்த்தும் அளவுதிரு
வருள்துணையால் நவில லுற்றேன்,
இச்சகத்தில் அண்ணல்அருட் சட்டநெறிச்
சிறப்பெவரும் உணர்வ ரென்றே. 15

அருட்சட்ட மணிமண்டபம்

உலகுயிர்கள் இறைவனடி யெய்தாத
வண்ணம்தடுத் தோங்கும் மூன்று
மலமெனும்ஆ ணவம்கன்மம் மாயையெனும்
மரங்களடர் காட்டை வெட்டி
உலைவறுநன் னம்பிக்கைப் பள்ளமகழ்ந்
தருளார்சத் சங்கம் என்னும்
வலுவுடைநற் கற்களுடன் இறையுணர்வாம்
பசைகூட்டி மாண்பி னோடும் 16

இனிதமைக்கப் பெற்றநல்ல கடைக்காலின்
மீதேயவ் வெழில்மி குந்த
புனிதமணி மண்டபம்பே ரருளுருவாய்
நன்றமைந்து பொலிதல் கண்டு
முனிவர்களும் அமரர்களும் சிரமிசைகை
முகிழ்த்தேத்தித் தொழுவ ரென்றல்
மனிதகுல மாதிஉயி ரினமனைத்தும்
காணின்மகிழ் வெய்து மன்றே? 17

தூயநல்லன் பெனும்கூரை தோன்றும்;உயர்
நிட்டானு பூதி யென்ன
ஏயகல சம்தோன்றும்; அதுநிகரில்
அருளொளியெங் கெங்கும் வீசும்;
மேயஉயர் அத்துவிதக் கொடிஉலகில்
மெய்யன்பு மிக்கோ ரெல்லாம்
ஆயமுடன் வந்தருட்செல் வம்பெறுகென்
றழைத்தவண்ணம் பறக்கு மாலோ. 18

அந்தமணி மண்டபத்தின் அருளொளியெண்
திசைகளிலும் அழகாய் வீசும்
அந்தமணி மண்டபத்தில் முதல்நான்கு
தூண்களொடும் அமைந்து மேவும்
சந்தமிகு முகப்புமண்ட பத்தமைப்பே,
சாருலக மயலாம் கோடை
தந்திடுதுன் பம்தவிர்த்துத் தளர்வகற்றிக்
குளிர்ந்தநிழல் தருவ துண்மை. 19

விடியல்தணீ ராட்டம்,மருந் தருந்தாமை,
ஞானநிட்டை, விமல மான
அடியர்உற வெனும்தூண்கள் அம்முகப்பு
மண்டபத்துற் றழகை யூட்டும்;
படியிற்பல கோடிமுறை பிறந்திறந்து
பவமறுக்க வழிதே டாமல்
நெடிதுவருந் திடும்உயிர்கள் நிறைநலமெய்
தற்குவழி யினிது காட்டும். 20

அத்தகைய வரவேற்புக் கூடத்தில்
அன்போடு நுழையும் போதே
சித்தர்நிறை பொதிகைதரும் தென்றலுடன்
அருள்மணமும் கலந்து வீசிப்
பத்தரெலாம் வருகவென வரவேற்கும்;
அடியார்கள் பலருட் கூடிச்
சத்துடைய அருளுரைகள் நிகழ்த்தொலியும்
தவவொளியும் கலந்து தோன்றும். 21

நாமதற்குள் நுழைந்திடலா மாஎன்ற
அச்சம்நமக் குள்ளே தோன்றும்
தோமிலுயர் தகுதிநமக் குண்டோஎன்
றொருசிறிதே ஐயம் தோன்றும்;
நாமும்நுழை வோமென்னத் தயக்கமின்றி
நன்றுள்ளே நுழையும் காலை
சேமம்அருள் பெரியமணி மண்டபமொன்
றெழிலோடுள் திகழ்ந்து தோன்றும். 22

நல்லமைதி நாடிடுவோர் முத்தியின்பம்
நாடிடுவோர் நன்றுட் சென்றால்
சொல்லரிய பக்தியெனும் சந்தனத்தில்
ஆர்வமெனும் தூய பன்னீர்
துல்லியமாய்க் கலந்துமெழு கப்பெற்ற
தரைதோன்றித் தொந்தம் நீங்கி
எல்லையில்பே ரானந்தம் எய்தவிழை
வோர்வருகென் றினித ழைக்கும். 23

அந்தமணி மண்டபத்திற் பதினாறு
தூண்கள்இனி தமைந்து தோன்றும்;
எந்தநிலை யினும்பச்சை நீர்ப்பழக்கம்,
வெந்நீர்எப் போதும் நீக்கல்,
வந்தனைசெய் வழிபாடு, மரக்கறியூண்,
ஐந்தெனும்பா தகம்செய் யாமை,
இந்தஉல கினிற்பிறரை நாடாமை,
நாள்கோளை நம்பி டாமை, 24

மணிமந்த்ரம் மருவாமை, ப்ரார்த்தனைவை
யத்தினிற்செய் துக்கொள் ளாமை,
உணும்உணவைக் குறைத்துவெள்ளிக் கிழமைவிர
தம்பேணல், உடையோன் நாமம்
எணிஇடைவி டாதுமன னம்செயல்,
இறந்தவர்க்கி ரங்கி டாமை,
மணில்உடம்பை இனிதடக்கம் செய்கை,அற
மன்றத்திற் கணுகி டாமை, 25

உடல்பொருளா வியைஇறைவற் கொப்படைத்து
வாழ்வாற்றல், ஒப்பில் சட்டம்
திடமொடுபோற் றுகையில்நிகழ் அனுபவம்செப்
பாதுரக சியமாய்ப் பேணல்;
சுடர்மிகும்அம் மண்டபத்தில் துலங்கெணிரு
தூணாகும்; சுற்றி நோக்கின்
புடவியினில் இயற்கைபிற ழாமையெனும்
பொற்சுவர்நாற் புறமும் தோன்றும். 26

சோதனைக ளில்தளர்வு றாவுறுதி
யோடினருள் துணையைக் கொண்டே
ஏதமில்நல் வெற்றிபெறல் என்னும்நவ
மணிகள்அதில் அமைந்தி லங்கும்;
நாதன்அருட் சட்டஅனு பவமெனும்முத்
துச்சரம்நாற் புறமும் தொங்கும்;
போதமெனும் மெய்ஞ்ஞான தீபங்கள்
எப்புறமும் பொலிந்தி லங்கும்; 27

இறைவனருள் நாமம்கேட் டுருகுளமாம்
தூபமணம் கமழும் எங்கும்;
இறையளவும் தன்னலமில் சேவையெனும்
இன்னெழிற்கர்ப் பூர தீபம்
மறைவணுவு மின்றியுயர் மாணொளியி
னொடுவயங்கும்; அருந்த வத்தின்
துறைசிறந்த அருளாளர் ஆசிஇளந்
தென்றலெனச் சூழ்ந்து லாவும்; 28

பரநாத மணியோசை பாங்குறலுங்
காரஒலி பரப்பி நிற்கும்;
அருள்நாத நிலைகளெனும் அற்புதத்தூ
ரியவொலிகள் அமைந்திலங்கும்;
தெருள்மிகுத்த நித்தியமங் களமென்னும்
மங்கலவாத் தியம்முழங்கும்;
பொருள்நலமும் அருள்நலமும் பெறவிழைவோர்
போந்திடுகென் றொலிக்கும் நன்றே. 29

ஒருதெய்வக் கொள்கையெனும் ஒப்பற்ற
விட்டத்திற் பொருத்தப் பெற்ற
திருநெறியெ னும்சைவம் வைட்ணவம்இஸ்
லாமியம்கி றித்த வம்சீர்
பெருகிடுநாற் சங்கிலியாய்ப் பிறங்கஅத
னேடிணைக்கப் பெற்ற தான
சருவமத சமரசசன் மார்க்கமெனும்
பலகையெழில் தழைய மேவும்; 30

அருளெழில்சால் அத்தகைய ஊஞ்சலின்கண்
அருளாள ரான அண்ணல்
அருட்சட்ட அடியவரைத் தனிச்சிறப்பாய்
அனைத்துயிரைப் பொதுவாய்ப் பேணி
யருள,வலத் திருக்கரத்தில் தாமரையும்,
அருள்நெறியில் தவறு வோரைக்
கருணையொடு தண்டித்துத் திருத்தஇடக்
கரத்தினிற்பொற் பிரம்பும் தாங்கி, 31

கருணைநறுத் துளிக்கும்திரு விழிகளினால்
அனைத்துயிர்க்கும் கடைக்கண் பாலித்
தருட்பொலிவி னேடுமினி தமர்ந்திருப்பர்;
அருட்சட்டம் என்னும் நன்னூல்
அருளொளியொ டவர்மடியில் இலங்கிடும்;ஆ
யிரமுடிகொள் ஆதி சேடன்
திருமிகுநல் வெண்கொற்றக் குடையாகத்
திகழ்ந்துபணி செய்து நிற்பன்; 32

அந்தமணி மண்டபத்தின் கோபுரவா
யிலின்கண்ணே அருந்தவத்தால்
அந்தமில்நற் பொலிவுமிகும் குறுமுனிநன்
றருளுருவொ டமர்ந்திருப்பர்;
அந்தமணி மண்டபத்துட் செல்லவிழை
பவரெல்லாம் அவரிடத்தே
வந்துபணிந் தனுமதிபெற் றேயந்த
மண்டபத்துட் செல்லல் வேண்டும். 33

முப்பத்து முக்கோடி அமரரண்ண
லார்துதிகள் மொழிந்து நிற்பர்;
செப்பமிகு தும்புருவர் நாரதர்நல்
வீணையிசை திகழச் செய்வர்;
ஒப்புயர்வில் முனிவரரும் வானவரும்
அரஹரவென் றொலித்து நிற்பர்;
பொற்புறும்அம் மண்டபத்தின் கந்தம்பல
காதம்வரை போய் மணக்கும். 34

சேமம்அருள் கற்பகநற் றருஅண்ணல்
வலப்புறத்தில் திகழ்ந்திலங்கும்;
வாமமுற நற்காம தேனுஅண்ணல்
இடப்புறத்தில் யெங்கி நிற்கும்;
நேமிமிசை அவையிரண்டும் அடியார்கட்
கெப்பொருளும் நிதமும் நல்கும்;
ஓமுருக்கொள் சங்கநிதி பதுமநிதி
அடியார்கட் குதவி மேவும். 35

இத்தகுபொற் புடையமணி மண்டபத்தில்
இனிதமைந்து திகழும் மேலாம்
பத்திநிறை அடியவர்தம் பண்பும்அருள்
பழுத்திலங்கும் திறமும் காண்போம்;
சித்திவல்ல பங்களெலாம் குருநாதன்
திருவருளால் எய்தப் பெற்றுச்
சத்திமிக வுடையவராய்த் தண்ணருளின்
மயமானோர் திகழ்வார் அங்கண்; 36

குருவின்அருள் நாமம்ஒரு முறையுண்மை
யாயினிது கூறி னோர்கள்
பெருமைமிகு சிறப்பனைத்தும் நன்றுபெற்று
ஞானியராய்ப் பிறங்கு கின்றார்;
திருவருட்சட் டத்தைமுறை யோடும்அனுட்
டிப்பவர்கோள் நிலைக்கஞ் சாமல்
திருவருளின் துணைகொண்டு செம்மையெலாம்
எய்தியவண் திகழ்கின் றாரே. 37

உடல்பொருள்ஆ வியைமுழுவதும் அண்ணல்குரு
நாதரின்பால் ஒப்ப டைத்தே
அடலுடன்வாழ்ந் தோர்குருவின் அருளாணை
நனிகைக்கொண் டொளிர்கின் றார்கள்;
புடவியினில் அவனன்றி யொன்றுமில்லை
யென்றருள்வாழ் வாற்றி னோர்கள்
இடும்பணியைப் பவனன்முதல் அனைவோரும்
இனிதாற்றித் திகழ்கின் றார்கள். 38

குருநாதர் திருநாமம் ஒன்றேநற்
குறிக்கோளாக் கொண்டோர் அண்ணல்
அருகில்இனி தமர்ந் (து)அவர்பே ரருள்ஞான
இன்பத்தை யடைகின் றார்கள்;
இருநிலத்தில் நீயின்றி நானிரேன்
என்றிருந்தோர் இனிய ஜோதி
உருவாகிக் குருநாதர் உட்புகுகின்
றார்;இத்திறம் உரைத்தற் காமோ? 39

இப்படிப்பே ரருளாட்சி இயற்றியமர்
அண்ணல்திருக் கோலம், காண்போர்
செப்பமிகு நல்லமனப் பக்குவத்திற்
கேற்பஅவ்வத் தோற்றம் நல்கும்;
இப்படியிற் குற்றங்கள் செய்தோரை
ஒறுப்பதுபோல் இனிது தோன்றும்;
ஒப்பிலுண்மைப் பக்தர்களை உள்ளன்பால்
தழுவுவது போலும் தோன்றும்; 40

தந்தையெனத் தனயனென எஜமான
　　னெனக்கணவ னென்னத் தோன்றும்;
சந்தமுறத் தரிசிப்போர் உள்ளநிலைக்
　　கேற்பஎண்ணில் தரத்தில் தோன்றும்;
இந்தவொர் அற்புதக்கண்ணு டியைக்கண்டோ
　　ரேஇதனை யறிவர் நன்றாய்;
இந்தவகை அருளாட்சி நடத்துகுரு
　　அருட்பெருமை இயம்பற் பாற்றோ? 41

சிறப்பனைத்தும் அமைந்தகுரு பெருமானால்
　　இனிதருளிச் செய்யப் பெற்ற
சிறப்பனைத்தும் அமைந்ததிரு வருட்சட்டச்
　　செந்நெறியைச் செகமேற் பேணிச்
சிறப்பனைத்தும் இனிதெய்தித் தேசிகன்றன்
　　திருவருளின் மயமே யாகிச்
சிறப்பனைத்தும் புவிக்கருள்மெய் யடியவர்தாள்
　　பணிந்துசட்டச் சிறப்பைக் காண்போம். 42

## குருநாதர் துதி

படியின்மிசை பல்லாயி ரங்கோடி உயிர்வகை
　　படும்துன்பு கண்டி ரங்கி
விடியுமுனர் தண்ணீரில் மூழ்கிஉயர் வழிபாடு
　　செய்யத் தகுந்த நல்ல
அடியவர்களைத்தேடி அருள்நெறி வழங்கிஅரு
　　ளானந்த அமுத மூட்டி
நெடியபிற விக்கடல் கடத்தஇரு டிப்பதி
　　நிலாவுகுரு தாள்பரவு வாம். 43

## அருட் சட்ட மாண்பு

எல்லோரும் இம்மைநலம் இனிதெய்த வேண்டும்;இறை
　　யின்பமும் அடைதல் வேண்டும்;
சொல்லாலும் நினைவாலும் செய்கையா லும்தூய்மை
　　யெய்தித் திகழ்தல் வேண்டும்;
நல்லா றிதேயென்ன ஞாலத்து ளோர்கண்டு
　　நன்றுபின் பற்றல் வேண்டும்;
எல்லாரும் எளிதுபற் றத்தக்க தாகஅச்
　　செந்நெறி இலங்கல் வேண்டும்; 44

உடல்நலமும் உளநலமும் உயிர்நலமும் ஈவதாய்
அந்தநெறி யொளிரல் வேண்டும்;
புடவியினில் ஒருசிறு பொருட்செலவு மின்றியே
போற்றவுள தாதல் வேண்டும்;
கடலென்ன வுளபிறவி நோயைக் களைந்தொப்பில்
கருணைநலம் அருளல் வேண்டும்,
புடமிட்ட பொன்னுக்கல் வேண்டுமென உன்னினர்
பொலிவுமிகு புனித அண்ணல். 45

உலக நிலை

உலகுயிர்கள் சுகமாக வாழஇய
லாமையை உணர்ந்து நோக்கிக்
குலவுநற்கா ரணமெதெனக் கூர்ந்துணர்ந்தார்;
மூன்றென்ன உளத்துட் கொண்டார்;
அலகில்அருள் வடிவான இறைபால்நம்
பகமின்மை, அருள்வாழ் வாற்றும்
நிலைதவறி மாறுன வாழ்வாற்றி
நோய்மலிந்து வருந்தும் தன்மை, 46

உடலுரம்குன் றக்கோபம் அழுக்காறு
தியகுணங்கள் ஓங்கி வாட்ட
மடமையினல் தேவைகளைப் பெருக்கிஅவை
களையடை அவாவி னலே
கடமையினில் தவறிவிழைந் ததையடைய
இயலாமல் அமைதி யின்றிப்
புடவியினில் உழலலெனும் இவையகன்றுற்
போதுமெனத் தீர்மா னித்தார். 47

இம்மைச்சுகங் களைச்செம்மை யாய்ப்பெறுதற்
கியலாமல் உழலும் மக்கள்
அம்மைநலம் பற்றியெண்ணற் கியலாதென்
றண்ணல்திரு வுளத்துட் கொண்டார்
இம்மகியில் உள்ளவரை இடையூறெவ்
வுயிர்க்கும்செயா திருப்ப தோடு
நம்மொடுவாழ் பிறவுயிரும் நாமும்ஒழுக்
கம்பேணல் நன்றென் றோர்ந்தார். 48

இப்பிறவி தீர்ந்தால் மற்றொருபிறவி
யெய்தாத வகையில் வாழ்வைச்
செப்பமுற நடத்திவரல் அவசியமென்
றண்ணல்திருக் கருத்திற் கொண்டார்;
இப்புவியில் பிறவாநன் னிலையான
வீடுயிர்கள் எய்தி உய்ய
ஒப்பில்துற வேற்றுக வேண்டுமென
அண்ணலுளம் கொண்டா ரல்லர். 49

இல்லறத்தில் இருப்பவரும் நன்முறையில்
வாழ்வாற்றி இம்மை இன்பம்
நல்லவகை யினில்துய்த்து மறுமைநலம்
அடைநெறியே நன்றென் றுன்னித்
தொல்லுலகில் "அருட்சட்டம்" எனும்பெயரால்
தூநெறியை அருளி யார்க்கும்
நல்லதுணை யாயிருந்து வழிகாட்டி
நடத்திடல்நன் றென்றுட் கொண்டார். 50

சமயங்களில் சங்கடம்

இகபரநன் னலங்களைச்செவ் விதின்கூட்டற்
கெண்ணில்மதம் இருந்திட் டாலும்
அகமுறஅச் சமயங்கள் பற்றியுள
நூல்கள்படித் தறியா மக்கள்
சகமிசையெவ் வுயர்ந்தசம யத்தினையும்
சரியாய்ப்பே ணுதற்கா காமல்
தகவுறவே பயிற்றும்அனு பவம்மிக்கார்
தேவையென இருத்தல் கண்டார். 51

தாம்கையா ளும்சமயம் தக்கதென்றும்
சிறந்ததென்றும் போது மென்றும்
ஈங்குபலர் உளத்தில்திடத் தீர்மானம்
இருப்பதில்லை; பலமதத்தின்
பாங்குறுநற் கொள்கைபலப் பலவாயும்
ஒன்றொடொன்று மலைவ போலும்
ஆங்கிருப்பி னும்முடிவில் ஒத்திருத்தல்
அறிவதற்கே அரிதாய்த் தோன்றும். 52

சமயமொவ்வொன் றிலும்ரகசி யப்பகுதி
தக்கசில வாயி ருக்கும்
சமயமக்கள் எல்லோரும் தெரிந்துகையா
ளத்தக்க தாக இன்றி
சமயமக்கள் அனுட்டிக்கத் தக்கசில
வாயின்றிப் பலவாய்ப் பல்கிச்
சமயங்கள் இருப்பதையும் வனத்தில்தவம்
செயவாய்ப்பின் மையையும் கண்டார். 53

சுருக்க முறையின் அவசியம்

வசதிசில இருந்தாலும் வனம்சென்று
தவமாற்றல் இயலா தாகும்;
அசத்திதுவென் றேதுறந்தெல் லோரும்வெளி
யேறுவதும் அரிதே யாகும்;
வசதியில்லா வறிஞர்களும் மடமைமிகுந்
தோர்பலரும் மகிழ்வாய் வாழ்ந்து
நிசமுறஇப் பிறவியொன் றிலேயேபே
ரின்பமுத்தி யெய்தல் வேண்டும். 54

உலகமிசை உள்ளளவும் உயர்ந்தநல்ல
சுகவாழ்க்கை வாழ்வ தற்குச்
சிலவாயும், மறைவின்றித் தெளிவாயும்,
சுருக்கமாய்த் திகழும் வண்ணம்
நலமாக எவரும்எளி தினிலேற்றுக்
கையாண்டு நலம்பெ றற்கிந்
நிலமீதெம் மதத்தினர்க்கும் பொதுவாக
அண்ணல்நிறு வினர்நற் சட்டம். 55

''சட்டம்'' என்ற பெயர்க்காரணம்

அரசியல் சட்டம்

அரசியல்மன் றங்களில்நன் னீதிமன்றங்
களில்சட்ட அமைப்பின் வண்ணம்
அரசாங்கச் செயல்களெலாம் ஒழுங்காக
அமைதியொடு நடத்தல் கண்டார்

அரசாங்கச் சட்டத்தை மீறுபவர்
தண்டனைக்குள் ளாதல் கண்டார்
அருட்சட்டத் தினைமீறின் தண்டனையென்
றுணர்த்திடவும் அப்பேர் வைத்தார். 56

### இயற்கையின் இயல்பு

அரசியல்சட் டத்தினும்மே லாமியற்கைச்
சட்டம் அமைந் திருத்தல் கண்டார்;
திருவிளக்கு நம்முடைய தெனக்கூரை
யினில்வைத்தால் செயலென் ருகும்?
பொருள்கொடுத்து நாம்பெற்ற மின்சாரம்
எனத்தொட்டாற் போமே ஆவி;
அரசியல்சட் டம்மாற லாம்; இயற்கை,
அருட்சட்டம் மாரு தோங்கும். 57

### அவை போல் அமைப்பு

அரசியல்சட் டம்போலும் இயற்கைச்சட்
டம்போலும் அண்ண லாரின்
அருட்சட்ட முறையும்ஒழுங் காய்எந்தக்
காலத்தும் அமைந்து நல்ல
பொருள்வழங்கி அருள்வழங்கித் தவம்வழங்கிப்
புனிதசக்தி பலவ ழங்கி
இருட்பிறவிக் கடல்கடத்தி இன்பமுத்தி
தரவேண்டும் எனநி னைந்தார். 58

அவ்விருசட் டங்களுக்கும் மேலாக
அருட்சட்டம் அனைத்து யிர்க்கும்
செவ்வியநற் பயனருள வல்லது; நல்
தெளிவருளிப் பரமா னந்தம்
திவ்வியமாய்க் கூட்டுவித்துப் பிறவிப்பயன்
எய்துவிக்கும் சிறப்பு டைத்தாய்
எவ்வுலகும் போற்றவொளிர் வது, 'சட்டம்'
எனும்பெயருக் குரிய தாமால். 59

## 1. நாள் தவறு நீராட்டம்

### தலையும் நனைய நீராடல்

அருட்சட்டம் ஏற்பவர்கள் அகம்தூய்மை
புறம்தூய்மை யடைதல் வேண்டும்;
ஒருநாளும் தவறுமல் விடியலைந்து
நாழிகைமுன் உறக்கம் விட்டுத்
திருவருளை நினைந்தெழுந்து நீராட்டம்
தண்ணீரில் செய்தல் வேண்டும்;
அரைமுழுக்கா யின்றியுடம் பும்தலையும்
நனைந்திடநீ ராடல் வேண்டும். 60

தலைநனைய மூழ்காமல் கழுத்தொடுநீ
ராடல்நல்ல தல்ல என்றார்
தலையில்நரம் புகளனைத்தும் திரண்டிருப்ப
தால்தலையில் தண்ணீர் விட்டால்
அலகில்நலம் உடற்கெய்தும்;அருள்நலமும்
அடைந்திடலாம் என்றார் அண்ணல்;
அலகிலருட் குருபரனார் ஆணைவழி
நடப்பதுநல் வழியா கும்மே. 61

### விடியல் நீராட்டின் விழுமம்

விடியலைந்து நாழிகைமுன் தண்ணீரில்
விழுச்சக்தி திகழ்வ தாலே,
படியின்மிசை யக்காலம் தவறுமல்
மூழ்குனர்க்குப் பயன்மிக் கெய்தும்
உடலிலுள்ள நாடிநரம் புகட்குரமிக்
குறும்;மூளை கூர்மை யெய்தும்;
படரிரத்தம் தூய்மையுறும்;பரனருள்நம்
மேற்படிந்து பயன்மிக் கூட்டும் 62

பிரமமுகூர்த் தம்சிறந்த தெனஅந்நே
ரத்தைமறை பேணிப் போற்றும்;
பரமனருள் நாடுநர்க்குப் பயன்மிகநல்
கவ்விடியற் காலந் தன்னில்

சிரமமைஆ யிரஇதழ்ப்பூ வினில்வாசி
சேர்ந்தின்பம் செய்து, மேலும்
உரமிகுமூ லாதாரத் தினில்மேவும்;
உயர்நலங்கள் யாவும் கூடும். 63

காலமிதில் தவருமல் மூழ்குநர்கா
யத்துறுநோய் நீங்கி யேகும்;
சாலஉடல் நலமெய்தும்;திங்கனைத்தும்
தவிர்ந்தேகும்; தவமும் கூடும்
காலமிது தவறிமுழு கிடுவோர்நீ
ராடுபயன் காணு ராவர்;
மேலுமெதே னும்கெடுதி நேர்ந்தாலும்
நேருமென மேலோர் சொல்வார். 64

எந்நீராயினும் ஏற்றதாகும்

அருட்சட்டத் தினில்விடியல் நீராட்டம்
முதன்மையதாய் அமைந்து மேவும்;
அருளால்இவ் வொன்றமையின் மற்றவெலாம்
ஒவ்வொன்ருய் அமைத லாகும்;
அருள்நாடி நீராடற் காற்றுநீர்
ஊற்றுநீர் கிணற்று நீரில்
வெருவுறலில் லாமலொன்றில் விடியலிலே
தவருமல் மூழ்கல் வேண்டும். 65

பச்சைநீர்ப் பழக்கம்

இயற்கையிலே உள்ளதண்ணீ ரினில்விடியல்
மூழ்கிடுதல் இனிதா மென்ருர்;
இயற்கையிலே தண்ணீரில் உள்ளஉயிர்ச்
சத்துடம்புக் கினிதா மென்ருர்;
செயற்கையிலே காய்ச்சுவதும் வேறுபொருள்
சேர்ப்பதுவும் தீதா மென்ருர்;
செயற்கையிலே காய்ச்சிடின்தண் ணீரிலுள்ள
உயிர்ச்சத்து சிதையும் என்ருர். 66

உடையவன்றன் அருட்பாங்கை உளத்தெண்ணி
நீராடின் உயர்வே எய்தும்;
உடையவன்றன் திருநாமம் ஓதித்திரு
நீறுசிறி திட்டு மூழ்கின்,
அடையவுள தீங்கனைத்தும் அகன்றேகும்;
அருள்நலங்கள் வளர்ச்சி யெய்தும்;
உடல்நலம்குன் றியபோதும் உட்கொளமூழ்
கிடவெந்நீர் உதவா தென்றார். 67

## 2. வெந்நீர் வேண்டாம்

எக்கார ணம்கொண்டும் வெந்நீரைப்
பயன்படுத்த வேண்டாம் என்றார்;
நற்கால்கை கழுவுதற்கும் ஞாலமிசை
தண்ணீரே கொள்ளல் வேண்டும்;
உட்கொளற்கும் தண்ணீரே உபயோகித்
திடுக; வெந்நீர் உதவா தென்றார்;
மிக்கஅச்ச முறின்திருநீ றிட்டுபயோ
கித்திடுதல் வேண்டும் என்றார். 68

எண்ணெய்தேய்த் துக்கொளினும் வெந்நீரை
ஏற்காது விடுதல் வேண்டும்
எண்ணெயைக்காய்ச் சாதுபண்டம் எதனையும் சேர்க்
காதுமருந் தெண்ணெய் தைலம்
நண்ணிப்பயன் படுத்தாது சிகைக்காயைக்
கொதிக்கவைக்க நாடி டாது
தண்ணீரை யேஉபயோ கித்துமுழு
குதல்சட்ட முறைமை யாகும். 69

சொரிமழைதண் ணீராகப் பொழிவதனால்
தாவரங்கள் தோன்றும், வாழும்;
விரிகடல்தண் ணீராக விளங்குவதால்
உயிர்அனந்தம் மேவும் அங்கண்;
திரியும்நதி களும்தண்ணீ ராய்ஓடிச்
சீரியவாழ் வுலகுக் கீயும்;
திரிபெதுவும் செய்யாமல் தண்ணீரைப்
பயன்படுத்தல் சிறந்த தாமே. 70

கோயில்களில் மூர்த்திகட்குத் திருமஞ்ச
    னம்புரிவோர் குவல யத்தில்
தூயதண்ணீர் கொண்டுசெய்வ தன்றிவெந்நீர்
    கொண்டுசெயச் சூழ்கின் றாரோ?
தூயதண்ணீ ரினில்உள்ள சக்திஅதைக்
    காய்ச்சுகையில் தொலைந்து போகும்;
தூயதண்ணீ ரைக்குளிக்கக் குடிக்கஉப
    யோகித்தல் சுகமாம் என்றும். 71

வெந்நீராற் கொப்பளித்தல் ஒத்தணம்
    கொடுத்தல்எலாம் வேண்டாம் என்றார்;
வெந்நீரை மகப்பேறு காலத்தும்
    பயன்படுத்த வேண்டாம் என்றார்;
வெந்நீரைத் தவறாகத் தொடநேர்ந்தா
    லும்விமலன் குறிப்பு தோன்றும்;
வெந்நீர்தொட் டதுதவறென் றுணர்ந்திறையை
    வேண்டின்குறை நீங்கி யேகும். 72

வெந்நீரால் நன்மைமிக உண்டாகும்
    என்றுசிலர் விளம்பு வார்கள்;
எந்நேர மும்மேகம் தண்ணீரை
    யேபொழியும் என்ப துண்மை;
வெந்நீர்விட் டால்எந்தப் பயிரேனும்
    வளர்ந்திடுமோ? வாழா தன்றோ?
வெந்நீரில் இருந்தெந்த உயிரேனும்
    வாழ்ந்திடுமோ விரிந்த பாரில்? 73

### 3. வந்தனை வழிபாடு

அதிகாலை நீராடி முடிந்தபினர்
    அவரவர்கள் வழக்கம் போல
நுதலில்அணி தற்குரிய சமயச்சின்
    னங்களணிந் தருளை நாடி
அதிவிருப்பி னோடைங்கரன் ஆலயமுற்
    றன்போடும் கும்பிட் டேத்தித்
துதித்திறைஞ்சி மூன்றுமுறை வலம்செய்து
    தூயநல்வாழ் வாற்றல் வேண்டும். 74

எல்லாப்பக் குவமுடைய மக்களுக்கும்
இச்சட்டம் அமைத்த அண்ணல்
எல்லார்க்கும் மிகஎளிதாய் இருக்கும்வணம்
வழிபாடிவ் வாற மைத்தார்;
எல்லார்வீட் டிலும்வழிபாட் டுருவம்இடம்
யாவுமிரா தாத லாலே,
எல்லாஊ ரிலும்இருக்கும் கணபதிகோ
யிலில்வழிபா டியற்றச் சொன்னார். 75

சைவரும்வை ணவர்களுமாம் இந்துக்கள்
தந்திமுகன் கோயிற் கேகி
மெய்வழிபா டாற்றுதற்குத் தடையில்லை;
முகம்மதியர் கிறித்த வர்கள்
வையகத்தில் அவரவர்க்கு வகுத்தவழி
பாடுகளைச் செயலாம் என்றார்;
உய்யவுள இவைவிழையார் இயற்கைமரம்
செடியைவழி பட்டுய் கென்றார். 76

பூசைபுரி வதற்கான பழம்தேங்காய்
முதலான பொருள்க ளோடும்
வாசமிகு கர்ப்பூரம் சந்தனம்குங்
கிலியமெனும் வகைக ளோடும்
பூசையறை யினிற்பீடத் தினிதமர்ந்து
பூசைசெயல் தவறன் றேனும்
காசினியில் எளியவரும் கைக்கொள்ளக்
கருணையொடிவ் வழியைச் சொன்னார். 77

தீர்த்தமும், தியானமும்.

வழிபாடு முடிந்தபினர் தண்ணீரில்
வண்மைமிகு திருநீ றோடும்
எழிலார்பைந் துளசியிட்டுள் ளுக்கருந்தி
இறைவனரு ளெய்தல் வேண்டும்;
விழிமூடி ஓரிடத்தில் இனிதமர்ந்து
விமலனடி மலரை உன்னி
வழிபாடுள் ளுறஇயற்றல் வேண்டுமிது
வழிபடுமுன் செயலும் நன்றாம். 78

## 4. ஒருவனே தெய்வம்

பல்லாயி ரங்கோடி அண்டமெலாம்
படைத்தளித்துப் பேணி யாள
வல்லானும் பரனொருவன் இருக்கின்றான்
வையகத்தோர் அவனை எண்ணில்
சொல்லாலும் பெயராலும் உருவாயும்
அருவாயும் தொழுதல் செய்வார்;
எல்லாநற் பெயரும்உரு வும்புகழும்
இறைவன்ஒரு வனுக்கே யெய்தும். 79

எப்பெயர்கொண் டெவ்வுருவில் எவர்வழிபட்
டாலுமந்த இறையைச் சாரும்;
அப்பொருளே அவ்வவர்வி ழைந்தவண்ணம்
தோன்றிஅருள் புரிந்து பேணும்;
இப்பொருளே உலகிலுள உயர்ந்தசம
யங்களெலாம் இனிது சொல்லும்;
இப்பொருளே அருட்சட்டம் வழங்கியருள்
நம்மண்ணற் கிசைந்த தாகும், 80

அருட்சட்டம் மேற்கொள்வோர் எச்சமயத்
தவர்எனினும் அவர்கட் குள்ள
தெருட்பெறுநன் மூர்த்தியொன்றை வழிபடலாம்
பிறமதத்தார் போற்று தெய்வத்
திருப்பெயரைத் திருவுருவைத் தாழ்வாயெண்
ணுதல், செப்பல், தீதாம்என்றார்
இருட்படலம் தவிர்த்தினரு ளொளிவிளக்கும்
சத்வஉண வேற்பாய் என்றார். 81

### மரக்கறி உணவு

அருட்சட்டம் மேற்கொள்வோர் ஆணெனினும்
பெண்ணெனினும் தூய்மை யான
மரக்கறியூ ணைத்தவிர மாமிசஊ
ணைப்புசித்த லாகா தென்றார்;
மரக்கறியும் மாமிசமும் உணும்பழக்கம்
உடையவரும் சட்டத் துற்றால்
மரக்கறியூ ணைத்தவிர மற்றஉண
வைத்தவிர்த்தல் வேண்டும் என்றார். 82

சைவஉண வானமரக் கறியுணவே
தாமசரா ஜசத்தை நீக்கும்;
சைவஉண வானமரக் கறியுணவே
சாத்விகம்சன் மார்க்கம் நல்கும்;
சைவஉண வானமரக் கறியுணவே
தெய்வநலம் தந்து பேணும்;
சைவஉண வானமரக் கறியுணவே
சட்டநெறிக் கேற்ற தென்றார். 83

அசைவஉண வேற்றவர்கள் அருட்சட்டம்
ஏற்றபினர் ஆண்ட வன்பால்
அசைவறுநல் லுறுதியுடன் அன்போடும்
குறையிரந்து வேண்டிக் கொண்டால்,
அசைவஉண வினைவெறுத்துச் சைவஉண
வருந்துநிலை அருளால் எய்தும்;
அசைவறுநல் லுறுதியும்மெய் யன்பும்இறை
பால்அமையின் அனைத்தும் எய்தும். 84

## 5. பஞ்சமா பாதகம் தவிர்த்தல்

கொலைகாமம் பொய்திருடு கள்குடித்தல்
எனவைந்தாய்க் கூறு கின்ற
நிலைபஞ்ச மாபாத கங்களென
அருள்ஞான நெறியோர் சொன்னார்;
நிலையான அருட்சட்ட நெறிபேணு
வோர்இவற்றைத் தவிர்த்தல் வேண்டும்;
இலையாயின் அருட்சட்ட நன்னெறியால்
பயனெய்தற் கியலா தென்றார். 85

எத்தகைய உயிர்க்கொலையும் செய்வதண்ணல்
இதயத்திற் கொவ்வா தாகும்
இத்தரையிற் பசிப்பிணியை நீக்குதற்கும்
எளிய,இன்றி யமையா தான
சுத்தசைவ உணவுண்க; வேறெந்தச்
செடிகொடியும் துணித்தல் செய்யேல்;
மெத்தவிஷப் பாம்பொடுதே ளாதியையும்
கொல்லல்தகா தென்றார் அண்ணல். 86

புகைபிடித்தல் சூதாடல் புலாலுண்ணல்
யாதொன்றும் கூடா தாகும்;
புகையிலைகஞ் சா அபினு தியபோதைப்
பொருள்யாவும் நீக்கல் வேண்டும்;
சகமிசைபொல் லாரோடும் உறவாடல்
அடியோடு தவிர்த்தல் வேண்டும்;
தகைமைமிகு நல்லாரோ டுறவாடிச்
சன்மார்க்கம் பழகல் வேண்டும். 87

இல்லறத்தார் களுமிம்மை மறுமைநலம்
எய்தியுய்ய வேண்டும் என்றே
நல்லறமாம் சட்டநெறி ஞாலமிசை
வகுத்தளித்தார் ஞான மூர்த்தி;
இல்லறத்தார்க் குரியஇச்சை இருப்பின்இறை
யருள்நாடி இறைஞ்சி வந்தால்
நல்லடிசேர் இச்சையன்றி ஏனையிச்சை
யகலுமென நவின்றார் நன்றே. 88

## 6. மருந்து அருந்தாமை

நாம்செய்த வினைப்பயனால் ஞாலமிசை
நாம்பிறவி யெய்தி யுள்ளோம்;
நாம்செய்த வினைதீர்ந்தால் ஞாலமிசை
நாம்நொடியும் இருக்க மாட்டோம்;
நாம்செய்த வினைப்பயனே நோயாக
நமக்குற்று நலிவு நல்கும்;
நாம்செய்த வினைநுகர்ந்து தீர்ப்பதன்றி
நாம்தடுக்க முயலல் நன்றோ? 89

இயற்கைக்கு மாறாக வாழ்வாற்றி
யிருப்பின்பிணி எய்தும் நம்மை;
இயற்கையினை அனுசரித்து வாழ்வோர்கட்(கு)
எப்பிணியும் எய்தா தென்பர்
இயற்கைக்கு மாறான வாழ்வாற்றி
யதன்பயனாய் எய்தும் நோய்கட்(கு)
இயற்கைக்கு மாறான மருந்தருந்தின்
என்னபயன் என்பார் அண்ணல். 90

ஒருபிணியைத் தீர்ப்பதற்குத் தரும்மருந்து
பிறிதொருநோ யினையுண் டாக்கும்;
ஒருபிணியைத் தவிர்ப்பதற்குட் கொளும்மருந்தப்
பிணியையொழிக் காதும் போகும்;
வருபிணியை நாமிடையில் தடுத்தால்அவ்
வினைமீண்டும் வளர்வ தாகும்;
அருமருந்தாம் இறைவனருள் நினைந்துபிணி
யகற்றமுய லுதல்நன் றாமே. 91

இயற்கைநெறி மாறாமல் அருள்வாழ்வாற்
றிடின்பிணிகள் ஏதும் எய்தா;
மயற்குளுற்ற தீநெறியால் வருபிணிகள்
மருந்தருந்தி னாலும் தீரா;
செயற்கையினால் அமைமருந்தை நாடியலைந்
தேங்காமல் தெளிவு பெற்றிங்(கு)
உயற்குவழி காட்டியருள் உடையவன்தண்
ணருள்பேணின் உயர்வுண் டாமே. 92

இயற்கைக்கு மாறாக வாழ்வாற்றி
யதன்பயனாய் எய்தும் நோய்கள்,
இயற்கையினை அனுசரித்து, வாழ்வதனால்
இறையருளால் நீங்கி யேகும்;
செயற்கைமருந் தருந்திவினை பெருக்காமல்
திருவருளை நாடி வாழ்ந்தால்,
உயற்குநல்ல வழிகிடைக்கும் வினைநீங்கும்
உயர்வனைத்தும் எய்த லாமே. 93

இறையருள்நம் வினைநுகர்ந்து தீர்ப்பதற்குப்
பிறவிதந்த தென்ப துண்மை;
இறையருளால் வினைதீரும், இறையருளால்
நலம்விளையும் என்ப துண்மை;
இறையருளால் அமைமருந்தால், மருத்துவனால்
பிணிகள்தவிர்ந் தேகு மென்றால்,
இறையருளை யேநாடிப் பிணிதீர்த்துக்
கொள்ளல்மிக இனிய தன்றோ? 94

வைத்தியநா திசன்என வள்ளலுக்குப்
பெயர்சூட்டி வழுத்தும் நாமே
வைத்தியம்செய் திடவேறு மருத்துவனை
நாடிடல்நன் மார்க்க மாமோ?
வைத்தியர்க ளைப்படைத்து மருந்துகளைப்
படைத்தபரன் தீர்க்கா நோயை
வைத்தியர்க ளும்மருந்தும் தீர்க்கமுடிந்
திடுமோ? நல் வழிவே றுண்டோ? 95

தீராநோ யெனும்பிறவி நோயினையும்
தீர்த்தருள வல்ல செம்மல்
ஆராநல் லமுதாகி அகம்புறமும்
இருந்தோம்பல் அறிந்த பின்பும்,
தீராதிந் நோயென்ன மருந்தைப்பிற
மருத்துவனைச் சிந்தித்திட்டால்
ஆரால்இவ் வறியாமை நீங்கும்? இறை
யருளொன்றே துணைசெய் தாளும். 96

அருள்கோரும் நல்லார்வம் உண்டாகும்
வரைமருந்துக் கலைந்து நிற்பார்;
அருளில்மிகு நம்பிக்கை யுற்றதுமே
மருந்தைஅணு வளவும் உன்னார்;
அருளைஅட ரப்பெறற்குத் துணைபுரிய
வரும்நோயை அகற்ற வுன்னி
அருளைமறந் தேமாய மருந்துகளை
நாடல்அறி யாமை யன்றோ? 97

வைத்தியத்தில் மிகச்சிறந்த நிபுணர்களைப்
பக்கத்தில் வைத்துக் கொண்டும்
இத்தரையில் மிகஉயர்ந்த மருந்துகளைப்
பிணியாளர்க் கினிது தந்தும்
மெத்தசிகிச் சைசெயினும் பிணிநீங்கா
திறந்திடுதல் மிகக்காண் கின்றோம்;
சித்தமிசை அறிஞரிதை ஆய்ந்துணர்ந்தால்
திருவருளை நாடல் திண்ணம். 98

இருப்பதும் இறப்பதும்நோய் தீர்ந்துநலம்
எய்துவதும் உடைய வன்றன்
விருப்பப்படி நடப்பதன்றி வித்தக
மருத்துவரால், ஔட தத்தால்
விருப்பப்படி மாந்தர்நடத் திக்கொள்வ
தன்றென்னும் விளக்கம் கண்டோர்
பொருப்பனைய இடர்வரினும் அஞ்சாமல்
இறையருளைப் போற்றி உய்வார் 99

மருந்துகளை மருத்துவரை நம்பியையோ
மருந்(து)ஐயோ வைத்யர் என்றே
இருந்துயிரை விடுவதைக்காட் டிலும்இறைவன்
திருவருளை இனிது நம்பி
வருந்துதலில் லா(து)ஆயுள் முடிந்துவிடின்
மாண்டிடுதல் உயர்வே யன்றோ?
பொருந்துமிந்த உண்மையினை ஏன்மக்கள்
உணரார்என் றிடுவார் அண்ணல். 100

மருந்தருந்தி மாண்டிடுவோர் எண்ணிக்கை
யினைமாந்தர் கணக்கிற் கொண்டால்,
மருந்தருந்தா தருள்நாடிப் பச்சைநீ
ரினில்மூழ்கி மாண்ட மக்கள்
பெரும்புவியில் மிகக்குறைவா யிருக்குமுண்மை
அனுபவத்திற் பெரியோர் காண்பார்
அரும்பும்உயர் அன்பிறைவன் அருள்மயமாய்
அவனிமிசை திகழ்தல் காண்பார். 101

உடம்பிலுறு நோயினைநீக் கும்சக்தி
உடம்புக்குள் உள்ள தென்று
திடம்பெறநல் லறிஞர்பலர் ஆராய்ந்து
தெளிந்தினிது செப்பி யுள்ளார்
உடம்பைஉயி ருக்களித்தவ் வுடம்பினுளே
கோயில்கொண் டுறையும் ஈசன்
உடம்பினெவ்வோர் அணுவினுளும் ஒளிர்ந்(து)
உறுநோய்
அனைத்தும்தீர்த்(து) உதவு வானே. 102

இறைவனிடத் துறுதியிருப் பின்மருந்தை
மருத்துவனை எவரும் நாடார்;
இறைவனருள் துணையினைக்கொண் டெப்பிணிக
ளையுமெளிதில் நீக்கிக் கொள்வார்;
இறைவனருள் துணைகொண்டே வாழ்விலுறும்
இன்னலெலாம் நீக்கிக் கொள்வார்;
இறைவனருள் துணைகொண்டே சிக்கலெலாம்
நீக்கிக்கொண் டின்பம் துய்ப்பார். 103

உடையவனே அடைக்கலம்என் றடைந்ததன்நற்
பயனாக உறுநோய் நீங்கித்
திடவுடலோ டுயர்நலமபெற் றிடும்போதில்
அவர் தூய சித்தத் தன்மை.
உடையவன்றன் திருவருளின் பெருமையுணர்ந்
தினிதெய்தும் உறுதி, யாவும்
புடவியினில் புகலொணுமோ? பவக்கடலைக்
கடக்கும்திறல் பூண்பா ரன்றே? 104

அண்ணலருட் கட்டளையின் படிசட்ட
நெறிநடப்போர் அவனி மீதில்
திண்ணமுற நோயனைத்தும் நீங்கிஇறை
திருவருளில் திளைத்திங் குய்வார்;
மண்ணுலகில் வீட்டினிலும் ஊரினிலும்
அவர்பெருமை மாண்புற் றோங்கும்;
விண்ணவரும் அவர்உறுதி கண்டுவந்து
வாழ்த்துரைகள் விளம்பி நிற்பார். 105

## 7. பிணிவந்தால் செய்ய வேண்டியவை

### திருநீறும், தீர்த்தமும்.

முற்பிறவி யின்பயனாய் இப்பிறவி
யிற்பிணிகள் வரவும் கூடும்;
இப்படியில் உறுபிணிகள் எண்ணிலவாம்;
அவற்றில்எது வரினும் அண்ணல்
சொற்படிவை கறைமாலை தண்ணீரில்
மூழ்கிஉளத் தூய்மை யோடும்
சிற்பரன்தண் ணருள்நாடி நீறுதுழா
யமைதீர்த்தம் பருகல் வேண்டும். 106

நோய்தீரும் வரையில்இரு வேளையிலும்
தண்ணீரில் மூழ்கல் வேண்டும்;
நோய்தீரும் வரையில்இரு வேளையிலும்
அருள்தீர்த்தம் பருகல் வேண்டும்;
நோய்தீரும் வரையிலும்நோ யுளஇடத்தில்
திருநீறு பூசல் வேண்டும்;
நோய்தீரும் வரையும்இறை திருநாமம்
மனனம்நனி செய்தல் வேண்டும். 107

## திருநாம மனனம்

எப்போதும் உடையவன்றன் திருநாமம்
இடர்தீர்த்தின் பெய்தச் செய்யும்;
இப்பாரில் நோயுற்ற போதிறைவன்
திருநாமம் மனனம் செய்தால்,
அப்போதே பிணிநீங்கும் அருள்நலங்கள்
பலகூடும்;அடியார்க் கெல்லாம்
மெய்ப்போத நாதனிடம் நம்பிக்கை
மிகும்;எவரும் உணர லாமே. 108

நோயுற்றோர் உடையவன்றன் திருநாம
மனனம்செய இயலா விட்டால்,
நோயுற்றோர் நலமடைய வேண்டிஅரு
குள்ளோர்கள் செயல்நன் றாகும்;
நோயுற்றோர் மனமும்அரு குள்ளோர்கள்
மனமும்இறை யருளைப் பற்றி
நோய்நீக்கம் பெறவும்இறை யருள்பெறவும்
சாதனமீ தாகும் நன்றே. 109

பலர்உள்ளம் இறைவனருள் நாடிநிற்பின்
பயன்விரைவில் எய்த லாகும்;
பலர்இறையைத் துதித்தால்அவ் விடத்தில்அரு
ளொளிபடர்ந்து குறைகள் நீக்கும்;
பலர்மனமொன் றிப்பரவின் பரமன்எழுந்
தருளிஇன்பம் பாலித் தாள்வன்;
பலரும்உரு கித்தொழுதால் பாரும்விண்ணும்;
பரமசுகம் எய்த லாமே. 110

கடும்பிணிகள் வந்துற்ற நிலையிலும்தண்
ணீரில்இரு வேளை மூழ்கித்
திடம்பெறநற் றிருநாமம் ஓதித்தீர்த்
தம்பருகி நீறு பூசி
உடம்பிலுறு நோய்நீக்கம் பெற்றவர்கள்
உடையவன்தண் ணருள்மிக் கெய்திப்
புடம்படுபொன் னெனப்பொலிந்து பூவுலகிற்
புனிதரென விளங்கு வாரே. 111

உடல்நலமுற் றுளபோதும் தண்ணீரில்
மூழ்கிடுதற் குடன்ப டாதோர்
உடல்நலம்குன் றியபோது தண்ணீரில்
இருவேளை மூழ்கல் என்ற
திடமிகுசெய் தியைக்கேட்பின் மனத்தினில்மிக்
கச்சமுற்று நடுக்கம் கொள்வார்;
புடவியில்இவ் வாறருளால் நலமுறுதல்
கண்டுபுந்தி வியப்பார் பின்னர். 112

உடலெடுத்து வந்தவினை முடிந்ததும்இவ்
வுடல்முடியும் என்ப துண்மை;
உடல்முடியும் காலம்வரும் போதுமருந்
தருந்திடினும் உடல்நிற் காதாம்;
திடமருந்தின் றித்தண்ணீர் மூழ்குவதால்
உளஆயுள் தீரு மென்னல்
மடமையலால், அறிவுடைமை யென்றுசொலல்
மாண்புடைத்தோ என்பார் அண்ணல். 113

மகப்பேறு காலம்

மகப்பேறு காலத்தும் மருந்தேதும்
கொடுக்காமல் அருளை நாடி
உகப்போடு குழந்தைநிலத் தினிற்பிறந்த
உடனேஅத் தாயைச் சேயைச்
சுகப்பேறு தருதண்ணீ ரினிலாட்டித்
தூநீறு பூசு வித்தே
இகத்தோடு பரநலமும் இனிதூட்டும்
அருள்தீர்த்தம் ஈதல் வேண்டும். 114

குழந்தைபெறும் தாய்க்கும்பிறந் திடுசேய்க்கும்
குவலயத்து மக்கள் நன்று
வழங்கிடும்பத் தியமேதும் மேற்கொள்ளச்
செய்யாமல் மாண்பார் ஞானப்
பிழம்பான உடையவன்றன் திருவருளே
பேணுமெனும் உறுதி யோடும்
ஒழுங்காக உடையவன்றன் திருநாமம்
உளத்துன்னிப் போற்றல் வேண்டும். 115

கருவீன்ற தாய்க்கும்இளஞ் சேய்க்கும்உயர்
கருணையினை நாடித் தண்ணீர்
ஒருநாளும் தவறாமல் அதிகாலை
யூற்றிக்குளிப் பித்தல் வேண்டும்
அருள்நாடித் தண்ணீரில் ஆட்டுவிப்போர்
முனர்நீரில் மூழ்கல் வேண்டும்;
அருள்தீர்த்தம் பருகுவித்துச் சாததீர்த்
தமும்தருகென் றண்ணல் சொல்வார். 116

பசியின்நிலை யறிந்துணவைப் பக்குவமாய்
முறையோடு தருதல் வேண்டும்;
சிசுவினுக்குச் செவ்வெண்ணெய் முதலான
ஏதொன்றும் தருத லின்றிப்
பசுபதியாம் உடையவன்றண் ணருள்நாடித்
தீர்த்தம்சிறி தருத்தல் வேண்டும்;
சிசுவினுக்குப் பால்தருமார் பினிற்சிறிது
திருநீறு பூசல் வேண்டும். * 117

விஷக் கடி

தேள்பாம்பு முதலான தீயவிஷ
ப்ராணிகளால் தீண்டப் பெற்றால்
தேள்பாம்பு முதலாம்அத் தீயவிஷ
ப்ராணிகளைக் கொலைசெய் யாமல்

---

*குறிப்பு:- இன்னும் அதிகவிவரம் தெரிந்து கொள்ள விரும்புவோர் அருட்சட்ட அனுபவம் மிக்காரிடம் நேரில் சென்று கேட்டறிக,

ஆள்வோனும் உடையவன்தண் ணருள் நாடித்
  தண்ணீரில் அன்பாய் மூழ்கி
நீள்விடம்நீங் கிடப்போற்றித் தீர்த்தம்அருந்
  திடின்அவ்விடம் நீங்கிப் போமே. 118

### வெட்டு ரணம்

ஆயுதத்தா லோபிற அபாயத்தா
  லோஉடம்பிற் காய மாயின்,
நோயெனும்சி லந்திகட்டி பிளவைமுத
  லியதோன்றி நலிவு செய்யின்,
தூய அருள் நாடிஇரு வேளைதணீ
  ராடித்திரு நீறு பூசின்,
கோயில்வலம் வரின்நோயும் தீரும்;நலம்
  எய்தும்;அருள் கூடும் நன்றே. 119

### அச்சம் அணுவும் இல்லை

நோயுற்ற காலத்தில் மருந்தருந்தி
  நோய்நீக்கம் பெறுக என்றே,
ஆய்வுற்ற அறிஞரெலாம் நவின்றிருக்க
  அவ்வாறு செய்த லின்றி,
நோயுறினும் மகப்பெறினும் விஷம்தீண்டி
  னுலும்கட்டி ரணமுற் றாலும்
தூயதண்ணீ ரினில்இருவே ளையுமூழ்கித்
  தூநீறு தீர்த்தம் கொண்டால், 120

நோய்நீங்கும் வினைநீங்கும் நலமெய்தும்
  எனப்புவியில் நுவலற் காமோ?
ஆயும்அறி வாளர்நகை புரியாரோ?
  தற்கொலையீ தன்றோ? என்றும்,
''ஏயும்மர ணத்தைமுனர் வரவழைத்துக்
  கொளல்ஆமோ'' என்றும் சொல்வோர்
நோயுறின்இவ் வருள்நெறியில் நடந்துநல
  முறல்உணர்ந்தால் நுவலார் பின்னர். 121

அச்சமொரு சிறிதுமின்றி அருட்சட்டச்
செந்நெறிமேற் கொள்ளும் அன்பர்க்(கு)
இச்சகத்திற் பிணியேதும் வாரா; அப்
படிவரினும் இறைவன் தூய
பொற்சரணம் துணையெனக்கொண் டிந்நெறியைப்
போற்றின்,மிக அருமை யாக
நச்சுபிணி ரணமாதி நலிநீங்கி
நலமெய்தல் ஞாலத் துண்மை. 122

உடையவன்றன் பெருங்கருணை அத்தகைய
உத்தமருக் குயர்வு நல்கி
உடலையுமுள் ளத்தினையும் ஒருங்குசெம்மைப்
படுத்திஉயர் அருள்வாழ் வீந்து
புடவிமிசை அழகாக அற்புதமா
கப்பேணும் பொற்பு நோக்கி
மடமையகன் றருட்சட்ட மாண்பறிந்து
போற்றிமன மகிழ்வார் யாரும். 123

## நம்போன்ற உயிரை நாடாமை

உலகில்உயி ராய்ப்பிறந்த நாம்செம்மை
யாய்வாழ்ந்திங் குலவ வேண்டின்,
நலமொடொரு வருக்கொருவர் துணைபுரிந்து
கொளல்வேண்டும் என்பார் நல்லோர்;
நிலமிசைபெற் றோர்உற்றோர் ஊரார்ஆ
சிரியரென நிலவு வோரால்
இலகும்இக பரநலங்கள் இனிதெய்த
வேண்டியவ ராக வுள்ளோம். 124

தனியாக வேபிறந்து தனியாக
வேவளர்ந்து தனியாய் வாழற்(கு)
இனிதிந்த வையமிசை இயலாதென்
றாலும்,நமக் கிதம்செய் கின்ற
மனிதர்நமக் குதவத்தகு சக்திசம
யங்கள்இறை யருளால் வாய்க்கும்;
*துனிநன்மை யாவும்அரு ளால்அன்றித்
தோன்றாதிங் கென்பார் அண்ணல். 125

* துனி—துன்பம்.

நமக்குமுட்டுப் பாடான நிலைநேருங்
காலத்தில் நம்மைப் போன்றே
தமக்குமுட்டுப் பாடான நிலைநேருங்
காலத்தில் தவிக்கின் றோரை
நமக்குதவி புரிகின்ற கர்த்தரென
நாடுவது ஞாய மாமோ?
நமக்குதவ அவர்எணினும் அருள்துணையின்
றேல்அஃது நடவா தன்றோ? 126

உதவிபுரி வோரைஉதா சினம்செய்ய
வேண்டும்என உரைத்தா ரல்லர்;
உதவுநரை அணுகுவதில் நம்நிலையை
உரைப்பதிலும் தவறொன் றில்லை
உதவுநரை நமைக்காக்கும் கர்த்தரென
உன்னிஅவர் களையே நத்தி
இதமொடவர் களைமகிழ்விப் பதிற்காலம்
போக்காதீர் என்றார் அண்ணல். 127

செய்வானைச் செய்விக்க வல்லவன்
இறைவனெனத் தெளிதல் வேண்டும்;
உய்வானை உய்விக்க வல்லவன்
இறைவனென உணர்தல் வேண்டும்;
நைவார்தம் நலிவகற்றி நற்றுணையாய்ப்
புரந்தருள்வோன் இறைவன் என்னப்
பொய்வாழ்வின் நிலையுணர்ந்த புண்ணியர்கள்
இறையருளே போற்றி நிற்பார். *128*

இன்பதுன்பங் களிற்சிக்கி நமைப்போன்றே
இடர்ப்படுவோர் நமக்குண் டான
துன்பமதை நீக்கியின்பம் அருள்வரெனத்
துணிந்தெண்ணல் தவறே யாகும்;
இன்பதுன்ப மொன்றுமிலா தென்றுமொரு
படித்தாக இருக்கு மீசன்
துன்பமதைத் தவிர்த்தின்பம் எவ்வுயிர்க்கும்
ஈவனெனத் தூயோர் சொல்வார். 129

எக்குறைகள் தீரவிழைந் திட்டாலும்
யாதுநலம் விழைந்திட் டாலும்
தக்கபடி அருள்கவென மெய்ப்பொருளின்
தண்ணருளை நினைந்து போற்றி
மிக்கமன முருகியழு தரற்றிநின்றால்
குறையனைத்தும் விலகி நீங்கும்;
அக்கணத்தில் நலமனைத்தும் திருவருளால்
அமையுமென உரைத்தார் அண்ணல். 130

ஆகமுடி யாச்செயல்கள் அனைத்தும்இறை
திருவருளால் கணத்தில் ஆகும்;
போகமுடி யாக்குறைகள் அனைத்தும்இறை
திருவருளால் கணத்தில் போகும்;
ஏகபரம் பொருள்அவற்றிற் குரியவர்கள்
இதயமிசை இருந்து,யாவும்
ஆகஅருள் புரிவன்;அவன் அருளன்றி
அணுவும்அசை யாதீ துண்மை. 131

முன்னவனே முன்னின்றால் முடியாத
பொருள்உளதோ என்ற முன்னோர்
அன்னவனே அனைத்துலகச் செயல்களுக்கும்
காரணமென் றறிந்து சொன்னார்;
அன்னவனே அனைவர்உளத் தையுமாட்டிச்
செயல்அனைத்தும் ஆக்கு விப்பான்;
அன்னவன்தண் ணருள்துணையை நாடலன்றி
ஆருயிர்க்கு வழிவே றுண்டோ? 132

திலகவதி யார்நாவுக் கரசரைமுன்
திருத்தமுயன் றிட்ட போதும்,
இலகுமங்கை யர்க்கரசி கூன்பாண்டி
யனைத்திருத்த முயன்ற போதும்,
அலகிலிறை திருவருளை யேநாடி
அரும்பயன்பெற் றிட்ட செய்தி
உலகறியும்; உயர்நூலோர் அறிவரிந்த
உண்மையினை ஒப்புக் கொள்வார். 133

தக்கதுணை யென்னநமக் கின்றிருந்து
நாளைநமைப் போல்மற் றேரைத்
தக்கதுணை யெனநாடும் தன்மையுடை
மக்களைப்போ லன்றி,யென்றும்
தக்கதுணை யாயிருந்தெல் லாஉயிர்க்கும்
தக்கதெலாம் வழங்கி யாளத்
தக்கவன்எல் லாம்வல்ல பரம்பொருளென்
றினிதுணர்ந்தோர் தக்கோ ராவர். 134

8. ஜோதிடம் மாந்த்ரிகம் தவிர்த்தல்

நாளை கோளை நம்பாமை

நாள்செய்நலம் நல்லோரும் செய்யார்என்
றேஞாலம் நவிலா நிற்கும்;
நாள்கிழமை நலிந்தோர்கட் கிலையெனும்சொல்
ஞாலப்பழ மொழியாய் மேவி
நாள்கிழமை நலிவில்லார்க் குண்டென்ன
உரைக்காமல் நன்று ணர்த்தும்;
நாள்திதியோ கம்கரணம் நட்சத்ரத்
தினில்தீது நன்றுண் டென்பார்; 135

அவைநல்ல வாயுள்ள காலத்திற்
செயல்செய்தல் ஆகும் என்பார்;
அவைதிய வாயுள்ள காலத்திற்
செயல்தொடங்கல் ஆகா தென்பார்
அவைகளைப்பற் றிக்கூறும் சாத்திரங்கள்
பலவாக அமைத்துள் ளார்கள்;
அவைகளைஆ ராயப்புகின் அஃதொர்பெருங்
கடலாக அமையு மாலோ. 136

பஞ்சாங்கம் வானநூல் படித்தறிந்தோர்
ஆண்டுதொறும் இயற்று கின்றார்;
பஞ்சாங்கம் பார்த்துவாழ்க் கையைநடத்தல்
நலமென்றும் பலர்சொல் வார்கள்;
பஞ்சாங்கத் தினைமுழுதும் நம்பிப்பாழ்
படுவோரும் பாரில் உள்ளார்;
பஞ்சாங்கத் தினும்சிறந்த பரனருளை
நம்பின்மிகு பலனுண் டாமே. 137

கோள்கள்செலும் போக்கை யொட்டி
மக்களின்வாழ் வமையும்எனக் கூறுகின்றார்;
கோள்களின்போக் கினைநோக்கி வாழ்வைத்தெளி
வாயறிந்து கொளலாம் என்பார்;
கோள்நிலையை முறையாய்ஆ ராயாமல்
ஏமாற்று வோரும் உள்ளார்;
கோள்நிலையை முறையாய்ஆ ராய்ந்துவருங்
காலம்உரைப் போரும் உள்ளார். 138

இப்படியெல் லாம்உள்ள நூல்களைப்பொய்
யென்றண்ணல் சொன்னா ரல்லர்;
ஒப்பில்பரம் பொருள்அருளுக் கடங்கினவை
நாள்கோள்என் றுணர்மின் என்றார்;
பற்பலநாள் கோளையெலாம் படைத்தியக்கும்
பரன்அருளை மறந்து, மக்கள்
இப்படிநாள் கோளைப்பெரி தாகநம்பி
ஏமாறல் கூடா தென்றார். 139

இறையருளில் அசையாமெய்ப் பற்றுடைய
அடியார்க்கெந் நாளும் கோளும்
சிறிதும்நல மோதீங்கோ செயும்ஆற்றல்
அற்றிருக்கும் என்பார் அண்ணல்;
முறையொடவற் றினைமுழுது மாய்நம்பி
வாழாமல், முன்னோன் பொற்றாள்
உறுதியொடு பற்றியருள் வாழ்வாற்ற
வேண்டுமென உபதேசிப்பார். 140

நம்பிக்கை நாள்கோளின் போக்கினிலே
வைக்கவைக்க, நம்பன் றன்பால்
நம்பிக்கை அடியார்க்குக் குறைந்துவிடு
மோ?எனவும் ‡நம்பி அஞ்சி,
நம்பிக்கை, சகுனத்தில் ஆரூடத்
திற்கொளலும் நன்றன் றென்றார்;
நம்பக்கல் உடையவன்பே ரருளிருக்க
வேறெதையும் நம்பேல் என்றார். 141

‡நம்பி—குருநாதர்.

நம்பனருள் நமக்கேற்ற நலமனைத்தும்
செயஎங்கும் நிலைத்திருக்க,
நம்பியந்தத் திருவருளைத் துணைகொடருள்
வாழ்வாற்ற நாடி டாமல்,
நம்பிக்கை பிறவற்றில் நல்லடியார்
கொளஅண்ணல் விரும்ப வில்லை;
நம்பிக்கை இறையருள்ஒன் றினிலேயே
கொள்களன நவின்றார் நன்றே. 142

மணி மந்த்ரம் மருவாமை

பிணிதீர்த்துக் கொளமருந்தை நாடற்க
என்றினிது பணித்த அண்ணல்
மணிமந்த்ரத் தின்துணையும் நாடற்க
என்றினிது பணித்துள்,ளார்கள்;
மணிமந்த்ரத் தால்நினைத்த காரியங்கள்
கைகூடும் என்றும், நல்ல
மணிமந்த்ரத் தால்இடர்கள் அணுகாமல்
இருக்குமென்றும், நம்பேல் என்றார். 143

மக்கள்நல னுக்கெனவே மணிமந்த்ரம்
உளஎனநூல் விளம்பி னாலும்,
இக்கலியில் அவைபெரிதென் றெண்ணியவற்
றாலெதையும் சாதித் துக்கொண்
டொக்கவிளங் கிடலாம்என் றுன்னி,உடை
யவனருளை மறப்ப ரோ?என் (று)
எக்கணத்தும் மணிமந்த்ரம் நாடேலென்
றினிதண்ணல் உபதே சித்தார். 144

அருட்சட்டத் தினில்எந்த மந்திரத்தி
னையுமண்ணல் குறிக்க வில்லை;
அருள்மந்த் ரம்எதனையுமே உயர்வாகத்
தாழ்வாக உரைக்க வில்லை;
பரம்பொருளின் தனிச்சிறப்பை பரங்கருணை
யின்சிறப்பை மறக்க வைக்கும்,
தரம்குறைவாய் எண்ணவைக்கும் மந்த்ரம்எது
வும்தக்க தல்ல என்றார். 145

இறைவனிடத் தினில்ஆழ்ந்த பற்றைமிகு
விக்குமந்த்ரம் எதுவா னாலும்,
குறையொன்றும் கூறுமல் போற்றிடலாம்
என்றண்ணல் கூறு வார்கள்;
பிறவியெனும் பிணியறுக்க ப்ரணவமந்த்ரம்
பெரிதும்உத விடுமென் றன்பால்
முறையொடருட் பாடல்களில் மொழிந்துளதை
நாமுணர்ந்து போற்ற லாகும். 146

பேயோட்டல் பில்லிசூ னியம்வைத்தல்,
பிறர்வைத்த அவையெ டுத்தல்,
ஏயவசி யம்புரிதல், பகையாக்கல்,
பகைவெல்லல், முதலாம் யாவும்
மேயவகை யிற்செய்ய வல்லோம்என்
றிடுமந்த்ர வாதி கள்பால்
நேயம்அணு வும்கொளற்க; விலகிடுக;
என்றண்ணல் நியமித் துள்ளார். 147

சக்கரம்போட் டுக்கொடுத்தல், குளிச்சம்தா
யத்தைதர லாதி செய்வோர்,
மக்களைப்ப ரம்பொருளி டத்தினின்றும்
அகலப்புரி வோர்க ளென்றே
தக்கவகை யாலடியார்க் குணர்த்தினர்;சட்
டத்தினிலே சேரு முன்னர்
புக்ககுளிச் சம்தாயத் தாதியிருந்
தால், அவிழ்த்துப் போடு கென்றுர். 148

உடையவன்றன் சட்டத்தில் சேர்ந்ததுமே
அவன்நாமம் இனிதே ஓதித்
தடையாகஉளஅனைத்தும் தகர்த்தெறிந்து
விடுகஎனச் சாற்றி யுள்ளார்;
புடவியிற்கோ டாங்கிகள்பால், குறிசொல்வோர்
பால்என்றும் போகேல் என்றுர்;
உடையவனை உறுத்துநினைந் துறுகுறைகள்
போக்கிநல முறுக என்றுர். 149

## 9. பிரார்த்தனை செய்து கொள்ளாமை

அடர்ந்ததிரு வருளில்மிகு நம்பிக்கை
கொளும்அடியார் அவனி மீதில்
தொடர்ந்தெதனைக் குறித்தும்ப்ரார்த் திக்கவேண்
டுவதில்லை யென்பார் அண்ணல்;
கொடுக்கவேண் டுவதனைத்தும் காலமறிந்
தினிதுகொடுத் துதவு மீசன்
எடுக்கவேண் டுவதனைத்தும் தருணமறிந்
தெடுத்தினிதோம் பிடுவான் என்பார். 150

அனைத்துமறிந் தனைத்துயிர்க்கும் அருள்புரிந்து
பேணியருள் அமலன் றன்னை
நினைத்திந்தத் தீதினைநீ அகற்றுவையேல்,
இந்நலம்கூ டச்செய் வாயேல்,
நினக்கிதனை யான்புரிவேன் எனப்ரார்த்தித்
துக்கொள்ளல் கூடா தென்றார்;
அனைத்தும்அவன் அருளாலே நமக்குத்தரப்
பெற்றவையே என்றும் சொல்வார். 151

மழைதரும்நன் முகிலுக்கு மழைநீரைத்
தருவேன்என் றுரைத்தல் போலும்,
பழங்கள்தரும் மரத்துக்குப் பழம்தருவேன்
எனவொருவன் பகர்தல் போலும்,
விளைவதெலாம் விளைவதன்முன் விரிநிலத்தில்
வழங்கிறைவன் நாம்நினைக்கும்
வழியிற்றுணை புரியின்இது வழங்குகிறேன்
எனல்மடமை யாகும் அன்றோ? 152

எப்பொருளும் நமக்கருளி எப்பொழுதும்
நமைப்பேணும் இறைவன் நம்பால்
எப்பொருளை நாடுகின்றான் எனஓர்ந்தால்,
ஈடிணையில் அன்பே யாகும்;
ஒப்பருமெய் யன்பொன்றால் இறையருள்பெற்
றுயர்செயல்செய் தோர்எண் ணில்லார்;
அப்பரிசிங் குணராமல் ப்ரார்த்தனைசெய்
வதுமடமை யாகும் அன்றோ? 153

நம்மிடத்தி லிருந்தவன்எப் பொருளையுமே
எதிர்பார்க்கப் போவ தில்லை;
நம்மிடத்தி லிருந்தவன்வேண் டுவதெல்லாம்
நல்லடிமைத் திறமே யாகும்;
மும்மையிலும் பேரருளால் நமைப்பேணும்
முழுமுதலாம் அவனைப் போற்றி,
நம்மையவற் கொப்படைத்து நல்வாழ்வாற்
றுவதேநம் கடமை யாகும், 154

அவன்அன்பின் அடிமைகளாய் அவன்துணையை
நாடிடல்நம் கடமை யாகும்;
அவனிடத்தில் உயரன்பை நன்றியை
வளர்ப்பதற்கே நம்முன் னோர்கள்
அவனிடத்திற் ப்ரார்த்தனைசெய் தினிதேத்தும்
வழக்கத்தை அமைத்து வைத்தார்;
அவனிமக்க ளைத்திருப்தி செய்வதுபோல்
ஆனதது பிற்கா லத்தே. 155

யாதுவிழைந் திட்டாலும், இறைவனிடம்
கேட்டடியார் எய்த லாகும்;
யாதிறைவற் கர்ப்பணம்செய் திடஅடியார்
எண்ணிடினும் செய்த லாகும்;
ஈதுபுரிந் தாலீது தருவனென
எண்ணல்அறி யாமை யாகும்;
யாதும்அவன் அருளால்எய் திடுவதென
உணர்ந்தேத்தல் இனிதா மன்றே. 156

கடவுளைத்தி ருப்திசெய்து காரியங்கள்
பலநடத்திக் கொளலாம் என்றும்,
கடவுளைத்தி ருப்திசெய்து கோரிக்கை
நிறைவேற்றிக் கொளலாம் என்றும்,
கடவுளுக்குக் கைக்கூலி தருமுறைபோல்
காசியினியில் மாறிப் பின்னர்,
கடவுளிடத் துள்ளன்பை நம்பிக்கை
யினைக்குறைக்க லாயிற் றன்றே. 157

வாழ்வினிலே நேரும்சிறு தொல்லைகளைப்
போக்கிக்கொள அவ்வப் போது
கேழ்கிளர்தெய் வத்தினுக்கு ப்ரார்த்தித்தின்
னருள்பெற்றுக் கொளலாம் என்றே
சூழ்வுறும்ப ரம்பொருள்பால் உள்ளன்பை
வளர்த்திடும்தூ நெறியை விட்டுக்
கீழ்வகையில் எண்ணிக்கெடு கின்றனரே
என்றிரக்கம் கொள்வார் அண்ணல். 158

பிரார்த்தனைசெய் துக்கொள்ளும் பழக்கம்கூ
டாதென்னச் சொன்னார் அண்ணல்;
பிரார்த்தனைகள் முன்செய்து விட்டிருந்தால்
அவைபூர்த்தி செயலாம் என்றார்;
பிரார்த்தனையே தும்மேலும் செய்துகொளக்
கூடாதென் றினிது சொன்னார்;
பராத்பரன்றன் திருவடியே தஞ்சமெனப்
பற்றிஉய்கென் றுபதேசித்தார். 159

## 10. வெள்ளி விரதம்

சட்டநெறி யினில்விரதம் மிக்கஅவ
சியமாகும் தக்க வாறு
திட்டமுடன் விரதமிருப் போர்உடம்பில்
உளபிணிகள் தீர்ந்து போகும்;
உட்டெளிவுற் றுயிர்உரம்பெற் றொளிரும்;உறு
பசிபொறுக்கும் ஒருவன் பாரில்
கட்டமெதை யும்பொறுத்துப் பிறர்க்குணவிட்
டுயர்நிலையிற் களிப்பான் என்றார். 160

எத்தனையோ மண்டலங்கள் உணவின்றி
அருளண்ணல் இருந்துள் ளார்கள்;
இத்தகைய முறையில்அடி யரைப்பழக்கு
தற்காக இக்கா லத்தும்
சத்திதரும் உபவாச முறைகள்பல
அடியவர்க்குத் தந்து பேணும்
அத்தனரு ளினைக்காணின் விரதம்இருப்
பதன்பெருமை விளங்கும் நன்றே. 161

அடியவர்கள் எல்லோரும் தொடக்கத்தில்
அநுட்டித்திங் குய்ய வேண்டிப்
படியினில்வெள் ளிக்கிழமை விரதம்அநுட்
டிக்கும்படி பணித்துள் ளார்கள்;
அடியவர்தம் உடலுரத்திற் கேற்றபடி
முழுதுமுண்ணு தேய மைந்தோ,
விடியலிற்சிற் றுண்டிகொண்டோ பானமட்டும்
கொண்டோமே விடுதல் வேண்டும் 162

வெள்ளிநன்னாள் சைவர்களும் வைணவரும்
விரதநன்ன ளெனவே கொள்வர்;
வெள்ளிநன்னாள் முகம்மதியர் கிறித்தவரும்
விழுமியநா ளாகக் கொள்வர்;
வெள்ளிநன்னாள் விரதத்திற் கேற்றதெனப்
பலமதத்தோர் கொள்ளல் நோக்கி,
வெள்ளிநன்னாள் விரதநன்ன ளெனப்பணித்தார்
அருளண்ணல் மேதி னிக்கே. 163

ஆண்டவன் திருநாமத்தோடு ஒன்றுதல்

இறைவன்அருள் நாமங்கள் பலவற்றில்
ஒன்றைஇத யத்திற் கொண்டு
முறையோடு நாள்தோறும் இடையின்றி
ஓதிக்கொண் டிருத்தல் வேண்டும்;
இறையளவும் ஓய்வின்றி எண்ணம்அத
னேடுறி இணைதல் வேண்டும்;
குறையனைத்தும் தீர்த்தருளி நலமனைத்தும்
கூட்டுவிக்கும் இறைவன் நாமம். 164

எச்செயல்நாம் செய்தாலும் எண்ணம்இறை
திருநாமத் திணைந்தி ருந்தால்
அச்சமெலாம் அகன்றேடும்; அருட்பண்பு
வளர்ந்தோங்கும்; அமைதி தோன்றும்;
இச்சகத்திற் பெறத்தக்கன வேறெதுவும்
இல்லையெனும் நிறைவுண் டாகும்;
நிச்சயமாய் இறைவனடி யெய்திடலாம்
எனும்நம்பிக் கையுமுண் டாமே. 165

இறைவனருள் திருநாமம் எவ்வுயிர்க்கும்
பேரின்ப வாழ்வு நல்கும்;
இறைவனருள் திருநாமம் எங்கெங்கும்
மேவிவினை யெல்லாம் நீக்கும்;
இறைவனருள் திருநாமம் ஒவ்வொரணு
வுளும்படர்ந்தன் பொளியுண் டாக்கும்;
இறைவனருள் திருநாமம் அன்பர்களுள்
அமைந்தின்ப மயமாக் கும்மே. 166

## 11. ஞான நிட்டை

### நிட்டையின் அவசியம்

பிறவியெடுத் ததன்பயனை உயிர்களெலாம்
பெறவேண்டும் என்றே எண்ணும்
அறவுருவாம் அண்ணல்அடி யார்நிட்டை
அனுதினமும் செய்க என்றார்;
திறமிகப்பெற் றுள்ளோரும் செய்தொழில்கள்
வல்லோரும் தினமும் சோர்வுற் (று)
உறக்கமெனும் ஒன்றுடொன்றி உலகம்முழு
வதுமறந்து துயில்வ துண்மை. 167

தினம்முழுதும் உடல்வருந்த உழைத்தவர்கள்
செய்தொழில்விட் டுறங்க லாலும்,
மனம்அறிவு கொண்டுழைப்போர் அதைமறந்து
துயில்நாடி உறங்க லாலும்,
தினம்தினமும் புத்துணர்ச்சி கொண்டெழுந்து
செயல்புரிகின் றதைக்காண் கின்றோம்;
மனம்வாக்குக் காயமிவை செயலின்றி
அடங்குவதாற் பயன்காண் கின்றோம். 168

மனத்திற்பல விதமான எண்ணங்கள்
இருக்கும்வரை அமைதி யில்லை;
அனைத்தையுமே மறந்திடில்ஓர் அல்லலுமின்
றிச்சிறந்த அமைதி யெய்தும்;
தினந்தொறும்இவ் வுண்மையினை உணர்த்திடவே
பரன்உறக்கம் அருளு கின்றான்
மனம்வாக்குச் செயல்அடங்கின் உயர்அமைதி
வாய்ப்பதைநாம் உணர லாமே. 169

மனம்அறியா மையொடொன்றி உறங்குவதால்
சக்திமிகக் குறைவ துண்மை;
மனம்ஞானத் தோடொன்றி அடங்குகையில்
சக்திமிக வளர்ச்சி யெய்தும்;
மனம்வார்த்தை செயல்அடங்கி ஞானமுறல்
நிட்டையெனக் கண்டார் மேலோர்;
மனம்வார்த்தை செயல்அடங்கி நிட்டைசெயின்
மலிபிறவிப் பிணிநீங் கும்மே. 170

அருட்சட்டம் மேற்கொள்வோர் நிட்டைசெயல்
அவசியம்என் றுரைத்தார் அண்ணல்;
இருட்படலம் விலகிடவும் ஞானவொளி
வளர்ந்திடவும் இன்பம் மேவிப்
பொருள்நலமும் அருள்நலமும் புவியின்மிசை
எய்திடவும் புனித நிட்டை
அருள்புரியும் என்றுரைத்தார், ஆதலினால்
அருள்நிட்டை புரிதல் வேண்டும். 171

அருட்சட்ட அநுட்டானத் தினிற்சிறந்த
அடியாரைத் தேர்ந்தெடுத்தே
அருள்ஞான நிட்டையினில் அமர்ந்துநலம்
எய்தும்வணம் அருள்செய் திட்டார்;
அருட்சட்டம் மேற்கொள்வோர் படிப்படியாய்
மற்றதிட்டங் களைக்கை யாண்டே
அருள்நிட்டை யினைமுடிவாய் மேற்கொள்ள
வேண்டும்எனப் பணித்தார் அண்ணல். 172

அருட்சட்ட அநுட்டானம் நித்யநிட்டை
யில்லாமற் பூர்ணம் ஆகா;
அருட்சட்டத் தினைநன்றே அநுட்டிப்ப
தற்கும்முழுப் பயனெய் தற்கும்
அருள்நிட்டை இன்றியமை யாத்துணையாய்
இருப்பதனு பவத்திற் காணும்
அருட்சட்ட அடியார்கள் நிட்டையினை
மிகப்போற்றி அநுட்டித் துய்வார். 173

### அமரும் நேரம்

ஒவ்வொருநா ளும்காலை நீராடி
முடிந்ததுமோ உறக்கம் நாடி
ஒவ்வொருதி னத்தும்இர விற்றுயிலும்
முன்னோநன் றுடையோன் தாளைச்
செவ்வையுற உளத்துன்னிக் கண்மூடிச்
செயலடங்கி அமர்ந்தி ருந்தால்,
எவ்வுயிர்க்கும் நலம்பயக்கும்; இறைவனருள்
பயன்விளைக்கும் என்றார் அண்ணல். 174

### அமரும் முறை

நோக்கியமர் திசைகுறித்தோ, பயன்படுத்தா
சனம்குறித்தோ, நுவன்றா ரல்லர்;
ஆக்கமெலாம் அருளிறைவன் தாளுன்னி
அமர்கவென அருள்செய் திட்டார்;
ஏக்கமெலாம் தவிர்த்திறைவன் இன்பநல்வாழ்
வருள்வனென்றும், இணையில் தூய
மோக்கமெனும் பிறவிப்பயன் அடையும்வழி
யீதென்றும் மொழிந்தார் அண்ணல். 175

வழிபாடு நாளும்செயும் இறையுருவை
மனத்திற்கொண் டமைதி யாக
மொழியின்றிச் செயலின்றி முறையாய்ச்சப்
பணமிட்டுட் கார்ந்து கொண்டு
விழியிரண்டும் மூடியருள் நாடுகென
அருளண்ணல் விளம்பி யுள்ளார்;
வழிகாட்டும் அண்ணல்திரு வுருவுளம்கொண்
டமர்ந்தடியர் வளம்பெற் றுள்ளார். 176

நிட்டைநலம் பெறவிழையும் அடியர்இரு
வேளையிலும் நிமிர்ந்துட் கார்ந்து
சட்டநெறி யருளண்ணல் திருவுருவை
உள்ளத்துட் கொண்ட வண்ணம்
உட்டெளிவு தருமூல மறையான
ஓங்காரத் தொன்றி நின்றால்
நிட்டைநலம் விளையும்அருட் பயனெய்தும்
மெய்யின்பம் நிலைக்கும் நன்றே. 177

நிட்டைசெய விழைந்தமரும் அடியார்கள்
நிலமீதில் உட்கா ராமல்
திட்டமுற மரப்பலகை யின்மீதோ
சிரோலைத் தடுக்கின் மீதோ
இட்டமுடன் அமர்க;இன்றேல் துணிமடிப்பின்
மீதமர்க என்றார் அண்ணல்;
நிட்டைநிலத் தமர்ந்துசெயின் பயன்நிலத்திற்
கேகுமென உணர்தல் வேண்டும். 178

யோகநூல் கூறுகின்ற கடுமையாம்
ஆசனங்கள் உரைத்தா ரல்லர்;
யோகநூல் கூறுகின்ற ப்ராணாயா
மத்துறையும் உரைத்தா ரல்லர்;
ஏகமாம் இறைவன்அரு ளினைநாடித்
தனியிடத்தில் இனித மர்ந்தே,
ஏகமன தோடிறைவன் திருவுருவை
எண்ணின்இனி தமைதி யெய்தும். 179

முறையிடும் முறை

ஆண்டவனை அகத்தெண்ணி நிட்டையம
ருங்கால்நன் றவனி டத்தே
வேண்டுவன வேண்டுதற்கும், தக்கநல்ல
தருணமென விளம்பு வார்கள்;
ஆண்டவன்சட் டத்தையநுட் டிக்கும்போ
துறுமிடர்கள் இயலா மைகள்
ஈண்டுநம்வாழ்க் கையிலெய்தும் குறைகளையும்
இயம்பிவழி கோர லாமே. 180

இவ்வாறு விண்ணப்பிப் பதைத்தூக்கல்
செய்வதென இயம்பு வார்கள்;
எவ்வாறெத் தகுசிக்கல் நேர்ந்திடினும்
இறைவனிடம் விண்ணப் பித்தால்,
எவ்வாறிச் சிக்கலெலாம் நீங்கினவென்
றெவரும்அதி சயிக்கும் வண்ணம்
அவ்வாறச் சிக்கலெலாம் தீர்த்திறைவன்
அருள்புரிவன் என்பார் அண்ணல். 181

சிக்கல்மிக நேருகையில் திகைத்தடியார்
அண்ணலிடம் தெரிவித் திட்டால்,
தக்கஅடி யவரைஅரு கழைத்தண்ணல்
இறைவனிடம் தாக்கல் செய்து
மிக்கஅரு ளோடிறைவன் அருள்குறிப்பை
உணர்கவென விளம்பு வார்கள்;
அக்கணமே அமர்ந்துடையோன் கணக்கறிந்தவ்
வடியரண்ணல் பாலு ரைப்பார். 182

### தூங்காமல் தூங்கும் நிலை

ஆண்டவரை ஆழ்ந்தெண்ணி அமர்ந்தருளை
நாடியகம் உருகுங் காலை
ஈண்டுளஎல் லாம்மறந்து தூங்காமல்
தூங்கும்நிலை தானே எய்தும்;
ஆண்டஅண்ண லால்பழக்கப் பெற்றவர்க்கே
யன்றிமற்றை அடியார் கட்கும்
ஆண்டவர்தி யானத்தால் அவர்அருளால்
இந்தநிலை இனிது வாய்க்கும். 183

ஆண்டவர்தி யானத்தை யன்றிபிற
முயற்சியொன்றும் தேவை யில்லை;
ஆண்டவரை நாடியமர் பவர்க்கும்அறி
யாதிந்நிலை அருளாற் கூடும்;
ஆண்டவர்இவ் வுயிர்க்கும்உட லுக்குமின்பம்
தருமொப்பில் நிலையீ தாகும்;
ஆண்டவர்இந் நிலைகலையும் போதுசில
காட்சிகளும் அருளி யாள்வார். 184

### காட்சி

எண்ணியமர் திருவுருவம் எதிர்தோன்றி
அப்போதைக் கேற்ற வான
நுண்ணியநற் புத்திமதி களையினிது
நுவலுவது போலும் தோன்றும்;
புண்ணியராம் ஒருபெரியார் போந்தருளாற்
பேசுவது போலும் தோன்றும்;
எண்ணரிதாம் பற்பலசி றந்தஅருட்
காட்சிகளும் இனிதே தோன்றும். 185

அடுத்தபடி நடப்பனவாய் அவையிருத்தல்
அனுபவத்தில் அறிய லாகும்;
தடுத்தாண்ட இறைவன்நமைத் தண்ணருளால்
வழிகாட்டி அழைத்துச் செல்லல்
கடற்புவியில் உணர்ந்துள்ளம் களிப்பெய்த
வேண்டியவ ராக வுள்ளோம்;
திடப்படுமெய்ஞ் ஞானம்உல கியல்ஞானம்
தெளிவருளும் நிட்டை யீதாம். 186

இறைவனரு ளுருவன்றி வேறென்றும்
இதயத்தெண் ணுத மைந்தால்
இறைவனருள் நலம்விளையும்: இன்பநல்வாழ்
விவ்வுலகில் இனிதே யெய்தும்;
முறையொடருட் சட்டநெறி பேணஅருள்
துணைபுரியும் மோனம் வாய்க்கும்;
உறையொரைந்தும் கடந்தொளிரும் உண்மையொளி
யுடன்கலக்க வழியுண் டாமே. 187

ஐந்துநா ழிகைநேரம் நிட்டையம
ருதல்வேண்டும் என்பார் அண்ணல்;
முந்திஅதிற் காற்பங்கு நேரம்இனி
தேஅமர முயலல் வேண்டும்;
நந்தலின்றி நேரத்தைக் கூட்டிவரு
தல்வேண்டும்; நன்று நிட்டை
எந்தநே ரத்தினிலும் இடைவிடா
திருத்தல்முத்தி நிலைய தாகும். 188

மூன்றுமுறை யருள்நிட்டை யினிலமரும்
மெய்யடியார் பலருள் ளார்கள்;
ஆன்றமைந்த அடியார்கள் பலரைமுறை
யாய்அமர்த்தி அவர்சி ரத்தில்
ஊன்றுதம தருட்கரத்தால் உயர்நிலையை
அவர்களெய்த அருள்வார் அண்ணல்;
தான்தனதென் பதைமறந்தவ் வடியார்கள்
தனிப்பரமா னந்தம் துய்ப்பார். 189

அண்ணல்திரு வருட்கரத்தால் தீண்டப்பெற்ற
அடியர்பலர் இன்றும் உள்ளார்;
திண்ணமாய் அவர்களின்னும் அருள்நிட்டை
யினில்ஆழ்ந்து திளைக்கின் றூர்கள்;
அண்ணலார் அருட்கரத்தால் தீண்டப்பெறும்
பேறுபெறு அடிய ரேனும்
திண்ணமாய் நிட்டையமர்ந் தண்ணல்திரு
வருள்பெறுதல் உறுதி யாமே. 190

நிட்டையின் பயன்

சகஜநிட்டை யிதுவென்றும் ஞானநிட்டை
யிதுவென்றும் தக்கோர் சொல்வார்;
அகமுறையும் இறைவன்உயிர் களுக்கிரங்கி
அருள்புரியும் நிட்டை யீதாம்;
சகமிதையும் உடம்பினையும் மறந்துயிர்தண்
ணருளெய்தும் நிட்டை யீதாம்:
இகநலமும் பரநலமும் அருளுமிந்த
நிட்டைஉயிர்க் கினிய தாமே. 191

நிட்டையினில் நிலைப்பதனுல் சக்தியொன்றும்
வீணுக அழிவ தில்லை;
நிட்டையினில் நிலைப்பதனுல் சக்திமிக
நிறைந்துடம்பைத் தூய தாக்கும்;
நிட்டையினில் நிலைப்பதனுல் சித்திபல
வந்தெய்தும்; நேயம் கூடும்;
நிட்டையினில் நிலைப்பதனுல் அருள்ஞானம்,
ஆனந்த நிலைவாய்க் கும்மே. 192

## 12. இறந்தவர்க்கு இரங்காமை

நாம்முன்செய் வினையைஅனு பவித்துத்தீர்த்
தறியாமை நீங்கப் பெற்று
நாமுய்ய வேண்டுமென நமக்கிறைவன்
உடம்புகொடுத் தனுப்பி யுள்ளான்;
நாமவனுள் ளப்படியவ் வளவுவினை
யினைநுகர்ந்து முடிந்த போதில்,
தோமறஅக் கணத்திலந்த உடல்விட்டுயிர்
நீங்கும்;முனோர் துணிபீ தாகும்; 193

இப்படிவி னைச்செயலால் நமைச்சேர்ந்தோர்க்
கிவண்மரணம் எய்துங் காலை
இப்படியில் நாம்வருந்த லால்யாது
பயன்என்ன அண்ணல் சொல்வார்;
எப்படியொவ் வோருயிர்க்கும் எவ்வெக்கா
லத்தில்எது செயல்நன் றென்ன
ஒப்புடன்ஓர்ந் தருள்உடையோன் உயர்பரம
காருண்ய மூர்த்தி யன்றோ? 194

அழிவதுடம் பேயன்றி உயிர்அழிவ
தில்லையென ஆன்றோர் சொன்னார்;
கிழிவுறும்அங் கியைக்கழற்றிக் கிளர்புதிய
அங்கியைநாம் அணிதல் போலப்
பழையஉடம் பினையகற்றிப் புதியஉடம்
பினுக்குள்உயிர் படர்ந்து செல்லும்;
ஒழிவிலிந்த உண்மையுணர்ந் தோர்இறந்தோர்க்
கிரங்கல்உயர் வாகா தன்றோ? 195

உடையவன்கட் டளைப்படியிங் குயிர்கள்உடல்
விடும்போதில் உண்மை யன்பர்
படியில்வருந் திடல்பரமன் அருளை,அற
நேர்மையினை மறத்தல் போலாம்;
உடையவன்றன் அருட்செயலின் வண்ணமெலாம்
நடக்கும்என உணர்ந்து, சட்டப்
படிநடப்போர் இறந்தவருக் கிரங்குதலா
காதென்னப் பணித்தார் அண்ணல். 196

சமாதி

உடையவன்ஆக் கியஉடலைத் தீயிட்டுச்
சிதைக்கஅண்ணல் விரும்ப வில்லை;
உடையவன்ஆக் கியஉடலை உலகமா
தாவின்திரு வயிற்றின் கண்ணே
திடமனதோ டினிதடக்கம் செயல்வேண்டும்
என்றருளால் செப்பி யுள்ளார்;
அடலன்னை அடங்கியபோ தவ்வாறே
அவனியினுள் அடக்கம் செய்தார், 197

பின்னர்அவர் குடும்பத்தில் அடக்கமுற்ருேர்
அவ்வாறே செய்யப் பெற்ருர்;
நன்னலமார் சட்டத்தை மேற்கொள்வோர்
அவ்வாறே நடக்கின் ருர்கள்;
முன்னரந்தப் பழக்கமில்லாக் குடும்பத்தில்
முனைந்துசிலர் சட்டம் ஏற்ருல்,
பின்னர்அவர் ஆயுள்முடி வுறின்இவ்வா
றேஅடக்கம் செய்தல் வேண்டும். 198

குடும்பத்தார் அவ்வாறு செய்வதற்குத்
தடையேதும் கூறு வாரேல்.
உடனிருக்கும் அடியார்கள் இக்கொள்கைக்
கிணங்கவைக்க முயலல் வேண்டும்;
அடம்பிடிக்கா மற்பிறரும் அடியவரின்
முயற்சியைஆ தரித்தல் வேண்டும்;
மடம்படுமுற் பழக்கங்க ளேபெரிதென்
ருதமைதல் மாண்பா மன்றே. 199

நிட்டையினில் அடியார்கள் மிகஉயர்ந்த
நிலைபெற்றும் இருத்தல் கூடும்;
நிட்டையினில் உயர்ந்தோரை நிலத்தில்அடக்
கம்செய்தல் நேர்மை யன்றிக்
கட்டைகளில் வைத்துத்தீக் கிரையாக்கல்
கருணையுளோர் செய்கை யாமோ?
உட்டெளிவுற் ருேர்இதனை உணர்ந்தாரேல்
அண்ணல்உளப் படிசெய் வாரே. 200

உடம்பினுக்குள் உயிர்அடக்க மாவதனுல்
உடம்பினைத்தீக் கிரையாக் காமல்,
இடம்படுநன் னிலமாதின் திருவயிற்றில்
இனிதடக்கம் செய்தல் நன்ரும்;
திடம்பெறஇக் கருத்தைஅருட் பிரகாச
வள்ளலும்முன் செப்பி யுள்ளார்;
உடம்பிறைவன் உறைகோயில் எனஉணர்ந்தோர்
இக்கொள்கை உயர்வென் பாரால். 201

ஒவ்வொருயிர்க் கும்தக்க படியுடம்பை
இறைவன்படைத் தனுப்பி யுள்ளான்;
அவ்வுடம்பைத் தீயிட்டுச் சிதைக்கநமக்
கணுவும்அதி கார மில்லை;
செவ்வியபே ரருளாளர் உடம்பில்உயிர்
அடங்குவதால், சீரார் பாரில்
அவ்வுடம்பை இனிதடக்கம் செயுமிடத்தில்
அருளொளியெஞ் ஞான்றும் வீசும். 202

உயர்தவம்சால் அடியார்கள் உடம்படக்கம்
செயுமிடத்தில் உலக மக்கள்
துயர்தவிர்க்கும் தவக்கனலும் சுடர்விடுஞா
னப்பொலிவும் சூழ்ந்தெண் ணில்லா
உயிர்களுக்கும் இகபரநன் னலமனைத்தும்
எஞ்ஞான்றும் ஊட்டிப் பேணும்;
பயன்மிகநல் கத்தூய தவஉடம்பை
எரித்தல்மிகப் பாவ மாமே. 203

## 13. அற மன்றம் அணுகாமை

அறமன்றங் களுக்கேகும் நிலையினைஉண்
டாக்கிக்கொளல் ஆகா தென்றார்;
பிறருடன்ச மாதான மாகவிவ
காரங்களை முடிப்பீர் என்றார்;
திறமிகுநீ தித்தலைவர் தலைவனெனச்
செங்கோல்மன் னவர்கட் கெல்லாம்
அறநெறிசொல் லரசனென உளஇறைவன்
பால்விண்ணப் பிப்பீர் என்றார். 204

சச்சரவை ஒழுங்காக முடித்தருள்க
எனஇறைபால் சார்தல் வேண்டும்;
இச்சகத்தில் இறையவனால் ஆகாத
தில்லையென நம்பல் வேண்டும்;
சச்சரவு செயும்எதிரி நமைமீறி
அறமன்றம் சார்ந்தங் கீர்த்தால்,
அச்சமயத் துடையவன்றன் குறிப்பறிந்து
சென்றுள்ள துரைத்தல் வேண்டும். 205

நாம்எதிர்பா ராவகையில் நம்மைப்பிறர்
அவர்களுடை விவகா ரத்தில்
நாமும்ஒரு சாட்சியெனப் போட்டுக்கொண்
டறமன்றத் தீர்த்திட் டாலும்,
நாமும்அற மன்றம்செலல் உடையவன்சம்
மதம்போலும் என்றே சென்று,
தீமையெதும் நினையாமல் நடந்தபடி
கூறிவிட்டுத் திரும்பல் வேண்டும். 206

அரசனைக்காண் பதுமாலைக் காண்பதற்கொப்
பாகுமென ஆன்றோர் சொன்னார்;
அரசன்இறை அம்சமென்றார்; அறமன்றம்
அருளாணைத் தலங்கள் என்றார்;
தரையிலுளோர் உணராமல் மற்றவர்க்குத்
தீங்கிழைத்து வருத்தற் காகப்
பெரிதும்அற மன்றத்தைத் துணைகொளல்கண்
டேஅண்ணல் வருத்தம் கொள்வார். 207

அறவாழி யந்தணன்நம் விவகாரங்
களைமிகவும் அருமை யான
முறையினிலே தீர்த்துவைப்பான்; அவனைக்கொண்
டறமுடிவு பெறுதற் காகும்;
அறமன்றங் களுக்கேகிப் பகைவளர்த்துப்
பொருள்விரையம் ஆக்கல் வேண்டாம்;
இறைவனிடம் உறுதிவளர்ந் திடஇவ்வழி
துணைபுரியும் என்றும் சொன்னார். 208

## 14. உடல் பொருள் ஆவியை ஒப்படைத்து வாழ்தல்

அருட்சட்டம் என்னவென்றால் ஒருவார்த்தை
யினில்அடங்கும் என்பார் அண்ணல்;
ஒருமனதொ டுடல்பொருளா வியைஇறைவற்
கொப்படைத்த லாகும் என்பார்;
குருபரனார் கூறுகையில் கேட்கும்போ
தச்சொல்மிக எளிதாய்த் தோன்றும்;
பெருமையெலாம் அதன்கணுள தெனுமுண்மை
வாழ்வினிற்பின் பேவி ளங்கும். 209

உடையவனால் உலகமெலாம் உண்டாயிற்
றென்பதுபே ருண்மை யாகும்;
உடையவனால் உலகமெலாம் இயங்குகின்ற
தென்பதுவும் உண்மை யாகும்;
உடையவனால் உயிர்களெலாம் வாழ்வாற்று
கின்றனஈ துண்மை யாகும்;
உடையவனால் ஒவ்வொருசிற் றணுவும்அசை
கிறதெனலும் உண்மை யாகும். 210

உடையவனே உயிர்வகைகட் குடம்புகொடுத்
துலகத்துக் கனுப்பு கின்றான்;
உடையவனே உயிர்களுக்குக் கருவிகர
ணங்களெலாம் உதவு கின்றான்;
உடையவனே உயிர்களுக்கு ளிருந்தூக்கி
எச்செயலும் செய்விக் கின்றான்;
உடையவன்எல் லாமாகி எல்லாம்செய்
தெங்கெங்கும் ஒளிரு கின்றான். 211

உயிர்களுய்ய உலகமெலாம் உண்டாக்கிப்
புரந்தருள்வோன் உடையோ னவன்;
உயிர்களுய்ய உடல்பொருளை உதவிஉயர்
வுறப்புரிவோன் உடையோ னவன்;
உயிர்களுய்ய ஒவ்வொரணு வுளும்புகுந்துள்
ளுருக்கிடுவோன் உடையோ னவன்;
உயிர்களுய்ய அனைத்தணுவை யும்புனித
மாக்கிடுவோன் உடையோ னமே. 212

உடம்பினையெவ் வுயிர்களுக்கும் உண்டாக்கி
வளர்த்தருள்வோன் இறைவ னாகும்;
இடம்படும்இவ் வுலகிலுள பொருளனைத்தும்
இறைவனுக்கே உரிய வாகும்;
மடம்படுமு யிரைமுத்தி யென்னும்நிலைக்
குயர்த்திடுவோன் இறைவ னாகும்;
உடம்புபொருள் உயிர்அனைத்தும் இறைவனுக்கே
உரியஎன்ப துண்மை யன்றோ? 213

உடையவனுக் குரியனநம் உடம்புபொருள்
ஆவியெலாம் என்ப துண்மை;
புடவியிலிவ் வுண்மையுண ராதவர்கள்
வினைப்பொதியைச் சுமக்கின் றார்கள்;
திடமுறஇவ் வுண்மையுணர்ந் தொப்படைப்போர்
வினைநீங்கித் திகழ்கின் றார்கள்;
மடமையறும்; ஞானமுறும்; துன்பமற்றின்
பெய்தும்அவர் வாழ்வில் நன்றே. 214

உள்ளபடி இவ்வுண்மை உணர்பவர்கள்
உடையவன்பால் ஒப்ப டைப்பார்;
உள்ளம்உரை செயல்அனைத்தும் புனிதமுற்றன்
பொளியோடு துலங்கி நிற்பார்;
கள்ளமற்றுக் கருணையினல் கனிவுபெற்றுக்
காசினியிற் களிப்போ டன்பு
வள்ளலென வானவரும் வாழ்த்தஅருள்
மாண்போடும் பொலிவார் நன்றே. 215

எனக்கொன்றும் வேண்டாம்நின் பதமல்லால்
வேறென்ற இதயத் தோடும்
நினைப்புமொழி செயலனைத்தும் நிமலனரு
ளினிற்றோய்ந்த நிலைகொள் வார்கள்;
சனிப்புமரிப் பனைத்தினையும் கடந்தவுயர்
தனிநிலையில் விளங்கு வார்கள்;
நினைப்பினில்நீங் காதஅவன் செய்ந்நன்றி
யாவும்நினைந் துருகு வார்கள். 216

அவர்நினைவெல் லாம்உடையோன் நினைவாகி
அருளொளியெங் கணும் பரப்பும்;
அவர்மொழியெல் லாம்உடையோன் மொழியாகி
அருள்வளத்தைக் கூட்டு விக்கும்;
அவர்செயலெல் லாம்உடையோன் செயலாகி
அருட்பயன்எங் கணும் விளைக்கும்;
அவர்இறைவன் மயமாகி ஆநந்தம்
எவ்வுயிர்க்கும் அருள்வார் என்றும். 217

எவ்வுயிர்கள் பாலும்இரங் கும்கருணை
மயமாகி இலங்கு வார்கள்;
எவ்வுயிர்க்கும் உறுதுயரம் களைந்தருள
வேஇதயத் தெண்ணு வார்கள்;
எவ்வுயிர்க்கும் நல்லனவே செய்தருள
இனிதென்றும் நாடு வார்கள்;
எவ்வுயிரும் இன்பமுறல் வேண்டுமென்றே
எஞ்ஞான்றும் தவம்செய் வார்கள். 218

அவர்களெண்ணு வனஅனைத்தும் எண்ணியாங்
கேஇனிதெங் கணும் நடக்கும்;
அவர்கள்மொழி மறைமொழியாய் அருளிசையாய்
ஆருயிர்கட் கிதம்ப யக்கும்;
அவர்கள்செயல் அருட்செயலாய் அனைத்துலகுக்
கானந்த வாழ்வு நல்கும்
அவர்களின்மூச் சனைத்தும்உயிர் களின்குறைகள்
நீக்கியருள் மயமாக் கும்மே. 219

பேதமுறு ஜாதிசம யங்களெலாம்
கடந்(து) அவர்கள் பிறங்கு வார்கள்;
கோதறவி தித்தவிதி களைக்கடந்து
குணநிறைவாய்த் திகழு வார்கள்;
யாதினிலும் விருப்புவெறுப் பின்பதுன்பம்
அற்(று) அருளாய் இலங்கு வார்கள்;
நாதனொடு கலந்துண்மை ஞானனந்
தானுபவ மயமா வாரே. 220

உடல்பொருளா வியைஉயிர்கட் களித்தினிது
பேணுபவன் உடையோ னவன்;
உடல்பொருளா வியின்மயமாய் எங்கெங்கும்
மேவிடுவோன் உடையோ னவன்;
உடல்பொருளா வியைஅர்ப்ப ணம்செய்க
எனப்பணிப்போன் உடையோ னவன்;
உடல்பொருளா வியையேற்றுத் தன்மயமாய்
ஆக்குபவன் உடையோ னமே. 221

உடல்பொருளா வியைஇறைவற் கொப்படைத்தல்
சட்டமென உரைத்தார் அண்ணல்;
உடல்பொருளா வியைஇறைவற் கொப்படைத்தேன்
எனஉரைத்துத் தொடங்கல் சட்டம்;
உடல்பொருளா வியைஇறைவற் கொப்படைக்கும்
செயலைநிறை வேற்றல் சட்டம்;
உடல்பொருளா வியைமுழுதும் ஒப்படைத்த
பொதுசட்டம் முழுமை யாமே. 222

ஜாதிமத பேதமில்லை; எவரும் சட்டம் ஏற்கலாம்.

எவ்வினத்தை எம்மதத்தைச் சார்ந்தோரும்
அருட்சட்டம் ஏற்க லாகும்;
செவ்வியநற் பழக்கமுடை யோரெல்லாம்
சட்டத்திற் சேர லாகும்;
எவ்வகுப்பை எம்மொழியை எந்நாட்டைச்
சார்ந்தவரும் ஏற்க லாகும்
திவ்வியமாய்க் கற்றவரும் கல்லாரும்
சட்டத்திற் சேர லாகும். 223

செல்வர்களும் வறிஞர்களும் பேதமின்றிச்
சட்டத்திற் சேர லாகும்;
நல்லிளைஞர் முதியவர்கள் சேய்களுமிச்
சட்டத்தில் நண்ண லாகும்,
பல்வகைய பழக்கமுடை யாரும்சட்டம்
பயமின்றி யேற்க லாகும்;
நல்வகையாம் பழக்கம்அவர்க் கினிதெய்தும்;
நலிதீரும்; நலங்க ளுண்டாம். 224

வான்பொருள் வழி காட்டும்

முன்னைவினை யின்பயனுய்த் துணிந்துசட்டம்
ஏற்றிடமுன் வருவோர்க் கெல்லாம்
என்னையுடை யவன்கருணை முன்னின்றெவ்
வொருகணமும் இனிது பேணும்;
பன்னவரி தாம்துணையாய்ப் பக்கமிருந்
தினிதுவழி காட்டிச் செல்லும்;
என்னகெடு தியுமின்றி, உறுதியையும்
அமைதியையும் இனிது நல்கும். 225

முன்செய்நல் வினைப்பயனால் துணிந்துசட்டம்
ஏற்பதற்கு முனைந்து வந்தால்,
புன்செயல்எல் லாம்மாற்றி இடர்ப்பாடெல்
லாம்நீக்கிப் புனிதம் செய்து,
மின்செய்ஒளித் திருமேனி மிகுசெல்வம்
புகழ்வழங்கி, விளக்கம் நல்கி,
மன்சிறந்த வான்பொருளாம் உடையவன்நன்
மேல்நிலையில் வயங்கச் செய்வான். 226

## 15. சட்டம் மீறினால் தண்டனை

சட்டத்தில் தவறிடலா காதென்ற
உறுதியொடும் தாமிருந்தும்,
சட்டத்தின் படிநடக்க இயலாமல்
ஓரொருகால் தவற நேர்ந்தால்;
சட்டத்தை மீறுவதா காது; சட்டம்
மேற்கொண்டோர் வேண்டு மென்றே
சட்டத்தை மீறிநடப் பினும், மறந்து
தவறிடினும் தவறே யாகும். 227

அவ்வாறு தவறுகையில் அறிவுறுத்தி
நினைப்பூட்டித் திருத்தம் செய்தும்,
ஒவ்வாதிவ் வகைமறதி, ஊக்கமின்மை
யென்றருளால் உணர்த்தி வைத்தும்,
இவ்வாறு நடவாமல், இவ்வாறு
நடந்ததுதீ தெனக்காட் டிட்டும்,
அவ்வாறு நமைஇறைவன் தண்டித்துத்
திருத்தல்அருட் செயலே யாகும். 228

இருந்தாற்போ லிருந்துகையைத் திருப்பமுடி
யாதபடி இருக்கும்; கையிற்
பொருந்துவிரல் மடக்கமுடி யாதபடி
போகும்;பிற இடருண் டாகும்;
அருந்தும்உண வினிற்றவறில் லாதபொழு
திலும்வயிற்றிற் கோளா றெய்தும்;
வருந்தும்வணம் தேள்கொட்டும்; மனிதர்களால்
இடையூறு வந்து சேரும். 229

இப்படியே தேனுமொன்று நேர்ந்துவிடின்
சட்டநெறி போற்றி டும்நாம்
எப்படியோ தவறியுளோம் என்பதுணர்ந்(து)
எத்தவறு செய்தோம் என்ன
ஒப்புடன்ஆ ராய்ந்துற்ற தவறெதுவென்
றுளத்துணர்ந்து வேண்டிக் கொண்டால்,
அப்பொழுதக் கணமேஅத் தண்டனைதீர்ந்(து)
அற்புதமாய் நலமுண் டாமே. 230

நிட்டையினில் தோற்றமுற்று நினைந்தசெயல்
செயவொண்ணு வணம் தடுக்கும்;
இட்டமுற்றுச் செய்தகுற்றத் திற்குவருந்
தச்செய்திங் கின்னும் குற்றம்
திட்டமிட்டுச் செய்யாவண் ணம்சிறந்த
வழிகாட்டிச் செம்மை செய்யும்:
நிட்டையினில் தேரார்க்குக் கனவினில்தோற்
றம்கொடுத்து நிமல மாக்கும். 231

சட்டநெறி தவறிநடக் கின்றேமே
என்பதனைத் தாம்ம றந்தோ,
இட்டமொடிவ் வொருமுறைமட் டும்தவறின்
குறையா(து)என் றெண்ணிக் கொண்டோ,
சட்டநெறி பிசகிநடப் போர்முயற்சி
பாழாக, தாம்செய் செய்கை
திட்டப்படி கைகூடாவிடின், உடனே
சிறந்தபுத்தி அவர்க்குண் டாகும். 232

பரிகாரமும், நிவர்த்தியும்

சட்டநெறி பிசகின்வரும் தண்டனைகள்
தாங்கவொணு தாகத் தோன்றும்;
இட்டமுற்றுச் செய்தகுற்றம் உணர்ந்ததுமே
பாதியள(வு) இன்னல் நீங்கும்;
திட்டமுற விண்ணப்பம் செய்துவழி
பட்டதுமே முற்றும் தீரும்;
சட்டத்துறு தண்டனையின் நோக்கம்தடுத்
தாட்கொள்ளும் நோக்க மாகும். 233

தவறுசெய்வோன் றனைமேலும் தவறுசெய்து
கொண்டேக விட்டுப் பின்னர்
அவனைப்பெருங் கேட்டுக்குள் ளாக்கஉடை
யவன்கருத மாட்டா னன்றோ?
அவன்தவறெண் ணும்போதும் செயும்போதும்
அத்தவறை எணிவ ருந்திப்
புவனியில்மே லும்புரியா வணம்தடுத்துப்
புரத்தல்இறை கருணை யன்றோ? 234

எதிர்பாரா வணமொருதன் டனைநேரின்
எதற்கிதுற்ற தென்ன உன்னி,
இதுசெய்த தால்என்னை உய்விக்க
உடையவன்இஃ தீந்தான் என்னக்
கதுமென உணர்ந்துள்ளம் வருந்திஇறை
கருணைநினைந் தேத்தல் வேண்டும்;
இதனையினிச் செய்யேன்என் றுறுதியுடன்
இறைவனிடம் உரைத்தல் வேண்டும். 235

இத்தனைமு றைவலம்வந் ததும்நீங்கி
விடவேண்டும் என்று போற்றி
நித்தனுறை கோயிலையோ நிதம்போற்றும்
மூர்த்தியையோ வலம்செய் திட்டால்,
மெத்தவியப் புறும்வண்ணம் அக்கணமே
அத்தண்டனை விலகிப் போகும்;
இத்தண்டனை இப்பிழைக்கென் றுணர்ந்தீதி
னிப்புரியேன் என்னல் வேண்டும். 236

செய்தகுற்றம் உணர்ந்தினிமேல் செய்யாம
லிருக்கவழி தேடு கின்ற
துய்யமுறை யீதாத லின்ப்ரார்த்த
னைசெய்து கொளலீ தாகா;
மெய்யின்பால் விருப்புற்றோ புவிப்பொருளில்
விருப்புற்றோ, மேதி னிக்கண்
செய்துகொளும் ப்ரார்த்தனைவே றிதுவேறென்
றறிவுடையோர் தெளிதல் வேண்டும். 237

### அவனியிற் சிறந்தது அருட்சட்டம்

கல்லாரும் கற்ருரும் செல்வர்களும்
வறிஞர்களும் காசி னிக்கண்
எல்லாரும் எளிதேற்கத் தக்கதுவாய்,
பொருட்செலவில் லாத வொன்ருய்,
நல்லாற்றில் நடத்துவதாய்த் தவறிடின்தண்
டனைநல்கித் திருத்தும் ஒன்ருய்,
எல்லாநன் மையுமீயும் இச்சட்டம்
புவியில்மிகச் சிறந்த தாமே. 238

சட்டத்தின் பயன்

### 16. வேலைக்கு ஏற்ற கூலி

இவ்வளவு திட்டமுறச் சட்டத்தை
வகுத்துவைத்த இன்ப அண்ணற்(கு)
இவ்வுலகில் உளஉயிரெல் லாம்சட்டம்
முழுவதையும் இனிது பேணிச்
செவ்வையுற:முழுப்பயன்பெற் றிடவேண்டும்
என்னல்திரு வுள்ள மாகும்;
அவ்வகையில் உயிர்கள்நட வாவண்ணம்
வினைதடுப்ப தறிவார் அண்ணல். 239

சட்டப்பகு திகள்அனைத்தும் வகுத்தது
வகுத்தபடி தாம்மேற் கொள்ள
இட்டமிருந் தாலுமவ்வா றெல்லோரும்
கையாளற் கியலா வண்ணம்
மட்டில்வினை தடுப்பதனுல், அவரவர்கள்
முடிந்தவரை *மகிமேல் பற்றி
இட்டமுடன் பேணின்,இறை யிடத்துறுதி
யிருப்பின்,அதே முழுமை யாக்கும். 240

இயன்றவரை சட்டம்அனுட் டிப்பதனைப்
பற்றித்தடை யியம்பார் அண்ணல்;
முயன்றச்சிறு வளவேனும் கையாள
முன்வருவோர் உடையோன் பாலே

*மகி—பூமி

அயர்வில்மன உறுதியுடன் இருப்பாரேல்,
அருட்சட்ட அங்கம் யாவும்
உயர்வுறநன் றேற்றுண்மை யின்புறுவ
துறுதியென அருளாற் சொல்வார். 241

"இம்மட்டே அருட்சட்டம் எளியேனல்
அனுசரிக்க இயலும் அண்ணல்
செம்மையுற ஏழையின்பால் திருக்கருணை
பாலித்தல் வேண்டும்; சட்டம்
இம்மையினில் முழுதும்கையா ளாதவனென்
றெனைக்கைவிடேல் குருவே" என்னச்
செம்மையுற அண்ணலிடம் சிலஅடியார்
விண்ணப்பம் செய்த போதில், 242

அன்னவர்பால் அலட்சியமோ சினம்பிறவோ
அணுவளவும் கொள்ளா தண்ணல்
அன்னவரை அன்போடும் அருகழைத்தப்
படியேசெய் யட்டும் என்பார்;
மன்னும்உழைப் புக்கேற்ற ஊதியமுண்(டு);
உள்ளன்பு மாறு தாயின்,
நன்னயமார் அஃதொன்றே அனைத்தினையும்
நனிகூட்டு விக்கும் என்பார். 243

சட்டத்தில் வகுத்தபடி விடியலைந்து
நாழிகைமுன் தண்ணீ ராடும்
திட்டமதைச் சிறிதுகா லம்தாழ்த்தி
நடத்திவரும் சிலரைப் பற்றிச்
சட்டம்வகுத் தருளண்ணல் வருத்தமின்றிச்
சாமிசட்டத் தினிலே வேலைத்
திட்டத்திற் கேற்றநல்ஊ தியமுண்டென்
றேமுறுவல் செய்து சொல்வார். 244

சட்டத்தை முழுதும்அனுட் டிப்பவர்க்கு
முழுப்பயன்நிச் சயம்கை கூடும்;
சட்டத்தைச் சிறிதளவு பேணுநர்க்கிப்
பிறவியிலே சட்டத் துள்ள

திட்டம்முழு வதும்பேணும் பேறும்இகம்
பரமும்வாய்த் திடுமோ என்னின்,
திட்டமுறச் செப்பஇய லா(து);உறுதிக்
கேற்றபயன் உண்டென் றிட்டார். 245

பக்குவத்திற் கேற்றபடி இப்பிறப்பிற்
சிறிதளவாய்த் தொடங்கும் சட்டம்
தக்கவண்ணம் மெல்லமெல்ல வோ, விரைந்தோ
பூரணமாம் தன்மை யெய்தித்
துக்கநிவர்த் தியும்உண்மை யின்பமும்முத்
தியும்கூட்டு வித்தல் கூடும்;
ஒக்கவரு பிறவியிலும் முழுப்பயனை
உதவிமுத்தி கூட்டக் கூடும். 246

தூய நல்வாழ்வு

உழைப்பதனுக் கேற்றபடி ஊதியம்உண்
டெனல்என்றும் உறுதி யாகும்;
பிழைப்புண்டேல் தண்டனையும், ப்ரார்த்தித்தால்
மன்னிப்பும் பெறுதல் திண்ணம்;
ஒழுக்கமுற அநுட்டிப்போர் முதலில்அவர்
குடும்பத்திற் கொளிவி ளக்காய்,
வழக்கமுறும் போதூர்க்கும் புறஊர்க்கும்
மணிவிளக்காய் வயங்கு வார்கள். 247

நாடுமுழு தினுக்கும்ஒளி வளர்ஜோதி
யாய்மிளிர்ந்து நலம்செய் வார்கள்;
பீடுபெற நனிபற்று மற்றூர்க்கும்
பெருந்துணையாய்ப் பிறங்கு வார்கள்;
ஈடில்வழி காட்டொளியாய் எல்லோர்க்கும்
இனியவராய் இலங்கு வார்கள்;
நாடிவிளக் கம்கோரின், நலம்அருளும்
விழுப்பொருளாய் விளங்கு வார்கள். 248

மற்றூர்க்கு மணிவிளக்காய், வழிவிளக்கும்
மாண்பினராய்த் தமது வாழ்வில்
சற்றேனும் அச்சமின்றிச் சந்தேகம்
ஏதுமின்றித் தெளிந்து, சாந்த

முற்றோராய், உடையவன்பே ரருள்வெள்ளத்
தினிலாழ்ந்த உளத்தி னோராய்.
உற்றினியும் பிறவாநன் னெறிபெற்றுள்
ளோமெனுமுண் மையைக்கண் டோராய் 249

திருவருளாற் பெற்றஇந்தச் சிற்றின்ப
மேஉயர்பே ரின்ப மென்னும்
பெருவாய்மை யினையுணரப் பெற்றவராய்ப்
பிறவியெடுத் ததனு லிங்கு
மருவுமிம்மைப் பயனையெலாம் இவ்வுலகிற்
பெற்றவராய், மாசில் தூய
பெருவாழ்வு நன்றுற்றி வருவரெனப்
பேசிடவும் வேண்டுங் கொல்லோ? 250

உடையவனிடம் உறுதி

அண்ணலார் சட்டத்தை முறையாக
அநுட்டித்து வருவ தாலே
திண்ணமாய் எய்துபயன் மூன்றென்னச்
செப்பிடலாம், வேலைக் கேற்ற
வண்ணம்தவ றுதுபெறும் கூலிமுதற்
பயனுகும்; மாசில் தூய
எண்ணம்உரை செயல்யாவும் இணைந்தஅருள்
வாழ்விரண்டாம் பயன தாகும்; 251

வருமூன்றும் பயன்மற்ற வகையிலெலாம்
எளிதுபெறற் கியலா தான
பெரியபொரு ளாம், அதுவே உடையவன்பால்
பிறழாநல் லுறுதி யாகும்;
அருள்நெறியாம் சட்டமிதன் அங்கமெலாம்
இதனைஉயி ராக வைத்துத்
திருவருளால் அமைக்கப்பெற் றுள்ளதென
அனைவோரும் தெளிதல் வேண்டும். 252

அருட்சட்ட நெறியினைக்கை யாள்வோர்கள்
அனைவருமே உடைய வன்பால்
பெருகும்அள வில்லாப்பே ரன்பும்உறு
தியும்பெற்றோ ராவ ரென்னல்

பெருமலையின் மேற்பிறங்கும் விளக்காகும்;
அவர்,தமக்கும், பிறர்யா வர்க்கும்
மருவும்இடர் ஏதுக்கும் துளியும்உளம்
அசையாராய் வயங்கல் திண்ணம். 253

மண்பாத லம்புக்கு மால்கடலும்
மூடிமற்றை உலக மேழும்
விண்பாலே திசைமாறி இருசுடரும்
வீழினும்அஞ் சாநெஞ் சத்தால்
கண்போலும் கண்மணியுள் ளொளிபோலும்
திகழ்கடவுள் கருணை யொன்றே
பண்போடு போற்றிஉயத் தக்கதெனப்
பரவிஉயும் பான்மை யோராய், 254

நாமார்க்கும் குடியல்லோம்;நமனையுமஞ்
சோம்நரகில் துன்ப மெய்தோம்;
ஏமாப்போம் பிணியறியோம் இறைவனையல்
லாற்பிறரைப் பணிவோ மல்லோம்;
ஏமாற்றும் எவர்பாலும் இனியும்சென்
றேமாற மாட்டோம் என்னக்
கோமாற்காட் பட்டொழுகும் கொள்கையினிற்
சிறந்தோராய்க் குலவு வாரே. 255

வாழ்ந்தாலும்,வருத்தமிக உற்றாலும்,
வாழாமல் மறிக டற்கண்
வீழ்ந்தாலும் உன்கழலை விடுவேனல்
லேன்,என்னும் உறுதி யோடும்
சூழ்ந்தார்வத் தொடும்உடையோன் தூயபதத்
துணையிணையே பற்றி யன்பில்
ஆழ்ந்தாடிப் பாடியருட் பேறெய்தி
மருள்தவிர்த்துய் வோரா வாரே. 256

இடருறினும் தளர்வுறினும் எனதுறுநோய்
இவ்வுலகில் எனைவி டாமல்
தொடர்வுறினும் உன்கழலே தொழுதெழுவேன்
எனும்தூய உறுதி யோடும்,

கடவுள்பெருங் கருணையினிற் கடுகளவும்
ஐயமின்றிக் கரவில் லாமெய்த்
திடமுடனும் போற்றியுற்ற தீதனைத்தும்
தீர்த்தருளில் திளைத்துய் வாரே. 257

திருவருள்கை வந்தபெரி யோர்பலரும்
கோண்டிருந்த சிறந்த உள்ளம்,
மருவிவரும் எதற்கும்எவ ருக்குமஞ்சித்
தளராத மாண்பார் உள்ளம்,
கருவமின்றிக் கடவுளருட் கருணையினல்
உயர்ந்தஉள்ளம், காசி ஞிக்கண்
திருவருட்சட் டம்பேணும் சீரியர்தம்
திருவாகித் திகழும் அம்மா! 258

இப்பொருள்சொந் தமதாயின் இகத்தினிலோ
பரத்தினிலோ எய்தத் தக்க
மெய்ப்பொருள்வே றென்னவுள திப்பொருளே
மெய்ப்பொருளாய் இன்ப மூட்டும்;
பொய்ப்பொருளை நாடியுழல் புவியோர்க்குப்
புரியாத புனித மான
மெய்ப்பொருளை உணர்த்தியருள் வழிகாட்டி
மெய்யின்பம் மேவச் செய்யும். 259

## வழி காட்டும் வளமை

சட்டஅனுட் டானமுடை யார்வாழ்க்கை
யினில்தமக்கும் மற்ரு ருக்கும்
திட்டமுடன் வழிகாட்ட ஒருவரையும்
தேடவேண் டுவதே யில்லை;
முட்டுப்பா டானநிலை நேர்கையிலிப்
படிச்செய்ய முயல லாமா,
திட்டமிட்டு வேறுவிதம் செயலாமா
என்றெண்ணத் தேவை யில்லை; 260

சட்டத்திற் சேர்ந்தோர்கள் சந்தேகித்
திடர்ப்படவேண் டுவதே யில்லை;
முட்டுப்பா டானநிலை மற்ரூர்க்கு
மூண்டுதம்பால் விளக்கம் கோரி

இட்டமுடன் வந்தாலும் இறைவனிடம்
தாக்கல்கொடுத் திறைவன் கூறும்
திட்டம்அரு ளாலுணர்ந்து கேட்டவர்கள்
தெளியும்வணம் செப்பல் கூடும். 261

எல்லாமும் வல்லஉடை யவன்கருணை
எவ்வளவற் புதம தாக
நல்வாழ்க்கைக் குரியவழி காட்டிவரு
கிறதென்ன நன்கு ணர்ந்து
சொல்லாற்சொல் லற்கரிய பெருமகிழ்ச்சி
யடைவரந்தத் தூய முன்னோன்
எல்லார்க்கும் அருள்கருணை அகத்தெண்ணி
இனிதன்பால் உருகு வாரே. 262

வல்லவனுல் வளமாக வழிகாட்டப்
பெறும்வாய்ப்பு கிட்டி விட்டால்
அல்லல்அணு வளவுமின்றி அருள்வாழ்க்கை
யாற்றியா னந்தம் துய்ப்பர்;
இல்லறவாழ் வினில்வேறே எவராலும்
ஆகவேண் டுவதொன் றுண்டோ?
பல்லறத்தின் பயனுமந்தப் பண்பாளர்க்
கிறையருள்பா லிக்கும் அன்றோ? 263

சட்டத்தை எவ்வளவு தீவிரமாய்
எத்துணைச்சத் தியம தாகத்
திட்டமுடன் அனுட்டிக்கின் றோமோஅத்
துணைத்தெளிவாய் உண்மை யாக
இட்டமுடன் உடையவனே, வழிகாட்டி
இனிதழைத்துச் செல்வான்; உள்ளம்
உட்டெளிவுற் றுறுதியுடன் நம்பின்எலாம்.
விளக்கிநனி காப்பான் நன்றே. 264

அறநெறியாய் அறப்பயனுய் அமைந்திலங்கும்
அவன்நம்மை அருளால் நோக்கித்
திறமுறநாம் முழுவேலை செய்யுங்கால்
முழுக்கூலி தினமு மீவான்;

முறைமையிதை நன்றுணர்ந்து சட்டநெறி
முழுவதையும் பேணி வாழ்ந்தால்,
இறையருளால் தூயநல்வாழ் வசையாமெய்
யன்புறுதி இனிது வாய்க்கும். 265

நாணமுற்றுத் தலைகுனிந்து நடக்கவறி
யாதமண நங்கை செங்கை
பூணுமகிழ் வோடுபற்றிப் புதியமணப்
பந்தருக்குட் போந்து வேட்டு
மாணுறுநன் மகிழ்ச்சிமிக நல்குமண
மகன்போல உடையோன் நம்கை
பேணும்அரு ளாற்பற்றிச் சத்தியமாய்ப்
பேரின்ப முத்தி யீவன். 266

சட்டமெனும் செந்நெறியாய்த் திகழ்பவனும்
தருகுருவும் அவனே யாகும்;
சட்டநெறி செலச்சக்தி தந்துவழி
காட்டிடுவோன் அவனே யாகும்;
சட்டநெறி நடப்பவர்க்கு முழுப்பயனும்
தந்தருள்வோன் அவனே யாகும்;
இட்டமுடன் உயிர்களின்பம் எய்துகென
இத்தனையும் அவன்செய் கின்றான். 267

சட்ட அனுபவம் ரகசியம்

சட்டநெறி கைக்கொள்வோர் எவரும்பிறர்
தமைக்கண்டு பெருமை கொள்ளச்
சட்டத்திற் சேர்ந்திருப்ப தாகவெளிப்
படுத்திக்கொளல் தக்க தன்றாம்,
சட்டநெறி பேணுகையில் தமக்கெய்தும்
இடரினையும் தருணம் பார்த்தங்(கு)
இட்டமொடவ் விடர்நீக்கி இறைவன்கரை
யேற்றுவதும் இயம்ப லாகா. 268

தினமிறைவன் நாம்மேன்மை யடையும்வணம்
வழிகாட்டிச் செல்லும் செம்மை
மனமுறக்கொண் டினிதேபோற் றிடல்வேண்டும்;
மற்றெவர்க்கும் உரையேல் என்றார்;

இனிதருளாற் சட்டஅடி யார்களுக்கும்
இவர்வாயி லாக மற்றைத்
தனியார்க்கும் அற்புதமாய் அமைநலங்கள்
எவரிடமும் சாற்ற லாகா. 269

இப்படியெல் லாம்கூறிக் கொள்வதனல்
தற்பெருமை யெய்தி யோங்கின்
ஒப்பிலுடை யோன்கணக்கை உணர்ந்தேகும்
வழிமூடிக் கொளவும் கூடும்;
அப்படிமூ டிக்கொள்ளின் அடியர்தவிப்
பாரேஎன் றஞ்சி யண்ணல்
இப்படியில் சட்டஅனு பவநலனை
எவரிடத்தும் இயம்பேல் என்ருர். 270

சட்டநெறி யாலெய்தும் பயன்சட்ட
அடியவர்பால் சாற்ற லாகும்;
சட்டஅடி யாராகத் தக்கவர்க
ளிடத்துமன்பால் சாற்ற லாகும்;
சட்டஅனுட் டானத்தின் வளர்ச்சியினை
உளம்கொண்டே சாற்றச் சொன்ஞர்;
சட்டநெறி யின்பெருமை சாற்றுதற்கும்
உன்னுதற்கும் அரிய தன்றே? 271

நெருங்கியுள அடியர்ஒரு வருக்கொருவர்
தம்வாழ்வை நிமலன் நன்றே
ஒருங்கருளால் அருமையுற நடத்திச்செலும்
அற்புதத்தை உரைக்க லாகும்;
பெருங்கருணை யோடிறைவன் பேணிடுமற்
புதமுணர்ந்து தாமும் பேணிப்
பரன்கருணை பெறத்துணையாய் இருக்குமென
அடியவர்பால் சொலலாம் என்ருர். 272

அப்படிச்சொல் லும்போதும் அகங்கார
மின்றியடக் கத்தி ஞேடும்
ஒப்பிலுடை யவன்பால்மெய் யன்போடும்
உளமுருகிச் சொல்லல் வேண்டும்;

இப்படியில் ஏனையர்கே ளாவண்ணம்
ரகசியமாய் இயம்பல் வேண்டும்;
இப்படிச்சொன் னலும்அனைத் தும்சொல்லா
தொருசிலவே இயம்பல் வேண்டும். 273

தற்பரன்றன் சட்டநெறி யால்அடியார்
தரணியில்எய் திடும் நலத்தைத்
தற்பெருமை யின்றிரக சியமாகச்
சாற்றிக்கொள லாம்என் ருர்;அவ்
வற்புதங்கள் இன்பரக சியங்களெலாம்
வேறுவகை யாக யார்க்கும்
சொற்கொடுவெ ளிப்படுத்த லாகாதென்
பதுசுவாமி யுள்ள மாகும். 274

நாயகன்நா யகிஇருவர்க் குள்ளுறும்நல்
இன்பரக சியங்கள் எல்லாம்
வாயுரைகொண் டெவர்பாலும் சாற்றிடுதற்
கியல்வதுவோ? மனத்துட் கொண்டே
நேயமும்அன் பும்பெருக்கி இன்பமிக
எய்திடுதல் நியம மன்ருே?
நாயகனும் இறைவனுக்கும் நாயகியாம்
உயிர்க்குமுற்ற உறவீ தன்ருே? 275

மிக்கரக சியமாகப் போற்றவேண்
டுவஉளத்திற் போற்றல் வேண்டும்;
தக்கஅடி யவரிடத்திற் சொல்லிடத்தக்
கனசிலவே சொல்லல் வேண்டும்;
ஒக்கஅனைத் தும்கூறின் உயர்நிலையி
விருந்துவழு விடவும் கூடும்;
எக்கணத்தும் மிக்கபணி வோடும்அடக்
கத்தோடும் இருத்தல் வேண்டும். 276

ஒவ்வொர்கணத் தும்சட்ட அடியார்கள்
உடையவனல் எய்தும் நன்மை,
ஒவ்வொர்கணத் தும்சட்ட அடியார்கள்,
உடையவனல் எய்தும் இன்பம்,

எவ்வுரைகொண் டிவ்வுலகிற் சொலலாகும்?
எம்மொழிகொண் டெழுத லாகும்?
ஒவ்வொருக ணத்தும்அடி யவர்அடைஆ
னந்தத்துக் களவொன் றுண்டோ? 277

ஆக செய்யுள் 1720

---

## 2. அடியரைத் தேடும் படலம்

### விநாயகர் துதி

பூதலத்தில் மறைநான்கொ டைந்தாவ
தெனஇனிது பொலியும் நூலாம்
தீதறுநற் பாரதத்தை வடவரைமேல்
தீட்டியருள் செயும்ஏ ரம்பன்
மாதவத்தின் பயன்அனைத்தும் எவ்வுயிர்க்கும்
வழங்கியருள் சட்டம் தந்தாள்
போதகுரு அடியவர்கட் கருளுதிறன்
எழுதஅருள் புரிவன் நன்றே. 1

### குருநாதர் துதி

திட்டமுடன் இவ்வுலகில் நனிவாழ்ந்து
செய்யதவச் செல்வம் நல்கும்
நிட்டையினை அன்போடும் பேணிநிம
லன்கருணை நிறைந்த ஞானப்
பெட்டகமாய் அடியார்கள் பிறங்கும்வணம்
பேரின்பப் பெருமை சான்ற
சட்டம்வெளி யிட்டினிதாள் சற்குருதாள்
மலர்சூடித் தவம்பெற் றுய்வாம். 2

பொருள்தேடிப் பொய்யுலகச் சுகம்தேடிப்
புகழ்தேடிப் புவியி லோடி
அருள்தேடும் நாட்டமின்றி மருள்தேடி
மயங்குயிர்கள் எல்லாம் உய்யத்

தெருள்தேடு திருவருட்சட் டத்தையினி
தளித்தோம்பத் தேசம் சுற்றி
அருள்தேடும் அன்புளம்சால் அடியரைத்தே
டருட்குருதாட் கன்பு செய்வாம். 3

மனிதகுல மாதியுயிர்க் குலமனைத்தும்
வாழவந்த மகிமை போற்றி
இனிதருட்சட் டத்தால்இல் லறத்தாரை
யும்கடைத்தேற் றினிமை போற்றி
சனிதம்மரிப் பாதியிலாத் தனிநிலைதந்
தாளுமுயர் தகைமை போற்றி
எனைத்தடுத்தாண் டிச்சரிதம் எழுதுவிக்கும்
பெருங்கருணை போற்றி போற்றி. 4

அருட்சட்ட அடியவர் துதி

அருட்பெருந் திருவை அடைந்துயற் கறியா
தல்லலுற் றழுங்கிடும் உயிர்கள்
அருட்பெருந் திருவை எளிதினில் அடைதற்(கு)
அருள்நெறி வகுத்தரு ளரசாள்
அருட்குரு பதத்தில் உடல்பொரு ளாவி
ஒப்படைத் தன்புரு வாகி
அருட்டிரு நெறிபேண் அடியவர் மலர்த்தாள்
முடிக்கணிந் தருள்மிகப் பெறுவாம். 5

---

வேறு

அருட்பேறு பெற்றஅடி யரைப்பற்றிச்
சொலும்தகுதி யறியா நாயேன்
அருளடியர் பெருமையெடுத் தியம்பஇய
லாதவனே யானு லும்பே
ரருள்வடிவாம் உடையவன்உள் ளிருந்தூக்கு
வித்தெழுதச் செய்வ தால்அவ்
வருளிறைதம் மனத்தமையப் பேறுபெற்றூர்
அடிபணிந்து தொடங்க லுற்றேன். 6

அருளை வழங்க அவா

பொதிகையினில் தனித்தவம்செய் துடையவன்றன்
திருவருளைப் பூர்ண மாய்ப்பெற்
றதிமகிழ்வொ டுயிர்களெலாம் இம்மைமறு
மைப்பயன்கள் அனைத்தும் எய்தப்
பொதுநெறியொன் றினைச்சட்ட மெனவகுத்துக்
கொண்டஅண்ணல் புவனி யின்கண்
பதியருளைக் குறிப்பறிந்து வழங்கவுன்னிப்
பரிவுமிகக் கொண்டா ரன்றே. 7

உடையவன்றன் திருவருள்அண் ணலைஇவ்வா
றருள்செயஉந் தாதி ருந்தால்,
படியின்மிசை இருட்படலம் விலகிடுமோ?
அருள்நிலையின் பயனுண் டாமோ
அடியவரா தற்குரிய நல்வினைசெய்
தவனிமிசை தோன்றி யுள்ளோர்
முடிவில்பவப் பிணிதீர்ந்து மோனபர
மானந்தம் துய்த்தற் காமோ? 8

ஆந்திர நாட்டின் சிறப்பு

பாரத நாட்டைப் பண்புசால் நங்கை
யெனமனக் கண்ணினுல் பார்த்தால்
சீரிய மூலா தாரம்நன் றிலங்கும்
தேயம்ஆந் திரமென லாலும்,
பாரினிற் சட்டம் பைந்தமிழ் நாட்டில்
முன்னரே பரவிய தாலும்,
கோரிய அடியார் பக்குவத் தாலும்
குருபரர் ஆந்திரம் அடைந்தார். 9

இனியநல் லோசை யுடையதாம் தெலுங்கு
மொழியினை இயம்பிவாழ் மக்கள்
நனிமன தார உழைத்திடும் உழைப்பும்
நதிகளாய் எழிலுறப் பெருகும்
புனிதநற் கோதா வரியுடன் கிருஷ்ணை
புகலரி தாம்வளம் கொழிப்ப
அனைவரும் புகழ்ந்து போற்றிடப் பொலியும்
ஆந்திர மாம்திரு நாடே. 10

அணைகளை அமைத்து நீரினைத் தேக்கிக்
காலத்தை அறிந்தவை திறந்தும்
இணையில்நல் முறையில் வயல்வளம் பெருகற்
காவன அனைத்தையும் இயற்றப்
பணைத்தெழு கரும்பு வாழைபைந் தென்னை
பயறுவேர்க் கடலைவண் துவரை
உணத்தகு செந்நெல் ஆதிய அனைத்தும்
உயர்விளை வளித்துவாழ் வருளும். 11

புன்செய்நல் வளமும் நன்செய்நல் வளமும்
பூமியாம் அன்னைக்குப் பொருவில்
மன்செய்நல் லெழிலுண் டாக்கியே திகழும்
மாண்பினைக் காணின்அங் குள்ளோர்
பொன்செயும் செல்வ வளமும்நல் விருந்தைப்
போற்றிவாழ் புனிதமும் புகலும்
இன்சொலின்சிறப்பும் அறம்பொரு ளின்பம்
எய்திடும் சிறப்பும்நன் றிலங்கும். 12

இத்தகு சிறப்பு மிக்கநல் ஆந்த்ர
நாட்டினுள் ஏகிய அண்ணல்
உத்தம ஒழுக்கம் போற்றிய ராமன்
உயர்ந்தமெய்ப் பக்திசால் அனுமான்
இத்தரை மீதில் இனியநற் கீதை
இயம்பிய கண்ணன் ஏறூர்ந்த
நித்தனு தியரை வழிபடு வோர்தம்
நியமமும் கண்டுளம் மகிழ்ந்தார். 13

வேறு

அண்ணலார் எண்ணமெலாம் அடியார்கள்
எங்குள்ளார் என்று நாடும்;
அண்ணலார் மொழியெல்லாம் மறைமொழியாய்
அடியர்செவி பாய்ந்தி னிக்கும்;
அண்ணலார் மூச்செல்லாம் அனைத்துயிரின்
குறைநீக்கி நலம்வி ளைக்கும்;
அண்ணலார் அடிமலர்தோய் இடங்களில்எல்
லாவளமும் செழிக்கு மாலோ. 14

நந்தி கொண்டா

வேங்கடத் தினுக்கு வடக்கில்நாற் காதத்
தொலைவினில் விளங்குநல் லூராம்
பாங்குறு நந்தி கொண்டஎன் றெவரும்
பகரும்அப் பதிக்கண்ஏ கென்ன
ஆங்குடை யோன்தண் ணருளினி துணர்த்த
அருள்வடி வாயொளிர் அண்ணல்
பூங்கழல் புவியில் தோய்ந்தருட் புனிதம்
பரப்பிடப் பொலிவுற நடந்தார். 15

நந்தியைப் போன்ற மலையினை யுடைய
நற்பதி யெனப்பொருள் படற்கே
நந்திகொண் டாவென் னும்பெய ருளதோ
எனஅவண் நண்ணுவோர் எண்ண
அந்தநன் மலையும் ஊர்க்கர ணாகி
அணியெழி லுடையதாய்த் தோன்றும்;
சுந்தரப் பொலிவு மிகுமவ்வூர் எளிய
தோற்றமும் ஏற்றமும் உடைத்தாம் 16

மூப்பக் கவுண்டலு

நாற்சத மென்னும் வீடுக ளுடையவ்
வூரினில் நற்பரம் பரையில்
மேற்படு தெய்வ பக்தியும் அன்பும்
மேவிய ஒருகுடும் பத்தில்
நூற்படும் அறிவும் இறைகழல் இதயம்
பதித்தொளிர் நோன்மையும் மிகுந்தோர்
காப்புறு புலனைந் துடையநன் மூப்பக்
கவுண்டலு எனும்பெய ருடையோர். 17

உண்மையில் அன்பில் ஒழுக்கத்தில் மூத்த
செம்மலென் றுலகினர் இயம்ப,
தண்மைசால் குணத்தோ டிலங்கிய இவர்க்குத்
தகவுறு மூப்பஎன் றிடுஞ்சொல்
உண்மையாய்ப் பொருந்த லால்இவர்க் கிப்பேர்
உகந்ததென் றிடும்வணம் ஒளிர்ந்தார்;
திண்மைசால் தவமும் திருவடிப் பேறும்
நாடிவாழ் திருவுளம் உடையார். 18

உலகவாழ் வினுக்கென் றுழவுசெய் தொழிலை
உவந்துமேற் கொண்டவர் எனினும்
அலகில்சீர் முத்திப் பேற்றினை யடையும்
வேட்கைமிக் குடையவ ராஞர்
இலகுமுன் னவன்றன் இணையடி இதயத்
தினிதமைத் தேத்திடும் இனியார்
உலகமா மயல்தீர்த் தருள்குரு எப்போ
துறுவரோ எனநினைந் திருந்தார். 19

எனைக்கரு ணையினல் பக்குவப் படுத்தும்
குருபரர் எங்கணுள் ளனரோ?
வினைத்தொகை யனைத்தும் எரித்திறை யருளை
விளைப்பவர் எங்கணுள் ளனரோ?
அனைத்தணு வினுளும் அருளினைப் பாய்ச்சி
ஆள்பவர் எங்கணுள் ளனரோ?
நினைத்தவை யருளும் நிமலஐங் கரனே!
நீகுரு வாய்வரு கென்பார். 20

சற்குரு பரஞர் தண்ணருட் கருணை
தரைமிசை யெய்துநாள் என்றோ?
நற்குணச்சீட னெனக்குரு பாத
நாண்மலர் பணியும்நாள் என்றோ?
அற்குலம் விலக்கி அருளொளி விளக்கும்
ஆதித்தன் தோன்றும்நாள் என்றோ?
சிற்களி றேஎற் கினிவிரை வினில்நீ
திருவருள் புரிகவென் றிரப்பார். 21

நற்றவம் முற்றி யிருந்தவப் பக்தர்
பக்குவம் நன்றுகண் டருளால்
உற்றவர் கனவில் கணபதி அண்ணல்
உருவினைக் காட்டியிங் கிந்த
நற்றவங் பெரியார் உருவினில் நாளை
நாமுற்றுட் கொள்வமென் றுணர்த்தப்
பெற்றிட வுள்ள பேற்றினைக் கருதிப்
பெருமகிழ் வுற்றவப் போதில், 22

குரு அருட் காட்சி

தக்கபக் குவம்சால் அடியர் இங்குள்ளார்
சார்கெனத் தண்ணருள் உணர்த்த
அக்கணத் தருகில் போந்தநம் அண்ணல்
ஆங்கமை கட்டிலின் மீதே
சற்குரு வரவை நோக்கிய வண்ணம்
தனிமகிழ் வோடிருந் தவர்முன்
மிக்கநற் கருணை வடிவுடன் நிற்க
விழித்தெதிர் கண்டனர் அன்பர். 23

கண்டதும் உவகைக் கடலினுள் ஆழ்ந்து
கரையறி யாதவர் ஆனார்;
விண்டிடற் குரிய உரையறி யாமல்
குழறிட விழிகள்நீர் துளிப்பப்
பண்டுள குறைகள் யாவுமே யகலப்
பரசுகம் உளத்தினில் நிறையத்
தொண்டர்அங் கெழுந்து துள்ளினர் ஆடிப்
பாடினர் தொழுதடி பணிந்தார். 24

அடியனேன் முன்னர் பலப்பல பிறப்பில்
ஆற்றிய தவமெலாம் ஒருங்கிப்
படியின்மேற் குருவின் படிவினில் போந்த
தோஎன்பர்;பாசம்அங் குசமும்
ஒடியொரு கோடும் மோதக மும்கொள்
உம்பர்கோன் உணர்த்திய வாறே
விடியுமுன் பெருமான் போந்தனர் ஞான
விழிப்பரு ளுதற்கென மகிழ்ந்தார். 25

காந்தத்தைக் கண்ட இரும்புபோல் ஞான
காந்தனின் கருணைநல் வடிவும்
சாந்தமார் விழியும் கண்டநல் லன்பர்
தழலின்முன் இழுதென ஆனார்;
ஏந்தலார் நயனம் பொழியருள் தேனை
இனிதருந் திட்டனர் ஞான
வேந்தரும் விமலச் சீடரும் அடைந்த
மகிழ்வினை விளம்புதற் காமோ? 26

வேறு

தொழுத கையொடும் துளங்கிய முடியொடும் நன்னீர்
பொழியும் கண்ணொடும் பொடிப்புறும் உடம்பொடும் நாவில்
தழுத முத்தமெய் யன்புசால் உரையொடும் தம்மை
இழந்த பாங்கினில் அண்ணலை இறைஞ்சினர் அன்பர். 27

அண்ண லேதங்கள் அருட்டிரு வுருவினை மூன்று
கண்ண ராகிய கணபதி அருளினற் காட்டி
உண்ணி லாவுமா மயல்தவிர்த் தருள்குரு இவரே
நண்ணு வார்விரை வினிலெனக் கருணையால் நவின்றார். 28

எண்ணி லாப்பல பிறவிகள் எய்தியிங் கிளைத்து
மண்ணில் மாமயல் நீக்கிநன் மாணருள் புரியும்
அண்ண லார்வரும் நாளெதோ எனஇவண் அயர்ந்தேன்;
உண்ணி லாவிய கருத்தினை முடிக்கநீர் போந்தீர். 29

வேறு

கடும்வெயில் தாக்கச் சகித்திடாப் புழுப்போல்
காசினி மாயையால் வருந்தித்
திடம்பெற ஞானச் சுடர்விழை வேன்முன்
தேசிக னாகிப்போந் துள்ளீர்
உடம்பினைக் கோயி லாக்கியுள் ளமைவீர்
உயர்தவ ஒளிவளர்த் தருள்வீர்
புடம்படு பொன்னு யாக்கிப் பேரின்பப்
பொலிவருள் வீரெனப் பணிந்தார். 30

எனைக்கடைத் தேற்றும் இனியநற் றெய்வம்
தாங்களே என்றடி தாழ்ந்த
கனிவுசால் மூப்பக் கவுண்டனு பால்நற்
கருணையைப் பாய்ச்சினர் அண்ணல்
இனியநன் மொழியும் இதயபக் குவமும்
இதமுறக் கண்டநம் அண்ணல்
புனிதநற் சட்ட நெறியினைப் புகலத்
தகுமிடம் ஈதென உணர்ந்தார். 31

அண்ணலைக் கயிற்றுக் கட்டிலில் அமர்த்தி
முழ்முறை வலம்வந்து பணிந்த
புண்ணியம் மிகுந்த கவுண்டலு தம்மைப்
புனிதமார் விழிகளால் நோக்கி
நண்ணிய முன்னை வினைகளின் முடிச்சை
யறுத்துமேல் நண்ணிடா திருக்க
எண்ணருஞ் சிறப்பார் சட்டநன் னெறியை
இனிதுப தேசித்தார் அண்ணல். 32

வேறு

நெடுங்காலம் எதிர்பார்த்த கருந்தனம் கைக்
குற்றதுபோல் நிமல னார்தம்
திடஞ்சான்ற உபதேசத் தினையுச்சி
மீதேற்றுச் செம்மை பூண்டு
புடம்போட்ட பொன்னாகிப் பொலிந்திடுவ
துறுதியெனப் பொற்போ டெண்ணி
**உடம்பாவி பொருளனைத்தும் அர்ப்பணித்தேன்**
**உமக்கென்ன உருகி நின்றார்.** 33

உயிரனைத்தும் துன்பின்றி உய்ந்திடுதல்
வேண்டுமென உள்ளத் துன்னி
அயர்வில்அருந் தவமாற்றி அருட்சட்டம்
பெற்றஅரு ளண்ண லார்க்கு
மயர்வறஅச் சட்டத்தைப் பேணுதிறன்
மானொழுக்கம் அடக்கம் அன்பால்
உயர்வுறுநன் முதற்சீடர் கிடைத்திட்டார்
எனச்சுரர்பூ மாரி பெய்தார். 34

பின்னர்இரு வரும்மகிழ்வொ டளவளவிப்
பேசுகையில் பெருமான் அன்பால்
சொன்னசட்ட நெறியில்தமக் குற்றசில
ஐயங்கள் சொல்லி யன்பர்
நன்னயமார் தெளிவருள வேண்டுமென்றார்;
ஞானகுரு நாத வள்ளல்
பன்னியஇன் னுரைகளினல் ஐயமகன்
றன்பர்மிகு பண்பெய் திட்டார், 35

அடியனையிங் காண்டருள அன்புருவாய்
வந்தபெருந் தகையே என்னைப்
படியில்அருட் சட்டம்போற் றடியவனுய்ப்
பரிவோடும் ஏற்று, நாளை
விடியலில்தண் ணீராட்டி யருள்புரிதல்
வேண்டுமென விண்ணப் பித்தார்;
அடியவரைத் திரட்டவந்த அருளண்ணல்
அவர்விருப்பிற் கிசைந்த மர்ந்தார். 36

அடுத்தநன்னுள் அதிகாலை தண்ணீரில்
அடியவரை அருளால் ஆட்டி
எடுத்தஅருட் சட்டமிதை என்றும்விடா
மற்போற்றி இமையோர் வாழ்த்த
உடுத்தகட லாடைஉல கினில்ஞான
நிலைகளைஒவ் வொன்றுய் எய்திக்
கடுத்தமன அழுக்ககற்றிக் கருணைமய
மாகுகஎன் றருள்செய் தாரால். 37

அன்புநிறை அடியவரை அருள்ஞான
நிட்டையினில் அமர்த்தி, அண்ணல்
பொன்புரைதம் திருக்கரத்தை அவர்சிரத்திற்
பூரணப்பே ரருளால் சூட்டி,
மின்புரைஇன் னருளாற்றல் உளும்புறமும்
மேவுகெனக் கருணை செய்து,
வன்பவமாம் பிணிவளரா வணம்அருளிப்
பேரின்ப மயமாக் கிட்டார். 38

அவர்முன்புரி தவத்தாலும், முன்னோர்கள்
ஆற்றியநற் றவத்தி னுலும்,
தவவொளிமிக் கவராக நனிபொலிய
வேண்டுமெனப் பரிவி னேடும்
புவனிமிசை ஆட்கொள்ளப் போந்தகுரு
பூரணப்பே ரருளி னுலும்,
நுவலரிய அருள்நிலையில் நிலைத்தடியர்
பக்குவமுற் றொளிர லானுர். 39

அருளண்ணல் கருணையினுல் அற்புதப்பே
ரானந்த நிலையை யெய்தித்
தெருள்மிகுநல் லுளங்குளிர உயிர்குளிரத்
தேவர்முனி வரர்கள் வாழ்த்தப்
பொருளினெடு பேதமின்றிப் பொருந்தியருட்
போதசுகம் துய்த்த பின்னர்
மருள்தவிர்க்க வந்தஅண்ணல் மலரடியைப்
பணிந்தினிது போற்ற லானுர். 40

குருநாதர் துதி

எல்லாமும் எனக்கருளும் ஏகபரம்
பொருளாகி இலகும் தேவே
நல்லார்கள் குழுபோற்ற ஞானநெறி
வழங்கியருள் நலஞ்சால் தேவே
பொல்லாஎன் னைத்திருத்திப் பூரணமாக்
கிடவிழையும் பொற்பார் தேவே
கல்லாரும் கற்ருரும் கனிவுற்றுக்
கருணைபெறப் புரியும் தேவே. 41

சொல்லாகி உரையாகிச் சொல்வோனுய்ச்
சொலற்குரிய பொருளு மானுய்
சொல்லாலிங் கெவராலும் சொலற்கரிய
பெரும்பொருளாய்த் துலங்கு கின்ருய்
கல்லாகி மண்ணுகி நீராகி
வளமாகிக் கலந்து நின்ருய்
அல்லாகி யெல்லாகி அருள்ஞான
வொளியாகி அமையும் தேவே. 42

வேதாந்த சித்தாந்த விளக்கமெலாம்
நீயாகி விளங்கு கின்ருய்
நாதாந்த மணிமன்றில் நடம்புரியும்
நாயகனுய்த் துலங்கு கின்ருய்
போதாந்தப் பொலிவாகிப் புண்ணியர்தம்
துணையாகி யிலங்கு கின்ருய்
மூதாண்ட கோடிகளை உண்டாக்கிப்
புரந்தருளும் மூலத் தேவே. 43

ஆனந்த வாழ்வருள அருள்ஞான
குருமணியாய் அமைந்தாள் தேவே
ஏனிந்தப் புவிக்குற்றேம் எனவுணர்ந்து
திருந்தியுய்ய இயக்கும் தேவே
கோனென்றுட் குறுகியகம் புறமனைத்தும்
காவல்புரி குணம்சால் தேவே
தேனென்று மெய்யடியார் உளத்தினித்துத்
திருவருள்செய் சீர்சால் தேவே. 44

கரமலரைச் சிரமிசைவைத் தருள்புரியும்
கருணைநிறை ஞானத் தேவே
வரமனைத்தும் இனிதருளி வாழ்விலொளி
வயங்கஅருள் வண்மைத் தேவே
புரமொருமூன் றைப்பொடித்துப் புனிதமிகப்
புரிந்தருளும் போதத் தேவே
தரமிகுநல் லடியர்தொழ இருடிநகர்த்
தலத்தொளிர்தண் ணளிசால் தேவே. 45

என்றுபல வாறுகத் துதித்தருளி
இதயமிசை அண்ணல் பொற்றாள்
நன்றுபதித் திருவிழியும் பொழிநீரால்
ஞாலத்தை நனையச் செய்துள்
ளொன்றியநற் களிப்பாலே உன்மத்தர்
போல்நின்றார் ஒப்பில் அன்பர்;
அன்றவரங் கடைந்தஉள்ள நிலைமையினை
யாவரறிந் துரைக்கற் பாலார்? 46

இவ்வண்ணம் அடியவரை இன்னருளுக்
காட்படுத்தி எம்போல் வாரைச்
செவ்வையுறத் திருத்தியருள் செய்யவந்த
தேசிகனார் செகமீ தின்னும்
எவ்விடத்தில் எவ்வடியர்க் கருள்புரிய
வேண்டுமெனும் எண்ணத் தோடும்
அவ்வடிய ரிடத்துப்பிரி யாவிடைபெற்
றருளுருவாய் நடக்க லானார். 47

அனைத்துமத சாரமென அமைந்தஅருட்
சட்டநெறி வகுத்த அண்ணல்
தனித்தபெருங் கருணையொடச் சட்டநெறி
முதன்முதலில் தரப்பெற் றிட்ட
இனித்தகுணம் மிகுமூப்பக் கவுண்டர்தவம்
என்நாவால் இயம்பற் காமோ?
சனித்தபயன் பெறஅவர்நற் றாள்பரவி
சாரும்இரு வினைதீர்ந் துய்வாம். 48

அண்ணலார் தமிழ்நா டடைதல்

ஆந்திரநன் னாட்டினைவிட் டிலக்கணம்அன்
பருள்மணமெங் கணும்ப ரப்பும்
திந்தமிழின் சுவைநிறைந்த திருநாட்டில்
தேசிகனார் வந்து சேர்ந்தார்;
சாந்தியுறு மாறடியர் அன்பரையெல்
லாம்தக்க பக்கு வம்செய்
வேந்தர்அருள் ஒளியருள்வார் எனஉணர்த்தல்
போற்கதிரோன் உதித்தான் விண்ணில். 49

அண்ணலைமுன் னேதரிசித் திருந்தஅடி
யவர்கள்அவ ரைக்கா ணாராய்
எண்ணியெண்ணித் தரிசனமெந் நாள்கிடைக்கும்
எனஎதிர்பார்த் திருந்திட் டார்கள்;
அண்ணலைக்கண் டறியாதார் அவர்சீரைக்
கேட்டறியா ரான பல்லோர்
திண்ணமுற இறைவன்குரு வாய்வருநா
ளினையெதிர்பார்த் திருந்தா ரன்றே. 50

அடியவரது ஆவல் நோக்கம்

நாட்டின்பல பாகத்தும் நனிகனிந்த
உளம்பலவும் குருவை நாடும்
நாட்டமுற்றுப் பரனருள்எந் நாள்குருவாய்
வந்திடுமோ என்று நாடத்
தேட்டமுற்ற அடியவரை அண்ணல்ஆண்
டருள்புரிநாள் நெருங்கச் சேய
தோட்டிதழ்த்தா மரைமலர்கள் சூரியனை
நாடுதல்போல் செம்மை பூண, 51

ஆன்மவர்க்கம் யாவும்தமை அறியாமற்
பக்குவமுற் றிலங்கும் போதில்,
மேன்மையெலாம் தரவல்ல மெய்ஞ்ஞான
அண்ணலிந்த மேதி னிக்கண்
ஆன்மநா யகனென்ன அன்புருவாய்
அருளுருவாய் அமைதி வேண்டி
ஆன்மப்பசி மிகுந்திருந்த அடியவர்பால்
சென்றருளாம் அமுதூட் டிட்டார். 52

தமக்கென்ன ஏதொன்றும் அணுவளவும்
சங்கற்பம் செய்தா ரல்லர்;
தமக்கென்னச் சுகமெதுவும் அணுவளவும்
தமதுளத்தில் விழைந்தா ரல்லர்;
தமக்கென்ன எப்பொருளும் அணுவளவும்
தாம்தேடிக் கொண்டா ரல்லர்;
தமக்கென்ன வாழாமற் பிறர்க்கென்ன
வேயென்றும் வாழ்ந்தார் அண்ணல். 53

### அடியவரைத் தேடும் அருமை

உடையவன்றன் அருள்செலுத்திச் சென்றவழி
அண்ணல்பல ஊர்க்குச் சென்றே
அடியவரை அருளால்ஆட் கொண்டசெயல்
அதிசயிக்கத் தக்க தாகும்;
அடியவராய் அருளண்ண லால்ஆளப்
பெறவேண்டும் என அமைந்தோர்
படியின்மிசை ஓர்ஊரில் அல்லதுபக்
கத்தூரில் இருந்தா ரல்லர். 54

நாட்டின்பல மூலைமுடுக் கினிலெல்லாம்
உளஊரில் நனிபி றந்து
வீட்டுநெறி யினையருளும் குருநாதர்
நல்வரவை விழையும் மேலாம்
நாட்டமுடன் நனிகனிந்த உள்ளமுடன்,
நகரத்தோ, சிற்றூர்க் குள்ளோ,
தேட்டமுறும் அவர்களுள்ள நிலையார்க்கும்
தெரியாத வண்ணம் வாழ்ந்தார். 55

இவர்களின்நற் கணக்கையெலாம் புள்ளியெடுத்
தினிதுடையோன் அண்ண லார்தம்
தவம்நிறையும் திருவுளத்தில் சரியாக
அமைத்துவைத்திட் டிருக்க வேண்டும்;
புவனிமிசை அந்தநல்ல திட்டத்தின்
படியண்ணல் போவார் ஓரூர்;
அவணுறைபல் லாயிரமக் களிலொருவர் 56
வீட்டிலரு ளொடுநு ழைவார்.

முன்பின்அறி யாதஅந்த வீட்டிலுள்ள
பலருள்இரண் டொருவர் உண்மை
அன்பினொடும் உடையவன்க ணக்கின்படி
வரவேற்றுள் ளார்வத் தோடும்
என்புருக உள்ளுருகிக் குருநாதர்
வந்துவிட்டா ரென்று போற்றி,
இன்பம்அருள் திருவடியைத் தேன்விழையும் 57
ஈக்களைப்போல் இறுகப் பற்றி,

அருளுருவாய் இவண்போந்த ஆசிரியப்
பெருந்தகையே, அடியேம் கொண்ட
மருளனைத்தும் தவிர்த்தருளும் மாண்புநிறை
தவமணியே, மறைகள் கூறும்
பொருளனைத்தும் புவிக்கெளிது போதிக்க
எழுந்தருளும் புனிதத் தேவே
தெருளனைத்தும் கூட்டுவிக்கும் உமைக்காண 58
யாம்செய்தவம் என்னே என்பார்.

அவர்களையாள் வதற்காக வேயண்ணல்
அங்குசென்றார் ஆத லாலே
அவர்களின்முன் வினைமுடிச்சை அருள்விழிக
ளாலறுத்து மேலும் கன்மம்
அவர்களைச்சூ ழாதிருக்க அருட்சட்ட
அநுட்டானம் உபதே சிப்பார்;
அவர்கள்எதிர் பார்த்தபொருள் கிடைத்ததென்றேற் 59
றன்புடனவ் வழிந டப்பார்.

அண்ணல்பினர் விடைபெற்றுக் கொண்டந்த
ஊரிலுளோர் அறிந்து கொள்ளா
வண்ணமந்த ஊரைவிட்டுப் புறப்பட்டுப்
பலஊர்கள் கடந்து செல்வார்;
வண்ணக்காட் சிகளுளபல் பதிகாணுர்;
வழிப்பாதை யெழிலை நாடார்;
எண்ணில்பல கல்தொலைவு கரடுமுர
டாம்வழியில் நடந்தும் செல்வார். 60

புகைவண்டிப் பாதையினில் உளதெந்த
ஊரென்னப் போனு ரல்லர்;
மிகநல்ல சாலையிலே உளதெந்த
ஊரென்ன விழைந்தா ரல்லர்;
தகுவசதி தங்குவதற் குள்ளநகர்
எதுவென்னச் சார்ந்தா ரல்லர்;
அகமகிழ்வொ டுபசரிக்கும் செல்வரெங்க
ணுளரென்ன ஆய்ந்தா ரல்லர். 61

எங்கேயோ ஒருமூலை யினிலிருக்கும்
சிற்றூருக் கினிது சேர்வார்;
அங்கொரன்பர் அருட்குருவின் வரவையவா
வோடும்எதிர் நோக்கி நிற்பார்;
பொங்குறுமன் பாற்பலநாள் பழக்கமுள்ள
உறவினரைப் போலே யண்ணல்
அங்குறுமவ் வன்பரொடும் அளவளவு
வார்; அவரா னந்தம் கொள்வார். 62

இறைவனரு ளுருவோடும் எழுந்தருளி
யுள்ளானென் றினிது ணர்ந்து
முறையொடும்ப ணிந்தேத்தி மெய்யன்பால்
போற்றியினி துபச ரிப்பார்;
துறையறியா திவணேங்கும் அடியேற்குத்
தூயநெறி யருள்வீர் என்பார்.
பிறவியெனும் பிணிதவிர்க்கும் சட்டநெறி
யினையண்ணல் உபதே சிப்பார். 63

ஜென்மசா பல்யத்துக் குரியஉயர்
திருநெறியீ திதைப்பே ணிட்டால்
கன்மமெலாம் கரைந்தொழியும்; கருணைமிக
நிறையும்;அருட் காட்சி தோன்றும்;
நன்மைபல வும்விளையும்; நாடும்நக
ரமும்திருந்தும்; ஞானம் வாய்க்கும்;
பொன்மலர்நன் மணம்பெற்றாற் போலஅருள்
வாழ்வமையும் என்பார் அண்ணல். 64

நன்றண்ணல் வாய்மலர்ந்து ஞானமொழி
மழையினிது பொழியுங் காலை
ஒன்றியஉள் ளத்தோடும் உட்கனிந்த
உயரன்போ டும்கேட் டன்பர்
என்றுமறி யாமகிழ்வொ டினிதந்த
அருளுரையை உச்சி மீதேற்(று)
அன்றுமுதல் அருட்சட்ட அநுட்டானம்
மேற்கொள்வார்; மகிழ்வார் அண்ணல். 65

அடுத்தபடி ஆட்கொள்ள வேண்டியநல்
லடியருள இடத்தை நாடி
இடுக்கணகற் றித்தூய இன்பம்அருள்
அண்ணல்புறப் படுவார்; இவ்வா
றுடுக்கியவைம் புலன்களொடும் உயர்ந்தஅருட்
பொலிவினொடும் அடியார் தம்மைத்
தடுத்தாளச் செலுமுயர் தயாநிறைவிங்
கொருநாவாற் சாற்றற் பாற்றோ? 66

கணக்கிலுயிர்த் தொகைக்கினிது கருணைபுரிந்
தருட்செங்கோல் செலுத்து மீசன்
பணக்காரர் பங்காள னா?ஏழை
பங்காள னா?என் பார்;நற்
குணத்தால்அன் பாற்கொள்கை யால்உயர்ந்தோ
ரேநல்லோர் என்பார் அண்ணல்;
எணத்தாலும் மொழியாலும் செயலாலும்
தீதில்லார் இனியோர் என்பார். 67

ஓமெழுத்தின் உட்பொருளை உள்ளபடி
யுணர்ந்து,தவ நிறைவு பெற்று
மாமயல்தீர்த் தன்பரெல்லாம் இறைவனருள்
மடுத்துய்ய வைக்கு மண்ணல்,
**'சாமிமச்சு வீட்டுக்கும் போகும், குச்சு
வீட்டுக்கும் போகும்' என்பார்;**
தூமறையின் முடிவுகண்டோர்க் கெவ்விடமும்
தூய்மையதாய்த் திகழு மன்றோ? 68

உடையவன்றன் திருவருளால் அண்ணலார்
சென்றுட்கொள் உண்மை யன்பார்
அடியவர்கள் தமைநோக்கி, அண்ணலா
ரேவியப்புற் றகம் குளிர்வார்;
**அடியவரை மணிமணியாய் இறைவன்கணக்
கெடுத்துள்ளான் அன்றோ? என்பார்;**
அடியவரும் அச்சிறந்த உண்மையறிந்
தகமகிழ்ந்து போற்று வார்கள். 69

அருட்குருவின் நல்வரவை அந்தந்த
ஆன்மாக்கள் முன்ஜென் மத்தில்
புரிந்ததவப் பயனாலே பூரணமாம்
அன்பொடெதிர் பார்ப்ப தண்ணல்
அருட்குறிப்பி னாலுணர்ந்து சென்றுட்கொண்
டருள்புரிந்தா ராத லாலே,
தெருள்மிகுமவ் வடியவர்பொன் அணிமுத்து
மணியென்னத் திகழ்வா ரன்றோ? 70

சட்டநெறி யினில்தேர்ந்த அடியாரில்லில்
அருளண்ணல் தங்கு வார்கள்;
சட்டஅடி யார்கள்பலர் அண்ணல்திருக்
கருத்தின்வணம் அங்கண் சார்ந்து
திட்டமுறப் பணிந்திறைஞ்சிச் சட்டநெறி
யினைப்பற்றித் தெளிவாய்ப் பேசி
மட்டில்பல சந்தேகங் களும்தீர்ந்து
மாணருள்பெற் றினிது செல்வார். 71

ஐயம்மனத் துடையஅடி யரைஏனை
யடியரைமெய் யன்பர் தம்மை
ஐயமறுத் தாட்கொள்ளும் உயர்ந்ததிருக்
கருத்தோடும் ஆங்காங் கண்ணல்
செய்யதிரு வருட்பாங்கால் அற்புதங்கள்
பலப்பலசெய் தருளு வார்கள்;
ஐயமறச் செய்ததன்றி பேர்புகழ்க்குச்
செய்ததன்றென் றறிதல் வேண்டும். 72

அவைகளை இரகசியமாய் உளத்துட்கொண்
டுய்கவென அண்ணல் சொல்வார்;
புவனியில்வே றெவரிடமும் புகலவொணு
தெனஅடியார்க் கறிவிப் பார்கள்;
அவர்கள்சொலா விடினும்அரு குள்ளபிற
ராலவைகள் வெளியாம்; இவ்வா
றிவண்புரிந்த அற்புதங்கள் எண்ணிலவாம்;
யாவும்சொலற் கெவரா லாகும்? 73

அருளாலே ஆளும் பெருமை [தெய்வத்தின் தோற்றம்]

அருள்கனிந்த அற்புதத்தெய் விகத்தோற்றம்
அண்ணலிடத் தமைந்து தோன்றும்;
இருள்விலக்கி ஒளிவிளக்கும் திருவிழிகள்
எவ்வுயிர்க்கும் கருணை நல்கும்;
பொருள்விளக்கும் புனிதஅருட் சட்டநெறி
புகல்திருவாய் பொலிந்து தோன்றும்;
தெருளளிக்கும் திருக்கரங்கள் திருவடிகள்
அருள்மயமாய்த் திகழு மாலோ. 74

அண்ணலார் அருளுருவைக் கண்டதுமே
எவர்மனமும் அவர்பாற் செல்லும்;
அண்ணலார் திருவுருவின் அங்கஅமைப்
பெவர்க்கும்அரு ளமைதி நல்கும்;
அண்ணலார் திருமுடியும் நீண்டமைதா
டியும்தவத்தின் ஆற்றல் காட்டும்;
அண்ணலார் அருளுருவின் தனிச்சிறப்பை
எழுத்துகளால் எழுதற் காமோ? 75

அண்ணலார் நடக்கும்போ தருகிருப்ப
வர்க்கும்அடி யொலிகேட் காதே;
அண்ணலார் திருவடியிந் நிலத்தினில்தோய்
கிறதோஎன் றையம் தோன்றும்;
அண்ணலார் அமர்கையிலும், அசைகையிலும்,
அருள்மொழிகள் அருளும் போதும்,
வண்ணமார் அருளுறுப்பெல் லாமியங்கும்
இன்பநிலை வரைதற் காமோ? 76

அருளண்ணல் இயக்கம்நட மிடுமயிலின்
நல்லியக்க மென்னத் தோன்றும்;
அருளம்ப லக்கூத்தன் ஆனந்தத்
திருநடனம் போலத் தோன்றும்;
அருளடியர் கண்டுகளிப் புறச்செய்யும்
தன்மையதாய் அமைந்து தோன்றும்;
அருள்விழைநல் லன்பர்அகத் தினையீர்க்கும்
ஆற்றலுடைத் தாயும் தோன்றும். 77

குழந்தையின் குணம்

வெகுதூரத் தினிற்காணும் போதேயண்
ணலின்தோற்றம் மகிழ்வை யூட்டும்;
மிகநெருங்கி நோக்கின்குழ வியின்குணமே
விளங்கியுய ரின்பம் நல்கும்;
தகவுமிகும் குழந்தைகளின் நோக்கிலுள
பரிவவர்பால் சுரந்து பாயும்;
அகமலர்ச்சி முகமலர்ச்சி அன்பமைதி
அருளினிமை அனைத்தும் தோன்றும். 78

கள்ளங்கப டற்றசிறு மியர்சிறுவ
ரோடுவிளை யாடுங் காலை
உள்ளமிசை யெய்துவகை அண்ணலருட்
டிருமுன்னர் உளபோ தெய்தும்;
மெள்ளஅண்ணல் திருவடியைத் தீண்டிடின்நித்
திக்குமின்பம் மிகுந்து தோன்றும்;
வள்ளலருள் திருவார்த்தை கனிந்தகளிப்
பினைவளர்க்கும் தன்மைத் தாகும். 79

### கனியினும் இனிமை

அண்ணல்உரைத் திடுமொழிகள் அருள்திருவா
சகமாகும்; ஆருயிர்க்குத்
திண்ணமுற உறுதிபயக் கும்சிறந்த
உண்மைகளைச் செப்பும் போதும்,
வண்ணத்தமிழ் மொழியறியா மக்களும்பு
ரிந்துகொளும் வகையில் நன்றே
அண்ணல்மிக மிகத்தெளிந்த தேன்மொழியை
யேயென்றும் அருளுவாரால் 80

நல்லகுரல் குழைகுயிலின் குரல்குழையோ,
நல்வீணை நடுநரம்போ,
சொல்லினிமை ஒலியினிமை சொல்லுமுயர்
பொருளினிமை யாவும் நல்க
வல்லதனிக் கருணையமைப் போ,என்ன
மக்களெலாம் வியக்கும் வண்ணம்
துல்லியமாய்த் தீஞ்சுவைசால் சொற்களையே
அண்ணலருள் திருவாய் சொல்லும். 81

சொல்லளவில் இனிமையிருந் தாற்பேதை
யுளங்களையே கவர்தல் கூடும்;
நல்லபெரும் பயனேதும் அத்தகைய
சொற்களென்றும் நல்கா தேகும்;
வல்லபல அறிஞரையும் ஆட்கொள்ள
வந்தமன்ன ரான அண்ணல்
சொல்லினிமை இன்பம்தரும் நடத்தையுடைத்
தூயவராய்த் திகழ்ந்திட் டாரால். 82

அண்ணல்திரு வருளுருவைக் கண்டவுட
னேயடியார் அகம கிழ்வர்;
அண்ணல்திரு வார்த்தைகளைக் கேட்டதுமே
அடியார்கள் அகம் குழைவர்;
அண்ணல்திரு வடிமலரைப் பணிந்ததுமே
அடியவர்அன் புருவ மாவர்;
அண்ணல்அருள் நெறிபேணி அடியவர்கள்
அருள்மயமாய் அமைவ ரம்மா. 83

அருட்கருணைத் திருவுருவாய் அவனிமிசை
அண்ணலமைந் திருந்தார்; தூய
பொருட்டருநல் லாசிரியர்க் குரியஇலக்
கணம் அவர்பால் பொலிந்த தங்கண்;
தெருட்பெறச்சென் றடைந்(து)அவர்பால் அளவளா
வும்பேறு பெற்றோர், அண்ணல்
அருட்கனிவா சகமும் இன்பம் நிறைகுணமும்
மறந்திடுதற் காகா தம்மா. 84

பழஅடியார் இன்றுமண்ணல் அன்புகனி
செயல்களையும். பயன் நிறைந்து
பழுத்தஅருள் மொழிகளையும், உன்னியுன்னிப்
பாகாக உருகு வார்கள்;
விழுமியபே ரின்பம்அருள் வள்ளலென
ஏக்கமுற்று விம்மு வார்கள்;
பழகியபோ தவர்புரிந்த செயல்செம்மை
பகர்ந்துமகிழ் வெய்து வார்கள். 85

அவர்மொழிந்த அருமைமொழி போற்பேசி
அகமகிழ்வுற் றுருகு வார்கள்;
அவர்நடந்த தேபோல நன்குநடந்
தனைவரையும் மகிழ்விப் பார்கள்;
அவரைப்போன் றன்பும்அரு ளும்பெருகச்
செய்திடுவோர் அவனி மீதில்
எவருளர்?பெற் றோர்தனயர் தமர்பிரியர்
பிறர்யார்க்கும் இயலா தென்பார். 86

கைம்மாறு கருதாக் கடமை

குருநாதர் தரிசனத்திற் காகஇந்தக்
குவலயத்தில் தவம்கி டந்த
அருளடியர் தமையாளும் அருங்கடமை
யாற்றவந்த அண்ணல் அவ்வா
றருளால்ஆ ளப்பெற்றா ரிடமிருந்தோ
மற்றன்ப ரிடமி ருந்தோ
பொருளேதும் அணுவளவும் எதிர்பார்த்தா
ரல்லர்;பொருள் பெற்றா ரல்லர். 87

அடியவர்கட் கவர்மொழிந்த நல்லுபதே
சங்களிலொன் றரைக்கா சேனும்
படியிலவ சியமின்றிச் செலவழித்த
லாகாதென் பதுவே யாகும்;
அடியவர்கள் அண்ணல்பொருட் டாயுமின்றி
யமையாத சுருக்க மான
படியின்றி யளவுமிஞ்சி எச்செலவும்
செயற்கண்ணல் இசைந்தி டாரால். 88

குருபாத காணிக்கை கொடுத்திடுதல்
வேண்டுமென எதுவும் கேளார்;
அருஞ்சீடர் குழுவெனக்கொண் டவர்வாயி
லாகப்பொருள் பறித்தல் செய்யார்;
தருமகா ரியங்களுக்குப் பொருள்மிகவும்
தருகவெனப் பெற்றுக் கொள்ளார்;
பொருள்பெறுதல் எனும்ஒன்றைக் கனவினிலும்
கருதாத புனிதர் அண்ணல். 89

அடியவர்கள் அண்ணலரு ளால்மக்கட்
காற்றிவரும் நன்மைக் காகப்
படியினிற்கைம் மாறென்ன ஏதுமெதிர்
பார்த்திடலா காதென் பார்கள்;
அடியவர்க ளோடண்ணல் தங்கிடும்போ
தாற்றும்உப சாரந் தன்னில்
அடியவர்தம் உயரன்பை நோக்குவர்;ஆ
டம்பரங்கள் ஆகா தென்பர். 90

மிகுபேரன் பால்அடியர் ஆரேனும்
மிக்கபொருள் விரையம் செய்து
மிகப்பெரிய வரவேற்போ மற்றவையோ
செயமுயன்றால் வெகுள்வார் அண்ணல்;
தகவுமிகு குணமெனும்குன் றேறிநின்றார்
சினம்தாங்க லரிதே யென்ப(து)
அகமுறநன் றடியவரப் போதுணர்வர்;
அருளாள ரியல்பீ தன்றோ? 91

மிகஎளிய உணவருந்தி, மிகஎளிய
உடையுடுத்தி, விளங்கி, யாரும்
சகமிசையிவ் வாறிருக்க வேண்டுமென்றே
இனிதண்ணல் சாற்றி னார்கள்;
அகமகிழ்வொ டோரூர்விட் டோரூருக்
கண்ண லுற்றா ரென்றால், தூய
அகமுடை நல் லடியவரை அருளாலே
யாட்கொள்ளும் பொருட்டே யாகும். 92

அடியவர்க ளிடத்திருந்து பயணத்திற்
கென்றுபொருள் அணுவும் கொள்ளார்;
அடியவர்கள் இலம்விட்டுப் புறப்படுமுன்
அவர்தம்கைப் பொட்ட ணத்தின்
முடியினைத்தம் முன்னரவிழ்க் கச்சொல்லி
வத்திரத்தை யுதறி மீண்டும்
முடிந்திடச்சொல் வார்;பொருளை முடிந்தெவரும்
அதில்வைக்கா வண்ணம் பார்ப்பார். 93

சாமிபொரு ளினைத்தவறா யாரேனும்
எடுத்துளரோ என்ன வுன்னிச்
சாமியந்தப் பொட்டணத்துட் பார்த்ததெனச்
சாற்றுவர்வே டிக்கை யாக;
சாமிபுறப் படுகையிலன் பாலடியர்
வண்டிகட்டி யனுப்பி வைத்தால்,
சாமியதைத் தடுக்காதன் பாலமர்ந்து
மற்றோரூர் சார்வார் நன்றே. 94

அண்ணலுக்குச் செலவுவைத்த லாகாதென்
றடியரெண்ணி, முன்னர் ஓடி,
அண்ணல்செலும் புகைவண்டிப் பயணத்திற்
காம்சீட்டு வாங்கி வைத்தால்:
அண்ணல்மறுக் காதருளால் அச்சீட்டைப்
பயணத்திற் கேற்றுக் கொள்வார்;
அண்ணல்அடி யார்க்குவைத்த பொருட்செலவீ
தன்றிமற்றை யேது மில்லை. 95

பொன்ஞல்நற் பயன்அந்தப் பொன்படைத்தோற்
குண்டந்தப் பொன்ப டைத்தோன்
தன்ஞல்அப் பொன்னுக்குப் பயனேது
மில்லையெனச் சாற்ற லேபோல்,
மன்ஞன அண்ணலரு ளாலடியர்
பெறற்கரிய பேறு பெற்ருர்;
அன்ஞருய்ந் திடல்நோக்கி அருளண்ணல்
ஆனந்த முற்ரு ரன்றே 96

கைம்மாறு கருதாமற் கடமையினை
யாற்றவந்த கர்த்தர், சூழும்
பொய்ம்மாயப் பிணக்கொழித்துப் புவனிமிசை
புனிதநெறி புகட்டி, யாரும்
அம்மாவென் றதிசயிக்க அடியவர்தம்
துயர்நீக்கி யருளா லாள்வார்;
நம்மாலிங் கியல்வதுவோ ஞாலமிசை
யவர்சிறப்பை நவில்வ தம்மா. 97

கடையேற்றும் உறுதி

தேர்வடத்தை நாம்கையாற் பிடிக்கவேண்
டியதேநம் கடமை யாகும்;
தேரிலமர்ந் திருக்கும்உடை யவன்இனிதே
இழுஇழுஎன் றூக்கம் ஊட்டித்
தேரைமிக நனிசெலுத்தி விரைவிற்கரை
சேர்ப்பான்என் றண்ணல் சொல்வார்;
சீரியசட் டத்தடியர் தமைக்கரைசேர்த்
திடஇயலும் எனும்எண் ணத்தால். 98

ஓரளவாம் சிறுசிறுவெண் கூழாங்கற்
களையண்ணல் ஒண்கை யிற்கொண்
டேருறமற் ருெருகைக்கு மாற்றிக்கொண்
டேயிருப்பர்; இரவு றக்கம்
சீருறக்கொள் போதவற்றைத் தலையணையின்
கீழினிதே செருகி வைப்பர்;
நீராடச் செல்லும்போ தருகுள்ள
அடியரிடம் கொடுத்து வைப்பர். 99

பத்திரமாய் நழுவாமற் பாதுகாத்
திடல்வேண்டும்; பாரி லீதே
சொத்திந்தச் சாமிக்கென் றண்ணல்விளை
யாட்டாகக் கூறு வார்கள்;
மற்றெக்கா லத்திலும்இம் மணிகள்கரத்
தோமடியி லோயி ருக்கும்
சித்தத்துணி வோடும்அடி யார்ஒருவர்
அண்ணலிடம் சென்று கேட்டார்; 100

எதற்காகச் சாமிஇந்த மணிகளைக்கு
லுக்கிஎண்ணிக் கொட்டு தென்றூர்;
அதைக்கேட்ட அண்ணல்இவை கொண்டுடையோன்
கணக்கெடுக்கு தென்று தூய
உதட்டிலரும் பிடும்புன்னகை யோடினிதே
உரைத்தார்;அக் கணக்கை யெங்ஙன்
இதமொடண்ணல் அறிந்தாரோ? என்பதடி
யார்க்குவியப் பாயி ருக்கும். 101

இன்னஇன்ன காலத்தில் இப்படியிப்
படிநடக்கும் என்ப தெல்லாம்
முன்னரே யண்ணலுக்குத் திட்டமா
கத்தெரிந்தே யிருக்கும் போலும்!
இன்னலெந்த வகையிலடி யார்க்கெய்தி
னுலுமச்சம் ஏது மின்றி
இன்னலெலாம் ஒருநொடியில் மாற்றியடி
யார்க்கின்பம் ஊட்டி யாள்வார். 102

சாமிஉட னிருந்துவிட்டால் சாமான்ய
அடியவரும் எதற்கும் அஞ்சார்;
சாமிவிழி யெதிரினிலி ராவிடினும்
உள்ளத்துள் இருப்ப தோர்ந்து.
பூமிமிசை கடுங்குடும்பத் தொல்லைகளோ
இடர்ப்பாடோ நேர்ந்த போதும்,
சாமிசட்டத் தினிற்சிறிது தேர்ச்சியுற்ற
அடியவரும் தளர்வ தில்லை. 103

எத்தனையோ ஆபத்தை நலக்குறைவை
இடர்ப்பாட்டை நீக்கி யண்ணல்
இத்தரையில் எளிதினிற்காத் தருளுமுண்மை
இனிதிங்சனு பவித்த அன்பர்,
சித்தமிசை சிறிதுமச்சம் கொள்ளார்கள்;
திரண்டஅண்டம் புரண்டிட் டாலும்,
அத்தனருள் நிச்சயமாய்க் காக்குமென
அமைதியுடன் விளங்கு வார்கள். 104

எவராலும் மீட்கமுடி யாதகடுஞ்
சூழ்நிலையி லிருந்தும் மீட்ட
தவராஜர் கைம்மாறு தரையின்மிசை
சிறிதும்எதிர் பார்த்தா ரல்லர்;
பவம்நீக்கிப் பேரின்ப முத்தியையும்
கூட்டுவிப்பன் பரமன்;நீங்கள்
தவமான சட்டநெறி தவருமல்
நடப்பீரென் றுபதே சிப்பார். 105

அண்ணலிவ்வா றுறுதியுடன் அன்புமொழி
கூறிடவும், அடியா ரெல்லாம்
திண்ணமுற வேநம்பி வாழ்ந்தார்கள்;
இம்மைமறு மைக்கி டுக்கண்
நண்ணின்அவை அனைத்தினின்றும் நிச்சயமாய்க்
காப்பர்குரு நாதர் என்ற
எண்ணம்அடி யவரிதய கமலத்தில்
திடமாக இருக்கும் நன்றே. 106

அற்புத அருளாட்சி

அடியவரை ஆட்கொண்ட படிதிருவு
லாச்செய்து வந்த அண்ணல்
படியில்நடத் தியசிறந்த அருட்செயல்கள்
பலஇன்றி யமையா தாகும்;
நொடியிலருள் கணபதியின் ஆலயங்கள்
நூதனமாய்ப் பலஅ மைத்தார்
குடியெனமுன் னேன்அமர்ந்த கோயில்பல
வற்றைநனி புதுப்பித் திட்டார். 107

விடியலைந்து நாழிகைமுன் படுத்துறங்கும்
அடியவர்பால் விரும்பிச் சென்று
முடிவிலுண்மை அன்புடனும் முறுவல்தவழ்
முகத்துடனும் நீரா டற்குப்
படியிலெழுப் பிடும்அருமை அன்பொடருள்
பழுத்தபெருந் தன்மை யின்றும்
அடியர்மனத் தினித்துநல்வா யினில்மணந்து
கண்ணிற்கனி கின்ற தம்மா. 108

அண்ணல்திரு வருளாற்பல் லாயிரமாம்
அற்புதங்கள் நடந்த வேனும்
நண்ணுமவற் றிற்சிலநா றேவெளிக்குத்
தெரிந்தவென நவில லாகும்;
எண்ணியவற் றினிவீது பெரிதீது
சிறியதென இயம்ப லாகா;
அண்ணலடி யாரறிந்து களிக்கச்சில
அற்புதங்கள் நவில்வோ மிங்கே. 109

அடியவர்அல் லாப்பிறரும் ஆண்டவர்தண்
ணருளாற்றும் அற்பு தங்கள்
படியின்மிசை சிலவற்றை யறிவதனுல்
பலஅடியார் மூலம் கேட்டு,
மடியும்மிடி யும்தவிர்த்து மாண்பருள்நற்
சட்டநெறி மகிமை யோர்ந்து,
நெடியபிற விக்கடலைக் கடக்கவழி
காண்பரன்பில் நிலைத்து நன்றே. 110

## செட்டி நாடு

ஆந்திரநன் னுட்டினைவிட் டருந்தமிழின்
வளம்கொழிக்கும் நாட்டிற் போந்தே
மாந்தரினம் போற்றுசெல்வம் மிகத்திரட்டித்
தானதரு மங்க ளாற்றிச்
சாந்தியுறத் திருக்கோயிற் பணிபுரிந்து
தக்கசிவ பக்தி பூண்டோர்
வாழ்ந்துவரும் சிறந்தசெட்டி நாட்டிலண்ணல்
மாண்கருணை வடிவாய்ச் சேர்ந்தார். 111

கடல்கடந்து சென்றுபல கவின்மிக்க
பொருள்விற்றுக் கனகம் வைரம்
புடவிபுகழ் நவமணிகள் முதலான
பொருள்திரட்டிப் புகழ்பெற் றோங்கி
உடையவனும் சிவன்பாதம் உவப்பொடும்போற்
றித்தாங்கள் உறும்தே யத்தும்
கடவுளுணர் வினைப்பெருக்கும் வணிகர்குலம்
அந்நாட்டிற் கவினுற் றோங்கும். 112

தானதரு மம்பெருக்கி அருட்பணிகள்
பலப்பலவும் தகவோ டாற்றி
மானுடுக்கை மழுசூலம் கொளும்சிவனார்
முருகரொற்றை மருப்பி னார்க்கு
வானவரும் மண்ணவரும் வாழ்த்தநல்
விழாக்கள்பல மாண்போ டாற்றிப்
போனகம்அன் பர்க்கருத்திப் பொலிவுடன்வாழ்
அவர்பெருமை புகலற் காமோ? 113

கண்டரமாணிக்கம்

சிறப்புமிக உடையந்த நகரத்தார்
திருமரபில் தோன்றி வாழ்ந்த
அறப்பெருமை மிக்கஇரு நங்கையரை
அருளண்ணல் ஆண்டு கொண்ட
சிறப்பினைஇச் சிறியேன்றன் ஒருநாவாற்
செப்பலரி தெனினும், அண்ணல்
திறத்தவர்கள் கொண்டபக்தித் திறம்போற்றல்
கடமையெனச் செப்ப லுற்றேன், 114

அருட்சட்டத் திருவாயி லாயொளிரும்
அதிகாலை நீராட் டத்திற்
குரியநல்ல நேரமதில் உளமலர்போல்
உவகையொடு மலர்வ தாயும்
அருளண்ணல் எழுந்தருள்பீ டமதாயும்
உளதாம ரைப்பூப் பேர்கொள்
திருவுடைப்பங் கஜம்கமலம் எனத்திகழும்
செம்மனத்தர் இருவர் வாழ்ந்தார். 115

அம்மையார் இருவருமே அடுத்தடுத்த
வீட்டினராய் அமைந்த தாலே
செம்மையாய் இல்லத்துப் பணியனைத்தும்
செய்துமுடித் திட்ட பின்னர்
மும்மைமலம் நீக்கியருள் முன்னவனார்
அருள்நூல்கள் வாசிப் பார்கள்;
எம்மையிலும் துணையாம்அவ் வேரம்பன்
அருட்பெருஞ்சீர் இயம்பி வாழ்வார். 116

சதுர்த்திவிர தம்போன்ற நல்விரதம்
தக்கபடி போற்று வார்கள்;
அதுஇதுஎன் றலையாமல் அமைதியுடன்
அருள்நாடும் மனத்த ராகி
மதகளிற்று முகன்அருளால் வந்தகன
நிகழ்ச்சிகளை வாழ்வின் கண்ணே
இதமுறமுன் னேன்புரிந்த கருணையினை
இயம்பிமகிழ் வெய்து வார்கள். 117

அத்தகுநற் பக்குவம்சால் அடியவரை
ஆட்கொளவே அருளாற் போந்த
கர்த்தரெனும் குருபரனார் அவர்களுறை
கண்டரமா ணிக்கம் சேர்ந்தார்;
அத்திமுகன் அண்ணல்வரு முன்னிரவில்
இருவருக்கும் காட்சி நல்கி,
மெத்தபரி வோடும்ஒரே வகையாக
அருள்விளக்கம் இனிது தந்தார். 118

ஒருபெரியார் ஒளியுருவொ டருள்வர
வாத்தியங்கள் ஒலிக்கச் சின்னம்
அரியபுகழ் முழக்கஅடி யவரொடுலா
வருவதுபோல் தோன்ற,அண்ணல்
பெரியவெள்ளிக் குடம்கரத்தில் ஏந்தியவண்
ணம்போந்து பிரியத் தோடும்
இருவரையும் அழைத்தந்தக் குடத்திருந்த
அமுதுவழங் கியதாய்க் கண்டார். 119

இருவரும்உண் டதுபோலும் கண்டனர்;அவ்
விருவருமே மறுநாள் சந்தித்(து)
அரியஇந்த நிகழ்ச்சியினைக் கூறிக்கொண்
டகமகிழ்வு பூத்தி ருந்தார்;
திருமெயழ கப்பசெட்டி யார்அழைப்பிற்
கிணங்கியந்தத் திருவூ ருக்கே
வருகைபுரி அண்ணலந்த வழியாக
ஊர்வலமாய் வருவ தோர்ந்தார். 120

வாழைகமு குகள்நாட்டி மாவிலைத்தோ
ரணம்நாற்றி வளம்சால் தெங்கின்
பாளைகனி வகைகள்மலர் மாலைபல
நனிதூக்கிப் பலதீ பங்கள்
சூழவண்ணக் கோலமிட்டுத் தோகையரும்
ஆடவரும் சூழ்ந்து நின்று
வாழ்ககுரு நாதர்என வாத்தியங்கள்
ஒலிக்கஅண்ணல் வருதல் கண்டார். 121

இரவுகன வினிற்ருங்கள் கண்டஅதே
ஒளிமிகுந்த இன்மு கத்தை
அருளுருவைக் கண்டிவர்கள் இருவருமே
அதிசயித்தன் புருவ மானர்;
திருவடிக ளிற்பணிந்து வணங்கினர்; மட்
டில்லாநற் செம்மை பூண்டார்
இருவரும்முன் செய்ததவம் பலித்ததென
இயம்பரிய இறும்பூ துற்ருர். 122

பசிமிகுந்த ஒருவன்உண விடும்தூய
வள்ளலைப்பார்த் திட்டாற் போலும்
கசிவுறுகண் ணீர்த்துளிகள் நிலத்தில்விழக்
கருணையுரு வான வள்ளல்
சுசிமிகுந்த திருநோக்கை அருட்பொலிவைக்
கண்டினிது தொழுது நின்ருர்;
பசியறிந்தின் னருளமுது பகிர்ந்தளிக்கும்
பரர்அவர்தம் நிலையைக் கண்டார். 123

ஓம்பொருளொ டொன்றியுயிர் களைப்புரப்போர்
அவர்கள்உளப் பக்கு வத்தை
மேம்படமுற் பிறவிகளில் அவர்கள்புரி
நல்வினையின் விளைவை நோக்கி,
ஆம்பரிசி னல்அருட்கண் ணேக்கருளி,
அருளுளத்தால் அவர்க ளுக்குத்
தீம்பதமார் அருளமுதம் கொடுத்(து)உவந்தார்
சென்மவிடாய் தீர்வ தற்கே 124

திருமெயழ கப்பசெட்டி யாரிலத்திற்
சேர்ந்தண்ணல் இருந்த போதும்
இருவருமே சென்றண்ணல் அடியார்கட்
கியம்புசட்ட நெறியின் மாண்பைப்
பெருமகிழ்வொ டினிதுசெவி மடுத்திவர்நம்
பிறவிதவிர் பெருமா னென்றும்
அருமையுற அவர்அருளும் சட்டநெறி
அவனியின்கண் உயர்ந்த தென்றும், 125

அருள்துணையா லுணர்ந்தன்றே அருட்சட்ட
நெறிபேணத் தொடங்கி னர்கள்;
ஒருவிளக்கு பலவிளக்காய் ஒளிதரல்போல்
இவர்கள்நனி விளங்கி னர்கள்;
அருள்மிகுந்த செந்நெறியில் இவர்கள்நடந்
தருள்நலங்கள் எய்தக் கண்டோர்
இருள்படர்ந்த நெறிநீங்கிச் சட்டநெறி
பேணிஇன்பம் எய்த லானர். 126

திவ்யகுண அழகப்பச் செட்டியார்
அன்பழைப்புக் கிணங்கி யண்ணல்
அவ்வூரிற் பிறிதொருகால் எழுந்தருளி
அவ்வீட்டில் இருந்த காலை
அவ்வூரில் விஷபேதி கண்டிடஅந்
நோயுற்ற பலர்வந் தண்ணல்
செவ்வியபே ரருளாலும் சட்டநெறி
யாலும்பிணி தீர்ந்து சென்ருர். 127

செட்டியார் வீட்டருகில் பிணியாளர்
வந்துபிணி தீர்ந்து செல்லும்
திட்டமிது நன்றல்ல என்றெண்ணி
ஊர்க்குக்கால் கல்தொ லேவில்
இட்டமொடைங் கரமூர்த்தி யினையமைத்தவ்
விடத்தண்ணல் சென்று தங்கி
மட்டில்பலர் பிணிதீர்த்து மாணருளை
வழங்கியருட் பணிசெய் திட்டார். 128

பிணியாளர் களும்அவர்க ளுடன்வந்தா
ரும்தங்கி யிருத்தற் காக
எணில்பலகொட் டாரங்கள் அமைக்கப்பெற்
றன;ஆடு மாடு கட்கும்
பிணிகடுமை யாயுறின்அண் ணலின்பாலுற்
றவராணை பிறக்கும் வண்ணம்
கணபதியை வலம்புரிந்து கருணைநலம்
பெற்றுமனம் களித்துச் செல்வார். 129

அண்ணலார் அப்பதியி லிருந்துசென்ற
பின்னரும்அவ் விடத்தில் மக்கள்
அண்ணலார் பெயரோதி நீறணிய
அற்புதங்கள் நடக்கு மென்றால்,
அண்ணலார் அருட்பெருமை அளந்துரைத்தற்
கியல்வதுவோ? அடியா ரெல்லாம்
திண்ணமுற எந்நாளும் எண்ணியெண்ணிச்
சிந்தைகரைந் துருகு வார்கள். 130

கீழச்சிவல்பட்டி

ராமநா தப்பெயர்கொள் புரம்மாவட்
டத்திருப்பத் தூர்வட் டத்தில்
நாமமார் கீழச்சிவல் பட்டிமெய்யம்
மையாச்சி நயனப் பார்வை
பூமிமேல் தெரியாமற் போயிற்று
வயதறுப தவர்க்கி ருக்கும்
தீமைசால் வலிநயனம் நான்காண்டாய்க்
கொடுத்துவரச் சிந்தை நொந்தார். 131

அண்ணல்பதம் பணிந்திறைஞ்சி யருள்புரியு
மாறம்மை குறையி ரக்கக்
கண்ணிரண்டின் மீதண்ணல் கருணையுடன்
திருவிரலால் தடவித் தந்து
திண்ணியநல் லருட்சட்டந் திருநெறியை
இனிதேற்கப் பணித்திட் டார்கள்;
கண்வலிமுற் றும்நீங்கிப் பார்வையொரு
வாரத்தில் தெரிந்த தம்மா. 132

அற்புதமீ தற்புதமென் றடியவர்கள்
ஆனந்த மெய்தி னுர்கள்;
நற்பொலிவார் பார்வையொடவ் வம்மையார்
நன்றிருப தாண்டு வாழ்ந்து
பொற்புமிகு சட்டநெறி போற்றியுடை
யவன்பாதப் போதிற் சேர்ந்தார்;
உற்பவம்ம ரிப்பகற்றி யடியரையாள்
அண்ணலொண்சீர் உரைக்கற் பாற்ரூே? 133

அவ்வூரில் சிகப்பியாச் சிப்பெயர்கொள்
அம்மையார் காச நோயால்
எவ்வமுற்றண் ணலேவணங்கித் திருவருட்சட்
டம்பேணி இன்னல் நீங்கிச்
செவ்வையுறச் சட்டஅநுட் டானத்தில்
தீவிரமாய்த் திகழ லுற்ருர்
இவ்வம்மை யினேயெவரும் ரெட்டிபட்டி
யாச்சியென அழைக்க லானுர். 134

## அண்ணலார் மதுரை செல்ல விழைதல்

தண்ணளி மிகுந்து தாலம்வா முயிர்கள்
தம்துயர் தவிர்த்தருள் புரியும்
அண்ணலார் உடையோன் அருள்உணர்த் தியவா
ருலவாய் சென்றிட நினேந்தார்;
வண்ணமார் காட்சி பலப்பல காட்டி
வண்பெருங் கோயிலேக் காட்டி
மண்ணினில் வாழ மாணரு ளெய்த
உதவிய மாண்பினே நினேந்தார், 135

அங்கயற் கண்ணி யம்மையும் சொக்க
நாதரும் அருள்புரிந் ததுவும்
பொங்குநீர் வைகைக் கரையினில் ஞான
பூரணர் காட்சிதந் ததுவும்
அங்குறை மக்கள் அணியெனத் திரண்டு
பிணிகுறை தவிர்ந்துசென் றதுவும்
கங்குலும் பகலும் அறிகிலா நிருவி
கற்பம்முன் தொடங்கலுற் றதுவும் 136

அண்ணலார் திருவுள் ளத்திலொவ் வொன்றுய்த்
தோன்றிட அருட்பரி பூர்ணர்
தண்ணளி யென்றும் தழைந்தருட் சட்டத்
தனிப்பெருஞ் சிறப்பினை உலகில்
திண்ணமாய் விளக்கத் தக்கது மதுரைத்
திருநகர் எனஉடை யோன்றன்
தண்ணரு ளுணர்த்த மதுரைமா நகரம்
சார்ந்திடத் திருவுளம் கொண்டார். 137

## அடியவர் ஆர்வம்

அமுதம்நன் றுண்டோர் வேறென்றும் நாடா
தமுதமே நாடுதல் போன்று
சுமுகன்தண் ணருளை மடுத்தினி தளித்துத்
தூய்மையும் மேன்மையும் அருளும்
அமுதம்நேர் குணம்சால் அண்ணலார் மீண்டும்
அணிமது ரைக்குறு வாரோ
அமிதமாம் கருணை பொழிந்தருள் வாரோ
என்றெதிர் பார்த்தனர் அடியார். 138

## வேறு

அண்ணலைமுன் னேதரிசித் திருந்தஅடி
யவர்கள்அவ ரைக்கா ணுராய்
எண்ணியெண்ணித் தரிசனம்எந் நாள்கிடைக்கும்
எனஎதிர்பார்த் திருந்திட் டார்கள்
அண்ணலைக்கண் டறியாதார் அவர்புகழைக்
கேட்டறியா ரான பல்லோர்
திண்ணமுற இறைவன்குரு வாய்வருநா
ளினையெதிர்பார்த் திருந்தார் அங்கண். 139

## மதுரையின் மாட்சி

மூர்த்தியருட் பெருமையினுல் சிலஊர்கள்
மூதுலகிற் சிறப்பை எய்தும்
தீர்த்தம்அமை பெருமையினுற் சிலஊர்கள்
செழும்புவியிற் சிறப்பை யெய்தும்
சீர்த்திமிகு க்ஷேத்திரவி சேடத்தாற்
சிலஊர்கள் சிறப்பை எய்தும்
மூர்த்திதலம் தீர்த்தமெனும் மூன்றினிலும்
சிறந்ததருள் மதுரை மூதூர். 140

சிறப்புமிக உடையந்தத் தென்மதுரை
நகரினில்வாழ் பேறு பெற்ருேர்
பிறப்பிறப்பை நீக்கவந்த இருடிநகர்ப்
பெருமானுர் திருவ ருட்கும்
குறக்கொடியை முருகனுக்கு மணம்முடித்த
கோமான்றன் பேர ருட்கும்
அறத்திலுயர் அருட்சட்ட வாழ்வினுக்கும்
உரியோராய் அமைந்தார் பல்லோர். 141

## அண்ணலே அழைக்க நாடுதல்

அன்றுமின்றும் என்றும்பரி பூர்ணர்திரு
வருள்வைகை யங்க ரைக்கண்
நன்றுவிளே யாடியவண் ணம்திகழ்வ
தாலங்கு நண்ண உன்னும்
குன்றுநிகர் குணத்தண்ணல் தமிழ்நாட்டி
லுளசெய்தி கூறக் கேட்டு
நன்றவரை மதுரைக்கழைப் போமென்றவ்
வூர்மக்கள் நாட லுற்ருர். 142

கீழச்சிவல் பட்டியிலுள் ளாரென்னும்
செய்திநன்று கேட்ட பின்னர்
வாழைபலா மாவாதி கனிவகைகற்
கண்டுநறு மாலே யேந்தி
வாழிஇரு டியர்பட்டிச் சாமியெனும்
வாழ்த்துரையொ டேகி யண்ணல்
கேழ்கிளர்தாள் மலர்பணிந்து போற்றியுயர்
அன்போடும் கிளத்த லுற்ருர். 143

எங்களையாட் கொண்டருள இப்புவிக்கண்
　　எழுந்தருளும் குருவே எங்கும்
தங்குமிருள் நீக்கிஉடை யோனருளாம்
　　பேரொளியைத் தரும் பிரானே
திங்களிலா வான்போலத் தங்கள்தரி
　　சனமின்றித் திகைத்து நின்றேம்
பொங்குமகிழ் வோடுமது ராபுரிக்குப்
　　போந்தருள்வீர் என்று தாழ்ந்தார். 144

## அண்ணலார் மதுரைக்கு எழுந்தருளல்

அண்ணலவ்வி டத்திலிருந் தடியார்கள்
　　பலரொடெழுந் தருளி ஞர்கள்
அண்ணல்வரும் செய்தியறிந் தணிமதுரை
　　நகரிலுள அடியார் அன்பர்
வண்ணமிகு பூப்பந்தர் அமைத்துமண
　　மலர்மாலை தூக்கி வண்ணச்
சுண்ணமொடு தண்பனிநீர் தூவிப்பளிங்
　　கெனத்தரையைத் தூய்மை செய்தார். 145

வாழைகமு காதிநட்டு மாவிலைத்தோ
　　ரணமாதி வயங்க நாற்றி
சூழுமணி விளக்குபல சுடரொளிவீ
　　சிடஅமைத்துத் தூய்மை சான்ற
ஏழடுக்கு மாடமா ளிகையனைத்தும்
　　எழிலுறவே யலங்க ரித்து
மாழைமணிக் குடங்களில்வண் பூர்ணகும்பம்
　　மாண்புறநன் றமைத்திட் டார்கள். 146

செட்டிநாட் டினிலிருந்து சிறந்தஅடி
　　யார்சூழப் போந்த அண்ணல்
மட்டில்பெரு மகிழ்வோடும் வழியிலுள
　　பலதூயோர் வணங்கிப் போற்ற
மட்டுலா மலர்த்தாது தாங்கிவந்து
　　வண்தென்றல் மாண்பாய் வாழ்த்தக்
கொட்டுதூ ரியம்முழங்கக் குழலிசைப்ப
　　யாழ்நலிசை கொழிக்கப் போந்தார். 147

## மதுரை மாநகர் வரவேற்றல்

பைந்நாகம் அணிவேணிப் பரமசிவன்
முடியினின்று பாரிற் போந்தோம்
அந்நாளிற் குறட்குறுதா கம்தணித்தோம்
அருள்ஞானக் காழி வேந்தர்
செந்நாவிற் பொலிதேவா ரச்சிறப்பைச்
செழும்புவியோர் உணரச் செய்தோம்
இந்நாளிற் பரிபூர்ணர் எழுந்தருளும்
பேறுபெற்ருேம் என்று வைகை 148

பெருமகிழ்வு பொங்கிப்பொலி வதுபோலும்
பெருமைமிகும் அருட்சட் டத்தை
இருநிலத்தில் தரப்போந்தோர் அதிகாலை
யினில்தண்ணீ ராடச் செய்தித்
திருநெறிக்கு நுழைவாயி லீதென்னல்
தேர்ந்துமகிழ் வுறுதல் போலும்
வருகஅண்ண லேயென்னத் திரைக்கரத்தால்
வரவேற்று மகிழ்ந்த தம்மா. 149

இங்கிருந்து சென்றுநெடு நாள்கடந்திப்
போதுற்ருர் என்று மொட்டாம்
செங்கரம்கூப் பித்தொழுது மலர்முகத்தால்
மகிழ்காட்டிச் செழிப்பார் பச்சை
வண்கலத்தால் நீராஞ்ச னம்காட்டி
அருள்நலஞ்சால் வள்ள லாரை
நன்குவர வேற்றனஅந் நன்னகரிற்
றிகழ்பொய்கை யனைத்தும் அன்பால். 150

இங்குவெகு நாளிருந்து சென்றஅண்ணல்
வருகின்ருர் என்றும், நிட்டை
இங்குதொடங் கிப்பொதிகைக் கேகித்தவம்
முடித்துவரு கின்ரு ரென்றும்,
துங்கமிகும் அவர்மேனி காண்போமென்
றும்தூய கூட லன்னை
நன்கெழுந்து நிமிர்ந்துபார்த்தி டல்போல
நான்கெழிற்கோ புரமும் தோன்றும். 151

ஒப்புயர்வில் பெருந்தவத்தை உலகுயிர்க
ளுக்காக உஞற்றச் சென்ற
நற்பெரியார் அருந்தவத்தை நனிமுடித்தின்
னருட்சட்ட நெறிஞா லத்திற்
செப்பரிய உயர்முறையில் தந்தருள
வருகின்ரு ரென்று செங்கை
யிற்பெரிய விசிறிகொடு வீசுதல்போல்
கொடிகளினி தசைந்த வம்மா 152

மக்கள் மகிழ்வு

பரிபூர்ணர் திருக்கோயில் அருகெங்கும்
பந்தர்எழி லுறவ மைத்துப்
பெருகார்வ மோடுபனி நீர்தெளித்துப்
பேரெழிலார் கோல மிட்டு
மருவார்நன் மலர்தூவிப் பொரிதூவி
எழில்தரள மணிகள் தூவிக்
குருநாதர் அருட்பாடல் பலபாடி
இளம்பெண்கள் கும்மி போட்டார். 153

அண்ணலார் பரிபூர்ணர் கோயிலில் திகழ்தல்

மங்கலதூ ரியம்முழங்க வாழ்த்துரைகள்
பலபெரியோர் மாண்பாய்க் கூற
மங்குல்பனி நீர்த்துளிகள் தூவமலர்
மழைவானேர் சொரிந்து வாழ்த்த
எங்கும்அடி யவர்நிறைவுற் றரஹரவென்
ருெலிஎழுப்ப இனிதே அண்ணல்
செங்கரமைந் துடையபரி பூர்ணர்தளி
சேர்ந்தமர்ந்து திகழ்ந்தார் நன்றே. 154

தைலமஞ்ச னப்பொடிபால் தயிர்இளநீர்
எலுமிச்சம் பழத்தின் சாறு
சீலமுடன் அமைத்தபஞ்சா மிருதம்சாந்
தின்பனிநீர் திருநீ ருதி
ஏலுமுறை யாலன்பொ டபிடேகம்
இனிதுபுரிந் தின்ப மூட்டும்
மூலமறை யுருவான முன்னவனைப்
போற்றியன்பர் முழுக்காட் டிட்டார். 155

ஏயபரி பூரணர்க்கு மஞ்சனம்செய்
தெழிலாடை இனிது சாத்தித்
தூயநறு மலர்மாலை சூட்டித்தூ
பம்தீபம் காட்டித் தேங்காய்
மேயபல கனிபடைத்துக் கர்ப்பூரம்
காட்டிமிகு மெய்யன் போடும்
ஆயதிரு வருட்பாடல் பாடியுள
முருகியடி யவர்போற் றிட்டார். 156

ஐங்கரற்கு வழிபாடு தொடங்கியதும்
அண்ணலிரு விழியும் மூடி
பொங்குதிரு வருள்நிட்டை யினிலாழ்ந்து
பொலிவுமிகுந் தொளிர்ந்தார்; மக்கள்
அங்கவர்தம் தூயதிரு வருள்நிலையை
அகத்தெண்ணிப் போற்றி யுய்ந்தார்;
மங்களம்பா டியபின்னர் மலர்க்கண்விழித்
தண்ணல்திரு வருள்சு ரந்தார். 157

அடியவரிற் சிறந்தஒரு வரையண்ணல்
அன்போடும் அருக ழைத்து
மடியகற்றி மிடியகற்றி வளம்அருளும்
திருநீற்றை வழங்கச் செய்தார்
அடியவரும் அன்பர்களும் அன்புடன்பெற்
றுப்போற்றி யணிந்துய் வுற்றார்
படியின்மிசை பிறந்தபயன் பெற்றேமென்
றகமகிழ்ந்து பரவி நின்றார். 158

## அருளுரை அருளல்

அன்போடும் போற்றிவழி படும்அடிய
வரையண்ணல் அருளால் நோக்கி
துன்போட அருள்புரியும் தூயதிருக்
கரமசைத்தங் கமரச் செய்து
பொன்போன்ற மொழிகள்சில புகலுகின்றேம்
பூதலத்திற் போந்த நீவிர்
அன்போடும் அமைதியொடும் செவிமடுத்தவ்
வாறுநடந் துய்வீர் என்றார். 159

அனைத்துலகங் களுக்கும்ஒளி கொடுக்கும் அருட்
பேரொளிநும் அகத்தோங் கட்டும்
அனைத்துயிர்க்கும் பிறக்கும்அவன் அருளாணைப்
படிநும்பணி அமைந்தோங் கட்டும்
அனைத்தொலியை யும்கேளா தவன்அருளார்
ஒலிகேட்டுப் பழகி யுய்மின்
அனைத்துச்சுகங் களும்விழையா தவனருட்பே
ரின்பம்விழைந் தெய்தி யுய்மின். 160

அவனியுண வினைநாடா தவனதுதண்
ணருளமுதை நாடி யுய்மின்
அவனியில்ஒவ் வொருகணமும் வாழ்நாளை
விழுங்குகின்ற தகத்துட் கொள்மின்
அவனிமிசை யெவ்விடத்தெந் நிலையினிலும்
ஐம்புலன்கட் கிடம்கொ டாமல்
தவநிலைதந் தருளஉளந் தனிற்குடிகொள்
அவன்ஆணைக் கடங்கி யுய்மின். 161

அழியும்பொருள் களுக்காகக் காமம்சினம்
வெறுப்பாதி யடைதல் தீதாம்
அழிவறுதண் ணருள்நம்முள் அமைந்திடவே
வேண்டின்அக உருக்கம் வேண்டும்
விழுமியஅவ் வுருக்கமதை யடையஅவன்
வியன்புகழ்எப் போதும் பாடிப்
பழவடிய ரொடும்கூடி அவனாணைப்
படிநடந்து பக்தி செய்மின். 162

அவன்படைப்பா யுளஉயிர்கட் கிரங்குதலே
தவமாமென் றறிதல் வேண்டும்
அவனருளால் அனைத்துயிர்க்கும் உதவுவதே
அருந்தவமென் றுணர்தல் வேண்டும்
அவனியுள பொருளனைத்தும் வந்தாலும்
மிகுவறுமை யடைந்திட் டாலும்
அவனருளில் நம்பிக்கை யணுவளவும்
தவறாமல் அமைதல் வேண்டும். 163

அருட்சட்டப் படியனுவும் தவருமல்
அனுதினமும் நடந்து வந்தால்
அருட்பாடம் பலவும்அது நனிபுகட்டும்
அருள் நுணுக்கம் பலவு ணர்த்தும்
அருட்போகம் பலவூட்டும் அருட்போதம்
பெறவூக்கும் அருளே யாக்கும்
அருளாற்றல் மிகக்கூட்டும் அருளின்ப
அனுபவத்தி லுயர்த்தும் என்ருர். 164

அருள்நாட்டம் உடையரெலாம் ஐங்கரன் தண்
ணருட்சிறப்பை யழகாய்க் கூறும்
பொருள்நிறை விநாயக புராணம்இனி (து)
ஓதுகெனப் புகன்ருர் அண்ணல்
தெருள்நாடும் அன்பரெலாம் அண்ணலுரை
செவிமடுத்துக் களிசி றந்தார்
இருளோடும் அருள்கூடும் இன்பமுறும்
என்றெண்ணி உவகை கொண்டார். 165

அருட்சட்டத் திருநெறியை முன்னரே
அறிந்தவ்வா ருெழுகும் அன்பர்
அருட்சட்ட நெறிமுழுதும் அருளண்ணல்
பால்தெரிந்து கொளவி ழைந்தார்
அருட்சட்ட அனுபவத்தில் ஐயமுற்ருேர்
'அகத்தெளிவு பெறவி ழைந்தார்
அருளண்ணல் அவரையெலாம். தங்குமிடத்
துறுகஎன ஆணை தந்தார், 166

அருளண்ணல் அடியரன்பர் புடைசூழ
அனைத்தியமும் ஒலிசெய் தேக
அருட்பாடல் இசைத்தேகும் ஆடவரும்
அரிவையரும் பின்னே சூழ
அருட்ஜோதிக் கதிரவனைப் போல்நடந்தார்
அடியர்குழாம் தொடர்ந்து சென்ருர்
அருளன்னை மீனுட்சி ஆலயத்தை
நாடியரு ளண்ணல் சென்ருர். 167

வானுயர்கோ புரத்தைக்கண் டண்ணலார்
வார்விழிநீர் பெருகச் சென்றார்
தேனனைய செங்குரலால் அருட்பாடல்
செகமுய்ய ஒலித்துச் சென்றார்
மீனனைய விழியன்னை வியன்கோயி
லுட்புகுந்து மெய்பொ டிப்ப
யானெனதென் பதைமறந்துள் ளமர்ந்தண்ணல்
இனியநிட்டை யின்கண் ஆழ்ந்தார். 168

தூயஅருட் சட்டஅடி யவர்பலரும்
அன்பர்களும் தொழவந் தோரும்
கோயில்பணி யாளர்களும் பூசைசெயும்
பட்டர்களும் குழுமி யன்பால்
மேயஇரு கண்மூடி நன்றமர்ந்து
வியனருளில் திளைத்திட் டார்கள்
ஏயஅந்தச் சமயம்அவர் அடைந்தஇன்பம்
எளியேனால் இயம்பற் பாற்றோ? 169

அன்னையருள் திருவுள்ளப் படியண்ணல்
கண்விழிப்ப அன்ப ரெல்லாம்
அன்னையருள் அண்ணலருள் அனுபவித்துக்
கண்விழித்தார் அரவென் றார்த்தார்
அன்னைமுனர்ப் பலமுறையின் னருள்சுரந்த
வாறெண்ணி யருளா ரண்ணல்
பன்னரிய பேரன்பால் ஆனந்த
பாஷ்பம்மிகப் பெருக்க லானார். 170

அன்பர்பலர் கொண்டுவந்த மலர்மாலை
பலசாத்தி அருளன் னைக்கே
இன்பமிகும் அலங்காரம் செய்துபட்டர்
இனியகர்ப்பூ ரம்காட் டிட்டார்
அன்பரெலாம் அரஹரவென் றொலித்தவொலி
அருட்கயிலைக் கெட்டிற் றாக
இன்பம்அருள் குங்குமத்தைப் பட்டர்அடி
யவர்அன்பர்க் கினிது தந்தார். 171

அங்கயற்கண் ணன்னையருட் பெருங்கடலுள்
தோய்ந்தண்ணல் அடியா ரோடும்
ஐங்கரங்கொள் முக்குறுணிக் கணபதியைக்
கண்டுபின்னர் அருளார் சொக்கர்
துங்கமிகு கோயிலுட்சார்ந் தினிதமைந்தார்
சட்டநெறி துலங்கும் வண்ணம்
பொங்குதிரு வருள்மொழியால் அடியரன்பர்க்
குபதேசம் புரிந்தார் நன்றே. 172

மக்களெலாம் கேட்டுமிகப் பயனடைந்தார்
வாழ்வாற்றும் நெறிகண் டிட்டார்
தக்கவொரு சற்குருவைத் திருவருளே
தந்ததென மகிழ்வு கொண்டார்
துக்கமெலாம் தீர்ந்ததினித் தூய்மைபெறத்
தடையில்லையென் றுவந்து நின்றார்
எக்கணமும் துணையிருப்பர் இவர்;முத்தி
எய்திடலாம் என்றுட் கொண்டார். 173

சோமசுந்த ரப்பெருமான் அருகுபட்டர்
சூழ்ந்துகர்ப்பூ ரம்காட் டிட்டார்
ஓமொலியை முழக்கியன்பர் அரஹரவென்
றொலித்தருளில் தோய்ந்து நின்றார்
சேமம்அருள் திருநீற்றை அனைவருக்கும்
செங்கரத்தால் பட்டர் தந்தார்
யாமிவணுய்ந் தோமென்ன அனைவருமே
அகத்துவகை மிகப்பெற் றாரால். 174

அண்ணல்அவ ணிருந்துபுறப் பட்டடியார்
அகமொன்றில் தங்க லானார்
எண்ணிவந்த ஐயமற அண்ணலிடம்
கேட்டடியார் இன்ப முற்றார்
தண்ணருளார் நிட்டையினில் தோய்ந்துசிலர்
சாந்திநிலை யெய்தி நின்றார்
அண்ணலருட் பெருங்கடலுள் ளாழ்ந்தால
வாய்நகரம் திகழ்ந்த தம்மா. 175

ஆரூர்மூ லாதாரம்; ஆனைக்கா
குய்யமண்ணு மலையேன் றேங்கும்
சீரூர்ந்ன் மணிபூரம் தில்லைமன்றம்
இருதயமாம்; திருக்கா ளத்தி
ஏரூரும் கண்டம்;இரு புருவமத்தி
காசி;எழிற் கயிலைக் குன்றம்
வேரூர்ந்தி டும்பிரம ரந்திரமாம்;
வியன்மதுரை த்வாத சாந்தம். 176

ஞானியரும் யோகியரும் நன்றுணர்ந்திவ்
வுண்மையெலாம் நவின்றுள் ளார்கள்;
மேனிலையில் திகழ்த்வாத சாந்தமெனும்
மதுரையினில் மேவி யுள்வீர்
வானிலுறும் அமரர்களும் பெறலரிய
பேறுபெற்று வயங்கும் நீவிர்
யானெனதென் றறவிளங்கும் இனியநிலை
எய்தியுய்வீர் என்றார் அண்ணல். 177

அருட்சட்ட அடியவரும் அன்பர்களும்
அளவில்பெரு மகிழ்வுற் றார்கள்
பொருட்பெற்ற பலவுரைகள் அவ்வப்போ
தருளண்ணல் புகன்ற வண்ணம்
தெருட்பெற்ற திருவால வாய்நகரிற்
சிலநாட்கள் தங்க லுற்றார்
இருட்பற்றைத் தவிர்பூர்ணர் தளிக்கேகி
நாளுமன்பர்க் கருள்செய் வாரால். 178

அண்ணலார் வீற்றிருக்கு மிடத்தில்அருள்
மணம்கமழ்ந்து மகிழ்வை யூட்டும்
அண்ணலார் திருநயனம் அருள்சுரந்திவ்
வவனியையேதிருத்தி யாளும்
அண்ணலார் திருவார்த்தை யோவ்வோன்றும்
அடியார்கட் கின்பம் நல்கும்
அண்ணலார் திருவுள்ளம் அனைத்துயிரை
யும்பேணும் அமுத மாமே. 179

அண்ணலார் அருகில்அடி யார்கூட்டம்
அனவரதம் சூழ்ந்து மேவும்
அண்ணலார் செல்லுமிடங் களுக்கெல்லாம்
அடியர்குழாம் தொடர்ந்து செல்லும்
அண்ணலார் பரிபூர்ணர் திருத்தளியில்
அமர்ந்தொருநாள் அன்பர்க் கெல்லாம்
திண்ணமார் அருளுரைகள் செப்புகையில்
அங்கணொரு சிறுவன் தோன்றி 180

ஒருசிலஐ யங்கள்எனக் குள,அவற்றை
நீக்கஉம்மால் இயலுமோ என்(று)
உரியஉரி மைக்குரலால் உரைத்திடலும்
இயலுமள வுரைப்போம் என்னக்
குருபரனார் கூறிடவும்,பலதெய்வம்
குவலயத்தில் இருக்க நீர்ஏன்
கரிமுகனைக் கடவுள்எனக் கொண்டுள்ளீர்?
எனக்கவினார் சிறுவன் கேட்டான். 181

அண்ணலார் விநாயகர் பெருமை கூறல்

சூதணுவும் அறியாஅச் சிறுவனைநோக்
கிக்குரிசில் சொல்ல லுற்றார்;
ஆதிமூ லப்பொருளாம் கணேசர்;அவர்
எல்லாத்தெய் வங்க ளாலும்
ஓதிவழி படத்தக்க ஒருதெய்வம்;
எண்ணில்பல உலகும் தன்னுள்
தீதறநன் றடக்கிநனி பேணுதெய்வம்;
எங்கணுமே திகழும் தெய்வம்; 182

ஓங்கார மாம்மூல மந்திரத்தை
உருவமெனக் கொண்ட தெய்வம்;
ஆங்காரம் தவிர்தெய்வம்;மா மனிதன்
தெய்வமென அமைந்த மூன்று
பாங்கார்நன் னிலைகளுக்கும் பொருந்துருவம்
கொண்டுபயன் வழங்கும் தெய்வம்;
ஈங்கார்எப் பக்குவத்தி லிருந்தேத்தி
னாலும்அருள் இனிய தெய்வம். 183

ஆரார்எந் நிலையினில்வைத் தேத்திடினும்
அவரவர்கட் கந்த அந்தச்
சீரார்நன் னிலையிற்பயன் அருள்தெய்வம்;
செப்புலகச் சுகம் தொடங்கிப்
பேரார்வ மோடடியர் விழையுமுத்திப்
பேறுவரை யருளும் தெய்வம்;
நீரார்நன் னதிக்கரையில் அரசடியிற்
பெருந்தளியில் நிலவும் தெய்வம். 184

தனையடுக்கும் உயிரினத்தைப் பிழைகருதித்
தள்ளாமல் இறுதி காறும்
வினைக்கடலைப் பவக்கடலைக் கடந்தருட்பே
ரின்பநிலை மேவுங் காறும்
தனித்துணையாய் வழித்துணையாய் இருந்துகாப்
பாற்றுதெய்வம்; தன்னை யன்பால்
நினைத்தெடுத்த செயலையெளி தினில்முடித்து
வைக்கவல்ல நேர்மைத் தெய்வம். 185

மறையனைத்துக் கும்மூல காரணமாய்
மறைக்கப்பாற் பட்ட தாகி
மறையனைத்தின் உட்பொருளாய் ஒளிர்தெய்வம்;
மாஞான மயமாம் தெய்வம்;
சிறிதளவு தவம்செயினும் பெரும்அளவிற்
பயன்அருளித் திகழும் தெய்வம்;
பிறவிக்கடல் கடத்திஉயி ரினத்தைக்கரை
சேர்க்குமியல் பிறங்கும் தெய்வம். 186

ஆதலினால் ஐங்கரனை உபாசனா
மூர்த்தியென்றுள் ளன்பாற் கொண்டேன்;
பூதலத்தில் யாருமினி தேத்திவழி
படுகவெனப் புகல லுற்றேன்;
மாதவத்தர் ஞானியர்கள் வானவர்கள்
வாழ்த்திவழி படும்அம் முன்னோன்
தீதகற்றி நலமனைத்தும் செய்தருள்வான்
எனமறைகள் யாவும் செப்பும். 187

என்றண்ணல் இனியமொழி யால்உருக்க
மோடியம்பச் சிறுவன் கேட்டே
நன்றுகுறு நகைகாட்டிச் சிரமசைத்து
மேலும்சில நவில லுற்றான்;
என்றும்உயி ரினைவிட்டு நீங்காத
தெதுவென்றான்;இதுகேட் டண்ணல்
குன்றுநிகர் ஆணவமே முதலான
மலமென்னக் கூறி னாரால். 188

உயிருக்குறை விடமாவ தெதுவென்ன
ஒண்சிறுவன் வினவ.அண்ணல்
உயர்வருளும் இறைவன்திரு வடியென்ன
உரைத்தனர்;அச் சிறுவன் மேலும்
உயிர்களிறை நிலையடைதல் என்றால்என்
னென,மலங்கள் மூன்றும் நீங்கி
உயிர்இறைவன் திருவடியில் நிலைத்தின்பம்
நுகர்ந்தவண்ணம் ஒளிரல் என்றார். 189

அண்ணல்அரு ளுரைகேட்டு நன்றென்றக்
கணம்சிறுவன் மறைந்தான்;அப்போ(து)
அண்ணல்திரு விழிக்குமட்டும் ஒருஜோதி
தோன்றிமறைந் திடலும்,முன்னோன்
வண்ணவொளிச் சிறுவனென வந்துமறைந்
தானென்ன மகிழ்வாற் பொங்கிக்
கண்ணருவி பொழியஉடல் புளகிப்ப
அண்ணலருட் கடலுள் ளாழ்ந்தார். 190

அழகுறநின் றருள்வாயால் வினவியஅச்
சிறுவனங்கு மறையக் கண்டு
குழுமியிருந் தவரெல்லாம் வியப்பெய்திப்
பரிபூர்ணக் கோமான் இந்த
விழுமியசற் குருபரர்முன் தோன்றினன்நம்
விழிகாண இந்நாள் கண்டோம்;
செழுநிலத்திற் பிறந்தபயன் பெற்றுய்ந்தோம்;
என்றுமகிழ் சிறந்தா ரன்றே. 191

பரிபூர்ணர் எழிற்சிறுவ னாய்த்தோன்றிப்
பரிந்துவினா விடுத்த வாறும்
குருநாதர் தக்கவிடை கூறியவா
றும்கண்டு கூடல் மக்கள்
அரியபொருள் முடிவினைநாம் அறிந்துணர
ஐங்கரனார் வழிசெய் தாரென்(று)
உரியபெரு மகிழ்வினொடும் அரஹரவென்
றொலிமுழக்கிக் களித்திட் டாரால். 192

ஓங்கெழிலார் மதுரையினில் வடமாசி
வீதியினில் உறைவோ ரான
வேங்கடசா மிப்பெயர்கொள் நாயுடுகுமா
ரர்அப்பா சாமி நாமம்
தாங்கியுள பழையஅன்பர் சத்திரப்பட்
டியினிற்சமீன் தார ரான
பாங்குறுமுத் துச்சாமி நாயுடுக்குப்
பரிணயம்செய் தீந்த செல்வி. 193

சூடியம்மை யெனும்பெயர்கொள் அம்மைக்குக்
கால்கள்சுவா தீன மின்றி
நீடுபுவி யினில்நடக்க முடியாமல்
நகர்ந்துசெலும் நிலையை யெய்தி
ஈடில்வலி யோடுதுன்ப முற்றுப்பல
வைத்தியங்கள் இனிதே செய்தும்
நாடுபயன் காணமல் நைந்துமன
முடைந்தவராய் இருந்து வந்தார். 194

அதுபோது மதுரையினில் வந்திருந்த
அண்ணலார் அடிகள் போற்றி
இதுபோதென் திருமகளைக் காத்தருள்வீர்
எனத்தொழும்நா யுடுமெய் யன்பார்
இதயநிலை யினைநோக்கி அண்ணல்அவர்
இல்லிற்கெழுந் தருள லானார்;
உதயவொளி உணர்ந்தலர்தா மரையெனநா
யுடுஉள்ளம் உவந்த தம்மா. 195

உண்மையன்பி னோடினிது வரவேற்றார்;
அண்ணலும்உள் ளுவந்து சென்றே
தண்மைசெறி திருவருளால் சூடியம்மை
யினைத்தாக்கி வந்த நோயை
அண்மையிலும் அணுகாத படிவிலக்கி
அருட்சட்ட நெறியை நல்க
திண்மைமனத் தோடவ்வனை பேணிமக்கட்
பேறுடனும் திகழ லானார். 196

திருவால வாய்வடக்கு மாசிவீ
தியிற்சீரார் அடியார் இல்லில்
அருளண்ணல் தங்கியுள போதொருநாள்
இரவில்அனை வரும்அ ருந்தி
மருவுதுயில் கொளப்போகும் நேரத்தில்
வந்தொருவர் கதவைத் தட்ட
அருகிருந்தோர் திறந்திடவும் புதியஅன்பர்
அங்கொருவர் வந்தி ருந்தார். 197

சாமியிங்கு வந்துள்ளா ரோஎன்று
கேட்டவண்ணம் உள்ளே சார்ந்து
சாமியரு கினிலுற்றார்; அவருடம்பிற்
பெருநோய்சார்ந் திருந்த தங்கண்;
நாமருந்த நல்லுணவு வேண்டுமென்றார்;
நல்லுணவு தீர்ந்த பின்னர்
தூய்மையுறப் பாத்திரமும் கழுவியா
யிற்றெனவுட் கவன்றார் வீட்டார். 198

காலமிகத் தாழ்ந்துவிட்ட தாற்புதிய
சமையல்செயக் கால மில்லை
ஏலஇப்போ தேதுசெய்வ தென்றுதிகைத்
திட்டனர்அவ் வில்லத் தார்கள்;
சீலமிகும் அண்ணல்உளே சென்றுதிருக்
கரத்தினைப்பாத் திரத்தில் வைக்கச்
சாலஉண வங்கிருந்த ததுகண்டு
தழையுமகிழ் வுற்றார் வீட்டார். 199

இலைபோட்டங் குணவுபடைத் திடஇனிது
வந்தவரை நாடும் போதில்,
நலமருள வந்தவர்ம றைந்திடலும்,
ஞானபரி பூர்ணர் தாமே
நிலமிசைசோ திக்கவந்தா ரென்றண்ணல்
வியந்தருளை நினைந்து போற்றி
பலனருளப் போந்தீரோ?என்றுரைத்துப்
பரவினர்மெய்ப் பக்தி யோடும். 200

குருபரனுர் உள்ளாரா எனப்பூர்ணர்
கோலம்மிக மாறிப் போந்து
திருவமுது தேவையெனக் கேட்டதுவும்,
தேசிகர்தம் கரத்தை வைத்துத்
திருவமுதுண் டாக்கியதும், போந்தபரி
பூர்ணர்மறைந் ததுவும் உன்னிக்
குருபரனுர் பெருங்கருணை காரணமென்
றினிதடியர் துதிக்க லானுர். 201

## குருநாதர் துதி

கண்களால் நின்னைக் கண்டறி யாரும்
கருணைசால் நின்னெறி நடந்தால்
எண்கொளா நலங்கள் ஈந்துபே ணிடும்நின்
இன்னருள் திறம்உரைக் கொணுமோ?
பண்கள்கொண் டுன்சீர் பக்தர்பா டுவார்
பரிந்துனை மறையெலாம் வழுத்தும்
விண்கொள்நல் லிமையோர் வேண்டியேத் திடுவார்
வித்தகக் குருமகா மணியே. 202

யானென தென்னும் செருக்கறுத் தவர்தம்
இதயம்வாழ் இன்பநா யகனே
கோனென எண்ணில் அண்டமும் படைத்துக்
கோதிலா தாளும்அற் புதனே
போனக வகையும் ஆடையும் நல்கிப்
பொய்யரேம் எமையுமா ளிறையே
வானகம் வழுத்த மண்ணகம் பரவ
மாணருள் நெறிதரு குருவே 203

நல்லவர்க் கெல்லாம் வாய்த்தநற் றுணையாய்
ஞாலமீ தொளிரும்அற் புதனே
இல்லையென் னுமல் உதவும்அன் பர்க்கே
எவ்வள மும்தரும் பதியே
சொல்லையுட் சொல்லிச் சொற்பொருள் விளக்கித்
தூய்மைசெய் சுடரொளிப் பிழம்பே
ஒல்லைவந் தருள்செய் ஒப்பில் பேரரசே
உயர்வுசால் குருமகா மணியே 204

அருளிலே முளைத்தின் னருளிலே தழைத்தின்
னருளிலே அழகுறப் பொலிவாய்
அருளிலே அரும்பி அருளிலே மலர்ந்தின்
னருளிலே கனிந்தினித் திடுவாய்
அருளிலே அண்டம் அனந்தமும் படைப்பாய்
அருளிலே அனைத்துயிர் புரப்பாய்
அருளிலே கனிய வேண்டிடும் எமையும்
அருள்மய மாக்கியா ளுகவே. 205

வாயினுல் உன்னை வாழ்த்தினும் இனிக்கும்;
மனத்தினுல் நினைப்பினும் இனிக்கும்;
தூயநன் னிட்டை பேணினும் நின்றன்
அடியர்பால் சூழினும் இனிக்கும்;
ஆயநின் அருட்சீர் முழுவதும் அறிதற்
கமரரும் ஆற்றல்பெற் றில்லார்;
சேயரேம் சொல்ல இயலுமோ? செழிப்பார்
திருவிரு டிப்பதித் திருவே. 206

என்றெலாம் பலவா றேத்தியன் போடும்
இறைஞ்சினர் இன்பமெய் திட்டார்;
நன்றுசீ ரடியார்க் கின்பவாழ் வருளும்
ஞானதே சிகர்அவர்க் கன்பில்
ஒன்றிய சிந்தை உத்தம ஒழுக்கம்
உயர்நிட்டை யாதிய நலங்கள்
துன்றுக வென்ன எண்ணிநல் லாசி
சொற்றனர்; உவந்தனர் அடியார். 207

வேறு

கூடல்நக ரினிற்சிலநாள் அருளண்ணல்
அடியவர்கு ழாத்தி னேடும்
நாடடியர் வீடுகளில் தங்கியிருந்
தருளினர்;அந் நாளில் முன்னேன்
ஆடல்பல இவ்வாறு காட்டிடவும்
அனைவோரும் அதிச யித்தே
ஈடில்குரு பரர்பெருமை இறைவனருட்
பெருமைநினைந் திறும்பூ துற்ருர். 208

இருடியர் பட்டி

தவம்முடித்துப் பூரணப்பே ரருள்மயமாய்க்
காசிவரை சார்ந்து மேலாம்
கவின்மிகுநல் லாந்திரநாட் டின்வழியாய்க்
கருணையொளி பெருகி யோங்கும்
உவமையிலொண் தமிழ்நாட்டில் உறைபவர்செய்
தவப்பயனுய் உலகம் போற்ற
அவதரித்த அருளண்ணல் போந்தால
வாயிலுள செய்தி கேட்டே, 209

திருவிருடி நகர்மக்கள் எல்லோரும்
செப்பரிதாம் மகிழ்ச்சி யுற்ருர்;
பெருநிதியைப் பெற்றவறி ஞனைப்போலப்
பெருமகிழ்வு கொண்டு கூடி
குருபரரை நம்பதிக் கெழுந்தருளு
மாறழைக்க வேண்டு மென்ருர்;
மருவுபிழை புரிந்தநமை மன்னிக்கக்
கோரிஇறைஞ் சிடுவோ மென்ருர். 210

அருளண்ணற் கபசாரம் செய்ததனுல்
அவர்நம்மூர் விட்டுச் சென்ருர்
வருகவென்றிப் போதழைத்தால் வருவாரோ
மாற்றமென்ன கூறு வாரோ
திருவுளம் வருந்தியவர் செல்லும்வணம்
நாம்புரிந்த செயலா லன்றே
பெருகுபல பிணிகளினுற் பீடிக்கப்
பெற்ருேமென் றெண்ண லுற்ருர். 211

எப்படியும் அவரைநமூர்க் கழைத்துவர
வேண்டுமென எண்ணி ஞர்கள்
செப்பரிய பேரன்பி னேடுசில
பெரியவர்கள் புறப்பட் டார்கள்
நற்பெரிய மதுரைநகர்க் கவர்களுற்ற
போதந்த நகர மக்கள்
ஒப்புயர்வில் அண்ணலருட் பெருமையினை
உரைத்திடக்கேட் டுவகை பூண்டார். 212

வேறு

அண்ணலை அழைத்தால் வருவரோ என்ற
அச்சம்ஓர் புறத்தினில் வருத்த
நண்ணிநம் மூரில் அவதரித் திட்ட
ஞானதே சிகர்க்கிந்த வண்ணம்
எண்ணரும் கீர்த்தி எய்திடு வதுநம்
இருந்தவப் பேறென மகிழ்ந்தார்
அண்ணலார் தங்கு மிடமறிந் தடைந்தார்
அருகழைத் தனர்அரு ளண்ணல். 213

வேறு

எல்லீரும் நலமாக உள்ளீரோ
என்றண்ணல் வினவ லுற்ருர்;
சொல்லேதும் அறியாராய்த் தொழுதுருகி
இருகணும்நீர் துளிப்பத் தாம்செய்
பொல்லாத பிழையருளாற் பொறுத்தூருக்
கெழுந்தருள வேண்டு மென்ன
நல்லார்வ மோடுதிரு வடிமலரிற்
பணிந்திறைஞ்சி நவில லுற்ருர். 214

அறியாமை யால்யாம்முன் செய்தஅப
சாரம்அரு ளால்மன் னிப்பீர்
பொறியோடு புலனேதும் அறியாத
அருள்ஞானப் பொலிவோ டெம்முன்
அறிவாளர் அருளாளர் அன்பாளர்
அடியார்கள் போற்றத் தூய
நெறிகூறித் திகழ்நீர்நம் மூர்க்குறுதல்
வேண்டுமென நெகிழ்ந்து நின்ருர். 215

இருடியர்பட் டியிலுள்ள அனைவரும்நும்
நல்வரவை எதிர்பார்த் துள்ளார்
அருள்கூர்ந்து நீவிர்எழுந் தருளிப்பே
ரானந்த நலம்பா லிப்பீர்
பெருவாழ்வு யாங்கள்பெறப் பேரின்ப
மெய்தியுயப் புரிவீர் என்றார்
அருளண்ணல் உடையவன்றன் குறிப்பிருந்த
வாறுன்னி அதற்கி சைந்தார். 216

இருடிநகர்ப் பெரியவர்கள் எல்லையிலாப்
பெருமகிழ்வு கொண்டு சென்றார்
தெருவனைத்தும் தோரணங்கள் தூக்கியெழில்
திகழ்பந்தர் அமைத்திட் டார்கள்
மருவுறுநல் வாழைகமு காதிநட்டுப்
புதியமணல் பரப்பி னார்கள்
குருபரர்நம் மூர்க்குறுகி றார்என்னக்
குதுகலித்துக் கூறி னார்கள். 217

கருணைமிகு தாயடக்கத் தினுக்குப்பினர்
காணாமற் போயி ருந்த
குருபரனார் தவக்கனலாய் அருட்பிழம்பாய்க்
குவலயத்தோர் பலரும் போற்றும்
பெருமகனாய் வரக்கண்டு தமையறியாப்
பெருமகிழ்வு கொண்டு போற்றி
அரஹரவென் றொலிஎழுப்பி அருளின்பப்
பெருங்கடலில் ஆழ்ந்து நின்றார். 218

அண்ணலார் திருவுருவம் முழுமையுமே
பேரன்புப் பிழம்பாய்த் தோன்றும்
அண்ணலார் மொழிமுச்செல் லாம்சட்டத்
திருநெறியைப் பரப்பி யோங்கும்
அண்ணலார் திருவுள்ளம் உயிர்த்திரளை
முத்திநிலைக் கழைத்துச் செல்லும்
அண்ணலார் வாழ்க்கைமுழு தனைத்துயிரின்
அருள்வாழ்வுக் கமைந்த தாமால். 219

மங்கலவாத் தியம்முழங்க மாதவக்குன்
றனையஅரு ளண்ண லாரைச்
செங்கரங்கூப் பித்தொழுது தேவிதிருக்
கோயிலரு கழைத்துச் சென்றார்
அங்கண்ணல் அருள்நிட்டை யினிலாழ்ந்து
பினர்விழித்தின் னருள்சு ரந்தார்
ஐங்கரங்கொள் சித்திவிநா யகர்கோயிற்(கு)
அண்ணலன்பர் சூழச் சென்றார். 220

எண்ணரிய சித்திபல இனிதுநடந்
திட்டஅந்த இடத்திற் கேகி
அண்ணலுண்மை யருள்ஞான னந்தவமு
தப்பிழம்பாய் அமர்ந்திட் டார்கள்;
நண்ணரிய பெரும்பேறு நமக்கருளால்
வாய்த்ததென நன்றுள் ளன்போ(டு)
எண்ணியன்பர் இதயமிகக் களிப்பெய்தி
இணையடியிற் பணிந்தெ ழுந்தார். 221

அல்லூர்மக் களையண்ணல் அருகழைத்தன்
பால்நலம்கேட் டருள்பு ரிந்தார்;
எவ்வாறு நாமினிக்காண் போமென்ன
எண்ணியசுற் றுப்பக் கத்தார்
இவ்வாறிங் கெழுந்தருளி யுளசெய்தி
கேட்டின்புற் றெய்தி யன்பால்
செவ்வாய்மை யாற்போற்றித் திருவடியிற்
பணிந்தருளில் திளைக்க லானார். 222

## குருநாதர் துதி

மோட்சமா மொன்றை உயிர்களுக் கருள
மூதுல கினில்வரும் குருவே
சூட்சுமம் காட்டி யிப்புவி வாழ்வில்
துயர்தவிர்த் தாண்டருள் குருவே
ஆட்சியெல் லாமும் இறையரு ளாட்சி
அறிகென அடியவர்க் குணர்த்தி
மாட்சிசால் வளங்கள் வழங்கியாள் இருடி
மாநகர் மாசிலா மணியே. 223

வார்த்தையால் உரைத்தற் கரியதாம் கருணை
வளமெலாம் நிறைந்த வாரிதியே
தீர்த்தமும் நீறும் தந்து தீராத
நோயெலாம் தீர்க்கும்நா யகனே
ஆர்த்திடு வினையின் தளையெலாம் நீக்கி
அருளமு தருத்தியாள் குருவே
ஈர்த்தெமை யாண்ட இறைவனே இருடி
மாநகர் குருமகா மணியே. 224

செப்பிடற் கரிதாம் கருணையின் சிறப்பே
திருவுட லாவியென் றனைத்தும்
ஒப்பில்நின் கழலில் ஒப்படைத் துள்ளம்
உவந்துவாழ் அடியர்தம் திருவே
பொய்ப்புலன் ஐந்தும் பொறிகளோ ரைந்தும்
புரைபுரை கனிந்துநன் றுருக
ஒப்பில்பே ரன்பீந் தருளொளி யருள்வாய்
உயரருட் குருமகா மணியே. 225

எண்ணிய தெல்லாம் எண்ணிய வாறே
இனிதருள் ஏகமா மணியே
பண்ணிய லனைத்தும் பாட்டியல் அனைத்தும்
பக்தர்கட் கருள்பரஞ் சுடரே
பண்ணிய பாவம் அனைத்தையும் பொறுத்துப்
பாரினிற் பேணியாள் பதியே
விண்ணிய லனைத்தும் விளக்குநல் விருடி
மாநகர் வியனருட் குருவே. 226

பண்ணிஞ லுனது புகழெலாம் பாடப்
பரிந்தருட் பண்புகூட் டிடுவாய்
கண்ணிஞ லுனது கவினெலாம் காணக்
கனிந்தருட் கருணைகாட் டிடுவாய்
எண்ணிலாக் கோடி யண்டமும் இறைஞ்சும்
எழிற்பதத் தெமையும்சேர்த் தருள்வாய்
உண்ணிலா வுயிருக் குயிரெனும் இருடி
மாநகர் ஓமெழுத் துருவே. 227

திருவடிப் பூசை

எனத்துதித் தன்போ டிறைஞ்சினர் எழிற்று
மரைநிகர் திருவடி மலர்க்கே
புனற்குடம் தேங்காய்ச் சாந்துபால்
தயிர்தேன் பொங்கிள நீர்பழச்சாறு
டினித்திடுபஞ்ச வமுதம்சந் தனம்பன்
னீர்திரு நீறினி தாட்டி
வனப்புறு மலர்கள் கொண்டுபூ சித்தார்
வண்கனி பலபடைத் துவந்தார். 228

அண்ணலார் முனர்தம் அன்னையார் பதத்துக்
கனுதினம் பூசனை புரிந்த
தெண்ணிய பலர்அவ் வாறுநற் சிறப்போ
டிவரடிக் கினிதுநற் பூசை
பண்ணிநற் பயனைப் பெற்றுய லாமென்
றெண்ணினர் பரிவொடும் புரிந்தார்
அண்ணலா ரதுபோ துடைய வனருளில்
ஆழ்ந்தொளிப் பிழம்பெனத் திகழ்ந்தார். 229

இருகணும் மூடி இனியநிட் டையிலாழ்ந்
திருந்தநம் அண்ணலார் விழித்தே
வருகென அடியார் ஒருவரை யழைத்து
வழங்குக நீறெனப் பணித்தார்;
இருடிநன் னகரார் வருபிற ஊரார்
அனைவர்க்கும் இனிதவர் வழங்க
பெருமகிழ் வுடனேற் றணிந்தனை வோரும்
பிறந்ததன் பயனிதென் றுவந்தார். 230

வேறு

வந்தஅடி யவர்அன்பர் அனைவருக்கும்
ஊர்மக்கள் வண்மை யோடும்
நந்தலிலா உபசாரம் செயலானுர்;
ஞானவொளி மயமாம் அண்ணல்
எந்தவம யத்திலரு ளுரையருள
லாமெனவோர்ந் தியம்ப, யாரும்
அந்தமில்நன் மகிழ்வொடும்கேட் டருளமுதம்
அருந்தியின்பத் தமிழ லானுர். 231

அருட்சட்ட நெறிக்குமுனர் கடைக்காலிட்
டண்ணலுரைத் திட்ட வெல்லாம்
தெருட்பெற்ற சிந்தையிற்கொண் டவ்வாறு
நடந்துள்ளச் செம்மை பூண்ட
அருளடியர் தமக்குற்ற ஐயமண்ண
லிடம்கூறித் தெளிவு பெற்ருர்;
அருள்நெறியில் மேலும்உயர் நிலேயெய்தற்
கானவழி யறிந்தின் புற்ருர். 232

அவ்வூரம் பலம்பொன்னே யாப்பிள்ளே
அற்பவய துடையோ ரென்றும்
செவ்வியம ணம்புரிந்தால் இறப்பரென்றும்
சோதிடர்கள் செப்பக் கேட்டே
எவ்வெவரும் பெண்கொடுத்தற் கஞ்சியிருந்
தனர்; அவரும் சுற்றத்தாரும்
இவ்விதியை மாற்றவல்லோர் எவருளரோ
என்றேங்கி யிருந்தார்அங்கண். 233

வயதவர்க்கு முதிர்ந்துசென்ற தவர்அண்ணல்
பாலணுகி வணங்கி நின்ருர்
நயமொடண்ணல் அவரையழைத் தருட்சட்ட
நெறிபேணின் நனிவி ரைவில்
இயல்மணம்ந டக்குமென்ரு சிகளருள
அவர்சட்ட மேற்ருர்; ஊரார்
வியக்கமணம் நடந்ததவர் மக்களுடன்
வாழ்வாற்றி விளங்க லுற்ருர். 234

### அண்ணலார் சாத்தூர் சேர்தல்

அவதரித்த தலத்திணேவிட் டண்ணலார்
புதியஅடி யவரை நாடி
தவவொளியெங் கணும்பரவச் சட்டநெறி
யிணேத்தரணி மிசைப ரப்ப
பவம்விலக்கிச் சிவம்விளக்கிப் பல்லுயிர்க்கும்
பக்குவமிக் கூட்டி யாள
நவயுகத்தைப் படைத்தருள உளத்தெண்ணிச்
சாத்தூர்நன் னகரம் சார்ந்தார். 235

ஆங்கிலம்ஆ யிரத்துத்தொளா யிரம்ஆண்டில்
சாத்தூரில் அமைந்தி ருந்த
பாங்குறுசத் திரம்ஒன்றில் அண்ணலார்
பரிவொடுசென் றிருந்த காலை
ஓங்குபக்தி ஒழுக்கமுடை உத்தமர்சண்
முகம்பிள்ளை உண்மை யன்போ(டு)
ஆங்கடைந்து குருபரனார் அடிமலரிற்
பணிந்திறைஞ்சி அவர்தம் நண்பர் 236

ஆறுமுகம் பிள்ளையுடல் நலம்குன்றி
யிருப்பதையும் அவரு டம்பு
தேறும்வகை நாடிமருத் துவர்பலரும்
செய்ததெலாம் பயனின் றென்றும்
கூறிஅருள் கூர்ந்தவர்க்கு நலம்புரிய
வேண்டுமெனக் குறையி ரந்தார்;
ஊறனைத்தும் அகற்றியரு ளூட்டுமண்ணல்
உவந்தவரில் லினைய டைந்தார். 237

படுத்திருந்த ஆறுமுகம் பிள்ளைசிர
மீதண்ணல் பரிந்து தம்கை
எடுத்தமைத்துக் கருணைபுரிந் துடம்பினையும்
இனிதுதட விக்கொ டுத்தார்;
அடுத்திருந்த கடுநோயும் அண்ணலரு
ளாற்கணத்தில் நீங்கி யேக,
மடுத்தருளைச் சுவைத்தஅவர் மாணருட்சட்
டம்பைக்கொண் டொழுக லானார். 238

பக்குவம்மிக் குற்றிருந்த சண்முகம்பிள்
ளையுமண்ணல் பதம் பணிந்து
மிக்கபக்தி பூண்டிறையே நமையாளக்
குருவடிவில் மேவி னாரென் (று)
அக்கணமே அருட்சட்டத் திருநெறியேற்
றன்புமிகும் அடிய ரானார்
துக்கமனைத் தும்தவிர்த்துப் பலர்க்கும்நலம்
விளைப்பவராய்த் துலங்க லுற்றார். 239

அவர்குடும்பத் தனைவருமே அருட்சட்டம்
அநுட்டிக்கும் பேறு பெற்றார்
அவர்மகவா கப்போந்த சாமிநா
தப்பிள்ளை அருட்சட் டத்தில்
புவனிமிசை தோன்றுமுயர் பேறுபெற்றார்
புனிதகுரு நாதர் பாதம்
உவகையுடன் போற்றியுண்மை யன்பொடருள்
வாழ்விலினி தொழுக லானார். 240

**இராமநாதபுரம்**

ராமேஸ்வ ரம்செலுமு னுளராம
நாதபுரம் என்னும் ஊரில்
பூமேலு ளோர்போற்றும் அரண்மனையில்
பொலியரசர்க் குறவா யுள்ள
சோமசுந் தரச்சாமித் தேவரைச்சீ
தாலக்ஷ்மி நாச்சி யாரை
நேமமிகு மவர்தங்கை யரையாள
அண்ணல்திரு வுள்ளம் கொண்டார். 241

ஆங்கினிது செல்வதென அருளண்ணல்
எண்ணுகையில் அண்ண லாரின்
ஓங்குசிறப் பினைமுன்பே அறிந்திருந்த
அவர்களந்த மாவட் டத்தில்
பாங்குமிகு சாத்தூரில் வந்திருப்ப
தறிந்துபக்தர் களைய னுப்பி
ஆங்கழைத்து வரச்செய்தார்; அண்ணல்அவர்
வரவேற்புக் கிசைந்து சென்றார். 242

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமெனக்
கருணையுடன் திருவு லாச்செய்
பொலிவுமிகும் அண்ணலையன் போடுரார்
வரவேற்கப் போந்தார்; தங்கள்
இலகுதவத் தின்பயனாய் அண்ணலெழுந்
தருளுகின் றார்என வுவந்தார்;
நிலவுபுது மணல்பரப்பி நித்திலக்கோ
லம்போட்டுப் பொலிவு செய்தார். 243

வீதிகளில் பசும்பந்தர் அமைத்துநல்
விழாக்கோலம் செய்திட் டார்கள்
போதலர்நன் மணமாலை தோரணங்கள்
பலதூக்கிப் பொலிவித் தார்கள்
வேதிகைகள் அலங்கரித்து வாழைகமு
காதிநட்டு விளங்கும் தூய
ஜோதிமணி விளக்கேற்றிப் பூரணகும்
பமும்அமைத்துத் துதிபா டிட்டார். 244

பலவண்ணக் கொடிகள்எழிற் சாமரங்கள்
வெண்குடைகள் பரிவால் தாங்கி
குலவுமிரு கோட்டானை குதிரைமுத
லாயமுன்னே கூடிச் செல்லப்
பலவிதவாத் தியம்முழங்க ஊரெல்லை
யினிற்பரவிப் பணிந்து போற்றி
அலகிலரு ளண்ணலையன் போடுவர
வேற்றினிதே அழைத்துச் சென்றார். 245

பொரிதூவி நறுமலர்கள் பலதூவிக்
கரகநன்னீர் பூரித் தார்கள்
இருடியர்பட் டிச்சாமிக் கரோகரவென்
றினிதடியார் பாடி னார்கள்
பொருவிலருள் ஞானியர்கள் போற்றிடுநா
யகன்வாழ்க வாழ்க என்றும்
திருவருட்சட் டம்வழங்கு தேசிகனார்
வாழ்கவென்றும் செப்பிச் செல்வார். 246

அட்டமங்க லங்களெலாம் அழகாகத்
தாங்கியன்பால் வரவேற் றிட்டார்
எட்டுருடுவா கித்திகழும் எம்பெருமான்
இவண்போந்தார் என்றார் பல்லோர்
சிட்டர்துதித் திடுஞான தேசிகனார்
வாழ்கஎனச் செப்பி யார்த்தார்
மட்டில்வினை தீர்த்தருள்செய் மாமுனிவர்
வாழ்கெனவாழ்த் திட்டார் பல்லோர். 427

சிவிகையினில் சுவாமிகளை எழுந்தருளச்
செய்தன்பர் சேவித் திட்டார்
கவரியிரு புறம்பக்தி யொடும்தாங்கி
வீசியன்பர் களித்துச் சென்றார்
இவரையறி யாதசிலர் இவர்யார்என்
றேவினவ இவரைப் பற்றிப்
புவனிமிசை யறிந்தவர்கள் கூறக்கேட்
டுளமகிழ்ந்து போற்றிச் சென்றார். 248

வெள்ளையுடை யோடெந்த விதஆடம்
பரமுமின்றி விளங்கு கின்றார்;
கள்ளமற்ற உள்ளமொடும் கருணைபொழி
பார்வையொடும் தோன்று கின்றார்;
வள்ளலிவர் அரண்மனையில் தங்கிடுவார்;
நாமிவரை வணங்கிப் பேசற்
குள்ளநல்வாய்ப் பெங்ஙனம்கிட் டுவதென்ன
உரைத்தேங்கி யிருந்தார் பல்லோர். 249

மங்கலவாத் தியம்முழங்க வண்சிவிகை
யினிற்சென்ற ஞான வள்ளல்
துங்கமிகும் தேரோடும் வீதிகளைக்
கடந்தருளால் துலங்கு கின்ற
தங்கம்நிகர் அரண்மனையை அடைந்தனர்;நற்
பூர்ணகும்பம் தாங்கி யன்பர்
அங்குவர வேற்கமணித் தீபமும்பூ
மாலைகளும் அமைதல் கண்டார். 250

அண்ணலார் திருவடிகட் கபிடேகம்
செய்துசந்த னப்பொட் டிட்டு
வண்ணமார் குங்குமத்தாற் பொட்டிட்டு
மலர்சாத்தி வலம்பு ரிந்து
விண்ணகமும் மண்ணகமும் விளங்கஅருள்
புரியவந்த விபுவே யென்ன
எண்ணம்மொழி யுடம்பிலன்பு மிகுந்தோங்க
வணங்கியன்பர் ஏத்தி யுய்ந்தார். 251

அன்பர்களின் அளவிறந்த பேரன்பைக்
கண்டஅண்ணல், ஆதி மூர்த்தி
இன்பநலம் யாவுமிவர்க் கென்றென்றும்
இனிதருள வேண்டு மென்னப்
பொன்புரைநற் றிருவுளத்தில் எண்ணியருள்
சுரந்துபொலி யரண்ம னைக்கண்
அன்பர்அர ஹரவென்ன ஒலித்தேத்த
அருள்மயமாய் உள்ளே சென்றார். 252

வேறு

தேனினைச் சூழ்தே னீக்களைப் போலத்
திருவருள் வடிவமாய்த் திகழும்
ஞானதே சிகரைக் காணவும் அவர்தம்
ஞானநல் லுரைகள்கேட் டிடவும்
ஊனம்நீத் துலவா ஞானமெய் திடவும்
விழைதிர ளுறுவதை யுணர்ந்தே
தானமார் தூய அரண்மனைக் குள்ளே
சென்றிடக் காலலர் விடுத்தார். 253

வேறு

அவண்பலநாள் தங்கியிருந் தவ்வூரில்
சுற்றுப்புற ஊரி லுள்ளோர்
அவண்போந்து போற்றியருள் பெற்றுய்ய
அண்ணலருள் சுரந்த மர்ந்தார்;
அவண்அவ்வரண் மனையந்த நாளில்அருள்
மயமாகப் பொலிந்த தங்கண்;
தவமதிற்சீ தாலக்ஷ்மி நாச்சியார்
தங்கையுடன் செழிக்க லானார். 254

இருவரும் சுவாமிகளுக் கிடிணையில்
அன்பினொடும் தொண்டு செய்தார்;
இருவரின் உயர்ந்தஉள்ளப் பக்குவத்தை
இனிதுணர்ந்த அண்ண லாரும்
திருவருள் சுரந்தனர்அவ் விருவர்களின்
செய்தவமும் செழிக்கச் செய்தார்;
இருவரும்முற் பிறவிகளிற் செய்தவமிவ்
வெளியேனாற் செப்பற் காமோ? 255

அண்ணல்எழுந் தருளியுள செய்தியைக்கேட்
டறிந்தசுற்றுப் புறஊர் மக்கள்
அண்ணலிடம் அன்போடும் வந்துபணிந்
தருள்பெற்றுச் செல்ல லானார்;
புண்ணியத்தி னலண்ணலைக் காணவந்த
ஒருவர்அவர் திருமுன் போந்தே
எண்ணிவந்த ஐயமதைத் தீர்த்தருள
வேண்டுமென இறைஞ்சி நின்றார். 256

முறையொடையத் தினையுரைக்கின் முன்னவன்தண்
ணருள்தெளிவு செய்யும் என்ன
நிறையருளின் திருவுருவாய் நிலவண்ணல்
அருள,அவர் பணிவி னோடும்
இறைவனைஎய் திடவேண்டின் என்னசெய்ய
வேண்டுமென உணர்த்து கென்றார்
இறைவனையெய் திடவிழைவோர் செயற்குரிய
தின்னதென உரைத்தா ரண்ணல். 257

உலகஇச்சை யனைத்தினையும் ஒவ்வொன்றாய்
விட்டுவிட முயலல் வேண்டும்;
பலவகைத்துன் பங்களையும் பரனருளீ
தெனப்பொறுத்துக் கொள்ளல் வேண்டும்;
இலகுசிறு குழந்தையுளம் கொண்டவர்கள்
எளிதில்இறை வனைச்சார் வார்கள்;
விலகுகள்ளம் கபடமின்றி விளங்குளமே
இறைவன்உறை கோயி லாகும். 258

பிறஉயிர்கட் குறுதுன்பம் துடைக்கமுய
லுதல்அருளின் பெற்றி யாகும்;
இறையருளால் உயிர்களுக்குப் பணிபுரியின்
இறைவனையெய் திடுதற் காகும்;
மறையனைத்தின் முடிவிதுவென் றருள்ஞான
வள்ளல்அருள் மழைபொ ழிந்தார்;
நிறைமகிழ்வுற் றுடல்சிலிர்க்க விழிகளில்நீர்
பெருகமக்கள் கேட்(டு) உவந்தார். 259

எளியசொற்க ளால்அரிய கருத்துகளை
இனிதுரைக்கும் அற்பு தத்தைத்
தெளிவுபெற யாவருக்கும் உண்மையினை
விளக்குசெம்மல் அருளின் மாண்பைக்
களிமிகுந்த உளத்திெனடும் அனுபவித்த
பாளையங்கோட் டையில்வாழ் மக்கள்
ஒளிமிகும்அண் ணலைப்பணிந்து தம்மூருக்(கு)
அழைத்திடநன் றுளத்துட் கொண்டார். 260

## பாளையங்கோட்டை

தமிழ்மணம் மிகுநற் பாண்டிய நாட்டில்
தாமிர பரணிபாய்ந் தினிதே
அமிழ்தினு மினிய செந்நெலை ஏனைப்
பொருள்களை அமிதமாய் வழங்கி
இமிழ்திரை ஞாலத் தின்பவாழ் வருளும்
நெல்லைமா நகரினுக் கணித்தாய்
அமைவுறு நல்லூர் பாளையங் கோட்டை
அதன்சிறப் பளப்பரி தாமால். 261

தக்கநல் வேளாண் குடிமக்கள் மிகுந்து
தழைவுறும் அந்தநல் லூரில்
மிக்கநல் வேளாண் மையும்உயர் தாளாண்
மையும்வழி வழியதாய் விளங்க
துக்கம்யா வையும்தீர்த் தருள்புரி ஞானச்
சுடரொளிக் குருபர னுரை
அக்கடி நகருக் கழைத்திட விழைந்தார்
அன்பினிற் சிறந்தவோ ரடியார். 262

கணபதிப் பிள்ளை யெனும்பெயர் பூண்ட
அவர்பல ருடன்நனி கலந்தே
இணையில்சீ ரண்ணல் எழுந்தருள் இராம
நாதமா புரத்தினுக் கேகி
உணர்வெலா மொன்றிப் போற்றிநன் றெங்கள்
ஊர்க்கெழுந் தருளுகென் றிரந்தார்;
பணிவுசால் அவர்பக் குவத்தினை யுணர்ந்த
அண்ணலார் பரிவுட னிசைந்தார். 263

கணபதிப் பிள்ளை அடைந்தநன் மகிழ்வைக்
காசினி மேற்சொலற் காமோ
கணமதி லூர்க்குச் செய்தியை விடுத்தார்
கமுகுநற் கதலி பைந்தெங்கு
மணமலர் மாலை மகரதோ ரணங்கள்
வண்ணமார் கொடிபல பொலியக்
கணகண வெனவாத் தியம்பல வொலிப்பக்
கடிநகர் திகழ்ந்ததின் னெழிலால். 264

அண்ணலார் ஊரின் அருகணு கியதும்
சல்லரி தண்ணுமை மேளம்
வண்ணவெண் சங்கம் ஆதிய பலவாம்
வாத்தியம் ஒலித்தன;பெண்கள்
பண்ணினுற் பாடிப் போற்றினர்;அன்பர்
பரவினர்,அரவென ஆர்த்தார்;
எண்ணரும் புலவர் வாழ்த்தினர்;அண்ணல்
இன்னருளுருக்கண்டு தொழுதார். .265

வேறு

அண்ணலையோ ராசனத்தில் இனிதமர்த்தி
அடிமலரை நீரா லாட்டி
வண்ணமலர் பலசூட்டி வண்கனிகள்
வைத்தினிதா ராதித் தார்கள்
அண்ணலருட் சிறப்பெண்ணி அகமுருகி
அடியரெலாம் போற்றி னுர்கள்
எண்ணரிய பேரன்பால் வலம்புரிந்து
திருவடியில் இறைஞ்சி நின்றுர். 266

அடியவர்தம் பேரன்பும் ஆர்வமும்கண்
டண்ணல்சில நாள்தங் கிட்டார்;
படியின்மிசை தாம்புரிய வந்தசெய
லினைப்பரிந்து செய்ய லானுர்;
அடியவர்கள் உயர்வுறவும் அன்பர்அருட்
டிருநெறியேற் றிடவும் வேண்டி
நெடியஅருட் கருணையுடன் தூயஅரு
ளுரைகள்பல நிகழ்த்தி னுரால். 267

அருட்சட்ட நெறிபுதுமை யானதென்றும்
அதிற்சேர்த லாகா தென்றும்
மருட்பெற்ற மனத்தோடு நினைத்தவரும்
வருகுருவைக் காண்போ மென்றே
இருட்பற்றுத விர்ந்துய்ய நினைத்தவரும்
வந்திருந்தார்; அவர்கட் கெல்லாம்
தெருட்பெற்ற திருவார்த்தை யினிதருளி
அருளண்ணல் தெளிவு தந்தார். 268

உயிர்க்குயிராய்க் கலந்தெங்கும் நீக்கமற
நிறைந்தொளிரும் ஒருவன் எந்த
உயிர்க்கெதனை எப்போதெவ் வாறளித்தல்
வேண்டுமென உணர்ந்தி கின்றான்;
உயிர்களவ னைப்பூர்ண மாய்நம்பிப்
போற்றின்உயர் வெய்த லாகும்
செயிர்காமம் நீக்கித்திட பக்தியும்வை
ராக்கியமும் பேணல் வேண்டும். 269

நம்மைப்படைத் தோன்நம்முள் இருக்கின்றான்
நன்றவனைக் காண லாகும்
எம்மையினும் துணையாக இருக்குமவன்
நாமமென்றும் இன்பம் நல்கும்
மும்மைமலம் எனும்அழுக்கு நமைவிட்டு
நீங்கஎன்றும் முயலல் வேண்டும்
செம்மையுற உயிரையெலாம் காத்தல்தொழி
லெனக்கொடிறை திகழு கின்றான். 270

அவனிருக்க நமக்கேதும் வறுமையில்லை
தளர்ச்சியில்லை அல்ல லில்லை
அவனருளைத் துணையாக்கொண் டோர்க்கென்றும்
அணுவளவும் அச்ச மில்லை
அவனருளின் சிறப்பைமறை யனந்தமும்நன்
றனவரதம் ஓதி யேத்தும்
அவனருளைப் பெறும்எளிய வழிசட்டம்
என்றறிந்து பேணல் வேண்டும். 271

திட்டமுற மெய்யன்பொ டவனைநம்பி
வழிபாடு செய்மின்; உய்மின்;
சட்டநெறி புதியதன்று: தொன்றுதொட்டுத்
தவவலிமை மிக்க தூய
சிட்டர்பலர் கையாண்டு தெளிவுபெற்றுச்
செழுமறையில் செப்பி யுள்ளார்;
இட்டமுடன் வைகறைநீ ராடின்அகத்
தூய்மை,புறத் தூய்மை யெய்தும். 272

எவ்வுயிர்க்கும் பொதுவான திருநெறியே
இனியஅருட் சட்ட மாகும்
செவ்வையுற எவ்வுயிர்க்கும் அன்புசெயல்
தெய்வவழி பாடென் றோர்மின்;
எவ்வுயிர்க்கும் அணுவளவும் தீங்கியற்ற
எண்ணுவதும் தவறென் றோர்மின்;
எவ்வுயிரும் இன்பமுற நாடினெங்கும்
இன்பவொளி திகழும் நன்றே. 273

எனத்திருவாய் மலர்ந்தருளும் அருளண்ணல்
இனிதங்குக் கூடி நின்ற
சனத்திரளை அருளால்நோக் கிச்சட்டம்
பேணியின்ப மடைவீ ரென்றார்;
அனைத்துநலம் அருள்சட்டம் அவனிமிசை
சிறந்ததென அறிந்துட் கொண்டார்;
வினைத்தொகைநீங் கிடுமின்பம் மேவுமென
உணர்ந்துமக்கள் உவகை பூத்தார், 274

இப்படிநாள் தொறும்அண்ணல் அங்குறுவோர்க்
கருளுரைகள் இனிது சொல்வார்;
செப்பரும்பே ரன்போடும் மக்களெலாம்
செவிமடுத்தின் பெய்து வார்கள்;
ஒப்புயர்வில் சட்டநெறி உலகில்நனி
பரவியுயிர்த் தொகைகட் கெல்லாம்
மெய்ப்பயன்நல் கிடவேண்டும் எனும்கருணை
யாலண்ணல் விளம்பி வந்தார். 275

அருட்சட்டம் மேற்கொண்டு பலர்புதிய
அடியவராய்த் திகழ்ந்தார் அங்கண்;
தெருள்மிக்க கணபதியாப் பிள்ளைபல
அடியருடன் சேர்ந்து பேசி,
அருளண்ணல் திருவடிதீண் டப்பெற்ற
பாதுகையொன் றமைந்தா லிங்கண்
இருள்நீக்கி யொளிவீசி யென்றும்நமக்
குறுதுணையா யிருக்கும் என்றே, 276

எண்ணினர்பா தக்குறடு நம்குரவர்
அணிவதிலை யேயிஃ தெவ்வா
றண்ணலிடம் கூறிடுவ தெனத்தயங்கி
யிருந்தனர்;இஃ தண்ண லோர்ந்தே
எண்ணுவதைத் தயக்கமின்றி இயம்புகென,
அடியவர்கள் பணிந்து ரைத்தார்
அண்ணல்திரு வடிமலர்கட் கணிபாதக்
குறடணிவித் ததனை யிங்கே, 277

அண்ணலருள் நினைவாக வைத்துப்பூ
சித்திடுதற் கடியா ரெல்லாம்
எண்ணுகின்றோம்; அண்ணலதற் கிசைந்தருள
வேண்டுமென வேண்டி நின்றார்;
அண்ணல்உடை யவன்கணக்கை யுன்னிவிடை
கூறாமல் அமைதி யுற்றார்;
அண்ணல்தடை கூறவில்லை யென்றடியர்
அகமகிழ்ந்து செயல்மேற் கொண்டார். 278

உயர்ந்தசந்த னக்கட்டை யினைக்கொண்டு
நல்லபடி உளுற்ற வல்ல
செயல்திறனர் சிற்பியைக்கொண் டண்ணல்திரு
வடிமலர்க்குச் சேரத் தக்க
நயமிகுபா தக்குறடைச் செய்தமைத்தார்;
ஞானவொளி யண்ண லார்தாள்
இயமொலிக்கப் பதித்தருள்நாள் இனிதுசுற்றுப்
புறஊர்கட் கறிவித் திட்டார். 279

திருமஞ்ச னப்பொருள்கள் சேகரித்தார்
திகழ்வெள்ளிக் கிழமை நாளில்
அருளண்ண லாரையொரு நாற்காலி
யினிலினிதே யழகார் முத்துப்
பெருவிதா னத்தினடி யினிலுண்மை
யன்போடும் பிறங்கச் செய்தார்
திருவடித்தா மரைகளை நூ தனப்பாதக்
குறட்டின்மிசை திகழச் செய்தார். 280

பலவகையாம் அபிடேகங் களும்நடத்திப்
பாங்குடனீ ரத்தை மாற்றி
மலர்த்தொடைகள் பலசாத்தி மாண்புடனர்ச்
சனைபுரிந்து மகிழ்வி னோடும்
இலகுகனி வகையொடமு தினிதுபடைத்
தெழிலுறுகர்ப் பூரங் காட்டி
நிலவுதிரு வருட்பாடல் பலபாடி
நியமமுடன் பணிந்து நின்றார். 281

நறுமலரின் உயர்மணமும் பழவகையின்
மணமும்நறுஞ் சந்த னத்தின்
செறிமணமும் திருநீற்றின் மணமும்திகழ்
பன்னீரின் மணமும் தூப
நறுமணமும் நெய்மணமும் அடியரன்பு
நிறைமணமும் அண்ண லார்தம்
நிறையருளின் மணமுமெங்கும் நிறைந்தடியர்க்
கானந்தம் புகட்டிற் றம்மா. 282

ஐந்துபொறி புலன்களும்நன் றடங்கியரு
ளண்ணலடி மலரைச் சார
சிந்தையிற்பொங் கிடுமார்வம் திகழண்ணல்
அருளுருவிற் செறிந்து மேவ
வந்திழிகண் ணீரருவி யிடையின்றிப்
பெருகஉடல் புளகத் தோடும்
முந்துமொழி குழறஉய ரன்போடும்
மொழிமாலை சூட்ட லானார். 283

## குருநாதர் துதி

('மற்றுப்பற்றெனக்கின்றி' என்றபண்)

ஓதரும்புக ழாளனேதிற லாளனேஉண்மை யாளனே
சீதநீரில் முழுகுவோர்க்கருள் செய்திடும்கரு ணாளனே
மாதவம்தரு நிட்டைபேணிடு மாண்பினோர்க்கரு ளேசெய்நின்
பாததூளி படுதலாலிவ் வுலகம்பாக் கியம்செய்ததே. 284

போதனேபஞ்ச பூதனேஉயர் போகம்யாவும் புணர்த்திடும்
நாதனேநவ நாதனேதவ நாதனேகுரு நாதனே
நீதனேஅருள் வேதனேஅன்பு நீர்மையாளர் நினைக்கும்நின்
பாததூளி படுதலாலிவ் வுலகம்பாக்கியம் செய்ததே. 285

காதலாகிக் கசிந்துபோற்றும்மெய்ப் பக்தர்கட் கருள்கர்த்தனே
பூதபௌதிக மாகியெங்கும் பொலியும்தூய அழகனே
வேதமாகம மாகிப்பல்வித நூல்களான விகிர்தநின்
பாததூளி படுதலாலிவ் வுலகம்பாக்கியம் செய்ததே. 286

மாதமாகிக் கிழமையாகி வருடமாயமை மாண்பனே
ஏதமேயறி யாதமாந்தர் இதயமீதமர் ஏகனே
சாதல்மீண்டு பிறத்தல்நீக்கருட் சட்டம்ஒன்று வழங்குநின்
பாததூளி படுதலாலிவ் வுலகம் பாக்கியம் செய்ததே. 287

மூதறிஞர்கள் முத்தர்கள்அரு ளாளர்கள் முன்புகண்டதை
மாதவப்பய னாலறிந்து தெளிந்துவையத்திற் கீந்தனை
கோதகன்றமெய் யன்பரில்லம் குறுகிநன்றருள் செய்யும்நின்
பாததூளி படுதலாலிவ் வுலகம்பாக்கியம் செய்ததே. 288

வேறு

எங்கள்விருப் பத்தினையீ டேற்றியருள்
சுரந்தஅருட் கருணை போற்றி
துங்கமிகும் சட்டநெறி தொல்புவிக்கு
வழங்கியருள் தூய்மை போற்றி
மங்களதூ ரியம்முழங்க இங்கணுற்றெம்
மயல்தவிர்த்த மாண்பே போற்றி
எங்கும்அரு ளொளிபெருக எழில்மிகுபா
துகைவழங்கெம் மிறையே போற்றி 289

---



குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்கு
திருநெல்வேலி பாளையங்கோட்டை அடியார்கள் புரிந்த
திருவடி பூசை

என்றுபல வாறுகத் துதித்தின்புற்
    றுருகணம்தங் களைம றந்தார்
பொன்றிடுகா மம்கோபம் முதலான
    பகைவென்று பொலிவா ரானுர்
துன்றிடுபே ரன்பாற்கட் டுண்(டு)அருட்பே
    ரானந்தம் துய்க்க லுற்ருர்
நன்றவர்க ளன்றடைந்த பெருமகிழ்வை
    நம்வாயால் நவிலற் காமோ? 290

## அவனுப்பேரி - 1

நெல்லையப்பர் திருக்கோயில் கொண்டருளி
    யுள்ளநெல்லை வட்டந் தன்னில்
சொல்லருஞ்சீர் நிறைஅவனுப் பேரியில்வாழ்
    அருட்சட்ட அடியார் அன்பர்
அல்லலறுத் தானந்த வாழ்வருளிப்
    பேணும்அரு ளண்ண லாரை
நல்லமுறை யால்தம்மூர்க் கழைத்துவந்து
    சிறப்புச்செய நாடி னுரால். 291

உடையவன்றன் கணக்குணர்ந்த அண்ணலார்
    உவந்தப்பதிக் குறுதல் நோக்கி,
உடலுருக உளமுருக உரைகுழற
    அடியரன்பர் உவகை கொண்டார்;
கடலில்மடை திறந்தனைய கருணையுடன்
    போந்தருளும் அண்ண லாரை
அடருமுண்மை யன்போடும் சென்றுபணிந்
    தினிதூர்க்குள் அழைத்துச் சென்ருர். 292

அருட்சட்டத் திருநெறியை அன்போடும்
    மேற்கொண்ட அடியா ரான
தெருட்பெற்ற காந்திமதி நாதபிள்ளை
    செப்பரும்பே ரார்வத் தோடும்
மருட்பற்றை யறநீக்கும் மாஞானப்
    பேரரசைத் தம்மில் லத்தில்
உருக்கத்தொ டேயழைத்துச் சென்றினிதொ
    ராசனத்தில் ஒளிரச் செய்தார். 293



குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்கு
திருநெல்வேலி பாளையங்கோட்டை அடியார்கள் புரிந்த
திருவடி பூசை

என்றுபல வாருகத் துதித்தின்புற்
றுருகணம்தங் களைம றந்தார்
பொன்றிடுகா மம்கோபம் முதலான
பகைவென்று பொலிவா ரானூர்
துன்றிடுபே ரன்பாற்கட் டுண்(டு)அருட்பே
ரானந்தம் துய்க்க லுற்றூர்
நன்றவர்க ளன்றடைந்த பெருமகிழ்வை
நம்வாயால் நவிலற் காமோ? 290

## அவனுப்பேரி - 1

நெல்லையப்பர் திருக்கோயில் கொண்டருளி
யுள்ளநெல்லை வட்டந் தன்னில்
சொல்லருஞ்சீர் நிறைஅவனுப் பேரியில்வாழ்
அருட்சட்ட அடியார் அன்பர்
அல்லலறுத் தானந்த வாழ்வருளிப்
பேணும்அரு ளண்ண லாரை
நல்லமுறை யால்தம்மூர்க் கழைத்துவந்து
சிறப்புச்செய நாடி ஞரால். 291

உடையவன்றன் கணக்குணர்ந்த அண்ணலார்
உவந்தப்பதிக் குறுதல் நோக்கி,
உடலுருக உளமுருக உரைகுழற
அடியரன்பர் உவகை கொண்டார்;
கடலில்மடை திறந்தனைய கருணையுடன்
போந்தருளும் அண்ண லாரை
அடருமுண்மை யன்போடும் சென்றுபணிந்
தினிதூர்க்குள் அழைத்துச் சென்றூர். 292

அருட்சட்டத் திருநெறியை அன்போடும்
மேற்கொண்ட அடியா ரான
தெருட்பெற்ற காந்திமதி நாதபிள்ளை
செப்பரும்பே ரார்வத் தோடும்
மருட்பற்றை யறநீக்கும் மாஞானப்
பேரரசைத் தம்மில் லத்தில்
உருக்கத்தொ டேயழைத்துச் சென்றினிதொ
ராசனத்தில் ஒளிரச் செய்தார். 293

திருவடித்தா மரையையநறு நீர்கொண்டு
செவ்வையுற விளக்கித் தூய
மருவுநறு மலரிட்டுப் பூசித்து
வாயார வழுத்தி வாழ்த்தி
அருவுருவாய் விளங்கிடுநீர் அடியேங்கள்
செய்ததவப் பயனு லெங்கள்
குருமணியாய் எழுந்தருளும் பேறுபெற்றேம்;
குறையனைத்தும் நீங்கிற் றென்றார். 294

கருணைவடி வுடையஅருட் கற்பகமே
காசினியை மூடி யுள்ள
இருள்நிறைவைத் தவிர்த்துண்மை இன்பவொளி
யூட்டியருள் எம்பி ரானே
அரணெனஇங் கடியேங்கட் கமைந்துள்ள
ஆதிபரம் பொருளே தூய
சரணமலர்க் கமலங்கள் போற்றிஉயும்
தவப்பேற்றை யருள்வீ ரென்றார். 295

அவருடைய உள்ளன்பை உணர்ந்தண்ணல்
அவண்சிலநாள் தங்கி னுர்கள்
உவகையுடன் அவ்விடத்திற் குறுமன்பர்
தமக்கினரு ளூட்டி னுர்கள்
நவிலரும்பல் அற்புதங்கள் ஞானவள்ளல்
அருட்டிறத்தால் இயற்றி னுர்கள்
புவிபொலிய வந்தஅண்ணல் புகழெங்கும்
பரவிநலம் விளைத்த தன்றே. 296

ஒருநாள்நெல் லையிலன்பார் ஒருவணிகர்
சுவாமிகளைக் காண வந்தார்
பெருவணிகத் தினில்நட்டம் பலலக்ஷம்
பீடிக்கும் என இருந்தார்
புரிவதறி யாதுதிகைத் திட்டஅவர்
அண்ணலருள் புரிவா ரானுல்
வருமவ்விடர் தவிர்ந்தேகும் எனநினைந்து
வள்ளலமர் இடத்தி லுற்றார். 297

பணிவுமிகும் அடியவர்கள் நடுவிலமர்ந்
தருளுரைகள் பகரும் அண்ணல்
வணிகருள்ளே நுழைந்தவுடன் வாடும்அவர்
முகம்நோக்கிக் கூற லானூர்
துணிவுடனே இருப்பின்இறை யருள்காக்கும்
அஞ்சேல் என்றருளிச் செய்ய
வணிகர்வியப் புற்றுவள்ளல் வாக்குன்னி
ஆறுதலுற் றவண்அ மர்ந்தார். 298

சிலநொடிக ளினில்ஒருவன் வந்துவணி
கத்தில்வர இருந்த நட்டம்
விலகிவிட்ட தெனக்கூறி னன்;வணிகர்
வியப்பினுக்கோ ரெல்லே யுண்டோ?
பலரும்வியப் புற்றூர்கள் அண்ணல்திரு
வருளுணர்ந்து பரவி னூர்கள்
தலமிசைவீழ்ந் திருவிழியும் மழைபொழிய
வணிகரண்ணல் தாள்போற் றிட்டார். 299

அங்கிருந்த அனைவருமே தமைமறந்தண்
ணலின்அருளில் தோய்ந்திட் டார்கள்
பொங்குறுமைம் புலவேட்கை ஆதிபகை
களைமறந்து போற்றி னூர்கள்
அங்கமெலாம் கரைந்துருக அகமுருகி
வணிகரன்பால் வழுத்தி நின்றூர்
துங்கமிகும் சட்டநெறி பேணிஅனை
வரும்தூய்மை மிகப்பெற் றூரால். 300

உண்மையடி யாராகி வணிகரண்ணல்
ஒண்பதங்கள் போற்ற லானூர்
திண்மைசெறி சட்டநெறி யின்பெருமை
திசையெங்கும் பரந்த தண்ணல்
தண்மைசெறி பேரருளால் நற்காந்தி
மதிப்பிள்ளை தம்ம னைவி
திண்மனத்தை வருத்திவந்த தீராநோய்
தீர்ந்ததம்மை செம்மை பெற்றூர். 301

கணவனும்ம னைவியுமாய் மெய்யன்பாற்
கருணைமிகும் அண்ண லார்க்குப்
பணிபலவும் பண்போடும் புரிந்துபவக்
கடல்கடந்து பயன்பெற் றுய்ந்தார்
அணிதிருநெல் வேலியவ னுப்பேரி
மக்களன்பில் திளைத்த அண்ணல்
வணமிகுகுற் றாலவரை யினைநினைந்து
வண்மையுடன் செல்ல லுற்றார். 302

## திருக்குற்றாலம்

அலகில்பல தவசிகளை முனிவர்களை
ஆக்கிஉல கத்தைப் பேண
இலகுபயிற் சிக்கூட மாகியகுற்
றாலமெனும் எழிலார் தூய
தலமதுபொங் கருவியொடும் திகழ்வதைப்பல்
தவசிகளின் சிறப்பை யங்கண்
உலைவில்தவம் தாம்புரிந்த ஒண்குகையை
அடியவர்க்குக் காட்ட உன்னி, 303

அருவிநன்னீ ராட்டிப்பல அற்புத
விளக்கமெலாம் அருள வுன்னிப்
பொருவிலரு ளண்ணல்பல விண்மீன்கள்
புடைசூழச் செலும்திங் கள்போல்
உருகுமுள முடையஅடி யவரோடும்
உயர்மலைமீ தேறி னார்கள்
திருவருளைப் பெருக்குசண்ப காதேவி
திருக்கோயில் சேர்ந்திட் டார்கள். 304

அண்ணலங்கு சென்றதுமே முன்னைநினை
வுகள்தோன்றி யவருட் சூழ
திண்ணியநன் னிட்டையினில் ஆழ்ந்தார்கள்
உடன்திகழ்ந்த அடியா ரெல்லாம்
அண்ணலருளைப்போற்றி அகமொடுங்கி
நிட்டையினில் அமர்ந்திட் டார்கள்
எண்ணருமக் காட்சியினைக் காணஎழி
லார்விழியா யிரம்வேண் டாமோ? 305

சமயமத சாரமெலாம் திரண்டசட்டச்
செந்நெறியில் ஒழுகு சான்றோர்
அமைதியுடன் அண்ணலரு கமர்ந்துநிட்டை
பேணுமுயர் அழகை நோக்கி
இமையவர்கள் உலகிலற நெறிபரவும்
எனஇனிது வாழ்த்தி னார்கள்
இமையெனும்மெல் விதழ்சிறிது விரியஅண்ண
லெழில்விழிகள் மலர்ந்த வம்மா. 306

அடியவரின் அகமலர்கள் விரிந்தன; அந்
நிலையிலண்ணல் அங்கி ருந்த
அடியவர்க்குச் சொல்லாமல் சொல்விளக்
கியஉண்மை பலவாம்; அந்த
அடியவர்கள் அடைந்தநற்பே றகிலமிசை
ஆரடைய வல்லார்? சற்றே
அடியவர்கள் உணர்வுபெற்ற போதிலண்ணல்
அடிமலரில் வணங்கிச் சொல்வார். 307

அண்ணலே அடியேங்கள் தங்களொடுற்
றிங்கிப்போ தடைந்த பேற்றை
எண்ணரிது சொல்லரிது பிறவிபெற்ற
பெரும்பயனை இந்நாள் பெற்றோம்
திண்ணியநற் றவம்தாங்கள் செயும்பேறு
பெறும்குகைகாட் டிடுவீர் என்றார்
அண்ணல்குறு நகையொடரு வியைக்குகையைக்
காட்டியருள் புரிந்தா ரங்கண். 308

அடியவர்கள் அருவிநன்னீ ரினிலாடி
அருட்குகையுள் நுழைந்த போதே
உடல்புளகித் துளமுவந்து வெளியினில்வந்
தொப்பிலரு ளண்ண லார்க்கிவ்
விடத்துணவு கொண்டுவந்து கொடுத்தவரார்
இனிதுபணி விடைசெய் தோர்யார்
திடமுறஎத் தனையாண்டிங் கிவர்தவம்செய்
தனரோஎன் றெணிவி யந்தார். 309

நாம்கண்ணி னுற்காணும் உயர்தெய்வம்
நம்சாமி யென்ப துண்மை
பாங்குறஇவ் வரியதவம் இவர்போலப்
பாரினிலார் இயற்ற வல்லார்
ஈங்குயிரின் திரள்அனைத்தும் இருவினைகள்
தவிர்த்தருட்பே ரின்ப மெய்த
ஓங்குதவம் இவர்புரிந்தார் எனில்அண்ணல்
ஒண்கருணைக் கொப்பே தென்றார். 310

சென்னைநகர் வாழொருவர் கீல்வாயுப்
பிணியால்பா திக்கப் பட்டுப்
பன்னரும்பல் மருத்துவமும் பார்த்தும்பிணி
தீரவில்லை என்று பல்லோர்
இன்னருளார் அண்ணலிடம் இனிதப்பிணி
யாளரைத்தூக் கிக்கொ ணர்ந்தார்
முன்னர்புரி புண்ணியத்தின் பயனவரை
யண்ணல்முனர் சேர்த்த தம்மா. 311

அனைத்துயிர்க்கும் அருட்கருணை பாலித்தற்
கவதாரம் செய்த அண்ணல்
வினைத்தொகையைத் தவிர்கருணை யொடுநோக்கி
வியனருவி நீரி லாட்டி
அனைத்துநலம் அருள்திருநீ றணிவித்தார்
அவர்பிணியோ ரணுவு மின்றி
நினைப்பரிய முறையில்நொடி யினில்நீங்கிற்
றனைவருமே அதிச யித்தார். 312

கொடியபிணி தீர்ந்ததுகண் டதிசயித்துக்
குருமணியைக் கும்பிட் டேத்தி
நெடிதுபல நாளாகத் தீராமல்
நிலவிவருத் திட்ட நோயை
நொடியினில்தீர்த் தருள்புரிந்தீர் நும்பெருமை
யடியேனல் நுவலற் காமோ
அடியவனு யடியனையும் ஏற்றருள்வீர்
என்றுதுதி செய்ய லானார். 313

குருநாதர் துதி

துணையெனஎல் லாஉலக உயிர்களுக்கும் அமைந்த
தாயவனே தொல்மறையின் சாரமெலாம் திரட்டி
அணைகடந்த வெள்ளமென அருளமுதை அருத்தும்
அற்புதமார் சட்டமொன்றை அவனிமிசை யளித்துப்
புணையெனவே பவக்கடலி னின்றுகரை சேர்க்கும்
புனிதகுரு பரம்பொருளே பூரணமே ஞான
விணைக்கடந்து விளங்குமொரு வேதாந்தப் பொருளே
வியன்புவியில் எனையாள விழைந்தவிழு மியனே. 314

பல்வளமு மெய்தியுன்றன் பக்தரெலாம் வாழப்
பரிந்துதிரு வருள்புரிந்து பாலனம்செய் யரசே
நல்வரங்கள் அளித்தருளும் ஞானகுரு மணியே
நாதாந்த சபையிலருள் நடனமிடு மிறையே
வல்வினையின் வலிதவிர்த்து வாட்டமெலாம் தவிர்த்து
வருகவென அடியவரை அருகழைத்தாள் துணையே
கல்வியுடன் கேள்வியறி வொழுக்கமிலா இந்தக்
கடையனுக்கும் நின்திருத்தாட் கமலமது
வருளே. 315

அற்புதமாம் திருநெறியை அவனிமிசை வழங்கி
அருளரசு புரிந்தாளும் ஆனந்த மணியே
சிற்பரமே தற்பரமே தேசிகமா மணியே
திருவருளாம் கடல்கடைந்து திரட்டுமுய ரமுதே
விற்பனர்க்கும் உற்பனமாய் விளையும்உயர் விளைவே
வினையனைத்தும் பொசுக்குமொரு மெய்ஞானக் கனலே
கற்பனைத்தும் திரண்டதெனும் உருத்தாங்கும் அடியார்
கருத்திலமர் குருபரனே கடையனையாண் டருளே. 316

கவின்மிகுந்த கற்பகமே கருணையெனும் கனியே
காமாதி பகையனைத்தும் எரித்திடுசிற் கனலே
புவியிலருட் சட்டமெனும் புனிதநெறி வழங்கிப்
பொல்லாங்கெல் லாம்தவிர்த்துப் போற்றும்அரு ளரசே
குவியுமனம் கண்டறியாக் கொடியனையும் நினது
குரைகழற்காட் படுத்திடுவாய் குறைகள்தவிர்த் திடுவாய்
நவிலரிய ஞானசுக வமுதமருத் திடுவாய்
நானறியா இடத்திலங்கும் ஞானமணி விளக்கே. 317

தேவரெலாம் வாழ்த்தவொரு திருவருட்செந் நெறியைச்
செழும்புவிக்கு வழங்கியருள் தேசிகனே தமியேன்
பாவமெலாம் நீறுக்கிப் பக்குவம்செய் தருளிப்
பரமபவித் திரனுக்கிப் பரவமுதூட் டிடுவாய்
காவலெலாம் கடந்தொளிரும் கருணைவடி வினனே
காசினியை விண்ணுலகாய் மாற்றவந்த கதிரே
கோவமெலாம் காமமெலாம் பொடியாக்கும் ஞானக்
கொழுந்தேசற் குருமணியே குறைதவிர்க்கும்
நிறைவே- 318

---

வேறு

தீராம லிருந்தபிணி யைத் தீர்த்துச்
செம்மைபெறு மாறு செய்த
ஆராநல் லமுதனைய அருளண்ணல்
சிறப்பையினி தன்பா லேத்திப்
பாராட்டி வலம்வந்து பதமலரிற்
பணிந்தேத்திப் பரவி நிற்கும்
சீரார்அன் பருக்கண்ணல் திருவருள்செய்
தார்;பலரும் போற்றி னரால். 319

திருவவதா ரம்புரிந்த இருடிநகர்த்
திருத்தலத்தி னுக்குச் செல்லத்
திருவுளம்கொண் டாரண்ணல் அடியர்பலர்
அண்ணலுடன் செலநினைத்தார்
குருமணியும் அடியாரும் குவலயத்தில்
புகழ்மிக்க கோதில் சீரார்
இருடிநகர் அடைந்தார்கள்;இடையில்பலர்க்
கண்ணலருள் செய்து சென்றார், 320

ஞானகுரு நாதர்வரும் செய்தியுணர்ந்
ததும்இருடி நகர மக்கள்
ஊனமில்மெய் யன்போடும் சென்றழைத்துக்
கொண்டுவந்தங் குபச ரித்தார்
பானுவினைச் சூழொளிபோல் பக்தியொடும்
உடன்வந்த அடியார்க் கெல்லாம்
போனகமா தியவசதி யாவுமளித்
தன்போடும் போற்ற லானார். 321

## இரெட்டியப்பட்டி உத்ஸவம்

அண்ணல்அவ தாரம்செய் திடும்சிறப்பார்
அருள்தலமாம் இருடிப் பட்டி
வண்ணமிகும் சிற்றூராய் இருந்தாலும்
கீர்த்திமிக வாய்ந்த தாகும்
அண்ணல்திருப் பெயர்சுப்ர மண்யமென
அமைந்தாலும் அதைம றைத்துத்
திண்ணியதன் திருப்பெயரால் திகழவைத்த
பெருஞ்சிறப்பிவ் வூர்க்குண் டன்றே? 322

இத்தகைய பெருமைமிகும் இத்தலத்தில்
வாழும்உயர் பேறு பெற்றோர்
சித்தர்களின் பெருந்தலைவ ராய்த்தமது
திருநகரில் அவத ரித்த
சுத்தசம ரசஞான வள்ளலுக்குத்
தூயஉத்ஸ வம்செய் தேத்த
மெத்தவிருப் புற்றூர்கள் அண்ணலிடம்
மெல்லமெல்ல விளம்பி னார்கள். 323

முக்கால மும்தெரிந்த முனிவரராம்
அண்ணலந்தத் திருத்த லத்தில்
எக்கால மும்திருவி ழாநடக்க
இருப்பதனை இதயத் தோர்ந்தே
அக்காலத் தவர்விழைந்த போதமைதி
யோடிருந்தார்; அஃது ணர்ந்த
தக்கார்க ளாம்அடியார் ஊரார்கள்
தகுசெயல்மேற் கொள்ள லானார். 324

ஊரினைநன் கேதூய்மை செய்தார்கள்
ஒண்மணலைப் பரப்பி னார்கள்
சீரியநல் லெழிற்பந்தர் அமைத்தார்கள்
செங்கனிகாய் தூக்கி னார்கள்
நேரியநல் வாழைமரங் களைநிறுத்தி
நீளோலைக் குருத்து கொண்டே
ஏரிலகும் கிளிகள்முத லியசெய்தங்
கினிதுமலர்ச் சரம்நாற் றிட்டார். 325

கோலமழ காகளங்கும் போட்டார்கள்
குலவுசெம்மண் பூசி னார்கள்
ஏலுமெழிற் கொடிகுடைசப் பரமாதி
எப்பொருளும் கொடுவந் தார்கள்
சீலமுட னபிடேக திரவியங்கள்
சேகரித்தங் கண்ண லார்க்குச்
சாலமகிழ் வோடுதிரு மஞ்சனத்தைத்
தக்கபடி நடத்தி னார்கள். 326

புதியவஸ்தி ரம்கொடுத் துடுத்திடச்செய்
தெழில்மலராற் பூசித் தார்கள்
மதுவிரிநன் மலர்மாலை பலசூட்டி
வழிபாடு புரிந்திட் டார்கள்
விதவிதமாம் கனிதேங்காய் வியனமுது
படைத்தாரா தனைசெய் தார்கள்
இதமுறநல் வலம்புரிந்து வாழ்த்திஇனி
தருள்திருநீ றணிந்திட் டார்கள். 327

அபிடேக தீர்த்தம்முத லாம்பொருள்கள்
அனைவருக்கும் அளித்திட் டார்கள்
விபுவாகத் திகழ்ந்தருளும் வித்தகனார்க்
கினிதமுதம் ஊட்டி னார்கள்
தபம்நாடும் அடியவர்க்கும் ஏனையர்க்கும்
தக்கஉண வருத்தி னார்கள்
சுபம்நாடி மாலையினில் தூயவழி
பாடுபுரிந் தேத்தி னார்கள். 328

அண்ணலைச்சப் பரத்தின்கண் எழுந்தருளு
வித்தழகார் மாலை சூட்டி
எண்ணில்பல வாத்தியங்கள் இனிதொலிக்க
இன்னடியார் கூட்டம் தூய
பண்ணியலால் அருட்பாடல் பலபாடிப்
பக்தியுடன் பின்னே சூழ
விண்ணவரும் மண்ணவரும் போற்றிட
விழாஇனிது நடத்தி னார்கள். 329

அன்பரெலாம் அரஹரவென் றொலிமுழக்கி
யானந்த மடைந்திட் டார்கள்
துன்பமெலாம் தீர்ந்ததின்பச் சுடர்துலங்கிற்
றெனஇனிது துதித்திட் டார்கள்
மன்பதைகட் கருள்நெறியை வழங்குவள்ளல்
வாழ்கவென வாழ்த்திட் டார்கள்
இன்பவளம் எத்திசையும் செழித்திடுக
என்னவொலி முழக்கி னார்கள், 330

அவரவர்இல் லங்களின்முன் னுறும்போது
மலர்மாலை சூட்டி னார்கள்
உவகையுடன் நறும்பனிநீர் தெளித்தார்கள்
தேங்காய்கள் உடைத்திட் டார்கள்
நுவல்பலநற் கனிவகைகள் படைத்துவிநி
யோகித்து நுகர்ந்திட் டார்கள்
புவிபுகழ்மண் டகப்படிகள் நடத்திஉயர்
குலவையிட்டுப் போற்றி னார்கள். 331

வீதிவலம் வந்துமுடிந் திட்டபினர்
விரவுமன்போ டண்ண லாரை
கோதிலொளிச் சப்பரத்தி னின்றில்லில்
ஆசனத்திற் குலவச் செய்தே
போதுபத மலரிலிட்டு வலம்வந்து
பணிந்தேத்திப் போற்றி னார்கள்
காதலுடன் கசிந்துருகிக் கவின்மிகுமின்
சொன்மலர்கள் சூட்டி னரால். 332

குருநாதர் துதி

('மற்றுப் பற்றெனக்கின்றி' என்றபண்)

வைய முய்ய வழி வகுத்து
வழித்துணை வரும் ஐயனே
பொய்யில் மெய்ந்நெறி புவியி லோங்கப்
புரிந்து காத்தருள் பூர்ணனே
மெய்யில் நற்றலம் தீர்த்தம் யாவும்
விளங்கும் மேன்மை யுணர்த்தியே
ஐயம்தீர்த்திரு டிப்பதிக்கண்
அமரும் சற்குரு மூர்த்தியே. 333

கற்ப கம்பொருள் யாவும் நல்கும்
தனைத்த ராதெனக் கூறுவார்
பொற்பு சான்றநீ நின்னையும் உண்மை
யன்பர்க் கீந்துட் பொலிகுவாய்
சிற்பம் சித்திரம் தேசம் காலம்
அனைத்து மாகித்தி கழுவாய்
அற்ப ரெம்மைத் திருத்தி யாளற்
கவத ரித்த அமலனே. 334

பன்னிப் பன்னி யுரைப்பி னும்நின்
படர்பு கழ்முடி வில்லதாம்
உன்னி உன்னி உளத்திற் கொள்ளினும்
உன்ன ரிதுன் னருட்டிறம்
இன்ன ருட்கெமை யீர்த்துப் பேணுன்
னியல்பை யென்னெனக் கூறுவேம்
மன்னு சீரிரு டிப்ப திக்கண்
வயங்கு சற்குரு மூர்த்தியே. 335

கோடி கோடி நலம்அடி யர்க்கு
நாளும் செய்யும் குழகனே
பாடிப் பாடி யடியர் போற்றிடப்
பண்பு நல்கும் பரமனே
தேடித் தேடி யடியர் சேர்த்திடும்
செல்வமாய்ப் பொலி செம்மலே
நாடி யன்பர் பரா விருடி
நகர்திகழ் குரு மூர்த்தியே. 336

சீதநீரில் விடியல் மூழ்கிநின்
செந்நெறி பற்றும் சீரினோர்க்
காத ரவென என்றும் எங்கும்
அமையும் பேரரு ளாளனே
காத லாகிக் கசிந்து ருகிக்கண்
ணீர்பெருக் கன்பர்க் கின்பருள்
நாத னேஇரு டிப்பதி யமர்
ஞான சற்குரு மூர்த்தியே. 337

வேறு

எனப்பலவா றடியரன்பர் துதித்தார்கள்
இன்னருட்பே றெய்தி னர்கள்
அனைத்துயிர்க்கும் அமைதிதரற் கவதரித்த
அருளண்ணல் அடியார் அன்பர்
வினைத்தொகையை நீக்கியருள் விளைத்தபடி
யருட்சுடராய் விளங்கி னர்கள்
மனத்தையவர் மலரடியிற் பதித்தவர்தம்
மாணருள் பெற் றுய்வோம் நாமே. 338

குளித்தலை

அடியர்பலர் விழைந்தபடி அணிதிருச்சி
ராப்பள்ளிக் கடுத்த ஊராம்
நெடியவளம் நிறைந்தகுளித் தலைக்கினிது
நிகரிலண்ணல் சென்று சேர்ந்தார்;
கடிமணமார் மலர்தன்நறு மணத்தாற்சூழ்
நிலையைக்கமழ் வித்தல் போலப்
படியிலருட் சட்டஅடி யரைச்சுற்றி
வாழ்பலரும் பக்த ராவார். 339

அண்ணலடி யவருறையும் இல்லங்கட்
கடிக்கடிசென் றடியார் தங்கள்
எண்ணமதி லுறுதியுற அருள்நெறியில்
இனிதூக்கி யுதவு வார்கள்;
திண்ணியநற் சட்டஅடி யார்கோபா
லய்யருக்குத் தீய நோய்வந் (து)
எண்ணில்துயர் தரும்போதில் அவரிடரைத்
தீர்க்கஅண்ணல் சென்றார் அங்கண். 340

தாயிணக்கா ணும்சேய்தன் குறைகூறி
யாறுதலைப் பெறுதல் போலத்
தூயஅடி யவர்அண்ணல் பால்தம்குறை
களைக்கூறித் தீர்த்துக் கொள்வார்
ஏயகதிர் கண்டலரும் தாமரைபோல்
இன்னடியார் உள்ள மெல்லாம்
நாயகனும் அண்ணல்வர வினைக்கண்டு
நனிமலர்ந்தின் பெய்து மாலோ. 341

உருள்புவியில் ஒப்பருஞ்சீர்க் காவிரிநன்
னதிநீர்பாய்ந் துலவாச் சிலம்
தெருள்மிகுநல் லிசைஞானம் சிறந்தபக்தி
தருநாட்டில் அண்ணல் சேர
அருள்விளையப் போகுதிவண் என்றடியார்க்
குணர்த்துதல்போல் அமித மான
பொருள்விளைவைத் தருமருதம் புகலரிய
வளங்களுடன் பொலிந்த தம்மா. 342

குருநாதர் எழுந்தருளி யிருப்பதறிந்
தூர்மக்கள் கூடி வந்து
பெருகார்வத் துடன்வணங்கிப் பெறலரிய
அருட்பேறு பெற்றுச் செல்வார்
குருநாதர் அவர்களுளப் பக்குவமோர்ந்
தருளுரைகள் கூறு வார்கள்
உருகாநல் லுளமும்உரு கிடக்கேட்டுப்
பலர்பேணி உய்ய லானார். 343

முனிசாமி சோழயர்தம் தம்பிஅரங்
கச்சாமி சோழ யர்க்குத்
துனியார்விப் புருதிப்பிள வைப்பிணிவந்
தெவ்விதத்தும் தீரா துள்ள
தெனக்கருணை யண்ணல்பதம் பணிந்திறைஞ்சித்
தீர்த்தருள வேண்டு மென்றார்;
தனிஞானப் பெருவள்ளல் தண்கருணை
யோடவரில் லினுக்குச் சென்றார். 344

இவர்பிழைப்ப தரிதென்ன ஒருவரிடம்
மற்றொருவர் இயம்பிக் கொண்டார்;
தவமிகும்அண் ணலைக்கண்டோர் பணிவோடும்
விலகிவழி விட்டு நின்றார்;
எவர்வந்திங் கென்னசெய இயலுமென்றோர்
சிலர்இவரால் தீரு மென்றார்;
தவமிகுமிவ் வண்ணல்பல பிணிதீர்த்துள்
ளார்என்றும் சாற்றி னார்கள். 345

உடையவன்றன் குறிப்பையுணர்ந் துலகிலுள
உயிர்கள்படும் துயர மெல்லாம்
துடைத்தருளி யின்பருளல் நோக்கமெனக்
கொண்டொளிரும் தூய வள்ளல்
நெடியசெவி யினிற்செய்தி யெட்டியதும்
அடியர்குறை நீங்கி யேகும்;
அடியர்க்கருள் புரியண்ணல் அப்பிணியா
ளரைத்தண்ணீ ராடச் செய்தார். 346

பதினறு கட்டியுடம் பினிற்றேன்றி
யுளதுகண்டு பரிவி னேடும்
அதிதூய பக்தியுடை யடியரைக்கொண்
டருள்நீறு பூசச் செய்தார்;
இதமோடு கட்டியொன்றைத் திருவிரலால்
இனிதுதட விக்கொ டுத்தார்;
இதுமுப்ப தொடுநான்கு மணியிற்குண
மாகுமென இயம்பி ஞரால். 347

ஆயுளுக்கே யண்ணல்கெடு வைத்துவிட்டார்
என்றுபலர் அச்ச முற்றூர்;
ஏயஅந்தக் காலத்துள் ளேயண்ணல்
தொட்டகட்டி இனிது டைந்து,
மேயபதி ஞறுகட்டி சீழிரத்தம்
யாவும்வெளி யாயிற் றங்கண்;
தூயதிரு நீறணிவித் திடரணமும்
தீர்ந்துகுண மாயிற் றன்றே. 348

உடம்பிலுள நாடிநரம் பனைத்தினையும்
தன்னுட்சிக் குட்ப டுத்தித்
திடம்பெறஒவ் வோரணுவி னுளும்கலந்தெவ்
வுயிரினையும் தெருட்டும் அண்ணல்
உடம்புமுழு வதும்உரித்த தேங்காய்போல்
உள்ளபதி ஞறின் சீழும்
உடைந்தகட்டி வழியாக நீக்கிநலம்
பெறப்புரிந்த தொருவி யப்போ? 349

கண்டவர்கள் அனைவோரும் அதிசயமுற்
றண்ணலருட் கருணை தன்னை
விண்டுரைக்க இயலாதென் றுளமார
வியந்தினிது விளம்பி னூர்கள்;
தொண்டுபுரி யடியார்கள் தம்மகிழ்வைச்
சொலவொணுமோ கோபா லய்யர்க்
குண்டெனுமந் நோய்விலகி அண்ணலரு
ளால்நலமுண் டாயிற் றம்மா. 350

அனைவோரும் அதிசயித்தார்;ஆரவாரம்
புரிந்தார்;உயிரை யெல்லாம்
நனியாட்டு விக்குமொரு பரமனிவ
ரேயென்ன நவில லுற்றூர்;
துனிநீக்கி வழிகாட்ட வந்தவள்ளல்
இவரென்னத் துதித்து நின்றூர்;
இனிதுநம்முன் தோன்றுமிவர் கலியுகத்தில்
கண்கண்ட தெய்வம் என்றூர். 351

குருநாதர் துதி

(''மற்றுப் பற்றெனக்கின்றி'' என்றபண்)

நோயனைத்தும் நொடியில் தீர்த்தருள்
நோன்மை யாளநின் சீரெலாம்
வாயினூற்சொல்லிச் சிந்தை யாலெண்ணி
மாணருட்பணி செய்து வாழ்
தூயவாழ்வையிவ் வேழை கட்குத்
தொடர்ந்து நீகொடுத் தாளுவாய்
ஆயபன்மறைச் சாரம் நன்னெறி
யென்றருள் குரு மூர்த்தியே. 352

கைப்பொருளினும் மெய்ப்பொருள்எனக்
காசினிக்கண் திகழ்ந்திடும்
ஒப்பில்செம்பொரு ளானநின்புகழ்
ஓதியுய்ய அறிகிலேம்
எப்பிறப்பினில் எந்தநன்மை புரிந்து
ளேம்எனல் கண்டிலேம்
எப்படியிவண் உய்வ தென்ன
இயம்பியாள் குருநாதனே. 353

ஓதும்நூல்கள் அனைத்தும்நீ அவற்
றுட்பொருள்கள் அனைத்தும்நீ
பேதமற்ற அபேதம்நீ பல்
பிணியும்நீக்கு பெரியன்நீ
போதவாணர் இதயம் மேவு
புராணன்நீ பரபோகம்நீ
பாதபங்கயம் பற்றிஉய்யும் நற்
பண்பருள்க பரமனே. 354

தத்துவங்கள்நீ தத்துவங்கள் கடந்திலங்கு தலைவன்நீ
முத்துநீநல் லொளியும்நீ பர முத்தி நல்கருள் மூர்த்திநீ
வத்துநீஅத னுள்ளி லங்கும் மகிமைநீ உயர் வண்மைநீ
எத்துறைக்கும் துணையெனத் திகழ் ஈசனே எம்மை
யாள்கவே. 355

சாலநல்ல மனம் படைத்தொளிர்
தக்க சீரடி யாரெலாம்
சீலமோடுனைப் போற்றி நின்னருட்
செல்வ மெய்தித் திகழ்கிறார்
ஞாலமீதுழல் யாமெ லாமும்நின்
நல்ல ருள்பெற ஊக்குவாய்
கோலம்யாவும் நொடியிற் காட்டும்
குணக்குன் றும்குரு நாதனே. 356

---

வேறு

என்றுபல வாறுக அண்ணலருட்
கருணையினை ஏத்தி யங்கண்
நின்றஅடி யாரன்பர் வலம்வந்து
நிலத்தினிற்றேய்ந் திறைஞ்சி னார்கள்;
பொன்றலில்சீர் அண்ணலவர் உளநிலையோர்ந்
தொப்பிலருள் புரிந்தார்; அன்பர்
அன்றடைந்த பெருமகிழ்வை அளந்துரைக்க
வல்லவரார் அவனி மீதே? 357

தவமிகுந்த அண்ணலரு ளாற்றலையிவ்
வாறுணர்ந்த தரணி மக்கள்
இவர்மனித ரல்லர்மனி தரைப்போல
இவண்போந்த தெய்வம் என்றார்;

இவரையிவண் தரிசிக்க நாம்செய்தவ
மேதவமென் றியம்பி னர்கள்;
உவமைசொலற் கரியசட்ட நெறிபேணிப்
பலர்உயர்வாழ் வாற்ற லானர். 358

புகமொடிகழ் விருப்புவெறுப் பின்பதுன்பம்
கடந்தருளாய்ப் பொலியும் தூய
தகவுமிகு மண்ணலிவை யேதொன்றும்
தம்செவியிற் கொள்ளா ரானர்;
அகமிசைநல் லூக்கம்அடி யார்க்கூட்ட
அருட்கரத்தால் தாள மிட்டே
மிகஇனிய மென்குரலால் அருட்பாடல்
இசைத்தின்பம் விளைக்க லானர். 359

அடியவர்அவ் வருளமுதை அகமுருகச்
செவிகுளிரப் பருகி னர்கள்;
படியின்மிசை பிறந்தபயன் பெற்றேமென்
றுளமாரப் பகர்ந்திட் டார்கள்;
நெடியபிற விக்கடல்கடந் துவிட்டோ
மென்றுபலர் நினைந்திட் டார்கள்;
கடிமலரின் மதுவையுண்ட வண்டினம்போல்
மயங்கிப்பலர் களித்திட் டார்கள். 360

அண்ணலுடை யவன்கணக்கின் படிதிருச்சி
ராப்பள்ளி யடைய உள்ளத்
தெண்ணியரு ளோடினிது புறப்பட்டுக்
கடம்பர்கோ யிலின்க ணுற்றார்;
அண்ணலுடன் புறப்பட்ட அடியவர்பின்
னேவந்து கொண்டி ருந்தார்;
அண்ணல்மிகு பசியோடும் களைப்போடும்
சோர்வுற்றங் கமர்ந்தி ருந்தார். 361

அவ்வமயம் முனுசாமி சோழயர்நல்
லுணவோடும் அங்க ணுற்றே
செவ்வியபே ரன்போடும் அண்ணலுக்குத்
திருவமுது செய்வித் திட்டார்;

எவ்விடத்தும் எப்பொழுதும் இன்னடியா
ரின் துணையா யிருக்கு மீசன்
அவ்வியமில் அண்ணல்பசி யோடிருக்க
விடுவானே அவனி மீதே? 362

**திருச்சிராப்பள்ளி - 1**

(உத்ஸவம் - 1)

சிறப்புமிகும் காவிரியின் தென்கரையில்
அமைந்தினிது திகழும் நல்லூர்
அறப்பொலிவொ டமையியற்கை யன்னைதிரு
வோலக்க மாய்த்தி கழ்ந்து
புறப்பகையும் அகப்பகையும் நீக்கியருட்
பொலிவருளிப் பேணும் நல்லூர்
பிறப்பிறப்பை நீக்குதிருச் சிராப்பள்ளி
யெனும்பெயராற் பிறங்கு மம்மா. 363

தமிழகத்தின் சிறந்தநக ரங்களுள்ஒன்
ருகிவர லாற்றின் கண்ணும்
அமையும்உயர் சிறப்புடைய அந்தநல்லூர்
பண்டுதொட்டே கலைச்சி றப்பும்
அமிழ்தனைய கல்வியின்நற் சிறப்பும்தொழிற்
சிறப்புமுற்றே யமையும் நல்லூர்
சமயமதை நனிவளர்க்கும் கோயில்பல
தன்னகத்தே கொண்ட நல்லூர். 364

குறிஞ்சிநிலத் துக்குரியோன் குகப்பெருமான்
எனநூல்கள் கூறி னாலும்
குறிஞ்சிநிலம் எங்குமமர் குகப்பெருமான்
புரியும்அரு ளாட்சி தன்னில்
உறுஞ்சிறப்பெ லாம்நோக்கி உளமகிழ்வுற்
றருளாசி யருளி முன்னேன்
உறைந்தருளும் பெருஞ்சிறப்பார் உச்சியுடன்
திகழும்மலை யொன்றுண் டங்கண். 365

தமிழகத்தின் நடுவணமர் திருச்சிராப்
பளிமலையைத் தனக்காக் கிக்கொண்
டமைதியருள் பிறமலைகள் அனைத்தினையும்
இளவலுக்கே யருளும் முன்னோன்
இமயமயி லாம்மட்டு வார்குழலி
யெனும்பெயரொ டிலகம் மைக்கும்
தமருகமான் கொளுந்தாயு மானவர்க்கும்
அம்மலையில் இடம்தந் துள்ளான். 366

அடிவாரத் தினில்எழிலார் மாணிக்க
விநாயகரென் றமைந்தும் தூய
முடிமீதில் உச்சிப்பிள்ளை யாரென்னும்
மூர்த்தியென வொளிர்ந்தும் முன்னோன்
படிமீதில் எண்ணிலுயிர்த் தொகைக்குயர்ந்த
பக்தியுடன் ஞான மூட்டும்
நெடியமலை வானுறவோங் கித்திகழும்
நிகரில்தலம் அவ்வூ ராகும். 367

திருவானைக் காசமய புரம்திருவ
ரங்கமெனத் திகழ்த லங்கள்
மருவியருள் வளம்கொழிக்க மாநதியாம்
காவிரிதன் திரைக்க ரத்தால்
பொருவில்நவ மணிகளையும் பொன்னொடுபல்
பொருள்களையும் தாங்கி வந்தே
பெருகுபல வளங்களையும் கொழிக்கமிக்க
எழிலோடும் பிறங்கு மவ்வூர், 368

வேறு

சிறப்புமிக் குடைய அந்தத் திருச்சிராப் பள்ளி வாழ்வோர்
அறப்பயிர் வளர்க்கும் அண்ணு சாமியாம் அன்ப ரோடும்
பிறப்பறுத் தருள்பி ரானைக் குளித்தலை நகரிற் கண்டு
முறைப்படி வணங்கித் தம்மூர்க் குறும்படி முறையிட் டார்கள் 369

அன்புசால் அண்ணு சாமி
அருங்குணப் பாங்கை நோக்கி
மன்பெரும் சட்டம் அங்கு
வளர்வுற இருத்தல் உன்னி

இன்பம்நல் குடையோன் ஆடல்
இயற்றவுள் ளதையும் ஓர்ந்தே
அன்பர்கள் வேண்டு கோளுக்
கிசைந்தனர் அருளார் அண்ணல். 370

அடியவர்அன்பர் பெற்ற மகிழ்சிக்கோர் அளவு முண்டோ
கடிதினில் ஊர்க்குச் செய்தி அனுப்பினர் களிப்பி னேடும்
கடிநகர் அதனை மேலும் கவின்பெற அலங்க ரித்தார்
நெடியதோ ரணங்கள் நாற்றி நிழல்மலர்ப் பந்த
ரிட்டார். 371

மணலினைப் பரப்பி னார்கள் மாவிலை கட்டி னார்கள்
மணமலர் மாலை யெங்கும் வயங்கிடத் தூக்கினார்கள்
தணலினை யமைத்துத் தூபத் தனிமணம் கமழ்வித் தார்கள்
மணிவிளக் கேற்றி னார்கள் மங்களம் பாடி னார்கள். 372

கதலிநற் கமுகு கன்னல் கவின்பெற நிறுத்தி னார்கள்
பதுமைகள் அமைத்துத் தென்னம் பாளைகள் நாற்றி னார்கள்
இதமுற இளநீர் ஏனைக் காய்கனி தூக்கி னார்கள்
மதுரநற் கீதம் பாடி மகளிரும் வாழ்த்தி னார்கள். 373

வாரணம் குதிரை யாதி வயம்பெற நடத்தி நன்று
பூரண கும்ப மேந்திப் பொற்புறத் திகழ்ந்திட் டார்கள்
தாரணி உய்யப் போந்த சாமியே வருகவென்ன
ஆரண முதல்வர் தம்மை அன்புடன் வரவேற் ருர்கள். 374

வேறு

ஐயர்பிள்ளை படையாச்சி கோனார்நா யுடுவும்
ஆச்சாரி செட்டியார் பத்தர்முகம் மதியர்
துய்யவுள்ள முடையபிறர் ஜாதிமத பேதம்
தோன்ருத வணம்கூடிச் சொல்லரிய மகிழ்வால்
செய்யசெயல் பற்பலவும் செய்துகுரு மணியைச்
சிறப்பாக வரவேற்ருர் மலைக்கழைத்துச் சென்ருர்
மையலறுத் தாள்அரசே என்றடிய ரன்பர்
வானவர்கள் மலர்தூவி வாழ்த்திவழுத் திடவே. 375

வேறு

தெருவின்இரு புறமும்இலம் தொறும்வாயில்
அருகினிது திகழும் மாதர்
வருமிவர்யார்? நல்லதவம் வையமிசை
ஏன்புரிந்தார் என்று கேட்பார்
இருடியர்பட் டிச்சாமி எனுமிவர்வண்
பொதிகையினில் தவமி யற்றிப்
பெருகும்அடி யரைத்திரட்டிப் பேணியரு
ளற்புதம்செய் கின்றார் என்பார். 376

ஆரா நல் லமுதனைய இந்தஅரு
ளண்ணல்திரு வருளாற் பாரில்
தீராத பிணியில்லை போகாத
குறையில்லை செம்மை யாவும்
சீராரிவ் வருளண்ணல் திருவுளத்தில்
நினைத்திடின்யா வருக்கு மெய்தும்
பேராயி ரம்போற்றின் பிறவிதவிர்ந்
தின்பமுத்தி பெறலா மென்பார். 377

அண்ணலைக்கண் டால்அரிய தவமுடையோர்
போல்தோன்று கிறதே யென்பார்
அண்ணல்அகத் தருளழகிங் கவர்முகத்தில்
இனிதுபொலி கிறதே யென்பார்
அண்ணல்திருக் கண்ணுக்கே அருள்நலங்கள்
அனைத்தும்விளை விக்கும் என்பார்
பெண்ணினல்லார் இவ்வாறு பேசஅண்ணல்
நகர்க்குளெழுந் தருளி னாரால். 378

மங்கலவாத் தியம்முழங்கக் குடைகொடிகள்
மகரதோர ணம்முன் செல்லத்
துங்கமணி விளக்கேந்தித் தோகையர்கள்
செலக்கவரி யிரட்டு வோர்கள்
அங்கருளா ரண்ணலிரு புறத்தன்பொ
டேகமலை வாயில் சேர்ந்தே
எங்குமன்பர் அரஹரலென் றேத்தஅண்ணல்
மலையுச்சிக் கினிது சென்றார். 379

திருமலையின் உச்சியின்மேல் சேர்ந்ததுமே
தியானத்தில் அமர்ந்தார் அண்ணல்
அருகிருந்த அடியவரும் அகமுருகி
ஆங்கமர்ந்து தியானத் தாழ்ந்தார்
பெருகுமிமை யவர்கூட்டம் இவ்வெழிலைக்
காணப்பெரு விசும்பிற் சேர்ந்தார்
மருவுமுகிற் கூட்டம்குடை போலமைய
வாயுமெல்ல அசைந்த தம்மா. 380

உலகிலெழும் ஓசைகளின் சலனமின்றி
உயர்ந்தமலை யுச்சி யின்கண்
அலகிலுயர் உளத்தோடும் உடையவன்றன்
கணக்கையுறுத் துன்னி யண்ணல்
இலகுமுயர் சட்டநெறி இப்புவிக்குப்
பயனருள எண்ணி ஞரோ
நிலவுமவர் உருவினின்று வீசும்ஒளி
சூழ்ந்தெங்கும் நிறைந்த தம்மா. 381

அவண்சுற்றி அமர்ந்திருந்த அடியவர்கள்
மீதெல்லாம் படிந்த அந்தத்
தவஒளியின் உயர்சிறப்பை யார்நாவால்
சாற்றிடுதற் கியலும் அன்றங்(கு)
அவர்களடை பெரும்பேற்றை யார்சொல்லால்
அளவிட்டிங் குரைத்தற் கரதும்?
அவர்களப்பே ரின்பம்பெற முற்பிறப்பில்
என்னதவம் ஆற்றி ஞரோ? 382

அருளண்ணல் அற்புதநிட் டையிலாழ்ந்திவ்
வவனிக்கருள் செய்த பின்னர்
இருவிழியாம் எழிற்கமலங் களும்சற்றே
இதழ்விரிக்க அடியா ரெல்லாம்
இருடியர்பட் டிச்சாமிக் கரோஹரவென்
றினியவொலி முழக்கி ஞர்கள்
பெருமகிழ்வொ டுளமுருகித் துதிபாடிப்
பெருமானைப் போற்ற லானூர். 383

## குருநாதர் துதி

செங்கமலத் தயன்திருமால் தேவரெலாம் வாழ்த்தத்
திருவருட்சட் டம்வகுத்துச் செழுநிலத்திந் தவரே
கங்குல்புலர் விடியலிலே தண்ணீரில் மூழ்கிக்
கணபதியா லயத்தைவலம் செய்திடச்சொல் பவரே
மங்களமெல் லாம்சிறக்கும் இருடியர்பட் டியிலே
வந்தருளும் மாமணியே மாதவர்கட் கரசே
சங்கடமெல் லாம்விலக்கிச் சாந்தியெனும் அமுதம்
தந்தடியார் தமைப்புரக்கும் தாயேமெய்த் துணையே 384

போகமெலாம் கடந்தபர போகம்அளிப் பவரே
புனிதருளே புதியஅருள் மணம்பரப்பும் மலரே
சாகவொணாப் பிறக்கவொணாத் திருநெறியிவ் வுலகில்
தந்துதிரு வருளாட்சி செய்யும்அரு ளரசே
மோகமெலாம் தவிர்த்தருளி முத்திநிலை வழங்கி
மோனசுக வாழ்வருளும் முனிவர்கள்தம் கோவே
யோகமெலாம் ஞானமெலாம் உணர்த்தருளா சானே
உயரிருடித் திருநகரி லுறுகருணை லயனே. 385

சுவைமிகுநற் பசும்பாலே சர்க்கரைகற் கண்டே
சொல்லிடுமுக் கனிரசமே தேனேசெம் பாகே
நவைதவிர்விண் ணமுதேமெய்ஞ் ஞானமெனும் விருந்தே
நானெனதைக் கடந்தஇடத் தினித்திடுதீங் கரும்பே
குவையெனும்பொன் மணித்திரளே குறையறியா நிறைவே
குறைகளெலாம் பொறுத்தருளும் கோமானே பெரியார்
அவைமுழுதும் புகழ்ந்துதொழு தேத்திடும்ஆ ரியனே
அருள்நிறைநல் லிருடியர்பட் டியில்வருபே ரரசே. 386

அன்புமிகும் திருவுளமே கோயில்கொள் ஆண்டகையே
ஆணவமா யாகன்மம் மூன்றும் அறுப் பவரே
பொன்புரையும் குருமணியே போதமருள் மணியே
புதுமணியே புகழ்மணியே புனிதமருள் மணியே
மன்பதைகட் கின்பமெலாம் வழங்குசிரோ மணியே
மாசுதவிர் திருமணியே தேசுடைமா மணியே
துன்பமெலாம் தவிர்மணியே துரியவொளி மணியே
தூயர்புக ழிருடிநகர் தோன்றிடுதூ மணியே. 387

செந்தமிழிற் பலபாடல் திருவருளாற்பாடித்
தெய்விகநல் லொளிவளரச் செய்தருள்தே சிகரே
அந்தமுட ளுதியிலாப் பூரணனே மதுரை
அணிநகரில் நதிக்கரையில் கண்டுகளித் தவரே
சந்தனமும் தமிழ்மணமும் கமழ்பொதிகைக் குகையில்
தவமியற்றி இணையிலருட் சட்டம்வகுத் தவரே
மந்தர்களாம் எமைத்திருத்த வந்தகுரு பரனே
மல்குவளம் பெருகிருடி நகரமனோ கரனே. 388

---

எனப்போற்றி இருகணிலும் ஆனந்தக் கண்ணீர்
இழிந்திடஎட் டங்கம்புவி தோயவணங் கிட்டார்
நினைப்புமொழி செயலனைத்தும் உமக்கேயர்ப் பணித்தோம்
நீடுதவப் பேறருளித் திருவடிசேர்த் தருள்வீர்
அனைத்துலகுக் கனைத்துயிருக் கருளொளியீந் தருளும்
அற்புதச்சிற் பரவுருவே அருட்குருமா மணியே
வனப்புமிகு மிருடிநகர் வந்தருள்செங் கதிரே
வாழ்கபல்லாண் டெனப்போற்றி வாழ்த்திவழுத் தினரால். 389

வளமிகுநல் லிடைத்தெருதாண் டவராயப் பிள்ளை
வண்மனைக்கண் ணலையழைத்துச் சென்றிருக்கச் செய்தார்
அளவிலுண்மை யன்போடும் அனைவரும்அந் நகரில்
அகமாரப் புரிந்தஉப சாரங்கண் டண்ணல்
இளநகையொ டினிதவர்க்குத் திருவருள்செய் தமர்ந்தார்
யாவரும்வந் தன்பினொடும் வணங்கிமகிழ் வடைந்தார்.
உளகுறைகள் உரைத்தவற்றைத் தவிர்க்கும்வழி யுணர்ந்தார்.
உளமகிழ்ந்தார் ஒளிர்ந்ததில்லம் உயர்ந்தஅருள்
மணத்தால். 390

ஒருதினம் அந்நகரின்பெரு வணிகர்களும் செல்வம்
உடையவரும் குருபரரைக் கண்டுதொழு தமர்ந்தார்
ஒருசிலஐ யங்கள்எமக்குள அவற்றைக்கூற
உத்தரவு தருகவெனப் பணிவுடனும் கேட்டார்

அருளொடும்இவ் வுலகின்மிசை ஐயமெலாம் நீக்கி
அருள்புரிய வந்தஅண்ணல் அவர்கள்முகம் நோக்கித்
தெருளுறஐ யங்களெலாம் இவண்தீர்த் துக் கொளலாம்
செப்பிடுக என்றருளிச் செய்தனர்பே ரருளால். 391

அண்ணலையெப் படிக்கேட்ப தென்றுவந்தோர் பலரும்
அச்சமுற்றங் கிருந்திடலும் அண்ணல்அது நோக்கி
எண்ணிவந்த ஐயமதை அச்சமொன்றுமின்றி
இயம்பிடுக எனஊக்கம் கொடுத்தருள, அவரும்
வண்ணவொளிக் கதிருதிக்கு முனர்பச்சை நீரில்
முழுகின்ஜல தோஷம்வந் துவிடுமேஎன் றுரைத்தார்
அண்ணல்உட னேதாங்கள் வைணவரா யுள்ளீர்
ஆண்டாள்சொல் திருப்பாவை யறிந்திலிரோ என்றார். 392

தனுர்மாதத் தினிற்காலை தண்ணீரி லாட
வேண்டுமெனச் சாற்றியதன் பொருள்யாதென் றுணர்வீர்
தினகரன்தோன் றிடவைந்து நாழிகைக்கு முன்னே
தினமும்ஒரு பெருஞ்சக்தி நீரினுக்குண் டாகும்
புனிதமிகு கங்கையினில் மூழ்குபலன் அந்தப்
புனிதவிடி யலில்மூழ்கு வோர்பெறுதற் காகும்
புனிதநல் வாழ் வமையும்அருட் பொலிவுமிகும் ஞான
போதமுறும் ஒப்பில்பர போகமுறும் என்றார். 393

அதிகாலை தண்ணீரில் தலைநனைய முழுகின்
அங்கமுழு திலுமுள்ள தீமைவெளி யகலும்
அதிகசக்தி நாடிநரம் புகட்குண்டாம் மூளை
அதிசூக்ம மாய்வேலை செயும்தூய்மை யமையும்
புதியபிணி வாராது பழையபிணி விலகும்
புத்துணர்ச்சி யுண்டாகும் போதவுணர் வெய்தும்
இதரஉயிர் யாவும்தண்ணீர்ப் பயன்படுத்த மனிதர்
இனிதுதண்ணீர்ப் பயன்படுத்தற் கஞ்சுவதேன் என்றார். 394

நாளடைவிற் சரியாகி விடும்அந்தப் பயனை
நனிகாண லாகுமென ஞானவள்ளல் நவின்றார்
நீளும்நதி நீரினில்மூழ் கிடவேண்டு மென்று
நிபந்தனையுண் டோவென்னக் கேட்டனர்அச் செல்வர்
நீளும்நதி நீர்கிணற்று நீர்தூய குளத்து
நீரில்அதி காலையினில் நிதம்மூழ்க லாகும்
நாளும்முழு கியவுடனே திருநீறு துளசி
நன்னீரி லிட்டருந்த வேண்டுமென்றார் அண்ணல். 395

நோயுறுநா ளினும்மூழ்க வேண்டுமென வுண்டோ
நுவலுகென்றார்;ஞானவள்ளல் கருணையொடு நுவல்வார்
நோயுறுநா ளினிலிரண்டு முறைமூழ்கல் வேண்டும்
நோயகலும் நோன்மைமிகும் அத்தகுகா லத்தில்
மேயதிட நம்பிக்கை யொடுசட்டம் பேணின்
மெய்ப்பயனெய் திடுமென்றார்;தங்கள்முனர் தாளித்
தூயசக்தி யிருந்திடுமோ என்றனர்அச் செல்வர்
ஜோதியொளி யண்ணல்அவர் ஐயமதைக் களைந்தார்.396

சட்டநெறி மிகப்புதிய தொன்றன்று முன்னாள்
தாரணியில் முனிவோர்கள் அனுசரித்த முறைதான்
இட்டமுடன் அதிகாலை தண்ணீரில் மூழ்கல்
இனிதென்னக் கோதைமணி வாசகனார் உரைத்தார்
கெட்டபழக் கங்கள்விட வேண்டுமென எல்லாப்
பெரியோரும் கிளத்துதல்நீர் கேட்டிலிரோ ஞான
நிட்டைநலம் விளக்குமெனல் நிலமுழுதும் அறியும்
நெறியிதனை முறையொடனு சரித்தல்நன்றாம் என்றார். 397

சீரியஇச் சட்டநெறி எப்போதும் இருக்கும்
செப்பரிய சக்தியிதற் கெப்போதும் இருக்கும்
சூரியன்காற் றனல்தண்ணீர் பூமியென யாரும்
சொலுமியற்கை யுள்ளளவும் சட்டநெறி யிருக்கும்
யாரும்அணு வேனும்அச்சம் கொள்ளாமல் துணிவாய்
இனிதுசட்ட மேற்றுநலம் எய்துகென்றார் அண்ணல்
யாரும்உவந் தெங்களையம் தீர்ந்ததென எழுந்தார்.
இனிதுவலம் வந்தண்ணல் இணையடியிற் பணிந்தார். 398

அந்தகர் கண்ணொளி பெற்றமை

நாங்கள்அருட் சட்டமிதை ஏற்றுநல மெய்த
நலிபிறவிப் பிணிநீங்க நன்றருள்வீர் என்றே
ஓங்குமுண்மை யன்போடும் வேண்டினர்அவ் வாறே
ஒப்பிலண்ண லருள்புரிந்தார் உவந்து சென்றார் வந்தோர்;
ஆங்கொருநாள் காலையண்ணல் ஆசனத்தி லமர்ந்தே
அடியவர்கட் கருள்புரிந்து கொண்டிருக்கும் போதில்
பாங்குபெறும் விழியிரண்டு மில்லாதோ ரிருவர்
பரிவுமிக நண்பருடன் வந்தினிது பணிந்தார். 399

உலகில்உயிர் வாழ்பவர்கட் கின்றியமை யாத
உறுப்புவிழி; அஃதிலையேல் வாழ்வுமுழு தென்னும்
இலகிளைஞர் இருவரன்பை யண்ணல் தனிநோக்கி
இரக்கமிகுந் திவர்க்குமறு மலர்ச்சியருள் வோமென்(று)
அலகிலரு ளாலுன்னி நன்னீரி லாட்டி
அழைத்துவரப் பணித்தவர்தம் நயனங்கள்மீது
நிலவுதிருக் கரம்சூட்டி நீள்வினையை யகற்ற
நிறையொளியங் கெய்தஅவர் விழிகள்திறந் தனவால். 400

குருவின்அரு ளுபதேசம் பெற்றதும்அஞ் ஞானம்
குலவிருள்நீங் குவதேபோல் புறஇருளும் அகமார்
இருளும்ஒருங் கேநீங்க இனியஒளி யவர்கள்
இருவருக்கும் தோன்றமுதன் முதலாக ஞான
குருமணியைக் காணுமுயர் பேறுபெற்றார் பிறவிக்
குருடர்களா யிருந்தவவர்க் குற்றகுதூ கலத்தை
இருநிலமீ தொருநாவாற் சொலவொணுமோ அவர்முன்
இயற்றுதவம் எத்தகைத்தோ இயம்பவல்லார் யாரே. 401

வேறு

எங்களது வாழ்விற்கொளி தரவந்த
தேவே! யாம் முன்னே செய்த
துங்கவினை யின்பயனல் தூய அரு
ளாளர்நுமை இந்நாள் கண்டோம்

எங்கள்விழி களைமறைத்த திரைநீக்கி
இனியஒளி எய்தச் செய்தீர்
எங்களுளப் பெருமகிழ்வை இயம்புதற்குச்
சொல்லுளதோ என்றார்அன்பால். 402

உருகிடும்அன் புளத்தோடும் ஒப்பரிய
மகிழ்வோடும் அண்ண லார்பால்
பெருகுறுமெய்ப் பக்தியெனும் பெருவெள்ளம்
உள்நிறைந்து பொங்கு மாபோல்
இருவிழியும் ஆனந்த நீர்பொழிய
இனிதுடம்பு சிலிர்க்க ஞான
குருபரன்தன் அருள்போற்றிக் கோதகன்ற
சொன்மலர்கள் சூட்ட லானார். 403

குருநாதர் துதி

அருட்பாடல் பொருள்விளக்கம் அற்புதமாய்ச்
சொல்லும்அரு ளழகு போற்றி
பொருட்பாங்கு மிகச்செறிந்த அருட்பாடல்
பாடும்அருட் புலமை போற்றி
தெருட்பாங்கு மிகவிழையும் சீரியரை
யீர்க்கும்அருள் திறமை போற்றி
இருட்பால்சென் றலையுமெமை யீர்த்திருகண்
ஒளிவழங்கும் இனிமை போற்றி. 404

வேதமுடி வாகமத்தின் முடிவனைத்தும்
விளக்கும்அருள் விழுப்பம் போற்றி
நாதமுடி வினில்விளங்கும் நடனமதைக்
காணும்அருள் நாட்டம் போற்றி
போதமுடி வினில்இலங்கும் பூரணனைப்
புணரும்அருட் புனிதம் போற்றி
பாதமலர் புவிதோயப் போந்தெமைப்பா
லிக்கும்அருட் பான்மை போற்றி. 405

குற்றமெல்லாம் கருதாமல் அருகழைத்துப்
பேணும்அருட் கொள்கை போற்றி
நற்றவவா னத்திலெழு ஞானமதி
யனையஅருள் நயனம் போற்றி

பற்றனைத்தும் பறக்கவிட்டுப் பக்குவம்செய்
விக்கும்அருட் பார்வை போற்றி
வெற்றர்எமை விழைந்தாட்கொண் டருள்ஞானம்
புகட்டும்அருள் விபுவே போற்றி. 406

கல்வியெலாம் அரைநொடியிற் கற்பிக்க
வல்லஅருட் கருணை போற்றி
செல்வமெலாம் அரைக்கணத்துட் சேர்ப்பிக்க
வல்லஅருட் செழுமை போற்றி
பல்வளமும் இமைப்பொழுதிற் பாலிக்க
வல்லஅருட் பரிசு போற்றி
நல்வழிக்கெம் மையுமீர்த்தாட் கொண்டுநலம்
வழங்கும்அருள் நளினம் போற்றி. 407

கண்கவரும் வனப்பொடுற்றுக் கருணைநெறி
வளர்க்கும்அருட் காந்தம் போற்றி
பண்களெலாம் பாடியருட் பரிசுணர்த்திப்
புரக்கும்அருட் பழக்கம் போற்றி
விண்களிகொண் டிடஉயர்ந்த தவம்புரிந்து
விளங்கும்அருள் வீறு போற்றி
புண்கள்மிகு மனத்தர்எமை யாண்டுதயை
புரியருட்சீர் போற்றி போற்றி. 408

---

என்றுபல வாருக அண்ணலரு
ளியல்போதி இறைஞ்சி னார்கள்
அன்றவணப் போதிருந்த அடியரன்பர்
அரஹரவென் றேத்தி னார்கள்
என்றுமிவர் வாழ்கவென வாழ்த்திவலம்
வந்தினிது போற்றி னார்கள்
நன்றுகுறு நகையோடும் ஞானமணி
வள்ளலருட் கருணை செய்தார். 409

குட்ட நோய் தீர்த்தல்

குட்டநோ யுடையொருவர் உடம்பெல்லாம் அழுகிக்
குறைவுறுகை காலுடனும் மிகவருந்தி யிருந்தார்
சட்டநெறி யருளண்ணல் வந்திருத்த லறிந்து
தனியாகச் சென்றவரை வணங்குதற்கு விழைந்தார்
மட்டிலடி யாரன்பர் குழுநடுவிற் சென்று
வணங்குதற்கு வாய்ப்பின்றி யச்சமுட னிருந்தார்
சிட்டர்தொழும் வள்ளலவர் உளமறிந்து வெளியே
செல்பவர்போல் அவரிருக்கும் தெருவழியே நடந்தார். 410

அவ்வமயம் அக்குட்ட நோயாளி கண்டே
அருகோடி வந்தண்ணல் அடிமலரிற் பணிந்தார்
எவ்வமிகும் தீவினையால் இந்நோய்க்கா ளாகி
இவண்மிகவும் வருந்துகின்றேன் எனினும்இந் நன்னாளில்
செவ்வியபே ரருளுருவாய்த் திகழ்ந்திடுநும் சீரார்
திருவடியிற் பணிந்திறைஞ்சும் பேறுபெற்றே னதனால்
எவ்வினையும் அகன்றோடும் இனியடியேன் உய்வேன்
எள்ளளவும் ஐயமிலை எனமீண்டும் பணிந்தார். 411

தங்களருட் பெருமையினைப் பலர்கூறக் கேட்டேன்
சாற்றரிய பாவம்மிகப் புரிந்துளஇத் தமியேன்
தங்கள்தரி சனம்பெற்றால் பாவமெலாம் தீரும்
சாந்திபெற லாமென்னப் பூரணமாய் நினைத்தேன்
தங்களையல் லால்வேறு கதியறியேன் புவிமேல்
தங்கள்திரு வடிமலரே தஞ்சமென அடைந்தேன்
இங்கருள்வீர் எனப்பிருகு முனிவரிடம் சோம
காந்தமன்னன் அடைந்ததுபோல் இனிதுசர
ணடைந்தார். 412

அளவிலுண்மை யன்போடும் அண்ணலடி மலரில்
அனந்தமுறை பணிந்திறைஞ்ச அண்ணல் நனிநோக்கி
உளமிசைபே ரிரக்கமுடன் ஒப்பிலருள் விழியால்
உயர்கருணை பாலித்தார் உற்றஅந்தக் கொடுநோய்
ஒளிமிகுந்த கதிர்வரவால் நீங்குபனி யேபோல்
ஒருநொடியி லகன்றொழிய ஒப்பிலன்பா ரவர்க்குக்
களிமிகுமா றொளிசிறந்த கவினுடம்புண் டாகக்
கண்டவர்க ளதிசயித்தார்;அன்பரன்பிற் கரைந்தார். 413

வேறு

கண்மல ரிரண்டும் அருவிநீர் பொழியக்
கைம்மலர் உச்சிமேற் குவியப்
பண்மலர் மாலை பாடிய வண்ணம்
பவளவாய் பரவிநன் றேத்த
உண்மையன் புருவாய் மாறின ரன்பர்
உவகையங் கடலினு ளமிழ்ந்தார்
மண்மிசை வதிவோர் அவர்உள நிலையை
மதிப்பிட உரைத்திட வொண்ணுமோ? 414

உடம்பெலாம் புளகம் போர்த்திட விதிர்ப்பு
மெய்திட உரைமிகக் குழற
விடம்பொதி யுடம்பே விண்ணொளி ரமுத
மயமென விளங்குடம் பாகத்
திடம்பெறும் வண்ணம் திருவருள் புரிந்தீர்
தீயஎன் வினையெலாம் தீர்த்தீர்
மடம்படு மனத்தை மறுவில்மெய்ஞ் ஞான
மயமதாய் மாற்றினீர் என்றார். 415

அகம்களி துள்ள ஒன்றுமே புரியா
தாடினர் பாடினர் அழுதார்
சகந்தனை மறந்து தன்னையு மறந்து
தணவிடு மிழுதென ஆனார்
அகந்தனில் நிறைந்து வழிந்திடும் அன்பும்
இன்பமும் அணைகடந் திலக
முகந்தனி லொளியும் அகந்தனில் அருளும்
பொலிந்திட முத்தர்போல் திகழ்ந்தார். 416

வேறு

உலகநினை வொருசிறிதங் குண்டாக
ஒப்பிலரு ளண்ண லாரை
வலமுறவந் தடிபணிந்து கைகூப்பி
வாயார வழுத்தி நின்றார்
நிலமிசைமெய்ஞ் ஞானகுரு மணியாகப்
போந்தருளும் நிமல னாரை
பலபிறவி களைத்தவிர்த்துப் பரமபதம்
அருள்பவரைப் பாட லானார். 417

குருநாதர் துதி

('ஆலந் தானுகந் தமுதுசெய் தானை' என்றபண்)

நஞ்சை நேர்மனம் கொண்டுளா லத்தே
நாளும் தீயன் செய்துழல் வேனைச்
செஞ்சொல் கூறியன் பாலழைத் திட்டாய்
திருவருள்எனும் அமுதளித் தாண்டாய்
தஞ்ச மென்றுனைச் சாருமெய் யன்பர்
தம்மைப் பேணியாள் தயவுமிக் கோனே
மஞ்சு சூழ்பொழில் மாடமிக் கோங்கும்
வண்மை சாலிரு டிப்பதி வாழ்வே. 418

கள்ளம் கண்டிலா உள்ளமுள் ளோர்க்கே
கருணை செய்வையென் றன்பர்முன் சொன்னார்
கள்ளம் மிஞ்சும்உள் ளங்கொடிங் குழன்ற
கடைய னேனையும் கருணைசெய் தாண்டாய்
வெள்ளம் போன்றநின் கருணையைக் கூற
வேதம் ஆகமம் யாவையும் போதா
உள்ளன் போடுணை யேத்துநல் லோர்சூழ்
ஒப்பில் லாஇரு டிப்பதி வாழ்வே. 419

கருணை கண்டிலாக் கடையெனை யாளக்
கருதிக் காசினி மீதுறும் தேவே
அருள்ந யந்தநின் சேவடிப் போதை
அடிய னேன்சிரம் வைத்தருள் செய்வாய்
பொருள்ந யந்தநான் மறைகளும் போற்றும்
போத நாதனுய்ப் பொலியுமென் தேவே
தெருள்ந யந்தவர் சேர்ந்தினி தேத்தும்
தெய்வ நல்லிரு டிப்பதி வாழ்வே. 420

அன்பு கொண்டுபோற் றன்பர்கள் உய்வார்
அன்பில் லாஎளி யேனுயற் கில்லேன்
என்ப தோர்ந்துநீ இங்கணே தோன்றி
என்னை யாண்டுகொண் டின்னருள் செய்தாய்
மன்ப தைக்கெலாம் பொதுவினில் சட்டம்
வழங்கி யாண்டருள் வள்ளலே மேலாம்
இன்ப வாழ்வையெவ் வுயிர்க்கும் நன்றீயும்
எந்தை யேஇரு டிப்பதி வாழ்வே. 421

அற்ப எண்ணங்கள் கொண்டுழன் றேனை
அன்பி னால்தடுத் தாண்டருள் செய்தாய்
கற்ப னைகள்கா ணற்கரி யோனே
கருணை வாரியே களங்கமில் லோனே
சிற்ப மேசிலை யேகலை காணாத்
தெய்வ மேஉயிர்க் குய்வருள் வோனே
பொற்ப னைத்தும்சேர் இருடியர் போற்றும்
பூமா னேஇரு டிப்பதி வாழ்வே 422

---

வேறு

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமெனும்
கருணைமிகும் அண்ண லாரை
பொலிவுறுமெய் யன்போடும் இப்படியெல்
லாம்போற்றிப் புனித அன்பர்
மலினமறுத் தருள்புரிநும் மலரடிக்குத்
தொண்டுசெயும் வாய்ப்ப ளிப்பீர்
ஒலிபரிசம் ஒளிசுவைகந் தங்கள்கடந்
தொளிர்ஞான குருவே என்றார். 423

புன்முறுவல் பூத்ததிரு முகத்தோடும்
புனிதஅண்ணல் அவரை நோக்கி
கன்மமெல்லாம் தவிர்ந்ததினிக் கடவுளருட்
பணிபுரிந்து காசி னிக்கண்
நன்மையெலாம் தருசட்ட நெறிபேணி
ஞானமடைந் துய்க வென்னப்
பொன்மொழிகள் பலகூறி விடைகொடுத்தார்
புடையிருந்தோர் போற்றி செய்தார். 424

அருட்குருவின் பெருமையுநல் லருட்சட்ட
மகிமையுமிவ் வகில மீதில்
தெருட்பெறஎங் கணும்பரவத் தொடங்கியது;
திருச்சிராப் பள்ளி வாழும்
பொருட்பெருஞ்செல் வரும்பிறரும் பூத்தொளிர்பே
ரன்போடும் கலந்து பேசி
இருட்படலம் நீக்கவந்த அண்ணலுக்குத்
ஸவம்நடத்தத் திட்ட மிட்டார். 425

உத்ஸவம்

இறைவன்தொண்டர் உளத்தொடுக்கம் எனஆன்ருேர்
இயம்பியுளார் ஆத லாலே
இறைவனைத்தம் மனத்திற்சதா காலமும்கொண்
டிலகிடுவோர் மேலோர் ஆவர்
இறைவனைநாம் கண்ணாரக் கண்டதில்லை
இவரைக்கண்ணுற் காணு கின்ருேம்
நிறையருளற் புதங்களிவர் நிகழ்த்துவதும்
கண்ணாரக் காணு கின்ருேம். 426

நம்மைக்கடைத் தேற்றவந்த ஞானகுரு
பரமூர்த்தி இவரே யாகும்
இம்மையிலிங் கிவரையலால் நமக்கினிவே
ருெருதெய்வம் இல்லை யன்ருே
நம்மைத்தடுத் தாளவந்த இவர்க்குப்பணி
செய்வதுநம் கடமை யாகும்
நம்முடைய வீதிகளில் நம்மார்வம்
தீரஉலாக் கொணர்வோ மென்ருர். 427

அனைவரில்லங் கட்குமண்ண லாரையழைத்
துபசரித்தற் காகு மோநாம்
அனைவருஞ்சேர்ந் தண்ணலுக்குத் ஸவம்நடத்தின்
அதுநமக்குச் சிறப்பை நல்கும்
அனைவரும்கண் டுபசரித்தா னந்தமுறற்
கியலுமெனக் கருதி ஞர்கள்
அனைவரும்அன் போடண்ணல் இசைவுபெற்றுப்
பொருள்களெலாம் அமைக்க லாஞர். 428

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்தாரும்
ஆண்டுபன்னி ரண்டாம் மாதம்
மேயமுப்பத் தொன்ரும்நாள் சோமவா
ரத்தில்விழா நடத்தி ஞர்கள்
தூயமன முடைநாற்பத் தொன்பதின்மர்
மெய்யன்பு துலங்கும் வண்ணம்
ஏயதங்கள் தகுதிக்கும் பக்திக்கும்
ஏற்பமிகு சிறப்பாய்ச் செய்தார். 429

செல்வச்சிறப் பினைப்புறஆ டம்பரத்தைத்
தேசிகனார் பார்ப்போர் அல்லர்
நல்லமனத் துழுவலன்பு கண்டுநனி
மகிழ்ந்துடையோன் கணக்கென் பார்கள்;
பல்லியமும் முழங்கிடமஞ் சனதீர்த்தம்
பரிவொடும்கா விரியி னின்றே
எல்லையிலாப் பேரன்பர் புடைசூழ
யானைமிசை கொணர்ந்தா ரன்றே. 430

களிற்றின்மிசை மஞ்சனநீர் கொண்டுவரும்
போதமர்ந்து கவரி வீச
குளித்தலைவாழ் முனிசாமி சோழயர்முன்
மறுத்தடியர் வேண்டிக் கொள்ளக்
களித்தமர்ந்து பணிபுரிந்தார் அண்ணலமர்ந்
திருந்தகடி மனைக்க ணித்தாய்
சுளித்தவ்விபம் சுவரின்மிசை மோதமுட்டிக்
கால்உடைந்து துடித்தார் அன்பர். 431

யானையின்மீ திருந்திடவும் இறங்கிவர
வும்முடியா தல்ல லுற்றார்
ஞானகுரு பரர்பணியை நன்மகிழ்வொ
டேற்றுநனி புரிந்தி டாமல்
ஆனதடை கூறியதால் வந்ததல்லல்
எனவுணர்ந்த போதில் அண்ணல்
ஞானவிழி யால்நோக்கி இறங்கிவரு
கெனஇறங்கி நடந்து வந்தார். 432

இறங்கிவர இயலாமல் நடந்துவர
இயலாமல் இருந்த அன்பர்
இறங்கியண்ண லிடம்நடந்து வந்திடலும்
அண்ணலவர் இதய மோர்ந்து
சிறந்ததம் திருக்கரத்தால் தடவியதும்
உடைந்தமுட்டி சேர்ந்த தங்கண்
நிறைந்திருந்த மாந்தரெலாம் அற்புதமென்
றுளம்நெகிழ்ந்து போற்றி நின்றார். 433

அண்ணலையோ ராசனத்தி லமர்த்திமஞ்ச
னப்பொருள்க ளனைத்தும் கொண்டே
உண்ணெகிழ்பே ரன்போடும் உயர்ந்ததிரு
மஞ்சனம்செய் தாடை சாத்தி
எண்ணில்கனி வகைதேங்காய் பொங்கல்வடை
சுண்டலிவை நைவே தித்தார்
வண்ணவொளிக் கர்ப்பூரம் தூபதீ
பம்காட்டி யாரா தித்தார். 434

ஏயபல வாத்தியங்கள் முழங்கஅன்பொ
டின்னடியார் பாடல் பாட
ஆயதிரு மஞ்சனம்நன் றழகாக
நடந்தபினர் அண்ண லார்க்குத்
தூயதிரு வமுதுபடைத் தடியார்க்கும்
தூயவமு திட்டார்; அண்ணல்
மேயமகிழ் வோடடியர்க் கருளுரைகள்
மிகவுரைத்தின் னருள்செய் தாரால். 435

மாலைதிரு வாராத னைக்குப்பினர்
மணிமுத்துச் சிவிகை யின்கண்
ஞாலமுய்யப் போந்தஅருள் நாயகரை
எழுந்தருளு வித்தன் பார்ந்த
மேலவர்கள் சூழ்ந்துவர வெகுவிதத்தூ
ரியம்முழங்க அடியார் கூட்டம்
ஏலுமகிழ் வோடண்ண லருட்பாடல்
பாடியன்பொ டினிது சென்றார். 436

பாலக்கரை இடைத்தெருவி லிருந்துதொடங்
கப்பெற்றுப் பாங்காய்ச் சென்று
ஞாலமிது புகழ்திருச்சி ராப்பள்ளி
நன்னகரம் முழுதும் சுற்றிச்
சாலமகிழ் வோடடியர் அன்பர்பலர்
தமைமறந்து போற்றி செய்யச்
சீலகுரு நாதர்அருட் டிருவுலாச்
செய்சிறப்பைச் செப்பற் காமோ. 437

இறைவன்அருட் டிருவுருவாய்ச் சிவிகையினில்
எழுந்தருளி யிருந்த அண்ணல்
நிறையொளியொ டினிதமர்ந்து நீள்விழியா
லருளமுதெங் கணும்நி ரப்பி
முறையொடடி யவரன்பர் வினைமுடிச்சை
யினிதவிழ்த்து முனைப்பு நீக்கிக்
கறைதவிர்நல் லுளம்வழங்கிக் கருணைநலம்
புரிந்தவண்ணம் இனிது சென்றார். 438

அவ்வருட்காட் சியைநேரிற் கண்டவர்கள்
அமரரினும் சிறந்தோ ராவர்
செவ்வியநல் லாயிரம்நா வுடையாதி
சேடனும்செப் பரிய அந்தத்
திவ்வியவி ழாப்புரிந்த சீரடியார்
புண்ணியத்தைச் செப்பற் காமோ?
எவ்விடத்தும் அண்ணலருட் புகழினிது
பரவியதிவ் வுலக மீதே. 439

வேறு

ஒருசில நாட்கள் அந்நக ரின்கண்
அண்ணலார் உறைந்தருள் சுரந்தார்
பெருகிடு மின்பத் தேனருந் தடியார்
கூட்டமும் பெருகிய தங்கண்
தருவென விளங்கும் குருபரர் தகவார்
அடியரை யாட்கொள வேண்டித்
திருவனந் தபுரம் சேர்ந்திடத் தூய
திருவுளம் கொண்டனர் அருளால். 440

## திருவனந்தபுரம்

வன்னி சந்தனம் செண்பகம் இலந்தைவண் தேக்கு
தென்னை மாபலா வாழைநன் மிளகுதக் கோலம்
இன்ன பல்வகை மரம்செடி கொடிநிறைந் திலங்கும்
பொன்னென் சூழலிற் புகுந்தண்ணல் பொலிவுடன்
சென்ருர். 441

சேர சோழபாண் டியரெனச் செப்புமு வேந்தர்
பேரி னில்முத லாவதாய்ப் பிறங்கிடும் தூய
சேரர் ஆட்சிசெய் தலைநக ரங்களுட் சிறந்த
சீர்பெ றும்திரு வனந்தமா புரமுமொன் ருகும். 442

ஏய பைந்தமி ழும்மலை யாளமும் இணைந்து
மேய அந்நக ரத்தினில் ஆட்சியில் விளங்கும்
ஆயில் யப்பெயர் அரசர்கா லத்தினில் அண்ணல்
தூய சட்டத்தைப் பரப்பிய வணம்அவண் சூழ்ந்தார். 443

உழைப்பும் கல்வியும் உடையவர் உறையும்அந் நாட்டுள்
கிழக்கி னின்றுமேற் கினிற்செலும் கிளர்கதி ரவன்போல்
இழுக்கு நல்கும் அஞ்ஞானமாம் இருளினைத் தவிர்க்கும்
விழுப்ப மார்அருட் கதிரென விளங்கண்ணல் சேர்ந்தார். 444

கோல மார்அரண் மனையினிற் குதிரைலா யத்திற்
சீல மோடுள கணக்குப்பிள் ளைக்கருள் செய்யச்
சால வுட்பரி வோடவண் சார்ந்தனர் அண்ணல்
ஏலும் நன்முறை யால்வர வேற்றனர் அவரும். 445

அன்பர் பூரண கும்பம்வைத் தணிவிளக் கேற்றி
இன்ப மார்பல வாத்தியம் முழங்கிட இனிதே
மன்ப தைக்கருள் வள்ளலைத் தம்குடும்பத்தோ(டு)
அன்பு டன்வர வேற்றுநன் றகத்தினுட் சேர்த்தார். 446

ஆத னத்தினில் அண்ணலை ஆர்வமோ டமர்த்திச்
சீத நீரினுல் திருவடி மலர்களை விளக்கி
தாத விழ்ந்தநன் மணமலர் சாத்திப்பூ சித்துக்
கோதி லன்பர்தம் குடும்பத் தினெடும்துதி புரிந்தார்.
447

உண்மை யன்புசால் அடியவர் உளநிலை யுணர்ந்து
திண்மை சால்தவத் தேசிகர் திருவருள் புரிந்தார்
மண்மகள்புரி தவப்பய னெனவரும் வள்ளல்
தண்மலர்ப்பதம் சேவிக்க வந்தனர் தக்கோர். 448

முன்செய் நல்வினை யின்பய னல்குரு மூர்த்தி
பொன்செய் பேரொளி சால்பதப் போதினைப் போற்றி
நெஞ்சம் வன்னிமு னேயுறு மெழுகென நெகிழத்
தஞ்ச மென்றடைந் தின்னரு ளெய்தினர் தகவால். 449

அண்ண லார்அடி யார்களும் அன்பரும் உய்ய
வண்ண மார்பல நல்லுரை வழங்குவா ரானார்
மண்ணில் பந்தங்கள் தவிர்த்திறை யடியினில் மனத்தை
வெண்ணெய் தீயரு குறுதல்போல் உருக்கிடல் வேண்டும் 450

நாம்தி னந்தொறும் தேடிறை நமதகத் துள்ளான்
சாந்தி யுற்றவற் கருட்பணி தகவுறச் செய்தால்
காந்தி யெய்தும்கண் ணுடிபோல் மனம்தெளி வடையும்
மாந்தர் போற்றிடப் பக்திஞா னங்களும் வளரும். 451

அரிய பற்பல அருளுப தேசங் களென்னும்
பெரிய நன்மழை பொழிந்தனர் பெருமைசால் அண்ணல்
அருகி ருந்துகேட் டவர்கள்மெய்ம் மறந்தவர் ஆனார்
பெருகு தேனுண்ட வண்டுபோல் பிறங்கியங் கிருந்தார் 452

பிறந்த நாள்முதல் நொண்டியாய் நொண்டியென் பெயரோ
டுறைந்த வன், மன்னர்க் கொருபரிக் காரனு யுள்ளோன்
சிறந்த பேரன்பி னேடண்ணல் திருவடி பணிந்தான்
நிறைந்த வுள்ளன்பை உணர்ந்தனர் நிகரில்தே சிகனார். 453

அருக ழைத்தனர் கண்களில் ஆர்வமே பொங்கிப்
பெருக உட்குழைந் துடல்வளைந் தடக்கத் தினேடும்
அருகி னில்வர அண்ணலார் தாம்பெற்ற மகனைப்
பரிவொ டும்தொடும் பண்புசால் தாயினைப் போன்று 454

கைத்த லத்தினைக் கருணையோ டவன்நொண்டிக் கால்மேல்
வைத்த னர்தட விக்கொடுத் தனர்அருள் வள்ளல்
கைத்த லம்வைத்த கணத்தினில் அவன்நொண்டிக் காலும்
மெத்த நன்னல முற்றது வியந்தனர் பலரும். 455

வள்ள லார்திரு மலர்க்கரம் தீண்டிய வுடனே
உள்ள ரோமக்கால் தொறும்அமு தூறிடப் பெற்றான்
எள்ளு றுவகை இன்பநல் லுணர்ச்சியெய் திட்டான்
துள்ளி னன்குதித் தான்துயர் தவிர்ந்ததென் றுவந்தான். 456

என்த வப்பய னுய்இவண் எழுந்தருள் பரமே
என்றன் தீவினை தீர்த்துடற் குறைதவிர் இறையே
என்ற னைத்தடுத் தாண்டருள் இணையிலாக் குருவே
என்றன் கண்திறந் தருளினீர் நீர்எனத் துதித்தான். 457

குருநாதர் துதி

உன்னிடற் கரிய உயர்வெலாம் படைத்துள்
ளொளிவிளக் குண்மைநா யகரே
பன்னுதற் கரிய மறையெலாம் நிதமும்
பரவவாழ் பரமநா யகரே
என்னுடற் கூனை யொழித்தெனை யாட்கொண்
டின்னருள் புரிந்தநா யகரே
என்னெனப் புகல்வேன் நும்பெருங் கருணை
இருடியர் பட்டிநா யகரே 458

எவ்வமெல் லாமும் தீர்த்தெனை நும்தாட்
கீர்த்திட உளங்கொள் நாயகரே
செவ்விய நுங்கள் திருவருட் புகழைச்
செப்பியேத் திடஅருள் புரிந்தீர்
அவ்வியம் மிகுந்த அடிமையென் னுளமும்
ஆலய மாக்கியுள் ளமர்ந்தீர்
இவ்வுல கினில்நல் லிருடிநன் னகர்வாழ்
இறைவனும் சீர்மிகப் பெரிதே. 459

கண்ணினீ ரருவி பெருக்கியுள் ளுருகும்
கருத்தினோர்க் கருள்மிகப் புரியும்
புண்ணியர் நுங்கள் திருவடிப் புகழைப்
போற்றிடத் திருவருள் புரிவீர்
எண்ணியிங் கும்சீர் பாடிட முயலும்
எளியனேற் கிரங்கியா தரிப்பீர்
பண்ணினுற் பரவும் பக்தர்சூ ழிருடிப்
பதியமர் பரமபா வனரே. 460

பண்டமெல் லாமும் படைத்தவற் றுள்ளும்
பரவிநன் னலமெலாம் புகட்டும்
அண்டர்நா யகரே அண்டகோ டிகளெல்
லாம்படைத் தாளும்நா யகரே
கண்டிடற் கரிய கருணையின் சிறப்பைக்
காட்டியாள் கருணைநா யகரே
விண்டிடற் கரிய புகழ்மிகும் இருடி
நகர்திகழ் விமலநா யகரே. 461

எத்தனை கோடி யுகங்கள்சொன் னாலும்
இறைவநும் புகழ்எனில் இனிக்கும்
எத்தனை கோடி அடியர்ஏத் திடினும்
இனிதவர் களையெலாம் புரக்கும்
சுத்தநிர்க் குணரே சுகுணசத் துவரே
துரியநல் வெளிக்குள்வாழ் ஒளியே
அத்தனே அனையே இருடிநன் னகர்வாழ்
ஆரிய னும்பெரும் பதியே. 462

எனப்பல வாருய்ப் போற்றியே அண்ணல்
இணையடி மலர்களிற் பணிந்தான்
மனத்தினில் வியப்பும் உவப்புமுற் றூர்வாழ்
மக்களெல் லாம்பணிந் துய்ந்தார்
நினைப்பரு மிந்தச் செய்தியை யறிந்த
மன்னரும் நேரினிற் போந்து
வினைத்தளை யறுத்தாள் விமலரை வணங்கி
வியனருளெய்தியின் படைந்தார். 463

### மேல் இலந்தைக் குளம்

அருட்செயல்கள் பலஆற்றி அடியார்கட்
கருளமுதம் ஊட்டி வந்த
அருளண்ணல் மேலிலந்தைக் குளம்செல்ல
அருளுளத்தில் எண்ணி னார்கள்
பொருள்மிகும்அம் மேலிலந்தைக் குளச்சிறப்பை
இவ்வேழை புகலற் காமோ
தெருள்மிகுத்த அடியர்பலர் அண்ணலுக்குத்
திருவிழாப் புரிந்த நல்லூர். 464

பொதிகையினி லிருந்ததுபோல் நிருவிகற்பத்
தருளண்ணல் பொலிந்த நல்லூர்
அதிகவித அற்புதங்கள் ஆற்றியொப்பில்
அருளாட்சி புரிந்த நல்லூர்
புதியபல அடியவரைச் சேர்த்தநல்லூர்
பொருள்விளக்கம் அளித்த நல்லூர்
நிதியறிவு தவமாதி நிறையவளித்
தடியவரை யாண்ட நல்லூர். 465

இலந்தைமரம் மிகுந்திருந்த தாலப்பெயர்
ஏற்றுளதோ என்னு மாறு
துலங்கிடுமந் நல்லூரில் தொழில்புரியும்
ஏழைமக்கள் மிகுந்தி ருந்தார்
கலங்கலில்மெய் யன்போடும் கள்ளமிலா
துழைத்துண்மை பேணி வாழ்வோர்
இலங்குமிறை யுணர்வோங்கப் பெற்றவர்க
ளாகநிறைந் திருந்தார் அங்கண். 466

வேறு

மல்லிகை முல்லை யாதி மலர்மணம் பரப்பும் எங்கும்
கல்வியின் கூடம் யாவும் கலைவளம் பெருக்கும் எங்கும்
நல்லறச் சாலை யென்றும் நல்லறம் வளர்க்கும் எங்கும்
சொல்லுவ தரிதாம் அந்தத் தூநலூர்ச் சிறப்பை
யாரும். 467

மங்கல வினைசெய் வோர்கள் மகிழ்ந்திசை முழக்க லெங்கும்
பங்கய வதன மாதர் பழந்தமிழ்ப் பாடல் எங்கும்
பொங்கொளி யணிக ளெங்கும் புதுமணப் பூங்கா வெங்கும்
தெங்கெழிற் கமுகு வாழை செழித்தொளிர் சோலை
யெங்கும். 468

செந்நெலின் பயிரி னோடு திகழ்பக்திப் பயிரும் பேணி
மெய்ந்நல மோடு முள்ளே மேவுயிர் நலமும் பேணிப்
பைந்நில மிசைபே ரன்புப் பசுமையும் பரவப் பேணி
எந்நலங் களும்மே வச்செய் இனியவர் உறைவார்
அங்கண். 469

வேறு

இன்னடிய ரொடும்அண்ணல் இலந்தைக்குளத்
தினுக்கெய்தும் செய்தி கேட்டுப்
பன்னரிய மகிழ்வொடவ்வூ ரினைமக்கள்
பாங்குறநன் றலங்க ரித்தார்
தென்னையிள நீர்தூக்கிச் செழுங்கதலி
கரும்புநட்டுச் செம்மை சான்ற
நன்னெடுந்தோ ரணமமைத்து நறுமணமார்
மலர்மாலை தூக்கி னார்கள். 470

வீடுதொறும் மெழுகிநல்ல கோலமிட்டு
விளக்கேற்றி யெழில்செய் தார்கள்
பாடுபடும் மக்களெல்லாம் நீராடி
நீறணிந்து பக்தி யோடும்
நாடுசிறந் தொளிரநல்ல நெறியருளும்
ஞானகுரு வருவார் என்றும்
ஏடுசொலற் கரியபொரு ளியம்பிடுவோர்
வருவரென்றும் எதிர்பார்த் தார்கள். 471

மங்கலவாத் தியத்தோடும் பூரணகும்
பத்தோடும் மகிழ்வி னோடும்
துங்கமிகு மன்போடும் குருநாதர்
வாழ்கவெனும் துழனி யோடும்
சங்கமுடன் தாரைமுர சாதியினி
தொலிமுழக்கத் தக்கோர் கூடி
எங்குமருந் தவத்தினொளி பெருகவரும்
அண்ணலைநன் றெதிர்கொண் டார்கள். 472

அருளமுத மழைபொழியும் அருள்ஞான
குருநாதர் வந்தா ரென்பார்
இருளகற்றி யெமைத்திருத்தி இன்பூட்டற்
கினிதண்ணல் வந்தா ரென்பார்
மருளகற்றி மண்ணுலக வுயிர்த்தொகையை
வாழவைப்போர் வந்தார் என்பார்
தெருளருளும் சட்டநெறி நமக்கருளிச்
செழிக்கவைப்போர் வந்தார் என்பார். 473

துறவிகளும் தொழுதேத்தத் தக்கவொரு
தூயரிவண் வந்தா ரென்பார்
மறைமுதல்வர் அறமுதல்வர் மன்னுபெருந்
தவமுதல்வர் வந்தா ரென்பார்
இறைவனருட் பெருங்கருணை யெனுமுருவோ
டினிதொளிர்வோர் வந்தா ரென்பார்
துறைவிளக்கிப் பயனருளும் தூயஅருட்
குருபரனூர் வந்தா ரென்பார். 474

கதிரவன்றன் வரவைஎதிர் பார்த்துமலர்
கவின்மிகுதா மரைப்பூப் போல
இதயமகிழ் வோடும்அருட் குருநாதர்
வரவையெதிர் பார்த்த மக்கள்
உதயவொளிக் கதிரவன்போல் உயரடியார்
புடைசூழ உற்ற அண்ணல்
பதமலரிற் பணிந்தேத்திப் பக்தியொடும்
அரஹரவென் றார்த்து நின்றூர். 475

ஞானகுரு நாதரவர் நல்லஉளப்
பாங்குன்னிக் கருணை செய்தார்
யானைகுரு பரர்க்கினிது பொற்கவரி
வீசிவர எழிலார் மாதர்
தேனினும்மிக் கினியகுர லாற்பாடல்
பாடிவரத் தேவர் எல்லாம்
வானிலிருந் தின்பனிநீர் அழகாக
வீசிநனி வாழ்த்தி ஞரால். 476

முன்னவனூர் திருக்கோயிற் கழைத்தேகி
ஞர்ஞான மூர்த்தி நாவாற்
பன்னரும்பே ரருளொளியோ டோராச
னத்தின்மிசை பரிந்த மர்ந்தார்
முன்னவனூர்க் கபிடேகம் அடியவர்செய்
தார்மோன முதல்வர் பாதப்
பொன்னவிர்தா மரைமலர்க்கும் அபிடேகம்
புரிந்துமண மலர்சூட் டிட்டார். 477

அண்ணல்கழுத் தினில்அழகார் மலர்மாலை
சூட்டியருச் சனைகள் செய்தார்
வண்ணவொளிக் கதிரவன்போல் வயங்குகுரு
மணியைவலம் புரிந்து போற்றி
எண்ணமுரை செயலனைத்தும் குருபரர்பால்
ஏகஇனி திறைஞ்சி யீண்டு
நண்ணியதெம் பெருந்தவப்பே றுமென்ன
நவின்றன்பாற் போற்றி ஞர்கள். 478

அடியரொரு வரையண்ணல் அழைத்தினருட்
டிருநீறு வழங்கச் சொன்ஞர்
படியின்மிசை பிறந்தபயன் பெற்றஉய
ரடியரன்பர் பக்தி யோடும்
நெடியபவக் கடல்கட ந்தோம் என்றெண்ணி
நெற்றியில்நன் றணிந்து கொண்டார்
கொடியதனைத் தும்தவிர்த்துக் குணநலங்கள்
வழங்குகுரு வருளுட் கொண்டார். 479

நடமாடும் இறைவனெனத் திகழண்ணல்
நற்பலவாத் தியம்மு ழங்கத்
திடமார்மெய்ப் பக்திமிகு சீனிவா
சப்பிள்ளை யில்லம் சேர்ந்தார்
அடியார்கள் அடிமலரும் அண்ணல்திரு
வடிமலரும் தாங்கப் பெற்ற
கடியார்அந் நன்மனைசெய் புண்ணியமிங்
கொருநாவாற் கழறற் பாற்றே? 480

அவ்வூரிற் பலர்அண்ணல் திருவருளால்
அருட்சட்டம் மேற்கொண் டார்கள்
அவ்வூரில் மருந்துமருந் தென்றெதற்கும்
அலைந்துவந்தோர் அதைம றந்தார்
அவ்வூரில் அருள்நலங்கள் பலவளரக்
கொடும்பிணிகள் அணுகா தேக
அவ்வூரில் வாழ்பவர்க ளெய்திய ஆ
னந்தமெவர் உரைக்க வல்லார். 481

இதுவரையில் இத்தகைய செந்நெறியை
அறியாமல் இருந்திட் டோமே
நிதிகிடைத்த தெனஞான நிருபரிவண்
வந்துநெறி கொடுத்தா ரென்பார்
புதியவளம் பலபெருகப் புத்தடியார்
பலரும்மகிழ் பொங்கி வாழ்ந்தார்
இதயமிசை யன்பூற நாளுமண்ணற்
கினிதுவழி பாடு செய்தார். 482

அண்ணல்திரு வடிமலர்க்கு நாளும்வழி
பாடுசெய்தா னந்த முற்றூர்
அண்ணலருட் பார்வையகக் கனிவெளிமை
யுன்னியுன்னி யகம்கு ழைவார்
அண்ணலொடே எப்போதும் இருந்திடலா
மெனநினைந்து சூழ்வார் பல்லோர்
அண்ணலருட் கருணைமணம் அவ்வூரில்
நிறைந்தினிது கமழ்ந்த தம்மா. 483

தஞ்சாவூர்

வான்பொய்ப்பி னும்தான்பொய் யாதாகி
வளந்தருகா வேரி பாயும்
வான்பெற்ற புகழ்ச்சோழ வளநாட்டின்
தலைநகராய் வயங்கும் தஞ்சைத்
தேன்பெற்ற திருநகருக் கொருகாத
மெனும் தொலைவில் திகழோ ரூரில்
ஊன்பெற்ற குட்டநோ யால்வருந்தும்
ஒருசிறுவர் இருந்து வந்தார். 484

முன்னைவினை யால்தமது பதினாறு
வயதினிலே மூண்ட நோயால்
என்னசெய்வ தினிவாழ்நாள் எப்படிக்
கழிப்பதென ஏங்கி நின்றார்
பன்னரிய பலர்அல்லல் போக்கியருள்
திருவமுது பாலித் தாளும்
மன்னரென வையமிசை வயங்கண்ணல்
அருள்மாண்பைக் கேள்வி யுற்றார். 485

வேண்டுபவர் வேண்டுவன விரைந்தருளும்
வித்தகராய் விளங்கும் வள்ளல்
யாண்டுளரோ எந்நாளிங் கெழுந்தருள்வ
ரோஎன்ன எண்ண லுற்றார்
தூண்டுசுடர் விளக்கென்ன இருள்நீக்கித்
தூய்மையொளி பரப்பிக் கொண்டே
பூண்டொளிர்மெய்ப் பக்தியுடை யோர்சூழ
அண்ணல்வரும் பொலிவு கண்டார். 486

ஆனந்தக் காட்சிகொடுத் தற்புதமாய்
அடியவர்கட் கருள்செய் தெங்கும்
ஊனந்த விர்த்தண்ணல் உயர்கருணை
யமுதருத்தி யொளிரும் நாளில்
தேனென்று மலர்திகழும் திருவடியில்
அச்சிறுவர் பணிந்து போற்றி
ஊனென்று பிணிநீக்கி உயரருள்செய்
வீரென்ன அழுது நைந்தார். 487

அண்ணலவர் நிலையையறிந் தருட்கருணை
பாலித்தச் சிறுவர் தம்மைத்
திண்ணமுறச் சட்டநெறி பேணுகெனத்
திருவருளாற் பணித்தார் அந்த
வண்ணம்அருட் சட்டநெறி மேற்கொண்டச்
சிறுவரினி தொழுகி வந்தார்
அண்ணலரு ளால்அவர்தம் பிணிவிலகிற்
றனைவருமே அதிச யித்தார். 488

அச்சிறுவர் கொண்டஉள மகிழ்ச்சிக்கோர்
அளவுமுண்டோ அடியார் தங்கள்
இச்சையெலாம் பூர்த்திசெயும் எம்பெருமான்
இவரென்ன இறைஞ்சி யன்பால்
உச்சிமிசை கைகூப்பி ஓம்குருநா
தாஎன்றே உருகி நின்றார்
எச்சமயத் திலும் அடியார்க் கின்துணையாம்
இறையேஎன் றேத்த லானார். 489

குருநாதர் துதி

பாகாயுள் ளுருகுமனப் பாங்குடையோர் போற்றிப்
பற்றியுயும் பாதமலர் பற்றியுயற் கறியேன்
தேகாதி மூன்றும்நினக் கொப்படைத்துத் தூய
திருவருள்பெற் றுய்யும்வழி சிறிதளவும் அறியேன்
சாகாத பிறவாத வரமெய்தற் கறியேன்
தண்ணருள்பெற் றிடும்அடியார் சார்பெய்தற் கறியேன்
போகானு பவம்அருளிப் போதானு பவமும்
புணர்த்தியருள் இருடிநகர்ப் புனிதமகா மணியே. 490

சஞ்சலமெல் லாம்விலக்கித் தண்ணருளுக் கீர்க்கும்
தயவுநிறை சத்குருவே தாண்மலரை நாடித்
தஞ்சமென வுறுமடியார் தம்துயர்தீர்த் தருளும்
சாந்திவடி வானவனே தவமுனிவர் வேந்தே
நஞ்சினையும் அமுதாக்க வல்லஅருள் ஞான
நாயகனே நானெனதென் றுள்ளஅனைத் தினையும்
பஞ்செனவே யெரித்தருளும் பாலவிழிக் கனலே
பல்வளமார் இருடிநகர்ப் பரமசுகப்
பொருளே. 491

பாவமெலாம் அரைநொடியிற் பற்பமெனப் புரியும்
பரஞானக் கனலொளியே பரநெறியீந் தருளும்
சேவடியே துணையெனக்கொள் சித்தமளித் தருள்வாய்
சிரமிசைநின் கரம்அமைத்துத் திருவருள் செய்திடுவாய்
ஓவடிவில் மேவியெலா உலகமுமீந் தருளி
உயிர்களையெல் லாம்இனிதே யோம்புபரஞ்சுடரே
பாவலரும் நாவலரும் பரிந்தினிதே போற்றும்
பான்மைநிறை இருடிநகர்ப் பரமபவித் திரனே. 492

பத்தியத்தை வகுத்தருளிப் பலவகையில் திருத்திப்
பக்குவம்மிக் கெய்தவருட் பாடல்களை யுணர்த்திச்
சத்தியத்தை யுள்ளபடி யுணர்ந்திடச் செய்தூய
தத்துவனே தத்துவமெல் லாம்கடந்த பதியே
நித்தியத்தைச் சார்கவென நித்தமினி துணர்த்தும்
நின்மலனே நிட்டையினில் விளையுமுயர் பயனே
வித்தின்றி யனைத்தினையும் விளைத்தருளும் விபுவே
வேதாந்த சித்தாந்த விழுப்பொருளா னவனே. 493

கண்ணகல்மா ஞாலமிதிற் கடைப்பட்ட உயிரும்
கருணையினைப் பெற்றுய்யச் சட்டம்வகுத் தவனே
பண்ணறிந்து பக்தியினுற் பாடிமன முருகும்
பக்குவம்பெற் றுயவறியாப் படிறனெனைப் பரிவால்
எண்ணரிய நின்புகழைப் போற்றிடுமா றீர்த்த
நின்கருணை யினையெளியேன் இயம்பிடுதற் காமோ
அண்ணல்நின தடிமலரில் அடியனையும் கூட்டி
அற்புதப்பே ரானந்த அனுபவமீந் தருளே 494

வேறு

உளமகிழ்வொ டுள்ளன்பொ டிவ்வாறு
போற்றியினி துருகி நின்றார்
அளவறுமெய் யன்பொடவர் அருட்சட்டத்
திருநெறிபே ணியதால், அண்ணல்
அளவில்அருட் சக்தியவர்க் கெய்திடுமா
றருள்புரிந்தார்; அதனுல் வையத்
தளவில்பலர்க் களவில்குறை தீர்த்தருளி
யானந்த மூட்டி வந்தார். 495

அவர்அருளா ரண்ணல்கரு ணைத்திறத்தால்
அவ்வண்ணம் புரியும் காலை
அவர்அருளும் திருநீற்ருல் அரும்பிணிகள்
தவிர்ந்துய்ந்தோர் அநேக ராவர்
அவர்முன்பல பேய்நீங்கிற் றவர்முன்பலர்
குறைதீர்ந் தானந்த முற்ருர்
அவர்கள்குரு பரர்அருளை அன்போடும்
அனுதினமும் போற்றி வந்தார். 496

## புதுக்கோட்டை

பாரதத்தில் திகழ்ந்தபல சமஸ்தானங்
களில்ஒன்றாய்ப் பலவ ளங்கள்
சீருற நிறைந்ததுவாய்த் திருவார்நன்
மன்னர்தலை நகராய் மேவி
ஏருற விளங்கியற்கை யன்னையெழி
லோவியமென் றிலகு மூராய்த்
தூரியநல் லொலிமிகுந்த புதுக்கோட்டை
யினில்நடந்த செயலைக் காண்போம். 497

புதுக்கோட்டை ராமசா மிச்செட்டி
யார்வீட்டில் பகைவர் கள்தம்
சதியால்வைக் கப்பெற்ற சூனியத்தால்
வெடிச்சப்தம் பலமாய்க் கேட்கும்
குதிரைவண்டி பலமலையி லிருந்திழிதல்
போன்றஒலி கூடக் கேட்கும்
அதியச்சம் தரும்ஆள்பின் தொடர்வதுபோல்
அடிக்கடிதோற் றமும்உண் டாகும். 498

சட்டெனத்தீப் பற்றுதலும் பிறவும்போல்
காட்சிகளும் சார்ந்து தோன்றும்
செட்டியார் மனைவிசீ தாலக்ஷ்மி
யம்மைக்கு மூர்ச்சை யெய்தும்
வட்டமாய்க் கும்பங்கள் வைத்துமந்தி
ரம்பலஓ துவதாய்த் தோன்றும்
மட்டில்பொருள் மூன்றாண்டாய்ச் செலவழித்தும்
மாண்பயனங் கேது மில்லை. 499

அப்போது தஞ்சைக்குத் தெற்கில்ஒரு
காதத்தில் அமைந்த ஊரில்
ஒப்பிலண்ண லால்முனர் ஆளப்பெற்ற
ஒண்சிறுவர் ஆற்றல் மல்கிச்
செப்பரிய பலநோயைப் பலபேயைத்
திருநீற்றால் நீக்கிப் பல்லோர்க்(கு)
இப்புவியில் நலம்அருளும் செய்தியினைச்
செட்டியார் கேள்வி யுற்றார். 500

இட்டமுடன் அச்சிறுவர் வாழுமந்த
ஊரினுக்கு ராம சாமி
செட்டியார் சென்றுதம தின்னலவ
ரிடம்செப்பித் தீர்ப்ப தற்குத்
திட்டமாய் யாதுசெயல் வேண்டுமெனக்
கேட்டார்;அச் சிறுவர் செப்பி
விட்டபடி மேலிலந்தைக் குளம்சென்றண்
ணலைத்தொழுது விண்ணப் பித்தார். 501

சிட்டர்புகழ் அண்ணலவர் விண்ணப்பம்
கேட்டருளிச் சிரம் அசைத்தார்
செட்டியார் அன்றிரவில் அங்குதங்க
அவர்உளத்திற் செம்மை மேவ
மட்டில்பெரும் பாரம் அவர்மனத்திலிருந்
திறங்குவது போலு ணர்ந்தார்
சட்டஅடி யார்களுடன் எழுந்துவிடி
யலில்தண்ணீ ராடினு ரால். 502

இருடியர்பட் டிச்சாமிக் கரோஹர
விநாயகர்க் கரோஹ ராவென்
றருள்திகழும் அடியவர்கள் ஒலித்தவணம்
ஐங்கரர்கோ யிலுக்குச் செல்லத்
தெருள்விழையும் இவரும்திரு நீறணிந்து
பின்சென்று வலம்பு ரிந்தார்
அருளுருவக் கணபதிமுன் பணிந்திறைஞ்சி
யருள்தீர்த்தம் பெற்றின் புற்ருர். 503

அமரர்குழு போல்திகழ்ந்த அடியரையும்
அண்ணலரு ளையும்பார்த் திவ்வில்
விமலனமர் திருக்கயிலை போல்விளங்கு
கின்றதென உளத்துட் கொண்டார்
சமயசம ரசஞான வள்ளலை
வலம்புரிந்து வணங்கி நின்றே
அமைதிதரத் தம்மூருக் கெழுந்தருளு
மாறன்பால் வேண்டிக் கொண்டார். 504

செட்டியார் துயரும்அவர் உள்ளமிசை
திகழன்பும் நோக்கித் தூய
சட்டநெறி யருளண்ண லவருருக்
கெழுந்தருளற் கிசைவு தந்தார்
இட்டமுடன் மேலிலந்தைக் குளத்தன்பர்
இயற்றுமுப சாரம் கண்ட
செட்டியார் தம்மூரில் வரவேற்பு
செயத்தக்க திட்ட மிட்டார். 505

கடிதமொன்றை விரைந்துவரைந் தில்லினுக்குக்
கடிதனுப்பி வைத்தார்; அவ்வூர்
அடியவரும் அன்பர்களும் ஊரைமிக
அழகாக அலங்க ரித்தார்
முடிவிலன்பி னேடுபுகை வண்டிநிலே
யத்திற்கு முந்திச் சென்றார்
மிடைபலவாத் தியம்முழங்கப் பூரணகும்
பத்தோடு மேவி னரால். 506

அண்ணல்புகை வண்டியினின் றிறங்கியதும்
அன்புமலர் மாலே சூட்டி
வண்ணமிகு மணமலர்கள் வண்மலர்ச்சே
வடியிலன்பு வயங்கச் சூட்டிப்
புண்ணியத்தின் பயன்பெற்றோ மென்றுவணங்
கித்தொழுது போற்றி நின்றார்
அண்ணலவர் உளமேவும் அன்பையுணர்ந்
தருள்நிறைநல் லாசி தந்தார். 507

மங்களவாத் தியம்முழங்கச் செட்டியார்
இல்லினுக்கு வள்ள லாரைத்
துங்கமிகு பேரன்போ டழைத்தேகித்
தூமணிவா யிலின்கண் சேர்ந்தார்
தங்கம்நிகர் மனராம சாமிசெட்டி
யாரன்பர் தம்மோ டுற்றுப்
பொங்குமொளிக் கதிரண்ண லாரைவர
வேற்றுள்ளே பொலியச் செய்தார். 508

வேறு

விளக்கினைக் கண்ட இருளெனத் தீமை
விலகியோ டியதரு ளண்ணல்
துளக்கமில் தூய திருவடி மலர்கள்
தோய்ந்தபின் நிற்குமோ அவைதாம்
விளக்கமுற் றந்தக் குடும்பத்தோர் யாரும்
வியனருட் சட்டமேற் றிட்டார்
களக்கமற் றிதனைக் கண்டமற் றவரும்
கடிதருட் சட்டமேற் றனரால். 509

செட்டியார் அப்போ தெய்திய மகிழ்வைச்
செப்பிடச் சொற்களும் உளவோ
உட்டிகழ் அன்பாம் ஊற்றுமேற் பொங்க
ஓங்கரு ளண்ணலார் பாத
மொட்டரு மலரைப் பணிந்தனர் ஞான
மோனமா முனிவரே நீர்வந்
திட்டவக் கணத்தில் எம்குறை தீர்ந்த
தெனத்துதி புரிந்திட லானார் 510

குருநாதர் துதி

கட்டமெலாம் தீர்ந்திடவும் காசினியோர் இன்பக்
கடலமுதை யெய்திடவும் சட்டம்வகுத் தருள்வோய்
நிட்டைசெயும் உத்தமர்கள் நின்மல வானந்த
நிலைபெறவும் துணைபுரிவோய் நேர்மைமிகும் செயலோய்
உட்டெளிவொன் றறியாதே உழன்றவெனைச் சேயாய்
உண்மையிலேற் றருளமுதை ஊட்டவிழைந் திடுவோய்
சிட்டர்பலர் தொழுதேத்தும் சீரியசற்குருவே
திருவிருடிப் பட்டியமர் தேசிகமா மணியே 511

கல்வியெனும் பல்கடலைக் கடைந்தெடுத்த அமுதே
கரைகாட்டித் திரைநீக்கிக் கருணைசெயும் குருவே
செல்வமெலாம் ஒருநொடியில் தரவலதே சிகனே
சிவவொளியே தவநெறிதந் தருள்செயும் ஆரியனே
வல்வினையின் வலிதொலைக்க வல்லதவக் கனலே
வாழ்வனைத்தும் வழங்கிடவே வந்ததயா நிறைவே
நல்வரமெல் லாம்கொடுக்கும் ஞானசுகோ ததியே
ஞாலமிசை இருடியர்பட் டிப்பதிவாழ் பதியே, 512

தண்டமிழ்நா டியற்றியநற் றவப்பயனு னவனே
சட்டமெனும் திருநெறியைத் தாரணிக்கீந் தவனே
அண்டர்தொழும் கணபதியை மதுரையிலே வைகை
யாற்றருகில் கண்டணைத்துக் கொண்டுளுவந் தவனே
தொண்டனெனத் தமியனையும் கொண்டதயா பரனே
துக்கமெலாம் நீக்கியருட் சுகம்அருள் தூயவனே
பண்டமெலாம் நல்கியருட் பாதமலர் நிழலும்
பரிந்துதவற் கிருடியர்பட் டிப்பதிவாழ் பரனே. 513

சாதனங்கள் செய்துய்யத் தக்கதொரு நெறியைச்
சட்டமெனத் தாரணியில் தந்தருள்சற் குருவே
சோதனைகள் புரியாதென் துன்பமெலாம் நீக்கித்
துரியநிலை விளக்கியருள் திருவமுதூட் டிடுவாய்
மாதனமெல் லாம்வழங்கி மாசடையா உள்ள
மாண்பும்அடி யார்களுக்கே நல்குபரஞ் சுடரே
வேதனையெல் லாம்தவிர்நல் விரதமளித் தின்ப
வினைவருளற் கிருடியர்பட் டிப்பதிவாழ்
விபுவே.514

சச்சித்தே ஆனந்தத் தனியமுதக் கடலே
சத்தியமே சத்துவமே சாந்தமெனும் சுகமே
முச்சிக்கும் நீக்கியருள் மோனநிலைத் தவமே
மோகமெலாம் கடந்திலகும் முத்தர்தொழும் குருவே
எச்சிக்கும் நீக்கிடவும் இகபரம்நல் கிடவும்
எளிதாயோர் அருட்சட்டம் இனிதருள் மாதவனே
உச்சிக்கு மேல்கைகூப் புத்தமர்தம் திருவே
உயரிருடிப் பட்டியமர்ந் தொளிரெனுயிர்க் குயிரே
515

வேறு

என்றுபல வாறுகத் துதித்தண்ணல்
இணையடிகள் தொழுது நின்றார்
நன்றுகடைக் கண்ணுேக்கால் ஞானவள்ளல்
அவர்க்கிணையில் அருள்செய் திட்டார்
ஒன்றியசீர் அண்ணலுக்கும் உடன்வந்த
அடியவர்க்கும் உபசா ரங்கள்
பொன்றலில்அன் பால்புரிந்து புவியில்வந்த
பயன்செட்டி யார்பெற் றுரால். 516

வேறு

செட்டியார் அண்ணல் திருவருட் டிறனை
உன்னியுட் கசிந்துரு கிட்டார்
சட்டவாழ் வருளும் அண்ணலார் அவரைத்
தண்ணரு ளாலழைத் துடையோன்
திட்டமாம் கணக்கின் படியலால் நன்மை
தீமையென் றெதுவுமே யணுகா
இட்டமாய் எண்ணிக் கொண்டுப்ரார்த் தனைகள்
எதுவுமே செயல்தகா தென்றார். 517

வேறு

யாதுநடந் திடினும்நட வாவிடினும்
இறைவன்மல ரடியே தஞ்சம்
சூதொரணு வேனுமின்றித் தூய்மையொடு
பற்றிநழு வாதி ருந்தால்
போதும்அது வேஉய்யும் வழியென்ன
உபதேசம் புரிந்தார் அண்ணல்
நாதனுப தேசம்உச்சி மீதேற்று
நடந்துவர லானார் அன்பர். 518

அவ்வூரில் வக்கீலாய்த் தொழில் பார்த்த
அய்யர்மரு மகளுக் குப்பேய்
எவ்வாறோ பிடித்துப்பல சேட்டைகளைச்
செய்துவரப் பத்துப் பேய்கள்
அவ்வாறு பற்றிவருத் துவதாகக்
கூறினர்பற் பலர்மு யன்றும்
எவ்வாற்றி னுலுமவை விட்டுவில
கிச்செல்லா திருந்த வம்மா. 519

அங்கண்ணல் வந்திருப்ப தறிந்தழைத்து
வரப்பார்த்தார் அந்த அம்மை
செங்கைபற்றி யீர்த்தும்வரா மையினற்சங்
கிலியிட்டுக் கொண்டு வந்தார்
அங்கண்ணேக் காலண்ணல் அப்பேய்கள்
அனைத்தையுமே போகச் செய்தார்
மங்களமாய் அவ்வம்மை வணங்கிவழி
பட்டுமுழு நலம்பெற் றுய்ந்தார். 520

**திருச்சிராப்பள்ளி - 2** (உத்ஸவம்—2)

உயர்அருட் பயிரை உலகினில் வளர்க்க
உதித்தருள் ஒப்பில்சீர் அண்ணல்
மயர்வறத் தாம்முன் மணிமணி யாகத்
திரட்டிய மாண்புசால் அடியார்
உயர்வுறும் நிலையை அடிக்கடி சென்று
பார்த்துநன் றாக்குவர் அருளால்;
அயர்வொரு சிறிதும் அணுகிடா வண்ணம்
அருளமு தருத்தியின் பருள்வார். 521

அவ்வணம் திருச்சி ராப்பளி வாழும்
அடியவரைப் பார்த்துநன் றாக்கத்
திவ்விய வுளத்தில் எண்ணினர் இனிதே
திருச்சிராப் பளிநகர் சேர்ந்தார்
செவ்விய உளம்சால் அடியவர் அண்ணல்
எழுந்தருள் திறத்தினை உணர்ந்தே
பவ்வமென் றுரைக்கும் படிதிரண் டுண்மைப்
பரிவொடும் நனிவர வேற்றார். 522

வேறு

மங்கலவாத் தியம்முழங்க மணிக்குடையும்
கொடிகளும்வான் முகில்ம றைக்க
சங்கொலிக்கத் திருச்சின்னம் தாரைமுத
லானதழங் கொலியு மோங்க
துங்கமணிக் கவரியடி யார்அண்ண
லிருபுறத்தும் துவன்றி வீச
எங்குமர ஹரவென்னும் துழனியெழ
இமையவரும் வாழ்த்தி னரால். 523

அண்ணல்தமக் கெனஅடியார் அமைத்திருந்த
ஓரிடத்திற் சென்ற மர்ந்தார்
எண்ணிலடி யார்கள்வலம் வந்திறைஞ்சி
இன்பமெனும் கடலுள் ஆழ்ந்தார்
அண்ணல்வர வினையறிந்த சுற்றுப்புற
ஊராரும் திரண்டங் குற்றார்
எண்ணிவந்த குறைகளண்ண லிடம்கூறி
அவைதவிர்க்கும் வழியா தென்றார். 524

இவ்வுலக சுகபோகங் களைப்பெரிதாய்
விரும்பியவர் இருத்தல் கண்டே
செவ்வியபே ரருட்சுகத்தில் திளைக்கநினை
யாதிருக்கின் றாரே யென்னத்
திவ்வியநற் றிருவுளத்தில் இரக்கமுற்றார்
திருவருளால் அவர்கட் குற்ற
எவ்வமகன் றிடும்நல்வழி இனிதுரைத்தார்
எவரும்மகிழ் வெய்தி னாரால். 525

வேறு

அருட்சட்டச் சிறப்பைக் கலந்து தம்தூய
அருளுரை களைவழங் கிட்டார்
விரிநிலத் துடலை யோம்பவே வெகுவாய்
நேரத்தைச் செலவிடும் மக்கள்
அருணன்நன் றுதிக்கும் காலையி லேனும்
அன்புடன் இறைவனை நினைந்தால்
பெருநல மெய்த லாமென உணர்த்திப்
பெருமகிழ் வூட்டினர் அண்ணல். 526

உழைப்பினுக் கேற்ற ஊதியம் பெற்றால்
உயர்நெறி பழகிஉய்ந் திடுவார்
செழிப்புறு சட்டச் செந்நெறிச் சிறப்பைத்
தெளிவுற வுணர்வர்பின் னென்றே
விழிப்பரு ளண்ணல் திருவுளம் கொண்டார்
விழுமிய நிலைவிழை சிலரை
அழைத்தரு ளுரைகள் பலவுரைத் தினிதே
அருள்நெறிக் காட்படுத் தினரால். 527

மாமரம் நல்கும் பழங்களின் விதைகள்
அனைத்துமே மாமரம் ஆமோ
தூய்மைசால் உரையைக்கேட்பவர் எல்லாம்
தூயராய் மாறிடற் காமோ
தூய்மையை நாடும் பக்குவ முடைய
ஒருசிலர் சுவாமியைக் குருவாய்
வாய்மையொ டேற்றுப் பொருளுட லாவி
அர்ப்பணித் தருள்நெறி வாழ்ந்தார். 528

வேறு

அருட்குருவின் தரிசனம்நல் லடியவர்கட்
கிகம்பரமெல் லாமும் நல்கும்
அருட்குருநிர்த் தனமாடும் ஏகசிம்மா
சனத்தோடும் தொடர்பு கொள்மின்
தெருட்பெறும்அக் காட்சியிந்தக் கண்களுக்குத்
தோன்றாது; தெளிந்து நோக்கின்
பொருட்பெறும்அக் காட்சியினைப் பொலிவுறக்கண்
டிடலாகும் என்ப தோர்மின்; 529

கள்ளமிகு மனதிலுறும் கசடறுத்தக்
கள்ளனையுட் காணல் வேண்டும்
வெள்ளம்வரு முன்னர்அணை யிடல்வேண்டும்
அஃதேபோல் வெய்ய காலன்
மெள்ளவந்திங் கழைத்திடுமுன் வியனருள்பெற்
றுயல்வேண்டும் என்ப தோர்மின்
உள்ளஉயிர் அனைத்தும்உடன் பிறந்ததென
மெய்யன்போ டுணர்தல் வேண்டும்; 530

நல்லறிய மாதிகளை மனத்திருத்தி
நல்வழியில் நடந்து வந்தால்
நல்லபயன் பெறலாகும் என்றுரைத்தார்
ஞானவள்ளல்; ஒருவர் ஆங்கே
மெல்லஎழுந் தருட்சட்டம் எம்மதத்தைச்
சார்ந்ததனை விழைந்து பற்றிச்
செல்லுநரை எப்பெயரால் அழைப்பதெனப்
பணிவோடு விண்ணப் பித்தார். 531

அருள்கூர்ந்திங் கிதையுரைக்க வேண்டுமென்றார்
அண்ணலும்புன் முறுவல் பூத்தார்;
அருளடியார் களைச் 'சாமி' என அழைக்கும்
வழக்கம்போல் அழைத்துச் சட்டம்
மருவுமதம் அனைத்தினுக்கும் சாரமென
லாகும்;அதைப் பேணி வாழ்வோர்
அருட்சட்ட அடியார்கள் எனப்போற்றப்
பெறுவர்என அருளிச் செய்தார். 532

அருட்சட்டத் தின்கொள்கை அனைத்துமொவ்வோர்
அருள்மதத்தில் உள்ள தாகும்
திரட்டியெல்லாம் ஒன்ருக்கி இக்காலத்
தெளிதெவரும் தெளிந்து போற்ற
அருட்டிருவாய் உடையவன்றன் அருட்கருணை
அளித்துளதென் றறிதல் வேண்டும்
தெருட்டுறுமெய் யன்பிருந்தால் தெய்வநலம்
எய்துமென அருளி ஞரால். 533

ஐயமூற்றேர் தெளிவடைந்தார்;அவனிமக்கள்
பிணியாலும் வறுமை யாலும்
எய்துதுயர் தீர்க்க வந்த தூமணியே!
எளியேங்கள் உய்யும் வண்ணம்
துய்யபெருந் தவமாற்றிச் சட்டநெறி
தோற்றுவித்த குருவே யென்று
மெய்யிற்புள கம்போர்ப்ப விழிகளில்நீர்
பெருகப்பணிந் திறைஞ்சி உய்ந்தார். 534

இவ்வாறம் மாநகரில் பலஅடியார்
வேண்டுதலுக் கிரங்கி ஞானச்
செவ்வாய்மை மிகும்அண்ணல் தங்கியிருந்
தருட்கருணை செய்து வந்தார்
அவ்வூரில் மீனுட்சி சுந்தரம்பிள்
ளைமனைவி அமிர்தம் மாளுக்(கு)
எவ்வாறும் தீராத வயிற்று வலி
இருந்திடர்தந் திட்ட தம்மா. 535

பலவித மருத்துவமும் பயனின்றிப்
போனதனுல் பவம்தீர் அண்ணல்
இலகருட்கண் திருநோக்கால் பலபிணிகள்
இடர்களெலாம் தீர்தல் கேட்டே
அலகிலரு ளண்ணலின்பால் தம்மனைவி
யினையழைத்துக் கொண்டு வந்தார்
நிலவிடுநல் வினைப்பயனுல் அவர்களண்ணல்
தரிசனம்பெற் றிட்டா ரங்கண். 536

அண்ணலொரா சனத்திலினி தெழுந்தருளி
யிருந்தார்கள்;அடியா ரெல்லாம்
வண்ணமலர் ஏந்திவலம் வந்துதிரு
வடியிலிட்டு வணங்கி னுர்கள்
நண்ணியமீ னுட்சிசுந்த ரம்பிள்ளை
மனைவியுடன் வலம்வந் தேத்தி
அண்ணலிடம் தம்மனைவிக் குறுபிணியைக்
கூறியகற் றிடவேண் டிட்டார் 537

அவருள்ளம் அறிந்தண்ணல் அருள்திருநீ
றன்பினுடன் அணியச் சொன்னுர்
அவனிபுகழ் அருட்சட்டம் இனிதேற்கப்
பணித்திட்டார்; அம்மை யின்நோய்
உவமை சொலற் கரியஅண்ணல் உயர்அருள்நோக்
காலங்கொரு நொடியிற் போயிற்(று)
அவர்வியந்தார்;அடியரன்பர் உவகையுடன்
அருட்சிறப்பைப் போற்றி னுரால். 538

கணபதியாச் சாரியெனும் அடியவர்தம்
கனவிலொரு காட்சி தோன்ற
மணிமணியாய் அடியர்பலர் புடைசூழ
அருளண்ணல் வருதல்போலும்
பணிவொடுசென் றவரைவர வேற்றழைத்தல்
போலும், பினர் பல்லக் கின்மேல்
அணிதிகழுத் ஸவம்அவர்க்குத் தன்பொறுப்பில்
செயல்போலும் அவர்கண் டிட்டார். 539

அருள்ஞான வொளியோடும் தூயவெள்ளை
யாடையொடும் பல்லக் கின்மேல்
வருமண்ணல் மானிடநல் வடிவோடு
திகழ்வதையும் மறுநொ டிக்கண்
பரிபூர்ண கணபதியாய் ஒளிர்வதையும்
பரிவிஞெடும் கண்டார்; பின்னர்
இருதூய வுருவினிலும் மாறிமா
றிக்கண்டார் இறும்பூ துற்ருர். 540

கனவிலருட் காட்சிமுடிந் திட்டதுமே
கண்விழித்துப் போற்ற லானார்
அனலிவிடு மெழுகதுபோல் உளமுருக
அன்புருவ மானார்; மெய்யும்
தனதுவச மழியவிழி யருவிபெய
உரைகுழறத் தவத்தால் மிக்க
இனனனைய அண்ணல்விநா யகர்உருவே
எனுமுண்மை யறிந்தின் புற்றார். 541

தம்செலவில் அண்ணலுக்குத் ஸவம்நடத்த
வேண்டுமெனத் தாம்கண் டிட்ட
நெஞ்சையுவப் பிக்குமந்த அருட்கனவை
நினைந்துநினைந் துருக லானார்
அஞ்சலென அனைத்துயிர்க்கும் அபயம்அருள்
அண்ணல்தமக் கருள்செய் திட்ட
விஞ்சுபெருங் கருணையினைத் துதித்தவண்ணம்
அண்ணலிடம் விரைந்து சென்றார். 542

நீராடி நீறணிந்து நியமமுடன்
அண்ணலின்பால் சென்றார் அன்பர்
ஆராநல் லமுதனைய அண்ணலை
வலம்புரிந்து பணிந்து நின்றார்
பாரார்மெய்ப் பரிவனைத்தும் திரண்டதென
அருளண்ணல் பக்கல் சென்றே
ஏரார்உத் ஸவம்நடத்தற் கிசைந்தருள
வேண்டுமென வேண்டிக் கொண்டார். 543

அண்ணல்அவர் அன்பின்பெருக் கினைஉணர்ந்தே
அருட்புன்னகை யோடு மேவ
அண்ணலரு ளிசைவுபெற்றோ மெனமகிழ்வுற்
றாச்சாரி இல்லம் சேர்ந்தார்
அண்ணலருள் வீதியுலா நடத்திடப்பே
ரார்வமுடன் திட்ட மிட்டார்
அண்ணல்திரு வருட்டிறம்போல் அந்தவிழா
மிகுசிறப்புற் றமைந்த தம்மா. 544

பொருளுடைய பலர்அந்தப் பொருளைநல்ல
முறையிற்செல வழித்தி டாமல்
பொருளினுயர் பயனெய்த மனமின்றிப்
புவியின்மிசை கட்டிக் காத்து
மருளுறவீ ணேயழிவர்; நற்செயல்கள்
செய்யமன முடையோர் தம்பால்
பொருளிருப்ப தில்லை;இது வேபுவியில்
நாம்காணும் விந்தை யாகும். 545

அழிபொருளைப் பயன்படுத்தி அழியாத
பேரின்பம் அடைய நாடி
உழைத்தவர்கள் நம்முன்னோர்; அத்தகைய
உயர்சான்றோர் வகையிற் சேரும்
விழுமியராய்க் கணபதியாச் சாரிநனி
விளங்கியதால் அவர்பே ருள்ளம்
எழில்மிகுமா றண்ணல்திரு வீதியுலா
வினைநடத்த எண்ணிற் றன்றே. 546

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்தேழாம்
ஆண்டுபன்னி ரண்டாம் மாதம்
மேயஇரு பான்தேதி சுக்கிரவா
ரத்தில்விழா நடத்தி னார்;அத்
தூயவிழா வின்சிறப்பைச் சொல்லொணுமோ
சுற்றுப்புற அடியார்க் கெல்லாம்
ஏயநல் லழைப்பனுப்பி உத்ஸவத்துக்
கினிதுவரு மாற ழைத்தார். 547

எழிலுறமுன் நடந்தவிழா வினைக்காணும்
வாய்ப்பின்றி இருந்தோ ரெல்லாம்
அழகுறஇப் போதுநடை பெறுமிவ்விழாக்
காணற்கக மகிழ்வோ டுற்றார்
விழுமியபே ரன்போடும் அருளண்ணல்
வியன்பதங்கள் வணங்கிப் போற்றித்
தொழுதுருகிக் காசினியிற் பிறந்தபயன்
கிடைத்ததெனத் துதித்து நின்றார். 548

காலையில் முறைப்படிநல் லபிடேகம்
செய்வித்துக் கவினுர் தூய
மாலைபல சூட்டியினி தலங்காரம்
புரிந்துமிகு மகிழ்வி னேடும்
சிலமுறத் திருவாரா தனைபுரிந்து
திருவமுது நனிப டைத்தார்;
ஏலும்வகை யாலடியர்க் குபசரித்தார்
இனியவமு தருத்தி ஞரால். 549

முத்துவிமா னத்திலரு ளண்ணலை
எழுந்தருளு வித்து முன்னே
மெத்தளழி லார்குடைகள் கொடிமகர
தோரணங்கள் மிடைந்து செல்ல
மொய்த்தெழுதூ ரியம்முழங்கக் குதிரைகளி
ருதியிவை முன்னே யேகப்
பத்தியுட னடியார்கள் பாடிவர
இனிதுவிழா நடந்த தன்றே. 550

இடைத்தெருவி னிற்றெடங்கித் திருச்சிராப்
பள்ளிப்பெருந் தெருவி லெல்லாம்
கடலலைபோல் மக்களினம் சூழ்ந்துநிறை
களிப்பினெடும் போற்றி செய்ய
அடியரன்பர் அரஹரவென் றெலிமுழக்கி
அருட்பேறு பெற்றுச் சூழ
நெடியவிழா நிகழ்ந்ததந்த நீள்நகரம்
பொலிந்ததிறம் நினைத்தற் காமோ. 551

எந்தஉயி ரினங்களந்த நல்லவிழா
வினைக்காணப் பெற்ற வோநன்
றந்தஉயி ரினங்கள்முனர் புரிந்ததவம்
யாதோஎன் றுணர்தல் வேண்டும்;
இந்தஉல கினிற்பிறந்த பயனடைந்தோம்
என்றெவரும் மகிழ்வுற் ருர்கள்;
சந்தமுற முனர்நடந்த விழாவினிலும்
சிறப்புடைத்தாய்ச் சாற்றல் வேண்டும். 552

காலையில் முறைப்படிநல் லபிடேகம்
செய்வித்துக் கவினுர் தூய
மாலைபல சூட்டியினி தலங்காரம்
புரிந்துமிகு மகிழ்வி னோடும்
சிலமுறைத் திருவாரா தனைபுரிந்து
திருவமுது நனிப டைத்தார்;
ஏலும்வகை யாலடியார்க் குபசரித்தார்
இனியவமு தருத்தி னாரால். 549

முத்துவிமா னத்திலரு ளண்ணலை
எழுந்தருளு வித்து முன்னே
மெத்தளழி லார்குடைகள் கொடிமகர
தோரணங்கள் மிடைந்து செல்ல
மொய்த்தெழுதா ரியம்முழங்கக் குதிரைகளி
ருதியிவை முன்னே யேகப்
பத்தியுட னடியார்கள் பாடிவர
இனிதுவிழா நடந்த தன்றே. 550

இடைத்தெருவி னிற்றொடங்கித் திருச்சிராப்
பள்ளிப்பெருந் தெருவி லெல்லாம்
கடலலைபோல் மக்களினம் சூழ்ந்துநிறை
களிப்பினொடும் போற்றி செய்ய
அடியரன்பர் அரஹரவென் றொலிமுழக்கி
அருட்பேறு பெற்றுச் சூழ
நெடியவிழா நிகழ்ந்ததந்த நீள்நகரம்
பொலிந்ததிறம் நினைத்தற் காமோ. 551

எந்தஉயி ரினங்களந்த நல்லவிழா
வினைக்காணப் பெற்ற வோநன்
றந்தஉயி ரினங்கள்முனர் புரிந்ததவம்
யாதோஎன் றுணர்தல் வேண்டும்;
இந்தஉல கினிற்பிறந்த பயனடைந்தோம்
என்றெவரும் மகிழ்வுற் றார்கள்;
சந்தமுற முனர்நடந்த விழாவினிலும்
சிறப்புடைத்தாய்ச் சாற்றல் வேண்டும். 552



20 12 1907ல் திருச்சிராப்பள்ளியில் சுவாமிகளுக்கு நடந்த உத்ஸவ ஊர்வலம்

தனியொருவர் செயுமிவ்விழா சாலச்சிறப்
　புடையதெனச் சொல்வார் பல்லோர்
தினந்தொறுமிவ் வாறுசெயின் சிறப்பாக
　இருக்குமென நவில்வார் பல்லோர்
இனிதடியர் பயனடைதல் வேண்டுமெனும்
　பெருநோக்கோ டிணையில் அண்ணல்
புனிதவிழா விற்கிசைந்த தாற்பயன்பெற்
　றேமென்னப் புகல்வார் பல்லோர். 553

பெருஞ்சிறப்பி னேடுவிழா வினைநடத்திப்
　பேரன்பர் பேறு பெற்றார்
அருங்குணமார் அடியவர்கட் கருள்புரிந்தும்
　புதியஅடி யவரைச் சேர்த்தும்
நெருங்குபலர்க் கினிய அரு ளுரைபுகன்றும்
　நிட்டையினிற் பழக்கி வைத்தும்
பரிந்துதவி பலபுரிந்தும் அண்ணல்பல
　நாட்களங்கு தங்கி னாரால். 554

## கும்பகோணம்

தீந்தமிழ் நாட்டிற் கோயிலில் லாத
　ஊரிலை யென்றுசெப் பிடலாம்
மாந்தர்கள் இதனை உணர்ந்திடத் தூய
　மாண்புசால் அவ்வைப் பிராட்டி
வாய்ந்தநற் கோயில் அமைந்திடா வூரில்
　வாழவேண் டாமென உரைத்தார்
சேர்ந்துபல் கோயில் திகழ்ந்திடும் ஊர்கள்
　சிலவுள செந்தமி ழகத்தே. 555

பலஇன மக்கள் பாங்குடன் வாழும்
　பண்புசால் எழிற்கும்ப கோணம்
நலமிகு மவற்றுள் ஒன்றென விளங்கும்;
　ஞானமும் பக்தியும் பொலிவும்
இலந்தொறும் திகழப் புரியருட் சட்ட
　நெறியினை இதமுட னேற்றுக்
குலம்நனி இலகக் குறைவறி யாமல்
　குலவுநர் பலர்அவண் உளரால். 556

ஊனுடம் புருக உளம்நனி யுருக
உருகிடும் அடியரைப் புரக்கும்
ஞானவித் தகரால் ஆட்கொளப் பெற்ற
நல்லடி யவர்அவண் இருந்தார்;
தானம்நற் றருமம் மிகுசிராப் பள்ளி
நகரினில் தகவுற முனிவர்
வானவர் வாழ்த்த நடந்தஉத் ஸவங்கள்
கண்டுளம் களித்தவர் வதிந்தார். 557

வேறு

குடந்தையினில் அடியார்சந் தனம்பிள்ளை
யில்லத்திற் குலவும் அன்ப
ருடன் தங்கி யருளண்ணல் ஒப்பிலடி
யார்களையாட் கொண்டு வந்தார்;
இடம்குலவும் அவர்வீடாண் டவர்வரவால்
இணையில்பொலி வெய்தி மேவும்;
நுடங்குதலில் லாதடியர் அன்பர்க்கவர்
அமுதளிக்கும் நோன்மை பெற்றார். 558

அடியர்பலர் அண்ணலைக்கண் டையங்கள்
நீங்கியகம் களித்துச் செல்வார்
அடியர்பலர் புதிதாக அருட்சட்டத்
தினிற்சேர்ந்தா னந்தம் துய்ப்பார்
அடியர்பலர் பேரன்பால் அகமுருகி
அண்ணலுக்குச் சேவை செய்வார்
அடியர்பலர் அருட்சட்ட அடியர்பணி
புரிந்தின்பம் அனுப விப்பார். 559

வேறு

நினைக்குந்தொறும் காணுந்தொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்துறுப்பும் கரைந்துருக ஆனந்தத் தேன்சொரியும்
தனிப்பரம சற்குருவின் தண்ணருளாற் றலையுணர்ந்து
நினைப்புமொழி செயலனைத்தும் அர்ப்பணித்தோர் அவண்
உறைந்தார். 560

அண்ணல்பல முறையந்த அருட்பதிக்கண் எழுந்தருளி
எண்ணில்பல அற்புதங்கள் இயற்றியுளார் எவர்குறையும்
கண்ணருளால் நீக்கியுளார் கருணைமிகப் பெருக்கியுளார்
புண்ணியனர் அருட்சிறப்பைப் புரிந்துகொண்டோர்
அவணிருந்தார். 561

ஒருமுறையில் அருளண்ணல் குடந்தையினில் உறைநாளில்
அருள்விழையும் ஓரடியார் அண்ணலருகினிற்போந்து
கருணையுடன் எம்மையெலாம் காத்தருளும் குருபரர்நீர்
இருள்விலக ஒளிவிளங்க இவணிருப்பீர் என்றுமென்றூர் 562

நம்பெருமான் அதுகேட்டு நல்வீதி தொறும்நாமம்
இன்பமுடன் துதித்துமகிழ் இனியநல்ல காலம்வரும்
நம்படியர் திரள்வளரும் ஞானவொளி யெங்கும்மிகும்
உம்பர்குழாம் உவந்தேத்த உயரின்பம் ஓங்குமென்றூர் 563

வள்ளல்அரு ளியவாறே வளமைமிகும் அத்தலத்தில்
உள்ளுருகிப் போற்றிசெயும் உயரடியார் என்றுமுளார்
வில்ளரிய சிறப்பொடுசித் திரைமதி விழாநடக்கும்
தெள்ளியநற் பெருமையிவண் செப்பிடவல் லார்எவரே. 564

## சோழன்மாளிகை

அண்ணலார் அடியர்பலர்க் கருள்செய்த
வணமேகி அருட்குடந்தை
நண்ணிஅவண் இருந்தசில அடியாரை
யாட்கொள்ள நாடித் தூய
எண்ணமுடைச் சந்தனம்பிள் ளையிலத்தில்
தரிசனம்தந் திருக்கும் போது
உண்ணிறையன் புடையடியர் சோழன்மா
ளிகையிலிருந் தொருவர் போந்தார். 565

அவர்தம்பி மகன்தில்லை துரைசாமி
முதுகினிலே பிளவை தோன்றி
அவத்தைதரும் போதறுவை செய்யமருத்
துவச்சாலைக் கழைத்துச் செல்ல
நுவலஅதற் கொவ்வாமல் அருட்சட்டத்
தால்நோயை நீக்க லாமென்
றவர்கூறி அண்ணல்குடந் தைக்குற்ற
தறிந்தடைந்து போற்றி நின்றூர். 566

அடியவரைச் சட்டஅனுட் டானத்தி
னின்றும்தவ ருது காத்துப்
படியின்மிசை மற்ருரும் சட்டம்மேற்
கொளச்செய்து பாலித் தாளும்
நெடிய அருட் பணியேதம் கடமையெனக்
கொண்டிருந்த நிமல மூர்த்தி
உடனேயச் சோழன்மா ளிகைக்கேகி
ஒப்பிலருட் சேவை தந்தார். 567

பண்புமிகு துரைசாமிப் பிள்ளைக்குக்
காட்சிதந்து பச்சை நீரில்
நண்பொடுமூழ் கச்செய்து பிளவையினைத்
திருக்கரத்தால் நன்று தொட்டார்
கண்பொழியின் னருட்கருணை கரமகிமை
கலந்துநலம் விரைவில் நல்க
மண்பொலியா வரும்வியக்க முழுநலமுண்
டாகியது மகிழ்ந்தார் மாந்தர். 568

அம்மஎன அதிசயித்தார் அற்புதமீ
தெனப் புகழ்ந்தார் அவ்வூ ருள்ளோர்
செம்மைமிகும் அருட்சட்டத் திருநெறியில்
மகிழ்வோடு சேர லானர்
இம்மைநலம் மறுமைநலம் ஈந்தருளும்
அண்ணலங்குச் சிலநாள் தங்க
வெம்மைமிகு பிணிமுதலாம் தீமைபல
விலகஅருள் விளங்கிற் றன்றே. 569

சோழன் மாளிகை அம்மையார்

உள்ளமிசை உறுதியும்ப ரம்பொருள்பால்
நீங்காப்பே ரன்பும் கொண்ட
கள்ளமில்இல் லத்தரசி யார்ஒருவர்
கவின்மிகும்அவ் வூரின் கண்ணே
தெள்ளியநன் னிலையருளும் தேசிகர்எப்
போதுறுவார் என்றி ருந்தார்
வள்ளலவர்க் கருள்புரிந்தாட் கொண்டிடவே
திட்டமிட்டு வந்தார் போலும்! 570

நல்லநடுத் தரஉயரம் நங்கையுமை
போல்தோற்றம் ஞாலம் போற்றும்
செல்வவளத் திற்கேற்ற கொடையுள்ளம்
செம்மனத்திற் கேற்ற ஆடை
இல்லறப்பொ றுப்பைநனி ஏற்றுநடத்
தும்திறமை இயல்தெய் வீகம்
புல்குமுகப் பொலிவுசெயல் திறம்பண்பு
பொருந்தியம்மை யார்தி கழ்ந்தார். 571

குருநாதர் நல்வரவை எதிர்பார்த்துக்
காத்திருந்த குணம்சால் அம்மை
அருளண்ணல் வரவறிந்தங் குற்(று)அவர்தம்
அருட்பொலிவைக் கண்டு மேலாம்
தெருளருளி யாளவல்ல தேசிகனூர்
இவரேயென் றுணர்ந்து ஞான
குருபரனூர் திருவடியிற் குழைந்துருகும்
மனத்தினுடன் கும்பிட் டார்கள். 572

அம்மையார் உளப்பண்பை உணர்ந்(து)அவரை
யாளவுன்னி அவ்வூர்க் குற்ற
செம்மைசால் அருளண்ணல் திருவருள்செய்
தாளத்திரு வுளங்கொண் டார்கள்
வெம்மைபுரி வினைமுடிச்சை யறுத்தருளி
மேலும்வினை சூழா வண்ணம்
செம்மைபுரி சட்டநெறி உபதேசம்
செய்தாசி யருளி னூர்கள். 573

பள்ளந்தாழ் வுறுபுனலிற் கீழ்மேலாய்ப்
பதைத்துருகும் உண்மை யன்பார்
உள்ளம்சால் அவ்வம்மை சட்டநெறி
உயர்வறிந்து போற்றிப் பேணித்
தெள்ளியநன் னிட்டையிலும் குருவருளாற்
சிறந்தநிலை யெய்தி னூர்கள்
வள்ளல்அவர் உயர்பண்பை யறிந்தங்குப்
பன்முறைவந் தருள்செய் தார்கள். 574

அவ்வூரில் மேலும்பல அடியவர்கள்
அருட்சட்டம் மேற்கொண் டார்கள்
இவ்வாறங் கருளண்ணல் எழுந்தருளின்
சுற்றுப்புற ஊரி லுள்ளோர்
எவ்வாறு குழுமிவந்தண் ணலைத்தரிசித்
தின்னருள்பெற் றேகு வார்கள்
அவ்வூர்ப்ப ஜனமடத்தில் அண்ணலமர்ந்
தருட்காட்சி யருளு வார்கள். 575

அடியவர்கள் வீட்டிலண்ணல் தங்கிமக்கட்
கருட்காட்சி யருள்வ தென்றால்
குடும்பம்நடத் திடும்வீட்டிற் கூட்டம்மிகச்
சூழின்இடை யூறுய்த் தோன்றும்
படிமிசையெவ் வுயிர்க்கும்மனத் தாலுமிடர்
வாராமற் பாது காக்கும்
சுடரொளியாம் அண்ணல்அடி யார்க்கின்னல்
தரச்சிறிதும் விரும்பு வாரோ? 576

காலையிலும் மாலையிலும் பஜனமடத்
தில்தூய கருணை யோடும்
சீலமிகும் அண்ணல்அமர்ந் தன்பருக்குத்
தெரிசனம்தந் தருளு வார்கள்
மூலமறை யாம்ப்ரணவ வடிவுடைய
முன்னவனுர் அவண்தி கழ்ந்தார்
சாலமக்கள் திரண்டுவந்து தம்குறைகள்
தவிர்ந்துநலம் எய்து வாரால். 577

சுக்கிரவா ரந்தோறும் அன்பர்குழு
மிகஅதிக மாகச் சூழும்
முக்கண்விநா யகர்க்குடைக்கும் தேங்காய்நீர்
நதிவெளம்போல் பெருகி யோடும்
தக்கபல கடையும்அவண் வந்தமையும்
பலர்பிணிகள் தவிர்ந்து செல்வார்
மிக்கபுக ழுடையண்ணல் அருட்பெருமை
எளியேனுல் விளம்பற் காமோ? 578

சிறப்புமிகும் அவ்வூரில் திருக்காட்சி
நல்கிவந்த சீரார் அண்ணல்
அறப்பொலிவு மிகுந்திலகும் அம்மையார்
இல்லத்தில் தங்கு வார்கள்
மறைப்பெருமை திகழ்நாளில் மாதர்களும்
அருளில்வளம் மிகுந்தி ருந்தார்
பிறப்பிறப்பை வெலும்நெறியில் பினர்வந்தோர்
மேலோங்கிப் பிறங்கி நின்றார். 579

காரைக்கா லணைமங்கை யர்க்கரசி
ஆண்டாள்போற் கற்பின் மிக்கார்
பாரிற்சீர் சால்பக்தி ஞானங்க
ளிற்சிறந்து பழகி யுள்ளார்
ஏரிற்பொலி மாதரிடம் வேதாந்தம்
இயம்பிடுத லாகா தென்னும்
சீரிலதொர் கருத்துப்பிற் காலத்தில்
சிலரிடத்தில் திகழ்ந்த தம்மா. 580

அகஒழுக்கம் உளஉருக்கம் ஆன்மிகஞா
னத்தொடைந்து புலன டக்கம்
மிகவுடைய அம்மையார் நிட்டையினில்
நனிசிறந்து விளங்கி னார்கள்
தகவுறுபல் காட்சிகள்கண் டண்ணலிடம்
விளக்கம்கேட் டானந் திப்பார்
நுகர்வருபே ரருள்நிலைகள் நுகரும்வணம்
கருணையுடன் நுவல்வார் அண்ணல். 581

ஒருமுறையில் அண்ணலம்மைக் குயர்நிலைகள்
நவில்போதவ் வில்லத் தார்கள்
அரியபல வேதாந்தக் கருத்துகளை
அணங்கினர்க்குச் சொலலா காதென்(று)
உரிமையுடன் அண்ணலிடம் உரைத்தார்கள்
'அப்படியா சரி'யென் றண்ணல்
இரவினில்தா ளிடப்பெற்ற இல்லமவ்வா
றேயிருக்க வெளியே கிட்டார். 582

காலைதணீராடுவதற் கண்ணலை
யெழுப்பக்கத வினைத்தி றந்தார்
ஏலஅண்ணல் இருந்தஇடத் தில்லாமை
கண்டுமிக வருத்த முற்ருர்
சிலமிகும் அம்மையுளம் மிகப்பதைத்த
நிலையா ராற் செப்பற் காகும்
சால்புடைத்தா யைப்பிரிந்த கன்றினைப்போல்
தாங்கரிதாம் வருத்தம் கொண்டார். 583

அண்ணலைக்கா ணுதுகணப் போதும்தரித்
திருக்கஅவர் ஆற்ற கில்லார்
அண்ணலைத்தே டிக்கண்டங் கழைத்துவரத்
தகுதுணிவு திடம்பெற் றில்லார்
அண்ண லெங்குச் சென்றனரோ அவரெங்குத்
தங்கினரோ என்று நைவார்
அண்ண லுளத் தென்னஎண்ணி ஏகினரோ
என்றுன்னி அழுது சோர்வார். 584

அண்ணலருட் காட்சியினைக் கண்டதையும்
அவர்அருளால் ஆண்டு கொண்டே
எண்ணரும்பல் சிறப்புகளை யீந்ததையும்
இணையில்அருள் நிட்டை தன்னில்
நண்ணரிய பலகாட்சி நல்கியுயர்
ஞானமளித் ததையும் பல்கால்
எண்ணியெண்ணி இனிநமக்கித் தகையதிரு
யார்அருள்வார் என்று நைவார். 585

அண்ணல்திரு வருட்காட்சி மீண்டும்காண்
போமோஎன் றழுது நைவார்
அண்ணலரு ளுபதேசம் மீண்டும்கேட்
போமோஎன் றரற்றிச் சோர்வார்
அண்ணல்திரு வடிமலரில் மீண்டும்வணங்
கிடும்நன்ளுள் என்றே என்பார்
எண்ணில்பல பிழைபொறுக்கும் இயல்புடையீர்
எமதுபிழை பொறுப்பீர் என்பார். 586

இவ்வேழை யினைமறந்தெங் ஙனம்சென்றீ
ரோவென்ன இரங்கிச் சோர்வார்
இவ்வேழை யினைக்கடைத்தேற் றற்கினியார்
உளரென்ன ஏங்கி நைவார்
இவ்வேழை இனிவாழ்வ தாற்பயன்யா
தெனஅழுது கலங்கி நிற்பார்
செவ்வாய்மை யால்தூது சென்றுவரத்
தன்னுளத்தை யனுப்பி விட்டார். 587

வீதிதொறும் தூயஅருள் விளையாடல்
செய்துவரும் விமல ஞரைப்
பாதபூ சைக்குநின்ற பசுங்கிளிதே
டுவதாகக் கூறு கென்பார்
பாதகம லந்தன்னிற் பணிந்தருட்பூ
சனைகள்செயும் பண்பார் தூய
சா தனங்கள் தந்தகுரு சாமியைத்தே
டுவதாகக் கூறு கென்பார். 588

இன்னவா றுய்ச்சோழன் மாளிகையில்
இனிதண்ணல் காட்சி தந்த
பன்னரிய அற்புதத்தை அமைத்தொருதூ
துப்பாடல் பாடி வாடி
சொன்னமிகப் பெற்றுப்பினர் கைவிட்டோன்
துடிப்பதுபோல் துடித்துச் சோர்வார்
உன்னரிய நிட்டையமர் வார்எழுந்து
தோட்டத்தி லுற்றுக் காண்பார். 589

ஆண்டவரைக் காணமல் அழுதேங்கிப்
பெருமூச்சு விடுவார் மேலும்
ஈண்டுபெருந் தவவேந்தைக் காண்பதெவ்வா
ரேூவென்ன இரங்கி நைவார்
ஆண்(டு) அவருள் ளப்பதைப்பை ஆரறிவார்?
ஆண்டவரே யறிவார்; சற்றே
மீண்டுநிட்டை யினில்அமர்வார் மெலிந்துருகிப்
பாடலொன்று பாடு வாரால். 590

சீரனைத்தும் பொருந்ியுள பெருமானே
சிறந்தஅருட் செல்வம் நல்கும்
ஏரிலகும் பெருங்கடலே இனிதுமது
பதமலரை யெய்தி யுய்யப்
பாரில்வந்த பாலகியப் பேறுபெறு
முன்னேயே உமைக்காணேனே
பூரணசற் குருவேநீர் போனவழி
யறியேனே என்று நைவார். 591

ஆராலும் இயம்பரிய பெருந்துயரில்
அவ்வம்மை யழுந்தி நொந்து
பேரூரெல்லாம்மறந்து தமதுநிலை
கெட்டவச மாகிப் பெற்றோர்
ஆராரென் பதும்மறந்து குருபரனுர்
அடிமலரின் நினைவே யாகிச்
சீரார்நன் னிட்டைநிலை யில்திகழ்ந்தார்
அவர்நிலைமை செப்பற் பாற்றோ. 592

அப்பொழுதந் நிட்டையினில் குருநாதர்
அருளுருவிற் றோன்றி யோர்நாள்
செப்பிப்புகை வண்டியினிற் குடந்தைரயில்
நிலையத்திற் சேர்வ தாயும்
அப்பயணத் தினில்அங்கு வந்துகண்டின்
னருளுரைகள் பெறுக என்றும்
ஒப்புற வுரைத்திடலும் அம்மையார்
உளமகிழ்வு கொண்டார் அங்கண். 593

காணுமற் போனபொருள் கையிற்கிடைத்
ததுபோலக் களித்த துள்ளம்
மாணுர்வத் தோடும்அந்த நாளையெதிர்
பார்த்திருந்து மகிழ்ச்சி பொங்கக்
கோணுநல் லுளத்தடிய ருடன்சென்று
குடந்தைரெயில் நிலையத் தின்கண்
சேணுரும் இமையவரும் தொழுகுருவின்
திருவடியிற் பணிந்து நின்றார். 594

புகைவண்டி யினிலமர்ந்தின் னடியார்கட்
கருள்புரியப் போய்க்கொண் டுள்ள
தகவார்சற் குருபரர்தம் தாள்பணிந்து
போற்றிசெயும் அடியார்க் கெல்லாம்
அகமார்நல் லருளாசி அருளிஅருள்
நலங்கள்உசா வியபின் தம்பால்
புகலாகி யுளவம்மை நிலையறிந்து
பொன்மொழிகள் அருளி னரால். 595

அம்மைநிலை யறிந்தஅண்ணல் அவருள்ளத்
துயர்மாற்றி அருள்பெற் றுய்யச்
செம்மைமிகும் அருளுரைகள் இனிதருளித்
தேனனைய குரலி னேடும்
மும்மைமலம் நீங்கும்வணம் முத்திநிலை
யடையும்வழி முறையாய்க் கூறி
இம்மையினில் நடக்கவுள செயல்விளக்கம்
தெரிவித்தார் இனிதே யண்ணல். 596

குருநாதர் அருளாணை சிரமேற்கொண்
டம்மையிலம் குறுகி னர்கள்
பரிவோடும் அவருரைத்த நியமத்தின்
படிதவறு தொழுகித் தூய
பரமான இருடியர்பட் டிச்சாமி
யருளுருவாய்ப் பாரின் மீதில்
பெருஞானத் தவநிலையில் மிகச்சிறந்து
பலர்போற்றப் பிறங்கி னரால். 597

## வேலூர்-1

உடையவன்றன் கணக்கின்வணம் அண்ணலருள்
ஒளிபெருகி யோங்கும் மேலாம்
இடம்பலவற் றினுள்தஞ்சை மாவட்டத்
திருத்துறைப்பூண் டிக்க டுத்துப்
புடைபரந்த வயல்கள்வளம் மிகப்பெருக்கும்
நல்வேலூர் பொலியும் அங்கண்
கொடைவளமும் நடைவளமும் பொருள்வளமும்
குணவளமும் குலவும் நன்றே. 598

வானுறநன் றுயர்ந்தஎழில் மரங்கள்பல
வளமிகுகாய் கனிகள் நல்கும்
தேனொடுநன் மணம்நிறையொண் மலர்வனங்கள்
திகழ்பச்சைப் போர்வை பூண்டு
போனகத்தை உயிர்வகைகட் கினிதுதவும்
நெடுவயல்கள் பொலியும் அங்கண்
தானியமும் தகுபொருளும் உணவும் அருள்
தானவளம் நிலவும் அங்கண். 599

வளம்பலவும் மிகுந்திலகும் அவ்வூரில்
வாழ்கமலப் பிள்ளை யென்போர்
உளந்திகழ்மெய் யன்பார்ஞா னும்பாளொ
டில்லறம்நன் றோம்பும் நாளில்
களங்கமில்சீர் சால்அண்ணல் தஞ்சாவூர்
குடந்தையினில் அற்பு தம்செய்(து)
ஒளிர்ந்திடும்நற் செய்தியறிந் துற்றிறைஞ்சி
யழைத்துவர வுன்னி னூரால். 600

இறைவனருட் கணக்குமவ்வூர்க் கெழுந்தருள
வேண்டுமென இருந்த தாலே
நிறைவிருப்பொ டினிதழைத்த அவர்களுள
நிலையையறிந் தவ்வூர்க் கெய்த
மறைபுகழும் சிறப்புமிகு வள்ளலிசைந்
தருளவுள மகிழ்வுற் றவ்வூர்
உறையும்அடி யவர்அன்ப ருடன்கலந்து
வேலூரை யலங்க ரித்தார். 601

உததியுடை யணியுலகைத் திருத்திறைவன்
ஒண்பதத்தில் தோய்ந்த தூய
இதயமுடை நற்கமலப் பிள்ளைதம
தில்லத்தை எழில்மிக் கோங்கப்
புதியதிரு மணமனைபோல் அலங்கரித்துப்
பூர்ணகும்பம் தாங்கி வந்தே
எதிர்கொடிறைஞ் சினர்வாத்தி யங்கள்முழங்
கினஅடியார் ஏத்தி நின்றார் 602

தூயஅருள் வள்ளலைத்தம் மில்லத்திற்
கழைத்தேகிச் சுரர்கள் வாழ்த்த
ஏயமணிப் பொற்றவிசில் எழுந்தருளச்
செய்தினிது கரக நீரால்
சேயமலர்ப் பதம்விளக்கி யந்நீரைச்
சிரமீது தெளித்துக் கொண்டு
மேயஇல்லத் தினில்தெளித்து மிகுபுனிதம்
மேவியதென் றுளம்க ளித்தார். 603

பனிநீரிற் கலந்தசந்த னம்பூசிப்
பாங்கொடகிற் புகையும் காட்டி
இனியநறுங் கனிவகைபால் படைத்துப்பசுங்
கற்பூரம் ஏற்றிக் காட்டி
மனமுருகி வழிபாடு செய்துவலம்
வந்திறைஞ்சும் பிள்ளை யுள்ளம்
இனிதுணர்ந்து வள்ளலருள் சுரந்தார்கள்
எந்நலமும் பெருகு மாறே. 604

அருளண்ணல் வரவையுணர்ந் தவ்வூரார்
திரள்திரளாய் வந்து சேவித்(து)
அருள்நலம்பெற் றுய்ந்தார்கள் அருகிலுள
பலவூரார் அங்கு வந்து
தெருளடைந்து பலர்சென்றார்;தீராத
பிணிகள்பல தீர்ந்து சென்றார்
மருவுவிடம் தீண்டப்பெற்றோர் விடம்தீர்ந்து
மகிழ்வொடும்தம் மூர்க்குச் சென்றார். 605

அண்ணலார் அருள்நோக்கால் திருநீற்றால்
ஆசியினுல் அன்பர்க் குற்ற
எண்ணில்பல குறைநீங்க இயம்பரிய
நலங்களெலாம் இனிதே யோங்கத்
தண்ணியல்பார் அடியர்மனம் போலமைதி
தழைந்தொளிர்அத் தலத்தின் கண்ணே
திண்ணியநற் றவச்செம்மல் சிலநாட்கள்
திருவருளால் தங்க லானுர். 606

ஒரு சிறுவன் வேளூர் மக்களுக்காக மன்னிப்புக் கேட்டமை

அருளண்ணல் ஒருநாளங் கடியருடன்
அமர்ந்தினுரை யருளும் போதில்
ஒருசிறுவன் எழுந்தண்ணல் ஒண்மலர்த்தாள்
போற்றிவெள்ளிக் கிழமை யொன்றில்
விரதமிருக் கத்தவறி விட்டேன்'மன்
னித்தருள வேண்டு மென்ருன்
குருபரனுர் அத்தவறு மன்னிக்கப்
படுமென்ன அருளி னுரால். 607

இப்பதியில் வாழ்அடியர் எவரேனும்
சிறுதவ றியற்றி னுரேல்
ஒப்பில்பெருங் கருணையினுல் பொறுத்தருள
வேண்டுமென உண்மை யன்பால்
மெய்ப்பொருளாம் குருபரனுர் திருமுன்பணி
வொடும்சிறுவன் வேண்டி நிற்க
அப்பரிசு கண்டண்ணல் அகமகிழ்ந்தவ்
வாருமென் றருள் புரிந்தார். 608

ஊனமகற் றிப்புவிவாழ் உயிர்த்திரளுக்
குயர்நிலைதந் தாள வந்த
ஞானவள்ளல் மக்களுக்கு நல்லுபதே
சங்கள்பல நல்கிச் சின்னுள்
மோனபர மானந்தப் பெருநிலையில்
நனிதிளைத்து மொழிய வொண்ணு
ஞானவொளி யினையிந்த ஞாலமுழு
வதும்பரப்பி விளங்கி னுரால். 609

அடியவரும் அன்பர்களும் அவனியுறை
யேனையரும் அண்ண லார்இப்
படிவிளங்கப் போந்தபரம் பொருளென்று
பணிந்திறைஞ்சிப் பரவி நின்றார்
கடிமலர்கள் பலகொணர்ந்து கழல்மலரில்
சொரிந்துள்ளம் கனிந்து நின்றார்
குடிமுழுதும் ஆளவந்த கோன்இவரே
யெனப்போற்றிக் கும்பிட் டுய்ந்தார். 610

அடிக்கமலம் பணிந்திறைஞ்சும் அடியவரும்
அன்பர்களும் வேண்டிற் றெல்லாம்
கொடுத்தருளும் குருபரனார் கோதிலுயர்
மோனநிலை நீங்கி யன்பால்
அடுத்தவர்கட் கருளுரைகள் அருளியினி
தாட்கொள்ளும் உணர்வ டைந்தார்
உடுத்தகட லுலகமும்வா னுலகும்அர
வெனப்போற்றி யுவந்த வம்மா 611

பன்னரிய பலமறையின் சாரமுமொன்
றாய்த்திரட்டிப் பாருக் கீந்த
மன்னரெண்ணில் மாணடியர்க் கருள்புரிய
மகிமிசைபல் லூர்க்கு மேகி
உன்னரிய பற்பலவாம் அற்புதங்கள்
அடியர்நல முறுதற் காற்றிப்
பின்னரும்பன் முறையிவனாற் றருளாட்சி
புரிசிறப்பைப் பிறகு காண்போம். 612

ஒருநாளில் உரையுணர்வற் றுலகநினை
வற்றிறையின் பத்தில் மூழ்கிப்
பரஞான வடிவாகிப் பரமானந்
தப்பிழம்பா யொளிருங் காலை
பரிபூர ணப்பெருமான் தோன்றியண்ணல்
சிரமீது பாதம் சூட்டி
அருள்ஞானச் செங்கோல்தந் தருளாட்சி
புரிகவென அருளிச் செய்தார். 613

அருட்சட்டத் திருநெறியை அவனிமிசை
யெங்கெங்கும் பரப்பு கென்றூர்
தெருட்பெற்ற தமிழ்நாடு செய்தவத்தாற்
பரிபூர்ணத் தெய்வத் தின்பே
ரருட்செல்வம் அருள்ஞான வடிவாகி
யமையண்ணல் வாயி லாகப்
பொருட்பெற்ற புவிக்கினிது பயன்பட்ட
தச்சிறப்பைப் புகலற் காமோ. 614

சூதுடன்வா தறியாத தூவேலூர்
மக்கள்அருட் சுடராய் மேவும்
போதகுரு நாதர்அருட் பரிபூர்ணத்
தன்மையுணர் திறம்பெற் றில்லார்;
மோதகக்கைப் பரிபூர்ண முதல்வனருள்
முனிவர்புகழ் இவருட் பொங்கிப்
பூதலத்தில் மணம்பரப்பி அருட்செயல்கள்
பலப்பலவும் புரிந்த தம்மா. 615

அன்றுபலப் பலதூய அருட்செயல்கள்
ஆற்றியதைப் பலரும் கண்டார்
இன்றும்அவண் பலதூய அருட்செயல்கள்
இனிதுநடப் பதைக்காண் கின்றோம்
என்றும்அவண் இணையில்பல அருட்செயல்கள்
நடக்குமென எண்ணு கின்றோம்
நன்றுமணம் பரப்புநற்று மரைபோல
ஞாலமிசை திகழும் வேலூர். 616

அருட்டிருப்பாற் கடலில்எழும் அமுதெனவும்
ஆனந்த மாம்குன் றின்மேல்
இருட்படலம் தவிர்க்கவொளிர் எழிற்சோதிப்
பிழம்பெனவும் இணையில் லாச்சேம்
பொருட்குவையை நணிபேணும் பொலிவுமிகும்
பொற்பேழை யெனவும் ஞாலம்
தெருட்பெறுமா றிறைவனருள் திருமறையின்
பொருளெனவும் திகழ்ந்தார் அண்ணல். 617

### ஸ்ரீ ரங்கம்

சோறுடைத்தென் றினிதவ்வைப் பெருமாட்டி
சொற்புகழ்சால் சோழ நாட்டில்
ஆறுடைத்தென் றமரர்களும் அனவரதம்
புகழருட்கா வேரி பாயும்
பேறுடைத்தாய்ப் பெருகுவளம் பலவுடைத்தாய்
ஆழ்வார்கள் பேணிப் போற்றும்
வீறுடைத்தாய் அரங்கனைத்தன் னகமுடைத்தாய்த்
திருவரங்கம் விளங்கும் மாதோ. 618

வேறு

பொன்னும்நன் மணியும் வாரிப்
பொருதிரைக் கையால் எற்றிக்
கன்னலைச் செந்நெ லாதி
கவின்மிகு பயிரைப் பேணித்
தென்னைவண் கமுகு வாழை
தீம்பலா வளரச் செய்தெம்
அன்னைகா விரிநல் லான்றோர்
புகழ்ந்திடத் திகழ்வ ளன்றே. 619

வேறு

காவிரிகொள் ளிடமென்னக் கவினுறவே
இருபிரிவாய்ப் பிரிந்தவ் வாறு
தேவர்திரு வரங்கர்திரு வானைக்கா
அண்ண லுக்குத் திகழ்பூ மாலை
மேவியது போலமைந்து மெய்விளக்கிப்
பொய்யகற்றி மேலாம் தூய
காவியம்போல் காவியத்துட் கருத்தினைப்போல்
காசினியைப் பேணு மம்மா. 620

வேறு

வானென உயர்ந்த கோபுரம் தூய
வளம்தரப் பரந்தவொண் கோயில்
தேனுறு மலரில் திகழ்மணம் பரப்பும்
செழுமைசால் நந்தன வனங்கள்
மானெனும் மகளிர் மானினத் தொடும்மான்
கன்றினத் தொடும்விளை யாடித்
தேனுவைக் கறந்து தேவருக் காட்டும்
செறிபொழில் பலஅவண் திகழும். 621

அருமறை யோதும் அந்தண ரினமும்
அருட்சட கோபர்நன் றிசைத்த
பெருமைகொள் திருவாய் மொழியினை யோதிப்
பேணுபா கவதர்தம் மினமும்
ஒருமையுற் றகத்தை யொடுக்கிநன் னிட்டை
பேணிவாழ் ஒள்ளிய ரினமும்
இருமையு முணர்ந்து பிறர்க்குநன் றுதவி
புரிபவர் இனமுமங் கிலங்கும் 622

உத்ஸவம் நடத்த உன்னுதல்

திருவரங்க மெனுமந்தச் செழுநகரில்
உறைபவருட் சிறப்பார் சட்டத்
திருநெறியைப் பேணுநரும் செழுந்தவம்சால்
அண்ணலிடம் திகழும் தூய
பெருநிலையைக் கண்(டு)அவர்பால் பிரியமிக
உடையவரும் கூடிப்பேசி
அருள்நெறிநல் கண்ணலுக்குத் ஸவம்நடத்த
வேண்டுமென அகத்துட் கொண்டார். 623

அண்ணற்குச் சிராப்பளியில் அடியவர்கள்
அன்பர்களால் நடத்தப் பெற்ற
புண்ணியநல் விழாக்காணும் பேறுபெற்றோம்
பூதலத்தில் மீண்டும் செய்து
கண்ணிரண்டி னுற்காணும் பேறுபெறு
வோமென்னக் களித்துச் சொல்வார்
அண்ணலிடம் அனுமதிபெற் றிடவுன்னித்
திருச்சிராப் பள்ளி சேர்ந்தார். 624

அஞ்ஞானம் நீக்கியருள் அண்ணல்மலர்த்
தாள்வணங்கி அன்பி னோடும்
மெய்ஞ்ஞானப் பெருநிலையில் மேவவைக்க
மேதினியில் போந்த கோவே
எஞ்ஞான மும்பெறற்கு வழியறியா
திவணுழலும் எளியோ மெல்லாம்
மெய்ஞ்ஞானம் பெற்றுய்வழி வகுத்தாள்மே
லவவாழி என்றார் அன்பர். 625

இல்லறமக் களும்அருளார் நல்லறத்தை
இனிதோம்பும் எளிய மார்க்கம்
சொல்லிஇனி தேவிளக்கித் தூய்மைபெறத்
துணையாகத் துலங்கி யெம்மை
நல்லவரா கப்புரியும் ஞானவொளி
மணியேஇஞ் ஞால மீதில்
சொல்லுள்ளம் செயல்தூய்மை துலங்கவிழை
வோர்க்கருள்வோய் போற்றி என்றார். 626

திருவரங்கம் வாழ்அடியர் கருணைமிகு
செம்மலின்பால் பணிவி னோடும்
பெருவிருப்பி னுடன்தாங்கள் இயற்றவுன்னும்
பெருஞ்செயலைக் கூறி னார்கள்;
திருவுளம்சற் றிரங்கியருள் செயவேண்டும்
எனப்பணிந்து வேண்டி னார்கள்
குருபரரும் அவர்கள்உள நிலையறிந்து
குறுமுறுவல் பூத்திட் டாரால். 627

அண்ணல்இது போன்றஎந்த ஆடம்ப
ரங்களையும் விழைவோ ரல்லர்
உண்ணெகிழ்அன் பாலடியர் உஞற்றுசெயல்
களைத்தடுக்க உளமில் லாராய்
நண்ணுவன அனைத்தையுமே உடையவனுக்
கர்ப்பணமாய் நல்லுள் ளத்தே
எண்ணியருள் வாழ்வுஞற்றும் வள்ளல்அடி
யார்செயல்கட் கிசைந்தி ருந்தார். 628

உடையவன்சித் தப்படியே நடக்கட்டும்
என்னஉரைத் திட்டார் அண்ணல்
அடியவரும் அன்பர்களும் எய்தியஆ
னந்தத்திற் களவொன் றுண்டோ?
படியின்மிசை பிறந்தபயன் பெறவாய்ப்பு
கிடைத்ததெனப் பரவி னார்கள்
நொடியில்பவம் பொடியாகும் நுவலரும்பே
ரின்பமுறும் எனஉ வந்தார். 629

திருவரங்கத் திருநகரைச் செப்பரும்பே
ரெழிலுறநன் றலங்க ரித்தார்
தெருவனைத்தும் இருமருங்கும் வாழைகமு
காதியிவை திகழ நட்டார்
பருவஇள நீர்தூக்கி நறுமலராற்
பந்தர்கவி னுறவ மைத்தார்
மருவுநெடுந் தோரணங்கள் மலர்க்கொடிகள்
மணிவிளக்கா தியவ மைத்தார். 630

புதியவிதா னம்தூக்கிப் புதுமணல்எங்
கணும்பரப்பிப் பொலியச் செய்தார்
முதியவரும் இளையவரும் மொய்குழலா
ரும்பாடல் முழக்கம் செய்தார்
அதிர்பலமங் கலதூரி யம்துவைக்க
அரஹரவென் றண்ண லாரை
இதயமகிழ் வொடும்பூர்ண கும்பமுடன்
இனிதுவர வேற்றார் அன்பால். 631

வேறு

ஞானவா ரிதியே போற்றி
நற்குரு மணியே போற்றி
மோனமா நிலையில் மேவும்
முழுமணிச் சுடரே போற்றி
ஊனமா னவைதீர்த் துண்மை
யொளியளித் தருள்வோய் போற்றி
வானமார் கதிரே போற்றி
வழித்துணை யானேய் போற்றி 632

செம்பொரு ளுணர்த்தி யுள்ளச்
செம்மைதந் தருள்வோய் போற்றி
உம்பரும் முனிவர் யாரும்
உவக்கநோற் றிடுவோய் போற்றி
பைம்பொனைத் தொளிரும் தூய
பரம்பொரு ளுருவே போற்றி
எம்பொருட் டிவண்போந் தாண்ட
இணையில்பே ருறவே போற்றி. 633

ஐங்குர வருமாய் எங்கள் அகத்தொளிர் பதியே போற்றி
கங்கையை நாளும் அன்பர் காணக்காட் டிடுவோய் போற்றி
பொங்குமைம் புலனைக் காவல் புரியரு ளரசே போற்றி
மங்கல வாழ்வை நல்கும் மாட்சிமை போற்றி என்றார். 634

இல்லறச் சுகங்கள் யாவும் இணையிலா வீடும் நல்கும்
நல்லற மூர்த்தியான ஞானசற் குருவின் தாளில்
மல்லிகை முல்லை யாதி மலர்பல சொரிந்து போற்றி
எல்லையில் பேரன் போடோர் அடியவர் இல்லிற்
சேர்த்தார். 635

நிரந்தரம் அடியார் வேண்டும் நினைவெலாம் நிரப்பா நின்ற
பெருந்தகை இனிது மேவப் பெரியஅவ் வீட்டைச் சீலம்
திருந்தநன் றலங்க ரித்துச் செம்மைசால் அடியார் தங்கி
இருந்திட வெவ்வே றான இடங்களும் அமைத்தி ருந்தார். 636

ஆண்டசீர் அண்ணல் அங்கண் அமைந்தஆ சனத்தின் மேவி
ஈண்டுபேரன்பி னோடும் இனிதடி தொழுவோர்க் கெல்லாம்
வேண்டிய வேண்டி யாங்கே மேவிடக் கருணை செய்து
தூண்டருஞ் சோதி போலத் துலங்கினர் தூயோர்
வாழ்த்த. 637

அண்ணலாரின் அருளுரை

மன்னிய சிறப்பின் மிக்க வளநகர் வாழ்வா ரோடு
துன்னிய அன்பின் மிக்க தொண்டர்கள் தமையும் நோக்கி
தன்னிக ரில்லா வள்ளல் விடியலில் தண்ணீ ராடின்
பன்னரும் நலங்கள் எய்தும் என்றனர் பரிவி னோடும். 638

கதிரவன் கிரணம் வந்து தீண்டுமுன் காலை தண்ணீர்
முதிருமன் போடு மூழ்கின் நோயெலாம் முடுகி யோடும்
இதயமும் தூய்மை யெய்தும் கரணங்கட் கிதமுண் டாகும்
புதியதோர் உணர்ச்சி யுண்டாம் போதமும் விளையு மென்றார்.
639

அருள்திரு நீற்றை நாளும் அணிந்திடிற் பிணிகள் நீங்கும்
அருள்திரு நீற்றை நாளும் அணிந்திடில் அன்பு மிஞ்சும்
அருள்திரு நீற்றை நாளும் அணிந்திடில் ஒளியுண் டாகும்
அருள்திரு நீற்றைத் தீர்த்தத் தருந்தின்இன் பெய்தும்
என்றார். 640

துளசிதீர்த் தத்தால் சூழும் நோயறும் தூய்மை யுண்டாம்
துளசிதீர்த் தத்தால் உள்ளம் தெளிவுறும் சோர்வு நீங்கும்
துளசிதீர்த் தத்தால் ஞானம் தோன்றிடும் சுகமுண் டாகும்
துளசிதீர்த் தத்தால் எய்தும் நலம்சொலற் காமோ
என்றூர். 641

எண்ணமும் சொல்லும் செய்கை யாவும்விட்
டினிதே யோர்பால்
தண்ணருள் வடிவ மாகத் தழைமுழு
முதலை நாடித்
திண்ணிய நிட்டை பேணின் செய்தவப்
பயன்மிக் கோங்கும்
உண்ணிறை யுணர்வு பொங்கும் உண்மையின்
பெய்தும் என்றூர். 642

அவச்செயல் யாவும் ஒவ்வொன்
றுய்விடுத் தன்ப ராகி
உவப்பொடு மூலத் தேவை யுன்னிநோற்
றினித மர்ந்தால்
தவச்சிறப் பெய்தும் ஒப்பில் சாந்தியுள்
மேவும் தூய
சிவப்பொலி வெய்தும் இந்தச் செகத்துளீர்
உணர்வீர் என்றூர். 643

---

வந்துள அடியார் அன்பர் மனநிலை
இனிது நோக்கிச்
சிந்தையிற் படியும் வண்ணம் திருந்திநன்
றுய்யும் வண்ணம்
அந்தமில் உண்மை யின்பம் அவர்களுக்
கெய்தும் வண்ணம்
சந்தமார் அண்ணல் சொல்லச் சார்ந்துளோர்
கேட்டுட் கொண்டார். 644

துணையெனப் புவிமேல் தோன்றித்
துன்பம்தீர்த் தின்ப மீயும்
இணையிலா அண்ண லாரை அமுதுசெய்
விப்போம் என்ன
அணைகடந் தோங்கும் அன்போ டடியவர்
அழைத்துள் ளேகி
விணில்திகழ் அமுதே போலும் விளங்கமு
தருத்தி உய்ந்தார். 645

அமுதருந் திடுவார் போல அண்ணலார் அவர்க ளுள்ளே
அமைபசு போதம் மாந்தி அருளமு தோங்கச் செய்தார்
கமைவடி வாகத் தோன்றும் கருணைசால் வள்ளல் செய்கை
அமைதிசால் அடியார் ஆக்கம் ஆரிவ ணியம்பற் பாலார். 646

உடல்பொரு ளாவி யெல்லாம் ஒப்படைத் துளபே ரன்பர்
கடல்மடை திறந்தாற் போன்ற கருணைசால் அண்ண லார்க்குப்
புடவியின் மீது செய்யும் பொய்யில்சீ ருபசா ரத்தி
னிடைவிர விடுபே ரார்வத் தினைச்சொல வல்லார் யாரே. 647

அண்ணலார் அமர்ந்தி ருந்தால் அருகுநின் றடியார் அன்பால்
தண்ணியல் கால்மேல் வீசத் தகவுற விசிறி யுய்வார்
அண்ணலார் சயனித் திட்டால் அடிமலர் வருடி யுய்வார்
அண்ணலார் அடியார்க் குற்ற அருளுற வியம்பற் பாற்றோ?
648

வள்ளலார் தங்கி யுள்ள வளமனை யினில்நாள் தோறும்
விள்ளரு மிசையும் மேள வாச்சிய வொலியு மோங்கும்
கள்ளமில் உள்ளத் தன்பர் கடலெனச் சூழ்வர்; உள்ளம்
கொள்ளைகொண் டொளிரும் ஞான குருவருள் மணக்கு
மெங்கும். 649

## உத்ஸவம் நடத்தல்

சிந்தையும் வாக்கும் எல்லாச் செய்கையும் அண்ணற் கீந்த
சந்தமார் அடியர் வள்ளற் கருள்விழா நடத்த வுன்னி
முந்துறு மேள தாளம் முழங்கிடத் தீர்த்தம் கொண்டு
வந்தொரு தவிசின் மீதே வள்ளலை யமரச் செய்தார். 650

நறுமண மிகுந்த தேங்காய்ச் சாந்தினை நன்று பூசி
உறுசுவைப் பாலும் ஆடை யுடைப்பசுந் தயிரும் தெங்கிற்
செறியிள நீரும் பஞ்ச வமுதமும் தேனும் நீறும்
நிறைபல கனியின் சாறும் நீள்கழைச் சாறு மாட்டி 651

மணம்செறி பனிநீர் சந்த னத்திகழ் வகையா லாட்டி
வணம்மிகு மாடை சாத்தி மாலைகள் சூட்டித் தூபம்
இணைந்தொளி விளங்கும் தீபம் இனியகர்ப் பூரம் காட்டி
இணங்குபே ரார்வத் தோடும் இன்னமு தாரா தித்தார். 652

மும்முறை வலம்வந் தேத்தி
முகையவிழ் மலர்கள் சூட்டி
மும்மலம் நீக்கி யாளும்
முதல்வரை அடியார் அன்பர்
செம்மைசால் மனத்தாற் போற்றிச்
செயசெய வெனப்பா ராட்டி
இம்மைநன் னலமும் மேலாம்
இன்பமும் எய்தப் பெற்றார். 653

உலகினுக் கின்ப மூட்ட உதித்தசீ ரண்ண லார்க்கும்
நிலவுபே ரன்பு பூண்டு நிறையடி யவர்க்கு மார்வம்
குலவநல் லமுத ருத்திக் கும்பிட்டு வணங்கிப் போற்றிப்
பலபிற வியில்முன் செய்த அருந்தவப் பயன்பெற்
றுய்ந்தார். 654

அண்ணலார் அருகி லன்போ
டமர்ந்துப தேசம் மாந்திப்
புண்ணியப் பயன்பெற் றிட்டார்
பொலிமலர்ச் சிவிகை யின்கண்
அண்ணலை யமர்த்தி வாசம்
கமழ்மலர் அலங்கல் சாத்தி
எண்ணில்பல் லடியார் போற்ற
எழில்நகர் வலம்செய் வித்தார். 655

தூரியம் பலமு ழங்கத் தூநறு மலர்கள் தூவிச்
சீரடி யவர்க ளேத்தச் செப்பரு மிசையாற் பாடிப்
பாருள பலரும் போற்றப் பக்தர்நற் சித்தர் வானோர்
ஆருமின் பெய்த அண்ணற் கருள்விழா நடத்தி னூரால். 656

வரிசையாய் இருபக் கத்தும் மணிவிளக் கேந்திச் செல்ல
எரிதிகழ் நீள்தீ. வட்டி இருபுறம் மிடைந்து செல்ல
பரிகளி ருதி முன்னே பரிவொடும் செல்ல வாணம்
பெருவெடி யொலிக்க அண்ணல் விழாநனி பிறங்கிற்
றன்றே 657

திருவரு ளாளர் தூய திருவடி தீண்டப் பெற்ற
பொருவில்சீ ரிடங்கள் நன்று பொலிவுறற் கைய முண்டோ?
தரணியின் மேல்தாம் பெற்ற தகவுசால் இன்பம் யாரும்
மருவிடச் செய்தார் தூய்மை மல்கடி யவர்கள் அங்கண்.
658

**திண்டிவனம்-1**

அமிழ்தென இனித்துப் பேணி ஆருயிர்க் கின்ப மூட்டும்
தமிழ்வளம் மிகுந்த நாட்டில் தகவுசால் திருநெல் வேலி
அமையுமா வட்டந் தன்னில் அவதரித் திட்ட அண்ணல்
அமலபா ரதத்தில் எண்ணில் அடியரைத்
தேர்ந்தெடுத்தார். 659

தண்ணெனும் சோலை சூழ்ந்து தவழ்எழில் தமிழ்நாட் டின்கண்
எண்ணருஞ் சிறப்பின் மிக்க இன்னடி யவரைச் சேர்த்தார்
புண்ணியத் தென்னுற் காடுமாவட்டம் பொலியத்தோன்றும்
திண்ணிய தவம்சான் றோரைச் சிறப்புறத் தேர்ந்தெ
டுத்தார். 660

மனம்தள ராத வண்ணம் மாணருட் சட்டம் பேணும்
இனம்பெரு கிடச்செய் யண்ணல் இணையிலாக் கருணையாலே
தினம்தினம் திருமிக் கோங்கும் திண்டிவ னப்பே ரூரில்
சினம்தவிர்த் தருளைப் பேணும் சீரடி யார்கள்
வாழ்ந்தார். 661

மருட்டுறை மாற்றி ஞாலத்
தருட்டுறை யருளும் அண்ணல்
தெருட்பெருஞ் சட்டந் தன்னைச்
சிறப்புறப் பரப்பி யெங்கும்
இருட்டிரை விலக்கிக் கொண்டே
எழில்திண்டி வனத்திற் சேர்ந்தார்
அருட்டிரு மிக்க தூய
அடியவர் வரவேற் றிட்டார். 662

நிலம்புரி தவத்தாற் போந்த
நிமலனூர் அடியார்க் கெல்லா
நலங்களும் அருளற் காங்கோர்
நல்லடி யாரில் சேர்ந்தார்
குலம்பொலி வுறஅத் தொண்டர்
கூடுமெய் யன்பாற் போற்றி
வலம்புரிந் தலர்கள் சூட்டி
வழிபட்டுக் கருணை பெற்றார். 663

அண்ணலார் எவ்வூர்க் கேகித் தங்கினும் அடியார்க் கெல்லாம்
அண்ணலார் தங்கி யுள்ள செய்தியை அறிவிப் பார்கள்
புண்ணியம் மிக்க சுற்றுப் புறமுள்ள ஊர்வாழ் மக்கள்
நண்ணிமெய் யன்பாற் போற்றி நலம்பல பெற்றுச்
செல்வார். 664

அத்தகு முறையிற் கூடும் அடியவர் அன்பர்க் கெல்லாம்
சித்தர்கள் தலைவ ரான தேசிகர் செம்மை சான்ற
பத்திநன் னெறியை யாரும் பற்றியுய் முறையிற் சொல்வார்
சித்தமிக் குருகி யாரும் செவிமடுத் தின்பம் துய்ப்பார். 665

சீரும்நற் சிறப்பும் சான்ற திண்டிவ னத்தைச் சார்ந்தே
ஏருற வமைந்த பல்லூர் மக்களும் இனிது போந்து
காரினி துதவும் மாரி போற்கரு ணையினால் தூய
ஆரிய னார்சொல் மேலாம் அருட்சட்டம் பேண லானார். 666

பழவடி யவர்க ளோடும் பழகிப்புத் தடியா ரெல்லாம்
நிழலென விளங்கு தூய நிமலனா ரைச்சே விப்பார்
உழல்நெறி தவிர்த்துப் பேரின் புறுநெறி பெற்றோ மென்பார்
வழுவுத லின்றிப் பேண வரம் எமக் கருள்வீர் என்பார். 667

நகரமே புதிய நல்ல பொலிவுட னிலங்கிற் றங்கண்
மகிழ்வுடன் சட்டம் பேணும் மக்களும் பெருக லானார்
அகமுறும் அழுக்கு நீங்கி அருட்பொலி வெய்த லானார்
சகமினி திருந்து மென்னத் தழைமகிழ் வுற்றார் நல்லோர். 668

அருட்சட்டம் புதிதாய்ப் பேணும் அடியவர் ஒருவ ருக்கு
மருவுறு காய்ச்சல் வந்து மலிதுயர் தரவும் வீட்டார்
வெருவிநன் றிவர்க்குத் தண்ணீர் விடுவதெவ் வாறென் றஞ்ச
அருள்நெறி பேணும் பக்கத் தகத்தவர் அருகி லுற்றார். 669

ஏன் தயங் குகின்றீர் தண்ணீர் இனிதுகொட் டிடலாம் ஞானத்
தோன்றலார் கருணை நன்று துணையிருந் தோம்பு மென்ன
ஆன்றசீர் அண்ண லார்தம் அடிமலர் போற்றி யேஅஞ்
ஞான்றுதண் ணீரி லாட்டி நன்றுநீ றணிவித் திட்டார். 670

துளவமும் நீறும் தோய்ந்த தூநறுந் தீர்த்தம் நல்கி
அளவில்மெய் யன்பி னோடும் அருள்துதி பாடி நின்றார்
உளம்மிக வெருவப் போந்த நோய்ஒரு நொடியில் ஓட
வளமுறத் திகழ்ந்தார் அன்பர் மகிழ்ந்தனர் ஊர்வாழ்மக்கள்.
671

வைகறைப் போதில் வள்ளல் மலர்ப்பதம் துதித்தெ ழுந்தே
பொய்கையில் கிணற்றில் சூழ்ந்து பொங்குதண் ணீரில்மூழ்கி
தெய்வமாம் இருடிப் பட்டிச் சாமியே துணையென் றேத்தி
உய்வழி நாடும் காட்சி ஒப்பிலாக் காட்சி யாகும். 672

அனைவரும் முன்னோன் கோயில் அன்புடன் வலம்வந் தேத்தி
புனைவரும் துதிகள் பாடிப் போற்றித்தம் குறைகள் நீங்க
நினைவுகொண் டுருகிநாலீ ரங்கமும் நிலத்திற் றோய
இனிதுகும் பிடும்நற் காட்சி எவரையும் ஈர்க்கு மம்மா. 673

கலியுகத் துயிர்கள் அல்லல் கண்(டு) அது துடைத்துக் காக்கப்
பொலியுமா னிடநன் மேனி பூண்டுறு கடவு ளேபோல்
நலிவுறல் தவிர்த்து ஞான நலம்தரும் அண்ண லாரை
வலம்புரிந் தடியார் அன்பர் வழிபட்டு வணங்கி உய்வார். 674

குறையெலாம் தவிர்வுற் றுள்ளக்
குதுகலம் எய்தி நிற்பார்
நிறையெலாம் எய்தி யோவா
நிதிபெற்று மகிழ்வார் ஞானத்
துறையினிற் சிறந்து மேலாம்
தூய்மைபெற் றொளிர்வார் அன்பு
முறையினால் எய்தும் ஒப்பில்
நலமெலாம் மொழிதற் காமோ. 675

வேறு

தாயினும் சிறந்த தயவுடை ஞான
சற்குரு மூர்த்தியித் தலத்தில்
ஆயபே ரருளின் மணத்தினைப் பரப்பி
யந்நக ரமர்ந்தடி யார்க்குத்
தூயநற் சட்டச் செந்நெறிச் சிறப்பைச்
சொல்லியும் விளக்கியும் எவர்க்கும்
மேயவொண் காட்சி நல்கியும் இன்பம்
விளைத்தவா றிலங்கினர் இனிதே 676

**எளவாளப்பாக்கம்-1**

அருள்நனி சுரக்கும் அமுதெனத் திண்டி
வனத்தினில் அண்ணலார் அமர்ந்தே
இருளினை விலக்கி இன்னொளி பரப்பி
எண்ணிலற் புதங்களை இயற்றித்
தெருளுற அடியர் குழுவினைத் தெருட்டும்
செய்தியை அறிந்தவர் பலரும்
உருள்புவி யினிற்பல் லூரிலும் பரப்ப
உணர்ந்தனர் அருகுள ஊரார். 677

அன்பர்வாழ் திண்டி வனத்துக்கும் கிழக்கே
ஐந்துகல் தொலைவினில் அமைந்த
இன்பமார் எளவா ளப்பெயர்ப் பாக்கத்
தினிதுவாழ் மக்களும் அண்ணல்
மன்பதைக் கருளும் வண்ணமும் அவர்தம்
மாண்புசால் கருணையும் உணர்ந்தே
துன்பமெல் லாமும் தவிர்த்தருள் ஞானத்
தோன்றலைக் காணுற விழைந்தார். 678

வேங்கட வரத ரெட்டியா ரென்னும்
வியன்பெய ருடையவோ ரன்பர்
ஆங்குவாழ்ந் திருந்தார் அறச்செயல் பலவும்
ஆற்றிநல் லருள்நிறை வாழ்வு
பாங்குற நடத்தி வந்தனர் மிக்க
பக்குவ மெய்தியெப் பற்றும்
நீங்கிய வுளத்த ராய்ப்பவப் பிணியை
நீக்குவோர் வருகையை விழைந்தார். 679

ஞானசற் குருஎந் நாளினில் வந்து
நம்பவம் தவிர்ப்பரோ என்று
பானநீர் வேட்கை யுடையவன் நீரைப்
பருகிடற் கலேவதே போல
ஊனமில் இல்ல றத்தரா னுலும்
உடையவன் திருவடி நாட்டம்
வானுற வோங்கி வளர்ந்திடச் சட்டம்
வழங்கிறை அவர்நிலே யுணர்ந்தார். 680

ஒப்பிலா வுண்மை யன்பரை யாட்கொண்
டுயருப தேசங்கள் வழங்கி
செப்பருங் கருணே புரிவதற் கென்றே
திருவவ தாரம்செய் தருளால்
இப்புவிமீ துலா வரும் அண்ணல்
உளம்எள வாளப்பாக் கத்தில்
ஒப்புர வொழுகும் வேங்கட வரத
ரெட்டியா ருழைதிரும் பியதால். 681

வேறு

அடியவர்தம் துயரகற்றி யருளின்பம் புகட்டுதற்கிப்
படியின்மிசை போந்தஅருட் பார்த்திபரைக் கண்டிறைஞ்ச
நெடிதுபெரு கன்புந்த நீள்நகராம் திண்டிவனம்
கடிதடைந்தி ரெட்டியார் கருணுளர் தமைக்
கண்டார். 682

காண்டகைய அருள்ஞானக் கவின்மிக்க இவர்கருணே
ஈண்டழைத்து வந்ததென எண்ணியெண்ணி யிதயமிசை
மூண்டெழுமெய் யன்போங்க முளரிமல ரடிவணங்கி
வேண்டியதை அடைந்தவர்போல் இரெட்டியார் மிக
மகிழ்ந்தார். 683

கையிரண்டும் சென்னிமிசை குவித்தண்ணல் கழல்போற்றி
மெய்யில்வழி கண்ணருவி மேதினியை நனேப்ப நமை
உய்யவைக்கும் இவர்கருணே யென்னவுளம் குதுகலிப்பத்
துய்யஅரு ளாளர்கழல் தோயுமன்பில் மூழ்கினரால். 684

அத்தனார் திருவடிக்கண் அகலாப்பே ரன்பு கொளும்
மெய்த்தன்மை யுணர்வுடைய விழுப்பமிகு ரெட்டியார்
சித்தநிலை நன்குணர்ந்த திருவாளர் அத்தூயோர்க்
கெத்திறத்தும் குறையாத இன்னருளைச் சொரிந்
திட்டார். 685

பழுதணுவு மறியாத பண்புடைய பக்தரன்பு
முழுதாய பரவசத்தின் முகிழ்த்தபுள கம்போர்ப்ப
விழுதாரை விழிபொழிய விம்மிவிம்மி மெய்விதிர்ப்ப
இழுதனல்முன் எய்தியது போலுருகி யிலங்கினரால். 686

நாடியபே ரார்வமிக நைந்துமனம் கரைந்துருகும்
ஈடிலன்பர் இதயநிலை இனிதுணர்ந்த குருபரனார்
நாடிடுமெய்ஞ் ஞானநிலை நனிவாய்க்கும் பவமகலும்
வீடுபெற லாம்சிறிதும் அஞ்சேல்என் றருள் புரிந்தார். 687

அத்தூய அருளுரைகள் அன்பர்செவி பாய்ந்திடலும்
சத்தாகிச் சித்தாகித் தனிப்பரமா னந்தமருள்
முத்தான முழுமுதலே மூலமறை யருள் குருவாய்
இத்தார ணிக்கணுற்றார் என்றன்பர் உளம்மகிழ்ந்தார். 688

வேறு

அடியேங்கள் உய்யும் பொருட் டெங்கள்சிற்றூர்க்
கன்பொடெழுந் தருளல் வேண்டும்
மடியோடு மிடியகல வாழ்விலருள்
வளமோங்கப் புரிதல் வேண்டும்
அடியோடெம் வினையகலப் பவமகல
அருள்ஞானம் வழங்கல் வேண்டும்
விடியாமுன் தண்ணீரில் மூழ்கியருள்
பெறப்புரியும் விபுவே யென்றார். 689

அன்பருளத் தன்பினையும் அசைவறுநல்
ஓறுதியையும் கண்டு பாரில்
துன்பமனைத் தையும்நொடியில் தவிர்த்தருளி
நலம்வழங்கும் தூய சட்டம்
மன்பதைகட் கருளியருட் கருணையினல்
தடுத்தாளும் மாண்பார் அண்ணல்
இன்பம்விளைத் திடுமுறுவல் பூத்தருளி
இசைவையறி வித்தா ரன்றே. 690

இசைவளித்த திறமுன்னி இணையிலுள
மகிழ்பூப்ப இனிது தம்மூர்
வசிபலர்க்கும் அருளண்ணல் வரும்செய்தி
தெரிவித்தார்; அவ்வூர் மக்கள்
கசியுமுளத் தன்போடும் கவினுறஅவ்
வூரைநனி யலங்க ரித்தே
சுசியொடணி யாகவுற்றுள் ளன்பொடும்
சுவாமிகளை வரவேற் ருர்கள். 691

அருட்கருணை புரிந்துலகில் அருளாட்சி
செயப்போந்த அண்ணல் வாரீர்
இருட்படலம் விலக்கியெங்கும் இன்னருளின்
ஒளிவிளக்கும் இறையே வாரீர்
பொருட்பயனை எவ்வுயிரும் பெற்றுய்யப்
புரிஞானப் பூமான் வாரீர்
தெருட்பெறஎங் களைத்திருத்தத் திகழ்குருவே
வாரீர்என் றிசைத்தார் அன்பர். 692

உள்ளுறும்அன் பால்அவர்கள் உவந்துவர
வேற்கும்உளக் கருத்தின் ஆழம்
வள்ளல்உணர்ந் தவராகி மெல்லிசையால்
வல்லபைகோன் சீரை உள்ளம்
அள்ளும்உயர் அன்போடும் இசைத்தவராய்
அவ்வூர்க்குள் நுழைவா ராஞர்
கிள்ளைகளும் குயிலினமும் வருகவரு
கெனஇனிது கிளத்தச் சென்ருர். 693

சென்னிமிசை கரம்குவித்துட் செறிமகிழ்வு
பெருகவலம் செய்து போற்றி
இன்னலெலாம் நீக்கியருட் கருணை நலம்
எமக்கருளி யாளப் போந்த
மன்னவநும் சிறப்புமுழு துணர்ந்தினிது
போற்றிசெய வல்லோ மல்லோம்
மன்னுலகில் எமையாண்டு மாணருள்செய்
வீர்என்னப் பணிந்தார் மக்கள். 694

அன்போடும் அடிபணிந்த அவ்வூர்அன்
பரைஅண்ணல் அருளால் நோக்கித்
துன்போடத் தூயஅருள் நலம்பெருகத்
தோமிலரு ளாசி நல்கிப்
பொன்போலும் திருமேனிப் பொலிவும்உயர்
புனிதவெள்ளா டையும்வே றென்றும்
முன்போபின் போவேண்டா உள்ளமொடும்
முதிரன்பி னோடும் செல்வார். 695

முகில்சூழ்ந்து குடைபோல நிழல்பரப்பி
மொய்யொளிவா னிடையே யேக
மகிழ்வோடு தென்றலருள் வள்ளலுக்கு
வாகார்சா மரைகள் வீச
மகிமீதில் உயிர்த்தொகையின் குறைகள்தவிர்த்
தின்பூட்டும் மாண்பார் அண்ணல்
தகவார்நேத் திரங்கள்பொழி கருணையினை
மாந்தியன்பர் தமைம றந்தார். 696

எழில்மிகும்அவ் வூரிலுள முன்னவனார்
திருக்கோயிற் கேகி யண்ணல்
வழிவழியாய் வருமடியார் அனைவரையும்
வாழ்வாங்கு வாழ வைக்கும்
முழுமுதலின் பெருங்கருணைச் சிறப்பனைத்தும்
மொழியவல்லார் யாரே எண்ணில்
பழமறையும் உரைப்பறிய பரன்பாதம்
பற்றிநலம் பெறுவீர் என்றார். 697

மூன்னைவினை யனைத்தினையும் நீமுக்கி
மூலமலம் வேகச் செய்து
பின்னைவினை சூழாமற் பேணியரு
ளமுதூட்டிப் பிறங்கும் ஞான
முன்னவனார் கழல்போற்றின் இகநலமும்
முத்தியுமீந் தருள்வார் என்ன
இன்னுரையால் அவ்வூர்மக் களுக்குணர்த்தி
இன்பமிகச் செய்தார் அண்ணல். 698

பாங்குமிகு நல்லுளத்திற் பக்தியெனும்
பயிர்தழைக்கப் பரிந்து நோற்கும்
வேங்கடநல் வரதரெட்டி யார் அண்ணல்
வியன்பதத்திற் பணிந்து போற்றி
ஆங்குளதம் மில்லினுக் கெழுந்தருள
வேண்டுமென அன்பால் வேண்ட
ஓங்குநலம் பெருகஅண்ண லிசைந்தருளிப்
பல்லியமும் ஒலிக்கச் சென்றார். 699

வானவரும் அறிவரிய புகழ்சான்ற
வண்கருணை வள்ள லாரை
தானதரு மம்மிகுந்த ரெட்டியார்
தமதில்லிற் கழைத்துச் சென்றங்(கு)
ஆனமணித் தவிசின்கண் அகத்தலர்ந்த
மெய்யன்பொ டமர்த்தி நன்றே
ஊனமில்சீ ருபசாரம் மிகப்புரிந்து
குருகருணைக் குரியோ ரானார். 700

என்குறைகள் அணுவளவும் கருதாமல்
ஈடில்பெருங் கருணை யோடும்
நன்கிகமும் பரமும்இனி தருளியெனை
ஞானமய மாக்க வுன்னி
இங்கணெழுந் தருளியுள்ள குருமணியே
எங்கள்தவப் பயனே என்ன
கங்குகரை காணாத பேரன்பின்
உருவாகிக் கரைந்தார் அன்பர். 701

அருளுரையால் அருள்நினைவால் அருள்நோக்கால்
அடியார்கட் கருள்செய் தாளும்
தெருள்மிகுத்த குருபரனார் சீர்சான்ற
மெய்யன்பர் சிந்தை மீதார்
இருளகற்றி இருவினையின் தொடர்பகற்றி
இணையிலருள் பாய்ச்சி உண்மைப்
பொரு ளுணர்த்திப் பூரணன்றன் கருணையமு
தினையருத்திப் புனிதம் செய்தார். 702

அருட்சட்டத் திருநெறியின் சிறப்பனைத்தும்
ஒவ்வொன்ருய் அண்ணல் கூற
விருப்புற்றவ் வூரன்பர் பலருண்மை
யன்புளத்தில் மிளரக் கேட்டார்;
நெருப்பையணு கியவெண்ணெய் போலிரெட்டி
யார்உள்ளம் நெகிழ்ந்து நின்ருர்;
கருப்பையினுள் இனிபுகுதா வணம்கருணைச்
சட்டநெறி கடைப்பி டித்தார். 703

தீவிரப்பற் றுடையஅவர் செயலினைக்கண்
டவ்வூரில் திகழும் பல்லோர்
காவியங்கள் அனைத்தினருட் சாரமெனும்
கருணைநெறி கடைப்பி டித்தார்
பூவுலகிற் பொலிசுகமும் புகலரிதாம்
பரசுகமும் பொற்போ டெய்த
மேவுமுய ரடியவராய் மேதினியு
ளோர்போற்ற விளங்க லானுர். 704

தவத்தினில்மிக் கவர்போற்றும் தனிச்சிறப்பொ
டொளிர்பரம சாந்த மூர்த்தி
உவப்பொடருட் சட்டநெறி யினைப்பேணும்
உண்மையடி யவர்கட் கெல்லாம்
தெவிட்டுதலில் லாதென்றும் மிகவினிக்கும்
திருவருளாம் அமுத மூட்டிப்
பவப்பிணியை அறமாற்றிப் பரகதிக்கு
வழிகாட்டிப் படர்த லுற்ருர். 705

### வைரவபுரம், விண்ணம்பூண்டி

திண்டிவனத் தருகிலுள வைரவ
புரம்செல்லத் திருவு ளம்கொண்(டு)
அண்டர்புகழ் சிறப்புமிகும் அருளண்ணல்
விண்ணம்பூண் டியினைச் சார்ந்தார்
தொண்டர்களை யாட்கொண்டு தூயஅருள்
சுரந்தூட்டும் வள்ள லாரை
வண்டுகள்தே னினைநாடி வருவதுபோல்
மாந்தர்வந்து சூழ லானார். 706

கண்டவர்தம் மனம்கசிந்து கரைந்துருகும்
வணம்கருணை பொழியும் சீர்சால்
கொண்டல்நிகர் அருள்ஞானப் பெருங்குரிசில்
கூறும்அரு ளுரைகள் கேட்டோர்
புண்டரிகத் தாள்பணிந்து போற்றியருட்
சட்டநெறி பேண லானார்
மண்டலத்தில் பேறிதற்கு நிகர்வேறுண்
டோவென்ன மகிழ லுற்றார். 707

அண்ணலருள் திறத்தினையும் அருட்சட்டச் .
சிறப்பினையும் கேள்வி யுற்றே
நண்ணுபக்கத் தூர்வாழும் நல்லோர்கள்
ஞானவொளி நாட்டம் கொண்டு
விண்ணம்பூண் டிக்குவிரைந் துற்றுவிம
லரைக்கண்டு பணிந்து போற்றி
விண்ணகமும் போற்றுசட்ட நெறியின்விளக்
கம்கேட்டுப் பேண லுற்றார். 708

வைரவபு ரத்தின்மணி யக்காரர்
வைத்தியநா தப்பேர் கொண்ட
துய்யகுணம் மிகுசீலர் பக்திமிக்கோர்
சுவாமிகள்விண் ணம்பூண் டிக்கண்
வையமுய்ய எழுந்தருளி அற்புதங்கள்
பலஅருளின் மாண்பா லாற்றும்
செய்யதிறம் கேட்டங்குச் சென்றுதரி
சிக்கவிருப் புடையோ ரானார். 709

துன்னுமுண்மை யன்பொடுநல் லறம்பேணித்
தூயோர்கள் வாழ்த்தும் வண்ணம்
மன்னுபுக ழொடுவாழும் அவருடைய
மைத்துனர் குமார ரான
இன்னியல்பார் கடலூர்செல் லங்குப்பம்
சிங்கார வேலு என்போர்
பன்னரிய பித்தப்பாண் டெனும்பிணியால்
பீடிக்கப் பட்டி ருந்தார். 710

பலவிதமாம் மருத்துவங்கள் செய்துபார்த்
தும்பயனில் லாமற் போக
நலமுறஅவ் வைரவபு ரத்துக்கழைத்
துச்சென்று மருந்து தந்தும்
சிலசிறந்த சோதிடரைக் கொண்டுநனி
ஆராய்ந்தும் கோள்கள் நல்கும்
பலன்கடுமை யாயிருக்கும் எனக்கண்டும்
பருவரலுற் றிருந்திட் டார்கள். 711

மனைவிருது ஜாதகத்தில் அவர்பிழைக்க
மாட்டார்என் றிருக்கக் கண்டு
தினமும்வருத் தத்தோடு கைவிட்டோ
மெனஎண்ணி யிருந்திட் டார்கள்
மனம்சிறந்த அடியவரை ஆட்கொளவிண்
ணம்பூண்டி வந்தி ருந்த
கனகம்நிகர் குணத்தண்ண லைச்சேவித்
துள்ளநிலை கழறி னார்கள். 712

வைத்தியநா தப்பேர்கொள் முதலியார்
அண்ணலிடம் வருந்தி வேண்ட
வைத்தியநா தப்பெயர்கொள் உடையவன்போல்
வைரவ புரத்தைச் சார்ந்து
வைத்தியமெல் லாம்நிறுத்தி மாண்சட்டப்
படிநடக்கப் பணித்தார் அண்ணல்
வைத்தியர்சோ திடர்வியக்கப் பூர்ணநலம்
மிகவிரைவில் உண்டா யிற்றே. 713

பினுமிருப தாண்டுக்கு மேலாகச்
　　சட்டம்பிற ழாது பேணி
இனமணிக ளைப்போலப் பலமகவை
　　யீன்றெடுத்திங் கினிது வாழ்ந்தார்
இனுமவர் திருக்குடும்பம் அருட்சட்டத்
　　திருநெறியில் இருத்தல் உண்மை
பினும்பன்முறை அண்ணலவ்வூர்க் கேகிப்பல
　　அற்புதங்கள் இயற்றி யுள்ளார். 714

**செல்லங்குப்பம்**

சிங்கார வேலுஎனும் செல்லங்குப்
　　பத்தன்பர் சட்ட மேற்று
மங்கா நன் மகிழ்வெய்தி நோய்நீங்கி
　　வைரபுரத் திருந்து சென்றோர்
பொங்கோதம் சூழ்புவியிற் பொருளொடருள்
　　பெற்றினிது பொலிதல் நோக்கி
நன்காசி யருளஅண்ணல் செல்லங்குப்
　　பம்நாடிச் சென்றார் நன்றே. 715

இன்னல்தவிர்த் தின்பநலம் கூட்டுவித்த
　　இணையிலருள் ஞான மூர்த்தி
முன்னர்அடி யேம்புரிந்த தவப்பயனால்
　　வந்தனரிங் கெனமொ ழிந்து
பன்னரிய பேரன்பால் பரிந்தேகிக்
　　குருபரரைப் பணிந்து போற்றி
உன்னரிய உவகையொடு சிங்கார
　　வேலரில்லிற் கழைத்துச் சென்றார். 716

அண்ணலைநாற் காலியொன்றில் அன்போடும்
　　அமர்த்தியடி மலரை நன்றே
தண்ணியநன் னீராட்டி மலர்சூட்டித்
　　தூபதீ பங்கள் காட்டி
உண்ணெகிழும் உளத்தோடும் பழங்கள்படைத்
　　தரஹரவென் றோதி நல்ல
பண்ணொடண்ணல் அருட்பாடல் பாடிநனி
　　பணிந்தேத்திப் பரவி நின்றார். 717

பொய்தவிர்த்து மெய்ந்நெறியைப் புவனிமிசை
யருளவந்த புனித மூர்த்தி
எய்தியுள தறிந்தந்த ஊர்மக்கள்
வந்துபணிந் தின்பம் பெற்றார்
செய்தியறிந் தயலூர்மக் களும்அன்பால்
திரண்டுவந்து சேவித் துய்ந்தார்
உய்தியருள் குருபரனார் அவரவர்கட்
கேற்றவண்ணம் உபதேசித்தார். 718

பூரணமாம் பரம்பொருளின் கருணையினால்
புவிமிசைநாம் தோன்றி யுள்ளோம்
காரணங்கள் கண்டறியோம் உடையவன்தண்
கருணையினால் இவண்வாழ் கின்றோம்
ஆரணமெல் லாம்போற்றும் அவன்பாத
மலர்நம்பி அன்பு செய்தால்
தாரணியில் சுகம்பெறலாம் தவம்பெறலாம்
அடிமலர்சேர்ந் திடலாம் என்றார். 719

கர்த்தனருட் கருணையினைக் கணமும்மற
வாதிருத்தல் கடமை யாகும்
பத்திநெறி யோகநெறி ஞானநெறி
யாவுமவன் பதம்சேர் தற்கே
முத்தர்பெருங் கருணையினால் மூதுலகி
னுக்குவகுத் தருளி யுள்ளார்
சத்தியருள் சட்டம்அவற் றின்சாரம்
உணர்மின்எனச் சாற்றி னார்ால். 720

உடல்நலமும் உளநலமும் உயிர்நலமும்
அருட்சட்டம் உதவி யோம்பும்
புடவிமிசை யுறுசுகமும் பரசுகமும்
தெய்வீகப் பொலிவு மீயும்
மடமைதவிர்த் தன்பூட்டி யறிவூட்டி
யருள்ஞான மாண்பை யூட்டும்
கொடியபவப் பிணியகற்றிக் கூறருபே
ரானந்தம் கூட்டு மென்றார். 721

பிணியகல மிடியகலப் பிறப்பகலப்
பேரின்ப வீட்டிற் சேரத்
துணிவொடருட் சட்டநெறி கடைப்பிடித்தால்
துயர்விலகும் தூய்மை யெய்தும்
பணிபுரிந்து பற்றின்றி வாழ்வாற்றின்
பார்முழுதும் பரவி வாழ்த்தும்
எணுமனைத்தும் நொடியிலுறும் ஈசனருள்
இணைந்துநம்முள் இலகும் என்றார். 722

எவ்வுலகும் இறையருளால் உண்டாகி
இலகும்என எண்ணல் வேண்டும்
எவ்வணுவும் இறையருளால் இயங்குமெனும்
உண்மையினை உணர்தல் வேண்டும்
எவ்வுயிரும் இறைவன்எழுந் தருளியுள
கோயிலென இறைஞ்சல் வேண்டும்
ஒவ்வொரு கணத்துமவன் நமையியக்கு
கின்றானென் றுணர்வீர் என்றார். 723

இப்படிநாள் தோறுமவ னுறுமன்பர்க்
கினிதருளிச் செய்வா ரண்ணல்
ஒப்பில்பெரு மகிழ்வினொடும் கேட்டன்பர்
உளமுருகிப் போற்றிச் செல்வார்
இப்படியிற் சட்டநெறி யேற்றல்நல
மென்றுபலர் இனிதேற் றுய்ந்தார்
மெய்ப்பொருளின் கருணையொளி மேதினியிற்
குருவருளாற் படர்ந்த தாமால். 724

செல்லங்குப் பத்தண்ணல் சென்றுதங்கி
யிருக்கின்ற நாளில் ஓர்நாள்
நல்லவிடி யற்காலை யினில்வெளியில்
உலவிவரு வோமென் றுன்னிச்
செல்லுகையில் பஞ்சமனும் ஒருவன்வந்து
சேவடிகள் பற்றிப் போற்றி
நல்லருள்செய் திடுவீர்என் வயிற்றுநோய்
தீரஎன நவின்றி ரந்தான். 725

அவனுள்ளத் தினையறிந்த அண்ணலார்
அந்நோய்தீர்ந் திடுமென் றன்பால்
அவனுக்குநல் வாக்களித்துத் திருவருள்செய்
தங்கிருந்து சிறிது நேரம்
அவனிமிசை சென்றுபினர் திரும்பியதும்
சிங்கார வேலு என்போர்
இவண்வாயில் வெளியில்தணீர் வைத்திடின் நீ
ராடிடலா மென்று ரைத்தார். 726

திண்ணையினில் அண்ணலமர்ந் தோகோபஞ்
சமன்தொட்டு விட்டா னன்றே
வண்ண இல்லில் சாமிசெல்ல லாகாதென்
றதுசரியே; வைய மீதில்
எண்ணவொரு பேதமின்றித் தீண்டாமை
யேதுமின்றி யொன்றே யாகும்:
நண்ணுமந்தச் செய்தியைப்பின் னறிவீர்இப்
போதுபுரி யாதென் றுரால். 727

அருள்நாடி இறைஞ்சுநனே அவனிமிசை
உயர்ந்தோனென் றெண்ணல் வேண்டும்
தெருள்நாடும் உயிரனைத்தும் இறைவனுறை
திருக்கோயில் எனக்காண் போரே
இருள்நீக்கி இனியஅரு ளொளிவிளக்கும்
இங்கிதர்என் றுணர்தல் வேண்டும்
மருள்போக்கி மாந்தரெலாம் ஓரினமாய்
வாழ்தல்உயர் வென்றுர் அண்ணல் 728

**தணியல் - 1.**

வைரவபு ரத்திற்கரு கமைந்துளவூர்
தணியலென வயங்கு நல்லூர்
வெய்யகதிர் வெப்பம்தணிக் கும்பொழில்கள்
சூழ்ந்துநனி விளங்கு மவ்வூர்
வையமிசை தன்னிடத்து வருபவர்
சினம்தணிக்கும் மாண்பும் அன்பர்
மெய்யருள்தா கம்தணித்து வியன்கருணை
யமுதூட்டும் திறனும் சாலூர். 729

அழகியஅவ் வூர்மணியம் ஆறுமுக
முதலியார் என்னும் அன்பர்
விழுமியபக் தியும்அன்பும் எளிமையும்
இரக்கமும்மிக் குடைய நல்லார்
வழுவில்அவர் அவ்வூர்க்குத் தலைவராய்
வயங்கியதால் அவ்வூர் மக்கள்
பழுதறுமெய்ப் பக்தர்களாய் அருள்நாடும்
பான்மையராய்த் திகழ லானார். 730

வைரவபு ரத்திலண்ணல் எழுந்தருளி
மாண்புறச்செய் அற்பு தங்கள்
செய்யசெவி மடுத்துவியப் பெய்தியநல்
லாறுமுகச் செம்மல் தம்பி
துய்யஎல்லு சாமியுடன் யோசித்துச்
சுவாமிகளைத் தணியல் வாழ்வோர்
உய்யும்வணம் அழைக்கவுன்னி வைரவ
புரத்தினுக் குவப்போ டுற்றார் 731

அங்கணருட் சட்டநெறி யினைப்பற்றி
விளக்கிக்கொண் டிருந்தா ரண்ணல்
துங்கஅரு ளமுதத்தைப் பருகிக்கொண்
டினிதடியர் துலங்கி னார்கள்
மங்களமி கும்தணியல் வாழ்மக்கள்
பேரன்பால் வணங்கிப் போற்றி
எங்கள்பதிக் கெழுந்தருளி யருள்புரிய
வேண்டுமென இறைஞ்சி நின்றார். 732

அருள்நாட்டம் மிகுந்தஅவர் உள்ளன்பை
அருட்குறிப்பால் உணர்ந்த அண்ணல்
தெருள்விழையும் அவர்களழைப் புக்கிசைந்து
சிரமசைத்து முறுவல் பூத்தார்
குருபெருமான் குறிப்பறிந்து கூறரிதாம்
மகிழ்வடைந்தார் தணியல் மக்கள்
மருவுவனப் போடூரை யலங்கரிக்க
வேண்டுமென மனத்துட் கொண்டார். 733

அல்லல்தரு பவம்அகல அருள்புரியும்
தவமுதல்வர் அடியில் தாழ்ந்து
மெல்லஎழுந் துள்ளன்பு மிகுதியினல்
உளமுருகிப் போற்றி செய்து
மல்லல்வளம் மிகுதம்மூர்க் கேகவிடை
கொண்டுவழி நடக்க லானர்
ஒல்லும்வகை யாலினிதவ் வூரைநனி
யலங்கரித்துள் ளுவகை பூத்தார். 734

மெய்ப்பொருளை யறிந்துணர்ந்து மேதினிவாழ்
உயிர்த்தொகைக்கு விளக்கம் நல்கி
எப்பொழுதும் பெருந்துணையா யிருந்துபுரந்
தருளவந்த இனிய மூர்த்தி
ஒப்பில்விடி யற்காலை அவ்வூருக்
குவப்பொடெழுந் தருளி ஞர்கள்
அப்பொழுதவ் வூர்மக்கள் அடைந்தபெரு
மகிழ்ச்சியினை உரைத்தற் காமோ? 735

பூரணகும் பத்தோடும் பொலியார்வம்
மீதூர எதிர்கொண் டார்கள்
காரணகா ரியம்கடந்த கர்த்தர்இவ
ரேஎன்னக் களித்திட் டார்கள்
ஆரணங்கள் அனைத்தினருட் சாரம்அருள்
அரசேயென் றேத்தி ஞர்கள்
வாரணமா முகன்தளிக்கு வாத்தியங்கள்
ஒலிக்கஅழைத் தேகி ஞர்கள். 736

எளியவரை வாழ்விக்க வந்தவள்ளல்
ஆசனத்தில் இனித மர்ந்தார்
களிமிகுந்து மக்களெலாம் அருளண்ணல்
கழறும்அரு ளுரைகள் கேட்க
மிளிருமன்பொ டெதிர்நோக்கி வள்ளலரு
கினில்மேவி யமர்ந்திட் டார்கள்
ஒளிபெருக இருள்விலக சட்டச்சிறப்
பினைக்கர்த்தர் உபதே சித்தார். 737

அங்கமெலாம் நனிகுழைய ஆக்கைபுள
கம்போர்ப்ப அகம்நீ ராகப்
பொங்குபுனல் விழிபொழியப் புவிமீது
விழுந்தெழுந்து போற்றி நின்றே
செங்கைசிர மேற்கூப்பி யாறுமுகச்
செம்மல்தம தில்லி னுக்கே
மங்களநற் பொலிவுமிக வந்தருள்க
எனக்கோரி வணங்கி னூரால். 738

வாரியினில் மடைதிறந்த தெனக்கருணை
பெருக்கியருள் வாகா ரண்ணல்
தூரியங்க ளொலிக்கஅர ஹரவென்னத்
தொண்டர்குழாம் சூழ்ந்து போற்றப்
பாரியலும் வானியலும் பரிந்துகலந்
தாற்போலப் படர்ந்து ஞான
சூரியனுய் அடியர்மனத் திருளகற்றச்
சென்றமர்ந்து துலங்க லுற்றுர். 739

ஆறுமுக முதலியார் அகத்திலுள
எல்லோரும் சட்ட மேற்றுர்
தேறுமுள முடையஅவ்வூர் அன்பர்பலர்
திருவருட்சட் டம்கைக் கொண்டார்
பேறிதற்கு மேலில்லை யெனவுணர்ந்த
பிறவூர்மக் களும்பே ணிட்டார்
மாறுபட லணுவுமிலா மனத்தொடவர்
அடைந்தஇன்பம் வரைதற் காமோ? 740

உள்ளநிலைக் கேற்றவண்ணம் அவரவர்கட்
குகந்தஅரு ளுரைகள் கூறிக்
கள்ளமனக் கசடறுத்துக் கரணமெலாம்
கரைந்துருகக் கருணை பாய்ச்சி
மெள்ளமெள்ள வேதகத்தா லிரும்பினைப்பொன்
னுக்குதல்போல் விமல மூர்த்தி
உள்ளபொருள் உள்ளபடி உணர்த்தியரு
ளானந்தம் ஊட்டி னூரால். 741

ஆடவரும் நங்கையரும் அருட்சட்டத்
தினைஅன்பொ டனுட்டித் தார்கள்
ஈடில்சிறப் புடையநல் விநாயக
புராணத்தில் இயம்பப் பெற்ற
பீடுநிறை உண்மைகளை விளக்கிஅருட்
பேருரைகள் அண்ணல் நல்க
ஆடகம்நேர் மனத்தன்பர் செவிகுளிர
உளம்குளிர அருந்தி உய்ந்தார். 742

மனம்வாக்குக் காயமெலாம் மாட்சிமைசால்
குருபதத்தில் அர்ப்பித் தோர்கள்
தினம்தூய்மை மிகப்பெருகத் தேவசம்பத்
தினிற்சிறந்து திகழ்ந்திட் டார்கள்
அனம்ஆடை தனம்பெருகி அருள்வளமும்
பெருகியன்பர் விளங்கி னார்கள்
பினும்சிலநாள் அங்கிருந்து பெருமானார்
பிறஊர்க்குச் செல்ல லானார். 743

### மேல் இலந்தைக்குளம் (உத்ஸவம்-1)

காந்திமதி யம்மையொடு நெல்லையப்பர்
கருணையுட னமர்ந்து மேவ
மாந்தர்பலர் சிறப்போடும் மன்னுதிரு
நெல்வேலி நகரந் தன்னைத்
தேர்ந்துதலை நகராக்கித் திகழ்நெல்லை
மாவட்டந் தன்னில் நல்லோர்
வாழ்ந்துவரும் மேல்இலந்தைக் குளமெனுமூர்
வளத்தினைநாம் முன்னர்க் கண்டோம். 744

அருளின்பத் தேனருந்திச் சுவைகண்ட
அடியரெலாம் அமுத மூட்டும்
குருநாதர் மீண்டுமெப்போ திங்குறுவார்
எந்நாள்நம் குறைகள் தீர்ப்பார்
அருள்ஞான வொளியருள்வார் அகம்புறமெல்
லாம்தூய்மை யாக்கி உய்ப்பார்
கருமேவு பவம்நீக்கிக் கருணைபுரி
வார்என்னக் காத்திருந்தார். 745

புணர்ச்சிபழ குதல்வேண்டா உணர்ச்சியொன்றே
பொருவிலுயர் நட்பா மென்ன
நுணுக்கமுணர்ந் துரைத்தகுறள் நூலுரைபோல்
நோன்மைமிகும் அடியா ருள்ளம்
இணக்கமுற நன்றுணர்ந்த இணையிலருட்
குருநாதர் இறைவன் தூய
கணக்குன்னி யங்கேக உளம்கொண்டு
மிகுகருணை யோடும் சென்றார். 746

உயிர்கள்தொறும் நிறைந்தவற்றை உன்னுவித்தும்
ஊக்குவித்தும் உயர்வார் பக்திப்
பயிர்வளர்த்தும் பாரின்மிசை பரபோகம்
விளைத்தருளும் பரம மூர்த்தி
உயர்வருளப் போந்தனர்என் றுணர்ந்தன்பால்
அவ்வூரார் உவந்து போற்றித்
துயர் தவிர்த்தின் பூட்டியருள் தூமணியே
வருகஎன வரவேற் றார்கள். 747

சினியாப் பிள்ளைஎனத் திகழன்பர்
வீட்டினில் தேசிகனர் தம்மை
ஊனமிலன் போடினிதே யழைத்தேகி
உயர்ந்தவொரா சனத்த மர்த்தி
ஞானவொளி யென்னஇரு மருங்கும்திரு
விளக்கேற்றி நளின பாதத்
தானபல மலர்சூட்டிப் பணிந்தேத்தி
அகமுருகிப் பரவி நின்றார். 748

பானுவெனத் திகழண்ணல் பக்தர்களுக்
கருட்கருணை பாலித் திட்டார்
மேனியினில் திகழ்பொலிவும் உள்ளமிசை
யொளிர்அருளும் விழியி ரண்டும்
வானமுகி லேபோல வண்மையுடன்
பொழிதூய கருணை மாண்பும்
தீனர்கள்பால் கொளுமிரக்க மும்கலந்து
திகழ்சிறப்பைச் செப்பற் காமோ? 749

இருடியர்பட் டியில்திருச்சி ராப்பளியில்
ஸ்ரீரங்கத் தினில்ந டந்த
பெரியவிழாக் களின்சிறப்பை யடியவர்கள்
மூலமினி துணர்ந்த அன்பர்
உரியசிறப் போடுதம தூரினிலும்
நனிநடத்த உளம்கொண் டார்கள்
பரிவொடண்ணல் பால்சென்று பணிந்துநின்று
பக்குவமாய் விண்ணப் பித்தார். 750

திருமுறுவல் பூத்தண்ணல் திகழ்ந்ததுகண்
டடியர்சிந்தை மிகம கிழ்ந்தார்
திருநகரை யலங்கரித்தார் திருமஞ்ச
னம்செய்ய மேடை யொன்றை
உரியமுறை யோடமைத்தார் அருகிலுள
ஊரவருக் கழைப்பு விட்டார்
திரவியங்கள் அனைத்தினையும் அன்போடு
சேகரித்தோ ரிடத்தில் வைத்தார். 751

ஆயிரத்துத் தொள்ளா யிரத்தெட்டிற்
கீலகநல் லாடி பத்தில்
மேயவெள்ளிக் கிழமைவிழா நடத்தமிகு
விருப்பினெடும் குறிப்பிட் டார்கள்
ஏயதங்கள் பொருள்நிலைக்கும் இணையறுபே
ரன்பினுக்கும் ஏற்ற வாறு
தூயநல்வி ழாநடத்தற் கானவெலாம்
துரிதமுடன் செய்திட் டாரால் 752

வைகறையில் துயிலுணர்ந்து நீராடி
மஞ்சனத்திற் காக நன்று
செய்தமைத்த மேடையில்நாற் காலியிட்டுத்
தேசிகரை யினித மர்த்திச்
செய்யமுறை யோடுதிரு மஞ்சனம்செய்
தெழில்மாலை சிறக்கச் சூட்டி
உய்திபெற நைவேத்தி யம்புரிந்தா
ராதனைகள் உவந்து செய்தார். 753

உலகுயிர்கட் குணவருத்திப் புரந்தருளும்
உத்தமராம் அண்ண லாருக்(கு)
அலகிலன்பி னேடமுது செய்வித்தார்
அடியவர்கட் கமுத ளித்தார்
நலமிகுபே ரருளுரைகள் ஞானகுரு
பரர்அருளச் செவிமாந் திட்டார்
குலவுமெழில் அலங்காரச் சப்பரத்தில்
குருமணியை அமரச் செய்தார். 754

அழகும்மண முஞ்செறிந்த மலர்மாலை
பலசூட்டி அலங்க ரித்தார்
எழிற்கொடிகள் குடைசின்னம் இவற்றுடன்வீ
திகளில்உலாக் கொண்டு வந்தார்
முழவொலியும் மூதறிஞர் குழுவும்அடி
யவர்குழுவும் முன்னே செல்ல
குழலொலியும் பாட்டிசையும் பின்சூழக்
குழகொடுலா நடந்த தங்கண் 755

சப்பரத்தில் எழுந்தருளி யிருந்தஅண்ணல்
சற்றும்அசை யாதி ருந்தே
ஒப்பிலருட் காட்சியரு ளியபொலிவைக்
கண்டோரே உணர்ந்(து) உவந்தார்
இப்புவியில் எவரும்உரைத் தற்கரிதிக்
காட்சியென உளம்க ளித்தார்.
கட்புலனைப் பெற்றபயன் பெற்றோமென்
றன்பரெலாம் களிகொண் டார்த்தார். 756

நூல்பலகற் றவரைவிட நூல்கள்சொலும்
நெறிநடப்போர் உயர்ந்தோ ராவர்
சால்பொடதி காலைதணீ ரினில்மூழ்கி
நீறணிந்து தகவார் நிட்டை
சீலமொடு பேணுமுன்னோர் நெறிமறந்தோம்;
தேசிகனார் அருளால் அன்பர்
மாலறநன் மாண்போங்க மனவுறுதி
யொடும்பேணி வாழ்கின் றார்கள்; 757

அணுவளவும் கலங்காநல் உளமொடும்வாழ்
இவர்பெருமை அளவின் றாகும்;
மணிற்பிறந்த பயன்பெற்றோர் இவ்வடியா
ரேயென்ன வாழ்த்தி யூரார்
பணிவொடும்அண் ணலைப்போற்றி அருட்சட்டம்
பரவுகெனப் பரவி னார்கள்
உணவையும் மறந்தடியார் ஆண்டவர்
உலாவைநனி நடத்தி னார்கள். 758

அவர்களந்நாள் அடைந்தபெரு மகிழ்ச்சியினை
அளந்துரைக்க வல்லார் யாரே
அவர்களந்நாள் அண்ணலைச்சே வித்தடைந்த
அருள்நிலையை அறிவார் யாரே
அவர்களுள்ளத் தண்ணலந்நாள் அமர்ந்துபொலிந்
திட்டநிலை அறிவார் யாரே
அவர்களந்நாள் அடைந்தஉயர் பேரின்பப்
பெரும்பேற்றை அறிவார் யாரே. 759

இவ்வாறு மேலிலந்தைக் குளத்தடியார்
இனிதண்ணற் குலாநடத்தி
அவ்வோடுவ் வும்மவ்வு மாயொளிர்ஆ
னந்தகுரு அருள்பெற் றார்கள்
செவ்வாய்மை மிகுநெறியால் பவப்பிணியைத்
தீர்த்தருள்செய் செம்மற் கன்பால்
அவ்வூர்வாழ் பெரியதிரு வடிப்பிள்ளை
யாற்றுமுலா பின்னர்க் காண்போம். 760

ஆக செய்யுள் 2480

## 3. அருளாட்சி செய் படலம்

### விநாயகர் துதி

ஆணவ மாதி மலங்கள் அறுத்துப்
பேணரி தாம்அருட் பேறு வழங்கிக்
காணரி தாம்கரு ணைப்பதம் நல்கும்
பூர்ணவி நாயகர் பொற்கழல் போற்றி. 1

### குருநாதர் துதி

பூரணன்றன் திருவருளே புனிதமிகும்
திருவுருவாய்ப் புவிமேற் றுங்கிக்
காரணகா ரியம்கடந்த கருணையினைக்
கடைப்பட்ட உயிர்க்கும் காட்டி
ஆரணம்ஆ கமம்அனைத்தும் போற்றும்உயர்
அருட்பரமா னந்தம் நல்கிப்
பூரணமாக் கிடும்தூய போதகுரு
பொன்மலர்த்தாள் போற்றி வாழ்வாம். 2

இகநலத்தை முறையோடும் துய்த்தவண்ணம்
பரநலத்துக் கேற்ற தூய
தகவனைத்தும் நன்குபெறத் தவநிலையைப்
படிப்படியாய்த் தந்து சீடர்
மிகஉயர அருள்புரிந்து மெய்யின்ப
அமுதருத்தும் விமல ஞான
பகவனுயர் இருடிநகர்ப் பரமகுரு
பாதமலர் பணிந்து வாழ்வாம். 3

அற்பநெறி யினைநாடும் அற்பரையும்
அருள்நெறிக்கண் அழகா யீர்த்துப்
பொற்பனைத்தும் வழங்கியருட் புனிதம்மிகப்
புரிந்துதவப் பொலிவு நல்கி
உற்பவம்ம ரிப்பறியா உயர்நிலைதந்
தானந்த அமுத மூட்டி
அற்புதமாய் உலகுதொறும் அருளாட்சி
புரிகுருதாள் அகத்துட் கொள்வாம். 4

அண்ணல்திரு முகத்தினில்மே வருளொளியெவ்
வுயிர்களுக்கும் அருளுண் டாக்கும்
அண்ணல்திரு விழிகளருட் கருணைபொழிந்
தடியரையாண் டருளிப் பேணும்
அண்ணல்திருக் கரம்அடியார் சிரம்மருவி
அருள்நிட்டைப் பேறு நல்கும்
அண்ணல்திரு வுள்ளம்அனைத் துலகினிலும்
அருளாட்சி புரியும் நன்றே. 5

## அடியவர் துதி

பூத லத்திற் பொலியும் உயிர்களைச்
சீத நீரினி லாட்டித் திருவருள்
போத நாதனைப் போற்றும் அடியவர்
பாத தாமரை போற்றிப் பரவுவாம். 6

---

## காசி யாத்திரை

இமயம்முதற் குமரிவரை பரந்துள்ள
இன்னருட்பா ரதநன் னாட்டில்
சமயநெறி சன்மார்க்க நெறிக்குரிய
தகவுவிளங் கிடக்காண் கின்றோம்
அமையுமொழி யாங்காங்கு வெவ்வேறாய்
இருந்தாலும் அனைவ ருள்ளும்
அமலனரு ளுணர்வொன்றாய் அமைந்திருக்கும்
அற்புதத்தை யறிவோம் நாமே. 7

வடதிசையு ளோர்தெற்கில் வளமிகுரா
மேச்சுரத்தை நாடி வந்து
திடமிகுமெய்ப் பக்தியினுல் செம்மையுறப்
போற்றியருட் பேற்றை யெய்தி
உடல்புளகிப் பார்; தெற்குள் ளோர்வடயாற்
காசியென வொளிர்ப திக்கே
அடருளத்தன் போடேகிப் போற்றியருட்
பேறெய்தி வருவ ரன்றே. 8

காசிக்குச் சென்றுவந்தால் கர்மமெலாம்
தீருமென்ற திடநம் பிக்கை
தேசத்து மக்களிடம் திகழ்ந்திடுவ
தால்சட்ட அடியார் பல்லோர்
நேசித்துக் காசிசென்று வழிபடுதல்
வேண்டுமென நிதமும் நாடிப்
பாசத்தைத் தவிரண்ணல் பால்மெல்லத்
தம்விருப்பைப் பகர்ந்திட் டாரால். 9

அடியவர்கள் வேண்டுவன அனைத்தும் அருள்
கருணைக்கட லான அண்ணல்
படியின்மிசை அவர்கள்கொள் அவாவைநிறை
வேற்றவுன்னிப் பக்தி சான்ற
அடியர்சில ரோடுமினி தருட்காசி
யம்பதிக்குப் பயண மானார்;
நெடியபுண்ணி யம்புரிந்தோர் அண்ணலுடன்
செல்லும்நிறை பேறு பெற்றார். 10

அந்தப்புகை வண்டியினில் உடன்சென்றோர்
அனைவருமே யருள்பெற் றுய்ந்தார்
அந்தப்பய ணத்தினிடை அண்ணலரு
ளுரைகள்பல ஆற்ற லானார்
பந்தமறத் தம்வாழ்வில் உணர்ந்தஅரு
ளுண்மைபல சொல்லிச் சென்றார்;
அந்தஅரு ளுரைகளைக்கேட் டன்பரெலாம்
இன்பவமு தருந்தி னரால். 11

ஈனப்படு சிறுவயதிற் பயில்கல்வி
ஏதுக்கும் பயனின் றாகும்
மோனமதில் ஏகப்படு மனதாகித்
தெளிவுபெறின் முத்தி யெய்தும்
ஆனஅன்னை தந்தையவன்;மற்றெல்லாப்
பொருளும் அவன்; அவனேஎல்லாம்
ஆனவனென் றுணர்ந்தாற்கண் ணடியெனத்
தெளியும்அகம் என்றார் அண்ணல். 12

திருவருளைப் பெறவிழைவோர் வஞ்சமற்ற
நல்வழியிற் செல்லல் வேண்டும்
குருவருளாற் பெறுமந்த்ர மதைநினைந்து
நினைந்துமனம் குவிதல் வேண்டும்
இருவினையால் உடல்வந்த தென்னவுணர்ந்
திச்சைகளை விடுதல் வேண்டும்
இருநிலவாழ் வொருகனவென் றினிதுணர்ந்தோங்
காரத்தோ டொன்றல் வேண்டும், 13

என்றுபல அரியஉப தேசங்கள்
அருளண்ணல் இனிதே செய்தார்
நன்றடியர் அன்பரெலாம் அவைகேட்டு
நல்லஉளப் பண்புற் றுய்ந்தார்
துன்றிரவில் அடியவர்கள் உறங்குகையில்
தூயஅண்ணல் காவல் காப்பார்
பொன்றலில்சீர் காட்சிபல கனவின்கண்
புனிதஅடி யார்கள் காண்பார். 14

அதிகாலை யெழுந்ததுமே அடியார்கள்
அண்ணலிடம் கூறு வார்கள்
இதமோடும் அவைகளைக்கேட் டினிதுளத்தி
ரகசியமாய்ப் போற்று கென்பார்
பதியருளும் செய்தியெலாம் பத்திரமென்
றண்ணலன்பர் களுக்கு ரைப்பார்
மதிநலம்பெற் றடியார்கள் மயல்தவிர்ந்து
மாணருளின் மயமாய்ச் செல்வார். 15

அடியவர்கள் பலரோடும் காசியாத்
திரைசென்ற அண்ண லாரைப்
படியின்மிசை பலர்கண்டு பலவாறுய்ப்
பகர்ந்தார்கள்; பண்பார் காவி
உடையுடுத்தா விடினும்இவர் உயர்சாமி
யாராக உள்ளார் என்பார்;
திடமுடைய இவர்உளத்தின் தெய்வீகம்
திருமுகத்தில் திகழ்தல் காண்பார். 16

இவர்யாரோ எவ்வூரோ எங்கிருந்திக்
குழுவினெடும் செல்கின் றூரோ
இவர்தரிச னம்பெறற்கி யாம்தவம்மிக்
கியற்றியுளோம் என்று சொல்வார்;
இவர்கமல பதம் இறைஞ்சும் பேறுபெற்ருேர்
இனியர்எனச் சிலர் ண் ணிட்டார்
இவரைவணங் கிடுவோமென் றினிதிறைஞ்சித்
திருவருட்பே றெய்தி உய்ந்தார். 17

வேறு

மெய்த்தன்மை உணர்வுடைய
விழுத்தவத்து மேலோர்தம்
சித்தநிலை தெய்வீகம்
திகழ்நிலையென் றினிதுணர்ந்து
பத்தர்பலர் பணிந்தேத்தி
பகரரிதாம் பயனடைந்தார்
மெய்த்தவத்தின் பெருமகிமை
மேதினியிற் சொலல்எளிதோ? 18

தமையறியா தொருகாந்தப்
பேருணர்ச்சி தமையீர்க்க
அமைதிவிழை மனத்தன்பர்
அண்ணலரு கினிற்போந்து
சுமையெனும்தொல் வினைகழியத்
தூமலர்ப்பா தம்பணிந்து
தமைமறந்து தண்ணருளின்
மயமாகித் தழைந்தனரால். 19

பெருந்தகைசீர் மேனிமிசை
பெருகொளியைக் கண்டபலர்
அருந்தவம்யாம் செய்தோமென்
றடிமலரிற் பணிந்தெழுந்து
திருந்தியநல் லுரைகள்பல
செவிமடுத்துத் திருவருளிற்
பொருந்தியவுள் ளத்தவராய்ப்
பொலிவுற்றின் பெய்தினரால். 20

தொழுதுருகி இன்புற்றுத் துதிசெய்தங் குடனிருந்த
பழுதிலரு ளடியார்கள் பலமொழியில் அருளண்ணல்
மொழியும்உயர் சிறப்புணர்ந்து முழுவியப்புற் றுவந்தார்கள்
வழியுணர்த்தும் வான்பொருளின் மாண்புரைத்தற்
கரிதாமால். 21

நிலவுதிரு நீற்றுநெறி நீணிலத்தில் நனிபரவ
அலகில்அருட் சட்டம்அருள் அண்ணல்உலாச் செய்பொழுதில்
பலர்போந்து சட்டநெறிப் பண்புணர்ந்து கடைப்பிடித்தார்
சிலர்ஐயங் களைக்கேட்டுத் தெளிவுற்று மகிழ்சிறந்தார். 22

வேறு

இவ்வாறு புகைவண்டிப் பயணம்செய்
தெழிற்காசி சேர்ந்தார் அண்ணல்
செவ்வாய்மை யுடையண்ண லுடன்சென்ற
அடியார்கள் சீரார் கங்கை
எவ்வாறு பெருகுகின்ற தென்றழகார்
தோற்றம்கண் டின்புற் றார்கள்
துவ்வாத விரதியரும் தோய்ந்தாடும்
துறைக்கண்ணல் அழைத்துச் சென்றார். 23

தன்தூய சக்தியினைப் புவிக்குணர்த்தும்
தன்புதல்வன் வந்தான் என்றே
நன்றார்வத் தொடும்தனது திரைக்கரத்தால்
நற்கங்கை வரவேற் றிட்டாள்
சென்றாடும் அடியவர்கள் மீதுமண்ணல்
திருமேனி மீதும் கங்கை
நன்றாசி யருள்வதுபோல் நற்றிவலை
களைத்தூவி மகிழ்கொண் டாளால். 24

விசுவேசப் பெருமான்றன் வியன்கோயிற்
கடியவரை யழைத்துச் சென்றார்
சுசிதூய வுளத்தோடும் அவரவரும்
அபிடேகம் செயலாம் என்றார்
சுசியோடும் அடியார்கள் தூயகங்கை
தீர்த்தத்தால் அபிடே கித்துப்
பசுபோத மேற்றருளிப் பதமருளும்
பரமனருட் கருணை பெற்றார். 25

வலம்வந்து வரம்பெற்ற அடியர்தமை
மகிழ்வோடும் அழைத்துச் சென்றே
நிலந்தன்னிற் பெருங்குடைபோல் நிழல்நல்கு
சோலையொன்றிற் சேர்ந்தார் அண்ணல்
நலம்நல்கு நிட்டையினில் நன்கமர்த்தி
யடியார்கட் கருள்பா லித்தார்;
புலன்வென்று தவம்புரிவோர் அருட்சக்தி
இவர்கள்மிசை படிந்த தம்மா. 26

அவரவர்தம் பக்குவத்திற் கேற்றபடி
அருட்காட்சி பலகண் டார்கள்
பவமகற்றும் பரம்பொருளே குருவடிவிற்
படியின்மிசை போந்தா ரென்ன
உவகையுடன் அடியர்குழாம் உணர்ந்துபர
மானந்த உததி யாழ்ந்தார்
அவமகற்றி அருள்ஞான அமுதருந்தி
இன்பமுற்றார் அடியார் பல்லோர். 27

காசிநன்மா நகரின்கண் ஒருசிலநாள்
தங்கிப்பல காட்சி காட்டித்
தேசுமிகு பலசிறந்த திருத்தலங்கட்
கழைத்தேகித் தெரிசிப் பித்தே
ஆசகற்றும் பலசிறந்த அருள்தீர்த்தங்
களில்மூழ்கு வித்துப் பின்னர்
பேசுபுகழ் மிக்கநல்லாந் திரநாட்டில்
பேரருளார் அண்ணல் சேர்ந்தார். 28

மூப்பக் கவுண்டலுவைக் காணல்

அருட்சட்டச் செந்நெறியில் முதற்சீட
ராய்த்தம்மால் ஆளப் பெற்ற
தெருள்மிக்க சீரடியா ராம்மூப்பக்
கவுண்டலுவாழ் இல்லம் சேர்ந்தார்
பொருள்நல்கும் அருளண்ணல் போமிடமெங்
கென்றடியார் புரியா ராகி
உருள்நிலத்தில் குருகருணை உணர்வரிதென்
றுளத்தெண்ணி வியப்பா ரானார். 29

நம்குருவை மீண்டுமெந்நாள் காண்போமென்
றெண்ணியுளம் நைந்து வாடும்
துங்கமிகு நல்லடியா ராம்மூப்பக்
கவுண்டலுமுன் தோன்றி யண்ணல்
கங்குல்தவிர் கதிரவன்போல் கருணையுருக்
காட்டுதலும் கண்ட தொண்டர்
கங்குகரை கண்டறியாப் பேருவகைக்
கடலின்கண் தோய்ந்து நின்ருர். 30

தம்மெதிரே வந்துநிற்கும் தண்ணருளார்
சற்குருவைக் கண்ட தொண்டர்
தம்மைமுழு வதுமிழந்தார் செய்வதெது
வென்றறியாத் தன்மை பெற்ருர்
மும்மைமலம் களைந்தருள்செய் மூர்த்திதிரு
வடிமலரில் வணங்கிப் போற்றி
இம்மைமறு மைப்பயன்கள் இனிதருளும்
இறையேஎன் றழுது சோர்ந்தார். 31

காக்கவந்த கற்பகமே பவக்கடலைக்
கடத்திக்கரை யேற்றித் தூய
மோக்கமெனும் பெருந்திருவை வழங்கவந்த
முழுமுதலே மோன ஞான
சூக்குமமெல் லாம்விளக்கி யருள்ஞானத்
துறைகாட்டும் ஜோதி யேஎன்
வாக்குமனம் செயலனைத்தும் ஏற்றருள்செய்
வள்ளால்என் றேத்த லானுர். 32

வேறு

கண்ணில்ஆ நந்த அருவிநீர் சொரியக்
கைம்மலர் உச்சிமேற் குவித்து
மண்ணிலே வந்த பிறவியின் பயனை
மாண்புறத் தந்துகாத் தருள்செய்
புண்ணியா நின்றன் அருட்பெருங் கருணை
புகலுதற் கெளியதோ என்ன
உண்ணிலா வுண்மை யன்பினுல் உள்ளம்
உருகினுர் உவகையுட் படிந்தார். 33

வேறு

நாடியஆர் வம்பெருக நைந்துமனம்
 கரைந்துருகி நயந்து போற்றும்
ஈடிணையில் அடியவர்தம் பழுத்தஉளப்
 பண்பையுணர்ந் தினிதே யண்ணல்
தேடியடை தற்கரிய திருவருளாம்
 பெருந்திருவைச் சொரிந்தார் அன்பு
கூடியநற் பெருந்தொண்டர் பெற்றபெரும்
 பயன்நாவாற் கூறற் பாற்றே? 34

அன்புவலைக் குள்ளாகி அருளண்ணல்
 அவர்க்கின்னருள் சுரந்த வாறும்
அன்புநெறி யிற்றேய்ந்த அன்பர்குரு
 வருளமுதைத் துய்த்த வாறும்
அன்புமய மாய்த்திகழ்ந்த அவ்விருவ
 ரேயறிவார்; அவனி மீதில்
அன்பணுவும் கண்டறியா அடியனெவ்வா
 றறிந்துரைக்க வல்லே னிங்கே? 35

அண்ணலா ருடன்வந்த அடியவரை
 வரவேற்றுத் தாம்முன் செய்த
புண்ணியத்தின் பயனென்னப் போற்றியுப
 சரித்துள்ளம் பூரித் திட்ட
திண்ணியமெய் யன்புடைய அத்தொண்டர்
 திருவுளத்தின் செம்மை கண்டே
அண்ணலருள் ஆந்திரநாட் டிலும்பரவி
 யுள்ளதறிந்(து) உவந்தார் அன்பர். 36

பெருங்கருணை மயமான குருபரனார்
 திருவுளமும் பிறங்கு தூய
அருங்குணம்சால் அடியவர்கள் நல்லுளமும்
 அணுவளவும் பேத மின்றி
ஒருங்கிணையும் போதுமொழி நாடுரோ
 டுறவெவ்வா றிடையூ றுகும்
இருங்கடல்சூழ் பெரும்புவியில் இன்பமருள்
 மெய்யன்புக் கீடொன் றுண்டோ? 37

அருட்காசித் தலமாதி பலதலத்துக்
கடியவரை அழைத்துச் சென்ற
தெருட்சான்ற குருபரனார் அமுதனைய
தமிழ்வழங்கும் திருநா டெய்திப்
பொருட்சான்ற அருளுரைகள் புகன்றவணம்
போதமுடன் புனிதம் மேவ
மருட்சார்ந்த மனமும்நனி திருந்தஅருள்
புரிந்துமகிழ் வூட்டிச் சென்றார். 38

அவரவர்வாழ் ஊரினிற்சேர்த் தவரவரை
இரவிலருள் நிட்டை கூட்டி
புவனியின்கண் ணுளதலங்கள் மூர்த்திகள்தீர்த்
தங்களெலாம் பொலிவ துள்ளே
நுவலரிய யாத்திரைசெய் நோக்கத்தை
யினிவிடுத்து நோன்மை கூட்டும்
தவத்திலுயர்ந் திறைவனையுட் கண்டொன்றி
யின்புறுவீர் என்றார் அண்ணல். 39

வேறு

இப்படி யடியார்அன்பர்க் கினியநல் லருட் சட்டத்தில்
ஒப்பருநிலைக ளெய்த உயர்வுமிக் கினிதுநல்கிச்
செப்பரு பரமா னந்தத் திருவமு தருத்தி யண்ணல்
எப்பொழு திலும்நற் றாயதுணையென இலங்கி னாரே. 40

வேறு

மூன்றுமுறை அடியவரை அருட்காசிக் கழைத்தேகி
வான்திகழ்ஞா னானந்த அமுதூட்டி மாஞானத்
தேன்துளிக்கும் திருநெறியே சிறந்ததெனத் தெளிவருளி
ஊன்திகழு முடம்பைத்திருக் கோயிலென மாற்றினரால்.
41

**வைரவபுரம்-2**

திண்டிவனம் தாலுகா வினிலுள்ள
வைரவபு ரத்திற் கேக
மண்டியபே ரன்போடு திருவுளங்கொண்
டாரண்ணல்; வந்து முன்னர்
எண்டிசையும் போற்றஅரு ளற்புதங்கள்
இயற்றியதை எண்ணி எண்ணி
அண்டர்தொழும் குருபரனார் வருவாரோ
என்றாரார் அவாவி நின்றார். 42

வித்தகச்சற், குருபரனூர் விழைந்துவரும்
நாள்எதுவோ என்றென் றெண்ணி
சித்தமிசை ஏக்கமுற்றூர்; திருவருளாம்
திருவுருக்கொள் குரவ னுரை
வைத்தியநா தப்பெயர்கொள் முதலியார்
நினைந்தவண்ணம் உறங்கும் போதில்
பத்தர்அவர் மகிழும்வணம் பாங்குமிகு
கனவொன்று நிகழ்ந்த தம்மா. 43

அண்ணலார் தம்முருக் கெழுந்தருளு
வதுபோலும் அருகில் நின்ற
திண்ணியநற் றவப்பெரியார் ஒருவர்தமை
யழைத்திந்தச் சீர்சால் மேலோர்
பண்ணவரெல் லாம்போற்றும் பரம்பொருள்;நற்
றெய்வநெறி பரப்ப வந்தார்
உண்ணெகிழன் பொடும்போற்றின் உன்குடும்பம்
சிறக்குமென உணர்த்தல் கண்டார். 44

தூயதிரு மஞ்சனம்செய் தாராத
னம்புரிந்து துதிகள் பாடி
மேயவெழிற் சிவிகையினில் எழுந்தருளு
வித்தூரை வலம்செய் வித்தால்
காயமொடு பொருளாவி கவர்ந்துதிரு
வருள்பெருக்கும் கர்த்தர் தம்மால்
ஆயஇக பரநலங்கள் அளவின்றிப்
பெருகும்என அருளிச் செய்தார். 45

முதலியார் விழித்தெழுந்தார்; உடம்புமுழு
தும்புளகம் போர்த்து நின்றூர்;
அதிகநீர் விழிபெருக்க ஆனந்தப்
பெருங்கடலில் ஆழ்ந்தார்; அண்ணல்
பதமலரை நினைந்துருகிப் பணித்தவண்ணம்
விழாநடத்த உறுதி கொண்டார்;
*உததியுடை யுடுத்தநிலத் தினிற்பெற்ற
பேற்றைநினைந் துவகை பூத்தார். 46

* உததி -கடல்

அருட்சட்ட அடியவர்க ளிடம்செய்தி
யிதைக்கூறி யகம்க ளித்தார்
பெருவேட்கை உடையொருவன் தண்ணீரை
நாடுதல்போல் பீடு சான்ற
குருநா தர் வரவையெதிர் பார்த்திருந்தார்;
திரிகாலம் குறிப்பாற் காணும்
அருள்ஞானப் பெருவள்ளல் வைரவ
புரத்திற்கெழுந் தருள லானர். 47

அருள்விழையும் முதலியார் பெற்றபெரு
மகிழ்வுக்கோர் அளவே யில்லை;
உருகியஉள் ளத்தோடும் உளம்நிறைபே
ரன்போடும் ஓடிச் சென்றே
பரவரிய பாதமலர் பரவிமிகு
பரிவொடும்இல் லத்திற் சேர்த்து
மருவியஆ சனத்தமர்த்தி மலரடிக்கு
நீராட்டி மலர்சூட் டிட்டார். 48

செம்மைமிகு பாதமலர்க் காட்டியநன்
னீர்சிரமேல் தெளித்துக் கொண்டார்
மும்முறையும் வலம்வந்து முறையொடும்தாழ்ந்
தெழுந்துதுதி மொழிந்து நின்றார்
நன்முறையில் வழிபாடு முடிந்தவுடன்
ஞானகுரு பரனர் தம்பால்
நன்மைபெறத் தாம்கண்ட கனவைமிகு
பணிவோடும் நவின்றிட் டாரால். 49

வேறு

ஆண்டருள் புரிய வந்த
அண்ணலார் அதனைக் கேட்டுத்
தூண்டரு விளக்கு போலத்
தோன்றிடும் தொண்ட ருர்பால்
ஈண்டிய மகிழ்வி னோடும்
இனிதுபுன் னகைசெய் திட்டார்
யாண்டுமே உடையோ னுள்ளம்
போலெலாம் நடக்கும் என்றார். 50

வேறு

மாசகன்ற மணிக்குன்று போன்றஅண்ணல்
மகிழ்ந்தருள்செய் திட்டா ரென்றே
நேசமிக உடைமுதலி யார்மகிழ்வு
மிக்கெய்தி நிறைசுற் றத்தார்
தேசுநிறை யடியார்கள் திகழ்சுற்றுப்
புறஊரார் அனைவ ருக்கும்
வீசுபுகழ் பரவிடச்செய் தியைவிடுத்து
நகரையெழில் விளங்கச் செய்தார். 51

உத்ஸவம்

ஊர்முழுதும் புதுமணலைப் பரப்பினர்நல்
லொண்கொடிகள் ஓங்கச் செய்தார்
பூமருவு வெண்கொற்றக் குடைசிவிகை
யாதியெலாம் பொருந்தச் சேர்த்தார்
நாமநற்சௌ மியவைகா சியிலிருபத்
திரண்டென்னும் வெள்ளி நாளில்
மாமகிழ்வி னேடுவிழா நடக்குமெனப்
பத்திரிகை வழங்கி னூரால். 52

குறித்தஅந்த நாள்காலை திரளான
மக்கள்வந்து குழுமி னூர்கள்
அறத்தைநிலை நாட்டியரு ளமுதூட்ட
வந்தஅரு ளண்ண லாரின்
திறத்தையெவ ரும்போற்றிச் சிந்தைமகிழ்ந்
தின்பெய்திச் சித்தி ரங்கள்
பொறித்தநல்லா சனத்தமர்த்திப் புனிதமிகு
நன்னீரால் அபிடே கித்தார். 53

நல்லபசும் பால்தயிர்ஐ யமுதுசந்த
னம்பன்னீர் திருநீ ருட்டி
சொல்லரிய பலகனியின் சாறிளநீர்
தூமஞ்சனப் பொடியா லாட்டித்
துல்லியவத் திரங்கொண்டு துடைத்துத்தூ
வெள்ளாடை துலங்கச் சாத்தி
மல்லிகைநற் பிச்சிமுல்லை மந்தாரை
மலர்கொடுநன் றருச்சித் திட்டார். 54

திருவமுது கனிவகைகள் படைத்திட்டார்
சிந்தைகனிந் துருகி யேத்திப்
பரவிநின்றார் பக்தியொடு வலம்வந்து
பணிந்தெழுந்தார் பவநோய் நீக்கும்
அருளமுதே அற்புதமாம் கற்பகமே
அருந்தனமே யென்று போற்றித்
திருவருளின் மயமானார் அவரடைந்த
அருட்பயனைச் செப்பற் காமோ? 55

மங்கலவாத் தியம்முழங்க மக்களெலாம்
அரஹரவென் றொலித்தின் பெய்தத்
துங்கமிகும் அபிடேகம் அலங்காரம்
செய்தாரா தனைகள் செய்தார்
அங்குபனி ரெண்டரைநா ழிகையாகி
யும்பசியும் களைப்பு மின்றிக்
கங்குகரை காணாப்பே ரானந்தக்
கடலிலன்பர் தோய்ந்தி ருந்தார். 56

ஆராத இன்பமருள் அண்ணலார்க்
கமுதுசெய்வித் தடியார்க் கெல்லாம்
சீரார்நற் றிருவமுது செய்வித்தார்;
சிறந்தஅடி யாரைக் கூட்டி
ஊராரை உடன்கூட்டி மெய்யன்பர்
களைக்கூட்டி ஒப்பி லண்ணல்
வாராத பெருஞ்செல்வம் வரும்வழியீ
தெனவிளக்கி மகிழ்கூட் டிட்டார். 57

அன்பரெலாம் அடியரெலாம் அகம்மலர
முகம்மலர அன்பாய்க் கேட்டுத்
துன்பமெலாம் அகன்றவராய்த் தூய்மைமிகப்
பெற்றவராய்த் துலங்க லானார்
இன்பவொளிக் கதிர்தோன்றின் இருளோடும்
என்றுசொலல் வேண்டுங் கொல்லோ
மன்பதைகள் இன்பமுற வந்தவரன்
றோகருணை வளஞ்சால் அண்ணல்? 58

மாலைவழி பாடுநனி நடந்தபினர்
மாண்புமிகு மலர்ப்பல் லக்கில்
சாலமகிழ் வோடருளார் அண்ணலைநன்
றெழுந்தருளு வித்துத் தூய
மாலைபல சாத்தியலங் காரம்எழி
லுறச்செய்து வண்கர்ப் பூரக்
கோலமணித் தீபவொளி யோடுமுலாச்
செய்வித்துக் குதுக லித்தார். 59

தூரியங்கள் பலமுழங்கத் தொண்டர்குழாம்
மகிழ்வொடர ஹரவென் றேத்தச்
சீரியநல் லருட்பாடல் இசைத்தடியார்
குழுதொடரத் தேவர் நற்பூ
மாரிபெயத் தேவதுந்து மிகள்முழங்க
முனிவரரா சீர்வ திக்க
ஏரிலக அமைதிருவு லாக்கண்டோர்க்
கினிபிறப்பொன் றில்லை யம்மா. 60

ஆயிரக்க ணக்கானோர் விழாக்கண்டு
பேரின்பம் அனுப வித்தார்
தூயநல்வைத் தியநாத முதலியார்
துகளறுபே ரன்பின் ஆழம்
மாயைதவிர்த் தருளண்ணல் மகிழ்வொடுகண்
டளவறுபே ரருள்சு ரந்தார்
நேயமொடு பணிபுரிந்தோர் அனைவருமே
நிகரறுபே ரருள்பெற் றுய்ந்தார். 61

இந்தநல்லு லாவில்உட னிருந்துபணி
யாற்றியருட் பேறு பெற்ற
சந்தமிகு தண்தணியல் ஆறுமுக
முதலியார் தாமும் அண்ணற்(கு)
அந்தமில் சீர் அருட்டிருவு லாநடத்தல்
வேண்டுமென அகத்துட் கொண்டார்
அந்தநல்லூர் மக்களும்அ தற்கிசைந்தார்
அகம்களித்தார் முதலி யாரும். 62

## ஆண்டவர் விநாயகரின் பெருமை கூறல்.

அவ்வமயம் ஆண்டவர் விநாயகரின்
சிறப்பினைஅங் குள்ளோர் கேட்கச்
செவ்வையுறப் புன்முறுவல் பூத்தமுகத்
தோடினிது செப்ப லுற்றார்
அவ்வையரை நொடியினிற்கை லாயமுற
அருள்செய்கண பதியின் சீரை
எவ்வொருவர் கேட்டாலும் நினைத்தாலும்
இன்பமுத்தி பெறலாம் என்றார். 63

எவ்வொருதெய் வத்தினுக்கும் மந்திரமுண்
டம்மந்த்ர மனைத்தி னுக்கும்
செவ்வியஓங் காரமெனும் மந்திரமே
மூலமெனச் செப்பு வார்கள்
அவ்வொருநல் லோங்கார மந்திரமே
உருவ மெனக் கொண்டி லங்கும்
திவ்வியநன் மூர்த்திவிநா யகரென்னில்
அவர்சிறப்பைச் செப்பற் காமோ? 64

சிருட்டிதிதி சங்காரம் திரோபவம்
அனுக்கிரக மென்னு மைந்து
திருத்தகுநற் செயல்கள்செயும் ஐங்கரமும்
உயிர்த்திரளை நன்றுய் விக்கும்
பெருத்ததொந்தி யண்டமெலாம் தனுளடக்கி
முறையோடும் பேணிக் காக்கும்
நிருத்தமிடு மிருசரணம் பரவபர
ஞானநிலை யருளி யாளும். 65

முக்கண்ணும் உயிர்த்திரளின் மும்மலத்தை
யெரித்துமுத்தி பெறநன் றுய்க்கும்
தக்கநல்லங் குசம்உயிரின் அகங்காரத்
தினைத்தகர்த்துத் தவத்திற் கூக்கும்
மிக்குயர்நற் பாசம்எம பாசத்தை
விலக்கியன்பால் விரைவி லீர்க்கும்
எக்கணமும் கணபதியைச் சிந்தைசெயின்
இன்பமெலாம் எய்தும் நன்றே. 66

அஞ்சலளித் தருள்கரம்எவ் வுயிர்களுக்கும்
உறுமிடரை அகற்றி யாளும்
விஞ்சுசுவை மோதகம்கொள் கரமுயிர்கட்
குணவூட்டி மிகவும் பேணும்
உய்ஞ்சிடநற் றவம்புரிவோர்க் குயரமுதைக்
கும்பகல சம்தந் தோம்பும்
சஞ்சிதமா காமியம்ப்ரா ரப்தமெரிக்
கும்தனல் கணேச ராமே. 67

அவர்கடைக்கண் ணுல்நோக்கின் அனைத்துயிரும்
அவனிமிசை நல்வாழ் வெய்தும்
அவர்துதிக்கை அயர்விலுண்மை யன்புமிகும்
அடியவர்கட் கருள்நீ ராட்டும்
அவர்மலர்ச்சே வடியடியர் சென்னிமிசை
பதிந்தயனுர் எழுத்த ழிக்கும்
அவர்திருவு ளம்பற்றின் அடியவர்பே
ரானந்த மயமா வாரே. 68

தானதரு மம்வளரத் தக்கபடி
வளங்களருள் பவர்க ணேசர்
ஊனமெலாம் தவிர்த்தருளி உயர்நலங்கள்
கூட்டுவித்தாள் பவர்க ணேசர்
ஞானவளம் கூட்டுவித்தஞ் ஞானநிலை
யினைத்தவிர்த்தாள் பவர்க ணேசர்
மோனநலம் கூட்டுவித்து முத்திபெறப்
பக்குவம்செய் பவர்க ணேசர். 69

தெளிவருளிச் சிவஞானப் பேறருளித்
தெய்வநலம் கூட்டு விப்பார்
தளையறுத்துத் தவமளித்துச் சச்சிதா
னந்தமுத்தி தந்து காப்பார்
எளியமுறை யினிலவரை வழிபட்டெவ்
வரங்களையும் பெறுதல் கூடும்
நளினமலர்த் தாள்போற்றி நவைநீக்கி
நன்மையெலாம் பெற்றுய் வோமே. 70

எனப்பலவா றுகஅண்ணல் இபமுகக்
கணேசர்அருள் இயல்பை யோதி
நினைப்பரிது கூறரிதந் நிமலர்அருட்
பெருமையென உணர்த்த லோடும்
அனைத்துநலங் களும்அருளும் ஐங்கரத்தே
வேநமையாள் தெய்வ மென்ன
நினைத்தெவரும் நிதமவரை வழிபட்டின்
புறுவமென உளத்துட் கொண்டார். 71

**தணியல்-2.** *(உத்ஸவம்)*

தணியலிலும் சுற்றுப்புறத் தூர்களிலும்
உளமக்கள் சாமி சீரை
எணியுணர்ந்துள் ளுருகிநனி போற்றினர்எண்
ணற்கரிதாம் இன்ப முற்றார்
அணிதிகழ்நல் வைரவ புரத்தினிதே
யாற்றியவி ழாவைப் போலத்
தணியலிலும் நடத்திடுதல் வேண்டுமெனத்
தக்கவர்கள் எண்ணி னரால். 72

மணியம்பார்த் திடும்ஆறு முகமுதலி
யாரென்னும் மாண்பார் அன்பர்
பணிகளையுக் கத்தோடும் புரிஎல்லுச்
சாமியெனும் பண்பார் அன்பர்
பிணியனைத்தும் தவிரண்ண லிடம்சென்று
பிறங்கும்அடி யவர்கள் மூலம்
எணியுளவி ழாநடத்தற் கினிதண்ண
லிடமிசைவு பெற்றிட் டாரால். 73

அருளண்ண லார்தங்க ளூர்க்குவர
வேண்டுமென அன்பி னோடும்
திருவடியிற் பணிந்தேத்தி முறையிடவும்
அருட்செம்மல் பயண மானார்
பரிவுடனும் முதலியார் முன்சென்று
தணியலெனும் பாங்கா ரூரைப்
பெருகெழிலொ டலங்கரித்துப் பிரியமுடன்
ஆண்டவரை வரவேற் றிட்டார். 74

மங்கலவாத் தியம்முழங்க மகிதலத்தைப்
பேணிறையே வருக வென்னத்
துங்கமிகு பூரணகும் பத்தோடும்
தொழுமடியார் குழுவி னேடும்
தங்களில்லிற் கினிதழைத்துக் கொண்டேகித்
தக்கவொரா சனத்த மர்த்தி
ஒண்கழலில் நீராட்டி மலர்சூட்டி
உவந்துவழி பாடு செய்தார். 75

மூன்றுமுறை வலம்வந்து முறையோடும்
பணிந்தேத்தித் துதிகள் பாடித்
தோன்றலுக்குத் திருவமுது செய்வித்துத்
தூமுறையில் உபச ரித்தார்
ஈன்றஅன்னை தந்தையினும் இனியகுரு
பரர்க்கினி துலாந டத்த
ஆன்றவர்கள் புகழ்முறையில் ஆலோசித்
தாம்பணிகள் புரித லுற்ருர். 76

தங்கள்பெருஞ் செல்வவளத் திற்கேற்பத்
தக்கனஎல் லாமும் செய்தார்
மங்களநற் சௌமியஆண் டினிற்கன்னி
மாதத்திற் பதின்மூன்ரும் நாள்
மங்களவா ரத்தினில் விழாநடத்த
மன்னுநன்ஞள் குறித்திட் டார்கள்
துங்கமிகும் அந்நாள்கா லையிலடியார்
கூடியன்பால் துதிபா டிட்டார். 77

மஞ்சனப்பொ ருள்களெலாம் கொண்டுதிரு
மஞ்சனம்அன் பொடும்செய் தார்கள்
நெஞ்சிளகி யுருகிநல்ல நியமமொடண்
ணலுக்கார தனைகள் செய்தார்
தஞ்சமெனச் சூழடியர் அன்பர்களின்
தாழ்வகற்றி வாழ்வு நல்கி
அஞ்சலெனக் கருணைபுரி யருட்குருவே
யெனப்போற்றி வணங்கி நின்ருர். 78

அண்ணலவ ருளத்தன்பு கண்டருளால்
அடியரொரு வரைய மைத்துத்
தண்ணருளின் வடிவான திருநீற்றைத்
தருமாறு பணித்திட் டார்கள்
திண்ணியமெய்த் தவப்பயனைப் பெற்றவர்போல்
சீரடியார் ஏற்ற ணிந்தார்
புண்ணியத்தின் பயனிதுவே யென்றன்பர்
போற்றியணிந் துவகை பூத்தார். 79

அடியவர்க்கும் அன்பருக்கும் அமுதுபடைத்
தரும்பிறவிப் பயன்பெற் றுய்ந்த
அடியவராம் ஆறுமுகச் செம்மலும்எல்
லுச்சாமி அன்பர் தாமும்
படியின்மிசை பெற்றஇன்பம் பாரினில்வே
றொருவரும்பெற் றறியா ரன்றோ?
கடிகமழ்அவ் வூர்முழுதும் அண்ணலருட்
கருணைமணம் மிகுந்த தம்மா. 80

உணவுமுடிந் ததும்உண்மை யன்பொடண்ணல்
அவ்விடத்துற் றவர்க ளெல்லாம்
உணரும்வணம் ஒப்பிலரு ளுரைநிகழ்த்தி
உருக்கியுப தேசம் செய்தார்
உணர்வருளிக் குறையகற்றி உயர்வருளவ்
வுபதேசம் கேட்டோ ரெல்லாம்
தணல்முனுறு வெண்ணெயென வுருகியருட்
சட்டநெறி கைக்கொண் டாரால். 81

அன்றிரவில் அருட்சிவிகை சோடித்தங்
கண்ணலையுள் ளமரச் செய்து
பொன்றலில்மெய் யன்போடும் பூமாலை
பலஅழகு பொலியச் சூட்டி
நன்றுமுறை யொடுமாரா தனைபுரிந்து
ஞாலமிசை உயிர்கள் வாழத்
துன்றடியர் அரஹரவென் றொலிமுழக்கத்
தூயவுலாச் செய்வித் தாரால். 82

அம்மையார்க் கருளல்

அவ்வூரில் ஓரம்மை யார்அருட்சட்
டம்பேணி யன்பி னேடும்
செவ்வாய்மை யோடுறுதிப் பாடுமிக
உடையவராய்த் திகழ்ந்து வந்தார்;
எவ்வாரே நீர்கொணரும் போதொருநாள்
கால்சுளுக்கி எவ்வ மெய்தி
ஒவ்வாமல் உளம்துடிப்ப உடையவன்தண்
ணருள்நினைந்துள் ளுருகி நைந்தார். 83

அருளண்ணற் காற்றும்விழாக் காணநம்மால்
ஆகாதே, எழுந்தி ருந்து
தெருவரையிற் சென்றிடவும் இயலாதே
செய்வதென்னே என்று நொந்து
பெருவினைகள் புரிந்தோமோ பெருமான்
விழாக்காணும் பேறெய் தாமல்
மருவுமுடம் போடிருந்தும் பயனென்ன
என்றுருகி வருத்த முற்றார். 84

நடக்கவிய லாவண்ணம் நகரவிய
லாவண்ணம் ஞால மீதிற்
படுக்கையினில் இருப்பதனுல் யாதுபயன்
பரமகுரு வுலாவைக் காணக்
கொடுத்துவைக்காப் பாவியென வாகிவிட்டேன்
கொடியகுற்றம் புரிந்தி ருந்தால்
தடுப்பிலருட் கருணையினுற் பொறுத்தருள்வீர்
சாமீயென் றழுது சோர்ந்தார். 85

அறியாமல் என்னபிழை யடியேன்செய்
திருந்தாலும் அருளால் மன்னித்(து)
இறையேனும் இனியவுலாக் கண்டுமகிழ்
வெய்தஇனி தருள்செய் யுங்கள்
பொறையேமெய்ப் புகழேநற் புனிதவுரு
வேஞான பூர்ண மேஎன் (று)
இறையேனும் இடையீடில் லாதுருகி
எம்மானைத் துதித்து நைந்தார். 86

பகல்முடிந் திராக்காலம் போந்ததருட்
பண்ணவனுர் அருளு லாவும்
மிகுசிறப்பி னேடுதொடங் கப்பெற்றங்(கு)
அவரிருக்கும் வீதி தன்னில்
தகவுறநு ழைந்திடவும் தந்தியெழிற்
குதிரைமுத லாய சார்ந்து
புகவும்அடி யார்கூட்டம் போற்றிமுனர்
போந்தனர்உள் மகிழ்வி னேடும். 87

ஆண்டவரின் அருட்பாடல் பாடியடி
யாரன்பர் பின்னே யெய்த
தூண்டருபே ரன்பொடுவெண் சாமரைகள்
வீசியன்பர் இருபாற் சூழக்
காண்டகுபல் கோடிகதிர்ச் சோதியெனக்
கணிப்பில்முழு மதிய மென்ன
ஆண்டவர்தண் ணருள்ஞானக் காட்சியளித்
தருட்சிவிகை யினிற்போந் தாரால். 88

கண்டவரெல் லாம்வியப்புற் றருள்ஞானக்
கண்மணியே என்றுள் ளன்பால்
விண்டுரைத்துக் கரம்சிரமேற் கூப்பியிரு
விழிகளிலும் கண்ணீர் வார
அண்டர்பிரா னேமுனிவர்க் கரசேஎம்
அல்லல்தவிர் இறையே என்னத்
தொண்டர்குழாத் தொடும்கூடித் துதிபாடிப்
பேரின்பம் எய்தி ஞரால். 89

அம்மையார் படுக்கையினில் இருந்தபடி
துடித்திட்டார்; அருளார் அண்ணல்!
செம்மையுறு நும்திருவி ழாக்காண
இயலாமல் உள்ள தீயேன்
இம்மகியில் உயிரோடும் ஏன் இருக்க
வேண்டுமென இதயம் நொந்தார்;
மம்மர்அறுத் தாளண்ணல் பல்லக்கல்
வீட்டின்முனர் வந்த தம்மா. 90

விழாவொலியைக் கேட்டஅம்மை யார்விரைவில்
எழுந்திருக்க மிகமு யன்றார்
தொழாமுன் அருள் புரிகருணைக் கடல்துலங்கு
நற்சிவிகை நின்ற தங்கண்
வழாமலிசை முழக்கிடுநா யனக்காரர்
இசைவிருந்து வழங்கி நின்றார்
எழாமல்துடித் திடும்அம்மை யார்இதயம்
அறிந்தண்ணல் அருள்பா லித்தார். 91

கண்மூடி யிருந்தஅம்மை யார்,கருணை
யண்ணல்வந்து தமது காலைக்
கண்மூடித் திறக்கும்நொடி யினில்தடவிக்
கொடுத்ததுபோல் காட்சி கண்டார்
கண்மூடித் திறந்துவிழித் தெழுந்திருக்க
முயன்றிடக்கால் நல்ல வாறே
கண்மூடித் திறக்குமுனர் குணமான
வாறுணர்ந்து களிப்பெய் திட்டார். 92

மிகவியந்து விரைந்தோடி அண்ணலருட்
சிவிகைமுனர் விழுந்தி றைஞ்சிப்
பகலவனைக் கண்டுவில கும்பனிபோல்
பாவமெலாம் பாற்றி யென்னைத்
தகவொடுகாத் தருள்புரிநும் தண்கருணைச்
சீர்எளியேன் சாற்றற் காமோ
சுகமருளி யடியவரைக் காத்தருளும்
தூமணியே எனப்போற் றிட்டார். 93

கண்ணிரண்டும் ஆனந்த அருவியினை
மிகப்பொழியக் கருத்தின் கண்ணே
எண்ணியதெல் லாமுரைக்க இயலாமல்
உரைகுழற இதயம் விம்மப்
புண்ணியத்தின் உருவான உடல்முழு
தும்புளகம் போர்ப்ப ஒப்பில்
திண்ணியபே ரன்புருவாய்த் திகழ்ந்தனர்அவ்
வம்மையார் செம்மல் முன்னே. 94

சற்றுணர்வு வருதலும் விழிப்புற்றுச்
சாமியமர் சிவிகை தன்னைச்
சுற்றிவந்து துதிபாடித் தோத்திரம்செய்
திருகரமும் குவித்தி றைஞ்சிப்
பற்றனைத்தும் அறவிடுத்தோர்க் கருள்புரியும்
பரம்பொருளே பாவி யென்றன்
குற்றமனைத் தும்பொறுத்தாள் குணக்குன்றே
யெனப்போற்றிக் கும்பிட் டாரால். 95

அண்ணலவர்க் கருள்ஞானம் பாலித்து
வாழ்கவென அருள்செய் திட்டார்
திண்ணியபே ரருள்நிட்டை பேணியம்மை
யாரினிது செம்மை பெற்றார்
உண்ணெகிழ்பே ரன்பொடுலா நடத்திட்டோர்
உரைப்பரும்பே ருவகை பூத்தார்
பண்ணவனார் சிவிகைபுறப் பட்டஇடத்
ததிகாலை சார்ந்த தம்மா. 96

தேவாதி தேவரெலாம் துதித்தேத்தும்
செம்மல்பதச் சேவை செய்தே
ஆவாவென் றடியரெலாம் பரவிநின்றார்
அருமுனிவோர் வாழ்த்தி சைத்தார்
மூவாநன் முதலான குருபரன்தாள்
முளரியினை நாமும் போற்றி
ஏவாநன் மக்களென இலங்கியருட்
பேறுபெற்றின் பெய்து வோமே. 97

**மேலிலந்தைக் குளம்.** *(உத்ஸவம்-2)*

மேலிலந்தைக் குளம்என்னும் வியனூரில்
அருட்சட்டம் மேற்கொண் டுள்ள
சீலமிகு நல்லடியார் பலர்வாழ்ந்தார்
அவர்கள்பலர் சேர்ந்து முன்னர்
ஞாலமிசை யண்ணலுக்கு நற்றிரு
வுலாநடத்திப் போற்றி செய்து
சாலமகிழ் வெய்தியதை முன்கண்டோம்
இனியொருலாத் தகவு காண்போம். 98

அத்திரு வுலா இனிது நடத்தியருட்
பேறுபெற்ற அடியார் தம்முள்
பத்திமிகு பெரியதிரு வடியென்னும்
பண்பாளர் ஒருவர் மேலாம்
சத்திமிகும் அண்ணலிடம் இவர்ஆழ்ந்த
அன்புகொண்ட தக்கோ ராவார்
சுத்திமிகும் இவர்குடும்பம் முழுதுமண்ணல்
நெறிபேணித் துலங்கிற் றம்மா. 99

இக்குடும்பத் தினர்சட்டம் ஏற்றவுட
னேஇவர்தம் மைந்த னுக்கு
மிக்கஉடல் நலக்குறைவுண் டாயிற்று;
வெப்புடன்நீர் கோர்த்துக் கொண்டே
ஒக்கஒரு மூன்றுதினங் களில்அதிக
மாகியதால் உடனே செய்யத்
தக்கதெது வெனத்தெரியா திருவேளை
தண்ணீரி லாட்டி னாரால். 100

திருநீறு பூசியருட் டிருநீறு
தீர்த்தம்அருந் தச்செய் தார்கள்
இருநேத்தி ரங்களையும் திறக்காமல்
இருந்திடல்கண் டச்சம் கொண்டார்
பெருஞாலத் திவ்வாறு செய்வாரோ
பித்துடையோர் செயலீ தன்றோ
பெருநாம மருத்துவர்பாற் கொண்டுசெல்வீர்
என்றுபலர் பேச லுற்றார். 101

பெரியவர்க ளானாலும் இருந்திடலாம்
சேயினையிவ் வாறு நீவிர்
உரியதொன்றும் புரியாமல் இருப்பதுநன்
றோஎன்ன உரைக்க லுற்றார்
பெரியதிரு வடியென்னும் பேருடைய
பிள்ளையுளம் ஒருசற் றேனும்
உரியநிலை யினில்நின்றும் தளராமல்
உறுதியுடன் ஒளிர்ந்த தாமால். 102

ஆண்டவரின் திருவருள்எப் படியும்மக
 வினைக்காக்கும் என்று நம்பி
ஆண்டவரை யேஅகத்துள் எண்ணியுரு
 கினர்:அண்ணல் இக்கு ழந்தை
ஆண்டவரே உம்குழந்தை யன்றோ?இக்
 குடும்பமெலாம் உமதே யன்றோ?
ஆண்டவரே உடல்பொருளா விகள்உமக்கர்ப்
 பணமன்றோ? எனப்போற் றிட்டார். 103

இனியெனக்கிங் கென்னஇருக் கின்றது?சோ
 தனைசெய்த தெல்லாம் போதும்
இனியெனைக்காத் தருள்புரிவீர்; குழந்தையினைப்
 பிணியினின்று மீட்ட ருள்வீர்
இனியெனக்கு வேறுதுணை யாருமிலை
 என்றேத்தி நிட்டை பேணி
இனிதமர்ந்தார் அப்பொழுதோர் அருட்காட்சி
 இன்னருளால் நடந்த தோர்ந்தார். 104

அருளண்ணல் திருநீற்றுக் கிண்ணத்தை
 அங்கரத்தில் ஏந்திக் கொண்டே
கருணையுடன் குழந்தையரு கினிற்போநது
 கரத்துள விபூதி கொண்டு
சிரமுதற்பா தம்வரையில் தீண்டித்தட
 விக்கொடுத்துச் செம்மை செய்த
பெருநிலையைக் கண்டதுமே பெரியதிரு
 வடிப்பிள்ளை உவந்தெ ழுந்தார். 105

விழித்தெழுந்த வுடன்வியந்து குழந்தையரு
 கேசென்று மெல்லத் தொட்டார்
செழித்திருந்த சுரம்தணிந்து குழந்தையிரு
 கண்விழித்துத் திகழ்தல் கண்டார்
விழித்தபிள்ளை தண்ணீர்கேட் டதுகண்டங்
 கிருந்தோர்கள் வியப்புற் றூர்கள்
செழிப்பொடந்தக் குழந்தைபிணி தீர்ந்துநல
 மிகவெய்தித் திகழ்ந்த தம்மா. 106

அன்றுமுதற் பெரியதிரு வடிப்பிள்ளை
யருட்சட்டத் தாழ்ந்த பற்றும்
நன்றருளண் ணலைப்போற்றும் பக்தியும்கொண்
டவராகி நனிதி கழ்ந்தார்
இன்றுபுவி யினில்உலவும் தெய்வமிவ
ரேயென்ன எண்ணி வாழ்ந்தார்
ஒன்றுமன்பொ டண்ணலுக் குலாஇனிது
நடத்திடுதற் குள்ளம் கொண்டார். 107

கண்ணிரண்டும் காணும்வணம் கலியுகத்தில்
வருகடவுள் இவரே யென்றும்
புண்ணியத்தின் பயனுகக் காட்சிநமக்
கருளஇவண் போந்தார் என்றும்
நண்ணியவர் திருவடிதீண் டப்பெற்ருல்
நம்பாவம் போகு மென்றும்
அண்ணல்நமூர்க் கெய்திடின் உலாநடத்தல்
வேண்டுமென்றும் அகத்துட் கொண்டார். 108

நம்முடலும் நம்பொருளும் நம்முயிரும்
அவருடைய தாத லாலே
நம்மிலத்திற் கவரைநனி வரவேற்று
நம்செலவில் அருளு லாவைச்
செம்மையுற நடத்திடற்குத் திருவருள்நற்
றுணையிருக்க வேண்டு மென்று
நன்முறையில் எண்ணியிருந் திடும்போதில்
ஞானகுரு அருள்சுரந்தார். 109

உறுத்துநினைத் திடும்அடியர் உளக்கமலத்
தெழுந்தருளும் உண்மை யாசான்
இறப்புபிறப் பினையகற்றி இன்னடியர்க்
கருள்புரிய எண்ணித் தூய
சிறப்புடைய மேலிலந்தைக் குளமென்னும்
திருப்பதிக்கண் இனிது போந்தார்
அறக்குரிசில் எழுந்தருளக் கண்டடியர்
அரஹரவென் றெதிர்கொண் டாரால் 110

அருளண்ணற் குலாநடத்த வேண்டுமென
அகத்தில்நினைத் திட்ட போதே
அருளண்ணல் அங்கணெழுந் தருளியதை
நினைந்தளவில் மகிழ்வெய் திட்ட
பெரியதிரு வடிப்பிள்ளை பேரன்பி
னோடுசென்று பெருமா னேயெற்(கு)
உரியபெருந் திருவேஎன் ஊழ்தவிர்க்கும்
பரனேஎன் றுருகித் தாழ்ந்தார். 111

முற்பிறவி களிற்புரிந்த தவப்பயனால்
மூதுலகிற் றோன்றிப் போந்த
சற்குருவே சாந்தியருள் தண்ணமுதே
யெனப்போற்றிப் பணிந்தன் போடும்
இற்கழைத்துக் கொண்டேகி இனிதிருக்கை
யினிலமர்த்திப் பூசை செய்து
நற்கமலக் கழல்பணிந்தார் ஞானகுரு
அருளாசி நல்கி னரால். 112

அடியவரும் அன்பர்களும் போந்துவலம்
புரிந்தேத்தி யருள்பெற் றுய்ந்தார்
படியின்மிசை பிறந்தபயன் பெற்றுய்வழி
பக்தரெலாம் கேட்கும் வண்ணம்
கொடியவினை தீர்த்தருள்செய் குரிசிலுப
தேசிப்பக் கூடிப் போற்றும்
அடியவரெல் லாம்உவந்தார் அருள்ஞான
அமுதருந்தி யின்புற் றாரால். 113

அனைவரும்தம் மிடம்சேர்ந்த பின்னர்திரு
வடிப்பிள்ளை யண்ண லின்பால்
இனிதுநடந் திட்டவெலாம் எடுத்துரைத்தார்
ஏதுமறி யாத வர்போல்
புனிதகுரு பரர்கேட்டுப் புன்னகைபூத்
தின்னருள்பா லித்தார்; ஞானக்
கனிதரும்அக் கருணாளர்க் குலாநடத்தக்
கருதியுள துரைத்தார் பிள்ளை. 114

அண்ணலொன்றும் உரையாமல் இருக்கஅனு
மதிகிடைத்த தென்று பிள்ளை
எண்ணியவா றேஇனி துலாநடத்தற்
கெல்லாம் ஆயத்தம் செய்தார்
எண்ணில்பொருள் அருள்நிறையுள் ளம்கொண்ட
இனியர்அவர் செயல்க ளெல்லாம்
எண்ணியவா றேவிரைவில் இயற்றினர்எல்
லாப்பொருளும் சேர்த்தார் நன்றே. 115

காலையிலும் மாலையிலும் அடியர்அரு
ளண்ணல்கழற் கமலம் போற்றிச்
சீலமிகப் பெற்றுயவும் தெவிட்டாத
அருளுரைகள் செவிம டுத்துச்
சாலவுணர் வெய்திடவும் விழைந்துதினந்
தோறும்அவண் சார்ந்திட் டார்கள்
ஞாலமுய்ய வந்தவர்விண் ணமுதனைய
அருளுரைகள் நவில்வா ரானார். 116

அண்ணல்உரை தொடங்கிவிட்டால் சிறுமகவும்
அசையாமல் இனிது கேட்கும்
பண்ணிசையொ டருட்பாடல் இடையிடையே
பாடியின்பம் ஊட்டு வாரால்
எண்ணில்அடி யார்க்கமுது படைக்கும்போ
தண்ணலவண் இனிது சேர்ந்தே
உண்ணிலவு பேரருளொ டுலவிடுவார்
உகந்தநல்ல உரைகள் சொல்வார். 117

இரவுபகல் எப்போதும் அவ்வீட்டார்
இறைபணியில் தோய்ந்தி ருப்பார்
அருளண்ணல் திருவடிகட் கபிடேகா
ராதனைகள் செய்வார் பின்னர்
அருளடியர்க் குணவிடுவார் அன்பொடுப
சாரங்கள் புரிவார் உள்ளப்
பெருமகிழ்வொ டேபொலிவார் அவர்முன்செய்
தவம்மிகவும் பெரிய தாமால். 118

உடற்சக்தியி னும்மேம்பட் டொளிர்வதுநல்
லான்மசக்தி யாத லாலே
உடல்சோர்ந்து விடினும்உயர் ஆன்மாசற்
றும்சோர்வே யுறுவ தில்லை
உடையவன்உள் ளிருந்தூக்கிச் செலுத்துமுறை
அனுபவித்தோர் உணர்வார்; பிள்ளை
உடையவன்தண் ணருளுக்க ஒப்பில்பணி
மிகப்புரிவார் உள்ளன் போடும். 119

தூயநல்வி ரோதிகிரு தெனும் ஆண்டில்
மிதுனமதி யிருபான் மூன்றில்
ஆயிரத்துத் தொள்ளாயி ரத்துப்பதி
ஞென்றேழாம் மதியேழ் தேதி
மேயவெள்ளிக் கிழமையன் றுலாநடத்த
வேண்டுமெனத் திட்ட மிட்டார்
ஏயவுலா முன்கண்டு களித்தவர்
அவாவொடெதிர் பார்த்திருந்தார். 120

உயர்தெய்வப் பயிர்தழைத்த நெல்வேலி
மாவட்டத் துள்ள மக்கள்
மயர்வறநன் மதிநலங்கள் அருள்குரு
விழாக்காண வந்து சேர்ந்தார்
அயர்வறுநற் றிருவடியாப் பிள்ளையுடன்
அடியரன்பர் செல்வர் எல்லாம்
செயல்பலவும் செயலானுர் வீடுமுழு
வதும்பல்மணம் செறிந்த தம்மா 121

அகிலொடுசந் தனக்கட்டை குங்குமக்கட்
டைஇவற்ருல் ஆன தூய
புகைமணம்மல் லிகைமுல்லை சண்பகம்தா
மரைமுதலாப் பொலியும் பூவின்
மிகுமணம்பால் தயிர்நெய்நல் விபூதிபன்னீர்
சந்தனத்தின் மணமும் மேவத்
தகுபணிகள் பலபுரிந்து சற்குருவின்
தண்ணருளைப் பெற்ருர் அன்பர். 122

நல்லபிடே கப்பொருள்கள் செப்பனிடும்
பணியும்நறு மலர்க ளாய்ந்து
சொல்லலர்தொ டுத்திடல்போல் நன்றுதொடுக்
கும்பணியும் தூய நிட்டை
வல்லவர்தம் நிகழ்ச்சிகளைப் பரிமாறிக்
கொளும்பணியும் மகிழ்வாய்ச் செய்யும்
நல்லடியர் குழுவினைக்கண் டவர்வினைகள்
நையுமெனில் ஐய முண்டோ? 123

மதம்இனம்பன் மொழியென்ற பாகுபா
டுகள்மறந்து தங்கள் தங்கள்
பதவிதொழில் பணிகுடும்பக் கவலையெலாம்
அறமறந்து பணிசெய் தார்கள்
முதல்வர்குரு நா தருக் குலாநடத்தும்
திருப்பணியில் மூழ்கி நின்றார்
இதயபரி பாகமிகும் அவர்நிலைமை
எடுத்துரைக்க எளியேற் காமோ? 124

காலையில் சுவாமிகளுக் கபிடேகா
ராதனைகள் கனிவாய்ச் செய்தார்
மாலைமிகு சிறப்போடு திருவுலா
நடத்திநிறை மகிழ்வு பெற்றார்
சீலமிகும் அடியவர்தம் பேருக்கம்
உடையவன்பால் திகழும் ஆர்வம்
ஏலஉணர்ந் தருளண்ணல் எல்லோர்க்கும்
அருட்கருணை பாலித் தாரால். 125

தெய்வபக்தி நல்லெண்ணம் அணுவளவும்
இல்லாமல் திரிந்திட் டோரும்
உய்வழியை உணர்ந்துவிடி யலில்எழுந்து
நீராடி உள்ளன் போடும்
தெய்வவழி பாடியற்றித் திருக்கோயில்
வலம்புரியத் தொடங்கி னார்கள்
தெய்வவுணர் வெவ்வுயிர்க்கும் ஊட்டவன்றோ
அண்ணலவ தாரம் செய்தார். 126

இத்திருவு லாமூலம் அந்நோக்கம்
நிறைவேறல் இனிது கண்டே
சித்தர்களின் தலைவரெனத் திகழண்ணல்
சித்தமிசை மகிழ்வு கொண்டார்
பத்தர்குழாம் நனிபரவப் பண்ணவர்
குழாம்வழுத்தப் பண்பார் தூய
முத்தர்குழாம் வாழ்த்தஇவ் வுலாச்செயல்கள்
நன்றினிது முடிந்த வம்மா. 127

## வேலூர் -2

தென்னகம்செய் சிறந்ததவப் பயனென்னத்
திகழ்ந்தஅருட் கருணை வள்ளல்
பன்னருஞ்சீர் அருட்சட்ட அடியவரைப்
பரிந்தூக்கும் பொருட்டுப் பார்மேல்
நன்னயத்தொ டடிக்கடிசென் றருள்புரிதல்
நல்வழக்க மாகக் கொண்டார்
உன்னரிய அவருள்ளக் கருணையிவண்
அடியேனால் உரைக்கற் பாற்றோ? 128

அண்ணலவ்வா றேகுமுனர் அடியவர்கட்
கருளால்அற் புதநி கழ்ச்சி
திண்ணமுற நடப்பதுண்டு; வேலூரிற்
சிறந்து திகழ் கமலப் பிள்ளை
புண்ணியராய் விளங்கினர்;நன் றவர்கனவிற்
புனிதவெள்ளை யாடை யோடு
நண்ணி.அருள் பழுத்ததிரு முகத்தோடும்
நனிகனிந்த பார்வை யோடும். 129

கையில்ஒளி வீசும்கவி னார்வெள்ளிப்
பாத்திரத்தில் திருநீ றேந்தி
மெய்யொளிகால் காட்சிதர மெய்விதிர்ப்பு
மிகக்கொண்ட கமலப் பிள்ளை
கையிரண்டும் சென்னிமிசை கூப்பிவணங்
கித்தொழுது காசி னிக்கண்
மெய்யெடுத்து வருமுன்புரி அருந்தவத்தின்
பெரும்பேறு மேவப் பெற்றார். 130

அவரையரு களைத்தண்ணல் அருள்திருநீ
றளித்தாசி யருளி னார்கள்
உவகைமிகுந் தெழுந்தபிள்ளை கனவுநிலை
கலந்தொப்பில் ஊக்கம் கொண்டார்
அவமறுத்தாள் அண்ணலரு ளியநிகழ்ச்சி
யினையில்லத் தரசி யோடும்
அவருரைத்தார் அண்ணலருட் கருணைநினைந்
திருவருமே அகம கிழ்ந்தார் 131

அடுத்தசில நாளிலண்ணல் வந்தருள்வார்
எனக்கருதி அருளால் தம்மைத்
தடுத்தாண்டு கருணைசெய் தயாபரன்றன்
தாண்மலரைப் போற்றி யெம்மைத்
தொடுத்தவினைச் சுமையகற்றித் தூயநெறி
வழங்கிப்பெருந் துணையாய் நும்சே
வடிக்கமலத் தினில்சேர்க்கப் பக்குவம்செய்
தருள்வீர்என் றிறைஞ்சி வந்தார். 132

அருட்டஞ்சை மாவட்டத் துளவேளூ
ரினிலிருக்கும் அடியார்க் கெல்லாம்
தரிசனம்தந் தருள்புரியத் திருவுளங்கொண்
டருளண்ணல் சார்ந்தார் அங்கண்
குருபரனார் வரவையெதிர் பார்த்திருந்த
அடியார்கள் கூடி யன்பால்
வருகஅருட் குருமணியே யெனப்போற்ற
வள்ளலன்பர் இல்லம் சேர்ந்தார். 133

பற்றனைத்தும் விடுத்துண்மைப் பக்தர்களைக்
காக்கவந்த பரம மூர்த்தி
சுற்றுமுற்றும் பார்த்தருளிப் பயிர்களெலாம்
வாடிச்சுருண் டிருத்தல் கண்டு
நற்றவச்சட் டம்பேணும் அடியரெலாம்
ஞாலமிசை நன்று வாழ
அற்றமில்நல் வயல்கள்தொறும் உளபயிரும்
வாழத்தம தகத்தில் உன்னி. 134

வாடியுள பயிர் தழைக்க வளமோங்க
மழைபொழியின் நலமாம் என்ன
ஈடில்பெருங் கருணையுடன் இனிதுரைக்க
எங்குளமே கமழ்ந்தி ரண்டு
கூடியண்ணல் அருள்மழைபோல் குவலயமெல்
லாம்மகிழப் பெய்த(து); அன்பர்
நாடியநன் மழைபோதும் என்றுரைத்தார்;
நிற்கவென்றார் ஞானச் செம்மல். 135

சீலமிகு குருபரனார் செப்பியதும்
மழைநின்ற(து) அடியார் அன்பர்
ஞாலமுய்யப் போந்தஅரு ளண்ணல்திறம்
உன்னிஅர ஹரவென் றார்த்தார்
ஆலம்அமு தாக்கவல்ல அருள்வள்ளல்
அடிமலர்த்தா மரையி றைஞ்சி
ஏலஎமை யாண்டருள் நும் பெருங்கருணை
இயம்பரிதென் றேத்தி நின்றார். 136

அன்புமிகும் அடியர்கம லப்பிள்ளை
அவ்வூருக் கண்ணல் வந்த
இன்பமிகு செய்தியைக்கேட் டினிதேகிக்
கண்டுவலம் கொண்டி றைஞ்சி
என்பவத்தைத் தீர்த்தருள வருமரசே
எழுந்தருள்கென் றழைத்துச் சென்று
மன்பதைகட் கருள்புரியும் மாமணியை
ஆசனத்தில் அமரச் செய்தார். 137

நறுநீரால் திருவடித்தா மரைக்கபிடே
கம்புரிந்து நல்ல தூய
நறுமலரால் பூசித்தவ் வருள்தீர்த்தம்
உட்கொண்டு ஞானப் பாடல்
நிறைமகிழ்வி னுடன்பாடித் தீபாரா
தனைபுரிந்தார்; நேயத் தோடும்
இறைவனருள் நீறணிந்தங் கிருமைநலன்
எய்திநின்றார் அடியா ரெல்லாம். 138

இமையவர்கள் வைகறையில் இவ்வுலகில்
உளதீர்த்தங் களிற்சார்ந் தன்பால்
அமைதியுடன்நீ ராடி யருள்பெறுவர்
எனப்பெரியோர் அருளி யுள்ளார்
இமையவர்நீ ராடுவதை நாமறியோம்
எழில்மிகுநல் வேலூ ரின்கண்
குமுதம்அர விந்தம்மலர் குளத்தடியர்
வைகறையில் மூழ்கு வாரால். 139

தேவர்கள்தாம் வந்துகுளிக் கின்றனரோ
என்றெவரும் செப்பு மாறே
யாவரும்வந் தினிதுமுழு கிடுவரண்ணல்
அவ்வூரில் இருந்தா ராயின்
மேவுவெளி யூரடியர் அன்பர்களும்
மிகக்குழுமி மூழ்கு வார்கள்
யாவரும்ரெட் டிப்பட்டிச் சாமிதுணை
யெனமுழங்கல் விசும்பும் கேட்கும். 140

அனைவரும்நீ ராடிமுடிந் ததும்அன்பால்
வலம்புரிந்து வணங்கிப் போற்ற
இனிதுதிரு வருள்புரியும் இபமுகனார்
திருக்கோயில் இருத்தல் வேண்டும்
எனநினைந்தார் அண்ணலிடம் பணிவோடும்
எடுத்துரைத்தார் அண்ண லாரும்
நனிமகிழ்வுற் றதன்சிறப்பை யுணர்ந்திசைவு
நல்கியரு ளாசி தந்தார். 141

முயற்சிசெயின் முடியாத தொன்றுளதோ
முன்னவனார் அருளைக் கொண்டே
அயர்ச்சியின்றி யவ்வூரார் கல்சுண்ணம்
பாதியகொண் டழகார் கோயில்
மயர்வறச்ச மைத்தனர்; விநாயகரை
மாண்பொடண்ணல் அமைத்தெல் லோர்க்கும்
உயர்வருளும் மூர்த்திசிறி தருட்கீர்த்தி
பெரிதென்ன உரைத்தார் அன்பால். 142

நன்னாளொன் றினிற்கும்ப வபிடேகம்
நன்றுமுறைப் படிந டத்தி
மன்னுதி மன்னர்முனி வரர்அமரர்
வழுத்துகணே சன்றன் சீரைப்
பொன்னான அருளுரையால் அண்ணல்புகன்
றனர்; புனித ரெல்லாம் கேட்டுப்
பன்னாளும் புரிதவத்தின் பயனடைந்தார்
அவர்திறம்யான் பகரற் பாற்றே. 143

அண்ணலருட் பெருமையினை அடியவரும்
அன்பர்களும் இனிது ரைத்தார்
எண்ணிலிசை வாணர்உயர் இசைபொழிந்தார்
புலவர்கவி இயற்றிப் பாடத்
திண்ணியநல் லானைமுகப் பெருமானும்
திருவருளை மிகச்சொ ரிந்தார்
புண்ணியர்ஒவ் வொருவரில்லத் திலும்அடியார்க்
கினிதமுது புகட்டி னால். 144

இவ்வாறவ் வேலூர்வாழ் மக்களும்சுற்
றுப்புறம்வாழ் இனியர் யாரும்
பவ்வம்நிகர் திருவருளுக் குரியவராய்ப்
பாங்குறநன் றிலங்கி னார்கள்
அவ்வாறு கருணையினாற் பலமாதம்
அருளண்ணல் அங்குத் தங்கி
செவ்வாய்மை சான்றதிரு வருளாட்சி
செய்தமர்ந்தார் தேவர் போற்ற. 145

அருகிலுள பலஊர்வாழ் அன்பருக்கும்
அருட்சட்ட நெறிவ ழங்கி
அருட்பாடல் பலபாடி யடியவர்கட்
கருள்விருந்தன் போட ளித்தார்
அருட்சட்ட அடியவரும் பாமாலை
சூட்டியண்ணல் பதம்ப ணிந்தார்
பொருட்பெறுபா மாலைநறும் பூமாலை
புனைந்துபதே சித்தார் அண்ணல். 146

அருள்நலங்கள் பலநிறைந்த அருளுரைகள்
பலஅண்ணல் அருளுங் காலை
மரணமடைந் திடுமுன்னர் சரணமடை
வீரெனமா ணருளாற் சொல்வார்
ஒருகறவைப் பசுகாணு மற்போக
அடியரைநிட் டையில் அமர்த்தித்
தெருளுறநன் றுணர்ந்திடச்செய் தப்பசுவை
மீட்டுவர அருள்செய் தாரால். 147

ஒருநாள் அராக்கடித்த ஒருவரை
அழைத்துவந்தார் அண்ண லின்பால்
பெருங்கூட்ட மாகமக்கள் கூடிவிட்டார்
பேரருள்த்யா னத்த மர்ந்தே
திருக்கரத்தால் அண்ணல்தட விக்கொடுத்தார்
அவரும்விடம் தீர்ந்தெ ழுந்தார்
அருட்சட்டம் ஏற்கஅண்ணல் பணித்திட்டார்
அவரேற்றின் னருள்பெற் றூரால். 148

இச்செயலைக் கண்ணுற்ற இருவரண்ணல்
இன்னருட்சீர் உணர்ந்தி டாராய்
நச்சியண்ண லினைச்சோதித் திடக்கருதி
வயிற்றுவலி நலிவால் வாடி
இச்சகத்தில் துடிப்பவர்போல் நடித்துவலி
பொறுக்கவில்லை யென்று சொன்னார்
அச்சமகற் றண்ணல்உடை யவன்பொறுப்பென்
றருள்முறுவல் பூத்த மர்ந்தார். 149

அடுத்தகணம் இருவரையும் பொறுக்கஇய
லாச்சூலை யடுத்த தன்னர்
துடித்தலறி வீழ்ந்தனர்; தாம் தூயஅண்ண
லிடம்புரிந்த பிழையு ணர்ந்தார்
அடுத்தவலி யண்ணலின்பால் வரின்குறையு
மேயன்றி யதிக மாமோ?
துடித்தவர்கள் அலறுவதேன்? என்றடியார்
சூழ்ந்துபல சொல்ல லுற்றார். 150

எப்படியண் ணலேவினவு வோம் என்ன
எண்ணிப்பலர் தயங்கி ஞர்கள்
இப்படியில் அனைவர் உளத் தினையும் உணர்
அண்ணலந்த இருவர் வாயால்
இப்படியண் ணலேச்சோதித் திடவிளையாட்
டாகவலி யென்று சொன்னோம்
தற்பொழுது வயிற்றுவலி யேவந்து
விட்டதெனச் சாற்றச் செய்தார். 151

மயல்மிகுந்து வயிற்றுவலி யென்றுரைத்தோம்
வலிபொறுத்தற் காற்ற கில்லேம்
தயைபுரிந்தெம் பிழைபொறுத்துத் தண்ணருள்செய்
வீர்அண்ணல் என்று சாற்றி
உயர்வருளும் குருநாதா! ஒருகணத்தில்
உயிர்பிரியும் உய்வ ளிப்பீர்
மயர்வறுத்தாள் மணியேஎன் றிறைஞ்சினர்அண்
ணலும்மன்னித் தருள்பு ரிந்தார். 152

கருணைவடி வாம்அண்ணல் இரக்கங்கொண்
டருகழைத்துக் கரத்தால் அந்த
இருவர்வயிற் றிலும் தடவிக் கொடுக்கவலி
யிருந்தஇடம் தெரியா தேக
திருவமுதுண் டவர்போல அவர்கள்மகிழ்ந்
தினிதண்ணல் திருவ டிக்கண்
மருவுமெட்டங் கமும்புவியிற் படியவணங்
கித்தொழுது சட்ட மேற்றார். 153

இன்றுமந்த வேலூரில் எம்பெருமான்
அருளாட்சி யினிது செய்யும்
பொன்றலில்சீர் அற்புதங்கள் புகலவரி
தாகுமந்தப் புனித ஊரில்
நன்றுறைவோர் பாதமலர் நாம்போற்றி
வணங்கிடுவோம் ஞால மீதில்
என்றும்அருட் குருநாமம் இனிதுன்னி
இன்பநலம் எய்து வோமே. 154

செட்டி நாடு, குற்றாலம், இரெட்டியப்பட்டி-3

செந்தமிழ்நற் றிருநாடு செய்தஅருந்
தவப்பயனாய் அவதரித்த
அந்தமில்சீர்க் குருபரனார் அருளுலா
செய்தவண்ணம் திகழ்ந்தார்; அன்பர்
புந்திமகிழ் அடியவர்கள் அண்ணலுடன்
சூழ்ந்தின்ப அமுதுண் டார்கள்
நந்தலில்பே ரருள்மழையைப் பொழிந்தண்ணல்
ஞானநெறி பரப்பி னரால். 155

பிறவிப்பெருங் கடலினின்றும் மக்களைமீட்
டொண்கரையில் பிறங்கச் செய்யும்
நெறியையினி தருளியரும் பெருந்துணையாய்
நிலவுபெருந் தகையார் ஞான
மறைமுடிவில் விளங்குபரம் பொருளுருவாய்
வையமிசை உலவி னார்அவ்
அறக்குரிசில் எங்ஙனம்செல் கின்றாரென்
றறிதல்மிக அரிதே யாகும். 156

அருளண்ணல் நம்மூர்க்கு வருவாரோ
நம்குறைகள் அகலு மோஎன்(று)
அருணோதயத்தையெதிர் பார்த்திருக்கும்
பங்கயம்போல் அன்பர் எல்லாம்
இருநிலத்தில் பலவூரில் பல்லாயி
ரக்கணக்கில் எதிர்பார்த் தன்பால்
கருநோயைத் தவிர்த்தருளும் கருணைக்கட
லைக்காண விழைந்திட் டார்கள். 157

நோய்பலகொண் டெவ்வாறும் தீராமல்
நொந்துமிக வருந்து வோரும்
பேய்தொடர்ந்து பெருந்துன்பம் அளிக்கமனம்
பேதுற்று வாடு வோரும்
சேயின்றி இரங்குநரும் செப்பரிய
பற்பல்குறை யுடையோர் யாரும்
தாய்வரவை யெதிர்நோக்கும் சேய்போன்று
தரணிமிசை காத்தி ருந்தார். 158

மருத்துவமே இல்லாமல் பொருட்செலவே
இல்லாமல் மாண்பு சான்ற
திருத்துளவம் திருநீறு சேர்ந்துளதீர்த்
தத்தாலும் திருநீற் ருலும்
வருத்துபல பிணிகளையும் வந்தவழி
தெரியாமற் போகச் செய்து
திருத்தியருள் செய்திவனத் தீபோல
நாடெங்கும் பரவிற் றம்மா. 159

தேவர்களும் முனிவரர்கள் யாவரும்வாழ்த்
திடஇந்தச் செழும்பு விக்கண்
மேவுதவம் பெருக்கஅவ தரித்ததயா
நிதியாக மிளிரும் அண்ணல்
ஓவில்புண்ணி யப்பயன்பெற் றுள்ளவர்கள்
அனைவருக்கும் உண்மை யன்பின்
தீவிரத்திற் கேற்றவண்ணம் திருவருள்செய்
தினிதெங்கும் சென்ருர் நன்றே. 160

அறம்பெருக்கும் வணிகப்பெரு மக்களுறை
செட்டிநா டடைந்தார் அண்ணல்
திறம்பழுத்துத் திருவருட்செல் வம்பெருக்கும்
அடியார்கள் திரண்டு வந்தே
பிறந்தபயன் பெறவருளும் பெருமானைக்
கனிந்துருகு பேரன் போடும்
நிறைந்தபெரு மகிழ்வோடும் வரவேற்று
நிலமிசைவீழ்ந் திறைஞ்சி ஞர்கள். 161

அங்கமெட்டும் புவிதோய அருளண்ண
லாரைநனி வணங்கிப் போற்றி
தங்களிருப் பிடத்திற்கினி தழைத்தேகித்
தக்கஉப சாரம் செய்தார்
துங்கமருள் குருபரஞர் அவரவர்க்குத்
தூயபல உபதே சங்கள்
அங்கமெலாம் புளகிப்ப அடியரின்ப
மெய்திடுமா றருளு வாரால். 162

நல்லடியார் பலர்வாழும் தூயசெட்டி
நாட்டிலண்ணல் சிலநாள் தங்கி
அல்லெனும்மா யையிலக்கி அருள்ஞான
அமுதருத்தி அல்லல் நல்கும்
எல்லையிலாப் பவப்பிணியை அறநீக்கிப்
பேரின்ப மெய்தச் செய்து
தொல்லுலகில் தவம்பெருக்கும் தூயகுற்று
லஞ்சேரற் குள்ளம் கொண்டார். 163

குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தனருள்
பரிந்தீர்க்கக் குரிசில் இங்கே
மற்றாரும் அறியாமல் மறைந்தார்கள்
மாநிலத்தோர் துயர்நீக் கற்கோ
சற்றேனும் மாறுமல் அருள்நெறியில்
உயிர்த்தொகைகள் சார்ந்துய் தற்கோ
குற்றாலக் குகையிலண்ணல் சார்ந்துநிறை
தவவடிவாய்க் குலவி னூரால். 164

ஒருசிலநாள் நிறைதவத்தின் உருவாகிக்
குற்றாலத் துறைந்த அண்ணல்
திருவருள்பெற் றிவ்வுலகோர் உய்யும்வணம்
செம்மலையின் றெடுத்த தூய
திருத்தலமாம் இருடியர்பட் டியையடையத்
திருவுள்ளம் கொண்டார்: பக்தி
மருவுமவ்வூர் சென்றன்பர் அடியார்கட்
கருட்காட்சி வழங்கி னூரே. 165

சித்திவிநா யகர்திருக்கோ யிலில்அமர்ந்து
சேருமன்பர் அடியார்க்கெல்லாம்
பத்தியுடன் அருள்ஞானம் பாலிப்பார்;
பாவவினைப் பற்ற றுப்பார்;
சத்திமிகத் தந்தருள்வார்; அவம்விலக்கித்
தவவிளைவு பெருக்கி யாள்வார்
முத்திநலம் எவ்வுயிர்க்கும் வழங்குதற்கும்
மூதுலகிற் போந்த மூர்த்தி. 166

**வாணியம்பாடி - 1**

சீரியவ டாற்காடு மாவட்டத்
    தினில்வணிகம் சிறப்புற் றோங்கத்
தூரியத்தின் னொலிமுழங்கத் துலங்கிடும்வா
    ணியம்பாடி யென்னு மூரில்
ஏருழவ ராதிபல இனத்தவரும்
    நன்றுகலந் தினிது வாழ்வார்;
பாரினில்வா ணிகம்புரியப் பலவூர்க்கும்
    அவ்வூர்வாழ் மக்கள் செல்வார். 167

முன்புரிநல் வினைப்பயனால் திண்டிவனம்
    சென்றமுனி யப்பப் பேர்கொள்
அன்பரங்கு வேர்க்கடலை வாணிபம்சி
    றப்போடும் ஆற்றி வந்த
பொன்புரைநல் வணிகர்களைச் சந்தித்தின்
    னுரையாடும் போதில் என்றும்
மன்பதைக்கு நலம்புரியும் சட்டநெறி
    மாண்பையவர் இயம்பக் கேட்டார். 168

சட்டநெறி யினில்மேம்பட் டறத்துறையில்
    சார்ந்துநல்வா ணிபம்ந டாத்தும்
சிட்டர்களாம் அவர்மூலம் தேசிகனார்
    சிறப்பினையும் சீரார் சட்டத்
திட்டமனைத் தும் கேட்டுத் தாமுமந்தச்
    சீரியசெந் நெறியை நன்றே
இட்டமுடன் போற்றியருட் பெருநலம்எய்
    திச்சிறக்க எண்ணம் கொண்டார். 169

வேறு

அன்றிரவு திண்டிவனத் தினிற்றங்கித்
    துயில் கொண்டார்
ஒன்றும்திசை தெரியாத வொருகாட்டில்
    அவர் தனியே
நின்றுதவிப் பதுபோலும் ஒருபெரியார்
    நேர் தோன்றி
நன்றழைத்துச் செலல்போலும் நற்கனவொன்
    றினைக் கண்டார். 170

வேறு

அக்கனவி னிற்காட்சி யளித்துநல்லா
    றுதல்கூறி யழைத்துச் சென்ற
தக்கபெரி யார்குருப ரோத்தமரே
    யென்றுணர்ந்தார்; தமது வாழ்க்கை
சிக்கிலின்றி யினிநன்று நடக்குமெனத்
    தெளிந்துவிடி யலில்நீ ராடி
நற்கருணை ளரைத்துதித்துத் திருநீற்றை
    யணிந்துசட்ட அடியா ரானர். 171

ஐங்கரனர் கோயில்வலம் வந்தேத்தி
    அருள்தீர்த்தம் பருகுங் காலே
அங்கவர்க்கு நெடுநாளாய் இருந்தபித்தப்
    பாண்டுபிணி யகன்ற தோர்ந்தார்
கங்குகரை காணுத களிப்புடைய
    ராயுள்ளம் கனிந்து நின்ருர்
துங்கமிகும் அவருள்ளம் அடைந்தநிலே
    யார்அறிந்து சொல்லற் பாலார்? 172

ஓங்கார்வத் தொடுவாணி யம்பாடி
    சேர்ந்துசட்ட ஒழுக்கம் பேணி
நீங்காத பேரன்ப ராய்த்திகழ
    நெறியிதனைப் பலர்கைக் கொண்டு
பாங்கார்நல் லருள்வாழ்வு நடத்தினர்; பண்
    புடையமுனி யப்பச் செம்மல்
தாங்காத பெருந்தாக முற்றனர்சற்
    குருபரரைக் காண வேண்டி. 173

முனியப்பச் செட்டியார் முதலான
    பலகனிந்த உள்ளத் தன்பர்
மனநிலையை உணர்ந்த வள்ளல் அவர்களுக்குக்
    காட்சிதர உளத்துட் கொண்டு
புனிதமிகும் காசிசென்று மீளுகையில்
    வாணியம்பா டிப்பதிக்கண்
இனிதடைந்தார் உடன்வந்த அடியவர்கட்
    கவ்வூரின் எழில்காண் பித்தார். 174

நீரின்வளம் குறைவாக இருந்தாலும்
தன்முயற்சி நிறைந்த மக்கள்
ஆர்வமுடன் மிகஉழைப்ப தால்தோட்டக்
கால்பயிர்கள் அவண்நன் றோங்கும்
சீர்வளர்நன் முயற்சிதிரு வினையாக்கும்
எனத்தேவர் செப்பு மாப்போல்
ஏர்வளர்தெங் கும்கமுகும் வாழையும்வெற்
றிலையும்மிடைந் தெழில்ப ரப்பும். 175

இயற்கையனை யின்கவினுர் ஆட்சியினை
இனிதுபுலப் படுத்து கின்ற
வியத்தகுநற் காட்சிகளை அடியவர்க்குக்
காட்டியண்ணல் விளக்கம் கூறி
முயற்சிமிகு நல்லன்பர் முனியப்பச்
செட்டியார் இல்லம் சேர்ந்தார்
அயர்ச்சிதவிர்த் தருள்அண்ணல் வரவுகண்டு
செட்டியார் அகம்ம கிழ்ந்தார். 176

கருமேவித் தோன்றுபயன் பெற்றவர்போல்
களிப்பொடெதிர் கொண்டு போற்றி
உருமேவு மயிர்ப்புளகம் உளவாகப்
பணிந்தெழுந்து தொழுது நின்ற
திருமேவு காட்சிகண்டின் னருள்செய்திரு
வாளரைநல் லெழிலார் கோலம்
மருவாச னத்தமர்த்தி மலரடியை
விளக்கிமல ராற்பூ சித்தார். 177

திருவார்தீர்த் தத்தைச்சிர மேற்றெளித்துச்
சேர்ந்தஅனை வருக்கும் தந்தார்
ஒருஞானத் தொண்டருடன் உருகிவலம்
வந்தடியார் உய்வு நாடிக்
கருநோயைத் தவிர்ப்பவரைக் கைதொழுது
பயன்பெற்றார் அயலூ ராரும்
அருளார்தே சிகர்தரிச னம்காணற்
கவ்வீட்டில் குழுமி னூரால். 178

கள்ளம்கப டற்றஉளம் கொண்டபல
ஊர்மக்கள் கனியும் அன்பால்
வள்ளலை வணங்கிவழி பட்டனர்நன்
மாண்புமிகு செட்டி யாரும்
எள்ளலில்தம் அன்பினுக்கேற் பக்குரிசிற்
கினியஉப சாரம் செய்தார்
உள்ளமுவந் தடியவர்க்கும் அவரவர்கட்
கேற்றபடி உபச ரித்தார். 179

அண்ணல்அரு ளுபதேசத் தால்வாணி
யம்பாடி வாழ்அ நேகர்
திண்ணமுற அருட்சட்டம் ஏற்றார்கள்
குறிப்பிட்டுச் செப்பத் தக்கோர்
புண்ணியமி கும்தனபால் நாராய
ணஞ்செட்டி புனித ராஜு
அண்ணுசா மியிராம சாமியல
சந்தபுரம் கந்த சாமி 180

சாமிநா தம்பிள்ளை முதலான
மற்றும்பலர் சட்ட மேற்று
நேமமொடு பேணியிம்மை மறுமைநலம்
எல்லாமும் நிதமும் பெற்றார்
மாமகிழ்வெவ் வுயிர்களுக்கும் வழங்கியருள்
அண்ணல்பல ஊரும் சென்று
தூமறையின் சாரமெனும் சட்டநெறி
யருளிநன்று தூய்மை செய்தார். 181

ஒருமுறைவா ணியம்பாடிக் கண்ணலினி
தெழுந்தருளி யிருந்தகாலை
திருவுடைநன் முனியப்பச் செட்டியார்க்(கு)
உறவினரெல் லோரும் சேர்ந்து
மருவுமிளங் குழந்தைகட்கு முடியெடுத்துக்
காதணி விழாந டத்த
கருதுகுல தேவதைக்குக் கோழி*யசம்
பன்றிபலி யிடக்கு றித்தார். 182

*அசம்-ஆடு

பச்சிலையும் விணுகப் பறித்தல்சகி
யாதஅருட் பண்பார் அண்ணல்
நற்செவிக்கண் இச்செய்தி எட்டியதும்
உயிர்த்தொகையை நன்று பேணும்
இச்சைமிகும் குருபரனர் அந்தவிழா
நடத்துநரை இனித மைத்தார்
அச்சமகற் றண்ணலென்ன அருளுவரோ
என்றன்பர் அவாவி நின்றார். 183

அகிலஉல கிலும்உறையும் அனைத்துயிரின்
அல்லற்பவம் அகல நீக்கித்
தகவருளும் தவமுதல்வ ரானஅண்ணல்
தமக்குரித்தா யுள்ள தான
மிகஉயர்ந்த நனிதெளிந்த தேன்தமிழின்
மொழிகளினல் ஆங்க வர்தம்
அகமுருகு மாறருளொ டினிதுரைத்தார்
அவர்கருணைக் களவொன் றுண்டோ? 184

அண்டம்அனைத் தின்தலைவ னும்இறைவன்
உயிர்த்தொகையின் அல்லல் நீக்கி
உண்டிமுத லாம்போகம் வழங்கிநனி
பேணுவதல் லாமல் ஒன்றும்
எண்டருகா ரணமின்றிக் கொலைபுரிய
எண்ணுவனே? இறைவன் திட்டம்
அண்டரும்நன் றறிதல்அரி தெனின்யார்தான்
அவன்திட்டம் அறிய வல்லார்? 185

அவனருளால் படைக்கப்பட் டவனருளாட்
சிக்குட்பட் டமைந்து நன்றே
இவணுறையும் உயிர்களெலாம் அவன்அருளார்
குழந்தைகளென் றெண்ணல் வேண்டும்;
இவனெருயி ரைப்படைத்தற் கியலாதே;
அவன்படைத்த உயிர்கள் தம்மை
இவண்அழித்தற் கதிகாரம் நமக்குண்டோ?
நாம்நினைத்தால் எதுவும் ஆமோ? 186

அவன்ஆட்டு விக்கும்வணம் எல்லோரும்
ஆடுகின்றோம்;அனைத்து யிர்க்கும்
அவன்தந்தை ஆதலினால் தன்குழந்தை
களைத்தான்கொன் றிடுதற் கொவ்வான்
புவிமீதில் அசம்கோழி முதலெதுவும்
எவ்விடரும் புரிவ தில்லை;
இவனோடு தழைமேய்ந்து தன்பாலைப்
பொழிந்துநமக் கீதல் கண்டோம்; 187

நவதானி யம்தின்று ஞாலமிசை
நன்றுபிழைக் கிறது கோழி;
புவிமீதி லுறும்அழுக்கைத் தான்தின்று
தூய்மைபுரிந் திடுமாம் பன்றி
இவைகளெந்தத் தீமையுமே இயற்றாமல்
இருக்கையிலிவ் வுயிர்கள் தம்மைக்
கவலலின்றிப் பலியிடுதல் கருணையிலாச்
செயலென்ன உணர்தல் வேண்டும் 188

ஒன்றும்அறி யாவுயிர்க ளைப்பலிபோ
டுவதால்இங் குடனே பாவம்
நன்றுநமைச் சூழும்;அதை நாம்விலக்கிக்
கொளல்அரிது; நாமே பின்னர்
துன்றுமப்பா வப்பயனைத் துய்த்திடநே
ரும்ஜீவ காருண் யத்தால்
என்றும்பிற உயிர்களைத்தன் னுயிர்போலக்
காக்கும்நெறி இனிய தாகும் 189

என்றுபல வாறாக அண்ணல்இனி
தேஅவர்கட் கெடுத்துச் சொன்னார்
ஒன்றுமவர்க் கேறவில்லை செவிடன்செவி
யினில்சங்கூ தியதே யாக,
நன்றுபல நாளாக நாம்செய்குடும்
பப்பூசை யிதுவாம்; நாமே
இன்றுநம் குடும்பவழக் கத்தினைக்கை
விடலாகா தென்று சொன்னார். 190

பலியிடலை நிறுத்திவிடின் தெய்வம்சினம்
கொள்ளும்என இயம்பி னார்கள்;
சிலர்பயனை அனுபவித்தா லன்றியொர்சிற்
றணுவளவும் திருந்தார்; அங்கண்
பலர்பலசொற் றாலுமண்ணல் திருவாக்கை
மீறிற்பயன் ஏதா மோஎன்(று)
இலகுபலி கொடுப்பதனை நிறுத்தினர்; நல்
லடியரெலாம் இனி(து) உவந்தார். 191

உடனேயக் குடும்பத்தில் செட்டியார்
தமக்கைக்குக் காலரா வாம்
கொடியபிணி தோன்றிடவும் உறவினர்கள்
எல்லோரும் குதித்துக் கூவிப்
படியிற்பலி நிறுத்தியதால் வந்தபய
னேயென்னப் பயங்காட் டிட்டார்
அடியவரைப் புரக்குமண்ணல் இருக்கசெட்டி
யார்அச்சம் அகன்றி ருந்தார். 192

கலக்கமுற்ற அடியவரைக் காத்தருள
அவதரித்த கருணை மூர்த்தி
நலக்கமுற்ற அம்மையினை நீராடச்
செய்துநன்னீ றணிவித் திட்டார்
துலக்கமுற்ற பேரருளின் துணைகொண்டவ்
வம்மைதெளி வுற்றார்; நோயும்
விலக்கமுற்ற(து); உணர்ந்தஅனை வரும்வியந்தார்;
விமலகுரு பதம்போற் றிட்டார். 193

**ஆம்பூர், வேலூர், சென்னை,**
**மேலிலந்தைக்குளம்** *(உத்ஸவம்-3)*

திருநிறைவா ணியம்பாடி யினில்அற்பு
தம்புரிந்த சீரார் அண்ணல்
இருநிலத்தின் மிசைதோய்ந்த எழுதரிய
திருவடியை எய்தி உய்ய
அரியதவம் உடையஉயிர் களையாள
வாணியம்பா டியைய டுத்த
பெரியநல்லூர் ஆம்பூரின் வழியாகச்
சென்றனர்பல் பெரியோர் போற்ற. 194

சீர்திகழ்வ டாற்காடு மாவட்டத்
தலைநகராய்த் திகழ்வே லூரில்
*நார்திகழ்பல் அன்பருக்கு ஞானவுணர்
வூட்டியருள் செய்த பின்னர்
ஏர்திகழும் தமிழகத்தின் தலைநகராய்
இலங்குசென்னை நகரில் மேவிக்
கார்திகழ்நீர் நேர்கருணை விழைபவர்கட்
கருள்புரியக் கடிது சென்றார். 195

ஆங்குபக்கு வம்சான்ற அடியவர்கட்
கருட்சட்ட நெறிவ ழங்கி
ஓங்கினிய மதுரவொலி வெள்ளம்நிறைந்
தெவர்க்கும்மகிழ் வூட்ட ஞானப்
பாங்குநிறை யருட்பாடல் தேனெனத்தெள்
ளமுதென்னப் பாடிப் பாடி
யாங்கணுமின் பம்பெருக்கி மேலிலந்தைக்
குளமினிது சேர்ந்தார் அண்ணல். 196

முன்புசில முறைவந்திவ் வூர்மக்க
ளைத்திருத்தி முத்தி நாட்டம்
அன்பறிவு பண்பொழுக்கம் பக்திமுத
லாம்குணங்கள் பெருகச் செய்த
பொன்புரையும் புனிதரைநாம் போற்றிடுவோம்
என்றுபுது மலர்கள் தூவி
இன்பம்அருள் எம்மிறையை இனிதுவர
வேற்றனபூம் பொழில்க ளெல்லாம். 197

செல்லும்வழி யினிற்சட்டத் திருநெறியைச்
செவ்விதின்எங் கணும்ப ரப்பி
அல்லலறுத் தனைத்துயிர்க்கும் ஆனந்தத்
திருவமுதை யருத்திப் பேணி
எல்லையில்பே ரன்புருவாய் அருளுருவாய்
எய்துகரு ணாளர் தம்மை
ஒல்லையில்கண் டவ்வூர்வாழ் பழவடியார்
உயரன்பொ டெதிர்கொண் டார்கள். 198

*நார்—அன்பு

வேறு

புத்தியைத் திருத்தி யன்பர் புனிதம்மிக் கெய்தச் செய்து
சித்திபற் பலபு ரிந்து செழுந்தவ விளைவு நல்கி
சத்திநன் றாட்டி யாள்வோர் பலமுறை சார்ந்தா ரென்றால்
அத்திரு நகரம் செய்த அருந்தவம் அளத்தற் காமோ? 199

அன்பெனும் பிடியி னுள்ளே அகப்படும் குன்றாய் அன்பர்க்(கு)
இன்பமாம் அமுத மீயும் இன்னருட் கடலாய் உள்ளோர்
மன்பெருங் கொடிகள் நீடு மாடமார் மறுக ணைந்தே
என்பும்நெக் குருகப் போற்றும் அன்பர்வாழ் இல்லம்
சேர்ந்தார். 200

நெடும்பவக் கடல்க டத்தும் நிமலரைக் கண்ட போதே
ஒடுங்கிய மனத்த ராகி உச்சிமேற் கரங்கள் கூப்பி
உடம்பினைக் கோயி லாக்கி உள்ளமர்ந் தாட்சி செய்து
மடம்தவிர் பரனே என்று மலர்ப்பதம் பணிந்தார்
அன்பர். 201

யானென தென்ப வெல்லாம் எவ்வுயிர் களையும் பேணும்
ஞானசற் குருவின் பாத மலர்களில் நனிக ரைத்தே
ஊனமில் வாழ்விங் காற்றும் அடியரை உய்யச் செய்வோர்
தேனெனும் மொழியால் அன்பர் செவிக்கமு தினிது
வார்த்தார் 202

பெய்யும்நன் மழைநீர் பள்ளம் நோக்கியே பெருகல் போல
ஐயர்தண் ணருளால் அன்பர்க் கருளிய உரையின்சாரம்
உய்யவே விழைநல் லோர்தம் உள்ளத்தில் தேங்கி யுள்ள
ஐயமெல் லாமும் நீக்கி அருட்பயிர் வளர்த்த தாமால். 203

ஆண்டசீர் அண்ண லார்க்கங் கத்திருப் பதியின் கண்ணே
மீண்டும்நல் விழாந டத்த விழைந்தனர் அடியர் அன்பால்
ஆண்டுமுன் நடந்தபோதில் காணும்பே றடையா மக்கள்
ஆண்டவர் விழாவைக் காணற் கவாமிகக் கொண்டி
ருந்தார். 204

நற்பரி தாபி யாண்டு சித்திரை யிருபா னெட்டில்
பொற்புறு சுக்ர வாரம் புண்ணியர் குழுவைச்சேர்க்கும்
சிற்பர னூர்க்குத் தூய திருவுலாச் செயக்கு றித்தார்
அற்புத விழாவைக் காணற் கமரரும் விழைந்திட்
டாரால். 205

பற்றறுத் தாளண் ணற்குப் பரிவொடாற் றிடும்வி ழாக்காண்
நற்றவ முடையோ ரெல்லாம் நண்ணியவ் வூருட் சார்ந்தார்
உற்றவொண் கடல்போல் அந்த வூர்நிரம் பியது கூட்டம்
மற்றவ்வூர் வான நாடு போலவே வயங்கிற் றம்மா. 206

அன்பர்கள் குழுவைக் கண்ட அருளண்ணல் அவர்க ளுய்யப்
பொன்புரை உபதே சங்கள் புகன்றனர்; புவியி லெய்தும்
துன்பமெல் லாமும் தெய்வத் துணைகொண்டு நீக்கற் காகும்
இன்பம்நல் கிறையை நம்பின் எதுவும்எய் திடலாம்
என்றார். 207

எதற்கும்அவ் விறைவ னேநற் றுணையென என்றும் நின்றால்
பதைப்புற வருந்துன் பங்கள் பறப்பமாய்ப் பறந்து போகும்
விதிர்த்திடச் செயும்பல் நோயும் வினைகளும் விலகி யேகும்
மதித்திடேல் வைத்யம் ஜோஸ்யம் மாந்த்ரீகம் இவற்றை
யென்றார். 208

சர்க்கரை யினிற்பல் பண்டம் தனித்தனி யாகச் செய்து
தக்கபல் பெயரிட் டாலும் சர்க்கரை யொன்றே யாகும்
மிக்கபல் மதங்கள் பேர்கள் வேறுகொண் டமைந்திட் டாலும்
சிக்கல்தீர் தெய்வம்ஒன்றே எனத்தெளி வுறுவீர் என்பார். 209

இதைத்தெளிந் துணர்ந்தி டாமல்
இருத்தல்பே தமையே யாகும்
மதக்கட வுளரைப் பற்றி
வாதிடல் விடுத்துச் சிந்தை
இதம்பெற நிறுத்தி யுள்ளே
இறைவனைக் காண்பீர் என்பார்
பதியுணர் வுதித்தால் வாதம்
பயனிலா தொழியும் என்பார். 210

மதம்அனைத் தினுக்கும் மேலாம் பரம்பொருள் ஒன்றே யாகும்
இதயம்பக் குவமெய் தற்கே எம்மதங் களும்போ திக்கும்
நிதமவன் துணையை நம்பி நிட்டைசெய் துய்வீர் என்பார்
பதமலர் சேர்ந்தின் பெய்தப் பாரில்நல் வழியீ
தென்பார். 211

இனிதுநாம் வாழும் நாள்எவ்
வளவிற்றென் றறிய கில்லோம்
மனிதநற் பிறவி யுள்ள
போதேநம் மனத்தில் மேவும்
தனிப்பரம் பொருளைக் கண்டு
தண்ணருள் பெறவேண் டாமோ?
இனியும்வீண் காலம் போக்கி
யிருப்பது *மோகம் என்பார். 212

மாடுபல் மக்கள் சுற்றம் மனையிவை நிலையாய் நில்லா
வீடருள் பரமனேவித் தகத்துணை யென்று போற்றி
ஈடிணை யிலதாம் இன்ப வீட்டினை யெய்தல் வேண்டும்
நாடிநித் தியகன் மங்கள் நனிசெயின் தெளிவுண் டாகும். 213

சினமின்றி உயிர்கள் தம்மை நேசிக்கப் பழகல் வேண்டும்
தினம்கணக் கில்லா நூல்கள் சேர்த் துக்கற் பதினும் மேலாம்
மனம்தெளிந் துறுதி யாக ஒருவழி நடப்ப தென்பார்
புனிதநல் விழாவைக் காணப் போந்தவர் கேட்டின் புற்றார்.
214

திருவிழாக் காண வந்து திரண்டநன் மக்கள் அண்ணல்
அருளமு தத்தேன் நன்றே யருந்தியா னந்தம் உற்று
மருள்தவிர்த் தாள வந்த மறையவர் இவரே என்றும்
குருமணி இவரே யென்றும் குதுகலித் தேத்தி னரால். 215

குருநாதர் துதி

கருணைமிகு திருமுகப் பொலிவுடைய வள்ளலே
கசிவுறு மனத்தன் பர்தம்
இருள்நலி வனைத்தும் தவிர்த்துமெய்ஞ் ஞானவாழ்
வீந்தொளி விளக்கு கதிரே

---

*மோகம்—மதியீனம்

அருள்நலம் வழங்கியோம் பன்னையே தந்தையே
அருளாட்சி புரியும் அரசே
தெருள்நயந் திடுமின்ப ஜோதியே கரணங்கள்
தித்திக்க வந்த குருவே 216

பரவுமெய் யடியவர்க் கன்புபா லிக்கின்ற
பட்சமிக வுள்ள குருவே
கரவுடைய நெஞ்சினையும் நனிதிருத் திடவல்ல
காருண்ய மிக்க குருவே
விரவுமெய்ஞ் ஞானமாம் திருவிளக் கேற்றியே
வீட்டின்பம் நல்கு குருவே
இரவுபக லறியாது பொதிகையினில் நோற்றெமக்
கிகபரம் வழங்கு குருவே. 217

அரியதினும் அரியதாம் திருவருட் சட்டத்தை
அன்புடன் அளித்த குருவே
தெரியவொண் ணுதபல ரகசியமும் உள்ளே
தெரிந்திட விளக்கு குருவே
பெரியபொரு ளாம்கடவு ளோடொன்று தூயநெறி
பிரியமொடு நல்கு குருவே
எரியிலுறு தூசெனக் கர்மவினை தூள்செய
எழுந்தருளும் ஞான குருவே 218

மயர்வற மெய்ஞ்ஞானமொழி மழைபொழியு மேகமே
வளமெலாம் நிறைஞா லமே
அயர்வற உயிர்த்தொகையை அருள்நெறிக் கூக்குமோ
ரற்புதச் சிற்காந் தமே
உயர்வற உயர்ந்தநல மெல்லாம் வழங்கியருள்
ஒப்பற்ற மெய்த்துணை வரே
துயரற நலம்சிறக் கச்சரண பங்கயம்
தொழுதுய்ய வைத்த குருவே. 219

கற்றவரும் அறியாத ஞானமாம் கல்வியைக்
கற்பிக்க வல்ல குருவே
பெற்றவரும் ஆசானும் ஆகியெமை யன்போடு
பேணித் திருத்து குருவே

குற்றமெத் தனைகோடி யெனினும் பொறுத்தருள்செய்
கோதற்ற ஞான குருவே
உற்றநல மெல்லாம் வழங்கிப் புரந்தருளும்
ஒப்பற்ற மோன குருவே. 220

---

வேறு

எனப்பல வாறாய் துதிபுரிந் தேத்தி
எரியின்முன் இழுதினைப் போல
நனிமன முருகி நாதமா முடிமேல்
நடமிடும் திருவடி மலரைக்
கனிவொடு சென்னி மீதினிற் சூடிக்
கருணையின் சிறப்பினை யுன்னிப்
புனிதநன் மலராற் பூசனை புரிந்து
பொருவிலாப் பெருமகிழ் வடைந்தார். 221

வேறு

திருவடிப் பிள்ளை மூன்றாம் திருவிழா நடத்து தற்குத்
துரிதமாய்ச் செயல்கள் எல்லாம் புரிந்தனர் தோர ணங்கள்
விரிகுடை யால வட்டம் சுருட்டிவெண் சாம ரங்கள்
கரிபரி யாதி சூழக் கவின்விழா நடத்த லானார். 222

தூரியம் முழங்கத் தீர்த்தம்
தூய்மையாய்க் கொணர்ந்தார் அன்பால்
சீரிய முறையி னோடும்
மஞ்சனம் சிறப்பாய்ச் செய்தார்
நேரிய பற்ப லாரா
தனைகளும் நிகழ்த்தி நல்லூண்
ஆரியர்க் கடியார்க் கன்பால்
அருத்தினார் திருப்தி எய்த. 223

அடியவர்க் கன்பர்க் கண்ணல் அருளமு தளித்தார்; மாலை
குடிலையின் உருவி னார்க்குக் குலவுநல் வழிபா டாற்றிக்
கடிமலர்ச் சிவிகை நாப்பண் கவினுற அமர்த்திப் பூவால்
முடிபுனை வித்து மேனி முழுதலங் கரித்தார் அன்பர். 224

இயம்பல முன்னே எய்த இனிதருட் பாடல் அன்பால்
நயம்பெறப் பாடிப் பின்னே நல்லடி யவர்கள் சூழ
வயங்கொளி மணித்தீப ங்கள் தாங்கிப்பன் மகளிர் செல்ல
சயங்கிளர் விழாச் சிறப்பாய் நடந்தது தரணி போற்ற. 225

ஆயிரக் கணக்காய் மக்கள் அருள்விழாக் கண்(டு) உவந்தார்
மேயநன் மாடம் நீடு வீதிவாழ் மக்கள் எல்லாம்
ஏயதம் தகுதிக் கேற்ப இனியநற் பொருள்கள் கொண்டே
தூயநன் முறையில் ஆரா தனைபுரிந் துவந்தார் உள்ளம். 226

கடிமலர் மாலை சூட்டிக் களித்துப்பன் னீர்தெளித்தார்
அடியவர்க் கன்பர்க் கெல்லாம் நல்விநி யோகம் செய்தார்
மடிமிடி நீக்கும் அண்ணல் மலர்ப்பதம் பணிந்து நின்றூர்
அடியவர்த் திரளைச் சேர்க்கும் அண்ணல்வாழ் கெளநன்
றூர்த்தார். 227

அசைவொரு சிறிது மின்றி அழகொளிப் படம்போ லண்ணல்
திசைதொறும் போற்ற நன்று திகழ்ந்தனர்; விடியற்காலை
கசிவுறும் உளத்தர் வாழ்த்தக் கடிமனை சிவிகை சேர
பசிபிணி நீக்கி யாளும் பார்த்திபர் உள்ளே புக்கார். 228

**அவனுப்பேரி-2** *(உத்ஸவம்-1)*

பூமிமுன் செய்த தூய புண்ணியப் பயனுப் போந்த
சாமிக்கு மேலி லந்தைக் குளத்தினில் தகவாற் செய்த
நேமமல் குலாவைக் காணும் நிகரிலாப் பேறு பெற்றோர்
ஏமமார் அடியார் அன்பர் எண்ணிலார் ஆவர்
அம்மா. 229

கரும்பும்செந் நெல்லும் எங்கும் கவினுறத் தோற்றம் நல்கும்
சுரும்புறழ் கமலம் பூத்துத் துலங்கும்நற் சூழல் எங்கும்
விரும்பிடும் அனைத்தும் எய்தி விளங்கும்வே ளாள ராதி
அருங்குண மக்கள் எங்கும் நல்லவ னுப்பே ரிக்கண். 230

நெல்லைமா வட்டத் தின்கண்
நிலவுமவ் வூர்வாழ் அன்பர்
சொல்லொடும் உள்ளம் செய்கை
தூய்மையாய் அமையப் பெற்றோர்

நல்லவே ளாளர் தங்கள்
மரபினில் உதித்த நல்லோர்
அல்லல்தீர் குருவின் சீரார்
அருள்விழை யொருவர் வாழ்ந்தார். 231

வேறு

காந்திமதி நாதபிள்ளை குருபரனின்
கருணைமிகு தோற்றத் தாலும்
சாந்தியருள் திருநோக்கி னாலும்மிகு
தனிப்பரமா னந்த மெய்தி
ஏந்தலைத்தம் மூர்க்கழைத்துக் கொண்டேகி
இனியவிழா நடத்தி யின்பம்
ஆர்ந்திடற்கு விழைந்தனர்அண் ணலைப்பணிந்து
விண்ணப்பித் தாசி பெற்றார் 232

வேறு

எண்ணிய எண்ணி யாங்கே
எய்துப எண்ணி னோர்கள்
திண்ணிய ராயின் என்னும்
செழுந்தமிழ் மறைக்கேற் றற்போல்
அண்ணலுக் குலாந டத்தி
அகமகிழ் வெய்தற் குற்ற
புண்ணியப் பேறு பெற்றோர்
புனிதமார் தம்மூர் சேர்ந்தார். 233

திருவிழா நடத்தற் குள்ள செய்தியைத் தம்மூர் மக்கட்(கு)
உருகுமுள் ளத்தி னோடும் உரைத்தனர் உள்ளே பொங்கிப்
பெருகுமெய்க் காத லாற்பெம் மான்கழல் பேணிச் சீரார்
திருமலி வீதி யெங்கும் சிறப்புற அலங்க ரித்தார். 234

மகரதோ ரணங்க ளெங்கும் வனப்புற அமைக்கச் செய்தார்
திகழ்பசுங் கதலி பூகம் தெங்கின்நற் பாளை யாதி
மிகமிக எழிலாய்த் தூக்கி விதவிதக் கொடிகள் கட்டித்
தகவுசால் பூர்ண கும்பம் தழையொளித் தீபம்
வைத்தார். 235

வேறு

அமிழ்தனைய தமிழ்மறைகள் ஆர்ப்பொலியும் இயம்பலவும்
இமிர்ஒலியும் நறுந்துகளும் இனமலரும் தூவொலியும்
அமைகரங்கள் சிரமிசைகொண் டரஹரவென் றிடுமொலியும்
இமிழ்திரையின் ஒலிநிகர்ப்ப அண்ணலைநன்
றெதிர்கொண்டார். 236

கண்களிக்க மனம்களிக்கக் காதல்பொங்கி மீதூரத்
தொண்டர்களும் அன்பர்களும் சூழ்ந்துதுதித் திடுமோதை
அண்டருல கினைச்சார அமரர்மலர் கனைத்தூவ
எண்டிசையும் தொழுதேத்த ஏந்தலின்சே வடிதொழுதார். 237

பண்ணிறைந்த பலபாடல் பாடியடி யார்சூழத்
தண்ணறும்பூ பலதூவிச் சார்ந்தன்பர் போற்றிவர
எண்ணில்பல வாத்தியங்கள் இனிதொலித்து முன்னேகப்
புண்ணியத்தின் உருவானோர் புனிதரில்லத் தினிற்
சேர்ந்தார். 238

பூரணகும் பம்காட்டிப் பொன்னொளித்தீ பம்காட்டி
ஆரணங்கள் தொழுதேத்தும் அண்ணலைஆ சனத்தமர்த்தி
சீரணங்கு போந்தினிது திருக்குடநீ ரினைப்பெய்யக்
காருணிய மூர்த்தியருட் கழல்விளக்கி னார்அன்பர். 239

திருவடியிற் றோய்ந்தநன்னீர் சிரம்தெளித்துப் பூரித்தார்
மருவுமண மலர்கள்பத மலரிலிட்டுப் போற்றிட்டார்
இருவினையும் மலமூன்றும் எரித்தருள்வீர் எனத்தொழுதார்
குருமணியும் அவர்கள்உளம் குலவுபக்திக் கருள்
சுரந்தார் 240

காந்திமதி நாதபிள்ளை கருணைமிகு குருமணிக்கும்
சாந்திவிழை யடியவர்க்கும் தக்கபடி உபசரித்தார்;
மாந்தரென மருவுபல திருவினொடு மண்ணுலகிற்
போந்தபயன் பெற்றினிது புந்திமகிழ்ந் துய்ந்தனரால். 241

வேறு

மணம்மிகுந்த பிச்சிமுல்லை மல்லிகையா
தியமலர்கள் மலர்ந்து மேலாம்
மணம்பரப்பும் பூங்காவும் வாழைபலா
அன்னுசி மாபோல் தூய

குணம்நிறைந்த கனிகள்தரும் சோலைகளும்
எழில்மிகுந்து நனிகு லாவும்
வணம் மருவும் முதுவேனிற் காலத்தா
டியிலண்ணல் வந்தார் அங்கண். 242

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்துப்பனி
ரெண்டாவ தாண்டில் மேவு
தூயபரி தாபிநல்லா டியிலிருபத்
தெட்டாம்நாள் சோம வாரம்
மேயவிழா நடக்குமென மிகுமகிழ்வி
னெடுபலர்க்கும் அறிவித் திட்ட
தூயமனக் காந்திமதி நாதபிள்ளை
யைப்பலரும் துதிசெய் தாரால். 243

ஆனைதுர கதமாதி வந்தன; வாத்
தியக்காரர் அவண்வந் துற்ருர்
ஞானநெறி யினைப்பேணும் நல்லடியார்
பலர்வந்து குழுமி னர்கள்
ஊனமற நலங்களுசா விக்கொண்டார்
ஒப்பரும்பல் நிகழ்ச்சி கூறி
ஞானகுரு மலரடியில் நானெனதென்
பதைக்கரைத்து நலம்பெற் றுய்ந்தார். 244

திருஞான சம்பந்தர் நம்மாழ்வார்
போன்றவர்கள் திகழ்ந்த காலத்(து)
இருஞாலத் தினில்வாழும் பேறுபெற்ருே
மில்லையென ஏங்கி நின்ருேம்
பெருஞான நிகழ்ச்சிகளைக் காட்டியழி
யாமுத்திப் பேறு நல்கும்
ஒருஞான குருமணியாம் அண்ணலைக்கா
ணும்பேறிங் குற்ருே மென்பார். 245

அவர்மேனி காண்பதற்கும் அவர்உரைகள்
கேட்பதற்கும் அன்பி னேடும்
அவர்பாதம் பணிவதற்கும் அவர்ஆசி
பெறுவதற்கும் நிட்டை கூடி

அவர் அருளைப் பெறுவதற்கும் அவர்தருமா
னந்தநிலை யெய்துதற்கும்
அவர்பணிகள் புரிவதற்கும் அருந்தவம்மிக்
காற்றியுளோம் எனக்களிப்பார். 246

அருளண்ணல் கூடத்தின் நாப்பணமை
நாற்காலி யினில மர்ந்தே
அருட்காட்சி யளித்தவணம் திகழ்ந்திடுவர்;
ஆண்களும்பெண் களுமாய்த் தூய
அருளடியர் சூழ்ந்தமர்வர்;அருள்வாச
கங்களன்பர் மகிழ்ந்து கேட்க
அருளண்ணல் போதிப்பர்;அமரர்முனி
வரர்களும்கேட் டானந் திப்பார். 247

இதந்தருநல் லின்னுரையால் அருள்மொழிக
ளாம்மணிகள் இனிது திர்த்தார்
நிதம்படும்துன் பங்களுக்குக் காரணம்நம்
மனத்தினுளே நிலவும் ஆசை
பதம்பெறவேண் டிடின்அகத்தும் புறத்துமுள
பற்றனைத்தும் அகலல் வேண்டும்
மதங்கள்அனைத் தும்கூறும் உண்மையிதை
உணரின்குரு வருவார் என்பார். 248

அன்பொடுசற் குருதோன்றி யருள்விளக்கம்
தரும்போது புறத்தே யுள்ள
மன்பெரும்பூ தலம்முழுதும் நமக்குள்ளே
தோன்றிடும்;நாம் உய்யும் வண்ணம்
இன்பம்அருள் கருணை ராம்பூர்ணர்
இனியசட்ட நெறிதந் துள்ளார்
துன்பமகன் றிடத்தூய்மை பெறஅதனைப்
பேணிச்சுகம் பெறுவீர் என்பார். 249

போந்துளபல் அன்பர்களும் அண்ணல்அரு
ளுரைகேட்டுப் புனிதம் பெற்றார்
காந்திமதி நாதபிள்ளை கவினுலாச்
செயல்களைத்தீ விரமாய்ச் செய்தார்

காந்தனைக்கண் டுளமுருகும் கற்பரசி
போல்அடியர் கனிவார் ஞான
வேந்தரைக்கண் டுளமுருகி வினைகரைத்துப்
பேரின்ப விளைவு பெற்றார். 250

சோமவா ரத்தன்று வைகறையில்
அடியார்கள் தூநீ ராடி
நேமமுடன் வலம்வந்து நிமலர்அடி
பணிந்தேத்தி மேடை மீதில்
சேமமுற இனிதமர்த்தித் திருமஞ்ச
னம்புரிந்தா ராதித் தார்கள்
மாமகிழ்வி னோடுகுரு மணிக்கடியர்க்
குணவருத்தி வாழ்வுற் றாரால் 251

மாலைவழி பாட்டினுக்குப் பின்னரெழில்
வண்ணமிகு சப்ப ரத்தில்
சீலமிகும் அண்ணலை யெழுந்தருளச்
செய்துசெம்பொற் கவரி வீசி
ஞாலமிசை வாத்தியங்கள் நனி முழங்க
யானைபரி யாவும் சூழ
ஏலும்அடி யார்துதிகள் பாடிவர
இனிதுவிழா நடத்தி னாரால். 252

அருள்நயந்த உளங்களிற்பே ரற்புதமாய்த்
திகழ்மணியை, அகிலத் துற்ற
இருள்நயந்த நெறிவிலக்கி இனியவழி
காட்டிறையை, என்றும் இன்பப்
பொருளனைத்தும் தருநிதியைப்; புனிதமிகப்
புரியரசைப் போத ஞானத்
தெருள்பழுத்த செழுங்கனியைச் சேவிக்கப்
பலர்இனிது திரண்டார் அங்கண். 253

கணபதியின் அவதார மானஅண்ணல்
கருணைமிகு தோற்றத் தோடும்
இணையிலருட் காட்சிதர அவ்வருட்காட்
சியைக்கண்ட இனியோ ரெல்லாம்

விணைப்புரக்கும் அமரருல கிதுவோநல்
வியன்கயிலை இதுவோ என்பார்
கணைக்கவரும் கோலமிது கண்டிடநாம்
பெருந்தவம்செய் துள்ளோ மென்பார். 254

இத்தகைய அருட்டிரு வுலாக்காணும்
பேறுபெற்ற மக்கள் எய்தும்
சித்தமகிழ் விணைக்கூற வல்லவரார்?
தேவர்களும் வியப்பில் ஆழ்ந்தார்.
பத்தரெலாம் பயன்பெற்றார்;சித்தரெலாம்
பரிந்துவந்து பண்பா டிட்டார்
முத்தரெலாம் வாழ்த்துரைத்தார் முத்திநெறி
தழைக்குமென முழங்கி னரால். 255

**காரைக்கால், மாஹி, ஏனம்**

வங்கக்கட லோரத்தில் வளமுறநன்
றெழிலோடு வயங்கு கின்ற
துங்கமிகு நகரங்கள் பலவற்றுள்
தொல்சிறப்பொ டொளிர்கா ரைக்கால்
பொங்குகடல் கடந்துசென்று பொருள்திரட்டும்
வாணிகரும் கடற்க ரைக்கண்
தங்குபர தவரும்பிற இனத்தவரும்
தழைநகராய்ப் பிறங்கு மாலோ. 256

கடல்கடந்து சென்றுநல்வா ணிபம்நடத்திக்
கணக்கில்பொருள் திரட்டி நற்சீ
ருடையநம்பா ரதநாட்டின் சமயநெறி
உயர்கலையின் மாண்ப ணைத்தும்
அடலுறநன் றேபரப்பும் அறிவுவளம்
அன்பொழுக்கம் தெய்வ பக்தி
கொடைமுதலாம் குணநலங்கள் கொண்டபெரு
வணிகர்அவண் குலவி னரால். 257

அருள்நாட்டம் உடையபலர் அண்ணலார்
அருட்சிறப்பைக் கேள்வி யுற்றுக்
குருநாதர் நல்வரவெப் போதுகிட்டு
மோவென்னக் கோரி நின்றார்

அருள்ஞான குருநாதர் உடையவன்தண்
ணருளுணர்த்த அவ்வூர்க் கேகி
அருள்மாரி பொழியத்திரு வுளம்கொண்டவ்
வூர்க்கணெழுந் தருள லுற்றார். 258

முன்னரே பக்குவம்பெற் றுள்ளபல
ஆன்மாக்கள் முழுஞா னச்செம்
பொன்னுருவாய்த் திகழண்ணல் பூங்கமல
மலர்ப்பதத்திற் பணிந்து போற்றி
நன்னயஞ்சால் சட்டநெறி கைக்கொண்டு
நற்பயன்மிக் கெய்த லானார்
முன்னவனார் அருட்சிறப்பை அண்ணலார்
அடியவர்க்கு மொழிந்தார் நன்றே. 259

விடியலில்தண் ணீரில்நனி மூழ்குவதால்
விளையுமுயர் நன்மை யாவும்
படியில்மருத் துவம்நாடா தருள்துணையால்
பலபிணிகள் தவிர்க்கு மாறும்
கொடியபஞ்ச மாபாத கம்தவிர்த்துக்
கோள்நாளுக் கஞ்சி டாமல்
நெடிதுபுலா லுண்ணுமல் நிறைவாழ்வாற்
றிடுமாறும் நவின்றார் அண்ணல். 260

பற்பலநற் கதைகூறிப் பற்பலநல்
விளக்கங்கள் பகர்ந்தார் அண்ணல்
இப்படிநற் செந்நெறியை இதுவரையில்
எவர்நமக்கிங் கியப்பி யுள்ளார்
செப்பரும்பல் மதங்களின்சா ரத்தினையும்
திரட்டியிவண் அருளும் செம்மல்
முற்பிறவி களில்நாம்செய் புண்ணியத்தால்
போந்தனர்என் றுவந்தார் மக்கள். 261

பவக்கடலி னின்றுகரை யேற்றியருள்
பாலிக்கப் போந்த வள்ளல்
தவத்துறையை இல்லறத்தார் தாரணியில்
எளிதுகடைப் பிடித்துய் வண்ணம்

துவக்கிவைக்கத் தொந்தமறுத் தின்பமுறத்
தோன்றியசி ரன்ப ரெல்லாம்
உவப்பொடருட் சட்டநெறி கைக்கொண்டார்
உயர்அருள்வாழ் வுனுற்ற லானுர் 262

தண்ணீரில் அதிகாலை யினில்மூழ்கித்
தந்திமுகன் கோயிற் கேகி
உண்ணீர்மை யோடுவலம் புரிந்துள்ளம்
கசிந்துருகக் கும்பிட் டேத்திப்
பண்ணுர்நற் றுதிபாடிக் குருபரனை
வலம்வந்து பணிந்து போற்றி
அண்ணுல்நும் பெருங்கருணை அளப்பரிதென்
றிறைஞ்சியரு ளாசி பெற்ருர். 263

மா ஹி

இவ்வாறு நல்லடியார் பலர்அருட்சட்
டம்பேணி இனிது வாழச்
செவ்வாய்மை மிகுமண்ணல் சீரார்அவ்
வூர்விட்டுத் தேவர் போற்ற
அவ்வோடுவ் வும்மவ்வும் ஒருருக்கொண்
டவனிமிசை நடத்தல் போலும்
செவ்வானின் றிழிந்துசெலும் கதிர்போலும்
மாஹிக்குச் செல்ல லானுர். 264

மாகியெனும் ஊரின்கண் மாஞான
மன்னர்எழுந் தருளி ஞான
தாகமிகு சீரடியார்க் கருள்ஞானத்
தண்ணமுதை யருத்த லானுர்
ஏகபரம் பொருள்எல்லா மதங்களுக்கும்
இறையாகி இலங்கு மாறும்
போகம்உயர் யோகம்பர ஞானமளித்
துயர்த்திடுமா றும்போ தித்தார். 265

அரியபல உபதேசங் களைப்புகட்டி
அருட்சட்ட நெறியை நல்கித்
தெரிவரிய உண்மையெலாம் தெளிவுபெற
நனிவிளக்கி ஐயம் நீக்கி

அருவியெனக் கருணைபொழிந் தடியவரை
யன்பரையாட் கொண்டு ஞான
குருபரர்அவ் வூர்விட்டுக் கோதிலடி
யரைச்சேர்க்கச் செல்ல லானார். 266

ஏறும்

புண்ணியமெல் லாம்திரண்டொ ருருவாகிப்
போந்தஅருட் போத மூர்த்தி
எண்ணிலடி யரைத்திரட்டி இன்பநலம்
அருளவந்த ஏக மூர்த்தி
மண்ணுலகில் ஏதொன்றும் தனக்காகக்
கொள்ளாநல் வள்ள லாகித்
தண்ணருளெங் கணும்பரப்பித் தரணிமிசை
பவனிவந்தார் சான்றோர் போற்ற. 267

ஓரூரி னின்றண்ணல் ஓரூர்க்குச்
செல்கையிலவ் வூர்வாழ் அன்பர்
சீரார்நற் புகைவண்டிக் காம்பயணச்
சீட்டெடுத்துத் தந்து செல்வார்
ஏராரிப் புவிக்கண்ண லின்சிறப்பை
உணர்த்தஇறை எண்ணி னரோ
கோராத இவர்க்குப்பய ணச்சீட்டை
எடுத்துக்கொடா தன்பர் சென்றார். 268

வெள்ளையுடை யினையன்றி வேறொன்றும்
கைக்கொள்ளா விமல ஞான
வள்ளல்நலே னும்செல்லப் பயணமுற்றுப்
புகைவண்டி யினில்அ மர்ந்தார்
மெள்ளநகர்ந் தவ்வண்டி வேகமுறச்
செல்லுகையில் பயணச் சீட்டிங்(கு)
உள்ளதுவோ எனச்சோதித் திடுமொருவர்
ஒப்பிலண்ணல் அருகு சார்ந்தார். 269

பரிபூர்ணத் தோடொன்று பட்டசிந்தை
யோடண்ணல் அமர்ந்தி ருந்தார்
உரிதான சீட்டுண்டோ என்றுபரி
சோதிப்போர் வினவும் போதில்

வெருவாமற் சீட்டெடுக்கப் பணமில்லை
யென்றினிது விமலர் கூற
மருவாதிவ் வண்டியைவிட் டிறங்குகென
மறுநிலையத் திறக்கி விட்டார். 270

சினங்கொண்ட வெள்ளையரவ் வாறருள்தே
சிகனுரை யிறங்கச் செய்ய
தனங்கொண்டு செலும்பழக்க மில்லாத்தண்
ணருளாள ரான வள்ளல்
சினங்கொண்ட அவ்வெள்ளைக் காரரிடம்
ஏதொன்றும் செப்பற் குன்னார்
மனங்கொண்ட பரிபூர்ணப் பெருமானை
வாயாரப் பாட லானார். 271

*"பூரணத்திற் பூரணமாய்" என்றெடுத்துப்
புவனவகை யனைத்தி னுக்கும்
காரணனாய்க் காருண்யப் பெருங்கடலாய்க்
கடலமுதாய் வயங்கு கின்ற
வாரணமா முகத்தானை மனத்துன்னி
நீயேநன் றறிவா யிந்தத்
தாரணியோர் செயலையெலாம் யானறிவே
னேஎன்னச் சாற்ற லானார். 272

ஆகம்திருக் கோயிலென ஆக்கியருள்
பரிபூர்ணர் கருணை யுன்னி
ஏகமன தோடருட்பா டலைப்பாடி
யினிதண்ணல் அங்கே நின்றார்;
வேகமுடன் செலுத்துதற்குப் புகைவண்டி
யினைக்கிளப்பி விடஅவ் வண்டி
ஏகவிழை யாததுபோல் எள்ளளவும்
அசையாமல் இருந்த தங்கண். 273

வண்டிசற்றும் அசையாத காரணத்தை
நன்றுணர மாட்டா ராகி
விண்டுரைத்தற் கியலாமல் வியப்புற்றுத்
திகைத்தனர்பின் இங்கு மங்கும்

*"பூரணத்திற் பூரணமாய்"—ஆண்டவர் அருட்பாடல்.

கண்டுதவ றேதுமிலை யேஎன்னக்
கழறினர்; காப் பாளர் வானார்
அண்டர்புகழ் அண்ணல்அருள் முகத்தொளிகண்(டு)
அவர்நிற்கு மிடத்திற் சேர்ந்தார். 274

தெய்விகப்பே ரொளியண்ணல் திருமுகத்தில்
மேனியினில் திகழ்தல் நோக்கி
அய்யஇவண் ஏன்நிற்கின் றீர்என்ன
வினவுதலும் அண்ண லார்இவ்
வையம்மதித் திடும்காசி லாதுபய
ணச்சீட்டு வாங்க வில்லை
கையில்பய ணச்சீட் டிலாமையினால்
கடிதிறக்கி விட்டா ரென்றார். 275

அருளாள ராம்இவரை அவணிறக்கி
விட்டபிழைக் காக நொந்து
பொருளாற் பெறும்பயணச் சீட்டிவர்க்கேன்
எனப்பரிசோ தகர்பாற் கூறித்
தெருளார்தே சிகரைப்பணி வொடும்போற்றி
வண்டியினில் அமரச் செய்தார்;
உருளாத சக்கரங்கள் உருண்டன; அவ்
வண்டியினி தோடிற் றன்றே. 276

அனைத்தும்உடை யவன்செயலென் றருளண்ணல்
வண்டியின்கண் பயணம் செய்தார்.
நினைப்பரிய பெருமையுடை யவரென்ன
மக்களெலாம் நெகிழ்ந்தா ருள்ளம்
வனப்புமிக உடையேனும் நகர்க்குவள்ளல்
இனிதுசென்று சேர்ந்தார் அங்கண்
மனப்பரிபா கம்படைத்த நல்லோர்கள்
வரவேற்று மகிழ்வுற் றாரால். 277

வேறு

அண்ணல் அருள் முகத்தினையும் அருள்திருக்கண் நோக்கினையும்
வண்ணவெள்ளை உடையினையும் வண்கமலப் பதங்களையும்
திண்ணியஞா னம்புகட்டும் திருமேனிப் பொலிவினையும்
நண்ணிஅவண் கண்டவர்கள் நன்மகிழ்வுற் றடிபணிந்தார். 278

ஆராத பேரின்பம் அருளும்உயர் குருபெருமான்
தீராத பலபிணிகள் தீர்த்தன்பர்க் கருள்சுரந்தார்
பேராயி ரம்கொடொளிர் பெம்மானும் பரிபூர்ணர்
சீரார்நற் பெருங்கருணைத் திறன்விளக்கி அவண்திகழ்ந்தார். 279

அருட்சட்ட நெறிச்சிறப்பை
அன்பர்பலர்க் கெடுத்துரைத்தார்
தெருட்பெற்ற உளத்தன்பர்
சிந்தையிற்கொண் டேற்றுய்ந்தார்
பொருட்பெற்ற உபதேசங்
கேட்டுப் புனிதமுற்றார்
மருட்பெற்ற மனத்தினரும்
திருந்திமிக மகிழ்ந்தனரால். 280

ஊனினை நன் றேயுருக்கி உள்ளொளியை மிகப்பெருக்கும்
ஞானகுரு மணியிவர்தம் நன்மகிமை யினையுணரத்
தேனினுமிக் கினியஇவர் திருவருளார் மொழிகேட்கப்
பானமென அருட்பாடல் இசைபருகப் பலர்திரண்டார். 281

இம்மைநலம் மறுமைநலம் எல்லாமும் கூட்டுவிக்கச்
செம்மைமிகு சித்தாடல் பலபுரிந்து தெருட்டியபின்
மும்மைமலங் களையெரித்து முழுதருள்செய் குருபரனை
நம்மைப்புரந் தருள்ஞான நாதன்எனப் பலர்தொழுதார். 282

அவரவர்கள் வேண்டியவா றவரவர்கட் கருள்புரிந்து
தவவினைவை நனிபெருக்கித் தரணிவளம் மிகப்பெருக்கிப்
பவப்பிணியை விலக்கியருள் பாலிக்கும் பரவமுதை
உவமை சொலற் கருமணியை உவகையுடன் பரவினரால். 283

தன்னுள்அனைத் தும்திகழத் தகும்அமைதி யுடன்இனிது
மன்னுபெருங் கடலினைப்போல் மாண்புறஎல் லாவளமும்
உன்னரிய பரஞான நிட்டையுநன் றுவந்தருளும்
தன்னிகரில் தவச்செம்மல் தரணிமிசை
இனிதொளிர்ந்தார். 284

பாம்பின்கால் பாம்பறியும் எனத்திகழும் பழமொழிபோல்
சோம்பலின்றி அருள்நாடித் தூய்மைமிக மிகப்பெறுதற்(கு)
ஆம்பரிசை விழைந்தவரே அவனிமிசை உயிர்த்தொகையை
ஓம்பவந்த குருபரனார் உயர்வுணர்ந்து தொழுதுய்ந்தார். 285

நீங்காநன் னிழல்போல நெருங்குபல அடியவர்கள்
ஓங்கார்வ மோடண்ண லிடம்சென்று பயனடைந்தார்
பாங்காகத் தொழுதினிது பரவமுது பருகிஉய்ந்தார்
ஓங்கார மறையொடொன்றி உயர்வனைத்தும்
எய்தினரால் 286

நல்லடியர் பலர் ஒருங்கு கூடிவிட்டால் நம்மண்ணல்
எல்லையிலா மகிழ்வடைவார் இயம்பரும்பே ரன்பினுடன்
நல்லநல்ல அருள்ஞான மணிகளைநன் றேஉதிர்ப்பார்
அல்லல்அகற் றைங்கரனர் அருட்பெருமை
விளக்கிடுவார். 287

கணபதியின் பெருமைகளைக்
காதாரக் கேட்டவுடன்
துணைவனெனத் திகழ்ஞான
ஜோதியொளிக் கணபதிக்கங்(கு)
இணையில்எழி லார்கோயில்
இனிதமைக்க வேண்டியன்பர்
அணைகடந்த வெள்ளம்நிகர்
அருட்குருவைக் கோரினரால். 288

செல்வமெலாம் உவந்தருளித்
திருவடிப்பேற் றையும்கொடுக்கும்
எல்லையில்சீர்க் கணபதிக்கிங்
கினிதுதம தருட்கரத்தால்
ஒல்லையிலொர் அருட்கோயில்
உவந்தமைக்க உளம்கொண்ட
நல்லருட்செம் மலும்செயல்கள்
நடத்திடுமா றனுமதித்தார். 289

தாயாகித் தந்தையுமாய்ச் சற்குருவாய்த் தெய்வமுமாய்
ஓயாதெவ் வுயிர்களுக்கும் ஒப்பில்நலம் உவந்தருளிக்
காயான மனங்களையும் கனியவைக்கும் கணபதிக்கு
மாயாநல் வளம்குலவும் மாண்கோயில் அமைந்ததவண். 290

வளமிகும்அம் மாநகரின்
நடுவண்அருள் வயங்கிடத்தில்
*குளமமைகண் ணுடைஞான
கணபதிக்குக் கோயிலொன்றை
ஒளிகுலவத் தம்திருக்கை
யால்நிறுவி உயிர்களுய்ய
அளவில்பொருட் செலவில்அண்ணல்
குடமுழுக்கும் ஆட்டினரால். 291

அழகுமிகும் ஐங்கரனுர் அருளுருவைத் தம்கரத்தால்
தழைமகிழ்வொ டினிதுதட விக்கொடுத்துச் சக்தியெலாம்
குழுமியிவண் குலவுமெனக் கோதில்பரங் கருணையினுல்
விழுமியபே ரருள்புரிந்தார் வித்தகச்சற் குருபரனுர். 292

எழில்மிகும்அவ் இபமுகனுர் திருவுருவை இனிதன்பர்
தொழுதிறைஞ்சித் தூமலர்கள் தூவியர ஹரவென்னும்
விழுமியபே ரொலிவிண்ணில் மிகத்தாவு மாமுழக்கி
இழுதெனவுள் ளுருகிக்குட முழுக்கின்பொ டாட்டு
வித்தார் .293

அடியவரும் அன்பர்களும் அரஹரவென் றெலிமுழக்கி
விடியலில்தண் ணீராடி நெற்றியில் விபூதியிட்டு
மடிமிடியொ டிருள்நீக்கி மாணருள்செய் முன்னவனை
நெடிதுவலம் புரிந்தேத்தி நிறைசுகம்பெற் றுய்ந்தனரால். 294

அன்பருக்கும் அடியவர்க்கும் அருளாசி யளித்தருளி
மன்பதைக்குப் பக்திநலம் மாஞான நலம்புகட்டும்
இன்பவொளிக் குருபரனுர் ஏனமெனும் நகர்விட்டுப்
பொன்புரையன் பரைமேலும் திரட்டுதற்குப் புறப்பட்டார்.
295

தாயைப்பிரி யும்சேய்போல் தளர்வுமிகும் உளத்தோடும்
தூயஅடி யவர் அன்பர் அனைவருமே சூழவந்து
நேயமிக நெகிழ்ந்து நின்று நிலைபிரியா விடைகொடுக்க
நாயகனுர் மேலிலந்தைக் குளம்நாடிப் போந்தனரால். 296

---

*குளம்—நெற்றி

மேலிலந்தைக்குளம் (உத்ஸவம் -4, 5)

மேலிலந்தைக் குளமென்ன வியன்புவியில் விளங்குதலம்
சாலவுயர் தவமுடைய தோவென்னத் தக்கார்கள்
ஏலவுரைத் திடுமாறவ் எழிற்றலத்தில் அருளண்ணல்
கோலமுடன் அடிக்கடிசென் றினிதருளைப்
பொழிந்தனரால். 297

நோக்கரிய அருள்நோக்கால் நோக்கிவினை நோய்நீக்கி
வாக்குமனம் காயமிவை தமக்காக்கிக் கொண்டுவள்ளல்
ஆக்கமெலாம் இனிதருளி அருள்ஞான நலம்புகட்டும்
தேக்குபுகழ்த் திருநகராய்த் திகழ்ந்ததந்தத் திருத்தலமே 298

பெரியதிரு வடிப்பிள்ளை யெனப்பிறங்கும் பெயருடையார்
துரியவெளி யினிலென்றும் துலங்கும்அரு ளண்ணலுக்குப்
பெரியபல் விழாநடத்திக் காணுமுயர் பேறுபெற்றார்
விரிபுவியில் இவர்பெருமை விளம்பிடற்கும்
எளிதாமோ? 299

அத்தகுசீ ரடியவர்க்கும் மற்றவர்க்கும் அருள்சுரக்க
சித்தமகிழ் வொடுஞானச் சித்தர் அவண் எழுந்தருள
மெத்தவுருக் கத்தோடும் மேலைத்தவம் பலித்ததென
உத்தமச்சற் குருபரரை உவந்துவர வேற்றனரால். 300

அடியவரும் அன்பர்களும் பெரியதிரு வடிப்பிள்ளையும்
நெடிதுபல்வாத் தியம்முழங்க நீள்கொடிவெண் குடைசூழ
படியில்பிறர் அறியாத பரிவினொடும் சென்றிறைஞ்சி
அடிமலரில் முடிசூட்டி ஆனந்த முற்றெழுந்தார் 301

மும்முறைநல் வலம்புரிந்து மூலமலம் களைந்தருளும்
செம்மலெனச் செழும்புவியில் திருவவதா ரம்புரிந்த
செம்மணியே எங்கள்குலம் செழிக்கவந்த திருவமுதே
மம்மர்அறுத் தாண்டருள வருகுருவே எனப்பணிந்தார் 302

மீண்டும்அடி தொழுதேத்தும் மெய்ம்மையடி யார்குழுவை
ஆண்டருள்செய் குருபரனார் அருள்நோக்கி னுல்நோக்கி
மூண்டபவப் பிணியகலும் முறையால்நன் றருள்புரிந்தார்
ஆண்டடியர் ஆனந்த அருவிக்குள் அமிழ்ந்தனரால். 303

தம்மையொரு கணம்மறந்த தன்மையராய்ச் சற்குருவின்
செம்மலர்த்தாள் மலர்போற்றும் சிந்தையராய் அடியார்கள்
தம்மனைக்கண் அழைத்தேகித் தகுபூசை புரிந்தேத்தி
இம்மைநலம் மறுமைநலம் எல்லாமும் இனிதடைந்தார். 304

பன்முறை விழாக்கண்டு பரமானந் தம்துய்த்தோம்
இம்முறையும் அவ்வாறே இனியவிழா இணையில்அருட்
செம்மலுக் கியற்றுவமென் றினிதுதிரு வடிப்பிள்ளை
நன்முறையில் உளம் கொண்டு ஞானகுரு பாலடைந்தார்.
305

அடிமலரிற் பணிந்திறைஞ்சி
அண்ணலிடம் அனுமதிபெற்(று)
உடையவன்தண் ணருட் கடல்போல்
உடைமையெலாம் சேகரித்து
மிடைபசுமைப் பந்தரிட்டு
மேயமணித் தோரணங்கள்
கொடிகதலி பூகமிவை
குலவநகர்க் கோடித்தார். 306

அன்பருக்கும் அடியவர்க்கும் அழைப்பனுப்பி வரவழைத்தார்
பொன்புரையும் பரிதாபி யாண்டினிற்பங் குனிமாதம்
இன்பமருள் இருபத்தி ரண்டாம்நாள் வெள்ளியன்று
மன்பதையும் வானவரும் மகிழவிழா நடந்ததுவே. 307

எய்தினர்க்கா ரமுதளிக்கும் அருளாளர்க் கினியவிழாச்
செய்ததனல் அச்செயலில் தீவிரமாய் ஈடுபட்ட
துய்யதிரு வடிப்பிள்ளை தோமிலவர் மனைவியுடன்
வையகத்தை மறந்தயர்ந்து மலியுறக்கத் தாழ்ந்தனரால். 308

குழந்தைகளுக் குணவிடவும் மறந்தவராய்க் குலவிரவில்
செழுந்துயிலில் ஆழ்ந்திடவும் சிறுகுழந்தை களும்நிசியில்
எழுந்துணவுக் கழுதிடப்பெற் றோர்அறியா தினிதுறங்கப்
பழங்கள்அரு ளாற்கிடைக்கப் பசிதவிர்ந்தங்
குறங்கினரால். 309

காரைக்கால் அம்மைக்குக் கனிகிடைத்த வாறண்ணல்
சீரைப்பேண் திருவடியாப் பிள்ளைமகார் களுக்கிந்தப்
பாரைப்பேண் குருவருளாற் பழங்கள்வந்து பசிதவிர்த்த(து)
ஆரிப்பா ரினிலறிவார் அச்சேய்கள் அருந்தவமே. 310

பசிநேரத் தினிற்கிடைத்த பழங்களையச் சிறுசேய்கள்
நிசிநேரத் தினிலருந்தி நித்திரையில் ஆழ்ந்தார்கள்
நிசிநீங்கி விழித்த பெற்றோர் நிசியினில்தம் சிறுசேய்கள்
மிசையஉண வளிக்காமல் மறந்ததெண்ணி வருந்தினரால். 311

முற்பிறவி களிற்செய்த முழுத்தவத்தின் பெருஞ்சிறப்பால்
சற்குருவின் திருவருளால் தனிஞானக் கனிகள்மிக
அற்புதமாய்க் கிடைக்கஅவற் றினையருந்தி யச்சேய்கள்
செப்பமுறத் துயின்றெழுந்து பினர்செப்பக்
கேட்டுணர்ந்தார் 312

எங்களுக்கு மிக்கபசி தோன்றிடவும் எழுந்தழுதோம்
துங்கமிகு குருநாதர் எங்களரு கினில்தோன்றி
இன்கனிகள் எமக்கினிது வழங்கிநொடி யினில் மறைந்தார்;
எங்கள்பசி தீரஅவற் றினைப் புசித்தோம் எனநவின்றார். 313

பழங்களின்தோல் அவ்விடத்திற்
கிடப்பதனைப் பார்த்தார்கள்
வழங்கியருள் புரிந்தவள்ளல்
வண்கழலைத் துதித்தார்கள்
செழுந்தமிழ்நாட் டினிலுதித்த
தேசிகனார் திருவருளில்
அழுந்தியபே ரன்பரெலாம்
அதிசயமுற் றிறைஞ்சினரால். 314

காதலர்க்கெய்ப் பினில்வைப்பாம் கர்த்தனருட் கருணையினைத்
தீதகன்ற சிந்தையினிற் கொண்டதிரு வடிப்பிள்ளை
மீதுபொங்கும் ஆர்வமொடும் மேனிபுள கம்போர்ப்பப்
போதெனும்கண் ணீர்மல்கப் பொருவில்பர
வசத்தமிழ்ந்தார். 315

மன்னுபர மானந்த வாரியெனும் குருபரர்பால்
துன்னியபே ரன்போடும் சூழ்ந்தாடித் துதிபாடிச்
சென்னியில்அஞ் சலிகூப்பித் திகழ்விழிகள் நீர்பொழியப்
பொன்னிகர்தாள் பங்கயங்கள் போற்றிநனி
பணிந்தெழுந்தார். 316

எம்பெருமா னேஎன்னை யினிதாண்ட பெருநிதியே
அன்பருளி அற்புதமாய்க் காக்கவந்த கற்பகமே
இன்பருளி எவ்வுயிரை யும்பேணும் எம்மிறையே
எம்பொருட்டும் கருணையிருந் திடுமாறென்
னெனத்துதித்தார். 317

துணையெனஎவ் வுயிரினுக்கும் துலங்கிஉண வளித்தருள்நீர்
உணநற்கனி குழந்தைகளுக் குதவல்பெருஞ் செயலாமோ?
அணுவுக்கணு வாயப்பா லுக்கப்பா லாய்விளங்கும்
இணையில்குரு நீர்இருக்க எமக்கென்ன குறையென்றார். 318

எளியேம்செய் தவப்பயனால் இப்பிறப்பி லேஎமக்குக்
களியூட்டிக் காத்தருள வருபெருந் தயாபரரே
ஒளியூட்டி உணர்வூட்டி உயர்வருளும் உத்தமரே
தெளிவூட்டித் திருவடியிற் சேர்த்தருள்வீர்
எனத்தொழுதார். 319

இச்செய்தி மிகவிரைவில் எங்கெங்கும் பரவிடவும்
நற்சட்ட நெறியருளும் நாயகனைக் கண்டுதொழ
இச்சைப்பட் டெண்ணில்பலர் திரண்டவ்வூர்க் கினிதெய்தி
எச்சிக்கல் களும்நீங்கி இன்னடிய ராயினரால். 320

பொருள்வேண்டிப் போந்தவர்க்குப்
பொருள்மிகவும் கொடுத்தருள்வார்
இருள்நீங்க விழைந்தவர்க்குள்
ளிருள்நீக்கி யொளியருள்வார்
தெருள்வேண்டிப் போந்தவர்க்குத்
தெருளருளிப் புரந்திடுவார்
அருளாடல் பலபுரிந்தப்
பதியிலண்ணல் இனிதிருந்தார். 321

## மேலிலந்தைக்குளம் (ஐந்தாவது உத்ஸவம்)

கனிந்தவுள்ள முடையதிரு வடிப்பிள்ளை கர்த்தர்தமை
புனைந்தமுத்துச் சிவிகையினில் பொலியவைத் துலாநிகழ்த்த
நினைந்துகுரு நாதரிடம் நேரிலனு மதிபெற்று
முனைந்தத்திரு நகரெங்கும் முழுப்பொலிவொ
டலங்கரித்தார். 322

அமரர்உல:கினைப்போல அழகுதிக முப்புரிந்தார்
அமுதம்நிறை குடம்போலப் பூர்ணகும்ப நிரையமைத்தார்
கமலமுத லானபல கமழ்மலர்மா லிகைதூக்கி
அமலர்உலா வரும்திருவீ திகள்அனைத்தும்
அழகுசெய்தார். 323

வேறு

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்துப்பதி
னன்கினிற்சூன் ஆறும் நாளில்
தூயநல்லா னந்தவைகா சியில்முப்ப
தாவதுநாள் சுக்ர வாரம்
மேயபல தூரியங்கள் முழங்கிடத்தீர்த்
தம்கொணர்ந்து மேன்மை சான்ற
நாயகருக் கபிடேகா ராதனைகள்
முறையோடும் நடத்தி யுய்ந்தார். 324

நித்திலநற் சிவிகையினில் நிமலரைமா
லைப்பொழுதில் அமரச் செய்து
பத்திமிகு பாங்கினேடும் பலர்போற்றப்
பவனியினி தேந டத்தி
சித்திபல செய்தருளும் தேசிகரைத்
தம்மனையில் கொண்டு சேர்த்துப்
புத்திமுத லாம்கரணம் கரைந்துருகப்
பொன்மலர்த்தாள் போற்றி நின்றூர், 325

அவர்அன்பின் திறமுணர்ந்தங் கருளாளர்
ஆனந்த முறுவல் பூத்துத்
தவமான பூசைதக வுறநடத்தும்
தக்காருக் காசி தந்தார்
உவமானம் உரைப்பரிய குருபரனூர்
ஒண்பதங்கள் போற்றி யன்பர்
நவிலோசை வானெய்த அரஹரவென்
றினிதேத்தி நலம்பெற் றுய்ந்தார். 326

**அவனுப்பேரி - 3 (உத்ஸவம்-2)**

சூழிருந்துன் பம்துடைத்துத் தூயஅடி
யரைப்பேணும் ஜோதி யாகி
ஆழியுடை யணிந்தபுவி யின்கண்அருட்
சட்ட நெறி யருளும் அண்ணல்
வாழியுயிர்த் தொகையனைத்தும் என்னமன
மாரவுன்னி வாழ்த்தி யெங்கும்
ஏழிசையின் னருட்பாடல் இனிதிசைத்தின்
னருள்மணத்தைப் பரப்பி வந்தார். 327

பேரருளில் நாட்டம்மிக உடையரெலாம்
பெம்மானைச் சூழ்ந்து போற்றி
பாரிலுறு பொருள்களின்மீ துறுபற்றை
நீக்கியருட் பண்பை நாடிச்
சீரியசற் குருபரனுர் திருவடியே
தஞ்சமெனத் தெளிந்து பேணி
வாரிநிகர் பேரருளில் மூழ்கிஉயர்
பேரின்பம் மாந்தி உய்ந்தார். 328

அறம்பொருளின் பம்வீடென் றுளநான்கில்
அறத்தைமுத லாய்அ மைத்த
திறம்உணர்ந்தத் தலைமைச்சிறப் புடையறத்தைச்
செயல்முறையிற் பேண வேண்டி
அறநெறியி லீடுபட்டோர்க் கதனருமை
அகத்தினில்நன் ருகத் தோன்றும்
பிறவிபல வற்றினிற்செய் நல்வினையின்
பெரும்பயனுல் அறம்செய் தற்காம். 329

அருளண்ணல் வரலாற்றை ஆராய்ந்தால்
இந்தஉண்மை அறியக் கூடும்
தெருளுறுநல் லடியவரைத் திரட்டிநனி
திருத்திநன் றுலாப்போந் தாலும்
மருளகற்றி மக்களெலாம் மாணருட்சட்
டம்பேணி உய்ந்தா ரல்லர்;
இருளகற்ற ஒருசிலரே இன்னருட்சட்
டம்பேணி இனிதுய்ந் தார்கள். 330

முற்பிறவி களிற்செய்த தவப்பயனுல்
முனைந்துசட்டம் ஏற்ற நல்லோர்
சிற்பரன்றன் திருவருளுக் குரியவராய்ச்
சீலம்மிக உடைய ராகிக்
கற்பதன்நற் பயன்அனைத்தும் கருத்திலுண
ரப்பெற்றுக் கர்த்தன் பாத
நற்பதும மலரிலொன்று சிந்தையராய்
நல்வாழ்வு நடத்த லானுர். 331

அத்தகுசான் ருேர்கழல்நல் லவனுப்பே
ரித்தலத்தில் வாழ்வோ ரான
சித்தசுத்தி மிகுகாந்தி மதிநாதம்
பிள்ளைதிறம் செப்பற் காமோ
மெத்தமகிழ் வோடுமவர் முன்னர்புரி
நல்லவிழா வினைப்போல் மீண்டும்
சித்தர்தலை வர்க்குவிழாச் செய்துமகிழ்
வெய்தவுளத் தெண்ணம் கொண்டார். 332

மேலிலந்தைக் குளம்சென்று மிக்கபணி
வோடண்ணல் வியன்தாள் போற்றிச்
சாலமகிழ் வோடுதுதி பாடித்தழ
லார்மெழுகாய் உருகித் தக்க
சீலமொடு முன்நின்று திருவிழா
நடத்தஅனு மதிபெற் றன்பால்
காலமனைத் தும்கடந்த கதிர்மணியைத்
தம்மூருக் கழைத்துச் சென்ருர். 333

உள்ளத்தின் மாசகற்றி மாயையென
உறுபறவை நெருங்கி டாமால்
வள்ளலிறை நாமமெனும் கவண்கல்லால்
மதமான யானை யோடு
கள்ளமனக் குதிரையினை விரட்டிஉள்ள
மாம்கமல பீடத் தின்கண்
விள்ளரும்பே ரன்போடும் உடையவனை
வீற்றிருக்கச் செய்தல் வேண்டும். 334

நற்றூப தீபநைவேத் தியமாக
உடல்பொருளா வியையே நல்கி
உற்ருேரொ ரணுவினுளும் உடையவன்
எழுந்தருளக் கண்டு போற்றி
வற்ருத பேரின்ப மெய்துவதே
வையமிசை தெய்வங் கட்குப்
பற்ருேடு புரிதிருவி ழாக்களின்தத்
துவமென்பர் பண்பார் சான்ருேர். 335

ஆனந்த வருடத்தா வணியிருபத்
தாறுவெள்ளிக் கிழமைதன்னில்
ஞானந்தம் முருவாக ஞாலத்திற்
போந்தகுரு நாதருக்குத்
தானந்த மில்லாத தனிப்பெரு
விழாநடத்த உள்ளம் கொள்ள
தானந்த வம்மிகுந்த அந்நகரோர்
சாற்றரும்பே ருவகை கொண்டார். 336

தங்கள்பொருள் களைத்திருவி ழாவினுக்கர்ப்
பணமாகத் தரஎண் ணிட்டோர்
பொங்குமகிழ் வோடளித்துப் புனிதவிழா
விற்குரித்தாக் கொண்மின் என்ருர்
இங்குதம் பொருட்செலவில் இனிதுவிழா
நடத்திடுவ தன்றி வேறே
எங்குமெவ ரிடத்துமெது வும்பெறுதற்
கியலாதென் றிட்டார் பிள்ளை. 337

அன்றிரவு கனவின்கண் அவர்மிகவும்
வறுமையடைந் திட்டாற் போலும்
சென்றனைவ ரிடத்திலும்யா சிப்பதுபோ
லும், தெரிந்த ஒருவர் வந்து
நின்றிந்நிலை தங்களுக்கேன் வந்ததென
வினவி,நிம லருக்கு நீரே
நன்றுவிழா நடத்தநினைத் ததுதவறென்
ருற்போலும் கண்டார் நன்றே. 338

மனம்திடுக்கிட் டெழுந்தஅவர் அண்ணலிடம்
விரைந்துசென்று வணங்கிப் போற்றி
நினைந்ததவ றுக்குமன்னிப் புக்கேட்டார்;
நிமலரும்புன் முறுவல் பூத்து
தனம்பொருளா தியஅடியர் தகவொடளித்
தால்ஏற்க மறுக்க லாமோ
அனந்தமும் பரம்பொருளுக் குரியனவே
என்றன்பொ டருளிச் செய்தார். 339

காந்திமதி நாதபிள்ளை குருபரனுர்
பதம்பணிந்து கடிது தாமே
சாந்தமொடவ் வடியரில்லங் களிற்சேர்ந்தப்
பொருள்கள்தரு மாறு வாங்கி
ஏந்தலுக் குலாநடத்தச் சேகரித்த
பொருள்களுடன் இனிதுசேர்த்து
காந்தன்அருள் நினைந்தேத்து கற்பரசி
போல்அமலர் கழல்து தித்தார். 340

சேய்கள்தவ றியற்றிடும்போ தேதிருத்தி
நல்வழியிற் சேர்த்துப் பேணும்
தாயனைய குருபரரின் கருணைநினைந்
தன்பர்துதி சாற்றி ஞர்கள்
மேயபெருஞ் சிறப்பொடு விழாநடந்த(து)
அன்பர்மிக மகிழ்ந்திட் டார்கள்
தூயஅடி யவர்அண்ணல் சிவிகையினைச்
சுமந்துபிற விப்பே றுற்ருர். 341

பேரானந் தத்தொடடி யவர்அரஹ
ராவென்னப் பின்னே யன்பர்
ஆராமெய்க் காதலுடன் அருட்பாடல்
பாடியிசை யமுத மூட்ட
வாராத செல்வமெலாம் வரப்பெற்ரும்
என்றுமக்கள் மகிழ்கூர்ந் தேத்தச்
சீரார்சற் குருபரர் விழாக்கண்டு
தேவர்மலர் மழைசொ ரிந்தார். 342

மேலிலந்தைக்குளம் (உத்ஸவம்-6)

பெரியதிரு வடிப்பிள்ளை யெனும்பெயர்கொள்
பேரன்பர் அண்ண லாரை
உரியசிறப் போடிலந்தைக் குளத்தினிலே
யேஇருத்த உள்ளம் கொண்டார்
பரிவொடண்ண லைக்காணு நாள்பிறவா
நாளெனக்கொள் பண்பின் மிக்கார்
அரியபுண்ணி யப்பயனால் அவர்சிறந்த
பக்தியுடன் திகழலானார். 343

அன்பொடுநல் லறமுடைய அவரில்லம்
முழுவதுமே அண்ண லார்தம்
பொன்புரைநற் சேவையினில் நனிபழுத்துப்
பொலியச்சொலாற் புகலற் கொண்ணு
இன்பமருள் நம்பிக்கை யாழ்ந்தொளிர்பற்
றுடையவராய் இலங்கி னார்கள்;
நம்பியிடம் அன்புமிக்க சட்டஅடி
யார்பலர்அந் நகர்க்கண் வாழ்ந்தார். 344

அனைவருக்கும் எடுத்துக்காட் டாகத்திரு
வடிப்பிள்ளை நனி பொலிந்தார்;
வினையகற்றும் விடியலில்தண் ணீராடி
நெற்றியில் விபூதி பூசி
இனமலர்கொண் டேரம்பன் அடிபரவி
இனிதுவலம் வந்து போற்றி
மனமுருகி அண்ணலருட் பாடல்கள்பா
டிடும்காட்சி மகிழ்மிக் கூட்டும். 345

பூசைபுரி தற்குரிய நறுங்கனிகள்
மலர்முதலாம் பொருள்கள் யாவும்
நேசமொடு முன்னுளே வாங்கிவைத்தல்
நிதமும்புரி பழக்க மாகும்
தேசிகனார் அரியகுணங் களையெண்ணி
உருகடியர் சேர்ந்து கூடி
ஆசிலொரு நாள்நேரம் அறியாமல்
அருள்நிலையில் ஆழ்ந்திட் டார்கள். 346

ஆதலினல் வழக்கம்போல் பூசைப்பொருள்
வாங்கஅன்று மறந்தார்;காலைப்
போதினில்நீ ராடிவிநா யகர்க்கபிடே
கித்துப்பரி வட்டம் சாத்திப்
போதலர்ந்த மலர்மாலை சூட்டவுன்னி
வழக்கம்போற் கனியும் பூவும்
தீதறவைத் திடுமிடத்திற் கைவைக்கத்
தேசிகனர் அருளி னலே. 347

மலர்மாலை நறுங்கனிக ளாதிபொருள்
மாடத்தி லிருந்தெ டுத்துக்
குலவுநற்பூ சனைக்கினிது பயன்படுத்திக்
கொண்டார்நற் குணத்தால் மிக்க
இலத்தரசி யார்பூசை யறைக்குவந்து
கண்டிரவில் கனியும் பூவும்
நலமுறநாம் வாங்கமறந் தோம்; தந்தோர்
யாரோஎன் றெண்ணி னரால். 348

அடியார்ஒரு வரும்அங்கு வந்(து) அவற்றைக்
கொடுத்தாற்போல் தோன்ற வில்லை;
கடைகள்அதி காலையினில் திறவார்க
ளேயென்னும் கருத்தி னேடும்
அடைவொடவர் பூசைமுடித் துப்போந்த
பின்னர்இதை அறிவோம் என்ன
உடையவன்தண் ணருட்பூசைக் குரியனஎல்
லாமும்உட னிருந்து செய்தார். 349

வழிபாடு முடிந்தவுடன் மகிழ்நரைப்பார்த்
திரவினில்நாம் வாங்கி டாத
செழும்பூவும் நறுங்கனியும் வந்தவித
மேதென்னச் செப்பு கென்றர்
விழுச்சோதி யானகுரு வருளேயீ
தெனவுணர்ந்து வியப்புற் றேராய்த்
தொழுதாடிப் பாடினர்சொல் லிடற்கரும்பே
ரின்பமதில் தோய்ந்தோ ரானர். 350

## குருநாதர் துதி

('பொன்னார் மேனியனே' என்ற பண்)

விரைசேர் மாலைபுனை விகிர்தாஇன் னுயிர்த்திரளைக்
கரைசேர்த் தின்பருள இந்தக் காசினிக் குற்றவரே
பரைசேர் நல்லிருடி நகர்ப் பண்ணவரே உலகாள்
அரைசே ஆரியனே அடியேம்உம் அடைக்கலமே. 351

துதிபா டும்அடியார் துயர்தீர்த்தருள் தூயவரே
மதியாய்ச் செங்கதிராய் வன்னியாய் ஒளி நல்கிறையே
பதியாய் நல்லிருடிப் பதிமேயவரே எமையாள்
அதிபா ஆண்டவரே அடியேம்உம் அடைக்கலமே. 352

கமலம் நேர்முகமும் விழி கைகழ லும்உடையீர்
முமலம் நீறுபட மொழி மூலமறை யுடையீர்
அமரர் போற்றிருடிப் பதி மேவும் அருட்சுடரே
அமலா ஆண்டவரே அடியேம்உம் அடைக்கலமே. 353

மருளார் பல்லுயிரும்உய மாண்நெறி நல்கிறையே
தெருளா நெஞ்சினையும் தெரு ளப்புரிதேசிகரே
பொருளார் புண்ணியர்சூழ் இருடிப் பதிப்பூரணரே
அருளார் ஆரணரே அடியேம்உம் அடைக்கலமே. 354

கரணம் யாவையும்நும் கரு ணைக்குரித் தாக்கிடுவீர்
சரணம் காட்டியெமைத் தனி வீட்டுக் கழைத்திடுவீர்
மரணம் ஜனனம்தவிர் இரு டிப்பதி மன்னிறையே
அரணென் றேயமைவீர் அடியேம்உம் அடைக்கலமே. 355

வேறு

என்றுபல வாறுகத் துதித்தேத்தி
இணையிலரு ளண்ண லாரின்
துன்றுமலர்ச் சேவடிகள் தொழுதிறைஞ்சித்
தூயதுணை யாகி நீரே
என்றுமெமைப் பேணியருள் இன்னியல்பை
என்னெனயாம் ஏத்த வல்லோம்
மன்றில்நட மாடிஉயிர்த் திரளையெலாம்
வாழ்விக்கும் வள்ளால் என்றார். 356

அத்தகைய பக்தருளம் மேலும்வியப்
பெய்தும்வணம் அண்ண லாரும்
மெத்தமகிழ் வோடவண்போந் தருட்காட்சி
நல்கிடவும் மெய்யன் பின்கண்
சித்தமதைப் பதித்ததிரு வடிப்பிள்ளை
யோடவர்தம் குடும்பத் தாரும்
பத்தியுடன் வலம்வந்து பதமலரிற்
பணிந்தேத்திப் பரவ லானார். 357

கல்லையுமென் கனியாக்கும் விச்சைகொடு
கழற்கெமையா ளாக்கிக் கொண்டீர்
புல்லையுநெல் லாய்மாற்ற வல்லநுங்கள்
பெருங்கருணை புகலற் காமோ
எல்லையில்சீர் மறையாவும் ஏத்தநின்ற
அருட்கருணை கரரே எங்கள்
தொல்லைப்பிற விப்பிணிதீர்த் தும்பாதத்
தூமலரிற் சேர்த்தாள் வீரே. 358

என்றுதுதித் திருவிழியும் ஆனந்த
நீர்பொழியத் தேக மெங்கும்
துன்றுபுள கம்போர்ப்ப உரைகுழற
உளம்அன்பில் தோய்ந்து நிற்க
நன்றுபக்தி வடிவாகித் துலங்குநரை
ஞானவள்ளல் முறுவ லோடும்
குன்றலில்பே ரருளோடும் நோக்கஅன்பர்
குதுகலத்துள் ளாழ்ந்தா ரன்றே. 359

அடியவரும் அன்பர்களும் கூடிவந்தண்
ணலைப்பணிந்து போற்றி னார்கள்
படியின்மிசை பிறந்தபயன் பெற்றுய்ந்த
திருவடியாப் பிள்ளை மீண்டும்
நெடியவிழா மெய்ஞ்ஞான நிருபருக்கு
நிகரில்மகிழ் வோடெ டுக்கக்
கடிதுநினைந் தனர்கருணை கரர்கழல்கள்
போற்றியனு மதியும் பெற்றார். 360

மருவுமிரா க்ஷஸவருடம் ஆனிபதி
னெட்டாம்நாள் சுக்ர வாரம்
திருவிழா நடத்துவதாய்ச் சுற்றுப்புறத்
தூரார்க்குச் செப்பி விட்டார்
பருவபக்கு வம்மிகுந்த பக்தரெலாம்
பகரரும்பே ருவகை கொண்டார்
தெருவனைத்தும் வீடனைத்தும் திருவருளின்
விளக்கம்மிக அலங்க ரித்தார். 361

தோரணங்கள் நாற்றினர்சோ பனங்களெங்கும்
பாடினர்தூ மாலை தூக்கிப்
பூரணகும் பங்களும்பொற் றிருவிளக்கும்
பொலிவொடெங்கும் அமைத்திட் டார்கள்
காரணகா ரியங்கடந்த கர்த்தர்அருள்
நாடியெங்கும் கவின்செய் தார்கள்.
வாரணமும் துரகதமும் வரவழைத்து
வண்கதலி நாட்டி னார்கள். 362

சீரியவி ழாக்காண லாமென்னத்
தேவர்களும் துள்ளி னார்கள்
வாரியென அடியவரும் அன்பர்களும்
வந்தங்குக் குழுமி னார்கள்
தூரியங்கள் முழங்கத்திரு மஞ்சனதீர்த்
தம்கொணர்ந்து சூழ்வித் தார்கள்.
வாரிஜபா தம்போற்றி வள்ளலையோர்
ஆசனத்தில் அமர்த்தி னார்கள். 363

பரிபூர்ண கணபதியைப் பரிவோடு
தழுவியநல் திருமே னிக்குப்
பெரிதார்வ மோடுதிரு மஞ்சனம்செய்
தனர்பிரியம் மிக்கோ ரெல்லாம்
அருள்ஞான குருபரனார் வாழியவென்
றன்போடும் வாழ்த்தி நின்றார்.
உருகாக்கல் மனத்தினையும் உருக வைக்கும்
உயர்பொலிவொ டொளிர்ந்தார் அண்ணல். 364

நாம்வாழப் பொதிகையினில் நற்றவம்பல்
லாண்டுபுரி குருநா தர்க்குப்
பூமாலை பலவகையிற் புனிதமனத்
தொடும்சூட்டி யலங்க ரித்தார்
பூமாது புரிதவத்தாற் போந்தபரம்
பொருளேயென் றுரா தித்துப்
பாமாலை பலசூட்டிப் பக்தியுடன்
வலம்புரிந்து பதம் பணிந்தார். 365

ஆருயிர்கள் அனைத்தினுளும் அருளுருவாய்
விளங்கிறையை அவனி மீதில்
சாரும்அடி யவர்வினையைத் தகர்த்தெறியும்
தனித்திறலை அடியா ரெல்லாம்
கோரும்வரம் அனைத்தினையும் கொடுத்தருளும்
குணமணியைக் குவல யத்தோர்
ஆரும்அறி வரியபுகழ் ஆண்டவரை
வணங்கியருட் பேறு பெற்றார். 366

அருளாளர் கண்டகன வத்தனையும்
நனவாக்கி யருள்செய் ஞான
குருநாத ருக்கும்அருட் சட்டநெறி
யினைப்பேணும் அடியார் கட்கும்
குருநாதர் அருட்டிரு வுலாக்காணக்
குழுமியுள பேரன் பர்க்கும்
பெருகார்வ மோடுதிரு வமுதூட்டிப்
பிறந்தபயன் பெற்றார் பிள்ளை. 367

கயிலையினிற் கணபதிசா ரூபத்தி
லிருந்திந்தக் காசி னிக்கண்
பயனனைத்தும் பல்லுயிர்க்கும் பரிந்தருளப்
போந்தபர ஞான மூர்த்தி
வியனுலகைத் திருத்தியருள் விளையூட்டு
சட்டநெறி விளக்க மெல்லாம்
நயமொடவண் குழுமியுள பேரன்பர்க்
கின்னருளால் நவின்றார் நன்றே. 368

செவிகுளிர உளம்குளிரத் தெவிட்டாத்தே
　　னமுதென்னச் செவிமடுத்துக்
குவிவுறுநன் மனத்தினராய்க் குலவுமன்பு
　　நிறைந்தவராய்க் குறைவொன் றில்லாத்
தவம்நனிமுற் பிறவியினில் ஆற்றியதால்
　　குருநாதர் சாற்று ஞானச்
சுவையுடைய சொற்கேட்கப் பெற்றேமென்
　　றிருவிழிநீர் சொரிந்தா ரன்பர். 369

மாலையினில் ஞானகுரு மணிக்காரா
　　தனையுள்ள மகிழ்வாற் செய்து
சோலைமல ராலினி தலங்கரித்த
　　தூயநல் விமானத் தின்கண்
கோலமுற எழுந்தருளச் செய்துகொற்றக்
　　குடைகொடிசா மரங்க ளோடு
மேலுலகும் பாதலமும் பூவுலகும்
　　ஏத்தவிழா நடத்தி னரால். 370

மங்கலதூ ரியம்பலவும் முன்செல்ல
　　அருள்நெறிசார் மங்கை நல்லார்
துங்கநல் விளக்கேந்திச் சூழ்ந்துவரச்
　　சொன்மாலை புலவோர் சூட்ட
அங்கம்மிகப் புளகிக்க அருட்பாடல்
　　பாடியன்பர் ஆடிச் சூழ
எங்குமிது போன்றவிழாக் கண்டதிலை
　　யென்றுமக்கள் அரவென் றார்த்தார். 371

இவ்வொரு விழாப்பொலிவை நாம்காணற்
　　கென்னதவம் செய்தோ மென்பார்
செவ்வையுற இம்மனித சென்மமெடுத்
　　ததன்பயனெய் திட்டோ மென்பார்
ஒவ்வொருசிற் றணுவினுளும் ஒளிர்பரனே
　　இவண்குருவாய் உற்றா ரென்பார்
எவ்வொருசிற் றுயிரும்அவண் எய்தியபே
　　ரானந்தம் இயம்பற் பாற்றோ? 372

பெரியதிரு வடிப்பிள்ளை பெற்றஅருட்
பேறுமிகப் பெரிதே என்பார்
அரியபல பிறவிகளி லாற்றுபுண்ணி
யப்பயனே யாமீ தென்பார்
உரியநலம் அத்தனையும் ஒருங்குபெற்ற
இவர்க்கிணைவே றுளரோ என்பார்
துரியசுகம் எவ்வுயிர்க்கும் அருளுபரஞ்
சுடர்புகழ்வா ழியநன் றென்பார். 373

இருவிழிக ளாற்காணற் கரியதிந்த
எழிற்குருவின் உருவம் என்பார்
கருவழியை அடைக்கவந்த குருமணியின்
கருணையுருக் கண்டோ மென்பார்
இருவிழியும் நீர்பொழிவ தால்எவ்வா
றிக்குருவைக் காண்போ மென்பார்
ஒருவழியும் தெரியாமல் உழன்றநமை
உயச்செய்குரு வாழ்க என்பார். 374

அரஹரவென் றடியவரும் அன்பர்களும்
முழக்குமொலி ஆகா யத்தில்
பரவிடவும் அங்குப்பதி னெண்கணமும்
பகர்முப்பான் மூன்று கோடி
விரவமரர் குழுவும்முனி வோர்குழுவும்
விளம்பரும்பே ரன்பால் ஏத்திப்
பரவிநின்று பன்மலர்மா மழைசொரிந்தார்
பரமகுரு வாழ்க வென்றே. 375

விடியலைந்து நாழிகையின் முனர்அண்ணல்
எழுந்தருளும் மலர்வி மானம்
அடியர்குழு வோடுதிரு வடிப்பிள்ளை
யகம்நோக்கி வந்து சேர
நெடிதால முடன்கர்ப்பூ ரம்காட்டி
நிறையடியார் அரவென் றார்ப்பப்
படியிலுறு பூர்ணமதி போலண்ணல்
அவ்வகத்துட் பரிந்து புக்கார். 376

தூண்டரிய சுடர்விளக்கைச் சோதியொளி
மணிக்குன்றைத் துரிய நாட்டை
ஆண்டருள்பே ரருளரசை அடியவர்கட்
குள்விளங்கும் அமுத வூற்றைக்
காண்டகுபே ரருட்கடலைக் கண்மணிக்கும்
உண்மணியாய்க் கலந்த தேவைப்
பூண்டகுமெய் யன்போடு சூழ்ந்தடியர்
போற்றியவா றுள்ளே சென்றார். 377

ஆனத்தூர்

சோழவளநாட் டினுக்கும் நற்றொண்டை
நாட்டினுக்கும் நடுவில் மேவி
ஏழிசைபா டப்பரும்சுந் தரரும்அவ
தரித்திறைவ னின்சீர் பாடும்
கேழ்கிளர்நன் னாடாய்அன் பறம்வாய்மை
கல்வியுயர் கேள்வி மிக்கோர்
வாழ்வுறுநா டாயொளிரும் திருமுனைப்பா
டிப்பெயரால் வயங்கும் நாடே. 378

நடுநிலையில் தவறாத நற்குடிமக்
களைக்கொண்ட நலம்சால் நாடு
கடிகமழ்நன் மலர்வனங்கள் கனிகள்தரு
மரங்கள்பல கவின்செய் நாடு
நெடியவளம் எவ்விடத்தும் நிறைக்கும்புனல்
பெண்ணைநதி கெடில நன்னீர்
மடைகொள்வயல் தொறும்வாழை நெல்கரும்பா
தியபயிர்கள் வளர்க்கும் நாடு. 379

திருவெண்ணெய் நல்லூர்தி ருத்துறையூர்
திருவாமூர் நாவ லூரொண்
திருவதிகை வடலூரா தியசிறந்த
திருத்தலங்கள் சூழ நாப்பண்
முருகன்சிவன் கணபதிமால் மூதலான
மூர்த்திகள்வாழ் பதினெண் கோயில்
மருவுவள மிகும்ஆனத் தூரில்அற
மும்பொருளும் வளரும் நன்றே. 380

அப்பதியில் வேளாளர் நெசவாளர்
ஆதியினத் தவர்கள் வாழ்வர்
செப்பினிய தெலுங்குமொழி பேசுரெட்டி
யினத்தவரும் சிறந்து வாழ்வர்
ஒப்பில்குண மிகுமூலைக் கம்பத்தம்
ராமலிங்க ரெட்டி யார்அந்
நற்பதியில் பலர்க்கும்உத விடும்தூய
நற்பண்பொ டினிது வாழ்ந்தார். 381

முன்செய்தவத் தின்பயனுல் முனிவர்களில்
தலைசிறந்த முனிவ ரான
பொன்செய்அரு ளொளியண்ணல் புனிதஅருட்
சட்டநெறி போற்றி மேலாம்
இன்சொல்அறம் அன்பூக்கம் வினைத்தூய்மை
வாய்மையிவை யுடையோ ராகி
மின்செயொற்றை மருப்பினன்றன் மிளிர்மலர்த்தாள்
துதித்தினிது விளங்க லானுர். 382

திட்டமிட்டுச் செகத்தி லுறுமுயிர்த்திரளைத்
திருத்தவந்த ஞானச் செம்மல்
சட்டநெறி பேணடியார் இலங்களில்நன்
றருட்பயிரை வளர்த்தற் காக
இட்டமுடன் அடிக்கடிசென் றச்சம்ஐய
மாதியெலாம் அகற்றி யின்ப
நிட்டைநிலை யினிதருளி அவரிலத்தில்
ஒருசில நாள் தங்குவாரால். 383

அவ்வாறி ராமலிங்க ரெட்டியார்க்
கருள்நல்கி யவ்வூ ரின்கண்
ஒவ்வாத நெறிவிலக்கி ஒருங்கடியார்த்
திரள்சேர்த்தின் னருள்பு ரிந்து
செவ்வாய்மை நெறியிலுறும் ஐயமெலாம்
தீர்த்தருளித் தேசு கூட்டி
உவ்வோடவ் வும்மவ்வும் ஒன்றுமறை
உபதேசித் தருள்வார் அண்ணல் 384

ஜகந்நாத ரெட்டியாரை ஆட்கொண்டமை

அந்தநல்லூ ரினில்தெலுங்கு நூல்கள்மிகப்
பயின்றநல்ல பண்பார் அன்பர்
சந்தமிகு சின்னகம்பத் தத்தலைவர்
ஜகந்நாத ரெட்டியார்க்கு
வந்தசுர நோய்மூன்று மாதமாய்த்
தீராமல் வயிறும் காலும்
நந்தலின்றி வீங்கியது; நீர்இறங்க
வில்லைநிலை வற்ற தன்றே. 385

பண்ணுருட்டி யினிலிருந்தாங் கிலவைத்யர்
வந்துபல விதசி கிச்சை
பண்ணிவந்தார்;இடையிடையே தமிழ்மருத்து
வம்தேர்ந்தோர் பலரும் பார்த்தார்
நண்ணியநோய் தீராதென் றெல்லோரும்
நவின்றுகைவிட் டார்க ளங்கே
தண்ணெனுமே னியைத்தொட்டுப் பார்த்திவர்க்குச்
சன்னிமிகக் கடுமை யென்றார். 386

தொண்ணூறு நாழிகையிச் சன்னியிருந்
திடும்ஆயுள் தொலைக்கும் என்றார்
தொண்ணூறில் எண்பதுநா ழிகைதீர்ந்து
விட்டதுபத் துள்ள தென்றே
எண்ணினர்அவ் வமயத்தில் இனியஅருட்
சட்டநெறி யினைப்ப ரப்பும்
அண்ணலார் உடையவன்தண் ணருள்வந்து
சேர்ந்ததுபோல் அவ்வூர்க் குற்றார், 387

அருட்சட்ட அடியாராய் இருந்துவரும்
அவ்வூர்மூ லைக்கம் பத்தம்
திருமிக்க ராமலிங்க ரெட்டியார்க்
குச்சேவை தருவார் போல
வரும்அண்ண லாரைத்திருச் சாத்தனூர்
பெரியகம்பத் தத்த லைவர்
தெருள்மிகுசட் டத்தடியார் முத்துரா
மச்செம்மல் அழைத்து வந்தார், 388

தம்சிற்றப் பாஉடம்பின் நிலையனைத்தும்
அண்ணலிடம் சாற்றி நின்ருர்;
செஞ்சுடரின் பேரொளியாய் அடியருளத்
திருந்தருள்செய் சீரார் அண்ணல்
எஞ்சலின்றி இறைவனருள் உடனிருக்க
ஏன்அஞ்ச வேண்டும் என்ன
அஞ்சலருள் புன்னகையோ டருளுருவாய்
அவணமர்ந்து திகழ்ந்தார் நன்றே 389

வினைதவிர்த் தற் கெழுந்துபிணி யாளர்சிர
மீதருளால் தம்தி ருக்கை
யினைச்சற்று சூட்டரெட்டி யார்க்குநினை
வெய்தியதால் அவர்வி ழித்துக்
கனைத்தவணம் யாரதென்ருர் சாமியெனக்
கண்டுகொண்டார் தன்னைத் தூக்கி
நனியமர்த்தி டப்பணித்தார் அருகிருந்தோர்
படுக்கையினில் அமர்த்தி ஞர்கள். 390

உடம்பென்ன செய்கிறதென் றண்ணல்வின
விடரெட்டி யார்உ ரைப்பார்
இடுப்புதலை கால்முதலாம் இடங்களில்நோ
கின்றதென இயம்பி ஞர்அவ்
விடங்களிலெல் லாம்நீறு தடவும்படி
யண்ணலார் இனிது சொன்ஞர்
அடங்கரிதாம் தாகமென்ன, நீர்கிணற்றி
லிருந்தண்ணல் கொணரச் சொன்ஞர். 391

திருநீறு சிறிததனிற் போட்டிடச்செய்
தவர்விரும்பிப் பருகு மட்டும்
தருவீர்என் ருர்அவரும் செம்புசெம்பாய்க்
குடித்தார்நீர் இறங்க வில்லை
பருவரலுள் ளதுவென்னச் சாதநீர்
பருகிடுமா றண்ணல் சொன்ஞர்
தரப்பெற்ற தைக்கண்டவர் தமக்கையழ
மனைவியழத் தொடங்கி விட்டார். 392

சன்னியிருக் கும்போது நீர்சாத
நீர்தருதல் தகுமோ என்று
உன்னியுரைத் தழமற்றை உறவினரும்
பார்த்துவந்து ரெட்டி யாரின்
சென்னிமுகம் உடம்பினிற்கை வைத்தழுதார்
நினைவுசிறி தேனு மின்றி
முன்னர்இருந் தவர்எழுந்துட் கார்ந்திருத்தல்
வியப்பென்ன மொழிந்தா ரல்லர். 393

திருச்சாத்த னூர்இரெட்டி யாரைச்சிற்
றனையத்தை முதலா னோர்கள்
பெரும்பாவி த்ரோகியென வைதனர்தப்
பித்தவறிப் பிழைக்க வுள்ள
ஒருப்ராண னைப்போக்கு தற்கேயண்
ணலைக்கொணர்ந்தா ரென்று நொந்தார்
திருமுத்து ராமரெட்டி யார்சிறிதும்
தளர்வின்றி யிருந்தா ரங்கண். 394

அண்ணலா ரைப்பற்றி அவர்மிகநன்
கறிந்திருந்தா ராத லாலும்
அண்ணலார் தரிசனம்கி டைத்துவிட்ட
பினர்அச்ச மில்லை யென்றும்
திண்ணியதம் சிறியதந்தை யார்க்குற்ற
பிணிதீர்த லுறுதி யென்றும்
எண்ணினராய் அணுவளவும் கலக்கமின்றி
இன்னருளை இறைஞ்சி நின்றார். 395

அண்ணலுரைப் படிமறுநாள் அதிகாலை
ஜகந்நாத ரெட்டி யார்க்குத்
தண்ணீர்மு வேழுகுடம் விட்டுநீ
ராட்டல்எனத் தீர்மா னித்தார்;
உண்ணீர்மை யோடவரும் நீராடி
னார்; கருணை உருவ மான
அண்ணலார் எல்லோர்க்கும் ஊக்கமுற
ஆனந்த நடனம் செய்தார். 396

நீராடி முடிந்திடும்போ தண்ணலவண்
கிணற்றருகே நின்றி ருந்தார்;
சீராரும் இறைவனினி துறையுமவர்
திருவுருவை அடியார் நாளும்
ஏரார்நல் வலம்புரிந்து பயன்பெறுவர்
என்றறிந்த ரெட்டி யாரும்
நாரார்உள் ளத்தினெடும் வலம்புரிந்தார்
முழுமைநலம் கைகூ டிற்றே. 397

மாலையும்அவ் வாறேநீ ராட்டம்நடை
பெற்றதது முதல்சட் டத்தின்
சீலம்நனி பேணுநராய் ஜகந்நாத
ரெட்டியார் திகழ லானார்
சாலஅரு ளால்அவரைத் தடுத்தாள
வேஅண்ணல் அவ்வூர் சார்ந்தாற்
போலஉற்ற(து) அவர்குடும்பத் தனைவருமே
சட்டநெறி போற்றி வாழ்ந்தார். 398

மாயையெனும் இருள்நீக்கி மாணருட்பே
ரொளிவிளக்கும் ஞான வள்ளல்
தூயஜகந் நாதரெட்டி யார்க்குற்ற
சுரநோயைத் தவிர்த்த செய்தி
ஏயசெவி யாற்கேட்டும் கண்ணாரக்
கண்டுமன்பார் இதய முள்ளோர்
நேயமொடு சட்டநெறி கைக்கொண்டு
நிறைநலங்கள் எய்த லானார். 399

அதிகாலை நீராடி ஐங்கரனார்
திருக்கோயில் வலம்பு ரிந்து
துதிபாடி வணங்குகென அண்ணலார்
அருளியகட் டளைக்கி ணங்க
அதிகாலை வழிபாடாற் றத்தக்க
கணபதியா லயமொன் றிங்கே
இதுபோது நிறுவில்நல மாமென்ன
அண்ணலிடம் இயம்பி னார்கள். 400

வேறு

அளிசுரக்க அருட்சட்ட நெறியருளற் புதவேந்தர்
களிசுரக்க விழையடியார் கருத்தினுக்கங் கிசைவுதர
ஒளிசுரக்கும் முன்னவனுர் உருவமுள்ள இடமெதுவோ
தெளிவுறநன் குணர்த்தினிங்கு சேர்ப்போமென் றனர்
அடியார். 401

இங்கிருந்தொர் கல்தொலேவில் பிள்ளேயார் மூலேயினில்
துங்கநன்னீர் நன்ருேடும் கால்வாயின் சூழ்கரையில்
தங்குநிழ லார்அரச மரத்தின்கீழ் கணபதியின்
மங்களச் சிலேகளிரண் டுள்ளனபோய்க் காண்மின்
என்ருர். 402

ஒருசிலேயை அம்மரத்தின் வேர்பிடித்துக் கொண்டதுமற்
ெருருசிலேயைப் பிடிக்கஅரு குற்றுளது சென்றதனே
ஒருவண்டி யினிலமர்த்திக் கொணர்களென்ருர் அண்ணலந்தத்
திருவுருவைக் கண்டவ்வா றேகொணர்ந்தார் சீரடியார். 403

வேறு

அன்பரெலாம் வியப்புற்ருர் அணிதிருவீ
திகளிரண்டு சேரி டத்தில்
தும்பிமுகன் திருவுருவைத் தூயநன்மே
டையில்அமர்த்தித் தொண்டர் சூழ்ந்து
கும்பிட்டருட் பேறுபெறு மாறுதிருக்
கோயிலொன்றைக் கட்டு வித்தே
இன்பம்அருள் அண்ணலம்மூர்த் தியின்சிரத்தைத்
தம்கரத்தால் இனிது தொட்டார். 404

கலிவரத கணபதியென் றிணேயில்திருப்
பெயர்சூட்டிக் கருணே யோடும்
அலகில்பல அருளாடல் இவர்புரிவார்
அன்பரெலாம் அருள்பெற் றுய்வீர்
நிலமிசையெல் லாநலமும் நிட்டைநல
மும்பெற்றுத் திகழ்வீர் என்னக்
குலவுபெருங் கருணேயினுல் குருபரனுர்
கூறஅன்பர் அரவென் ருர்த்தார். 405

அரஹரவென் றடியர்அன்பர் ஒலிமுழக்க
அணிதிகழ்தூ ரியங்க ளார்ப்ப
மருவுகுட நீராட்டித் திருமஞ்ச
னம்புரிந்து மாலை சூட்டிப்
பொருவில்திரு வாராத னம்புரிந்து
புனிதமிகு நீறு தீர்த்தம்
திரளுமனை வருக்குமளிக் கச்செய்து
திருவருள் புரிந்தார் அண்ணல். 406

பத்தியுடன் சட்டஅடி யவர்களும்பல்
லன்பர்களும் பரவிப் போற்றிச்
சித்தமிசை நினைத்தவெலாம் திருவருளால்
எய்திடப்பெற் றின்பம் மேவிப்
பத்தர்களாய் நனிபொலிந்தார் பலருமின்றும்
அத்தனியைப் பரவிப் போற்றி
மெத்தநலம் பெறுகின்றார்; குருபரனார்
அருட்சிறப்பு விளம்பற் காமோ? 407

விரிகடல்சூழ் உலகில்அருள் விளைவென்னப்
பொலியும்உயர் விமல மூர்த்தி
பொருவில்வட திசையிலுள புண்ணியச்சட்
டத்தடியர் தம்மைக் காண
வருபொழுதெல் லாம்ஆனத் தூர்வருவார்.
இராமலிங்க ரெட்டி யாருக்(கு)
அருள்புரிவார் ஏனையடி யவரும்வந்து
சேவித்தின் னருள்பெற் றுய்வார். 408

எழில்மிகும்அவ் வீடுநல்ல திருமணமா
ளிகைபோல இலங்கும் அங்கண்
தழைவுறுமங் களவாத்தி யம்காலை
மாலையினில் தழங்கி யோங்கும்
விழுமியசீர் அடியார்கள் அன்பரெலாம்
திரண்டுவந்து விமல னாரைத்
தொழுதுசுற்றிச் சூழ்ந்தமர்ந்து தூயஅரு
ளுரைகேட்டின் பெய்தி உய்வார். 409

அவ்வையார் ஊறல்

பொதிகைமலை இயற்கையெழி லோடொன்றிப்
பொலிந்திருந்த புனித மூர்த்தி
நதியெனும்தென் பெண்ணையினின் றும்பிரிந்து
செல்லும்வரத் தாற்றின் தென்பால்
இதயமகிழ் வோடவ்வைப் பெருமாட்டி
யருள்புரிய இனிதுண் டாகி
இதமுறஊ றிடுமூறல் எழில்காண
இன்னடிய ருடன்செல் வாரால். 410

அவ்வையார் ஊறலரு கழகுறநன்
கமைந்திருந்த சோலை தன்னில்
செவ்வையுற அடியார்கள் சூழ்ந்தமர்ந்து
செவிமடுத்தின் பெய்தும் வண்ணம்
எவ்வமறுத் தாளண்ணல் இனியஅரு
ளுரைகள்பல இயம்பு வார்கள்
பவ்வமகற் றுரைகேட்டுப் பறவைகளும்
குருவைக்கண்டு பரவி யுய்யும். 411

உறையூர் வைத்தியர்

தானத்தில் மிகுந்திலங்கித் தவநிறைவைத்
தகவுறநன் றருளும் தூய
ஆனத்தூ ரினில்அண்ணல் தங்கியடி
யவர்க்கருள்செய் திருந்த நாளில்
மானவர்க்கு மருந்தளிக்கும் உறையூர்வைத்
தியர்இன்ப வள்ள லாராம்
ஞானகுரு பரர்பாத நளினங்கள்
பணிந்திறைஞ்ச நாடி வந்தார். 412

எல்லையில்சீ ருடையரென அண்ணல் பதம்
இறைஞ்சவந்த அவர்தாம் செய்யும்
நல்லதொழி லானமருத் துவம்சட்ட
நன்னெறிக்கு முரணு யிற்றே
ஒல்லையிற்சென் றெங்ஙனம்சே விப்பதெனத்
தயங்குகையில் உயிர்கள் தோறும்
புல்லியிருந் தினிதோம்பும் புனிதருணர்ந்
தருள்முறுவல் பூக்க லானூர். 413

மருத்துவரின் நல்லுள்ளப் பக்குவத்தை
நன்றுணர்ந்த வள்ள லாரும்
திருத்தமுற நிற்குமிவர் ஆர்? தயக்கம்
ஏன்? அருகில் வரட்டும் என்னப்
பொருத்தமுறப் பணித்திடலும், சிரத்தின்மிசை
பொருந்துகரத் துடனும் நன்னீர்
அருத்தியுறப் பொழியும்விழி யுடனும்வலம்
வந்தன்பின் மயமாய் நின்றார். 414

எட்டெனும்அங் கமும்புவியில் தோயும்முறை
யால்இறைஞ்சி யெழுந்த போதில்
சட்டநெறி யினைமேற்கொண் டொழுகிடலா
மேயென்னச் சாமி கூற
சட்டநெறி யினில்மருந்தா காது; தமி
யேன்மருந்தால் தொழில்செய் கின்றேன்;
சட்டநெறி யினைத்தமியேன் மேற்கொளல்எவ்
வாறென்னத் தாழ்ந்து நின்றார். 415

புன்முறுவல் பூத்தண்ணல் புனிதவுளத்
தன்பரையின் னருளால் நோக்கி
நும்மருந்தெல் லாம்கடலிற் கொட்டிவிட்டு
நிமலனருள் துணையென் றுன்னி
நன்மருந்து நாடிவரும் அன்பருக்குத்
திருநீறு நல்கு வீர்இச்
சென்மமெனும் பிணியும்பிற பிணியும்வில
கிப்போகும் செய்வீர் என்றார். 416

வெண்ணிறம்கொள் திருநீற்றை அனைவருக்கும்
கொடுத்திட்டால் விபூதி யீதென்
றெண்ணிமக்கள் வாரார்பின் என்செய்வ
தென்னமருத் துவர்இயம்ப
நண்ணுபல விதவண்ணப் பொடிநீற்றில்
கலந்துவைத்துக் கொள்ளுவீர் என்(று)
அண்ணல்அருள் செயஅவ்வா றேசெய்தம்
மருத்துவர்பே ரருள்பெற் றுய்ந்தார். 417

வேறு

அஞ்சேல்என் றருள்புரியும் அண்ணலருட் கருணையினல்
நஞ்சேயும் பிணிபலவும் நன்னீற்ருல் தீர்த்தருளி
அஞ்சாநல் வாழ்வாற்றி அவனிமிசை பலர்சட்டத்
துஞ்சாநன் னெறிசாரத் துணையாகித் திகழ்ந்தனரால். 418

வேறு

ஜகந்நாத ரெட்டியா ரின்தமக்கை
ஆதிலஷ்மி அம்மை யார்க்கு
மிகமயக்க மெய்தியொரு நாள்சாய
நேர்ந்திடமெய்ஞ் ஞான வள்ளல்
தகவுறக்கை களைப்பிடித் தமர்த்தியதாய்க்
கண்டுமயல் தெளிந்த பின்னர்
நெகிழ்ந்துருகிச் சாமியெங்கே யெனக்கேட்டு
நிறையன்பாற் போற்றி நின்ருர். 419

வேறு

அப்பதியில் உறைவோர்க்கும் அடுத்துள்ள பல்வேறு
நற்பதியில் உறைவோர்க்கும் நாடிவரும் அன்பருக்கும்
செப்பருஞ்சீர் அண்ணல்அருள் திருக்காட்சி நனிநல்கி
ஒப்பில்திரு நெறியருளி ஓம்பியதவ் வானத்தூர். 420

## திருச்சாத்தனூர் - 1

### அருட்கொடி சுவாமி துதி

திருவருளின் வடிவாகிப் போந்தஇரு
டியர்பட்டிச் செம்மல் பாதம்
திருவருளாற் போற்றியருட் சட்டநெறி
பேணியருட் செம்மை பூண்டு
திருவருளால் அருட்கொடியைத் திருமாளி
கையில்நாட்டித் தேவர் போற்றத்
திருவருளைப் பரப்பும்அருட் கொடிச்சாமி
திருவடிகள் போற்றி உய்வாம். 421

வேறு

முத்தாய் விளங்கும் முழுமுதல் அருளை
இத்தா ரணிக்கே இனிதுநன் றருளச்
சத்தா யிலங்கும் சட்டப் பொருளை
முத்தா யெடுத்த மோனீ போற்றி. 422

வேறு

தம்பிரான் தோழர் என்று தகவுறப் போற்றப் பெற்ற
நம்பியா ரூரர் பெண்ணை நதியின்தென் பால்நன் றோங்கும்
இன்பமார் வெண்ணெய் நல்லூர் என்றுபா ராட்டி யுள்ள
பொன்புரை பெண்ணை யாற்றின் தென்புறம் பொலியும்
நல்லூர். 423

வளமிக வுடைய பச்சை வயல்களால் சூழப் பெற்றும்
தளவம்தண் துளவ மாதி தகுமணம் பரவப் பெற்றும்
கிளர்முகில் தழுவு தெங்கு கேதகை சூழப் பெற்றும்
வளர்அரு ளொளிப ரப்பி வயங்கும்நற் சாத்த னூரே. 424

நனிபல குடிகள் வாழும் ஊரென நவிலற் கின்றித்
தனியர சாட்சி செய்யும் தண்ணளி சால்கு டும்பம்
இனியதொன் றெனுமா றங்கண் இலகிய திதயப் பண்பார்
புனிதநன் முத்துவீரா ரெட்டியார் குடும்பம் நன்றே. 425

அணியணி யாய்ப்போர் வீரர்
நிற்றல்போல் தாலம் தோன்றும்
துணையெனக் காவ லென்னத்
தோமில்நற் றெய்வ மென்ன
மணிகண்ட னென்னும் சாத்தன்
வயங்குவ தால்அவ் வூரை
இணையில்நல் லெழிலார் சாத்த
னூரென இயம்ப லானர். 426

இறைவனை யடைய வேண்டும் என்னின்முன் பாடு பட்டுத்
துறையறிந் தேக வேண்டும் எனச்சரித் திரங்கள் கூறும்;
நிறையருட் சட்டப் பக்தர் புகழ்திருச் சாத்த னூர்க்குச்
செறிவயல் வரப்பு வாய்க்கால் கடந்துதான் சேரல்
வேண்டும். 427

நலம்மிகு நாக ரீக வசதிகள் ஏதும் அங்கண்
பலன்தரா வாத லால்மெய்ப் பக்தர்கள் முயன்று சேர்வர்;
நிலவுமெய்த் தவம்செய் வோர்க்கு நிறைநலம் பயப்ப தாகி
இலகுநல் லமைதி யெங்கும் என்றும் நல்கிடுவ தவ்வூர். 428



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளால் ஆட்கொள்ளப்பெற்ற

அருட்கொடி சுவாமிகள்

என்கிற திருச்சாத்தனூர் திரு. முத்துராம ரெட்டியார் அவர்கள்.

வேறு

தம்பிரான் தோழர் என்று தகவுறப் போற்றப் பெற்ற
நம்பியா ரூரர் பெண்ணை நதியின்தென் பால்நன் ஞேங்கும்
இன்பமார் வெண்ணெய் நல்லூர் என்றுபா ராட்டி யுள்ள
பொன்புரை பெண்ணை யாற்றின் தென்புறம் பொலியும்
நல்லூர். 423

வளமிக வுடைய பச்சை வயல்களால் சூழப் பெற்றும்
தளவம்தண் துளவ மாதி தகுமணம் பரவப் பெற்றும்
கிளர்முகில் தழுவு தெங்கு கேதகை சூழப் பெற்றும்
வளர்அரு ளொளிப ரப்பி வயங்கும்நற் சாத்த னூரே. 424

நனிபல குடிகள் வாழும் ஊரென நவிலற் கின்றித்
தனியர சாட்சி செய்யும் தண்ணளி சால்கு டும்பம்
இனியதொன் றெனுமா றங்கண் இலகிய திதயப் பண்பார்
புனிதநன் முத்துவீரா ரெட்டியார் குடும்பம் நன்றே. 425

அணியணி யாய்ப்போர் வீரர்
நிற்றல்போல் தாலம் தோன்றும்
துணையெனக் காவ லென்னத்
தோமில்நற் றெய்வ மென்ன
மணிகண்ட னென்னும் சாத்தன்
வயங்குவ தால்அவ் வூரை
இணையில்நல் லெழிலார் சாத்த
னூரென இயம்ப லானூர். 426

இறைவனை யடைய வேண்டும் என்னின்முன் பாடு பட்டுத்
துறையறிந் தேக வேண்டும் எனச்சரித் திரங்கள் கூறும்;
நிறையருட் சட்டப் பக்தர் புகழ்திருச் சாத்த னூர்க்குச்
செறிவயல் வரப்பு வாய்க்கால் கடந்துதான் சேரல்
வேண்டும். 427

நலம்மிகு நாக ரீக வசதிகள் ஏதும் அங்கண்
பலன்தரா வாத லால்மெய்ப் பக்தர்கள் முயன்று சேர்வர்;
நிலவுமெய்த் தவம்செய் வோர்க்கு நிறைநலம் பயப்ப தாகி
இலகுநல் லமைதி யெங்கும் என்றும் நல்கிடுவ தவ்வூர். 428



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளால் ஆட்கொள்ளப்பெற்ற

அருட்கொடி சுவாமிகள்

என்கிற திருச்சாத்தனூர் திரு. முத்துராம ரெட்டியார் அவர்கள்.

ஆன்மிக வளர்ச்சிக் கேற்ற அருந்துணை புரியும் சூழல்
தான்மிக உடைய தாகித் தழையும்அத் தலத்தின் கண்ணே
தார்மிக முத்து வீரா ரெட்டியார் தக்க பன்னி
ஏர்மிகு கோகி லாம்பா ளோடறம் இயற்றி வந்தார். 429

இருவரும் முன்னர் செய்த
இணையில்நற் றவத்தின் பாங்கால்
இருவிழி களைப்போல் செல்வர்
இருவர்தோன் றிட்டார் மூத்தோர்
திருமிகு முத்து ராம
ரெட்டியார் எனத்தி கழ்ந்தார்
மருவிய இளையோர் முத்து
நாரணர் எனவ ளர்ந்தார் 430

அழகும்நற் குணமும் சான்ற
அவ்விளஞ் செல்வர் தம்மை
விழுமிய மகிழ்ச்சி பொங்க
மேன்மையாய் வளர்த்திட் டார்அக்
கெழுதகு சிறுரும் அன்பு
கிளர்ந்தெழும் உளத்த ராகிச்
செழுமையும் தெய்வப் பற்றும்
உடையராய்த் திகழ லானுர். 431

இவர்களிவ் வாறு செல்வத் தின்பமாய் வளரும் நாளில்
இவர்களை யீன்ற அன்னை இறையடி யடைந்தார்; பின்னர்
தவலரும் சிறப்பின் மிக்க தந்தையார் வடலூர் வள்ளல்
தவத்திரு நீற்ருற் போந்த தவக்குயி லம்மை யாரை 432

புவியினில் இரண்டாம் தார
மெனப்பொலி மணத்தா லேற்றுர்
தவக்குயி லம்மை யார்க்குத்
தனியிளங் குழவி யாகத்
தவப்பயிர் வளர்க்கும் சொர்ணத்
தாய்அவ தரித்தார்; பக்தர்
பவப்பிணி தவிர்க்கும் அத்தாய்
பயில்திறம் பின்னர்க் காண்போம். 433

மூவரில் மூத்தோ ரான
முத்துரா மப்பேர்ச் செம்மல்
மேவுநன் முருக பக்தி
மிகுந்துகார்த் திகைநாள் தோறும்
தேவர்கள் போற்று மைலம்
சென்றுசே விப்பார்; நோய்கள்
மேவிடின் மருந்துட் கொள்ளார்;
ப்ரார்த்தனை மிகவும் செய்வார். 434

திருவருள் துணையைக் கொண்டே
உறுபிணி தீர்த்துக் கொள்வார்;
மருவிடு நாட்டு வைத்யர்
மருந்துதந் தாலும் வாங்கிப்
பொருள்மருத் துவருக் கீவார்;
புசித்திடார் மருந்தை யென்றும்;
அருள்நல முடைய ராகி
அமைதியாய் வாழ்ந்து வந்தார். 435

தங்கையா ரான சொர்ணத்
தாய்மணம் செய்து கொண்டு
பொங்கறம் நடத்து பிள்ளை
யார்குப்பம் போக எண்ணி
துங்கநல் விழுப்பு ரத்தில்
புகைவண்டி ஏறிச் சென்றார்
அங்குறை யூர்வாழ் வைத்யர்
அருள்திருத் துறையூ ருற்றார். 436

அவர்அந்த வண்டி யேறி
அருகினில் அமரக் கண்டே
இவர்அவ ரோடும் அன்பாய்
இனிதள வளவ லானார்;
தவமிகு ரெட்டிப் பட்டிச்
சாமியின் சட்ட மாண்பும்
அவர்அருட் சிறப்பும் வைத்யர்
இரெட்டியார்க் கினிது ரைத்தார். 437

பக்குவ முற்ற தூய அடியரைப் பரிந்து தேடித்
தக்கநல் லருள்பா லித்துச் சட்டநன் னெறியை நல்கி
திக்கெலாம் விளங்கச் செய்தே சிகர்திருச் சாத்த னூர்பால்
நற்கரு ணையினால் நாட்டம் கொண்டனர் ஞாலம் வாழ. 438

இப்படி யொருநற் சாமி
இருப்பரேல் அவரை நாமும்
இப்பொழு தேகாண் போமென்
றிரெட்டியார் எண்ணம் கொண்டார்;
ஒப்பில்நற் சாமி வார்கால்
பட்டினுக் கடுத்த ஊராம்
நற்பதி வீரா ரெட்டிப்
பாளையத் திருத்தல் கேட்டார். 439

தேசிகர் மகிமை யென்னும்
தேன்செவி வழியாய்ப் பாய்ந்து
மாசில்பே ரின்பம் நல்க
வள்ளலைக் காண முன்னே
நேசம்மிக் குடைய ராகி
நிமலரை விரைவிற் காணும்
யோசனை யோடும் வார்கால்
பட்டினில் இறங்கி னரால். 440

குருநாதர் தரிசனம்

மருத்துவ ருடனே சென்ற
ரெட்டியார் வள்ளல் மேவும்
திருத்தகு வீரா ரெட்டிப்
பாளையம் சென்ற போது
பொருத்தமார் அடியார் அன்பர்
புடையமர்ந் திருக்க அண்ணல்
அருட்டவப் பழமாய்க் காட்சி
யளித்தனர் இரெட்டி யார்க்கே. 441

அடர்வினை யகற்றிப் பேணும் அண்ணலார்க் கிருபுறத்தும்
சுடர்விட்டுப் பொலியும் குத்து விளக்குகள் பொலிய எங்கும்
படர்அரு ளொளியில் தோய்ந்து பக்தர்பே ரின்பம் துய்க்க
தொடர்தவப் பயனுற் கண்ட ரெட்டியார் தோய்ந்தார்
அன்பில். 442

காலமெலாம் கடந்தொளிரும் கருணையுருக் கற்பகத்தை
சீலமெலாம் சட்டமெனத் திரட்டியருள் தேசிகனை
மூலமறைக் குட்பொருளை மும்மலத்தைச் சுடும்கனலை
ஞாலமுதல் உலகனைத்தும் நனிதொழுகோ வினைப் பணிந்தார். 443

அண்ணலார்க் கிரெட்டி யாரின்
விவரம்வைத் தியர்உ ரைத்தார்
உண்ணெகிழ் வோடும் மேனி
நிலத்தினில் ஒன்றத் தாழ்ந்து
கண்ணினின் றிழிநீ ரோடும்
வணங்கிக்கை கட்டி நின்றார்
அண்ணலும் அவருள் ளத்துள்
ளன்புகண் டருள்சு ரந்தார் 444

அன்றிர வுணவுண் ணாமல் பால்பழம் அருந்தி யங்கு
நன்றுவைத் தியர்தம் மோடும் நலமுற உறங்கிப் பின்னர்
துன்றுநல் விடியற்காலை யெழுந்துதண் ணீரில் மூழ்கி
வென்றிநீ றணிந்து ஞான விமலனார் திருமுன் வந்தார். 445

வேறு

மாசகன்ற மணிக்குன்றாம் மன்னவரை
வலம்வந்து வணங்கிப் போற்றி
ஆசிகள்பெற் றருள்நீறும் தீர்த்தமுமேற்
றருட்சட்ட அடியா ரானார்;
பாசபந்தங் களையகற்றிப் பரஞான
வீடுவிழை ரெட்டி யார்நற்
கோசமைந்தும் கடந்தஉயர் குறியெய்தக்
கோமானார் விதையூன் றிட்டார். 446

நோக்கரிய நோக்கருளி நோன்மைமிகக்
கூட்டுவித்துப் பேணும் அண்ணல்
ஆக்கம்அருள் நல்லுரைகள் பலஅருளி
அடியவர்கட் கருள்பா லித்தார்
ஊக்கமொடும் செவிமடுத்தி ரெட்டியார்
உண்மையன்பில் தோய்ந்தி ருந்தார்
நீக்கமற நிறைமுன்னோன் உருநித்ய
பூசைக்கு வேண்டும் என்றார். 447

திருப்பாதி ரிப்புலியூ ரினிற்சிற்பி
யொருவரிடம் சிறந்த வொற்றை
மருப்புடை விநாயகரைக் கண்டுவந்த
தாய்அடியார் ஒருவர் கூற
விருப்பொடவ் விநாயகரைப் பெற்றுவர
விமலர் அருள் செய்த வண்ணம்
உரப்புமிகும் உளத்தொடிரு பத்தைந்து
வெண்பொற்கா சுடனே சென்றார். 448

சிற்பியில்லம் சேர்ந்துவிநா யகமூர்த்தி
திருவுருவைப் பார்த்து நன்றே
அற்புதமாய் அமைந்துள்ள துணர்ந்திருபத்
தைந்துரு பாயும் தந்து
பொற்புடன்அம் மூர்த்தியைப்பெற் றண்ணலிடம்
போந்துகொடுத்(து) ஆசி பெற்றார்
இப்பொழுதும் அம்மூர்த்தி யினைக்காண்போர்க்
கின்பம்மிக வெய்து மன்றே. 449

வேறு

பிள்ளையார் குப்பம் செல்லும்
பயணத்தைப் பிறகு தள்ளி
வள்ளலா ரோடும் வார்கால்
பட்டினில் வண்டி யேறி
விள்ளரும் அன்பாற் சென்று
விழுப்புரத் தினில்இ றங்கி
வள்ளலைப் பணிந்து தம்மூர்
வருதினம் எப்போதென்றார். 450

அருட்சட்ட அடியர் வாழ்திண் டிவனத்தை யடுத்த ஊராம்
பொருட்பெறு வைர வப்பேர்ப் புரம்நல்ல தணிய லாதி
தெருட்பெறு பதிகட் கேகித் திரும்புகா லினில்நன் றங்கண்
விருப்புற வரலாம் என்ன விளம்பினர் விமல னார்தாம். 451

பிரிவினைச் சகியா ராகி ரெட்டியார் பெருமான் பாதம்
பரிவுடன் போற்றிச் சாத்த னூர்க்குப்பண் டியினிற் சென்றார்
இரவெனப் பகலென் றின்றி அண்ணலார் அருளை யெண்ணி
அருள்நெறி யானசட்டம் அன்புடன் பேணி வந்தார். 452

உறுதிசால் உள்ளத் தோடும் உயர்ந்தநம் பிக்கை யோடும்
செறியும்உள் ளன்பி னேடும் திருநெறி பேண லுற்ருர்;
மறுவறு ஞான னந்த வாரியாய்ப் பிறங்கும் வள்ளல்
பொறிபுலன் களுக்கெட் டாமெய்ப் போகம்நன் றவருக்
கீந்தார். 453

சிவந்தபொன் நிறத்தி னேடு திகழன்பு கலந்த தாகி
நிவந்தநன் மேனி சேயின் சிரிப்பொடு நீண்ட தாடி
அவம்தவிர் அருளின் தோற்றம் அருந்தவச் செம்மை நீடு
பவம்தவிர் மேன்மை யாவும் படைத்தவர்
இரெட்டி யாரே. 454

திருச்சாத்த னூரிற் சக்ர
வர்த்திபோல் திகழிந் நம்பி
மருட்சார்பு நீக்க வந்த
மாண்புசால் சொர்ணத் தங்கை
அருட்சார்புக் குய்க்கும்தூய
அருட்சட்ட நெறிமேற் கொள்ளத்
தெருட்சார்ந்த துணையாய்த் தூண்டு
பவரெனத் திகழ்ந்தா ரன்றே. 455

வடதிசை சென்ற ஞான வள்ளலார் சாத்த னூர்க்குப்
புடவியும் வானும் போற்றப் போதரும் இனிய செய்தி
கிடைத்ததும் உள்ளத் துள்ளே கிளர்பெரு மகிழ்வி னேடும்
அடைந்தனர் விழுப்பு ரத்தி ரயில்நிலை யத்தில் நம்பி. 456

கைப்பறும் அமிர்த மன்ன கருணைவா ரிதியைக் கண்டு
செப்பரும் மகிழ்ச்சி பொங்கச் செறிவிழி யருவி பாய
ஒப்பரும் புளகம் ஆர்ந்த உடல்புறம் பலைப்பத் தூய
எற்பும்நன் றுருகும் அன்பி னிடைநனி தோய்ந்தார்
நம்பி. 457

பன்முறை பாரில் வீழ்ந்து பண்புற வணங்கிப் போற்றி
நன்மைசெய் பிறவி யீது; நானினி உய்ந்தே னென்ன
முன்மலி வினைகள் தீர்த்து முத்திநன் றருளப் போந்த
சின்மயச் செம்ம லாரை வண்டிமீ தமரச் செய்தார். 458

அடியவர்க் கெளிய ரான அண்ணலை அவரோ டுற்ற
அடியரை வண்டி கட்கு ளமர்த்தியன் போடும் நம்பி
கடிதினில் சாத்த னூரையடைந்தனர் கனிவி னோடும்
குடிலையின் உருவாம் ஞான குருவினை வரவேற் றிட்டார். 459

புனிதமார் இயங்கள் ஆர்ப்பப் பூரண கும்பம் காட்டி
பனிமலர்ப் பாதம் வாச நீரினாற் பரிவொ டாட்டி
நனிமகிழ் வோடந் நீரைச் சிரமிசை தெளித்துக் கொண்டு
தனியரு ளொளியி னுரைத் தவிசினி லிருத்தி னூரால். 460

மருவுநன் மணமார் தூய மலர்செறி மாலை சூட்டிப்
பரிவொடும் வலம்வந் தேத்திப் பார்மிசை வீழ்ந்தி றைஞ்சிப்
பரவும்நல் லடியா ரோடும் பக்தியால் போற்றி நின்று
கரவறும் ஞான வேந்தர் கழற்றுணை யெனவுட்
கொண்டார்.461

அரசபோ கத்தை யொத்த வளம்செறிந் தமையில் லத்தில்
இருகணின் மணியே யென்ன இதயத்துட் கருதிப் போற்றித்
திருவருள் வள்ள லார்க்குச் சிறந்தநல் லுபசா ரங்கள்
வரையறை யின்றிச் செய்தே வளர்பயன்
மிகப்பெற் றூரால் 462

அவருளத் திலகும் மேலாம் அன்பும்நல் லியற்கை யன்னை
அவண்திகழ் பொலிவும்தூய அமைதியும் அன்பர்க் கெல்லாம்
தவவளர்ச் சியினை நல்கும் தனிப்பெருஞ் சிறப்பும் நோக்கிப்
புவனியைத் திருத்தப் போந்த புனிதர்சின் னுள்தங்
கிட்டார். 463

நறுங்கனி யிருப்பி டத்தில் நன்றுமொய்த் தினிது நண்ணும்
எறும்பொழுங் கெனமெய் யன்ப ரினம்திரண் டினிது சூழ்ந்து
திறஞ்செறி யண்ண லார்தம் திருவடி துணையென் றேத்திப்
புறஞ்செலும் மனதை வென்று புனிதமெய்
திடக்கற் றூரால். 464

ஒருவர்நல் லவரு ளாரேல் அவர்பொருட் டுலகில் யார்க்கும்
பெருமழை பெய்யும் என்ன அவ்வையார் கழறி னூற்போல்
திருமிகு சாத்த னூர்நன் னம்பியால் செறிபன் மக்கள்
அருட்குரு சேவை பெற்றூர் அருட்சட்ட நெறிசேர்ந்
துய்ந்தார். 465

ஆட்கொள வந்த அண்ணல் அங்குசின் ஞட்கள் தங்கி
ஊக்கமிக் குடைய ஆனத் தூரினில் ராம லிங்க
வேட்கும்மெய்ஞ் ஞான வேட்கை மிகும்அடி யவர்க்கும் மேலாம்
ஆக்கமிக் கருள வுன்னி அடியவ ரோடும் சென்ருர். 466

அடியவர் திரண்டு வாழும் ஆனத்தூர்க் கண்ண லாரும்
அடிக்கடி சென்றை யங்கள் நீக்கிநல் லருள்பா லிப்பார்
அடரும்அன் புடைய நம்பி அண்ணலா ரைச்சே விக்க
அடிக்கடி ஆனத்தூர்சென் றருள்நல மெய்தி மீள்வார். 467

ஒருமுறை யானத் தூருக் கொப்பில்சீ ரண்ண லார்வந்(து)
அருமைசால் உபதே சங்கள் அடியவர்க் கருளும் நாளில்
இருமைநன் னலமும் நாடும் எழிற்சாத்த னூர்நன் னம்பி
குருமல ரடிகள் போற்றிக் கும்பிட்டூர்க் கழைத்துச்
சென்ருர். 468

தோரணம் பலவும் நாற்றிச் சூழ்பசுங் கதலி நாட்டி
பூரண கும்பம் நன்று பொற்புற அமைத்து வைத்தார்
ஏரணி மலர்நன் மாலை எழிலுறத் தூக்கி வாச
நீரினைத் தெளித்தங் கங்கும் நிரைவிளக் கேற்றி ஞரால். 469

தூரியம் முழங்க அன்பர் தூயநல் விருடிப் பட்டி
ஆரியர் வாழ்க என்ன ஆர்ப்பொலி வான ளாவ
சூரியன் இறங்கி வந்தாற் போல்நனி துலங்கும் வள்ளல்
ஏரியின் அருகில் மேவும் இனியமா ளிகைக்கண்
சேர்ந்தார். 470

மாளிகை நடுவண் ஓங்கும் மணித்தவி சமைத்த தன்கண்
ஆளுடை அடிகளாரை அன்பினுல் அமரச் செய்து
நீளடி மலரை வாச நீரினில் ஆட்டித் தூய
நாளலர் சூட்டித் தீபா ராதனை நன்று செய்தார் 471

மும்மறை வலம்வந் தேத்தி முறையொடு
நிலத்தில் வீழ்ந்து
செம்மையாய் வணங்கி ஞானச்
சேவடி துணையாய்க் கொண்டிங்(கு)

எம்மையாட் கொண்டுய் விக்க
எழுந்தருள் இறையே யாங்கள்
இம்மையிற் பெற்ற மேலாம்
செல்வமே எனப்போற் றிட்டார். 472

அடியவர் அன்பர் எல்லாம் அருகினில் அமர்ந்து போற்ற
முடிவில்பே ரருளால் ஞான மூர்த்திநல் லுபதே சங்கள்
அடைவுடன் அருள விண்ணோர் அமுதெனச் செவிம டுத்துப்
படர்வினை தவிர்ந்து மேலாம் பயனடைந் துய்ந்தார்
மக்கள். 473

தினமும்கா லையினில் அன்பர் திரளொடும் தண்ணீ ராடி
இனிதுசற் குருவை யாச னத்தெழுந் தருளச் செய்து
கனிவுறும் அன்பி னோடும் கழலடிப் பூசை செய்வர்
நனியந்தச் சிறப்பை நாவால் நவின்றிட நம்மா லாமோ? 474

கடையொன்று மில்லா அந்தக்
கவின்மிகு பதியின் கண்ணே
தடையொன்று மின்றி யெல்லாப்
பொருள்களும் தன்பே ரன்பால்
அடைவுறச் சேக ரித்து
வைத்துக்கொண் டருள்மெய்ஞ் ஞான
வடிவுடை வள்ள லார்க்கு
வழிபாடு செய்வார் நம்பி. 475

விழுமிய வொளிசால் குத்து விளக்குகள் இரும ருங்கும்
அழகுடன் பொலியும் அன்பர் தோத்திரம் புரிந்து நிற்பர்
கெழுதகு வாத்தியங்கள் கிளரொலி முழக்கும்; மக்கள்
தொழுதர ஹரவென் றார்ப்பர் சுரர்களும் உவந்து
வாழ்த்த. 476

ஞாலம்நன் றுய்யப் போந்த நம்பிரா னார்க்கு நம்பி
ஆலயங்களிலே உள்ள அருட்டிரு மூர்த்தி கட்குச்
சீலமார் அபிடே கம்செய் பொருளெலாம் கொடுசிறப்பாய்
ஏலும்நற் பாத பூசை இனிதுமெய் யன்பாற் செய்வார். 477

மஞ்சனப் பொருள்கள் ஒவ்வொன்
றுய்முறை யோடு யார்க்கும்
அஞ்சல்நல் கருட்பா தங்கட்
கபிடேகம் செய்வார் அந்த
மஞ்சனம் செய்யப் பெற்ற
நீர்மற்றைப் பொருள்க ளெல்லாம்
எஞ்சிடா தினிது பாத்தி
ரங்களில் எடுத்து வைப்பார். 478

பலநறு மலரைத் தூய
பாதநன் மலரிற் சூட்டி
இலகுநன் மணமார் மாலை
யெழிலுறச் சூட்டிப் பின்னர்
பலகனி வகைதி ருத்திப்
படைத்துத்தோத் திரங்கள் செய்வார்
அலகில்நல் லடுக்குத் தீபா
ராதனை முறையாய்ச் செய்வார். 479

மும்முறை வலம்வந் தேத்தி முறையுடன் அங்க மெட்டும்
செம்மையாய் நிலத்திற் றோயச் சேவடி வணங்கி மக்கள்
தம்முடைக் குறைகள் தீரத் தம்மனத் துன்னு வார்கள்
செம்மைசால் நலங்கள் சேரச் சிந்தனை செய்வார்
பல்லோர். 480

கடலினுள் விழுந்து மூழ்கிக் கலங்கிடு வோரை யெல்லாம்
அடல்மிகு கரையிற் சேர்க்க வந்தருள் அருங்க லம்போல்
புடவியிற் போந்த ஞானப் புனிதர்அம் மக்கட் குற்ற
இடரெலாம் நீங்க நன்மை எய்தநீ றளிக்கச் சொல்வார். 481

முன்னைநாள் செய்த கன்மம் முடிந்ததென் றன்ப ரெல்லாம்
நன்னயம் சான்ற நீற்றை நன்னுதல் பூசித் தீர்த்தம்
இன்னலம் எல்லாம் எய்தப் பருகுவர் மஞ்ச னம்செய்
பொன்னைநேர் பொருளைப் பெற்றுட் கொண்டுபூ ரிப்பார்
உள்ளம். 482

திருவடிப் பூசை நன்று
செயப்பெறும் காலத் தெல்லாம்
பொருவரும் அண்ண லார்பால்
பொலியும்நல் தெய்வத் தோற்றம்
மருவுநர்க் குள்ளத் தின்பும்
மயிர்க்கூச்சும் விளையச் செய்யும்
திருவரு ளாலே எய்து
செய்தியும் பிறவுண் டங்கண். 483

செம்மன முடைய சின்னஞ் சிறுவர்தம் நிலைமை யற்றுத்
தம்மையும் மறந்து சாமி யருகினில் வருவர்; அண்ணல்
மும்மையும் உணர்ந்த ஞான முனிவரா னுலும் மக்கள்
தம்மனத் துணர வேண்டிச் சாந்தமாய் வினவு வார்கள். 484

ஆரென வினவ அங்ஙன் ஆவேசம் எய்தப் பெற்ற
சீருறு சிறுவர் ஆனை முகனென்றும் செவ்வேள் என்றும்
ஏருறு நடன மாடும் ஈசனென் றும்சொல் வார்கள்
பாருறும் அன்ப ரெல்லாம் பகரரும் களிகொள் வாரால். 485

முன்னவன் போன்றசைவர் மூவிரு முகச்சேய் போல
நன்னயத் தாடல் செய்வர் நடராஜன் போல்ந டிப்பர்
உன்னிடு வோர்கட் கெல்லாம் உற்றநல் விடையை அன்னுர்
பன்னிடச்செய்து மௌனம் பூண்பர்நம் பதியாம் அண்ணல். 486

குருபரர் உள்ளம் கோயில் கொண்டெழுந் தருளி யுள்ள
ஒருபரம் பொருளே நாம உருவங்கள் பலவாய்க் கூறி
மருவுபல் சமயத் தோரும் வழிபடும் உடையோன் என்ன
விரவுல கத்தோர் நன்றே உணரச்செய் திட்டார் போலும்! 487

வேறு

நீராக உருக்கியன்பர்க் குயிராகி
நின் றருளும் நிமல மூர்த்தி
ஏரார்நற் றிருச்சாத்த னூரில்எழுந்
தருளியுளார் எனலும் அங்கு
பாரோர்கள் போற்றுபல அற்புதங்கள்
நிகழ்த்தியருள் பரிசும் கேட்டுத்
தீராப்பேய் மோகினிபி சாசுபற்றித்
திரிபவரைக் கொணர்ந்தார் பல்லோர். 488

இருந்ததுபோ லிருந்தன்பர் குழுவினையும்
தள்ளிக்கொண் டேகிப் பேயால்
வருந்துபவர் ஆவேசத் தோடண்ணல்
அருகமர்வர் வரலா றெல்லாம்
பொருந்துமுறை யாற்கூறி வலம்வருவர்
வணங்கிடுவர் புனிதத் தாய்தன்
அருங்குழந்தை களைநோக்கல் போற்கருணை
யோடண்ணல் அவரைப் பார்ப்பர். 489

விட்டுவில கிப்போங்கள் இனிவரலா
காதென்ன விமலர் கூறி
மட்டிலருள் செயப்பேயா தியபிடித்த
மக்கள்பெருங் கூச்ச விட்டுத்
திட்டமுறச் சென்றுதண்ணீ ரினிலாடி
நீறணிந்து திரும்பி வந்து
சட்டம்அருள் தற்பரரை வலம்வந்து
வழிபட்டுச் சாந்த மாவர். 490

எந்தவிதக் குறைவுமின்றி இல்லறத்தைப்
பேணிஇன்ப மெய்து வார்கள்
அந்தமில்சீர் அண்ணல்பெருங் கருணையினை
அனைவருக்கும் இயம்பு வார்கள்
சந்தமுற இப்படிப்பல் அற்புதங்கள்
நடைபெறுதல் கண்ட தக்கோர்
அந்தமில்இ ரெட்டிபட்டிச் சாமிகட்
கரோஹரவென் றன்பாற் சொல்வார். 491

குருநாதர் துதி

உலகினுக் கெல்லாம் பொதுநெறி வகுத்த
ஒருவரே ஒப்பிலா மணியே
பலகலை கற்றும் பக்திமெய்ஞ் ஞானம்
பயின்றிடா துழலல்நன் றலவென்(று)
உலகினில் விளக்கி உண்மையை உணர்த்த
உதித்தசற் குருபரோத் தமரே
இலகுசச் சித்தே இணையிலா உண்மை
இன்பமே ஏகநா யகரே. 492

பரவுமெய் யடியார் உறவென விளங்கும்
பரமரே பண்பெலாம் புகட்டும்
குரவரே மேலாம் கொள்கையை எவர்க்கும்
கொடுத்தரு ளாட்சிசெய் யரசே
இரவினைப் பகலென் றெண்ணுமெங் களையும்
ஈர்த்தருள் செயவிழை பவரே
கரவிலா நல்லோர் கருத்தினுள் மிளிரும்
கர்த்தரே கருணைசால் பதியே. 493

முந்தைவல் வினையின் முடிச்செலாம் அறுத்து
மும்மல வாதனை யகற்றி
நிந்தையே யில்லா நெறியினிற் செலுத்தி
நித்திய வாழ்வுதந் தருளும்
எந்தையே நுங்கள் இணையடி துணையாய்
எளியரேம் பற்றுமா றருள்வீர்
சிந்தையே கோயில் கொண்டசற் குருவே
தீர்த்தம்நீ றருள்பரம் பொருளே. 494

அத்தரே எங்கள் அன்னையே ஞான
ஆசிரி யப்பெருந் தகையே
முத்தரே மோன முனிவரே சாந்த
மூர்த்தியே கீர்த்திசான் றவரே
நித்தரே தூய நிமலரே மேலாம்
நிர்க்குண நிபுணரே நிகரில்
சத்தரே மேலாம் சித்தரே தயவாம்
சாகரத் தமுதெனும் குருவே. 495

தங்கமே யனைய நினைவுசொல் செய்கை
தழைந்திட உலகெலாம் சாது
சங்கமாய்த் திகழ நனிவிழை பவரே
தளர்விலா தறக்குழைப் பவரே
எங்கள்மா தவமே இணையிலாத் துணையே
ஏழ்பிறப் பாம்கடல் கடத்தும்
துங்கமார் புணையே தூய்மையுள் தூய்மை
துலங்குசற் குருமகா மணியே. 496

என்றெலாம் பலவா றுய்த்துதி புரிந்திங்
கெங்களை யாள்குரு பரரை
நன்றுபன் முறையும் வலம்புரிந் தன்பால்
நாண்மலர்ச் சேவடி பணிந்து
துன்றுபல் வினையின் தொடக்கெலாம் அறுத்துத்
தூய்மையும் மேன்மையும் அடைந்தார்
என்றுமெவ் வுயிர்க்கும் இன்பமீந் தருளும்
ஏந்தல்சீர் இயம்பிடற் கெளிதோ? 497

வேறு

கலியுக வரதர் என்றும் கண்கண்ட தெய்வம் என்றும்
கலிதவிர்த் தாளப் போந்த கருணைசால் மூர்த்தி யென்றும்
பலபுகழ் மொழிகள் கூறிப் பக்தர்தம் மூர்க்குச் சென்று
நலமிகும் அண்ண லாரின் நற்புகழ் பரப்ப லானார். 498

வேறு

சூழாத பேய்சூழ்ந்து கொண்டதெனத்
துள்ளுகின்றார் பல்லோர் என்றே
தாழாமல் குறிகூறி வாழ்ந்திடலாம்
எனும்தவறும் எண்ணத் தோடே
மோழாண்டி குப்பமுத்து சாமிப்படை
யாச்சி,அண்ணல் முன்னர் சென்றே
பேழார்நல் லாவேசம் கொண்டவர்போல்
பெருமிதமாய் ஆடி னாரால். 499

அனைவர்உளத் தினிலும்இனி தமர்ந்தாட்கொண்
டருள்புரியும் கருணை மூர்த்தி
அனைவருக்கும் அவ்வுண்மை யினைத்தெரிவிக்
கக்கருத, ஆனத் தூர்வாழ்
புனிதமிகு ஜகந்நாத ரெட்டியார்
புதல்வர் நல்லி ராமலிங்கம்
தனைமறந்தா வேசமுற்றுப் படையாச்சி
யினைப்பிரம்பால் புடைத்தார் நன்றே. 500

உண்மையினைப் படையாச்சி தன்வாயா
லேகூறி ஒப்புக் கொண்டு
திண்மைமிகும் மெய்ஞ்ஞான குருபரனார்
திருவடியிற் பணிந்தி றைஞ்சி
வண்மைமிகும் அருளரசே என்பிழைமன்
னித்தருள்வீர் எனவ ழுத்தி
அண்மையினி லுளதன்னூர்க் கப்பொழுதே
அச்சமுடன் ஓடி விட்டார். 501

வேறு

ஆயபுவி மக்கள்மனப்
பேயடங்கற் கருள்புரியும்
நாயகனார் பலபேய்கள்
நனிவிலகச் செய்ததையும்
தீயஎண்ணத் தோடாடல்
தெரிந்துதண்டித் ததும்கண்ட
தூயஅடி யார்களன்பர்
துதிபாடிப் போற்றினரால். 502

குருநாதர் துதி

[ ''வான நாடரும் அறியொணாத நீ'' என்ற பண் ]

காலம் யாவும்நின் கழல் நினைவுகொள்
கள்ளமற்றநல் லுள்ளம் மேவுவாய்
மூல மாமறை யின்பொருள் எலாம்
மோனியர்உளத் தேயு ணர்த்துவாய்
சீல மோரனு வேனும் கண்டிலாத்
தீய ரெம்மையும் நீதிருத்தி நின்
கோலத் தாண்மலர் சேர்த்த ருளுவாய்
குறிகுணம் கடந் தொளிரும் நாதனே. 503

ஆரும் நின்னுரு முழுதும் கண்டிலார்
ஆரும் நின்னெழில் முழுதும் காண்கிலார்
ஆரும் நின்னுரை முழுதும் கேட்டிலார்;
ஆரும் நின்னியல் முழுதும் ஓர்ந்திலார்;

ஆரும் நின்செயல் முழுத றிந்திலார்;
ஆரும் நின்னருள் முழுது ணர்ந்திலார்;
ஆரும் போற்றஇவ் வூரில் வந்தெமை
அன்ப ராக்கியாள் இன்ப நாதனே. 504

ஊரும் பேரும்மற் றுருவ ரேனும்இவ்
வுலகி லோர்ந்திலார் உண்மை கண்டிலார்
ஊரெலா மும்நின் ஊரென் றேநியே :
உண்மை யோகியர் உன்னை யேத்துவார்;
பேரெ லாமும்நின் பேரென் றுன்னியே
பிரம ஞானியர் நின்னை நாடுவார்
சீரெ லாம்நிதம் செப்பி யேத்திநின்
திருவடிபெறச் செய்த ருள்கவே. 505

ஏத மொன்றுமில் லாம லெங்களை
இன்ன ருளினால் நீதி ருத்துவாய்
பாத பங்கயக் காட்சி நல்குவாய்
பாவம் யாவும்நீ றுக்கி யாளுவாய்
கோத கன்றசிற் குணம ளுளனே
குற்றம் யாவும்மன் னிக்கு மீசனே
சாத னம்பல செய்தி டும்பயன்
தந்தருள் செய்வாய் சாந்த மூர்த்தியே, 506

தக்க வர்க்கெலாம் தக்க நற்பயன்
தந்து பேணியாள் சத்ய மூர்த்திநின்
தக்க மந்திரம் சாற்றிப் போற்றிடத்
தக்க நல்வரம் தந்து பேணுவாய்
அக்க ரத்தினுள் ளக்க ரப்பொலி
வாய் விளங்கிடும் அமல நாதனே
துக்கம் யாவையும் நீக்கி யாண்டருள்
தூய ஜோதியே நேய மீகவே, 507

வேறு

எனப்பலவா றுயன்பர் அடியரெலாம்
இருடிநகர் ஏந்த லாரை
தனிப்பரமா னந்தமுடன் துதித்தார்கள்
தாண்மலரை வணங்கி னார்கள்

அனைக்குரிய கருணையினே டடியவரை
அன்பர்களை அண்ணல் நோக்கி
மனப்பரிபக் குவமெய்தி மாணருள்பெற்
றுய்யும்வணம் அருள்பு ரிந்தார். 508

## அடியவர்க்கு நிஷ்டானுபூதி அருளுதல்

அருட்சட்ட நெறியில்மிக இன்றியமை
யாததருள் நிட்டை யாகும்;
தெருட்பெற்ற அடியவரை இரவில்உறக்
கத்தினுக்குச் செல்லு முன்னர்
அருட்கருணை யொடுமாடி யின்கணுள
அறையிலம ரச்செய் தண்ணல்
திருக்கரத்தை அவர்கள்சிர மீதமைத்துச்
சிறந்தநிட்டை கூட்டு விப்பார். 509

நன்றடியர் நிட்டையினில் ஆழ்ந்திருக்கும்
போதில்அருள் ஞான மூர்த்தி
துன்றுதம தருட்கரத்தை யவர்கள்சிர
மீதமைத்துத் தூய்மை யின்பம்
ஒன்றஅருள் புரிவரந்த அடியவரும்
உயரின்பம் அனுப விப்பர்;
என்றுமண்ணற் கடியவர்பால் இருக்குமன்பை
எவர்நாவால் இயம்ப வல்லார்? 510

## பண்ணுருட்டி ஆச்சிமார்

திருநாவுக் கரசெனும்பேர் சிவனுலே தரப்பெற் (று)அப்
பெருமானைப் பாடி, வந்த பெரும்பிணிநீங் கப்பெற்றுப்
பெருகார்வத் தோடப்பர் பெருந்தொண்டு புரிபதியும்
ஒருமானும் திலகவதி யார்வாழ்ந்த உயர்பதியும் 511

செம்மையெலாம் எவ்வுயிர்க்கும் வழங்கியருள் சிவபெருமான்
மும்மைமலம் எனும்மூன்று புரமெரித்த முதுபதியும்
இம்மைநலம் மறுமைநலம் எல்லாமும் அருள்பதியும்
வெம்மைதவிர்த் தருளின்ப வீடருளும் திருவதிகை. 512

மேன்மைமிகுப் அப்பதிக்கு மேற்கில் ஒரு கல்தொலைவில்
தேன்மலிபூஞ் சோலைநிறை பண்ணுருட்டி நிகழுமங்கண்
ஆன்மவளர்ச் சிக்குரிய அருட் பண்பு மிகுந்தவராய்
வான்மகிழ வணிகர்குலத்(து) இருமகளிர் வாழ்ந்து
வந்தார். 513

நல்லகுண மாணிக்கம் ஞானம்பாள் என்றெவரும்
சொல்லுமியற் பெயருடைய தூமனச்ச கோதரிகள்
அல்லல்தவிர்த் தானந்த வாழ்வருள்சீர் அருட்சட்டம்
எல்லையிலார் வத்தோடும் பேணியின்புற் றினிதிருந்தார். 514

குருநாத ரிடம்ஆழ்ந்த பத்திமிகக் கொண்டவராய்ப்
பெருஞாலத் திடை அவர்கள் பிறங்கியதால் குருநாதர்
வருபோதும் செல்போதும் வழியில்அவர் இல்லின்கண்
பெருகார்வத் தோடும்எழுந் தருளியருட் பேறருள்வார். 515

அண்ணலிடம் அளவிலன்பொ டிவர்களுரை யாடிடுவார்
எண்ணமதில் கள்ளம்கப டெள்ளளவு மில்லாத
வண்ணம்மிளிர் இவர்மொழியில் வள்ளல்மிக மகிழ்வுறுவார்
அண்ணலடி யார்கள்பலர் அவ்விடத்திற் கூடிடுவார். 516

நற்றவப்பே றருள்ஞான வள்ளலந்த நகர்வருங்கால்
சுற்றுப்புறத் துளஅடியர் சூழ்ந்துமனி தப்பிறவி
பெற்றபயன் பெறஅண்ண லார்அருகில் பெருமகிழ்வோ
டுற்றமர்ந்து தம்குறைகள் உரைத்துநிவர்த்
தியைப்பெறுவார். 517

அருளார்நல் லுபதேசங் களையண்ணல் வழங்கிடுவார்
தெருள்விழைநல் லடியார்கள் செவிவாயால் மாந்திடுவார்
பொருளுணர்த்தும் புண்ணியனார் எவ்வளவு பொழுதாயும்
இருளகற்றும் நல்லுரைகள் இயம்புதல்கண் டிவர்
பதைப்பார். 518

இவ்வளவு பொழுதாயிற் றினியெப்போ தருளண்ணல்
செவ்வியநல் லுணவுகொள்வ தென்றுபரி வுறுமனத்தோ(டு)
"எவ்வளவு பொழுதாச்சு தெப்போசாப் பிடுவதுநீ
இவ்வளவிற் பேசுவதை நிறுத்தி எழுந் திரு" என்பார். 519

"அப்பாலே பேசிக்கொள லாம்',என்ன அதட்டுமொழி
செப்பியுண வினையருந்தற் கெழுப்பிடும்செவ் வியவுள்ளத்(து)
ஒப்பிலன்பை உணர்ந்தண்ணல் உளம்களிப்பார்; அருகுள்ள
செப்பமிகு நல்லடியார் களைநோக்கிச் செப்பிடுவார்· 520

நம்மிடத்திற் கொண்டுள்ள நவிலரும்அன் பால்இவர்கள்
இம்முறையிற் கூறுகின்ருர் அழைக்கின்ருர் இவர்கள்உளம்
செம்மைசெறி சேயுள்ளம் எனஉவந்து செப்பிடுவார்
அம்மஅவர் களின்உண்மை அன்பின்திறம் ஆர்அறிவார். 521

தவத்தில்மிகு பிள்ளையார் குப்பம்அருள் தாய்அவர்கள்
உவப்பொடிவர் இல்லத்தில் ஒருசிலநாள் தங்கிடுங்கால்
தவத்துறையில் பழகுமிவர் அவ்வாறே தாயிடமும்
உவப்பொடுரை யாடிடுவார் உளத்தில்அணுக்
கபடறியார். 522

இருவரும்நன் மலர்மணம்போல் இணைபிரியா திருந்தார்கள்
மருவரிய உபவாசம் முதலியமாண் பார்நிலைகள்
இருவரும்பெற் றியம்பரிய மேல்நிலைகள் இனிதெய்தித்
திருவருளை நனிதிரட்டித் தெருள்மிகுந்து திகழ்ந்தனரால்.
523

ஒருமுறையில் இவர்களெழில் மிகுபெட்டி வண்டியொன்றில்
திருமிகுநற் றிருச்சாத்த னூர்த்தலத்துக் கன்பினுடன்
இருள்மிகுத்த ஓரிரவில் எண்ணில்அணி கலன்களணிந்(து)
இருவரும்சென் றிடும்போதில் இவர்கள்மனத் தெண்ண
லுற்ருர்; 524

ஆண்டவரைக் காணச்செலும் நமைஎந்த ஆபத்தும்
தீண்டவரா தென்னமிகு திடமான உறுதியுடன்
ஆண்டவரை நினைந்தவண்ணம் அவர்களினி தேகுகையில்
தூண்டுதவ விளக்கனைய ஞானம்பாள் சொல்லிடுவார். 525

அக்காஅக் காஎன்ன மெதுவான குரலிலழைத்(து)
எக்காலத் திலும்நம்மை இனிதோம்பும் குருஅருளால்
முக்கூர்கொள் சூலமுடன் காளியம்மை முன்நடக்கும்
இக்கோலம் கண்டனையோ எனத்தமக்கை யிடம்உரைத்தார்.
526

அக்காவாம் மாணிக்கம்
எனும்பெயர்கொள் அம்மையினி(து)
அக்காட்சி யினைக்கண்டார்
இருவருமே அடக்கவொணு
மிக்கவியப் பும்திகைப்பும்
கொண்டவரராய்ச் சென்றிட்டார்
தக்கமுறை யினிற்சாத்த
னூர்சேர்ந்தண் ணலைக்கண்டார். 527

உருகியநல் லுளத்தோடும் ஒப்பிலன்பு மயமாகி
இருவிழியும் மழைபொழிய இருகரமும் சிரம்குவியக்
குருபரன்றன் மலரடியிற் கும்பிட்டு வணங்கிநின்று
வரும்வழியில் நிகழ்ந்ததனை மகிழ்வொடண்ண லிடம்
உரைத்தார். 528

அருளண்ணல் அருகிருந்த அருட்சக்தித் தாயினைப் பார்த்(து)
அருட்சட்ட அடியார்கள் வெளியிலெங்குச் சென்றாலும்
அருளமரர் எத்துணைப்பேர் உடன்செல்வர் அறிவீரோ!
தெருளுறஇப் பேருண்மை தெரிந்துணர வேண்டுமென்றார். 529

இருவரும்நல் லுபவாசம் இனியநிட்டை நனிபேணிக்
குருபரனார் திருவருளால் குலவுமிக பரநலங்கள்
மருவுமுயர் வாழ்வாற்றி மாஞானப் பெருவள்ளல்
திருவடித்தா மரைமலரிற் சேர்ந்துமுத்திப் பயன்பெற்றார்.
530

திருவெண்ணெய் நல்லூர், மேலமங்கலம்.

தேனார்ந்த மலர்ச்சோலைத் திருச்சாத்த னூரின்கண்
ஆனாத விருப்புடைய அடியார்கள் புடைசூழ
ஞானனந் தம்கொடுக்கும் நாயகனார் அமர்ந்திருப்ப
வானோரும் தொழஅடியர் வழிபாடு புரிந்தார்கள். 531

திருவெண்ணெய் நல்லூரில் திகழ்வட்ட அலுவலராய்
வருவாய்த்து றைப்பணிசெய் சாம்பசிவப் பெயர்மறையோர்
மருவானைக் கால்நோய்கொண் டவர்சுற்றுப் பயணத்தில்
திருவார்நற் றிருச்சாத்த னூர்வந்து சேர்ந்தனரால். 532

நேயமுட னுலகினுக்கு நிறையருள்செய் குருபரரைத்
தூயஅடி யவர்போற்ற முன்நின்று பார்ப்பவரின்
ஏயஉளம் அறிந்தண்ணல் நாற்காலி யிடுகஎன
ஆயஅந்த ஆசனத்தில் அமர்ந்தையர் பார்த்திருந்தார். 533

வேடிக்கை பார்ப்பவர்போல் வியன்பூசை யினைப்பார்த்து
நாடிக்கை குவித்திலராய் நன்னேயம் அணுவுமின்றி
மாடுள்ள மேலமங்க லப்பதிசென் றுறங்குகையில்
ஈடற்ற ஒருகனவை இன்னருளால் தாம்கண்டார். 534

கடற்றிரைபோல் கலக்கவரு மலமகற்றிக் கடையேன்றன்
உடல்பொருளா வியைக்கவர்ந்தென் னுட்புகுந்து பிரியாமல்
அடர்அருள்செய் அண்ணலுக்குத் திருச்சாத்த னூரின்கண்
அடியர்இயற் றியபூசை அக்கனவில் அவர்கண்டார். 535

தாமும்அவ் விழாக்காணச் சென்றிருப்ப தாய்த்தக்கோர்
நேமமொடு நிமலர்திரு வடிப்பூசை நிகழ்த்துகையில்
ஏமமிகும் ஒருபெரியார் தம்மருகில் இருந்துகொண்டு
சாமியைச்சுட் டிக்காட்டிச் சாற்றுவது போல்கண்டார். 536

கற்பனைகள் கடந்தொளிரும்
கருணையுரு இவரென்றும்
பொற்பொடும்பூ ரணன்நடன
மாடிடும்பொற் கோயிலென்றும்
அற்பொடும்ப ராவின்அடித்
தலம்அருளும் இறைவரென்றும்
விற்பனரும் விண்ணவரும்
வழிபடுநல் விமலரென்றும் 537

வாராத செல்வம்வரு வித்தருள்வான் பொருளென்றும்
பேரோர் ஆயிரம்கொண்ட பீடுடைப்பெம் மான்என்றும்
தீராநோய் தீர்த்தருள்செய் திருவாளர் இவரென்றும்
ஆராப்பே ரார்வமுடன் உரைப்பதுபோல் அவர்கண்டார்.538

விழித்தெழுந்த அய்யர்மிக
வியப்பொடுபே ரச்சமுற்றுப்
பொழிற்றிகழ்நற் றிருச்சாத்த
னூர்க்குமுன் னுள் போயிருந்தும்

விழுப்பொருளாம் அருளண்ணல்
வியன்பாதம் வணங்காத(து)
இழுக்கென்ன இனிதுணர்ந்து
விடியும்வரை விழித்திருந்தார். 539

கனவினையே உன்னியுன்னிக் களிப்பும்வியப் பும்திகைப்பும்
மனமிசையே தோன்றிடவும் மனம்முதலா கியமூன்றும்
மனமணியாம் குருநாதர் மலரடிபால் அணைவித்து
நனிவிரைந்து திருச்சாத்த னூர்நாடிச் சென்றனரால். 540

வேறு

செம்பொருள் விளக்குஞானச் செல்வரை யினிதுபோற்றி
மன்பெரும் பயன்பெறற்கு வந்தனர் வழியிலேயே
கும்பிடப் போனதெய்வம் குறுக்கில்வந் திட்டதேபோல்
எம்பிரான் சாத்த னூர்விட் டெதிர்வரல் கண்டுகொண்டார். 541

வேறு

அருள்புரியற் புதச்செயலை யெண்ணியெண்ணி
யானந்த மேலிட் டோராய்
அருகணைந்து வண்டியினை நிறுத்திநனி
மூன்றுமுறை வலமாய் வந்து
தரையின்மிசை வீழ்ந்தெழுந்து குருபெருமான்
தாண்மலரைத் தொழுது போற்றித்
திருவடியை வணங்காது சென்றபிழை
பொறுத்தருள வேண்டி நின்றார். 542

தங்களருட் சீர்நென்ன லுணராது
தருக்கினுடன் சென்றேன்; பின்னர்
தங்களருட் சிறப்பினைநேற் றிரவில்திரு
வருள்உணர்த்தச் சற்று ணர்ந்தேன்;
இங்கெனையும் அடிமையென ஏற்றருளி
இவ்வேழை இல்லத் திற்கும்
மங்களமாய் எழுந்தருளி யெம்குடியைக்
காத்துமகிழ் விப்பீர் என்றார். 543

அருள்புரிவீர் என்றுநிறை யன்பினுடன்
கைகுவித்துப் போற்றி நின்ற
பருவபக்கு வம்கண்டு பக்தர்களுக்
கருளவந்த பரம மூர்த்தி
அருளொடவர் அன்பழைப்பிற் கிணங்கித்திரு
வெண்ணெய்ந லூரினிலே யுள்ள
திருமனைக் கெழுந்தருளப் பூர்ணகும்பத்
தோடவர்சென் றெதிர்கொண் டாரால். 544

உயர்ந்தவொரா சனத்த மர்த்தி
ஒண்சாத்த னூரில்நடந் திட்ட தேபோல்
பயன்தருநல் வழிபாடு பரமகுரு
நாதருக்குப் பாங்காய்ச் செய்து
புயல்மழையைப் பொழிவதுபோல் விழிமலர்கள்
நீர்பொழியத் தொழுது போற்றி
நயன்தருநல் லுபசாரம் நற்பரிவி
னோடுபுரிந் தருள்பெற் றுய்ந்தார். 545

அன்றுமுதல் குடும்பத்தொ டருட்சட்டம்
ஏற்றின்னடித் தொண்ட ரானார்
நன்றருளார் அண்ணல்திரு நயனம்தீண்
டப்பெற்ற தாலே முன்னர்
ஒன்றியயா னைக்கால்நோ யும்தீர்ந்த(து)
அவர்அடைந்த உளம கிழ்வுக்(கு)
என்றுமெல்லை யில்லை; அவர் எம்பெருமா
னைப்போற்றி இறைஞ்ச லானார். 546

குருநாதர் துதி

[''மற்றுப்பற் றெனக் கின்றி'' என்றபண்]

கன்றைப் பேணும் பசுவி னும்நற்
கருணை யோடும் புரந்தருள்
மன்ற வாணநின் மாட்சி சால்பொன்
மலரடிதந் தருளு வாய்
ஒன்றென ஒன்றுள் எண்ணி லாதன
என்ற னைத்தும் உண் டாக்கியே
நன்று காத்தருள் அண்ணலே உண்மை
ஞான சற்குரு நாதனே. 547

காட்சி யாவையும் காட்டுவாய் உட்
கரணங் கட்கின்ப மூட்டுவாய்
மாட்சி சால்அருள் நல்கு வாய்நின்
மலர்ப்ப தத்தினிற் கூட்டுவாய்
ஆட்சி பேரரு ளாற்பு ரிந்தெண்ணில்
அண்டம் பேணி உயிர்தொறும்
சாட்சி யாய்அமர் சத்யமே உயர்
சத்வ ரூபக் குரவனே. 548

நின்ப தங்களை உன்னி யுன்னி
நிரந்தரப் பக்தி செய்திலேன்
அன்பு கொண்டுனைப் போற்றி நாளும்
அழுத ரற்றி உருகிலேன்
என்பும் நெக்குரு கக்க னிந்துரு
கன்பர்க் கின்பம் வழங்கியாள்
இன்ப மூர்த்திநீ ஏழை யேற்கும்
இரங்கிப் பேரரு ளீகவே. 549

பத்தி செய்ய அறிகி லாத்திய
பாவி யென்னினும் நின்பதம்
நத்தி வேண்டிடும் நாயி, னேற்கும்நீ
நன்றி ரங்கி யருள்செய்வாய்
சித்தி யாவையும் வல்ல சித்தர்
செறிந்தி றைஞ்சத் திகழுவாய்
முத்தி நாடடி யார்நி றைஇரு
டித்த லம்வரு மூர்த்தியே. 550

உள்ளம் தூய்மை உரையில் தூய்மை
செயலில் தூய்மை யுருவென்றன்
கள்ளம் யாவையும் மன்னித் தொப்பில்
கருணை யால்தடுத் தாண்டனை
வள்ளலே உன்றன் மாண்ப றிந்துனை
வாழ்த்தி யின்பம் அடைந்திட
அள்ளிப் பேரருள்நல்கு வாய்;அரு
ளாளர் போற்றும் அமலனே. 551

---

வேறு

என்றுபல வாறுகத் துதிபுரிந்து
குருபரனுர் எழிற்றுள் போற்றி
நன்றுசட்ட நெறிபேணி நற்குழந்தை
களையீன்று ஞால மீதில்
பொன்றலில்நற் புகழுடனும் புனிதமுட
னும்போத நாதர் பாதத்(து)
ஒன்றியநன் மனத்தினெடும் ஒப்பில்அருட்(கு)
உரியவராய் வாழ லானுர். 552

## ஏனாதிமங்கலம்

வானுர்நல் வளம்கொழிக்கும் வரத்தாற்றின் வடகரையில்
ஏனுதி மங்கலமென் றினிதிலங்கும் ஒருநல்லூர்
ஏனுதி விருதரச ரிடம்பெற்ற நல்வீரர்
ஆனுத செல்வமொடவ் வூரினில்வாழ்ந் தனர்போலும்! 553

திருச்சாத்த னூரென்னும் திருப்பதிக்கு மேற்றிசையில்
ஒருநான்கு மைல்தொலைவில் உளதாகும் அந்நல்லூர்
அருள்ஞான குருநாதர் ஆனத்தூர் பண்ணுருட்டி
திருவெண்ணெய் நல்லூரா தியதலங்கள் சேர்ந்தருளால். 554

அடியார்கள் பலரைநனி தேர்ந்தெடுத்தார்; ஆடவரின்
தொடியார்ந்த மகளிர்பலர் மேம்பட்டோ ரெனச்சொலலாம்
படிமீதிற் சமுதாயத் தினைத்திருத்தப் பாவையரே
நெடிதுதவு வாரென்ன நினைந்தார்கொல் நின்மலனுர்! 555

உலகவர லாற்றினைநாம் உற்றுணர்ந்து பார்க்குங்கால்
இலகுசமு தாயத்தை இனிதுதிருத் திட்டோர்கள்
வலிமிகும் ஆடவரைவிட மங் கையரே எனவிளங்கும்
தலைசிறந்த பெண்கள்பலர் தக்கோராய்த் திகழ்ந்தனரே. 556

இகவாழ்வில் பரவாழ்வில் பெரும்புரட்சி இயற்றவந்த
தகவாள ராம்அண்ணல் தக்கஒவ்வோர் குடும்பத்தும்
அகமார்நல் தெய்வபக்தி அன்படக்க மாதிகுணம்
மிகுமாதர் நனிவிளங்க வேண்டுமென எண்ணினரால். 557

ஆதலினல் அருட்சட்ட அடியவரில் தலைசிறந்த
மாதர்களும் இருந்தனர்; நல் லேனுதி மங்கலம் வாழ்
மாது ஜெக தாம்பாள்அம் மணிகளுளொர் மணியாவர்;
ஏதமில்அத் தாய்சிறப்பை யாம்உரைத்தல் எளிதாமோ? 558

திருவெண்ணெய் நல்லூரில் அருளண்ணல் திகழ்நாளில்
அருகுசுற்றுப் புறமுள்ள அன்பர்அடி யார்வந்து
தரிசனம்செய் தினிதண்ணல் தண்ணருள்பெற் றேகுவர்நல்
லரிவைஜெக தாம்பாளும்அருள்நாடி அவண் வருவார். 559

பெரியகுடும் பத்துளதால் பெருகுபல வேலைகளும்
சரிவர முடித்தபினர் சாமிதரி சனம்செய்யப்
பெருகுறும்ஆர் வத்தோடும் வருவர்: பிற பெண்களைப்போல்
ஒருகுறையும் கூருமல் தனிநின்றுள் ளுருகிடுவார். 560

ஆண்டவரை உறுத்துநினைந்(து) அருட்குருநா தா,எனறும்
வேண்டியதுன் திருவடியே, அந்தவிரை மலரடியில்
ஈண்டுளஎன் னையும்சேர்த்துக் கொளவேண்டும் எனமனத்துள்
வேண்டியவா றேஇரண்டு விழிகளில்நீர் பெருக்கிநிற்பார்.561

ஒவ்வொருயி ரும்கணமும் உன்னும்நினை வனைத்தினையும்
அவ்வவ்வுயிர் தோறும்நனி ஊடுருவி அறியுமண்ணல்
அவ்வவர்வேண் டுவதையுணர்ந் தருள்புரிந்து பேணிடுவர்
இவ்வனையும் போற்றியரு ளின்னமுதம் மாந்திடுவார். 562

எத்தொழிலைச் செய்தாலும்
ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர்மனம் எப்பொழுதும்
மோனத்தே இருக்குமென்ற
முத்தர்மொழிக் கிணங்களண்ணம்
மோனகுரு பரர்பால் வைத்(து)
எத்தனைச் செயல்களையும்
செய்வார்இவ் வேந்திழையார். 563

சமையல்செயும் போதும்குரு திருநாமம் சாற்றுவதால்
சமைக்குமந்த உணவை யுணும் தம்பதியும், ஏனையரும்
அமுதனைய தெய்வபக்தி நிரம்பியவ ராய்அமைந்தார்
அமலர்நினை வால்தம்மை மறந்திடுவர் அனைசிலகால் 564

ஆயவன்னை யொருநாள்பால் அடுப்பினில்வைத் திருந்தார்கள்
தூயவெண்மை யாம்பாலைத் தூயவொரு பாத்திரத்தில்
தூயதணல் தருசுடரின் மேல்வைத்துப் பார்த்ததுமே
தூயஅடி யார்உள்ள மெனும்தூய பாத்திரத்தில் 565

ஞானமெனும் பாலூற்றி நல்வாசிக் கனல்மூட்டி
மோனகுரு பக்குவமாய்க் காய்ச்சுமெண்ணம் முந்திடவும்
ஆனபசும் பால்நிகர்வெண் மனத்தினில்வெள் ளாடையுடன்
மோனகுரு பரர்காட்சி அழகுறமுன் நின்றதரோ. 566

அருளமலர் தோற்றத்தை நினைந்தபடி அமர்ந்திருந்தார்
இருவிழியும் திறந்திருந்தும் இனிதுசெயல் படவில்லை
ஒருமனம்ஐம் புலனூடும் ஒன்றினன்றோ செயல்நடக்கும்
ஒருமனம்ஒன் றாவிடின்ஐம் புலன்களுக்கும் வேலையில்லை. 567

ஒருமைமிகும் மனம்குருவின் திருவடியில் ஒன்றியதால்
பெருகுறுபால் அடுப்பனலில் பொங்கிவழி தறுவாயில்
ஒருசெயலு மின்றியம்மை உயரருளில் திளைத்திருந்தார்.
திருவருள்அப் பால்வழியா மற்சிவக்கக் காய்ச்சியதே. 568

அவ்வம்மைக் குணர்வுவர அடுப்பில்இந்நே ரமும்இப்பால்
எவ்வளவும் பொங்கிவழி யாமலிருந் திட்டதென்னே
ஒவ்வொர்பொரு ளுளுமிருந்து பேணியருள் ஒண்குருவின்
செவ்வியநற் றிருவருள்செய் செயலிதுவென் றெணித்
துதித்தார். 569

சுற்றுப்புறத் துளகுடும்பப் பெண்மகளிர் சூழ்ந்துதங்கட்(கு)
உற்றகுறை களைக்கூறி உளத்தமைதி நாடிடுவார்
அற்றமில்நம் அன்னைஅவ ரவர்க்கேற்ற விடைகூறி
முற்றுநல்லா றுதல்அளிப்பர் மோனகுரு பரர்அருளால். 570

தெள்ளுதிரைசூழுலகம் சிறந்துய்ய வருபரமர்
வெள்ளிவிர தத்தைமிகு சிறப்புடைத்தாய் விளம்பியதால்
வெள்ளிவிர தத்தன்று துளிநீரும் விழையாமல்
எள்ளலின்றி வேலையெலாம் செய்திடுவார் இவ்வன்னை 571

சோர்வின்றித் தயக்கமின்றித் தூயபணி யனைத்தினையும்
ஆர்வமுடன் ஆற்றுதல்கண் டவ்விட்டி லுளபலரும்
சீர்வளம்சால் குருநாதர் திருவருளின் சிறப்புணர்ந்து
கார்நிகர்நற் கருணையினைக் களிப்போடும் போற்றுவரால். 572

வளமிகும் அந் நல்லூரில் வாழ்ஒருபெண் மணமாகி
உளமதில்நற் பக்தியொடில் லறத்தைநனி உஞற்றிவந்தாள்
தளதளெனும் நிலையிற்கரு வுற்றிருந்தாள் தனைப்பேணக்
களிமிகுதாய் வீட்டினிலும் ஆருமின்றி வருத்தமுற்ருள். 573

புகுந்தஇல்லத் திலும்புருட னைத்தவிர யாருமில்லை
தகுந்ததுணை யிலை;ஈது தலைமகப்பே றுயிற்றே
உகந்ததுணை யாகநமக் குறுபவர்யார் எனத்தளர்ந்தாள்
இகம்பரம்எல் லாம்உதவும் இறைவனைநன் றேத்தி
நின்ருள். 574

எனக்கெவரும் துணையில்லை; இனியஅன்னை தந்தையுநீ
மனக்கினிய உறவினர்நீ மாண்பொடெனைக் காத்தருளத்
தனித்துணையாய் வருபவர் யார்? தண்ணருளால் பரம்பொருளே
எனைப்புரக்க வேண்டுமென உருகியழு திறைஞ்சினளால். 575

அச்சமயத் தவர்களில்லிற் கம்மையார் சென்றிடவும்
உச்சியிற்கை கூப்பிமுறை யிட்டதையொண் செவிமடுத்தார்
இச்சமயத் திம்மங்கைக் கினிதுதவல் கடனெனக் கொண்(டு)
அச்சமுறும் அம்மங்கைக் கறுகுசென்ரு றுதல்அளித்தார். 576

வேறு

மிகநெகிழ்ந்த நல்லமன முடையவராய்
இந்தஅன்னை மிளிர்ந்த தாலும்
தகவொடுமக் கட்குப்புரி சேவைமகே
சன்சேவை யென்று சாமி
அகமதில்நன் றேறஅடிக் கடிகூறும்
மொழிநினைவில் வந்த தாலும்
இகமதில்நம் மாலியன்ற உதவிசெயல்
சிறந்ததென்ற எண்ணத் தாலும் 577

அம்மங்கை யருகினிற்சென் றமர்ந்து நற்கூந்
தலையன்பாற் கோதி விட்டு
செம்மையுறு மொழிகூறி இயன்றவரை
யிலும்உதவி யான்செய் கின்றேன்
மம்மருற வேண்டாம்; நீ துயருற்றால்
மகவினைப்பா திக்கும் மிக்க
நன்மகிழ்வொ டேயிருப்பாய் என்னஉரைத்
தருளாசி நவின்று சென்றார். 578

தம்கணவர் பாற்கூறி இசைவுபெற்றுத்
தம்மில்லத் திற்கே அந்த
மங்கையை அழைத்தேகி மாணருட்சட்
டப்படியே மகப்பே றெய்தத்
துங்கமிகு நன்முறையில் உதவிசெய்து
தூயநல்லாண் மகவி னோ(டு)அம்
மங்கையை அனுப்பிவைத்த மாண்செயலை
நம்வாயால் உரைத்தற் காமோ? 579

ஜெகதாம்பாள் எனப்பெரியோர் இட்டபெய
ரினுக்கேற்ப ஜெகத்தி னுக்கே
தகவார்நற் றாயாகிப் பல்லுயிர்க்கும்
தக்கநல்ல உதவி செய்வார்
மிகத்தூய்மை சால்அந்தத் தாயின்உயர்
மேன்மையெலாம் அறிந்து கூறும்
அகத்தூய்மை யிலனேனும் அவ்வனைதாள்
சிரம்சூடி வணங்கு கின்றேன். 580

ஒருமுறையிவ் வனைஅவரை புடலைமுத
லானபல விதைகள் நட்டுப்
பெருமுறையிற் பந்தர்அமைத் துப்பேணி
அவைகளுக்குப் பெருமான் தீர்த்தம்
திருநீறு தியவாரம் தொறும்தெளித்துச்
செம்மையுறப் போற்றி னார்கள்
பெருவாரி யாய்க் காய்கள் காய்க்கத்தொடங்
கினபெருமான் கருணை யாலே. 581

ஒப்பிலக்காய் களைக்கண்ட ஒருவன் அவற்
றைப்பறிக்க எண்ணம் கொண்டே
எப்படியோ ஓரிரவில் தோட்டத்துள்
ஏகிஅக்காய் களைஅறுத்தான்
மைப்படியுள் ளத்தோடும் நனிகட்டிக்
கொண்டுசெல முயலும் போது
கைப்பிடியாய் ஒருகாவற் காரன்அவன்
கரம்பற்றிக் கொண்டு நின்றான். 582

அறுத்தெடுத்த காய்கறிகள் அத்தனையும்
அப்படியே போட்டு விட்டுப்
பறித்தெடுத்த தனைமன்னித் திடுமாறு
பரிந்திறைஞ்சி வேண்டிக் கொள்ள
மறித்துமிந்தப் பக்கம்வரின் நொறுக்கிவிடு
வேன்என்ன வலித்துக் கூறிப்
பறித்தஅந்தக் கள்வனைப்ப யப்படுத்தி
விடுத்தனன்அக் காவற் காரன். 583

பொறிபுலன்கள் அனைத்தினையும் கொடுத்தருளிப்
போகமெலாம் கூட்டு வித்துக்
குறிகுணங்கள் அனைத்தினையும் கடந்தொளிர்சற்
குருவாகிக் குவல யத்தில்
நெறிபிறழா வண்ணம்அடி யவர்குழுவைக்
காவல்புரி நிமல னார்க்கு
வறிதுகறி காய்திருட வந்தவனை
விரட்டுசெயல் அரிய தாமோ? 584

அதிகாலை தோட்டத்தில் சென்றஅம்மை
கண்டங்குக் காய்கள் எல்லாம்
பதமாக நள்ளிரவிற் கள்வன்பறித்
துக்கொண்டு போனான் போலும்
உதவாமற் போயினஎன் றெண்ணினர்அங்
கொருமூட்டை யிருக்கக் கண்டார்
இதமோடும் ஒருவனைவிட் டினிது கொண்டு
வந்ததனை இல்லம் சேர்த்தார். 585

கட்டியுள துணிமூலம் கள்வனிவ
னெனவுணர்ந்து வினவி னூர்கள்
இட்டமுற்றுப் பறிக்கவந்தேன்; எடுத்துச்செல்
லும்போது காவற் காரன்
கட்டிப்பிடித் துப்புடைத்துக் கண்டித்து
மீண்டுமிங் குறுதே யென்றான்
மட்டில்வலி மாறவில்லை; மன்னிப்பீர்
என்னையென வணங்கி நின்றான். 586

அம்மையா ருக்கேதும் தோன்றவில்லை;
அருள்ஞான குரு பிரானே
செம்மையுறத் தோட்டக்கா வற்கார
னாகிவந்த திறனை யுன்னி
இம்மையிலிப் படிதோன்றிப் பேணுகரு
ணைச்சிறப்பை மிகவியந்து
மும்மைமலம் மாய்த்தருள்வோய் எனமொழிந்துள்
ளுருகிநனி போற்ற லானார். 587

குருநாதர் துதி

எனைப்புரக்க வேண்டுமெனக் கங்கணம் கட்டிக்கொண்(டு)
எஞ்ஞான்றும் காத்த ருளும் என்றன் அருட்குருவே
எனைமறந்து நினைத்துதிக்கும் காலமெலாம் எனக்கே
இணையில்பெருந் துணையாகி இலகிடும்ஒண் மணியே
வினைவசத்தால் இவண்காய்கள் திருடிடவந் தவனை
விரட்டிடக்கா வற்கார னாகிவந்த விபுவே
எனதுடமை உடலாவி அனைத்தும்நின தலவோ
ஏகாந்த மோனசுக மீந்தருளென் னிறையே! 588

என்னுடலே என்னுயிரே என்னுயிருக் குயிரே
என்னறிவே என்னறிவுக் கறிவாம்மெய் யறிவே
என்னுளமே என்னுளமீ திலகுபரம் பொருளே
என்னிருகண் மணியேஎன் கண்மணிகட் கொளியே
என்னகமே என்புறமே என்றனையாள் அரசே
என்னுளமே விருளகற்ற எழுந்தருளொண் கதிரே
என்னிடர்நீக் கருளுருவே என்கருணை நிதியே
இருடிநகர்ப் பதியில்வரும் என்குருநா யகமே. 589

சத்தனைத்தும் சித்தனைத்தும் ஆனந்தம் அனைத்தும்
தத்துவத்தின் வகையனைத்து மானபரம் பொருளே
பத்தரெலாம் பரவிடுமெய்ப் புகழுருவே சிறந்த
பாவலர்கள் ஏழிசையாற் பாடும்உயர் பொருளே
உத்தமமாம் மனம்அருள்வாய் உண்மையறி வருள்வாய்
ஓங்கார மறையருள்வாய் உயர்அருளூற் றருள்வாய்
இத்தரைமேற் சட்டநெறி யீந்தருள் சற் குருவே
இருடிநக ரெனும்பதியிற் போந்தருள்மாண் பொருளே. 590

வேண்டியதெல் லாம்அருளும் வேதாந்தச் சுடரே
வித்தகர்தம் சுத்தமனத் திலகும்ஒளிச் சுடரே
தூண்டிடல்வேண் டாதென்றும் துலங்குபெருஞ் சுடரே
தொன்மறையாய் ஆகமமாய் விளங்குபரஞ் சுடரே
வேண்டுதல்வேண் டாமையிலா விழுமியர்தம் உளமே
வியன்தளியாய் ஏற்றமரும் மெய்ஞ்ஞானச் சுடரே
பாண்டியநன் னாட்டினிலே இருடிநகர் எனும்நற்
பதியில்வரும் ஒண்சுடரே பரமார்த்தச் சுடரே. 591

காதலுடன் உருகடியார் கருத்தினிலே விளங்கும்
கவினுருவே கருணையெனும் கடலுருவே ஞான
போதமருள் குருவுருவே புனிதமெலாம் வழங்கும்
பொருளுருவே அருளுருவே புண்ணியப்பே ருருவே
நாதமுடி மேல்ஞான நடனசபை நடுவே
நன்றுதிகழ் ஒளியுருவே ஞானவொலி யுருவே
ஏதமில்நல் லிருடிநக ரென்னும்அருட் பதியில்
இனிதுவரு குருவேஇங் கெனையாள்சற் குருவே. 592

---

என்றுபல வாறுகத் துதிபுரிந்து போற்றி
இல்லறத்து வேலையெலாம் இனிதுசெய லானார்!
நன்றுபல அற்புதங்கள் நாள்தோறும் நடக்கும்
ஞானகுரு நாதர்பதம் நன்மனத்தி லுன்னி
என்றும்நளி னத்திலைமேல் தண்ணீர்போல் ஒட்டி
ஒட்டாமல் இல்லறத்தை ஒழுங்காக நடத்தித்
துன்றுதிரு வருளொளியில் தோய்ந்தவண்ணமி ருப்பார்
சொல்லரிதிங் கவர்பெருமை சொல்லரிது மாதோ. 593

வேறு

திருச்சாத்த னூர்இரெட்டி யாரைஇனி
தாட்கொண்ட பின்னர் அவ்வூர்க்(கு)
அருள்ஞானக் குரிசில்பல முறைசென்றுள்
ளார்அங்குச் செலும்போ தெல்லாம்
அருளார்ஏ ஞதிமங்க லத்தாய்க்குச்
செய்திசொல்லி யனுப்பு வார்கள்
விரைவாக வேலைகளை நனிமுடித்து
வந்தம்மை தரிசிப் பார்கள். 594

ஒருகால்அவ் வாறண்ணல் திருச்சாத்த
னூரில்எழுந் தருளும் போதில்
விரைவாகச் சென்றண் ணலைக்காண
வேண்டுமெனும் வேட்கை யோடும்
இருள்சூழ்ந்த நள்ளிரவுக் காலத்தும்
இறையன்பின் முதிர்ச்சி யாலே
பெருகார்வ மோடுமுனர்ப் பழகியுள
வழியில்நனி செல்ல லானுர். 595

வேறு

இளையாத பேரன்பால் விதைத்தநெல்லை எடுத்துவர
இளையான்றன் குடிமாறர் இரவில்நடந் திட்டதைப்போல்
தளராப்பே ரன்பூக்கத் தனியாக நடந்தார்கள்
உளவாமோ துயர்அணுவும் உடையோன்அன்
பர்க்கென்றே. 596

ஆண்டதிரு வருளரசை அகமுருகிச் சேவிக்க
மூண்டமனம் நேர்நோக்க முதல்வனையே தொழுது சென்ருர்
வேண்டியதை வேண்டியவா றருள்விமலர் துணையிருக்க
ஈண்டவரும் துயருளவோ இறைவனடி யார்க்கென்றே. 597

இருடியர்ஆச் சிரமம்நிகர் எழிற்சாத்த னூரின்கண்
இரவுபனி ரெண்டரைநா ழிகைகடந்த நேரத்தில்
திருவளர்மா ளிகைமாடி யினில்அண்ணல் திகழ்போதில்
வருமம்மை கதவுதட்ட ரெட்டியார் இறங்கிவந்தார். 598

கதவைத்திறந் ததும்அம்மை நிற்பதனைக் கண்டிரங்கி
முதிர்இருட்டில் ஏன்வந்தீர் பூச்சிபொட்டு வரும்வழியில்
எதிருறவந் தால்என்ன செய்வதெனக் கடிந்துகொண்டார்
இதமொடம்மை உள்ளேகி அண்ணலிருப் பிடம்
சார்ந்தார். 599

அருள்ஞான அண்ணலைக்கண் டகம்மிகவும் நெகிழ்ந்துருகி
உருமேவும் மயிர்ப்புளகம் உளவாகப் பணிந்தெழுந்தார்
திருவோடின் னருள்பெருகத் தேசிகர்நல் லாசிதந்நார்
அருள்நிட்டை யமர்ந்துபினர் அம்மைதுயில்
கொண்டனரால். 600

இரெட்டியார் விடியலில்மூன் றரைமணிக்கு விழித்தெழுந்து
தெருவாயிற் படியருகில் வருகையிலே தோவொன்று
சுரிரென்னத் தீண்டிடவும் ஏதொன்றும் தோன்றுமல்
விரைந்துட்சென் றனைவரையும் எழுப்பிநடந் ததையு
ரைத்தார். 601

அன்றுபிள்ளை யார்குப்பத் தன்னையுமங் கிருந்தார்கள்
நன்றுதண்ணீ ராட்டியண்ண லிடம்அழைத்து வந்தார்கள்
இன்றுநடந் திட்டசெய்தி யீதென்ன உரைத்தார்கள்
நன்றனையை நிட்டையினில் அமர்த்தினர்நம்
அருளண்ணல். 602

தாயமர்ந்து நள்ளிரவில் தனியன்பொ டிவண்போந்த
தாயைக்கடிந் துரைத்ததனுல் தானீது நடந்ததெனத்
தூயகுறிப் புணர்த்துவதாய் அண்ணலிடம் தெரிவிக்க
ஏயஅண்ணல் புன்முறுவல் பூத்தொருரை யியம்பினரால். 603

இரெட்டியா ரைப்பார்த்துப் பேரன்புக் கிணையுண்டோ
அருட்டிருவார் அடியார்கள் வெளிச்சென்ருல் ஆண்டவரே
தெருட்டிகழ்நற் காவலெனச் செல்லாரோ காட்டினில்தான்
இருட்டினிலே பூச்சிப்பொட் டிருந்திடுமோ எனநவின்ருர்.
604

வீட்டினிலும் இருக்குமென உணர்த்திடுதல் வேண்டுமென்றே
வீட்டினுக்குள் காட்டியதும் உடையவன்றன் விழுச்செயலே
காட்டியதை உணர்ந்தருளை நனிபோற்றி மன்னிப்புக்
கேட்டுக்கொளட் டும்தீமை விலகுமெனக் கிளத்தினரால்.605

கருணைமிகு குருநாதர் காசினியில் அடியவரை
அருள்புரிந்து பேணுதிறம் ஆரறிந்து கூறவல்லார்
அருள்நயம்சால் குருபரரை அருட்சட்ட அடியவரைப்
பெருவிருப்பால் பணிந்தேத்திப் பெருநலம்பெற்
றுய்வோமே. 606

## அண்டராயநல்லூர்

திருச்சாத்த னூர்என்னும் திருவருளார் திருத்தலத்தில்
அருளமுதப் பெருங்கடலாய் விளங்கண்ணல் எழுந்தருளி
தெருள்விழைநல் லடியவர்க்கும் அன்பருக்கும் சிறந்தபயன்
அருள்அமுத மொழிகூறி ஆனந்த மூட்டினரால். 607

அருகிலமைந் துளஅண்ட ராயநல்லூர் எனும்ஊரில்
பெருகுதிரு வுடைஆதி மூர்த்திநா யுடுஎன்பார்
பெரியதொரு வீடுகட்டத் தொடங்கிஅதை முடிப்பதற்கு
வருதடைகள் பலவாக அப்படியே விட்டிருந்தார். 608

ஜோசியர்கள் கோள்தோட முளதாகச் சொன்னார்அவ்
வாசற்படி களைமாற்ற வேண்டுமென்றார்; அம்மனையே
வாசம்செயற் காகாதென் றார்கள்;மறு படிக்கட்ட
ஆசில்தொடக் கம்புரிந்தால் ஆபத்து நேர்ந்துவிடும். 609

சுவர்கள்தளம் போடுமட்டம் வந்ததும்நா யுடுமறைந்தார்
நவில்பதினைந் தாண்டாக அவ்வேலை நடக்கவில்லை
அவர்மனைவி மூர்த்தியம்மை அருட்சட்ட மேற்றிருந்தார்
அவமறுத்தாள் அண்ணலிடம் மிகுபக்தி கொண்
டிருந்தார். 610

எழிற்சாத்த னூரில்அண்ணல் எழுந்தருளும் போதெல்லாம்
வழுவாது சென்றினிது வணங்கியருள் மிகப்பெற்றும்
அழகாக அற்புதங்கள் ஆற்றியதெல் லாம்கண்டும்
முழுதான நம்பிக்கை கொண்டிருந்தார் மூர்த்தியம்மை. 611

வீடுகட்டி அரைகுறையாய் விட்டுவிட்டு நம்கணவர்
வீடடைந்து விட்டாரே வீடுகட்டி முடிப்பதற்கு
நாடுமுழு தடியவர்தம் நடலையெலாம் நீக்கிவரும்
ஈடில்குரு நாதர்அருள் செயவேண்டும் எனத்தொழுவார். 612

அடியவர்தம் குறையகற்றி அருள்புரியும் பெருமானே
கொடியவினை தவிர்த்துமுத்தி கூட்டியருள் கோமானே
நொடியில்இந்த வீடுகட்டி முடிந்திடும்நும் அருளிருந்தால்;
அடிமலரைப் பற்றியுளேன் அருள்புரிவீர் எனத்துதிப்பார். 613

அற்றமில்நல் லடியார்தம் குறைநீக்க உளம்கொண்ட
நற்றவராம் பெருமானுர் நன்றவ்வூர்க் கெழுந்தருள
உற்றகுறை களைநற்ரு யிடம்கூறும் ஒண்சேய்போல்
பற்றறுத்துப் பரமபதம் அருள்பவர்தாள் பணிந்
துரைத்தார். 614

குவித்தசெங்கை கொண்டுதொழு
தெதிர்வணங்கி நின்றஅம்மை
தவிக்கும்நிலை தண்ண ருளால்
உணர்ந்தருளித் தடையின்றித்
துவக்கிடலாம் கட்டிடத்தைத்
துயரணுகி டா(து); உடையோன்
புவிக்கணுள போதச்சம்
ஏன்?பூர்த்தி யாகும்என்ருர். 615

நிறையருளொ டுரைத்தஅந்த நிகரிலுரை கேட்டதுமே
குறையனைத்தும் அகன்றவராய்க் குதுகலமிக் குடையவராய்
முறையொடும்கட் டிடவேலை தொடங்கிநனி முடித்திட்டார்;
இறைவர்திரு வுளம்வைத்தால் இனிதாகாச் செயலுளதோ?
616

எழிலுறக்கட் டிடவேலை இனிதுமுடி வானபின்னர்
விழுமியநற் குடிபுகு விழாவினுக்கு வித்தகனர்
செழுமைதர எழுந்தருளச் செப்பரிய மகிழ்வினெடும்
தொழு(து)அனைசென் றெதிர்கொண்டு தூமலர்த்தாள்
வணங்கினரால். 617

மங்களவாத் தியத்தோடும் வள்ளலைநன் றழைத்துவந்து
துங்கமிகும் ஆசனத்தில் இனிதிருத்தித் தூமலர்கொண்(டு)
எங்கள்குலம் விளங்கவந்த இன்னமுதே இருநிதியே
மங்கலவாழ் வருளும்இன்ப மாமணியே எனத்துதித்தார். 618

ஊரவரும் அடியவரும் உவப்புறவும் வியப்புறவும்
சீரியநற் குடிபுகுவி ழாசிறப்பொ டேநடத்தி
ஓரிரவு தங்கியிருந் துற்றஅச்சத் தினைப்போக்கிக்
கோரும்நலம் அருளிஅண்ணல் குறைவின்றி வாழ
வைத்தார். 619

அன்றுமுதல் அடியவராம் மூர்த்தியம்மை யும்பிறரும்
நன்றுகுரு நாதர்பத நாண்மலர்கள் தொழுதிறைஞ்சி
என்றுமெந்தக் குறைவுமின்றி இன்பமுடன் வாழலுற்றார்
ஒன்றுமுளத் தன்பொடவர் ஒண்பதங்கள் தொழு
துய்வோம். 620

## மழவராய நல்லூர்

அழகுசால் அண்டராய நல்லூருக் கண்மை யாகிப்
பொழில்வளம் செந்நெல் கன்னல் பொலியமா தென்னை யாதி
வழுவில்நல் லடியார்அன்பர் வருகென அருக ழைக்கும்
செழுமைசால் மழவராய நல்லூர்நன் றிலங்கு மன்றே. 621

வேறு

அவணுறைநல் லடியார்வேங் கடசாமி
நாயுடுமுன் ஆற்று தூய
தவப்பயனால் அருட்சாட்டச் செந்நெறியில்
தவறாமல் ஒழுகி வந்தார்
தவலரும்சி றப்புடைஇ ரெட்டிபட்டிச்
சாமிகளின் சங்கம் பள்ளி
புவிபுகழ்மா ணவர்இல்லம் போற்றுநர
சிம்மநம்பி பிறந்த திவ்வூர். 622

அடியவர்வேங் கடசாமி நாயுடுவின்
சிற்றன்னை மகப்பேற் றின்பின்
கொடியபிணி வாய்ப்பட்டுப் பிழைப்பதரி
தெனஎவரும் கூறும் வண்ணம்
நெடிதுநலிந் திருக்கையில்ஆ பத்தினுக்கோர்
அருந்துணையாய் நிலவும் அண்ணல்
கடிதினிலவ் வூர்வழியே கருணையுடன்
வரக்கண்டு களிப்புற் றார்கள். 623

பற்பலஅற் புதச்செயலை முன்னரே
கண்டிருந்த பண்பார் மக்கள்
*வற்புறுவேங் கடசாமி நாயுடுவொ
டுற்றினிது வணங்கி னார்கள்
பொற்புறும்அவ் விளஞ்சேயைக் குருபரனார்
பொன்மலர்த்தா ளினிலிட் டார்கள்
எற்புருவாய்ச் சேயினன்னை யும் போந்து
குருபரர்முன் இறைஞ்சி னாரால். 624

அவ்வனையின் சிரமீதில் அண்ணலார்
தம்திருக்கை இனிதே சூட்டிச்
செவ்வியபே ரருள்செய்ய அவ்வனைநோய்
தீர்ந்துமுழு நலமுற் றார்கள்;
எவ்வமறக் குழந்தையுமெல் லாநலமும்
எய்திநன்று திகழ ஊரார்
ஒவ்வொருவ ரும்வியப்பும் உவப்புமுற்றுத்
துதிபாடிப் போற்ற லானார். 625

குருநாதர் துதி

அற்புதத்தில் அற்புதமாம் சட்ட மொன்றை
அருளாற்கண் டவனிக்கே பொதுவாய்த் தந்தாய்
பொற்புநிறை மாந்தர்களை மணிகோத் தாற்போல்
பொறுக்கியெடுத் துக்கூட்டி அரசாள் கின்றாய்
கற்புநெறி பக்திநெறி யோகம் ஞானம்
கற்பித்துக் கருணையுடன் காத்தாள் கின்றாய்
சொற்புகழால் தொடற்கரிதாம் குருவாய் ஓங்கும்
தூமணியே ஜோதியெனத் துலங்கும் தேவே. 626

ஆதியும்நீ நடுநிலைநீ அந்த மும்நீ
அடிமுடிகண் டறியவொணாச் சோதி யும்நீ
நீதியும்நீ நின்மலம்நீ நிர்க்கு ணம்நீ
நித்தியம்நீ சத்தியம்நீ நிர்ப்ப யம்நீ
ஓதியுணர்ந் தறிவரிதாய் ஒளிருண் மைநீ
ஒன்றும்நீ பலவும்நீ உயர்வெல் லாம்நீ
பாதியருள் பாதியுல கியலா யெங்கும்
பரந்திலகும் பரம்பொருள்நீ பதியாம் தேவே. 627

---

* வற்பு உறுதி

செங்கமலத் திருமலரே மலரி லூறும்
தேனேநன் னறுமணமே தெவிட்டா ஞான
பங்கயமே பாங்குடனெம் முடிமேற் பாத
பங்கயத்தைச் சூட்டவிழை பரம மூர்த்தி
தங்கம்நிகர் மெய்யடியார் உள்ளந் தோறும்
சார்ந்தமர்ந்து சாந்தியமு தருத்தும் தேவே
துங்கமிகு நிலையெமக்கும் நல்கி யாள்வாய்
தூயபரஞ் சுடரொளியாய்த் துலங்கும் தேவே. 628

வேறு

கண்ணினுள் மணியே மணியினுள் ளொளியே
காதல்செய் யடியர்தம் உயிரே
பெண்ணினுள் ஆணே ஆணினுள் பெண்ணே
பிறப்பிறப் பறஅருள் நெறியே
எண்ணினுள் எழுத்தே எழுத்தினுள் ஒலியே
எண்ணில்பல் உலகினும் விரிவே
பண்ணினுள்பாட்டே பாட்டினுட் பொருளே
பரமசற் குருமகா மணியே. 629

ஒழிவிலா துன்தாள் போற்றுமெய் யடியார்க்(கு)
உயர்வெலாம் அருளும்நா யகனே
அழிவிலா நெறியை அவனிமீ தளித்தாள்
அற்புதக் குருமகா மணியே
பழியிலா வழியிற் பாருளோர் தம்மைப்
பரிந்தழைத் தேகவே விழைவோய்
மொழியிலா மோன முடிவிலே அடியார்
மூழ்கிஉய்ந் திடஅருள் முனியே. 630

---

என்றெலாம் பலவா றேத்தினர் துதித்தார்
இயம்பரு மகிழ்ச்சியுள் ளாழ்ந்தார்
நன்றுகண் ணீரால் உடம்பெலாம் நனைத்தார்
நாதவோ என்றுபோற் றிட்டார்
சென்றுசென் றண்ணல் சேவடி பணிந்தார்
தேசிகர்க் கரஹரா என்றார்
அன்றவர் பெற்ற உளநிலை நம்மால்
அளப்பரி தளப்பரி தாமால். 631

இவ்வணம் அடியார் அன்பரெல் லோரும்
ஏத்தியின் புற்றருள் துணையால்
செவ்விய நல்வாழ் வாற்றினர்; அண்ணல்
சிலதினம் அப்பதி தங்கி
திவ்விய மாய்ப்பல் லூர்களிற் சென்று
சீரடி யார்களைச் சேர்த்தார்;
பவ்வமாம் பிறவி கடத்திடும் அவர்தாள்
பணிந்துபே ரின்பமெய் திடுவாம். 632

## எளவாளப்பாக்கம் - 2

திருவருளார் திண்டிவனத் திற்கருகு
திகழும்எள வாளப் பாக்கம்
புரிதவத்தால் தோன்றியவேங் கடவரத
ரெட்டியார் புவிபோற் றண்ணல்
அருள்நோக்கால் ஆட்கொளப்பெற் றருட்சட்ட
அனுட்டானம் ஏற்றி ருந்தார்
தெருள்மிகுந்த அவர்குடும்பம் முழுவதுமே
அருள்நெறியில் திகழ்ந்த தம்மா. 633

ஆசார அனுட்டானங் களில்அணுவும்
பிறழாமல் ஒழுகும் அந்தத்
தேசார்நற் குடும்பத்தார் தினந்தோறும்
இரவினிலே உறங்கு முன்னர்
ஆசானும் அண்ணலுக்கன் பொடுபூசை
புரியறையை விளக்கி நல்ல
நேசானு பவத்தோடு மெழுகியெழில்
நிறைகோலம் தீட்டு வார்கள். 634

அப்பதிவாழ் அடியவர்இ ரெட்டியார்
இல்லினுக்கவ் வப்போ துற்றுச்
செப்பரிய அருட்புகழார் அண்ணல்திரு
வருட்பெருமை பேசிச் செல்வார்;
ஒப்பரிய குருபரனார் அருட்சிறப்பை
உரையாடி நிட்டை பேணி
அப்படியே ஓரிரவில் உறங்கிவிட்டார்
உணவும்கொளா(து) அடியார் எல்லாம். 635

தம்மைமறந் தவராகி உறங்கியதால்
தம்பிரா னுர்க்குப் பூசை
செம்மையுறப் புரியறையைத் திருமெழுக்கிட்(டு)
எழிற்கோலம் தீட்ட வில்லை
எம்மையுடை யவராணைப் படிவிடியல்
நேரத்தில் எழுந்து மூழ்கி
மம்மர்தவிர் பூசையறைக் குட்புதிய
மாக்கோலம் திகழக் கண்டார். 636

இரவுமிக்க சோர்வடைந்த தாலினிது
பூசையறை மெழுகி டாமல்
மருவுபுதுக் கோலமொன்றும் தீட்டாமல்
வாளாக உறங்கி விட்டோம்;
இரவினில்இங் கினிதுமெழு கிக்கோல
மிட்டவர் ஆர் எனஆ ராய்ந்தார்;
ஒருவருமே அவ்வேலை செய்யவில்லை
யென்னவுணர்ந் தச்ச முற்ருர். 637

நனிமெழுகி அழகாகக் கோலமிட்ட
செயல்நடந்த(து) எவ்வா றென்றே
அனைவரும் வியப்படைந்தார்; அச்சமுற்ருர்
ஆர்புரிந்த செயலீ தென்றே
வினவினர்; ஒன் றும்புரியா ராகித்திகைத்
திருந்தார்கள்; வியன்சீ ரண்ணல்
புனிதஅடி யரைத்தெருட்ட வழக்கம்போல்
எளவாளப் பாக்கம் போந்தார். 638

அடியவர்கள் அனைவருமே கரைகாணு
ஆனந்தக் கடலில் ஆழ்ந்தார்
படியின்மிசை ஆடியும்பா டியும்வீழ்ந்து
பணிந்தார வாரம் செய்தார்
அடியவரிற் சிலர்தங்கள் பேரன்பின்
ஆழத்தை வெளிக்காட் டாமல்
நெடிதுளத்துக் குட்பொங்கிப் பூரித்து
நிறைமகிழ்வுற் றிலங்கி னர்கள். 639

வழக்கம்போல் அண்ணலுக்கு மாண்திருவ
டிப்பூசை நடத்தி னார்கள்
செழிப்பருளும் திருநீறும் தீர்த்தமும்ஏற்(று)
அணிந்தருந்திக் களிப்புற் றார்கள்
ஒழுக்கமிகும் அடியரன்பர் அண்ணல்அருள்
உபதேச வெள்ளத் தாழ்ந்தார்
பழுத்தஅருட் சட்டஅடி யவர்ஞான
நிட்டையினுட் படிந்தின் புற்றார். 640

அனைவரும்நன் றுறங்கியபின் இரெட்டியார்
அண்ணலரு கடைந்து நின்றார்
வினையறுத்து வீட ருளும் வித்தகனார்
புன்முறுவ லோடு நோக்கி
இனம்வருணம் நோக்காமல் அடியார்க
ளிடம்அன்பு செய்தல் வேண்டும்
தனம்அனைத்தி னிலும்சிறந்த தனம்சட்ட
நெறியென்னப் பேணு கென்றார். 641

அன்புமிகு ரெட்டியார் மென்குரலில்
அண்ணலிடம் விண்ணப் பித்தார்
இன்பமருள் பூசையறை யினைமெழுகிக்
கோலமிடா திரவொன் றில்யாம்
பொன்புரைநன் னிட்டையிருந் தப்படியே
உறங்கவிட்டோம்; புலருங் காலை
அன்புடன்பார்த் திடமெழுகி அற்புதமார்
கோலம்போட் டிருக்கக் கண்டோம் 642

எங்களுக்கு வியப்புமச்ச மும்திகைப்பும்
உள்ளதென இயம்ப, அண்ணல்
மங்கலங்கள் அருளும்உடை யோன்இருக்க
நீவிர்அச்ச முறுவ தேனோ?
இங்குபில்லி சூனியம்குட் டிச்சாத்தான்
உற்றதென எண்ணி னீரோ?
எங்கும்நிறை இறைவன்அருள் செய்யுமுறை
யீதென்ன அருளி னரால். 643

முன் விழும்பன் மடங்காழ்ந்த பற்றுடனும்
இன்முகத்தொ டகம்ம லர்ந்து
பன்னரும்பே ரருள்புரியொண் பதமலரிற்
பணிந்துரெட்டி யார்போற் றிட்டார்;
மன்னுலகில் அவர்பெற்ற மாண்பேறென்
னே! ஞான வள்ள லுக்கும்
இன்னடிய ருக்குமுள பேருறவை
எங்ஙனம்நாம் இயம்ப வல்லேம்? 644

நுகர்ந்தனுப வித்துகந்த அவர்கள்அறி
வார்; அவரும் நுவலற் காமோ?
பகர்ந்தமறை யத்தனையும் பரமனருட்
சிறப்(பு) உரைத்தற் கியலா தென்னும்;
சகந்தன்னைத் திருத்தவந்த சற்குருவின்
தண்ணருட்கும், சட்டம் பேணி
இகந்தன்னிற் பரம்காணும் இன்னடியர்
கட்கும்வணக் கம்செய் வோமே. 645

## அலசந்தாபுரம்

வாணியம்பா டியில்அண்ணல் பலமுறைசென்
றருட்செல்வம் வழங்கி யுள்ளார்
மாணடிய ரானமுனி யப்பசெட்டி
யார்சட்டம் வழுவா தோம்ப
ஆணினமும் பெண்ணினமும் அவர்நலங்கள்
அடைவதுகண் டருட்சட் டத்தைப்
பேணிநலம் பெற்றுய்ந்தார் அருகுளஊ
ராருமதைப் பேண லானார். 646

அருகுளஊர் களில்அலசந் தாபுரமும்
ஒன்றாகும் அயர்வில் லாமல்
பெரிதுழைக்கும் உழவர்பெரு மக்களங்குப்
பெருவாரி யாக வாழ்ந்தார்
அருள்மிகுவா ணியம்பாடி முனியப்பச்
செட்டியார் குடும்பத் தின்பால்
கரைகடந்த அன்புடைய ஸ்ரீரங்கக்
கவுண்டரென்பார் ஒருவர் வாழ்ந்தார். 647

இருவரும்தத் தம்குடும்பச் செய்திகளை
இனிதுபரி மாறிக் கொள்வர்
பொருவரும்க வுண்டர்குமா ரர்க்குமிகு
சுரம்வந்து ஜன்னி கண்டு
பெரியபல மருத்துவரும் கைவிட்டார்;
பேதுற்ற மனத்தி னோடும்
உரியநண்பர் முனியப்பச் செட்டியா
ரிடம்கவுண்ட ரிதையு ரைத்தார். 648

வாணியம்பா டித்தலத்தில் எழுந்தருளி
யிருந்தவள்ளல் செவிக்கி தெட்ட
மாணுறுபே ரருளோடும் அடியார்கள்
வேண்டுதலுக் கிணங்கி உம்பர்
சேணினின்று வாழ்த்தஅல சந்தாபு
ரப்பதிக்கண் சென்று சேர்ந்தார்;
காணஅவ னுற்றமக்கள் இவர்மட்டும்
என்னசெய்வார் எனப்ப கர்ந்தார். 649

பெரியமருத் துவரெல்லாம் கைவிட்டார்
பேணுபல தெய்வங் கட்கும்
உரியபல ப்ரார்த்தனைசெய் தும்பயனென்
றும்காண வில்லை யென்றார்
குருபரனார் மகிமையுணர்ந் தவர்கள்இனி
குணமாகும் என்று சொன்னார்
ஒருபயமும் இல்லைஇனி இவர்பிழைப்பார்
என்றடியர் உரைத்தின் புற்றார். 650

அருளண்ணல் பிணியாளர் அருகேகிப்
பெயர்சொல்லி அழைத்தார்; ப்ரக்ஞை
ஒருசிறிது மற்றிருந்த தால்உரையில்
லாதிருக்கச் சிரமேல் ஒண்கை
அருளுடனும் சூட்டப்பிணி யாளர்இரு
கண்விழித்துப் பேச லானார்
பெருகுறுவி டாய்க்கிளநீர் சாதநன்னீர்
விளாம்பழமும் வேண்டு மென்றார். 651

ஞானவள்ளல் அதுகேட்டு நல்கிடலாம்
எனநவில அங்குள் ளோர்கள்
ஆனபயம் மிக்குற்ருர்; அண்ணலரு
ளாணைவணம் அவைகள் நல்கப்
போனவழி தெரியாமல் நோய்விலகிற்
றன்பரெலாம் போற்றி செய்தார்
தேனமுதுண் டவர்போலத் திரண்டிருந்த
மக்கள்அர ஹரவென் ருர்த்தார். 652

பக்குவமிக் குற்றநல்லான் மாக்களையெல்
லாம்தெருட்டிப் பவமாம் பவ்வம்
ஒக்கநனி கடத்திமுத்திக் கரைசேர்க்கப்
போந்தஒப்பி லண்ண லாரின்
தக்கசெம்ம லர்க்கரம்தொட் டால்நடவாச்
செயலுமுண்டோ? ஜால வித்தை
இக்கணத்திற் செய்ததுபோல் இச்செயல்
நடந்ததென இறும்பூ துற்ருர். 653

ஒருசிறிது நேரத்திற் பிணியாளர்
உவந்தெழுந்து நடக்க லாஞர்
பெருகார்வ மோடடியர் அன்பரெலாம்
பெரிதுவந்து போற்றி ஞர்கள்
உருகாத கல்மனமும் உருகியது
பேரன்புக் குறுதா மூண்டோ
அருளாரண் ணலேப்பணிந்து போற்றிப்பிணி
யகன்றுய்ந்தோர் துதிக்க லாஞர். 654

குருநாதர் துதி

நலமெலாம் அருளும் திருவருட் சட்டம்
ஞாலமீ தருளிநல் லடியார்
குலமெலாம் விளங்கத் திருவருட் செங்கோல்
குவலயத் தோச்சுபே ரரசே
புலனெலாம் விழையும் படியிவண் திரியும்
புல்லனென் றனையும்நன் ருண்டாய்
தலமெலாம் புகழும் நின்னருட் கருணை
. தமியனுல் ஓதிடற் காமோ? 655

கற்றவர் பலரும் வியப்புறும் வண்ணம்
காசினி நோயெலாம் களைவாய்
அற்றவர் அடைந்த அருநிதி யெனவே
அருட்பெருஞ் செல்வமீந் தாள்வாய்
நற்றவப் பயனிந் நாயினேற் கருளும்
ஞானவா னுருவமே மோன
முற்றவர்க் கருள இருடிநன் னகரில்
உதித்தொளிர் ஞாயிறும் குருவே. 656

கல்வியுள் ளோர்க்கும் கற்றிடா தவர்க்கும்
கருணைசெய் கற்பகத் தருவே
செல்வமிக் கவர்க்கும் செல்வமில் லார்க்கும்
திருவருள் புரிசெழுஞ் சுடரே
தொல்வினை யனைத்தும் தவிர்த்தருள் ஞானச்
சுடர்விளக் கேற்றுமே லவனே
நல்வளம் சான்ற இருடிநன் னகரில்
போந்தருள் ஞானசற் குருவே. 657

இனம்மத மாதி பேதமெல் லாமும்
இகந்தொளிர் நல்லருள் நெறியை
மனமது செம்மை யடைந்திட வேண்டும்
மாண்பினர்க் குதவியாள் மணியே
தினமதி காலை பச்சைநீ ராடித்
திருவடி வழுத்துநர்க் கென்றும்
அனமுடை செல்வம் அருள்நிதி யனைத்தும்
அருளியாள் அற்புதக் குருவே. 658

அம்மையப் பனுமாய் ஆதியா சானாய்
அருள்புரி தெய்வமாய் விளங்கும்
செம்மையே நின்றன் சேவடிக் கமலம்
சிந்தைசெய் துய்யவைத் தருள்வாய்
மும்மைவெம் மலமும் முறித்துநன் மோன
முத்தியீந் தருள்பரா பரமே
இம்மைநன் னலமும் வழங்கியாண் டருள
இருடிநன் னகர்வரும் இறையே. 659

எனமிக மகிழ்ந்து போற்றினர் சட்ட
மேற்றினி யுய்கிறேன் என்றார்
நனிமகிழ்ந் தன்பர் பலரருட் சட்ட
நன்னெறி பேணிட இசைந்தார்
புனிதமிக் கருளிப் போதசற் குருவும்
அடியர்க்குப் புகல்வன புகன்றே
இனிதொரு சிலநாள் அப்பதி தங்கி
இருந்தனர் இமையவர் போற்ற. 660

வேறுள பற்பல் இடங்களில் உள்ள
அடியவர் விழைந்திடும் வண்ணம்
கூறிடற்கரிய திருவருட் காட்சி
கொடுத்தருள் புரிவதற் காக
ஈறில்மா தவப்பே ரோருரு வாகத்
திகழ்ந்திடும் இன்னருள் மூர்த்தி
மாறில்சீ ரடியா ரிடம்விடை கொண்டு
சென்றனர் மாநில மிசையே 661

**பிள்ளையார் நுப்பம்-1**

அருட்சக்தி அன்னை துதி

தன்னே ரில்லாத் தனிப்பெருந் தலைவியாம்
அன்னே உன்றன் அடிமலர் போற்றி
கன்னேர் உளமும் கரைந்துரு கச்செய்
பொன்னே பொருளே புகழே போற்றி. 662

வேறு

அருள்ஞான குருபரனார் அருட்கருணை
யேஉருவாய் அவத ரித்துப்
பொருளார்நூல் பலபயின்று புனிதமுற்றுத்
தெய்விகநற் பொலிவு பெற்றுத்
தெருளார்சற் குருவருட்சட் டம்பேணிச்
செய்தவத்திற் சிறந்து பாரார்
இருளோட்டி அருள்கூட்டும் அருட்சக்தி
யன்னையெழில் மலர்த்தாள் போற்றி. 663

ஞானநிட்டை நன்றுபுரி மாதவத்தர்
அடிசேரல் நலமாம் என்றும்,
ஆனநிய மாதிதவ ருதவர்கள்
அரியதுணை யாவார் என்றும்,
ஞானியர்தம் திருவடியை அனுதினமும்
நன்றுவழி பட்டு வந்தால்
வானமிர்த குணம்பெருகும் என்றுமண்ணல்
அருள்விளக்கம் வழங்கி யுள்ளார். 664

ஏகபரா பரவத்து ஒன்றிணையே
அவர்கள்மனம் என்றும் நாடும்;
ஏகநெறி யருளண்ண லால்ஆட்கொள்
ளப்பெற்ற இனியார் தம்முள்
யோகநிலை அருள்ஞான நிலையில்உயர்
அருட்சக்தி அன்னை யாரை
மாகமும்பூ தலமும்தொழும் எனில்அவர்நன்
மாண்புரைக்க எளியேற் காமோ? 665

படியில்உயர் பிள்ளையார் குப்பமெனும்
பதியில்அருட் சுடராய் மேவும்
நெடியபுகழ் மிக்கஅருட் சக்தியன்னை
பதமலர்கள் நிதமும் போற்றி
அடியவரும் அன்பர்களும் அனைத்துநலம்
பெறுவரென்றால் அகில மீதில்
அடியனொரு சிறுநாவால் அவ்வன்னை
புகழுரைத்தல் அரிதே யன்றோ? 666

தவமென்ப தென்னவெனச் சற்றும்அறி
யாதஇந்தத் தமிய னேன்நற்
றவம்முற்றிக் கனிந்தஅருட் சக்தியன்னை
யின்சரிதம் சாற்று தற்கிவ்
அவனிமிசை தகுதியிலேன் ஆயிடினும்
ஆண்டவர்தண் ணருளி னாலும்,
தவமிகும்அத் தாயின்மலர்த் தாள்துணையி
னாலும்சற் றிங்கெழுத லுற்றேன். 667



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளால் ஆட்கொள்ளப்பெற்ற
பிள்ளையார்குப்பம்
திருவார்திரு. அருட்சக்தி அன்னை அவர்கள்.

ஞானநிட்டை நன்றுபுரி மாதவத்தர்
அடிசேரல் நலமாம் என்றும்,
ஆனநிய மாதிதவ ருதவர்கள்
அரியதுணை யாவார் என்றும்,
ஞானியர்தம் திருவடியை அனுதினமும்
நன்றுவழி பட்டு வந்தால்
வானமிர்த குணம்பெருகும் என்றுமண்ணல்
அருள்விளக்கம் வழங்கி யுள்ளார். 664

ஏகபரா பரவத்து ஒன்றினையே
அவர்கள்மனம் என்றும் நாடும்;
ஏகநெறி யருளண்ண லால்ஆட்கொள்
ளப்பெற்ற இனியார் தம்முள்
யோகநிலை அருள்ஞான நிலையில்உயர்
அருட்சக்தி அன்னை யாரை
மாகமும்பூ தலமும்தொழும் எனில்அவர்நன்
மாண்புரைக்க எளியேற் காமோ? 665

படியில்உயர் பிள்ளையார் குப்பமெனும்
பதியில்அருட் சுடராய் மேவும்
நெடியபுகழ் மிக்கஅருட் சக்தியன்னை
பதமலர்கள் நிதமும் போற்றி
அடியவரும் அன்பர்களும் அனைத்துநலம்
பெறுவரென்றால் அகில மீதில்
அடியனொரு சிறுநாவால் அவ்வன்னை
புகழுரைத்தல் அரிதே யன்றோ? 666

தவமென்ப தென்னவெனச் சற்றும்அறி
யாதஇந்தத் தமிய னேன்நற்
றவம்முற்றிக் கனிந்தஅருட் சக்தியன்னை
யின்சரிதம் சாற்று தற்கிவ்
அவனிமிசை தகுதியிலேன் ஆயிடினும்
ஆண்டவர்தண் ணருளி னாலும்,
தவமிகும்அத் தாயின்மலர்த் தாள்துணையி
னாலும்சற் றிங்கெழுத லுற்றேன். 667



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளால் ஆட்கொள்ளப்பெற்ற
பிள்ளையார்குப்பம்
திருவார்திரு. அருட்சக்தி அன்னை அவர்கள்.

தமிழகத்தின் அருகுள்ள ஆந்திரமா
நிலத்திலிருந் தவ்வப் போது
தமிழகத்தில் வந்துமுற்கா லத்திற்குடி
யேறியபல் சமுகங் கட்குள்
சுமுகமுடன் உணவூட்டும் வேளாண்மைத்
தொழிலினில்மேம் பட்டுத் தோன்றும்
சமுகமொன் றிரெட்டியார் சமுகம்அது
மாண்போடு தழையும் நன்றே. 668

இவர்களிற் பெரும்பாலோர் வைணவர்க
ளாயிருக்க இவண்காண் கின்றோம்
இவர்கண்ணன் வழிபாடு செய்பவராய்
இன்முகத்தொ டின்சொல் கூறிப்
புவியில்விருந் தோம்புமுயர் பொற்புடைய
ராய்ப்பக்திப் பொலிவுற் றுள்ளார்
இவர்கள்மர பினிற்போந்த இனியஅருட்
சக்தியன்னைக் கிணையார் உள்ளார்? 669

ரெட்டியார் குலம்விளங்க இப்புவியில்
ஒளிவிளங்க இன்பம் கூட்டும்
சட்டமா நெறிவிளங்க உயரன்பின்
திறம்விளங்கத் தவம்வி ளங்க
நிட்டையால் எய்துமுயர் நிலைவிளங்க
அடியவர்கு ழாம்வி ளங்க
அட்டமா திசையிலண்ணல் சீர்விளங்க
வொளிரன்னைக் கிணையார் உள்ளார்? 670

திருநாவுக் கரசுசிவன் திருவருளாற்
கடலினின்று கரையிற் சேர்ந்து
பெருஞாலத் தினில்தோன்றுத் துணையானார்*
பெருமானென் றிறைஞ்சி நின்ற
தருநாமப் பாதிரியைத் தலவிருட்ச
மாக்கொண்டு தழைநல் லூருக்(கு)†
இருமூன்று மைல்தொலைவில் பிள்ளையார்
குப்பம்இனி திலங்கும் அம்மா. 671

---

*''ஈன்றானுமாய்''—திருநாவுக்கரசர் தேவாரம்,
†திருப்பாதிரிப் புலியூர்-(கடலூர்-புதுநகர்)

பூதேவி தரும்பொருள்கள் பொருந்துமகிழ்
வோடினிது போற்றிப் பேணி
மாதேவன் திருவடிகள் மனமலரால்
மணமலரால் வழுத்தி வாழ்த்தி
சூதேதும் அறியாமற் சொல்லறங்கள்
பலபேணிச் சுகவாழ் வாற்றும்
சீதேவி புத்திரராம் ரெட்டியார்
திருமரபு திகழும் அங்கண். 672

அத்தகைய நன்மரபில் திருச்சாத்த
னூர்நகரில் அருளால் மேவும்
முத்துவீ ராரெட்டி யார்குயிலம்
மாள்சேயாய் முளைத்துப் போந்த
சத்தியே அருட்சக்தி அன்னையெனத்
தலம்போற்றத் திகழு கின்றார்;
மெத்தஅருட் கனிவுமிகும் அத்தவச்சீ
மாட்டியின்சீர் விண்ணும் போற்றும். 673

வடலூர் இராமலிங்க வள்ளலார்
வண்கரத்தால் விபூதி பெற்றுக்
கடல்ஞாலத் தினில்தாயீன் கவின்சேயாய்
வந்தகுயி லம்மை யீன்ற
திடஞானச் சேய்விஜய ஆவணியில்
மகநாளிற் செகமீ தற்றார்;
புடமேவு பொன்போன்ற அச்சேயைச்
"சொர்ணம்" எனச் சொற்றார் பெற்றோர். 674

ஓரிடத்தில் பிறந்துபிறி தோரிடத்தில்
வளர்ந்தகண்ண பெருமான் போலச்
சீரியநம் தாய்தம்தாய் மாமனில்லத்
தினில்திகழ்ந்து வளர லானார்
சூரியநல் லறிவொடுதாய் மொழியாகக்
குலவாந்த்ர மொழியைக் கற்றார்;
பாரியலும் பரவியலும் உணர்ந்துகண்ணன்
வழிபாடு பரிவாற் செய்வார். 675

## இளமை

அடியவரைத் திரட்டிஉயர் ஆன்மிகஞா
னம்புகட்டப் போந்த இச்சேய்
படியிலுறு சிறுமியரைத் திரட்டிசிற்றில்
பரிந்தமைத்துச் சிறுசோ றட்டு
முடிவிலன்பி னேடுகண்ண னுக்கூட்டி
அனைவருக்கும் முறையோ டீவார்
நெடியவிளை யாட்டனைத்தும் தெய்விகமார்
விளையாட்டாய் நிகழ்த்து வாரால். 676

தெலுங்குமொழி யும்தமிழும் அங்குதிண்ணைப்
பள்ளியினிற் பயின்ற போதே
தெலுங்கிலமை கீர்த்தனைகள் பக்தவிஜ
யக்கதைகள் சிறப்பாய்க் கற்றூர்
நலங்கிளரும் ஆசிரியர் முழுப்பொறுப்பும்
அம்மையிடம் நன்ருெப் பிப்பார்
குலம்விளக்கப் போந்தஇவர் குலவுசட்டாம்
பிள்ளையென நிலவ லானுர். 677

அன்பர்அடி யவர்க்கெய்தும் ஐயமெலாம்
தீர்த்துவைக்கப் போந்த அன்னை
அன்பொடும்அப் பள்ளிச்சிறுர் களுக்குற்ற
ஐயமெலாம் அகற்றி வந்தார்
பொன்புரைநற் பள்ளிக்கும் வீட்டினுக்கும்
பொலிவுமிகும் ஒளிவி ளக்காய்
இன்பமுற இலங்கினர்; இவ் வனையைப்பார்ப்
போர்எவரும் உளம்க ளிப்பார். 678

ஐந்தொடைந்து வயதுடைய அருட்சேயாய்ப்
பாக்கத்தில் வளர்ந்த காலை
சந்திரசே கரப்பெயர்கொள் சங்கராச்
சார்யர்சிவி கையினிற் போந்தோர்
இந்தஅருட் சேய்முகத்தில் இலகுதெய்வி
கப்பொலிவை இனிது நோக்கி
இந்தநற்சேய் எவர்சேய்என் றேவினவ
அங்கிருந்தோர் பணிவி னேடும். 679

தமிழகத்தின் அருகுள்ள ஆந்திரமா
நிலத்திலிருந் தவ்வப் போது
தமிழகத்தில் வந்துமுற்கா லத்திற்குடி
யேறியபல் சமுகங் கட்குள்
சுமுகமுடன் உணவூட்டும் வேளாண்மைத்
தொழிலினில்மேம் பட்டுத் தோன்றும்
சமுகமொன் றிரெட்டியார் சமுகம்அது
மாண்போடு தழையும் நன்றே. 668

இவர்களிற் பெரும்பாலோர் வைணவர்க
ளாயிருக்க இவண்காண் கின்றோம்
இவர்கண்ணன் வழிபாடு செய்பவராய்
இன்முகத்தொ டின்சொல் கூறிப்
புவியில்விருந் தோம்புமுயர் பொற்புடைய
ராய்ப்பக்திப் பொலிவுற் றுள்ளார்
இவர்கள்மர பினிற்போந்த இனியஅருட்
சக்தியன்னைக் கிணையார் உள்ளார்? 669

ரெட்டியார் குலம்விளங்க இப்புவியில்
ஒளிவிளங்க இன்பம் கூட்டும்
சட்டமா நெறிவிளங்க உயரன்பின்
திறம்விளங்கத் தவம்வி ளங்க
நிட்டையால் எய்துமுயர் நிலைவிளங்க
அடியவர்கு ழாம்வி ளங்க
அட்டமா திசையிலண்ணல் சீர்விளங்க
வொளிரன்னைக் கிணையார் உள்ளார்? 670

திருநாவுக் கரசுசிவன் திருவருளாற்
கடலினின்று கரையிற் சேர்ந்து
பெருஞாலத் தினில்தோன்றத் துணையானார்*
பெருமானென் றிறைஞ்சி நின்ற
தருநாமப் பாதிரியைத் தலவிருட்ச
மாக்கொண்டு தழைநல் லூருக்(கு)†
இருமூன்று மைல்தொலைவில் பிள்ளையார்
குப்பம்இனி திலங்கும் அம்மா. 671

*"ஈன்றாளுமாய்"—திருநாவுக்கரசர் தேவாரம்,
†திருப்பாதிரிப் புலியூர்-(கடலூர்-புதுநகர்.)

பூதேவி தரும்பொருள்கள் பொருந்துமகிழ்
வோடினிது போற்றிப் பேணி
மாதேவன் திருவடிகள் மனமலரால்
மணமலரால் வழுத்தி வாழ்த்தி
சூதேதும் அறியாமற் சொல்லறங்கள்
பலபேணிச் சுகவாழ் வாற்றும்
சீதேவி புத்திரராம் ரெட்டியார்
திருமரபு திகழும் அங்கண். 672

அத்தகைய நன்மரபில் திருச்சாத்த
னூர்நகரில் அருளால் மேவும்
முத்துவீ ராரெட்டி யார்குயிலம்
மாள்சேயாய் முளைத்துப் போந்த
சத்தியே அருட்சக்தி அன்னையெனத்
தலம்போற்றத் திகழு கின்றார்;
மெத்தஅருட் கனிவுமிகும் அத்தவச்சீ
மாட்டியின்சீர் விண்ணும் போற்றும். 673

வடலூர் இராமலிங்க வள்ளலார்
வண்கரத்தால் விபூதி பெற்றுக்
கடல்ஞாலத் தினில்தாயின் கவின்சேயாய்
வந்தகுயி லம்மை யீன்ற
திடஞானச் சேய்விஜய ஆவணியில்
மகநாளிற் செகமீ துற்றார்;
புடமேவு பொன்போன்ற அச்சேயைச்
"சொர்ணம்" எனச் சொற்றார் பெற்றோர். 674

ஓரிடத்தில் பிறந்துபிறி தோரிடத்தில்
வளர்ந்தகண்ண பெருமான் போலச்
சீரியநம் தாய்தம்தாய் மாமனில்லத்
தினில்திகழ்ந்து வளர லானார்
கூரியநல் லறிவொடுதாய் மொழியாகக்
குலவாந்த்ர மொழியைக் கற்றார்;
பாரியலும் பரவியலும் உணர்ந்துகண்ணன்
வழிபாடு பரிவாற் செய்வார். 675

## இளமை

அடியவரைத் திரட்டிஉயர் ஆன்மிகஞா
னம்புகட்டப் போந்த இச்சேய்
படியிலுறு சிறுமியரைத் திரட்டிசிற்றில்
பரிந்தமைத்துச் சிறுசோ றட்டு
முடிவிலன்பி னேடுகண்ண னுக்கூட்டி
அனைவருக்கும் முறையோ டீவார்
நெடியவினை யாட்டனைத்தும் தெய்விகமார்
விளையாட்டாய் நிகழ்த்து வாரால். 676

தெலுங்குமொழி யும்தமிழும் அங்குதிண்ணைப்
பள்ளியினிற் பயின்ற போதே
தெலுங்கிலமை கீர்த்தனைகள் பக்தவிஜ
யக்கதைகள் சிறப்பாய்க் கற்ருர்
நலங்கிளரும் ஆசிரியர் முழுப்பொறுப்பும்
அம்மையிடம் நன்ருெப் பிப்பார்
குலம்விளக்கப் போந்தஇவர் குலவுசட்டாம்
பிள்ளையென நிலவ லானுர். 677

அன்பர்அடி யவர்க்கெய்தும் ஐயமெலாம்
தீர்த்துவைக்கப் போந்த அன்னை
அன்பொடும்அப் பள்ளிச்சிருர் களுக்குற்ற
ஐயமெலாம் அகற்றி வந்தார்
பொன்புரைநற் பள்ளிக்கும் வீட்டினுக்கும்
பொலிவுமிகும் ஒளிவி ளக்காய்
இன்பமுற இலங்கினர்; இவ் வனையைப்பார்ப்
போர்எவரும் உளம்க ளிப்பார். 678

ஐந்தொடைந்து வயதுடைய அருட்சேயாய்ப்
பாக்கத்தில் வளர்ந்த காலை
சந்திரசே கரப்பெயர்கொள் சங்கராச்
சார்யர்சிவி கையினிற் போந்தோர்
இந்தஅருட் சேய்முகத்தில் இலகுதெய்வி
கப்பொலிவை இனிது நோக்கி
இந்தநற்சேய் எவர்சேய்என் றேவினவ
அங்கிருந்தோர் பணிவி னேடும். 679

சாத்தனூர் குழந்தையெனச் செப்பிடவும்
சங்கராச் சார்ய ஸ்வாமி
ஆர்த்திமிகு ராமலிங்க ரெட்டியார்
பேர்த்தியோ என்று கேட்டு
நேர்த்தியுடன் அருள்நோக்கம் பாலித்து
நிறையாசி வழங்கினுர்கள்
கீர்த்திமிகும் எவருமன்னை யினைக்காணின்
அருளாசி வழங்கு வாரால். 680

படித்திடும்பா டங்களிற்சந் தேகமுறின்
பள்ளியினிற் பயிற்றும் ஆசான்
கொடுத்திடும்க ணக்கிலைய முறின்கோயிற்
கேகிஅம்ம னிடத்தில் கூறி
அடுத்தகணத் தினில்ஐயம் அகன்றுதெளி
வெய்திடுவர்; வீட்டி னுக்கும்
படித்திடும்பள் ளிக்கும்ஒளி விளக்காகப்
பலர்போற்றத் திகழ்ந்தார் அன்னை. 681

## கோயில் வழிபாடு

இளமையிலே யேஎந்தக் கோயிலுக்குச்
சென்ருலும் எழிலோ டங்கண்
உளஅருளார் மூர்த்திதிரு வுருவினைத்தம்
உளத்தமர்த்திக் கனவின் கண்ணும்
வளமுறக்கண் டினிதேத்தி வரம்பெறுநல்
லருள்மாண்பு வாய்க்கப் பெற்ருர்
விளையும்பயிர் முளையினிலே தெரியுமெனல்
போலினிது விளங்க லானுர். 682

அருள்மிகுந்த பெரியோர்கட் குபசரிக்கும்
அன்புநிறைந் தொளிர்ந்தார்; தூய
தெருள்மிகுந்த அருளாள ரெனினும்எவ
ரையுமெளிதில் நம்ப மாட்டார்;
அருள்நெறிசெல் அடியவர்கட் கருட்பாடம்
புகட்டுதற்குப் போந்த இச்சேய்
தெருள்விழையும் பெரியவர்க்கும் தெய்விகநற்
கதைகள்சொலி உருக வைப்பார். 683

திருமணம்

உரியவய துறப்பிள்ளை யார்குப்பம்
பாபுரெட்டி யார்சே யான
பெரியகம்பத் தம்பிள்ளை வேங்கடப
திச்செம்மல் மனைவி யானார்
பெரியஇல்ல மாம்புகுந்த வீட்டிற்பல
உறவினர்கள் பிறங்கி னார்கள்
இரவிலுண்டி முடித்தபினர் அருள்நூல்கள்
படித்தன்னை எவர்க்கும் சொல்வார். 684

உறவினர்க்கும் இறைவனடி யவர்களுக்கும்
உயரன்போ டுபச ரிப்பார்
இறைவனருட் புகழுரைக்கும் கதைகால
க்ஷேபங்கள் இனிது கேட்பார்
முறையொடுபண் பட்டரெட்டி யார்மரபில்
தோன்றுமிச்சேய் முத்தி நாட்டம்
மறைமுடிவை யுணர்நாட்டம் மிகுந்தவராய்
அருள்வளம்சால் வாழ்வாற் றிட்டார். 685

சக்குபாய் மீராபோல் இல்லறத்தில்
இருந்தாலும் தான்ஒட் டாமல்
மிக்கபக்கு வத்தோடும் அனைவருக்கும்
மனமகிழ்வு மிகவாழ்ந் திட்டார்
தக்கவருக் கருள் குணமும் பிறர்துன்பம்
கண்டிரங்கும் சால்பும் கொண்டே
எக்கணத்தும் அன்னதா னம்புரியும்
இயல்புடனும் இலங்கு வாரால். 686

சொன்னமெனும் திருப்பெயருக் கேற்றஅரு
ளுருவமுடன் துலங்கு வார்கள்
சொன்னம்நிகர் குணமணியாய்த் தூயவர்போற்
றருள்வாழ்க்கை பேணி வாழ்வார்
என்னபிறர் சொன்னாலும் எவர்மனமும்
புண்படுமா றெதுவும் சொல்லார்
அன்னமெனப் பூமிஅதி ராதவண்ணம்
அடிவைத்து நடந்து செல்வார். 687

நல்லநடுத் தரஉயரம் பொன்வண்ணம்
நற்கருணை நாட்டம் கொண்டோர்;
நல்லவர்கள் காணின் இவ ரிடம்பேச
வேண்டுமென நாடு வார்கள்;
சொல்லரிய தகைமைஅருள் தோற்றமுடன்
சுந்தரமாம் தெலுங்கு பேசும்
மெல்லியலாம் இவர்இனிது பாடிடவும்
வல்லவராய் விளங்கி வந்தார். 688

இத்தரையில் இறையருளால் இவர்கள்திரு
வயிற்றிலுதித் தனர்ஓர் ஆண்சேய்
முத்துகொண்டா ரெட்டியார் என்றபெயர்
அச்சேய்க்கு முறையோ டிட்டார்
இத்தகுநன் னிலையில்இவர்க் கருள்தாகம்
மேலிடவும், எந்த நாளில்
வித்தகராம் சற்குருவின் அருட்காட்சி
கிடைக்கும்என வேட்கை கொண்டார். 689

இப்பிறவி யினில்உண்மை முத்தியின்பம்
இனிதருளும் ஆற்றல் வாய்ந்த
ஒப்பிலருட் குருநாதர் என்றுவரு
வாரோஎன் றுருகி நிற்பார்
செப்பமிகு பக்குவம்சால் சீடர்களை
யாட்கொண்டின் னருள்செய் தற்கே
இப்புவியிற் போந்தஅண்ணல் இவரைக்கடைக்
கணித்தாள உள்ளம் கொண்டார். 690

## குரு தரிசனம்

நாவரசர் வன்தொண்டர் ஞாலமிசை
உதித்தருளும் தென்னாற் காட்டில்
மூவர்நெருக் குற்றுமொழி விளக்கேற்றி
முகுந்தனைமுன் தொழுது போற்றும்
கோவல்நகர்க் கிருகாதம் கிழக்கிலுள
ஆனத்தூர் கிராமந் தன்னில்
மேவுசின்ன கம்பத்தம் ஜெகந்நாத
ரெட்டியார் வீட்டின் கண்ணே 691

ஒருமுறைநம் குருநாதர் எழுந்தருளி
யுளபோதித் தாயும் வந்தார்
அருகிருந்த தமையனார் திருச்சாத்த
னூர்முத்து ராமச் செம்மல்
கருமுறைவிண் டுயச்செயும்சா மியைவலம்வந்
தருளாசி பெறுவீர் என்றார்
திருவருட்சட் டம்மேற்கொள் கென்பாரோ
என்றன்னை வலம்வந் திட்டார். 692

தாம்பெற்ற இன்பமிந்தத் தாரணியோர்
பெறுகஎனும் தக்கோர் சொல்போல்
மேம்பட்ட குணம்சான்ற முத்துரா
மச்செம்மல் விழையும் வண்ணம்
வான்பெற்ற வள்ளல்அருட் சட்டநெறி
பேணவற்பு றுத்திச் சொன்னால்
நாம்பச்சை நீரில்முழு கற்கியலா
தேயென்ன நனியோ சித்தார். 693

பெரியவர்கள் கூறின்அதை மறுத்துரைத்தல்
பிசகென்னும் எண்ணத் தோடும்
அருட்குருநா தரைத்தூரத் தேவலம்செய்
தெதிர்ப்புறத்தில் கும்பிட் டார்கள்
கருவிலுள சிறுசேய்க்கும் கல்லினுக்குள்
தேரைக்கும் கருணை செய்யும்
குருபரனார் கண்டும்கா ணாதவர்போல்
புன்முறுவல் கொண்டார் அன்பால், 694

திறமனைத்தும் வழங்கவந்த நம்பெருமான்
அன்னைமன நிலையு ணர்ந்து
நிறைஞானம் பெறத்தகுதி யுடையரென,
அடியவர்க்கு நிகரில் சட்டத்
துறைவிளக்கி யருளவல்ல தூயரெனப்
பெருங்கருணை சுரந்தார்; ஒப்பில்
மறைபுகழும் மாஞான வள்ளல்அருள்
திறம்உணர வல்லார் யாரே? 695

பின்னர்ஒரு முறைசாத்த னூர்நம்பி
பிள்ளையார் குப்பம் சென்றூர்
நன்னயமார் சட்டநெறி யின்சிறப்பை
நம்தாய்க்கு நனிவி ளக்கி
என்னதடை யும்பகரா தேற்றிடுதல்
வேண்டுமென இனிது கூற
முன்னவனூர் அருள்கூட்ட மறுதினம்தாய்
அருட்சட்ட முறைமேற் கொண்டார். 696

என்னசெயல் செயினும்அதை முழுமையுறச்
செயும்வன்மை மிக்க நம்தாய்
முன்னைநல் வினைத்தொடர்பால் சட்டநெறி
முழுவதும்கை யாளற் குற்றூர்
துன்னுவிடி யலில்மூன்று மணிக்கெழுந்து
தூயபச்சை நீரில் மூழ்கிப்
பன்னருநிட் டையிலாழ்ந்து பினரெழுந்து
பண்புமிகும் பூசை செய்வார். 697

பலர்க்கும்பயன் தரத்தக்க வேளாண்மை
யாம்தொழிலைப் பாங்காய்ச் செய்யும்
நலமிகுந்த பெரியகுடும் பத்தினில்நம்
தாய்வாழ்வு நடத்தி வந்தார்
அலகில்பல வேலைகளுக் கிடையில்அருள்
நெறியையினி தோம்பி வந்தார்
உலைவில்திற முற்றிருந்த தால்குருசோ
தனைசெய்தற் குள்ளம் கொண்டார் 698

தலைகனக்க நற்றூண்டை கட்டிக்கொள
நீர்மிகவும் தலைக்க ணேகி
நிலைகுலையச் செய்தது;பே சிடற்கியல
விலை; வெப்பம் நிறைந்த போதும்
நிலைமையினை வெளிப்படுத்தா தியன்றவரை
முயன்றுபணி யாவும் செய்தார்;
இலகுமொரு நாள்உறங்க இயலாமல்
வருந்தியிவ்வா றெண்ண லானூர். 699

என்குடும்பத் திற்பெரியோர் பலருளர்; யான்
அவர்களிடம் ஏதும் கூற
நன்கறியேன்; இன்றிரவே இத்துயரை
நன்ருழித்து நாளை காலை
துங்கமுறச் செயின்சட்ட நெறிநடப்பேன்
துயர்நீங்கா விட்டால் நாளை
எங்கள்வழக் கப்படிவெந் நீராடிச்
சட்டம்விட நேரும் என்ருர். 700

அன்றிரவு சற்றேகண் ணயர்ந்தபொழு
தருளண்ணல் காட்சி நல்கி
நன்றினிது தாயைஅழைத் துச்சென்று
நான்மறையின் மூல மான
வென்றிவிநா யகர்தளியில் தண்ணீரில்
ஆட்டியதாய்க் கனவு கண்டார்:
துன்றிரவு விடியுமுன்னர் விழித்தெழுந்து
நனிபேசத் தொடங்கி விட்டார். 701

அனைவரும்வி யக்கும்வணம் நன்றெழுந்து
நீராடி அன்பி னேடும்
வினைதவிர்வி நாயகரை வலம்புரிந்து
வீழ்ந்துவணங் கிப்போற் றிட்டார்:
நினைவரிய குருபரன்றன் நீள்கருணை
நினைந்துநெஞ்ச முருகி நின்ருர்
பினர்ஒருநாள் சாத்தனூர் நம்பியைக்கண்
டிஃதுரைத்துப் பேரின் புற்ருர். 702

திருவதிகைத் திருத்தலத்தை யடுத்துள்ள
பண்ணுருட்டி யெனும்சி றப்பார்
ஒருபதிக்கண் அடியார்கட் கருள்புரிய
ஒப்பிலண்ணல் உற்ற காலை
அருளடிய ராம்சாத்த னூர்நம்பி
நம்தாயை அழைத்து வந்தார்
தெருள்மிகுதாய் குருபரரை வலம்புரிந்து
திருவடிகள் வணங்கி நின்ருர். 703

முன்னை நல் வினைப்பயனும், முன்னவனார்
அருளும்,அடி யார்முன் செய்த
நன்னயம்சால் தவப்பயனும் கூட, அருள்
ஞானவள்ளல் 'இதுயார்' என்றார்.
இன்னியல்பு மிகுமுத்து ராமரெட்டி
யார் 'என்றன் தங்கை' என்றார்;
'என்னபெயர்' எனச் 'சொர்ணம்' எனக்கூற
இளமுறுவல் செய்தார் அண்ணல். 704

"இனிமேல்நம் சொர்ணத்தாய் சட்டத்தை
விடுமோ" என் றருளாற் கூறித்
தனிஞானத் திருநோக்கால் அருள்செய்தார்;
தாய்சட்டத் துறுதி கொண்டார்;
இனிதேகி னார்பிள்ளை யார்குப்பம்
எனினுமையத் தோடி ருந்தார்
நனிதூய சட்டநெறி யன்போடும்
பேணிநல முற்று வாழ்ந்தார். 705

எதையும்நனி யாராய்ந்து தெளிந்தபினர்
ஏற்கும்இயல் புடைய நம்தாய்
பொதுநெறியைப் புகட்டுமிவர் யாரோ,எத்
தகையவரோ என்னும் ஐயம்
இதயமிசை கொடுதினமும் இபமுகனா
ரிடம்விண்ணப் பித்து வந்தார்
மதியிருமூன் றேடின; ஓர் நாள்காலை
அருள்நிட்டை யினிலே யாழ்ந்தார். 706

ஐங்கரனார் அருட்காட்சி கிடைத்த(து) உட
னேஅந்த உருவம் மாறித்
துங்கமிகு குருபரனா கத்தோன்றி
யது; பின்னர் மாறி மாறி
ஐங்கரனும் குருபரனு மாய்த்தோன்றிற்(று);
அசரீரி வாக்கொன் றங்கண்
ஐங்கரன்றன் அவதார மேஅண்ணல்
எனவொலித்த(து) அன்னை கேட்க. 707

தெளிவுபெற்று மனம்மிகவும் மகிழ்ந்தவராய்த்
தேசிகர்பால் நீங்க லாகா
அளிமிகுந்த நல்லடியா ரானுர்கள்;
தமக்கையம் ஏதுற் ருலும்
தெளிவுபெற நாடிநிட்டை யமர்வார்கள்
திருவருளால் தெளிவுண் டாகும்
ஒளியருள இருளகற்ற உற்றநம்தாய்க்
கொப்பில்திறல் அண்ணல் தந்தார். 708

அடியவர்கட் குற்றஐயங் களையகற்ற,
அவர்கள்குறை களைய கற்ற
'உடையவன்பால் தாக்கல்கொடுத் துண்மையறி
கென்றண்ணல் உரைத்த போதும்,
அடைவுடன்அ மர்ந்துண்மை யினைஅறியும்
ஆற்றல்அது முதற்கொண் டன்னை
உடையவரா கித்திகழ்ந்தார்; குருபரன்றன்
அருள்நம்மால் உரைக்கற் பாற்ரே? 709

ஐயமகன் றனைநிட்டை யமர்ந்தெதையும்
தெரிந்துகொளும் வழக்கம் கொண்டார்;
வைகறையில் நீராடி முன்னவன்கோ
யிலுக்கேகி நிட்டை செய்வார்;
வையம்விழிப் பதற்குமுனர் வீடடைந்தாண்
டவர்பூசை துளசி பூசை
செய்யின்பொழு தும்விடியும்; கருடதெரி
சனம் கிடைக்கும்; நாதம் கேட்கும். 710

வீட்டிலுள யாவரும்தா யுடனுற்றுக்
கருடதரி சனம்செய் வார்; நல்
ஊட்டமருள் நீராகா ரம்பருகிப்
புத்துணர்ச்சி உடையோ ராவார்
வீட்டினுக்கும் நாட்டினுக்கும் விளக்கம்அருள்
தாய்பணிகள் அனைத்தும் செய்வார்
வீட்டுநெறி காட்டிடும்பு ராணம்இர
வினிற்படித்து விளக்கம் சொல்வார். 711

எல்லோரும் விழிக்குமுனர் நீராடி
அருள்நிட்டை யினிலே ஆழ்வர்
எல்லோரும் பிற்பகலில் உறங்குகையில்
அருள்நிட்டை யினிலே ஆழ்வர்
எல்லோரும் இரவில்உறங் கப்போன
பினர்நிட்டை யினிலே ஆழ்வர்
எல்லோரும் அறியாவண் ணம்மூன்று
முறைநிட்டை யினிலாழ் வார்கள். 712

ஒவ்வொருவே ளையுமைந்து நாழிகைநிட்
டையினில்அமைந் தொளிரு வார்கள்;
செவ்வியதம் தேகமொரு திரணமென
மதித்துப்பணி செய்திட் டார்கள்;
ஒவ்வொருவி நாடியும்தம் முளம்இறைவன்
திருவடியில் ஒன்றி மேவ
ஒவ்வொருசெய் கையுமீசன் திருவருளால்
இல்லமிசை இயற்று வார்கள். 713

அண்ணல்திருச் சாத்தனூர்க் கோஆனத்
தூருக்கோ போந்தா ராஞல்
நண்ணியுள செய்தியருள் தாய்க்கினிது
ஞானவள்ளல் அனுப்பி வைப்பார்
உண்ணிலவு வேட்கைமிகி னும்வீட்டார்
உத்தரவு கொடுத்த பின்பே
நண்ணிதரி சனம்செய்யத் தாய்செல்வர்;
நான்செல்வேன் என்று கூறுர். 714

நாலுதினம் கழித்தபினர் சென்றுவரு
கெனவீட்டார் நவிலு வார்கள்
சாலவிருப் போடடியர் சாமிதிரு
வடிபணிந்து சந்தே கங்கள்
மேலுமே லும்கேட்பர் 'தாய்வரட்டும்'
என்றண்ணல் விளம்பு வார்கள்
சீலமிகு தாய்வந்தால் செப்பிவிளக்
கம்காண அருள்செய் வார்கள். 715

நிட்டையினில் அமர்ந்தெழுந்து நிகழ்ச்சிநடந்
தனதையண்ணல் பாற்சொல் வார்தாய்;
சட்டஅடி யார்க்கதனை நனிவிளக்கித்
தனிமகிழ்வு பூண்பார் அண்ணல்;
உட்டெளிவும் உயரன்பும் உறுதியும்நற்
புனிதமும்சால் உளம்கொள் தாய்பால்
மட்டறுநற் பெருங்கருணை வைத்திருந்தார்
அண்ணலெனற் கைய முண்டோ? 716

காசிமுதற் கன்னியா குமரிவரை
யிலும்சென்று தேடிக் கண்டேன்
மாசிலருள் மணிகள்சில வேகிடைக்கப்
பெற்றேனென் றண்ணல் சொல்வார்
தேசுமிகு தாய்அவற்றுள் சிறந்தமணி
யாயிலகல் காணும் போதில்
தேசிகனுர்க் குறுமகிழ்ச்சி சிந்தித்துச்
செப்பிடுதற் கெவரா லாகும்? 717

திருச்சிராப் பளிவாணி யம்பாடி
மேலிலந்தைக் குளம்ஆ னத்தூர்
திருச்சாத்த னூர்முதலாம் தலங்களுக்குத்
தேசிகனுர் சென்று தங்கி
மருட்சார்பு தவிர்த்துமணி மணியாக
அடியவரைத் திரட்டி மேலாம்
தெருட்சார்பு விளக்கிஅரு ளற்புதங்கள்
செய்துயிர்கட் கருளூட் டிட்டார். 718

பிள்ளையார் குப்பமெனும் தலத்தினிலும்
பிறங்கியரு ளாட்சி செய்ய
வள்ளலார் உளம்கொண்டார்; வளமிகும்அவ்
வூர்கடலூர் புதுச்சே ரிக்கும்
உள்ளவழி யினிற்கிருமாம் பாக்கத்திற்
கொருமைலில் உள்ள தாகும்
துள்ளலற்ற அமைதியெழில் சூழியற்கை
யோடுநனி துலங்கு மவ்வூர். 719

ரெட்டியார் இனத்தவரும் வன்னியரும்
பரதவரும் இருப்பர் அங்கண்
வட்டவார் கடல்வளம்சால் நெய்தல்நில
மாதலினல் வாழை தென்னை
மட்டிலாச் சவுக்குசெந்நெல் முதலான
பயிர்செழித்து வளரும் அங்கண்
சட்டமா நெறியும்உயர் தகவோடு
மிகச்சிறந்து தழையும் அங்கண். 720

அண்ணல்அருள் திருவாக்கால் அவ்வூர்க்குப்
பலநாமம் சூட்டி யுள்ளார்:
தண்ணியகுற் றாலம், அருட் சட்டத்தின்
தலைநகரம், தவப்பே றீயும்
புண்ணியத்தெய் வீகபுரம், சித்திநகர்
போன்றபல பெயர்பெற் றோங்கி
நண்ணுமன்பர் அடியவர்க்கு நலமனைத்தும்
நல்கவல்ல நல்லூர் அவ்வூர். 721

அண்ணலார் எழுந்தருளல்

அலகில்அருள் நலம்கனிந்து வரும்அன்னைக்
கருள்செயவும், அவர்கள் மூலம்
உலகவரைத் தெருட்டிடவும் உளம்கொண்டு
பிள்ளையார் குப்பத் திற்குப்
பொலிவருளும் அண்ணல்செலக் கருதுகையில்
பாபுரெட்டி யாரும் போந்து
நலமருளத் தம்மூருக் கெழுந்தருள
வேண்டுமென வேண்டிக் கொண்டார். 722

இத்தலத்திற் கினிமகிமை எய்துமென
மலர்மாரி இமையோர் பெய்யப்
புத்தமுதத் தேன்சொரிந்து மலர்தூவிப்
பொழில்கள்வர வேற்புச் செய்யப்
பத்திமிக வுற்றவர்போல் பறவைகள்
குழாம்சிறந்த பண்கள் பாடச்
சித்தர்களின் நற்றலைவர் திகழானத்
தூரினின்றப் பதிக்கண் சேர்ந்தார். 723

வருகவரு கெனஅடியர் களையிர்க்கும்
வான்பொருளை, வண்மை சான்ற
குருகருணை யீதென்னக் குலவுகுழ
கரை,ஞானக் கோவை, இன்பத்
திருவுருவைச், செப்பரிதாம் பேரன்பின்
தனிப்பிழம்பைத், தேவர் யாரும்
மருவரிய மணியொளியை மனம்குளிர
அவ்வூரார் கண்டின் புற்றார். 724

மங்கலவாத் தியம்முழங்கப் பூரணகும்
பம்தாங்கி மகிழ்வி னேடும்
துங்கமிகும் அடியரன்பர் தொழுதேத்தத்
தூயஅண்ணல் ஊர்க்குள் புக்கார்
எங்கணும்தோ ரணம்துலங்க இனமலர்மா
லிகை துலங்க எழிலுற் றோங்கும்
தங்கம்நிகர் மனப்பாபு ரெட்டியார்
தம்மனையிற் சார்ந்தார் நன்றே. 725

மாளிகையின் நாப்பண்ஒரு நாற்காலி
யிட்டினிது வள்ள லாரை
மூளுமன்பி னேடமர்த்தி ஐந்துமுகக்
குத்துவிளக் கிருபா லேற்றி
நீளுறுதாம் பாளத்தில் நிலவுதிரு
வடிபொருந்த நீர்கொண் டாட்டித்
தாளுறுமந் நீர்சிரத்தின் மேற்றெளித்துக்
கொண்டுமகிழ் தாங்கி நின்றார். 726

பொன்போன்ற மலர்மாலை சூட்டிப்புது
மலர்பதத்திற் சாத்திப் போற்றி
அன்போடும் மூன்றுமுறை வலம்புரிந்து
பணிந்தேத்தி ஆர்வத் தோடும்
இன்பூட்டு குரலால்இ ரெட்டிபட்டி
சாமிக்கர ஹரவென் ருர்கள்
மின்பூத்த எழிலன்னை மிளிர்ஞான
குருபதங்கள் வணங்கி ஞர்கள். 727

பண்ணியநற் றவம்பலித்த தென்றருள்தாய்
பரவிமகிழ் வெய்தி ஞர்கள்
எண்ணில்விருப் போடுதிரு வடிப்பூசைக்
கேற்றவெலாம் அமர்த்தி ஞர்கள்
உண்ணிலவும் ஒருமூலத் திருமறையாம்
ஓங்காரத் துருவம் கொண்டே
அண்ணல்எழுந் தருளியுளார் என்றுருகி
அகம்குழைந்து பணிசெய் தார்கள். 728

அண்ணல்எழுந் தருளியதால் அவ்வில்லம்
அருட்பொலிவு மிக்க தாகித்
திண்ணியநற் றவப்பயனை வழங்கவல்ல
தாகித்திகழ் வதுபோல் தோன்றும்
விண்ணுலகத் தமரரெலாம் வித்தகச்சற்
குருதரிச னத்திற் காக
நண்ணியுளர் எனத்தோன்றும் ஞானமணி
யெனப்பொலிநம் அன்னை யார்க்கே. 729

கங்கைமுதல் தீர்த்தமெலாம் கவினுடைவண்
குழுமியுள தாகத் தோன்றும்
எங்குமுள தலமகிமை யாவுமவண்
செறிந்ததுபோல் இனிது தோன்றும்
துங்கமுனி வரர்குழுவின் அருளாசி
மொழிகள்அவண் துலங்கித் தோன்றும்
பங்கயச்செல் வியையனைய பண்பும்குரு
பக்தியும்கொள் நம்மன் னைக்கே. 730

திருவடிப்பூசை

காலையினில் நீராடி நிட்டைபுரிந்
திட்டபினர் பூசை செய்வார்
சாலமகிழ் வோடொரு நாற் காலியினில்
சற்குருவை யமர்த்திப் பாதம்
சீலமுடன் விளக்கியந்த நீரினைத்தம்
சிரத்தின்மிசை தெளித்துக் கொள்வார்
பால்தயிர்பஞ் சாமிருதம் எலுமிச்சம்
பழமிளநீ ராதி கொண்டே, 731

முறையாகத் திருவடிக்குத் திருமஞ்ச
னம்புரிந்து தூப தீபம்
நிறையும்விருப் பொடும்காட்டிப் பழம்தேங்காய்
வைத்துநிவே தனமும் செய்வார்
துறையைவிளக் கிடும்சாமி யினைமூன்று
முறைவலம்செய் தேசாட் டாங்க
முறையில்வணங் கிப்போற்றி யருளாசி
பெற்றுமுக மலர்ச்சி கொள்வார். 732

அந்தமில்சீர் அண்ணல்எழுந் தருளியுளார்
அவர்கட்குண வூட்ட வேண்டும்
அந்தணர்கள் சமைத்ததையே உண்பார்கள்
அண்ணலெனச் சொலக்கேட் டுள்ளோம்
அந்தணர் குடும்பமொன்றே ஐங்கரனார்
வழிபாட்டுக் குளதிவ் வூரில்
அந்தமறை யோர்இவருக் குணவிடுவா
ரோஎன்ன நினைந்தார் அன்னை. 733

சுப்ரமண்ய சாஸ்த்ரியார்

ராமசா மிப்பெயர்கொள் அய்யருக்கும்
மங்களம்மாள் எனும்அம் மைக்கும்
பூமிமேற் குழந்தையெனப் போந்தொளிர்சுப்
பிரமணிய சாஸ்த்ரி யார்நன்
மாமறைகள் மூன்றைமுறை யோடுதில்லை
யினிற்பயின்று தேர்ச்சி பெற்றோர்
ஓமுருவக் கணபதிக்குப் பூசைசெயும்
ஒப்பில்தொழில் புரிந்து வந்தார். 734

குருபரனார் வந்துள்ளார் எனும்செய்தி
யினையன்பர் கூறக் கேட்ட
அருமறையோர் அவரைத்தரி சனம்செய்ய
லாமென்னப் போந்தார் அங்கண்
அருளன்னை அவரையழைத்(து) அந்தணர்கள்
சமைத்ததையே அண்ணல் உண்பார்
பெருகன்பொ டிவர்க்குணவு சமைத்துத்தர
வேண்டுமென விளம்பி னார்கள். 735

இனிதுசமைத் துக்கொண்டு வந்தண்ணற்
கிடுகின்றேன்; இதற்கு நீங்கள்
மனதிலணு வுங்கவலை கொளவேண்டாம்
என்றுரைத்து மறையோர் சென்றார்;
தினமுமவ்வா றேசமையல் செய்துகொண்டு
வந்தண்ணற் கிட்டுச் செல்வார்;
புனிதசட்டச் சிறப்புணர்ந்து போற்றிக்கடைப்
பிடித்துமிகு பயன்பெற் றுய்ந்தார். 736

நவில்தொறும்நூல் நயம்போலும் பண்புடையார்
நற்றொடர்பு பயிலுந் தோறும்
உவகைமிக ஊட்டுமெனும் உயர்மொழிபோல்
ஒப்பிலரு ளண்ண லார்க்கும்
தவநிலைநா டையருக்கும் உளதொடர்பு
திண்மையுறத் தகுநி கழ்ச்சி
பவம்விலக்கத் தக்கனவாய்த் தோன்றஅண்ணல்
பால்பரிவு மிகுந்தார் அய்யர். 737

ஐயரும்நம் அருளனையும் தத்தமதின்
னருள்நிகழ்ச்சி களைந வின்று
செய்யமுறை யினில்விளக்கம் காண்பார்கள்
செம்மைமிகும் அண்ண லார்தம்
மெய்யருளின் பெருமையினை மேன்மையுறக்
கூறிமனம் மகிழு வார்கள்
உய்யும்முறை நாடியிரு வரும்பேசி
உவக்கும்நிலை உரைத்தற் பாற்றோ? 738

ஒருநாள்அண் ணலுக்கையர் உணவுபடைக்
கும்போதில் உயர்ந்த தான
திருமறைகளைப்பற்றி இவரென்ன
அறிவரென்றும், சிறப்புற் றோங்கும்
அருமறைகள் மூன்றினைநாம் அத்யயனம்
செய்துள்ளோ மன்றோ என்றும்
பெருமிதம்கொண் டார்பெருமான் இதனையுணர்ந்
தருள்முறுவல் புரிந்தி ருந்தார். 739

மூன்றுமறை யும்முறையோ டும்பயின்ற
நமக்கேசிற் சிலஇ டத்தில்
தோன்றுகிற தையமெனில் இவர்க்கென்ன
தெரியுமென எண்ணிக் கொண்(டு)அஞ்
ஞான்றிரவு துயில்கையில் நம்ஞானகுரு
மணிதோன்றி நால்வே தத்தும்
ஆன்றபல இடங்கள்விளக் கிக்கூறி
ஐயரய்யங் களைத்தீர்த் திட்டார். 740

உச்சரிக்கும் முறைகளைநன் ருய்விளக்கி
ஒப்பிலிசை யினைவி ளக்கி
எச்சபையும் வியக்கும்வணம் இனியபல
பொருள்விளக்கி எதற்கும் மேலாம்
சச்சிதா னந்தவத்து வினைவிளக்கும்
'தத்வமஸி'' முதலாம் நான்கின்
நிச்சயப்பொ ருள்விளக்கி நிகரில்பரா
னந்தமையர் எய்தச் செய்தார். 741

நன்றுவிடி யலில்விழிப்புற் றெழுந்தய்யர்
ஞானகுரு பரனுர் மேன்மை
ஒன்றுமறி யாமல்தவ ருகநினைத்
திட்டதுன்னி உளம்ந டுங்கி
ஒன்றெனவே தம்போற்றும் பரப்பிரமம்
இவரேஇவ் வுருவம் கொண்டு
நன்றுநமை யாளவந்தார் எனவியப்பும்
அச்சமுமுற் றுருகி நின்ருர். 742

விரைந்துதண்ணீ ரினில்மூழ்கி மேனியில்வி
பூதியினைத் தரித்துக் கொண்டு
பரிந்துநம்தாய் இலம்போந்து பரமகுரு
மணியைவலம் வந்து போற்றி
சிரம்திருவ டியில்வைத்துச் செம்மையுறப்
பணிந்தெழுந்து வணக்கத் தோடும்
கரங்கொடுவாய் பொத்தியுயர் கருணையுரு
வேயென்னக் கசிந்து நின்ருர். 743

இருவிழியும் மழைபொழிய இதயபரி
பாகமுற மயிர்க்கால் தோறும்
பொருவருநற் புளகமுறச் சொல்லெதுவும்
புகலவிய லாமல் நன்று
மருவுமன்பின் உருவாகி மலரடியைத்
தொட்டிருகண் களிலு மொற்றிக்
கருவிலுறு பிணிதவிர்ந்து போனதெனக்
களித்தவராய்க் கனிந்து நின்றார். 744

தமைமறந்து நின்றஅவர் ஒருசிறிது
நினைவுறலும் தவறாய் நென்னல்
உமதுசிறப் புணராமல் உன்னியஎன்
பெரும்பிழையைப் பொறுப்பீ ரென்ன
சமயசம ரசத்தலைவர் திருமுன்உயத்
தகுமுறையால் போற்றி நின்றார்;
அமைதியொடு, 'மறைகளில்ஐ யம்தீர்ந்த
தோ' என்னக் கேட்டார் அண்ணல். 745

எம்பெருமான் நும்பெருமை உணராமல்
ஏதோநேற் றெண்ணி விட்டேன்
உம்பர்தொழும் நும்சிறப்பை ஒருசிறிதும்
உணரஎனக் காற்றல் இல்லை;
இம்பர்எமை யாளவந்த இறையேநும்
இன்னடிக்காட் பட்டிங் குய்ய
என்பெருந்த வம்துணைசெய் ததுபோலும்
எனப்போற்றித் தொழுதார் அய்யர். 746

வேறு

சாத்திரங்கள் கற்றாலும் தவவேடம் பூண்டாலும்
சூத்திரங்கள் பாராதார் சுணங்கன் எனச் சொல்லியுளீர்
ஆத்திரத்தில் அறியாமல் நினைத்தபிழை பொறுத்தருளி
நேத்திரத்தைத் திறந்துமுத்தி நிலையருள்வீர்
எனத்தொழுதார். 747

## குருநாதர் துதி

வேதம் நீஎண்ணில் வேதத் தலைவன்நீ
வேதம் கூறும் பொருள்கள் அனைத்தும் நீ
வேதம் காணற் கரிய விகிர்தன் நீ
வேதம் நின்னையென் னென்று விளம்புமே! 748

சத்தி சித்திமெய்ப் பத்திஞா னம்தரும்
நித்த நின்மல நிர்க்குண நிச்சலத்
தத்து வன்எனச் சத்துவர் ஏத்துவார்
பத்தர் நின்னைப் பதியெனக் கொள்வரே. 749

தத்து வங்கள் அனைத்தும் கடந்தொளிர்
வித்த கன்நினை வேண்டிய வாறெலாம்
பத்தர் ஏத்துவர் பாடிப் பராவுவார்
எத்தி றத்தெளி யேன்துதித் துய்வதே? 750

உள்ளு மாகி யொளிர்வை, வெளியிலும்
கள்ள மற்றுக் கவினொ டிலங்குவை
அள்ள அள்ள அணுவும் குறைவுறு(து)
உள்ள மெய்த்திரு வே!உண்மை யின்பமே! 751

ஆதி வேதங்க ளான அமலனே
ஜோதி யாகித் துலங்கும் துணைவனே
ஓதி யோதி எனைநன் றுருக்கிநின்
பாதம் சேர்த்தருள் வாய்அருட் பண்பனே. 752

---

என்று ளக்கனி வெய்தித் துதித்தனர்
நன்று நாண்மலர் சூட்டி வழுத்தினர்
என்றும் எங்கும் ஒளிர்பர மேயென
நின்று நெக்குரு கிப்பணிந் தாரரோ. 753

அண்ணல் நோக்கி அருள்மிகச் செய்தனர்
திண்ணென் ஞானத் திறனை வழங்கினர்
பண்ணும் பாட்டும் பரிந்து கலந்தென
அண்ணல் அய்யர் அகம்புகுந் தொன்றினர். 754

எங்கும் மேவகண் டாகார வத்துவே
இங்கு நம்குரு வென்னவந் துற்றதென்(று)
அங்கி ருந்த அடியர் உணர்ந்தனர்
பொங்கு மாமகிழ் பூண்டு பிறங்கினர். 755

வேறு

ஒருநாள்நம் குருபரனார்க் கையர்முறை
யோடும்உண வினைப்ப டைத்துத்
திருவார்கற் பூரவொளித் தீபாரா
தனைசெய்யும் போதில் அண்ணல்
இருநேத்தி ரங்களிலு மிருந்தெழும்அற்
புதஞான வொளியைக் கண்டார்
உருகாநின் றுலகையுட லினைமறந்தப்
பரஞான ஒளிக்குள் ஆழ்ந்தார். 756

அய்யரந்தக் கணத்தடைந்த அருள்ஞானப்
பெருஞ்சுகத்தைப் பிற்கா லத்தும்
செய்யமனத் தினிலெண்ணி யெண்ணியரு
ளானந்தம் திளைத்தி ருப்பார்;
உய்யஉல கினைத்திருத்தி உயர்ஞானப்
பேரின்ப மூட்டப் போந்த
துய்யஅரு ளண்ணல்அருட் பெருந்திறனைச்
சொல்லவொரு சொல்லிங் குண்டோ? 757

அடியர் புரி தொண்டு

அருளாளர் எழுந்தருளித் திகழிடத்தில்
அருள்மகிமை பொலிந்தி லங்கும்
அருளாளர் திருவடிதோய்ந் திடுமிடத்தில்
அனைத்துநலங் களும்நன் றோங்கும்
அருளாளர் அருட்பார்வை படுமிடத்தில்
அருட்செல்வம் வளர்ச்சி யெய்தும்
அருளாளர் திருவுளத்தில் நினைத்தவெலாம்
அப்பொழுதே நடக்கு மன்றோ? 758

அருளண்ணல் பிள்ளையார் குப்பத்தில்
எழுந்தருளி அமர்நா ளெல்லாம்
அருளார்நற் பொலிவோடும் அவ்வீடு
மங்கலமுற் றினிது தோன்றும்
பொருளாளர் புகழாளர் புறத்திலுள
இல்லத்தர் சுற்றத் தார்கள்
அருகாக உளஊரார் அனைவரும்வந்
தண்ணலருள் பெற்றுச் செல்வார். 759

அதிகாலை விழித்தெழுந்தி ரெட்டிபட்டிச்
சாமிக்கர ஹரவென் றோதிப்
புதிதாகச் சட்டமெடுப் பவரும்முனர்
சட்டத்துள புனிதர் யாரும்
கதிநாடிக் கருணையுரு வாயொளிர்சற்
குருநாதர் கழல்நி னைந்தே
அதியார்வத் தோடுதண்ணீ ரினில்மூழ்கி
அருட்டிருநீ றணிவர் ஓர்பால். 760

அருளண்ண லினைமூன்று முறைவலம்வந்
தடிமலரிற் பணிவர் ஓர்பால்
முருகார்நன் மணமலர்கள் எடுத்துவந்து
முதிர்அன்பால் தொடுப்பர் ஓர்பால்
அருளண்ணல் பாடியுள அருட்பாடல்
மனமுருகி இசைப்பர் ஓர்பால்
அருள்வழிபாட் டுக்கான பொருளனைத்தும்
ஒழுங்காக அமைப்பர் ஓர்பால். 761

அருளடியர்க் காகஅறு சுவையுணவை
அன்புடனும் சமைப்பர் ஓர்பால்
அருள்நெறியின் சிறப்புன்னி உரையாடி
அகமகிழ்ச்சி யடைவர் ஓர்பால்
அருள்நாடி அகத்தொடுங்கி அருள்நிட்டை
சாதனம்செய் திடுவர் ஓர்பால்
அருளார்வ மோடும்இப முகப்பெருமான்
அருட்பெருமை படிப்பர் ஓர்பால். 762

அருள்மணமும் வழிபாட்டுப் பொருள்மணமும்
அடியரன்பின் மணமும் ஓங்க
சுரர்முனிவர் குழுமனிதர் அறியாத
வணம்சூழ்ந்து ஜோதி யண்ணல்
திருவடிகள் பணிந்தேத்தித் திருவருளாம்
செல்வம்மிகப் பெற்றுச் செல்வார்
அருமறையும் ஆகமமும் அருள்நூல்கள்
அனைத்து முற்றுப் போற்றும் அங்கண். 763

அன்னை புரி வழிபாடு

அருளன்னை ஆண்டவரை உபசரிக்கும்
அருட்பணியில் தோய்ந்திருப்பார்
அருள்நாடி அதிகாலை நீராடி
அருள்நிட்டை யமர்ந்து முன்னேன்
அருட்பூசை முடித்தண்ணல் திருவடிப்பூ
சைக்கான பொருள்களெல்லாம்
பெருகார்வத் தொடுதிரட்டிப் பெட்புறவோர்
தனியறையில் பேணி வைப்பார் 764

பாலினிய தயிர்இளநீர் எலுமிச்சம்
பழம்பஞ்சா மிருதம் செந்தேன்
சாலநறுஞ் சுவையுடைய கனிவகைகள்
சந்தனம்வி பூதி பன்னீர்
ஞாலமிசை வழிபாட்டுக் குரியபிற
பொருளனைத்தும் நன்று சேர்த்துக்
கோலமலர் கொண்டுவந்து வகைவகையா
கத்தொடுத்து வைத்துக் கொள்வார். 765

குருபரனார் கண்மலர்ந்து நீராடித்
தூயஉடை யணிந்து போந்து
மருவிடுநாற் காலியினில் அமர்வார்கள்
மாதவத்தின் பயனால் அன்னை
திருவடிதீண் டிப்பூசை செய்வார்கள்
திருவருட்பே றெய்து வார்கள்
கருவறையி லினிபுகுதா நிலையெய்திக்
காசினியை உய்விப் பார்கள். 766

அண்ணல்திரு வடிவழிபா டானதுமே
அருள்நீறு தீர்த்தம் அங்கு
நண்ணும்அடி யவர்அன்பர் அனைவருக்கும்
நன்முறையில் வழங்கு வார்கள்
புண்ணியமிக் குடையஅய்யர் புனிதமுடன்
சமைத்ததிரு வமுதை அன்போ(டு)
அண்ணலார்க் கிடுவர்பினர் அடியரன்பர்
அனைவருமே அமுது செய்வார். 767

திருவமுது செய்தடியர் ஓய்வெடுத்துக்
கொள்ளுகையில் திருவார் நம்தாய்
அருளண்ணல் அருகுற்று மெதுவாக
விசிறியினைப் பாற்று வார்கள்;
அரியபல வேதாந்தக் கருத்தையெலாம்
அனைக்கண்ணல் விளக்கு வார்கள்
உரியஉயர் கருத்துகளை யேற்றன்னை
உளத்தினிது பதித்துக் கொள்வார். 768

பாகவதம் பக்தவிஜ யம்போன்ற
நூல்பயின்று பண்பட் டுள்ள
ஏகமன தினில்ஏற்றுத் தலைசிறந்த
மாணவியாய் இலங்கி னார்கள்
சோகமறத் தூய்மையுற அருட்பாடல்
மென்குரலால் இசைப்பார் அண்ணல்
யோகநிலை நாடும்அனை அவைகளைக்கேட்
டானந்த முற்று நிற்பார். 769

அருட்பாடல் எழுதினமை

ஒருமுறைஅன் னையைப்பார்த்துத் தமிழ்மொழிநன்
றாய்எழுதற் காமோ என்ன
அருளண்ணல் கேட்டிடவும் அன்னைஒரு
வாறெழுத லாகும் என்றார்
அருட்பாடல் எழுதட்டும் என்றண்ணல்
பாடிடவும் அன்னை கேட்டே
தெருளோடும் எழுதிட்டார் செகத்தினுக்கவ்
வருட்செல்வம் கிடைத்த தன்றே. 770

'பூத்திருக்கும் சோலையிலே' எனத்தொடங்கும்
புனிதஅருட் பாடல் தன்னைக்
காத்தருளும் குருபரனார் கருணையினால்
இசைக்கஅன்னை எழுதிக் கொண்டார்
நேர்த்தியுடன் அருட்பாடல் பலஅண்ணல்
அவ்வாறே இனிது பாடிப்
பூர்த்திசெய்வர்; அருளன்னை எழுதிப்பினர்
நன்றிசைத்துப் போற்ற லானார். 771

ஒருசமயம் அண்ணல்அருட் பாடல்சொலி
முடித்தபின் 'அப்பாடா' என்றார்
அருகிருந்த அருளன்னை ஏன்என்ன,
காலைமுதல் இருந்த வாய்ப்புண்
பரிவுடன்இப் பாடல்சொலி முடித்தபினர்
தீர்ந்ததெனப் பகர்ந்தார் அண்ணல்
விரிபுவிக்கிவ் வருட்பாடல் வேண்டுமென
உடையவன்செய் கருணை யென்னே! 772

இறைவனருட் பெருங்கருணை இவ்வாறாற்
றெடுத்தண்ணல் இனிய வாக்கால்
முறையொடுநன் றேபெருக உழுவலன்பொ
டருளன்னை எழுதிக் கொள்ள
நிறையருளார் நரசிம்ம வேள்பின்னர்
அச்சேற்றி நிலத்துக் கீய
மறையெனும்அவ் வருட்பாடல் நம்போன்றார்
உய்ம்பொருட்டு வயங்கும் என்றும். 773

அன்னையின் சேவையும், அண்ணலின் ஆசியும்

அண்ணலுக்குப் பணிவிடைசெய் வதிலேயே
அருளன்னை நாட்டம் கொள்வர்
உண்ணுவதை உறங்குவதை ஓய்வெடுப்ப
தனைமறந்தே உழைப்பர் நன்றாய்
அண்ணல்அவண் இருக்கும்வரை தமைமறந்த
நிலையில்அரு ளன்னையி ருப்பார்
அண்ணல்திரு வருளமுத ஊற்றுநிறை
யப்பெறின் ஆயாச முண்டோ? 774

தெய்விகநற் பொலிவன்னை திருமுகத்தில்
ஒளிவீசும்; சோர்வு, வாட்டம்
மெய்வருத்தம் ஏதொன்று மின்றிமிக
ஊக்கமுடன் மிளிரு வார்கள்
ஐவகையாம் புலனில்மனம் ஈடுபடின்
புவிநசைஆன் மாவைப் பற்றும்
தெய்வவழி பாட்டிலொன்றிப் புலன்அடங்கின்
மனம்அடங்கும், திறமை யோங்கும். 775

மனதைக்குரு மலரடியில் வைத்துநனி
அருள்வாழ்வு வாழ்ந்த நம்தாய்
தினமுமுறு பசிஉறக்கம் சோர்விவற்றை
மறந்திருத்தல் வியப்பே யில்லை;
பினர்அருளண் ணலைப்போலத் தவமிருத்தற்
கீதொரடிப் படையோ? அண்ணல்
நனிசிறந்த இவர்நிலையை உணர்ந்தினருள்
கனிந்தாசி நல்கு வாரால். 776

அருட்சட்ட மாண்பினைஇவ் வவனிமுழு
தும்பரப்ப வல்ல ஆற்றல்
தெருட்பெற்ற இவ்வன்னைக் குளதென்னத்
தெரிந்தண்ணல் மகிழ்ச்சி கொள்வார்
அருட்சட்டத் தினுக்குயர்வு கூட்டுவிக்கும்
'அருட்சட்டாம் பிள்ளை, என்பார்
அருட்சட்ட அடியரெலாம் உணர்ந்தன்னை
யினைப்போற்றி அகம் களிப்பார். 777

'உருகியடி யேனுன்னைப் பருகவைத்த
வா' என்ன உருக்க மோடும்
உருகவைக்கும் மணிமொழியால் மணிவாச
கப்பெருமான் உரைத்த தேபோல்
உருகியுரு கிப்போற்றி ஒப்புயர்வில்
அண்ணலருள் பருகி அன்னை
பெருகுதிரு வருட்சட்டச் செந்நெறியில்
சிறந்தினிது பிறங்க லுற்றார். 778

ஆயுள்முடிந் திடுமுன்னே அவனியின்கண்
போந்தசெயல் முடித்தல் வேண்டி
தூயஅவா உந்தியதால் தேககசுகத்
தினைவிழைதல் துறந்தோ ராகி
மேயஇர வும்பகலும் அயராது
மெய்ம்மைநெறிக் குழைக்க லானார்
ஏயபர மானந்தப் பெருஞ்செல்வத்
தினைத்திரட்டி யின்பம் துய்த்தார். 779

அழியும்உல கப்பொருளை யெய்தஅல்லும்
பகலும்பலர் உழைக்கின் றார்கள்
அழிவில் பொரு ளானஇறை யடியடைய
அரும்பாடு படவேண் டாமோ?
உழுவலன்பர் ஒருசிலருக் குடையவன்தன்
னருள்எளிதாய்க் கிடைத்தல் போலும்
பழுதிலன்பர் பலர்க்கெளிதில் கிடைக்கவில்லை
போலுமிந்தப் பாரில் தோன்றும். 780

ஒருபொருளை உடையவன்தன் விருப்பப்படி
எவர்க்கெனினும் கொடுத்தல் கூடும்;
தருபவனை ஏன்தந்தாய்? ஏன்எனக்குத்
தரவில்லை யென்று கேட்கும்
உரிமைநமக் கணுவுமிலை; உலகனைத்தும்
உடையவன்றன் உடைமை யாகும்;
அருமையுற ஆக்கிக்காத் தழித்துமறைத்
தருளுபவன் அவனே யன்றோ? 781

தான்விழையும் வணம்ஒருவர்க் குயர் இன்பந்
தனைக்கொடுப்பான் தரணி மீதில்
வான்வயங்கும் உயர்சுகத்தை நான்வயங்கா
இதயமிசை வளர்த்துக் காப்போன்
தான்உழைக்கும் உழைப்பினுக்குத் தக்கபயன்
தருவதிற்சந் தேக மில்லை
யான்உழைக்க வேண்டியது கடமையென
இனிதுநிட்டை பேணி வாழ்வார். 782

முயற்சியைநாம் விடாதுசெயின் பயன்தருதல்
பற்றிமுனேன் சிந்திப் பான்என்(று)
அயர்ச்சியிலா தருள்நாட்டத் தொடுநிட்டை
யினிலாழ்ந்து பேணி வந்தால்
பயிற்சியைக்கண் டொப்பிலருள் பாலித்துப்
பேணியருள் பரமாச் சார்யன்
உயத்தகுநன் னிலையருளல் உறுதியென
ஒண்மலர்த்தாள் பற்றி நின்றார். 783

அருளன்னை யிவ்வாறல் லும்பகலும்
அருள்நாட்டம் உடைய ராகி
தெருள்விளங்கு திருநெறியைப் போற்றிநிட்டை
தினந்தோறும் சிறப்பாய்ப் பேணி
இருள்விளங்கு நிலைவிலக்கி இணையிலருள்
விளங்குதவ உயர்வு பெற்று
பொருள்விளக்கம் கண்டுபிற உயிர்களுக்கும்
புகட்டுதிறன் பெற்று வந்தார். 784

தீராப்பிணி தீர்ந்தமை

ஒருமுறைநம் குருபரனுர் உயர்பிள்ளை
யார்குப்ப நகரின் கண்ணே
அருள்புரிதற் குற்றபொழு தருளன்னை
யின்சிறிய மாமி யாராம்
திருவுடைய அமிர்தாம்பா ளுக்குமண்டைக்
கறுப்பான்நோய் தீரா தாகிப்
பெருகுபல ஆண்டுகளாய் உளதென்னப்
பேரன்பொ டழைத்து வந்தார். 785

பாபுரெட்டி யார்தமையன் மருமகளா
கியமங்கை யம்மா ளுக்குத்
தாபமிகத் தருஸ்வாச காசமிடை
யின்றியிடை யூறு செய்ய
ஆபத்தனைத் தும்தவிர்த்து நலமருளும்
அண்ணலிடம் அழைத்து வந்தார்
தீபத்தொளி நிகரண்ணல் திருவடியில்
இருவருமே பணிந்து நின்றார். 786

இருவரும்நன் றேவணங்கி அண்ணலிடம்
தம்குறைகள் இயம்பி னார்கள்
மருவுபல பிணிகளையும் தீர்த்தின்ப
வாழ்வருளும் திட்ட மான
திருவருட்சட் டம்மேற்கொண் டொழுகுங்கள்
திருநீறு நனிபூ சுங்கள்
பொருவருநோய் அனைத்தினையும் போக்கும்அரு
மருந்ததுவே என்றார் அண்ணல் 787

அருட்சட்டச் சிறப்பினையும் அருள்திருநீற்
றுயர்வினையும் அவர்கட் கன்பால்
தெருட்பெற்ற திருவுளம்சால் அருளண்ணல்
இனிதியம்பச் செவிம டுத்தார்
அருட்சட்ட மேற்றுநலம் பெற்றஅதி
சயம்ஆனத் தூரிற் கண்டோர்
அருட்சட்டச் செம்மல்திரு வாக்கின்வணம்
நடக்கப்பிணி யகன்ற தன்றே. 788

விநாயகர்க்குச் சக்தி கூடினமை

சித்திநக ரெனும்பிள்ளை யார்குப்பத்
தெணில்சித்து செய்தார் அண்ணல்
பக்தர்களுக் கின்னருள்பா லிக்கும்வர
சித்திவிநா யகர்கோ யிற்கண்
நித்தமும்பூ சனைபுரிசுப் பிரமணிய
சாஸ்திரியும் அன்னை யாரும்
சத்தியவ் விநாயகர்க்கு மிகச்செய்ய
வேண்டுமெனத் தாழ்ந்து நின்றார். 789

திருக்கோயில் பழுதாகி யிருந்ததனால்
செம்மையுறச் செய்து நன்றே
திருக்குடமு ழுக்காட்ட அவ்வூரார்
சிறந்தநன்னாள் குறித்தி ருந்தார்
அருட்கடலாம் அண்ணலப்போ தவ்வூரில்
எழுந்தருளி யிருந்த தால்நம்
அருளனையும் அய்யரும்அவ் வாறண்ண
லிடம்பணிந்து விண்ணப் பித்தார். 790

அதற்கிணங்க அண்ணல்முனேன் தளிக்கேகி
அருளார்தம் திருக்கரத்தை
முதற்கடவு ளானவர சித்திவிநா
யகர்முடிமேற் சூட்டி னர்கள்
கதிக்குவழி காட்டிஇகம் பரம் அனைத்தும்
கருணையுடன் அருளத் தேவுக்(கு)
அதிகசக்தி யெய்தியதந் நாள்முதற்கொண்
டவனியுளோர் அறிவார் நன்றே. 791

## ஐயர் பெற்ற பெரும்பேறு

நடுநிசியில் வரசித்தி கணபதியா
லயத்தினுக்குள் ஞான வள்ளல்
நெடுமுகில்நன் மழைபொழியச் செல்வதுபோல்
நிமலர்அரு குற்ற காலை
மிடைகதவின் இடைவெளிசற் றுளதாக
அர்ச்சகர்தம் விழியால் உள்ளே
நடைபெறும்அச் செயல்காண ஞானவொளி
பெருகியெங்கும் நிறைதல் கண்டார். 792

அருள்ஞான வொளிபெருகி அகம்புறமெல்
லாம்நிறைஅற் புதத்தைக் கண்ட
தெருளார்சுப் பிரமணிய சாஸ்திரியார்
தேகமெங்கும் புளகம் பூப்ப
அருள்ஞான வொளியினுளே அமிழ்ந்தவராய்
ஆனந்த நிறைவு பெற்றார்
உருள்பூமி நினைவுறக்கண் ணீர்பெருக்கி
உள்ளுருகிக் குழைந்து நின்றார். 793

திருவருளின் வடிவாகத் திகழண்ணல்
திருவுருவைத் தழுவிக் கொள்ளப்
பெருவேட்கை உடையவராய் எங்ஙனம்அப்
பெரும்பேறு வாய்ப்ப தென்னப்
பெருகுமச்சத் தோடிருக்க அண்ணலையர்
பெருவிருப்பை உணர்ந்து கொண்டார்;
திருவாயிற் படியருகில் சிறிதுதிரு
வடிநழுவல் போற்காண் பித்தார். 794

அண்ணல்திரு மேனியினைப் பரிந்தன்பால்
தாங்கஅய்யர் கரங்கள் நீட்ட
அண்ணலையர் மேனியினை அன்போடும்
அருளோடும் தழுவிக் கொண்டார்
அண்ணல்அருள் திருமேனிப் பரிசத்தால்
அய்யரடை ஆனந் தத்தை
மண்ணுலகில் எம்மொழியால் அவருரைப்பார்?
மற்றவர்எவ் வாறு சொல்வார்? 795

மிகநெருங்கி யுள்ளசில நண்பரிடம்
அய்யர்மிகு பேரன் போடும்
அகமுருகி அண்ணல்அருட் பெருமையினை
அற்புதம்செய் சிறப்பைச் சொல்லி
மிகமகிழ்வார், அன்பரையும் மகிழவைப்பார்;
மேதினியை வாழ வைக்கும்
தகவுநிறை அண்ணல்அருள் தன்மையெலாம்
சாற்றிடுதற் கெவரா லாகும்? 796

வேறு

நாயன்மார் பாடல்பெற்ற சிவத்தலங்கள் நனிசிறந்தும்
தூயநல்லாழ் வார்கள்துதி செய்ததிரு மால்தலங்கள்
மேயசிறப் புற்றுமிந்த மேதினியில் திகழ்வதுபோல்
ஏயஅண்ணல் பரிசத்தால் உயர்சக்தி நிறைந்ததவண். 797

அண்டர்பிரான் அடியவருள் தலைசிறந்து திகழ்பவராய்த்
தொண்டுபுரி வதுவேநற் றொழிலென்னப் பேணுமன்னை
மண்டுறுவே தகத்திரும்பு பொன்னுறற் போல்யாக்கை
கொண்டமல மூன்றுமறக் குறைவிலன்பின் உருவானார். 798

குருவின்அருட் பதமலரைக் கும்பிட்டுத் தொண்டுசெயின்
இருவினைமும் மலம்அகலும்; இன்பமிகும்; என்று சொன்ன
குருவின்அருள் திருவாக்கின் படிநடந்த குலக்கொழுந்தாம்
அருளன்னை குருபெருமான் அருளுருவாய்த் திகழ்ந்து
வந்தார். 799

பிள்ளையார் குப்பமெனும் பெருமைமிகும் அத்தலத்தில்
வள்ளலார் வந்துதங்கி மாண்கருணை புரிந்து பிறி(து)
உள்ளஊர் களுக்கேகி ஆங்காங்கும் உள அடியார்க்(கு)
எள்ளலில்சீர்ச் சட்டநெறி இனிதருளப் புறப்படுவார். 800

பிரிவாற்றுமை

அண்ணலார் பிரிந்துசெலும் போதுவழி
கூட்டியனுப் பன்னை யுள்ளம்
எண்ணிலா வருத்தமுறும்; முகத்தைஎவ
ரும்பார்க்க இயலா தாகும்:
நண்ணித்தே டியபொருளைக் கள்வரிடம்
பறிகொடுத்த நங்கை போல
உண்ணிலா விடும்உளத்தைக் கொள்ளைகொடல்
வள்ளல்செல உடைந்து நிற்பார். 801

நன்றுநினைப் பவர்மனத்தைத் திருக்கோயி
லாக்கொண்ட ஞான வள்ளல்
ஒன்றும்அறி யாதவர்போல் வண்டியினுள்
அமர்ந்துபிறி தூர்க்குச் செல்வார்;
சென்றவரை வழியனுப்பி வீட்டினுக்குள்
திரும்பிவந்து படுக்கும் அன்னை
ஒன்றும்அறி யாதவராய் ஊண்உறக்கம்
ஏதுமின்றி உள்ளம் சோர்வார். 802

அதிகாலை யினில்எழுந்து நீராடி
அருள்நிட்டை அமர்வார் பின்னர்
துதிபாடி மலர்சூட்டி வழிபாடு
புரிந்துள்ளம் சோர்ந்து நிற்பார்
கதிகூட்டும் குருபரரைக் காண்பதெப்போ
தென்றெண்ணிக் கலங்கி நைவார்
மதுரமிகும் அவர்மொழிகள் கேட்பதென்றே
என்றெண்ணி வருந்திச் சோர்வார். 803

என்னைக்கடைத் தேற்றவந்த எழிற்கருணை
மூர்த்திஎங்குள் ளாரோ என்பர்
தன்னிகரில் அவர்அமர்ந்த கூடம்வெறிச்
சோடியுள தேயிங் கென்பர்
முன்னருண்ட உணவைஅசை போடும்பசுப்
போலஅண்ணல் முன்னர் சொன்ன
நன்னயம்சால் வேதாந்தக் கருத்துகளை
நன்றுன்னி இன்பம் கொள்வார். 804

திருக்கரத்தால் தாளமிட்டுக் கொண்டினிது
வள்ளல்திரு வாய்மலர்ந்த
அருட்பாடல் களைநினைவு படுத்திப்பார்த்
திதுவரையில் அவனிக் குற்ற
அருட்பெரியர் யாரும்இது போன்றஅருள்
நெறியினைப்போ தித்தார் அல்லர்
தெருட்பெறநல் எளியவழி இவர்கொடுத்தா
ரேஎன்னச் சிந்தை செய்வார். 805

இல்லறத்தார்க் கிவர்எளிய வழிகூறி
யுள்ளாரே எனப்பா ராட்டி
இல்லறத்தி லுளபெண்கட் கிடிணையில்
வேதாந்தக் கருத்தை யெல்லாம்
நல்லபடி கூறியிவர் போல்தெருட்டும்
ஞானியரை எங்கே காண்போம்
சொல்லரிய பொக்கிஷத்தை நமக்களித்துள்
ளாரேஎன் றின்பம் துய்ப்பார். 806

ஏயமுற்பி றப்பினிற்செய் வினைப்பயனால்
இப்பிறவி வாய்த்த தென்றும்
பேயுலக மீதுறவை விட்டுவிடின்
மிகஉயர்வு பெறலாம் என்றும்
தூயஉயர் மெய்ப்பொருள் அருட்கனி
பழுத்தொழுகும் விரைவாய் என்றும்
மேயதிரு வாக்கருளிப் பற்றுகளை
அறுக்கவைத்த திறம்நினைப்பார். 807

சுத்தமனத் தினைஅழலின் மெழுகாக
நன்றுருக்கித் தூய்மை செய்து
பத்தியொடும் ஆவிபொருள் காயமிவை
தானமேகைம் மாறென் றோதி
அத்தனடி யைத்தொழுது தத்தமிடு
வாயென்ன அருளி னாரே
அத்தகைய சித்தர்தலை வரைமீண்டும்
எப்போது காண்போம் என்பார். 808

அவர்அருளார் திருவுருவை அகம்குளிரக்
கண்களிக்க எந்நாள் காண்போம்
அவர்பொன்னூர் திருவடியை எந்நாள்கண்
டலர்சூட்டிச் சிரமேற் பூண்போம்
அவர்அமுதத் திருமொழியைச் செவிகுளிர
எந்நாள்கேட் டருள்பெற் றுய்வோம்
அவர்விரைவில் எழுந்தருள்வா ரோஎன்ன
அகமிகவும் உருகி நிற்பார். 809

அருளண்ணல் அடியரிலிற் கொருமுறை
எழுந்தருளி அகன்று சென்றால்
தெருளருள மீண்டுமெப்போ தெழுந்தருள்வா
ரோஎன்னச் சிந்தை செய்தே
பெருவிருப்பி னேடடியர் குருபெருமான்
வரவையெதிர் நோக்கி நிற்பர்
இருநிலத்திற் பெரும்பொருளை எதிர்பார்க்கும்
வறிஞரைப்போன் றிருப்பார் அன்பர். 810

அடியவரின் மனமேஇவ் வாறெதிர்பார்த்
திருக்குமெனில் அடியார்க் கெல்லாம்
நெடியசட்டாம் பிள்ளையெனக் குருபரரே
தேர்ந்தெடுத்த நிகரில் அன்னை
படியிற்குரு பரர்வரவை எதிர்பார்க்கும்
நிலைபகர வேண்டுங் கொல்லோ
கடிதவரைக் காணும்அவா வால்ஏங்கி
உண்ணவும்தோன் றுதி ருப்பார். 811

தமக்கேனும் பிறர்க்கேனும் ஏதேனும்
சந்தேகம் தோன்றிட் டாலும்
தமக்கேனும் பிறர்க்கேனும் மனம்கலங்கத்
தக்கநிலை சார்ந்திட் டாலும்
நமைப்பேணு குருநாதர் எழுந்தருளின்
நலமாம்என் றுருக்கத் தோடும்
அமைப்பான வாசலில்வந் தாகாயம்
நோக்கியவா றிறைஞ்சு வார்கள். 812

வேறு

ஞானவொளிக் கதிரவனை நாதமுடி வினில்நடிக்கும்
வானரசை இப்புவிக்கண் வழிகாட்டும் வான்பொருளை
மோனபரி பூரணத்தை முத்தியருள் முழுமுதலை
ஆனநலம் அனைத்தும்அருள் அருட்டிருவை விரும்பிநிற்பார். 813

வேறு

அவ்வமயத் தினிற்சங்க நாதமுடன்
கருடதரி சனம்கி டைக்கும்
செவ்வையுற நெருங்கிவந்து வட்டமிடின்
சீக்கிரமே வருவார் என்றும்
அவ்விதமின் றிச்சேய்மை யாயிடின்தா
மதமென்றும் அறிந்து கொள்வார்
எவ்வமகற் றண்ணலெழுந் தருளுவதாய்க்
கடிதமும்வந் தின்ப மூட்டும். 814

அன்னைகொளும் நம்பிக்கைக் கேற்றவண்ணம்
அருளண்ணல் எழுந்தருள்வார்
அன்னையுரை யின்வண்ணம் அருட்காட்சி
தரல்கண்டனை வரும்வி யப்பார்
அன்னையுளம் களிதுள்ளும் அடங்கவொணு
மகிழ்ச்சிகரை புரண்டே யோடும்
பன்னரிய அண்ணலரு ளினைவியந்து
பாராட்டிப் போற்று வார்கள். 815

அடியரன்பர் அனைவருக்கும் கருணையுடன்
அருளாசி அருள்வார் அண்ணல்
படியிலுறும் உயிர்கள்தொறும் பரிந்தமர்ந்தின்
னருளாட்சி புரிந்து பேணி
முடிவிலரு ளானந்தத் தாண்டவம்செய்
மூர்த்திக்கவண் குழுமி யுள்ள
அடியவர்எண் ணங்களும்உள் ளன்பும்உணர்ந்
தருள்புரிதல் அரிய தொன்றோ? 816

அன்னையரு ளண்ணல்பரங் கருணையினை
உன்னியுன்னி அகம் களிப்பர்
பன்னிப்பல வாறுகக் கூறியிளம்
பாகெனஉள் ளுருகி நிற்பர்

உன்னியபல் வேலைகளும் உளக்கவலை
களும்உளம்விட் டோடிப் போகும்
தன்னிகரில் குருவினருட் பணிகளில்அவ்
வன்னையுளம் சார்ந்து நிற்கும். 817

தூயகுரு பரரைவர வேற்பதிலும்
அருகிருந்து சொல்லற் கொண்ணுத்
தூயபரி பூர்ணஅன்பொ டுபசரிப்ப
திலும்உள்ளம் தோய்ந்தி ருக்கும்
ஏயபல நாள்செலினும் பசிதாகம்
உறக்கமொன்று மின்றி நீங்கும்
மேயஅவர் உளநிலையை உணர்ந்தண்ணல்
மிக்கஅரு ளவர்க்கீ வாரால். 818

உண்ணு விரதத் தொடக்கம்

சாமியொரு காற்பிள்ளை யார்குப்பத்
தலத்தின்கண் ணமர்ந்தி ருந்து
பூமிமிசை பிறஅடியார் உறையிடங்கட்
கேகஎண்ணிப் புறப்ப டுங்கால்
தோமில்குணப் பாபுரெட்டி யார்அண்ணல்
அருகுற்றுத் தூய நம்தாய்
நாமருவும் நீருமின்றி நாள்கணக்கில்
இருத்தல்நல மாமோ என்றுர். 819

பெரியவொரு குடும்பத்தி லுள்ளபெண்ணிவ்
வாறுபிடி வாதம் செய்தால்
மருவுமிந்தக் குடும்பமெவ்வா றுவதண்ணல்
வாய்மலர்ந்திங் கருளல் வேண்டும்
குருவடிவில் திகழ்நீவிர் ஏதேனும்
அருந்துகெனக் கூறல் வேண்டும்
அருள்கனிந்திவ் வுதவிபுரி வீரென்ன
அடிமலரில் பணிந்து நின்றுர். 820

அன்னையருட் பக்குவமும் பினரெய்த
வுள்ளஅருள் நிலையும் அண்ணல்
பன்னரு மெய்ஞ் ஞானநிலை யாலுணர்ந்து
பரிவார்புன் முறுவ லோடும்

அன்னையரு கெய்தியிவர் வருந்துவதேன்?
ஏதேனும் அருந்த லாமே.
என்னவுரைத் துப்பாலே னும்பருக
லாமேஎன் றருளிச் செய்தார். 821

அருளன்னை பணிவோடு தேவையிருந்
தால்அருந்து வேனே என்றார்
தெருளருளும் குருபரனார் பாபுரெட்டி
யாரின்திரு முகத்தை நோக்கி
ஒருகுடும்பத் தைக்கெடுக்க இச்சாமி
வருமோநீர் உணர்தல் வேண்டும்
அருளன்னையை முதலில் உடை யோன்கணக்கெ
டுத்துள்ளான் என்றார் அன்பால். 822

இதன்பெருமை பிறகுவிளங் கிடும்நீவிர்
இதற்கொன்றும் அஞ்சல் வேண்டாம்
நிதமுமிந்தத் தலப்பெருமை தாய்பெருமை
நீணிலத்திற் சிறப்புற் றோங்கும்
புதியதிருத் தலமாக இதுதிகழும்
பூமியிதைப் புகழ்ந்து போற்றும்
கதிவிழைவோர் இவண்வருவர் எனக்கருணை
யாலுரைத்துச் சென்றார் அண்ணல். 823

ஒருமுறைநம் குருபரனார் திருச்சாத்த
னூரில்எழுந் தருளி னார்கள்
அருமைநிலை யுடையன்னைக் கஞ்சலனுப்
பிச்செய்தி அறிவித் தார்கள்
உரியவழக் கம்போல வரவேண்டும்
என்றதனிற் குறிப்பிட் டார்கள்
பெரியவர்கள் நாள்நான்கு கழித்தபினர்
அன்னைசெலற் கனும தித்தார். 824

அருட்கடிதம் வந்ததென அறிந்ததுமே
அன்னையக மகிழ்வுற் றண்ணல்
தெருட்பெறுநல் லடியவரை எழுப்புவதும்
நீராடச் செய்து சால

விருப்பொடுபூ சனைபுரிய ஊக்குவதும்,
திருநீறு தீர்த்தம் பெற்றே
அருப்புறுமூக் கத்தொடரு ளுரைகேட்டுய்
யச்செய்வதும் நினைந்து கொள்வார். 825

நான்குநாள் சென்றபினர் பெரியோர்கள்
அனுமதிக்க நம்தாய் அண்ணல்
பூங்கழல்கள் சேவைசெயப் புறப்பட்டுத்
திருச்சாத்த னூர்சேர்ந் தார்கள்
பாங்குறுநல் லடியவர்நீ ராடுமிடங்
களிலும்உண வருந்தும் போதும்
ஆங்கடைந்தவ் வடியவர்கட் கூக்கமிக
வூட்டலண்ணல் வழக்க மாகும். 826

அதுபோலத் திருச் சாத்த னூரில்அடி
யவர்வாய்க்கா லினில்நீ ராட
மதிகூர்மை யருளண்ணல் அவ்விடத்தில்
வழக்கம்போல் சென்று லாவ
அதுபோதங் குற்றஅன்னை அருளண்ண
லைக்கண்டு வண்டி யைவிட்
டதிவேக மாயிறங்கி அருளண்ணல்
அடிமலரிற் பணிந்து நின்றார். 827

வேறு

ஆராநற் றிருவமுதை ஆனந்த வொளிப்பிழம்பைத்
தீராவல் வினையனைத்தும் தீர்த்தருளும் செழுமணியைப்
பேரோதும் அடியவர்தம் பிறப்பறுக்கும் பெருமானைப்
பாரார்நற் பயனனைத்தும் தருகுருவைப் டணிந்தெழுந்தார். 828

வேறு

அருளண்ணல் அதுகண்டு நல்லாசி
யருளிநம்சி ரனையை நோக்கி
குருவையெவண் கண்டாலும் கண்டவுட
னேவணங்கல் முறையாம் என்றார்;
அருட்சட்ட அடியவர்க்கு வழிகாட்டப்
போந்தஅன்னை அடியார்க் கெல்லாம்
குருவைக்கண் டதும்வணங்கல் வேண்டுமெனத்
தம்செயலால் உணர்த்திட் டாரால். 829

## பண்ணுருட்டி ஆச்சிமார் தொடர்பு

நற்றவம்சால் அருளண்ணல் ஞாலமிசை
எழுந்தருளும் இடத்தி லெல்லாம்
சுற்றுப்புறம் உள்ளஅடி யவர்வந்து
தூயதரி சனம்பெற் றுய்வார்
செற்றமறுத் தருள்ஞான தேசிகனர்
செல்லுகின்ற வழியின் கண்ணே
உற்றநல்ல பக்குவம்சால் அடியவர்ஊர்
களில்தங்கி அருள்பா லிப்பார். 830

தம்மக்கள் தழைத்தினிது வாழ்வதனைக்
கண்டுமகிழ் தாயைப் போலச்
செம்மையுடன் சிறப்புற்றுச் சிறந்தஅருள்
வாழ்வாற்றித் திகழ்தம சீடர்
தம்மைப்பெரு மகிழ்வோடு கண்டவர்க்குத்
தக்கநல்ல ஊக்க மூட்டி
இம்மைநலம் மறுமைநலம் யாவுமினி
தேபெருகற் கருள்பா லிப்பார். 831

திருச்சாத்த னூரிலண்ணல் எழுந்தருளித்
திகழ்போதில் பண்ணு ருட்டித்
திருநகர்வாழ் சகோதரிகள் இருவர்தவ
ருதுசென்று தெரிசிப் பார்கள்
அருளனையும் அங்குசெல்வ தால்அவர்க
ளொடுநெருங்கிப் பழகு வார்கள்
உரிமையொடு கள்ளம்கப டேதுமின்றி
அவர்கள்உற வாடு வார்கள். 832

அருளன்னை உபவாசம் முடித்தபின்வந்
தால்அவர்கட் கன்பி னோடும்
மருவுபல காய்கனிகள் நிரம்பவாங்
கிக்கொடுத்துச் சமைத்துண் கென்ன
விரவுமின்சொல் பலகூறி விளம்பரும் ஆர்
வத்தோடும் அனுப்பி வைப்பர்
அருளனையும் உடன்பிறந்தோர் களைப்போன்றே
அவர்களுடன் பழகி வந்தார். 833

வேளையோடுபூசை, வேளையோடு ஆகாரம்

எய்தினர்க்கா ரமுதருளி இனிதோம்பும்
இணையிலருட் கருணை வள்ளல்
செய்தவத்திற் சிறந்தஅன்னை யிடம்மிகுந்த
கருணையுடன் திகழ்ந்து வந்தார்;
உய்வருளும் வழிபாடு கதிருதய
மாவதற்குள் நிகழும்; நன்றிவ்
வையமுய்ய வரும்அண்ணற் கடியவர்கட்
குணவொன்பான் மணிக்கு ளாகும். 834

மாலைகதிர் மறையுமுனர்ப் பூசை, மணி
ஏழினுக்குள் உணவு மாகும்;
சாலநல்ல பக்குவமாய்ச் சமைக்கப் பெறும்
உணவுசுவை சான்ற தாகும்;
சீலமுடன் பரிமாறும் பக்குவத்தால்
உணும்அளவு தெரியா வண்ணம்
சாலஅருந் திடுமாறு சிறிதுசிறி
தாய்ப்படைப்பர் தகவி னோடும். 835

இத்தகுபண் பின்நலத்தை அறிந்தஅண்ணல்
தாம்செல்லு மிடத்தி லெல்லாம்
மெத்தபரி வோடுமன்னை புரியும்உப
சாரத்தை வியந்து சொல்வார்
வித்தகநற் சமஸ்தான மாம்ராம
நாதபுரத் தரண்ம னைக்கண்
சுத்தமன முடைநற்சீ தாலக்ஷ்மி
நாச்சியா ரிடமும் சொல்வார். 836

நீளுமுயர் நேமநிட்டை மிகுபிள்ளை
யார்குப்பத் தலத்தின் கண்ணே
வேளையுடன் வழிபாடு வேளையுடன்
உண(வு)அங்குப் போனு லேயே
வேளைக்கொரு பிடியாண்ட வர்க்கதிகம்
தானென்ன விளம்பு வார்கள்;
மாளிகையி லிருந்தன்னைக் கவர்கள்கடி
தத்திலிதை யெழுது வார்கள். 837

உணவைவெறுத் தருந்தவம்மேற் கொண்ட அன்ன
லோஉணவிற் பற்றுக் கொள்வார்?
உணவெத்தகைத் தெனினும்செலு மிடங்களில்ஒண்
திருக்கரத்தால் தொட்டு விட்டுத்
துணிவொடுபன் ஞள்உணவில் லாமல்இருப்
பவர்இவ்வா றேன்சொன் ஞர்கள்?
உணவுசெல்லா ரும்பிணியா ளரும்நல்ல
உணவுண்ணச் செய்வ தவ்வூர்; 838

என்னுமுண்மை யுலகினர்க்கு ணர்த்துதற்கிவ்
வாறண்ணல் உரைத்தார் போலும்!
இன்னுமந்த உண்மையினை எல்லோரும்
கண்கூடாய்க் காணு கின்றோம்
உன்னருநோ யுடையவரும் உணவருந்த
இயலாமல் தவிக்கின் றோரும்
அன்னையிருப் பிடம்சென்றால் அவர்களரு
ளால்நன்றுண வருந்தி உய்வார். 839

அடியவர் விஷயம் தாயிடம்; தாய் விஷயம் சாமியிடம்.

அருள்ஞான குருபரரோ(டு) அடியர்பலர்
யாத்திரைசெய் திட்ட காலை
அருளன்னை யிடம்அடியர் நகைகளெலாம்
தந்துநன்னீ ராடச் சென்றார்;
அருளண்ணல் அன்னையைப்பார்த் திவற்றைநனி
தாய்பாது காக்கு மோஎன்(று)
அருள்முறுவ லொடும்வினவி ஞர்;அடியர்
அனைவரும்புன் முறுவல் பூத்தார். 840

அரும்பெருங் களஞ்சியமாம் அருள்ஞானச்
செல்வத்தை அருமை யாகப்
பெரும்பொறுப்பொ டும்பேணி அருளாட்சி
நடத்தவந்த பெருமை சான்ற
அருளன்னைக் கடியவரின் நகைகளைக்காப்
பாற்றுசெயல் அரிய தாமோ?
அருளன்னையின் பெருமையினை வெளிப்படுத்த
வேஅண்ணல் அருளிச் செய்தார். 841

அடியவர்கள் விஷயமெலாம் தாயிடத்தில்
தாய்விஷயம் அனைத்தும் சாமி
யிடத்திலென அருளண்ணல் அன்னையிடம்
அருள்கனிந்து வாக்க ளித்தார்
உடையவன்தண் ணருளால்அத் திருவாக்கின்
உண்மையினை உணரு கின்றோம்
அடியவர்கள் அருள்தாயை ஆண்டவரைக்
கணமேனும் மறத்தற் காமோ? 842

ஒருமுறைநம் குருபரனார்க் கருளன்னை
பணிவிடைகள் உஞற்றுங் காலை
குருபரனா ரிடம்ஏதோ கேட்கவுன்னிக்
கேட்கஅச்சம் கொண்டி ருந்தார்;
அருளண்ணல் அஃதுணர்ந்து தாய்க்கென்ன
வேண்டுமென அருளாற் கேட்க
மருவுமிந்தப் பிறவியிலே யேஇறவா
நிலையடைய வேண்டும் என்றார். 843

அன்னைவிருப் புணர்ந்தண்ணல்' அதற்கும்தடை
யா,தாய்?, என் றருளாற் கூறி,
'என்னகுற்றம் செய்தாலும் என்வழி
உனக்குத்தான்' என்று ரைத்தார்
சொன்னஅருள் வாக்கின்வணம் தூயதிரு
வருளாட்சி புரியும் சீர்சால்
அன்னையருட் சிறப்பிந்த அவனியுணர்ந்
தினிதேத்தக் காண்கின் றோம்நாம். 844

**மேல் இலந்தைக்குளம்** (உத்ஸவம்-7)

ஆண்டவர் நிர்விகற்பம்

நாயன்மார் ஆழ்வார்கள் சித்தர்களும்
யோகிகளும் ஞால மீதில்
மேயபல தலங்களுக்கும் சென்றுதிரு
வருள்பரப்பி விளங்கி னார்கள்
ஏயஒரு சிலஊர்கட் கடிக்கடிசென்
றினிதுதிரு வருள்செய் துள்ளார்
தூயஅண்ணல் அதுபோன்று சிலவூர்க்குப்
பலமுறைசென் றருள்செய் துள்ளார். 845

அவ்வாறு பலமுறைசென் றினிதுபல
நாள்தங்கி அருள்பா லித்த
செவ்வாய்மை மிகுதலங்கள் பலவற்றில்
மேலிலந்தைக் குளத்தின் கண்ணும்
எவ்வாறே அண்ணல்பல முறைசென்று
தங்கியுளார் இனிதவ் வூரில்
எவ்வாறே பலதிருவி ழாக்கள்நனி
நிகழ்ந்துளதும் இயம்பற் பாற்றே? 846

பன்னரிய உபசாரம் பரமகுரு
நாதருக்குச் செயும்நற் பேறும்
உன்னரிய சிறப்போடும் உயர்திரு
விழாக்கள்பல நடத்தும் பேறும்
நன்னயமார் திருவடியாப் பிள்ளைஅவண்
பெற்றிருந்தார் என்னில் அன்னார்
முன்னர்பல பிறவிகளில் செய்தவத்தின்
சிறப்புநம்மால் மொழிதற் காமோ? 847

அவமெனும்தீ நெறிவிலக்கி அற்புதச்செந்
நெறிபேணி அருட்பண் பெய்திக்
குவலயத்தெல் லாவுயிரும் முத்திபெறும்
பொருட்டுதிருக் குற்றா லத்தில்
நவிலரிய பெருந்தவம்பல் லாண்டினிது
புரிந்ததிறம் நாம்முன் கண்டோம்
உவமையிலா நிர்விகற்பத் தினிலிப்போ
தமரஉளம் கொண்டார் அண்ணல். 848

குற்றாலக் குகையில்அருந் தவம்முனர்ஆற்
றியபோது குவல யத்தோர்
சற்றேனும் காணவில்லை தக்கமுடி
வானநிர்வி கற்ப நிட்டை
உற்றேநன் றமர்முறையும் அநுட்டிக்கும்
விதிகளையும் உயர்அன் பர்க்குச்
சற்றேநே ரினிற்காட்டி உணர்த்திடுவோம்
என்றண்ணல் உளம்கொண் டாரோ? 849

அடியவரின் தவப்பேறவ் வாறவரை
அமர்த்தியதோ, அறியேம்; இந்தப்
படியின்மிசை மேலிலந்தைக் குளத்தலத்தில்
அடியர்குழாம் பரவி யேத்த
முடிவிலரு ளொளியாகி மூலமறை
யுருவான மோன மூர்த்தி
நெடியநிர்வி கற்பநிட்டை மேற்கொள்ள
நினைந்துதிரு வருளா லுற்றூர். 850

இறைவனரு ளேயாக இறைவன்திரு
வுருவாக இலங்கும் அண்ணல்
நிறைகருணை யோடுமந்த மேலிலந்தைக்
குளத்தலத்தில் நிலவிப் பல்கால்
குறைவில்திரு வருளொளியைப் பரப்பியதால்
குவலயத்தோர் அவரைப் போற்றி
முறையொடருள் நெறிபேணி முடிவிலருள்
பெருக்கியதால் சிறந்த தவ்வூர். 851

அருளொளியின் மயமாகப் பிறங்குமந்த
அருள்தலத்தில் அண்ண லாரும்
அருளொளியை மிகப்பெருக்கும் நிர்விகற்ப
நிட்டையினில் அமர வுன்னி
அருளொளிகால் கதிரவன்போல் அத்தலத்தில்
அடியர்பலர் போற்றப் போந்தார்
அருள்விழையும் அடியரன்பர் அண்ணலைக்கண்
டகமகிழ்வால் வரவேற் றிட்டார். 852

சீர்திகழும் செம்பொருளைச் செம்மையெலாம்
தருநிதியைத் தேவர் தேவைக்
கார்திகழும் மழைவளத்தைக் கருணைநிறை
அருள்ஞானக் கதிரை இந்தப்
பார்திகழ்நல் லருட்பயிரைப் பரிந்தோம்பும்
முழுமதியைப் பண்பார் கோவை
ஏர்திகழ்சற் குருமணியை இணையில்மகிழ்
வோடுபணிந் தின்பம் பெற்றூர். 853

அண்ணலார் அப்பதிக்கண் இனிதேகித்
திருவடியாப் பிள்ளை யில்லில்
தண்ணருளொ டமர்ந்தார்கள் சார்ந்தபுற
நோக்கெதுவு மில்லா ராகித்
திண்ணிய சமாதிநிலை யடைந்தார்கள்
சிறிதசைவும் பேச்சு மின்றி
எண்ணரிய நிர்விகற்ப நிட்டையினில்
இனிதாழ்ந்து திகழ லானார். 854

அடியவர்கள் முதலிலண்ணல் தியானத்தி
லிருக்கின்றார் எனநி னைந்தார்
படியினிற்சற் றிருந்துபினர் விழித்தெழுந்தி
ருப்பரெனப் பகர்ந்தார் பல்லோர்
முடிவில்மணி பலஉருள நாள்உருள
மாதங்கள் உருள மோன
முடிவிலொன்றித் திகழண்ணல் முகத்திலரு
ளொளிவீச விளங்க லானார். 855

ஒருசிறிதும் அசைவின்றி ஒளிவீசும்
திருவுருவொ டொளிரும் ஞான
குருபரனார் திருக்கோலத் தினைக்காண
ஆயிரம்கண் கொண்டோ மில்லோம்
அருளுருவாய் அன்புருவாய் ஆன்மிகஞா
னத்துருவாய் அருளா னந்தத்
திருவுருவாய்த் திகழுமிவர் தவம்செயும்நற்
றிறம்காணத் தவம்செய் துள்ளோம் 856

என்னஉரு கிப்போற்றி இயம்பரும்பே
ரானந்த மெய்த அன்னார்
என்னதவம் முற்பிறப்பிற் செய்தனரோ
யாமறியோம் இமையோர் யாரும்
மன்னுமலர் மழைசொரிந்து போற்றினர்நல்
திருவடியாப் பிள்ளை யென்னும்
நன்னயம்சால் அடியர்முனர் புரிதவத்தை
நாமுரைத்தல் அரிதே யன்றோ? 857

உலகில்அருட் சட்டநெறி யினைவழங்கி
உயிர்த்திரளை யோம்பும் அண்ணல்
உலசமுய்யும் வண்ணமுயர் தவம்புரியும்
உண்மையினை உணர்ந்த மேலோர்
அலகில்அருள் தவமுனிவர் அனைவோரும்
அண்ணல்தவம் வாழ்க என்றே
நிலவுதிரு வருளாசி நல்கிநிய
மத்தோடும் போற்ற லானார். 858

முதலிற்சனம் திரளாக வந்துகுழு
மிச்சேவித் தேக லானார்
அதன்பினண்ணல் அருந்தவத்துக் கூறுசெய
லாகாதே என்று யர்ந்த
இதயபரி பாகமிக்க அடியவர்கள்
எப்படியோ அங்குற் றோர்கட்(கு)
இதமுறநல் வார்த்தைசொலி எண்ணிறந்த
கூட்டத்தைத் தடுத்து விட்டார். 859

அருளண்ணல் திருமேனி மிகவும்இளைத்
திட்ட தண்ணல் பெற்ற இன்பப்
பெருநிலையைப் புவியின்மிசை எம்மொழியில்
எவர்எடுத்துக் கூற வல்லார்?
துரியதுரி யாதீதப் பெருவெளியில்
பரவமுதம் துய்த்து மேலாம்
அருள்நிலையில் அடியவர்அவ் வாறுதிளைத்
திடுகெனக்காட் டிட்டார் போலும்! 860

இரண்டரையாண் டவ்வாறு நிருவிகற்பத்
தினில்திளைத்தங் கிருந்தார் அண்ணல்;
இரண்டறநன் றிறைவனொடு கலந்தின்பம்
துய்ப்பவர்க்கிவ் வுலகந் தன்னில்
புரண்டிடுபல் லாண்டும்ஒரு கணம்போலும்
என்றறிஞர் புகல்வ தேபோல்
இரண்டரையாண் டுக்காலம் சென்றதண்ணற்(கு)
ஏதொன்றும் தெரியா தன்றே. 861

அடியவர்கள் அளவிறந்த மனக்கவலை
கொண்டார்கள்; அண்ண லார்இப்
படியின்மிசை அவதரித்தாண் டுகள்அறுப
தாகிவிட்ட படியி னுலும்
நெடியதவத் தாலுமண்ணல் திருமேனி
மிகவும்இளைத் திருத்தல் கண்டார்
உடையவன்தண் ணருள்இவரைக் காத்தருள
உளமுருகிப் போற்றி செய்தார். 862

ஒருதினம்கா லையிலடியர் வழக்கப்படி
நீராடி உண்மை யன்பால்
குருபரரை வலம்வந்து வணங்குகையில்
குருபரனுர் நேத்தி ரங்கள்
ஒருசிறிது திறந்துநிட்டை கலைந்திருக்க
அதுகண்டுள் ளுவகை கொண்டார்
இருநிலத்தில் அவர்அடைந்த ஆனந்த
பரவசத்துக் கெல்லை யுண்டோ? 863

பெருமகிழ்வி னுலொருவர் ஒருவரைக்கட்
டித்தழுவிப் பெரிது வந்தார்
இருடிபட்டிச் சாமிக்கரோ ஹரவென்ன
இனிதிசைத்தா னந்த முற்றுர்
பெரிதுநற்பக் குவமுடைய அடியவர்கள்
அண்ணலுக்குப் பிரிய மோடும்
உரியபக்கு வம்சான்ற உணவூட்டி
உயரன்போ டுபச ரித்தார். 864

சிறிதண்ணல் திருமேனி அசைவுற்றுச்
செவ்வையுற இயக்க முற்றுச்
சிறிதுசிறி தாகநட மாடத்தொடங்
கிட்டாலும் செம்மை சான்ற
நிறைதவத்தின் கனற்பிழம்பாய்த் திகழ்ந்திடஅத்
தெய்விகம்சால் திருமே னிக்கு
முறையொடுமஞ் சனம்புரிந்து வழிபாடு
செயஅடியார் முயல லானுர். 865

அற்புதக்குண் டலிசக்தி அழற்பிழம்பாய்க்
கனன்றுகொண்டி ருக்கும் போதே
ஒப்பில்திரு மஞ்சனம்செய் துளம்குளிர
வழிபாடு செயநி னைந்தார்
எப்பொழுதும் அடியவர்கள் எண்ணுவதை
நிறைவேற்றும் எம்பி ரானார்
ஒப்புதல்தந் தருளப்பொருள் அனைத்தினையும்
உவந்தடியர் சேக ரித்தார். 866

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்துப்பதி
னாறுண்டு ஜூன்ஒன் பான்நாள்
மேயநள வைகாசி இருபத்தே
ழாம்தேதி வெள்ளி நாளில்
ஏயதிரு மஞ்சனம்நன் முறையோடும்
இயற்றிமண மலர்கள் சூட்டி
நாயகரை அலங்கரித்து நற்றூப
தீபநிவே தனங்கள் செய்தார். 867

உள்ளமிகக் கனிந்தடியர் அண்ணல்அருட்
பாடல்பல ஓதி னார்கள்
தள்ளருபே ரன்போடும் தகவுறச்சற்
குருபரரை வலம்வந் தார்கள்
கள்ளமின்றி அண்ணலருட் கழலடியில்
தாழ்ந்துபணிந் திறைஞ்சி னார்கள்
வள்ளல்அவ ரவருளத்திற் கேற்றவண்ணம்
மன்னருளைப் பொழிந்திட் டாரால். 868

நிருவிகற்பத் தமர்ந்திருந்த நிமலர்அது
கலைந்தெழுந்த செய்தி கேட்டே
அருகுளபல் லூரவரும் அடியவரும்
அன்பர்களும் திரண்டு வந்து
பெருமகிழ்வி னோடுதரி சித்துவலம்
புரிந்திறைஞ்சிப் பெரும்பே றுற்றார்
இருநிலத்தில் அவரடைந்த அருட்பேற்றுக்
கெல்லையெவர் இயம்பற் பாலார்? 869

வேண்டுதல்வேண் டாமையெனும் விகற்பமற்று
நிருவிகற்பத் தாழ்ந்த அண்ணல்
மீண்டு நம்முன் னேஉலவத் திருவுளம்கொண்
டெழுந்துவிட்டார் என்ற செய்தி
யாண்டும்விரை வினிற்பரவ இனிதவர்
விழாக்காண எண்ணில் கூட்டம்
ஈண்டிடவும் இமையவரும் வானநல்வீ
தியிற்குழுமி யேத்த லானார். 870

மன்னுமுல கினைத்திருத்த மாகருணை
யொடும்போந்த வள்ள லார்தம்
பன்னரிய பெருந்தவத்தின் மாண்சிறப்பை
நேரினிலே பார்த்த யாரும்
முன்னர்நடை பெற்றுள விழாக்களைக்காட்
டிலும்மிகுந்த சிறப்பாய்ச் செய்ய
உன்னினர்பே ரார்வமுடன் பொருளனைத்தும்
சேர்த்துவிழா உவந்து செய்தார். 871

அவரவர்அன் பின்திறத்தை ஆழத்தை
உணர்ந்த அண்ணல் சிரம சைத்தும்
கவின்கொள்மலர்க் கரமசைத்தும் புன்முறுவல்
பூத்தும்அருட் கருணை செய்தார்;
தவவடிவில் திகழும்அருள் திருமேனிக்
கபிடேகித் திட்ட யாவும
உவகையுடன் ஏற்றடியர் அன்பாலுட்
கொண்டுபவப் பிணிதீர்ந் துய்ந்தார். 872

அருள்ஞானத் திருமேனி மீதுபடிந்
திட்டஅபி டேக தீர்த்தம்
இருளாலத் தடியவர்தம் பிணிதீர்க்கும்
இடர்தீர்க்கும் இன்பம் கூட்டும்
பெருஞான நிட்டையினில் உயர்வளிக்கும்
பிறவியெனும் பிணியும் தீர்க்கும்
பரஞான நிலைவழங்கும் பதமலரிற்
கூட்டுவிக்கும் பண்பிற் றுமால். 873

அலங்கார ஆராத னைகளெலாம்
மிகுசிறப்பாய் நடந்த தங்கண்
கலங்கா நன் னிலையருள்சற் குருபரரும்
அடியவரும் அன்பர் யாரும்
இலங்கோத னம்புசித்தார்; இணையிலண்ணல்
அடியவர்கட் கிதமாய் இன்ப
நலங்காணும் முறையைஎளி தாய்இனிய
அருளுரையால் உபதே சித்தார் 874

மணமிகுந்த எழில்மலரால் வனப்புறநன்
றலங்கரித்த சிவிகை யின்கண்
குணமொருமூன் றினைக்கடந்து குலவும்அருட்
கடல்போன்ற குணக்கோ மானை
தணல்நிகரும் தவப்பிழம்பைத் தண்ணிலவு
பொழியுமுழு மதியந் தன்னை
அணைகடந்த பேரன்பொ டமர்த்திவிழாச்
செய்தடியர் ஆனந் தித்தார். 875

பாங்கான வாத்தியங்கள் பலவகையாய்
முழங்கினநற் பண்கள் பாடித்
தாங்காநல் உவகையுடன் பெண்களெலாம்
சார்ந்துகும்மி போட்டிட் டார்கள்
ஓங்காரம் கூட்டிஇரு டியர்பட்டிச்
சாமிக்கரோ ஹரவென் றார்கள்
தீங்கேது மின்றிநலம் செயும்சட்டம்
வாழ்கவென முழக்கி னார்கள். 876

காணரிய கவின்மிகுபூப் பந்தரில்மண்
டகப்படிகள் நடத்தி னார்கள்
வாணவே டிக்கைபல வகைவகையாய்
நடத்திமன மகிழ்வுற் றார்கள்
பூணரிய பேரன்பு பூண்டுகுரு
பரர்புகழைப் போற்றி னார்கள்
பேணுநெறி களிற்சிறந்த தருட்சட்ட
நெறியென்னப் பேசி னார்கள். 877

இவ்வாறு மக்களெலாம் இன்பெய்த
இமையவரும் வாழ்த்துக் கூற
துவ்வாத விரதியரும் ஞானியரும்
முனிவரரும் சூழ்ந்து வாழ்த்த
அவ்வோடுவ் வும்மவ்வு மானஅண்ண
லார்சிவிகை குணபால் தூய
செவ்வானிற் கதிரெழுமுன் திருவடியாப்
பிள்ளையிலம் சேர்ந்த தம்மா. 878

மேல்இலந்தைக்குளம் - *(உத்ஸவம்-8)*

இத்திரு விழா நடந்த ஒருமாதம்
கழித்தினிதே அண்ண லார்க்குச்
சித்தமகிழ் வோடொரு விழா மீண்டும்
நடத்திடற்குச் சிந்தை செய்தார்
பத்திமிகு திருவடியாப் பிள்ளை அண்ண
லைப்பணிந்து பரிவி னோடும்
மெத்தவிநயத்தோடும் உத்தரவு
பெற்றுவிழா உஞற்ற லானார். 879

நளஆண்டா னியில்இருபத் தாறும்நாள்
ஞாயிற்றுக் கிழமை அன்பார்
உளமேவும் அடியார்கள் உவந்தேத்த
உயர்பொதிகைத் தென்றல் வீச
தளமேவு சண்பகம்வெண் மல்லிகைமுல்
லைமலர்ந்து மணம்ப ரப்ப
வளமேவும் பூப்பந்தர் அமைத்ததன்கண்
குருபரனார் வயங்கச் செய்தார். 880

அடியார்கள் புடைசூழ எழுந்தருளும்
ஆனந்த மூர்த்தி முன்னர்
படியார்நற் பலபஜனை பாடியும்பன்
மலர்தூவிப் போற்றி செய்தும்
மடியோடு மிடிநீக்கி வாழ்வருளும்
வண்மையெலாம் சொலித்து தித்தும்
கொடிதான பிணிபிறவி தவிர்திறங்கள்
கூறியும்பே ரின்பம் துய்த்தார். 881

அந்தஉயர் அருட்காட்சி கண்கொள்ளாக்
காட்சியென அமைந்த தங்கண்
வந்தஅடி யார்களுக்கும் வள்ளலுக்கும்
அமுதூட்டி ஆனந் தித்தார்
நந்தலில்சீர் அடியர்ஒரு வரைக்கொண்டெல்
லோர்க்கும்நன்னீ றளிக்கு மாறு
பந்தமறுத் தருளண்ணல் பணித்திட்டார்
பக்தரெலாம் பயன்பெற் றுய்ந்தார். 882

அண்ணல்அருட் கீர்த்திதமிழ் நாடெங்கும்
அற்புதமாய்ப் பரவ லாயிற்(று)
அண்ணலருட் பெயர்சொல்லி அன்பர்பல
பிணிகளையும் அகற்ற லானார்!
அண்ணல்சிறப் பினைமக்கள் கூடுமிடங்
களிற்பேசி அகம்ம கிழ்ந்தார்
அண்ணல்அருட் சட்டநெறி அகிலமிசை
ஆங்காங்கும் பரவிற் றம்மா. 883

அன்னியர்தம் ஆட்சியினால் நாம்நமது
நிலைமறந்தோம் அவனி மீதில்
மன்னுமறை நெறிமறந்தோம் வழிபாடு
மறந்தடிமை யாய்க்கி டந்தோம்
பன்னரிய ஊக்கமுடன் மக்களுக்கு
விழிப்பருளிப் பரம ஞான
முன்னவனார் அருளினைநம் கடமையினை
உணர்த்தவந்தார் மோன வள்ளல். 884

எவ்விதக்கைம் மாறும்கரு தாமற்கட
மைபுரியப் போந்த ஏந்தல்
செவ்வியகு ளக்கரையில் நதிக்கரையில்
தெருக்கள்ஒன்று சேரி டத்தில்
எவ்வமறுத் தருள்செய்திருக் கோயில்களில்
எழுந்தருளிப் பிறவி யென்னும்
பவ்வமதைக் கடக்கவருள் பரஞான
கணபதியைப் போற்றச் செய்தார். 885

திங்கேதும் தவிர்சித நீரில்அதி
காலையினில் ஆடிச் செய்ய
ஓங்கார மோதிவிபூ தியையணிந்துள்
ளுவகைமிக ஓங்கிப் பொங்க
ஆங்காங்கும் எழுந்தருளி யுள்ளவிநா
யகமூர்த்தி களுக்கன் போடும்
பாங்கான வழிபாடு செய்துமக்கள்
பக்திநெறி போற்ற லானார். 886

அத்தகைய அருட்காட்சி கண்டவர்கள்
அனைவரையு மீர்த்த தன்பால்
இத்தரையில் இனியதமிழ் நாடெங்கும்
சமயமணம் இனிது வீசப்
பத்தர்கள் குழாம்பெருகிற் றருளாற்றல்
உயர்ந்ததெனப் பாரோர் ஓர்ந்தார்
சித்தமலம் தேய்ந்ததருட் சிவஞானம்
கனிந்தினிது செழித்த தெங்கும். 887

இவ்வாறு சமயத்துக் கொப்பிலருட்
புத்துயிரை யினித ளித்துச்
செவ்வாய்மை மிகுசட்ட நெறிவழங்கித்
திருவருளைப் பரப்பி யெங்கும்
எவ்வாறே மணிமணியாய் அடியவரைத்
திரட்டியின்ப மூட்டிப் பேணி
ஒவ்வாத நெறிவிலக்கி உலகினுக்கே
குருபரராய்த் திகழ்ந்தார் அண்ணல். 888

மேல் இலந்தைக்குளம்-(உத்ஸவம்-9)

வாழ்வுற் றுலகம் செய்தவத்தின்
பயனாய் வந்து திகழ்அண்ணல்
தாழ்வுற் றவரும் திருந்தியருட்
டன்மை பெற்றின் பெய்தும்வணம்
ஊழ்வற் றிடச்செய் தொப்பிலருட்
சட்டம் வழங்கி யோம்புவதால்
பாழ்பட் டிடுமென் போன்றவரும்
பக்திக் கடலுட் படிவாரே. 889

வேறு

அண்ணலார் ஆனத்தூர் திருச்சாத்த
ஒூர்போன்ற தலங்க ளுக்கும்
புண்ணியப்பா ரதத்தின்கண் வடநாட்டிற்
பொலிவுறுபல் தலங்க ளுக்கும்
நண்ணியடி யார்களுக்கா ராவமுதாய்
வாழ்வாங்கு நனிவா ழச்செய்
திண்ணியநற் சட்டநெறி யினைவிளக்கித்
திருவருளைப் பரப்பி வந்தார். 890

ஒப்புரவொ டில்லறத்தைப் பேணியுய்யும்
உயர்முறையும் ஓது ஜாதி
செப்புபல சமயப்பிணக் கேதுமின்றிக்
கூட்டுவழி பாடு செய்யும்
ஒப்புயர்வில் நெறிவிளக்கி இறையருளிற்
கூட்டுவித்தே உண்மை யின்ப
நற்பயனை எய்தும்வணம் போதிக்கும்
ஞானகுரு பரரா யுற்றார். 891

சர்வமத சமரசசன் மார்க்கம்அருள்
செம்மல்எனத் தரணி மீதில்
கர்வம்அணு வேனுமற்ற காருண்ய
மூர்த்தியெனத் தமக்கென் றேதும்
எவ்விடத்தும் நாடாத இதயபரி
பாகமிக்க ஏந்த லென்னச்
செவ்வியநல் லடியரன்பர் போற்றஉலாச்
செய்துவந்தார் ஞானச் செல்வர். 892

நம்மூருக் கருளண்ணல் எழுந்தருளு
வாரோநம் மைத்தி ருத்த
நம்மோடு தங்கிநம்மை நல்வழிப்ப
டுத்திடுவா ரோஎன் றன்பால்
நன்மார்க்கம் நல்கிநம்மைப் பேணவல்லார்
இவரென்று நாளும் சொல்வார்
சன்மார்க்கம் நாடடியார் சாமிவர
வெதிர்நோக்கிக் காத்தி ருப்பார். 893

அண்ணலார்க் கபிடேகா ராதனைசெய்
வதற்குரிய பொருள்கள் யாவும்
அண்ணலார் அமர்ந்திருந்த நாற்காலி
அண்ணலார் உபயோ கித்த
புண்ணியம்சால் பாத்திரங்கள் அனைத்தினையும்
புனிதஅண்ணல் மீண்டும் போந்தால்
அண்ணலார்க் காகுமெனத் தாம்அவற்றைப்
பயன்படுத்தார் போற்றி வைப்பார். 894

அஞ்சல்வரு மோஎன்ன நாள்தோறும்
அன்பொடெதிர் நோக்கு வார்கள்:
செஞ்சொலருள் தேசிகனர் ஒரூரி
லிருந்தோரூர் செல்லும் போதில்
அஞ்சல்அடி யார்களைக்கொண் டனுப்பிவைத்தின்
னருட்கருணை யோடும் செல்வார்;
மஞ்சனைய அருள்வள்ளல் வரும்செய்தி
யறிந்தடியர் மகிழ்வு பூப்பார். 895

மேலிலந்தைக் குளம்பெரிய திருவடியாப்
பிள்ளைக்கு மிக்கன் போடும்
ஞாலமுய்யப் போந்தஅண்ணல் நல்வரவைத்
தெரிவிக்கும் கடிதம் சேர,
சீலமிக்க பிள்ளைபே ரன்பரெலாம்
செப்பருமா னந்தம் கொண்டார்;
மாலகற்றும் குருவரவை மற்றுளசுற்
றூர்களுக்கும் தெரிவித் திட்டார். 896

அருளண்ணல் வரும்நாளை அனைவரும்மெய்
யன்பொடெதிர் நோக்கி நின்றார்
மருவுமவ்வூ ரினில்இரு சகோதரிகள்
வயதுமுப்ப தின்மே லாகித்
திருமணமா காதவராய் தேசிகனர்
மகிமையெலாம் செப்பக் கேட்டுத்
தெரிசனம்செய் தால்தம்குறை தீருமெனும்
நம்பிக்கை யோடி ருந்தார். 897

மங்களமார் நன்னுளில் அடியவர்கள்
குழுவொடண்ணல் வந்து சேர்ந்தார்;
தங்குபெருங் காதலொடும் தம்பெருமான்
தண்ணருட்பூந் தாள்கள் போற்றிப்
பொங்குறுமன் புறவணங்கி முன்நின்று
புனிதஅருட் புகழைப் பாடித்
தங்கள்குறை தீர்ந்தவராய் தகுநிறைவு
பெற்றவராய் அன்பர் சூழ்ந்தார். 898

பேறனைத்தும் பெற்றவராய்த் திருவடியாப்
பிள்ளைமகிழ் சிறந்தி ருந்தார்
ஊறனைத்தும் தவிர்ந்துபுதி தாகஅண்ண
லுடன்போந்த அடியார் தம்மை
ஈறிலன்பொ டுபசரித்தவ் வின்னடியார்
ஊர்களிலே அண்ண லார்க்குக்
கூறரிதாம் சிறப்போடும் செய்தஉப
சாரமெலாம் கூறக் கேட்டார். 899

குருநாதர் எழுந்தருளின் தம்குறையைக்
கூறியருள் பெறநினைந்த
இருசகோ தரிகளும்பே ரருளண்ணல்
தங்கியுள இடத்திற் சேர்ந்து
பெருகுதவத் தால்ஞான வொளிவீசும்
மேனியையும் பிறங்கு மேலாம்
கருணைபொழி கண்களையும் கண்டுகளித்
துளத்தினில் ஆறுதல் அடைந்தார். 900

எனினுமெண்ணில் அடியவர்கள் சூழ்ந்திருக்கும்
போதினில்எவ் வாறு நந்தம்
மனக்குறையை அண்ணலிடம் நவில்வதெனத்
தயங்கிநிற்க வள்ளல் ஓர்ந்தே
இனிதொருபால் அமரும்வணம் குறிப்பாக
உணர்த்திஅவண் இருக்கச் செய்தார்
அனைவரும்நல் லுணவருந்தச் சென்றபினர்
அருளொடவர் களைநோக் கிட்டார். 901

அவர்களுடன் வந்தவொரு மூதாட்டி
யார்அண்ணல் அடிகள் போற்றி
அவர்களையும் பணிவித்தார்; அவர்கள்நிலை
யினைஅண்ண லிடத்திற் கூறி
அவர்கள்பிதா மறைந்ததையும் அனையொன்றும்
அறியாத நிலையும் கூறி
அவர்களுக்கு மணம்நடக்க அருள்புரிதல்
வேண்டுமென விண்ணப் பித்தார்; 902

அருளண்ணல் சிறிதுதிருக் கண்மூடி
அமர்ந்துபினர் 'அஞ்சேல்' மன்றல்
விரைவில்நடந் திடு'மென்ன அருள்புரிந்தார்;
அனைவருமே வியக்கும் வண்ணம்
இருவருக்கும் மூவிருநாட் களில்நன்று
மணமினிது நடந்த(து), அந்த
இருவரும்எய் தியமகிழ்வுக் கெல்லையிலை;
அண்ணல்பதம் இறைஞ்சி வாழ்ந்தார். 903

செய்தியிதை அறிந்தஅடி யவர்அண்ணற்(கு)
இதுபெரிய செயலோ? அண்ணல்
செய்யஉளத் தெண்ணின்உல கனைத்தினையும்
இங்குவரச் செய்யக் கூடும்;
துய்யகர்த்த ராகிஉல கனைத்தினையும்
இயக்கண்ணல் ஆற்றல் சொல்ல
வையமிசை எவர்க்காகும்? எனக்கூறி
அடியரன்பர் மகிழ்வு கொண்டார். 904

திருவடிப்பிள் ளைகுரவர்க் கின்னுமொர்
விழாநடத்தச் சிந்தை செய்தார்
மருவுமவ்வூர் அடியவர்க்கும் அன்பருக்கும்
தம்விருப்பை மகிழ்வாற் சொன்னார்
பெருகும்உளக் களிப்பினொடும் தாமுமவ்வா
றேவிழைவ தாகக் கூறித்
தருபொருள்கள் ஏற்றுக்கொளின் தாமும்உட
னிருந்துநடத் துவதாய்ச் சொன்னார். 905

அவர்கள்உளத் தார்வநிறை வறிந்தபிள்ளை
அவ்வாறே இசைவு கூற
அவண் இதுகா றும்நடந்த உத்ஸவங்கள்
அனைத்தினுக்கும் மேன்மை யாக
தவலறுஞ்சி றப்பொடிவ்வி ழாநடத்தத்
தகுமுறையால் முயன்றார் ஊரார்
அவண்நடக்கும் இறுதிவிழா எனஉணர்ந்த
அண்ணல்எதும் எவர்க்கும் சொல்லார். 906

ஆவனஎல் லாம்வழக்கம் போல்அடியர்
அன்பரன்பால் நடத்தி னார்கள்
மேவும்அழைப் பிதழ்அச்சிட் டனைவருக்கும்
மிகுமகிழ்வொ டனுப்பி னார்கள்
ஓவில்சிறப் போடுமுனர் எட்டுவிழாக்
கண்டவர்கள் உளமார் அன்பால்
மேவிஇவ் விழாச்சிறப்பைக் காணமிக்க
ஊக்கமுடன் திரள லானார். 907

ஊரைமிகக் கவின்செய்தார்; ஒழுங்காகக்
கடைகள்பல அமைந்த அங்கண்;
சீருறுசற் குருநாதர் குருசாமி
ரெட்டிபட்டிச் சாமி யென்றே
நாருறுபல் லன்பர்களும் ஞானகுரு
பரமணியைப் போற்றி னார்கள்;
ஏருறுதம் பிள்ளைகளுக் கவ்வாறே
இனிதுபெயர் சூட்டி னார்கள். 908

அன்பர்அடி யவர்பலரும் திரண்டுவர
அங்குபிள்ளை யில்லின் கண்ணே
பைம்பொன்நிகர் பக்தர்களுக் கிடம்காணு
மற்போகப் பரிவார் அண்ணல்
உம்பர்தொழும் ஐங்கரனார் ஆலயத்தில்
அமர்ந்தன்பர்க் குவகை யோடும்
செம்பொருளை இனிதுணர்த்தும் சிறந்தபல
இனியவுரை அருளி னாரால். 909

இருசெவியின் வழியாக இன்னமுதம்
இனிதருந்தி அடியார் அன்பர்
இருவிழியும் நீர்சொரிய இதயம்அன
விடுமெழுகாய் இளகி நிற்க
திருவருட்செந் நெறிஉலகுக் கருள்ஞான
தேசிகனார் வாழ்கென் றோதி
அரஹரவென் றொலிபெருக்கி ஆனந்தப்
பெருங்கடலில் அமிழ்ந்தார் அங்கண். 910

நளஆண்டு பங்குனியில் இருபத்து
நான்காம்நாள் சுக்ர வாரம்
உளதூய அடியரன்பர் பலரும்உயர்
அன்போடும் ஒப்பில் வெள்ளி
ஒளிசால்நற் குடங்களில்நீர் மங்கலவாத்
தியங்களுடன் கொண்டு வந்தார்
உளமார்பே ரார்வமுடன் மணம்மிகுந்த
உயர்பொருள்கள் அதிற்க லந்தார். 911

திருமஞ்ச னப்பொருள்கள் பலவும்அள
வின்றிநனி திரண்ட தங்கண்
பெருமகிழ்வி னோடுகடைக் காரரெலாம்
பலபொருளும் சமர்ப்பித் தார்கள்
இருமைநலங் களும்அருளும் குருமணியை
எழிலார்நன் மேடை நாப்பண்
மருவுமொரா சனத்தின்கண் மங்கலவாத்
தியம்ஒலிக்க அமர்த்தி னார்கள். 912

தேங்காயின் நறுஞ்சாந்தும் பால்தயிரும்
செழுந்தேனும் நனிக னிந்த
பாங்கார்செங் கனிச்சாறும் பஞ்சாமிர்
தக்குழம்பும் கருப்பஞ் சாறும்
நீங்காநன் மணமிகுசந் தனம்பனிநீர்
திருநீறும் நேயத் தோடே
ஓங்காரம் ஒலித்தும்குரு நாதாஎன்
றொலித்தும்அபி டேகம் செய்தார், 913

ஒவில்பல பொருள்களும்கொண் டடியார்கள்
ஒப்பில்அபி டேகம் செய்ய
மேவுமொரு கற்சிலைபோல் மேனியரு
ளெழில்வீச விமல மூர்த்தி
தேவர்குழு முனிவர்குழு போற்றுதவத்
திருவுருவாய்த் திகழ்ந்திட் டார்கள்
யாவரும்கண் டதிசயித்து நிறைதவத்தின்
பெருஞ்சிறப்பை ஏத்தி னார்கள். 914

குருநாதர் எழுந்துதிரு மேனியினைத்
துடைத்துக்கொண் டினித மர்ந்தார்
மருவார்பன் மலர்மாலை சூட்டியன்பர்
மாண்பொடலங் காரம் செய்தார்
பரிவோடும் பலகனியும் சுவைமிகுந்த
திருவமுதும் படைத்திட் டார்கள்
திருவார்ஆ ராதனைகள் பலபுரிந்து
போற்றிவலம் செய்தின் புற்றார். 915

வேறு

பொன்பூத்த புகழொளியைப்பு ண்ணியம்செய் புண்ணியத்தை
அன்பூற்றைப் பெருக்கவரும் அருளமுதப் பெருங்கடலை
மின்பூத்த கருணையொளி மிகுஞானப் பருதியினை
இன்பூட்டும் குருமணியை இனிதிறைஞ்சி யேத்தினரால். 916

செந்தழலைக் கோடுசமைத்த தேனத்திகழும் தேசினனை
அந்தம்நடு முதல்எவர்க்கும் அறிவரிய திறத்தினனை
முந்தைவினை முடிச்சறுத்து முழுநலம்கூட் டருட்குருவை
சந்தமுறப் பணிந்திறைஞ்சித் தாண்மலர்தம் முடிக்கணிந்தார். 917

அண்ணல்திருக் கண்மலர்ந்தின் னருளாசி இனிதருளத்
திண்ணியசீர் அன்பரெலாம் செப்பரும்பே ரின்பமுற்றார்
அண்ணல்இரு டிப்பட்டிச் சாமிக்கர ஹரவென்றார்
விண்ணவர்கள் மலர்மாரி மிகச்சொரிந்து குதுகலித்தார். 918

அருட்குருவும் அடியவரும் அன்பர்களும் அமுதுசெயப்
பொருள்பலவும் கொடுபிரிய முடன்சமைத்த திருவமுதை
மருள்விலக்கு மனதில்மிகு மகிழ்வுடனும் இனிதருத்நித்
தெருள்மிகுந்த திறத்தினராய் அவ்வூரார் திகழ்ந்
தனரால். 919

மாலையினிற் குருமணியை மணிமுத்துச் சிவிகையினில்
ஏலஇனி தெழுந்தருளு வித்துமலர் மாலைகளால்
சாலஎழி லோடும்நனி அலங்கரித்துத் தகும்இயங்கள்
கோலவொளித் தீபங்கள் குலவவிழாச் செய்தார்கள். 920

ஈண்டும்ஒளிக் கர்ப்பூர ஜோதிபலர் ஏந்திவர
ஆண்டவர்தம் அருட்பாடல் பாடிஅடி யவர்சூழப்
பூண்டகுபே ரன்போடும் புறத்துளஊ ரார்பலரும்
வேண்டியநற் பயன்பெறலாம் எனவிரும்பி அவண்
திரண்டார். 921

அருட்கடலைக் கடைந்தெடுத்த அற்புதமாம் திருவமுதை
மருளனைத்தும் அகற்றிவழி காட்டவந்த வான்பொருளை
இருள்விலக்கி இதயமிசை இன்பவிளக் கேற்றரசை
தெருள்விளக்கும் குருமணியைச் சிவிகையிற்கண்
டிறைஞ்சினரால். 922

அருமறையின் தனிமுடிவை ஆகமத்தின் ஒண்பொருளைத்
திருமுறைகள் பலஇனிது செப்பிவழி படும்இறையைக்
கருமுறையைத் தவிர்த்திணையில் கதியருளும் கற்பகத்தை
ஒருமுறைநாம் காணுதற்கிங் குஞற்றுதவம்
என்கொலென்றார். 923

அற்புதமாம் சிவிகையினில் அமர்ந்துதிரு வுலாப்போந்த
சிற்பரமாம் ஜோதியினைத் தேவர்குழாம் திரண்டுகண்டு
கற்பகநன் மலர்சொரிந்து கரங்கள்குவித் துத்துதித்துப்
பொற்புறுநும் சட்டநெறி புவியில்செழித் தொளிர்க
என்றார். 924

எனக்கெதுவும் வேண்டாமென் றினிதேவெள் ளாடையுடன்
தனித்துறவி யாப்போந்த தவத்திருவி னார்க்கிந்தப்
புனிதவிழா வாற்பயனென் றேனுமிலை யென்றாலும்
இனிதவ்விழாக் கண்டுநினைந் தின்புறுவோர் பலரம்மா. 925

ஒப்புயர்வில் அந்தவிழாக் கண்டவர்கள் உளமுருகி
இப்பொழுதும் அதனைநினைந் திருவிழிநீர் பெருகஉரைத்து
அப்பெரும்பே றன்றெய்தா தவரையுருக் கிடுவரெனில்
இப்படியின் பெய்துதற்கென் றேயண்ணல் இசைந்
தனரோ. 926

வேறு

இருவிழிகள் பெற்றபெரும் பேற்றைஅனை
வோரும்இனி தெய்தி னார்கள்
இருகரமும் குவித்துச்சிரம் தாழ்த்திமனம்
குவிந்தன்போ டிறைஞ்சி னார்கள்
பெருகுறுதம் குடும்பநிலை களைமறந்தின்
பப்பெருக்கில் மூழ்கி னார்கள்
கருவுறுதல் தவிர்ந்தஅவர்க் கண்ணல்அருள்
பெருநிலையைக் கணிப்பார் ஆரே! 927

குருமணிக்கர்ப் பணமாக வேண்டுமெனக்
கூடுதவம் முன்செய் துள்ள
பொருளனைத்தும் அன்றந்தப் புனிதவிழா
விற்கர்ப்பண மாயிற்[று] இந்தப்
பெருநிலத்தில் மலர்பூவுள் தவமுளவே
பெருமான்பூ சனைக்குச் செல்லும்;
பொருளெதையும் முதல்இறைவர்க் களித்துப்பின்
நுகர்ந்தார்கள் புனித ரெல்லாம். 928

அதனால்தான் நோயறியா நல்வாழ்வும்
அருகலிலாத் திருவும் பெற்றுச்
சதமான ஆயுளுடன் தக்கார்கள்
போற்றநனி திகழ்ந்திட் டார்கள்
மிதமான உணவுறக்கம் போகமுடன்
மெய்ப்பொருளில் நாட்டம் மிக்குப்
பதமாக வாழ்ந்துபர மானந்தப்
பெருநிலையிற் பிறங்கி னார்கள். 929

மீண்டுமந்த உயர்ந்தநிலை மேதினியில்
எய்துகென வேண்டி நிற்போம்
ஈண்டுதவப் பெருநிதியும் உள்ளன்பும்
வளர்கஎன இறைஞ்சி நிற்போம்
யாண்டும்உயர் திருவருளின் மணம்கமழ
வேண்டுமென ஏத்தி நிற்போம்
தூண்டரிய டாஞான ஜோதியொளி
பெருகுகெனத் துதிசெய் வோமே. 930

ஆங்காங்கும் அடியார்கள் தத்தமதில்
லங்களின்முன் அழகுசான்ற
பாங்கார்நன் மலர்ப்பந்தர் அமைத்துமண்ட
கப்படிகள் பலசெய் தார்கள்
ஓங்கார உருவமுடைக் குருமணிக்கு
நைவேத்யம் உவந்து செய்தே
தேங்காய்நற் கனிகள்திரு வமுதெவர்க்கும்
வழங்கிமகிழ் சிறந்திட் டார்கள். 931

நடமாடும் கோயிலென விளங்கண்ணல்
திருத்தோற்றம் நன்று கண்டே
உடலாட உளமாட உள்ளன்பி
னுலுருகி உரைக ளேதும்
திடமாக வாராமல் திணறஉயர்
பரவசத்தில் திளைத்திட் டார்கள்
புடமார்பொன் னெனப்பொலிந்து புனிதமல
ரடிநினைவிற் பொருந்தி னார்கள். 932

மேனியெங்கும் புளகமுற விழியிரண்டும்
நீர்பொழிய மெய்ம்மை சான்ற
ஞானகுரு நாதர்அருள் திருநாமம்
நாநவில ஞால மீதில்
ஊனமறத் தவம்வளர மெய்ஞ்ஞான
வொளிபெருக வேண்டி நிற்பார்
மோனகுரு கடைக்கணருள் எய்தத்திரு
முகம்நோக்கி நிற்பார் பல்லோர். 933

இந்தநல்வி ழாக்காணும் பேறுநமக்
 கெய்திற்றே யென்று தம்முள்
அந்தமிலா மகிழ்வெய்தி அருளுணர்வில்
 நனிமூழ்கி நின்றார் பல்லோர்
இந்தநல்லூ ரினிலிதுவே இறுதிவிழா
 என்றறிந்தோ இனிய தென்றல்
சந்தமுற வீசியண்ணல் தம்திருமே
 னியிற்படிந்தின் புற்ற தன்றே. 934

அனைவரும்நன் றண்ணல்உலாக் கண்டுகளிக்
 கின்றனரே, அடியேன் றென்னல்
நனிதிருமஞ் சனம்கண்டேன், ஞானவுலாக்
 கண்டறியேன், காண்பே னென்னக்
கனைகடலி னின்றெணில்தன் கதிர்காட்டிக்
 குணதிசையிற் கதிரோன் சார
வினைகடத்தும் விமலர் அமர் சிவிகைபுறப்
 பட்டஇடம் சேர்ந்த தம்மா. 935

இத்திருவி ழாப்பெருமை இயம்பிடற்கா
 யிரமாம்நல் லெழிலார் நாவும்
பத்தியும்கொண் டொளிர்ஆதி சேடனுக்கும்
 அரியதெனின், பாரில் யாரே
மெத்தவிரி வாயுரைக்க வல்லார்கள்?
 மேலிலந்தைக் குளத்து மக்கள்
இத்தரையிற் புரிதவத்தைக் கணக்கிடுதற்
 கெவராலும் இயலா தன்றோ? 936

தண்ணீர் விளக்கெரித்தமை

அண்ணல்பல நாள்பின்னர் அன்போடும்
 தங்கியிருந் திட்டார் அங்கண்
அண்ணலிடம் பக்திமிகும் அவ்வீட்டார்
 ஒருநாளில் வெளியூ ருக்கு
நண்ணினர்;மா லைவரலா மென்றநினை
 வோடுமந்த நாளில் மீள
எண்ணினர்;அவ் வாறுதிரும் பிட இயலாச்
 சூழ்நிலையங் கிருந்த தன்றே. 937

அருளண்ணற் காவனஎல் லாம்அன்பி
னேடினிதே அமைத்துச் சென்றார்
பொருள்பலவும் பாங்குறவே வைத்துவிட்டுப்
புனிதமனத் தோடும் சென்றார்
இருள்வருமுன் திரும்பிடுவோம் என்றஎண்ணத்
தோடும்அவர் எல்லாம் சென்றார்
திருவிளக்குக் கெண்ணெயினை வைப்பதற்கு
மறந்தவராய்ச் சென்றிட் டாரால். 938

அன்பர்அடி யவர்பலரும் அண்ணல்அரு
கமர்ந்[து] அவர்பே ரருளாற் கூறும்
பொன்புரைநல் லமுதவுரை கேட்டுமன
முருகிமிகு புனித முற்றார்
இன்பவொளிக் கதிரவனும் மேற்றிசையில்
எய்தஇரு ஞால மீதில்
அன்பறியார் உளமனைய ஆரிருள்சூழ்ந்
திட்டதெங்கும் அஞ்ஞா னம்போல். 939

அருகிருந்த செம்பிலுள தண்ணீரைத்
திருவிளக்கில் அண்ணல் ஊற்றத்
திருவிளக்கும் சுடர்விட்டுப் பெருகொளியொ
டினிதருளால் திகழ்ந்த தங்கண்
உருகுமன முடையடியர் பின்னருணர்ந்
தண்ணலருள் போற்றி னார்கள்
கருவிலக்கித் திருவிளக்கும் குருபரனார்
கருணைமிகப் புரிந்தார் யார்க்கும். 940

மெய்ஞ்ஞான ஜோதியெனும் விமலகுரு
நாதர்அவண் மேவுங் காலை
அஞ்ஞானம் போன்றஇருள் அங்கணுகற்
கியன்றிடுமோ? அகில மீதில்
அஞ்ஞான்றங் கணுகிருளை அருள்தண்ணீர்
விளக்கேற்றி அன்பர் உள்ளத்[து]
எஞ்ஞான்றும் அஞ்ஞான இருளெய்தா
வணம்கருணை புரிந்தார் அண்ணல். 941

அடியவர்க்கும் அன்பருக்கும் அற்புதமார்
அருளுரைகள் உரைத்தார் அண்ணல்
முடிவில்அரு ளிசையோடும் அருட்பாடல்
பலபாடி முடித்தார் அண்ணல்
அடியவரும் அன்பர்களும் அருள்நிட்டை
யமர்ந்துபினர் உறங்கி னார்கள்
விடியும்வரை அருளண்ணல் விழித்தபடி
யெழுதிக்கொண் டிருந்திட் டார்கள். 942

சென்றஇடத் தினில்நேர மாகியதால்
திரும்பிவர இயலா ராகி
நன்றுவிடி யலில்எழுந்து வந்தபிள்ளை
வீட்டினர்நாம் திருவி ளக்குக்
கென்றுள்என் ணெயைஎடுத்து வைக்காமற்
சென்றேமே என்று நொந்தார்
பொன்றலில்நல் விளக்கொளியில் புனிதஅண்ணல்
எழுதினரென் றுரைத்தார் அன்பர். 943

தெருளார்நல் லடியரண்ணல் **தண்ணீரால்**
**விளக்கெரித்த** செயலைச் சொல்ல
அருள்ஞானக் கோமகனார்க் கரியசெயல்
ஏதுமிலை யெனவு ணர்ந்தார்
மருளார்ந்த மனத்தொடெண்ணெய் வைக்காத
பிழையைப்பொறுத் தருள்வீ ரென்ன
மருளார்ந்த மனம்திருத்த வந்தஅண்ணல்
பதம்பணிந்து துதித்திட் டாரால். 944

### குருநாதர் துதி

எக்கணமும் எமைப்பிரியா திருக்கும்உயர் துணையே
எப்பிழைகள் புரிந்தாலும் பொறுத்தருளும் இறையே
மக்களையெல் லாம்அடியர் ஆக்கவிழை அரசே
மன்னுதிரு வருள்நெறியை மாநிலத்தில் அருளும்
சற்குருவே சாந்தமெனும் திருவமுதை வழங்கித்
தயவுடனே காத்தருள்செய் சன்மார்க்கச் சுடரே
சிக்கனைத்தும் தவிர்த்தெமைநின் திருவடிக்கா ளாக்கித்
திருவருளை அருத்திடுவாய் தேசிகமா மணியே. 945

செந்தழலும் பைம்பொன்னும் சேர்ந்ததெனத் திகழும்
திருவடித்தா மரையழகைச் சிறியேம்கண் டுவக்க
வந்தருள்வாய் எனத்தினமும் வாயாரப் பாடும்
வழியடியார் கண்காண வந்தருளும் குருவே
பந்தமெலாம் வெந்தொழியப் பரிந்தருள்செய் குருவே
பரமபதச் சுகம்வழங்கிப் பாலனம்செய் குருவே
அந்தம்நடு வாதியெலாம் அருள்மயமாய் விளங்கும்
ஆனந்தத் திருவுருவே ஆதிபரம் பொருளே 946

பாதாதி கேசம்வரை பரந்தஅருட் கருணைப்
பாங்குநிறை வடிவினனே பரமபவித் திரனே
வேதாதி நூலனைத்தும் விளம்புமுயர் சாரம்
விழுமியநற் சட்டமென வியன்புவிக்கீந் தருளி
ஓதாதிங் குழல்பவரும் திருந்தமிக எளிதாய்
உணர்த்திநன்று பழகவைத்தன் பூட்டியருள் சுரப்போய்
சூதார்ந்த எம்முளமும் திருந்திநின்பொற் பாதத்
தூமலரின் தேனருந்திச் சுகிக்கஇனி தருளே. 947

சத்தாகிச் சித்தாகி ஆனந்த மயமாய்த்
ததும்பிஎங்கும் கரைகடந்து நிறைந்தஅருட் கடலே
வித்தாகி முளையாகிப் பயிராகிஞான
விளைவையெலாம் தரப்புவியில் மேவுகுரு வடிவே
முத்தாகி முழுவயிர மணியாகித் தூய
மோனபர மானந்த ஆபரண மாகிப்
புத்தார்வ மோடுநிட்டை பூண்டமரும் அடியார்
புனிதமனத் தினிதொளிரும் பூரணப்பே
ரொளியே. 948

பண்ணனைத்தும் செறிந்ததிரு மறையனைத்தும் கூறும்
பயனுன திருநெறியைப் பாரினுக்கு வழங்கிக்
கண்ணனைத்தும் காணஅருட் காட்சிகொடுத் தருளும்
கற்பகமே சிற்பரமே கருணைவிளை நிலமே
எண்ணனைத்தும் எழுத்தனைத்தும் காணவொணுத் தூய
இதயபரி பாகமளித் தின்னடியார் குழுவைக்
கண்ணெனக்காத் தருள்புரியும் காவலனே ஞானக்
கனற்பிழம்பே நின்கருணைக் கழல்நிழலீந்
தருளே. 949

வேறு

என்றுபல வாறுக ஏத்தியினி திறைஞ்சிடலும்
நன்றினிய புன்முறுவல் பூத்தருளி ஞானவொளிக்
குன்றனைய குருபரனார் அருளாசி கூறினர்அப்
பொன்றலில்சீர் அடியர்திரு வருள்பெற்றுப் பொலிந்
தனரால். 950

வாணியம்பாடி - (உத்ஸவம்)

தூயதமிழ் நாட்டில்அருட் சுடர்பரப்பி அருட்பாடல்
ஏயஇசை யுடன்பாடி இன்னுயிரின் திரளையெலாம்
மேயதிரு வருட்சட்ட மெய்ந்நெறிக்கண் ஈர்த்தருளி
ஆயஅரு ளரசாட்சி புரிந்தண்ணல் பொலிந்தனரால். 951

உடையவன்றன் அருட்குறிப்பை உணர்ந்தினிது திட்டமிட்டுப்
புடவிமிசை செயல்புரிதல் போன்றுபல ஊர்களிலே
அடிக்கடிசென் றடியார்கட் கருள்மிகப்பா லித்தார்கள்
வடவாற்காட் டினிலமைவா ணியம்பாடி
அதிலொன்றும். 952

திண்டிவனம் எனும்பதிக்கவ் வூர்அன்பர் சென்றதையும்
பண்டைவினைப் பயனால்நற் சட்டநெறி யேற்றதையும்
கண்டவர்கள் பற்பலர்கைக் கொண்டுநலம் பெற்றதையும்
அண்டர்புகழ் அண்ணல்அருள் புரிந்ததையும் முனர்
கண்டோம். 953

அடியருடன் காசிநகர்க் கேகிஅண்ணல் திரும்புங்கால்
அடியவர்கட் கருள்சுரக்க அவ்வூர்க்குச் சென்றதையும்
முடிவில்அருள் அடியவர்க்கு முன்சுரந்து காத்ததையும்
அடியவர்செந் நெறிபேணி அமைவதையும் முனர்
கண்டோம். 954

அண்ணல்பல முறைஅவ்வூர்க் கன்போடும் எழுந்தருளி
எண்ணில்பல அற்புதங்கள் இன்னருளால் இயற்றியுளார்
புண்ணியப்பாண் டியநாட்டிற் போந்தஇவர் தம்நாடு
நண்ணியருள் புரிபெருமை எண்ணிஅன்பர் உருகி
நிற்பார். 955

போக்குவர வுக்கான வசதிகுறை வாயிருந்தும்
காக்குமுயர் கடமைதவ ருதஅருட் குருபரனுர்
ஆக்குதவத் தாலிளைத்த திருமேனி யுடன்அருளால்
மேற்கொள்அறு பதுவயதில் மிக்கடியார்க் கருள்
புரிவார். 956

மக்களெலாம் திருவருளை மாந்திமகிழ் வுறநாடும்
தக்கஉயர் நாட்டத்தால் தன்நலமே நோக்காமல்
எக்கணத்தும் இறையருளை எவ்வுயிர்க்கும் பாலிக்கும்
மிக்கஉயர் பேரன்பை விளம்புதற்கு மொழியுளதோ? 957

வாணிகத்தில் சிறந்திலங்கும் அவ்வூர்வாழ் மக்கள்அருள்
வாணிகத்தி லும்சிறந்து வயங்கியதால் வள்ளலின்பால்
மாணுறுமன் புடையபல வண் குடும்பம் அவண்திகழ
பூணருளார் சம்பங்கி செட்டியார் பொலிந்தனரால் 958

செல்வச்சிறப் புடையந்தக் குடும்பத்தில் தேசிகனுர்
பல்வளமும் தந்தினருள் பாலிப்ப தன்றிஉயர்
நல்லநிகழ்ச் சிகள்அருளி ஞானவளர்ச் சியும்அளித்தார்
தொல்வினைகள் தவிர்ந்தவர்கள் தூய்மைமிகப்
பெற்றுெளிர்ந்தார். 959

ஓருருக் கண்ணலெழுந் தருளவுளார் என்பதனைச்
சீரார்பல் சூசகங்க ளால்அடியர் தெரிந்துகொள்வார்
ஏரார்நற் செட்டியார் இலத்தரசி யாருமிந்தப்
பாராரும் நிகழ்ச்சி யொன்ருல் பயனடைந்து வரலானுர். 960

பூசையறை யிற்பொலியும் புனிதகுரு வுருவப்படம்
ஆசறுமா டத்திருந்து கீழேவந் தமைந்து நிற்கும்
தேசருள்இந் நிகழ்ச்சிகண்டத் திருக்குடும்பத் தார்மகிழ்ந்து
தேசிகனுர் எழுந்தருள்வார் எனத்தெரிந்து
மனம்களிப்பார். 961

மற்றஅடி யார்களுக்கும் மாண்புறும்இச் செய்தியினைச்
சொற்றிடுவர் யாருமகிழ்ந் தூர்தூய்மை செய்திடுவார்
முற்றுமன்பொ டாட்கொண்டு முழுநலங்கள் வழங்கண்ணல்
உற்றிடுநாள் எந்நாளென் றுயரன்பொ
டெதிர்பார்ப்பார். 962

ஒருநாள்அவ் வாறண்ணல் உருவப்படம் கீழிறங்கித்
தரைமீதில் அமைந்திருக்கச் செட்டியார் தம்மனைவி
பெருகார்வத் தொடும்கண்டு பெருமானுர் வருவரெனப்
பரிவோடும் சீரடியார் பலர்க்கும்தெரி வித்தனரால். 963

அந்தவுரை கேட்டதுமே அவ்வூர்வாழ் அடியவரெலாம்
சிந்தைநிறை மகிழ்வினராய்த் தெருக்களெலாம் எழில் செய்தார்
சுந்தரமாம் தோரணங்கள் தூக்கிநகர் அலங்கரித்தார்
சந்தனம்கற் கண்டுகனி தண்மலர்கள் சேகரித்தார். 964

துந்துபியாண் டினில்ஆடித் தூமதியில் இவ்வாறு
சந்தமுற நிகழ்ந்திடவும் தண்ணருளால் அன்பர்களின்
பந்தவினைப் பற்றறுத்துப் பரநலங்கள் பாலிக்கும்
அந்தமில்சீர் அருளண்ணல் அவ்வூருக் கெழுந்தருள 965

பார்த்தவர்தம் பசிதவிர்க்கும் பாங்குமிகு பரஞ்சுடரை
தீர்த்தம்திரு நீறருளித் தீவினைகள் தவிர்குருவை
கூர்த்தமதி யருளிறையைக் குறைவிலருள் முழுமதியை
ஆர்த்திநிறை அடியவர்கட் கருந்துணையை
எதிர்கொண்டார். 966

உளமுருகி அடிபணிந்த உயரன்பர் அடியவரை
அளவில்பெருங் கருணையொடும் அண்ணல்இனி தேநோக்கி
இளமுறுவல் பூத்தருளி இன்னருளா சிகள்வழங்கி
அளவிலன்பர் புடைசூழ அந்நகருட் புகுந்தனரால். 967

அற்புதமார் இயம்ஒலிப்ப அடியர்அர ஹரவென்னும்
சொற்பெருக்கி னுல்எழுப்பும் தூயவொலி வான்நிறைய
கற்புரைஉள் ளமும்உருகக் கண்டவர்கள் தொழுதிறைஞ்ச
சிற்பரவி நாயகர்தம் திருக்கோயில் சென்றமர்ந்தார். 968

அண்ணல்குரு நாதரையும் ஐங்கரக் கணேசரையும்
திண்ணியபே ரன்பினெடும் சீரடியார் வலம்புரிந்து
புண்ணியப்பூ மலரடிகள் போற்றியரு ளாசிபெற்ருர்
எண்ணியவா றருளண்ணல் இனியஅரு ளுரைநவின்ருர். 969

என்றுமிலாப் பொலிவோடும் இனியதிரு முகம்விளங்க
ஒன்றுதவத் தின்முதிர்ச்சி எனஊரார் நினைத்திருந்தார்
நன்றவர்நம் கண்காண இனிவாரார் எனும் உண்மை
அன்றவர்கள் அறிவாரோ? அருளண்ணல் தாமறிவார். 970

நயமொடுதம் மினுமினிய நற்குரலால் ஞானமறை
இயம்புமிவர் இனிவாரார் என்னவுணர்ந் திடுகுயில்கள்
உயும்நெறியை இதமாக உயிர்களுக்கின் னுபதேசம்
செயுமிவரைப் போற்றிடுவோம் என்றுதுதி
செய்தனவால் 971

செம்மைமிகும் இன்மொழிகள் தம்மினம்போல் செழும் புவிக்கு
நன்மைசெய உபதேசம் நவின்றருளும் ஞானியிவர்
சின்மயமாம் இம்மேனி யுடன்இனிவா ரார்என்ன
நன்மனத்தில் உணர்கிளிகள் நன்றுதொழு
தேத்தினவால். 972

இம்முறையில் அருளண்ணல் சுற்றுப்புற ஊரிலுள
செம்மைமிகும் அடியவர்க்குச் செய்தியனுப் பிடுகென்றார்
நன்மைமிகும் அலசந்தா புரம்எளவா ளப்பாக்கம்
புன்மைதவிர் வழித்துணையாங் குப்பம் ஆம்
பூர்போன்ற 973

ஊர்களில்எல் லாம்உறையும் உயர்அடியார் கட்கெல்லாம்
சீர்திகழ்இச் செய்தியினைத் தெரிவித்தார்; அவர்களெலாம்
பார்திகழப் போந்தருளும் பரம்பொருளைப் பார்த்திறைஞ்சி
ஏர்திகழ்நல் வளங்களெலாம் எய்தவுன்னி அவண்
சூழ்ந்தார். 974

அடியவரில் பலர்சிறந்த வணிகர்களாய் அமைந்ததனுல்
புடையுளபல் வணிகர்களும் புனிதமிகு பக்தர்களும்
இடர்தவிர்ந்து நலம்பலவும் எய்தவிழை கின்றவரும்
உடையவன்சே வடியடைய வேண்டுநரும்
உவந்தடைந்தார். 975

தேவரெலாம் தொழுதேத்தும் சீர்மிகுநல் தேசிகனை
பாவமெலாம் தீர்த்தருளிப் பலநலமும் வழங்கிறையை
ஓவிலரு ளொளிக்கதிரை உவமையிலாத் திருவமுதை
காவலெனத் திகழ்மணியைக் கண்டுபணிந் திறைஞ்சினரால். 976

அவர்களுளும் ஒருசிலருக் கையம்சில இருந்ததனல்
பவமறுக்கப் போந்தகுரு பரமணியை நோக்கியெங்கும்
தவவொளியைப் பெருக்கிடும்நும் தண்ணருளைப் போற்றுகின்ருேம்
இவண்ஐமதை யம்தீர்த்தின் னருள்புரிவீர் என்ருர்கள். 977

வேறு

மருந்தருந்த வேண்டாம்நற் றிருநீறே
போதுமென அருளு கின்றீர்
மருந்துசெயும் செயல்அனைத்தும் திருநீறு
மன்னுலகிற் செயுமோ? சொல்வீர்
மருந்தைவிடத் திருநீறு சிறந்ததென
அருளுகின்றீர்; அஃதெவ் வாருே?
மருந்துபய னற்றதெனின் சித்தரெலாம்
மருந்துகள்ஏன் செய்தார்? என்ருர். 978

அடியவர்கள் செவியெனும்வாய்க் கருளுரையாம்
அமுதருளிப் பேணும் அண்ணல்
அடியவர்க்கும் அன்பர்கட்கும் ஐயமகற்
றிப்புரத்தல் கடனுக் கொண்டு
படியில்உலாப் போந்தருளும் பண்பாளர்
அவர்களுரை பரிவோ டேற்று
நெடிதுமகிழ் வோடுமதற் குரியவிடை
நிகழ்த்திடுவோம் கேட்பீர் என்ருர். 979

மெதுவாக எழுந்துநின்று கைகட்டி
வாய்புதைத்து விளக்கம் கேட்டோர்
இதமாக அண்ணலுரைத் திடும்விடையை
இனிதுணர இசைந்த மர்ந்தார்
கதையாக அமைந்தபல காசினியில்
நடந்த உண்மை வரலா ருகும்
அதில்பலதத் துவங்கள்உள அதைஉணரின்
நலமாம்என் றுரைத்தார் அண்ணல். 980

ஆதிமுதல் திருநீற்றின் மகிமையுணர்ந்
தான்ருேர்கள் போற்றி யுள்ளார்
ஏதமறுத் தனைத்துலகில் நலமுறச்செய்
வதுதிருநீ றென்னல் வேண்டும்

கோதில்அருட் சம்பந்தர் பாண்டியன்நோய்
திருநீறு கொண்டே தீர்த்தார்
நாதனருள் நீற்றால்அப் பூதிமகன்
எழப்புரிந்தார் நாவின் வேந்தர். 981

திருநீற்றால் தீராத பிணியில்லை
யெனத்திடமாய்ச் செப்ப லாகும்
திருநீற்றால் தீராத வினையில்லை
யெனப் பெரியோர் செப்பியுள்ளார்
திருநீற்றால் ஆகாத செயல்இல்லை
எனநீற்றைப் போற்று வோர்க்குத்
திருநீற்றால் எய்தாத நலமில்லை
யெனஉணர்வீர் என்றார் அண்ணல். 982

பொருந்தும்வினைப் போகமதே தேகமெனப்
புண்ணியர்கள் புகன்றுள் ளார்கள்
பொருந்துறுதி வினைநோயாய்ப் போந்தால்அஃ
தனுபவித்துப் போக்கல் வேண்டும்
மருந்தருந்திப் பிணிதவிர்க்க முயன்றால்தீ
வினைமாளா திருந்து நீளும்
திருந்துமுளத் தொடுதீர்த்தம் திருநீறேற்
றால்வினைகள் தீர்ந்து போகும். 983

மருந்தருந்தின் பிணிதீரும் என்றுமருத்
துவர்பலரும் கூற லாகும்
மருந்தருந்தின் புதுப்பிணியும் வரல்கூடும்
என்பதனு பவத்திற் காண்போர்
மருந்தைவிடத் திருநீறே சிறந்ததென
மனதாரத் தினமும் சொல்வார்
மருந்துபிறப் பகற்றிடுமோ? மன்னுமுத்தி
யளித்திடுமோ? என்றார் அண்ணல். 984

திருநீறே திருவருளும் கலையருளும்
தேசருளி மாசு நீக்கும்
திருநீறே பிணிநீக்கும் வினைநீக்கும்
தீயபவ நோயும் நீக்கும்

திருநீறே உடல்நலமும் உளநலமும்
உயிர்நலமும் செறியக் கூட்டும்
திருநீறே குருஅருளும் திருவருளும்
வழங்கிமுத்தி சேர்க்கும் என்றார். 985

திருநீற்றின் சிறப்பனைத்தும் இனிதுணர்ந்து
திருவாளர் பலரும் சொற்றார்
திருநீற்றின் சிறப்பனைத்தும் அனுபவத்திற்
சீரடியார் உணர லாகும்
திருநீற்றைப் பயன்படுத்தித் தீவினைகள்
தீர்ந்தின்பம் பெறுவீர் என்றார்;
திருநீற்றின் சிறப்பையுணர்ந் தனைவோரும்
சிந்தைமகிழ் வெய்தி நின்றார். 986

உயிர்களெலாம் மிகவுறுதி யாய்ப்பற்ற
வேண்டியது திருநீ றென்னும்
அயர்விலுயர் உண்மையினை அடியரன்பர்
அனைவோரும் அகத்துட் கொண்டார்
உயர்வருள்சற் குருவாழ்க திருநீற்றின்
ஒளிவளர்க எனப்போற் றிட்டார்
துயர்தவிர் பூரணர்வாழ்க தூநீறு
பொலிகஎனச் சொலித்து தித்தார். 987

அடியர்ஒரு வரைஅண்ணல் அழைத்துவிபூ
தியைஎவர்க்கும் வழங்கு கென்றார்
உடையவன்தண் ணருள்போற்றி அவ்வடியார்
ஒளித்திருநீ றெவர்க்கு மீந்தார்
அடியவரும் அன்பர்களும் ஏற்றணிந்தும்
உட்கொண்டும் அகம்க ளித்தார்
கொடியதொரு வயிற்றுவலி உடையவரும்
நீறணிந்துட் கொண்டு நின்றார். 988

குருபரரைத் தரிசித்துக் கொண்டபினர்
அவர்இல்லம் குறுகித் தன்னை
மருவிநனி வாட்டிய வயிற்றுவலி
வந்தவழி தெரியா வண்ணம்

பெருவியப்பெய் தும்படிநீங் கியதறிந்து
பெருமான்தன் னருளைப் போற்றி
உருகுமனத் தோடன்பு மிக்கவராய்
உண்டிரவில் உறக்கம் கொண்டார். 989

மறுநாட்கா லைவிழித்து நீராடி
நீறணிந்து மாண்பு சான்ற
நெறியாவர்க் கும்வழங்கிப் பேணியருள்
நிமலகுரு பரரைக் கண்டு
பொறியோடு புலன்யாவும் ஒடுங்கிநின்று
பாதமலர் போற்றி செய்து
குறியோடு குணம்பலவும் கடந்தொளிர்கோ
மானேயென் றுருகி நின்றார். 990

மும்முறைநல் வலம்புரிந்தார் முளரிமலர்ப்
பதம்பணிந்தார் மொழிதற் கொண்ணுச்
செம்மைமிகு திருவருளாற் பிணிநீங்கித்
தேகநலம் எய்திற் றென்றும்
மம்மர்அற உண்டுறங்கி மனநலமும்
பெற்றுய்ந்தேன் என்றும் கூறிச்
செம்மலருட் பதம்போற்றிச் சிந்தைமகிழ்
வோடுதுதி செய்ய லானார். 991

குருநாதர் துதி

புத்தகங்கொண் டுணராமற் போதநிறை வதனல்
புகலரிய பலகலையின் சாரமெலாம் உணர்ந்தே
இத்தரையில் அருட்சட்ட நெறியினிது வழங்கி
எவ்வுயிரை யும்புரக்கும் இணையில்அரு ளரசே
பத்தர்களை மணிமணியாத் தேர்ந்தெடுத்து ஞானப்
பக்குவம்சால் கனியளித்திப் பார்முழுதும் சுவைக்க
வைத்தஅருட் குருமணியே வாழ்வளிக்கும் பதியே
வழிகாட்டும் வான்பொருளாய் வந்தருள்தே
சிகனே. 992

அண்டபகி ரண்டமெலாம் ஆக்கியளித் தருள்செய்
அருளிறையே அருமறைக்கா தாரமெனும் பொருளே
புண்டரிகம் போன்றிலங்குன் பொற்பதங்கள் நாளும்
போற்றியருள் பெறவறியாப் புல்லனெனை யீர்த்தே

விண்டுரைக்க வொண்ணுப்பே ரருளொடினி திணைத்து
வேதமுத லினைவழங்கும் விழுமியசற் குருவே
எண்டிசழ்நல் லடியர்குழாம் இறைஞ்சி யினிதேத்த
இருடியர்பட் டிப்பதிவாழ் என்னுயிராம்
பதியே, 993

சத்தியத்திற் சத்தியமே தவம்செய்தவப் பயனே
சத்துவத்துட் சத்துவமே சமயமெலாம் வழுத்தும்
நித்தியமே நின்மலமே நிர்க்குணநிர்ப் பயமே
நிர்மோக நிஷ்கபட நிஷ்களநிச் சயமே
பத்தியமே நல்லடியார் பேணஅருள் புரிந்து
பக்குவம்செய் தாண்டருளும் பரமபவித் திரமே
எத்திசையும் இமையவரும் முனிவரரும் ஏத்த
இருடியர்பட் டிப்பதிவாழ் என்னுயிராம்
பதியே. 994

வேதமெலாம் தொழுதேத்தும் வித்தகச்செம் பொருளே
விழுப்பொருளே முழுப்பொருளே மெய்யறிவாம் பொருளே
பாதமலர் பக்குவம்சால் பக்தர்முடி மீதில்
பதித்தருளிப் பயனருளும் பரஞானச் சுடரே
நாதமுடி மீதில்அருள் நடம்புரி நாயகனே
நவிலரிய எழுதரிய நற்புகழ்சால் அரசே
போதமெனும் அமுதுதவிப் புணர்ந்தருள் பூரணனே
புழுவினிலும் கடையனெனைப் புரந்தருளும்
பதியே. 995

கண்ணிரண்டின் கருமணியே கண்மணிக்குள் ளொளியே
கண்ணிரண்டின் நடுமூன்றும் கண்ணெனும்பே ரொளியே
எண்ணனைத்தும் எழுத்தனைத்தும் என்னவொளிர் இயலே
எழுதரிய சித்திரமே ஏகாந்தச் சுகமே
பண்ணனைத்தும் பாட்டனைத்தும் பாதமலர் நாடிப்
பரவவொளிர் பரம்பொருளே பக்குவம்சால் அடியார்
உண்ணிலவும் உயிர்க்குயிரே ஒப்புயர்வில் பொருளே
யோகாந்தம் போகாந்தம் அனைத்தும்அருள் பதியே. 996

---

வேறு

என்றுள்ளம் மிகஉருகி இனிதுதுதி
பாடிஅண்ணல் இருதாள் ஏத்தி
நன்றிந்த ஞாலமுய்ய ஞானகுரு
பரர்வழங்கும் சட்ட மேற்றார்;
என்றும்மெய் யடியார்கட் கின்துணையாய்
இலகண்ணல் அவருள் ளத்தில்
அன்றென்றி என்றென்றும் அருள்ஞான
நிலையைவளர்த் தருள லானார். 997

கண்டவர்கள் அனைவோரும் கருணாளன்
திருநீறே நோய்க்கெல் லாம்கை
கண்டமருந் தெனக்கூறிக் களித்துகுரு
கருணையினைப் போற்றி செய்தார்
பண்டமெலாம் பரிந்தளித்துப் பரிவொடுபக்
குவம்அருளிப் பேணிக் காக்கும்
கொண்டலெனும் குருபரனார் குறைவிலருட்
பயிர்வளர்த்துக் கொண்டங் குற்றார். 998

அண்ணலுக்குப் பலவூரில் அற்புத
உலாநடந்த செய்தி தன்னைப்
புண்ணியம்சால் அடியார்கள் சொலக்கேட்ட
அடியவர்புண் ணியவு லாவை
நண்ணுமிந்த நன்னகரில் நாம்நடத்த
வேண்டும்என் றவாவி னார்கள்
எண்ணியுள வாறியற்ற அண்ணலிடம்
அனுமதிபெற் றிடுவோம் என்றார். 999

பயமொடும்மெய்ப் பக்தியொடும் பரமகுரு
நாதர்பதம் பணிந்து போற்றி
நயமுறத்தாம் நினைந்தசெயல் மெதுவாக
அடியார்கள் நவின்ற காலை
நியமமுடன் நடமாடும் இத்திருமே
னிக்கிறுதி யாகப் பூமேல்
செயுமொருலா எனவுணர்ந்த செம்மல்தடை
செப்பாமல் இருந்திட் டார்கள். 1000

தடையேதும் செப்பாமல் இருந்ததுவே
சம்மதம்என் றுட்கொண் டன்பர்
அடியார்கள் அனைவோரும் ஆனந்த
மெய்திவிழா நடத்தற் காகப்
படியார்நற் செயல்பலவும் பரிவொடும்மெய்ப்
பக்தியொடும் புரிய லானார்
குடியாய்மெய் யடியருளம் கொண்டமரும்
குழகர்பதம் துணையாக் கொண்டே. 1001

பலவளமும் பல்கியொளிர் நன்னகராம்
எழில்வாணி யம்பா டிக்கண்
இலகுகத லியும்கரும்பும் செந்நெல்லும்
கிழங்குகளும் மிகுதி யாக
நிலவிநனி விளைவருளும்; மக்களுளம்
பக்திவிளை வருளி யோங்கும்
பலபெருஞ்செல் வரும்அன்பு பண்பறங்கள்
போற்றியின்பப் பயன்பெற் றுய்வார். 1002

செல்வர்பலர் நல்லமனம் கொண்டங்குத்
திகழ்ந்ததனுல் செழும்பூ மிக்கண்
நல்வரங்கள் வழங்கியருள் ஞானகுரு
பரர்க்குவிழா நன்றெ டுக்கப்
பல்வகையாம் பொருளும்முறை யொடுதேடிப்
பக்குவமாய்ச் சேர்க்க லானார்
நல்வகையில் அழைப்பச்சிட் டங்குளபல்
லூர்களுக்கும் அனுப்பி வைத்தார். 1003

நாற்சந்தி முச்சந்தி நந்தவனம்
ஆவணம் தடாகம் தோட்டம்
போற்சுற்றி யுள்ளஎல்லா இடத்துமிவ்
விழாபற்றிப் புகன்றின் புற்றூர்
மேற்சொன்ன நல்லவிழா துந்துபிஆ
டியில்இருபத் தேழில் வெள்ளி
ஓச்சுற்ற நல்விரத நாளில்இனி
துளுற்றுவதாய்க் குறித்தி ருந்தார். 1004

அருளண்ணல் வாணியம்பா டிக்குவரு
முனர்பிள்ளையார் குப்பம் சென்றே
அருளன்னை யினைவருமா றுரைத்துவந்தார்
அழைப்பிதழ்அச் சிட்ட பின்னர்
அருட்சக்தி அன்னைக்கும் திருச்சாத்த
னூருக்கும் அனுப்பச் செய்தார்
அருளன்னை முதலானோர் அண்ணல்விழாக்
காண்பதற்குச் செலவி ழைந்தார். 1005

அழைப்பிதழ்கள் அச்சிட்டந் நகரமெங்கும்
அடியார்கள் வினியோ கித்தார்
விழுப்பமிகும் இந்தவிழா வினைக்காண
மக்களெலாம் விழைந்தி ருந்தார்
செழிப்புமிகும் அவ்வூர்க்குச் சுற்றியுள
பலஊரார் திரண்டு வந்தார்
ஒழுக்கமிகும் அவ்வூர்வாழ் அடியரன்பர்
அவர்களைநன் றுபச ரித்தார். 1006

சீரார்நற் றிருச்சாத்த னூர்ச்சின்ன
கம்பத்தம் திகழும் முத்து
நாராய ணப்பெயர்கொள் ரெட்டியார்
அவர்தாய்நற் றங்கை யோடும்
பாரார்வி ழுப்புரம்சென் றங்கிருந்து
புகைவண்டியிற் செல்வ தாக
ஏரார்நல் வண்டியொன் றில் இந்தவிழாக்
காணப்புறப் பட்டுச் சென்றார். 1007

இரவினிற்செல் அந்தவண்டி யினைமறித்துக்
கொள்ளையிட எண்ணிச் சூழும்
திருடர்களைக் கண்டதும்உள் ளிருந்தஅரு
ளன்னைமுத லானோர் இன்பக்
குருபரன்தாள் சிந்தையினிற் கொண்டுதுதித்
தேதொன்றும் கூறா ராக
வருதிருடர் உள்ளேபார்த் திதுகாலி
வண்டியெனக் கூறிச் சென்றார். 1008

அளவில்பல ஆபரணம் அணிந்திருந்தும்
அருளார்சற் குருவின் பாதம்
உளமிசைகொண் டினிதிறைஞ்சி ஒருசொல்லும்
விளம்பாமல் உள்ளி ருந்த
அளவில்புகழ் அருளனையும் மற்றுரும்
குருநாதர் அருளை யுன்னி
உளமகிழ்வு மிக்கடைந்தார் உயரன்பி
னுற்போற்றி இன்பம் கொண்டார். 1009

வாணியம்பா டியைஅடைந்து வள்ளல்குரு
நாதர்இருப் பிடத்திற் சேர்ந்து
மாணுறநல் வலம்புரிந்து வணங்கியிந்தச்
செய்தியினைக் கூறி னார்கள்
ஏணுறநன் றமர்ந்திருந்த அடியவர்இஃ
தறிந்துவியப் பெய்தி னார்கள்
பூணருமெய்ப் புகழ்மிகுசற் குருவருளின்
சிறப்புணர்ந்து போற்றி னார்கள். 1010

பண்ணுருட்டி ஆச்சிமார் களும்செட்டி
நாட்டுறுபல் ஆச்சி மாரும்
எண்ணருபே ரன்புடைய நரசிம்ம
நாயுடுவும் இனிது வந்தார்;
அண்ணல்அடி யவரையெலாம் புளியந்தோப்
புக்கினிதே அழைத்துச் சென்று
வண்ணஎழிற் பந்தரும்நல் வளமிகுபல்
பொருள்களும்காண் பித்தார் நன்றே. 1011

இல்லத்தில் இடம்போதா தென்றெண்ணி
எழிலார்அப் புளியந் தோப்பில்
நல்லமுறை யினிற்பந்தர் அமைத்திருந்தார்
நல்லன்பர் உணவு கொள்ளச்
சொல்லரிய பேரளவிற் பொருள்களெலாம்
குவித்திருந்தார் சுவைசால் நல்லூண்
மல்குபல்லா யிரவருண்ணல் கண்டடியர்
மாமகிழ்வு கொண்டா ரன்றே. 1012

அருளண்ணல் அடியவர்கட் கன்பர்களுக்
கருளுரைகள் இனிதாற் றிட்டார்
பொருள்பொதிந்த அவ்வுரைகள் செவிமடுத்த
மக்கள்மனப் புனிதம் பெற்றார்
இருள்கடிந்தின் னருளமுதம் இனிதருத்தி
உயிர்த்திரளுக் கின்ப மூட்டும்
தெருள்மிகுந்த திருவாளர் மதியமென
அடியர்உடுத் திரளை யொத்தார். 1013

வீதியிரு மருங்கினிலும் வாழையுடன்
வியன்கரும்பு பதித்திட் டார்கள்
ஏதமில்வெண் மணல்பரப்பி இளநீரின்
குலைகள்பல தூக்கி னார்கள்
மாதவிசண் பகம்முல்லை மல்லிகைநன்
மலர்மாலை நாற்றி னார்கள்
போதவிழ்தா மரைமலர்கள் பொருத்தமுற
இனிதமைத்துக் கவின்செய் தார்கள். 1014

அற்புத விழாநாள்வெள் ளிக்கிழமை
அதிகாலை அடியா ரெல்லாம்
பொற்புடன்நீ ராடிஅருள் நீறணிந்து
புனிதகுரு மணியைப் போற்றி
அற்புடன்வ லம்புரிந்து பணிந்தேத்தி
அபிடேகம் செயநற் றீர்த்தம்
நற்பெருவெள் ளிக்குடங்க ளிற்கொணர்ந்தார்
இயங்களெலாம் முழங்க நன்றே. 1015

நமதுசிறப் பினைஉலகுக் குணர்த்தியருள்
புரியவந்த ஞான மூர்த்தி
அமலஒளித் திருமேனி யோடுவிழாக்
கொளல் இதுவே இறுதியாகும்
முமலமொழித் தருள்மோன யோகியெனப்
புவிமாதின் மடியின் கண்ணே
சமயசம ரசமுடிவில் திகழ்ந்துலகுக்
கருள்தருணம் நெருங்கிற் றென்றே, 1016

கங்கைநரு மதைசிந்து காவேரி
துங்கபத்ரை கிருஷ்ண வேணி
துங்கமகா நதியமுனை கோதாவ
ரீகௌதமி தாம்ர வர்ணி
மங்களம்நல் கிடும்சித்ரா நதிவைகை
யாதிபுண்ய நதிகள் யாவும்
எங்குமெப்புண் ணியதலத்தும் உளதீர்த்தம்
யாவுமதில் இயைந்த வம்மா. 1017

பன்னீர் ஏலக்காய் விளாமிச்சி
வேர்முதலாம் பலநற் றூய
நன்னீர்மை சான்றமண மார்பொருள்கள்
அந்நீரில் நனிக லந்தார்
பொன்னேர்செங் கனிகள்தயிர் பால்இளநீர்
ஐயமுதம் பொலிவாய் வைத்தார்
பன்னீர்சந் தனம்கருப்பஞ் சாறுதிரு
நீருதி பரிவால் வைத்தார். 1018

தேசிகரை மேடைநடு எழுந்தருளச்
செய்துநறுந் தேங்காய்ச் சாந்தை
ஆசிலன்பொ டாகமுழு தும்பொலிவித்
தணிவெள்ளிச் செம்பு கள்கொண்[டு]
ஓசையுறக் குருபரர்க் கரோஹரவென்
றொலிமுழக்கி நன்னீ ராட்டி
நேசமுடன் மஞ்சனப் பொருள்களெலாம்
நெறிமுறையொ டபிடே கித்தார். 1019

தெண்ணீர்மை சான்றகுரு பரனுரின்
நடமாடும் திருமே னிக்குப்
பண்ணீர்மை யாற்பாடிப் பக்தர்குழாம்
திரண்டிந்தப் பாரின் மீதே
உண்ணீர்மை யோடுசெயும் இறுதிவிழா
ஈதென்ன உணர்ந்து கொண்டே
தண்ணீரால் அபிடேகம் செயுங்காலை
வருணன்நனி போற்றி செய்தான். 1020

நீண்டதிரு முடிப்பொலிவும் நிகரிலருள்
முகப்பொலிவும் நெஞ்சை யள்ளி
ஆண்டருள்செய் அகப்பொலிவும் அருள்தாடி
படியும்வயிற் றழகும் அன்பர்
வேண்டியவெல் லாம்வேண்டி யாங்கருளும்
விமலபதப் பொலிவும் நன்று
மூண்டபெருந் தவப்பொலிவும் முதிர்கருணைப்
பொலிவுமண்ண லிடமே விற்றல். 1021

ஆனந்தக் காட்சியருள் அண்ணல்திரு
மேனிமிசை தோய்ந்து போந்த
தேனென்றும் ஐயமுதம் சந்தனம்பால்
தயிர்பன்னீர் திருநீ றாதி
ஞானம்திண் தவம்கருணை யாதிநலங்
களிலொரணுத் தாங்கி யன்பர்
ஊனம்தவிர்த் தினருளூட்டவுன்னி
யோரிடத்தில் இருந்த வம்மா. 1022

மங்கலவாத் தியம்முழங்க மாண்பொடபி
டேகம்முறை யாகச் செய்து
துங்கமிகும் உலர்ந்ததுணி கொண்டுதிரு
மேனியினைத் துடைத்த பின்னர்
பொங்குமொளி வெள்ளாடை புனைவித்து
மலர்மாலை பலவும் சூட்டி
இங்கிதமாய் அலங்காரம் செய்தத்தர்
நறும்பனிநீர் தெளித்திட் டார்கள். 1023

அபிடேகப் பொருள்மணமும் அலங்கார
மலர்மணமும் அத்தர் பன்னீர்
சுபமாகத் தெளித்ததனுல் உறுமணமும்
தூயபக்தி மணமும் அண்ணல்
தவஞான நறுமணமும் அருட்கருணை
மணமுமொன்றிச் சாந்தி நல்கப்
பவமாயை யினைக்கடத்திப் பரநிலையி
லுறப்புரிபே றமைந்த தாமால். 1024

அமரர்குழாம் வானுலகில் சூழ்ந்தனர்நல்
லருள்முனிவர் அரவென் றார்த்தார்
அமலகணே சப்பெருமான் உருவொடிருந்
தவனியினைத் திருத்தப் போந்த
சமயசம ரசமூர்த்தி தக்கசட்டச்
செந்நெறியை உருவாக் கிட்டார்
மமர்அறுத்து மாண்பருள்அச் சட்டநெறி
பற்றியினி மகிநன் றுய்யும்; 1025

தாமுலகிற் செயப்போந்த பணிசெவ்வ
னேநடத்தும் சான்றோ ரான
கோமகனார் இவர்புவியிற் சிலநாளே
உலவுவர்இக் குரிசில் தம்மை
மாமகிழ்வி னோடுநனி வரவேற்றற்
கானவெலாம் வகையாய்ச் செய்வோம்
ஓமெழுத்துக் குரியஇவர் அருள்பெறுவோம்
எனவிசும்பி னிடைபே சிட்டார். 1026

அந்தஉரை யாடலைக்கேட் டருளண்ணல்
சிறிதேபுன் முறுவல் பூத்தார்
நந்தமண்ணல் ஏன்முறுவல் செய்தனர்என்
றன்பர்அறி யாதா ரானார்;
கந்தமுடன் சுவைமிகுந்த கனிவகைகள்
திருவமுது கனிவி னோடும்
சந்தமுறப் படைத்தினிதா ராதனைகள்
தக்கமுறை யாலே செய்தார். 1027

அருட்சட்ட அடியவரும் அன்பர்களும்
அரஹரவென் றொலித்துப் போற்றி
இருட்செற்ற குருமணியை வலம்புரிந்தின்
னடிமலரை இறைஞ்சிப் போற்றி
தெருட்பெற்ற திருவினராய் தேவாமிர்
தம்போன்ற தீர்த்தம் நீறு
பொருட்பெற்ற நல்லாசி யாதிபெற்றுப்
பேரின்பப் பொலிவுற் றாரால். 1028

திருமஞ்ச னப்பொருளும் திருவாரா
தனைப்பொருளும் அன்பர்க் கெல்லாம்
அருட்சட்ட அடியார்கள் எடுத்துவழங்
கினர்அந்தக் கூட்டத் தின்கண்
திருமஞ்ச னப்பஞ்சா மிருதம்பெற
விரும்பிச்சிறு குழந்தை யொன்று
பெருகுமக்கள் நெருக்கிலகப் பட்டழுத
வணம்பெருமான் முனரெய் திற்றே. 1029

அழுதுகொண்டு கைநீட்டி நிற்குமந்தச்
சிறுசேயைக் கண்ட அண்ணல்
தொழுதடியர் அடிமலரிற் படைத்தநறுங்
கனியிலொன்றைத் தூநற் கையால்
விழுமியபே ரருளொடெடுத் தீந்தனர்அக்
குழந்தைமிக மகிழ்ந்த தந்தக்
குழவியுள்ளத் தொடுமுயன்றல் இறைவனருட்
கனிகிடைக்கு மெனல்மெய் யன்றே? 1030

செந்தமிழ்நாட் டினில்வேறு பாடின்றிப்
பலமதத்தர் களும்வாழ் கின்றார்
அந்தநல்லூ ரினில்இந்துக் களும்முகம்ம
தியர்கிறித்த வரும்வாழ் கின்றார்
இந்துக்களுக் குச்சமமாய் ஜனத்தொகையில்
முகம்மதியர் களும்வாழ் கின்றார்
இந்தநல் விழா நடக்கும் செய்தியைமுன்
பேமுகம்ம தியர்அ றிந்தார். 1031

இந்துமதத் தெய்வங்கட் கினிதுவிழா
நடத்துவது வழக்கம்; இப்போ[து]
இந்துமத மனிதர்ஒரு வரைக்கடவுள்
போலஎழுந் தருளு வித்துச்
சந்தமுற அபிடேகம் நடத்துவதும்
ஊர்வலம்செய் வதும்நன் றாமோ
இந்தச்செய லைத்தடுத்தல் வேண்டுமென
முகம்மதியர் எண்ண லுற்றார். 1032

தங்கள்மதத் தலைவர்களை அழைத்துவந்திச்
செய்தியினைச் சாற்ற லானார்
அங்கம்மதத் தலைவர்களும் அண்ணலைக்கண்
டுரையாடல் வேண்டும் என்றார்
துங்கமுறை யால்முன்னர்ச் சொல்லியனுப்
புதல்வேண்டு மென்றும் சொன்னார்
அங்கவர் அவ் வாறுசொல்லி யனுப்பியதும்
அடியவர்கள் அச்சம் கொண்டார். 1033

அண்ண லுக்கு மங்களமாய் விழாநடத்த
வேண்டுமென அகத்துட் கொண்டோம்
அண்ணலிடம் அனுமதிபெற் றெண்ணியவா
றிதுவரையும் நடத்தி வந்தோம்
அண்ணல்முனிந் திடுமாறித் தடைவருகின்
றதுவேயென் றயர்ச்சி யுற்றார்
அண்ணல்அதை யறிந்துமுனி யப்பசெட்டி
யாரையரு கழைத்தென் னென்றார். 1034

அண்ணலிடம் உரையாட முகம்மதியர்
வருகின்றார் என்ற செய்தி
அண்ணலிடம் கூறிடவும், அவ்வடியர்
அச்சமெலாம் அகலும் வண்ணம்
எண்ணமதில் ஐயமொன்றும் கொளவேண்டாம்
இனிதம்முகம் மதியர் கேட்கும்
எண்ணில்பல கேள்விகட்கும் இனியவிடை
அருள்வன்உடை யோன்என் றிட்டார். 1035

அடியவர்கட் கன்பர்களுக் கமுதுபடைத்
திடுகவெனக் கூறி யண்ணல்
அடியரன்பர் அருந்துகையில் அங்கணுலா
வியவண்ணம் அன்பி னோடும்
நெடிதுபல கேள்விகள்கேட் கப்போகி
றார்கள்அடி யவர்க ளெல்லாம்
உடனிருக்க வேண்டுமென உளத்தெழும்ஆர்
வத்தோடும் உரைக்க லானார். 1036

உடையவன்தன் ணருட்சிறப்பை அடியவரும்
உணர்தல்நலம் என்ன வுன்னி
அடியவரெல் லாமிருக்க வேண்டுமெனப்
பெருகுமன்பாற் சொற்ருர் அண்ணல்;
அடியவரும் அன்பர்களும் அமுதருந்தி
அண்ணலரு கமர்ந்தி ருந்தார்
முடிவிலன்பொ டண்ணலந்த முகம்மதியர்க்
காசனங்கள் அமைக்கச் சொன்ருர். 1037

நாற்காலி பலஅமைத்தார் நல்லிரத்ன
கம்பளங்கள் விரித்திட் டார்கள்
மேற்கோலி வருமந்த முகம்மதியர்
நல்வரவை விழைந்து நின்ருர்;
பாக்கோடு வெற்றிலைசந் தனம்பன்னீர்
பழவகைகற் கண்டு புஷ்பம்
பார்க்காக வரும்அண்ணல் தமைஇனிது
பார்க்கவந்தோர் கொண்டு வந்தார். 1038

அவற்றைத்திரு முனர்வைத்தம் முகம்மதியர்
அண்ணல்முகம் நோக்கி ஞர்கள்
உவமைசொலற் கரியதிரு முகத்திலொளிர்
தெய்வீக ஒளியும், மேலாம்
தவப்பொலிவு மிக்கதிரு மேனியும், தண்
ணருட்கருணை தழையும் கண்ணும்,
குவலயம்போற் றினியஅருள் வாசகமும்.
கோனைநிகர் வீறும் கண்டார் 1039

அருளண்ணல் எத்தகையர் எனஉணர்ந்த
அவர்களண்ணல் உரைத்த போதும்
அருகுளநாற் காலிகளில் அமராமல்
ரத்தினகம் பளத்த மர்ந்தார்
ஒருவர்முகத் தினையொருவர் பார்த்தனர்வே
றெருபேச்சும் உரைத்தா ரல்லர்
அருளடியர் உடையவனை உறுத்துன்னிப்
போற்றியவா றமர்ந்தி ருந்தார். 1040

அவர்கள்தயக் கத்தையுமெண் ணங்களையும்
தெளிவாக அறிந்த அண்ணல்
அவர்கள்திரு மறையாம்கு ரானில்உள
அருங்கருத்தை விளக்கிக் கூறி,
அவனிமுதல் அனைத்துலகும் உண்டாக்கிக்
காத்தருளும் பெருந் தலைவர்
உவமைசொலற் கரியஅல்லா வேஎன்னும்
உண்மைகுரான் ஓதும் என்றார், 1041

அவர்அளவில் பெருங்கருணை யேவடிவ
மாகியென்றும் அமைவார்; நம்மோ[டு]
அவனிமிசை உறைஏழை கட்குதவி
செய்வதையே அவர்வி ழைவார்;
அவமெனும் பொய் பேசாமை, ஈகை, இறை
நம்பிக்கை, அடக்கம், நேர்மை,
தவநாட்டம், கற்புடைமை, பக்திஇவை
பேணிடுவோர் தக்கோ ராவர். 1042

முழுவதும்நம் பிக்கையுடன் பக்திசா
தனங்களில்முன் னேறல் வேண்டும்;
விழுமியஅல் லாவொருவர்க் காகவியன்
புவியினில்வாழ் வாற்றல் வேண்டும்;
அழுக்ககலப் புவியின்பம் பொருள்புகழை
விரும்பாமல் அமைதல் வேண்டும்;
ஒழுக்கமுடன் பக்தியில்ப டிப்படியாய்
உயர்வுற்றுச் செல்லல் வேண்டும். 1043

நம்பிக்கை, கீழ்ப்படிதல், உளும்புறமும்
ஒத்துள்ள நடத்தை வேண்டும்;
ஐம்பொறியின் பத்தில்மனம் நாடாது
விலகின்அது தூய தாகும்;
துன்பமறும்; உயர்ந்தஉண்மை களைஉணரும்
தூயதிறல் அதிக மாகும்;
இன்பம்அருள் த்யானம்ஒழுங் காய்ப்பழகின்
யோகசித்தி இனிது வாய்க்கும். 1044

உயர்வுடைய ஞானியர்கள் தற்பெருமை
அணுவுமின்றி ஒளிர்வர் பாரில்
மயர்வுறுபல் சித்திகளில் மூழ்காமல்
விடுபட்டு வயங்கு வார்கள்
அயர்வில்கடுந் தவத்தாலும் அடக்கத்தா
லும்தூய்மை யாகி நிற்பர்
துயர்தரும்பற் றணுவுமின்றி அகழ்ந்தெறிந்து
பேரின்பச் சுடரா வார்கள். 1045

அவர்களுட்ப ரம்பொருளின் அருள்ஞான
ஒளிநிறைந்து பூர்ண மாக்கும்
அவர்களெண்ணும் எண்ணமெலாம் எண்ணியவா
றேஅவனி மிசைந டக்கும்
அவர்கள்புரி செயல்யாவும் அல்லாவின்
அருட்செயலாய் அமைந்தின் பூட்டும்
அவர்கள்உல குக்கொளியாய் அமைவர்; அனைத்
துயிர்களுக்கும் துணையா வாரே. 1046

அல்லாவி னிடம்செலுத்தும் மெய்யன்பால்
இடையிலமை மறைப்பு நீங்கும்;
அல்லாவின் அருட்காட்சி பெறலாம்; அல்
லாவோடு பேச லாகும்;
அல்லாவின் செயலாய்நம் செயலமைய
அல்லாவோ டொன்ற வேண்டும்;
அல்லாவை அடையும்வழி பக்தி; அது
வேபரமா னந்த மூட்டும். 1047

லட்சத்திரு பத்துநா லாயிரமாம்
நபிபின்னால் ஞாலத் தின்கண்
லட்சியத்தை உணர்த்திநன்று வாழ்வாங்கு
வாழவைத்த நம்பி யான
நற்சல்லலா கலைகிஸ்ஸல மவர்களுற்று
நீதிக்கொடி கட்டி ஞானச்
சொற்செல்வ மானகுரா னெனும்தூய
பெருஞ்செல்வம் தந்துள் ளார்கள். 1048

குரானில்உள முறைப்படியா வரும்நடந்தால்
குவலயத்தில் குறையுண் டாமோ
குரானில்உள உண்மைகளைப் பக்தியொடு
கேட்பினும் சமாதி வாய்க்கும்
குரானின்உரை களைநான்என் னும்நினைவற்
றவன்கேட்பின் குறைவில் ஞானப்
பிரானெனும்அல் லாவொடொன்றிப் பேரின்பக்
கடலினில்மூழ் கிடுவன் நன்றே. 1049

அல்லாவுக் கடியார்க ளாவதினும்
அவரடியார்க் கடிய ராவோர்
நல்லார்கள் எனுமுண்மை நாமுணர்தல்
வேண்டும்; உயர் ஞானம்அன்பார்
நல்லார்கள் உள்ளமிசை நன்றிறைவன்
எழுந்தருளி இருப்ப தால்அந்
நல்லாரை வலம்புரிந்து வணங்கல்இறை
வழிபாட்டுக் கீடாம் என்றார் 1050

அல்லாவிற் குயிர்களெலாம் அன்பார்ந்த
பணிவிடைகள் புரிதல் வேண்டும்
அல்லாவின் பேராணைக் குப்பயந்தோ
அன்றிப்பயன் பெறலாம் என்றோ
அல்லாவிற் குப்பணிவி டைகள்செயல்
உயர்ந்ததன்றுள் ளன்பி னோடும்
அல்லாவிற் குப்பணிவி டைகள்செயல்
உயர்ந்ததெனல் ஆன்றோர் கொள்கை. 1051

ஆண்டவர்அன் புக்குரியோர் உதாரகுணம்
அருங்கடலைப் போன்ற தாகும்
ஆண்டவர்அன் புக்குரியோர் உண்மையன்[பு]
ஆதித்தனை நிகர்த்த தாகும்
ஆண்டவர்அன் புக்குரியோர் பணி[வு]இந்த
அவனியினை ஒத்த தாகும்
ஆண்டவர்பால் அணுவள[வு]அன் பெய்தல்எணில்
சொர்க்கத்தினும் உயர்ந்த தாமே. 1052

முகமதியர் மறையாம் குரானின் உயர்
கருத்தண்ணல் முறையாய்க் கூற
முகமதியர் அகமுருகி அல்லாவின்
சிறப்பைஇவர் முறையாய்ச் சொன்னார்
தகவுமிகும் இவரைத்தவ ருகநினைத்
திருந்தோமே என்று நொந்தார்
"சகமிசைநீர் சொற்றவெல்லாம் சரி;அல்லா
தான்தலைவர்" என்று சொன்னார். 1053

அடியரெலாம் 'இஃதென்ன, அல்லாவே
தலைவர்எனக் கூறு கின்றார்
படியின்மிசை இவ்வாறு சொலல்சரியோ?
அண்ணல்இது பகர லாமோ?
உடையவனன் றோஉலகின் தலைவரென
இதுகாறும் ஓதி வந்தார்?
இடையிலின்றேன் இவர்களிடம் இவ்வாறு
கூறுகிறார்' எனப்பே துற்றார். 1054

அல்லாவால் படைக்கப்பட் டுக்காப்பாற்
றப்படுமிவ் வகில மெல்லாம்
அல்லாவின் ஆணைவழி நடப்பதெனின்
தவறேதும் நடத்தற் காமோ?
அல்லாவென் றிறைவனைநீர் போற்றுகின்றீர்;
அரன், அரி,முன் னோன்,சேய், சக்தி
எல்லாமும் புரிபிரமம், கர்த்தர்எனப்
பிறர்பலரும் ஏத்து கின்றார்; 1055

எப்பெயரிட் டழைத்தாலும், எம்முறையில்
துதித்தாலும் எல்லாம் வல்ல
அப்பெரிய பரம்பொருட்கே உரித்தாகும்
எனும்உண்மை அறிதல் வேண்டும்;
அப்புபுனல் நீர்நீரு பாணியெனப்
பலவாறாய் ஆர்சொன் னாலும்
அப்பெயர்கள் அனைத்தினுக்கும் உரியதண்ணீர்
ஒன்றெனநாம் அறிதல் வேண்டும்; 1056

நம்சமயத் திற்குமட்டும் நம்கடவுள்
தலைவரெனின், நாம்நன் றேத்தும்
எஞ்சலில்அத் தலைவருக்குப் பரிபூர
ணத்தன்மை எவ்வா றெய்தும்?
அஞ்சலருள் தலைவரைஅல் லாவெனஉள்
ளன்பால்நீர் ஓது கின்றீர்
தம்சமயத் தலைவர்என வேறுபெய
ராற்பிறரும் சாற்று கின்றார். 1057

அடையும்இடம் ஒன்று; செலும் வழிபலவாம்
எனும்உண்மை அறிதல் வேண்டும்
அடையஇய லாதபர மானந்தத்
தினையடைய விழைவோர் இந்தப்
படியின்மிசை எவ்வழியிற் சென்றாலும்
அதைஉறுதி யாகப் பற்றி
இடையறநன் றிறுதிவரை அயராது
பாடுபட்டால் எய்த லாகும்; 1058

பேரானந் தத்தோடொன் றிடவேண்டும்
என்பதுவே ப்ரபஞ்சத் துள்ள
சீரான மதம்அனைத்தின் குறிக்கோளாம்
எனஉணர்தல் சிறந்த தாகும்;
பேரானந் தத்தோடொன் றிடவிழைந்துள்
ளன்பொடருள் நெறிகைக் கொண்டு
பாராரும் எவ்வுயிரும் உயட்டும்எனல்
சட்டத்தடிப் படைநோக் காகும்; 1059

என்றண்ணல் புன்முறுவல் பூத்ததிரு
முகத்தோடும் இனிதே கூற
நன்றிந்த உயருண்மை செவிமடுத்த
முகமதியர் நனிமகிழ்ந்தார்
இன்றிந்த அருளாள ரால்உள்ளத்
திருந்தஐயம் தீர்ந்த தென்றார்
ஒன்றென்ற அல்லாவின் அவதார
மேஇவரென் றுளத்துட் கொண்டார். 1060

பொங்குபெரு மகிழ்வோடும் புகலரிதாம்
அன்போடும் பணிவி னோடும்
துங்கமிதம் அருளண்ணற் கினிதுவணக்
கம்செலுத்தித் தூய்மை சான்ற
தங்களுடன் தர்க்கமிட எண்ணிவந்தோம்
தாங்களெங்கள் ஐயம் தீர்த்து
மங்களநன் மகிழ்வளித்தீர் வளர்கசட்ட
நெறியென்ன வாழ்த்தி னரால். 1061

அடியவர்கள் ஆனந்தம் அடைந்தார்கள்;
செட்டியார் அங்க மெல்லாம்
நெடியபுள கம்போர்ப்ப இருவிழியும்
நீர்சொரியத் தமைம றந்தார்;
அடியவர்கள் பலருமச்ச மின்றிவிழா
விற்கலந்து கொளலாம் என்றும்
விடியும்வரை தாம்காவல் புரிந்திடுவ
தாயுமிஸ்லா மியர்சொன் னர்கள். 1062

அன்புருவாம் அருளண்ணற் காற்றுவிழா
விற்கின்னும் தேவை யான
பொன்பொருள்எல் லாம்தருவ தாகஇஸ்லா
மியர்அன்பாற் புகன்றிட் டார்கள்
மன்பொருள்எல் லாம்இருப்ப தாய்ச்செட்டி
யார்உரைத்தார்; மட்டில் லாப்பே
ரின்புடனும் முகம்மதியர் இனிதுவிடை
பெற்றுத்தம் மிடம்சேர்ந் தார்கள். 1063

அடியவரும் அன்பர்களும் அண்ணலருட்
பெருமையினை எண்ணி எண்ணி
நெடியபுள கம்போர்ப்ப நேத்திரங்கள்
நீர்சொரிய நிறையன் போடும்
படியின்மிசை அருளுருவாய்ப் போந்தபரம்
பொருளேநம் அண்ண லென்ன
முடியின்மிசை கரம்கூப்பி அரஹரவென்
றொலித்துத்துதி மொழிய லானர். 1064

குருநாதர் துதி

கருணையாம் அமுதை வழங்குபாற் கடலே
கவினெலாம் திகழ்அருள் மலையே
பொருள்நயந் துதவும் புனிதநா யகனே
போகமெல் லாம்தரும் பதியே
அருள்நலம் குலவும் அன்பர்தம் இதயத்
தமர்ந்தொளி பரப்புசூ ரியனே
இருள்நயந் தலையும் எம்மையும் திருத்தற்
கெழுந்தருள் குருபரம் பொருளே. 1065

அறம்தரும் பொருளே அகம்விளை அருளே
அகப்புறம் புறப்புறம் அறியாத்
திறம்தரும் சுகமே தெய்வமா மணியே
தேசெலாம் மிகுசுயஞ் சுடரே
இறந்தவர் தமையும் எழுப்பருட் சித்தி
யியல்பெலாம் பழுத்தமே லவனே
புறந்தனில் அலையும் புல்லர்எம் முள்ளும்
புகுந்தமர் குருபரம் பொருளே. 1066

கல்வியாம் கடலைக் கடந்தநா யகனே
கருணையிற் சிறந்தநா யகனே
செல்வமெல் லாமும் வழங்கும்நா யகனே
திறனெலாம் நல்கும்நா யகனே
பல்வளங் களையும் கொழிக்கும்நா யகனே
பரசுக மீயும்நா யகனே
வல்வினை வலியைத் தொலைத்தருள் செயவே
வையமேல் வந்தநா யகனே. 1067

சாதனை யனைத்தும் தந்துகாத் தருள்செய்
சத்துவம் மிகுந்தநா யகனே
சோதனை கொடுத்தும் துயர்தவிர்த் தாண்டும்
தூய்மையை வளர்க்கும் நாயகனே
மாதன மனைத்தும் மாணருட் பேறும்
நல்கியாள் மாகநா யகனே
போதனை யனைத்தும் வழங்கியிங் காளப்
போந்தருள் ஞானநா யகனே. 1068

அல்லல்ஓர் அணுவும் அன்பரை அணுகா
வணம்தடுத் தாளும்நா யகனே
சொல்லொடு பொருளாய்ச் சொல்லொணுப் பொருளாய்ச்
சுவையெலா மானநா யகனே
கல்லெனும் மனமும் கசிந்துரு கிடச்செய்
கருணையோ டொளிரும்நா யகனே
அல்லெனும் அடியேம் மனத்தையும் திருத்தி
அருட்சுகம் தருகநா யகனே. 1069

---

எனமன முருகி யேத்தினுர் அண்ணல்
இணையடி இறைஞ்சினர் மகிழ்ந்தார்
வினையெலாம் தவிர்ந்த தெனமிகக் களித்தார்
மெய்ப்பொருள் கண்டன மென்ருர்
இனம்மதம் கடந்துள் ளிலகிறை யேஇங்
கெதிர்அமர்ந் தருள்கிருர் என்ருர்
முனர்புரி தவத்தின் முழுப்பய னுல்இம்
முதல்வரை அடைந்துளோம் என்ருர். 1070

வேறு

அண்ணலுக்கு மாலைசெய வேண்டிய ஆ
ராதனைகள் நடத்தி னுர்கள்
எண்ணிலன்பர் இனிதுவலம் புரிந்துதிரு
வடிமலரில் இறைஞ்சி னுர் ,ள்
புண்ணியத்தின் பயனனைய திருநீறும்
தீர்த்தமும்பெற் றேத்தி னுர்கள்
அண்ணலரு ளுலாநடத்தற் காவனஎல்
லாமுமன்பால் புரிந்திட் டார்கள். 1071

காலைமுதல் அண்ணல்அருள் திருமஞ்ச
னச்சிறப்பைக் கண்டோம்; அன்பர்
சீலமிகும் அடியவர்கள் திருவமுது
செயும்சிறப்பைக் கண்டின் புற்ருேம்
மாலைமுகம் மதியரிடம் வள்ளல்நிகழ்த்
தியநலுரை மகிழ்வாய்க் கேட்டோம்;
கோலவுலா மதிகாண விட்டிடுவோம்
எனக்கதி ரோன் குடபால் சேர்ந்தான். 1072

அருளண்ணற் கிவண்நடக்கும் இந்தஉலா
இறுதியுலா ஆத லாலே
பெருமகிழ் வுடன்காண வேண்டுமெனப்
பிரியமுடன் திங்கள் கீழ்பால்
மருவுகட லிடைதோன்றி மாநிலத்தை
நிலவொளியால் தண்மை செய்ய
குருபரர்உ லாக்காண விழைந்துவிண்மீன்
கூட்டமெலாம் போந்த வம்மா. 1073

ஆணவமாம் இருளகற்றி ஞானவொளி
வீசுமண்ணல் அருளு லாவைக்
காணவந்த மதிஅவர்தம் கருணைநிகர்
தண்ணமுதக் கதிர்க ளால்இம்
மாணுலக உயிர்களுக்கு மகிழ்வூட்ட,
மரங்கள்செடி கொடிகள் எல்லாம்
பூணரிய பெருமகிழ்வு பூண்டனநற்
புனிதவுலாக் காண்போம் என்றே. 1074

சந்த்ரபிறை சூர்யபிறை குடைகொடிவெண்
சாமரங்கள் சின்னம் தாரை
வந்தன, நல் ஊதுகொம்பு பம்பைமுத
லாம்பலவாத் தியம்மு ழங்க
சந்தமிகு சிலம்பவித்தை பொம்மலாட்
டம்கரக ஆட்ட மெல்லாம்
முந்துறுதம் திறமைகளைக் காட்டியவா
றேமுன்னர்ச் சென்ற வன்றே. 1075

சீலமுடன் கும்மியடித் திடும்ஆண்கள்
பெண்கள்குழாம் சீராய்ச் செல்லக்
கோலமுடன் கோலாட்டம் போடுபெரி
யோர்சிறியோர் கூட்டம் செல்ல
நூலுணர்வும் அனுபவமு முடையமுகம்
மதியகுரு மார்கள் செல்ல
ஏலநெடுந் தடியுடனும் இளைஞர்குழாம்
காவல்புரிந் தினிதே செல்ல 1076

நாதசுர இசைவல்லோர் குழலிசைவல்
லோரெல்லாம் நன்கிசைக்க
சாதனங்க ளுடையபல அடியர்அர
ஹரவென்னச் சார்ந்து போற்ற
போதகுரு நாதர்முனி வோர்அமரர்
போற்றஎழுந் தருள்வி மானம்
ஏதமில்வா னுலகிலொளிர் இந்திரவி
மானமெனப் போந்த தாமால். 1077

அடியவர்கள் அருட்பாடல் ஆண்டவர்தோத்
திரப்பாடல் பாடிச் செல்ல
நெடியபக்க வாத்தியங்கள் நெறிமுறையி
னல்இனிது முழங்கிச் செல்ல
படியிலக்கம் பக்கமுள ஊரார்கள்
பக்தியுடன் திரண்டு வந்து
கொடியவினை தவிர்த்தருள்செய் குருமணியைக்
கோலவிமா னத்திற் கண்டார். 1078

பத்தியெனும் பயிர்வளர்க்கப் படர்ந்தெழும்கொண்
டலேயிந்தப் பார்மீ தெண்ணில்
சத்தியருள் தனித்திறலைச் சாந்திநிறை
பெருங்கடலைத் தக்க ஞான
சித்தியெலாம் பழுத்தன்பர்க் கருள்நலங்கள்
செயும்குருவைச் சிறந்த மோன
முத்திநலம் எவ்வுயிர்க்கும் அருளின்ப
மூர்த்தியைப்பே ரன்பாற் கண்டார். 1079

கண்டவர்கள் கரங்கள்சிர மிசைகுவித்தார்
கண்களில்நீர் பெருக்கி நின்றார்
அண்டர்களும் காணரிய அருட்காட்சி
கண்டின்ப முற்றோம் என்றார்
பண்டைவினை தீர்ந்த[து]; இன்பப் பயன்பெற்றோம்
என்றுபக்திக் கடலுள் ளாழ்ந்தார்
திண்டிறல்சால் இவரடித்தொண் டர்க்குத்தொண்
டாற்றிடினும் சிறப்போம் என்றார். 1080

அண்ணலைத்தா ரணிக்கீந்த அருட்பெருமாட்
டியின்தவம்தான் என்னே என்பார்
எண்ணித்தனக் கெனஒன்றும் நாடாத
இவரையினி தீன்றபேறு
புண்ணியம்சால் நெல்வேலி மாவட்டத்
திற்கன்றே கிடைத்த தென்பார்
அண்ணல்அவண் தோன்றிடினும் வடக்கினில்வந்
தருள்புரிகின் றாரே என்பார். 1081

வடதிசையை நோக்கிவரு தென்றலென
வண்பொதிகை மலையின் கண்ணே
திடமிகுநற் றவம்புரிந்து திருவருட்பூர்
ணம்பெற்றுத் தேவர் போற்ற
நடலைதவிர் ஞானகுரு மணியாக
இவண்போந்து நலம்பா லிக்கப்
புடவியில்யாம் புரிந்தவுயர் புண்ணியத்தின்
பயன்புகலற் பாற்றோ என்பார். 1082

ஆற்றல்மிக மிகஉடைய அருளண்ணற்
கடியார்கள் அன்ப ரெல்லாம்
சாற்றரிய பேரன்பால் தொண்டாற்றித்
தக்கபயன் எய்து கின்றார்
மாற்றறியாச் செழும்பொன்னும் அண்ணலுக்கும்
மணிமணியாம் அடியார்க் கும்நாம்
ஆற்றுதிருத் தொண்டுளதென் றேமெல்லக்
காற்றசைந்து களைப்பாற் றிற்றால். 1083

அருந்தவசி களைக்காண வேண்டுமெனில்
அவர்களுறை வனங்க ளுக்கோ
பெரியமலைக் குகைகளுக்கோ சென்றிருந்து
தரிசனம்நாம் பெறுதல் வேண்டும்
தரிசனம்தந் தாலும்அவர் சடுதியினில்
நமையாட்கொண் டருள மாட்டார்
உரியபற்றெல் லாம்விடுத்தில் லறம்விடுத்திங்
குற்றிடுவாய் என்று சொல்வார். 1084

நாமினிது வாழ்ந்திடுதல் வேண்டுமென
ஞாயிறுகாற் றாதி யாவும்
நாமிருக்கு மிடம்தேடி வந்துநலம்
புரிவதுபோல் ஞான வள்ளல்
நாமிருக்கு மிடம்தேடி வந்துநல்ல
நெறிவழங்கி அருள்செய் கின்றார்
சாமியருட் பெருங்கருணை சாற்றரிய
தெனஉவந்து போற்றி செய்தார் 1085

கல்லாத மாந்தருக்கும் கற்றவர்க்கும்
அவர்கருத்துக் கிசைந்த வண்ணம்
சொல்லாலும் தூயஅருள் நினைவாலும்
தூயஅருள் நெறியை நல்கி
நல்லாற்றில் நடத்தியிம்மை, நலம்'மறுமை
நலம்இனிது பாலிக் கின்றார்
பல்லாற்றி னாலும்உயர் இவர்க்கிணையாய்
எவருமிலர் பாரில் என்பார். 1086

அண்ணல்திரு வுலாமெல்லச் சென்றதடி
யவர்அன்பர் வீட்டி லெல்லாம்
உண்ணெகிழ்பே ரன்பினொடும் தீபாரா
தனைகள்புரிந் துவப்புற் றார்கள்
அண்ணல்உலா முடியும்வரை முகமதியார்
உடனிருந்தன் பாற்போற் றிட்டார்
நண்ணுகதிர் எழற்கைந்து நாழிகைமுன்
ஞானவுலா முடிந்த தம்மா. 1087

அருளண்ணல் அழகுவிமா னத்தினின்றும்
இறங்கிசெட்டி யாரில் லத்தில்
அருளடியர் அரஹரவென் றினிதேத்த
உட்சென்றா சனத்த மர்ந்தார்
மருவன்பர் ஆராத னைபுரிந்து
வலம்செய்து வணங்கி னார்கள்
அருளண்ணல் அடியர்தரத் திற்கேற்ப
அருளாசி அருளி னாரால். 1088

எப்படிந டந்திடுமோ என்றச்ச
மோடிருந்த செட்டி யாரும்
செப்பரும்பே ரச்சமுடன் இருந்தபிற
அடியவரும் சிறந்த செம்மல்
ஒப்பில்அருட் பெருங்கருணைச் சிறப்புன்னி
உவகையுடன் போற்றி னூர்கள்
இப்புவியும் வானுலகும் இயம்பருமின்
பெய்திஇனி தேத்திற் றுமால். 1089

அடியரெலாம் இரண்டொருநாள் அவண்தங்கி
அண்ணல்அரு ளுரைகள் கேட்டும்
நெடிதுநிட்டை யினிலமர்ந்தும் நிகரில்அருட்
பேரின்ப நிறைவுற் றூர்கள்;
படிமிசையிந் நெறிபோல வேறுண்டோ
எனப்பகர்ந்து மகிழ்வுற் றூர்கள்;
அடியவர்கட் கருந்துணையாம் அருளண்ணல்
கருணையினைப் போற்றி னூர்கள், 1090

பிள்ளையார் குப்பத்தனை அண்ணலிடம்
இனிதுவிடை பெற்று நின்று
பிள்ளையார் குப்பத்துக் கண்ணலினி
தெழுந்தருள வேண்டு மென்றூர்
வள்ளலார் இன்னும்சில ஊர்சென்று
திரும்புகையில் வரலாம் என்றூர்
பிள்ளையார் குப்பத்தனை உடன்வந்தா
ரோடூர்க்குப் பயண மானூர். 1091

திருநீற்றுச் சிறுமுட்டை யினைப்பிள்ளை
யார்குப்பத் தன்னை கையில்
அருளண்ணல் தந்துதிரு வருளாசி
யளித்தார்கள் அந்நாள் தொட்டுத்
திருநீற்றுச் சிறப்புபிள்ளை யார்குப்பம்
சந்நிதியில் திகழ்த லாலே
பெருகன்பர் திருநீற்றுப் பயன்பெற்றுப்
பிறங்குதல்காண் கின்றேம் இன்றும். 1092

அருள்திருவி ழாக்காண வந்தஅடி
யவர்களெலாம் அவர வர்கட்[கு]
உரியஇடங் கட்கினிதே கினர்;அண்ணல்
பினும்அந்த ஊரின் கண்ணே
ஒருசிலநாள் தங்கியிருந் தடியர்உறை
பிறஊர்கட் கேகி அன்பால்
அரியஉரை பலகூறி அடியர்அகத்(து)
ஐயமெலாம் அகற்றி னரால். 1093

அருட்சட்டச் செந்நெறியை அடியவர்கள்
ஐயமின்றிப் பேணச் செய்தே
அருள்நலமும் பொருள்நலமும் உடல்நலமும்
உளநலமும் அருளி உண்மைப்
பொருள்நிலையை நன்றுணர்த்திப் போகமுடன்
போதமிக வழங்கி யெங்கும்
தெருள்மிகுந்த தெய்விகப்பே ரொளிபரப்பித்
திருவருள் உலாப்போந் தாரால். 1094

ஆக செய்யுள் 3574

## 4. அருள் அமைவுப் படலம்

### விநாயகர் துதி

தோன்றுமிடத் தினிலெல்லாப் பொருள்களுமே
ஒடுக்கமுற்றுத் துலங்கு மென்னும்
ஆன்றஉண்மை யினையவனிக் குணர்த்துதல்போல்
அருள்ஞான அண்ண லாரைத்
தோன்றுமிடத் தினிலொடுங்கச் செய்வித்து
ஞானவொளி துலங்க வைத்துச்
சான்றவர்கள் போற்றவொளிர் ஐந்துகரத்
தந்திபதம் தலைமேற் கொள்வாம். 1

### குருநாதர் துதி

அகமெனவாய்ப் புறமெனவாய் அகப்புறமாய்ப்
புறப்புறமாய் அருளாய் எங்கும்
திகழ்பொருளாய்த் தெளிபொருளாய்ச் செம்பொருளாய்
ஒண்பொருளாய்த் தேவர் யாரும்
புகழ்பொருளாய்ப் பூதமைந்தும் பொறிபுலனும்
கடந்தொளிரும் பொருளாய் அன்பர்
அகமுறையும் பரம்பொருளாய் இருடிநகர்
அமர்குருதாள் போற்றி போற்றி. 2

### அடியவர் துதி

ஜோதி யாகித் துலங்கும் குருபரர்
தீதில் செந்நெறி பேணும் திருத்தொண்டர்
பாதம் போற்றிப் பணிவிடை செய்துநம்
ஏதம் நீக்கிப்பே ரின்ப மடைந்துய்வாம். 3

---

வேறு

உலகம்பல உண்டெனினும் அவைகளினுட்
சிறந்ததுபூ வுலக மாகும்
நலமிகுசா தனம்புரிந்து நம்பனரு
ளெய்துதற்கீ துகந்த தாகும்
உலகமிதி லும்சிறந்த உத்தமர்கள்
அவதார மாகி ஐந்து
புலன்களையும் வென்றுதவம் புரிந்தொளிர்பா
ரதநாடு சிறந்த தாகும். 4

அருளுருவ மாய்த்தோன்றி அருள்நெறியை
யேபேணி அலகி லாப்பல்
அருள்மறைகள் இனிதருளிஅருள்நெறிக்கண்
பலரைஉய ரன்பா லீர்த்துப்
பொருள்பொதிந்த உபதேசங் களையருளிப்
புனிதமுறப் புரிந்து தூய
பரதகண்ட முழுதாண்ட யோகியர்கள்
பலகோடி யென்பார் அண்ணல். 5

தாமவதா ரம்புரிந்த குறிக்கோளை
முடிக்கச்சக மாந்தர் உய்யப்
பூமிமிசை அருளாளர் போதனைவாழ்
நாள்முழுதும் புகன்றுள் ளார்கள்,
தாம்அமைவு பெறுவதற்குச் சற்றுமுனர்
உரைத்தஉப தேச மெல்லாம்
தூய்மைமிகு சாரமுடை யனவென்ன
ஆராய்ந்தோர் சொல்கின் றாரால். 6

எவ்வளவு கூறியும்எல் லோரும்தெளிந்
தாரிலையே யெனும்சோர் வோடும்
செவ்வையுறத் தெரிந்தவற்றைக் கூறிநெறிப்
படுத்தஎண்ணும் துடிப்பி னோடும்
எவ்வமற அவர்களிறை யோடொன்றி
நுகர்ந்தஇன்ப நிலைகள் தம்மை
இவ்வுலகுக் கிறுதியுப தேசங்க
ளாகஇனி தருளி யுள்ளார். 7

ஆதிசங்க ராச்சார்யர், மத்வர், இரா
மாநுஜர், இயேசு நாதர்,
ஓதுகுரா னருள்நபிகள் நாயகம்,இ
ராமக்ருஷ்ணர், வடலூர் வள்ளல்,
போதமிகு திருப்புகழார், தாயுமா
னவர்போன்ற பெரியோ ரெல்லாம்
பூதலத்தவ் வாறளித்த இறுதியுப
தேசங்கள் போற்றற் பாற்றாம். 8

அருளண்ணல் அவதரித்த அக்காலத்
தினில்ஆங்கி லேயர் ஆட்சி
விரிவுடைத்தாய் விளங்கியதால் நம்மக்கள்
பாரதப்பண் பாட்டை விட்டு
திருமறையின் நெறிமறந்து வாழ்க்கைமுறை
களைமறந்து தேவை யின்றிப்
பெருகுறுமோ கத்தாழ்ந்து பேதுற்றுப்
பிணிபசியால் நலிவுற் றூர்கள். 9

பாரதியார் பாடல்களில் இந்நிலையை
நாம்தெளிவாய்ப் பார்க்க லாகும்;
சீருறமக் களையிந்த நிலையினின்று
நனிமீட்டுத் தேற்று தற்கே
பாரின்மிசை குருநாதர் அவதரித்தா
ரெனத்திடமாய்ப் பகர லாகும்;
சீரியநன் னலமனைத்தும் இனிதருள்சட்
டப்பெருமை செப்பற் பாற்றோ? 10

பல்லாயி ரக்கணக்கில் ஆண்பெண்பா
லார்இளைஞர் வயதா னோர்கள்
நல்லாரும் இல்லறத்தார் நவிலரிய
துறவறத்தார் கற்றூர் கல்லார்
எல்லாரை யும்தமதின் னருளுரையால்
ஒழுக்கத்தால் உயர்த வத்தால்
நல்லாற்றி னீர்த்தருளி நல்லவராக்
கிடுசிறப்பை நவிலற் காமோ? 11

பலவேறு வயதுடைய சேய்களுக்குப்
பலவேறு பக்கு வத்தால்
நலமேவும் உணவளித்து நனிபேணும்
நற்றாய்போல் ஞால மீதில்
பலவேறு வகைப்பழக்க முடையவரையும்
பாங்குமிகும் அருட்சட் டத்தில்
நிலையாகத் திகழவைத்து நீள்பயனூட்
டும்திறம்நாம் நினைத்தற் காமோ? 12

தன்னலமொ ரணுவுமின்றிச் சாதிமத
பேதமின்றிப் பரத நாட்டின்
நன்னிலையை மறந்துழல்பல் ஏழைகளின்
நல்வாழ்வை நாடி நாளும்
உன்னியுன்னி இரவுபக லாயுள்ளம்
மிகஉருகி உயர்தவத்தில்
மன்னிமிக அரியதொரு செந்நெறிகண்
டிவ்வையத் தினிதீந் துள்ளார். 13

அந்தநல்ல நெறியையினி தருளியதோ
டன்றியதை அநுட்டிக் கும்போ[து]
எந்தவித மாம்தடையும் இடையூறும்
எய்தாமல் இனிது பேணிச்
சந்தமுற இறுதிவரை தாம்துணையா
யிருந்துதவப் பேறீந் தாளும்
அந்தமில்சீர்க் குருநாதர் அருட்பெருமை
மிகப்பெரிதிவ் வவனி மீதே. 14

அருள்நெறியைக் கண்டார்கள்; அவனிமிசை
யளித்தார்கள்; அனுட்டிக் கின்ற
அருளடியர் ஆனந்த வாழ்வாற்றி
உயர்வதறிந் தின்புற் றார்கள்;
அருள்நெறியிப் புவியிலன வரதம்நிலைத்
திருப்பதற்கா வனசெய் தார்கள்
அருளுருவொ டடியருளந் தோறுமமர்ந்
தாட்சிசெய விழைந்திட் டார்கள். 15

அருட்சட்ட அடியார்கள் மூன்றுநிலை
யினராக அமைந்ததோர்ந்தார்;
பொருட்பெற்றிப் புவியில்துய ரில்லாமல்
வாழவிழைந் திடுவோர், மேலாம்
தெருட்பெற்ற நெறிபேணித் திருவருட்செல்
வம்திரட்ட விழைவோர், நீள
உருட்பற்பல் பிறவிப்பிணி யொழித்துமுத்தி
பெறவிழைவோர் ஆவா ரன்றே. 16

அருளண்ணல் திருமேனி யினைக்கோயி
லாக்கொண்டே ஆட்சி செய்த
பரிபூர்ணப் பெருமானுர் அண்ணல்திரு
மேனியில்உள் முகமாய் ஒன்றி
இருஞாலத் தாய்மடியில் இருந்தினிதே
ஆட்சிசெய உள்ளம் கொண்டார்:
அருள்ஞான குருநாதர் அடியவர்க்கா
வனஅனைத்தும் உணர்த்த லானுர். 17

அடியவர்எப் படிவாழ வேண்டுமென
அண்ணல்உணர்த் திடநினைத்தார்
அடியர்பலர்க் குக்கனவின் மூலம்அரு
ளுபதேசம் இனிது செய்தார்;
அடியர்சிலர்க் கருள்நிட்டை மூலம்இனி
துபதேசம் அருளிச் செய்தார்;
அடியர்ஒரு சிலரைநனி நேரினிற்கண்
டுபதேசம் அருளி னுரால். 18

மூப்பக்கவுண்டலு

குருபரரால் முதலினிதாட் கொளப்பெற்றுக்
கோதிலருட் சட்ட மேற்ற
பெருமைக்குரி யார்மூப்பக் கவுண்டலுஎன்
னும்பெரியார் தம்த ளர்ந்த
பெருவயதி னிலும்அண்ணல் திருநெறியில்
அணுவும்பிற ழாது வாழ்ந்தார்
அருளண்ணல் அடிமலரை அனவரதம்
நினைந்தேத்தி ஆனந் திப்பார். 19

பாரதத்தின் தென்கோடி யாம்நெல்லை
மாவட்டத் தின்கண் தோன்றி
பாரதத்தின் நடுவமையாந் திரநாட்டி
னுக்குமிகு பரிவாய் வந்து
சீரியநற் கருணையொடு தாம்வசிக்கும்
சிற்றூருக் கன்போ டுற்றுப்
பேரருள்செய் தாட்கொண்ட பெருந்திறத்தை
உன்னியுட்பே ருவகை பூப்பார். 20

புளியம்பழம் ஒட்டிலொட்டா திருப்பதுபோல்
புவிப்பற்றெட் டாது வாழ்ந்தார்
அளிமிகுந்த உளத்தொடண்ண லார்அருளை
நினைந்துநினைந் துருகி நிற்பார்
வளமிகுசா தனமுடையார்க் கருள்புரிந்த
வண்சரிதங் களைநி னைப்பார்
உளம்கனிந்த அவர்க்குயர்ந்த உபதேசம்
அருளஅண்ணல் உளம்கொண் டாரால். 21

அருட்சட்டத் தினில்முடிவாய் அமைந்துள்ள
கொள்கையருள் நிட்டை யாகும்
அருள்நிட்டை பேணும்அடி யார்தேகம்
ஆரோக்ய மாக மேவும்
அருள்நிட்டை பேணும்அடியார் தேகம்
உளம்தூய்மை யாயி லங்கும்
அருள்நிட்டை பேணும்அடி யார்இறைவ
னேடொன்றி இன்பம் துய்ப்பார். 22

பொறிபுலன்கள் அசைவறஇ ருக்கையினில்
மனவேகம் அதிக மாகும்
பொறிபுலனும் மனமும்அடங் கிடின்ஆத்மா
தன்னையினி துணரும் அப்போ[து]
உறுமாத்மா னந்தத்தை உரைக்கவொண[து]
அந்நிலையை அண்ணல், தன்னை
அறியின்உயர் தலைவனருள் கிட்டுமெனச்
சாத்திரங்கள் சாற்றும் என்றார். 23

இத்தகுபே ரின்பநிலை யினில்மூழ்கி
யிருந்தஅவர் மனக்கண் முன்னே
சித்தர்களின் தலைவரெனத் திகழும்அருட்
குருபரனார் காட்சி நல்க
மெத்தநெடு நாளாக நாடிநின்ற
மிகுசெல்வம் கிடைத்தாற் போலச்
சித்தமகிழ் வோடணைத்துக் கொள்ளஎண்ணித்
திருவடியிற் பணிந்து நின்றார். 24

அண்ணல்திரு வாய்மலர்ந்தற் புதஉபதே
சங்கள்சில அருள லானர்
பண்படுத்தப் பெற்றநல்ல நிலத்தில்மிகு
பக்குவமாய் நல்ல நெல்லைத்
திண்மையுற விதைப்பதுபோல் செம்மையுற
அவருள்ளம் தெளியும் வண்ணம்
புண்ணியம்சால் உனைப்படைத்தோன் உனக்குள்ளே
பொலிகின்றன் நீ பார் என்றார். 25

அவனைவெளி யினில்தேடிப் பயனில்லை
அகத்தினுளே நாடல் வேண்டும்
பவமறமுன் உனக்குரைத்த படிநாடிப்
பரனடியைக் காணல் வேண்டும்
தவநிலையில் மிகவுயர்ந்தோ ரிடம்மேவி
உறவாடின் தகுதி யெய்தும்
அவமெனும்சித் தியில்மயங்கா தருளுருவாம்
பரத்தோடொன் றிடுதல் மேலாம். 26

அதைநாடு கெனஅண்ணல் அருள்செயவும்
அக்கணமே அவருள் ளத்தில்
இதமான பேரமைதி எய்தியதின்
னருட்காட்சி பலதோன் றிற்றல்
சதபத்தி தழ்க்கமலத் தமலவொளி
யினிற்சார்ந்தான் மாநன் றென்ற
உததியணி உலகறியா உயரின்பம்
நெடுநேரம் துய்த்தார் நன்றே. 27

இறையொளியொ டிரண்டறநன் றினிதுகலந்
தீடிணையி லின்பம் துய்த்த
நிறைதவத்துப் பேரன்பர் நிமலர்அடி
நினைந்திருகண் ணீருள் மூழ்கி
துறையுணர்த்தி யருள்அவர்பால் உடல்பொருளா
வியைநன்றே ஒப்ப டைத்திங்[கு]
உறைநமக்குக் குறையேது? காப்பதவர்
பொறுப்பென்ன உருகி நின்றார். 28

ஆன்மிகநன் னெறியினையிவ் வவனிமிசை
அனைத்துயிர்க்கும் அருளப் போந்த
மேன்மைமிகும் அருளண்ணல் இவ்வாறு
மேல்நிலையைத் தமக்களித்த
பான்மையைநன் றெண்ணியெண்ணிப் பாகாக
உருகியன்புப் பிழம்பாய் நின்றார்
தேன்மிகவும் அருந்தித்தனை மறந்தசுரும்
பினைப்போலத் திகழ்ந்தார் நன்றே. 29

**பிள்ளையார் குப்பம் -2.**

குருபரரால் ஆட்கொள்ளப் பெற்றதலை
சிறந்தஅடி யார்கட் குள்ளே
திருவுடைய பிள்ளையார் குப்பத்தில்
திகழ்தாயும் ஒருவ ராவர்
அருளண்ணல் வாய்மலர்ந்த அருட்பாடல்
களையும்அவர் அவனிக் கீந்த
அருளுபதே சங்களையும் அகத்துன்னி
அனுதினமும் குழைவார் நம்தாய். 30

பெரியகுடும் பத்தின்கண் இருந்தாலும்
உணும்போதும் உறங்கும் போதும்
உரியபல வேலைகளைச் செயும்போதும்
ஒருகணமும் இடையீ டின்றிக்
குருபரனார் திருவடித்தி யானத்தை
அனுதினமும் செய்து வந்தார்
அருளண்ணல் அவர்க்குயர்ந்த உபதேசம்
இனிதருள அகத்துட் கொண்டார். 31

இளமைமுதல் அருள்நிட்டை யினிதமர்ந்து
பழகிவந்த அன்னை நாளும்
வளமிகுதம் பெருங்குடும்பத் தினில்நேரம்
வாய்க்கும்போ தெல்லாம் நன்று
* குளம்நடுவில் குறிநிறுத்திக் கோதறுநன்
னிட்டையினில் மூழ்கு வார்கள்
எளிதுகிடைத் தற்கரிய இனியபல
திருவருட்காட் சிகளைக் காண்பார். 32

---

* குளம்-நெற்றி

நிட்டையினில் கிடைத்தபடி நித்தநித்தம்
கவனிப்பார்; நிகரில் லாநற்
சட்டமருள் குருநாதர் தண்ணருளை
நினைந்துநினைந் துருகி நிற்பார்;
மட்டில்பர மானந்த மேலீட்டால்
வாய்திறந்து தமக்குத் தாமே
சட்டபரி பாஷையினில் தரணியுண
ராவண்ணம் பேசிக் கொள்வார். 33

ஓரிரவில் அனைவரும்உ றங்கியபின்
அனைநிட்டை யினிலுட் கார்ந்தார்
தாரணியின் நினைவுகளில் மனம்சுழலச்
சாந்தகுரு பரரை யுன்னி
நாரியெனப் பிறந்தஎனைக் கடைத்தேற்ற
நன்றெண்ணி யாட்கொண் டீர்கள்
சீரியநன் னிலையில்நிலா தலையுமென்றன்
மனம்திருத்திக் காப்பீர் என்றார். 34

அருள்நிட்டை யினில்ஞான குருநாதர்
அற்புதமாய்க் காட்சி தந்தார்
இருபற்று கியபாசப் பகையையறுத்(து)
'ஓம்'எனும்பஞ் சாட்ச ரத்தை
அருளால்நன் றேநிறுத்தின் ஐம்பூதப்
பொறிபுலன்கள் அற்று ஞானத்
திருவார்குஞ் சிதபாதத் தினிற்கூடிச்
சுகித்திடுவாய் என்றார் நன்றே. 35

பலகோடி பிறவிகளாய் ஆன்மாவோ
டிணைந்தொன்றி யுளது பாசம்
மலமெனும்அப் பாசம்வில கிடவேண்டு
மெனில்எளிதில் ஆவ தில்லை
இலகுமொரு மந்திரத்தை நினைந்துமனம்
குவியும்படி சிந்தை செய்து
நலமுறநன் றேநாடின் மனம்குவியும்
நமக்குளிறை காட்சி தோன்றும். 36

எம்மையினும் துணைபுரியும் இறைவன்திரு
வருள்துணையால் எரித்துத் தீய
மும்மலங்களைப்போக்கும் வழியிதுவே;
ப்ராரப்தம் நுகர்ந்து நீக்கு;
நின்மலனும் இறைவனடி த்யானம்செயின்
களங்கமின்றி நிட்டை யின்கண்
செம்மைமிகும் அனுபூதி யடைந்திடுவாய்
என்றருளிச் செய்தார் அண்ணல். 37

அண்ணலிவ்வா றருள்புரிய, அனைசொல்வார்,
அடிகேள்எல் லாமும் செய்ய
எண்ணமுள[து]; ஆனால்என் மனப்பேயோர்
எள்ளளவும் அடங்க வில்லை;
திண்ணமுறக் குவிவதுபோ லுளதுடனே
செப்பரும்ஆ யிரக்க ணக்காம்
எண்ணமுடன் கூத்தாடு கிறதென்ன
செய்வனென முறையிட் டார்கள். 38

துன்பங்கள் அனைத்தினுக்கும் காரணம்அவா;
பற்று நீங்கி விட்டால்
இன்பமய மாயிலகும்;பரமபதம்
சேர்ந்திடலாம் என்ப துண்மை
சின்மய விலாசனென்று சிந்தைகசிந்
துருகிநன்று போற்றி, யான்செய்
கன்மவினை தீர்த்தருள்க எனவேண்டின்
கனற்பொடியாம் என்றார் அண்ணல். 39

என்றனருட் குருநீரே; எனக்குறுதெய்
வமும்நீரே; யான்வே றெங்கே
சென்றிடுவேன்? எவர்பாதம் பிடித்திடுவேன்?
எவரிடத்திவ் வாறு கேட்பேன்?
ஒன்றுமென்னால் இயலாது; தங்கள்திரு
வடிமலரே சரணம் என்றேன்;
நன்றெனக்கு வழிகாட்டி யருள்புரிவீர்
எனஉருகி நவின்றார் அன்னை. 40

குருவருளே குவலயத்தில் குறைவற்ற
பெருஞ்செல்வ மெனக்கொண் டுள்ளேன்
குருவருளுக் காகஇவண் வாழ்கின்றேன்;
இஃதுண்மை என்று கூறி
அருளண்ணல் அடிமலரில் தமதுடைமை
அனைத்தையுமர்ப் பணம்செய் தார்கள்;
அருளன்னை பக்குவத்தை அறிந்தகுரு
நாதர்அருட் கருணை செய்தார். 41

காரணசற் குருதரிச னம்கண்டு
கனிந்துருகிக் கவன மோடும்
ஆரணங்கள் நன்றுரைக்கும் அரியபல
சாதனங்கள் முறையாய்ப் பேணி
பூரணமாம் வடிவமுற்றுப் பொலிவெய்திக்
ககனவட்ட மீது நின்று
பேரருளார் குளிகையுண்டு மவுனசித்தி
பெற்றொளிர்வாய் என்றார் அண்ணல். 42

இந்நிலையில் கனகசபை யினைக்காண்பாய்;
எணில்அமரர் முனிவர் சூழ்ந்து
மன்னுமிரு கரம்கூப்பி மனமுருகித்
தொழுதேத்த நடனம் செய்யும்
முன்னவனார் அருட்காட்சி கண்டிடுவாய்;
மொழியும்இதில் ஐய மில்லை:
பின்னொருவ ரிடமுமிதை விளம்பவொண்
ணதெனவுரைத்தார் ஞானப் பெம்மான். 43

இந்தஉப தேசமெலாம் அப்போது
தாய்க்கெளிதில் விளங்க வில்லை;
சந்தமுறப் பின்னர்பெருந் தவநிலையில்
அமர்ந்தனுப வித்த போது,
பந்தமறப் பரமபதம் பெறஇனிது
பரமகுரு பரிந்து ரைத்த
அந்தமில்சீர் உரையனைத்தும் அனுபவத்தில்
தெளிவாய்க்கண் டகம்ம கிழ்ந்தார். 44

காட்சிமுடிந் ததும்விழித்து நடந்ததனைத்
தையுமுன்னிக் களிப்புற் றூர்கள்;
சூட்சுமமாம் எண்ணஅலை தூயஇன்ப
அலையாகி உலக மெல்லாம்
ஆட்சிபுரி இறையருளை அணுக்கள்தொறும்
நிறைத்திடவும், அன்னை மெல்ல
மாட்சிமிகும் அருட்கீதம் இனிதிசைத்து
மாணருளின் மயமா னூர்கள். 45

அவர்பெற்ற உபதேசங் களின்பெருமை
அனைத்தினையும், அருளால் நன்றே
அவர்க்களித்த அருள்ஞான குருபரரும்,
அவைகளைப்பெற் றூனந் தித்த
தவத்திருவார் அருள்தாயு மன்றியிந்தத்
தாரணியில் அறிவார் யாரே?
உவப்பொடருட் குருபரரை அருள்தாயை
உளத்துன்னிப் போற்று வோமால். 46

## திருச்சாத்தனூர் - 2.

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமெனக்
கலிதீர்க்கும் பெருமான் என்ன
நலமருள உலகமிசை நடமாடும்
கோயிலென ஞானக் கோனுய்
இலகுகண பதியினவ தாரமெனத்
தன்னலம்எள் ளளவு மின்றி
நிலவுவெள்ளை வேட்டியணி சாமியென
நிகரிலுலாச் செய்தார் அண்ணல். 47

நிலவுலகில் அவரினிது லாவிவரும்
காலத்தில் இறுதி யாக
அலகிலருட் கருணையொடும் அடிக்கடிசென்
றடியார்கட் கருள்பா லித்த
பொலிவுமிகு பலஊரில் புனிதமிகு
திருச்சாத்த னூரும் ஒன்றும்
குலவிருடி யாச்சிரமம் போன்றவ்வூர்
கோலமுடன் திகழு மம்மா. 48

விளங்குமந்தத் திருநகரில் இல்லறம்மேற்
கொண்டுதுறவறத்தா ராக
களங்கமில்தம் உடல்பொருளா வியைத்தம்மை
யாட்கொண்ட கருணை யண்ணல்
தளந்திகழ்தா மரையடிக்கே அர்ப்பணித்து
வாழ்ந்துவரும் தக்கா ரான
வளஞ்செறிநன் முத்துரா மப்பெயர்கொள்
ரெட்டியார் வாழ்வைக் கண்டோம். 49

அருட்சட்டத் திருநெறியில்; அணுவளவும்
தவருமல் அருள்வாழ் வாற்றித்
தெருட்பெற்றுத் திகழ்அவர்க்கும் உபதேசம்
செயஅண்ணல் உள்ளம் கொண்டார்;
இருட்பெற்ற பிறவிப்பிணி தீர்வதென்ருே?
இத்தேக மிருக்கும் போதே
மருட்பற்றை நீக்கிஇறை மாணடிசேர்ந்
திடல்நலமென் றுணர்வித் தாரால். 50

இனிகருவில் எய்தாத நிலையடைதல்
வேண்டுமென்றும் எந்தை யண்ணல்
நனைமலர்ச்சே வடிசேர்ந்து ஞானசுகம்
துய்த்திடுதல் வேண்டு மென்றும்
அனித்தியமாம் தேகாதி பொருளிலின்பம்
துய்க்காமல் அருளை நாடி
இனியதவப் பெருநிலையை விழைந்திருந்தார்
எழிற்சாத்த னூர்நன் னம்பி. 51

பிறப்பறுக்க அவர்கொண்ட பேரவா
வின்முதிர்வும் பிரிய மோடும்
சிறப்புடைய உபதேசம் அருளவிழை
தேசிகனுர் உளமும் ஒன்ற
அறக்குரிசி லாம்நம்பி ஒருநாளில்
அதிகாலை விழித்தெ ழுந்து
முறைப்படிநன் னீராடி முழுநலம்நல்
கருள்நிட்டை யினில்அ மர்ந்தார். 52

அலைமோதும் பவக்கடலின் கரைகாண
இயலாமல் அயர்வுற் றேங்கும்
நிலையிலுள தமக்கினிய உபதேசம்
நிமலகுரு அருள்வார் என்னும்
அலகில்பெரு நம்பிக்கை யோடுநிட்டை
யமர்நம்பிக் கருளார் அண்ணல்
பலனருள எண்ணிநம்பிக் குயர்நிட்டை
யினிற்காட்சி பரிந்த ளித்தார். 53

தவத்துருவாம் குருநாதர் தாண்மலர்கள்
பணிந்தேத்திச் சென்னி சூடி
பவக்கடலி னின்றுகரை யேற்றியருள்
வீர்என்னப் பரிவாற் போற்றி
குவித்தகரம் சிரமேவ மேனிபுள
கிக்கவிழி மலர்நீர் பெய்ய
தவித்திடுமென் றனைக்காத்தல் நும்பரமாம்
எனக்கூறித் தாழ்ந்தார் நம்பி. 54

நேமமருள் அண்ணல்வழக் கம்போல
நிறைமுறுவ லோடு நோக்கி
சாமிஎதற் காகஅஞ்ச வேண்டும்உயர்
நிலைவிழையும் தக்கோர் எல்லாம்
ஆமனைத்தும் அவன்செயலென் றேயெண்ணி
அகமுருகி நிற்பார் என்றும்
தீமைபுரி பொறிபுலனின் செயலகற்றி
நீதியொடு திகழ்வாய் என்றார். 55

மெய்ஞ்ஞான பூமியருள் விளைவருள
அசைவின்றிக் காடு வெட்டி
மெய்யென்னும் கவசமுடன் வைராக்ய
வாளேந்தி மெய்ப்போர் செய்தால்
பொய்ம்மாயைத் திரைநீங்கும் புனிதகர
ஞதியசை வின்றி நிற்கும்
உய்வீயும் காரணசற் குருகாட்சி
உண்டாகும் துன்பம் நீங்கும். 56

குருபாதம் கதியென்னக் கொண்டுநிதம்
உருகிநிற்பின் மனம்நிலைக்கும்
மருவுநிழல் போன்றுகுரு மலரடியில்
அன்புமிக வைத்தல் வேண்டும்
பொருவிலன்பே உயிர்நாடி யாம்; அதனைப்
புவியுயிர்கள் பால்செ லுத்தின்
திருவருளின் மயமாக லாம்; பிறவித்
தளைதீர்ந்து போகு மன்றே. 57

அனைத்தும்உடை யவன்திருவ ருட்செயலென்
றேஉண்மை யன்போ டெண்ணி
நினக்குரிய கடமைகளை நீள்பயனில்
கருத்தின்றி நிதமும் செய்தால்
வினைத்தொகைகள் அணுகாமல் விலகிவிடும்
விழுமியபே ரின்பம் வாய்க்கும்
நினக்குரைத்த படிதேர்வாய் சிற்சொருப
நிலைசார்வாய் என்றார் அண்ணல். 58

அன்பொடுப தேசமண்ணல் அளித்தருள
அத்தேனை யுண்ட நம்பி
இன்பமுற்றுத் தன்நிலையை மறந்தண்ணல்
இனிதருளிச் செய்த தூய
பொன்புரைநல் லுபதேசங் களைமீண்டும்
மீண்டுமெண்ணிப் பொலிவார் அண்ணல்
என்புமுரு கும்படிநன் றருளுதிறன்
நினைந்துருகி இறும்பூ துற்றார். 59

ஆனந்த மேலீட்டால் பரவசரா
னார்; அந்த நிலையை மேலாம்
மோனந்த னைக்காணார் மொழிவாரோ
நுகர்ந்தவரே யறிவார் உண்மை;
ஞானந்தம் உருவாகப் பொலியண்ணல்
உபதேசப் படிநம் நம்பி
தானென்று வைராக்யத் துடன்வாழ்ந்தார்
தண்ணருளாம் பயிர்செ ழிக்க. 60

**திண்டிவனம் - 2.**

இவ்வண்ணம் பலவூர்வாழ் மக்களுக்கின்
னருளுரைகள் இனிதே கூறி
உய்வண்ணம் காட்டியருள் அண்ணல்உய
ரெழில்திண்டி வனத்திற் சேர்ந்தார்;
மெய்வண்ணம் உணர்த்துகுரு பரர்வரவை
உணர்வெள்ளி மேடு பேட்டை
ஐவண்ணம் திருத்திடுநல் வைரவபு
ரம்தணியல் அடியார் போந்தார். 61

இதுவரைதாம் சட்டஅநுட்டானத்திற்
பெற்றஅனு பவங்கள் எல்லாம்
மதுரமொழி யருளண்ண லிடம்கூற
வேண்டுமென மனம்கொண் டுற்றார்
இதமொடருள் புரிகுருவை இனிகாண்போ
மோஎன்ன எண்ணித் தூய
மதுமலர்கள் சொரிந்துகனி கனிந்துமணம்
பரப்பினநன் மரங்களெல்லாம். 62

முகில்சூழ்ந்து வான்தண்ணென் றமைந்துமுத்தி
யருளண்ணல் களைப்பை நீக்க
மகிழ்வோடும் இருபாலும் விசிறிகொண்டின்
னடியர்மனம் கனிந்து வீச
சுகம்யாவும் அருள்சுமுகன் ஆலயத்தில்
தூயஅண்ணல் கருணை யோடும்
திகழஅவர் திருமுகத்தில் தெய்வீக
ஒளிமிகுந்து விளங்கக் கண்டார். 63

நனிகனிந்த பெருந்தவத்தால் என்றெண்ணி
அடியர்அகத் தமைதி கொண்டார்
இனிதன்பு வழிபாடு முடிந்தபினர்
மக்கள்தம தில்லம் சேர்ந்தார்
புனிதமிகும் அடியார்கள் புண்ணியஅண்
ணலைச்சுற்றி அமர்ந்திருந்தார்
இனியடியர் நடந்துகொள வேண்டியநன்
முறைகளண்ணல் இயம்ப லுற்றார். 64

வைரவ புரத்திலுறை வைத்தியநா
தப்பெயர்கொள் முதலி யார்தம்
கையிரண்டும் குவித்துநின்று குருபரனார்
அருகிருப்பின் எங்க ளுக்கிங்(கு)
எய்துமச்சம் அணுவுமிலை; செய்மையினில்
உளபோது சஞ்ச லம்சற்(று)
எய்துகின்ற திதுதவிர்க்க வேண்டுமென
அண்ணலிடம் விண்ணப் பித்தார். 65

அருளண்ணல் புன்முறுவல் பூத்தவண்ணம்
அருள்செய்வார் பறவைக் குஞ்(சு) அங்(கு)
இருசிறகை விரித்துப்பறக் கத்தெரிந்து
கொளும்வரைதாய் உடனி ருக்கும்;
இருநிலத்திற் குஞ்சுபினர் தான்பறக்க
இனிதுமுயன் றிடும்; அஃ தேபோல்
பெருகுதிட பக்திவைராக் கியமிருப்பின்
பேறனைத்தும் எய்தற் காகும். 66

இரவுபகல் நமக்கீசன் துணையன்றி
இலைவேறென் றறிதல் வேண்டும்
கரவில்நெறி யினில்நடக்கக் கள்ளமனத்
தினுக்குப்போ தித்தல் வேண்டும்
திருவருட்சட் டத்தின்படி நித்யகர்மங்
களைநன்று புரிதல் வேண்டும்
பரமனருட் பதம்மனத்தில் பதியும்படி
தவநிட்டை பழகல் வேண்டும். 67

அதிகாலை தண்ணீரி லாடிவிட்டால்
மட்டும்அரு ளெய்தற் காமோ?
துதிபாடித் திருநீறு தீர்த்தம்அருந்
திடிற்போது மென்று சொல்லேல்;
கதிகாணப் பவம்தீர வேண்டுமெனில்
கருத்தில்மிக உறுதி கொண்டு
சதமான பொருள்பெற்ற தவசீலர்
துணைநாடிச் சார்தல் வேண்டும். 68

கள்ளமனக் கசடறுத்துக் கள்ளனையுட்
கண்டுகொள வேண்டு மென்றால்,
எள்ளளவு பற்றுமின்றி ஈசனிடம்
முழுதுமொப்ப டைத்தல் வேண்டும்;
வெள்ளம்வரும் போதில்அணை போடஇய
லாதுமுன்பே முயலல் வேண்டும்
உள்ளபொருள் உள்ளபடி உணர்ந்துகொளின்
ஒருகுறையும் உலகி லில்லை. 69

சாமிசொலும் கருத்தனைத்தும் தவறாமல்
செவிமடுத்துள் ளத்துட் கொள்வீர்
பூமியின்கண் பிறந்துவிட்டோம்; கரையேறப்
புனிதம்மிகப் பெறுதல் வேண்டும்;
ஓமெழுத்தை உச்சரித்துள் ளேநாடி
உண்மையொளி காணல் வேண்டும்;
நேமமிகு தவமுயற்சி நிட்டானு
பூதிநல்கும் என்றார் அண்ணல். 70

மோட்சம்விரும் பிடும்ஜென்மம்; முழுதும்தொடர்ந்
திடும்கன்மம்; மூல மான
சூட்சமம்இது வெனவுணர்ந்து, துன்பமின்பம்
சகித்துவந்த தொப்புக் கொள்ளின்
காட்சிபல கிடைத்திடும்;ஆ ணவமாயை
கன்மமெலாம் கரைந்து நீங்கும்;
ஆட்சிபுரி அருட்குருவின் அடிநாடின்
தெளிவுமிகும்; அருளுண் டாகும். 71

அகங்காரம் புத்திசித்தம் மனமாம்அந்
தக்கரணம் ஒடுங்க வேண்டும்;
சகமீது கேட்டிடலாம்; நடைமுறையில்
எய்திடத்தா மதமுண் டாகும்
மிகுமாசை மனத்தினின்று படிப்படியாய்
விலக்குதற்கு வழியொன் றுண்டு;
தகவார்நல் லடியார்க ளோடிருப்பின்
மனமாசு தகரும் என்றார். 72

### அடியார் என்பவர் யார்?

அடியார்கள் என்பவர்யார் எத்தகைய
குணமுடையோர் என்ற ஐயம்
படிமீதிற் பலர்க்கிருக்க லாமன்றே?
ஆதலினுற் பண்பு சான்ற
அடியார்கள் தகுதியினைக் கூறுகின்றோம்
கேட்டுணர்வீர் என்னப் பூமேல்
மடிதீர மிடிதீர வளமேற
உளமுயர வள்ளல் சொல்வார். 73

வினைபெருக்கும் வெளிச்செயல்எல் லாமொடுக்கி
உளத்துள்விசா ரத்த ளுகி
தனைத்தேடித் தனக்குரிய தலைவனைத்தே
டிடும்நாட்டம் கொண்டோ ளுகி
முனர்புரிந்த தவப்பயனுல் ஆருதா
ரம்கடந்து மோனம் நல்கும்
தனைநிகர்ஞா னக்கண்பெற் றுயிர்களையெல்
லாம்இறைவ னுகக் காண்பான்; 74

மேல்நிலையில் முதற்படியாம் இதைப்பெற்று
மேதினிப்பற் றணுவு மின்றி
ஞானவுல கின்நாட்டம் மிகுந்தவனுய்த்
தோன்றிடுவான்; அதற்கு மேலே
ஞானகுரு வின்துணையால் நல்த்வாத
சாந்தவெளி யினைய டைவான்
மேனியின்கண் சலனமின்றி, கரணமெலாம்
செயலழிந்து மெய்யன் பாவான்; 75

அனைவர்துய ரத்தினையும் துடைக்கவல்ல
அருள்ஞானி யாய்த்தி கழ்வான்;
எனினும்இது முத்திநிலை யன்று; பிறர்
துன்பங்கள் எல்லாம் போக்கும்
புனிதன்இவ னேசிலநே ரங்களில்துன்
புற்றழுவான் சிரிப்பான்; ஏன்நாம்
இனிதுசிரிக் கின்றேம்ஏன் அழுகின்றேம்
எனஅறியா திருப்பா னன்றே; 76

பரம்பொருளின் கருணையினை வியந்துசிரிப்
பான்; இனும்தான் பரன ருட்குப்
பரிபூர்ண மாய்ப்பாத்ர மாகவிலை
யெனப்பரிவுற் றழுவான்; பாரில்
உரியருற்றார் வேண்டியவர் வேண்டாதார்
இல்லை; உடை யோனே எல்லாம்;
பரிபூர்ணம் பெற்றிடத்தா னென்ற வொரு
நினைப்புமிலாப் பாங்கில் நிற்பான்; 77

அவனிநனி எண்ணுகின்ற ஏக்கம்:, அவன்
றனையடைய விருப்பம், மேலாம்
அவனருட்குப் பாத்திரனு யிடல்வேண்டு
மெனும்சிறந்த பக்தி, தன்னை
அவனேற்பா னோஎன்னும் கவலையென
இப்படியே மாறி மாறி
அவன்பலவா றுய்எண்ணிக் கொண்டிருப்பான்;
அவன் தன்மை அறிவார் யாரே? 78

இறைவன்கரு ணைத்தன்மை இறைவனின்பே
ரருள்மணம்நன் றிவன்பால் மேவும்
இறைவனருட் கருணையொளி இறைவனருட்
பேரின்பம் இவன்பால் மேவும்
இறைவனருட் பரிபூர்ணம் பெறற்கினும்சா
தனம்தேவை யாத லாலே,
நிறைசித்தில் மயங்காமல் நிமலனடி
நினைவிலொன்றி யிருத்தல் வேண்டும். 79

நிலவுலக இன்பங்க ளால்இழுப
டாமல். நிலை யின்றி யோடும்
அலகில்மன வேகத்துக் குள்ளாகா
தருள்மூல மந்தி ரத்தை
உலைவறநி னைந்தொன்றி உயர்பாத
மலர்நாடி யிருப்பின் முத்தி
நிலைதானே கைகூடும்; இவ்விலக்க
ணங்களுளோன் அடியா னுவன்; 80

என்றண்ணல் அருள,அடி யார்ஒருவ
    ருக்கொருவர் பார்த்துக் கொண்டார்
நன்றிதுகா றும்நாமே அடியர்என
    எண்ணிக்கொண் டிருந்தோம்; நாளும்
*என்றெழுமுன் அதிகாலை நீராடி
    இறைவன்திருக் கோயில் சுற்றின்
ஒன்றெனும்நற் சட்டஅடி யவராய்விட்
    டோமென்ன உன்னி வந்தோம். 81

அடியானென் றேற்றுக்கொளல் அண்ணல்திரு
    வருளிருந்தா லன்றி நம்மால்
படிமீதில் இயல்வதுவோ என்றுபல
    வாறுகப் பேசிக் கொண்டார்
அடைவதற்கு மிகவரிய இத்தகைய
    உயர்நிலையை நம்மால் எவ்வா
றடைவதற்கு முடியும்எனத் தளர்ந்தார்கள்;
    அதுகண்ட அண்ணல் சொல்வார்; 82

தயக்கமனு வேனுமுற வேண்டியதே
    இலை; தக்க வகையி னில்நாம்
முயற்சிசெயின் முடியாத தொன்றுளதோ?
    முயற்சிதிரு வினையாக் கும்;நாம்
அயர்ச்சியறப் பாடுபடின் அரும்பயன்கண்
    டிடலாகும்; அடியார் வேலை
செயற்கேற்ற கூலிஉடை யோன்கொடுப்பான்;
    சிறிதும்தள ராதீர்; என்றார். 83

நிலையான பரம்நாடி நெறிமுறையை
    மறவாமல் நாளும் பேணி
உலைவில்பரம் பொருளோடும் உறவாடி
    உயர்நிலையை எய்தி உய்மின்;
சிலைவேடர் கண்ணப்ப நாயனர்
    திடபக்தி கொண்டு போற்றி
நிலையான முத்தியைஆ றேநாளில்
    அடைந்ததனை நினைவீர் என்றார். 84

---

* என்று-சூரியன்

சாதனமுள் ளோர்க்கிறைவன் அருள்தந்த
சாட்சிபல உண்டிப் பார்மேல்
நூதனமாய்ச் சிந்தித்துத் தளர்வடையேல்
நோன்மைதவ ருது பேணி
மாதனமாய் அருட்கருணை பெற்றுய்வீர்
மன்னுசட்ட அடியார்க் கெல்லாம்
ஆதரவாய் இறைவனருள் உடனிருக்கும்
என்றுசி தந்தார் அண்ணல். 85

அருளடியர் முகம்கதிரைக் கண்டகம
லம்போல மலர, யாரும்
குருபரரின் பெருங்கருணை யினை நினைந்து
கூறரிதாம் மகிழ்வு கொண்டே
இருடியர்பட் டிச்சாமிக் கரஹரவென்
றொலிவிண்ணி லெழமு ழக்கி
மருவினிய அடியவராக் கிடுவீர்என்
றுளமுருகிப் போற்றி னரால். 86

சீரடியர் வாழூர்கள் சென்றபினர்
இருடிபட்டி செல்ல வுன்னி
நேரில்வந்து கடலூரில் ரெயில் நிலையத்
தினிற்காணு கென்னத் தாய்க்குப்
பாரிலுயர் நற்பிள்ளை யார்குப்பத்
திற்கினிது வரையச் செய்தே
ஆரணங்கள் தொழுமண்ணல் அருளிருடிப்
பதிநோக்கிப் பயண மானார். 87

வேறு

எம்பெருமான் இனிதனுப்பி
யுளசெய்தி யினையறிந்து
பைம்பொழில்சூழ் கடலூர்க்கே
கிப்பார்த்துப் பேசிவிடின்
எம்பெருமான் இவண்வாரார்;
நாம்அவண்செல் லாதிருந்தால்
உம்பர்பிரான் இங்குறுவார்
என்றெண்ணி அருளன்னை, 88

தமையீன்ற தாயாரை அழைத்துவண்டி யுடன்சென்று
நமையாளும் பெருமானை அழைத்துவரு கெனநவின்றார்;
மமர்யாவும் தவிர்த்தருள்செய் வள்ளல்புகை வண்டிநின்ற
சமயம்வெளி யினில்வந்து தரிசனம்தந் தருளின ரால். 89

காத்திருந்த அடியரெலாம் கருணைமிகப் பெற்றுவந்தார்
ஆர்த்தியுடன் அண்ணல்அரு ளன்னையின்தா யினையினிது
பார்த்துநம்தாய் வரவிலையோ எனப்பரிவி னொடும்கேட்க,
தீர்த்தர்நுமை யழைத்துவர வண்டியனுப் பினர்என்றார். 90

அருளண்ணல் ஒருசிறிதா லோசித்துப் பின்னொருகால்
வருகிறதாய்க் கூறுங்கள் என்றருளி ரெயிலின்கண்
பெருகருளொ டமர்ந்தார்கள்; பினரண்ணல் வந்திலரால்;
உருகியதை நினைந்தன்னை உறுமேக்கம் மிகப்பெரிதே. 91

## வேலூர் - 3.

அரியநல் உபதே சங்கள்
அனைவர்க்கும் அருளிஅண்ணல்
விரிபுனல் வயலிற் சங்கம்
வெண்முத்தைக் கமலத் தீன
தருநிறை மலரை நன்று
தரைமிசை சொரியச் சாலி
பெருமகிழ் வொடும்வ ணங்கப்
பிறங்குநல் வேலூர் சேர்ந்தார். 92

அண்ணலின் வரவுகண்ட அடியவர் ஆர்வம்மிஞ்சி
தண்ணொளி மதியைக்கண்ட தடங்கட லெனமகிழ்ந்து
பண்ணொலி முழக்கினோடும் பல்லிய முழக்கினோடும்
உண்ணெகிழ் அன்பினோடும் ஊர்க்குள்நன் றழைத்துச்
சென்றார். 93

மூர்த்தியோ சிறிதென் றாலும் கீர்த்தியிற் பெரிதென் றற்போல்
ஊர்ச்சிறி தேயானாலும் உடையவன் அருள்நன் றாகப்
பார்க்குநல் விளக்க மீயும் பதிகளில் ஒன்றாய் மேவி
ஆர்க்கும்எப் போதும் இன்பம் தரும்நல்லூர் அவ்வூர்
ஆகும். 94

அன்புநற் கட்டுப் பாடு
பொறைஅறம் அடக்கம் சீலம்
பொன்புரை வாழ்வைப் பேணும்
பெருந்திறன் புனிதம் நேர்மை
இன்பமார் கணவ னார்க்கின்
துணைசெயும் சீர்மை சான்ற
மன்புகழ் மாத ரார்இம்
மாநிலத் துளர்ஈ துண்மை. 95

அத்தகு நல்லார் தம்முள் அழகுசால் வேலூர் வாழும்
உத்தமர் கமலப் பிள்ளைக் குரியநன் மனைவி யாராம்
பத்தியிற் சிறந்தோர் தாமும் ஒருவராய்த் திகழ்ந்தார் அந்த
வித்தகத் திருவி னருக் கருள்செய விமலர் போந்தார். 96

ஊர்க்கொளி விளக்கா யுள்ள
அம்மையார் அவ்வூ ரின்கண்
சீர்க்கரு ணாளர் வந்த
செய்திகேட் டின்புற் றார்கள்
கீர்த்திகொள் கணவ னாரும்
கேளிரும் சூழச் சென்று
நேர்த்தியொ டிறைஞ்சிப் போற்றி
நிமலரை யழைத்து வந்தார். 97

வேறு

நிட்டையினில் நடந்தசில நிகழ்ச்சிகளி லிருந்தஐயம்
சட்டநெறி தந்தவர்பால் தனிமையினில் இனிதியம்பி
உட்டெளிவு பெறவேண்டும் எனஉன்னி யிருந்திட்டார்
சிட்டர்தமை அன்போடும் தெரிசிக்கப் பலர்போந்தார் 98

மட்டில்பிணி யுடைவர்தம் பிணிநீங்கு மாறடைந்தார்
சிட்டர்அவர் அனைவருக்கும் திருநீறு தரச்செய்து
மட்டில்பிணி நீக்குவித்தார் மனமகிழ்வுற் றவர்சென்றார்
கட்டிலின்கண் அண்ணலமர்ந் தடியர்க்குரை கழறினரால் 99

போதுமென்ற மனமேஇப் புவியில்மிகச் சிறப்புடைத்தாம்
மீதுறுபே ராசையினல் மிகுதுன்ப முறல் தீதாம்
நாதன்அருள் இருப்பின்நமக் குரியநமை நாடிவரும்
போதனையின் படிநடந்தால் புவியில்எலாம்
பெற்றிடலாம். 100

நாமடைய வேண்டுவது முடிவில்லா நற்பொருளாம்
நேமிமிசை இறையருளே நிலையான பொருளாகும்
நேமமொடிப் புவியின்மிசை நிதம்நிட்டை நனிபேணின்
ஓமுருவன் பதம்சேரத் தாமதமும் உளதாமோ? 101

மனதினுக்கு நற்பாடம் பாண்போடும் சொலல்வேண்டும்
நனிசிறந்த இவ்வுலகில் நல்லறமே யெனவுணர்வீர்
புனிதமிகும் அவ்வறமே பொன்றாஇன் பம்கொடுக்கும்
இனிதறிவொ டருள்பொருந்தி இணையில்துணை
யாகிநிற்கும். 102

இவ்வண்ணம் வாழ்வாற்றின் இறைவன்மிக நேயமுடன்
உய்வண்ணம் அருள்புரிவன் ஒருசிறிதும் ஐயமிலை
செய்வண்ணக் கண்ணாடி போல்மனதில் தெளிவுபெறின்
மெய்வண்ணம் உணரல்மிக எளிதென்றார் அருளண்ணல் 103

அருள்ஞானத் திருமேனி கொண்டவனி மிசைபோந்த
குருநாதர் அடியரன்பர்க் கிவ்வாறு கூறியபின்
திருநீற்றின் மகிமையினைச் செப்புகின்றோம் கேண்மினென
அருளோடும் செப்பலுற்றார் ஆர்வமுடன் பலர்கேட்க 104

திருநீற்றின் மகிமை

பரிபூர்ணர் திருநீறு பார்மிசையெல்
லாநலமும் கூட்டு விக்கும்
அருநோய்கள் அறநீக்கும்; அருளோடு
பொருள்அளித்தா னந்தம் நல்கும்
இருள்நாடு மனத்தரையும் இன்னருளார்
நன்னெறிக்கண் ஈர்த்துப் பேணும்
தெருள்நாடி இன்பமுறச் சிந்தையினைத்
திருத்திஉயர் செம்மை கூட்டும். 105

திருநீற்றால் தீராத நோயில்லை
எனத்துணிந்து செப்ப லாகும்
திருநீற்றால் ஓடாத பேயில்லை
எனத்திடமாய்ச் செப்ப லாகும்
திருநீற்றால் தீராத தீவினைக
ளில்லையெனச் செப்ப லாகும்
திருநீற்றால் எய்தாத நலமில்லை
யெனஎன்றும் செப்ப லாமே. 106

வையமுய்ய வருபெருமான் வண்திருநீ
றெண்ணில்பல வளமும் நல்கும்
பொய்யடியார் உறவகற்றிப் புனிதமுடை
யார்உறவைப் பூணச் செய்யும்
செய்யபுகழ் பொறைபுனிதம் சேர்த்துநிறை
சிறப்பனைத்தும் அருளி யாளும்
மெய்யுணர்வைக் கூட்டுவிக்கும் மேலான
தவத்தினிலுய்த் தின்ப மூட்டும். 107

அருள்திருநீ றுகமிதை அகம்புறமும்
மிகுதூய்மை யாக்கு விக்கும்
அருள்திருநீ றுசையெலாம் நீறுக்கி
அன்புநலம் கூட்டு விக்கும்
அருள்திருநீ றகப்பற்றைப் புறப்பற்றைக்
களைந்தருளின் மயமா யாக்கும்
அருள்திருநீ றுணவமா யாகன்மம்
கனற்பொடியாய் ஆக்கு மன்றே. 108

பக்தியினை மிகுவித்துப் பக்குவம்செய்
விப்பதருள் திருநீ றுகும்
சத்தியினை மிகுவித்துத் தாரணியைத்
திருத்தல்அருள் திருநீ றுகும்
சித்தியெலாம் மிகுவித்துச் செம்மையெலாம்
செய்வதருள் திருநீ றுகும்
முத்திநலம் தந்தருட்பே ரின்பத்தில்
மூழ்கவைத்தல் திருநீ றுமே. 109

ஒளிவிளக்கி இருள்விலக்கி உயிர்க்கிறையைக்
காட்டுவது திருநீ றுகும்
எளிமையினை இனிமையினை இறைமையினை
விளக்குவது திருநீ றுகும்
தளிதொறும்நற் றலந்தொறும்நன் றேதிகழும்
தனம்தூய திருநீ றுகும்
அளிவிளங்கும் உளம்அருளி அருளின்பம்
அருள்வதருள் திருநீ றுமே. 110

எல்லாக்கா லத்திலும் இனிதணியத்
தக்கதருள் திருநீ ருகும்
எல்லா உயிர்த்தொகைக்கும் இடர்நீக்கிப்
பேணவல்ல தருள்நீ ருகும்
எல்லாமும் சென்றெடுங்கும் இடத்தைவிளக்
கிடுவதருள் திருநீருகும்
எல்லாவற் றிலும்என்றும் சிறந்துதிகழ்
இனியசெல்வம் திருநீ ருமே. 111

ஏகாந்த மாயிருக்கும் அருளாளர்க்
கினியதுணை திருநீ ருகும்
வாகார்ந்த பயனனைத்தும் வையமிசை
வழங்குவது திருநீ ருகும்
மோகாந்தம் சோகாந்தம் கூட்டிமுத்திக்
கீர்ப்பதருள் திருநீ ருகும்
யோகாந்தம் ஞானந்தம் கூட்டியரு
ளொளிவிளக்கல் திருநீ ருமே. 112

உலவாமெய்ப் பக்தியினை உளும்புறமும்
கூட்டுவது திருநீ ருகும்
உலவாப்பே ரன்பினையெங் கும்பெருக்கி
உயர்வருளல் திருநீ ருகும்
உலவாப்பே ராற்றலையெல் லாம்கூட்டி
ஓங்குவித்தல் திருநீ ருகும்
உலவாப்பே ரின்பவமு தினிதூட்டிப்
புரப்பதருள் திருநீ ருமே. 113

குருகருணைக் காளாக்கிக் குறைகளெலாம்
தவிர்ப்பதருள் திருநீ ருகும்
உருகிடவைத் துருகிடவைத் துள்ளத்தின்
பூற்றருளல் திருநீ ருகும்
பருகுதொறும் தெவிட்டாப் பரானந்தம்
கூட்டுவித்தல் திருநீ ருகும்
முருகுகமழ் முளரிமலர்ச் சேவடியில்
ஒன்றவைத்தல் திருநீ ருமே. 114

வேறு

குருபரனார் இவ்வாறு கூறியவண் குழுமியுள
அருளடியர் அன்பர்களுக் கருளாசி இனிதருளி
தெருள்நிறைநல் லருட்சட்டச் செந்நெறியை நனிபேணி
அருள்நலமும் பொருள்நலமும் அவனிமிசை
அடைவிரென்றார். 115

திருமேனி தாங்கியந்தச் சீரூரார்க் கினிதருளும்
அருளுரையே இறுதியுரை எனவூரார் அறிவாரோ
குருபரனார் எப்போதும் போலுரைகள் கூறுகிறார்
அருளுடன்என் றேயெண்ணி யிருந்தனர்அவ் வூரடியார். 116

அனைவரும் கலைந்நுசென்ற பினர்அம்மை யார்எழுந்து
நனிகனிந்த உளத்தோடும் ஞானகுரு தாள்வணங்கி
இனிதிவ்வுயிர் கடைத்தேறற் கெளியவழி கூறிடுவீர்
இனிபிறவி யான்வேண்டேன் உபதேசம் அருள்விரென்றார்.
117

இவ்வுலகத் துள்ளபொருள் ஏதொன்றும் யான்வேண்டேன்
அவ்வுலகச் சுகபோகம் அடைந்திடவும் யான்விழையேன்
செவ்வியநும் திருவடிகள் சேர்ந்துய்ய விரும்புகிறேன்
உய்வருளும் உபதேசம் உரைத்தருள்வீர்
எனத்தொழுதார். 118

படுக்கையினிற் சாய்ந்தபடி
பரிந்தண்ணல் இயம்பிடுவார்
இடுக்கணற்ற ஞானநெறி
இயம்பும்வணம் வேண்டுகிறீர்
தடுப்பணுவும் இன்றியெங்கும்
கலந்திருக்கும் தனியிறையோ(டு)
ஒடுக்கமுற்றுட் கலப்பதுவே
யோகமென்றார் உயர்பெரியோர். 119

அவ்வின்ப நிலையடையச் சாதனமே அருள்நிட்டை
செவ்வியகண் மூடுவதும் சிந்தையினை யொடுக்குவதும்
திவ்வியமாம் யோகமன்று; தனுள்இறையைக் கண்டுபினர்
எவ்விடத்தும் பேதமின்றிக் காணும்நிலை பெறல்யோகம். 120

சாத்திரம்கற் பதனுலும் பூசைபுரி வதனுலும்
சூத்திரங்கள் காணரிது; சூத்திரங்கள் கண்டுணரச்
சாத்திரங்கள் பூசனைகள் சாதனங்க ளாயமையும்;
பாத்திரத்தைச் சுத்தி செய்து பதிநாட்டம்
வளர்த்திடுவீர். 121

நீர்வேட்கை யுடையொருவன் நீருக்கலை வதுபோலப்
பேரருள்வேட் கைமிகுந்தோன் பேரருளுக் கலைபோதில்
தாரணியோர்க் கெனவிதித்த ஆசார அனுட்டானம்
சீருறவே கைக்கொள்ள வேண்டுமெனல் அவற்கில்லை. 122

எப்பொழுதும் அருள்நாட்டத் தினிற்கண்ணும் கருத்துமுடை
அப்பெரியோன் புறத்தேசெய் செயல்அவனைப் பாதிக்கா
எப்பொருளி லும்விருப்பும் வெறுப்பும்அவ னுக்கில்லை
எப்பொழுதும் சினம்காமம் மதமாதி அவனெய்தான். 123

அவனுள்ளம் எப்போதும் அமைதியுட னேயிருக்கும்
அவன்மூலம் அருட்கடலின் ஒளியைஉல கினர்காண்பர்
அவன்பிரம ஞானியென ஆன்றேர்ஒப் புக்கொள்வர்
அவன்நிலையை அடையஉளத் துருக்கம்மிக
மிகவேண்டும். 124

எனப்பிரம ஞானியிலக் கணத்தைஇனி தருட்குரலால்
மனத்துருக்க முறுமாறு வள்ளல்திரு வாய்மலர்ந்தார்
தனித்தவநாட் டத்தோடும் சாந்திவிழை மனத்தோடும்
உனற்கருமுக் கத்தோடும் கேட்டம்மை உள்ளுவந்தார். 125

குருபரராய் வந்துகடைத் தேறும்நெறி கருணையுடன்
அருளியதை மிக்கவிடாய் கொண்டவன்நீர் அருந்துதல்போல்
அருமையுற ஏற்றம்மை ஒவ்வொன்றுய் அகத்துணர்ந்து
மருவுமனத் தூறியெழும் பேரன்பின் மயமானுர். 126

பக்குவமிக் குற்றவர்க்குப் பரிந்தருளக் குருவுருவாய்த்
தக்கபொழு தினிற்கடவுள் வந்தருள்வர் எனச்சாற்றும்
தக்கவர்சொல் உண்மையென உணர்ந்தம்மை சாந்தியுற்று
மிக்கவுருக் கத்தோடும் விமலரைத்து தித்தனரால். 127

## குருநாதர் துதி

திருவரு ளெனும்பாற் கடலினைக்கடந்து
திரட்டிய செம்மைசால் அமுதே
ஒருவரும் உணரற் கரியமெய்ஞ் ஞான
உருவொடும் உள்ளம்வாழ் குருவே
கருவறை யினியும் கருதொணு வகையிற்
கருணைசெய் தருளும்நா யகரே
பருவம தறிந்து பக்தர்கட் கருள்செய்
பரமரே பழம்பெரும் பொருளே. 128

பழம்பெரும் பொருளிற் பழம்பெரும் பொருளே
பக்தருள் ளாணவ மென்னும்
கிழங்கினை யடியோ டகழ்ந்தெறி ஞானக்
கிழவரே குமரரே அனைத்தும்
வழங்கிடும் இணையில் வள்ளலே மனத்தின்
துள்ளலைத் தவிர்க்கவல் லவரே
முழங்குபல் லியம்சூழ் இருடிநன் னகர்வாழ்
மூர்த்தியே நேர்த்திசால் குருவே 129

ஆர்த்திமிக் குடைமெய் யன்பர்கள் உளத்தில்
அமர்ந்[து]அவர் இட்டமெல் லாமும்
பூர்த்திசெய் பவரே புண்ணியம் மிக்க
பொருளையும் அருளையும் கொடுத்து
நேர்த்தியாய் ஞான அருளர சாளும்
நிமலரே நிர்க்குணு கரரே
கீர்த்திமிக் குடைய இருடிநன் னகர்வாழ்
கிருபைசால் மோனசற் குருவே. 130

தேவர்கள் குழுவும் முனிவரர் குழுவும்
தினம்மிகு மகிழ்வுடன் போற்ற
மூவர்கள் வாழ்த்த முத்தர்க ளாசி
மொழிந்திடத் திருவருட் சட்டம்
பூவுல கிதனில் வழங்கினீர் என்றன்
புன்மையெல் லாம்பொறுத் தீர்என்
நாவினு லுமது கருணையின் சிறப்பை
ஞாலமேற் கூறிடற் காமோ? 131

சஞ்சலம் அனைத்தும் தவிர்த்துநும் தாளே
தஞ்சமென் றுற்றசி ரடியார்
நெஞ்சகம் கோயி லாக்கொடுள் ளமர்ந்து
நீள்பிற விப்பிணி நீக்கி
அஞ்சலென் றருளார் திருவமு தருத்தி
ஆனந்த மோனவீ டருளும்
செஞ்சுடர்ப் பிழம்பே இருடிநன் னகர்வாழ்
தெய்வமே என்னருட் குருவே. 132

வேறு

என்றுதுதித் துளமுருகி
எரியிலிடும் இழுதென்ன
நன்றுபரி பக்குவமுற்
றருள்ஞான குருமணியின்
பொன்றலில்சீர் அருள்போற்றிப்
பொற்பதம்பன் முறைஇறைஞ்சித்
துன்றுமந்தப் பேரருளில்
தோய்ந்தினிது துலங்கினரால். 133

நன்மாணுக் கனைக்கண்ட நல்லாசி ரியன்போன்று
பொன்மானும் உளங்கொளம்மை புனிதமனத் தினைக்கண்டு
பொய்ம்மாயை கடந்துண்மைப் போதமுற வேண்டுமெனப்
பெம்மான்பே ரருளோடும் நல்லாசி வழங்கினரால். 134

மாலையினில் அண்ணலுக்கு வழக்கம்போல் வழிபாடு
சீலமுடன் அடியார்கள் செய்தருள்தீர்த் தம்நீறு
சாலமகிழ் வோடேற்றுர்; சலசலப்போர் பால்தோன்ற
ஏலுமொரு தாய்க்கொருசேய் எய்துபிணி யறிந்தயர்ந்தார். 135

பிணிகடுமை யாகியுள சேயினைப்பெம் மான்தாளில்
எணில்வருத்தத் தோடுமிட்டுப் பேணிடுமா றினிதிறைஞ்ச
மணின்துயரை மாற்றவந்த மாஞான குருபரனுர்
கணின்நிறைந்த கருணையொடும் நோக்கஅந்நோய்
விலகியதால். 136

அவதியுற்ற அக்குழந்தை அனைவருமே வியக்கும்வணம்
உவகையுடன் ஒருநொடியில் எழுந்தோடி விளையாட
தவலருஞ்சீ ரடியார்குழாம் தனிமகிழ்வுற் றார்வமொடும்
புவனியுய்யப் போந்தகுரு நாதர்க்கர ஹரவென்றார். 137

அண்ணலம்மக் களைநோக்கி அருள்மாரி பொழியலுற்றார்
புண்ணியபா வம்சேர்ந்து புனர்ஜென்மம் உயிர்க்கீயும்
புண்ணியம்முன் செய்தவர்கள் நற்குடியிற் போய்ப்பிறப்பர்
எண்ணரும்பா வம்புரிந்தோர் இழிந்தபிறப் பெய்திடுவார். 138

அறஞ்செய்ய விரும்பென்ன அவ்வையினி தருளியுளார்
அறஞ்செய்யப் பொருளில்லை யென்றகத்தில் நினையாதீர்
அறமென்ப தகம்தூய்மை யாதலென்றார் வள்ளுவனார்
பிறவுயிர்க்குத் தீங்கெண்ணா தருள்வாழ்வு பேணலறம். 139

உணும்உணவில் ஒருபிடிசோ றேனும்வறி ஞர்க்கிடுவீர்
மணில்வறிஞர் பசிபோக்கின் மகிழ்வெய்தும் பரமனுளம்
உணும்போதொர் கைப்பிடியென் றோதியுளார் திருமூலர்
அணுவளவு நொய்யேனும் அளிப்பிரென்றார் அருணகிரி. 140

கொடுக்கும்பொருள் களின்அளவைக்
கொண்டமைவ தில்லையறம்
கொடுப்பவரின் உளத்தன்மை
யினைப்பொறுத்தே யமைவதறம்
கடற்புவியில் கணபதிக்குப்
பூசித்த அறுகுதனைக்
கொடுத்தருள்பெற் றதைநவிலும்
இனியவிநா யகர்காதை. 141

ஆதிசங்க ரர்க்கொரணங்(கு) அருநெல்லிக் கனியளித்துக்
கோதில்மிகு பயனடைந்த கதைகூறக் கேட்டுள்ளோம்
தீதில்நலோர்க் கிட்டபயன் சிறந்தொன்று நூறாகும்
பூதலத்திற் செயற்பால தறமென்னப் புரிந்துகொள்வீர். 142

ஒருகிழவி தனையறியா தோரடியார்க் கோரரிசி
தரவதனாற் சிவலோகத் தனிக்காட்சி கிடைத்ததென்பார்;
தரணிதனில் நல்லோர்கட் கிட்டஅறம் தனித்துணையாம்
ஒருவருக்கும் தெரியாமல் அறம்புரிதல் உயர்வாகும்.. 143

நிலையில்லாப் பொய்வாழ்வில் நிலைத்தஅறம் செயல்வேண்டும்
பலபெரியோர் களும்அறத்தின் பயன்கூறி யுளர்என்றார்
பலரும்அதைக் கேட்டுநம்மால் இயன்றஅறம் பாரிற்செயல்
நலமெனஎண் ணியவாறு நண்ணினர்தம் இலங்களுக்கே. 144

மறுதினம்கா லையிலன்பர் சிலர்கூடி வாழ்வில்நமக்(கு)
உறுதுணையா யிருக்குமண்ணற் கொருமடம்இங் கமைப்பதென்றும்
அறமினிய துணையாகும் என்றண்ணல் நேற்றுரைத்தார்
அறமிதனிற் சிறந்ததுண்டோ என்றும்பொருள்
அளித்தனரால். 145

கனிவொடந்தப் பொருளண்ண லிடம்தரற்குக் கமலபிள்ளை
இனிதுமுடிந் தெடுத்துவைத்தார் இலத்தரசி இதையறிந்து
புனிதவள்ளல் எவரிடமும் பொருளேதும் பெறஇசையார்
நனிஇதைநீர் அறியீரோ எனநவின்றார் பிள்ளையிடம். 146

அண்ணல்தொட மாட்டார்என் றவனியெலாம் நன்கறியும்
அண்ணற்கிதை நாமளிக்க வில்லை; அடி யவர்போந்தால்
உண்ணஅமர்ந் துரையாட உறங்கஇடம் வேண்டுமென
எண்ணித்தரும் இதைஅண்ணல் ஏற்பார்என் றார்பிள்ளை. 147

அடியார்கள் பலர்அண்ண லிடம்சென்றுள் ளன்பினொடும்
படியின்மிசை பாதமலர் பணிந்திறைஞ்சி நின்றார்கள்
அடியவர்கள் தங்கவொரு மடம்அண்ணல் பெயரால்இவ்
விடம்நிறுவப் பொருள்கொ ணர்ந்தோம் ஏற்றருள்கென்
றார்பிள்ளை. 148

அப்படியா? என்றண்ணல் அஃதொன்றும் செயவேண்டாம்
இப்பொழுது சாமிக்கு மடம்ஏதும் தேவையிலை;
இப்படியில் பொருள்புகழுக் கிச்சாமி வரவில்லை
ஒப்பொடடி யவர்தேரின் அஃதொன்றே போதுமென்றார். 149

இச்சாமிக் கெதுமிகவும் பிடிக்குமென இனிதுணர்வீர்
மெய்ச்சார்புற் றடியர்மிக வொற்றுமையாய் வாழ்வாற்றி
பொய்ச்சார்பு தவிர்த்தொருவர் பிறர்க்குதவி புரிபவராய்
உட்சார்ஐ யம்தவிர்ந்து மெய்யுணர்தல் வேண்டுமென்றார்.
150

பிறஅடியர் தம்வாழ்வில் இடருற்றுத் தளருகையில்
உறும்உடுக்கை யிழந்தவன்கை போலஉத விடல்வேண்டும்
பொறிபுலன்க ளுருகஅருட் பாடல்பல புனிதமுடன்
முறையுடனும் பாடிஇறை புகழ்மொழிதல் வேண்டு
மென்றார். 151

தமைச்சுற்றி யுள்ளவர்க்குத் தக்கநல்ல வழிகாட்டி
தமையடைவோர்க் காறுதலைத் தரும்தலைவ ராய்விளங்கி
அமைசெயல்க ளிறைசெயலாய் அகமகிழ்வி னுடன்ஆற்றி
அமுதனைய நெறிச்சிறப்பை அவனிக்குணர்த் திடல்
வேண்டும். 152

அடியர்ஒரு வருக்கொருவர் அடிக்கடிகா ணுதல்வேண்டும்
அடிக்கடிகா ணற்கியலா விடின்அன்புக் கடிதத்தால்
அடிக்கடிநற் றொடர்புகொள வேண்டும்உயர் அன்பார்ந்த
அடியவரே உறவினரென் றகத்தெண்ண வேண்டு
மென்றார். 153

மெய்ப்பொருள்மன் னவர்தம்மைக் கொன்றவெய்ய பகைவனையும்
ஒப்பில்உரை யால்'தத்தா நமர்'என்ன உரைத்தினிதே
இப்படியில் எத்துயரும் அவர்க்கெய்தா வணம்காத்த
செப்பமிகும் அருட்டிறனைச் சிந்தித்தல் வேண்டு
மென்றார். 154

அடியவர்கள் எவ்வினத்தார் எம்மதத்தா ரானாலும்
உடன்பிறந்தார் உறவினர்போல் உன்னிப்பழ குதல்வேண்டும்
அடியவர்கள் நல்லுறவும் அடியவர்தம் ஒற்றுமையும்
படியிலிந்தச் சாமிக்கு மிகவிருப்பம் எனப்பகர்ந்தார். 155

வேண்டாமை யன்னவிழுச் செல்வமிந்த உலகிலில்லை
யாண்டுமதை நிகர்த்தசெல்வம் இலையென்றார் திருக்குறளார்
ஈண்டுபொருள் திரட்டுசெயல் இச்சாமிக் கேற்றதன்று
வேண்டுதல்வேண் டாமையிலான் அடிசேர விரைவி
ரென்றார். 156

ஒப்புயர்வில் முத்தியும்வேண்
டாதுலகில் உயிர்த்தொகையைச்
செப்பமுறச் செயல்வேண்டித்
திருவருட்சட் டம்பரப்பும்

இப்புவித ரோபொருளைப்
புகழையிவண் விழைந்திடுவார்
அற்பமன்றே அவர்க்கிதென
அவணிருந்தோர் உரைத்தனரால். 157

அண்ணல்புகழ் மேன்மேலும் பரவியதிவ் வவனியின்கண்
உண்ணெகிழ்தெய் விகபக்தி யோடுவணங் கினர்அடியார்
தன்னருளை விளைவிக்கும் கோயில்களில் பொருள்நசையால்
தன்னருளின் விளைவுகுறை வதைநினைந்தார்
ஒருசிலபேர். 158

வேறு

மெய்ஞ்ஞான குருபரனார் திருமேனி
நிலைகண்ட வேலூர் அன்பர்
உய்ஞான வழிகாட்டும் உத்தமனார்
இந்நிலையில் வேறூர் செல்லின்
தெய்வாதீ னமதாக அடக்கமுற
நேர்ந்தால்நாம் செய்வ தென்னே
மெய்வாடித் தளர்ந்தஇந்த நிலையில்அனுப்
பிடுதல்நல மல்ல என்றார். 159

நல்லதிருத் துறைப்பூண்டி கொக்கால
டியில்வாழும் அடியார் தாமும்
தொல்லுலகைத் திருத்தவந்த தூயரிவர்
இருக்கும்வரை தொண்டு செய்வோம்
சொல்லரிய முத்திஇவர் எய்தினிங்கு
தூயசமா தியைஅ மைப்போம்
நல்லடியர் பலர்போற்றி நலமெய்த
வாய்ப்பாக இருக்கும் என்றார். 160

பலருமிவ்வா றுய்ப்பேசிப் பரமகுரு
நாதரைஇப் பதியின் கண்ணே
நலமுறத்தங் கச்செய்வோ மெனத்தீர்மா
னித்ததற்கா வனசெய் தார்கள்
அலகிலரு ளண்ணலறிந் தனைவரையும்
அழைத்திந்தச்சாமி யிப்போ[து]
உலவும்நிலை விடுத்துச்சமா தியையடையும்
என்றுன்னி னீரோ என்றார். 161

அவ்வாறிப் போதிங்கண் எதுவும்நட
வாதென்ன அருளி யண்ணல்
செவ்வாய்மை யுடையடியர் வாழ்பிறஹர்
செலல்வேண்டும் வண்டி யொன்றை
இவ்வூரி னின்றேகக் கொணர்மின்எனப்
பணித்திடவும் ஏக்க முற்றே
அவ்வோடுவ் வும்மவ்வு மாயொளிர்வள்
ளலைப்பணிந்தார் அடியா ரெல்லாம் 162

இருவிழியும் மழைபொழிய இதயம்மிக
மிகவுருக அடியார் அன்பர்
அருளண்ணல் சீர்போற்றி அன்னையைப்பிரி
சேய்களைப்போல் அண்ணல் நீவிர்
அருளொடுமீண் டிவ்வூருக் கெழுந்தருள
வேண்டுமென்றுள் ளன்பால் வேண்ட
குருபரனுர் அருளார்ந்த குறுநகையொ
டடியவர்பால் கூற லானுர். 163

அப்பதிக்கு மீண்டும்வரப் போவதில்லை
யெனவுணர்ந்த அருளார் அண்ணல்
ஒப்பில்பரி பூரணனுர் அருளிங்குப்
பூரணமாய் உள்ள தென்றும்
செப்பரிய திருநீற்றின் பெருமையிவண்
திகழுமென்றும் திருவாக் கீந்து
மைப்படியும் பொழில்வேளூ ரினிலிருந்து
மாணடியர் வாழூர் சென்ருர். 164

பல ஊரில் உபதேசம்

அருட்சட்ட அடியார்கள் பெருமளவில்
வாழூர்கட் கண்ணல் சென்ருர்
அருளண்ணற் கறுபாஞண் டாகியும்நல்
லடியார்பால் கொண்ட அன்பால்
அருட்கருணை யோடுதம தூருக்கெழுந்
தருளியதை அறிந்து மக்கள்
கரைகாணுப் பேரன்பி ஞேடினிது
வரவேற்றுக் களிப்புற் ருர்கள். 165

இரவில்நிலாக் காலத்தில் அண்ணல்பொது
வானஇடத் தமர்ந்தி ருப்பார்
அருகுளபல் லூரவரும் அகுளடிய
ரும்பிறரும் அங்கண் சூழ்வார்
அருட்குரிசில் அருளுபதே சம்கேட்க
அவராவ லோடி ருப்பார்
பெருகுறுமக் களைக்கண்ட பெருமானுர்
உளம்கருணை நிறைந்து மேவும். 166

அன்ருட வாழ்க்கைக்கே அல்லலுறும்
மாந்தர்களான் மார்த்தம் பற்றி
நன்றேசிந் திப்பதெங்கே? ஞாலமிசை
நோயின்றி அமைதி யாக
ஒன்ருன இறையருளில் நம்பிக்கை
யோடுலகில் வாழ்தல் வேண்டும்
என்றேநன் றுளம்கொண்டு விடியலில்நீ
ராடுகென இயம்பு வார்கள். 167

எங்கணும்தண் ணீர்கிடைக்கும் அதிகாலை
துயிலெழுந்து நன்று மூழ்கி
பொங்குபுனல் நதிக்கரையில் குளக்கரையில்
பொலியுமைந்து கரமுன் னேனை
துங்கமனத் தால்போற்றி மூன்றுமுறை
வலம்புரிந்து துதித்தி றைஞ்சின்
சங்கடங்கள் தீரும்; உடல் நலமெய்தும்
தக்கநல்வாழ் வமையும் என்பார். 168

நல்லோர்கள் பெரியோர்கள் செய்நன்றி
மறவாமற் பேணல் வேண்டும்
பொல்லாத கொலைகளவு பொய்சூது
மருவாமற் பொலிதல் வேண்டும்
தொல்லூழ் விடாதுநமைச் சூழ்ந்துதுயர்
தருமென்ன உணர்தல் வேண்டும்
நல்லார்கள் உறவினையே நாடியென்றும்
நலம்தேடிக் கொள்ளல் வேண்டும். 169

முந்திவிதைத் துள்ளதறு வடைசெய்ய
மூதுலகில் தோன்றி யுள்ளோம்;
வந்ததிறை தந்ததென மகிழ்வோடொப்
புக்கொள்ள வேண்டும்; மேலும்
பந்தம்விரிந் திடஆசைப் படலேனோ?
அலைந்தோடித் திரிவ தேனோ?
சொந்தமென இறையருளை எய்தாமல்
இங்குழலல் நலமோ என்பார். 170

அண்ணலரு ளுரைகேட்ட மக்களெலாம்
அரஹரவென் றெலிமு ழக்கி
மண்ணுலகில் சாமியென வருவோர்கள்
பார்த்துவிட்டுப் போவா ரன்றி
நண்ணிநமக் கிதுபோல நல்லுரைகள்
அருளிநமைத் திருத்து வாரோ?
புண்ணியத்தி னால்நமக்கிப் புனிதர்கிடைத்
தார்; இனிநாம் உய்வோம் என்பார். 171

படித்தவர்கள் படித்தறிந்து கொள்வார்கள்
படிக்கத்தெரி யாத வர்க்கும்
படித்தவர்க்கும் புரியும்படி பக்குவம்மிக்
கெய்தும்படி இவர்சொல் கின்றார்
பொடித்துநம்வி னைப்பகையைப் புனிதமிகச்
செயஇவர்போந் துள்ளார் என்பார்
இடித்துரைத்துத் திருத்தியரு ளின்பம்நமக்
கியவந்தோர் இவரென் பாரால். 172

அருளண்ணல் உரையின்னும் கேட்போமென்
றமைதியொடும் இருப்பார் மக்கள்
வெருவுறச்செய் சினம்கொடிய கடுஞ்சொலிவை
மருவாமல் விலக்கல் வேண்டும்
மருவுமவை உடல்நலமும் உளநலமும்
கெடுக்கும்பிறர் மனத்தில் தங்கி
விரவுமன விகற்பமுண்டாக் கிடும்ஆத
லால்விலக்கு கென்பார் அண்ணல். 173

உலகில்நிலை யாகஎன்றும் வாழ்வோமென்
றுன்னியுவந் திருக்க வேண்டாம்
நிலவுமக்கள் மாடுமனை வீடுசுற்றம்
நிலையன்றென் றுணரல் வேண்டும்
நிலமிசைவாழ் ஆயுள்முடிந் தாற்பினொரு
நிமிடமிருந் திடுதற் காமோ
அலகில்பொருள் களில்ஒன்றும் கொண்டுசெலற்
காமோ இஃ தறிவீர் என்பார். 174

இந்தஉட லுளபோதே இனிதுபக்தி
பேணியற மியற்றல் வேண்டும்
சந்தமுற நாளைசெய லாமென்னத்
தள்ளிவைத்தல் நன்றன் றென்பார்
எந்தஉயிர் மீதும்குறை கூறுதீர்
தன்குற்றம் தானு ணர்ந்தால்
எந்தஒரு குறையும்பிற ரிடத்துள்ள
தெனக்கூற இயலா தென்பார். 175

பிறரிடத்தில் உளகுறையைப் புறத்தினிலே
பேசுகின்ற பிழைசெய் வோர்கள்
அறநெறியில் தவறியதற் காகநர
கினில்துடிப்பர் ஆத லாலே
பிறர்குறைகள் காணுமல் உயிர்களின்பால்
அன்போடும் பிறங்கல் வேண்டும்
அறநெறிநின் றன்பொடுவாழ்ந் தால்அருள்பெற்
றின்புறலாம் அறிவீர் என்பார். 176

எழுதிவைத்த சித்திரங்கள் போல்மக்கள்
இருந்தண்ணல் உரைகள் கேட்பார்
பழுதிலவர் ஊக்கம்கண் டருளுரைகள்
பரிந்தண்ணல் பின்னும் சொல்வார்
செழுநிலத்தில் நன்றிதெனத் தீதிதெனத்
தெரியாமல் தினமும் வாழ்ந்தால்
முழுநலமுண் டாமோ? நன் முத்திபெற
நாடிடவேண் டாமோ என்பார். 177

அன்புநெறி கடைப்பிடிப்பின் அதர்மங்கள்
நீங்கிவிடும்; அறவாழ் வெய்தும்
துன்பனுவும் தொடராமல் அகன்றுவிடும்
தூய்மைபெரு கத்தொ டங்கும்
முன்புபுரி வினையைஅனு பவிக்கஇறை
மூதுலகில் பிறவி தந்தான்
அன்பொடவன் அடிபேணி அருட்பேறு
பெறவேண்டும் என்பார் அண்ணல். 178

புழுபூச்சி முதலான பிறவியளிக்
காமலிந்தப் புவியின் கண்ணே
விழுமியநன் மனிதப்பிறப் பருளியுள
விமலனருட் கருணை யுன்னிப்
பழுதிலுண்மைப் பக்திசெயின் பாவம்தொட
ராது; நலம் பலவுண் டாகும்
முழுதும்அவ னடிக்கடிமை யாயினுயர்
முத்தியுறும் என்பார் அண்ணல். 179

அன்பொடிறை யடிவணங்கின் அருவினைகள்
தொடராதென் றண்ணல் சொன்ன
பொன்புரைநல் லுரைகேட்ட மக்கள்முக
மலர்ந்திந்தப் புனிதர் கூறும்
அன்புநெறி நன்றுகடைப் பிடித்தினருள்
பெறுவோமென் றகம்ம லர்வார்
இன்பநலம் எவ்வுயிர்க்கும் அருளண்ணல்
அவர்க்கருள்செய் தேகு வாரால். 180

ஓரூரில் அருளண்ணல் ஒப்பிலடி
யாரன்பர் குழுவின் நாப்பண்
சீரார்ஆ சனத்தமர்ந்து திருவருட்சட்
டச்சிறப்பும் தினமும் பேணும்
நாரார்மெய் யடியவர்மேற் கொளவுள்ள
கடமைகளும் நவிலுங் காலை
ஆராநல் லமுதெனவுட் கொண்டடியர்
அன்பர்மகிழ்ந் தமர்ந்தி ருந்தார். 181

தோசைதினம் சுட்டுவிற்கும் ஓரம்மை
　　தன்மகனொ டுற்றுத் தூய
தேசிகனுர் தாள்வணங்கிச் சாமீநும்
　　சிறந்தசட்ட நெறியின் வண்ணம்
காசினியில் யானுமென்றன் மகனும்மனக்
　　களிப்போடு வாழு கின்றேம்
தோசைகளென் னிடம்வாங்கி ஊர்மக்கள்
　　அருந்துவர்;என் சுதன்அ ருந்தான்; 182

பழையஉண வேநாளும் காலையினில்
　　பசிதீர உண்ணு கின்ருன்
விழைந்தவனென் விருப்பப்படி தோசைபுசிக்
　　கப்பணிப்பீர் அண்ணல் என்ருர்;
பழையஉண வுடம்புக்கு நல்லதனைப்
　　பசிதீரக் காலை யுண்ண
விழையுமவன் விருப்பத்தை ஏன்தடுக்க
　　வேண்டுமென்ருர் அருளார் அண்ணல். 183

அருளண்ணல் சிறுவனைப்பார்த் தன்னைசொலும்
　　வணம்தோசை அருந்து கென்ருர்
பரிவொடும்அச் சிறுவனண்ணல் பதம்பணிந்து
　　பழையஉண வருந்து கின்றேன்
விரவுநல்ல சுவைத்தோசை வேண்டாம்சா
　　மீயென்ன விளம்பி நின்ருன்
கரவிலுளச் சிறுவனுக்குத் திருநோக்கால்
　　அருள்புரிந்தார் கருணை வள்ளல். 184

அம்மையார் அவன்காலை தோசையருந்
　　தப்பணிப்பீர் என்று மீண்டும்
மும்மைமுறை யும்வேண்ட மூதுலகைத்
　　திருத்தவந்த ஞான மூர்த்தி
செம்மையுறச் சிறுவன்வயிற் றைத்தடவிக்
　　குண்டோத ரன்போல் நீயும்
அம்மைசொலும் வணம்தோசை யருந்துகெனப்
　　பணித்தன்பொ டனுப்பி வைத்தார். 185

இல்லினுக்குச் சென்றந்த மூதாட்டி
இதமொடுதன் சுதனுக் கன்பால்
நல்லசுவை மிகுதோசை சுட்டுவைத்
தருந்துகென நவிலச் செல்வன்
சொல்லரிதாம் பசியோடும் சுடும்தோசை
யனைத்தினையும் அருந்திப் பின்னும்
அல்லல்தரு பசிபொறுக்க லாற்றுனைத்
தோசையினும் தருவாய் என்றான் 186

மூதாட்டி வியப்பும்மிகு வருத்தமுமுற்
றென்செய்வ தென்று வாடி
ஓதாம லனைத்துமுணர்ந் தருள்புரியும்
குருபரர்பா லுற்றுத் தூய
பாதார விந்தமலர் பணிந்தேத்தி
நடந்ததெலாம் பணிவாய்க் கூறித்
தீதான இப்பசிதீர்த் திவன்பழைய
தருந்தும்வணம் பணிப்பீர் என்றாள். 187

அருளண்ணல் குறுமுறுவ லோடுசிறு
வனையழைத்துக் கருணை யோடும்
திருக்கரத்தால் அவன்வயிற்றைச் சிறிதுதட
விக்கொடுக்கப் பசிதீர்ந் தன்பால்
குருபரனூர் தாள்பணிந்தான்; அடியரன்பர்
கூறரிதாம் வியப்புற் றண்ணல்
பெருமகிமை யினைப்புகழ்ந்தார்; பெருமாட்டி
மகனொடும்தன் னில்லம் சேர்ந்தார். 188

மெய்ஞ்ஞானக் கனலடியார்க் குட்சேர்த்து
வெகுகால மாய்ச்சூழ்ந் துள்ள
அஞ்ஞான இருளகற்றி ஆணவமா
யாகன்ம மெரித்து நீக்கி
எஞ்ஞான்றும் பேரின்ப அமுதருத்தி
யினிதோம்பும் எம்மா னிந்தப்
பைஞ்ஞாலம் வியக்கும்வணம் இதுபுரிந்த
தரிதாமோ பகருங் காலே. 189

சட்டஅடி யார்கள்தினம் சாதநீர்
பழையஉண வருந்து சென்று
திட்டமரு ளியஅண்ணல் சிறுவன்விரும்
பியவண்ணம் பழைய துண்ண
மட்டிலருள் புரிந்திடவித் திருவிளையாட்
டியற்றினர்கொல் என்று யாரும்
உட்டெளிந்து திருவருளின் திறம்போற்றி
ஒப்பிலின்ப முற்றுர் அங்கண். 190

திருச்சிராப்பள்ளி - 3

மாரியெந்தக் காலத்தும் எவரிடமும்
கைம்மாறென் றெதிர்நோக் காயல்
யாரினியார் எவரின்ஞர் எனும்பாகு
பாடுமின்றிப் பொழிதல் போலக்
காருணிய மிகுமண்ணல் வடக்கிருந்து
கருணைமழை பொழிந்து கொண்டே
சீரியநல் லடியருள ஊர்கள்தொறும்
தங்கிநன்று செல்ல லானுர். 191

மாரிநன்று பொழியினும் கவிழ்ந்துளபாத்
திரம்நிரம்பா திருத்தல் போலப்
பேரகங்கா ரத்தினுள்மூழ் கிக்கிடந்தோர்க்
கண்ணலுரை யேற வில்லை;
ஆரநிமிர்ந் துளபாத்தி ரம்போல்அன்
பால்அருளால் நெகிழ்மெய் யன்பர்
சீருளங்கள் அம்மழைநீ ரைத்தேக்கிச்
சிறந்தபயன் பெற்ற வன்றே. 192

மல்லிகையின் நறுமணத்தை மறைத்துவைத்தற்
கியலாதன் ஹே?அவ் வாறே
நல்லருளின் பெருமணத்தை நாடுமுழு
தும்பரப்பி ஞானச் செம்மல்
தொல்லுலகைத் திருத்தவிழை உளத்தோடும்
தூயஅரு ளமைதி யோடும்
நல்லடியர் பால்சென்று ஞானஉப
தேசம்புரிந் தேக லுற்றுர். 193

கடலிலிருந் தாவியுரு வாய்மேல்நோக்
கிச்சென்று கவின் †கொண் மூவாய்
நெடுமலையி னின்றுமழை யாயிறங்கி
யாறாகி நிலமேற் பாய்ந்து
புடைபரந்து பல்லுயிர்க்கும் நன்றுதவி
புரிந்துமுனர் தன்னை யீன்ற
கடலெனும்பூர் ணத்தினிடை அமைதியொடு
சென்றுகலந் திடுநீ ரேபோல் 194

பரிபூர ணப்பொரு ளிடத்தினின்று
பாரைநனி திருத்தற் காகப்
பரிபூர ணக்கருணை யோடுமுற்றுப்
பக்குவம்சால் உயிர்கட் கெல்லாம்
பரிபூர ணம்பெறுநல் வழிகாட்டிப்
பற்பலுயிர் வகையும் நன்று
பரிபூர ணம்பெறுபக் குவமெய்தப்
பரிந்துதவ நினைந்தார் அண்ணல். 195

பார்மாது மடியிற்பிறர் அறியாமற்
பரிந்தமர்ந்து தவமேற் கொண்டு
சீர்மேவும் உயிர்த்தொகைக்குச் சிறந்தபக்கு
வம்வழங்கச் செல்லும் அண்ணல்
ஏர்மேவு பலஊர்கட் கமைதியொடும்
சென்றினிய உபதேசங்கள்
கூர்மேவும் அறிவொடுபே ரன்புடையோர்
கொளக்கூறி யருள்செய் தாரால். 196

பரிபூர ணப்பொருளொ டொன்றுதவ
நிலையினிற்பாங் குடன் அமர்ந்து
விரிபாருக் கருள்புரிதற் குளஅண்ணல்
அமைதிமிக விரும்பி னார்கள்
அருளுரைகள் உயிர்களுக்கிங் கருளவிழை
திருவுள்ளம் இருந்த[து]; இன்றேல்
மருவுபொதி கைக்கோ, வே றமைதிமிகு
மிடங்களுக்கோ செல்லல் கூடும். 197

† கொண்மூ-மேகம்

அருளாளர் பலர்கண்ட அருட்கனவை
நனவாக்க அவனி யின்கண்
உருவோடும் போந்துள்ளார் ஆதலினல்
உயிர்த்தொகையைத் திருத்த வல்ல
திருவார்நல் லுபதேசம் ஆங்காங்கும்
செம்மையுறச் செய்து வந்தார்
கருணளர் உபதேசங் களைக்கேட்கப்
பிறந்தமக்கள் களித்துக் கேட்டார். 198

குருபரரை எந்நாள்கா ணப்போகின்
றோமென்று குவல யத்தில்
வரவையெதிர் பார்த்திருந்தோர் வரப்போகின்
ருரென்னும் திருக்கு றிப்பை
அருள்நிட்டை மூலம்அறிந் தந்நாளைக்
கணக்கிட்டுக் காத்தி ருந்தார்
அருளடியர் விழிவண்டா னந்தத்தேன்
அருந்தஅண்ணல் வந்து சேர்ந்தார். 199

திருச்சிராப் பள்ளிமக்கள் தீராத்துன்
பங்களெலாம் தீர்ந்தா ராகிக்
கருத்தர்தாள் மலர்பணிந்து கசிந்துருகிக்
கண்மலர்நீர் சொரிந்தார் ஓர்பால்
சிரத்தின்மேல் கரம்கூப்பித் தேசிக
சிகாமணியே என்பார் ஓர்பால்
அருட்பரா பரபோற்றி யெனப்புளகம்
போர்ப்பஅன்பிற் படிவார் ஓர்பால். 200

அடியரன்பர் இவ்வாருய் அண்ணலைச்சூழ்ந்
தருளொளியில் திளைத்திட் டார்கள்
படியின்மிசை கன்றினைக்காண் பசுப்போல
அண்ணல்பரன் மயமே யாகி
நெடிதுதிரு வருள்சுரந்து நிறைமகிழ்வை
அனைவருக்கும் வழங்கி ளுர்கள்
அடியர்நலம் அன்பர்நலம் அனைத்தும்அரு
ளோடினி துசாவி ளுர்கள். 201

இகசுகம்வேண் டுநர்தங்கள் இலத்துள்ள
குறைகூறி முறையிட் டார்கள்
தகவுபெறு பரசுகம்வேண் டுநர்தக்க
உபதேசம் நாடி னூர்கள்
இகபரம்நல் கருட்சட்டம் இனிதோம்பிப்
பக்குவமுற் றிருந்தார் பல்லோர்
அகவுணர்வு வளர்ச்சிபெறு தருட்சட்ட
நெறிநிற்போர் பலரா யுற்ருர். 202

பலதிறப்பக் குவமுடைய மக்களைக்கண்
டருளண்ணல் பரிவி னேடும்
நலமுறஇவ் வுயிர்களெலாம் ஈடேறல்
வேண்டுமென நன்றி ரங்கி
உவகிலுறும் அடியர்களை அன்பர்களைப்
பேணுவதும் பொறுப்பே என்ன
நிலவுபரி பூரணர்தாள் நெஞ்சிருத்திப்
போற்றியுரை நிகழ்த்த லானுர். 203

அருட்கருணை யூற்றுசுரந் திடத்திருவாய்
மலர்ந்தண்ணல் உரைப்பார் பார்மேல்
மருட்படிந்த மனத்தோடும் தேடுபொருள்
சொந்தமென மனத்தெண் ணுதீர்
பருத்தஉடல் சதமல்ல உயிர்நலத்துக்
குயர்பாடு படுவீர்; சற்றும்
பொருத்தமற்ற செயல்புரியா தருட்செயல்கள்
புரிந்துநலம் பெறுவீர் என்ருர். 204

ஆயுளுள்ள போதேஉண் மைப்பொருளைக்
காணஅக நாட்டம் கொள்வீர்
மாயவலைக் குள்ளான மனம்தூய்மை
பெறமாண்பார் நிட்டை செய்வீர்
மேயபுவி மீதினிலேன் பிறந்தோமென்
றேவினவி மெய்கா ணுங்கள்
ஏயபொருள் எதுவும்நிலை யன்றென்ன
இறையருள்நா டிடுவீர் என்ருர். 205

என்றென்றும் நிலையான பொருள்நன்றே
உள்து|அதுநம் இதய மென்னும்
மன்றில்நட மாடுவது; மன்னுமண்ட
கோடிபடைத் தாள்வ தஃதாம்;
நன்றதனெ டுறவுகொள்வோர் பால்நட்பு
கொண்டுநல மெய்தல் வேண்டும்;
என்றும்கொடும் பாசபந்தத் தாழ்த்திடுவோர்
பால்உறவு கொள்ளேல் என்றார். 206

தூயநிரு விகற்பசமா தியைப்பெற்ற
அடியவர்தாள் துணையாக் கொண்டால்
தூயபர மானந்த மெய்தத்தடை
யில்லையெனச் சொற்றார் அண்ணல்;
தூயநிரு விகற்பநிட்டை பெற்றநும்தாள்
துணையென்னக் கொண்டுள் ளோம்யாம்
தூயநெறி தரப்போந்த நீரேமுத்
தியைத்தருவீர் என்று போற்றி 207

கலியுகத்தின் கடவுளெனக் கண்கண்ட
தெய்வமெனக் கதியைக் காட்டும்
நலமிகுசற் குருவெனஇஞ் ஞாலமிசை
பொலிநும்தா ளன்றி வேறு
பலனருள்பா தங்களெப்போ தினும்நினைக்க
மாட்டோம்என் றுறுதி கூறி
அலகிலருட் பேரின்ப மளித்தருள
வேண்டுமெனப் பணிந்தார் அன்பர். 208

அருளண்ணல் புன்னகைபூத் தடியவர்பால்
மேலும்அரு ளுரைந வில்வார்
மருவுநன்மை பெறவிழைவோர் பிறர்க்குநன்மை
யேபுரிந்து வாழ்தல் வேண்டும்
விரவுமெந்த உயிர்க்குமிடர் மெய்மனம்வாக்
கால்விளைக்கா திருத்தல் வேண்டும்
புரிசெயல்கள் யாவும்இறைக் கொப்படைத்தால்
புனிதம்மிகும் என்றார் அன்பால். 209

யான்புரிகின் றேனென்னும் அகங்காரம்
எனைச்சூழ்ந்து கொள்ளும் போதில்
யான்பரனுக் கெவ்வாறெச் செயலையுநன்
றொப்படைத்தற் கியலு மென்ன
வான்பொருளாய்த் திகழண்ண லிடமொர் அடி
யார்வணக்கத் தோடும் கேட்டார்
தேன்புரையும் திருமொழியால் சீர்சிறந்த
அண்ணல்அடி யார்க்குச் சொல்வார். 210

எண்ணில்பல உலகினையும் எண்ணில்உயிர்த்
தொகைகளையும் இனிதுண் டாக்கி
எண்ணிடும்எல் லாப்பொருளும் ஈந்தருளி
நன்றோம்பும் இறைவன் றன்னை
உண்ணெகிழும் உருக்கமுடன் எழும்போதும்
தினம்உறங்கச் செல்லும் போதும்
புண்ணியநற் ப்ரார்த்தனைசெய் திடல்வேண்டும்
எனப்புனிதர் புகல லுற்றார். 211

பரமகுரு வேஉம்மை மறக்கச்செயும் எதுவும்எனை யணுகா தாக
பொருவில்நும தருளினினை வூட்டமெற்பப் பொருளையும்போற் றிடுவே ளுக
மருவுசினம் காமாதி கட்காளா காதிருக்கக் காப்பீ ராக
கருணையெனும் நுமதருள்வெள் ளத்தினில்யான்அமிழ்ந்துள்முழ்
கிடுவே ளுக. 212

செய்யும்செயற் கதிகாரி யானில்லை
என்ன வுணர்த் திடுவீராக
எய்துநன்மை தீமையெலாம் இறைவன்திரு
வருளெனநா டிடுவே ளுக
வெய்யபுன்மை தருபுவனப் பொருளெதையும்
விரும்பாமல் விடுவே ளுக
மெய்யடியர் எத்தகைய ராயினும்நீர்
எனப்போற்றி மகிழ்வே ளுக. 213

என்றன் உடல்பொருளாவி அனைத்தும்நுமக்
கர்ப்பணம்செய் திட்டேன் என்றும்
நன்றருளொ டேன்றெனைக்காப் பீர்காப்பீர்
காப்பீர்என் றேத்தல் வேண்டும்

ஒன்றுமனம் மிகவுருகி நாள்தோறும்
ப்ரார்த்தனையுள் ளன்பாற் செய்தால்
என்றும்துணை யாயிருந்து காப்பதுடை
யோன்பரமென் றுணர்வீர் என்றார். 214

எல்லாமும் வல்லஅவன் அடித்துணையே
நாடுங்கள்; இனிதே செய்யும்
நல்லார்கள் நட்பினையே நாடுங்கள்;
நாடின்நலம் மிகவுண் டாகும்
நல்லாற்றின் இறையருளால் நடைபெறும்அற்
புதங்களெலாம் ஞாலத் தின்கண்
எல்லார்க்கும் எடுத்தியம்பிப் பெருமைப்பட
வேண்டாமென் றியம்பி னால். 215

மனதினுக்குள் வைத்திறைவன் மாண்கருணை
யினைவியந்து போற்றல் வேண்டும்
புனிதஅருட் சட்டத்தில் தேர்ச்சியுற்றோர்
கூடுகின்ற போது நுங்கள்
மனதிலுள ஐயங்களைப் போக்கிக்கொள
மாணடக்கத் தோடும் கண்ட
புனிதநிகழ்ச் சியிற்கூறக் கூடியதைக்
கூறித்தெருள் பெறலாம் என்றார். 216

அனைவரும்நல் லமைதியொடும் கேட்டனர்புள்
ளினம்புல்பூண் டாதி யாவும்
இனிதுகுரு நாதர்அரு ளுபதேசம்
கேட்டின்பம் எய்திற் றன்பர்
புனிதகுரு நாதர்திரு மேனியினைப்
பைக்கண்டு பொறுக்கொண் ணாராய்
மனதில் மிகுவருத்தமுற, வள்ளலது
கண்(டு)அவரை யழைத்துக் கேட்டார். 217

சாமிதிரு மேனியினைப் பைக்கண்டோம்,
சாமியடைந் திட்டால் வேறிப்
பூமிமிசை துணையாரென் றெண்ணிமனம்
புண்ணானேம் என்றார்; இந்தச்

சாமிஅடைந் திடப்போந்த சாமியல்ல
எப்போது மேஇ ருக்கும்
சாமியென உணர்ந்திடுவீர்; தளர்வுறுதல்
வேண்டாமென் றுரைத்தார் அண்ணல். 218

ஆயினும்சிற் சிலவார்த்தை குறிப்பாக
அடியவர்கட் குணர்த்தி னுர்கள்
மேயமுயற் சியினல்எய் திடும்அனுப
வம்பெரிது முயல்வீர் என்ருர்
ஏயகுறை யத்தனையும் சாமியிட
மேசொல்லற் கியலு மோ? நீர்
தூயசுவா மியைஎதிரில் கண்டுகொண்டே
இருப்பீரோ எனவும் சொற்ருர். 219

ஏனிப்படிச் சாமியருள் கின்ருரென்
றெண்ணியன்பர், என்றும் கண்முன்
ஞானகுரு இருக்கஇய லாது; பிற
ஊர்களிலும் இருக்க நேரும்;
நானிலத்தில் எண்ணில்அடி யார்களுக்கும்
அருள்புரிய நன்று போந்த
மோனமணி யன்ருேஇம் முத்தரென
மனஅமைதி யுற்ரு ரன்றே. 220

அவதரித்த திருத்தலமாம் இருடிநகர்க்
கேகவுன்னி அருளா ரண்ணல்
தவத்திருவார் அடியவர்கட் கருளாசி
தகுமுறையால் வழங்கி யார்க்கும்
பவப்பிணிதீர்த் தருள்சுரந்து பார்வாழ்த்த
வான்வாழ்த்தப் பயண மானுர்
நவநிதிபெற் றிழந்தவர்போல் நல்லடியார்
இறைஞ்சிவிடை கொடுமீண் டாரால். 221

### இருடியர் பட்டி - 4.

பல்லுயிரும் பலநலமும் பெற்றுய்யப் பாங்குமிகு
நல்லருட்சட் டம்தந்து பேணியருள் நாயகனுர்
தொல்லைவினைச் சிக்கறுத்துத் தூயஅருட் பயன்வழங்கும்
எல்லையில்சீர் இருடிநகர்க் கேகிடவும், ஆங்குறைவோர் 222

எப்பொழுதும் எவ்வுயிர்க்கும் இதம்புரியும் இங்கிதரை
செப்பரிய நலம்விளைக்கும் திருவருட்சட் டம்வழங்கும்
ஒப்புயர்வில் உத்தமரை உயர்வருளும் வித்தகரை
இப்புவிஉய் யப்போந்த இனியரைக்கண் டடிபணிந்தார். 223

அடிபணியும் அன்பர்களை அண்ணல்அரு ளால்நோக்கி
படியிலுயர் நல்வாழ்வும் பரகதியும் மேவுகென
முடிவில்பெருங் கருணையொடு நல்லாசி மொழிந்தருளி
உடையவன்தண் ணருளுருவாய் அப்பதிக்கண்
உறைந்தனரால். 224

## பாளையங்கோட்டை - 2

சிலநாட்க ளானபின்பா ளயங்கோட்டை
அடியவர்கள் சீரார் தங்கள்
தலமேவி யருள்புரிய வேண்டுமெனச்
சாமிபதம் தொழுது போற்றி
நலமோடங் கழைத்திடவும் ஞானகுரு
நாதர்அதற் கிசைந்து சென்றார்
நிலமாதும் வான்மாதும் புகழஅவ்வூர்
நிலவுமக்கள் வரவேற் றிட்டார். 225

அன்பர்குழாம் அடியர்குழாம் அரஹரவென்
றார்த்தன்பால் போற்றி செய்யப்
பொன்புரையும் உளத்தண்ணல் பூமியெங்கும்
கருணையொளி பொலியும் வண்ணம்
மன்பதைகள் துயர்தவிர்த்து மாஞானக்
கதிரவன்போல் பிறங்கி னார்கள்
இன்பவமு திதயமிசை பொங்கிடஊர்க்
குள்ளழைத்துச் சென்றார் அன்பர். 226

அருட்சட்டம் ஏற்றஅடி யார்குடும்பம்
சதக்கணக்கில் இருந்த வங்கண்
தெருள்மிகுந்த ஓரடியார் இல்லிலண்ணல்
எழுந்தருளித் திகழ்ந்திட் டார்கள்

அருகிருந்த அடியர்குடும் பத்தொடும்போந்
திறைஞ்சியருட் பேறு பெற்றார்
விரவுபல அடியரன்பர் விழித்திருந்து
பினர்அயர்வுற் றுறங்க லானார். 227

அண்ணலையி னிக்காண்பே மோஎன்றை
யங்கொண்ட அடியார் மட்டும்
உண்ணுவதும் உறங்குவது மின்றியரு
ளண்ணலைச்சூழ்ந் தமர்ந்தி ருந்தார்
அண்ணல்அவர் களுக்குச்சில அருளுரைகள்
அருளத்திரு வுளம்கொண் டார்கள்
புண்ணியத்தின் பயனெனஅப் புனிதர்செவி
மடுத்தின்புறப் புகல லானார். 228

அன்புமக்க ளேபூர்வ புண்ணியத்தால்
அருட்சட்டம் அநுட்டிக் கின்றீர்
பொன்புரையும் சட்டமிதைச் சாமிசட்டம்
எனஎளிதாய் எண்ண வேண்டாம்;
முன்புமுனி புங்கவர்கள் இருடியர்கள்
முறையோடும் போற்றிப் பேணி
இன்பமிகக் குருபீடர் பரம்பரையில்
இருந்துவந்த நெறியி தாகும். 229

வேறு

இயற்கையுள்ள வரையும்அருட் சட்டநெறி யிருந்திலங்கும்
மயர்வறநன் றநுட்டிப்போர் பலராவர் மகிமுழுதும்
உயர்வுறுமிந் நெறிபரவும் காலமுள தண்மையினில்
துயர்தவிர்ந்திவ் வுலகுயிர்கள் தூயவராய்ச்
சுகமடைவர். 230

உடையவன்றன் அருட்கணக்கிப் போதுடனே விளங்கிடுமோ
நடைமுறையில் செலச்செல்ல நன்றினிது விளக்கமுறும்
உடையவன்றன் அருளாட்சி உலகில்மிக மிகப்பெரிதாய்
நடைபெறுமாட் சியினும்மிக உயர்ந்ததென நன்றுணர்வீர்.
231

அதையினிது நடைபெறச் செய்
அலுவலரும் சேவகரும்
அதையினிது வாழ்த்து முயர்
அமரர்களும் முனிவர்களும்
அதன்பயனை அறிந்தின்பம்
அநுபவிக்கும் உயிர்த்தொகையும்
இதயமிசை யெண்ணிக்கணக்
கிடஎவர்க்கும் இயலாதாம். 232

அதுவரைநீர் நெறிதவறு தவனிமிசை வாழ்ந்திடுவீர்
அதிமுயற்சி யோடுநிட்டை யனுசரித்துப் பயன்பெறுவீர்
இதயமுரு கிக்கூட்டு ப்ரார்த்தனைகள் இனிதுசெய்வீர்
அதுமிகவும் சக்தியுடைத் தாதலினால் நலம்பெறுவீர். 233

உருகியடி யவர்பலரும் உடையவனைத் துதிபுரிந்தால்
பெருநிலத்தில் ஆகாத பெருஞ்செயல்க ளேதுமில்லை
உருகுமுளத் தொடும்தன்சீர் பாடடியார் குழுவுள்ளிறை
அருளுருவொ டுறைவனென ஆன்றோர்நன்
றோதியுளார். 234

ஆதலினால் அடியவர்கள் கூடிமன அமைதியுடன்
நாதனரு ளினைநாடி நன்றுருகித் தொழுதேத்தப்
பூதலத்திற் பழகிடுவீர் எனப்புனிதர் புகன்றருள
ஏதெனப்ரார்த் தனைபுரிவோம் எனஒருவர்
வினவினரால். 235

அவ்வடியர் வேண்டுதலை
அண்ணல்திருச் செவிமடுத்துச்
செவ்வியநற் ப்ரார்த்தனையைச்
செய்யும்முறை செப்புகின்றோம்
எவ்வமற நீர்நிதமும்
இதயமிசை கொண்டுமனம்
வெவ்வழலில் உறுவெணெய்போல்
மிகவுருகித் துதிப்பிரென்றார். 236

பரமகரு ணைமூர்த்தி யே, பரப்பி ரமவடிவே
உருகுமடி யவர்துயரை ஒழித்தருளும் உயர்துணையே
இருநிலத்தில் அருட்சட்டம் ஏற்றுநடந் திடும்அடியார்
ஒருதிருத்தாய் அருள்சேய்க ளாயொழுகு திறனருள்வீர் 237

அடியவர்பால் அமைதிமை அணுவளவும் நினையாமல்
படியின்மிசை அவர்புரியும் நல்லசெயல் களைநினைந்து
நெடிதுநலங் களைப்பேசி நிலத்தில்நலம் வளர்த்தன்பால்
உடையவனும் வழிநடக்க உதவிடுவீர் எனத்துதிப்பீர். 238

அடியவரை மணிமணியாய்
அற்புதமாய்த் தேர்ந்தெடுத்த
உடையவன்றன் கருணையினை
உளத்தெணிப்போற் றுதல்வேண்டும்
படியிற்குறை யொன்றுமிலா
ஒருவரைநாம் பார்க்கொணுமோ
அடியவர்பால் பிழைநோக்கா[து]
அன்பினையே நோக்குகென்றார். 239

சுற்றிலும்சூழ்ந் துளஅடியார்க் கருளமுதம் அருத்தவுன்னி
நற்றிருக் கரத்தினைமேல் உயர்த்திடவும் ஞானவமு[து]
உற்றதொரு தூவெள்ளிப் பாத்திரத்தில் கரண்டியுடன்
அற்றமில்சீ ரடியரன்பர்க் கருளண்ணல்
அதையளித்தார். 240

அடியர்ஒரு வரையொருவர் பார்த்துவியப் படைந்தவராய்
உடையவன்றன் அருள்ஞான அமுதருந்தி உலகிலென்றும்
அடைந்தறியா ஆனந்த பரவசராய் அருளண்ணல்
அடிமலரில் பணிந்திறைஞ்சி அன்போடும்
துதித்தனரால். 241

## குருநாதர் துதி

நான்மறையும் காணவொணு ஞானமணிச் சுடரே
நற்றமிழின் சுவையில்அருள் மணம்கூட்டும் குணமே
வான்மகிழும் திருவமுதை வையமுளோர்க் கருத்த
வழிகாட்டும் வான்பொருளாய் வந்தஅருட் கதிரே

நான்மறைந்த உளம்திகழும் ஞானசிகாமணியே
நாதாந்தப் பெருவெளியில் நடமிடு பூரணமே
தேன்மலிபூஞ் சோலைதிகழ் திருவிருடிப் பதிவாழ்
தெய்வஇசைக் குயிலேஎம் தேசிகா மணியே. 242

எண்டிசையும் போற்றிடவே இனியஅருட் சட்டம்
இனிதுரைத்தும் மெய்யடியார்க் கின்துணையா யிருந்தும்
உண்டிசுருக் கச்செய்தும் உயர்தவப்பே றீந்தும்
ஓங்காரம் உள்மொழிந்தும் உயிர்க்குயிரா யமைந்தும்
பெண்டிருடன் ஆடவரும் சிறுவர்சிறு மியரும்
பிரியமுடன் துதித்துய்யும் பெட்பனைத்தும் உரைத்தும்
கண்டிடுகா ணாப்பொருளின் அகப்புறமா யமைந்தும்
கவினிருடித் திருநகர்வாழ் கருணைமிகும் குருவே. 243

கற்றனஎல் லாம்கல்வி யல்லஅரு ளடையக்
கற்பதுவே கல்வியெனக் கற்பிக்கும் குருவே
சுற்றமெலாம் சுற்றமல அருளடியார் குழுவே
சுற்றமென நன்றுணர்த்தும் தூயஅருட் சுடரே
பெற்றனஎல் லாம்செல்வ மல்லமுத்தி யடையும்
பேறொன்றே பெருஞ்செல்வ மெனவுணர்த்தும் பதியே
அற்றனபற் றெல்லாமென் றுமையடைந்தோர்க் கருளும்
அருள்நகராம் இருடிநகர்க் கரசேயெம் முயிரே. 244

கண்ணனைத்தும் காணஅரு ளொளிகூட்டும் ஒளியே
காதனைத்தும் கேட்கஅரு ளொலிகூட்டும் ஒலியே
பண்ணனைத்தும் இனிக்கஅருட் பண்பூட்டும் இசையே
பலகலையும் தொழில்யாவும் பரவஅருள் வளமே
மண்ணனைத்தும் நீரனைத்தும் தீவாயு அனைத்தும்
வளர்மதியும் விண்மீனின் வர்க்கமும்ஒண் கதிரும்
விண்ணனைத்தும் வாழ்த்தஅருட் சட்டம்வகுத்தருளி
விளங்கிருடித் திருநகர்வாழ் விழுமியசற் குருவே. 245

பன்மார்க்கத் திலும்உழன்று பார்வாழும் உயிர்கள்
பரிதவித்தல் கண்டிரங்கிப் பக்குவம்மிக் கருளும்
நன்மார்க்கம் ஒன்றினையிஞ் ஞாலத்துக் குதவ
நல்லதவம் பன்னிரண்டாண் டியற்றியருள் துணையால்

சன்மார்க்க மாம்சட்டச் செந்நெறியைக் கண்(டு)இத்
தாரணிக்கிந் தோம்பியருள் சத்தியச்சிற் சுடரே
துன்மார்க்கர் களும்திருந்தப் புரிந்தாண்ட துரையே
தூய்மைமிகும் இருடிநகர் துலங்கிடுசற் குருவே. 246

---

வேறு

எனப்பலவா றுயினிது துதித்தேத்தி யுள்ளுருகு
மனத்தவிசில் அண்ணலைநன் றமர்த்தியன்பு மலர்தூவி
உனற்கரிய முறையில்உடல் பொருளாவி யொப்படைத்து
நினைப்புமொழி செயலனைத்தும் நீர்திருத்தி யாள்வி
ரென்றார். 247

மறுநாளும் வழக்கம்போல் வழிபாடு நிகழ்ந்த தவண்
செறிஞானச் செம்மலன்று மாலையில் உலாச் சென்றார்
சிறுபாலர் கபடமின்றி விளையாடிக் கொண்டிருந்தார்
குறுமூர லோடவரைக் கூப்பிட்டார் குணக்குரிசில். 248

இளஞ்சிறுவர் தாத்தாஎன் றினிதவர்பால் ஓடிவந்தார்
களங்கமற்ற அவருளத்தைக் கண்டண்ணல் அவர்நடுவில்
உளங்களிகொண் டினிதுநின்றே ஒருகைமண லினையள்ளி
வளங்கொள்விளை யாட்டாக வாங்கியுண்பீர்
பொரியென்றார். 249

பொரியல்ல மணலென்னப் புகன்றுசிறார் மறுத்திடவும்
ஒருசிறுவன் கரத்திலதை உயரண்ணல் திணித்திடவும்
பொரியாக இருந்ததுகண் டளவில்சிறார் அதையேற்றுப்
பொரியென்று தின்றனர்புண் ணியமென்ன
புரிந்தனரோ? 250

அனைத்துள்ளங் களிலுமுள மாசுகளை அமுதாக
நினைத்ததுமே மாற்றவல்ல நின்மலனார்க் கீதென்ன
உனற்கரிய பெருஞ்செயலோ? ஒப்பிலண்ணல் அடியவர்தம்
மனைக்கினிது மீண்டனர்; பின் இரவுவந்து சூழ்ந்ததுவே. 251

அண்ணலார் ஓரறையில் துயில்கொண்டார், அவ்வறையின்
திண்ணியதாள் வெளிப்புறத்தில் இடச்செய்தார்; நள்ளிரவில்
புண்ணியம்சால் ஓரடியார் பொலிவுமிகும் கனவுகண்டார்
அண்ணலா ரிடம்கூற அறைக்கதவின் தாள்திறந்தார். 252

அருளண்ண லினைஅந்த அறையினுட்கா ணுதவராய்
திரிபுற்று மனம்சோர்ந்தார் திகழ்தோட்டக் கோடியினில்
அருளண்ணல் உருக்கண்டார்; அதிசயித்தங் கோடஅண்ணல்
புரிநல்ல புன்னகையோ டருட்காட்சி யினிதளித்தார். 253

அருளண்ணல் காட்சிகண்ட அடியர்அதி வியப்புற்று
மருளகற்ற இவண்போந்த மாமணியின் தாள்பணிந்து
பொருளனைத்தும் அருளியெமைப் புரக்கவந்த பூரணரே
தெருளருளும் தேசிகரே யென்றுதுதி செய்தனரால். 254

குருநாதர் துதி

நின்னையல் லால்அணுவும் அசைவதிலை யென்பதனை
நீநிரு பிக்கின்றனை
என்னுடலும் என்பொருளும் என்னுயிரும் நின்னதென
ஏற்றுண்டு கொண்டுள்ளனை
என்னுளுள ஒவ்வொரணு வுள்ளும்நீ நன்றமர்ந்
தினிதூக்கி யாள்கின்றனை
நின்னையெப் பொருளுளும் கண்டுநின் னேடொன்றும்
நிலையருள்க நிகரில்பரனே. 255

கோடானு கோடிதிரு விளையாடல் செய்தடியர்
களையோம் பருட்கு ரிசிலே
கோடானு கோடியுல கங்களுண் டாக்கியரு
ளாட்சிபுரி குணநி தியமே
கோடானு கோடிஉயிர் வகைகளுக் குணவூட்டி
யினிதோம்பு குரு சொருபமே
கோடானு கோடிகுற் றம்பொறுத் தெனையோம்பு
கோதில்கரு ணாமூர்த் தியே. 256

ஒவ்வொரணு வுளுமேவி யொளிருநின் பேராற்றல்
ஓதஎன் னாலிய லுமோ
எவ்வொருயிர் எண்ணமும் மொழிகளும் செய்கைகளும்
இறைவ,நின் செயலல் லவோ
செவ்விய அருட்சட்ட நெறியிலுறு மெனைநீ
திருத்திப் புரந்தரு ளுவாய்
பவ்வமாம் இப்பிறவி நீந்திக் கரைக்கணுற
அருளிருடி நகர் பகவனே. 257

ஆருமெளி தறியவொண் ணாச்சிறப் புடையவோர்
அருட்கருணை யெனும் ஆழியே
பாரும்நீ ரும்கனலும் வாயுவா காயமும்
பருதிமதி யான்மா வுமாய்
நேருறக் காட்சிதரு நித்தியப் பொருளே
நிரந்தர சுகம் தரவிழை
சீருடைய அருள்ஞான மாம்பெருஞ் செல்வமே
இருடிநகர் திகழ் பிரமமே. 258

கண்ணுக்குளே அருட் கண்ணாகி யேஅருட்
காட்சிகாட் டும்கடவுளே
எண்ணுக்கு ளேஎழுத் துக்குளே எண்ணற்ற
இயல்வகுத் துளஇ றைவனே
பெண்ணுக்குள் ஆணாகி ஆணுக்குள் பெண்ணாய்ப்
பிறங்கும் பெருஞ்சக் தியே
நண்ணிக்கும் பிடுவோர்க்கு ஞானவாழ்
வருளிருடி நகர்மேவு சுகமோனியே. 259

என்றுபே ரன்போடு மேத்தித் துதித்தண்ணல்
இருபாத மலர் இறைஞ்சி
துன்றுமொளி நிறைஞான சூரிய னெனத்தோன்று
சுடர்மணீ வருக, என்றும்
குன்றுதலி லாக்குணக் குருநாத ரேவருக
என்றும்உட் கொண்டுசென்று
நன்றெழில்கொ ளாசனத் தினிலமர்த் திப்பூசை
நறுமலர்கொ டேபு ரிந்தார். 260

வேறு

ஒருநாள்மா லையிலண்ணல் உற்றடியார் சூழ்ந்திருக்கத்
தெருளார்நல் லருளுரைகள் செப்பியினி தமர்ந்திருந்தார்
அரசினர்தம் அலுவலகப் பணிசெயும்வா லிபர்இருவர்
அருளண்ணல் திறம்காணற் கவ்விடத்திற்
போந்தனரால். 261

வந்தவர்கள் அண்ணலுக்கு வணக்கம்செலுத் தாதமர்ந்தார்;
பந்தமெனும் திரைமறைக்கப் பாசமெனும் பெருங்கடலுள்
உந்தப்படும் உயிர்கள்உயர் கரையையடைந் துய்வுபெறும்
நந்தலில்சட் டத்தில்நலோர் சேர்வரென்ருர்
அருளண்ணல். 262

ஆசையெனும் கடல்கடந்துய் வடைவோமோ அருளிறைவன்
தேசுதிகழ் திருக்காட்சி கிடைத்திடுமோ எனத்திகையேல்
ஆசகன்ற ஆன்ருேர்சொல் அருங்கருத்தை நினைந்துநிதம்
நேசமுடன் நிட்டைசெயல் வேண்டுமென்ருர்
நின்மலனர். 263

அருளண்ணல் அருளியஅவ் வுரைகேட்டவ் விடம்போந்த
இருவருமே எழுந்தண்ணல் திருமுன்சென் றெம்மனத்தில்
மருவுமையம் சிலஉளநீர் தீர்த்திடுவீ ரோஎன்ன
குருபரனர் புன்முறுவ லோடினிது கூறலுற்ருர். 264

ஐயமதைத் தெரிவித்தால் அடியவரே விளக்கிடுவார்
மையலற மனத்துளதைக் கூறுகென்ருர் அருள்வள்ளல்
செய்யமலைக் குகைகாடு சென்றுபுரி தவப்பயனை
வையமிசை இல்லறத்தார் பெறற்கியலு மோஎன்ருர். 265

இருவரும்இவ் வாறண்ண லிடம்கேட்க இனிதண்ணல்
பெரியபுரா ணத்தில்கதி பெற்றவரிற் பெரும்பாலோர்
பெருமைமிகு பாண்டுரங்கன் பக்தர்களாய் முத்திபெற்ருேர்
ஒருமையுடன் இல்லறத்தை உஞற்றியவர்
அறிவிரென்ருர். 266

முத்திநிலை யெய்துவதற் கில்லறமோ துறவறமோ
எத்துறையா யினும்குற்ற மிலை; ஐய மிதில்வேண்டாம்
சுத்தமன முடையவர்கள் தூயமுத்தி பெறல்திண்ணம்
அத்தனடிப் பக்திகுறை யாமைஅவ சியமென்ருர். 267

அதுகேட்ட அவ்விருவர் அதிகாலை தண்ணீரில்
எதற்காக மூழ்கிடுதல் வேண்டுமென வினவிடலும்
இதமாக ஒரடியார் எழுந்துகுரு வினைவணங்கி
அதிகாலை நீராட்டின் அருஞ்சிறப்பை உரைக்கலுற்ருர். 268

அதிகாலை தண்ணீரில் ஆடின்உடற் காக்கம்மிகும்;
புதுநோய்கள் புகுதாமல் தடுக்கும்; உறு பிணிவிலகும்;
புதியசக்தி நரம்புகளுக் குண்டாகும்; பொலிவுமிகும்;
நதிபுனித கங்கையினில் மூழ்குபயன் நமக்குண்டாம். 269

அதிகாலை தண்ணீர்க்கற் புதச்சக்தி யிருப்பதனல்
அதில்நாம்அப் போதாடின் அருளாற்றல் மிகப்பெருகும்
முதல்நாம்செய் தீவினைகள் முழுதகலும்; மேன்மைமிகும்
இதமாம்பக் குவம்அமையும் இன்பமுறல் திண்ண
மென்ருர். 270

மேலும்அடி யார்ஒருவர் எழுந்தண்ணல் அடிவணங்கி
ஏலுமந்த இளைஞர்களை நோக்கிஇனி தியம்பிடுவார்
ஞாலமிசை நம்நாட்டில் வாழ்கோடிக் கணக்கானேர்
சாலமிகு பசியாலும் பிணியாலும் தவிக்கின்ருர் 271

அதிலிருந்து மீளும்வழி அவர்களுக்குப் புரியவில்லை
அதிலிருந்து மீட்கஅருட் சட்டமொன்ருல் தான்இயலும்
இதையனுட்டித் தெணில்பல்லா யிரவரின்புற் றிருக்கின்ருர்
இதமொடுநீ ராடித்திரு நீறணிந்தின் புறுகின்ருர். 272

நாளையதி காலையிவண் நன்றுவந்து நீர்பார்த்தால்
மூளுமைய மின்றிவிழி முன்காண லாமென்ருர்
கேள்விகளைக் கேட்டஅவர் கிளருண்மை நன்குணர்ந்து
நீளருட்சட் டம்பேணி நிமலருக்காட் பட்டனரால். 273

இவ்வாறு சித்துபல இனிதவணுற் றியசெம்மல்
செவ்வாய்மை மிக்கதிரு வவதாரத் தலத்தினுக்குத்
துவ்வாத நல்விரதம் தொடங்கவுன்னிச் செலநினைந்தார்
அவ்வாறங் கடியரிடம் விடைபெற்றுப் புறப்பட்டார். 274

அண்ணலிடம் ஆர்வம்மிக உடையஇரு தம்பதிகள்
அண்ணலைத்தாம் பிரிந்தெங்ஙன் வாழ்வதெனஅறியாராய்
அண்ணலைக்கா ணுதிருத்தற் கியலாதென் றகமுருகி
அண்ணலுடன் புறப்பட்டார் அஃதறிந்தார்
அருளண்ணல். 275

அவர்களைநோக் கித்தங்கள் உளம்சாமி நன்கறியும்
அவனிமிசை ஒருகுடும்பம் சாமியினுற் கெடலாமோ?
இவணடிய வரைஇனிது வாழவைக்கச் சாமிவரும்
தவலறுமெய் யன்புடைநீர் சார்விர்மனைக்
கென்றுரைத்தார். 276

ஓங்குதவம் இல்லறத்தி லிருந்தினிதே உஞற்றிடலாம்
யாங்கணும்எப் போதும்இறை யருளுமக்குத் துணையிருக்கும்
நீங்கள்விழை போதிலருள் திருக்காட்சி கிடைக்குமென
ஆங்கவர்கட் காசியளித் தனுப்பிவைத்தார்
அருட்பெருமான். 277

அண்ணலருட் கட்டளையை மறுக்கஇய லாதவராய்
அண்ணலைப் பிரிந்திருக்க ஆற்ருத சிந்தையராய்
அண்ணலைமீண் டும்பார்த்தற் காமோஎன் றேங்கினராய்
அண்ணலைமீண் டும்மீண்டும் பார்த்தவண்ணம் அவர்
அகன்ருர். 278

அன்பிற்கும் உண்டோநன் றடைக்கும்தாழ் எனநவின்ற
பொன்புரையும் மொழிபோல்நன் றிலம் நோக்கிஅவர்நடந்தார்;
மன்புவிவாழ் உயிர்களினுள் வயங்கியினி தூக்கியருள்
எம்பெருமான் அடியருளம் கொள்ளைகொளா
தேகுவரோ? 279

### இரெட்டியப்பபட்டி-5

அனைத்துலகுக் கும்சர்வ சமயசம
ரசசார மாம்செல் வத்தை
நினைப்பரிய பெருநிலையில் வாரிவழங்
கப்போந்த நிமல மூர்த்தி
அனைத்துயிர்க்கும் அருள்நெறியை அருளநள
ஆண்டிலவ தரித்த மூர்த்தி
முனைப்பகற்றி முத்திநலம் அருளஇரு
டிப்பதிக்கண் உதய மானூர்.
280

இளமையினில் அருள்விளையாட் டுகள்புரிந்தார்
எழில்மதுரா புரியின் கண்ணும்
வளமிகுகுற் ருலத்தும் தவமியற்றி
மாணருட்செல் வம்சேர்த் திட்டார்

அளவிலற்பு தம்புரிந்து காசிமுதற்
குமரிவரை யாத்ரை செய்து
ஒளிமணிக ளாயடிய வரைத்திரட்டி
உயர்ந்தபக்கு வம்செய் திட்டார். 281

உடனிருந்து வழிகாட்டி உயர்சட்ட
நெறிமுறையி லாக்கி மேலாம்
கடமைகளை நன்றுணர்த்திக் கருணையெனும்
திருவமுதை யினிதே யூட்டிப்
புடவியிற்றும் போந்தசெயல் பூரணமாய்
நிறைவேற்றிப் புனிதம் அன்பு
திடஞானம் செயலாற்றல் தவப்பேறெல்
லாம்அருளித் திகழச் செய்தார். 282

மானிடநல் வடிவொடிந்த மாநிலத்தில்
வந்தஅருள் வள்ள லாகி
ஊனுடல்கொண் டுறுமுயிர்கள் குற்றமகற்
றுண்மையருட் குரவ னாகி
ஞானவொளி நல்கிடுநா யகனாகி
நண்ணுபிறப் பொழிப்போ னாகி
மோனமுத்தி யருள்மூர்த்தி யாகியிந்த
மூதுலகிற் பொலிந்தார் நன்றே. 283

நோயனைத்தும் பேயனைத்தும் நொடியிலகற்
றிடுநோன்மை மிகுந்தோ ராகித்
தூயவர்கள் நாடுசுயஞ் சுடராகித்
திகழண்ணல் தூய்மை சான்ற
தாயின்திரு வயிற்றினின்றும் தண்ணருளால்
தோன்றிய அதேஇ டத்தில்
ஏயஅருள் மேனியொடும் இனிதடக்க
மாகத்திரு வுளம்கொண் டார்கள். 284

பூவுலகில் தோன்றியரு ளரசாட்சி
புரிந்தஅரு ளாளர் யாரும்
மேவியதாய் திருவயிற்றி னின்றுதித்த
வியன்தலத் ததேஇ டத்தில்

ஒவிலடக் கம்கொண்ட தாகவுள்ள
உயர்சரிதம் உணர்ந்தோ மல்லோம்
தேவினையொத் தொளிருமிவர் திறமுணரின்
உலகில்மிகச் சிறந்த தன்றோ? 285

பரிபூர ணப்பொரு ளிடத்திருந்திப்
பாரின்கண் போந்த ஆன்மா
பரிபூர ணப்பொருளின் திருவுள்ளப்
படிபாரி லியங்கி மீண்டும்
பரிபூர ணப்பொரு ளிடத்தினிற்சென்
றொடுங்குமெனும் பண்பா ருண்மை
விரிஞால மினிதுணர வேண்டுமென
விமலர்உளம் கொண்டார் போலும்! 286

தோன்றிய இடத்தினிதே சென்றொடுங்க
வேண்டுமெனும் தூய உண்மை
ஆன்றவர்கள் அருளியுளார்; அனைத்துமதங்
களுமதனை ஒப்புக் கொள்ளும்
மூன்றுமல மெரித்தருளி முத்தர்களின்
தலைவரெனத் திகழும் மூர்த்தி
வான்தெளிய மண்தெளிய மாண்பொடுண்மை
யுணர்த்தஉளம் கொண்டார் போலும்! 287

பாளயங்கோட் டைப்பக்தர் பிரியாமற்
பிரியப்பரஞ் சுடராய் நம்மை
ஆளுடைய அருளண்ணல் வழியிலுள
ஊர்களில்வாழ் அன்பர்க் கின்பம்
மூளஅருள் மழைபொழிந்து முத்திபெறு
நெறிகாட்டி முத்தர் வாழ்த்த
நீளொளிசால் இருடிநக ரினிற்சேர்ந்தார்
நேமநிட்டை யுடையோர் போற்ற. 288

இயற்கையனை தன்மகனை இணையிலன்பி
னோடுவர வேற்ப தேபோல்
பெயற்குரிய முகில்வானில் சூழ்ந்தமரர்
மலர்மாரி பெய்வ தேபோல்

நயப்புறுநற் சிறுதூரல் கலைத்தூவப்
பொறைமிகுந்த ஞால மாது
வியனடித்தா மரைதாங்கும் பேறிதுகா
றளித்தவித்த கரைப்போற் றிட்டாள். 289

ஐம்பெரும்பூ தங்களும்சீ ரண்ணலருட்
டிருமேனிப் பொலிவைக் கண்டு
செம்பொருளி னுருவமிவ ரெனப்போற்றி
செய்யதிகழ் தருக்க ளெல்லாம்
வம்புசெறி வனமலர்கள் சொரியநற்பண்
பாடிவண்டி னங்கள் வாழ்த்தக்
கொம்புதொறும் குலவுகுயில் கிளிபூவை
யாதியுளம் குளிர்ந்தேத் திற்றுல். 290

மயிற்குலங்கள் மகிழ்வோடும் ஆடிவர
வேற்றிடவண் காற்று மெல்ல
உயிர்க்குயிராம் அண்ணல்வர விலைநோக்கி
ஓங்காரம் ஒலித்து வீச
அயிர்ப்புறுதல் தவிர்ந்தன்பர் அண்ணல்அரு
ளொளியிலொன்றி ஆனந் திக்க
வெயிற்கதிரும் மதியுமொன்றிற் றெனஅறிவொ
டருள்பரப்பி விமலர் சேர்ந்தார். 291

நண்பகலில் முப்பதடி யார்களுடன்
ஞானவள்ளல் வந்து சேர
பண்புமிகும் அடியர்திரட் காமுணவு
படைப்பதெவ்வா றென்று வீட்டார்
கண்கலங்கி இனியுணவு சமைப்பதற்கும்
காலமிலே யேயென் றேங்க
எண்புகழ்கொள் குருபரனுர் இஃதுணர்ந்து
சமையலறைக் குள்ளே சென்றூர். 292

அருள்நிறைதம் திருக்கரத்தைப் பாத்திரத்தில்
வைத்தந்தக் கணத்தே எல்லாப்
பொருள்களும்பக் குவமாகிப் பூரணமாய்ப்
பாத்திரத்துட் பொலிவித் தன்பர்

திரட்கினிது படைக்கவெனத் தெரிவித்தார்;
விட்டினர்பே ருவகை யுற்றே
விருப்பினெடும் அடியவர்க்கு முறையோடும்
விருந்தூட்டி யின்பம் துய்த்தார். 293

சுடச்சுடநன் றமைந்தஅந்த உணவுவிண்ணு
ரதமும்போல் தூய்மை சான்ற
அடியவர்க்கெல் லாம்படைக்கப் பெற்றுமிச்ச
மிருந்ததையும் அறிந்து போற்றி
முடிவிலண்ணல் அருட்பெருமை முழுதுமறிந்
திடவல்லார் யாரே என்ன
அடியவரும் விட்டினரும் அற்புதச்சீர்
அண்ணல்அடி மலர்ப ணிந்தார். 294

பாம்புகட்குப்பால் அருத்திய அற்புதம்

அண்ணலார் வழக்கம்போல் அவ்வூருக்
கருகிலுள புளியந் தோப்பில்
நண்ணியமர் சித்திவிநா யகர்கோயில்
முன்னர்நயந் தமர்ந்தி ருப்பார்
புண்ணியம்சால் அப்பதிவாழ் மக்களும்சுற்
றுப்புறத்தி லுளஊ ராரும்
எண்ணருநல் லார்வமுடன் எய்தியண்ண
லேச்சேவித் தின்பத் தாழ்வார். 295

ஒருநாள்கா லேயிலண்ணல் ஊர்வாழுன்
பறையன்பி னேடை ழைத்தார்
ஒருவிரிந்த பாத்திரமும் பாலும்உட
னேகொண்டு வருக வென்ருர்
அருகிருந்தோர் கொண்டுவரப் பாலினையப்
பாத்திரத்தில் நிரப்பச் சொன்னுர்
அருளண்ணல் ஏனிதுகேட் டாரென்ன
அறியாதூ ரார்தி கைத்தார். 296

அருட்செயல்ஏ தோநடக்கப் போகிறது
பார்ப்போமென் றமர்ந்தார் அங்கண்
ஒருசிலர்இங் கேவருவர் ஒருவரும்அஞ்
சற்களென உரைத்தங் கண்ணல்

அருளிசையில் குயிற்குரலில் அருட்பாடல்
இனிதிசைத்துப் பாட லுற்றார்
விரவுபல விதப்பாம்பொவ் வொன்றாக
விரைந்துவந்து சேர்ந்த வம்மா. 297

அரவினங்கள் பலவும்விரைந் தோடிவந்தண்
ணலுக்குவணக் கம்செ லுத்தி
மருவுமவ ரிசைக்குருகிப் பாடலுக்குத்
தக்கபடி படமெ டுத்துத்
தரையினில்நின் றாடித்தமை மறந்திருக்கப்
பாட்டண்ணல் முடித்தன் போடும்
அருந்திடுவீர் பாலையென அவையமைதி
யோடும்அருந் தினநன் றங்கே. 298

இனிநீங்கள் சென்றிடலாம் என்றண்ணல்
விடையளிக்கப் பாம்பின் கூட்டம்
இனிதுவணக் கம்செலுத்தி ஆசிகள்பெற்
றிருப்பிடத்திற் கேகக் கண்ட
மனிதரெலாம் வியப்பெய்தி அச்சமகன்
றருளண்ணல் மாண்பை யெண்ணி
புனிதரிவ ருடனிருக்கத் தவம்புரிந்தோ
மெனநினைந்து போற்றி னாரால் 299

மக்கள்மனத் தினில்நிறைந்து மேவுநச்சுப்
பொருளையெலாம் மாண்பாய் நீக்கி
தக்கதிரு வருளமுது பெருக்கியருள்
தற்பரர்க்கிப் பாம்பின் கூட்டம்
ஒக்கவந்து நன்றாடிப் பாலருந்திப்
பணிந்துசென்ற தொருவி யப்போ?
எக்கணத்தும் எவ்வுயிர்க்கும் உள்ளிருந்தின்
பூட்டும்இறை யிவரே யன்றோ? 300

நம்பதியில் தோன்றுமண்ண லின்பெருமை
ஞாலமுணர்ந் தேத்தி உய்ய
அன்பொடுநாம் அவரடிகள் போற்றியரு
ளமுதருந்த அறிந்தி லோமே

பம்புநன்னீர்க் குளத்துளபங் கயப்பெருமை
யறியாமண் டூக மானேம்
இன்பமருள் அவர்பெருமை இன்றறிந்தோம்
இனிஉய்வோம் என்றார் ஊரார். 301

இடையர்குலத் தினிற்கண்ணன் வளர்ந்ததுபோல்
இவர்நம்மிடத் தினிலே உள்ளார்
உடையவன் தண் ணருள்மயமாய் உளஇவர்தம்
சிறப்பினைநாம் உணர்ந்தோ மல்லோம்
அடைவொடுநாம் இவர்தூய அருட்பாத
மலர்போற்றி அன்பு செய்தால்
முடிவில்பவப் பிணிதவிர்ந்து முத்திபெற
லாகும்எனத் துதிக்க லுற்றார். 302

அடியவர்க்கு அறிக்கை

இகபரநன் னலமனைத்தும் எவ்வுயிர்க்கும்
இனிதருளப் போந்த பெம்மான்
தகவுறத்தாம் தரணியன்னை மடியிலமர்ந்
துயிர்த்தொகைக ளறியா வண்ணம்
யுகமுடிவி னிலும்முடியாத் தவமியற்றி
உயிர்த்திரளுக் குண்மை யின்பம்
மிகமிகநன் றூட்டியரு ளாலினிது
பேணத்திரு வுள்ளம் கொண்டார். 303

அருளண்ணல் தாம்அவனி யன்னைதிரு
மடியிலினி தமரற் குள்ள
தருணம்நெருங் கியதென்னத் தக்கசில
அடியவர்கட் குக்கு றிப்பால்
தெரியவுணர்த் தினர்; அண்ணல் திருவடியில்
நீங்காப்பே ரன்பு கொண்ட
அருளடியர் அண்ணலெங்குள் ளனரோவென்
றூர்வமொடும் உருகி நிற்பார். 304

அன்புமிக்க சீரடியார் சிலர்அண்ணல்
நினைவோடும் உறங்கும் போது
மின்புரையும் கனவில்அருட் காட்சிநல்கிச்
சாமிதங்கி யிருப்ப தற்குப்

பொன்புரையும் இடம்வேண்டும் இச்சாமி
கொடுத்திடுமோ எனக்கேட் பார்கள்
அன்பர்விழித் தெழுந்திந்தக் கனவுக்குப்
பொருளென்ன என்றுய் வாரால் 305

சாமிக்கிட மேனென்ன எண்ணிடுவார்
சோதிக்கின் றுரோ என்பார்
சாமியடங் கப்போகும் தருணம்நெருங்
கியதோஎன் றெண்ணி நைவார்
சாமியிதை யுணர்த்திடவே யிக்காட்சி
யினைத்தந்தார் போலும் என்பார்
சாமியருட் பரிபாஷை யினைத்தகவோ
டுணரவல்லார் யாரே என்பார். 306

சாமிமறைந் திடின்நாம்யா ரிடம்சென்று
குறைகளைக்கூ றிடுவோம் என்பார்
பூமியில்நாம் வாழ்வதற்கு வழிகாட்டும்
புங்கவர்யார் என்று சோர்வார்
சாமிசில நாள்கழித்து மீண்டுமந்த
அடியவர்தம் கனவில் தோன்றி
சாமிக்கிடம் கிடைத்துவிட்ட தென்றுல்லா
சத்தோடும் அருளிச் செய்வார். 307

அடியர்விழித் தெழுந்திருந்தொன் றும்தோன்று
தயர்ந்துமனம் நைந்து சோர்வார்
படியில்வரு பரம்பொருளே பக்தர் துயர்
தவிர்த்தின்பம் பாலிப் போனே
நொடியில்அடி யவர்வினையை நீக்கிமுத்தி
நலம்அருளும் நோன்மை யோனே
கொடியவரும் திருந்தஅருள் கொற்றவனே
இனிக்காண்ப தென்றோ என்பார். 308

எங்களுக்குங் களையல்லால் வேறுகதி
யேதென்ன இயம்பிச் சோர்வார்
எங்களுக்கா றுதல்கூற உங்களையல்
லால்ஒருவர் இலரே யென்பார்

எங்களுக்குத் தாய்தந்தை குருதெய்வம்
எல்லாமும் நீரே என்பார்
எங்களேக்காத் தருளுதல்நும் கடனன்றே
என்றியம்பி விழிநீர் பெய்வார். 309

ஒருகாசும் எவரிடமும் விரும்பாமல்
உதவிடுவோர் உளரோ என்பார்
ஒருபொருளும் எவரிடமும் கேளாமல்
உதவிடுவோர் உளரோ என்பார்
ஒருகணமும் பிரியாமல் துணேயிருந்து
பேணிடுவோர் உளரோ என்பார்
மருவிடும்இல் லறத்தார்க்கு மாணருளார்
நெறியளிப்போர் உளரோ என்பார். 310

நிட்டையினில் தேர்ச்சியுற்றோர் தமக்கருளால்
கிடைத்தநிட்டைக் குறிப்பின் வண்ணம்
இட்டகுல தெய்வமென இலகண்ணல்
இனியடக்க மாவார் போலும்
சட்டஅடி யார்க்குரிய துணேயாவோர்
இனியாரே எனத்த ளர்வார்
சிட்டர்குழாம் போற்றுகுரு தேவர்அருள்
நமைக்கைவிடா தெனத்தேர் வாரால். 311

இருடியர்பட் டியினில்அருட் காட்சியரு
ளியஅண்ணல் எதிர்கா லத்தில்
அருளேவிழை அடியவர்கள் எச்சரிக்கை
யாயிருந்துள் ளன்பாற் போற்றிச்
சுருதிபுகழ் உடையவன்பற் றணுவளவும்
குறையாமல் தூய வாழ்க்கை
இருநிலத்தில் நடத்திவரப் பணித்துச்சிலர்க்
குக்கடிதம் எழுதச் செய்தார். 312

அடியர்ஒரு வருக்கொருவர் அடிக்கடிநன்
றேகலந்[து]அந் தரங்க மாக
உடையவன்றன் பெருங்கருணே புரிந்துவரும்
உயர்சிறப்பை அளவ ளாவிப்

படியில்அருட் சட்டநெறி எங்கும்நனி
பரவிளக் கிடுதல் வேண்டும்
அடியவர்கட் குரியநல்ல கடமையிது
என்னஎழு திடப்ப ணித்தார். 313

துரியகண பதியிக்கலி யுகத்தில்வரு
துறவறிதல் கடின மாமென்[று]
அருட்குரவர் அருளியது போலவைந்து
கரமுன்னே னேயிவ் வாறு
குருவுருவம் தாங்கிவந்து கோதிலருட்
சட்டநெறி தந்து காத்தார்
திருவுருவத் தொடுநம்விழி முன்வாரார்
இனியென்னத் தெளிந்தார் சில்லோர். 314

நடக்கவுள உண்மைசில சூசகங்க
ளால்உணர்ந்த நற்சீ ரன்பர்
அடைக்கலமென் றுறுமுயிர்கள் அனைத்தினுக்கும்
அருள்வாழ்வை யளித்துத் துன்பம்
துடைத்தருளித் தூயபர மானந்தம்
அருள்தூயோர் விரைவி லிவ்வா[று]
அடக்கமுறு வார்என்னும் செய்தியறி
யாதவராய் இருந்தா ரன்றே. 315

எவ்விதநன் றியையும்எவர் பாலும்விழை
யாமல்நல மியற்றும் சாமி
எவ்விதநற் புகழும்எவர் பாலும்விழை
யாமலருள் வழங்கும் சாமி
எவ்விதமாம் பிணிகளும்பேய் களும்தீய
வினைகளும்தீர்த் தருளும் சாமி
எவ்விதமாம் நலமும்அரு ளும்சாமி
யெனஅண்ணல் திகழ்ந்தார் நன்றே. 316

இங்குமங்கும் சென்றூர்கள் எவ்வுயிர்க்கும்
இனிதருளை வழங்கி னார்கள்
துங்கமிகும் அடியரையாட் கொண்டார்கள்
என்றுசொல நினைந்தி டாமல்

எங்குமொளிர் இறைவனண்ணல் திருமேனி
இருப்பிடமாக் கொண்டொப் பில்லா
மங்களநல் லருளாட்சி புரிகின்றான்
எனக்கூறல் மாண்பு டைத்தாம். 317

அண்ணல்அடி யார்களையாட் கொண்டருளச்
செல்லும்இடங் களிலே தோன்றும்
வண்ணவிருத் தம்சிந்து வகைகண்ணி
கும்மிவெண்பா வாதி யாவும்
புண்ணியமார் அடியர்எழு திக்கொள்ளும்
படிஇசைத்தல் வழக்க மாகும்
அண்ணலவ்வா றருளியுள பாடல்களில்
இனும்பலநாம் அறியா துள்ளோம். 318

நிர்விகற்பம்

நின்மலஜாக் கிரநிட்டை யிலக்கணத்தை
நிலவுலகுக் கினிது ணர்த்தி
கன்மநிரை தவிர்த்தடியர் திரளினையாட்
கொள்ளவந்த கருணை மூர்த்தி
நன்மையுல குக்கருளப் பலஇடத்தில்
நிர்விகற்பம் அமர்ந்த செய்தி
புன்மைதவிர் புனிதவர லாற்றில்நனி
பொலிவதனை முன்னர் கண்டோம். 319

பூமியன்னை திருமடியில் புனிதமுற
நன்றடக்க மாகு முன்னர்
சாமிஉயர் நிருவிகற்ப நிட்டையினில்
தகவுறநன் றமர்ந்திட் டார்கள்
ஆமுணவொர் அணுவளவும் கொள்ளாமல்
பேசாமல் அமர்ந்த அண்ணல்
தூய்மைமிகு திருமேனி யிளைப்பினைக்கண்
டோர்தம்மனம் துடித்து வாடும். 320

முதல்நிருவி கற்பம்கூ டலில்தொடங்கிப்
பொதிகையினில் முடிந்த தாகும்
அதன்பின்இரு டிப்பதியில் தொடங்கிப்பொதி
காசலத்தில் முடிந்த தாகும்

அதன்பினர்மே விலந்தைக்குளத் தினில்மூன்றும்
நிருவிகற்பம் அமர்ந்தார் அண்ணல்
இதுநான்காம் நிருவிகற்ப மாகும்இதன்
சிறப்பினையார் இயம்பற் பாலார்? 321

நிட்டைமுதற் பகுதியினில் அருளண்ணல்
நிலையறியா அடியார் சில்லோர்
இட்டமுடன் சிற்சிலஇ டங்களுக்
கெழுந்தருளு மாற ழைக்க
உட்டிகழ்பே ரருள்மிகுதி யால்அண்ணல்
உளமுவந்து சென்று மீண்டார்
நிட்டையின்பிற் பகுதியில்எங் கணும்செல்லா
திருந்தனர்ஆண் டறுபத் தாறில். 322

நாடுநக ரங்களென நாடாமல்
நல்லுபசா ரமும்நா டாமல்
காடிதுமே டிதுவென்னக் கருதாமல்
மூலைமுடுக் கிலும்ந டந்தே
ஈடிலடி யரைத்தேடி இனிதுசென்ற
திருவடிகள் இரண்டும் யார்க்கும்
கூடும்அருள் விளைக்கவுன்னி நனிமடங்கித்
தூயநிட்டை புரிந்த வம்மா. 323

நிறைமூப்பின் காரணமாய் மேனிவற்றித்
தோன்ற,நில வருளார் உள்ளத்[து]
இறையொன்றி இன்பவொளி மிகப்பரப்ப,
இருவிழியும் மூடிக் கொள்ள,
குறையனைத்தும் தவிர்த்திந்தக் குவலயத்தில்
அருளொளி குலாவ, பக்தித்
துறைசெழித்து விளங்கிடஓ வாத்தவத்தில்
ஆழ்ந்தனர்நம் தூய வள்ளல், 324

தவநிறைவு பெற்றமுனி வரரும்தொழும்
தவப்பிழம்பாம் அண்ண லாரைப்
புவியினிற்கண் டவர்கள்மனம் கரைந்தது;விண்
வாழமரர் போற்றி செய்தார்;

நுவலரிய நிட்டையினில் முனரிருக்கை
யினிற்கலைத்து நோய்க்குள் ளாகி
அவலநிலை அடைந்ததென்ணி அச்சமுற்றா
ரார்அமைதி யோடி ருந்தார். 325

தாமாக எப்போது கண்விழிக்கின்
றரோஅப் போது காண்போம்
நாமாக ஏதொன்றும் செயலாகா
தெனவாளா இருந்திட் டார்கள்
ஆமாறு நாட்கள்பல உருளஒரு
நாள்அண்ணல் கமலக் கண்கள்
தாமாக ஒருசிறிது மலர்ந்தன;அங்
கருகிருந்தோர் கண்டார் நன்றே. 326

இடம் குறித்தமை

அருகிருந்த வீட்டாரும் ஊராரும்
அண்ணலிடம் அணுகி மெல்ல
உருகுமுளப் பரிவோடும் என்னவேண்
டும்கூறு வீர்என் றார்கள்
உரியதங்கள் வீட்டினில்ஓ ரிடம்சுட்டிக்
காட்டிஇந்த இடத்தில் நன்றே
புரிகஅடக் கம்;வேறெவ் விடத்தினிலும்
புரியேல்என் றருளிச் செய்தார். 327

சாமிவிருப் பப்படியே செய்கின்றேம்
என்றூரார் கூறி ஞர்கள்:
சாமிஅவ தரித்தஇல்லம் ஒருமுறைதீக்
கிரையான[து]; அதனை நன்றே
ஆமுறையிற் புதுப்பித்து வைத்தார்கள்
அதுமீண்டும் தீக்குள் ளாக
ஏமமுற ஒருசிறுவீ டொருபுறத்தில்
அமைத்ததனில் இருந்தார் வீட்டார். 328

தீவிபத்து நேர்வதற்குக் காரணமாய்
இருந்தவன்நம் செம்மல் அவ்வூர்
மேவியதும் நேரிலுற்றுத் தன்பகைவர்
ஒருவரின்சோ ளப்ப டப்பில்

தீவிரவச் செய்ததுமே லும்பரவிப்
பலவீட்டைத் தீய்த்த தென்னப்
பாவமிகு தன்செயலைப் பொறுத்தருள
வேண்டிப்பதம் பணிந்து நின்றான். 329

அப்பொழுது தான்அந்தச் செய்தியினை
அண்ணல்முனர் அறிந்தார் ஊரார்:
ஒப்பிலண்ணல் அவற்கேதும் தீதுசெய
லாகாதென் றுரைத்தன் போடும்
மெய்ப்பொருளின் கணக்கிதென் றருளி; அதைச்
செய்தவனை மன்னித்தார்கள்
இப்பொழுதவ் விடத்திலடக் கம்செய்தல்
வேண்டுமென இயம்பி னரால். 330

முன்னவனை ;அண்ணல்இள மைப்போதில்
வழிபட்ட தவ்வி டந்தான்;
நன்னயமார் வேல்வைத்து நற்பூசை
புரிந்ததும்அவ் விடமே யாகும்;
பின்னர்மறைந் திட்டஅவ்வேல் கீழ்ச்சிவல்
பட்டியுறை சிகப்பி யாச்சி
சொன்னகன வின்படிபின் தோண்டியெடுக்
கப்பெற்ற தங்கே யாகும். 331

இவையனைத்தும் மக்களுக்கு மேலும்மிகு
வியப்பினையுண் டாக்க மிக்க
தவப்பிழம்பாய் அருள்ஞானத் தனிப்பிழம்பாய்த்
திகழண்ணல் சாற்றும் வண்ணம்
உவப்பொடந்தப் புனிதஇடத் தினிலடக்கம்
செய்வதென ஒப்புக் கொண்டார்
பவப்பிணியை மாற்றியருள் பரமகுரு
அருட்டிறனை அறிந்தார் யாரே 332

மார்கழியின் சிறப்பு

மாதங்களில் மார்கழியாய் நானிருக்கின்
றேனென்ன மறைநேர் வாக்கால்
கீதையினில் கண்ணபிரான் கிளத்தினர்பீ
டுடையஒரு மாத மென்ன

ஓதிநன்று தமிழ்மக்க ளால்போற்றப்
பெறுவதிந்த மாத மாகும்
பூதலத்தின் செயல்நிறுத்திப் புனிததெய்வச்
செயல்கள்பல புரிவார் மக்கள். 333

மக்களுக்கொ ராண்டாயின் அமரர்க்கொரு
நாளென்ன மதித்தல் வேண்டும்;
தக்கபகல் தைமுதலாய் ஆனிவரை;
ஆடிமுதல் தனுவீ ருகத்
தொக்கஇர வாகுமெனச் சொலும்நூல்கள்;
தூயதனு விடியற் காலம்
மிக்கநல்ல புண்ணியப்போ தெனவுணர்ந்து
மிகுதெய்விகச் செயல்கள் செய்வார். 334

பூமாலை தான்சூடிக் கொண்டுபினர்
புண்டரிகக் கண்ணற் கீந்தும்
பாமாலை சூட்டியும்மெய்ப் பக்திபுரி
யாண்டாளும், பரமற் கான
தூமாலை யாம்திருவா சகம்அருளும்
வாதவூர்த் தோன்ற லாரும்
பூமேல்பா வைப்பாட்டில் மார்கழியின்
பெருஞ்சிறப்பைப் புகன்றுள் ளாரால். 335

பொன்னம்ப லத்தில்நடம் புரிபூர்ணன்
அதிகாலை விண்ணோர் கட்குப்
பன்னரிய அருட்காட்சி யினிதருளிப்
பலநலமும் பாலித் தாளும்
நன்னயமார் ஆதிரையும், நாகமிசை
யமர்மாலோன் ஞாலந் தன்னில்
மன்னுயிர்கட் கருள்புரிவை குண்டநல்லே
காதசியும் வயங்கும் நன்றே. 336

நாயன்மார் களில்மானக் கஞ்சாறர்
இயற்பகைசாக் கியர்நன் முத்தி
ஏயுநற்றிங் களும்,ஆழ்வார் களில்மங்கை
மன்னர்திருப் பாணர் தொண்டர்

தூயஅடிப் பொடியார்நற் றிருவவதா
ரம்செய்த மதியும், ஏசு
நாயகனூர் திருவவதா ரம்புரிந்த
மாதமும்மார் கழியே யாகும். 337

அருளடக்கம்

மகம்மதிய மக்களுக்கும் மார்கழிமா
தம்சிறந்த மாத மாகும்
தகவுறுதுந் துபியாண்டில் தனுர்மாதம்
சாரிருபத் தெட்டாம் தேதி
பகர்வெள்ளிக் கிழமைஅனு டத்திருநாள்
திதிஏகா தசியில் அண்ணல்
திகழிருபா னைந்தெனும்நா ழிகையளவில்
அகத்தடக்க மானா ரன்றே. 338

அருட்சட்ட அடியார்கள் பரிபூர்ண
மாய்ச்சட்டம் அனுச ரித்துப்
பரிபூர்ணப் பேரின்பம் பெற்றுய்யப்
பக்குவம்செய் விப்ப தற்கும்,
அருட்சட்டச் செந்நெறிக்குப் பல்லுயிர்க
ளையு நன்றின் னருளா லீர்த்தே
அருட்பரிபூர் ணம்பெறுமா றுய்ப்பதற்கும்
அண்ணல்அகத் தடக்க மானார். 339

அருட்காஞ்சி காமாட்சி புரிபூசைக்
கந்தமிலை யென்[று]ஏ கம்பன்
அருளோடும் உரைத்தருகில் அழைத்தனனென்
றருள்வரலா றினிது கூறும்
அருளோடும் உயிர்த்திரளை அருட்சட்ட
நெறியிலுய்த்து நன்றே யூக்கித்
தெருளார்பே ரின்பமுயக் செயும்அண்ணல்
தவத்தினுக்கும் முடிவொன் றுண்டோ? 340

உலகுயிர்கட் காயுள்முடி யும்போதில்
உயிர்உடம்பை விட்டு நீங்கி
உலவுமறு பிறப்பெடுத்தற் குரியஇடத்
தினைநாடி உடனே செல்லும்;

நிலவிடுஜீ வன்முத்தர் நிலையதுவன்
றெனநனிநாம் உணர்தல் வேண்டும்;
உலவிடும்போ தேஅவர்கள் உடம்பைஇறை
யருள்மயமா யாக்கிக் கொள்வர். 341

அவர்கள்திரு மேனியில்ஒவ் வோரணுவும்
இறைமயமாய் அமைந்தி யங்கும்;
அவர்கள்திரு வுளத்திறைவன் அருள்வடிவாய்
அமர்ந்தின்னரு ளாட்சி செய்வன்;
அவர்கள்திரு மேனியின்அ ணுக்கள்தொறும்
அருட்செம்மை நிறைத லாலே
அவர்கள்திரு மேனிபஞ்ச பூதத்தால்
எஞ்ஞான்றும் அழிவ தில்லை. 342

மக்களுயிர் நவவாயில் களில்ஒன்றின்
வழியேகும்; யோகி கட்கு
நற்கபா லத்திலமை பிரமரந்தி
ரம்பிளந்து கொண்டே செல்லும்
எக்கணத்தும் வெளிஉள்எனும் பேதமில்மெய்ஞ்
ஞானிகளுக் கிதயத் துள்ளே
தக்கபடி அடங்குமெனச் சாற்றிடும்
வராகஉப நிடதம் நன்றே. 343

ஞானிகளின் அருள்நோக்கம் ஞானிகளின்
அருட்காற்று பட்ட போதே
ஊனுடல்கொள் உயிர்களுக்கு முத்திநிலை
யெய்துமெனின் ஒப்பில் சீரார்
ஞானிகளின் திருமேனிக் கழிவுண்டென்
றெவரேனும் நவிலற் காமோ
ஞானிகளின் அருளாற்ற லால்உலகம்
நடக்குமெனில் அதுவே உண்மை. 344

அண்ணல்திரு மேனியினை இருப்பிடமாக்
கொண்டிதுகா றும்பு றத்தே
எண்ணிலிடங் களிலருளு லாச்செய்தின்
னருட்கருணை நெறிப ரப்பித்

திண்ணியநற் றுணையாகத் திகழ்ந்தடியர்
கனைத்திரட்டச் செய்த பூர்ணன்
அண்ணலுளத் தமர்ந்துள்முக மாகஅரு
ளாட்சிசெயற் குள்ளம் கொண்டான். 345

கூடியுள ஊரவரை அடியவரை
அண்ணலருட் குறிப்பால் நோக்கி
ஈடில்முறை யினிலடக்க மாகவுள
காலமதை யினிதி யம்பி
நாடிமுனர் உரைத்த இடத் தினிலே
சமாதியைநன் றமைக்கச் சொல்லி
வீடுவிழை வடநாட்டின் னடியவர்க்குத்
தந்திவிரைந் தனுப்பச் சொன்னார். 346

செட்டிநாட் டுறைவள்ளல் தீநாமுத்
தயசெட்டி யார்வே ளூர்வாழ்
சட்டஅடி யவர்கமலப் பிள்ளைவா
ணியம்பாடி முனியப் பப்பேர்ச்
செட்டியார் ஏனாதி மங்கலம்வாழ்
ஜெகதாம்பாள் முதலா யுள்ள
சட்டஅடி யவர்பலர்க்கும் முறையோடு
தந்தியனுப் பிடப்ப ணித்தார். 347

மேலிலந்தைக் குளம்மதுரை திருச்சிதிண்டி
வனம்முதலா யுளஊர் கட்குச்
சீலமிகு கடிதம்வரைந் திடப்பணித்தார்
முகவரிகள் தெளிவாய்க் கூறி
ஏலுமவர் எல்லோரும் வந்தபினர்
இனிதடக்கம் செய்க வென்றார்
சாலப்பல நாள்செலினும் சற்றுமஞ்சா
திருக்கும்வணம் திட்டம் செய்தார். 348

சேய்நடக்கத் தெரிந்துகொளும் வரையில்உடன்
தாய்இருந்து பழக்கல் போலும்
ஆயஎழுத் தறிந்துசொற்குப் பொருளுணரும்
வரையாசான் பயிற்றல் போலும்,

தூயபல அடியவர்க்குத் தேர்ச்சிதந்த
தூயவர்தாம் அடங்கும் போதில்
ஏயபக்தர் ஆருமழக் கூடாதென்
றினிதருளாற் பணித்திட் டாரால். 349

கருவறையுள் இனிபுகவொ ணுதபடி
கதிகாட்டி மதியைத் தீட்டி
அருள்கூட்டி யமுதூட்டி அடியவரைப்
பேணியருள் கருணை வள்ளல்
அருள்மயமாய் உள்முகமாய் அமர்ந்தினரு
ளாட்சிபுரிந் துயிர்கட் கெல்லாம்
அருள்நலம்பா லித்தினிய மேல்நிலைக்கண்
உய்க்கநன்றுள் ளடக்க மானுர். 350

ஆகாயம் சிறுதூரல் களைத்தூவ
அமரர்குழாம் கூடி நின்றே
ஓகாரத் திருமேனி யுடைமுன்னேன்
உருப்பெற்றுக் கைலை மேவி
மாகாசி னிக்கணுறும் உயிர்த்தொகைக்கு
வாழ்வருளிக் கரைசேர்த் தாள
மீகாமன் போலவந்த மேலாய்நின்
மெய்க்கீர்த்தி வாழ்க என்றுர். 351

இத்தலத்தில் எழுந்தருளி, இனிதுவழி
பாடுசெயும் உயிர்கட் கெல்லாம்
மெத்தஅருள் பாலித்து மேன்மையெலாம்
வழங்குகென வேண்டு கின்றேம்
இத்தலம்தென் கைலையென என்றும்விளங்
கட்டுமென இறைஞ்சி நின்றுர்
அத்தனருள் மணமிந்த அண்டமெலாம்
பரவிநிறைந் திட்ட தன்றே. 352

குழுமியுள அடியவரும் உறவினரும்
குடும்பத்தார் பலரும் வாய்விட்
டழுதல்தகா தெனஉரைத்த அண்ணலருட்
கட்டளைக்குட் பட்டா ரேனும்

விழிமலர்கள் ஆறெனநீர் பெருக்கின; மெய்
விதிர்ப்புற்று வருந்த லானார்
விழுமியசீ ரண்ணல்அருட் செயல்களெண்ணி
விளம்பவொணு ஏக்கம் கொண்டார். 353

என்றினிநாம் அண்ணலருட் டிருமேனி
நடையெழிலைக் காண்போ மென்றும்
என்றினிநாம் அண்ணலருட் டிருவாக்கை
இருசெவியாற் கேட்போ மென்றும்
என்றினிநாம் அண்ணலருட் டிருவடிதொட்
டினிதுவணங் கிடுவோ மென்றும்
நன்றுளத்தி லெண்ணிநெடு மூச்செறிந்து
ஞாலமிசை மயங்கி வீழ்ந்தார் 354

திருவடித்தா மரைமலரைத் தொட்டுச்சிரம்
தாழ்த்திவணங் கிட்டார் சில்லோர்
அருளடியர்க் கண்ணலுரைத் திட்டவணம்
தந்தியனுப் பிட்டார் ஊரார்
அருளடியர் வரும்வரையில் அருகிலிருந்
தேபஜனை செய்தார் அன்பர்
அருளடக்கம் செய்வதுபற் றியதர்க்கம்
அதற்குள்சிறி தெழுந்த தங்கண். 355

அண்ணலருட் கட்டளையின் படியவர்கள்
குறித்திருந்த இடத்தி லேயே
புண்ணியரை அடக்கம்செய வேண்டுமெனப்
பேரன்பாற் புகன்றார் பல்லோர்
நண்ணிடுமிவ் வூர்நடுவில் எப்படிச்செய்
திடுவதென நவின்றார் சில்லோர்
அண்ணல்சொலி னும்வழக்கம் போல்புறத்தில்
செய்வோமென் றுரைத்தார் சில்லோர். 356

அண்ணலருள் திருவிழிகள் திறந்தன; எல்
லோரும்வியப் பெய்தி னார்கள்
நண்ணுமிந்த ஊர்நடுவில் செயலாகா
தென்றெண்ணி நவில்கின் றீரோ

உண்ணிலவும் உடையவன்றன் கணக்கு, போ
கப்போக விளக்க மெய்தும்
எண்ணியுரைத் திட்டஇடத் தினிலடக்கம்
செய்களனச் சொற்ருர் அண்ணல். 357

இந்தஇடம் பெருங்கோயி லாய்மாறும்
இமையவரும் போற்றி செய்வார்
சந்ததமும் உலகிலுள பலரும்இவண்
சார்ந்துவழி பாடு ஞற்றி
நந்தலிலாப் பல்வளமும் எய்திடுவர்
இவ்வூரும் நலம்மிக் கோங்கும்
சிந்தையினில் அச்சமின்றி சொன்னபடி
செய்வீரென் றருளி ஞரால். 358

அருட்குரிசில் அடங்கிவிட்டார் இனிஎழுந்தி
ரார்என்ன அச்ச மின்றித்
தருக்கித்தடை கூறியவர் எல்லோரும்
அச்சமுற்றுச் சாமீ தங்கள்
அருட்டிரு வுளத்தின்வணம் அவ்விடத்தி
லேஅடக்கம் செய்வோம் எங்கள்
தருக்குமிகு மொழிகளைமன் னித்தருள
வேண்டுமெனத் தாள்ப ணிந்தார். 359

அனைவோரும் அதிசயிப்ப அருளண்ணல்
பேரமைதி யினில்ஆழ்ந் திட்டார்
கனிவோடு கருணைமொழி கூறிமனம்
கனிவிக்கும் கருணை வள்ளல்
முனியாத படிநடந்து கொண்டோம்;அவ்
வாறடக்கம் முடித்தல் வேண்டும்
எனஊரு ளோர்பலரும் அண்ணலரு
ளின்திறத்தை யேத்தி ஞரால். 360

அருளடக்கம் செய்வதென்ருல் அமரும்நிலை
யினிலிருத்தல் வேண்டு மென்னும்
ஒருகுறிப்பை அவ்வூரார் அறியார்கள்
ஆதலினுல் உடைய வன்றன்

திருவருளே உருவான தேசிகனார்
பள்ளிகொண்ட வணமிருக்க
அருகிருந்தோர் அமரும்நிலை யினிலிருத்த
முயற்சியொன்றும் செய்யா ரானார். 361

இக்காலத் துள்ளதுபோல் தந்திஅஞ்சல்
வசதியெலாம் எல்லா ஊர்க்கும்
அக்காலத் தினிலில்லா மையினாலும்
தனுஇறுதி யான தாலும்
தக்காரெல் லாம்போற்றும் தைப்பொங்கல்
அடுத்தமைந்த தாலும் செய்தி
மிக்கால சியமாகத் தெரிந்தடியர்
உளம்பதைத்துத் திகைப்பெய் திட்டார். 362

அடியவர் வருத்தம்

அருகுளஊர் களில்வதியும் அடியவர்க்கிச்
செய்தியினை அறிவித் திட்டார்
குருபரனார் அருளடக்க மானசெய்தி
கூறிடக்கேட் டடியா ரெல்லாம்
பருவரலுற் றழுதரற்றிச் செயல்கள்அனைத்
தும்மறந்து பாரிற் சோர்ந்தார்
அருள்நெறிக்கண் அழைத்தேகற் கினியாவ
ருளர்என்ன அலக்க ணுற்றார். 363

குருநாதா எனவாய்விட் டரற்றிக்கூக்
குரலிட்டுச் சோர்ந்தார் சில்லோர்
அருள்தந்தை அருள்மன்னன் அருள்தெய்வம்
எனஉருகி அழுதார் சில்லோர்
அருட்குருவை இனிஎன்று காண்போமென்
றழுதரற்றி வீழ்ந்தார் சில்லோர்
தரணிமிசை இவர்போல்சற் குருவுளரோ
எனப்பதறித் தவித்தார் சில்லோர். 364

இதற்குத்தான் நமக்குச்சில உபதேசம்
இனிதருளி னாரோ என்பார்
இதற்குத்தான் அத்தகைய நிகழ்ச்சிகளை
நமக்கருளி னாரோ என்பார்

உதயரவி போலவிமா னத்தண்ணல்
ஒளிபரப்பி யேகக் கண்ட(து)
இதற்குத்தான் என்றுணரா தேமாந்து
போனேமே என்பார் சில்லோர். 365

செயலொன்றும் புரியாமல் கண்ணீர்விட்
டுக்கதறிச் சோர்வுற் றேங்கி
உயநன்று நெறிகாட்டி ஒப்பிலரு
ளாற்பேணும் ஒருமூர்த் திக்குச்
செயவுள்ள கடமைநினைந் தடியரெலாம்
ஆங்காங்கு சேர்ந்து கூடி
துயிலின்றி உணவின்றித் துயரத்தி
னோடிருடி நகரம் சேர்ந்தார். 366

தமிழ்நாட்டின் பலபகுதி களிலிருந்தும்
அடியரன்பர் சார்ந்தார் அங்கண்
அமுதான சட்டம்அருள் அண்ணல், அடி
யார்க்குச்சமா தியைஇவ் வண்ணம்
அமைத்திடுதல் வேண்டுமென அருளியுளார்
ஆதலினால் அண்ண லாரை
அமர்த்திடுதல் வேண்டுமெனக் கூறியன்பி
னோடும்அமர்த் திடமு யன்றார். 367

ஐந்துநாள் ஆயினவே இனிஎவ்வா
றமர்த்திடுவ தென்ன அஞ்சித்
சிந்தையினில் பெருகுமன்பி னோடுருகித்
துதிபுரிந்து செம்ம லாரை
நந்தலிலா அருள்ஞான நாயகரே
அமர்ந்தருள்வீ ரென்னப் போற்றிச்
சந்தமுற அமர்த்தினர்தண் ணருள்மூர்த்தி
தகவுறநன் றமர்ந்தா ரங்கண். 368

அடியவர்தொட் டிடுங்காலை மல்லிகைப்பூப்
போலண்ணல் அருளார் மேனி
தொடஇனிய தாய்த்தெய்வ மணத்தினொடும்
துலங்குதல்கண் டடியார் இந்தப்

படியிற்பிறர் உடம்பினுக்கும் பரஞான
தேசிகனார் திருமே னிக்கும்
இடையிலுள மிகுவேறு பாடுணர்ந்து
பேரன்பொ டேத்த லுற்றார். 369

தேவையுள பொருளனைத்தும் அடியவர்கள்
கொணர்ந்தினிது சேக ரித்தார்
ஆவியுடல் பொருளேற்றின் னருள்புரியும்
அற்புதச்சீ ரண்ண லாரை
மேவிடுமெய் யன்பொடொரா சனத்திலினி
தெழுந்தருளு வித்து விண்ணோர்
தேவர்களும் முனிவர்களும் தொழுதேத்த
விளங்குதிரு முழுக்காட் டிட்டார். 370

உயர்ந்தநறு மணம்கமழும் நன்னீர்சந்
தனம்பஞ்சா மிருதம் தீம்பால்
தயிர்இளநீர் நனிகனிந்த பலவிதமாம்
பழங்கள்பிழி சாறு பன்னீர்
வியன்திருநீ றாதியெலாம் ஒவ்வொன்றாய்
விமலகுரு நாதர்க் கன்பால்
உயர்அடியர் பரிவோடு மினிதுதிரு
மஞ்சனம்செய் துருகி நின்றார். 371

உலவுநிலை யினிலிறுதி யாகஅண்ணற்
கொப்பிலபி டேக மாற்றி
அலகில்மகிழ் வோடுகண்ட அடியார்வா
ணியம்பாடி முனியப் பப்பேர்
குலவுமன்பர் மிகவும்உரு கிக்கோவெ
னக்கதறி யுளம்நைந் திட்டார்
பலருமண்ணல் கட்டளைக்குட் பட்டுமன
வருத்தத்தை யடக்கிக் கொண்டார். 372

ஆயினும்மெய் யடியவர்தம் மலர்விழிகள்
நீர்ஆறாய்ப் பெருக்கிற் றங்கண்
தாயினும்நற் றயவுமிக்க சற்குருவே
எனும்ஒலிவிண் சார்ந்த தங்கண்

மாயிருஞா லம்திருந்த வருமணியே
வாழ்வளிக்க வந்த ஞான
நாயகரே இனிஎவ்வா றுமைக்காண்போ
மெனவுருகி நைந்தார் பல்லோர். 373

திருவுளத்தைப் போல்தூய வெண்மைமிகு
மெல்லியநல் லாடை சாத்தி
மருவுமண மலர்மாலை பலப்பலவும்
மாணெழிலொ டினிது சூட்டித்
திருவமுதும் பலவகையாம் பண்ணிகா
ரமும்நன்று செய்து வைத்துக்
குருபரரே ஏற்றருள்கென் றுரைகுழறிக்
கூறிநைவேத் தியம்பு ரிந்தார். 374

ஒருசிறிதும் வாட்டமின்றித் திருவருளின்
ஒளிவீசித் திகழும் அண்ணல்
திருவருள்மே னியின்பொலிவைத் தெரிசிக்கும்
பெரும்பேறு பெற்றோ ரெல்லாம்
உருகுமுளத் தொடும்கண்டார் தீபாரா
தனைகளும்கண் டுய்வு பெற்றார்
மருவுமவர் முற்பிறப்பிற் செய்தவத்தை
வாய்கொடுநாம் உரைத்தற் காமோ? 375

வையமிசை அண்ணலன்னை திருவயிற்றி
னின்றுதித்த இடத்தி லேயே
தைமதிமூன் றாம்தேதி தகுசெவ்வாய்
சார்முப்பான் நாழி கைக்கு
துய்யமஞ்ச னம்முடித்தா ராதனைகள்
முடித்துத்திருக் காப்புச் செய்தார்
மொய்யொளிவெண் திருநீற்றின் மகிமையருள்
மூர்த்தியத னிடைதி கழ்ந்தார். 376

பின்னர்முறைப் படியினிது திருக்காப்புச்
செயல்பலவும் செய்வித் தார்கள்
அன்னைநில மகள்மடியில் அந்நகரின்
கண்முன்பே அடக்க மாகி

மன்னுசிறப் புடன்திகழ்ந்த அண்ணல்பெரி
யண்ணுவும் மற்று முள்ள
நன்னயம்சால் இருடிகளும் அண்ண லுக்கு
நல்வரவேற் பளித்திட் டாரால். 377

நயத்தகுசீர் அருளாளர் நவின்றவெலாம்
சட்டமென நல்கி யாரும்
செயற்கரிய செயல்செய்த செழுமணியே
வருகஎன வரவேற்றிட்டார்
உயஉலகுக் கருளியது போலெமக்கும்
உயர்அருள்பா லிப்பீ ரென்றார்
தயவொடுல குயும்பொருட்டுத் தவமுஞற்ற
வருகஎன்றும் நவின்றார் சால்பால். 378

தனக்னெவா ழாதுபிறர்க் குரியவராய்
வாழ்வோர்கள் எவண்சார்ந் தாலும்
நினைப்பரிய பெருஞ்சிறப்பே எய்திடுவர்
எனும்வாக்கு நிஜமே யன்றோ?
அனைஇயற்கை அண்ணலைமெய் யன்பொடிரு
கரம்நீட்டி யணைத்துக் கொண்டாள்
இனிதுமுத்தர் என்றும்நிலைத் திருப்பரெனக்
காற்றுமுழங் கிட்ட தம்மா. 379

ஞானவொளிச் செங்கதிரோன் ஞாலத்துள்
ளடங்கினன்இங் கேநமக்கு
வானிலென்ன வேலையென்று மறைந்ததுபோல்
மேற்கடலிற் கதிரோன் சார்ந்தான்
மோனவள்ளல் அடக்கமுற்ற செய்தியறிந்
தடியரன்பர் திரண்டு மொய்த்தார்
ஊனமொழித் தொப்பிலுயர் வருள்குருவே
எனஉருகிக் கண்ணீர் விட்டார். 380

இதுவரையிற் பலர்குருநா தரையறிவார்
இனிதுகுரு அவதா ரம்செய்
பதியிதுதான் எனச்சென்று கண்டறியார்
பலரைவழி கேட்டுக் கொண்டே

முதல்வர் அரு ளால்எவ்வா றேவந்து
சேர்ந்துகுரு மூர்த்தி யைநன்[று]
இதமொடடக் கம்புரிந்த இடம்மேவி
இருவிழிநீர் பெருக்கி நின்றார். 381

எங்களுக்கு வழிகாட்ட இனிதுவந்த
வான்பொருளே இன்ப மூட்டி
எங்கள்குறை தீர்க்கவந்த இணையிலருட்
கோமகனே எளியேம் சின்னாள்
தங்கள்தரி சனம்காண வில்லையெனில்
தரிக்ககிலா தாவ லோடும்
எங்கள்பதிக் கென்றுவரு வீர்என்ன
ஏங்கிஎதிர் நோக்கு வோமே. 382

இனிஎன்று நும்பொன்னார் திருமேனி
எங்கள்விழி யாரக் காண்போம்
புனிதமல ரடிகள்புவி யதிரா(து)
உலாவியது போது மென்றே
தனியிடத்தி லேயமைதி கொண்டனவோ
தாரணியைத் திருத்தி னாற்போல்
இனிவிண்ணுல கினைத்திருத்த ஏகினிரோ?
இயம்பிடுவீர் என்று சோர்வார். 383

அடையவந்த சாமியல்ல; எப்போதும்
இருக்கும்என அடியார்க் கன்பால்
நெடிதுரைத்த நீர்இங்கெப் போதுமிருப்
பீரென்ன நினைந்திட் டோமே
படியின்மிசை நும்வார்த்தை பொய்யாமோ
எம்விழிகள் காண இங்கே
கடிதிலருட் காட்சிதந்தா றுதல்கூறு
வீர்கருணைக் கடலே என்பார், 384

எங்கள்பிழை களைப்பொறுக்க இயலாமல்
இருநிலத்துள் மறைந்திட் டீரோ
துங்கமிகும் சட்டம்அணு வும்பிசகா
தினிதுநட வுங்க ளென்ன

எங்களுக்கு நன்றருளும் அண்ணல்; எங்
களுக்கையம் இனிஏற் பட்டால்
எங்கெவரை அணுகிடுவோம் யாவர் எமக்
குரியனகூ றிடுவார் ஐயா? 385

கோடிக்கணக் கானகுரு மார்உலகில்
தோன்றிடினும் கோவே நும்போல்
நாடியெமை நனிதிருத்தி நன்றழைத்துச்
செல்வோரிஞ் ஞாலத் துண்டோ?
ஈடிணையில் கற்பகமே நினைத்தவெலாம்
நினைத்தபடி இனிதே நல்கும்
ஆடகச்சீர் மணிக்குன்றே அற்புதத்
தயாநிநியே அருட்சீ மானே. 386

எவரிடமும் எதுவும்எதிர் நோக்காமல்
இனிதருளும் செம்ம லேயாம்
எவரிடமும் அவ்வாறு நடந்துகொள
வேண்டுமென இனிது ரைத்தீர்
பவவினைகள் பற்றறுத்துப் பரகதியை
அருளவந்த பதியே நும்மை
அவனிமிசை யினிக்காண்ப தென்றென்ன
அறியகிலோம் அருள்வீர் என்பார். 387

நுமதருளார் திருமேனிக் கபிடேக
அலங்காரம் எந்நாள் செய்வோம்
நுமதுதிரு மலரடியில் மலரிட்டு
நல்வழிபா டெந்நாள் செய்வோம்
எமதுகுரல் நும்செவியில் ஏறவிலை
யோ?எங்கள் கண்ணீர் கண்டால்
இமையளவும் பொறுக்காமல் அதைத்துடைத்தா
றுதல்கூறும் இறையே என்பார். 388

இந்நாள்ஏன் இனும்வாளா இருக்கின்றீர்
எமைத்திருத்த இயலா தென்றே
இந்நாளில் எண்ணிவிட்டீ ரோ?இனியாம்
எப்பிழையும் புரியோம் என்பார்

செந்நாவால் குயிற்குரலால் ஒருவார்த்தை
செப்பியருள் புரிவீர் என்பார்
இந்நாள்இப் புவியில்நுமைப் போல்துணையாய்
ஏவருளார் எந்தாய் என்பார். 389

எத்தகைய மூலைமுடுக் குகளிலிருந்
தாலும்அடி யார்பால் ஏகி
மெத்தமகிழ் வோடுகண்டு தேற்றியரு
ளுரைகூறும் மேலோய் எம்மை
அத்தகைய மெய்ப்பரிவொ டும்தேடி
வருபவர்ஆர் அருளோ டெங்கள்
சித்தமலம் அறுப்பவரார் திருவருள்செய்
திடுபவர்ஆர் செப்பீர் என்பார். 390

இனியாரை நாங்கள்எதிர் பார்த்திடுதற்
கியலுமென இயம்பிச் சோர்வார்
கனமான கல்லும்கரைந் துருகிடுமா
றழுதரற்றிக் கண்ணீர் சிந்தி
நனிவாடும் அடியவரைக் கண்டுூரார்
சாமிக்கு ஞால மீதில்
மனமாரப் போற்றடியர் மட்டின்றி
யுளதறிந்து வியப்ப டைந்தார். 391

இத்தனைநல் லடியார்நம் சாமிக்குள
ரெனஇதுகா றறிய கில்லோம்
இத்தனைநற் புகழ்படைத்தோர் இச்சாமி
எனஇதுகா றறிய கில்லோம்
இத்தரையில் இவ்வூரில் இவர்தோன்ற
இவ்வூர்எத் தவமாற் றிற்றோ?
இத்தகுநற் சாமியுடன் வாழ்ந்திடநாம்
எத்தவம்செய் தோமோ என்பார். 392

இவர்புகழை யறியாமல் இத்தனைநாள்
வாளாநாம் இருந்திட் டோமே
இவர்கருணைக் காளாகா தித்தனைநா
ளும்வீணிற் கழித்திட் டோமே

இவர்அருட்செந் நெறிபேணி இவர்மலர்ப்பா
தம்போற்று திருந்திட் டோமே
இவர்அருளார் திருப்பணிகள் இனியேனும்
புரிந்துய்வு பெறுவோ மென்பார். 393

தேர்ந்தசில அடியார்கள் சேர்ந்தாலோ
சித்தருளார் தேசி கர்க்குச்
சாந்தவொளி பரப்புதிருக் கோயிலொன்று
சமைத்திடுதல் வேண்டுமென்னக்
கூர்ந்தமதி யாற்கூறிக் குறைவில்திரு
வருள்துணையைக் கொண்ட மைத்தே
ஏந்தலருள் எய்திடுவோம் என்றன்பி
னெடுதீர்மா னித்தார் நன்றே. 394

## திருக்கோயில் அமைப்பு

எல்லையிலா தெங்கும்விளங் குடையவனோர்
அருளுருக்கொண் டினிதே தோன்றி
பல்லுயிரும் பேரின்பம் பெறநாடிப்
பல்லாண்டு தவமி யற்றி
நல்லருட்சட் டம்கண்டு ஞாலமிசை
நல்கியரு ளாட்சி பூண்டு
பல்லுயிரை யும்திருத்தும் தவமாற்றப்
பாரிலடங் கினமை கண்டோம். 395

அருளாளர் அடங்கிய இடங்களில்மா
பெருங்கோயில் அமைந்தெஞ் ஞான்றும்
அருளார்பே ரொளிபரப்பி ஆனந்த
மூட்டிவரக் காணு கின்றோம்
அருளாளர் பலர்உவப்போ[டு] இருடிபட்டிச்
சாமியென அன்பாற் போற்றும்
தெருளார்நம் அண்ணல்அடங் கியஇடமும்
திருக்கோயி லாகுமன்றோ? 396

அண்ணல்சில சிறந்தஅடி யார்களிடம்
அருளுரைகள் ஆற்றுங்காலை
வண்ணமிகு பெருங்கோயில் சாமியடங்
கிடுமிடத்தில் வையம் போற்றத்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்கு
முதல் முதல் அடியார் பெருமக்களால் அமைக்கப்பெற்ற
திருக்கோயில்

இவர்அருட்செந் நெறிபேணி இவர்மலர்ப்பா
தம்போற்று திருந்திட் டோமே
இவர்அருளார் திருப்பணிகள் இனியேனும்
புரிந்துய்வு பெறுவோ மென்பார். 393

தேர்ந்தசில அடியார்கள் சேர்ந்தாலோ
சித்தருளார் தேசி கர்க்குச்
சாந்தவொளி பரப்புதிருக் கோயிலொன்று
சமைத்திடுதல் வேண்டுமென்னக்
கூர்ந்தமதி யாற்கூறிக் குறைவில்திரு
வருள்துணையைக் கொண்ட மைத்தே
ஏந்தலருள் எய்திடுவோம் என்றன்பி
னொடுதீர்மா னித்தார் நன்றே. 394

## திருக்கோயில் அமைப்பு

எல்லையிலா தெங்கும்விளங் குடையவனோர்
அருளுருக்கொண் டினிதே தோன்றி
பல்லுயிரும் பேரின்பம் பெறநாடிப்
பல்லாண்டு தவமியற்றி
நல்லருட்சட் டங்கண்டு ஞாலமிசை
நல்லியரு ளாட்சி பூண்டு
பல்லுயிரை யும்திருத்தும் தவமாற்றப்
பாரிலடங் கினமை கண்டோம். 395

அருளாளர் அடங்கிய இடங்களில்மா
பெருங்கோயில் அமைந்தெஞ் ஞான்றும்
அருளார்பே ரொளிபரப்பி ஆனந்த
மூட்டிவரக் காணு கின்றோம்
அருளாளர் பலர்உவப்போ[டு] இருடிபட்டிச்
சாமியென அன்பாற் போற்றும்
தெருளார்நம் அண்ணல்அடங் கியஇடமும்
திருக்கோயி லாகுமன்றோ? 396

அண்ணல்சில சிறந்தஅடி யார்களிடம்
அருளுரைகள் ஆற்றுங்காலை
வண்ணமிகு பெருங்கோயில் சாமியடங்
கிடுமிடத்தில் வையம் போற்றத்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்கு
முதல் முதல் அடியார் பெருமக்களால் அமைக்கப்பெற்ற
திருக்கோயில்



கிழக்குப் பக்கம்



தெற்குப் பக்கம்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் விமானம்



கிழக்குப் பக்கம்



தெற்குப் பக்கம்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் விமானம்





ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் விமானம்

மேற்குப் பக்கம்

வடக்குப் பக்கம்

நின்னமுற அமையுமெனச் செப்பியநற்
திருவாக்குக் கேற்ற வாறே
எண்ணினர்நல் லடியார்கள் இனிதுதிருக்
கோயிற்பணி தொடக்கம் செய்தார். 397

இருடிபட்டிச் சாமிதிரு நாமத்தால்
எழிலார்ஆச் சிரமம் ஒன்றை
இருடிபட்டி யினிலமைக்க எண்ணிமுனர்
சேகரித்த பொருளைக் கொண்டு
கருதும்வணம் கோயிலமைப் போமென்ன
முடிவுசெய்து கருங்கல் லாலே
மருவுதிருக் கோயிலமைத் தற்கான
மாண்செயல்கள் புரியலானார். 398

அடியர்நர சிம்மலுசாத் தூர்சாமி
நாதபிள்ளை அருள்வே லூர்வாழ்
அடியர்கம லப்பிள்ளை வாணியம்பா
டியில்வதியும் முனியப் பப்பேர்
அடியர்இரு டிப்பட்டி யினிற்றங்கி
யிருந்துபணி யாற்றி னார்கள்
நெடியகருங் கல்கொணரும் போதருளார்
நிகழ்ச்சியொன்று நடந்த தாமால். 399

எட்டையா புரத்தருகி லுளஊரி
லிருந்துவண்டி களிலே கற்கள்
திட்டமுறக் கொண்டுவரும் போதொருவண்
டியின்அச்சு முறிந்து போக
சட்டஅடி யாரான முனியப்பச்
செட்டியார் சற்றும் அஞ்சேல்
மட்டில்குரு நாதர்அருள் காக்குமென்றவ்
வண்டியின்கண் அமர்ந்தி ருந்தார். 400

ஆண்டவர்தண் ணருளிலுள நம்பிக்கை
யால்வண்டியை ஓட்டச் சொன்னார்
ஆண்டவர்ஆ லயத்தருகில் வந்தபின்பவ்
வண்டிவிழுந் திட்ட தங்கண்





ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் விமானம்

மேற்குப் பக்கம்

வடக்குப் பக்கம்

திண்ணமுற அமையுமெனச் செப்பியநற்
திருவாக்குக் கேற்ற வாறே
எண்ணினர்நல் லடியார்கள் இனிதுதிருக்
கோயிற்பணி தொடக்கம் செய்தார். 397

இருடிபட்டிச் சாமிதிரு நாமத்தால்
எழிலார்ஆச் சிரமம் ஒன்றை
இருடிபட்டி யினிலமைக்க எண்ணிமுனர்
சேகரித்த பொருளைக் கொண்டு
கருதும்வணம் கோயிலமைப் போமென்ன
முடிவுசெய்து கருங்கல் லாலே
மருவுதிருக் கோயிலமைத் தற்கான
மாண்செயல்கள் புரியலானார். 398

அடியர்நர சிம்மலுசாத் தூர்சாமி
நாதபிள்ளை அருள்வே ளூர்வாழ்
அடியர்கம லப்பிள்ளை வாணியம்பா
டியில்வதியும் முனியப் பப்பேர்
அடியர்இரு டிப்பட்டி யினிற்றங்கி
யிருந்துபணி யாற்றி னார்கள்
நெடியகருங் கல்கொணரும் போதருளார்
நிகழ்ச்சியொன்று நடந்த தாமால். 399

எட்டையா புரத்தருகி லுளஊரி
லிருந்துவண்டி களிலே கற்கள்
திட்டமுறக் கொண்டுவரும் போதொருவண்
டியின்அச்சு முறிந்து போக
சட்டஅடி யாரான முனியப்பச்
செட்டியார் சற்றும் அஞ்சேல்
மட்டில்குரு நாதர்அருள் காக்குமென்றவ்
வண்டியின்கண் அமர்ந்தி ருந்தார். 400

ஆண்டவர்தண் ணருளிலுள நம்பிக்கை
யால்வண்டியை ஓட்டச் சொன்னார்
ஆண்டவர்ஆ லயத்தருகில் வந்தபின்பவ்
வண்டிவிழுந் திட்ட தங்கண்

ஆண்டவர்கோ யிற்பணிக்கு வந்தகல்லும்
சிதையாமல் நழுவிற் றன்பு
பூண்டமுனி யப்பசெட்டி யார்வண்டிக்
காரருடன் இறங்கி ஞரால். 401

வண்டியினிற் பூட்டியநல் எருதுகட்கும்
இடையூறு வாய்க்க வில்லை
அண்டைஅய லுள்ளவர்கள் அதுகண்டாண்
டவர்அருளைப் போற்றினர்கள்
மண்டலமெல் லாம்போற்றும் மாமுனிவ
ராம்அண்ணல் அடியார் கள்பால்
கொண்டுளபே ரன்பினையார் சொற்களினுற்
கூறவல்லார் குவல யத்தே. 402

அருளண்ண லார்அடக்க மானஅந்த
இடத்திற்கரு வறையும் முன்னல்
மருவிடுநல் லருத்தமண்ட பமும் அமைத்து
வண்ணவிமா னமும்அ மைத்தார்
அருளண்ணல் திருவுருவைக் கருஞ்சலவைக்
கல்லால்நன் றமைத்திட் டார்கள்
அருளண்ண லாரைமுனர் காணுதார்
கண்டருள்பெற் றுய்யு மாறே. 403

ஆண்டவரை நேரில்தரி சித்தும்அவர்
அடியரென அமைந்தும் அன்பு
பூண்டஒரு சிற்பியார் அக்கருங்கல்
மூர்த்தியையும் பொலிவி னேடு
காண்டகுநற் பஞ்சலோ கச்சிலையி
னையுமண்ணல் கருணை யாலே
ஈண்டினிது செய்தமைத்தார் அடியார்கள்
போற்றியின்ப மெய்து மாறே. 404

அண்ணலருட் டிருவுருவ அமைப்பைநனி
கண்டின்ப மடைந்த அந்த
நுண்ணியசிற் பக்கலைவல் லார்நோன்மை
சான்ற அண்ணல் அருளினுலே

எண்ணியெண்ணி இனிதமைத்த இருசிலையும்
எழிலார் புன்முறுவ லோடும்
அண்ணலுரை யாடுவது போலமைந்த
தருட்சிறப்பே யாகு மம்மா. 405

அனைத்துயிரின் உள்ளிருந்தும் ஆட்டுவிக்கும்
அருட்பரமா னந்த மூர்த்தி
நினைப்புரைசெய் கைக்கடங்கா எழிலார்ந்த
நிலையினில்நன் றமைத்துக் கொண்டார்
எனவுரைத்த லேபொருந்தும் ஏனைவகை
யினிலுரைத்தல் பொருந்தா திந்த
நினைப்பொடந்த மூர்த்திகளைக் காணடியார்
உணர்வரிதை நிலமீ தென்றும். 406

தொழுதுருகி வேண்டும்அடி யவரோடும்
தூயவுரை யாடி யண்ணல்
விழுமியபே ரருள்புரியும் அற்புதமிவ்
வியன்மூர்த்தி யின்பா லின்றும்
பழுதறநாம் நம்கண்ணுற் கண்டிடலா
மேனில் உள்ளம் பழுத்த தூயோர்
அழுதுருகி அருளின்பம் எய்துவதில்
அணுவளவும் உண்டோ ஐயம்? 407

கொவ்வைநிகர் செவ்வாயும் குமிண்சிரிப்பும்
கோலநுத லமைப்பும் நீண்ட
செவ்வியதா டியினமைப்பும் நிட்டைநிலை
யினிற்சிறந்து திகழு மந்தத்
திவ்வியமே னியின்பொலிவும் தெரிசிப்போர்
உளம்கவரும் திறத்த வாகும்
அவ்வகையில் ஐங்கரர்செப் புச்சிலையும்
அழகுறநன் றமைந்த தங்கண். 408

சட்டஅடி யவர்அன்பி னெடுமுயன்றோர்
ஆண்டினுக்குள் தளியை நன்று
கட்டிமுடித் தனர்குருபூ ஜைக்குமுனர்
குடமுழுக்கும் முறையாய்ச் செய்தார்

மட்டிலருட் பேறடியர் அன்பரெலாம்
வழிவழிபெற் றுய்கின் றூர்கள்
திட்டமிட்ட படியெங்கும் சட்டநெறி
பரவித்திகழ் கின்ற தம்மா. 409

வந்தனை வழிபாடு

தமிழ்நாட்டி லுள்ளபல திருக்கோயில்
களிலும்நடை பெறுவ தேபோல்
அமுதினிலும் மிகஇனிய அருளண்ணல்
திருக்கோயிற் கணும்நாள் தோறும்
முமுறைதிரு மஞ்சனம்ஆ ராதனைகள்
முறையாக நடக்கும் வண்ணம்
சுமனமுடை அடியவர்கள் ஆவனசெய்
துளர்அருளின் துணைமுற் கொண்டே. 410

திருமஞ்ச னத்தீர்த்தம் கொண்டுவரத்
திருக்குடங்கள், நீர்நி ரப்ப
மருவுபல பாத்திரங்கள் வெள்ளிக்குடம்
அலங்கார ஆர்த்தி யாதி
பொருவில் பல ஆர்த்திகளும் கொடிச்சிலை
குடைமகர தோர ணங்கள்
விரவுவெண்சா மரம்ஆல வட்டமுத
லியவும்விருப் போட மைத்தார். 411

பித்தளைவெண் கலமாதி உலோகங்க
ளாலமைந்த பாத்தி ரங்கள்
நித்தியப்ப டிக்கும்விழா நிகழ்நாட்க
ளினில் உபயோ கித்தி டற்கும்
சித்தமகிழ் வொடும்செய்து தந்துள்ளார்
திருக்கோயில் களிலே நன்று
நித்தனருள் வழிபாடு நடந்திடல்போல்
இங்கும்நனி நிகழும் என்றும். 412

காலைமதி யம்மாலை யெனும்மூன்று
பொழுதினிலும் கனிவி னேடும்
சீலமிகு வழிபாடு தினந்தோறும்
செவ்வையுற நனிந டக்கும்

ஞாலமுய்ய மார்கழியில் அனுடநன்னுள்
குருபூஜை விழா நடக்கும்
கோலப்புரட் டாசியிரே வதியினிற்
ஜயந்திவிழா நடக்கும் நன்றே. 413

சித்திரைமுன் ருவதுவெள் ளியில்வசந்தத்
திருவிழா செய்வர்; மாதம்
பத்தொடிரண் டினில்வருரே வதியிலும்
விழாமிகுந்த பரிவாற் செய்வார்;
பத்தர்பலர் வெள்ளிதொறும் திரண்டுவந்து
பணிந்தேத்திப் பயன்பெற் றுய்வார்;
சுத்தமன முடையடியர் திரண்டவ்வப்
போதுவந்து தொழுது செல்வர். 414

அருளண்ணல் அடியார்கள் கனவுகளிற்
காட்சியளித் தன்பி னேடும்
குருபூஜை நாளில்தவ ருதுசந்நி
திக்குவர வேண்டு மென்ன
அருளாற்கட் டளையிட்ட வண்ணம்அடி
யவர்திரளாய் வந்து சூழ்வர்
பெருகார்வத் தோடுகுரு பூஜைவிழா
நடத்தித்திரு வருள்பெற் றுய்வார். 415

அதிகாலை ஆண்டவர்தண் ணருட்கொடியேற்
றிடுவர்; அபி டேக தீர்த்தம்
துதிபாடி மங்களவாத் தியங்களுடன்
சந்நிதிக்குக் கொணர்ந்து சேர்ப்பர்;
அதியார்வத் தோடடியார் பெருமக்கள்
கூடியபி டேகம் செய்வார்;
பதியாம்சற் குருபரனுர்க் கமுதுபடைத்
தாராத னைகள் செய்வார். 416

சுற்றுப்புறத் துளஊர்மக் களும்பெரிய
அளவில்அவண் வந்து சூழ்வார்
உற்றஅனை வருக்குமண்ணல் அடியவர்கள்
உணவினிது வழங்கு வார்கள்

நற்றவச்சற் குருபரனார் அருட்பெருமை
குறித்துரைகள் நடத்து வார்கள்
பெற்றபிற விப்பேறிங் கிதுவெனக்கேட்
டன்பர்திரள் பிறங்கு மம்மா. 417

இரவுமுதல் யாமத்தி னிறுதியில்ஊர்
மக்களெலாம் இனிது கூடி
குருபரரைக் கணபதியைக் கோலவிமா
னங்களில்நன் றலங்க ரித்துத்
திருநகர்வீ திகளிலுலா நடத்திடுவர்
ஆங்காங்கும் செவ்வை யாக
மருவுமண்ட கப்படிகள் வாணவே
டிக்கைகளும் நடக்கும் நன்றே. 418

பலரும்மலர் மாலையணி வித்துப்பனி
நீர்தெளித்துப் பழங்கள் தேங்காய்
நலமுறநி வேதனம்செய் தன்போடும்
நன்றேத்தி மகிழ்பூப் பார்கள்
இலகுகும்மி கோலாட்டம் முன்நடக்கும்;
அருட்பாடல் இசைப்பர் பின்னால்;
சிலசமயங் களில்விடிய ஐந்துநா
ழிகைமுன் உலா கோயில்சேரும் 419

ஊரில்உள வீடிருநா றேயிருக்கு
மெனினும்அவர் உள்ளத் துள்ள
ஆர்வமும்சற் குருபரனார் பாலிருக்கும்
பக்தியும்இப் படிசெய் விக்கும்
சிரவதா ரத்திருநா ளானபுரட்
டாசிஇரே வதிவிண் மீனில்
நேரியஇம் முறையினில் விழாநடக்கும்
நிறைமகிழ்வு பெறுவார் யாரும். 420

சித்திரைமூன் றுவதுவெள் ளிக்கிழமை
வசந்தவிழாச் சிறப்பாய்ச் செய்வர்
பத்தியொடு நூற்றெட்டுச் சங்குதீர்த்
தங்கொடபி டேகம் செய்வர்

மெத்தமகிழ் வொடுசெயற்கைக் குளம்நடுவில்
மிகுமணப்பூப் பந்த ரின்கீழ்
வித்தகச்சற் குருபரர்வி நாயகரை
யமர்த்திவிழா எடுப்பர் நன்றே. 421

இக்காட்சி கண்கொள்ளா எழிற்காட்சி
யாகஅரு ளால்வி ளங்கும்
மிக்கார்வ மோடடியர் அன்பரெலாம்
மேவிவழி பட்டுய் வார்கள்
திக்கேழொ டொன்றும் விணும் சேர்ந்தரஹ
ராவென்னச் செப்பி யேத்தும்
எக்கால மும்துணையாய் இலங்கண்ணல்
இணையிலருள் பாலித் தாள்வார். 422

இவ்வொருவெள் ளியிலும்தரி சித்தருட்பே
றெய்தமக்கள் திரண்டு சூழ்வர்
எவ்வொருகோ யிலிலுமிலாத் தனிச்சிறப்பிங்(கு)
உண்டியல்வைத் திருக்க வில்லை
செவ்விய பழம்தேங்காய் அர்ச்சனைக்குச்
சீட்டெதுவும் வைக்க வில்லை
அவ்வவர்ம னப்படிபூ சாரிக்களித்
திடலாம்கட் டாய மில்லை. 423

வேறுவகை யினிற்சல்லிக் காசும்பெறு
கின்றதண்ணற் கொவ்வா தாகும்
பேறனைத்தும் அருளவல்ல பெருமான்நம்
மிடம்உண்மை யன்பை யன்றி
வேறெதையும் விரும்பவில்லை வெற்றுடம்
பரங்களையும் நாட வில்லை
ஊறனைத்தும் அகற்றிஉயிர் களுக்கின்ப
மூட்டலவர் செயலே யன்றோ? 424

புனிதமிகும் திருத்தலமாம் இருடியர்பட்
டியினில்நடை பெறுவ தேபோல்
கனிவுமிகும் அடியருறை ஊர்களில்அவ்
வடியவர்வாழ் இல்லந் தோறும்

இனிதுகுரு பூஜைவிழா ஆண்டுதோறும்
இதயமகிழ்ந் தியற்று வார்கள்
நனியுவந்து குருபரர்க்கா ராதித்து
நல்லன்பர்க் கமுதீ வார்கள். 425

பிள்ளையார் குப்பத்தில் அருட்சக்தி
அன்னையார் பிரிய மோடும்
வள்ளல்குரு பூஜைபெரி தாம்அளவில்
ஆண்டுதோறும் நடத்து கின்றார்
உள்ளசுற்றுப் புறஊரரார் அடியரன்பர்
ஒருங்குவந்து வழிபா டாற்றி
வள்ளலருள் அன்னையருள் பெற்றுமகிழ்ந்
தவரவரூர் செல்கின் றார்கள். 426

அருட்கொடிச்சந் நிதியென்ன அடியவர்கள்
போற்றுதிருச் சாத்த னூரில்
அருட்குருவின் அவதார நாள்கன்னி
ரேவதியில் அடியார் கூடி
அருட்குருவின் அருள்வாக்கின் வண்ணம்அருட்
கொடியேற்றிப் போற்று வார்கள்
அருட்குருவின் அருளால்அப் புனிதவிழா
அற்புதமாய் நடக்கு மம்மா. 427

ஒவ்வொரிரே வதியிலுமொவ் வோரூரில்
உயர்சிறப்பாய் விழாந டக்கும்
அவ்வப்பதி யிலும்அண்ணல் அருளுருவப்
படத்தைவைத் துலாசெய் வார்கள்
அவ்வப்பதி களிலும்அடி யார்கள்பலர்
சேர்ந்துகொண்டா டிடுவர் அன்பால்
ஒவ்வொருயி ருள்ளுமொளிர் அண்ணலருள்
மணம்பரவி ஓங்கு மெங்கும்- 428

இவ்வணம்பற் பலஊரில் நடைபெறினும்
அண்ணல்இனி துதித்த ஊரும்
செவ்வையுற அடக்கமுற்ற ஊருமெனத்
திகழிருடிப் பட்டி யின்கண்

அவ்வியமில் அடியவர்கள் நடத்துவிழா
வேசிறந்த தாகுமென்ன
எவ்வடிய வருமுன்னிக் குழுமிவந்து
போற்றியுண்மை யின்புற் றுய்வார். 429

## என்றும் வழிகாட்டும் எந்தை குருநாதர்

தமிழ்நாடெங் கணும்அண்ண லால்நேரில்
தகவுறஆட் கொள்ளப் பெற்ற
அமுதனைய அடியவரும் அவர்மூலம்
அருட்சட்டம் மேற்கொண் டோரும்
விமலகுரு நாதர்அருள் துணைகொண்டு
விடியல்தனி ராடி வாழ்வைச்
சுமுகமதாய் நடத்துகுடும் பத்தினர்நூ
றுயிரமாய்ப் பெருகி னூரால். 430

அண்ணலுலாப் போந்தஅந்தக் காலத்தில்
அடியார்கள் வேண்டிக் கொள்ளத்
திண்ணியநன் னிட்டைபுரி கோலத்தில்
திருவுருவப் படம்எடுக்கத்
தண்ணருளால் இசைந்தனர்அத் திருவுருவப்
படத்தைஅடி யார்கள் பல்லோர்
உண்ணிலவு பேரன்பால் போற்றியருட்
பெரும்பேறுற் றுவகை பூப்பார். 431

குருபரனூர் நேரில்லாக் குறையினையோ
ரளவிவ்வணம் போக்கி வந்தார்
குருபரனூர் பேருளை நினைந்தவரைப்
போல்பேசி நடந்து காட்டி
மருவும்அடி யவருளத்தை மகிழ்வித்துத்
தாமும்மகிழ் வுறுவார் பல்லோர்
குருபரர்தம் செயலினைவா சகத்தைநினைந்
துருக்கம்மிகக் கொள்வார் பல்லோர். 432

தாயென்னத் தந்தையெனச் சார்ந்தஉற
வினரென்ன நண்ப ரென்னச்
சேயென்னக் குருவென்னத் திகழ்தூய
துணையென்னச் சிலபோ தண்ணல்

ஆயபல வகைகளிற்செய் அற்புதங்கள்
எண்ணியெண்ணி அகம்குழைவார்
மேயஉண்மை யன்பைஅருட் கனிவையுனி
மெய்ப்புளகம் கொள்வார் அன்பர். 433

ஊனவிழிக் குத்தோன்று ததனைநனி
உற்றுணர்ந்தால் தெரியுமென்ன
ஞானகுரு நாதர்சொற்ற வண்ணமவர்
மறைந்துளஇந் நாளும் அன்பர்
ஊனுருகி உளமுருகி நினைப்பிற்கன
விலும்உயர்நிட் டையிலும் நன்று
மேனிலைக்கு வழிகாட்டிப் பேணுசிறப்
பினைவாயால் விளம்பற் காமோ? 434

அருட்காட்சி நன்றளித்து வழிகாட்டும்
வளமையினை அடியார் தம்மை
இருவிழியை இமைகாத்தல் போற்காக்கும்
சிறப்பினைஇல் லறவாழ் வின்கண்
மருவுபல சிக்கலைநீக் கருமையினை
இடர்கள்பல மல்கும் காலை
உரியமுறை யினில்நடத்தும் உயர்வினைநன்
றுணர்ந்தடியர் உருகி நிற்பார். 435

அடியவர்வாழ் வையுமவரைச் சார்ந்தவர்வாழ்
வினையும்மிகத் தூய்மை யாகப்
படியின்மிசை நனிநடத்திச் செல்லஉப
தேசம்பல பரிவாற் கூறி
மடியைமிடி யைக்களைந்து வளமைமிகப்
பெருக்கியருள் வழியைக் காட்டிக்
குடிமுழுதும் உய்யக்கொளும் குருபரனை
நினைந்துருகிக் கும்பிட் டுய்வார். 436

அடியர்ஒரு வரையொருவர் சந்திக்கும்
போதுதமக் கருளார் அண்ணல்
நெடியஅருட் காட்சிதந்து பேணியருள்
அற்புதத்தை நேரில் கூறிப்

படியின்மிசை யில்லறத்தார்க் கிமையும்பிரி
யாதிணையில் துணையாய் நின்று
முடிவிலின்ப மருள்குருவே றெவண்காண
முடியும்என மொழிவார் அன்பால். 437

நாமுண்ணும் உணவுமுதல் அனைத்தினையும்
நமதுபக்கு வத்திற் கேற்ப
ஏமுற அவ் வப்போதும் இனிதுணர்த்து
பேரருள்என் னெனவு ரைப்போம்
தோமறமுற் பிறப்பில்புரி தவப்பயனே
தூயகுரு நாத ராக
மாமகியில் அற்புதமாய் வாய்த்தனரென்
றகம்கனிந்து வாழ்த்து வாரால். 438

நோயுற்ற காலத்தருட் குருகட்ட
ளைப்படிவி பூதி பூசி
தூயநல்தீர்த் தம்பருகிப் பிணிதவிர்த்தும்
அவ்வாறே பிறர்க்கும் நல்கி
மேயநலம் அடைந்த தினும் மேலான
நலங்கள்பலப் பலஇப் போதும்
ஏயஅமைந் திட அண்ணல் இசைந்துதவு
திறமுன்னி இன்பம் கொள்வார். 439

குருபரர்உ லாப்போந்த போதுபிணி
விணைசிக்க லாதி நேர்ந்தால்
அருளுருவாம் முன்னவனைக் கொலுவமர்த்தி
இருவேளை நன்னீ ராடி
மருவுமன்பி னொடுமூன்று முறைவலம்வந்
தினிதுபயன் பெற்று வந்தார்
அருளடியர் அன்பர்பிறர் வரினும்வலம்
வந்துபணிந் தின்புற் றுய்வார். 440

குருபரனார் அடக்கமுற்ற பின்னர்விநா
யகரோடு குருநா தர்தம்
திருவுருவப் படமும்உடன் கொலுவமர்த்திச்
செழித்த வுளத்தன்பி னோடும்

மருவுமண மலர்சாத்தி வலம்புரிந்து
வழிபாடு செய்து போற்றி
பெருநலங்க ளெய்திக்குறை நீங்கிநனி
உய்வதுல கறியும் நன்றே. 441

அனைவரை ஆளும் அருமை

திருஞான சம்பந்தர் திருநாவுக்
கரசர்முத லாம்சான் றோரும்
அருள்ஞானம் மிகும்ஆழ்வார் களும்தாயு
மானார்பட் டினத்தார் போன்ற
பெரியோரும் தோன்றியகா லத்தினில்நாம்
தோன்றுமற் போனோம் அந்தப்
பெரியோர்கா லத்திருந்தோர் நலம்பெற்றார்
எனப்பலர்பே சக்கேட் கின்றோம். 442

அத்தகைய ஏக்கம்அருட் சட்டஅடி
யார்களுக் குறுத வண்ணம்
வித்தகச்சற் குருபரனார் காத்தருள்கி
றார்;அவர் உலாவும் போதே
மெத்தவருந் திடவேண்டாம் இச்சாமி
அடையவந்த தல்ல, என்றும்
நித்தியமா யிருக்குமென்ற அருள்வாக்கை
நிறைவேற்று கின்றார் இன்றும். 443

குற்றாலக் குகையிலருந் தவமுடிவில்
பரிபூர்ண ரொடுவா தாடி
வற்றாப்பே ரருளூற்றாம் சட்டநெறி
ஏற்கும்உயிர்த் திரளுக் கெல்லாம்
சற்றேனும் தடையின்றி யருள்புரிய
வேண்டும்சதா துணையாய் நின்று
பெற்றோரி னும்சிறப்பாய்ப் பேணிடுதல்
வேண்டுமெனும் வரம்பெற் றுள்ளார். 444

தற்காலத் திலும்அதனை நடைமுறையில்
நனிநடத்தி வருகின் றார்கள்
முக்கால மும்தெரிந்து முறையொடடி
யரைப்பேணும் மூர்த்தி யாகி

எக்கால மும்பிரியா இன்துணையாய்
இருந்தெல்லாக் குறையும் தீர்த்து
திக்கேழும் ஒன்றும்புகழ் தேசிக
சிகாமணியாய்த் திகழ்கின் ருரால். 445

வாழ்வினுக்கொவ் வாஎதையும் வள்ளலென்றும்
யார்க்கும்அரு ளியதே இல்லை
கேழ்கிளர்நல் லனுபவத்தால் கிளத்தினர்;ஆ
தலின்ஒவ்வொர் எழுத்தும் சொல்லும்
வாழ்வினுக்குப் பயன்தரலைக் கண்கூடாய்க்
கண்டிடலாம் வைய மீதில்
ஏழையெளி யோரும்அனு சரிக்கஇய
லாதஒன்றை என்றும் சொல்லார். 446

உண்மைக்குப் புறம்பான ஒன்றையும்சற்
குருபரனுர் உரைத்த தில்லை
தண்ணருளு லாப்போந்த காலையரு
ளியசிலவாக் குக்கப் போது
நுண்ணியபொ ருள்தெரியா திருந்தார்கள்;
அண்ணலெதோ நுவல்கின் ருர்என்[று]
எண்ணினர்,அச் சொற்களுக்கிப் போதுபொருள்
உணர்ந்தடியர் போற்று கின்ருர். 447

உடையவன் கணக்கிப்போ விளங்கிடுமோ
இனும்போகப் போக நன்றே
அடைவுடன் விளக்கமுறும் என்றடியர்
பாலண்ணல் அருளு வார்கள்
உடையவன் கணக்கின்படி யல்லாமல்
வேறுவித மாக நம்மை
அடையும்நலம் தீங்கென்ற ஏதொன்றும்
நேராதென் றருளு வார்கள். 448

மக்களுக்கு வாய்க்கும்சில காலவைய
வாழ்வினில்நன் னெறியினேடு
தக்கசட்டம் கையாண்டு வரின்பிறவிப்
பயனடைதல் திண்ணம் என்பார்

திக்கனைத்தும் உடையவன் அருட்கொடி
பறக்குமென்பார்; அவன்றன் செங்கோல்
எக்கணத்தும் எவ்வுலகி னிலும்திகழும்
அதுபெரிதாம் ஆட்சியென்பார். 449

அலகிலருள் மணிமணியாய் அற்புதவா
சகங்களண்ணல் அருளி யுள்ளார்
உலகமுழு வதும்சட்ட நெறிபரவும்
என்றுமன்போ டோதி யுள்ளார்
இலகும்அரு ளண்ணல்உலாப் போந்தகா
லத்தைவிட இன்று சட்டம்
பலஇடத்திற் பரவிப்பல மக்களுக்குப்
பயன்தருதல் உண்மை யாமே 450

அண்ணல்உலாப் போந்தஅந்தக் காலத்தில்
நாமில்லா மற்போ னேமே
திண்ணியநற் சட்டநெறி யேற்காமற்
போனேமே யென்று யாரும்
எண்ணிடுமா றெக்குறையும் வைக்கவில்லை
அருளண்ணல் என்றும் யாரும்
தண்ணருட்சட் டம்பேணித் தக்கபயன்
பெறலாம்என் றருளி யுள்ளார். 451

ஒருநாமம் ஓருருவம் இன்றியென்றும்
எங்கும்பரந் துள்ள முன்னோன்
ஒருகாலத் தினில்அருள்வான் என்பதில்லை
எவர்க்குமென்றும் அருள் பாலிப்பான்
அருள்ஞான அண்ணலருள் நெறிபேணி
அவர்திருவாய் மலர்ந்த பாடல்
அருள்நாடும் உளத்தோடும் பாடியென்றும்
அருட்பயன்பெற் றிடலாம் இன்றும். 452

குருபரனர் அருளொளிமுன் னேயடியா
ராகியுளோர் பாலே யன்றி
இருநிலத்தில் எவர்பாலும் மடைதிறந்து
பாய்கின்ற தின்றும் என்றும்

அருளண்ணல் மறைந்திருந்தும் அருளால்நன்
றருளும்பெருஞ் செயலே யின்றும்
பெருகுமுறை யினில்நடத்திக் கொண்டுவரும்
அற்புதத்தைப் பேசற் காமோ? 453

குருநாதர் அருள்வாக்குக் கொடுத்தபடி
சட்டநெறிப் பெருமை நாளும்
தெருளார்நல் விளக்கமுற்றுத் திகழ்கின்ற
தண்ணல்திரு நாமம் ஓதி
அருளார்சீ ரடியவரால் தரப்பெறும்
விபூதியினுல் அருள்நீர்த் தத்தால்
அருகாத நோயில்லை தீராத
குறையில்லை அவனி மீதே. 454

ஓரறிவு படைத்தஉயிர் முதலாய்ஆ
றறிவுபெற்ற உயிரீ ருகப்
பாரிலுறும் எவ்வுயிர்க்கும் பரன்ஆணை
தண்ணருள்பா லித்துக் காக்கும்
சீரியசட் டத்தின்உயர் வினையறிந்து
தீவிரப்பற் ருேடும் பேணிப்
பேரருள்பெற் றுயும்புதிய அடியர்திரள்
வளர்ந்தவண்ணம் பிறங்கல் உண்மை. 455

அண்ணலைநே ரிற்காணும் வாய்ப்பில்லார்
அவரிற்பெரும் பாலோ ராவர்
அண்ணல்நெறி யினிற்சேரும் வரையில்அவர்
நாமமும்கேட் டறியார் பல்லோர்
அண்ணல்நெறி யினையுறுதி யுடன்சிறிது
மேற்கொண்ட பின்னர் மேலும்
திண்ணியசட் டம்முழுதும் பேணக்குரு
நாதர்அருள் செலுத்தும் நன்றே. 456

முழுதும்கடைப் பிடித்தொழுக முதல்வனருள்
செலுத்துகின்ற முறையைக் கண்டு
தொழுதுருகி அற்புதம்அற் புதமென்னச்
சொல்லரும்பே ருவகை கொள்வார்

பழுதிலிந்தச் செந்நெறியிற் பலபுதிய
அடியவர்சேர்ந் துய்வ தற்கு
வழியுணர்த்த வல்லவராய் வையமிசை
வளமோடும் வாழ்கின் றாரால். 457

அரசாங்க அலுவலகங் களில்உயர்ந்த
பதவிகளில் அமர்ந்துள் ளோர்கள்
தரமான பிறபல்வகை அலுவலகங்
களிற்சார்ந்து பணிசெய் வோர்கள்
பெருவாணி கம்புரிவோர் விவசாயம்
பெருக்கிமிகு விளைவு காண்போர்
திருவார்பல் நகரிலுளோர் சிற்றூரில்
குடியிருப்போர் செல்வம் மிக்கோர், 458

ஒருநாள்வாழ் வுக்குழைப்போர் ஓதுபல
குலவருணங் களைச்சார்ந் தோரும்
குருநாதர் திருப்பெயரைப் புதிதாகக்
கேட்[டு]அவர்தம் கொள்கை யான
அருள்ஞானச் சட்டநெறிப் பெருமையினை
அறிந்துவிடி யலில்நீ ராடி
திருநீறு தீர்த்த மும்கொண் டனுவளவும்
அஞ்சாமல் திகழ்கின் றாரால். 459

எத்தகைய கடுநோய்கள் வரினும்குரு
திருவருளில் உறுதியோடு
மெத்தஉயர் நம்பிக்கை யோடுதண்ணீ
ரினில்மூழ்கி விபூதி பூசி
அத்தன்தீர்த் தம்கொண்டு பிணிநீக்கி
அனைவோரும் வியக்கும் வண்ணம்
வித்தகநல் வாழ்வாற்றல் காணுகையில்
அண்ணல்அருள் விளம்பற் பாற்றோ? 460

அருளண்ணல் அருளியபற் பலசிறந்த
அருளுரையும் அடியார் தங்கள்
அருளார்நற் செவிகளில்இப் போதுரைத்தல்
போலொலித்தாண் டவர்தம்தூய



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் (1960—1972)
அடியார் பெருமக்களால் விரிவாக்கப்பட்டு, அமைக்கப்பெற்ற
திருக்கோயிலின் ராஜ கோபுரம்

பழுநிலிந்தச் செந்நெறியிற் பலபுதிய
அடியவர்சேர்ந் துய்வ தற்கு
வழியுணர்த்த வல்லவராய் வையமிசை
வளமோடும் வாழ்கின் றூரால். 457

அரசாங்க அலுவலகங் களில்உயர்ந்த
பதவிகளில் அமர்ந்துள் ளோர்கள்
தரமான பிறபல்வகை அலுவலகங்
களிற்சார்ந்து பணிசெய் வோர்கள்
பெருவாணி கம்புரிவோர் விவசாயம்
பெருக்கிமிகு விளைவு காண்போர்
திருவார்பல் நகரிலுளோர் சிற்றூரில்
குடியிருப்போர் செல்வம் மிக்கோர், 458

ஒருநாள்வாழ் வுக்குழைப்போர் ஓதுபல
குலவருணங் களைச்சார்ந் தோரும்
குருநாதர் திருப்பெயரைப் புதிதாகக்
கேட்[டு]அவர்தம் கொள்கை யான
அருள்ஞானச் சட்டநெறிப் பெருமையினை
அறிந்துவிடி யலில்நீ ராடி
திருநீறு தீர்த்த மும்கொண் டணுவளவும்
அஞ்சாமல் திகழ்கின் றூரால். 459

எத்தகைய கடுநோய்கள் வரினும்குரு
திருவருளில் உறுதியோடு
மெத்தஉயர் நம்பிக்கை யோடுதண்ணீ
ரினில்மூழ்கி விபூதி பூசி
அத்தன்தீர்த் தம்கொண்டு பிணிநீக்கி
அனைவோரும் வியக்கும் வண்ணம்
வித்தகநல் வாழ்வாற்றல் காணுகையில்
அண்ணல்அருள் விளம்பற் பாற்றோ? 460

அருளண்ணல் அருளியபற் பலசிறந்த
அருளுரையும் அடியார் தங்கள்
அருளார்நற் செவிகளில்இப் போதுரைத்தல்
போலொலித்தாண் டவர்தம்தூய



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் (1960—1972)
அடியார் பெருமக்களால் விரிவாக்கப்பட்டு, அமைக்கப்பெற்ற
திருக்கோயிலின் ராஜ கோபுரம்

அருளாட்சி ஓங்கிவளர் வளமையினை
நினைவூட்டி அடியார்க் கெல்லாம்
அருளண்ணல் கருணையினை அனுபவிக்கும்
பெரும்பேற்றை அருளும் நன்றே. 461

எங்கும்நிறை இறையருளை ஏற்றினிதே
அனுபவிக்க விழைந்து ழைத்து
நன்குகனிந் துருகும்அகி லத்தன்பர்
அனைவருக்கும் நலமே நல்கிப்
பொங்குமுயர் வளமையுடன் வழிகாட்ட
வான்பொருளாய்ப் போந்த அண்ணல்
எங்குமென்றும் இருந்தெல்லா உயிர்களுக்கும்
துணையாகி இலகு கின்றார். 462

ஆலய விரிவு

அண்ணலார் அருமைஅருட் பெருமையெலாம்
அவரடியார் திரளை நாடி
நண்ணியகா லத்தைவிடப் பன்மடங்காய்
நனிபெருகு திறம்முன் கண்டோம்
எண்ணிலடி யார்கூட்டம் பெருகஅரு
ளிருடிநகர்க் கினிதே யுற்றால்
உண்ணஉறங் கச்சேவித் துயத்தக்க
இடம்தேவை யாயிற் றன்றே. 463

வேறு

மக்களின் கூட்டம் பெருகுதற் கேற்ப
மகிமைசால் கோயிலி னுள்ளும்
தக்கநல் லிடம்போ தாமையால் அதனைச்
சால்புடை அடியவர் உணர்ந்தே
மிக்கபே ரன்பொ டடியவர் சிலரை
விரவுநற் குடும்பத்தொ டாங்கே
ஒக்கச்சென் றிருந்து கோயிலை விரிவாக்
கிடும்பணி உஞற்றிடப் பணித்தார். 464

அன்புடை அடியார் ஒருசிலர் அந்த
ஆணையைச் சென்னிமீ தேற்று
பொன்புரை கோயில் பொலிவுறும் இருடி
நகருக்குக் குடும்பத்தி னேடும்
மன்பதை வாழ்த்த வந்தினி தமர்ந்து
வாலிதாம் முயற்சிசெய் தடியார்
இன்புறத் தங்கத் தகுந்தசத் திரங்கள்
சிலவமைத் திட்டனர் முதலில். 465

அருட்டிருக் கோயில் விரிவுற அமைத்தற்
கானநற் றிட்டத்தை வகுத்தே
அருட்பெருந் துணையால் கருங்கலால் கடைக்கால்
அமைத்தனர் அதன்பினர் சின்னுள்
பொருட்குவை வேண்டி நின்றிருந் திட்ட
புனிதமாம் திருத்தளிப் பணியை
தெருட்பெறும் உளஞ்சால் அடியவர் முயன்று
செய்தரு ளால்முடித் தனரால். 466

அழகுற வோங்கி வளர்ந்தகோ புரமும்
அணிகொடிக் கம்பமும் அன்பால்
தொழுமடி யவர்கள் சூழும்மண் டபம்நாற்
பக்கமும் துலங்கிட அமைத்து
முழுமுத லாம்முன் னவன்உறை தளியும்
உத்ஸவ மூர்த்திமண் டபமும்
விழுமிய முறையில் அமைத்தனர் அடியார்
மேவிநற் சேவைசெய் துயவே. 467

அண்ணலார் மேவும் அருட்கரு வறையும்
அர்த்தமண் டபமும்முன் னிருந்த
வண்ணமே திகழ அடியவர் இடம்வி
சாலமாய் வளமுடன் அமைய
அண்ணலார் அருளி யுளபெருஞ் சிறப்பை
அடியவர் உணர்ந்துவன் னியின்பால்
நண்ணுவெண் ணெயைப்போ லுருகியாண் டவரின்
நல்லருள் போற்றியேத் துவரால். 468

வேறு

ஆயிரத்துத் தொள்ளாயிரத்தெழுபத்
திரண்டாவ தாண்டில் ஒன்பான்
மேயமதி பதினுன்காம் தேதிபரி
தாபியென விளங்கும் ஆண்டில்
ஆயநல்லா வணித்திங்கள் இருபத்தொன்
பான்தேதி அமைந்த நாளில்
தூயதிருப் பணிமுடித்துத் திருக்குடநீ
ராட்டுவித்தார் தூயோர் போற்ற. 469

அடியவரும் அன்பர்களும் திரளாகக்
குழுமியிருந் தன்பி னேடும்
படியின்மிசை பிறந்தபயன் பெற்ருேமென்
றகமகிழ்ந்து பாரோர் போற்றும்
குடமுழுக்குத் திருவிழா வைச்சேவித்
தருள்நலம்பெற் ருனந் தித்தார்
கடிமலர்கள் சொரிந்தமரர் வாழ்த்தினர்நன்
முனிவர் துதித் தேத்தி னுரால். 470

அண்ணல்திரு வருளாலும் அடியவர்ஆ
தரவாலும் உழைப்பி னுலும்
வண்ணமுற அமைந்ததிருக் கோயிலின்கண்
மாநிலம்வாழ் அடிய ரன்பர்
எண்ணிலர்அவ் வப்போது போந்துவழி
பட்டின்ப மெய்து கின்ருர்
அண்ணலருட் சட்டநெறி யின்பயனை
அனுபவித்துப் போற்று கின்ருர். 471

அண்ணலருள் வரலாறும் அவர்அருளார்
திருக்கோயில் அமைப்பும் கண்டோம்
மண்ணுலகும் விண்ணுலகும் போற்றஅருட்
சட்டநெறி மாண்பைப் போற்றி
எண்ணில்இக நலமெய்தி இயம்பரிதாம்
பரகதிபெற் றின்பம் துய்க்கும்
புண்ணியம்சால் அடியர்சிலர் புகழ்பாடிப்
புனிதமிகப் பெற்றுய் வோமால். 472

ஆக செய்யுள் 4046

## 5. ஒருவழி யோகியர் உத்தமர் பாடல்

### விநாயகர் துதி

கருவழியை நீக்கியருட் கதிகாட்டக்
காசினியில் தோன்று தூய
குருவழியாம் சட்டநெறி குவலயத்திற்
கடைப்பிடித்துக் குறைதீர் அந்த
ஒருவழியில் இனிதேகும் உத்தமர்கள்
சரிதம்சொல ஒற்றைக் கொம்பும்
இருசெவிமு விழிநால்வாய் ஐங்கரமும்
கொளுமிறைதாள் இறைஞ்சு வோமால். 1

### குருநாதர் துதி

மருள்வ ழிக்கண் உயிர்கள் செலாவணம்
அருள்வ ழியைப்பே ரன்புடன் காட்டியிவ்
ஒருவ ழியிற்சென் றுய்கென் றருள்குரு
திருவ டிகள்சி ரம்கொண்டு போற்றுவாம். 2

### அடியவர் துதி

கட்ட றுத்துக்க ருணைசெய் சற்குரு
எட்டுத் திக்கும் துதிக்க இனிதருள்
சட்ட மார்க்கம் தரணியிற் பேணிவாழ்
சிட்டர் பாதம் சிரத்தணிந் தேத்துவாம். 3

### சாத்தூர் சாமிநாதப் பிள்ளை

குருபரரால் தடுத்தாளப் பெற்றுசட்டக்
கொள்கையினிற் சிறந்து நின்ற
அருளடிய ராம்சாத்தூர் சண்முகம்பிள்
ளைசேயாய் அவனி யின்கண்
அருளண்ணல் திருநெறியில் ஆழ்ந்தபற்று
மிகக்கொண்ட சாமி நாதக்
குரிசிலண்ணல் அருளடக்கம் ஆம்போது
கோதில்திருத் தொண்டு செய்தார். 4

திருக்கோயில் அமைப்பதற்காம் பலபணியும்
செவ்விதின்அன் போடும் செய்தார்
ஒரோராண்டும் தனுர்மாதம் அநுடத்தில்
ஒப்பில்குரு பூசை யாற்ற
உரியபல அடியருடன் கலந்துபத்தி
ரிகையச்சிட் டுவந்த னுப்பி
மருவுபெருஞ் சிறப்போடு நடத்திவந்தார்
அடியரன்பர் மகிழு மாறே. 5

உழைப்பினுக்குத் தக்கபடி ஊதியம்கி
டைக்குமென உயர்வார் அண்ணல்
எழிற்றிருவாய் மலர்ந்தவண்ணம் இனியகுண
மிகுசாமி நாதப் பிள்ளை
தொழிற்றுறையிற் சிறந்தவராய்ச் சொல்லரிதாம்
பலவளமும் பெற்றுப் பார்மேல்
செழிப்புறவாழ்ந் தருட்பணிகள் புரிந்தண்ணல்
திருவடிப்பே றெய்தி னாரால். 6

இராமநாதபுரம் சீதாலக்ஷ்மி நாச்சியார்

அருட்சிறப்பு மிகுராம நாதபுரத்
தரசருக்குப் பந்து வாகி
மருவுநற்சி தாலக்ஷ்மி நாச்சியா
ரெனுமம்மை மாண்பார் சைவத்
திருநெறியில் சிறந்தவராய்த் தேசிகராய்ப்
பரன்வந்து தோன்றும் நன்னாள்
அருகிலுள தோஎன்ன நாடியிருந்
தனர்அருளின் வேட்கை யாலே. 7

அண்ணலா ரைச்சேவித்(து) அவர்அளப்பி
லாமகிமை களையு ணர்ந்து
திண்ணியசற் குருஇவரே எனக்கொண்டு
யாவுமவர் திருவ டிக்கே
உண்ணிறைபே ரார்வமுடன் அர்ப்பணம்செய்
தொப்பில்பணி விடைக ளாற்றி
எண்ணரிதாம் உயர்பயன்பெற் றிலங்கினர்அவ்
வம்மையின்சீர் இயம்பற் காமோ? 8

மிக்கசெல்வக் குடியினில்தோன் றியஇவர்கள்
மிகச்சிறந்த பக்தி யோடும்
எக்கணமும் உபசரித்துப் பொருள்பெற்ற
தின்பயனை எய்தி னார்கள்
தக்கஅடி யவருளத்தை உணர்ந்ததற்குத்
தக்கபடி அருள்சு ரக்கும்
சொக்கரெனும் அண்ணலம்மை கனிவுணர்ந்து
தூயஉப தேசம் செய்தார் 9

மன்னர்மர பினுக்கேற்பத் தக்கமணு
ளனைத்தேடி னார்கள் பெற்றோர்
மன்னவர்க்கும் மன்னவராம் அண்ணலுக்கு
மன்னுதொண்டு செய்த பின்னர்
இன்னுமொரு நரஜன்மத் திற்குப்பணி
விடைசெய்தல் இயலாதென்ன
பொன்னரங்கர்க் காட்பட்ட கோதையைப்போல்
புனிதமொழி புகன்றா ரம்மை 10

குருநாத ரேதெய்வம் எனும்கொள்கை
கொண்டம்மை வாழ்நாள் முற்றும்
அருள்ஞான மணியாகத் திகழ்ந்தார்கள்
அருட்சக்தி அன்னை யார்க்கே
அருளார்நற் கடிதம்எழு துங்காலை
அருமைச்சகோ தரியென் றன்பால்
தெருளார்வா சகம்அமைப்பார் சீரடியா
ரேஉறவோர் எனத்தெ ளிந்தே. 11

இத்தகைய அருள்வாழ்வை இன்னருளால்
ஆற்றிவந்த இந்த அம்மை
அத்தனருட் சட்டநெறி யினிலணுவும்
பிறழாமல் ஒழுகி னார்கள்.
இத்தரையில் சூழஉள்ள மக்களுக்கும்
அடியவர்க்கும் என்றும் குன்றா
நித்தியநல் லொளிவிளக்காய்த் திகழ்ந்தார்கள்
நிட்டையிலாழ்ந் தொன்றி னார்கள். 12

அற்புதமாம் நிகழ்ச்சிபல கண்டார்கள்
அருளனுப வம்பெற் றூர்கள்
கற்பனைகட் கெட்டரிதாம் மெய்ஞ்ஞானக்
கனல்வடிவாய் விளங்கி னூர்கள்
பொற்புறுமா விடப்பிறவி பெற்றபயன்
பூரணமாய்ப் பெற்றுய்ந் தார்கள்
சற்குருவின் தாண்மலரில் இவர்சாரும்
காலம்நெருங் கிட்ட தன்றே 13

குறிப்பாகப் பலஅடியர் அஃதுணர்ந்து
வருத்தம்மிகக் கொண்ட காலை
அறப்பேறும் அருட்பேறும் உடையம்மை
அணுவளவும் கலங்கி டாமல்
பொறுப்பேற்றுப் பேணுகுரு பரர்இருக்கப்
புகலும்குறை நமக்கிங் குண்டோ?
மறப்பேது மின்றிஅவர் தாள்பரவி
வாழ்வதுநம் கடமை யென்றூர். 14

தேகமுயிர் பொருள்மூன்றும் தேசிகர்க்கர்ப்
பணமென்னச் செய்து விட்டோம்
ஏகரெனும் அவர்தம்மை நாடிவரும்
இனியஅடி யாரை யெல்லாம்
சோகமறப் பேணிஉயர் யோகமுடன்
ஞானமருள் துணைவ ரன்றே
மோகமறுத் தாளும்தயா நிதியிருக்க
மொழியும்குறை நமக்கே தென்பார். 15

அடியவர்க்கும் அன்பருக்கும் மற்றவர்க்கும்
ஆறுதல்மிக் களித்து வந்தார்
நெடியமலை கலங்கிடினும் நிலைகலங்காச்
சான்றூண்மை நேயம் மிக்க
அடியவர்பால் திகழும்எனும் உண்மையினை
அவனிமிசை உணர்த்தி வந்த
அடியவர்சி காமணியாம் அம்மைதிரு
வருள்நிலையார் அறியற் பாலார்? 16

ஒருதினம்அவ் வம்மையார் நிட்டையிவில்
அருள்நிகழ்ச்சி யொன்று கண்டார்
ஒருபெரிய ரதம்தோன்றிற் றதினின்றும்
அருளண்ணல் இறங்கி வந்தார்
பொருவரும்சி ரம்மைதிருக் கரம்பற்றிக்
கொண்டிரதத் தருகு சார்ந்தார்
இருவருமவ் விரதத்தி லேறினர்பே
ரின்பநிலை யம்மை பெற்றார். 17

குருநாதா என்றம்மை மூன்றுமுறை
கூறியினி தடக்க மானார்
அருளார்பல் லடியவரும் அன்பர்களும்
உருகிக்குரு வருள்போற் றிட்டார்
தெருளார்தே சிகர்சட்ட நெறிப்படியிப்
புவியிலடக் கம்செய் தார்கள்
அருளாளர் திறத்தினைஆண் டவர்அருளின்
திறத்தினைஆர் அளக்க வல்லார்? 18

### இரெட்டணை ஆச்சி

திண்டிவனத் திலும்அதனைச் சுற்றியுள
ஊர்களிலும் சீர்சால் அண்ணல்
திண்டிறலார் சட்டநெறி பேணிநலம்
சிறந்தபலர் விளங்க லானார்
தொண்டிநதி சங்கரா பரணியெனச்
சூழ்நதிகட் கிடையில் மேவும்
எண்டகு சிறப்புடை இரெட்டணையும்
அடியவரொ டிலகு மாமால். 19

இரண்டுநதி களுக்கும்அவண் அணைகட்டி
யிருப்பதனுல் அந்த ஊருக்(கு)
இரெட்டணை யெனும்கார ணப்பெயரேற்
பட்டதென இயம்பு வார்கள்
திரண்டவள முடனாற்றங் கரையிலுற்றுத்
திகழந்த ஊரிற் செல்வப்
பெருஞ்சிறப்பொ டொளிரிரெட்டி யார்மரபில்
ஓரம்மை பிறங்கி ஞரால். 20

மாசில்குணத் துரைசாமி ரெட்டியார்
வாழ்வரசி யாமவ் வன்னே
காசமெனும் கடும்பிணியால் மிகவருந்திக்
குருநாதர் சட்ட மேற்றுப்
பூஜைபுரிந் தருள்துணையால் பிணிநீங்கிப்
புனிதமுற்றுப் பிறங்கி ஞர்கள்
தேசுமிகும் அவர்புகழ்சுற் றுப்புறவூர்
களிலும்நனி திகழ்ந்த தம்மா. 21

எழில்மிகுபத் மாலயமென் னும்பெயரொ
டிலகியஅவ் வம்மை அண்ணல்
வழியெனும்நற் சட்டநெறி யினில்அதிதீ
விரமாகி வயங்கி ஞர்கள்
தழைவுறுநன் மகவுபல அருட்சட்ட
நெறிப்படிபெற் றன்பு பக்தி
மழலையிளம் வயதினிலே யூட்டுதெய்வ
மாதாவாய் விளங்கி ஞர்கள். 22

எப்பிணிவந் தாலும்மருத் துவர்உதவி
நாடாமல் எந்தை யண்ணல்
ஒப்பில்திருப் பெயரோதி நீராடி
அருள்தீர்த்தம் பருகி நோய்தீர்ந்(து)
அப்படியே தமைச்சார்ந்தார் களைஅருள்வாழ்
வினிற்செலுத்தி அருகி ருந்து
செப்பரிய பயன்நுகர்வித் தவ்வம்மை
அடக்கமுடன் திகழ லானுர். 23

அருளண்ணல் குறித்தவெள்ளி விரதத்தை
அன்போடும் பேணி வந்தார்
இரவில்அனே வரும்உறக்கம் கொண்டபினர்
நிட்டையமர்ந் திலங்கு வார்கள்
அருளுணர்வொ டம்மையெது கூறிடினும்
அப்படியே அதுந டக்கும்
பொருவிலிவர் நிலையறிந்தோர் மெய்ப்பக்தி
யோடிவரைப் போற்றி வந்தார். 24

அன்புடன்கண் டிப்பும்கலந் துளகுரலில்
அம்மைசொலும் அருளார் வாக்கைப்
பொன்புரைசெம் மொழியாக அனைவோரும்
போற்றியுவந் தேற்றுக் கொள்வார்
மன்பதைகள் வழுத்துமில்ல றந்தாயாய்
மாண்புமிகு பக்தித் தாயாய்
செம்பொருள்பெற் றுயும்வழிகாட் டும்தாயாய்
அவ்வம்மை திகழ்ந்து வந்தார். 25

அனைவரும் கைகுவித்தேத்த அருட்குருபொன்
ஞர்கமல மலர்ப்பா தத்தில்
புனிதஅம்மை யார்இரண்ட றக்கலந்தார்;
புத்திரர்கள் தாய்கு றித்த
நனிசிறந்த இடத்தினில்தென் னைதேமா
வருக்கைசெறி நற்சோ லைக்கண்
இனியநதிக் கரையில்எழில் திகழிடத்தில்
இனிதடக்கம் செய்வித் தாரால். 26

இயற்கையனை திருமடியில் இனிதடக்கம்
புரிந்தச்ச மாதி யின்மேல்
செயற்கையெழில் மிக்கதிருக் கோயிலொன்றைக்
கட்டுவித்தத் திருக்கோ யிற்கண்
உயிர்க்குயிராம் கணபதியைத் தாபித்துப்
பத்மகண பதிப்பேர் சூட்டி
நயத்தொடெந்த நாளுமிரு வேளைவழி
பாடினிது நடத்து கின்றார். 27

ஆண்டுதொறும் அம்மைகுரு வடிமலரிற்
கலந்தஅந்த நினைவு நாளில்
ஈண்டுபெருஞ் சிறப்பொடுநற் பூசைபுரிந்
தினிதுவிழா ஆற்று கின்றார்
யாண்டும்அடங் காதமனம் உடையவர்ஆங்[கு]
அடையின்மனம் அடங்கும் என்றால்
தூண்டுதவ முடையர்செலின் தூய்மைமிகப்
பெறுவதற்கோர் ஐய முண்டோ? 28

அருளண்ணல் அடிமலரில் வாழ்பத்மா
லயத்தாயின் அருட்சீர் வாழ்க
பொருள்புகழ்நற் புனிதம்அருள் பத்மவிநா
யகர்பூந்தாண் மலர்கள் வாழ்க
மருள்விலக மாதாவை நினைந்துவழி
பாடியற்றும் மக்கள் வாழ்க
தெருள்மிகுத்த திருமரபு வாழ்கஅருள்
சட்டநெறி சிறந்து வாழ்க. 29

வேளூர் கமலப் பிள்ளை மனைவி

அடியவரைக் கரைசேர்க்க வந்தகுரு
நாதர்அடிக் கடிசென் றன்பால்
அடியவர்க்கும் அன்பருக்கும் அருள்நலம்பா
லித்தபல ஊர்கட் குள்ளே
கடிமலர்த்தா மரைவயலிற் கமழ்வேளூர்
ஒன்றெனநாம் முன்னர்க் கண்டோம்
படிபுகழ்அவ் வூர்வேளாண் குலத்தினில்பண்
பார்கமலப் பிள்ளை வாழ்ந்தார். 30

அவரில்லத் தரசியராய் விளங்கம்மை
அண்ணலிடம் உபதேசம்பெற்[று]
அவம்விலக்கித் தவம்பெருக்கி அடக்கமுடன்
வாழ்ந்தாரென் பதுமுன் கண்டோம்
அவனிமிசை அருளண்ணல் அடக்கமா
யினபின்அவ ரைக்கா ணுமல்
கவலையுட னுள்ளுருகிக் கண்மலர்கள்
நீர்சொரியச் சோர்ந்து நிற்பார். 31

அடியவரில் லந்தோறும் அன்பொடுசென்
றகமகிழ்வூட் டியபெம் மானே
படியிலுள மருத்துவரெல் லாம்பார்த்துக்
கைவிட்ட நிலையி லும்பல்
கொடியபிணி களையும்பல குறைகளையும்
திருவருளால் எளிதே நீக்கி
முடிவில்மகிழ் வூட்டியருள் முழுமுதலே
மோனதயா நிதியே என்பார். 32

எத்துணைப்போ தானாலும் உணவுமுண்ணு
திவ்வுலக மக்கட் காக
மெத்தஅருள் புரிந்தவண்ணம் திகழ்மணியே
உமைமீண்டும் எந்நாள் காண்பேம்
இத்தரைமீ தென்றம்மை உருகுகையில்
எரியிலெண்ணெய் வார்த்தாற் போலப்
பத்திமிகு மக்களுற்று சாமியெப்போ
வருமென்னப் பரிந்து கேட்பார். 33

அருளண்ணல் வந்திருந்தால் அளவில்சிறப்
போடிவ்விடம் இருக்கு மென்பார்
மருவுகிளி கொஞ்சுமிப்போ வெறிச்சோடிக்
கிடக்கிறதே என்று சொல்வார்
பொருவிலிந்த வுரைகேட்ட வுடனம்மை
பொருமியழு தேங்கு வார்கள்
அருளழகார் அண்ணலுரு வப்படத்தின்
அருகுற்றிவ் வாறு சொல்வார். 34

கேட்டீர்களா சாமீ இவர்களுரைக்
கானநல்ல விடைகள் சொல்ல
மாட்டீர்களா சாமீ இவர்களுக்கெவ்
வாறுவிடை கூற வல்லேன்
பாட்டாலும் அருளாலும் பரிவாலும்
எமையாண்ட பகவா னேஇந்
நாட்டாரும் எளியேமும் நும்பிரிவை
யாற்றகிலேம் என்று நைவார். 35

கள்ளமற்ற சுற்றுப்புற மக்களுக்குக்
கருணைசெய வேண்டு மென்ன
வள்ளல்திரு வுளம்கொண்டார் கமலபிள்ளை
நல்வினையும் அம்மை யாரின்
விள்ளவொணாப் பெருநிலையும் ஒருங்கிணைய
ஒருநன்னாள் விடியற் போதில்
வள்ளலையே நினைந்தவராய் அம்மையார்
ஒருசிறிது கண்ண யர்ந்தார். 36

அம்மையார் அருகிலண்ணல் வந்துநின்றிச்
சாமியெங்கும் போக வில்லே
செம்மையருள் இச்சாமி என்றும்மறை
யாதிம்மொழி திண்ண மாகும்
நன்மையரு ளுதற்கொருரு வம்கொடுமுன்
நடமாடித் திரிந்த[து] இப்போ[து]
உண்மையடி யவருளந்தோ றும்குடிகொண்
டருள்சுரத்தல் உணர்வாய் என்ருர் 37

நீநினைத்த போதெல்லாம் இந்தச்சா
மியைநினக்குள் நன்று காண்பாய்
ஞானவுணர் வில்லாப்பா மரர்களைப்போல்
நீயும்உளம் நலிவ தேனே
நானிலத்தில் நினக்குரைத்த உபதேசங்
களைநீநன் றறிகி லாயோ
ஞானிகள்எப் போதும்இற வார்;என்றும்
இருப்பரென அறிவாய் என்ருர். 38

இத்தலத்தில் ஆண்டவர்சாந் நித்தியம்எப்
போதும்நிலைத் திருக்கும் என்ருர்
மெத்தசிறப் போடுதைமா தம்கடைசி
வெள்ளிவிழா நடத்து வீர்,இங்[கு]
அத்தனருட் பெருஞ்சிறப்பைப் பின்னர்அறி
வீர்என்ன அருளிச் செய்தார்
சுத்தமன முடையம்மை தூயகுரு
அருளுன்னித் துயிலு ணர்ந்தார். 39

அண்ணல்அரு ளியஇந்தச் செய்தியைத்தம்
கணவரிடம் கூறி அங்கு
நண்ணும்அடி யவரிடத்தும் கூறஅதைக்
கேட்டுநனி மகிழ்ந்தெல் லோரும்
எண்ணில்சிறப் போடுதைமா தக்கடைசி
வெள்ளிவிழா இனிதே யாற்றத்
திண்ணமுறத் தீர்மானித் தாவனஎல்
லாமினிது செய்ய லானுர். 40

## தை மாத வெள்ளி விழா

சுற்றுப்புற ஊரார் ஆயிரக்கணக்கில்
அண்ணலைச்சே விப்ப தற்கும்
நற்றிருவ ருள்பெறற்கும் வினைபலவும்
தவிர்ப்பதற்கும் நாடிச் சூழ்வார்
முற்றருட்கோ லம்திகழும் அண்ணலுரு
வப்படத்தை வீட்டின் முன்னர்
தெற்றியின்கண் எழுந்தருளச் செய்தெழிலொ
டலங்கரித்துப் போற்றி செய்வார். 41

அண்ணலுக்கந் நாளில்வரும் மலர்மாலை
கணக்கிலடங் காத தாகும்
நண்ணிடுமொவ் வொருவரும்தேங் காய்பழம்வெற்
றிலைபாக்கு நறும்பூ மாலை
வண்ணமிகு மாவிளக்கொ டும்போந்து
வழிபடும்அச் சிறப்பைக் கண்டால்
கண்ணிரண்டு போதாதவ் வருளழகைக்
கண்டுகளித் திடுதற் கம்மா. 42

அற்புதமாய் வந்துவழி படுபவரெல்
லாம்சட்ட அடியா ரென்று
பொற்புறக்கூ றிடவொண்ணு தருளண்ணல்
திறமுணர்ந்து நன்று போற்றி
அற்புதங்கள் பலதம்பால் அண்ணலரு
ளால்நடக்க அதனல் பெற்ற
நற்பயனை நினைந்துவழி பாடாற்ற
நண்ணுமன்பர் பலரா வார்கள். 43

அவர்களது வாழ்விலண்ணல் ஆற்றியுள
அற்புதங்கள் கூறக் கேட்டால்
எவரும்நனி வியப்படைவர்; உடல்முழுதும்
மயிர்ப்புளகம் எய்தும்; அண்ணல்
தவப்பெருமை அருட்பெருமை சார்ந்தவரைப்
புரந்தருளும் பெருமை எல்லாம்
நவில்வதரி தரிதென்ன ஞாலமிசை
எவ்வுயிரும் போற்று மன்றோ? 44

அருளண்ணல் பெயர்கூறி அளவிறந்த
அற்புதங்கள் அவ்வே ரூர்பால்
மருவியுள சுற்றுப்புற ஊர்களிலும்
நடைபெறும்மாண் புரைத்தற் காமோ?
பொருவில்பல குறைதீர பூமிநல்ல
விளைவுதர, நோய்கள் நீங்க
குருபரனூர் அருள்புரிந்த சிறப்புன்னிக்
கூடிவழி படுவார் பல்லோர். 45

கள்ளமற்ற உளத்திலவர் உறுதியொடும்
கொண்டுளநம் பிக்கை யாலும்
விள்ளரிய தெய்வபக்தி வியனுலகர்க்
கூட்டிடுதல் வேண்டு மென்ற
வள்ளலரு ளுளத்தாலும் மாண்பொடவர்
வேண்டியவை வேண்டி யாங்கே
எள்ளலற நடைபெறவும் இறையருளில்
உறுதிமிக எய்து வாரால். 46

பூசைக்குரி தாம்பொருள்கள் விற்குமங்கா
டிகள்பலவும் பொலியு மங்கண்
ஆசைப்படு பொருள்கள்சிறூர் சிறுமியர்க்கென்
றமைகடைகள் மலியும் அங்கண்
வாசப்பொரு ளுளகடைகள் வண்ணமல
ருளகடைகள் வயங்கும் அங்கண்
பாசப்பகை யறுத்துய்ய நாடுமுண்மைப்
பக்தர்குழாம் திகழும் அங்கண் 47

மனத்தையருள் வயப்படுத்தும் மங்களவாத்
தியவோசை முழங்கும் அங்கண்
நினைத்ததெலாம் நிறைவேற்றும் நின்மலர்சீர்த்
துதியோசை நிறையும் அங்கண்
அனைத்துயிரும் நனிவாழ அமைந்தசட்டச்
சிறப்புரைகள் ஒலிக்கும் அங்கண்
தனித்தபுக ழிருடிபட்டிச் சாமிக்கரோ
ஹரவெனும்சொல் தழங்கும் அங்கண். 48

கணக்கிறந்த மக்கள்குளத் தினில்மூழ்கிக்
கவினுறமா விளக்கை மிக்க
இணக்கமுறச் சிரமிசைதாங் கியவண்ணம்
எழில்வரிசை யாகப் போந்து
வணக்கம்அரு ளண்ணலுக்கு நனிசெலுத்தி
வாயாரத் துதிகள் பாடி
மணக்கும்மலர் மாலைபல சமர்ப்பித்து
மாணருள்பெற் றுய்வார் இன்றும். 49

அடியவர்க்கும் அன்பருக்கும் அமுதினிது
படைத்தினருள் பெறுவார் பல்லோர்
உடையவன்தண் ணருட்சிறப்பை ஓதிமக்கட்
குணர்வூட்டி உவப்பார் பல்லோர்
அடைவொடுமின் னிசையிலண்ணல் அருட்பாடல்
பாடியின்பம் அடைவார் பல்லோர்
குடிமுழுதும் உயக்கொண்ட கோமகனுர்
பணிபலசெய் திடுவார் பல்லோர். 50

இரவிலண்ண லார்உருவப் படத்தினைவி
மானத்தெழுந் தருளு வித்து
பொருவில்பல நாதசுர இசைவல்லோர்
போந்துண்மை யன்பி னோடும்
வரிசையுற நின்றுதத்தம் குழுவோடும்
மங்களவாத் தியம் முழக்க
சுருதியொடு தாளமத்த ளத்தோடும்
பஜனைகுழாம் சூழ்ந்து போற்ற 51

மலர்மாலை சூட்டிடுவோர் வாசனைப்பன்
னீர்தெளிப்போர் தேங்கா யோடு
பலதூய கனிபடைப்போர் கர்ப்பூரா
ராதனைகாட் டிடுவோர் அன்பால்
நலமார்குங் கிலியநறும் புகையிடுவோர்
நற்கரங்கள் சிரமேற் கூப்பி
மலமூன்று மெரித்துமலர்த் தாள்தருக
வெனத்துதிப்போர் வழுத்தி யேத்த. 52

ஒளிவிளக்குப் பலசூழ ஒப்பிலடி
யவர்அன்பர் உவந்து சூழ
அளிவிளக்கி அமரர்சொரி மலர்சூழ
அருள்முனிவர் வாழ்த்துச் சூழ
களிவிளக்கிக் கவினியற்கை யன்னைகனி
வொடுவிசு தென்றல் சூழ
கிளர்அருட்பே ரெழில்சூழத் திருவுலா
மிகஇனிது நடக்கும் மாதோ. 53

மங்கலவாத் தியம்ஒலிப்போர் வேளூர்
விழா நாளில் வாசித் தாரேல்
தங்களுக்கவ் வாண்டுமுழு வதும்வருவாய்
தழைந்துமிகப் பெருக லாலே
தங்குதடை யேதுமின்றி வலியவந்து
தக்கசன்மா னம்கே ளாமல்
பொங்குமகிழ் வொடுவாசித் தருட்பயன்பெற்
றினிதுவிடை பெற்றுப் போவார். 54

இத்தகுநன் முறையினில்தை மாதக்கடை
வெள்ளிவிழா எவரும் போற்ற
மெத்தசிறப் போடுநடை பெறக்கண்ட
ஞானம்பாள் ஆச்சி மிக்க
சித்தமகிழ் வெய்திஅண்ணல் சிறப்பளவி
லாததெனத் தெளிவுற் றார்கள்
அத்தனருள் பால்மிக்க உறுதியுடன்
ஆண்டுபல வாழ்ந்தார் நன்றே. 55

குருபரனார் திருவடித்தா மரையன்றி
வேறொன்றும் கோரா அம்மை
திருவுளத்தி லுறுதிமிகப் பூண்டவராய்
திகழில்லறத் துறவி யாகி
அருளனுப வத்திற்பல மேல்நிலைகள்
அடைந்தின்புற் றொருநாள் காலை
அருள்தண்ணீ ராடியமர்ந் தண்ணல்திரு
வடியில்இரண் டறக்க லந்தார். 56

அருள்மிகுப் ஏருதிமங்க லம்ஜெகதாம்
பாள்அம்மை அவ்வே ரூரில்
அருளண்ணல் பெருங்கருணை நிறைந்துளதென்
றகத்துன்னி அவ்வூர் சேர்ந்து
தெருள்மிகுந்த தவநிட்டை திருவருளால்
நனிபேணிச் சிறப்பாய் வாழ்ந்து
குருபரனார் திருவடியிற் கலந்தொன்றி
முத்திப்பே றடைந்துய்ந் தாரால், 57

வளமிகுநற் சோனாட்டில் திகழ்வேளூர்
கமலபிள்ளை வண்சீர் போற்றி
அளவிலரு ளெய்தியற்பு தங்கள்பல
புரிஞானம் பிகைசீர் போற்றி
இளகுமன துடைவேளூர் அருட்சட்ட
அடியார்கள் இயற்சீர் போற்றி
உளமகிழ்ந்து தைமாத வெள்ளிவிழாக்
கண்டுய்வோர் ஒண்சீர் போற்றி. 58

**வேலூர் மார்க்கசகாய ஆசாரி மனைவி சுசீலா அம்மையார்**

ஐம்பூதங் களில்ஒன்றும் அங்கித்தலம்
அருணையைத்தன் னகத்தே கொண்டும்
செம்பாக மானமனத் தருளாளர்
பலர்திகழ்ந்த சிறப்பைக் கொண்டும்
அன்பால்வள் ளியைமுருகன் மணந்தவள்ளி
மலையினைத்தன் னகத்தே கொண்டும்
பொன்போன்ற சேஷாத்ரி ரமணர்பூண்
டிச்சாமி போன்றோர்க் கொண்டும் 59

உழவர்பெரு மக்கள்பலர் வணிகப்பெரு
மக்கள்பலர் ஒளிரக் கொண்டும்
வழுவில்பல மாணறங்கள் வளர்த்தோம்பு
வோர்பலரைத் தன்பாற் கொண்டும்
தழைவுறுவ டாற்காடு மாவட்டத்
தலைநகராய்ச் சாற்றப் பெற்றுப்
பழமையொடு புதுமைதிகழ் பாங்கினொடும்
பொலிவதுநல் வேலூ ராகும். 60

அருளண்ணல் வாணியம்பா டியிலிருந்து
தென்பாற்செல் கையிலே இந்தத்
திருநகரின் வழியாகச் சென்றுள்ளார்
எனும்செய்தி முன்னர்க் கண்டோம்
பெருமைமிகும் இந்நகரிற் பொற்கொல்லர்
தம்மரபிற் பிறந்த நல்லோர்
அருமைமன மார்க்கசகா யப்பெயர்கொள்
அன்பர்அவண் வாழ்ந்து வந்தார். 61

உடையவன்றன் கருணையினல் ஒப்பிலருட்
குருபரனுர் பெருஞ்சி றப்பும்
புடவியின்மீ தருட்சட்ட அடியார்கள்
பெறுநலமும் புகலக் கேட்டுத்
தடையறுபே ரன்போடும் சட்டநெறி
மேற்கொண்டார்; தக்க சீரார்
நடையுடைவாழ் வரசிசுசி லாநங்கை
யரும்சட்ட நெறிமேற் கொண்டார். 62

அவர்குடும்பத் தனைவருமே அண்ணலார்
அருட்சட்ட நெறிமேற் கொண்டார்
தவலறும்சீர் மனைவியார் சட்டமதில்
மேம்பட்டு விளங்க லானுர்
அவனிமருந் தின்றியருட் சட்டநெறி
யினில்மக்கட் பேறும் பெற்ருர்
உவகையுடன் அடியவரை உபசரிப்ப
தினில்உவமை யின்றி நின்ருர். 63

ஆண்டவர்க்கு நல்வழிபா டாற்றுவதில்
ஆசார அநுட்டா னத்தில்
ஈண்டுபெருஞ் சிறப்போடும் இலங்கினர்பே
ரருள்நலங்கள் எய்தி வாழ்ந்தார்;
ஆண்டவர்நாம் தேடும்கர்ம மிதுநம்மை
விட்டகலா தென்று நன்றே
பூண்டபெருங் கருணையினல் உரைத்தமொழிக்
கிணங்கஅம்மை நோய்வாய்ப் பட்டார். 64

பெரும்பாடெ னும்பிணிக்கா ளாகியம்மை
வருத்தமுற்ருர், சூழ்ந்தோ ரெல்லாம்
அரும்பாடு பட்டுமருத் துவச்சாலைக்
கனுப்பமுயன் றிட்ட போதும்
மருந்தேதும் நாடாமல் அடியார்கள்
திடபக்தி வைராக் யத்தோ
டிருந்தாலஃ தேதூய பண்பாகும்
என்றம்மை யிருந்தார் நன்றே. 65

சூழ்ந்துளபல் லோர்கூற்றுக் கணுவளவும்
அசையாமல் துலங்கி ஞர்கள்
சாந்தமிகு பெரியரெலாம் தம்கருமங்
களையனுப வித்தா ரென்ருல்
நாம்தடுக்க முயலுவது நன்ருமோ?
இறைவனருள் துணையில் லாமல்
தீர்ந்திடுமோ எப்பிணியும்? தீர்க்கவல்லோன்
இறைவனன்ருே என்ருர் அம்மை. 66

அவனன்றி வேருென்றில் நம்மனத்தைச்
செலுத்துதல்நன் றல்ல வென்னும்
உவமனில்பே ருறுதியுடன் உயர்ந்ததிரு
வருள்வாழ்வு வாழ்ந்தா ரம்மை
நவிலரிய துன்பமந்த நோய்நல்க
நங்கைகுரு நாதர் கோயிற்(கு)
உவகையுடன் செலவிழைந்தார் கணவனிடம்
இக்கருத்தை உரைக்க லானுர். 67

கணவர்அவண் தாமதிக்கக் காரிகையார்
தம்மகளைத் துணையாக் கொண்டு
கணமுமங்குத் தங்காமல் குருபரனுர்
கருணையொளி பெருகி யோங்கும்
வணமிகுநற் றிருக்கோயில் வயங்கிருடி
மாநகரம் சென்று சேர்ந்தார்
மணமிகுநன் மலர்மதுவை அருந்துதற்கு
நாடிவண்டு வருவ தேபோல். 68

நடந்திடவும் இயலாத நிலையிலுள
நங்கையார் நாளும் உள்ளத்
தடர்ந்தஉயர் பேரன்பால் இருவேளை
நீராடிக் கோயிற் சேகித்
தொடர்ந்திடுபல் வினைப்பகையை அருட்டுணையால்
துகளாக்கிப் பிறவிப் பவ்வம்
கடந்துனருட் கழலெய்தக் கருணைபுரி
செனவுருகிக் கரைவார் அன்பால். 69

உளமுருகி வலம்வருவார் திருநீறும்
தீர்த்தமுமேற் றினிதுட் கொள்வார்
அளவில்பெருங் கருணையினால் அண்டமெலாம்
பேணுகுரு அருளுள் மூழ்கி
வளமிகுநல் லருளானந் தப்பேற்றை
வரைவறநன் றனுப விப்பார்
உளமினிக்க உயிரினிக்க அவரடைந்த
உயர்நிலையை உரைத்தற் காமோ? 70

பதினொருநாள் குருநாதர் சந்நிதியிற்
பக்தியுடன் தங்கி னார்கள்
இதமுறுநல் லடியவரைப் பத்தாம்நாள்
இரவிலம்மை இனித ழைத்தே
இதயமிசை யுறையிறைவன் திருவடியில்
நாளையடங் கிடுவேன்; அன்பால்
முதல்வர்அழைக் கின்றனர்என் றேயருளால்
உணர்ந்துதெளி வுறமொ ழிந்தார். 71

அம்மையெதோ மொழிகின்றார் என்றடியார்
எண்ணியவண் இருந்திட் டார்கள்
அம்மையுரைப் படிமறுநாள் அதிகாலை
நீராடி அமர்ந்து நன்றே
மும்முறைசற் குருநாதா எனக்கூறி
முறையோடும் அடியார் பாற்சூழ்
மும்மைமலம் அறுத்துமுத்தி யருள்குருவின்
மொய்ம்மலர்த்தாள் நிழலிற் சேர்ந்தார் 72

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்திருபத்
    தைந்தாம்ஆண் டவனி மீதில்
ஏயபிறப் பெடுத்தஇவர் இன்னருட்சட்
    டம்பேணி எவரும் போற்ற
ஆயிரத்துத் தொள்ளாயி ரத்தறுபத்
    தொன்பதில்நான் காம்மா தத்தில்
தூயஅறு நான்காம்நாள் ஜோதியொடு
    கலந்தருட்பே ரின்புற் றுரே. 73

தி. க. ஆ. குமாரசாமி முதலியார்

முத்திநக ரங்களிற்சி றந்ததெனப்
    பெரியோர்கள் மொழிந்து போற்ற
இத்தரையிற் றிகழ்காஞ்சி மாநகரை
    யடுத்ததிம்ம ராஜம் பேட்டை
மெத்தஎழி லோடிலகும் அப்பதியிற்
    செங்குந்த மரபிற் போந்த
பத்தர்நற் குமாரசா மிப்பெயர்கொள்
    முதலியார் வாழ்ந்து வந்தார். 74

கச்சிநக ரினிலாடை வாணிபம்
    தொடங்கியதால் அதனைக் காக்க
இச்சையுற்றுக் கச்சிநக ரிற்குடியே
    றினர்அவ்வங் காடி யின்கண்
நற்சிறுவன் வில்லிவலத் துறையொருவன்
    பணிபுரிதற் கமர்ந்தி ருந்தான்
அச்சிறுவன் சிலசமயங் களில்அவர்இல்
    லத்தினிலும் தங்கு வானுல். 75

அத்தருணங் களில்விடிதற் கைந்துநா
    ழிகைமுன்அவன் விழித்துக் கொண்டு
பத்தியொடும் தண்ணீரில் மூழ்கிநன்று
    வழிபாடு பரிவாய்ச் செய்வான்
இத்தகுநற் செயல்கண்ட இவர்அதற்குக்
    காரணம்யா தெனவி னுவ
அத்தனருட் சட்டநெறி யினைப்பற்றி
    அச்சிறுவன் விளக்கிச் சொன்னுன். 76

அண்ணலருட் சட்டநெறிச் சிறப்பைஇவர்
உணர்ந்தருட்சட் டம்மேற் கொண்டார்
நண்ணுகுடும் பத்தவரெல் லோரும்அருட்
சட்டநெறி நன்றேற் றிட்டார்
தண்ணருளால் நான்குசிறுர் இருபெண்க
ளோடுமிவர் தாணி மீதில்
புண்ணியமார் நடுத்தரச்செல் வந்தரெனப்
பொலிவோடும் பிறங்க லானுர். 77

இருடிநகர்க் குருபரனுர் வரலாற்றை
இன்னருட்பா டலையச் சேற்றத்
திருநகராம் காஞ்சிநகர்க் குற்றிருந்த
நரசிம்மச் செம்ம லார்பால்
பெருவிருப்பி னெடும்சார்ந்து பேரருளார்
குருபரனுர் பெருமை யெல்லாம்
தெருளுறக்கேட் டன்புருக்கம் மிகுந்தவராய்த்
திருவருளிற் சிறந்து வாழ்ந்தார். 78

திருச்சாத்த னூரில்அருட் கொடிசாமி
சிறப்பும்பிளை யார்குப் பத்தில்
அருட்சால்பு மிகுந்தஅருட் சக்தியன்னை
சிறப்புமன்பொ டறிந்தங் கெய்தி
மருட்சார்பு தவிர்ந்துலகிற் பிறந்தபயன்
மாண்புறப்பெற் றின்பம் துய்த்தார்
தெருட்சார்புற் றவர்சூழல் சேர்ந்தவரைத்
தெய்விகமா யாக்கு மன்றே? 79

பிள்ளையார் குப்பத்தில் ஆண்டுதொறும்
நடக்கும்அருட் குருபூ சைக்கும்
வள்ளல்திருச் சாத்தனூர் அருட்கொடி
விழாவினுக்கும் தவறு தேகி
உள்ளுருகி மிகப்போற்றிக் குருபரர்
உலாக்கண்டு பேரின் பெய்திக்
கள்ளமற்ற நல்லடியார் குழுவினில்அன்
பொடும்கலந்து களிகொள் வாரால். ௮0

அருட்கொடிசா மிக்குமிவ ருக்குப்நெருங்
கியதொடர்புண் டென்ன லாகும்
அருளண்ணல் புகழ்கேட்கும் போதும் அருட்
பாடல்களைப் பாடும் போதும்
உருகிவிழி நீர்பெருக்கி ஆனந்த
பரவசராய் ஒளிர்வார் அன்பர்க்[கு]
உரியஉப சாரங்கள் செய்வதிலும்
தலைசிறந்து பொலிவா ராஞர். 81

பின்னர்மிகு மிடிவந்த போதும்குரு
செந்நெறியிற் பிறழா தாராய்
நன்னயமார் தம்குடும்பத் தினர்க்கும்பிற
உறவினர்க்கும் ஞாலத் தோர்க்கும்
மன்னுமொரு வழிகாட்டி யாய்த்திகழ்ந்தார்;
எதுவரினும் மாண்பார் சட்ட
மன்னர்குரு நாதர்திரு வருளென்ற
உறுதிகுறை யாமல் வாழ்ந்தார். 82

அந்தநல்ல உறுதியுடன் ஆண்டவர்தம்
திருப்பாத மலரிற் சேர்ந்தார்
அந்தநல்ல மனவுறுதி நமக்கருள
வேண்டுமென்றுள் ளன்பி னேடும்
இந்தவுல கைத்திருத்த வந்தகுரு
பரர்பாதம் இறைஞ்சி நிற்போம்
சந்ததமும் அவரருளை நினைந்துரைத்துப்
பணிசெய்தடி சார்ந்துய் வோமே. 83

கோவை G. V. முத்துசாமி செட்டியார்

அருளண்ண லால்ஆளப் பெற்றஅள
விறந்தஅடி யார்கள் தம்முள்
அருள்முத்து போன்றவரே கோவைநகர்
நன்முத்து சாமி யாவர்;
பொருள்மிகுத்த கோவைநக ரினிலார்ய
வைஸ்யகுலம் பொலியப் போந்த
தெருள்மிகுவேங் கடகோபால் செட்டியா
ரேஇவர்தம் தந்தை யாவார். 84

அவர்வேதம் நான்கினையும் அத்யயனம்
செய்தஅருட் பெரியா ராவர்
அவர்ஆறங் கங்களையும் உபநிடதங்
களையும்உணர் ஆன்றோ ராவர்
அவர்வேதம் பிரமசூத் திரம்முதலாம்
அனைத்தினிலும் தேர்ந்தோ ராவர்
அவர்சிறந்த ஆசாரம் அனுட்டானம்
தெய்வபக்தி மிகுந்தோ ராவர். 85

ஆந்திரம்பைந் தமிழ்ஹிந்தி மலையாளம்
கன்னடம்ஆங் கிலம்பர் மாவைச்
சார்ந்தமொழி உருதுலத்தீ னுதிமொழி
இலக்கணத்தொ டினிது கற்றுத்
தேர்ந்தஅவர் பலமொழியிற் சிறந்தகவி
களையியற்றும் திறமை சான்றோர்
கூர்ந்தஇசைப் பயிற்சிஉடற் பயிற்சியோ
கப்பயிற்சி கூடப் பெற்றோர். 86

ஆன்மஞா னத்தில்மிகச் சிறந்தஇவர்
வாழ்வரசி சுப்பு லக்மி
மேன்மைமிகும் இல்லறத்திற் குரியநற்கு
ணங்களொடும் வாய்க்கப் பெற்றார்
வான்மலிநற் புகழ்கொளிவர் மகவெனமுத்
துச்சாமி வந்து தோன்றி
தேன்மணமும் குணமுமெனத் திகழ்ந்தருட்சட்
டம்பேணும் சிறப்பைக் காண்போம். 87

ஆயிரத்தெண் ணூற்றுத்தொண் ணூற்றெட்டாம்
ஆண்டவனி மீது தோன்றித்
தூயமுத்து சாமியெனப் பெயர்புனைந்து
தூயதந்தைக் கேற்ற நல்ல
சேயெனநன் றேவளர்ந்து செப்புமொழி
பலபேச எழுதக் கற்று
மேயபணி வடக்கமின்சொல் பெரியோர்பால்
உள்ளன்பு மிகுந்த மைந்தர். 88

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்திருப
தொடுமூன்றில் யசோதை யம்மை
தூயஇல்ல றத்துணைவி யாயமையச்
சுகவாழ்வு மேற்கொண் டன்பு
மேயஇரண் டாண்மகவொ டொருபெண்மக
வினையின்று விளங்கும் நாளில்
ஆயஇல்ல றத்துணைவி ஆண்டவர்சீர்
மலர்ப்பாதம் அடைந்திட் டாரால், 89

நங்கைசரஸ் வதியைஇரண் டாந்தார
மாகமணம் செய்து கொண்டார்
மங்களமாம் வாழ்வாற்றுங் கால்அடியேன்
மாநகராம் கோவை சென்று
துங்கமிகும் அவர்களில்லில் தங்கியபோ
தினில்தூய ராம்அ வர்க்குச்
சங்கடந்த ரும்காச நோயிருந்த
தால்வருத்தம் சகியா ராஞர். 90

பலவிதமாம் மருத்துவமும் பார்த்துமொரு
சிறிதும்பய னின்றிப் போக
உலகிலுள மருந்தெதுவும் இனித்தொடுவ
தில்லையெனும் உறுதி பூண்டார்
இலகுமருந் தெதுவுமின்றி நலமெய்தும்
வழியுண்டோ என்று கேட்டார்
அலகில்புகழ்க் குருநாதர் அருட்சட்ட
நெறியுளதென் றடியேன் சொன்னேன் 91

அத்தகைய செந்நெறியை விளக்குதற்கு
நூலுளதோ அதுந மக்கு
மெத்தவிரை விற்கிடைக்க வழியுளதோ
எனக்கேட்டார்; விரைவில் யானே
அத்திருநூ லைக்கொணர்ந்து தரமுயல்கின்
றேனென்ன அவர்பாற் கூறி
மித்திரராம் சேஷாச லக்குரிசி
லினைஆனத் தூரிற் கண்டேன். 92

கோவையிவில் ஓரன்பர் குருபரனூர்
நெறியேற்க விரும்பு கின்றூர்
ஒவிவருள் நூலைக்கொடுத் துதவிடுதல்
வேண்டுமென அவர்பாற் கேட்டேன்
பூவிலந்த நூல்விலைக்கிப் போதுகிடைக்
காதெனினும் புனித மாக
மேவுமந்த நெறியேற்க விழைபவர்க்கென்
நூல்தருவ னென்று தந்தார். 93

அவர் நூலை வாசித்துச் சட்டநெறி
யிற்சேர்ந்தின் னருளி னாலே
பவநோயும் உடல்நோயும் தீர்ந்துகுண
மடைந்துநலம் பெறுதல் வேண்டும்
அவராற்கோ வையிலும்புறத் தூர்களிலும்
சட்டநெறி பரவி யார்க்கும்
நவலோகப் பயன்முத்தி நலமருள
வேண்டுமென வேண்டித் தந்தார். 94

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்தொடுநாற்
பதின்மூன்றில் இரண்டாம் மாதம்
தூயவழி காட்டிடும்வான் பொருள்நூலை
அத்தூயோ ரிடம்யான் தந்தேன்
நேயமுடன் வாங்கிஅவர் பணிசெய்நிதி
நிலையத்திற் கெடுத்துச் சென்று
மேயபக்தி யொடும்ஓய்வு கிடைத்தபொழு
தினிற்படிக்கத் தொடங்கி னூரால். 95

அண்ணலருட் சட்டமும்மெய்ச் சுகம்பெறும்நற்
றிட்டமும்என் றமைந்த ஏடே
தண்ணருளால் இவர்படிக்கத் தொடங்கியபோ
தினிற்கிடைக்க அதைப்ப டித்தார்;
எண்ணருமிச் சட்டநெறி யினையேற்றுக்
கொளலாம்என் றெண்ணம் கொண்டார்;
புண்ணியராம் தந்தையிடம் அனுமதிபெற்
றூர்புனிதச் சட்ட மேற்க. 96

வேறு

அடுத்தநாள் விடியல் ஐந்துநா ழிகைமுன்
அன்புசால் மனைவியோ டெழுந்து
மடுத்ததண் ணீரில் மகிழ்வுடன் மூழ்கி
வான்பொரு ளாம்குரு நாதர்
பட்த்தினைப் பூஜை யறையினி லினிது
தாபித்து நறுமண மலரால்
தொடுத்தநன் மாலை சூட்டிநற் பூஜை
தொடங்கினர் தூமனத் தோடும். 97

ஐங்கர மூர்த்திக் கன்பபி டேகம்
புரிந்துநன் மலரலங் காரம்
துங்கவர்ச் சனைநல் தூபதீ பமும்நை
வேத்திய மும்தொடர்ந் தாற்றி
புங்கவர் போற்றும் அருள்திரு நீறும்
தீர்த்தமும் உட்கொடு சட்டம்
நன்குபோற் றடியா ராயினர் தூய
ஞானியர் வானவர் வாழ்த்த. 98

அந்தநாள் வங்கி யினிற்பணி புரிந்து
கொண்டிருக் கையினில்ஓர் எண்ணம்
வந்திட நோயின் துன்பமில் லாமல்
வயங்குதல் நினைவிற்கு வரவும்
சிந்தையில் வியப்பும் உவகையும் தோன்றத்
திருவருட் சிறப்பினைப் போற்றி
எந்தநே ரத்திற் பிணிவில கியதென்
றெண்ணினர் சிந்திக்க லானார். 99

காலைதண் ணீரில் மூழ்கிய போதும்
கனிவுடன் பூசித்த போதும்
ஏலுநற் பணிசெய் யிடத்துற்ற போதும்
இருந்தஆ ரோக்யத்தை நினைந்தார்
சாலநல் லுறக்கம் முன்னிர வினிலே
கொண்டதும் தகவுற நினைந்தார்
வாலிதாம் சட்டம் மேற்கொள நினைத்த
தும்பிணி விலகிய துணர்ந்தார். 100

அவர்அப்போ தடைந்த ஆனந்தத் திற்கோர்
எல்லையுண் டோஅருட் குரவர்
தவலறு சிறப்பும் தண்ணருள் புரியும்
தன்மையும் நினைந்துபோற் றிட்டார்
அவரடைந் திட்ட நலத்தினை யறிந்த
அவர்குடும் பத்தவ ரெல்லாம்
தவநெறி யாம்நற் சட்டத்தை யேற்றுச்
சாற்றரு நலம்பெற லானார். 101

வேறு

இவர்ஒழுக்கத் தாலும்அருட் சட்டநெறி
யிற்கொண்ட உறுதி யாலும்
அவனிமிசை பிறரைநனி ஊக்குவிக்கும்
திறத்தாலும் அடிய னேனும்
அவமறுக்க விழைஏவி கிருஷ்ணசெட்டி
யாரும்அருட் சட்ட மேற்றோம்
உவகையுடன் எங்களிரு குடும்பத்தவ
ரும்சட்ட மேற்றார் நன்றே. 102

தினமும்அதி காலையினில் விழித்தெழுந்து
நீராடித் திருநீ றிட்டு
மனமுருகித் திருப்பள்ளி யெழுச்சிப்பா
டலைப்பாடி யாரா தித்து
பினர்கணப திக்கபிடே கம்புரிந்து
வத்திரமும் மலரும் சாத்தி
இனிதருச்ச னைபுரிந்து தூபதீ
பம்காட்டி நைவே திப்பார். 103

தோத்திரங்கள் பலபாடி அட்டாங்க
நமஸ்காரம் செய்து வப்பார்
வாழ்த்துமங்க ளம்பாடி ஆரதி
யெடுத்தபினர் வந்தோர்க் கெல்லாம்
தீர்த்தம்திரு நீறளிப்பார் தெரிசனம்செய்
தெல்லோரும் உவந்து செல்வார்
ஏத்துமிவர் இலத்திலெது செய்தாலும்
ஆண்டவர்க்கு நைவே திப்பார். 104

மாலையினில் விளக்கேற்றி யருச்சித்துப்
பழம்வைத்து நைவே திப்பார்
சாலவிருப் போடுதுதிப் பாடல்பல
பாடியன்பு வணக்கம் செய்வார்
ஏலுமகிழ் வோடுமுடன் குடியிருக்கும்
அன்பர்களும் கலந்து கொள்வார்
மூலமறை நாயகனும் முக்கணிறை
அருள்பாடிப் போற்றி செய்வார். 105

பாலனம்செய் பரனருளைப் பாடித்துதித்
திடும்போதிற் பலரும் கேட்டு
ஞாலமிசை திகழ்கோயில் களிலிதுவும்
ஒன்றென்ன நவில்வா ரானார்
கோலமத குஞ்சரனைக் கும்பிட்டோர்க்
கருளும்குரு பரனைப் போற்றி
மாலகன்று மாணருட்பே றெய்தியன்பர்
மாமகிழ்வொ டில்லம் சேர்வார். 106

மிக்ககருத் தோடும்படிப் படியாகத்
தீவிரமாய் விளங்கு பூஜை
தக்கமுறை யொடும்நடந்து வந்ததனால்
பலருமவண் சார்ந்து தூய
முக்கணிறை யினைஞான குருபரரை
முறையோடும் போற்றித் தங்கள்
சிக்கலெலாம் தீர்ந்துய்வார் வினைபிணிகள்
நீங்கியுய்வார் திருநீற் றாலே. 107

பிள்ளையார் சட்டத்துள வீடென்றவ்
வீடுநனி பிறங்கிற் றுள்ளக்
கள்ளமின்றி வழிபாடு காலந்தொறும்
நன்றுநடந் திட்ட தங்கண்
வெள்ளமெனப் பெருங்கருணை நிறைந்துவிழைந்
திட்டதெலாம் கொடுத்த தங்கண்
அள்ளியள்ளி அருளமுது பருகியன்பர்
அடியரெலாம் அமைதி பெற்றார். 108

முதல்மனைவிக் குப்பிறந்த ஆண்இரண்டும்
பெண்ணொன்றும் இரண்டாம் தாரச்
சுதனொன்றும் பெண்ணொன்றும் ஆகஇவ
ரொடும்மகிழ்வாய் இவர்கள் வாழ்ந்தார்
அதிசயங்கள் அடிக்கடிசற் குருவருளால்
இவரிலத்தில் நடக்கும்; கண்டோர்
பதிகருணை யினைஇவர்கள் பக்தியினைப்
போற்றிடுவர் பண்பி னோடும். 109

நடந்தஅற்பு தங்களெலாம் நவில்வதிய
லா(து):அடியர் நலனை நாடி
நடந்தவற்றில் ஒருசிறிது கண்டிடுவோம்;
நம்பியிவர் இரண்டாம் செல்வன்
திடங்கொள்கரு ணாகரற்குப் பெண்பார்க்கச்
சென்றனர்நற் கருவூர்க் கங்கண்
புடங்கொள்பொனை நிகர்தூய மீனாட்சி
யெனும்பெண்ணை யருளாற் பார்த்தார். 110

மணப்பெண்விநா யகர்பக்தி மிகுந்திருந்த
தனையுணர்ந்தார்; மண்ணைக் கொண்டு
கணபதியின் திருவுருவை யமைத்திருந்த
தனைக்கண்டார்; கனவின் கண்ணே
மணமகனின் உருக்காட்டி இவரேநின்
கணவர்;இவர் தந்தை நாளை
மணம்பேச வருகின்றார் எனமுன்னோன்
அருளியநற் செய்தி கேட்டார். 111

அப்பெண்ணை யேமணப்பெண் ணாக்கொண்டு
திருமணத்தை நிச்ச யித்தார்
ஒப்பில்பழ நிப்பதியில் மணம்நடப்ப
தாகநனி உறுதி செய்தார்
அப்பழநித் தலத்தருகில் ஆயிக்குடி
யெனும்ஊர்க்கு நண்ப ரோடும்
நற்பருவ மாப்பிள்ளை யொருகுதிரை
வண்டியினிற் சென்று மீண்டார். 112

வரும்பொழுதவ் வண்டியின்சக் கரமொன்றில்
அமைந்திருந்த ஆரக் கால்கள்
ஒருவரும்நன் றறியாவண் ணம்கழன்று
விழுந்துகொண்டே வரவும் வந்த
ஒருவனங்கா ரக்கால்கள் யாவும்விழுந்
திட்டனவே யெனவி ளம்ப
விரைவில்வரு வண்டிகுடை சாய்ந்த(து) இட
ரின்றிவந்தோர் இறங்கி னூரால். 113

வண்டியினில் வந்தவர்கள் அதிசயித்து
மாணருளைப் போற்றி னூர்கள்
வண்டிபல போக்குவரத் தில்லாத
அவ்வழியில் மக்க ளின்றி
வண்டியொன்று திருவருளால் வர இந்த
வண்டியினில் வந்தோர் அந்த
வண்டியில்நன் றேறியருட் பழநித்தலத்
தினுக்கினிது வந்து சேர்ந்தார். 114

அண்ணல்அடி யார்கள்பலர் அந்தத்திரு
மணத்தில்நனி கலந்து கொண்டு
வண்ணமுறக் குருபரனூர் கோயில்விரி
வாக்கும்பணி தொடங்கு தற்குத்
திண்ணியநற் பணிபுரியும் சிற்பியரொ
டும்கலந்து பேசி னூர்கள்
அண்ணல்திருக் கோயில்பணி பினர்சிறப்பாய்
நடந்ததுல கறியு மன்றே. 115

ஆயிரத்துத் தொள்ளாயிர த்தொடுநாற்
பத்தாறில் கோவை யில்ப்ளேக்
நோய்பரவிற் றிவர்வாழ்ந்த இடத்திலுள
பலரும்வெளி யூர்க்குச் சென்றூர்
ஆயினும்சற் றேனும்மனம் தளராமல்
அருளண்ணல் துணையை நம்பித்
தூயபக்தி யோடுமிவர் பூரணமாம்
உறுதியுடன் இருந்தார் அங்கண். 116

நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்
என்றப்பர் நவிசொற் றூற்போல்
கோமானும் குருபரனார் துணையென்னக்
கொடியவிஷத் தேளைப் பாம்பைத்
தாமேதும் உடற்பற்றில் லாதவராய்
எங்கேசெல் கின்றாய் என்னப்
பூமேல்மற் றோரிடத்திற் கொண்டுபோய்
விட்டிடுவார் பலரும் காண. 117

குருநாதர் எங்குமெந்த உயிரிடத்தும்
இருக்கின்றார் என்று கொண்ட
ஒருதூய நம்பிக்கை உடையவராய்த்
திகழ்ந்தஇவர் ஒருநாள் காலை
விரைவாகச் செலும்போது சிறிதுதவ
றிக்கீழே விழுந்து விட்டார்
ஒருகாதில் ஒருபாகம் அறுந்துவிட்ட
ததற்கேதும் செய்யா ரானார். 118

உடையவன்றன் உளப்படியே நடக்கட்டும்
என்றுசும்மா இருந்து விட்டார்
உடையவன்றன் அருளால்அங் கிவர்மூத்த
மகள்பார தாவுற் றன்பால்
உடையவன்றன் திருநீறு பூசியறுந்
துளகாதைப் பொருத்திக் கட்ட
நடலையணு வேனுமின்றி நன்றுசெவி
பொருந்திக்குண மான தன்றே. 119

ராசிபுரத் துளதமக்கை யார்வீட்டிற்
கிவர்சென்றி ருந்த காலை
பாசமுடன் அவர்செய்த பாயசத்தில்
சர்க்கரைக்குப் பதிலா யுப்பை
ஆசறஇட் டமைத்துவிட அதைமுதலில்
இவர்அருந்தி வெளியூர் சென்றார்
போசனத்தின் போதுபிறர் அருந்தியுப்பு
உப்பென்றே புகன்றார் எல்லாம். 120

மாலையிவர் வந்தவுடன் மறுமுறையப்
பாயசத்தை யிவர்க்கீந் தார்கள்
சாலநன்று யுளதென்னக் கூறிஇவர்
தகவொடதை யருந்தி னார்; நற்
சீலமிகும் இவருடைய நாவடக்கத்
தின்சிறப்பைச் செப்பற் காமோ?
ஞாலமிசை பிறர்க்குற்ற பலபிணியை
நன்றருளால் இவர்தீர்த் துள்ளார். 121

ஒருமுறையில் இவர்தமக்கை மகனை
மோகனராஜ் என்ப வர்க்குப்
பெருமளவில் காலில்ஒரு சிலந்திவந்து
ரணமாகி நீர்வ டிக்க
மருவுபல ரும்பயந்து மருத்துவ
ரிடம்செல்ல வேண்டு மென்ன
குருநெறியில் உறுதியுடன் நடப்பின்குண
மாமென்றிவர் கூறி னரால். 122

ஆண்டவர்தண் ணருளைமிக உறுதியுடன்
நம்பித்தணி ராட்டு வித்து
மாண்திருநீற் றினைவைத்துக் கட்டியருள்
திருநீறு தீர்த்தம் நல்கி
சேண்திகழும் திருவமுதாய் அருந்திடச்செய்
தப்புண்குண மாகச் செய்தார்
ஆண்டவரின் பேரருளை இவர்பக்தித்
திறத்தினைக்கண் டுவந்தார் அன்பர். 123

இவர்தம்மக ளாம்பார தாதேவி
இல்லத்துள கணப திக்குக்
கவசம்குடை திருவாசி யாதிவெள்ளி
யினிற்கவினொ டமைத்துக் கொண்டு
நுவலரிய பக்தியுடன் உந்துவண்டி
யினிற்சேலம் நோக்கி வந்தார்
அவண்வண்டி சேர்ந்தவுடன் இவர்பையை
மறந்துமகள் வீட டைந்தார். 124

வெகுநேரம் பேசிக்கொண் டிருந்தபினர்
மருமகனுர் வீட்டுள் ளெய்த
நிகழ்கவச மாதியவர்க் குக்காட்ட
இவர்பையைத் தேட லானுர்
அகத்தில்நினே வின்றியதை உந்துவண்டி
யினில்விடுத்தோ மென்று ணர்ந்தார்
பகரருவே கத்தொடுந்து வண்டியிருப்
பிடம்நாடிச் சென்று பார்த்தார். 125

வண்டியின்னும் நிலயமடைந் திடவில்லே
யென்ருர்கள்; வள்ள லார்தம்
முண்டகத்தா ளினே நினேந்த வணம்வண்டி
வரும்வரையிற் காத்தி ருந்து
வண்டிவந்து நின்றதுமுட் சென்றுட்கார்ந்
திருந்தஇடம் நாடிப் பார்க்கப்
பண்டமெலாம் வைத்திருந்த பையசையா
தவ்விடத்தில் இருக்கக் கண்டார். 126

பெருவியப்பும் பேருவப்பு முற்றவராய்ப்
பெருமான்றன் கருணே யுன்னி
உருகியுரு கிப்போற்றி உடம்பெல்லாம்
மயிர்ப்புளகம் எய்தப் போற்றி
குருமணியே நாளேயிதைச் சாத்துவதற்
கென்செய்வோ மென்றென் னுள்ளே
மருவுவருத் தம்தவிர அருளினேயென்
றினிதுபையைக் கொண்டு வந்தார். 127

குறித்தபடி மறுநாட்கா லேயிற்கணப
திக்குமுழுக் காட்டு வித்துப்
பொறித்தவெள்ளிக் கவசத்தைப் பூட்டுவித்தர்ச்
சனேபுரிந்து போற்றி ஞர்கள்
உறுத்துநினேப் பவரிடரைத் தீர்த்துநல
மூட்டுகுரு கருணே யுன்னிப்
பொறுப்பனேத்து மவருடைய தெனவுணர்ந்து
போற்றியருட் கடலுள் ளாழ்ந்தார். 128

சாந்தகுணம் உயிர்களிடத் தன்பிரக்கம்
நண்பர்களுக் குதவும் தன்மை
நேர்ந்தொருவாக் களித்துவிட்டால் அதனைச்செயல்
முறையில்நிறை வேற்று முன்னர்
ஆம்தடைகள் எவைவரினும் தளராதச்
செயலை நிறை வேற்றும் பான்மை
சேர்ந்தஇவர் கோவைவிட்டேத் தாப்பூரிற்
குடியேறித் திகழ லானார். 129

சிறுகூழாங் கல்லொன்றை வாயிலிட்டுப்
படுத்திருந்த போதி லந்தச்
சிறுகல்மிடற் றுள்சிக்கி உணவருந்த
மூச்சுவிடற் கியலா வண்ணம்
உறுகண்மிகத் தந்தநிலை யிலும்இறைவன்
திருவடியே கதியென் றுன்னி
உறுதியுட னிருந்தனர்மற் றுறவினர்கள்
உரையெதுவும் கொள்ளா ரானார் 130

வருவதுவந் தேதீரும்; நடப்பவைகள்
நிச்சயமாய் நடந்தே தீரும்;
இருநிலத்தில் அனுபவிக்க வேண்டியதை
இப்பிறவி யினிலி றைவன்
திருவுளத்தின் படிவந்த தென்னவுணர்ந்
தனுபவித்துத் தீர்த்து விட்டால்
பெருவினைகள் மாய்ந்தொழியும்; பெருமான்தண்
ணருள்துணையும் பிறங்கு மென்பார். 131

*நன்றுவினை கினும்தீது வினைகினும்யா
னறிவதொன் று மில்லை, யாவும்
என்றுமுனக் கேபரமென் றிடுமாறும்,
†இன்றொரிடை யூறெற் குண்டோ

---

* "நன்றே வினைகினும் தீதேவினைகினும் நானறிவ
தொன்றேயு மில்லை உனக்கே பரம்" —அபிராமி அந்தாதி.

† "இன்றோர் இடையூ(று) எனக்குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே" —திருவாசகம்.

நன்றுசெய்வாய் பிழைசெய்வாய் நாயகம்நா
 னேவென்ன நவின்ற வாறும்,
நன்றுதவைக் குருபரர்பால் பரிபூர்ண
 மாய்ஒப்புக் கொடுத்தி ருந்தார். 132

வேறு

இரண்டாம்நாள் தும்மல்வர அச்சிறிய கூழாங்கல்
அரந்தைதரால் இன்றிமிடற் றினிலிருந்து வெளிவரவும்
பரம்பொருளின் திருவருளை அறிந்துவியந் தார்பலரும்
உரங்கெழுநல் லுறுதியுடன் இருந்தஇவ ரைப்புகழ்ந்தார், 133

வேறு

அருட்சட்ட அடியவரைக் கண்டவுடன்
 இவர்மகிழ்வார் அன்பி னோடும்
வரவேற்றுப் பரிபூர்ண மானஉண்மை
 யார்வமுடன் உபச ரிப்பார்
விருந்தோம்பும் பண்பாட்டில் ஒருசிறிதும்
 தளராமல் விளங்கி வந்தார்
திருக்குடும்பம் அவர்க்கேற்ற வாறமைந்த(து)
 இறைவன்திரு வருளே யாகும். 134

நமதுடம்பு குருநாத ருடைய (து), அதன்
 மேற்பாசம் நமக்கேன் என்பார்
அமலர்அதை எதுவேண்டு மானாலும்
 செய்துக்கொள் ளட்டும் என்பார்
விமலரிடம் ஒப்புவித்த பினர்அதன்மேல்
 நாம்கவலைப் படல்ஏன் என்பார்
அமைதியுடன் அவரருளை நினைந்துருக
 லேநம்கட னாகும் என்பார். 135

பணிசெய்யத் தான்வந்தேன் பணிவாங்க
 வரவில்லை யென்றோ ரன்பர்
பணிவோடும் இவரிடத்திற் சொன்னபொழு
 திவர்அவ்வணம் பகர்தல் வேண்டாம்
பணிஇறைவர்க் காற்றிடவே நாமெல்லாம்
 பாரின்மிசை தோன்றி யுள்ளோம்
எணில்நமக்குள் வேற்றுமைஏ (து) இதுவுண்மை
 என்றவர்பால் கூறி னூரால். 136

இதன்மூலம் இவர்தொண்டு மனப்பாங்கும்
தனைப்போலப் பிறரை யெண்ணும்
இதமான நற்குணமும் தெரியவரு
கிறதன்றே? இவர்சட் டத்தின்
விதிமுறையில் அணுவேனும் தவறுமல்
உடல்தளர்ந்த போதும் வேத
முதல்வோனின் திருவருளால் மூதுலகிற்
சிறந்தஅடி யாராய் வாழ்ந்தார். 137

குருபரனர் அருட்பாடல் களைப்பாரா
யணம்செய்யச் சொல்லி அன்போ[டு]
உருக்கமுடன் கேட்டருளில் தோய்ந்திருப்பார்
படுக்கையினிற் படுத்துக் கொண்டே
இருக்கையிலும் துதிப்பாடல் பலநன்கு
தெளிவாகப் பாடி வந்தார்
குருநாதா என்றவணம் அவருருவை
எப்போதும் நோக்கி ஞரால். 138

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்தெழுபான்
நான்கில்ஜன வரிஇ ரண்டில்
மேயமதி களிற்சிறந்த மார்கழியில்
விமலர்அவ தார மான
தூயநல் விரேவதிவிண் மீனிலிவர்
குருபரர்தாண் மலரிற் சேர்ந்தார்
ஏயஇவர் அன்பின்திறம் சொற்களைக்கொண்
டெளியேனல் எழுதற் காமோ? 139

இயற்கையெழில் மிகும்ஏத்தாப் பூர்வசிட்ட
நதிக்கரையில் இனியோர் போற்ற
வியத்தகுநல் வசிட்டமுனி வேள்விபுரி
தூயபுண்ய பூமி யின்கண்
நயத்தகுசற் குருநாதர் சட்டநெறி
நனிபேணு மிவரை நன்று
செயத்தகுந்த முறையிலடக் கம்செய்தனர்
தேவர்குழாம் செறிந்து வாழ்த்த. 140

குருபரர்தம் திருவடியில் இவர்அடைந்து
சமாதிசெய்யப் பெற்ற அந்நாள்
இரவில்இரண் டாம்மனைவி யின்தமக்கை
கணவர்சுப்ர மண்ய வேளின்
விரவுகன விவில்தோன்றி வெயிலினில்வைத்
துள்ளீர் தண் ணிழல்செய் விப்பீர்
பரவிடுவீர் பிணிநீங்கும் நுங்கள்நலம்
ஆற்றலிவை பெருகும் என்றார். 141

மருந்தெதுவும் அருந்தாதிர் தினந்தோறும்
வந்துவழி படுவீர் என்றார்;
இருந்தபிணி நீங்கிமறு நாளேநற்
குணமடைய உடம்பில் தெம்பு
பொருந்தியது சுப்ரமண்ய வேள்அந்நாள்
முதல்தினமும் தண்ணீ ராடி
பெரும்பரிவி னோடுசமா திக்கேகிப்
பரவிநலம் பெற்றுய்ந் தாரால். 142

மறுநாளே நிழற்பந்தர் அந்தச்சமா
தியின்மேல்நன் றமைத்திட் டார்கள்
மறுவறுவெல் லம்பயற்றம் பருப்பரிசி
கலந்தமைத்த பாய சத்தை
உறுமெயன்பி னோடுமிரே வதிதொறுமா
ராதனைசெய் கின்றார்; வீட்டில்
மறுகமைவா யிலில்அண்ணல் அருட்கொடிமாண்
போடுமினி தேற்று கின்றார். 143

குருபூஜை நன்னாளில் ஏழைகளுக்
குணவளிக்கும் படிப ணித்தார்
அருளாளர் இவர்வாக்கின் படிசெய்யப்
பெறுகின்ற தவறில் வின்கண்;
அருளால்அற் புதஆற்றல் பெற்றஇம்மா
முனிவர்வர லாறன் பர்க்குப்
பெருகூக்கம் அளிக்கும்எனில் ஐயமுண்டோ?
வாழ்கஅவர் பெருஞ்சீர் நன்றே. 144

## பிள்ளையார் குப்பம் தாய்

பூசனையுகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டியாள் புனிதத்
தேசிகனுர்தேர்ந் தெடுத்தநல் லடியார்
களில்நனி சிறந்தொளிர் தூய
தேசுசால்பிள்ளை யார்குப்பம் தாயாம்
திருவருட் சக்தியன் னையின்சீர்
ஆசறக்கண்டோம் அருந்தவச் சிறப்பும்
அருட்பெரு நிலைகளும் காண்போம். 145

வேறு

அருளண்ணல் அவதரித்த அருட்டலமாய்
அருளடக்க மான தூய
திருநகராய் விளங்குமி ருடியர்பட்டிக்
கடியருடன் சென்று மேலாம்
குருபூஜை கண்டு,மறு நாளும்திரு
மஞ்சனம்நன் றேநி கழ்த்தி
அருளடியர் குழுவோடும் சேவித்தா
னந்தம்மிகப் பெற்றுர் அன்னை. 146

அருளண்ணல் அருந்தவம்செய் தருட்பரிபூர்
ணம்பெற்ற திருக்குற் றுலத்
திருத்தலம்சென் றருளருவி நீராடித்
தேசிகனுர் தவம்பு ரிந்த
திருக்குகையைத் தெரிசித்துக் குருபரனுர்
அருள்பெற்றுத் திரும்பி னுர்கள்
திருவால வாயிற்பரி பூர்ணவிநா
யகர்கோயில் தெரிசித் தார்கள். 147

வரும்வழியில் அருளன்னை அடியவர்இல்
லங்களிலே அருளால் தங்கிப்
பெரிதும்அருள் பாலித்துப் பெம்மானின்
அருள்நெறியைப் பரப்பி னுர்கள்
குருபரனுர் திருவருளால் திருப்பயணத்
தினையினிது முடித்திட் டார்கள்
அருள்நலமும் பொருள்நலமும் அடியவர்க்கு
மிகவழங்கி யருள்கின் றுர்கள். 148

அக்கரமாம் அண்ணல்திருக் காப்பிட்டுக்
கொண்டுசில்லாண் டகன்ற தற்பின்
பக்குவமிக் குற்றஅரு ளன்னையினை
மேல்வழிக்குப் பரிவோ டீர்த்துத்
திக்கனைத்தும் தொழத்தாம்முன் குற்றலத்
தியற்றியஅச் செழுந்த வத்தை
மிக்கஅரு ளொடும்தந்து மேல்நிலைகள்
அருளத்திரு வுள்ளம் கொண்டார். 149

மிகஉயர்ந்த தவநிலையை அருளுமுனர்
மேன்மைமிகும் தாயு டம்பைத்
தகவுபெறச் சிலமாதம் தூய்மைசெய
அப்போதும் தாய்அ வர்கள்
அகவுறுதி யொடும்தூய ஆண்டவர்தண்
ணருள்நெறியைப் போற்றி வந்தார்
மிகவருத்த முற்றனர்சுற் றத்தவரும்
பிறருமிம்மே தினியின் கண்ணே. 150

ஒருமலைமேல் குகையொன்றில் ஒளிநெருப்பின்
நடுவினில்தாய் அமர்ந்த வண்ணம்
அரியதவம் செய்வதுபோன் றருள்நிகழ்ச்சி
யொன்றொருநாள்கண்ட அன்னை
பொருவிலிந்தத் தவம்செயநம் மால்ஆமோ
புவியின்மிசை ஆணுய்ப் போந்த
அருளண்ணல் அருந்தவம்செய் தார்; பெண்நமக்
கஃதாமோ எனநி னைந்தார். 151

இல்லறத்தில் பலர்க்கடங்கி நடக்கவேண்
டியநிலையில் இவண்நா முள்ளோம்
நல்லவொரு மகன்நமக்குள் ளான்தவம்செய்
வதற்குநம்மால் எவ்வா றுகும்
இல்லத்தலை வர்மறைந்து சில்லாண்டே
கழிந்ததெனக் கலக்க முற்றார்
சொல்லரிய அந்நிகழ்ச்சி தொடர்ந்துநடந்
திடஅன்னை அச்சம் கொண்டார். 152

இனிஉயிரை விடல்வேண்டு மென்றெண்ணிப்
பின்புறத்துக் கிணற்றின் மேலே
தனியாக ஏறியமர்ந் தனர்; இறைவன்
தண்ணருளால் என்ன மொன்று
நனியன்னை யிதயமிசை தோன்றியதிவ்
வகையினில்நாம் உயிரை விட்டால்
மனிதகுலம் நகையாடும் மான்குடும்பப்
பெருமைகுன்று மெனநி னைத்தார். 153

குருபரர்காட் டியகுறிப்பின் படிநடந்து
குவலயத்தி லடங்க நேர்ந்தால்
மருவுமவ்வா றெய்துதல்மேல் என்றஎண்ணம்
தோன்றியதால் மனையுட் புக்கார்
நெருக்கமிகும் அடியாராம் கடுவனூர்
அம்மையிடம் நிகழ்ச்சி கூறி
உருக்கமுடன் குருபரர்தாள் உன்னியிறைஞ்
சிப்போற்றி இருந்திட் டார்கள். 154

ஒருநாள்நம் அருளன்னை பூசையறை
யினிலிருந்து வெளியே கும்போ[து]
ஒருதூய அருளாணை 'வெளியேகேல்''
என்றினிதே உரைக்கக் கேட்ட
அருளன்னை யொன்றும்புரி யாதவராய்த்
திகைத்துவெளி யேகா துள்ளே
குருநாதர் பதமுன்னித் தெளிவருள
வேண்டுமெனக் கோரி நின்றார். 155

வேறு

அருவமாகியும் உருவமாகியும் அண்டகோடி அனைத்தும்வாழநல்
அருள்புரிந்தொளிர் பரமனையெணில் உயிர்களுய்ந்திடு மாறுசற்
குருவெனப்புவி போந்து சட்டம் கொடுத்தருள்புரிந் தன்பருக்குறு
குறையனைத்தும் தவிர்த்தருள்நிறை வெய்தச்செய்தருள் தேசிகர்
பருவபக்குவம் மிக்கடைந்துள பக்தரத்தின மானசீரனை
பகரரும்பெரு நிலையடைந்துய அருள்செயுந்திரு வுளமொடே
''நிருவிகற்ப சமாதியிற்புகு நிஷ்டைதந்தரு ளற்புதா'' என
நிலவுசீரருட் பாடலிற்றிகழ் சொற்றொடர்நினை வூட்டினர். 156

வேறு

குருபரனுர் திருவருளால் அதையுணர்ந்த
கோதிலரு ளன்னை யாரும்
உருகுமுளத் தோடுகுரு நாதர்தனிப்
பெருங்கருணை யுன்னிப் போற்றிப்
பருவபக்கு வம்மிகவும் வழங்கிஉயர்
பரஞான நிலையை நல்கித்
திருவடியிற் சேர்த்தருளல் நும்பொறுப்பாம்
என்றுதுதி செய்த மைந்தார். 157

நிர்விகற்பம்

முதல்மூன்று மாதநிரு விகற்பம்தொடங்
கியதுணவு முறையி னேடு
மிதமாக ஏற்றலுமில் லாதுவிட்டு
நீரும்பரு காத மைந்தார்
இதமாகத் தினந்தோறும் வேளைதவ
ருதுதண்ணீ ரினிதே யாட்டிப்
பதமாகத் துடைத்துப்பரி வோடமர்த்திப்
போற்றிவந்தார் கடுவ னூர்தாய். 158

தன்னிலையற் றெல்லாமும் இறைசெயலாய்
ஆனந்த பரத்தோ டொன்ற
நன்னிலையில் மனத்தையொரு முகப்படுத்தி
ஞானவொளி நாடி னுர்கள்
அந்நிலையில் அங்கொருநாள் அருளன்னை
அமர்ந்திருந்த இடத்தின் வாயில்
முன்னிலையில் ஒருகரிய உருதோன்றி
நிற்கஅன்னை அச்சத் தோடும் 159

தேசிகனுர் திருவடியை மனமுருகித்
துதிசெய்து முறையிட் டார்கள்
ஆசைப்பிசா சைத்துரத்தி ஐயனடி
நிதம்நெஞ்சில் நிறுத்து கென்ற
தேசுமிகும் அருள்வாக்கைத் தேசிகனுர்
நினைவூட்டி அச்சம் தீர்த்தார்
மாசுடைய கரியஉரு வம்கடிதில்
மறைந்ததன்னை மனம்தெ ளிந்தார். 160

ஆண்டவர்தம் அருட்பாடல் களில்உள்ள
சொற்றொடர்கள் கூறிக் கூறித்
தூண்டரிய தவக்கனலை நனிதூண்டித்
தடைபலவும் துரத்தி நீக்கி
யாண்டுமுயர் ஞானவொளி கூடிடச்செய்
தின்பவமு தினைய ருத்திப்
பூண்டதவ நிலையனைத்தும் உணர்த்தியன்னை
யினையினிது போற்ற லானார். 161

வேறு

முதற்படி உலகப் பற்றினை யறுத்தல்
மொழியிரண் டாம்படி தன்னில்
இதமுறத் தேவர் தரிசனம் பெறுதல்
குண்டலி ஏறுதல் மூன்றும்
மதிநலம் அருளும் குருவினை உள்ளே
காணல்நான் காம்படி யாகும்
மதிநில அமுதை மாண்புற அருந்தல்
மருவுமைந் தாம்படி யாமே. 162

ஆயிர இதழ்த் தாமரையினில் இறையோ
டருளுரு வுடனமர்ந் தொன்றல்
தூயநல் ஆறும் படி,துரி யத்தில்
உலகினைக் கடந்துநின் றொளிர்தல்
மேயபே ரின்ப வனுபவம் பெறுதல்
விளங்குமே ழாம்படி யாகும்
ஏயஇந் நிலைகள் அனைத்தையும் அருளத்
தெருட்டினர் குருபரர் அன்னையை. 163

வேறு

சிறிதுசிறி தாய்த்தொடங்கி இறுதியில்ஓ
ராண்டாகித் திகழ்ந்த(து), அந்த
மறுவில்பெரு மாளிகையின் பூஜையறை
யேகுகையாய் வயங்கிற் றங்கண்;
உறவினரும் ஊரவரும் ஏனையரும்
உளம்மிகவும் கலங்கி னார்கள்
பிறகென்ன நடந்திடுமோ எனப்பலரும்
பேதுற்று வருந்தி னார்கள். 164

திருச்சாத்த னூர்நம்பி முதலான
நெருங்கியசீ ரடியார் சில்லோர்
அருட்சால்பு மிக்ககுரு பரர்இருக்கப்
பயமேன்என் றுறுதி யோடும்
தெருட்சார்நல் லுளத்தில்மிக நம்பியிருந்
தனர்இந்தச் செய்தி கேட்டு
பெருக்காக அடியவர்கள் போந்தன்னை
யைப்பணிந்து பேறு பெற்ருர். 165

பலஅடியார்க் கருளண்ணல் நிட்டையினில்
நிகழ்ச்சிபல அருளாற் காட்டி
திலகமெனத் திகழன்னை செய்தவத்தின்
சிறப்புணர்த்திச் சென்று காண
நலமொடனுப் பிடஅவர்கள் சென்றுகண்டார்
அன்னைசடை முடியி ஞேடும்
எலும்பனைத்தும் தோன்றத்தவ வொளியெங்கும்
விசஅருட் காட்சி தந்தார். 166

உலகநினை வுகளெல்லாம் ஒழிந்தன, குண்
டலிசக்தி மேலே றிற்[று]அங்[கு]
உலைவில்பர மானந்த மயமான
பேரின்பம் நுகர்ந்தா ரன்னை
இலகுமவ்வை மணிமொழியார் வடலூரார்
இருடிநகர் அண்ணல் போன்ருேர்
பொலிவுறக்கண் டனுபவித்த நல்வாசி
யோகத்திற் சிறந்தொ ளிர்ந்தார். 167

இல்லறத்தில் வாழ்ந்தஅன்னை இத்தகைய
தவநிலையில் சிறந்தா ரென்ருல்
நல்லமுன்னைப் பிறவிகளில் நன்றவர்செய்
தவப்பயனும் இப்பி றப்பில்
பல்லறமும் பாங்குறப்பே ணியதிறமும்
பாரின்மிசை சொலவல் லார்ஆர்?
சொல்லரும்இவ் வருமையுண ராதபலர்
ஏதேதோ சொல்ல லுற்ருர். 168

இந்தஅம்மை ஏனிப்படி உயிரோடு
போராடு கின்முரென்பார்
இந்தகுரு பரர்அம்மை யினையிங்ஙன்
வதைத்திடுவ தேனோ என்பார்
இந்த அம்மை இனியுலகில் எவ்வாறு
பிழைத்தெழப்போ கின்முரென்பார்
இந்தவண்ணம் ஏதேதோ வாய்க்குவந்த
படிபலரும் இயம்ப லானார். 169

மெதுவாக அம்மைதிரு நயனங்கள்
திறந்தன; மேதினியை அன்று
புதிதாகப் பிறந்தஒரு சேய்சுற்று
முற்றும்பார்ப் பதுபோல் பார்த்தார்;
முதிர்வெருட்சி யொடுமமர்ந்த இடத்தினைநோக்
கினர்;அல்லல் நல்கு மாயை
துதையுலகச் சூழலின்கண் வரமனமில்
லாதுவிழி மூடிக் கொண்டார். 170

விண்ணமுதத் தினைநுகர்ந்தோன் எட்டிக்கா
யைத்தின்ன விரும்பு வானோ?
தண்ணருளார் தாயைஉல கத்திற்பல
ஆண்டுகள் உலாவ விட்டிங்(கு)
எண்ணில்அடி யார்கள்அவர் மூலம்தெருள்
பெறச்செய்ய வேண்டும் என்ன
அண்ணல்திரு வுளம்கொண்டார்; சின்னளில்
அன்னைபுவி நினைவு பெற்முர். 171

மெல்லஎழுந் தனர்;தட்டித் தடுமாறித்
தள்ளாடி நடந்திட் டார்கள்;
மெல்லமெல்ல மெல்லியதாம் குரலில்ஒரு
சிலவார்த்தை கூறி னூர்கள்;
நல்லதிந்தத் தருணமெனப் பலர்அருகு
சென்றுரைகள் கூறி னூர்கள்;
பல்வகை வினுக்களைக்கேட் டருளன்னை
யார்செவியைத் துளைத்திட் டார்கள். 172

இறைவனொடும் உறவாடி யனுபவித்த
பேரின்ப நிலையை யெல்லாம்
முறையுடன்ஒவ் வொன்றாக எண்ணுவதும்
இயம்புவதும் முடியா தாகும்
மறைவறஒங் கவனியல்பை மற்றவர்க்குக்
காட்டுவதும் இயலா தாகும்
நிறைவிருப்பி னொடுகேட்கும் அன்பருக்
கியன்றவரை கூறி னார்கள். 173

ஒருசில வினாக்களுக்குச் சிரித்துமழுப்
பிட்டார்கள், சிலவற் றிற்கு
மருவுமொழி யேதொன்றும் கூறாமல்
மவுனம்சா தித்திட் டார்கள்
துரியஅதீ தத்தினில்தாம் பெற்றஉயர்
தூயஅனு பவங்க ளெல்லாம்
பெரிதுமுன்னி யொவ்வொர்சம யத்திலருட்
பெருநிலையிற் பிறங்கு வார்கள். 174

பூ ர ண த வ ம்

இடையில்சில மாதங்கள் கழிந்தனமீண்
டும்மீண்டும் இதய மங்கே
உடையவன்றன் பதமலரில் அரும்பருட்டேன்
அருந்தியின்ப முறநா டிற்றால்
அடலருள்சற் குருபரனார் அருட்குறிப்பும்
தொடர்ந்த(து), அரு ளன்னை மீண்டும்
திடமொடிரண் டரையாண்டு நிருவிகற்பம்
மேற்கொண்டார் தேவர் போற்ற. 175

அவ்வமயம் அருகிலிருந் தயராத்தொண்
டாற்றியருட் பேறு பெற்ற
செவ்வியசற் குணக்கடுவ னூர்தாய்
இராமன்வனம் சென்ற போது
தெவ்வரைவென் றிடுமிலக்கு மணன்சேவை
செய்ததுபோல் அல்லும் எல்லும்
ஒவ்வொரு விநாடியும்சற் றுறங்காமல்
உயர்சேவை புரிந்து வாழ்ந்தார். 176

காளத்தி மலைமீது குடுமித்தே
வருக்களவில் அன்பி ஞேடும்
வேளைக்கு வேளை உயர் வார்பூசை
மிகுவிருப்பி ஞேடும் செய்து
வாளிச்செங் கோதண்டம் தாங்கியுண
வோடுறக்க மின்றிக் காத்த
காளத்தி கண்ணப்பர் போற்கடுவ
னூர்தாய்நற் சேவை செய்தார். 177

அன்னையருகினிலமர்ந்தும் அதிகாலை
தண்ணீரி லாட்டு வித்தும்
பின்னையுள பெரும்பணிகள் யாவும்மிகு
பிரியமுட னேபு ரிந்தும்
அன்னையரு ளாசியும்நல் ஆரியனுர்
பேரருளும் பெற்றுய்ந் தார்கள்
மன்னுகடல் சூழ்புவியில் அவர்பெற்ற
பெரும்பேற்றுக் கிணையொன் றுண்டோ? 178

தொண்டர்பணி செய்பவர்கள் சூக்ஷ்மாதி
சூக்ஷ்மமெலாம் துகளொன் றின்றிக்
கண்டுதெளி வார்களென்றும் காணுத
காட்சியெலாம் காண்பா ரென்றும்
விண்டுகுரு பரர்சொன்ன வண்ணமன்னை
பெற்றஉயர் நிலையை யெல்லாம்
தொண்டுபுரி வாய்ப்புரிந்த கடுவனூர்
தாய்பெற்றுத் தூய்மை யுற்றுர். 179

அண்ணல்அருள் தாய்க்குத்தவ ரத்னமணி
முடிசூட்டி அட்ட திக்கும்
எண்ணில்புகழ் மிகச்சட்ட பரிபாஷை
களையுணர்த்தி யருள்செய் தார்கள்
புண்ணியத்தாய் அடைந்தஉயர் புனிதநிலை
யினைச்சிறந்த அடியார் கட்கு
நண்ணரிய நிட்டையினில் நிகழ்ச்சிகளில்
நன்றுணர்த்தி விளக்கி வைத்தார். 180

சிறந்தபல அடியவரும் தேசிகனுர்
காட்டும்அருட் குறிப்பை யோர்ந்து
செறிந்தஉய ரன்போடும் வந்துதரி
சித்துத்தே சிகனுர் காட்டும்
நிறைந்தநிலை யினிலன்னை திகழுதல்கண்
டினிதிறைஞ்சிப் போற்றி ஞர்கள்
அறந்திகழ்பா ரதநாட்டில் பண்டுதவம்
புரிந்தோரை நினைந்திட் டார்கள். 181

அக்காலத் திருடியரும் முனிவர்களும்
அரியதவத் தாற்பு விக்கு
மிக்கார்வத் தோடுசக்தி மிகஊட்டி
உயிரினத்தைப் போற்றி ஞர்கள்
இக்காலத் திவ்வன்னை இணையில்தவம்
புரிந்துமண்ணும் விண்ணு மோங்க
எக்கால மும்சுருங்கா அருளாற்றல்
அருளுகிருர் இவர்வாழ் கென்ருர். 182

பாரதநாட் டின்பண்டை நிலைகுன்ரு
தொளிரச்செய் கின்ற தந்த
சீரியமெய்ஞ் ஞானமுனி வோர்கள்தவத்
திறனென்னச் சிறந்தோர் சொல்வார்
சாருமொவ்வொர் ஞானியும்ஆன் மிகத்துறையில்
அருள்நிலையைக் கூட்டி யுள்ளார்
ஆரணங்கள் ஆகமங்கள் அருள்நூல்கள்
அனைத்தும்தவச் சிறப்பைக் கூறும். 183

நன்னெறியில் நடந்துபுலன் வென்றிந்தப்
பரதகண்ட முழுது மாண்ட
பன்னரும் சிறப்புடைய யோகியர்கள்
வெகுகோடி யென்ன அண்ணல்
பொன்னனைய அருள்வாக்கால் அருளியுளார்
புதுமைமிகு மிக்கா லத்தில்
உன்னரிய தவம்புரியும் யோகிகளை
நாம்கண்ணுற் கண்ட தில்லை. 184

வனங்களிலும் மலைகளிலும் குகைகளிலும்
தவம்புரிவார் எனக்கேட் டுள்ளோம்
மனந்தனைநன் றடக்கியில்ல றத்திலுளோர்
கடுந்தவம்செய் வதைக்கண் டில்லோம்
கனலனைய தவம்வீட்டிற் செய்வாரோ
கலிகாலத் தினிலே காணும்
புனிதமிகு புதுமையிது காணரிய
காட்சியெனப் புகன்றார் பல்லோர். 185

ஆர்வந்தார் எதுசொன்னார் என்றெதுவும்
தெரியாராய் அருளா ரன்னை
சீர்விளங்கு பெருந்தவத்தி லாழ்ந்தவராய்த்
தேவாமிர் தம்பு சித்து
சோர்வணுவும் காணாராய் தூய்மைவடி
வுடையவராய்த் தோன்றி னார்கள்
ஏர்கொள்திரு மேனியெலும் புக்கூடாய்த்
தோல்நரம்பொட் டித்தோன் றிற்றால். 186

சிறுகுழந்தை யைத்தூக்கி வைப்பதுபோல்
செவ்விதின் ஆசனத் தமர்த்தி
மறுவில்தணீ ராட்டுவித்து மீண்டுமினி
தமர்த்திடுவார் கடுவ னூர்தாய்;
முறையுறுசெங் கோல்கொடுத்து முடிசூட்டி
மூதுலகில் சட்ட மென்னும்
நெறிக்குவழி காட்டிஇனி நீதான்என்
றருளண்ணல் அருள்செய் திட்டார். 187

நாமெல்லாம் புரிந்ததவப் பயனாய்நம்
தாய்க்குணர்வு திரும்பத் தூய
ஓமென்னும் எழுத்தசைவ தைப்போலத்
திருமேனி யசைந்த தங்கண்
மாமன்னு மலர்போன்ற நயனங்கள்
திறந்திடவும் மருங்கி லுள்ள
நேமங்கொ ளடியவர்கள் ஆனந்த
நிறைவெய்திக் கூத்தா டிட்டார். 188

அன்னையொரு சிறிதுசிறி தாகவெளி
யேவந் துலாவி னார்கள்
அன்னைவயிற் றிற்பிறந்து வளர்ந்தவுடல்
போய்ப்புனித மேனி யெய்தி
மன்னுமுச்சி முதல்உள்ளங் கால்வரையில்
தோல்உரிந்து பிரிந்த தங்கண்
உன்னரிய வகையில்ஜடை முடிகழன்று
புதிதாக முளைத்த தம்மா. 189

ஒளிமிகுந்த தூயதவத் திருமேனி
உலகுக்கரு ளொளியை நல்க
அளிமிகுந்த சொற்கள் தத்து
வக்கருத்து பலநிறைந்த தாகமேவ
தெளிவுபெற நாடிவந்து காண்பவர்க்கும்
கேட்பவர்க்கும் தெளிவை நல்கிக்
களிமிகுந்து நல்லாசி பெற்றுச்செலு
மாறன்னை கருணை செய்வார். 190

குருபரர் உலாவரும்போ தடியவர்எவ்
வாறுதங்கள் குறைகள் கூறி
விரைவில்அவை களைப்போக்கி நிறைவுபெற்றுச்
சென்றனரோ, அவ்வா றேநம்
அருளன்னை யிடத்தும்பிணி நீக்கம்பெற
வருத்தம்தவிர்ந் தமைதி யெய்தத்
திரள்திரளாய் அடியவர்கள் வரத்தொடங்கி
னார்கள்அள வின்றி யம்மா. 191

அருளன்னை தரிசனம்கிட் டியபோதே
அப்பிள்ளை யார்குப் பத்தின்
மருவெல்லை யினைச்சார்ந்த அப்போதே
குறைகளெலாம் தவிர்ந்து போகும்;
ஒருகடிதம் எழுதியனுப் பிட்டாலும்
ஒளிக்கதிர்காண் பனியைப் போல
பெருகுபிணி வகைபலவும் குறைபலவும்
நீங்கியருட் பேறுண் டாகும். 192

அற்புதம்அற் புதம்என்ன அகம்களிப்பர்.
அண்டைஅய லார்பால் கூறி
பொற்புமிகு தாயினைத்தம் குலதெய்வ
மெனப்போற்றி மகிழ்பூப் பார்கள்
இப்புவியில் அடியவர்தம் ஐயம்தவிர்ந்
தருள்விளக்கம் எய்தற் குற்ற
நற்பதியாய் அப்பிள்ளை யார்குப்பத்
தலமினிது விளங்கும் நன்றே 193

அடியவர்க்குப் புகலிடமாய் அன்பருக்குக்
கலங்கரை விளக்க மாகி
படியின்மிசை சக்தியுரு விற்பொலியும்
பகலவனுப் பதினு றேன்னும்
நெடியகலை பூரணமா யமைந்தவொரு
முழுமதியாய் நிலவி யென்றும்
உடையவன்றன் சட்டநெறி யினைப்பரப்பும்
ஒருதாயாய்த் திகழ்ந்தார் அன்னை. 194

அருளண்ணல் கருணையினுல் ஆட்கொள்ளப்
பெற்றஅருட் சக்தி யன்னை
அருளண்ணல் சட்டநெறி யநுட்டித்துப்
பரிபூர்ண நிலைபெற் ருர்கள்
அருளொளியொ டவர்கள்குடும் பத்தினுக்கோர்
அணிகலமாய்ப் பிறங்கி ஞர்கள்
பெருநகர்க்கும் சுற்றுப்புற ஊர்க்கும்மணி
விளக்காக விளங்கி ஞர்கள். 195

தமிழ்நாடு முழுவதற்கும் ஒளிவளர்சிற்
ஜோதியென மிளிர்கின் ருர்கள்
அமிழ்தனைய சட்டநெறி பேணுத
வரைப்பேணச் செய்கின் ருர்கள்
சமுகமனைத் தினுக்கும்அருள் வழிகாட்டும்
வயங்கொளியாய்ப் பொலிகின் ருர்கள்
அமைதியுடன் அமர்ந்தெவர்க்கும் இடுக்கண்தவிர்த்
தின்பநிலை யருள்கின் ருர்கள். 196

மற்றவர்க்கெல் லாமும்அருள் வழிவிளக்கும்
விழுப்பொருளாய் வயங்கு மன்னை
உற்றகுடும் பத்தவர்க ளிடையச்சம்
ஐயம்அணு வேனு மின்றி
அற்றமில்நற் றெளிவுமிகு சிந்தையுடன்
அண்ணலருள் வெள்ளத் தின்கண்
முற்றும்நனி மூழ்கிப்பர மானந்த
அனுபவம்பெற் றொளிர்கின் றூர்கள். 197

உலகவர்கள் யார்வந்தெத் தனைவேக
மாகஎது கூறி னுலும்
மலைகலங்கி னுலும்நிலை கலங்கார்சான்
ரோர்என்ற வாக்குக் கேற்ப
சலனம்அணு வேனுமின்றி அவர்கள்சொலும்
வார்த்தையெலாம் கேட்டுத் தக்க
நிலையினில்ஆ றுதல்மொழிகள் நேர்மையுடன்
அருள்வார்கள் அமைதி யோடே. 198

அருட்கடலாய் விளங்குமன்னை திருத்தோற்றம்
ஆண்டவரை நேரில் காணும்
அருட்பேறு பெற்றறியார்க் கிடிணையில்
கருவூல மாகத் தோன்றும்
அருநோய்கள் கொண்டவர்கள் எங்குசென்றும்
நீக்கிக்கொள இயலா ராகி
உரியநல் வினைப்பயனுல் அருளன்னை
திறங்கேட்டங் குறுவார் அன்பால். 199

ஒருநாள்அங் குத்தங்கி அருட்சட்டம்
மேற்கொண்ட வுடனே நோய்கள்
இரிந்தோடும்; இம்மைநலம் மறுமைநலம்
யாவுமவர்க் கினிதே கூடும்
அருள்நலம்சால் தமிழகத்தின் பலபாகங்
களிலிருந்தும் அடியார் அன்பர்
திரள்திரளாய் வந்துகுறை தீர்ந்துதிரு
வருட்செல்வம் பெற்றுய் வாரால். 200

மலர்கள்மலர்ந் தால்தேனை யருந்தவண்டுக்
கூட்டத்தை யழைப்பா ருண்டோ
நிலையிலுயர் தாய்வழங்கும் அருள்ஞானத்
தேனருந்த அடியார் சூழ்ந்தார்
இலகும்அவ ரவருள்ள நிலைக்கேற்ற
வாறன்னை அருள்பா லிப்பார்
மலைவகன்றை யம்தவிர்ந்து மாணருள்பெற்
றடியர்குழாம் மகிழ்பூப் பாரால். 201

அருட்சட்டம் ஏற்றஅடி யார்களென
அருளன்னை யறிந்தால் போதும்
மருவுமெந்த ஊரினர்எவ் வினத்தரென்ற
பாகுபா டணுவு மின்றி
பெருவிருப்பி னோடுவர வேற்றுபச
ரிப்பரெந்நே ரத்துற் றாலும்
பரிவொடுப சரிக்கும்உயர் பண்பினைவே
றெங்கணும்கா ணரிதே யன்றோ? 202

பெரியர்பிணி நீங்கிடவும் சேய்கள்பிணி
நீங்கிடவும் வாழ்வின் கண்ணே
வருமிடர்கள் நீங்கிடவும் மணமாகா
தவர்க்குமண மாக வும்பல்
பெருங்குறைகள் தவிர்ந்திடவும் பேறுபல
எய்திடவும் நாடி வந்தோர்
அருளடியர் பால்தங்கள் அனுபவங்க
ளைப்பரிமா றிக்கொள் வார்கள். 203

அருளன்னை வந்தாச னத்திலினி
தமர்ந்ததுமே அனைவோ ரும்தம்
அருளனுப வங்களையும் குறைகளையும்
அன்னையிடம் கூறு வார்கள்
அருளன்னை அமைதியுடன் கேட்டுடையோன்
பொறுப்(பு)எல்லாம் நலமாம் என்பர்
அருள்திருநீற் றினைப்பூசி வரட்டுமென
அருள்திருவாக் கருளு வார்கள். 204

அன்புகனிந் திலகுமவர் திருநோக்கே
அனைத்துப்பிணி களையும் போக்கும்
பொன்புரையும் அவர்கள்திரு வருளுரையே
புனிதமிகக் கூட்டு விக்கும்
மன்பதைகட் கருள்பொழியும் அவரியலே
மயர்வறுநன் மதியை நல்கும்
இன்பநலம் அருளன்னை திறம்நேரிற்
கண்டவரே யறிவா ரம்மா. 205

பெற்றஅன்னை யிடத்தினிலும் கூறஇய
லாதபல குறையை யெல்லாம்
பெற்றஅன்னை யினும்சிறந்த அருளன்னை
யிடம்தயங்கா துரைப்பர் யாரும்
சற்றும்மனச் சலிப்பின்றிச் சினமின்றி
அவற்றையெலாம் அருளாற் கேட்டு
நற்றவத்தாய் பரிவோடும் அருள்சுரப்பர்
அடியர்நலம் அடைவார் நன்றே. 206

பிணியாளர் களுக்கன்னை தொடக்கத்தில்
திருநீறு தடவி வந்தார்
இணையிலருட் குருநாதர் தடைவிதித்த
பினர்அருகு ளாரைக் கொண்டே
அணிவித்தும் தடவுவித்தும் அகலாத
பிணியனைத்தும் அகற்ற லானூர்
குணமாதல் குறைதீர்தல் கேட்டடியர்
கூடியவண் திரண்டு சூழ்ந்தார். 207

ஆண்டவர்பூ சையிலும்அடி யார்பூசை
சிறந்ததென அகம்கொண் டன்னை
ஈண்டுமுய ரடியார்கள் எத்தனைபே
ராளுலும் அனைவ ருக்கும்
வேண்டியவண் ணம்சுவைசால் உணவினிதா
யத்தம்செய் தருத்து வார்கள்
ஆண்டுசென்று கண்டவரே அறிவார்இவ்
வுண்மையினை அவனி மீதே. 208

விரைவில்ஒரு பொருள்வாங்க வசதியிலா
அவ்வூரில் விருப்பத் தோடும்
பொருவில்உப சாரம்எவ்வா றேபுரிவ
தைக்காண்போர் புவனி மீதில்
மருவுவிருந் தோம்புதற்கென் றேயவத
ரித்தவரோ இத்தா யென்பார்
ஒருகுழுப்ர ஸாதமுடன் சென்றுல்மற்
றெருகூட்டம் வந்து சேரும் 209

எங்கணும்தீ ராப்பிணிகள் அங்கு வந்து
தீர்ந்துய்ந்தோர் எண்ணி லார்கள்
அங்குவந்து மனக்குறைகள் தீர்ந்தமைதி
யடைந்தோர் அநேக ராவர்
அங்குவந்தை யம்தீர்ந்து தெளிவடைந்தா
னந்தமுற்றோர் அநேக ராவர்
அங்குவந்து நிட்டையமர்ந் தருளனுப
வம்பழுத்தோர் அநேக ராமே. 210

கைகால்வ ராமலிருந் தோர்நன்கு
குணமடைந்து களிகூர்ந் தார்கள்
பைத்தியமுற் றோர்அந்தப் பைத்தியம்நீங்
கப்பெற்றுத் தெளிவுற் றார்கள்
மெய்த்துறையை நாடுமன்பர் வந்துண்மை
நெறியுணர்ந்து மேன்மை பெற்றார்
செய்தவத்திற் சிறக்கவிழைந் தவர்வந்து
தேர்ச்சிபெற்றுச் செம்மை பூண்டார். 211

புகழெங்கும் பரவியது; குடும்பத்தி
லுளபெண் தவம்செய் தாரா?
நிகழ்ச்சிகள்சொல் கின்றாரா? திருநீற்றால்
பிணிநீக்கம் செய்கின் றாரா?
அகத்திலுறு குறைகள்தவிர்க் கின்றாரா?
அதிசயமீ தென்றார் பல்லோர்;
மிகஅதிக மாயடியார் அன்பருற்று
மேலும்அருட் பயன்பெற் றார்கள். 212

வழிகாட்டும் வான்பொருள்

அருளண்ணல் அவதரித்த புரட்டாசி
ரேவதியில் அண்ண லாரின்
திருவாக்குக் கேற்றபடி திருச்சாத்த
னூரில்அருட் கொடியை யேற்றிப்
பெரிதாய் விழாநடத்தி அடியரன்பர்
பலரும்அருள் பெறச்செய் தார்கள்
அருளண்ணல் வரலாற்றை நன்றெழுதி
அச்சேற்ற விழைந்திட் டார்கள். 213

திருமழவ ராயநல்லூர் நரசிம்ம
வேள், அண்ணல் சென்று வந்த
அருளடியர் ஊர்களுக்குச் சென்றன்பர்
பாற்கேட்டுச் சேக ரித்த
அருட்செய்தி களைக்கொண்டும், அண்ணலருள்
திருவாயால் அருளப் பெற்ற
அருட்பாடல் களைச்சேர்த்தும் நூலொன்றை
அச்சேற்ற விரும்பி னார்கள். 214

திருச்சாத்த னூரில்அருள் திருக்கொடியை
ஏற்றிய இராம லிங்கப்
பெருமகனா ரைக்கொண்டு குருபெருமான்
வரலாற்றை எழுது விக்கத்
திருச்சாத்த னூர்நம்பி நரசிம்ம
வேளிருவ ரோடு மன்னை
பெரிதுன்னி யுரைத்தெழுதச் செய்தார்கள்.
நூலினிது பிறங்கு மாறே. 215

அருளால்அந் நூற்கினிது வழிகாட்டும்
வான்பொருளென் றொருபேர் சூட்டி
அருளார்நல் லடியவர்கட் கருள்விருந்தாய்
அருளால்நன் றமைத்துத் தந்த
அருளாசி ரியர்சீரும் அந்நூல்அச்
சேறஅரும் பாடு பட்ட
அருளார்நன் னரசிம்ம வேள்சீரும்
அருளன்னை சீரும் வாழ்க. 216

## குருபூஜைப் பெருவிழா

குருபரனுர் அருளடக்க மானதனுர்
மதியனுட நன்ருள் தன்னில்
அருளடியர் தத்தமதில் லந்தோறும்
குருபூஜை யினிதே யாற்றி
உரியஅள வினில்அன்ன தானமன்பொ
டும்புரிவர், உயர்சிறன்னே
பெரும்அளவில் குருபூஜை பிள்ளையார்
குப்பத்தில் நடத்த லானுர். 217

முன்தினமே தமிழ்நாட்டின் பலபாகங்
களிலிருந்தும் அடியார் கூட்டம்
நன்றுதிரண் டுறுவார்கள், இரவில்அடி
யார்உணவு முடிந்த பின்னர்
துன்றுபஜனைப்பாடல் பாடிடுவர்
சொற்பொழிவு நிகழ்த்து வார்கள்
குன்றலில்சி றெழிலோடு குருபரனுர்
படத்திற்கலங் காரம் செய்வர். 218

விடியலில்வ முறைநாழி கைக்குமுனர்
துயில்விழித் தெழுந்தி ருந்தே
அடியர்குழாம் நீராடும் காட்சிகண்கொள்
ளாக்காட்சி யாகத் தோன்றும்
அடியர்பலர் அருள்நிட்டை கூடியரு
ளானந்தம் அனுப விப்பர்
அடியர்பலர் பூஜையியற் றிடுவர்பலர்
அருட்பணிசெய் திடுவர் நன்றே. 219

அடியர்பலர் பிறஅடிய ரோடும்கலந்
துரையாடி மகிழு வார்கள்
அடியர்பலர் ஆண்டவரின் அருட்பாடல்
இசையோடும் பாடு வார்கள்
அடியர்பலர் வழிகாட்டும் வான்பொருளைப்
பாராய ணம்செய் வார்கள்
அடியர்பலர் குருநாதர் துதிப்பாடல்
களைப்பாரா யணம்செய் வார்கள். 220

முழங்கிடுமங் களவாத்தி யத்திஞெலி
பஜனைப்பாட் டொலியி னேடும்
நிழற்பந்தர் அமைத்துள்ள வாயில்நடு
நிறுவியுள ஊஞ்ச லின்கண்
எழிலுறச்சற் குருநாதர் திருவுருவப்
படத்தையெழுந் தருளச் செய்து
தொழுதடியர் பரவவிநா யகரையொரா
சனத்திலெழுந் தருளச் செய்வர். 221

அருட்டிருமஞ் சனம்முறையி னேடுநடக்கும்
அலங்காரம் நடக்கும் பின்னர்
அருட்டிருவா ராதனைநன் றேநடக்கும்
ஆயிரக் கணக்கில் சேர்ந்த
அருளடியர் இருடியர்பட் டிச்சாமிக்
கரோஹரவென் ருனந் திப்பர்
அருட்டிருநீ றேற்றணிவர் அருட்டீர்த்தம்
பருகியின்ப மடைந்துய் வார்கள், 222

அருட்டிருவா ராதனை நடந்தபினர்
அடியவர்கட் கமுத மூட்டும்
அருட்செயல்நன் றேநடக்கும்; அடியவருக்
கன்பருக்கா வனஅனைத்தும்
அருளன்னை மிகநன்று கூர்ந்துணர்ந்தவ்
வப்போது வழங்கச் செய்வர்
அருளன்னை போலடிய ரைப்புரப்போர்
அவனிமிசை யொருவர் உண்டோ? 223

பற்பலஇ னத்தவரும் பற்பல
பழக்கவழக் கங்கொண் டோரும்
சிற்பரன்றன் திருவருளால் கூடியிருந்
தவரவர்தம் கருத்தை யெல்லாம்
பொற்புடனும் பரிமாறிக் கொளும்காட்சி
யருட்பொலிவி னேடும் தோன்றும்
அற்புதம்அற் புதம்சட்ட அனுபவம்என்
பார்;அன்னை அருட்சீர் சொல்வார். 224

அகத்தளர்வு தோன்றியவர்க் ககத்தளர்வு
நீங்கிவிடும்; ஐயம் கொண்டோர்
மிகத்தெளிவு பெற்றிடுவர்; தெளிவுபெற்றோர்
மேலும்மிக உறுதி பூண்பார்;
அகத்திலுடை யவன்கருணைப் பாங்கெண்ணி
யன்போடும் உருகு வார்கள்;
இகத்தினுக்கும் பரத்தினுக்கும் துணைசெய்இணை
யடிமலரைப் போற்று வார்கள். 225

குருபரன்றன் அருட்பாடல் கலையின்னிசை
யுடனிசைத்துப் பாடிச் சில்லோர்
அருளடியர் அன்பர்களை அருட்கடலில்
அமிழ்த்தியின்ப முறச்செய் வார்கள்
அருள்நலங்கள் பலவும்அடி யார்களுக்குக்
கூட்டுவிக்க அருளா லுன்னி
அருள்திரு விழா நடத்தும் அன்னையருட்
கீடவனி மீதொான் றுண்டோ? 226

அருட்பூசைக் குரியபொருள் அனைத்தும்அமைந்
துள்ளனவோ எனப்பார்ப் பார்கள்
அருளுணவு சமைக்குமிடத் தினிற்சென்று
கண்டுபணித் தருள்செய் வார்கள்
அருளடியர் யாவர்வரு கின்றனரென்
றோர்ந்தவர்க்கா வனசெய் வார்கள்
அருள்தெளிவு வழங்கன்னை யெங்குமிருப்
பார்களெனில் ஐய முண்டோ? 227

அருளடியர் நவில்குறைக ளைக்கேட்டா
றுதல்கூறி யருள்செய் வார்கள்
அருட்பணிகள் அடுத்துநடந் திடவுளதை
உரியவர்பால் கூறு வார்கள்
அருள்நிலையில் உயர்ந்தவர்க ளால் அனைத்தும்
செயலாகும் என்ப தற்கிவ்
அருளனையே சான்றாகும் எனஉலகம்
அறிந்துய்ய விளங்கு வார்கள். 228

### தென்னாட்டுத் திருப்பயணம்

அருளன்னை யார்தங்கள் இல்லங்கட்
 கெழுந்தருள வேண்டும் என்ன
அருளடியர் பலர்வேண்டிக் கொள்ளஅவர்
 வேண்டுகோட் கிசைந்தார் அன்னை;
அருளடியர் பலர்கூடித் தென்னாட்டுத்
 திருப்பயணம் தொடங்கி னார்கள்
அருளன்னை யாரைத்தம் முடன்அழைத்துச்
 சென்றுதிரு வருள்பெற் றார்கள். 229

அருளன்னை அடியரொடும் தமதில்லம்
 நோக்கிவரல் போலும் தாம்சென்(று)
அருளன்னை யினைஅடியார் களைஎதிர்கொண்
 டினிதழைத்து வருதல் போலும்
அருள்நிகழ்ச்சி கண்டஅடி யவர்வியக்கும்
 வண்ணம்அருட் சக்தி யன்னை
அருளடிய ரொடும்வரக்கண் டன்போடும்
 வரவேற்பர் அடியர் நன்றே 230

அருளடியர் தமதுள்ளப் பேரன்பைக்
 கண்டஅருட் சக்தி யன்னை
அருளோடும் அவர்களில்லிற் கெழுந்தருளி
 யமர்ந்தின்னருள் பாலிப் பார்கள்
அருளடியர் களும்அங்குச் சுற்றுப்புறத்
 துள்ளவரும் அன்போ டெய்தி
அருளன்னை யடிமலர்கள் பணிந்தருள்பெற்
 றானந்த மடைந்துய் வார்கள். 231

### அருள் அற்புதங்கள்

தூயஅரு ளண்ணல்திரு முன்னர்நடை
 பெற்றஅரு ளற்பு தங்கள்
ஆயிரமா யிரமாகும்; அருளன்னை
 திருமுன்னும் அற்பு தங்கள்
ஆயிரக்க ணக்கில்நடை பெற்றுளஅ
 வற்றையெழு தத்தொ டங்கின்
ஏயவொரு தனிநூலாய் விரியும்;ஒரு
 சிலவற்றைக் காண்போம் இங்ஙன். 232

அருளன்னை தவச்சிறப்பை அருட்டிறனை
அவனியுளோர் உணர்வ தற்கும்
அருளடியர் குருபக்தி மனவுறுதி
அருட்செல்வம் பெருகு தற்கும்
இருளிரிய ஒளிவிளக்கும் எழில்மணித்தீ
பம்போல இலகு மன்னை
அருட்டிருமுன் நடந்தசில அற்புதங்கள்
நவின்றுய்வு பெறுவோ மன்றே 233

## குழந்தை விழுங்கிய ஆணி வெளிவந்தமை

ஒருகுழந்தை ஒருசிறிய ஆணியை
விழுங்கிவிட்ட[து] அதன்பெற் றோர்கள்
மருத்துவரி டம்சென்று காண்பித்து
முயற்சிசெய்தும் பயனொன் றில்லை
அருளன்னை யிடம்சென்றாற் பயன்கிடைக்கு
மென்றுசிலர் கூறக் கேட்டே
அருளன்னை யிடம்வந்து குழந்தையினைத்
திருவடியிற் கிடத்தி னார்கள். 234

நடந்ததெலாம் அன்னையிடம் நவின்று,காத்
தருள்புரிய வேண்டி னார்கள்;
திடந்தருநன் மனத்தினொடும் குருபரரை
உறுத்துநினைந் திக்கு ழந்தை
யிடம்கருணை புரிந்தாணி வெளிவரச்செய்
தருள்கவெனக் கோரி யன்னை
அடற்றிருநீ றருள்தீர்த்தம் அருள,மலத்
தொடும்ஆணி வெளியா யிற்றால். 235

அனைவோரும் அதிசயித்துத் தாயவர்கள்
அருட்டிறனைப் போற்றி னார்கள்
நினைவாலும் உரையாலும் அளப்பரிய
பலசெயல்கள் நிகழ்ந்த வங்கண்;
வினைகோடி தீர்ந்ததவண்; விழைந்தநலம்
எய்திற்றவண்; விண்ணோர் தூய
முனிவோர்கள் அருளன்னை வாழ்கவென
அருளாசி மொழிந்திட் டாரால். 236

### கீல்வாதம் நீங்கினமை

அருணைக்கடுத் துளபாலூர் வாழ்சுப்பு
ராமஅய்யர் மனைவி யாராம்
திருமிகுசீ தாலக்ஷ்மி அம்மைக்குக்
கீல்வா தம் மிகுதுன் பிய
இரெட்டிச்சா வடியிலுள்ள தமையனார்
நாராய ணய்யர் இல்லில்
மருத்துவம்பார்ப் பதற்கழைத்துச் சென்றிருந்தார்
மனைவியைஅவ் வையர்; ஓர்நாள். 237

பிள்ளையார் குப்பத்துள உறவினராம்
சுந்தரரா மையர் கண்டு
மெள்ளஅருட் சக்தியன்னை சந்நிதிக்
கழைததேகி விவரம் கூற
உள்ளரும்சீர் சாலன்னை அவ்வம்மை
யினைவிடுத்துச் செல்லச் சொன்னார்
வள்ளல்குரு பரர்அருளால் இருநாளில்
நோய்நீங்கிக் குணமா யிற்றால். 238

இனியகுணச் சுப்புரா மய்யர்தமூர்க்
கேகித்தினம் நான்கு சென்ற
பினர்திரும்பிக் கூந்தலையாற் றியவண்ணம்
வாசலில்நன் றினிது நிற்கும்
மனைவியைக்கண் டதும்வியந்து நனவிதுவோ
கனவோஎன் றெண்ணிச் சக்தி
அனைதவத்தை ஆண்டவரின் பெருங்கருணை
யினைவியந்தன் பால்துதித்தார். 239

எழுந்துநடக் கவுமியலாத் தம்மனைவி
பிணிநீங்கி இணையில் ஞானப்
பிழம்பென விளங்குமன்னை திருவருளால்
பூர்ணகுணம் பெற்று நன்றே
செழுங்கவினொ டிலகுதல்அற் புதமென்னச்
செப்பரிதாம் வியப்பி னோடும்
கொழுந்தனைய அருளன்னை திருவடியிற்
கும்பிட்டுப் போற்றி நின்றார். 240

அவ்வம்மை அருட்சட்டம் மேற்கொண்ட
தனைக்கண்ட அந்த ஞானர்
செவ்வையுறப் பலர்சட்டச் செந்நெறிகைக்
கொண்டினிது நிகழ லானார்
எவ்வமற இன்பமிக இணையில்குரு
திருப்பாத மலர்கள் போற்றி
எவ்வுலகும் வாழ்த்துமன்னை இனியஅரு
ளாசிகள்பெற் றிலங்கு கின்றார். 241

கிழிஞ்சிப் பட்டில்மணி யக்கார
ராம்சுந்தர ரெட்டி யாரின்
வாழ்வரசி ராஜம்மை யார்க்கிரண்டு
கால்களிலும் வலியுண் டாகி
வாழுமில்லத் துள்ளும்நடந் திடஇயலா
மற்போக நாற்கா லிக்கண்
பேழுற அமர்த்திப்பிறர் தூக்கிச்செலும்
நிலையில்வலி யோடி ருந்தார். 242

பொருள்மிகுந்தோ ராதலினல் புவியிலுள
பலவைத்யத் துறையி லெல்லாம்
பொருள்மிகவும் செலவழித்தும் பயன்காணு
தவராகிப் பொலிவு சான்ற
அருளன்னை யிடமழைத்துச் செல்ல, அன்னை
அருட்சட்டம் ஏற்கச் செய்தார்
அருள்நாடி யிருவேளை நீராடச்
செய்தருள்நீ றணிவித் தார்கள். 243

திருநீறு பூசிவரத் திருவிளக்கின்
முன்நில்லா இருளைப் போலும்
புரவலரைக் கண்டவுட னேநீங்கும்
புலவர்வறு மையினைப் போலும்
இருந்தஇடம் தெரியாமல் நோய்மறைந்த
தினியநலம் பெற்று ரம்மை
குருகருணை யையுமன்னை யாற்றலையும்
போற்றிஇரு வருமின் புற்றார். 244

நோயகன்று நலமடைந்த அவ்வம்மை
யைக்கண்டோர் வியப்புற் ருர்கள்
மேயபிணி எவ்வாறு விலகியதென்
னக்கேட்டிக் கலிகா லத்தில்
தூயகுரு நெறியிவ்வா றுளதோஎன்
றேவினவிச் சட்ட மேற்றே
ஏயஇம்மை மறுமைநலம் யாவுமினி
தெய்திப்பலர் வாழ்கின் ருரால். 245

பாம்புகடித்து இறந்தவர் உயிர் பிழைத்தமை

புதுவையருகேயுள்ள வில்லியனூ
ரினில்கணக்கப் பிள்ளை யான
மதிமிகுத்த திருஞான சம்பந்தத்
தின் தூய மனைவி யாய்வாழ்
இதமிகுசற் குணத்தேவ கியைப்பாம்பு
கடித்ததனுல் விடம்மிக் கேறி
அதிகநுரை வாய்தள்ள இனிபிழைக்கா
தென்னஅனை வரும்சொன் னுர்கள். 246

மந்திரதந் திரங்களெலாம் செய்தும்ஒரு
வகைப்பயனும் கிடைக்க வில்லை
எந்தவழி யும்தெரியா திதயமிக
வருந்தியிட ருற்ருர் பிள்ளை
நந்தலில்சீர் பிள்ளையார் குப்பத்தா
யிடம்கொண்டு சென்ருல் நன்றே
இந்தக்கண மிவர்விடம்தீர்ந் தெழுந்திடுவர்
என்றுசிலர் சொன்னுர் அங்கண். 247

இரெட்டியப்பட் டிச்சாமி திருநீற்ருல்
எவ்விடரும் நீங்கு மென்னும்
அருட்பெருஞ்செய் தியைக்கேட்டங் கண்செல்வோ
மென்னவொரு வண்டி யின்கண்
மிருத்துவின்வாய்ப் பட்டஅம்மை யைக்கிடத்திச்
சக்திநகர்க் கழைத்துச் சென்ருர்
அருட்பெருமாட் டியினெதிரில் கிடத்தியருள்
புரிகவென வேண்டிக் கொண்டார். 248

சிரமுதற்பா தம்வரையில் திருநீறு
பூசுவித்துச் சக்தி யன்னை
திருநயனத் தாற்கருணை செய்தார்கள்
சிலநொடிகள் கழிந்த தற்பின்
ஒருகாலின் பெருவிரல்சற் றசைந்ததுகண்
திறந்ததுதண் ணீர்கேட் டார்கள்
அருந்திடநீர் அளித்ததும்தாய் அழைத்தேகி
நீராடச் செய்வித் தார்கள். 249

பூர்ணகுணம் அடைந்தஅந்த அம்மையினைக்
கண்டோர்கள் வியந்திட் டார்கள்
பூர்ணன்அருட் சட்டநெறி யேற்றந்தக்
குடும்பத்தார் பொலிவி னோடும்
மாணருளும் பொருளுமெய்தி மாநிலத்தில்
வாழ்வாங்கு வாழ்கின் றார்கள்
பேணரிய அருட்சட்டச் சிறப்பும்தாய்
சிறப்புமிவண் பேசற் காமோ? 250

### பைத்தியம் தெளிந்தமை

சித்தசுவா தீனமின்றி நல்லாத்தூ
ரினில்வாழ்ந்த ரெட்டி யாரைப்
பத்தினியாம் பவுனம்பாள் அழைத்துச்சென்
றருளன்னை பதம்ப ணிந்து
மெத்தவருத் தப்பட்டுக் காத்தருளு
மாறினிது வேண்டிக் கொள்ளச்
சக்தியன்னை யவரைச்சில நாள்அங்கு
தங்கியிருக் கச்சொன் னார்கள். 251

நான்குதினம் கழிந்ததற்பின் ஒருநாள்நல்
விடியலில்நீ ராடும் போது
பாங்குறுகி ணற்றிலவர் எவ்வாறோ
விழுந்துவிட்டார்; அறியார் யாரும்;
ஓங்கருட்சீர் வழிபாடு நிகழ்ந்ததற்பின்
உயர்நீறு தீர்த்த மாதி
வாங்கஅவர் வாராத தறிந்தவரெங்
கேயென்று தேட லுற்றார். 252

எங்கெங்கு தேடியும்கா ணாராகி
வருத்தமுட னிருக்கும் காலை
அங்கமைதீர்த் தக்கிணற்றின் அருகுற்றோர்
அந்தரெட்டி யார்கி ணற்றுள்
நன்குமிதப் பதைக்கண்டு நவின்றிடவும்
ஆட்கள்கிணற் றுள்ளி றங்கி
அங்கைகளால் எடுத்துவெளி யிற்கிடத்தி
அருள்நீறு பூசி னார்கள். 253

திருநீற்றை உடம்புமுழு தும்பூசி
நன்றாகத் தேய்த்திட் டார்கள்
குருநாதர் திருவருளால் உயிர்பிழைத்தங்
கவரெழுந்து நன்றுட் கார்ந்தார்
பெருஞால நினைவவருக் கெய்தியது
பைத்தியம்நீங் கிப்போ யிற்று
தெருளார்நல் லடியரன்பர் வியந்துதிரு
வருளைநினைந் தேத்தி னரால். 254

## தோசை பரிமாறினமை

அருளன்னை புகழ்பரவப் பரவஅடி
யார்கூட்டம் அளவில் லாமல்
வரத்தொடங்கிற் றனைவருக்கும் தக்கபடி
யுணவாதி யளிப்பர் நம்தாய்
அரியஉயர் முறையில்உப சரிப்பதில்நம்
அன்னையைப்போல் அவனி மீதில்
ஒருவருமே இலர்என்ப துண்மையிலும்
உண்மையென உரைக்க லாமே. 255

ஆவின்உடல் முழுவதும்பால் உளதெனினும்
மடியின்வழி கறத்தல் போல
தேவன்அருள் எங்கும்திகழ்ந் தாலுமன்பு
நிறையடிய ரிடத்தும் தூய்மை
மேவுதவம் சான்றஅரு ளாளரிடத்
தும்சிறந்து வெளிப்பட் டிந்தப்
பூவுலகுக் கின்பநலம் பாலித்துப்
பேணுமெனப் புகல லாமே. 256

புடவியின்கண் பொருளின்பயன் ஈதலென்றும்,
அடியர்இறை அம்ச மென்றும்.
நடமாடும் கோயிலுக்கொன் றீயின் அது
படமாடும் கோயி லில்வாழ்
உடையவனுக் கர்ப்பணமாம் என்றும்நன்
றுணர்ந்தநம்தாய் எக்கா லத்தும்
அடியர்செவிக் கருளமுதும் பசிதீரச்
சுவையமுதும் அளிப்பர் அன்பால். 257

தினமும்அள வின்றிவரும் அடியவர்கள்
திருவருளும் பொருளும் மேன்மேல்
நனிபெருகற் காசிபெற்றும், ஞானநிட்டை
யினிற்பழகி யின்ப முற்றும்,
மனநிறைவு பெற்றவராய் மகிழ்வுமிக
வுற்றவராய்த் தங்கள் தங்கள்
நினைவனைத்தும் அன்னையிடம் வைத்தவராய்ப்
பிரியாமற் பிரிந்து செல்வார். 258

ஒருநாள்நண் பகலில்ஒரு மணியளவில்
இருபதடி யவர்கள் கொண்ட
ஒருகூட்டம் பிள்ளையார் குப்பத்தரு
ளன்னையிலம் சேர்ந்திட் டார்கள்
அருளன்னை சந்நிதியில் காலைமணி
யொன்பதுக்குள் உணவும் பின்னர்
இரண்டுமணி யளவினிற்சிற் றுண்டியுமெல்
லோரும்கொளல் வழக்க மாகும். 259

குருபரர்க்குப் பழம்தேங்கா யாதிபடைத்
தாராதித் திட்ட பின்னர்
அருள்திருநீ றும்தூய தீர்த்தமும்நன்
றனைவருக்கும் அளித்திட் டார்கள்
பொருள்சான்ற பலதூய அருளுரைகள்
புண்ணியவிண் ணமுத மாக
அருள்சான்ற சக்தியன்னை பெருங்கருணை
யோடுமினி தருளி னார்கள். 260

அடியவர்கள் வயிற்றுப்பசி யினைமறந்து
செவியோடு மனம் களிக்க
உடையவன்றன் அருட்சிறப்பாம் வானமுதை
உளம்குளிரப் பருகி னார்கள்;
படியில்மனி தப்பிறவி பெற்றபயன்
பரனருளைப் பெறலே யென்ன
இடர்தவிர்த்தின் பருளன்னை அடியவர்கள்
இதயமிசை பதித்திட் டார்கள். 261

வந்த அடி யவர்களுக்குச் சிற்றுண்டி
தரற்கனை ஆயத்தம் செய்தார்
வந்தவர்கள் மதியவுண வின்னும்கொள
வில்லையெனக் கூறி னார்கள்
அந்தமில்சீ ரன்னையிந்தத் தோசைநிரம்
பப்புசிக்க லாமென் றோதி
வந்தவர்கள் அனைவரையும் அமர்த்திச்சுடச்
சுடத்தோசை வழங்கி னார்கள். 262

அனைவரையும் ஒருசேர அமர்த்தியடுக்
கடுக்காகக் கொண்டு வந்து
மனநிறைவும் வயிற்றுநிறை வும்பெறுமா
றெணில்தோசை வழங்கி னார்கள்;
அனைவரும்தம் பசிதீரத் தோசைபுசித்
தானந்தம் அடைந்திட் டார்கள்
இனியநறும் பாலாதி பானம்நனி
யருந்திமகிழ் வெய்தி னார்கள். 263

எதிர்பாரா வணம்வந்த அடியவர்கள்
இத்தனைபே ருக்கும் தோசை
புதிதாகச் சுடச்சுடநற் பசிதீரப்
பரிமாற எவரா லாகும்
அதிதீவி ரத்தவம்செய் தாயருளும்
குருவருளும் அகில மீதில்
மதிவாண ராலும்அளப் பரிதாகும்
என்றடியார் மனத்துட் கொண்டார். 264

## பந்தல் போடச் சொன்னமை

உலகமக்கள் தற்போது நடக்கின்ற
செயல்களையே அறிதற் காகும்
அலகில்தவ முடையஉயர் ஞானிகள்முக்
காலமுமே அறிதற் காகும்
சிலசெயல்கள் சக்தியன்னை செய்கையில்ஏன்
செய்கின்றார் எனநி னைப்போம்
நலமுறற்கே செய்தார்கள் எனப்பின்னர்
ஒருநாளில் புரிந்து கொள்வோம். 265

அருளன்னை யாரில்லில் அமைந்துள்ள
வாசல்மிகப் பெரிய தாகும்
குருபூஜை சமயத்தில் நிழற்பந்தல்
அங்கமைத்தல் வழக்க மாகும்
குருபூஜை சமயமிலா ஒருநாளில்
அருளன்னை அவ்வா சற்கண்
மருவுநிழற் பந்தல்அமைத் திடுமாறு
பணித்தனர்பே ரருளி னோடே. 266

ஏனமைக்கச் சொல்கின்றார் எனஉணராப்
பணியாளர் தயங்கி நிற்க
ஞானமய மானஅன்னை ஏன்தயக்க
முறுகின்றீர்? அமைப்பீர் என்றார்
வானவெயி லினைமறைக்கும் பந்தரமைக்
கப்பெற்ற(து) அதற்குப் பின்னர்
கோனெனும்சற் குருபரனார் அடியர்பெருங்
குழுவாக வந்தார் அங்கண். 267

பெருங்குழுவாய் வந்தஅடி யார்திரளைக்
கண்டதுமே அங்குள் ளோர்கள்
அருளன்னை யார்தீர்க்க தரிசனத்தோ
டும்பந்தல் அமைக்கச் செய்த
பெருமையினை யுன்னிமகிழ் வுற்றார்கள்
அடியர்பெருங் குழுவும் அந்தப்
பொருவில்நிழற் பந்தரின்கீழ் அமர்ந்தன்னை
போதனைகள் நனிகேட் டாரால். 268

இருந்திடவும் பேசிடவும் இவிதன்னை
யருளுரைகள் செவியாம் வாயால்
அருந்திடவும் அமைதியுடன் உறங்கிடவும்
குருபார் தண் ணருளைப் போலத்
திருந்துநிழற் பந்தர்மிசைப் பயனுளதாய்த்
திகழ்ந்ததுகண் டடியார் அன்பர்
பொருந்தியசி ரன்னைதவப் பொலிவாற்ற
லுணர்ந்துமகிழ் பூத்தா ரன்றே. 269

அதிக உணவு சமைக்கச் சொன்னமை

ஒருதினத்தில் மாலைவழி பாடுமுடிந்
ததும்உணவு சமைக்கின் றோரை
அருளன்னை யழைத்திப்போ திருபதின்மர்க்
குணவுசமைத் திடுக வென்றார்
மருவுமந்த வீட்டிலப்போ திருந்தவர்கள்
ஒருநால்வ ராயி ருக்க
இருபதின்மர்க் கேன்சமைக்கச் சொல்கின்று
ரென்றையம் தோன்றிற் றங்கண். 270

அருளன்னை யாணையினை மறுக்கவஞ்சி
யவ்வாறே செய்திட் டார்கள்
இரவுமணி யொன்பதள வினில்யாரும்
அங்குவரா மையினல் தாங்கள்
அருந்தியது போகமிச்சம் உளஉணவைப்
பாதுகாப் பாக வைத்து
மருவுதுயில் கொண்டார்கள்; பதிஞெரு
மணியளவில் வந்தார் அன்பர். 271

சிலஉந்து வண்டிகளில் வந்தவ
ணிறங்கியஅவ் வடியார் அன்பர்
பலரும்மிகு பசியோடும் வந்தார்கள்
பரிவுமிகும் அருள்சக் தித்தாய்
அலகிலரு ளோடுமந்த உணவையவர்
கட்கினிதே யளித்திட் டார்கள்
நிலவுமன்னை பெருங்கருணை நினைந்துவியந்
தடியரன்பர் இன்புற் றாரால். 272

அருளன்னைக் காண்டவர்முன் னுணர்த்தியசி
ரருட்குறிப்பை உணர்ந்தவ் வாறே
பொருவிலுண வினைமுனரா யத்தம்செய்
தவ்வடியார்க் கருத்தி னார்கள்
பெருகுதவ முடையஅரு ளாளர்கள்எல்
லாம்அறிவர் எல்லாம் செய்வர்
இருநிலத்தில் என்றஉண்மை அருளன்னை
யிடத்திலும்நாம் காண லாமே. 273

அருளாட்சி

அவர்கள்திரு வாக்கிலிருந் துதிக்கும்உரை
அடியவர்க்கு வேத மாகும்
அவர்கள்திரு வாக்கனைத்தும் அப்படியே
நடக்குமென்ப தறிவார் யாரும்
அவர்கள்புரி செயலனைத்தும் உடையவன்றன்
அருட்செயலாய் அமைந்தின் பூட்டும்
அவர்கள்தரி சனம்பெறலும் அவர்களருள்
பெறலும்பிற விப்பே றாமே. 274

அருளன்னை யுடன்பழகும் அடியவர்கள்
அனைவோரும் தங்கள் பாலே
அருளன்னை அன்புமிகக் கொண்டுள்ளார்
என்றெண்ணி ஆனந் திப்பர்;
பெரிதும்விருப் போடுபிள்ளை களைப்பேணும்
அன்னையினும் பன்ம டங்காம்
அருளோடும் அடியரைப்பேண் அருளன்னை
யின்கருணை யளவிற் றாமோ? 275

தலைசிறந்த அடியவர்கள் ஒருசிலரை
நிட்டையினில் அமரச் செய்து
நலமருள்தம் திருக்கரத்தை அவர்கள்சிர
மேற்சூட்டி யருள்செய் வார்கள்
அலகிலரு ளண்ணல்அடி யார்களுக்குப்
புரிந்ததுபோல் அன்னை யாரும்
இலகடியர்க் கருளுகின்றா ரென்றெண்ணி
அடியர்உவப் பெய்து வார்கள். 276

ஆயிரக்க ணக்கான குடும்பங்கட்
 கருள்வழிகாட் டும்தா யாக
நோயனைத்தும் நீக்கும்அரு ளமுதாகப்
 பிறவிப்பிணி தவிர்தே வாக
மேயதிகைப் பினைநீக்கி மிகுதெளிவு
 நல்கருளா சிரியை யாக
ஏயஅருட் டிருநோக்கால் பாவமெலாம்
 நீக்குமெழிற் சக்தி யாக 277

அடியர்நலத் துக்காக ஆண்டவர்பால்
 முறையிடும்அற் புதத்தா யாக
அடியவர்பக் குவம்நோக்கிப் பசிக்குணவும்
 அருளுணவும் அருள்தா யாக
அடியவர்கட் குறுமின்னல் அனைத்தும்தவிர்த்
 தருள்நிலைகள் அருள்தா யாக
அடியவர்கட் கருட்பரமா னந்தநிலை
 யருளியன்னை திகழ்கின் றூர்கள். 278

குருபரனுர் கொள்கையினைக் குவலயத்தில்
 நனிபரப்பும் அன்னை யாக
குருபரனுர் அடியரன்பர் அனைவருக்கும்
 பெருந்துணையாம் அன்னை யாக
குருபரனுர் தந்ததிரு வருட்செங்கோல்
 கைக்கொண்டு குவல யத்தில்
குருபரனுர் அருளுருவாய் அருளன்னை
 அருளாட்சி புரிகின் றூர்கள். 279

போற்றிகுரு பரர்பெருஞ்சீர்; போற்றிகுரு
 பரர்இணையில் தவப்பே ராற்றல்
போற்றிகுரு பரர்கொள்கை; போற்றிகுரு
 பரர்அருளும் சட்ட மார்க்கம்;
போற்றிகுரு பரர்அருளைப் புவனிமிசை
 யினிதுபரப் பருட்சக் தித்தாய்;
போற்றியரு ளன்னைதவம்; போற்றியரு
 ளன்னைபத மலர்கள் போற்றி. 280

திருச்சாத்தனூர் அருட்கொடி சுவாமிகள்

திருச்சாத்த னூரில்அரு ளண்ணலெழுந்
    தருளியருள் செய்த வாறும்
பெருகார்வத் தோடும்அடி யார்கூட்டம்
    சார்ந்தினருள் பெற்ற வாறும்
குருநாதர் இங்கண்அருட் கொடிநாட்டப்
    பெற்றுளதென் றுரைத்த வாறும்
நிரையாக முனர்க்கண்டோம்; பின்னருள
    நிகழ்ச்சிகளை இனிமேற் காண்போம். 281

வழிகாட்டும் வான்பொருள்

அருளண்ணல் வரலாற்றை அடியரன்பர்
    அறிந்துய்ய வேண்டும் என்றும்
அருளண்ணல் அருட்பாடல் களைப்பலரும்
    பயின்றுய்ய வேண்டும் என்றும்
பெருவிருப்புக் கொண்டநர சிம்மவேள்,
    பெருமானுர் சென்று தங்கி
அருள்புரிந்த ஊர்களிற்சென் றருட்பாடல்,
    செய்தியிவை சேக ரித்தார். 282

அருளன்னை நரசிம்ம வேள்சாத்த
    னூர்நம்பி இவர்கள் கூடி
அருள்துணைகொண் டாலோசித் தண்ணல்வர
    லாற்றினைநூ லாக்க வேண்டி
அருட்காஞ்சி நகர்க்குமரன் அச்சகத்தை
    நரசிம்மச் செம்மல் நாடி
தெருள்மிகுத்த அண்ணல்வர லாறெழுதித்
    தரத்தக்கார் தேவை யென்றார். 283

குமரனச்ச கத்ததிபர் குப்புசா
    மிப்பெயர்கொள் குணம்சால் அன்பர்
தமதுநண்பர் *சைதையினில் நகராட்சி
    ஆணையராய்ப் பணிசெய் கின்ற,
சமயநிலை களையுணர் இராமலிங்க
    னாரிடத்திற் கொண்டு சேர்த்து
விமலகுரு நாதர்வர லாறெழுதித்
    தருகவென விளம்பிச் சென்றார். 284

* சைதை—சென்னை சைதாப்பேட்டை

ஆங்கிலம்செந் தமிழ்தெலுங்கு மலையாளம்
சமஸ்கிருத மாதி தேர்ந்து
பாங்குறுமின் மொழியடக்கம் பக்திமெய்ஞ்ஞா
னம்பண்பு மிகுந்தோ ராகி
ஓங்குமுண்மை யன்பொழுக்க மொடுதிகழ்
இராமலிங்க னுரைக் கண்டே
ஆங்கவர்தம் இல்லில்நர சிம்மவேள்
சிலதிங்கள் தங்கி னுரால். 285

காட்சியில்மிக் கெளியவராய்க் கருணையினில்
உயர்ந்தவராய்க் கண்டோர் போற்ற
மோட்சநெறி யினிற்கனியும் முத்தரெனத்
திகழுமவர் பண்பைக் கண்டு
சூட்சுமம்மிக் குணரவல்ல தூயரிவ
ரேஉலகில் சட்டம் நல்கி
ஆட்சிபுரி குருபரரின் சரிதமெழு
தற்குரியார் எனத்தெ ளிந்தார். 286

குருபரனுர் சென்றபல ஊர்களுக்கும்
சென்றுணர்ந்து குறித்து வந்த
அருட்குறிப்பு களையும்அவர் கண்டும்அனு
பவித்து முளஅரு மையான
அருளனுப வங்களையும் சட்டநுணுக்
கங்களையும் ஒவ்வொன் றுகத்
தெருள்மிகும் இராமலிங்க னுரிடத்திற்
செவ்வையுறச் செப்பி வந்தார். 287

வேலைமிக மிகவுடை இராமலிங்க
னுர்க்கோய்வு நேரம் பார்த்துக்
காலையிலும் மாலையிலும் குருபரனுர்
வரலாற்றை உருக்க மோடும்
சாலமிகு பரிவோடும் பக்தியொடும்
நரசிம்ம வேள்உ ரைப்பார்
ஞாலமிசை அதிசயமார் நெறியிதெனக்
கருதியவர் குறித்துக் கொள்வார். 288

அதிசயமார் அருட்சட்ட நெறிபற்றிக்
கூறுகையில் ஐயத் தோடும்
மதிநுட்ப மிகுராம லிங்கனுர்
பற்பலகேள் விகளைக் கேட்பார்
இதமொடுசற் குருவருளால் நரசிம்ம
வேள்நல்விடை இயம்பி மிக்க
புதுமையுடன் பழமைமிகப் பொலியும்நெறி
யீதென்ன உணர்த்தி வந்தார் 289

இனம்நாடு மொழிவயது கல்விசெல்வம்
மதம்முதலாம் பேத மின்றி
மனமாரத் தினம்போற்றி வையகத்தில்
வாழ்வாங்கு நல்வாழ் வாற்றித்
தினம்தூய அருள்நிட்டை நனிபேணிச்
சிறந்தமுத்தி யெய்தற் குள்ள
புனிதநெறி யெனவுணர்ந் திராமலிங்க
ஞர்எழுதற் குள்ளம் கொண்டார். 290

அருட்கொடி ஏற்றம்.

திருச்சாத்த னூரில்அரு ளண்ணல்எழுந்
தருளியருள் புரிந்த காலை
அருட்கொடியிங் கேநாட்டப் பெற்றுள்ள
தென்றருளிச் செய்த வண்ணம்
அருட்கொடியேற் றிடல்வேண்டும் எனும்தூய
அருட்குறிப்பை அண்ணல் நல்க
திருச்சாத்த னூர்நம்பி அந்தஅருட்
செயல்செய ஆயத்தம் செய்தார். 291

அருளண்ணல் அவதரித்த புரட்டாசி
இரேவதியில் கொடியை ஏற்ற
அருளன்னை யிடம்கலந்தா லோசித்து
நரசிம்ம வேட்கும் தூய
அருளடியர் பலர்க்கும்தெரி வித்துமிகு
சிறப்போடும் அவ்வி ழாவை
அருள்மிகும் இராமலிங்க ஞர்கரத்தால்
செய்விக்க எண்ணி ஞரால். 292

பலநினங்க ளுக்குமுன்ன ரேஅடியார்
அனைவருக்கும் அழைப் பனுப்பி
இலகுபொருள் அனைத்தினையும் சிறந்தவைக
ளாகநனி சேக ரித்து
நலமிகுரெட் டிப்பட்டிச் சாமிகள்
அருட்கொடியென் றழகெ ழுத்தால்
நிலவுதிருக் கொடியொன்று நீளுலகம்
உய்யஇனி தமைத்தார் நன்றே. 293

வீடுமண வீடென்ன விளங்கியது
வீட்டின்உயர் மாடி யின்கண்
ஈடில்கொடிக் கம்பமொன்று நாட்டியுயர்
எழில்வாழை மரங்கள் நாட்டி
கோடொளிர்மா விலைக்கொத்தின் தோரணங்கள்
எங்கெங்கும் குலவ நாற்றி
பீடுபெற அப்பெரிய மாளிகையைப்
பேரழகு பிறங்கச் செய்தார். 294

அடியவரும் அன்பர்களும் முதல்நாளே
வந்தங்கு குழுமி ஞர்கள்
நெடியஅந்த வீடன்றி வேறொருவீ
டில்லாஅவ் வூரின் சீரை,
படியிலுயர் ஆண்டவரின் அருட்பெருக்கை,
*நம்பியுளப் பக்கு வத்தை
அடியவரும் அன்பர்களும் உன்னியுன்னி
அகமகிழ்ந்து போற்றி ஞரால். 295

விழுமியசீர்க் குருபரர் விநாயகர்க்கு
வழிபாடு நிகழ்ந்த தங்கண்
தொழுதுருகி அடியரன்பர் போற்றியருள்
திருநீறு தீர்த்தம் பெற்ருர்
உழுவலன்பொ டனைவருக்கும் ஒப்பிலமு
தூட்டிநம்பி யின்ப முற்ருர்
பொழுதுவிடி யும்வரையில் குருபரனுர்க்
கலங்காரம் பொலியச் செய்தார். 296

* நம்பி- திருச்சாத்தனூர் சாமி

விடிவதற்கே ழுரைநாழி கைக்குமுனர்
அடியார்கள் விழித்தெ ழுந்து
நெடியநல்லே ரியில்மூழ்கி நீறுதிரு
நெற்றியினில் நிறையப் பூசி
உடையவனுக் கினிதாற்றும் ஒப்பில்திரு
மஞ்சனம்கண் குளிரக் கண்டு
மிடையுமுண்மை யன்போடும் அருட்பாடல்
பாடியுள முருகி நிற்பார். 297

மங்களவாத் தியம்முழங்கத் திருவாரா
தனைமுறையாய் நடந்த தற்பின்
துங்கமிகும் அருட்சக்தி யன்னையருட்
கொடியை ஒருதட்டில் வைத்து
தங்கம்நிகர் குணராம லிங்கவேள்
திருக்கரத்தில் தரவும் அன்பர்
பொங்குமகிழ் வோடுமிரு டிப்பட்டிச்
சாமிக்கரோ ஹரவென் றார்த்தார். 298

பலருமுயர் மாடியின்கண் பூசைப்பொரு
ளோடுசென்று கூடி னார்கள்
உலகமெங்கும் ஒருசமயம், ஒருவனே
இறைவனென்ன ஒருசட் டத்தை
நிலைநிறுத்த வந்தஒப்பில் குருபரனார்
அருட்கொடிக்குப் பூசை யாற்றி
தலைவரெனும் இராமலிங்க னார்உயர்த்தத்
தேவர்மலர் மாரி தூர்த்தார். 299

குருபரனார் திருவுருவப் படத்தைக்குழ
கோடும்அலங் காரம் செய்து
மருவிடுநால் தாழ்வாரங் களிலும்வலம்
வரும்காட்சி மகிழ்மிக் கூட்ட
பெருகுறுமங் களவாத்தி யம்பஜனை
முன்னும் பின்னு மாகச் சூழ
அருளன்னை திருச்சாத்த னார்நம்பி
அடியர்குழாம் முன்னர் சென்றார். 300

அப்படியே இருவாயி லிணைக்கடந்து
முன்சென் றவ் வீட்டை நோக்கி
ஒப்பில்குரு பரரொடடி யவர்கள்திகழ்ந்
தருட்பாடல் ஒலிமு ழக்கிச்
செப்பமிகும் அருட்கொடிநன் றுயர்ந்தெங்கும்
அருளொளியைச் செழிக்கச் செய்க
ஒப்புரவொ டடியரன்பர் பொலிகசட்டம்
ஓங்குகெனப் போற்றி னூரால். 301

எழில்மிகு விமானமிசை குருபரரை
இனிதின்எழுந் தருளச் செய்து
கெழுதகுநீள் குடைவெண்சா மரக்கொடிகள்
மகரதோ ரணம்து லங்க
செழுமைமிகு மையனூர் திருக்கோயில்
வரைசென்று திரும்பி னூர்கள்
தொழுதடியர் போற்றிநடு வாயிலின்கண்
குருபரரை யமர்த்தி னூர்கள். 302

இருபுறமும் உயர்ந்தகுத்து விளக்குகளை
நனிபொருத்தி இருத்தி னூர்கள்
அருளனையும் திருச்சாத்த னூர்நம்பியும்
அருகிலமர்ந் திலங்கி னூர்கள்
பெரியவர்கள் ஆண்டவர்சீ ரினைச்சட்டச்
சிறப்பைநனி பேசி னூர்கள்
அருளடியர் அன்பரெலாம் செவிவாயால்
அருளமுதை யருந்தி னூர்கள். 303

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்துமுப்பத்
தாறென்னும் ஆண்டில் பத்தாம்
தூயமதி முதல்தேதி தமிழாண்டு
தாதுபுரட் டாசி மாதம்
மேயபதி னூரும்நாள் இரேவதிவிண்
மீனிலுயர் விண்ணோர் வாழ்த்த
ஏயஅருள் திருக்கொடியேற் றும்திருவி
ழாஅருளால் நடந்த தன்றே. 304

அந்தநல் விழாவிற்குரு நாதர்உப
தேசம்எனும் அருந்த லைப்பில்
நந்தலில்சொல் விருந்தளித்த பரமசிவா
னந்தமெனும் புலவர் நல்ல
சந்தமிகும் பாடல்உடை யவன்திருக்கொ
டியைப்பாரீர் என்று சாற்றி
வந்தஅடி யவர்அன்பர் அனைவருக்கும்
மகிழ்வுமிக ஊட்டி னரால். 305

திரண்டிருந்த அடியவருக் கன்பருக்குத்
திருவமுது நனிப டைத்துத்
திருச்சாத்த னூர்நம்பி செப்பரிதாம்
பேரின்பப் பேறு பெற்றார்
அருட்சார்பு நாடடியர் அன்பரெலாம்
அகம்குளிர்ந்து போற்றி னார்கள்
தெருட்சான்ற திருச்சாத்த னூர்நம்பி
வாழ்கவென வாழ்த்தி னரால். 306

அருட்கொடிவி ழாசமயம் தம்சொந்த
வண்டியனுப் புவதோ டன்றி
அருகுளஊர் களில்வதியும் செல்வர்களின்
வண்டிகளை யும்கொ ணர்ந்தே
அருளடியர் அன்பர்களை அழைத்துவரு
மாறினிதே அனுப்பி வைப்பார்
அருளடியர் சிரமமின்றி வரத்திண்டு
தலையணையோ டனுப்பு வாரால். 307

அருட்கொடிவி ழாநடந்த பினர்அந்த
அடியவர்கள் திரும்பிச் செல்ல
பெருமகிழ்வி னேடந்த வண்டிகளில்
இனிதமர்த்தி அனுப்பி வைப்பார்
குருவருளை அடியவரின் பேரன்பைக்
கொள்ளை கொண்ட குணம்சால் நம்பி
பெருஞ்சிறப்பை உன்னியுன்னி உளமுருகும்
பெருந்தகையார் பலருள் ளார்கள். 308

அந்தநல் விழாவிற்குரு நாதர்உப
தேசம்எனும் அருந்தலைப்பில்
நந்தலில்சொல் விருந்தளித்த பரமசிவா
னந்தமெனும் புலவர் நல்ல
சந்தமிகும் பாடல்உடை யவன்திருக்கொ
டியைப்பாரீர் என்று சாற்றி
வந்தஅடி யவர்அன்பர் அனைவருக்கும்
மகிழ்வுமிக ஊட்டி னாரால். 305

திரண்டிருந்த அடியவருக் கன்பருக்குத்
திருவமுது நனிப டைத்துத்
திருச்சாத்த னார்நம்பி செப்பரிதாம்
பேரின்பப் பேறு பெற்றார்
அருட்சார்பு நாடடியர் அன்பரெலாம்
அகம்குளிர்ந்து போற்றி னார்கள்
தெருட்சான்ற திருச்சாத்த னார்நம்பி
வாழ்கவென வாழ்த்தி னாரால். 306

அருட்கொடிவி ழாசமயம் தம்சொந்த
வண்டியனுப் புவதோ டன்றி
அருகுளஊர் களில்வதியும் செல்வர்களின்
வண்டிகளை யும்கொ ணர்ந்தே
அருளடியர் அன்பர்களை அழைத்துவரு
மாறினிதே அனுப்பி வைப்பார்
அருளடியர் சிரமமின்றி வரத்திண்டு
தலையணையோ டனுப்பு வாரால். 307

அருட்கொடிவி ழாநடந்த பினர்அந்த
அடியவர்கள் திரும்பிச் செல்ல
பெருமகிழ்வி னோடந்த வண்டிகளில்
இனிதமர்த்தி அனுப்பி வைப்பார்
குருவருளை அடியவரின் பேரன்பைக்
கொள்ளை கொண்ட குணம்சால் நம்பி
பெருஞ்சிறப்பை உன்னியுன்னி உளமுருகும்
பெருந்தகையார் பலருள் ளார்கள். 308

இத்தனை சிறந்தஅருட் செயல்களுக்கும்
இடையீடு சிறிது மின்றி
பத்தியொடும் பணிவோடும் ஆங்காங்கும்
நரசிம்ம வேள்இ ருந்து
மெத்தசிறப் போடுவிழா நவிதிகழ
வேண்டியரும் பாடு பட்டார்
அத்தனருள் அவர்க்கென்றும் ஆனந்தப்
பெருவாழ்வை அருளு மன்றே. 309

குருநாதர் அருட்கொடியைக் குவலயம்
செழிக்கவுயர்த் திட்ட பின்னர்
குருநாதர் வரலாற்றைக் குருநாதர்
அருட்சட்ட நெறிச் சிறப்பை
குருநாதர் அருளோடும் வாய்மலர்ந்த
அருட்பாடல் களைநூ லாக்கிப்
பெருஞாலம் உணர்ந்துய்யச் செயவேண்டு
மெனுமூக்கம் பெருகிற் றம்மா. 310

வளந்திகழும் மொழியினிமை அன்புமுகம்
மாண்கருணை புலமை தூய்மை
இளங்குழவி யனையகுணத் தோடொளிர்
இராமலிங்க மெனும்நல் லாரே
அளந்தறியொண் ணாச்சீர்சால் அண்ணல்வர
லாறெழுதத் தக்கா ரென்ன
உளந்தனிற்கொண் டருளன்னை திருச்சாத்த
னூர்நம்பி உரைக்க லுற்றார். 311

ஒருவாரம் கழிந்ததற்பின் உயர்பண்பு
மிகுராம லிங்கச் செம்மல்
திருச்சாத்த னூர்க்கேகி அருளன்னை
திருச்சாத்த னூர்வாழ் நம்பி
அருளார்நன் னரசிம்ம வேளோடு
மாலோசித் தொருநன் னாளில்
குருநாதர் கொடிநிழலில் இனிதமர்ந்து
நூலெழுதத் தொடங்கி னாரால். 312

நல்லஎழி லார்தமிழில் நானிலத்தோர்
நனிபுரிந்து கொள்ளும் வண்ணம்
துல்லியநற் சொல்லினிமை பொருளினிமை
எளியநடை தூய்மை மேன்மை
புல்லியுய்ய உயிர்களையீர்த் துளம்புகுந்து
பொலிவுமிகச் செய்யும் பான்மை
தொல்லருமை தெய்வீகம் துலங்கவரு
ளாலந்நூல் அமைந்த தன்றே 313

அருளாளர் கண்டஉண்மை அனைத்தினையும்
அருட்கண்ணுற் கண்டு தூய
அருளார்நற் சமயம்அனைத் தின்சாரம்
திரண்டொளிர்நல் லருட்சட் டத்தை
அருளால்இப் புவிக்கருளும் இருடியர்பட்
டிச்சாமி அருட்சீர் வாழ்க்கை
அருளார்செந் நெறிப்பெருமை "வழிகாட்டும்
வான்பொருள்"என் றமைந்த தம்மா. 314

திருக்காஞ்சி மாநகரில் சீரார்நற்
குமரனச்ச கத்தில் அந்த
அருள்நூலை அச்சேற்றும் திருப்பணியை
நரசிம்ம வேள்செய் திட்டார்
அருளன்னை காமாட்சி திருமடியில்
வைத்தருளார் ஆசி பெற்றே
அருட்சக்தி யன்னையினி தமர்பிள்ளை
யார்குப்பம் கொண்டு சேர்த்தார். 315

அருட்டிருவி கல்யாண சுந்தரனார்
தலைமையினில் ஆன்றோர் வாழ்த்த
அருட்சக்தி யன்னைதிருச் சந்நிதியில்
அடியரன்பர் மகிழ்வொ டேத்த
திருச்சாத்த னூர்நம்பி முதலானோர்
செறிந்தருளின் சிறப்பைப் போற்ற
தெருட்சால்பு மிகுமந்த அருள்நூலைச்
சிறப்பொடரங் கேற்றி னாரால். 316

அருட்சட்டச் செந்நெறியேண் அடியவர்க்கோர்
அருமறையாய் அமைந்த அந்நூல்
மருட்செற்ற மதிநலங்கள் மிகவழங்கி
வள்ளல்குரு பரனூர் தாளைத்
தெருட்பெற்ற இருவுளத்திற் கொண்டுசட்ட
நெறிபேணச் செய்தே இம்மைப்
பொருட்பெற்றும் அருள்ஞானப் பொலிவுற்றும்
விளங்கவைக்கும் பொருளொன் றன்றோ? 317

பலசிறந்த பகுதிகளாய் மிகநன்கு
பிரித்தெழுதப் பட்ட அந்நூல்
பலர்இல்லில் சேர்ந்துபல ரைப்புதிய
அடியவராய்ச் சேர்த்துப் பாரில்
நிலவுசுகம் பரசுகமும் நன்றருளி
நிகரிலதாய் நிலவும் என்றால்
அலகில்சிறப் புடைஅந்த நூற்பெருமை
அடியேனுல் உனரத்தற் காமோ? 318

அந்நூலை இனிதுபடித் தருட்சட்டம்
ஏற்றவர் அநேக ராவர்
அந்நூலே ஆண்டவனுக் கருதிவழி
பட்டுய்வோர் அநேக ராவர்
அந்நூலும் அருட்சட்டச் செந்நெறியும்
உள்ளளவும் அவனி மீதில்
அந்நூலை ஆக்கிய இராமலிங்க
ஞர்புகழும் நிலைக்கு மம்மா. 319

பழகமிக இனியவராய்ப் பால்வெண்ணெய்
போன்றகுணப் பண்புள் ளோராய்
குழவியென அமுதமொழி கூறுநராய்க்
குறைகாணின் திருத்து வோராய்
விழுமியநற் பொதுப்பணிகட் குழைப்பவராய்
உயரருளே மூச்சாக் கொண்டு
செழுந்தமிழின் திறம்விளக் கிராமலிங்கச்
செம்மல்பதம் போற்றி செய்வாம். 320

திருச்சாத்த னூரில்குரு நாதர்எழுந்
தருளியருள் செய்தா ரென்றால்
திருச்சாத்த னூரில்அருட் கொடிநாட்டப்
பெற்றுளதென் றுரைத்தா ரென்றால்
திருச்சாத்த னூரில்அண்ணல் அருள்வரலா
றினிதெழுதப் பெற்ற தென்றால்
திருச்சாத்த னூர்த்தலத்தின் சிறப்பனைத்தும்
சிறியேனாற் செப்பற் காமோ? 321

திருச்சாத்த னூரில்அருட் கொடியேற்றும்
சிறந்தவிழா நடக்கும் போதும்
திருச்சாத்த னூர்நாடிப் பிறநாளில்
அடியவர்கள் சேர்ந்த போதும்
பெருகார்வத் தொடுநம்பி வரவேற்றுப்
பெரிதும்உப சாரம் செய்வார்
உருகாக்கல் மனமும்அவர் உருக்கண்டால்
செயல்கண்டால் உருகும் நன்றே. 322

பெரியநற்கம் பத்தமென்ற பெயர்க்கேற்பப்
பெரும்அளவில் செயல்க ளெல்லாம்
அருளடியர் அன்பர்களுக் கெப்போதும்
நடக்கும்அதி காலை வேளை
அருளடியர் நீராடிக் கிணற்றிலிருந்
தாட்கள் தணீர்இறைத்தீ வார்கள்
அருளண்ணல் சித்திவிநா யகர்பூசை
அதிசிறப்பாய் நடக்கும் நாளும். 323

சித்திவிநா யகர்க்குவெள்ளிக் கவசத்தை
வெள்ளிதொறும் சாத்து வார்கள்
மெத்தஎழில் தங்கக்கவ சம்சுக்ல
சதுர்த்தியினிற் சாத்து வார்கள்
பத்தியொடும் வழிகாட்டும் வான்பொருள்
விநாயக புராணம் ஓதி
நித்தம்திரு நீறருள்தீர்த் தம்பருகிப்
பினர்அம்மை அமுதுட் கொள்வார். 324

அடியர் பால் அளவிலா ஆர்வம்

அடியவர்கள் வரும்நாளை முன்னர்க்கடி
தம்வரைந்து தெரிவித் திட்டால்
உடனேயந் நாளினில்நல் வண்டிகட்டி
அடியார்கட் கனுப்பி வைப்பார்
அடியவர்கள் ரெயில்நிலையத் தினிலிருந்தோ
சாலைநின்றோ வந்து சேர்வார்
அடியவர்கள் சிரமமின்றி வருவதற்கா
வனஅனைத்தும் செய்வார் நம்பி. 325

பழையஅடி யவரெனினும் புதியஅடி
யவரெனினும் மாளி கைக்குள்
நுழைந்ததும்அன் போடும்உளம் களிதுளும்ப
நன்றுவர வேற்பர் தாம்முன்
விழைந்தபொருள் பெற்றதுபோல் விளம்பரிய
பேரின்ப மடைவர்; சாலக்
குழைந்தமனத் தொடும்அடியார்க் குரியஉப
சாரம்குறை வறச்செய் வாரால். 326

திருச்சாத்த னூர்நம்பி அடியவரைத்
தமதருகில் அமரச் செய்தே
அருளண்ணல் பெருஞ்சிறப்பை அன்போடும்
அகமுருகி இனிதே சொல்வார்
அருளண்ணல் பேசுவது போற்பேசி
நடப்பதுபோல் நடந்து காட்டி
அருளடியார் அகம்மகிழப் புரிந்துதா
மும்மகிழ்ச்சி அகத்துட் கொள்வார். 327

தாமடைந்த இன்பமிந்தச் சகமடைதல்
வேண்டுமெனக் கருதும் நம்பி
சாமிசட்டத் தினிற்சேர்ந்த அடியவர்கள்
தரத்தினுக்குத் தக்க வண்ணம்
மாமகிழ்வி னோடுகுரு வருட்செயல்கள்
கூறிப்பக்கு வம்செய் தன்பால்
தூய்மைமிகு மாறருள்வார் சூக்குமங்கள்
பலப்பலநன் றுணர வைப்பார். 328

அண்ணலை நேரிற்காணும் வாய்ப்பில்லா
அடியவரிக் காட்சி யைக்கண்(டு)
உள்நெகிழ்வர் உளமகிழ்வர் உளந்தளிர்த்தொண்
டனவரதம் உன்னி யுய்வர்
அண்ணலருட் சட்டநெறி யினிற்பலர்சேர்ந்
துயவேண்டும் என்று நம்பி
எண்ணிடுவர், சட்டஅடி யவரோடும்
இனிதுபழ கிடுவர் நன்றே. 329

உண்மையுற வினர்அடியா ராவர்எனும்
உயர்கருத்துக் கொண்ட நம்பி
எண்ணமெலாம் அவர்பால்வைத் தினியநல்ல
சுவையுணவு சமைக்கச் சொல்வார்
உண்ணஅடி யார்அமர்ந்தால் அவர்களரு
கொருநாற்கா லியில்அ மர்ந்தே
புண்ணியருக் குணவூட்டற் புதப்பொலிவு
புகலவரி தரிதாம் அம்மா. 330

எவ்வளவிங் குண்ணுகின்றோம் என்பதறி
யாதடியர் உண்ணு வார்கள்
செவ்வையுற நம்பிசெப்பும் அமுதவுரை
களையினிது செவிய ருந்தத்
திவ்வியமாம் சுவையமுதைத் தெவிட்டாது
நாவினிது சுவைத்த ருந்த
ஒவ்வொருக ணமும்நம்பி உயரன்பைச்
சுவைத்தடியர் இன்பம் கொள்வார். 331

அருளடியர் அங்கமுது செயுங்காட்சி
யினைநேரிற் காணும் அன்பர்
பெரியபுரா ணத்தினிற்கூ றிடும்அடியார்
களைநினையா திருத்தற் காமோ
அருளடியர் களின்சிறப்பை அருளடிய
ரேஉணர்வார் அன்பு செய்வார்
பெருநிலத்திற் பிறர்அறியார் பேரின்பம்
பெறுவதற்கு மறியா ரன்றே. 332

அருளடிய ரிடம்அன்பாய்ப் பேசுகையில்
அருள்நிகழ்ச்சி களைக்கேட் டின்பம்
பெரிதடைவர் தம்மிடத்திற் பெருமானார்
திருவருளால் நடைபெற் றுள்ள
அருள்நிகழ்ச்சி களிற்கூறற் குரியசில
நிகழ்ச்சிகளை அருளாற் சொல்வார்
அருள்நம்பி யொடும்பழகும் அடியவர்கள்
அவர்செயலை மறத்தற் காமோ? 333

இரவிலடி யரைநிட்டை யிளிலமர்த்தித்
தாமும்அமர்ந் தின்பம் சான்ற
அருள்நிட்டை கலைந்ததற்பின் தமக்கருளால்
நிகழ்ந்தவற்றில் சொல்லத் தக்க
அருள்நிகழ்ச்சி களைச்சொல்வார் அடியவர்க்கு
நிகழ்ந்தவற்றை அன்பாற் கேட்பார்
அரியவிளக் கம்புகல்வார் அவர்களிடத்
தருள்வளர நன்னீர் வார்ப்பார். 334

அன்பெனும்நற் பிடிக்குவயப் பட்டவராய்
அடியார்கள் அங்கே தங்கி
துன்பமெலாம் தீர்ந்தவராய்த் தூய்மைமிகப்
பெற்றவராய்ச் சொல்லொண் ணுப்பே
ரின்பமிக வுற்றவராய் இருமைநலம்
துய்த்தவராய் இணையில் லாச்செம்
பொன்புரையும் குணத்தினராய் அன்போடும்
புனிதவிடை பெற்றுச் செல்வார். 335

பெருமகிழ்வொ டடியவரைப் பேணிடுநற்
குணமிகுந்து பிறங்கும் நம்பி
அருட்சட்ட அடியரெலாம் ஒருதாயின்
சேய்களென அண்ணல் சொற்ற
பொருள்பிறங்கு திருவாக்கின் உண்மையினைப்
போற்றலங்குக் காண லாகும்
தெருள்மிகுத்த அடியவரைக் காணின்அவர்
எய்துமின்பம் செப்பற் காமோ? 336

குறைகளெவ ரிடத்தினிற்கண் டாலும்உட
னேதிருத்தத் தயங்க மாட்டார்
நிறையுடைய சிரியர்கள் பால்அன்பு
நிறையவுடை யவராய் ஞானத்
துறையிலன்புத் துறையில்அருட் டுறையில்மிகச்
சிறந்தவராய்த் துலங்கி வந்தார்;
இறையருளிற் கனிந்தநம்பி யின்சிறப்பிவ்
விருநிலத்திற் பரந்த தம்மா. 337

### சங்கம், மாணவர் விடுதி, பள்ளி

அருளண்ணல் திருப்பெயரால் சங்கம்அமைந்
திடநம்பி ஊக்கம் தந்தார்
அருளண்ணல் திருப்பெயரால் மாணவர்கள்
விடுதியொன்றும் பள்ளி யொன்றும்
அருளால்நன் றினிதுநடை பெறுமாறு
நரசிம்ம வேணுக் கென்றும்
அருளால்நன் றுதவிஅறக் கொடையாக
நிலமொன்றும் எழுதி வைத்தார். 338

### முதல் பாத யாத்திரை

அடியவர்கள் சிலர்கூடி முதல்பாத
யாத்திரையைத் தொடங்கி னார்கள்
உடையவன்றன் அருட்கொடிச்சந் நிதியான
திருச்சாத்த னூரி னின்றும்
அடியவர்கள் புறப்பட்டுக் குருபூஜைக்
கண்ணல்திருக் கோயில் சேர்ந்து
நெடியகுரு பூஜைவிழா நிகழ்த்தித்திருச்
சாத்தனூர் சேர்ந்தார் நன்றே. 339

குருபரனார் வரலாற்றை எழுதிய
இராமலிங்க னார்வந் தண்ணல்
அருள்நினைந்தா சிகளருளித் தொடங்கி வைத்த
யாத்திரையை முடித்துக் கொண்டு
குருபரன்றன் அருட்கொடியை மீண்டும்திருச்
சாத்தனூர் கொணர்ந்த போதில்
திருச்சாத்த னூர்நம்பி நங்கையிவர்
ஏற்றதிறன் செப்பற் காமோ? 340

குருபரனூர் திருவருளின் பேரொளியைக்
கண்டடியர் குழைந்தா ருள்ளம்
திருச்சாத்த னூர்நம்பி நங்கைதவத்
திறனைநனி போற்றி னூர்கள்
அருளடியர் பலர்க்கும்திரு வமுதூட்டி
நம்பிநங்கை மகிழ்வுற் றூர்கள்
அருள்வளமும் பொருள்வளமும் அமைந்தஅவர்
சிறப்புரைத்தற் கரிதா மன்றே 341

இவர்களுக்கு மகப்பேறில் லாவிடினும்
அருட்பேறு மிகவும் பெற்றுப்
புவியில்இளை யான்குடிவாழ் மாறரைப்போல்
பொலிவுற்றுப் பிறங்கி னூர்கள்
பவமகற்றூண் டவர்சேவை அடியார்கள்
சேவையிவை பாரிற் பேணித்
தவவடிவாய் அருள்வடிவாய்த் தக்கவரெல்
லாம்போற்றத் திகழ்ந்தார் நன்றே. 342

அறுகெடுத்துத் தந்த அன்பர் முத்தி பெற்றமை

திருச்சாத்த னூர்அருகில் உள்ளசெம்மா
றெனும்ஊரில் திகழ்ந்த அன்பர்
ஒருவர்தினந் தோறும்அருட் கொடிசந்நி
தானத்துப் பூசைக் காகப்
பரிவோடும் தூயஅறு கெடுத்துவந்து
பக்தியுடன் கொடுத்து வந்தார்
சுரர்போற்றும் கணபதிக்கவ் வறுகைத்தினந்
தொறும்நன்று சூட்டு வாரால். 343

சிவகாமி யாண்டார்போற் பல்லாண்டித்
திருத்தொண்டைச் செய்த நல்லார்
பவம்நீக்கிப் பரன்பாத மலர்சேரும்
காலம்நெருங் கிட்ட காலை
நவமான புட்பவிமா னம்வானின்
றிறங்கத்தவ சீலர் பல்லோர்
புவிமீதி லிறங்கியறு களித்தவரை
யேற்றிச்செலல் கண்டார் நம்பி. 344

இந்தஅருட் காட்சியினை அன்னலரு
ளாற்கண்ட இனிய நம்பி
நந்தலில்சீர் அடியரன்ப ரிடம்நன்று
மகிழ்வோடு நவிலும் போதில்
இந்தசந்நி திக்குத்தினந் தோறும்அறு
கன்போடும் எடுத்துத் தந்த
அந்ததொண்டர் ஆண்டவன்றன் அடிசேர்ந்தா
ரெனும்செய்தி உரைப்பக் கேட்டார். 345

உண்மைப்பரி வோடாண்ட வர்க்கொருநற்
பணியினிது செய்திட் டாலும்
உண்மையறி வின்பவடி வாமிறைவன்
உயர்நலங்கள் அருளல் திண்ணம்
உண்மையிதை நன்றுணர்ந்து புவியின்மிசை
உயர்சட்ட நெறியைப் பேணின்
உண்மையினில் இகநலமும் பரநலமும்
பெறலாமென் றுரைப்பார் நம்பி. 346

இறந்த சிறுவன் உயிர்பெற் றெழுந்தமை

திருச்சாத்த னூர்நம்பிக் குறவினராம்
ஒருவர்மக னை செல்வன்
உரியபனி ரெண்டுவய துடையசிறு
வன்சாத்த னூரிற் போந்து
மருவுசுரத் தாற்படுத்தான்; சுரம்மீறிச்
சிலநாளில் மாண்டு போனன்
பெருவருத்த முற்றனையும் பிறரும்அழல்
நம்பிகண்டுள் ளிரக்கம் கொண்டார். 347

குருபரர்சந் நிதியிலிந்தப் பழிவரல்
தகாதென்ன உளத்திற் கொண்டு
திருவருளால் இச்சிறுவன் உயிர்பெற்றிங்
கெழல்வேண்டும் என்று கோரி
அருள்திருநீற் றினைச்சிறுவன் சென்னிமுதற்
பாதம்வரை பூசி வந்தார்
இரவுமுழு வதும்நம்பி இவ்வாறு
கருணையினுற் செய்தார் நன்றே 348

விடிவதற்கே முரைநாழி கைக்குமுனர்
சிறுவனின்காற் பெருவி ரல்சற்
றடியரன்பர் காணஅசைந் ததுசிறிது
புரண்டுபடுத் திட்டான் பின்னர்
விடியவைந்து நாழிகைமுன் நீராட்டி
விநாயகரை வலம்செய் வித்தார்
படியிலிந்தச் செயலறிந்தோர் பரன்கருணை
யினைப்போற்றிப் பரவி னாரால். 349

அருளடக்கம்

குருபரனார் திருவுருவம் குருபரனார்
அருளுரைகள் குறைதீர்த் தாட்கொள்
குருபரனார் குணநலங்கள் குருபரனார்
அருட்செயல்கள் உன்னி யுன்னிக்
குருபரனார் திருவருளில் தோய்ந்திலங்கு
திருச்சாத்த னூர்நன் னம்பி
குருபரனார் திருவடியில் ஐப்பசி
இரேவதியிற் கூடி னாரே. 350

வாழ்கगுரு பரர்கீர்த்தி வாழ்கगுரு
பரர்சட்டம் வைய மீதில்
வாழ்கவுயர் திருச்சாத்த னூர்வாழ்க
நம்பிதம்ப திகளின் வண்சீர்
வாழ்கगுரு நாதர்அருட் சட்டநெறி
தனிபேணி வாழ்மெய் யன்பர்
வாழ்கगுரு பரர்ஞான வொளிகருணை
மணமெங்கும் வயங்கி வாழ்க. 351

திருவிடைமருதூர் - சாமிநாத அய்யர்

அருட்குருபால் அகலாப்பே ரன்போடும்
அருட்சட்ட நெறியைப் பேணி
ஒருசிறிதும் தவறுமல் ஒழுகிஉடல்
பொருளாவி ஒப்பு வித்தே
அருள்வாழ்வு வாழ்ந்தஅரு ளடியவருள்
தலைசிறந்த அடியா ராவர்
திருவிடைநன் மருதூர்வாழ் சாமிநா
தய்யரெனும் செம்மல் அம்மா. 352

அந்தணராய்ப் பிறந்தஇவர் அருட்காஞ்சி
காமாட்சி அம்மை யின்பால்
அந்தமில்மெய்ப் பக்தியுடன் வாழ்ந்தார்முன்
நல்வினையின் பயனா லும்பின்
இந்தப்பிற வியிற்புரிபூ ஜாபலத்தி
னாலும்அரு ளண்ணல் சட்டம்
நந்தலில்ஆ யிரத்துத்தொளா யிரத்துநாற்
பத்தாறில் கைக்கொண் டாரால். 353

இவர்மனத்துக் கேற்றபடி இனிதொழுகும்
மனைவிருக்கு மணியம் மாளும்
தவலறும்சீர்ப் புதல்விநல்ல புதல்வரொடு
தாம்சட்டம் மேற்கொண் டாராய்
அவனிமிசை அருள்வாழ்வாற் றியசாமி
நாதய்யர் அருட்சீர் ஓதின்
தவம்பெருகும் அருள்பெருகும் சக்திமிகும்
சாந்திமிகும் தரணி மீதே. 354

புனிதமிகும் அகத்தியர்தாம் அவதரித்துப்
போந்தனரோ என்னும் தோற்றம்
இனியகுரல் கண்டிப்பு மிகும்இயல்பு
சத்தியத்தில் தவறா மாண்பு
கனிவுமிகு கருணையுளம் தவவொழுக்கம்
குருபக்தி நிறைந்த பான்மை
இனிஎவர்க்கும் அஞ்சாத திண்மைஅருள்
திறமிவர்நல் லுருவ மாமால். 355

பெயரளவுக் கன்றிஉண்மை யாய்க்குருவுக்
கடிமைத்திறம் பூண்டு வாழ்நல்
இயல்புடைய இவர்குருவின் அருள்திறத்தை
எண்ணியெண்ணி உருகி நிற்பார்
வியனடியர் களைக்கண்டால் பேதமின்றிப்
போற்றுசம ரசநோக் குள்ளார்
பயின்றகல்வி குறைவெனினும் பலபிறப்பின்
தவம்பயனைத் தந்த தாமால். 356

பலபிறவி களிற்புரிந்த தவத்தின்பயன்
இறையன்பில் மேலும் ஊக்கி
அலகிலுறு திப்படுத்தத் தம்வாழ்க்கைக்
குறிக்கோளுக் குகந்த தாகி
இலகுநல்ல நெறியாக அருட்சட்டம்
இருப்பதுகண் டுளம் களித்தே
நலமிகுமந் நெறிமேற்கொண் டார்நன்று
கடைப்பிடித்தார் நல்லோர் போற்ற. 357

அருட்சட்டம் மேற்கொண்டோர் கடைப்பிடிக்க
வேண்டியதிப் படித்தான் என்றே
அருளடியர் பலருமுணர்ந் துயும்வண்ணம்
அமைந்ததவர் அருட்சீர் வாழ்க்கை
தரணியிற்சொல் லுவதைவிடச் சொன்னபடி
செய்வதுவே சிறந்த தென்னப்
பெரியவர்சொல் வாக்கேபோல் அனுபிசகா
திவர்வாழ்க்கை பிறங்கிற் ருமால். 358

விடியலைந்து நாழிகைமுன் விழித்தெழுந்து
காலைக்கடன் முடித்த பின்னர்
உடையவன்றன் தண்ணருளில் மூழ்கிடல்போல்
நீராடித் திருநீ றிட்டுப்
படியிலுயர் வழிபாடு பண்பினொடும்
அன்பினொடும் நனிந டாத்தி
நெடியஅடுக் காரத்தி யெடுத்திடுவர்
மணியைந்தங் கடித்தல் கேட்போம். 359

கடியாரம் மணியடிக்கத் தவறிடினும்
கதிருதிக்கத் தவறி னாலும்
அடியாரிற் சிறந்தஇவர் அணுவளவும்
தவருமல் நனிந டப்பார்
படியினில்வாழ் நாள்முழுதும் காலம்தவ
ருதுநித்ய கர்மம் யாவும்
முடித்துவந்த இவர்பெருமை மொழியளவ
ராலுமிவண் முடியா தன்ருே? 360

நித்தியகர் மங்களைக்கல் லென்றும் அதன்
நெறிதவற லாமோ என்றும்
சத்தியச்சன் மார்க்கநெறி தந்தஅருட்
குருபரனார் சாற்றும் வண்ணம்
நித்தியகர் மங்களைக்கா லம்தவறா
தாற்றுமிவர் நீறு தீர்த்தம்
பத்தியுட னருந்திப்பலர்க் கும்தருவார்
பலவளமும் பல்கு மாறே. 361

குருபரவ ணக்கமெனும் நூலிலுள
பாடல்களைப் பாடிப் பாடி
உருகுவதில் இவர்க்கிணைவே றொருவரிலை
யெனத்திடமாய் உரைக்க லாகும்
அருகிவர்தம் மனைவிமக்கள் அனைவருமே
அமர்ந்துநிதம் பஜனை செய்வர்
அருளடியர் வந்திருப்பின் அவர்களும்இப்
பஜனையினிற் கலந்து கொள்வார். 362

அருள்நினைந்து பாடுவதும் அகமுருகி
நெகிழ்வதுவு மாக அய்யர்
பொருள்விளக்கம் இடையிடையே புகன்றபடி
புனிதமிகு பஜனை செய்வார்
அருள்விளக்கம் பொருள்விளக்கம் அகவிளக்கம்
அன்புருக்கம் அனைத்தும் ஒன்றித்
தெருள்விளக்கும் அருளிசையவ் வழிசெல்வோ
ரையுமீர்த்து நிறுத்து மன்றே. 363

இவர்தாம்இப் படியென்னில் இவரில்லிற்
குறும்அடியார் அன்பர் யாரும்
தவறுமல் விடியலைந்து நாழிகைமுன்
தண்ணீரில் மூழ்கல் வேண்டும்
தவறிவிடின் அவர்களையவ் வில்லினின்று
வெளியேற்றத் தவற மாட்டார்,
நவையில்குரு நாதரில்லில் நெறிநடவார்க்
கிடமிலையென் றுரைப்பார் நன்றே. 364

குருகடாட் சத்தால்நற் பொருளும்அரு
ளும்பெற்ற குரிசி லான
திருவாளர் இவர்பலச ரக்குக்கடை
யொன்றினிது நடத்தி வந்தார்
குருகடாட் சப்பெயரால் துலங்குமெழில்
மாளிகையின் மீதே அண்ணல்
அருட்கொடியை ஆவணி இரேவதியில்
ஏற்றிவிழா நடத்து வாரால். 365

திருவிழா நடக்குமுன்னுள் மாலைதிரு
வருட்கொடியைப் பஜனை யோடும்
அருட்டிருவீ திகளில்வல மாக்கொணர்வார்
அருளார்மா ளிகையிற் சேர்ந்தே
அருளடியார் அன்பர்குழாத் தோடினிய
அருள்வழிபா டாற்றி யன்பர்
அருளடியார் அனைவருக்கும் அமுதூட்டி
ஆனந்த மடைவார் அய்யர், 366

அருட்கொடி விழாநாளில் அதிகாலை
நீராடி ஐங்க ரற்குத்
திருமஞ்ச னம்புரிவார் தேசிகனுர்க்
கலங்காரம் சிறப்பாய்ச் செய்வார்
அருச்சனைபு ரிந்திடுவார் திருவமுதை
அன்போடும் ஆரா திப்பார்
விருப்பொடடுக் காரதிஐங் கிளைகர்ப்பூ
ராரதிகாண் பிப்பார் நன்றே. 367

குருபரனுர் அருட்கொடியை அதிகாலை
கதிருதய மாகும் போதில்
குருகடாட் சத்திருமா ளிகைமாடி
மீதினிது குலவ ஏற்றி
குருபரனுர் கொடிப்பாடல் பாடிவழி
பாடாற்றிக் கும்பிட் டேத்தி
குருபரனுர் திருமுனமர்ந் தருட்பாடல்
துதிப்பாடல் பாடு வாரால். 368

அவர்அருளா ரிசையினுடன் பாடுகையில்
அடியரன்பர் கூட்ட மெல்லாம்
அவருடனும் சேர்ந்துகுரு அருட்பாடல்
துதிப்பாடல் பாடு வார்கள்
அவரினிது பொருள்விளக்கம் கூறுகையில்
அனைவரும்நெக் குருகு வார்கள்
அவரும்அடி யவரும்அரோ ஹரவெனிற்கை
லாயமிது வென்னத் தோன்றும். 369

வந்திருக்கும் அடியரன்பர் அறிஞர்திரு
வருளுரைகள் கூறு வார்கள்
தந்திமுகக் கணபதிக்கும் குருபரர்க்கும்
திருவாரா தனை நடக்கும்
அந்தமிலன் போடடியர் அன்பருக்குத்
திருவமுதம் அருத்திப் பின்னர்
நந்தலில்சற் குருநாதர் அருட்ப்ரஸா
தம்வழங்கி அனுப்பி வைப்பார். 370

எவர்தம்வி டெய்திடினும் எதற்குவந்தி
ரென்றய்யர் இனிதே கேட்பார்
அவர்வாணி பத்துறையில் பேசினங்கா
டிக்குவரு கென்று சொல்வார்
அவர்சட்ட அடியரெனில் அன்போடும்
தூயஉப சாரம் செய்வார்
அவர்எந்த இனத்தவரா யினும்வறிஞ
ராயினும்அஃ தகத்துட் கொள்ளார். 371

உறவினரா யினும்மிகுந்த செல்வர்களா
யினும்சிறந்த அறிஞ ரேனும்
இறைவனருட் சட்டஅடி யாரல்லர்
எனின்இல்லிற் சேர்க்க மாட்டார்
இறைவனருட் சட்டஅடி யாரென்னின்
செவிக்கமுதும் உணவு மீவார்
இறைவனருட் புகழென்னில் இரவுபகல்
பேசியரு ளின்பம் துய்ப்பார். 372

மிகநெருக்க மானஅடி யார்களெனின்
இரவுபடுத் துறங்கி டாமல்
அகமுருகி ஆண்டவன்றன் அருட்சிறப்பை
நவிபன்விப் பலகால் பேசி
இகநலமும் பரநலமும் பெறச்செய்து
தாமும்உய ரின்பம் துய்த்துச்
சகமிதைவா னுலகமென ஆக்கிடுவார்
தண்ணருளின் சிறப்பால் அய்யர். 373

அங்காடிக் கேகின்அவ னுள்ளகுரு
திருவுருவப் படத்தின் முன்னே
மங்காப்பே ரன்போடும் வணங்கிஉங்க
ளடிமையிவண் வந்துள் ளேன்இவ்
வங்காடி யைத்துவங்கு கின்றேன்நீ
ரிடும்பணிகள் சரியாய்ச் செய்ய
இங்காற்ற லருளித்துணை யாயிருப்பீர்
எனவேண்டித் துவங்கு வாரால். 374

இதுஎங்கள் குருநாதர் அங்காடி
யான்அவருக் காளா யுள்ளேன்
இதில்எதும் அதிகாரம் அணுவளவும்
எனக்கில்லை யென்று சொல்வார்
இதுபோலக் கூறுவது மட்டுமின்றி
உண்மையிலப் படியே வாழ்ந்தார்
இதுகண்டெவ் வாறெவர்சொன் னாலுமதை
இதயத்திற் கொள்ள மாட்டார். 375

சொல்லுதல்யா ருக்குமெளி தரிதாகும்
சொன்னவண்ணம் செய்த லென்ன
நல்லகுற ளாசிரியர் நவின்றுள்ள
மொழிக்கேற்ப ஞாலத் தய்யர்
நல்லனஎல் லாம்தமது மூச்சாகக்
கருதியருஞ் செயல்க ளாற்றி
நல்லவரெல் லாம்போற்ற ஞாலமிசை
யருள்வாழ்வு நடத்தி வந்தார். 376

தமிழ்மாதத் தினிற்கடைசி தேதிரொக்க
விற்பனையா கும்பணத்தை
அமிழ்தகுரு நாதாதமக் கருள்மாதச்
சம்பளமென் றேற்றுக் கொள்வார்
அமிதச்செல வேதும்செயார் அதற்குமிஞ்சி
யொருகாசும் விரும்ப மாட்டார்
சுமுகமுடன் கடன்கேட்டால் முதலாவி
யைக்கேட்டுச் சொல்வேன் என்பார். 377

அண்ணல்அருள் எப்படிச் செலுத்துகிற
தோஅவ்வா றேநடப்பார்
அண்ணலருள் வழியன்றி அயல்வழியொ
ரணுவளவும் நாட மாட்டார்
அண்ணலருள் நிட்டையினை உயிர்க்குயிராய்ப்
பேணியருள் நிலைபெற் றுய்ந்தார்
அண்ணலரு ளடியவரில் அவர்போற்சத்
தியம்தவறு அடியார் உண்டோ? 378

உயரியநல் லருட்குணமும் உண்மையா
கியவாழ்வும் கொண்ட அய்யர்
உயர்வெள்ளிக் கிண்ணங்களில் சாம்பார்சேர்த்
திட்டஅன்னம் ரசம்சேர் அன்னம்
தயிர்விட்டுப் பிசைந்தஅன்னம் பொரியலிவை
தனித்தனியே அமைத்துக் கொள்வார்
உயர்சட்டக் குருபரர்க்குக் கண்ணப்பர்
போலுருகி ஆரா திப்பார். 379

குருபரவ ணக்கம்எனும் நூலில்உருக்
கத்தோடும் கூறி யுள்ள
திருவருள்நீ புரிவாயோ எனும்பாட்டைப்
பாடிக்குழைந் துருகி யூட்டும்
அரியசெயல் காண்பவர்உள் ளத்தினையும்
கனியவைக்கத் தக்க தாகும்
குருபரருக் கமுதூட்டி அருளமுதம்
அருந்திஉய்ந்தார் குவல யத்தில். 380

அருட்சட்ட நெறியிலேயம் தம்பியர்கட்
கெய்தின்அதை அகற்றி நல்ல
திருத்தக்க வுரைகூறி ஊக்கம்மிகத்
தந்திடுவார் இவர்தம் தூய
அருட்சட்ட வாழ்வினைக்கண் டிவர்க்குறவா
யுள்ளபல குடும்பத் தோர்கள்
அருட்சட்ட நெறிசேர்ந்தார்; அருட்டிருநீ
றேற்றுப்பலர் அல்லல் தீர்ந்தார். 381

சத்தியமாம் நெறிதந்த சற்குருவின்
வழிநடக்கும் அடியா ரானோர்
சத்தியத்தில் அணுவளவும் தவறுமல்
நடந்திடுதல் வேண்டும் என்பார்
சத்தியமே இறைவனென்பார் தாம்அணுவும்
சத்தியத்தில் தவற மாட்டார்
நித்தநித்தம் அங்காடிக் கணக்குகளை
உள்ளபடி எழுதி வைப்பார். 382

இறைவனுக்கு ப்ரதிநிதியே அரசாங்கம்
என்றுசொல்வார் எவ்வாற் றானும்
முறைதவறு தொழுகுதலே சன்மார்க்க
முறைநடப்போர் செயலா மென்பார்
அறநெறியும் அருள்நெறியும் அடியவர்கள்
கடைப்பிடித்தல் வேண்டும் என்பார்
புறமும்அக மும்தூய்மை யானஇவர்
பொய்கடிந்து புனித முற்றார். 383

நன்மைகளைக் கூறுகையில் முரட்டுத்தன
முள்ளவர்போல் தோன்றி னாலும்
புன்முறுவல் பூத்தமுகத் தோடென்றும்
அன்புருவாய்ப் பொலிவார் தூய
தன்மைமிகு வெண்ணெயைப்போல் இளகியஉள்
ளம்படைத்த சான்றோ ராகிப்
பன்மயலும் தவிர்த்தின்னருட் பண்பன்பர்
பால்வளர்க்கும் பான்மை மிக்கார். 384

நினைந்துநினைந் தென்றுவட லூர்வள்ளல்
நெகிழ்ந்துரைத்த பாட்டு னுக்குப்
புனைந்தஇலக் கணமாக அமைந்தனரோ
அய்யர்எனப் புகலந் தோன்றும்
இனியஅருட் குறிப்பால்பின் னைநிகழல்
முன்னருணர்ந் தியம்பு வார்; இப்
புனிதருடன் தொடர்புகொள வேண்டுமென
விழைந்தடியர் பலர்சூழ் வாரால். 385

எத்தகைய எளியஉண வானாலும்
வெறுப்பின்றி இனிதேற் றுண்பார்
பத்திமிகும் அடியார்கள் உறவுகொடு
பழகிமிகு மகிழ்வு கொள்வார்
சித்தமிக உருகியுண்மை யன்போடும்
பாடித்திரு வருள்பெற் றுய்வார்
உத்தமராம் அவர்உருவம் அடியவர்தம்
உளத்திலென்றும் துலங்கும் நன்றே. 386

ஆண்டுதொறும் புரட்டாசி ரேவதிநன்
னாளில்திருச் சாத்த னூரில்
ஈண்டுசிறப் பொடுநடக்கும் அருட்கொடி
விழாவில்நனி கலந்து கொள்வார்
தூண்டுதவச் சுடர்போலத் துலங்குமிவர்
மனைவியொடும் எழுந்து நின்று
பூண்டஉண்மை யன்போடும் உளமுருகிப்
பாடுதிறம் புகலற் காமோ? 387

குருபரனார் அடியவர்தம் செவிவழியாய்
அவ்வமுதக் குரல்நு ழைந்தே
உருகவைக்கும் பரவவைக்கும் ஒப்பிலுயர்
பேரின்பம் ஊட்டு விக்கும்
இருசெவிக ளிலுமென்றும் இடையின்றி
இனிதொலித்துக் கொண்டி ருக்கும்
அருகிருந்து கண்டவர்கள் கேட்டவர்க
ளேஇதைநன் றறிவா ரம்மா. 388

ஆரேனும் புதிதாக அருட்சட்டம்
ஏற்றவர்கள் அவர்பால் வந்து
சேரார்சற் குருநாதர் சட்டம்மேற்
கொண்டுள்ளேன் என்று சொன்னால்
நீர்சாகத் துணிந்துவிட்டீ ரோஎன்று
நேமமிகும் அய்யர் கேட்பார்
ஆரேனும் இப்படிக்கேட் பாரோஎன்
றவ்வடியர் ஐயம் கொள்வார். 389

சாகத்துணிந் தோரேஇச் சட்டநெறி
யின்பயனை எய்தற் காகும்
சாகத்துணி யாதவர்சட் டத்தால்நற்
பயனெய்தல் அரிதே யாகும்
சாகப்பயந் தவர்என்றும் சட்டநெறி
பேணுவதும் அரிதே யாகும்
சாகத்துணிந் தோரேசட் டத்தின்முழுப்
பயன்பெறுவர் என்பார் அய்யர். 390

ஒருநாள்வி டியற்காலத் தெழுந்தய்யர்
திண்ணையரு குற்ற காலை
ஒருபெரியார் நோய்வருத்தம் தாங்காமல்
உளைந்தவண்ணம் படுத்தி ருக்கப்
பரிவொடவர் ஆர்என்னக் கேட்டும்அவர்
பகரமுடி யாதி ருக்க
மருவுதண்ணீ ரிவிலாட்டித் திருநீறு
தீர்த்தம்வழங் கிட்டார் அய்யர். 391

பொழுதுநன்று விடிந்தபினர் அவரருகு
போய்ப்பார்க்க அண்ட வாதம்
கிழவரைநன் றேவருத்தல் கண்டுதிரு
வருள்போற்றி நீறு பூசி
உழுவலன்பொ டுணவூட்டி ஒவ்வொருநா
ளும்பரிவொ டுபச ரித்தார்
பழுதணுவு மின்றியரு ளாலந்த
நோய்நீங்கி யவர்பி ழைத்தார். 392

குருபரனார் அருட்சிறப்பை யுணர்ந்தய்யர்
குதுகலமிக் குற்றா ராகி
மருவுமவர் உறவினர்க ளிருக்குமிடம்
கேட்டறிந்து கடித மொன்றில்
அருள்துணையால் அவர்நலமெய் திட்டசெய்தி
யினையனுப்பி வரவ ழைத்துப்
பெரியவரை நல்லமுறை யிலிலவரொ
டனுப்பிவைத்தார் பேரன் போடும். 393

எங்குசென்றும் எந்தமருத் துவம்பார்த்தும்
நோய்தீர வில்லை யென்றும்
இங்குசென்றால் அருளால்நோய் தீருமெனப்
பலரியம்பக் கேட்ட பின்னர்
இங்குவந்தெப் படிச்சொல்லி எவ்வாறு
விடுவதெனும் அச்சத் தோடும்
இங்குசொல்லா மல்விடுத்துச் சென்றசெய்தி
யறிந்தெவரும் வியந்தா ரங்கண். 394

முன்பினறி யாதவொரு நோயாளிக்
கனுதினமும் தண்ணீ ராட்டி
அன்பினொடும் திருநீறு தீர்த்தமளித்
துணவூட்டிப் பிணியும் நீக்கி
பொன்புரைநற் குணத்தொடவர் புதல்வர்களுக்
கெழுதிவர வழைத்து மேலாம்
இன்பமுட னனுப்பிவைத்த இவர்சிறப்பை
என்நாவால் இயம்பற் காமோ? 395

செயற்கரிய செயல்கள்பல இவ்வாறு
செய்தஇவர் யாரா னாலும்
செயற்காகாத் தவறுசெயின் சற்றுமச்ச
மின்றிக்குறை பாடு கூறி
உயத்தகுநல் வழிகூறி உண்மையுண
ரச்செய்து திருந்த வைப்பார்
வியத்தகுநற் சீரர்பரம் பரைபோலும்
இவரென்ன விளம்பத் தோன்றும். 396

விழித்தெழுதல் நீராடல் பூசைசெயல்
விழுமியநன் விட்டை பேணல்
தழைத்ததற்கா லந்தவரு தனுதினமும்
தகுமுறையாற் புரியும் அய்யர்
செழித்தபுலி மிசைகாக தீண்டாமற்
சிலகாலம் இருந்து வந்தார்
முழுக்கமவு னம்பூண்டு முதல்வனருட்
கடலினிடை யாழ்ந்தார் பன்னாள். 397

வாய்மையினில் அரிச்சந்திரன் உருக்கத்தில்
அருள்மணிவா சகனார் ஆவர்
தூயஅடி யார்பணியில் சிறுத்தொண்டர்
எனஇவரைச் சொல்ல லாகும்
ஏயகுரு பக்தியினில் ஏகலைவன்
போலஇவர் இலங்கி வந்தார்
மேயஅடி யார்இவர்போல் விளங்கினுயர்
முத்திபெறல் திண்ண மாமே. 398

ஆயிரத்துத் தொள்ளாயிரத் தைம்பத்
தொன்பதில்நல் லருட்கா வேரி
பாயுநன்னீ ரார்வீர சோழனெனும்
இருநதிக்கும் நடுவில் அன்பு
தோயுமுளச் சாமிநா தய்யர்அடி
யார்அன்பர் துதிக்கும் வண்ணம்
தூயதென்னஞ் சோலைநடு வினிலமர்ந்து
பேரொளியாய்த் துலங்கு கின்றார். 399

அருட்சட்ட அடியார்கள் அன்போடும்
போற்றும்உயர் அடியா ரான
திருவிடைநன் மருதூர்ச்சா மியின்சிறந்த
சீர்வாழ்க என்று போற்றி
அருளடியர் பலர்க்கும்அவர் அருட்குணங்கள்
அமைந்தோங்க அருளு மாறு
குருபரனார் திருவடியைக் கும்பிட்டுத்
துதிபாடிப் போற்று வோமால். 400

### திருத்துறைப்பூண்டி - இரத்தினத்தாச்சி

திருவருளின் மணம்மிகுந்த சீர்சால்நற்
சோணாட்டில் திகழும் ஊராம்
திருநிறைநீ டாமங்க லத்தினைச்சார்
உரத்தூரில் செம்மை யாய்வாழ்
அரியகுணக் கண்ணப்பப் பிள்ளைக்கும்
காவேரி அம்மை யார்க்கும்
ஒருமகளாய்த் தோன்றியரத் தினத்தாச்சி
உயர்குணங்க ளொடுவ ளர்ந்தார். 401

முருகபக்த ராயிலகும் சுப்பையாப்
பிள்ளையிலத் துணைவி யாராய்
அருள்நலம்சால் சைவசம யாசார
ஒழுக்கத்தில் அமைந்து நன்று
திருத்துறைப்பூண் டியிலினிது சிறப்பான
வாழ்வாற்றிச் சிறந்தோர் வாழ்த்த
அருட்டிருவும் பொருட்டிருவும் வளர்த்தருளார்
மக்களொடும் பிறங்க லானார். 402

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்திருபத்
தைந்தாவ தாண்டி னிற்றன்
தூயநன்னாற் பானிரண்டா வதுவயதிற்
கால்முடக்கு வாதம் வந்து
மேயபுவி யினில்நடக்க நீட்டிஅடி
யெடுத்துவைத்தற் கியலா ராகி
பாயின்மிசை படுத்தபடி யேகிடந்து
பகரரிதாம் துன்ப முற்றார். 403

ஆங்கில மருத்துவர்கள் காலிணைமுற்
றிலும்எடுக்க வேண்டும் என்றார்
ஓங்கருளில் நம்பிக்கை யுடையம்மை
யார்ஒருப்ப டாதா ராகி
ஆங்குமனம் குழம்பியநே ரத்திலிரு
டிப்பட்டி அண்ண லாரைத்
தேங்குபுகழ் வேளூரில் வணங்கிசட்ட
மேற்றஅம்மை சேர்ந்தார் அங்கண். 404

திருவாரூர் ஆச்சியெனும் அவ்வம்மை
    சொற்படிதன் னீரில் மூழ்கித்
திருநீறும் தீர்த்தமும்உட் கொண்டுடம்பிற்
    பூசின்நல மெய்து மென்ன
ஒருவாரில் வம்மைமன மிசைந்தியம்ப
    இவர்வாழ்க்கைத் துணைவர் சற்றும்
அருளாரிம் மொழிகளில்நம் பிக்கையிலா
    தறுவளவும் இசையா ரானார். 405

ஓரிரவில் இவர்கணவர் கனவினில்அஞ்
    சற்காரர் ஒருவர் தோன்றி
சீரியநற் றந்தியொன் றைக் கொடுக்க,அதிற்
    சந்தேக மிருப்பின் நீவே
ளூரினிற்சென் றிருடிநகர்ச் சாமியரு
    ளினைச்சட்டத் தொண்சி றப்பை
நேரினிற்கண் டறிகவென வுள்ளதுகண்
    டுணர்வுற்று விழித்தெ ழுந்தார். 406

மறுநாளில் அதிகாலை நீராடி
    வளமிகுவே ளூரிற் சேர்ந்து
மறுவில்கம லப்பிள்ளை சுப்பிரமண்
    ணியப்பிள்ளை யெனும்நல் லாரின்
அறிவுரைகள் அருளுரைகள் அன்புரைகள்
    கேட்டண்ணல் சிறப்பை யோர்ந்து
நெறியிதுநற் சிறந்தநெறி யென்றுணர்ந்து
    திருத்துறைப்பூண் டியினிற் சேர்ந்தார். 407

அருட்சட்ட நெறியினைமேற் கொண்டபினர்
    சிறிதுசிறி தாக அந்நோய்
திருவருளால் குணமாகிச் சிலநாளில்
    பூரணமாய் நிவர்த்தி யாக
மருவுபுதல் வரும்மகளும் மாண்புமிகும்
    அருட்சட்ட நெறியைப் பேணி
இருநிலத்திற் பலநலனும் எய்தியண்ணல்
    இன்னருளால் திகழ்வா ரானார். 408

இவர்கள்இலத் தருளண்ணல் திருவுருவப்
படத்தினைவைத் தினிது பூசை
தவறுதலின் றாதினந் தோறும் நலி
யாற்றிவர நோயுற்றோரும்
நுவலரும்பேய் பிடித்தவரும் பில்லிசூ
னியங்களுக்குட் பட்டுள்ளோரும்
பவமகற்று குருவருளால் போந்துவில
கப்பெற்றுப் பயனுற் றாரால். 409

செம்மையுற நாற்பத்தெட் டாண்டினிது
சட்டநெறி சிறப்பாய்ப் பேணி
மும்மைமலங் களையெரித்து முத்திநலம்
அருள்நிட்டை நாளும் போற்றி
அம்மையார் தம்தொண்ணூ றாம்வயதில்
அண்ணல்மல ரடியிற் சேர்ந்தார்
நன்மையருள் குருபதங்கள் ஞானநங்கை
யார்ப்பதங்கள் போற்றி வாழ்வாம். 410

திருத்துறைப்பூண் டியில்தோப்ப டித்தெருவில்
நிலையால யம்செய் வித்தே
அருட்சுதர்க ளானமுத்துக் குமரசா
மிப்பிள்ளை அன்பு சான்ற
மரகதவி நாயகம்நற் செல்விகங்கை
இவர்கள்மன நிறைவி னோடும்
பெருகும்அடி யவர்அன்பர் சூழக்குரு
பூஜைசிறப் பாய்ச்செய் கின்றார். 411

**கடலூர் - இராஜம் அம்மையார்**

திலகவதி யாரென்னத் திகழ்தமக்கை
யாரளித்த திருநீ றேற்றுப்
பலவுலகும் படைத்தளிக்கும் பரமசிவ
னுக்கடியா ராகி யெங்கும்
அலகிலருட் டேவாரத் தமிழ்பாடி
அருள்வழிபா டாற்றி அன்பு
நலம்விளைத்த நாவரசர் கடலினின்று
கரையேறிப் போற்றுமூராய். 412

மேலும்பல நாயன்மா ரால்பாடப்
பெற்றிவிது விளங்கு கின்ற
சீலமிகு திருப்பாதி ரிப்புலியூர்த்
திருத்த லத்தில் பாடலீசர்
ஆலயமும் திருக்கெடில நன்னதியும்
அருள்வளத்தைக் கொழிப்ப தால்அக்
கோலமிகு நன்னகர் குபேரன்நகர்
போன்றிவிது குலவு மாலோ. 413

இத்தகைய திருநகரில் திருவொடறி
வும்பெருகித் திகழு கின்ற
சித்தசுத்தி மிகுபாஷ்யம் ரெட்டியார்
சிறப்புற்று வாழ்ந்து வந்தார்
பத்திமிகும் அவர்க்கேற்ற பத்தினியாய்
ராஜமம்மை வந்த மைந்தார்
ஒத்தமன முடையவராய் உத்தமராய்
உலகினில்வாழ் வாற்ற லானார். 414

உன்னரிய தவஉருவாய் ஒளிரும்அருட்
சக்தியன்னை யார்சி றப்பும்
பன்னரும்சற் குருநாத ராம்இருடிப்
பட்டியண்ண லார்சி றப்பும்
நன்னலம்சால் அருட்சட்டச் செந்நெறியின்
தனிச்சிறப்பும் நன்க றிந்தே
பன்னலமும் பாலிக்கும் அருள்தாயைத்
தரிசித்துப் பயன்மிக் குற்றார். 415

விட்டகுறை தொட்டகுறை யெனும்வழக்குப்
போல்ராஜம் அம்மை யார்க்குச்
சட்டஅனுட் டானத்தில் மனம்நாட
அருள்தாயின் தாள் பணிந்து
சட்டநெறி மேற்கொண்டு தமதில்லம்
சேர்ந்தார்வ மோடு பேணி
மட்டிலுயர் அன்பண்ணல் பால்கொண்டு
மாணருளில் உயர்வு பெற்றார். 416

ஆண்டவர்தம் திருநீற்றைத் தம்கரத்தால்
ஆர்க்கெடுத்துக் கொடுத்திட்டாலும்
வேண்டியநற் பயனெய்தும், பிணிநீங்கும்,
வினைதீரும், நலமுண்டாகும்;
ஈண்டிடும்அவ் வூரார்க்கும் உற்றார்க்கும்
மற்றார்க்கும் இணையில்லாத
மாண்திருவாய், அருளொளியாய், வையமும்வா
னமும்போற்ற வயங்கினார்கள். 417

அற்றார்தம் துயர்கண்டு நெகிழ்மனத்தொ
டவர்க்குதவி புரிகின்றோராய்
சற்றேனும் சட்டநெறி தவறாமல்
தினம்போற்றும் தகவுள்ளோராய்
வற்றாப்பே ரருளூற்றை நனிபெருக்கும்
நிட்டையினில் களிவுற்றோராய்
நற்றேனும் பாலுமென ஞாலமிசை
அருள்வாழ்வு நடத்தி வந்தார். 418

தாம்நடத்தும் வாழ்விலையம் ஏதேனும்
உண்டாயின் தகவு சான்ற
ஞானமணி யாயிலங்கும் அருட்சத்தி
சந்நிதியை நாடிச் சென்று
தேனிறையும் மலரனைய திருவடிகள்
பணிந்தேத்திச் செய்தி கூறி
வானவரும் வியக்கவிளக் கம்பெற்று
மாளிகைக்குத் திரும்புவார்கள். 419

இம்மையினில் ஈடிணையில் சிறப்புடனும்
அருள்வாழ்வு நிகழ்த்தினார்கள்
அம்மையினில் நன்குபெற வேண்டியதெல்
லாம்பெற்று விளங்கினார்கள்
நன்மைமிகும் ஆண்மகவும் பெண்மகவும்
நன்றீன்று பிறங்கினார்கள்
செம்மைமிகு தெய்வபக்தி கொண்டவர்க
ளாய்வளர்த்துத் திகழ்வித்தார்கள். 420

எப்பணியில் ஈடுபட்டி ருந்தாலும்
உள்ளமதை இறைவன் பால்வைத்(து)
இப்படியில் அறச்செயல்கள் ஆற்றிப்பே
ரின்பமுடன் வாழ்ந்திட் டார்கள்
செப்பமிகும் உடல்நலம்குன் றியபோதும்
உறுதியுடன் மருந்தேற் காமல்
ஒப்பிலநட் சட்ட நெறி யணுவளவும்
தவறாமல் ஒழுகி னார்கள். 421

இறுதிநிலை உடற்குற்ற தெனவறிந்தும்
எள்ளளவும் பிசகி டாமல்
உறுதியுடன் உடையவன்றன் ஒண்பாத
மலரில்உளம் ஒன்றி நின்றே
அறுபகையும் இருவினையும் மும்மலமும்
அறுத்தெறிந்தா னந்த வாழ்வின்
நறுமலராய் அருட்கனியாய் இன்னமுதாய்
ஞானவொளிச் சுடரா னார்கள். 422

பற்றற்ற உளத்தவராய்ப் பர்த்தாவிற்
கேற்றபதி விரதை யாகி
அற்றவர்கட் காதரவாய் அகிலத்தார்க்
காசிரியை யாகித் தூய
நற்றவம்நா டடியார்க்கொ ரொளிவிளக்காய்
நனியிலங்கிந் நங்கை நல்லார்
பொற்றவிசிற் றிகழுடையோன் பொற்பாத
மலர்சேர்ந்து பொலிகின் றாரால். 423

அம்மையினை நன்றடக்கம் செய்தஇடத்
தினிலைந்து கரமுன் னோனைச்
செம்மையுறத் தாபித்து ராஜகண
பதியென்னத் திருப்பேர் சூட்டி
நன்மைமிக வருளெழிலார் திருக்கோயி
லமைத்துநந்த வனமுண் டாக்கி
எம்மையிலும் நலம்பயக்கும் நித்யவழி
பாடுநடக் கின்ற தம்மா. 424

வாழ்கஅவர் திருமரபு வாழ்கஅவர்
ஆற்றியபல் லறச்செயல்கள்
வாழ்கஅவர் பேணியநல் லருட்சட்டம்
மாண்புமிகும் அவர்மனைக்கண்
வாழ்கவழி வழியாக வாழையடி
வாழையென வரும்பின் னோர்கள்
வாழ்கஅருட் சட்டநெறி நனிபேணிக்
குருவருளால் வாழ்க வாழ்க. 425

**தாம்பரம் - பாலவேலாயுதம் பிள்ளை**

தருமமிகு சென்னையென வடலூர்வள்
ளல்வாக்கால் சாற்றப் பெற்ற
இருமைநலம் அருள்சென்னை மாநகருக்
கணித்தாகி யிலங்கும் ஊராம்
அருமைமிகு குணமுடையோர் வாழ் அழகார்
தாம்பரமென் றும்பே ரூரில்
பெருமைமிகும் உயர்குடியிற் பிறங்குபெற்றோர்க்
கொருமகவாய்ப் பிறந்தார் பிள்ளை. 426

பாலவே லாயுதமென் றருள்திருப்பே
ரிட்டழைத்தார் பரிவால் நாளும்
சாலவிருப் போடுணவும் தக்கபத்தி
யையுமூட்டி வளர்த்திட் டார்கள்
சீலமிகு சேய்அந்தக் காலமுறைப்
படியாங்கி லத்தில் தேர்ந்து
ஞாலமக்கள் பிணியகற்றும் மருத்துவநற்
றுறைப்பட்டம் பெற்றொ ளிர்ந்தார். 427

நல்லகுண மிகுசெல்வி யானஅகி
லாம்பிகையை நன்று வேட்டே
இல்லறத்தை நற்றூய்மை வாய்மையுடன்
நேர்மையுடன் இனிது போற்றி
பல்லறமும் இனிதோம்பிப் பண்புமிகு
நன்மக்கள் பலரை யீன்று
தொல்லுலகில் தூயவர்போற் றும்பரமன்
போன்றினிது துலங்கி வந்தார். 428

தாம்பரத்திற் கருவிலுறை பல்லாவ
ரம்சாமி போன்றோர் கூற
அம்பொருளாம் குருபரனார் தனிச்சிறப்பும்
உயர்சட்டச் சிறப்பும் கேட்டுத்
தாம்பெரிதும் ஆராய்ந்து சற்குருபற்
றற்றதவச் செம்மல் என்றும்
தாம்புவியிற் கடைப்பிடிக்கத் தக்கநெறி
சட்டமென்றும் உணர்ந்து கொண்டார். 429

பகுத்தறிவு நேர்மைமிகும் அவருளத்திற்
கேற்றவண்ணம் பவித்ர மான
ஜகத்குருவாம் குருமணியும் அப்பெருமான்
தருசட்ட நெறியும் தோன்ற
ஜகத்தில்மருத் துவப்பணியி லிருந்தோய்வு
பெற்றதற்பின் சட்ட மேற்றார்
அகத்துறையும் மனைவிஅகி லாம்பிகையும்
அருட்சட்ட அடியா ரானார். 430

நேமநிட்டை யொருசிறிதும் தவறாது
வாழ்இவர்கள் தூய வாழ்வில்
மாமணியாம் குருவருளால் வந்ததொரு
சோதனையஃ தென்ன வென்றால்
பூமிமிசை வாழுயிர்க்கு மிகச்சிறப்பா
கப்பொலியும் நேத்ரப் பார்வை
போமளவில் ஒளிகுறைந்த போதிலும்நற்
சட்டநெறி பிறழா ரானார். 431

அவரொருநன் மருத்துவரே யாயினும்ஆங்
கிலத்துறைநன் கறிந்தா ரேனும்
அவருடைய நண்பர்களும் வேறுபல
மருத்துவரும் உரைத்தா ரேனும்
அவருடைய பார்வையினி வாராதென்
றச்சப்படுத் திட்டா ரேனும்
அவர்அருட்சட் டத்துறையில் அணுவும்பிற
ழாதுறுதி யோடி ருந்தார். 432

இறைவன் அருளால்தாம்முன் இழந்தவிழி
    களிலொன்றை ஏகம் பத்துப்
மறுபடியோர் விழியைத்திரு வாரூரி
    லும்பெற்ற வன்தொண்டர்போல்
குறைதவிர்த்தாள் குருபரர்பால் கொண்டபெரு
    நம்பிக்கை யால்கண் பார்வை
மறுபடியும் பெற்றொளிர்ந்தார் கண்டஅனை
    வரும்வியந்தார் மனம்பூ ரித்தார். 433

அவர்குடும்பத் தாரடைந்த மகிழ்வினுக்கொ
    ரெல்லையுண்டோ அகிலத் தின்கண்
அவர்குருவின் அருட்கடலில் நனிதோய்ந்து
    கலந்துபரா னந்தம் பெற்றார்
அவர்குருவின் அருள்வரலா றுங்கிலத்தில்
    நன்கெழுதி அகங்கு ழைந்தார்
அவர்குருவின் அடிமலரில் இனிதுகலந்
    தானந்த மயமா னாரே. 434

அவர்வாழ்க்கைத் துணைவியராய் அமைந்தஅகி
    லாம்பிகையாம் அம்மை யாரும்
தவநிறைவார் ஞானியா ரடிகளிடம்
    அருள்நூல்கள் பாடம் கேட்டுச்
சிவக்கனியாய்ப் பண்பட்ட உள்ளமுடன்
    திகழ்ந்தவரா தலினுற் பாரில்
அவர்கணவ ரினும்தீ விரமாக
    அருள்நெறியைப்பேணி வாழ்ந்தார் 435

தமதெண்ப தாண்டுவய தளவும்அருட்
    சட்டநெறி தவறு தோம்பி
இமைப்பொழுதும் நெகிழவிடா தின்னருளார்
    குருநாதர் இணைத்தாள் பற்றித்
தமதென்ற பற்றனுவும் அற்றவராய்த்
    தண்ணருளின் மயமாய் வாழ்ந்தார்
தமதுபொருட் செலவிலருள் நகரிலெழிற்
    கட்டிடமொன் றினிதமைத்தார். 436

தமிழ்மறையா யிலகுதிரு முறைகளையே
நன்றோதித் தமைய டக்கம்
தமிழ்முறையிற் செயல்வேண்டும் என்றுதம
திறுதிவிருப் பத்தைக் கூறிச்
சமயசம ரசத்தலைவ ராவகுரு
தாள்சேர்ந்தா ரென்னின் அந்தத்
தமிழணையின் தமிழ்ப்பற்று நவிவிளங்கு
கிறதன்றோ தரணி மீதில். 437

வாழையடி வாழையென வரும்அவர்தம்
மக்கள்அருள் நெறிநிற் கின்றார்
வாழ்கஅவர் அருள்மரபு வாழ்கஅவர்
அருட்கீர்த்தி வையத் தின்கண்
வாழ்கஅவர் அறச்செயல்கள் வாழ்கஅவர்
அன்புள்ளம் வாழ்க என்றும்
வாழ்கஅவர் பேணியின்பம் பெற்றஅருட்
சட்டநெறி வாழ்க! வாழ்க! 438

## ஆதிலக்ஷ்மி அம்மையார்

பார்திகழ்பைந் தமிழ்நாட்டில் பலவளமும்
பலர்க்கும்அருள் பண்பு சான்ற
ஏர்த்தொழில்நன் றேபுரியும் இயல்வேளாண்
திருமரபில் இனிதே தோன்றிச்
சீர்திகழ் இராவ்பகதூர் இராஜாபா
தர்முதலி யாரும் ஒப்பில்
ஏர்திகழ்அம் புஜம்அம்மை யாரும்நனி
இல்லறத்தை நடத்தி வந்தார். 439

எவ்வுயிரும் இறுதியினில் எய்தவேண்
டியதிறைவன் அருளே யென்னச்
செவ்வையுற உணர்முதலி யார்அடர்ந்த
தெய்வப்பற் றுடைய ராஞர்
இவ்வுலகில் உயிரினும் மிகச்சிறந்த
தொழுக்கமெனும் கருத்துள் ளோராய்
எவ்வுயிர்க்கும் இனியவராய் இன்னுரைகள்
உரைப்பவராய் வாழ்ந்து வந்தார். 440

இவரதருள் வாழ்வினைக்கண் டவர்களிவ
ருடன்பழக விரும்பு வார்கள்
இவர்தம்வாழ் வரசியம்பு ஜம்மாளும்
இனியகுணப் பண்புள் ளோராய்
இவர்சொல்அனு வும்தவருக் காரிகையாய்
இல்வாழ்க்கை பேணி வந்தார்
இவர்களிரு வரும்மணியும் ஒளியும்போல்
மலர்மணம்போல் இலங்க லானார். 441

மங்கலமாம் மனைமாட்சி மற்றதன் நன்
கலம்மக்கட் பேறும் என்னப்
புங்கவராம் வள்ளுவனார் புகன்றமறை
மொழிக்கேற்பப் புவியின் கண்ணே
துங்கமிகு மலரிரண்டு பூத்தன,ஒன்
றுமுகத் தோன்றல், பின்னர்
தங்கம்நிகர் குணம்மிக்க ஆதிலக்மி
யெனும்நங்கை ஜனித்தார் நன்றே. 442

பெற்றவர்தம் நிறைகுணங்க ளைப்பூண்ட
பெட்புடைப்பெண் மணியே யாகி
நற்றவம்சால் ஞானியார் அடிகளிடம்
அருள்நூல்கள் பாடம் கேட்டே
உற்றபண்பார் இராவ்பகதூர் அரங்கசா
மிப்பெயர்கொள் முதலி யாருக்[கு]
அற்றமில்இல் லத்தரசி யாயமைந்தின்
னருள்வாழ்வு நடத்த லானார். 443

அருள்நிலையிற் கனிந்திருந்த அம்மையா
ரின்கணவ னாரும் தூய
அருள்நூல்கள் பயிற்சிஉடை யவராகி
ஆன்மபரி பாகம் பெற்றார்
அருளம்மை முன்னை நல்வினைப்பயனால்
குருபரனார் அவனிக் கீந்த
அருட்சட்டச் செந்நெறியைப் பற்றிப்பலர்
புகழ்ந்துரைப்ப அன்பாய்க் கேட்டார். 444

கற்பூரம் போன்றபக்கு வம்படைத்த
அம்மையார் கருணை சான்ற
பொற்பார்சற் குருநாதர் நெறியினைஞா
னப்பொலிவார் கூடராய்க் கண்டார்.
சிற்போதக் குருபரனார் துணைகொண்டு
திருவருட்சட் டம்கைக் கொண்டார்
கற்போரும் கற்றோரும் வியக்கஅருள்
நிலையிலுயர்ந் தொளிர லானார். 445

நித்தியகர் மங்களைக்கற் றிடவேண்டும்
நெறிதவறா தொழுகல் வேண்டும்
சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்தவ
நிட்டைநிதம் பேணல் வேண்டும்
பத்தியமாய் ஆகார நியமங்கள்
கடைப்பிடிக்க வேண்டும் தூய
முத்திநெறி யிதென்ன உணர்த்துசட்ட
முறையுன்னி மகிழ்வா ருள்ளம். 446

ஞானியார் அடிகளிடம் பயின்றஅருள்
நூல்களின்நற் சார மெல்லாம்
ஞானகுரு நாதர்அருட் சட்டநெறி
யின்கண் அமைந் தொளிரல் கண்டார்
ஊனுடலை உயர்கோயி லாக்குநெறி
யிதென்ன உளத்துட் கொண்டார்
மோனநிட்டை நாள்தோறும் தவறாமல்
முறையோடும் பேணி வாழ்ந்தார். 447

இவர்தம்திரு வருள்விளக்கம் இவர்முகத்தில்
இவருடம்பிற் பொலிந்த தாலும்
இவர்தம்திரு வருள்வாழ்வு கண்டவரை
இவர்பால்நன் றீர்த்த தாலும்
இவரிடத்திற் பலர்அணுகித் தம்குறைக
ளைக்கூறி வழிகேட் பார்கள்
இவரிடத்திற் பலர்அணுகிப் பிணிதீரத்
திருநீறு தருகென் பார்கள். 448

அவரவர்தம் குறைதீர அருளைநினைந்
தருளுரைகள் அருள்வார் அம்மை
அவரவர்தம் பக்குவத்திற் கேற்றபடி
விடைகூறி அனுப்புவார்கள்
அவரவர்கட் குற்றசிக்கல் எவ்வாறே
திருவருளால் அகன்று நீங்கும்;
அவரவர்தம் பிணியகல அருள்திருநீ
றினிதருளி யனுப்புவார்கள். 449

குறைதவிர்க்கும் கோமகனாய்ப் பிணிதவிர்க்கும்
பேரொளியாய்ப் பிறங்கினார்கள்
மறைமுடிவை நன்றுணர்ந்த மாஞான
மணிவிளக்காய் வயங்கினார்கள்
நிறைமிகுத்த நின்மலையாய் நெறியுணர்ந்த
வல்லவராய் விளங்கினார்கள்
இறைவனருட் பெருஞ்சுடராய் எவர்க்கும்நலம்
விளைப்பவராய் இலங்கினார்கள். 450

கல்விநலம் செல்வநலம் மிகுந்தமக்கட்
பேறெய்திக் காசினிக்கண்
நல்வளங்கள் பலசிறக்க ஞானமணம்
கமழ்வாழ்க்கை நடத்தினார்கள்
தொல்வினையின் வலியறுத்துத் தூயபர
மானந்தம் துய்த்திட்டார்கள்
பல்வரமும் தருகுருபோல் பார்வாழும்
உயிர்கட்கருள் பாலித்தார்கள். 451

ஒருநாளில் ஒருசிலர்வந் தொருசிறிய
சேயைஇவர் முன்கிடத்தி
அருகிற்கிடந் திட்டவொரு சிமையக்குழந்தை
விழுங்கிவிட்ட தென்றும் எந்த
மருத்துவரும் அதைவெளியாக் குதற்கியலா
தென்றுரைப்ப தாயும் கூறி
அருள்துணையால் சேயினைக்காத் தருள்கவென
வருத்தமுடன் முறையிட்டார்கள். 452

என்னசெய்வ தென்றறியா இறைவன்திரு
வருள்துணையென் றிதயத் தெண்ணிப்
பன்வருஞ்சீர்க் குருவுருவப் படத்தெதிரிற்
குழந்தையினைப் படுக்க வைத்து
மன்னுதிரு வருள்நாடித் திருநீறு
பூசியருள் தீர்த்தம் நல்கி
உன்னரிய முறையிலுரு கிப்போற்றி
உயரன்பால் வேண்டி னார்கள். 453

ஒருசில விநாடிகள் கழிந்ததற்பின்
அக்குழந்தை மலத்தி னூடே
மருவுபல ரும்வியப்ப ஊசிவெளி
வரப்பெற்றோர் மகிழ்வுற் றார்கள்
குருபரனார் திருவருளின் மகிமைநினைந்
துளம்குளிரப் போற்றி னார்கள்
அருள்துணையால் ஆகாத துண்டோஎன்
றுருகியம்மை இறைஞ்சி னார்கள். 454

அருள்நகரில் உளஇருடிப் பட்டியண்ணல்
மாணவர்கள் விடுதி யின்கண்
ஒருசமைய லறையினிது கட்டுவித்தல்
வேண்டுமென உளத்திற் கொண்டு
பொருளுதவி புரிந்ததனைப் பொலிவோடு
நன்றமைத்துப் புகழ்பெற் றார்கள்
அருள்நலமும் பொருள்நலமும் அமைந்தஇவர்
அருள்வாழ்வு சிறந்த தாமால். 455

அரண்தருநல் லொளிவிளக்காய்த் திகழ்ந்தஇவர்
ஆண்டவர்சே வடிம லர்க்கண்
இரண்டறக் கலந்தார்கள்; இயம்பரிய
மனவுறுதி மிகுந்த ஊக்கம்
திரண்டஇறை யன்பிகை யொருங்கமைந்த
இவர்பாதம் சிரமேற் சூடி
இருண்டவினை வலியகற்றி இணையில்பர
மானந்தம் எய்தி வாழ்வாம். 456

### ஆ. நரசிம்மலு நாயுடு சுவாமிகள்

அருள்மிகுந்த இருடிநகர் அண்ணலால்
ஆட்கொள்ளப் பெற்ற சீரார்
அருளடியர் பலஇனத்தர் பலவூரார்
பலமொழிகள் பேசு கின்றோர்:
தெருள்மிகும்அத் தகையோருள் தலைசிறந்தோர்
தேசிகனார் தனிச்சி றப்பும்
அருட்சட்டர் சிறப்புமிந்த அவனியறி
யச்செய்த அருஞ்சீ ராளர் 457

அருள்நம்பி யாரூர ரைச்சிவனார்
ஆட்கொண்ட வெண்ணெய் நல்லூர்க்
கருகுள்ள திருமழுவ ராயநல்லூர்
எனும்ஊரில் ஆந்தி ரத்தைப்
பெருகுறுதாய் மொழியாக உடையாதி
நாயுடுவின் பிரியச் சேயாய்
திருவாளர் நரசிம்ம லெனும்செம்மல்
தோன்றிநனி வளர்ந்து வந்தார். 458

திருவெண்ணெய் நல்லூரில் உள்ளஉயர்
பள்ளிக்குச் சென்று நாளும்
திருவார்கல் வியையினிது பயின்றுவரும்
போதிவர்முன் செய்த வத்தால்
அருளண்ணல் அவ்வூருக் கெழுந்தருளி
ஆங்குள்ள அடியார்க் கெல்லாம்
அருட்காட்சி நல்கினர்பள் ளிச்சிறுவ
ரோடிவரும் சென்று கண்டார். 459

ஒருசிலஆண் டகன்றதற்பின் ஒருநாள்வண்
டியில்அண்ணல் செல்லும் போது
மருவுபெண்ணை மாநதியின் கிளைநதியாம்
வரத்தாற்றைக் கடக்க நேர
வருசிலமா ணவரொடுநம் செம்மலும்அவ்
வண்டியினைப் பற்றி வந்தார்
சொரியுமழை வரவண்டி நிற்கஅதன்
கீழமர்ந்தார் சிறுவர் அங்கண். 460

அண்ணல்திரு வடிகளுக்கு நேர்கிழே
அமர்பேறு செம்மல் பெற்றார்
அண்ணலருட் சட்டநெறிக் குரியபணி
ஆற்றஅன்ருட் கொண்டார் போலும்!
அண்ணலருட் சட்டநெறி யிளேப்பின்னர்
அருள்துணையால் ஏற்ருர் *செம்மல்
அண்ணல்திருச் சாத்தனூர்க் குறும்போது
சென்றுசேவிப்பார் அன்பால். 461

ஒருமுறைநற் சாத்தனூர் மாளிகையின்
மாடியில்ஓய் வெடுத்துக் கொண்ட
அருளண்ணல் அடிமலரைச் செம்மல்மெது
வாய்வருடிக் கொண்டிருந்தார்
அருளண்ணல் "சாமியென்ன நினைக்கு"தெனச்
செம்மலேயன் போடு கேட்க
வெருவுற்றப சாரமெதோ செய்துவிட்டோம்
போலுமெனச் செம்மல் அஞ்சி 462

"ஒன்றுமில்லை சாமி"என, இவரைக்குரு
பரர்நோக்கி "உபசா ரங்கள்
நன்றுசெய இப்பெரிய மாளிகையி
லுளசாமி நம்வீட் டுக்கும்
நன்றுவரு மோஎன்ன நினைக்குதது
தானே"என் றினிது கூறி
"என்றுமவ்வா றெவருமெண்ண வேண்டியதே
யிலை"யென் றுள் ளன்பாற் சொன்னார். 463

"சாமிமச்சு வீட்டுக்கும் போகும், குச்சு
வீட்டுக்கும் போகும் என்றும்
ஓமுருக்கொள் உடையவன் பணக்காரர்
பங்காள ருயு ளானே
பூமியினில் உறுமேழை பங்காள
னுயுளனே" எனப்புகன்றார்
மாமகிழ்வுற் றுச்செம்மல் அண்ணலார்
மலரடிகள் வணங்கி நின்றார். 464

* செம்மல்-திரு- நரசிம்மலு நாயுடு சுவாமிகள்

முன்செயுநல் வினைப்பயனால் இல்லறப்பண்
புகட்கேற்ற முறையில் உள்ள
பொன்செய்குண வதியான பாலாம்பாள்
இவர்வாழ்க்கைத் துணைவி யானார்
மன்செய்குணப் பெண்மணிகள் இருவருமோ
ராண்மகவும் தோன்றி னார்கள்
நன்செய்தரு பயிர்போல மூவரும்நற்
சட்டநெறி யினிற்பி றந்தார். 465

அண்ணலருள் வரலாற்றை அருட்சட்டச்
சிறப்பைப்புவி அறிந்து போற்ற
அண்ணலருட் பாடல்களை அடியரன்பர்
அன்போடும் பாடி யுய்ய
அண்ணல்அருள் துணையால்நன் றெழுதியினி
தச்சிடுதல் வேண்டு மென்ன
அண்ணலுற்ற பலவூர்க்குச் சென்றுசெய்தி
களையுணர்ந்து சேக ரித்தார். 466

அண்ணலருட் குருபூஜை மார்கழியில்
அனுடத்தில் நடக்கும் காலை
எண்ணில்அடி யார்கள்திரண் டிடுவரந்த
நன்னாளில் இவர்சென் றங்கே
புண்ணியம்சால் அடியரொடும் ஊர்மக்க
ளொடும்புனித உரைக ளாடி
அண்ணலின்பெற் றோர்கள்நிலை அவதாரச்
சிறப்புமுத லியவு ணர்ந்தார். 467

அண்ணலுடன் தாம்சென்ற வேலூர்வா
ணியம்பாடி யாதி யூர்கள்
நண்ணியண்ண லால்பாடப் பெற்றஅருட்
பாடல்களைத் தொகுத்து வந்தார்
அண்ணலருள் மிகுபிள்ளை யார்குப்பத்
தருட்சக்தி யன்னை மூலம்
தண்ணளிசால் திருச்சாத்த னூர்நம்பி
மூலம்பல தெரிந்து கொண்டார். 468

அருட்காஞ்சி மாநகரிற் குடியேறித்
திருஞான சம்பந் தப்போர்த்
தெருளார்நற் றமிழாசி ரியரைக்கண்
டண்ணலருட் பாடல் யாவும்
அருளடியார் குருபரரைத் துதித்துப்பா
டியபாடல் களையும் காட்டி
இருஞாலத் தச்சேற்றத் தக்கபடி
தெளிவாக எழுதச் செய்தார். 469

நன்முறையிற் குமரன்அச்ச கத்தினிற்றந்
தச்சேற்றிக் கொண்ட பின்னர்
நின்மலராம் குருநாதர் வரலாற்றை
அடியர்மனம் நெகிழும் வண்ணம்
செம்மையுற எழுதித்தர வல்லவர்ஆர்
எனவினவ அச்ச கத்தின்
நன்முதல்வர் குப்புசா மிப்பெயர்கொள்
முதலியார் நவில லானார். 470

நன்றெழுதித் தரவல்ல நண்பருளர்
நானவரைக் காட்டு கின்றேன்
துன்றுபல வேலைகளுக் கிடைபொறையொ
டிருந்தெழுதிக் கொள்ளல் வேண்டும்
என்றுசென்னை சைதையினில் நகராட்சி
ஆணையராய்ப் பணிபு ரிந்த
பொன்றலில்சீர்க் ஸ்ரீ-ராம லிங்கனார்
பாலழைத்துக் கொண்டு சென்றார். 471

அவரையறி முகப்படுத்தி வைத்தபினர்
தமதலுவல் பார்க்கச் சென்றார்
தவநெறிபேண் செம்மலத்தக் கார்இலத்தில்
ஆறுதிங்கள் தங்கி நந்தம்
பவமறுத்தாள் குருநாதர் வரலாற்றைச்
சட்டநெறிப் பண்பை நன்றே
அவர்க்கோய்வு கிடைக்கும்போ தினிதுரைப்பார்
ஐயமுறின் தெளிவு செய்வார். 472

ஆயிரத்துத் தொள்ளாயிரத் தைம்பத்
தாறுவ தாண்டில் எட்டாம்
தாயமதி யினில்ஐந்தாம் தேதியினில்
நற்றொடர்பு கொண்ட செம்மல்
ஏயஅவர் அன்புமுகம் இளங்குழவி
யனையகுணம் இன்சொல் கண்டு
மேயஇவ ரேஎழுதத் தக்காரென்
றனைத்தும்நனி விளம்பி வந்தார். 473

இப்படியும் நேற்றியுண்டோ எனவியந்து
நனிகேட்டி ராம லிங்கர்
ஒப்புயர்வில் குருபரனார் வரலாற்றை
உயர்சட்டச் சிறப்பை யெல்லாம்
செப்பமுறக் கேட்டினிது குறிப்பெடுத்துக்
கொண்டபினர் சீர்சால் சட்டம்
இப்படியிற் சிறந்ததெனத் தாமேற்றுக்
கொண்டினிய அடியா ரானார். 474

உடையவன்றன் அருட்கொடியிங் கேநாட்டப்
பெற்றுளதென் றெண்ணி ரண்ணல்
தடையில்பெருங் கருணையினல் உரைத்தவண்ணம்
திருச்சாத்த னூர்வாழ் நம்பி
யிடம்நிகழ்ச்சி திருவருளால் நடக்கஅவ்வா
றருட்கொடியைச் சாத்த னூரில்
நெடியதிரு மாளிகையின் மீதினிது
ராமலிங்கர் ஏற்றி னாரால். 475

தேனினைவென் றிடுமொழியும் அமுதினைவென்
றிடுகுணமும் சேர்ந்து மேவும்
ஞானவொளிச் சுடரெனும் இராமலிங்க
னார்பண்பைக் கண்ட போதே
ஞானகுரு பரர்சரிதம் எழுதத்தக்
காரென்னச் சத்தி யன்னை
வானுயர்சீர் திருச்சாத்த னூர்நம்பி
மாண்புறநன் றுணர்ந்து கொண்டார். 476

அருட்கொடியை இனிதேற்றி அக்கொடியின்
நீழலில்நன் றமர்ந்த வண்ணம்
அருட்சக்தி யன்னைஇருச் சாத்தனூர்
நம்பிநர சிம்மச் செம்மல்
தெருட்பெருஞ்சீர் இராமலிங்கர் நால்வரும்நன்
றேகலந்து சிறந்த தூய
பொருட்பிறங்கு வழிகாட்டும் வான்பொருளாம்
புனிதநன்னூல் உருச்செய் தாரால். 477

குருபரர்போந் தினிதாண்டு கொண்டதிறம்
அவர்அருளால் அடியார் எய்தும்
பெருநலங்கள் அருளனுப வங்களில்சொல்
லத்தகுந்த தனைத்தும் நன்றே
அருளனையும் இருச்சாத்த னூர்நம்பியும்
அன்போடு சொல்லச் சொல்லப்
பெருமகிழ்வொ டும்கேட்டி ராமலிங்க
னுரினிது குறித்துக் கொள்வார். 478

மனவுருக்க முடன்கேட்டு மாண்புறச்சிந்
தித்தினிது குறித்துக் கொண்டே
தினம்தினமும் செழுந்தமிழிற் சிறந்தசொற்க
ளால்நல்வளம் செறிந்த நூலாய்
உனுமுன்அடி யார்க்கருளும் உயர்ஞான
குருநாதர் அருளி னாலே
இனியகுணச் சீரடியார் அன்பரெலாம்
போற்றும்வணம் எழுதி னரால். 479

ஒருநொடியும் பிரியாமல் உடனிருந்தா
வனஅனைத்தும் உண்மை யன்பால்
அருள்நலம்சால் மூவருக்கும் இதமுறநன்
ருற்றியிந்த அருளார் நூலை
இருநிலமும் உயர்வானும் நனிபோற்று
மாறினிதே எழுதச் செய்த
நரசிம்மச் செம்மலின்நன் முயற்சியும்பே
ருழைப்பும்நம்மால் நவிலற் காமோ? 480

அன்றவ்வா றரும்பெரும்மு யற்சிசெய்து
பேரன்பி னோடு ழைத்து
நன்றந்த வழிகாட்டும் வான்பொருளாம்
நூலையெழு தாதி ருந்தால்
இன்றண்ணல் அருட்சிறப்பைச் சட்டநெறி
யின்சிறப்பைத் தமிழ்நாட் டாரும்
துன்றுபிற நாட்டாரும் அறிந்துய்யும்
வாய்ப்பெவ்வா றமையும் அம்மா. 481

செய்திகளைச் சேர்ப்பதற்செல் லாதுர்க்கும்
சென்றிடவும் சேர்த்த பின்னர்
உய்திதரு நூல்வடிவில் உருவாக்கி
அமைத்திடவும் உடலு ழைப்பும்
பொய்தவிர்மெய் யூக்கமும்நற் பொருட்செலவும்
அனைத்தும்அவ ருடைய தாகும்
செய்வதற் கருஞ்செயலாம் இதுசெய்த
செம்மலின்சீர் சிறந்த தன்றோ? 482

அச்சிட்ட புத்தகங்க ளைச்சிரமேல்
தாங்கியடி யாரில் லங்கள்
நச்சிச்சென் றவரவர்க்கந் நூற்சிறப்பை
விளக்கிக்குரு நாதர் சட்டம்
எச்சிக்கும் தீர்த்துவைக்கும் இன்பமெலாம்
எய்துவிக்கும் எனநன் றோதி
நற்சட்டப் புத்தகத்தைத் தருவர்விணும்
நானிலமும் வாழ்த்து மாறே. 483

அருட்சட்ட நெறியினைமேற் கொள்ளும்அடி
யார்கள்பிறர் அறியா வண்ணம்
குருபரர்க்கும் தமக்கும்உள அருளுறவை
அவ்வுறவாற் பெருநலத்தை
ஒருவருக்கும் வெளியாக்கா துளத்தினிற்கொண்
டின்புறுதல் வேண்டு மென்னும்
அரியபெருங் கொள்கைமிக உடையவராய்
அருட்செம்மல் வாழ்ந்து வந்தார். 484

### சங்கம்

ஆயிரத்துத் தொள்ளாயி ரத்துநாற்
பான்நான்காம் ஆண்டில் ஞானம்
பெருகச்சி மாநகரில் இருடியர்பட்
டிச்சாமி பெயரால் சங்கம்
நாயனர்கள் போற்றநனி நிறுவிஅதை
அரசினர்சட் டத்தின் வண்ணம்
பதிவும்செய்தார் இனியபல
அருட்பணிகள் இயற்றி வந்தார். 485

### மாணவர் விடுதி

அன்னைபிதா அற்றசிறு வரைச்சட்ட
நெறியினில்அன் பொடுவ ளர்த்து
பன்னுகல்வி வளம்உடைநல் லுறையுள்முத
லியவசதி யாவும் நல்கி
நன்னலம்சால் வாழ்வாற்றத் தக்கவராக்
கிட வேண்டும் என்ன உன்னிப்
பன்னருநற் பாடுபட்டு மாணவர்கள்
விடுதியொன்றை இனித மைத்தார். 486

இருடியர்பட் டிச்சாமி திருப்பெயரால்
இனிதமைத்தவ் விடுதி தன்னை
பெருமுயற்சி யோடும்அருள் துணைகொண்டெப்
படியோ பராம ரித்தார்;
திருவனைய அவர்மனைவி கணவர்மனம்
கோணுநற் செல்வி யாராய்
மருவுமச் சிறுர்களைப்பே ணும்திறனை
வாய்கொண்டிங் குரைத்தற் காமோ? 487

### அருட்கொடிப் பள்ளி

அண்ணலார் அவர்க்களித்த அருட்குறிப்பின்
வணம்நன்கு ராய்ந்து நோக்கி
வெண்ணெய்நலூர்ப் புகைவண்டி நிலையத்துக்
கடுத்துள்ள இடத்தை வாங்கி
அண்ணலருட் சங்கமொடு மாணவர்கள்
விடுதியையும் அங்க மைத்துப்
புண்ணியம்சால் அவர்ஐந்தாம் வகுப்பொடருட்
கொடிப்பள்ளி துவக்கி னரால். 488

குருபரனார் அருளாலும் திருச்சாத்த
னார்நம்பி உதவி யாலும்
அருட்கொடிப்பள் ளியைஎட்டாம் வகுப்பொடுள
உயர்துவக்கப் பள்ளி யாக்கி
தெருட்பெருங்கல் வியையூட்டிச் சீர்திகழ்நற்
றிருவருட்கல் வியையு மூட்டி
மருட்பகையை விலக்கிஉயர் மாஞானச்
செல்வம்வள ரச்செய் திட்டார். 489

கட்டிடங்கள் பலகட்டிக் காவனங்கள்
பலஅமைத்துக் கருணை சான்ற
சட்டநெறி யினைவளர்த்துத் தகவுபெற
இளஞ்சிறுவர் களைநன் றாக்கிச்
சிட்டர்குழாம் பெருகக்கண் டுள்ளத்திற்
பெருமகிழ்வு பொங்கி யோங்க
மட்டிஓய ரன்போடும் விருந்தோம்பி
அடியவரை உபச ரிப்பார். 490

அருள்நகரென் றவ்விடத்திற் குப்பெயரிட்
டழைத்ததனுக் கேற்ற வண்ணம்
அருளண்ணல் சங்கம்,மா ணவர்விடுதி
பள்ளியெலாம் அமைத்த தன்றி
அருளுருவார் மாணிக்கவி நாயகர்நன்
றமர்கோயி லையும்அ மைத்தே
அருள்மணம்எங் கும்பரவச் செய்துளஅவ்
வருளாளர் கழல்சே விப்பாம். 491

வாழ்வினில்எத் தகையஇடை யூறுறினும்
நலமுறினும் எல்லாம் அந்தக்
கேழ்கிளர்மெய்ஞ் ஞானகுரு பரனருளால்
நடப்பதென உவப்போ டேற்பார்
ஊழ்வினையை வெலும்திறனும் வழங்கவல்ல
ஒப்பிலருள் வள்ளல் அன்பில்
மூழ்கிப்பவ மகற்றுதல்நம் கடனென்ன
முத்தரைப்போல் அமைதி கொள்வார். 492

வேறு

அருட்சட்ட நெறியை அன்புடன்பேணும்
அடியவர் வாழிடங் கட்குத்
தரணியில் நடந்தும் சென்றவ ரோடு
தக்கநல் தொடர்புகொண் டினிதே
அருட்டிரு நெறியில் ஐயங்கள் நீக்கி
அருள்விளக் கம்கொடுத் தூக்கி
அருளுடன் பொருளும் அன்பும்நல் லறமும்
வளர்வுறத் துணைபுரிந் திடுவார். 493

அடியவர் பணியே ஆண்டவர் பணியென்
றனுதினம் அகமுறக் கருதிப்
படிமிசை மேலாம் அடக்கத்தி னோடும்
பணிவொடும் பண்புற நடந்து
தடையறு மன்பும் சீலமும் மேலாம்
சால்பும்கொண் டொழுகிய செம்மல்
அடியவர் களுக்கோர் அருள்மணி விளக்காய்
அருள்மய மாய்ப்பொலிந் தனரால். 494

குருபர னார்தம் கோயிலை முதலிற்
கோநில்சாத் தூரினில் வாழும்
திருமிகு சாமி நாதப்பேர்ப் பிள்ளை
யொடுகலந் தினிதுபே ணினர்பின்
அருள்துணை கொண்டு குருபரர் கோயிற்
பணிகளை அன்புடன் புரிந்தார்
திருத்தளி மேன்மை யுற்றனி நாடும்
சிந்தனை மிகக்கொடு திகழ்ந்தார். 495

திருவிகல் யாண சுந்தரர் சச்சி
தானந்தம் பிள்ளைபேரன் ரூர்க்கும்
இருடியர் பட்டி யண்ணலார் சிறப்பும்
அருட்சட்டச் சிறப்பும்நன் றோதி
அருள்வழி காட்டும் வான்பொரு ளரங்கே
றிடப்புரி அருட்செம்மல் தூய
திருவடி பரவிச் செறிவினை யகற்றிச்
செப்பரும் பேரின்பம் துய்ப்பாம். 496

உடல்பொரு ளாவி அனைத்தையும் அண்ணற்
கொப்படைத் தின்னருட் சட்டம்
படிமிசை யேற்ற நரசிம்மச் செம்மல்
பாங்குடன் அத்திரு மொழியை
முடிவுறு காலம் வரையினிற் காத்து
முத்தர்கள் வாழ்த்திட அண்ணல்
அடிமலர் சேர்ந்தா னந்தவி டடைந்தார்
அவரடி மலர்நிதம் துதிப்பாம். 497

வேறு

அருளடியர் இடத்தண்ணல் அற்புதம்பல்
லாயிரம்செய் துள்ளா ரேனும்
ஒருசிலவே இதுகாறும் நாம்கண்டோம்
உளம்களித்தோம் இஃதி றைவன்
திருவுளம் இருந்தவணம் அமைந்ததெனக்
கொண்டுபிற செய்தி யாவும்
அருளடியர் மூலம்உணர்ந் தானந்த
மெய்தல்நல மாகு மன்றே. 498

அண்ணலிடம் நெருங்கியநற் றொடர்புடைய
அடியர்பலர் இருத்தல் கூடும்;
திண்ணியமெய்ப் பக்திஉயர் ஞானநிலை
பெற்றவரும் இருத்தல் கூடும்;
புண்ணியம்சால் அவர்வாழ்வைப் புரிந்துமுறை
யோடெழுத வில்லை யென்ன
எண்ணுதலில் லாதிதன்கண் உள்ளதுணர்ந்
தினிதாசி யருள்வீர் நன்றே. 499

ஆக செய்யுள் 4545

## 6. சர்வ சமய சமரசப் படலம்

### விநாயகர் துதி

அருளெனும் உருவோ டனைத்துயிர்க் குள்ளும்
அமைந்திவி நியக்கும்முன் னவனை
தெருளருள் சமய மனைத்திலும் திகழ்ந்து
திருவருள் புரியுமைங் கரனை
உருள்புவி மிசைசற் குருபரர் திருமுன்
உற்றருள் ஒமுரு வினனை
பொருள்மிகு மதுரை வைகைதென் கரைவாழ்
பூரணப் பொருளையேத் திடுவாம். 1

### குருநாதர் துதி

காணுதற் கரிய கடவுளைக் கண்முன்
காட்டியாள் கருணைசான் றவனை
பேணுதற் குரிய திருவருள் நெறியைப்
பேரரு ளால்வழங் கிறையை
மாணருட் சட்டநெறிகடைப் பிடிக்கும்
மன்னுயிர்க் கினியநற் றுணையை
ஆணவ மாயா கன்மம்சுட் டெரித்தாள்
அருட்குரு மூர்த்தியைத் துதிப்பாம். 2

### அடியவர் துதி

அற்பு தக்குரு நாதர் அருளிய
பொற்பு சால்அருட் சட்டம் புவியிற்பேண்
நற்ப ரிவுடைப் பக்தர் நளினத்தாள்
உற்ப வம்மரிப் போட்டப் பணிந்துய்வாம். 3

### சமயங்களின் பொதுத் தன்மை

அலகில் உல கங்களையும் படைத்துக்காத்
தழித்துமறைத் தருள்வோ னுக
நிலவுபரன் ஒருவனுளன் அவனருளால்
உயிர்களெலாம் நிலமேற் றேன்றி
உலவுவன ஆகும்; அவன் அலகிலருள்
விளையாட்டால் அனைத்தும் செய்வான்
இலகிடுமா னிடர்அறிவால் அளந்தறியொ
ணுதவன்பே ரியல்பை யம்மா. 4

எங்குமெந்தப் பொருளினுளும் உளனையும்
இலனையும் யாவற் றுள்ளும்
நன்குகலந் தும்கடந்தும் பொலியும்அவன்
இயல்பினைநாம் நவிலற் காமோ
இங்குநம்மால் கூறிடவும் உணர்ந்திடவும்
இயலாதென் பதனால் அந்தப்
புங்கவன்றன் துணையின்றி வாழாற்றல்
புவியின்மிசை யெவர்க்கு மில்லை. 5

அவனோடு கலந்(து)அவன்றன் இயல்படைந்து
வாழவும்பே ராற்ற லில்லை
அவனின்றி வாழ்ந்திடவும் அவனோடு
வாழ்ந்திடவும் இயலா துள்ள
புவனியுயி ரினம்தந்தை யெத்தகையன்
எனவுணர்ந்தா லன்றோ தாம்நன்(று)
அவன்சேய்க ளாய்வாழற் கியலுமென
நினைந்தாரஃ துணர்ந்த மேலோர். 6

முன்னோர்தம் நூல்களைக்கொண் டுணரவுன்னிச்
சிலவுயிர்கள் முனைந்து காணும்;
பன்னாளும் கண்டுமுற்றும் உணர்ந்துநனி
பேணுதிறன் சிறிது மின்றி
என்னோநாம் செயற்கியலும் என்றுன்னிச்
சிலஉயிர்கள் திகைத்து நிற்கும்;
கொன்னேவாழ் நாள்கடத்தி உண்டுறங்கிப்
பலஉயிர்கள் மயற்கு ளாழும். 7

இவ்வாறுன் மாக்கள்படும் இன்னலைக்கண்
டிரக்கமுற்ற அருட்சான் றோர்கள்
எவ்வாறா யினும்இவர்கட் கிறையருளூட்
டிடவேண்டும் எனும்பே ரன்பால்
செவ்வாய்மை மிகுநெறியால் தாம்பெற்ற
இன்பவனு பவத்தைச் செப்ப
அவ்வாறு பலர்பலகா லத்துரைக்க
அவைமதங்க ளாயிற் றன்றே. 8

ஒவ்வொருகா லத்துலகில் ஒவ்வொருநற்
கொள்கைதலை சிறந்து தோன்றும்
அவ்வப்பொழு திவில்வாழும் மக்களைச்சீர்
திருத்தியது பயன்மிக் கூட்டும்
செவ்வியமற் ருெருகொள்கை மற்ருெர்சம
யம்தோன்றிச் சிறப்புண் டாக்கும்
ஒவ்வொருநற் சமயமும்இப் புவியுயிர்கட்
குயர்வூட்டல் உண்மை யாமே. 9

அருளாளர் கொள்கைகள்எக் காலத்துக்
கும்பொருத்த மாயி ருக்கும்
அருளாளர் கொள்கைகளெல் லாம்முடிவில்
ஓரிடத்திற் கழைத்துச் செல்லும்
அருளாளர் கொள்கைகளெல் லாம்ஆன்ம
வர்க்கத்தின் அல்லல் தீர்க்கும்
அருளாளர் கொள்கைகளெல் லாம்உண்மைப்
பேரின்பம் அருளும் அம்மா, 10

ஒருமலையில் ஏறுதற்குப் பலஇடத்திற்
பலவழிகள் இருத்தல் போலும்
ஒருநகருட் செல்வதற்குப் பலதிசையிற்
பலபாதை இருத்தல் போலும்
ஒருதுளத்தி லிறங்குதற்குப் பலதிசையிற்
படித்துறைகள் இருத்தல் போலும்
ஒருபொருளை யடைவதற்குப் பலமதங்கள்
பலவழியைக் கூறு மாலோ. 11

ஒருபொருளைப் பலமொழியிற் பலபேரிட்
டுக்குறித்தல் போன்று மக்கள்
ஒருபொருளைப் பலமதத்திற் பலபேரிட்
டுப்போற்றிப் பயன்பெற் ருர்கள்
ஒருநெறியை நாம்பற்றிப் பயனுறுவோம்
உலகின்மிசை யுள்ள வேறு
திருநெறியை மனத்தாலும் நிந்திக்கா
தருளெய்திச் சிறந்துவாழ் வோம். 12

பலசமயங் களுமொன்றும் பரம்பொருளை
யேகுறிக்கோ ளாகக் கொள்ளும்
பலசமயங் களும்பக்தி ஞானநெறி
வேண்டுமென்றே பகர்ந்து செல்லும்
பலசமயங் களும்தீய பழக்கமெலாம்
விட்டொழிப்பீர் என்றே சொல்லும்
பலசமயங் களும்சிறந்த பரமானந்
தம்பெறவே வழியைக் காட்டும். 13

சைவமும்வை ணவமுமிரு கண்களெனத்
தாரணியில் திகழ்ந்து மேவும்
உய்வழிநன் றேயுணர்ந்து வாழ்வாற்று
கென்றிஸ்லா மியம்நன் றோதும்
செய்வதெலாம் திருத்தமுறச் செய்திடல்நன்
றெனக்கிறித்து சமயம் செப்பும்
வையமிசை யிவைநான்கும் சொலும்சாரம்
வளமுறச்சற் றறிவோ மிங்கண். 14

சைவம்

பிறவொன்றின் உதவியின்றித் தானறியும்
அறிவுமய மாம்இ றைவன்
அறிவித்தால் அறியும்அறி விக்காவிட்
டால்அறிய மாட்டா ஜீவன்
அறிவித்தி டினும்அறிய மாட்டாத
சடமென்ன மூன்றுண் டென்றே
அறிவருளன் பிற்சிறந்த பெரியோர்கள்
அனுபவத்தால் அறிந்து ரைத்தார். 15

பதிபசுபா சப்பெயரால் இம்மூன்று
பொருள்களையும் பகர்ந்துள் ளார்கள்
பதிபசுபா சம்மூன்றும் என்றுமிருப்
பதனால் அனாதி என்பர்
பதிதனியாய்த் தூயவராய்த் திகழ்வர்;உயிர்
மேற்பாசம் படிந்து நிற்கும்;
துதைமாசு நீங்கினன்றி உயிர்தூய்மை
யெய்தியின்ப முறலா காதாம். 16

பசுவிதொன் றியபாசத் தைப்பசுவே
நீக்கிக்கொள இயலா தாகும்
பசுவிதொன் றியபாசத் தைக்களைய
வல்லவர்நற் பதியே ஆவர்
பசுக்களின்பால் இரக்கமுற்றுப் பதிபாசத்
தினைநீக்கித் தூய்மை செய்வர்
விசும்பின்முகில் விலகக்கதி ரொளிதோன்றல்
போலான்மா விளங்கும் நன்றே. 17

மலத்தால்கட் டுண்டவுயிர் பதியருளால்
மலநீக்கம் பெற்ற பின்னர்
இலகவ்வுயிர் பேரின்ப நிலையடைய
இறைவன்திரு வருள்செய் கின்றான்
அலகில்கரு ணைத்திறத்தால் படைத்துக்காத்
தழித்துமறைத் தருளல் என்ன
நிலவுமுய ரைந்தொழிலை நிமலன்புரி
கின்றானென் றுரைப்பர் ஆன்றோர். 18

உயிர்களிடத் துளமாசா ணவமாயா
கன்மமென உரைப்பர் மேலோர்
மயர்வுதரு மும்மலங்க ளென்றிவற்றை
மாண்புடையோர் கூறு வார்கள்
உயிர்களுக்குத் தனுகரண புவனபோ
கங்கள்பதி யருளு கின்றான்
உயர்பதிமா யைக்குளுயிர் களையாழ்த்திப்
பக்குவம்செய் தருளு கின்றான். 19

இலகுயிர்மேற் படிந்துள்ள பாசம்வினைப்
போகத்தால் வலிமை குன்றும்
மலபரிபா கம்பெறுதல் என்றிதனை
மாண்புடையோர் விளக்கு வார்கள்
நலமருளும் நல்வினையும் தீவினையும்
சமமாக உணரும் காலம்
குலவுமிரு வினையொப்பாம் இந்நிலையில்
சக்தியருள் படியும் நன்றே 20

பாசத்தின் வலிமையினைக் கடவுள்குறைத்
தருள்கின்றார் எஞ்சி யுள்ள
பாசத்தை வாசனு மலமென்று
பகர்வார்கள்; முத்தர்க்(கு) ஆக்கை
ஆசற்று நீங்குகையில் அவ்வாச
னுமலமும் அகன்று நீங்கும்
மாசற்ற அவ்வுயிரை மலரடியிற்
சேர்த்துமுத்தி யருள்வான் ஈசன். 21

'சிவம்' என்றால் அன்பென்னும் பொருள்கொள்வர்
திருமூலர் போன்ற ஆன்றோர்
புவனியில்எவ் வுயிரிடத்தும் அன்புபுரிந்
தவற்றைச்சிவ னாகக் காணும்
தவநெறியே முத்திபெறும் நெறியென்னல்
சைவசம யத்தின் கொள்கை
அவமெனும்மும் மலப்பாசம் அகலஇறை
யருளேநற் றுணையாம் அம்மா. 22

இறைவனருள் பெறற்கான்மா தனதியல்பை
யுள்ளபடி யுணர்தல் வேண்டும்
இறைவனுக்கும் தனக்குமுள சம்பந்தத்
தினையறிந்து கொள்ளல் வேண்டும்
உறைவதுயிர் உடற்குளென்றும் உயிர்க்குளிறை
ஒளிர்வதையும் உணர்தல் வேண்டும்
இறைவன்உயிர் இருப்பிற்கும் செயல்களுக்கும்
காரணம்என் றுணர்தல் வேண்டும். 23

கதிர்ஒளிநம் கண்ணொளியிற் கலக்கும்போ
தேபொருளை நம்கண் காணும்
முதல்வனரு ளான்மஅறி வொடுகலந்து
நின்(று)அதைநன் றொளிரச் செய்யும்
முதல்வனிச்சை கிரியைகளைச் சார்ந்துயிரி
னிச்சைசெயல் களுமுண் டாகும்
இதனையனு பவமாக அறிவதுவே
முத்திநெறி யென்பர் மேலோர். 24

முத்திநெறி யைக்கடைப்பி டிப்போர்க்குப்
பழவினைகள் முழுதும் தீரும்
சித்தமலம் அற்றுவிடும் சிவமயமாய்ச்
சிவானந்த மெய்து வார்கள்
பத்தியுட னிறைவனடி யவரைவழி
படின்முத்தி யெய்த லாகும்
உத்தமசற் குருவுக்குடல் பொருளாவி
யர்ப்பணித்தின் பெய்தல் மேலாம். 25

## வைணவம்

அகம்புறமெல் லாம்நிறைந்து விளங்கிறைவற்
கன்புவழி பாடு செய்தே
அகம்புறமெல் லாம்தூய்மை யடைந்தருளால்
ஆனந்தப் பெரும்பே றெய்தி
சகமிசைநல் வாழ்வாற்றல் வைணவம்சாற்
றும்சிறந்த மார்க்க மாகும்
தகவொடிறை யிடம்சரண கதியடைதல்
சாலச்சிறப் புடைய தாகும். 26

நானென்னும் அகங்காரத் தினையொழித்தல்
முத்திக்குறு நெறிய தாகும்
யானிறைவன் உதவியின்றி யேதும்செய
இயலாதென் றறிதல் வேண்டும்
கோனென்னை யாட்டுவிப்போன் யானவன்கைக்
கருவியென வுணர்தல் வேண்டும்
கோனவன்றன் குறிப்பின்றி அணுவும்அசை
யாதென்னக் கொள்ளல் வேண்டும். 27

இவ்வண்ணம் எண்ணியெண்ணி 'யான்' என்ப
தைத்தேய்த்துக் கொண்டே போதல்
செவ்வியநன் னெறியாகும்; இதன்முடிவில்
செப்பரும்பே ரின்ப மெய்தும்
ஒவ்வொருக ணத்திலும்நம் சக்தியின்மை
யுணர்ந்திறைவன் சரணம் பற்றும்
திவ்விய ப்ரபக்திநெறி யேசிறந்த
நெறியெனவை ணவம்நன் றோதும். 28

எல்லாமும் இறைவன்செயல் என்றுன்னி
இறைவனுக்கே அடிமை யாகி
எல்லாஉ யிர்த்திரளும் அவன்வசப்பட்
டொழுகுமியல் புடையோ மென்னப்
பல்லாற்றி னுலுமுணர்ந் தவனடியே
தஞ்சமெனப் பற்றித் தூய
சொல்லாலும் நினைவாலும் செயலாலும்
போற்றின்துயர் தீர்ந்தின் பெய்தும் 29

எல்லாமும் அவனருளே எனப்பற்றித்
தன்செயலெல் லாமி ழந்து
சொல்லாலும் அளப்பரிய பரபோதம்
தலைசிறந்து தோன்றப் பெற்ற
நல்லாரை வழிபடலும் ஞானுசா
ரியரைவழி பட்டுத் தொண்டு
பல்லாற்றி னும்செயலும் பரமபதம்
பெறற்குறுநன் னெறியா மென்பார். 30

குருநாதர்க் குச்சேவை செய்தவர்சொற்
படிநடந்து குவல யத்தில்
பரஞான உருவான பகவான்வே
றில்லையெனும் உறுதி பூண்டப்
பெருமானின் திருவடியைப் பேணுதலே
பேரின்ப மென்று வாழ்வோர்
அருள்ஞானு னந்தமுத்தி நிலையடைதல்
உறுதியென நவில்வார் ஆன்றோர். 31

## இஸ்லாமியம்

ஒழுங்காக நன்முறையில் வாழ்வதற்கு
மக்களினத் தைத்தி ருத்தி
ஒழுக்கநெறி யினையுணர்த்தி உலகினில்வாழ்
வாங்கினிது வாழச் செய்யும்
விழுமியநற் சமயம் இஸ்லா மியமாகும்
பக்தியதன் உயிராய் மேவும்
முழுதும்கட வுளுக்காக வாழ்வாற்றல்
வேண்டுமென்றச் சமயம் கூறும். 32

அமைதியென்றும் முத்தியென்றும் இஸ்லாமென்
னும்சொற்குப் பொருளுண் டென்பர்
கமலனொடு செயும்வணக்கம் இறைவன்ஒரு
வனுக்குரிய தென்றும் தூய
அமைதியருள் இறைவன் திருத் தூதரே
முகமத்நபி யென்றும் நம்பி
விமலனைநாள் தோறுமைந்து முறைதொழுதல்
வேண்டும்இது கடமை யாகும். 33

இறைவனிடத் தடிக்கடிநற் றொடர்புவைத்துக்
கொள்பவன்தீ தெண்ண மாட்டான்
இறைவனிடத் துளத்தினைநன் றொப்புக்கொடுத்
தோன்பால்நற் றூய்மை யெய்தும்
முறையொடுநோன் பாற்றின்உடல் உளம்உயிரும்
உயர்தூய்மை யடைதல் திண்ணம்
வறியவர்க்குச் சொத்தில்ஒரு பகுதியைப்
பகிர்ந்தளிக்கும் வழக்கம் வேண்டும். 34

ஆண்டவன்றன் சந்நிதியில் அனைவோரும்
சமம்என்ப தறிதல் வேண்டும்;
ஈண்டுலகில் வாழுமக்கள் அனைவரும்ச
கோதரரென் றெண்ணல் வேண்டும்;
தூண்டரிய கல்விகற்போர் கற்பிப்போர்
கட்குதவி செய்தல் வேண்டும்;
யாண்டும்குறிக் கோளுடனும் செயல்செய்திறன்
பேசுதிறன் எய்தல் வேண்டும். 35

அன்னியரின் பொன்பெண்மண் மீதாசை
அடியோடும் அகற்றல் வேண்டும்;
நன்னடத்தை யுடையவராய் ஞாலத்திற்
புகழோடும் திகழ்தல் வேண்டும்;
பன்னரிய செல்வம்உடல் வலிமையிவை
வறிஞரைக்காப் பாற்றற் கென்றே
முன்னவன் வழங்கியுளான் என்றுணர்ந்து
வாழ்வாற்றல் முறைமை யாகும். 36

## கிறித்தவம்

அன்பென்னும் அடிப்படையில் அமைந்ததுவே
கிறித்தவநற் சமய மாகும்
நின்பக்கல் உள்ளவனை நீசகோ
தரன்என்ன நேசித் தால்தான்
இன்பத்தை வழங்கிறைவன் நின்னைத்தன்
மகனாக ஏற்றுக் கொள்வான்
அன்புள்ள ஒருவனையே அனைவரும்நே
சிப்பரென்றச் சமயம் கூறும். 37

ஏழைகட்குச் செயும்உதவி கடவுளுக்குச்
செய்வதென எண்ணல் வேண்டும்;
வாழ்வதற்கென் றேதொன்றும் சேர்த்துவைத்துக்
கொள்ளுதல்நல் வழக்க மன்று;
சூழ்பறவை களைக்காண்;நன் மகிழ்வோடும்
அவைதுலங்கு கின்ற தோர்வாய்;
கேழ்கிளர்விஸ் வாசம்இறை பால்உள்ளோர்க்
கியற்கையடி பணிவ துண்மை. 38

இறைவனருள் த்யானத்தி னல்பிணிக
ளைத்தவிர்த்துக் கொள்ள லாகும்;
பிறவியெடுத் தியற்றுநலம் தீங்குகட்கொர்
நாள்தீர்ப்புண் டென்ப துண்மை
இறைவனிடத் திற்பூர்ண நம்பிக்கை
நிச்சயம்வெற் றியையே நல்கும்
அறநெறியில் அன்பொடுவாழ் வாற்றுவதே
அச்சமயக் குறிக்கோ ளாகும். 39

வேறு

நம்பிக்கை யுள்ளஇடத் தன்புண் டாகும்
அன்புள்ளஇடத்தினிலே அமைதி யுண்டாம்
பொன்புறைநல் லமைதியுறின் அருளங் குண்டாம்
இன்பம்வழங் கருளுறின்அங் கிறைவன் வாழ்வான். 40

வேறு

இளங்குழந்தை போற்கள்ளம் கபடில்லா
உள்ளம்நமக் கெய்து மாயின்
வளம்பலவும் அருள்இறைவன் வண்காட்சி
நிச்சயமாய்க் காண லாகும்
அளந்தறியொ ணுச்சீர்சால் இறைவன்அனைத்
துயிரின்அகத் தும்பு றத்தும்
விளங்கிப்பெருங் காவல்புரிந் தினிதியக்கும்
வியன்காட்சி யெங்கும் தோன்றும். 41

உலகமிசை எத்தகைய சூழ்நிலைகள்
எற்படினும் அவைய னைத்தும்
அலகில்புக ழிறையருளால் நடைபெறுவ
தெனஉயர்நம் பிக்கை யோடும்
நிலவுசகிப் புத்தன்மை யொடுமிறைபால்
பக்திவிஸ்வா சத்தி ேைடும்
இலகுநிலை வாய்த்துவிடின் அதிற்சிறந்த
பேறுலகில் இல்லை யம்மா. 42

தத்துவ நெறிகள்

சிவன்நெருப்பு மயமானேன் மாயையொரு
சிறிதளவும் எக்கா லத்தும்
அவனிடத்திற் படிவதில்லை; சலனமற்ற
நிர்க்குணமாய் அவன்தி கழ்வான்
அவனையணு கிடும்உயிர்கள் ஆணவமா
யாகன்ம மழிக்கப் பெற்றுச்
சிவமயமாய்த் திகழ்ந்திடுவர் எனச்சைவப்
பெருநூல்கள் செப்பும் நன்றே. 43

திருமால்நீ ரின்தன்மை யுடையவனுய்த்
திகழ்வன்;உயிர்த் திரள்கள் எல்லாம்
திருமாலால் காப்பாற்றப் படுமென்ன
வைணவநூல் யாவும் செப்பும்
அரன்தந்தை யெனக்கொள்ளின், அரிஅன்னை
யெனக்கொள்ளல் முறைமை யாகும்
உரியதந்தை தாயின்றி உயிர்களில்லை
யென்பது பேருண்மை யாகும் 44

இவ்விரண்டு சமயங்கள் உலகவளர்ச்
சிக்கின்றி யமையா தாகும்
இவ்வுலகில் நபிநாயகமும் ஏசு
பெருமானும் போதித் தற்குச்
செவ்விதின்போந் திட்டநல்ல குருமார்கள்
அவர்கள்போ தித்த வண்ணம்
எவ்வமற நடப்பவர்கள் எம்மதத்தின்
முடிவுமொன்றே யென்னக் கொள்வார். 45

சிவன்திருமால் அல்லாநற் பரமபிதா
என்றுபலர் செப்பும் பேர்கள்
உவமைசொலற் கரியஒரு பரம்பொருளை
யேசாரும் எனநன் றோர்வார்
தவநெறிநின் றடையுமிடம் ஒன்றதனைச்
சாரும்வழி பலஎன் றுண்மை
நவயுகத்தில் விளக்கவந்த சற்குருநம்
ஞானவள்ளற் பெருமா னுமே. 46

அவதார புருடர்பிறக் கும்பொழுதே
தெய்வஇயல் பமைந்தோ ராக
புவிமாயை யோடணுவும் சம்பந்த
மற்றவராய்ப் புனித நோக்கால்
பவம்நீக்கிப் பலரைக்கரை யேற்றவல்ல
ஆற்றலருள் அன்பு ஞானம்
தவவாழ்க்கை உயர்சீலம் உடையவராய்த்
தாரணியில் திகழ்வர் நன்றே. 47

தமக்கென்ன வாழாமல் உயிர்த்திரளை
உய்விக்கும் நோக்குள் ளோராய்
தமதுநினை வால்வாக்கால் பரிசத்தால்
எண்ணிலரை உய்விப் போராய்
சமயமனைத் தினுமுள்ள சாரமெலாம்
சட்டமெனத் தந்தாள் வோராய்
அமயமறிந் தடியரன்பர் துயர்தவிர்த்தின்
பருள்பவராய் அண்ணல் உள்ளார். 48

சகவாழ்க்கை யிலும்ஞான வாழ்க்கையிலும்
மேன்மைமிகத் தருகின் றோராய்
அகமார அறிவரிய சூக்குமமாம்
உண்மையெளி(து) உணர்த்து வோராய்
தருஞான ஒளிபிறர்க்குட் செலுத்தியறி
யாமையிருள் தவிர்க்கின் றோராய்
மிகுமன்பும் அருளும்கட லெனப்பெருக்கும்
சிறப்பினராய் மிளிர்வார் அண்ணல். 49

அடைவதற்கு மிகவரிதாம் பேரானந்
தத்தையடைந் திடவி ழைவோன்
திடமுடனெவ் வழிசெலினும் அதையுறுதி
யாகக்கைப் பற்றிக் கொண்டே
கடைசிவரை பாடுபட்டப் பேரானந்
தத்தோடொன் றிடுதல் வேண்டும்
அடைவுடனெம் மதமும்இதையே பேசும்;
அண்ணல்நெறி இதுவே யாகும். 50

பூசல்அழுக் காறகற்றி மெய்யன்பால்
புனிதநெறி யிணைக்கைக் கொண்டு
மாசகன்றிவ் வுலகுயிர்கள் இறைவனடி
மலரடைந்தின் பெய்தி யுய்யத்
தேசுமிகு நல்லஅடிப் படைநோக்க
முள்ளஅருட் சட்டந் தன்னைக்
காசினியிற்பொது நெறியாய்க் கருணைமிகு
வள்ளல்அளித் துள்ளார் நன்றே. 51

அருட்சட்டச் செந்நெறியை அன்போடும்
நாமெல்லாம் பேணி யுய்வோம்
பொருட்பெற்றிவ் வுலகின்பம் துய்த்தவணம்
புனிதநல்வாழ் வாற்றி யுய்வோம்
தெருட்பெற்ற அருள்நிட்டை தினம்பேணித்
தவமெனும்மெய்ச் செல்வம் சேர்ப்போம்
மருட்பெற்ற திரைநீக்கி வள்ளலடி
மலர்சேர்ந்தின் பெய்து வோமே. 52

## போற்றி போற்றி

உயிர்த்தொகைக்கு மங்களமுண் டாக்கியருள்
சிவபெருமான் ஒண்தாள் போற்றி
உயிர்த்தொகையை இனிதுபுரிந் தருள்திருமால்
ஒண்பாத பதுமம் போற்றி
உயிர்த்தொகைக்கெல் லாமஅமைதி யூட்டியருள்
அல்லாவின் உயர்சீர் போற்றி
உயிர்த்தொகைக்கன் பூட்டியின்பம் வழங்குகர்த்தர்
ஒப்பில்புகழ் போற்றி போற்றி. 53

## பரம்பொருள் துதி

ஓங்கார ஒலிப்பொருளாய் ஒளிப்பொருளாய்
உயர்பொருளாய் உண்மை யாகி
ஆங்காங்கும் அணுவினுக்குள் அணுவாகி
அப்பாற்கும் அப்பா லாகிப்
பாங்காக உயிர்வகையைத் தோற்றுவித்துக்
காத்தருள்செய் பரமாய் என்றும்
தூங்காமல் தூங்குகின்ற சுகம்வழங்கு
ஜோதியொன்றைத் துதித்து வாழ்வாம். 54

கண்டிடுதற் கரும்பொருளாய்க் காணவொணுப்
பலபொருளாய்க் கருதி யாரும்
விண்டிடுதற் கரும்பொருளாய் வேறுபல
வகைப்பொருளாய் விண்ணில் வாழும்
அண்டர்களும் முனிவர்களும் அறிவதற்கும்
அரும்பொருளாய் அடிமை பூண்ட
தொண்டர்களுக் கினிதருள்செய் தொல்பொருளாய்த்
துலங்குமொன்றைத் துதித்து வாழ்வாம். 55

காலமொடு கற்பனைகள் காணவொணுப்
பொருளாகிக் கருணை சான்ற
சீலமிகு மேலவர்கள் சிந்தையெனும்
திருக்கோயில் குடிகொண் டிருந்த
ஞாலமிசை வாழுயிர்க ளனைத்தினுக்கும்
நற்றுணையாய் ஞான மூட்டி
ஏலவளர்த் திடும்பொருளை எப்பொழுதும்
ஏத்திஇன்பம் எய்தி வாழ்வாம். 56

அருளாளர் களையுலகில் ஆங்காங்கும்
தோன்றுவித்தின் னருளை யூட்டி
அருளாளர் பெருநிலையை அனைத்துயிரும்
எய்தும்வணம் ஆக்கம் ஊட்டி
அருளாளர் நன் னெறிவிளக்கும் அருட்சமயம்
அனைத்தினுக்கும் மூல மாகி
அருளார்நல் வடிவொடெங்கும் அமைபொருளை
அகமுருகிப் போற்றி வாழ்வாம். 57

சமயமத மெல்லாமும் சாற்றுமொரு
பொருளாகித் தனிப்பே ருகிச்
சமயமறிந் தடியார்க்குத் துணைபுரியுந்
தனிப்பொருளாய்ச் சாந்த மென்னும்
இமயமலை இதயமிசை இலகுவதை
எவ்வுயிர்க்கும் இனிது ணர்த்தி
அமையுமொரு பரம்பொருளை ஆனந்த
நிறைவைநினைந் தன்பு செய்வாம். 58

வானுகி வளியாகி யனலாகிப்
புனலாகி மண்ணு மாகிக்
கோனுகிக் குடியாகிக் குறைதவிர்க்கும்
நிறைவாகிக் குணங்கள் மூன்றும்
தானுகிக் குணங்கடந்த தனிப்பொருளாய்ச்
சாந்தியெனும் அமுதை நாடும்
யானுகி என்னுயிருக் குயிராகி
யிலங்கொளியை இறைஞ்சி வாழ்வாம். 59

செந்தமிழாய் ஆரியமாய்ச் சிறந்தபலப்
பலமொழியாய்த் திகழு மொன்றை
அந்தம்நடு வாதியுணர்ந் தறியவொணு
வொன்றையனைத் துயிர்பா லும்சூழ்
பந்தம்அனைத் தையும்தவிர்க்கும் வழியுணர்த்தி
முத்திநலம் பாலித் தாள
வந்தருளும் ஞானகுரு பரம்பொருளை
வாழ்த்திநிதம் வழுத்தி வாழ்வாம். 60

இதுவதுவென் றெவரானும் எடுத்துரைத்தற்
    கரியவொன்றை இனிய ஞான
மதுநிறைந்த மணமலரை மகிதலமும்
    வானுலகும் மற்றெங் குஞ்சூழ்
பொதுநிலையைப் பழமையெனப் புதுமையெனப்
    பொலியுமொன்றைப் போகம் யாவும்
இதமொடுயிர்க் கீந்தருளி யின்பநிலைக்
    கீர்க்குமொன்றை இறைஞ்சி வாழ்வாம் 61

சத்தியமாய்ச் சத்துவமாய்த் தத்துவமாய்த்
    தத்துவங்கள் கடந்த வொன்றாய்
நித்தியமாய் நின்மலமாய் நிர்க்குணமாய்
    எண்ணிலண்ட நிரையு மாகி
எத்திசையும் நிறைந்தொவ்வோ ரணுவையுந்தன்
    னிச்சைவணம் இயக்கும் ஒன்றாய்ப்
பத்தியம்ஒவ் வோருயிர்க்கும் பரிந்தளித்துப்
    பேணுமொன்றைப் பரவி வாழ்வாம் 62

இப்படிய திந்நிலைய திவ்வுருவ
    திவ்வணத்த தென்று யாரும்
எப்படியும் எப்பொழுதும் இயம்பிடுதற்
    கரியவொன்றை என்றும் யாண்டும்.
மைப்படிந்த மேகமெனப் பெருங்கருணை
    மழைபொழிந்துள் மன்னு மொன்றை
எப்படியும் எப்பொழுதும் இதயமலர்
    மீதமர்த்தி ஏத்தி வாழ்வாம். 63

எண்ணில்பல சமயமத மெனும்நதிகள்
    உதித்திடச்செய் தெல்லா மொன்றாய்
நண்ணியடை பெருங்கடலாய் ஞானசுகப்
    பெருவெளியாய் நயம்சால் தூய
பண்ணிலமை பாட்டுருவாய் அதனிலமை
    பலபொருளாய்ப் பவம்தீர்த் தாள
நண்ணிவரு குருவுருவாய் ஞானமறை
    யானவொன்றை நாடி வாழ்வாம். 64

## அடியவர் இலக்கணம்

அடியவர் உதாரகுணம் கடல்நிகர்க்கும்
அவர்அன்பு கதிரோ னொக்கும்
அடியவர்தம் பணிவுமக்கள் மிதிக்கஇடம்
கொடுக்கும்பூ மியினை மானும்
முடிவிலண்ட கோடியையாள் சக்ரவர்த்திக்
கடிமையென எண்ணி வாழ்வர்
அடியவர்ச தாகாலம் இறைபூஜை
அகத்துள்ளே நடத்தி யுய்வர். 1

தேகஇச்சை துறந்தவரே அருட்சட்ட
அடியவராய்ச் சிறந்து வாழ்வர்
ஏகபரம் பொருள்துணையெப் போதுமுள
தெனவுறுதி யாகக் கொள்வர்
ஏகன்உளத் தினில்நிரம்பி யிருத்தலின்வே
றெணம்இச்சை யின்றி நீங்கும்
ஏகபரம் பொருட்காக வேவாழ்வர்
தமக்கென்ன வாழார் என்றும். 2

உலகம்வணங் கிடுமாறு நன்றுயர்த்தி
வைத்தாலும் உடனே யாரும்
உலகிலிகழ்ந் திடுமாறு நனிதாழ்த்தி
விட்டாலும் ஊறு நல்கிக்
கலகப்படுத் திச்சிரசைக் கொய்தாலும்
கால்கைகள் தரித்திட் டாலும்
தலைவநின்தாள் விடமாட்டேன் எனுமுறுதி
உடையோரே அடியா ராவர். 3

இறைவன்திரு வடிக்குரிமை உடையவராய்
இனியஅச்சே வடிக ளன்றி
முறையொடுவே றொன்றையுமெண் ணுதவராய்
முளரிமல ரடிக ளுக்காம்
துறையிலன்றிப் பிறசெயல்செய் யாதவராய்த்
தூயசிர மிசையத் தாள்கள்
நிறைபொலிவொ டேயிலகல் கண்டுநெஞ்ச
மகிழ்ந்தவராய் நிலவு வாரால் 4

எண்ணமுரை மூச்சுசெயல் அத்தனையும்
இறைவனுக்கர்ப் பணம்செய் தோராய்
திண்ணியமெய்ஞ் ஞானம்பக்தி வைராக்யம்
நல்லொழுக்கம் செறிந்துள் ளோராய்
மண்ணுலக மாயையினை வென்றிறைவன்
அருள்மயமாய் வாழ்கின் றோராய்
விண்ணமுதும் கைப்பஉயர் பேரின்பம்
அனுபவித்து விளங்கு வாரே. 5

உடம்புபொரு ளாவியிவை மூன்றும்குரு
நாதர்பதத் தொப்பு வித்தே
தொடர்புறச் செயல்களிலில் லாதொடுக்கித்
தூயவிசா ரத்த ராகி
உடம்பினுள் தன்னைக்கண்டு தன்னுள் தலை
வனைக்காணும் நாட்டத் தோடும்
படிறுசினம் பதட்டமுத லாம்குற்றம்
படியின்மிசை தவிர்ந்து வாழ்வர். 6

குருபரன்றன் திருநாமம் கேட்டதும்அன்
பால்உள்ளம் உருகி நிற்பர்
இருவிழியும் நீர்பெருக்க இதயம்அன
லிடுமெழுகா யிளகி நிற்பர்
மருவுறவந் தணைதாய்முன் தும்பறுத்திட்
டோடுமிளங் கன்றே போல
குருபரனார் உருக்காணின் கடிதோடிப்
பதம்சிரமேற் கொண்டின் பார்வர். 7

அடியவர்தம் நெஞ்சத்தா றிப்பாயும்
பக்திவெள்ளம் அமலன் றன்னை
நெடிதுநோக் கிச்செல்லும் போதுநதி
நிறைகடல்பால் செல்லல் போலும்
வடதிசையை யேநோக்கும் காந்தஊ
சியைப்போலும் வற்பு றுத்தல்
இடையூறொன் றேனுமின்றி இனிதோடிக்
கலந்தின்ப மயமாக் கும்மே. 8

மாயைபயம் மரணம்விதி முதலான
அனைத்தையும்வென் றிலகு வார்கள்
தூயதிரு மேனியிலார் திருநீறு
போலுள்ளும் தூய ராவர்
மேயபுக ழால்எந்தத் திசையினையும்
நனிவிளக்கி விளங்கு வார்கள்
ஏயபஞ்ச பூதம்நிலை கலங்கிடினும்
இறையன்பில் நிலைத்து நிற்பார். 9

ஓட்டினையும் செம்பொனையும் ஒன்றாக
வேகருதும் உளத்தோ ராவர்
கோட்டமொர்சிற் றணுவுமிலாப் பேரன்பால்
இறைவனைக்கும் பிடுத லன்றி
வீட்டினையும் விரும்பாமெய் விறலோடும்
புவியின்மிசை விளங்கு வார்கள்
ஆட்கொளிறை பணியல்லால் ஒன்றும்விழை
யாஅகத்தோ டிலகு வார்கள். 10

அவர்களின்நல் வீரத்தை அறிந்துரைத்தற்
கெவராலும் ஆகா தென்ன
புவனிபுகழ் சேக்கிழார் சாமிபுகன்
றிடுவாரேல் நம்ம னோரால்
இவணியம்பற் கணுவளவும் இயலாதென்
றுரைப்பதலால் யாது செய்வோம்
தவநிறைவு மிகுமடியர் தாண்மலர்கள்
தகுமுறையாற் பணிந்துய் வோமே. 11

கணவனின்பே ரன்பைநுகர்ந் தவன்பிரிவால்
உறக்கமின்றிக் கலங்கல் போல
இணையிலிறை வனைக்காண எப்போதும்
துடிதுடித்துக் கொண்டி ருப்பர்
புணரியுடை யணிபுவியின் பொருள்நாடா
தருட்பேரின் பத்தை நாடிப்
பணியொடுரு கடியவர்கள் விண்ணமுதம்
பருகியசை வின்றி வாழ்வர். 12

அத்தகைய மேன்மக்கள் தங்களனு
பவத்தாற்பே ரருளாற் கூறும்
உத்தமநல் உபதேசம் அனைத்தும்உயர்
மறைகளென உலகில் மேவும்
அத்தனரு ளால்அண்டத்தி னில்நடக்கும்
அனைத்தும்அவர் அகத்துள் தோன்றும்
நித்தன்தரி சனம்பலவும் நிறைதவப்பே
றுடைஅவர்பால் நிதமும் தோன்றும். 13

தாமினிது பெற்றஅருட் பயனனைத்தும்
தரணிமுழு தெய்தி உய்ய
நேமமுடன் எப்போதும் உழைத்திடுவர்;
பிறர்துயரை நேரிற் கண்டால்
தாமனுவும் பொறுக்கஇய லாதவராய்
உடையிழந்த ஒருவன் கைபோல்
தூமனத்தொ டும்விரைந்து சென்றுதுயர்
துடைத்தினருள் சுரந்து காப்பர். 14

தாமடைந்த உயர்நிலையைத் தாரணியோர்
இனிதடையக் கூடு மேனும்
தூய்மைமிகு மதையடையா திழந்(து)இழந்தோ
மென்றவொரு நினைவு மின்றி
பூமிமிசை யுழல்பவர்பால் பேரிரக்கம்
கொடு, 'விடுவீர் பற்று முற்றும்'
'மாமறைபோற் றிறைகழலைத் தொழுதுய்மின்'
என்றருளி யூக்கு வார்கள். 15

நவிலுதற்கு மிகவரிய தவத்தால்தம்
உளும்புறத்தும் எதிலும் எங்கும்
உவமனின்றி நிறைபரிபூர் ணப்பொருளின்
உயர்காட்சி பலவும் காண்பர்;
அவர்கண்ட அனைத்தினையும் கூறியுள்ளார்
எனக்கூறற் காகா திந்த
அவனிக்குப் பயன்தருநற் கருத்துகளை
மட்டும்உரைத் தருளி யுள்ளார். 16

அருளண்ணல் யார்க்கேனும் கடிதம்எழு
நிடப்பணித்தால் அடியார் தங்கள்
திருவடித்தூ ளிக்கெண்ணில் வணக்கமென
எழுதச்செப் பிடுவா ரென்னின்
அருளடியர் பெருமையினை அவனிமிசை
அறிந்துரைக்க வல்லார் யாரே
அருளடியர் திருவடித்தூ ளிக்கெண்ணில்
அன்புவணக் கஞ்செய் வோமே. 17

அடியவர் தம் அளப்பரும் பெருமை

அடியவர் மேனி ஓமெழுத் துருவாம்
அடியவர் மொழிகள் ஓமெழுத் தொலியாம்
அடியவர் மூச்சும் ஓமெழுத் தசைவாம்
அடியவர் சூழல் ஓமெழுத் தொளியே. 18

அடியவர் அனந்த உலகையும் படைப்பர்
அடியவர் அனந்த உலகையும் புரப்பர்
அடியவர் அனந்த உலகிலும் நிறைவர்
அடியவர் அனந்த உலகுமா வாரே. 19

அடியவர் உலகுக் கருட்கண் ணமைவர்
அடியவர் உலகுக் காசா னவர்
அடியவர் உலகுக் காருயிர் ஆவர்
அடியவர் உலகுக் கருட்சுடர் காணே. 20

அடியவர் உளத்தில் உண்மையே திகழும்
அடியவர் திருவாய் உண்மையே பேசும்
அடியவர் நாட்டம் உண்மையை நாடும்
அடியவர் சொல்லே உண்மையா யிடுமே. 21

அடியவர் உள்ளம் அன்பினை வளர்க்கும்
அடியவர் உள்ளம் அறத்தினில் நிலைக்கும்
அடியவர் உள்ளம் அருளொளி பெருக்கும்
அடியவர் உளம்பே ரானந்த மாமே. 22

அடியவர் உளப்படி யாவுமுண் டாகும்
அடியவர் உளப்படி யாவுமே அசையும்
அடியவர் உளப்படி யாவுமே அமையும்
அடியவர் உளப்படி நாம்நடப் போமே 23

அடியவர் மேனி ஞானவிண் ணாகும்
அடியவர் உள்ளம் அன்புவீ டாகும்
அடியவர் செய்கை அருட் செயலாகும்
அடியவர் நினைவெலாம் அருள்நினை வாமே. 24

அடியவர் முகத்தில் முறுவலே பொலியும்
அடியவர் கண்கள் கருணையே பொழியும்
அடியவர் உளத்தில் அமைதியே நிலவும்
அடியவர் காட்சி ஆனந்த மாமே 25

அடியவர் தன்மை மலையினும் உயர்வாம்
அடியவர் கருணை கடலினும் பெரிதாம்
அடியவர் ஞானம் கதிரினும் ஒளியாம்
அடியவர் உயர்வை அறிபவர் யாரே. 26

அடியவர் சத்தை அறிந்திவண் வாழ்வர்
அடியவர் சித்தை அடைந்திவண் பொலிவர்
அடியவர் ஆன்ம வித்தைகற் றொளிர்வர்
அடியவர் பெருமை அளவிடற் கரிதே. 27

அடியவர் பெருமை அருமறை கூறும்
அடியவர் பெருமை அருள்நூல் பகரும்
அடியவர் பெருமை அமரரும் அறியார்
அடியவர் பாதம் ஆருயிர்க் கரணே. 28

அடியவர் சீரை அகிலமே கூறும்
அடியவர் சீரை அகல்வான் விளக்கும்
அடியவர் சீரை இயற்கையே போற்றும்
அடியவர்க் கடைக்கல மாகியுய் வோமே. 29

உலகெலாம் அடியவர் உயர்புகழ் கூறும்
உலகெலாம் அடியவர் ஒண்பதம் போற்றும்
உலகெலாம் அடியவர்க் குற்றதொண் டாற்றும்
உலகெலாம் அடியவர்க் குற்றநல் லுறவே 30

அடியவர் பிறஉயிர் இடருறல் காணர்
அடியவர் உயிர்கட் காவன புரிவார்
அடியவர் உயிர்கட் கருந்துணை யாவார்
அடியவர் உயிர்கட் கமுதமா வாரே. 31

அமரரும் முனிவரும் அடியரைப் புகழ்வர்
அமரரும் முனிவரும் அடியரைத் தொழுவர்
அமரரும் முனிவரும் அடியர்சொற் கேட்பர்
அமரரும் முனிவரும் அடியவர்க் கரணே. 32

அடியவர்க் காகவே கதிர்ஒளி யருளும்
அடியவர்க் காகவே மதிநில வருளும்
அடியவர்க் காகவே முகில்மழை பொழியும்
அடியவர்க் காகவே யாவுமிங் காமே. 33

அடியவர் சிறப்பை அடியரே உணர்வார்
அடியவர் சிறப்பை ஆண்டவன் அறிவான்
அடியவர் சிறப்பை அவனியோர் அறியார்
அடியவர் சிறப்(பு)அனைத் திலும்பெரி தாமே. 34

## அடியவர் உறவு

அடியவர் குலமே குலத்தினுள் மேலாம்
அடியவர் உறவே உறவினுள் மேலாம்
அடியவர் நெறியே நெறிகளுள் மேலாம்
அடியவர் பக்தியே பக்தியுள் மேலாம். 35

அடியவர் வடிவில் அருள்மணம் கமழும்
அடியவர் நாவில் அருளிசை அமையும்
அடியவர் முகத்தில் அருளொளி திகழும்
அடியவர் சூழல் அருள்பரப் பிடுமே. 36

அடியவர் பேச்சில் அருள்மணம் கமழும்
அடியவர் மூச்சில் அருளொளி விளங்கும்
அடியவர் செயலில் அருட்பயிர் வளரும்
அடியவர் இணக்கம் அருள்பரப் பிடுமே. 37

அடியவர் வாழிடத் தருள்மழை பொழியும்
அடியவர் வாழிடத் தருளொழில் மிளிரும்
அடியவர் வாழிடத் தருள்மணம் கமழும்
அடியவர் வாழிடம் நாடிஉய் வோமே. 38

அடியரைக் கண்டால் அகம்களி கூரும்
அடியர்பால் பேசின் ஐயங்கள் அகலும்
அடியவர்க் குணவிடின் ஆண்டவர்க் காகும்
அடியவர் ஆசி அருள்வழங் கிடுமே. 39

அடியவர் அடியவர்க் கன்பரா யமைவர்
அடியவர் அடியவர்க் கமுதமூட் டிடுவர்
அடியவர் அடியவர்க் கருட்பயன் தருவர்
அடியவர் அடியவர்க் கமைதியி வாரே. 40

அடியவர் அடியரைக் கண்டகம் மகிழ்வர்
அடியவர்க் கருள்நெறி யினைவிளக் கிடுவர்
அடியவர் தமைஅரு ளினில்உயர்த் திடுவர்
அடியவர் அடியவர்க் கருந்துணை யாமே. 41

அடியவர்க் கமுது படைப்பர்மெய்ப் பக்தர்
அடியவர்க் குதவி யாற்றுவர் மேலோர்
அடியவர் சூழல் அடைவர்நற் சீலர்
அடியவர் ஆவிக் கமுதமா வாரே. 42

அடியவர் நாமம் அருள்பெற ஊக்கும்
அடியவர் உருவம் அருள்நலம் காட்டும்
அடியவர் சேர்க்கை அருள்வளம் கூட்டும்
அடியவர்க் கடிமை அருளதாக் கிடுமே. 43

அடியவர் நேயம் அல்லலை அகற்றும்
அடியவர் நேயம் அன்பினை வளர்க்கும்
அடியவர் நேயம் அருள்நலம் விளைக்கும்
அடியவர் நேயம் ஆனந்த மாமே. 44

அடியவர் உளத்தில் ஆண்டவன் பொலிவான்
அடியவர்க் காவன ஆண்டவன் புரிவான்
அடியவர் உருவில் ஆண்டவன் வருவான்
அடியரை ஆண்டவ னுக்கொளல் முறையே. 45

அடியவர் அருட்கொடி நாட்டுதற் குரியார்
அடியவர் அருளர சாளுதற் குரியார்
அடியவர் அருளமு தூட்டுதற் குரியார்
அடியவர் அருள்மய மாக்குவர் காணே, 46

அடியவர் அருட்கொடி பறக்கும்எங் கணுமே
அடியவர் செங்கோல் அமையும்எங் கணுமே
அடியவர் அருளொளி நிலவும்எங் கணுமே
அடியவர் அருள்வளம் நிறைப்பர்எங் கணுமே. 47

அடியவர் பதமலர் முடிமிசை மலரும்
அடியவர் பதத்துணை அருளமு தருத்தும்
அடியவர் பதப்புணை பவக்கடல் கடத்தும்
அடியவர் பதம்பே ரின்பமாக் கிடுமே. 48

அடியவர் பார்வை அருளையே சொரியும்
அடியவர் கைகள் அஞ்சல்என் றருளும்
அடியவர் சிந்தை ஆசியே அருளும்
அடியவர் சேவை அருள்நலம் செயுமே. 49

அடியவர் அன்பின் உருவமாய்த் திகழ்வர்
அடியவர் அறத்தின் நிலயமாய் அமைவர்
அடியவர் அருளின் திரளெனப் பொலிவர்
அடியவரைச் சார்ந்தோர்க் கானந்த மாமே. 50

அடியவர் சிந்தை சாந்தியில் நிலைக்கும்
அடியவர் மொழிகள் சாந்தியை விளக்கும்
அடியவர் செயலில் சாந்தியே மிளிரும்
அடியவர் சூழல் சாந்திகூட் டிடுமே. 51

அடியவர்க் காக அமைந்ததிவ் வுலகம்
அடியவர் உளம்போல் அமையுமிவ் வுலகம்
அடியவர் திருத்தின் திருந்துமிவ் வுலகம்
அடியவர் பாதம் துணைநமக் காமே. 52

அடியவர் உளத்தில் ஆண்டவன் ஒளிர்வான்
அடியவர் எண்ணியாங் காண்டவன் அருள்வான்
அடியவர் உறவே அனைத்தினும் உயர்வாம்
அடியவர் அடிமலர் முடிக்கணி வோமே. 53

## அடியவர் துதி

உய்ய உயிர்களை ஆட்கொண் டருள்செயும் உத்தமனை
பொய்யில் அருட்சட்டச் செந்நெறி தந்தோம்பு புண்ணியனை
துய்யபதங்கள் துணையென்று வாழ்நல்ல தொண்டர்கள்தம்
செய்ய கமலம்நேர் சீர்பாத தூளியென் சென்னியதே. 54

மறந்தும் புறந்தொழா மாந்தராய் மாநில மன்னுயிர்க்குச்
சிறந்த அருட்சட்டச் செந்நெறி தந்தோம்பு தேசிகர்தாள்
கறந்த பசும்பால் பழங்கள்கொண் டேத்திக் கசிந்துருகும்
சிறந்த அடியார்கள் சீர்பாத தூளியென் சென்னியதே 55

வைவிளங் கெஃகவேல் வள்ளல் பெயர்பூண்டு வையமிசை
மெய்விளங் கற்புதச் சட்டம் வழங்கிநங் மேன்மையருள்
சைவ குலமணி தாளே துணையெனச் சாரடியார்
தெய்வ மணம்கமழ் சீர்பாத தூளியென் சென்னியதே 56

நாவை யடக்கியும் நாளும்நன் னிட்டையில் மூழ்குளித்தும்
ஓவை யுளத்துள் ளொளிரவைத் துள்ளொளி யோங்கவைத்தும்
சாவை வெலச்செயும் சற்குரு பொன்னடி சார்ந்துநிதம்
சேவை செயும்தொண்டர் சீர்பாத தூளியென்
சென்னியதே. 57

இம்மையொ டம்மை யினிதுத வும்சட்ட மீந்தருள்வோன்
வெம்மை செயும்வினை யைச்செற் றருளை விளைத்திடுவோன்
மும்மை மலம்சுடும் சற்குரு பாத முளரியைச்சேர்
செம்மை செறியன்பர் சீர்பாத தூளியென் சென்னியதே. 58

உம்பரும் மாமுனி வோரும் வழுத்த உலகமிசை
செம்பொருள் நன்று தெளிவிக்கும் சட்டத் திருநெறியை
எம்பவம் நீங்க இனிதருள் வோன்பதம் ஏத்தடியார்
செம்பொன் ஞெளிதிகழ் சீர்பாத தூளியென் சென்னியதே
59

## போற்றி

அருட்சட்டம் பேணியருள் பெற்றஅடி
யார்பாத மலர்கள் போற்றி
அருட்சட்ட நெறியையினி தோம்பியருள்
பெறும்அடியார் பதங்கள் போற்றி

அருட்சட்டம் இனிபேணி அருளெய்த
உளஅடியர் மலர்த்தாள் போற்றி
அருட்சட்ட நெறிஉயர்வை அறிந்தேத்தும்
அன்பர்பத மலர்கள் போற்றி. 60

நூற் பயன்

கருணைமிகு வள்ளல்அருள் நிறைசரிதம்
இதைப்படிப்போர் கனிந்து கேட்போர்
தரணிமிசை அருள்நலமும் பொருள்நலமும்
தக்கமகப் பேறு மெய்தி
மருவுமின மதசமயப் பிணக்ககற்றி
மனத்தையொரு முகப்ப டுத்திப்
பொருவில்தவத் திருவளர்த்துப் புனிதகுரு
பூம்பதத்தின் பெய்து வாரே. 61

வாழ்த்து

பரிபூர்ணப் பெருமான்பே ரருளிந்தப்
பாரின்மிசை யென்றும் வாழ்க
கருணைமிகு வள்ளல்குரு நாதர்அருள்
காசினிமீ தென்றும் வாழ்க
அருட்சட்ட நெறியிந்த அவனிமிசை
எஞ்ஞான்றும் சிறந்து வாழ்க
அருட்சட்ட அடியார்கள் பரம்பரையென்
றும்பொலிந்து வாழ்க! வாழ்க! 62

மங்களம்

மங்களம்நன் மதுரைப்பரி பூர்ணவிநா
யகர்க்கென்ன மகிழ்ந்தி சைப்போம்
மங்களம்எவ் வுயிர்க்கும்இன்ப வாழ்வருள்சற்
குருநாதர்க் கென்றி சைப்போம்
மங்களம்நல் வளம்தரும்சட் டம்பேணும்
மாணடியர்க் கென்றி சைப்போம்
மங்களம்சற் குருவருட்பே ரொளிபரவிப்
பொலியுமிந்த மகிக்கென் போமே. 63

ஆக செய்யுள் 4672


திருவண்ணமலை
செஞ்சி
திண்டிவனம்
மரக்காணம்
ரெட்டணை
மைலம்
பெண்ணையாறு
விழுப்புரம்
அழகாபுரம்
திருக்கோயிலூர்
பாண்டிச்சேரி
ஏனதிமங்கலம்
திருவெண்ணைநல்லூர்
திருச்சாத்தனூர்
பிள்ளையார்
குப்பம்
அருள் நகர்
அரசூர்
பண்ருட்டி
கடலூர்
கள்ளக்குறிச்சி
சேலம்
உளுந்தூர்ப்பேட்டை
வங்கக்
கடல்
வடலூர்
விருத்தாசலம்
பரங்கிப்பேட்டை
திருச்சி
திட்டக்குடி
புவனகிரி
சிதம்பரம்
R.V.RAMESH



## ஆனந்தக் களிப்பு

பூமியிற் செந்தமிழ் நாட்டில் புகழ்
பூண்டொளிர் நெல்வேலி மாவட்டந் தன்னில்
சேமம் மிகுரெட்டிப் பட்டி — ஊரில்
சீரார்சுப் ரம்மண்யம் என்னும்சேய் தோன்றி

மதுரையிற் பூரணர் காட்சி — கண்டு
மன்னுகுற் றலத் தருந்தவம் ஆற்றி
இதமருள் சட்ட நெறியை — வகுத்(து)
இந்தப் புவிக்குப் பொதுவெனத் தந்தார்

அன்பொடச் சட்டம்கைக் கொள்வோர்க் — கருள்
ஆனந்தம் நல்கி அருந்துணை யாகி
பொன்புரை போகம்மெய்ப் போதம் — ஊட்டிப்
புனிதம் புகட்டிப் பொலியச்செய் கின்றார்

என்றும்எங் கும்எவ் வுயிரும் — சட்டம்
ஏற்கலாம் இம்மை மறுமைஇன் பங்கள்
நன்றரு ளால்துய்த்து மேலாம் — பக்தி
ஞானப் பொலிவுடன் வாழ்வாற்ற லாமே.

வாழ்க பரிபூர்ண முன்னோன் என்றும்
வாழ்க இருடியர் பட்டி சுவாமி
வாழ்க திருவருட் சட்டம் — எங்கும்
வாழ்க அடியர் பரம்பரை நன்றே.

